# தஞ்சை மராட்டிய மன்னர் மோடி ஆவணத் தமிழாக்கமும் குறிப்புரையும்

## (முதல் தொகுதி)


பதிப்பாசிரியர்

**முனைவர் பா. சுப்ரமணியன்**

பேராசிரியர் & துறைத்தலைவர்

அரிய கையெழுத்துச் சுவடித்துறை

குறிப்புரை

**பேரா.கே.எம். வேங்கடரா[illegible]**

மோடி வல்லுநர்

இராக. விவேகானந்த கோபால





**தமிழ்ப் பல்கலைக்கழகம் , தஞ்சாவூர் - 613 005**

ISBN : 81 - 7090 - 136 - 7

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு எண் - 116 — I

திருவள்ளுவர் ஆண்டு 2019 - சித்திரைத் திங்கள் - ஏப்ரல் 1989

பதிப்பாசிரியர் : முனைவர் பா.சுப்ரமணியன்

பதிப்பு : முதற் பதிப்பு

விலை : உரூ. 125

அச்சு : சர்மாஸ் ஸானடோரியம் அச்சகம்
(கணிப்பொறிப் பிரிவு).
புதுக்கோட்டை

இந்நூல் மைய அரசின் தில்லி தேசிய ஆவணக்காப்பகம் வழங்கிய நல்கையின் வழி வெளியிடப்பெறுகிறது.
Published with the financial assistance of National Archieves, Govt. of India, New Delhi .

முனைவர் ச. அகத்தியலிங்கம்,
துணைவேந்தர்.

தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்-613 001.

# அணிந்துரை

தமிழக வரலாறு, நாகரிகம், பண்பாடு ஆகியனவற்றைப் பற்றி ஆய்வு செய்ய அருந்துணையாகவிருப்பன கல்வெட்டுக்கள், செப்பேடுகள், அரிய சுவடிகள் போன்ற மூலச் சான்றுகளாகும். சுவடிகள் முன்னர் பனையோலைகளிலும், பின்னர் காகிதத்திலும் எழுதி வைக்கப் பெற்றன. காகிதக் கையெழுத்துச் சுவடிகளைச் சேகரித்துப் பாதுகாத்து, அவை கூறும் செய்திகளை ஆய்வு செய்து வெளியிடுவதற்கெனத் தனியொரு துறையாக அரிய கையெழுத்துச் சுவடித்துறை இயங்கி வருவது தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் தனிச் சிறப்பாகும். இந்தியாவில் வேறெந்தப் பல்கலைக்கழகத்திலும் இதற்கெனத் தனித்துறை இல்லாதது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

தமிழக வரலாற்று மூலச் சான்றுகளாகக் கிடைப்பனவற்றில் பன்மொழிக் காகிதச் சுவடிகளும் அடங்கும். தமிழகத்தைப் பல்வேறு கால கட்டங்களில் தங்களின் ஆளுகைக்குட்படுத்திய பல்லவர், இசுலாமியர், நாயக்கர், மராட்டியர், பிரெஞ்சுக்காரர், டச்சுக்காரர், ஆங்கிலேயர் ஆகியோர் தத்தம் மொழி ஆவணங்களை விட்டுச் சென்றிருக்கின்றனர். இதனால் வடமொழி, பார்சி, அராபி, உருது, தெலுங்கு, மராட்டி, பிரெஞ்சு, டேனிசு மற்றும் ஆங்கில ஆவணங்களைத் தமிழில் பெயர்த்தாலன்றி அவ்வாவணங்களில் சொல்லப்பட்டுள்ள தமிழக வரலாற்றுச் செய்திகள் இலைமறை காயாகவே இருந்துவிடக்கூடும். இவ்வரிசையில், கி.பி. 1676 முதல் கி.பி. 1855 வரை தமிழகத்தின் தஞ்சைப் பகுதியை ஆண்ட மராட்டியர்கள் தமது அன்றாட அலுவல்கள், வரவு செலவுக் கணக்குகள், கடிதப் போக்குவரத்து ஆகியவற்றைத் தனிச் சிறப்பு மிக்க மராட்டிய மோடி எழுத்துக்களில் எழுதி வைத்துள்ளனர். இந்த மோடி ஆவணங்களிலுள்ள செய்திகளை வெளிக்கொணர்ந்தால், அதுவே தஞ்சை மராட்டியர்களின் அரசியல், சமுதாய வரலாற்றினை அறிவதற்கான அகச் சான்றாகத் திகழும் என்பதில் ஐயமில்லை.

தஞ்சை சரசுவதி மகாலில் வைக்கப்பட்டுள்ள மோடி ஆவணங்களின் தமிழ் மொழிபெயர்ப்பினைக் கொண்டு உருவாக்கப்பட்ட 'தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும்' என்ற நூல் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் வெளியீடே. அந்நூலுக்குப் பயன்பட்ட மூலச் சான்றுகளை அப்படியே வெளியிட்டு வரலாற்று ஆய்வறிஞர்களுக்குப் பயன்படச் செய்வது இந்த நூலின் நோக்கமாகும். இதில் சுமார் 190 மோடி ஆவண மூட்டைகளிலுள்ள செய்திகள் பரவலாகக் கிடைக்கின்றன. இதனை அச்சுருவில் வெளிக் கொணர தேசிய ஆவணக் காப்பகம் உரூபாய் ஒரு இலட்சம் நல்கை வழங்கியுள்ளது. தமிழ் மொழிபெயர்ப்பினைச் சீர்படுத்தி நூலாக்க, சரசுவதி மகால் நூலகத்தினர் மகிழ்வுடன் இசைவளித்தனர். அன்னாருக்குப் பல்கலைக்கழகம் நன்றி பாராட்டுவது கடமையாகும்.

இத்திட்டப் பணியினைத் தொடங்கி வைத்துக் குறிப்புரைகள் எழுதிவைத்துச் சென்ற முன்னாள் பேராசிரியர் கே. எம் வேங்கடராமையா அவர்களுக்கும், பதிப்பாசிரியராக இருந்து இதனை வெளிக்கொணர்ந்த பேராசிரியர் முனைவர் பா.சுப்ரமணியன் அவர்களுக்கும் என்னுடைய பாராட்டுக்கள். குறிப்பாக, மோடி வல்லுநராகப் பணியாற்றிய திரு இராக. விவேகானந்த கோபால் அவர்களுக்கும், இத்திட்டம் நிறைவேற ஒத்துழைத்த அலுவலர் அனைவருக்கும் என்னுடைய பாராட்டுக்களும் வாழ்த்துக்களும் உரியன.

*தஞ்சாவூர்-1*
*சனவரி-1989*

# பதிப்புரை

## மோடி எழுத்து

'மோடணே' என்றால் மராட்டி மொழியில் 'உடைதல்' என்று பொருள். அஃதினின்று 'மோடி' என்ற சொல் வந்திருக்கக்கூடும். மோடி எழுத்து என்பது தேவநாகரி எழுத்தை உடைத்துச் சிதைத்து உருவாக்கியது எனக் கொள்ளலாம். தொடக்க காலத்தில், மராட்டிமொழி பேச்சு வடிவினின்று எழுத்துருக் கொண்டபோது, அதற்கெனத் தனி வரி வடிவம் இல்லையாதலால், முன்னரே வழக்கிலிருந்த சமற்கிருத மொழிக்குரிய 'தேவநாகரி' எழுத்தைக் கைக்கொண்டனர். இசுலாமியர் இந்தியாவைக் கைப்பற்றி ஆளத்தொடங்கியவிடத்து, அவர்கள் இருவகை வரிவடிவங்களைத் தங்களுடைய பார்சி மொழிக்குப் பயன்படுத்தினர். 'நாஸ்தலிக்' என்னும் எழுத்துமுறை தெளிவாகவும் மெதுவாகவும் எழுதுவதற்கும், 'சிகஸ்த' எழுத்துமுறை விரைவாக எழுதுவதற்கும் பயன்படுத்தப்பட்டது. இதனைக் கண்ட ஹேமாட்பந்த் என்ற தேவகிரி யாதவ அரசர்களின் அமைச்சர் மராட்டி மொழிக்கும் ஒருவகைச் சுருக்கெழுத்துமுறையை உருவாக்கினார். அவ்வாறு, தேவநாகரி எழுத்தை உடைத்துச் சிதைத்து மாற்று வடிவம் உண்டாக்கிய எழுத்து முறையே 'மோடி' எழுத்தாயிற்று, 'சிகஸ்த' என்ற சொல்லுக்குரிய 'உடைந்த' என்ற பொருளே 'மோடி' என்பதற்கும் உரியதாதலின் இதுவே பொருந்துமெனல் தகும்.

இதைத் தவிர்த்து, இலங்கையினின்று வந்த எழுத்துமுறை என்பதும், 'மௌர்யீ' என்ற அசோகனின் எழுத்தினின்று உருவானது என்பதும், 'குடிலலிபி'யினின்று தோன்றியது என்பதும், சிவாஜியின் காலத்து பாலாஜி ஆவஜி என்பவர் உருவாக்கியது என்பதும் ஆதாரங்களற்ற ஒவ்வாத கருத்துக்களாகும்.

## மோடி ஆவணம்

மோடி எழுத்துக்கள் தேவநாகரி வரிவடிவத்தை அடியொற்றியவையாயினும், தேவநாகரியிலுள்ள பல எழுத்துக்கள் குறைக்கப்பட்டுள்ளதோடு குறில், நெடில் வேறுபாடுகளும் இல்லை. இடத்திற்குத் தக்கவாறு அமைத்துப் படித்துக் கொள்வதே முறையாயிற்று. மேலும், எழுதுகோலைக் காகிதத்திலிருந்து எடுக்காமல் தொடர்ச்சியாக வேகமாக எழுத மோடி எழுத்து பயன்படுகிறது. இதனால் சத்திரபதி சிவாஜியின் காலத்திற்கு முன்பிருந்தே வரலாற்றுக் குறிப்புகள், கடிதப் போக்குவரத்து, நாட்குறிப்பு, வரவு செலவுக் கணக்குகள் முதலியன மராட்டி மொழியில் மோடி எழுத்தில் எழுதப்பட்டன. மோடி எழுத்தினைப் படிக்க வல்லோர் மட்டுமே இதனைப் புரிந்து கொள்ளக் கூடுமாகையால் அரசியல் இரகசியங்கள் பிறரறியாமல் காப்பதற்கும் பயன்பட்டது. ஆயின்,

இலக்கியம், தத்துவம் ஆகியன தொடர்ந்து 'பாலபோத்' எனப்படும் நாகரி எழுத்திலேயே எழுதப்பட்டன. மோடி ஆவணங்களை, எழுதும் முறைபற்றி நான்கு கால கட்டத்திற்குள் அடக்கலாம்.

சத்திரபதி சிவாஜியின் காலத்திற்கு முந்தைய வடிவம்; சத்திரபதி சிவாஜி காலத்திய வடிவம்; பேசுவாக்கள் காலத்திய வடிவம்; ஆங்கிலேயர் கால வடிவம் என மகாராட்டிரர் கூறும் இவ்வகைக்குள் தஞ்சை மராட்டியரின் மோடி ஆவணம் அடங்கா. ஏனெனில், சத்திரபதி சிவாஜியின் காலத்தில் மகாராட்டிரத்தினின்று தஞ்சை வந்த மராட்டியர் தம் காலத்தில் வழக்கிலிருந்த மோடி எழுத்தையும் உடன் கொணர்ந்து தஞ்சையில் பயன்படுத்தினர். எனினும், காலப்போக்கில் சிற்சில மாறுதல்களையடைந்து நிலைபெற்ற தஞ்சை மோடி எழுத்தினைப் 'பழைய மோடி' என்பார் டி.வி. போட்தார். இவ்வாறாக, கி.பி. 1676இல் ஏகோஜி அல்லது வெங்கோஜி தஞ்சையைக் கைப்பற்றி ஆளத் தொடங்கியது முதல் கி.பி.1855இல் இரண்டாம் சிவாஜியின் ஆட்சி முடிவுற்றது வரையிலான எண்ணிறந்த மோடி ஆவணங்கள் மூட்டைகளாகக் கட்டி வைக்கப்பட்டுப் பாதுகாக்கப்படுகின்றன. எனினும், தற்போது கி.பி. 1746க்கு முந்தைய ஆவணங்கள் தஞ்சையிலிருந்து சென்னைக்கும் டெல்லிக்கும் எடுத்துச் செல்லப்பட்டுவிட்டன.

## தஞ்சை மராட்டியரின் மோடி ஆவணங்கள்

கி.பி. 1855ஆம் ஆண்டு மறைந்த இரண்டாம் சிவாஜிக்கு வாரிசு இல்லையாதலால், தஞ்சை அரசு முழுமையாக ஆங்கிலேயரின் கைக்கு மாறியது. அதை எதிர்த்து சிவாஜியின் பட்டத்தரசி காமாட்சியம்மா பாயிசாகேப் தனக்கு வாரிசுரிமை கேட்டு உயர்நீதிமன்றத்தில் முறையிட்ட போழ்து அரசு ஆவணங்கள் அனைத்தும் ஆங்கிலக் குடியிருப்பு ஆட்சியரின் *(Resident)* கைக்கீழ் வந்தன. இந்திய விடுதலைக்குப் பின்னரும் அவை மாவட்ட ஆட்சியாளரின் பொறுப்பிலேயே சீரழிந்த நிலையில் இருந்தன. அதனைப் பேணிக்காத்துப் பயன்படுத்த எடுக்கப்பட்ட பல்வேறு முயற்சிகள் வீணாயின. இறுதியாக கி.பி. 1950இல் ஓய்வு பெற்ற மேஜர் நாராயண பாலகிருஷ்ண கத்ரே என்பவர் தஞ்சை மோடி ஆவணங்களை ஆராய்ந்து அரசுக்கு ஓர் அறிக்கை அளித்தார். அவ்வறிக்கையினை ஏற்றுக்கொண்ட மாநில அரசு, அவருக்கு உதவியாக மோடிப் பண்டிதர் இருவரை நியமித்து ஆவணங்களை வகைப்படுத்திப் பட்டியல் தயாரிக்க உத்தரவிட்டது. அவ்வகையில், அவர் மோடி ஆவணங்களை எ,பி,சி என மூன்று பிரிவுகளாகப் பிரித்து, சி-வகைப் பிரிவில் சுமார் 960 மூட்டைகளைச் சரசுவதி மகால் நூலகத்திற்கு ஒதுக்கிவிட்டு எ,பி, வகை ஆவணங்களைச் சென்னை ஆவணக்காப்பகத்திற்கு அனுப்பிவைத்தார். சென்னை ஆவணக் காப்பக ஆவணங்கள் 'தஞ்சாவூர் அரச ஆவணங்கள்' *(Tanjore Raj Records)* என்ற பெயரில் வைக்கப்பட்டுள்ளன. தஞ்சையிலுள்ள சுமார் 960 மூட்டைகள் உபயோகமற்றவை என மேஜர் கத்ரே அவர்களால் ஒதுக்கப்பட்டன. ஆனால், அவற்றிலும் பல தகவல்கள் இருக்கக்கூடும் என எண்ணிய தஞ்சை மக்கள் அவற்றை அழிக்க வேண்டாமென அரசைக் கேட்டுக் கொண்டு, சரசுவதி மகால் நூலகத்தில் வைத்துப் பாதுகாக்க வேண்டினர். அவ்வாறே அவை இன்றளவும் சரசுவதி மகால் நூலகத்தில் வைத்துப் பாதுகாக்கப்படுகின்றன.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபதுகளில், மாநில அரசிடமிருந்து மோடி ஆவண மொழிபெயர்ப்புத் திட்டமொன்றினைப் பெற்ற சரசுவதி மகால் நூல்நிலையத்தினர், திரு நாகராஜாராவ், திரு இராமாராவ் என்ற இரு மோடிப் பண்டிதர்களை நியமித்துச் சுமார் 160 மூட்டைகளுள்ள மோடி ஆவணங்களைத் தேர்ந்தெடுத்து மொழி பெயர்த்தனர். அவை 11 கையெழுத்துச் சுவடித் தொகுதிகளாக உள்ளன. இப்பணி நடைபெறுங்கால் மேலே கூறிய மோடிப் பண்டிதர்கள் ஓய்வு பெற்றுவிட்டமையால், மீண்டும் 1-9-1970 முதல் 30-5-1978 வரை திரு தேவாஜிராவ், திரு இராமபாவுசுவாமி ஆகியோரை மோடிப் பண்டிதர்களாக நியமித்துச் சுமார் 48 சிறு கையெழுத்துத் தொகுதிகளில் 91 மூட்டைகளிலுள்ள செய்திகளைப் பட்டியல் தயாரித்து வைத்துள்ளனர். அத்துடன் இப்பணி நின்றுபோனது. இந்த 59 தொகுதிகளிலுள்ள செய்திகளைக் கொண்டு ஏதேனும் முழுமையாக ஓர் ஆய்வைச் செய்ய இயலுமா என முன்னாள் துணைவேந்தர் வ.அய் சுப்பிரமணியம் அவர்கள் வினவியபோழ்து, அரிய கையெழுத்துச் சுவடித்துறை முன்னாள் பேராசிரியர் கே.எம். வேங்கடராமையா அவர்கள் 'தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும்' என்ற ஆய்வினைச் செய்து நூலாகத் தந்தார்கள். எனவே, 'அழித்துவிடலாம்' என்று ஒதுக்கப்பட்ட மூட்டைகளிலும் ஆய்வாளர்களுக்குப் பயன்படும் பல்வேறு தகவல்கள் நிரம்பிக்கிடக்கின்றன என்பதை அறிந்தபோழ்து, அவற்றினை அப்படியே 'மூலச் சான்றுகளாக' வெளியிடத் தமிழ்ப் பல்கலைக்கழகம் முடிவு செய்தது. அந்த வகையில், ஏற்கெனவே சரசுவதி மகால் நூலக மோடிப் பண்டிதர்களால் மொழி பெயர்த்து வைக்கப்பட்டுள்ள 11 பகுதிகளை முதல் தொகுதியாகவும், சரசுவதி மகால் தொகுப்பான இரு மோடிப் பலகணிப் பகுதிகளும், தமிழ்ப் பல்கலைக்கழகப் பகுதிகள் ஆறும் சேர்த்து அடுத்த இரு தொகுதிகளாகவும் வெளியிடப்படுகின்றன. இவை மூலமோடி ஆவணத்தோடு ஒத்துப் பார்க்கப்பட்டு, மொழி பெயர்ப்பினைச் சரிபார்த்து, விளங்காத இடங்களுக்குக் குறிப்புரை எழுதிப் பதிப்பிக்கப்படுகின்றன.

## மோடி ஆவணங்களால் அறியப்படும் செய்திகள்

இவ்வாறாக, மூன்று தொகுதிகளாக வெளிவரவுள்ள மோடி ஆவணத் தமிழாக்கத்தில் தமிழக வரலாறு, பண்பாடு குறித்த செய்திகள் விரவி நிற்றலைக் காணலாம். தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியல், பொருளாதாரம், சமயம், சமூக வாழ்க்கை, கலை இலக்கியம் ஆகியன பற்றி அறிதற்கும் ஆய்தற்கும் இவை பெரிதும் துணைநிற்கும். மேலும் அக்காலத்திய மராட்டி மொழி வழக்கினையும், மோடி ஆவணங்களுக்கிடையே கிடைத்த தமிழ் ஆவணங்களில்-தமிழ் மொழி நடையினையும் இத் தொகுதிகள் பாங்குற விளக்கும்.

அரசியல் செய்திகள் :- இத் தமிழாக்கத் தொகுதிகளில் அக்கால அரசியல் பற்றிய செய்திகள் விரவிக் கிடத்தலைக் காணலாம். சுமார் 180 ஆண்டுக்காலம் தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னர்கள் பதின்மூவர் பற்றிய குறிப்புகள் வரலாற்றாய்வுக்கு அணி சேர்ப்பன. தஞ்சை மராட்டிய அரசின் எல்லைகள் பற்றியும், அது பல சுபாக்களாகப் பிரிக்கப்பட்டிருந்ததையும், அவை டிவிஷன்களாகவும், தாலுக்காகளாகவும் பிரிக்கப்பட்டிருந்ததையும் இவை செப்பும். மேலும், தஞ்சை அரண்மனையைச் சார்ந்த 12 மகால்களும், 18 கானாக்களும் அரசுத்துறைகளாகப் பணியாற்றியது பற்றியும் அரசருக்கு

ஆட்சிப்பணியில் உதவிபுரிய சர்க்கேல், சுபேதார், பதக்தார், அமல்தார், சிரஸ்தேதார், தாசில்தார், ஹவில்தார், கொத்தவால், கார்பாரி, கில்லேதார், திம்மதி, ஹர்காரா, கமாவிசிதார், நிஷபதி, பதக்னீஸ், காஸ்நீஸ், சிட்னீஸ், பாக்குவான் முதலிய அலுவலர்கள் இருந்தமை பற்றியும் இவை கூறாநிற்கும். தஞ்சைக் கோட்டையைச் சார்ந்து, 7 இடங்களில் கோட்டைகள் இருந்ததையும், அவற்றைக் கில்லேதார் பாதுகாத்து வந்ததையும் இச் சான்றுகள் தெள்ளெனப் புலப்படுத்தும். ஆங்கிலேய அலுவலர்களாக ரெஸிடெண்ட், கலெக்டர், கவர்னர் ஆகியோர் இருந்தனராகப் பல்வேறிடங்களில் சுட்டுப்பட்டுள்ளன.

கி.பி. 1738ஆம் ஆண்டிற்குள்ளேயே ஆட்சியுரிமை பெற்று அதனை இழந்த மூவர் சுஜான்பாயி, சையாஜி மற்றும் காட்டுராஜா ஆகியோராவர். இவர்களைப் பற்றிய ஆவணங்கள் இல. ஆயின், முதலாம் ஏகோஜி 8 ஆண்டுகளும், ஸாஹஜி 28 ஆண்டுகளும், முதலாம் சரபோஜி 16 ஆண்டுகளும், முதலாம் துளஜா 8 ஆண்டுகளும், பாபா சாகேப் ஓராண்டும், பிரதாப சிங்கு 24 ஆண்டுகளும், இரண்டாம் துளஜா 24 ஆண்டுகளும், அமரசிங்கு 11 ஆண்டுகளும், இரண்டாம் சரபோஜி 34 ஆண்டுகளும் இரண்டாம் சிவாஜி 23 ஆண்டுகளும் அரசாண்ட செய்தியினை இவ்வாவணங்கள் கூறுகின்றன. தனி வாழ்க்கையில் எல்லா மன்னர்களும் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மனைவியரைப் பெற்றிருந்த செய்தியினையும், இரண்டாம் சரபோஜி 'கல்யாண மகால் மகளிர்' எனப் பல பெண்டிரை உடமையாக்கிக் கொண்ட செய்தியினையும், இரண்டாம் சிவாஜி 'மங்கள விலாச சத்மத்தார்' என 42 பெண்டிரை உடமையாக்கிக் கொண்ட செய்தியினையும் மோடி ஆவணங்கள் உறுதிப்படுத்துகின்றன.

மராட்டிய அரச குலத்தில் வாரிசுக்கான ஆண்மகவு இல்லையெனில், இளவல்களுக்கு அரசுரிமை வழங்கப்பட்ட செய்தியும், முறையாகப் பிறந்த மகன் இல்லையெனில் பட்டத்தரசியே அரசுரிமை பெற்று ஆட்சி செய்த நிகழ்வும் காணக்கிடைக்கின்றன. மேலும், கத்திக் கல்யாணம் செய்து கொண்ட மராட்டியப் பெண்ணின் மகனான பிரதாபசிம்மன் அரசுரிமை பெறும் சூழலும் பெறப்படுகிறது.

முதலாம் ஏகோஜியின் கால்த்தில் மகாராட்டிரச் சத்திரபதியான சிவாஜியோடு அவருக்குத் தொடர்பிருந்தமையை மோடிக் கடிதங்களே உறுதிப்படுத்துகின்றன. அதைப் போலவே, டச்சுக்காரர் தொடர்பையும், சேதுபதிகள் தொடர்பையும், நவாபுடனுள்ள தொடர்பையும் சிவகங்கை, எட்டயபுரம் ஜமீனுடனுள்ள தொடர்பையும் இலங்கையோடு இருந்த தொடர்பையும் மோடிக் கடிதங்கள் கூறாநிற்கின்றன.

பொருளாதாரச் செய்திகள் மராட்டிய மன்னர் காலத் தஞ்சை அரசின் பொருளாதார நிலை குறித்து ஆய்தற்கும் இம்மோடி ஆவணச் சான்றுகள் பெரிதும் துணைநிற்கும். இவற்றைப் பல்வேறு நிலைகளில் நின்று ஆராயலாம். முக்கிய வருமானமாக, உழவரின் நிலத்தினின்று கிடைக்கும் நெல், மேல் வாரமாகவும் மிராசுதார்கள் மூலமாக வசூலிக்கும் பணமுமாகவே இருந்ததைக் காணலாம். சத்திரத்திற்கு நிலங்கள் ஒதுக்கப் பட்டிருந்ததையும், அவற்றினின்று கிடைக்கும் வருமானமும் அரசால் பயன்படுத்தப் பட்டது என்பதையும் இவ்வாவணங்கள் வாயிலாகவே அறியமுடிகின்றது.

மேலும், தோட்ட வருமானம், அகழிக் குத்தகை, குளம் குட்டைகளில் மீன் பிடித்துக் கொள்ளப் பாசிக் குத்தகை, சாராயக் குத்தகை, முத்துக்குளித்தல், முத்திரைப் பத்திரம் விற்றல் போன்ற வழிகளிலும் வருவாய் பெறப்பட்டதாக அறியமுடிகின்றது.

இவை தவிர, பல்வகைத் தீர்வைகள், வரிகள் போன்றவற்றைப் பற்றியும் இவ்வாவணங்கள் பேசுகின்றன. சுங்கச் சாவடிகளில் பொருள்களின் எடைக்கேற்பவும், அவற்றை எடுத்துச் செல்லும் தொலைவிற்கேற்பவும் வரி வசூலித்த முறை, ஐரோப்பியர்களிடம் கடுமையான சுங்கவரி வசூல் செய்தது போன்ற செய்திகளும் இவைகளில் விரவிக் கிடக்கின்றன. உப்புவரி, பருத்தியாடை, பட்டாடை நெய்வதற்கான வரி (தனிவரி), எள், கரும்பு பயிரிடுவதற்கான வரி, எண்ணெய் ஆட்டும் செக்குவரி, சில உணவுப் பொருட்கள், அன்றாட உபயோகப் பொருட்கள், கட்டிடச் சாமான்கள், வீட்டு விலங்குகள், ஊர்திகள் ஆகியவற்றின் மேல் வரி எனப் பல நிலைகளில் வரி வசூலிக்கப்பட்ட செய்திகளையும் இவை எடுத்தியம்புகின்றன. குற்றம் செய்தவர்களுக்குத் தண்டம் விதிப்பதையும் ஒருவகை வருவாயாகக் கொண்ட செய்தியும் உளது.

வரவு செலவுக் கணக்குகளை எழுதி வைத்துள்ள குறிப்புகளிலிருந்து நாணயமுறை, விலைவாசி, அளவைகள் ஆகியவற்றையும் அறியமுடிகின்றது. நாணய முறையில் மிகச்சிறிய அளவான காசு முதல் , பணம், சக்கரம், புலிவராகன் வரையிலான பயன்பாடே தஞ்சை அரசில் இருந்தது என்பதையும், புலிவராகனுக்கும் பிற வராகன்களுக்குமுள்ள மதிப்பு மாறுபாட்டைப் புலப்படுத்துவனவாகவும் இக்காகிதச் சுவடிகள் அமைந்துள்ளன. தஞ்சை அரசுக் கருவூலத்திலிருந்த பல்வேறு வகையான நாணயங்களைப் பற்றிப் பேசும் ஆவணங்களைக் கொண்டு பிற நாட்டாரோடு தஞ்சை அரசுக்குத் தொடர்பிருந்தமையை அறியலாம். ஏறத்தாழ 120 வகையான நாணயங்களின் பெயர்கள் கிடைத்த போதிலும் அவற்றைத் தரம் பிரித்து ஆராய வேண்டுவது ஆய்வாளரின் பணியாம்.

சி-பிரிவு மோடி ஆவணங்கள் அக்காலத்திய 'விலைவாசி'யினை எளிதில் அறிந்து கொள்ள உறுதுணையாயுள்ளன. இவைகளில் நெல், அரிசி, உப்பு, மளிகைச் சாமான்கள், எண்ணெய் வகைகள், தேங்காய், ரொட்டி, பழங்கள், மண்பாண்டம், செங்கல், சுண்ணாம்பு, பட்டாசு, கால்நடைகள், தங்கம், வெள்ளி ஆகியவற்றின் விலை விபரங்களும், நிலக்கிரய விலையும் அறியக்கிடக்கின்றன.

அளவைகள் பற்றிய செய்திகளும் இவற்றில் பொதிந்துள்ளன. முகத்தலளவைக்குப் படி, மரக்கால், கலம் என்பவையும், எடுத்தலளவைக்குத் தோலா, பலம், சேர், வீசை, மணங்கு, தூக்கு என்ற முறையிலும், கழஞ்சு, மணு, கண்டி, பாரம் ஆகியவையும் சுட்டப்பட்டுள்ளன. நீட்டலளவை முழம், சாண் என்றவாறு பயன்பாட்டிலிருந்தது. நில அளவைக் குறிக்க 14 அடிக்கோல் மற்றும் வேலி, மா, குழி என்பன போன்ற அளவுகள் பயன்பாட்டில் இருந்ததைக் காகிதச் சுவடிகள் தெள்ளென விளக்குகின்றன.

சமயச் செய்திகள்:- பல்வேறு சமயம் சார்ந்த மன்னர்களின் ஆட்சி தஞ்சையில் பல்வேறு காலகட்டங்களில் அமைந்ததால், மராட்டியர் காலத்தில் சைவ, வைணவ, இசுலாமிய, கிறித்துவ சமயங்களும் போற்றப்பட்டு, சமயப் பொறை மிக்கிருந்த நிலை

மோடி ஆவணங்களின் வழி உணரப்படுகிறது. மராட்டிய மன்னர்களின் நேர்பார்வையில் இருந்த திருக்கோயில்கள் 64 என்று ஓராவணம் குறிப்பிடுகின்றது. இதைத்தவிர, தஞ்சைப் பெரிய கோயில், கும்பகோணம், திருவிடைமருதூர், திருபுவனம், திருவாரூர் முதலிய பல ஊர்களிலுமுள்ள கோயில்களுக்குத் தர்வுமான்யம் வழங்கிய செய்திகளும் திருப்பணி, திருவிழா, பூசை போன்றவற்றை நடத்திய குறிப்புகளும் மிகுதியும் கிடைக்கின்றன. மேலும் தஞ்சை மன்னர்கள் இந்து சமயத்தினராயிருந்தும், தர்க்காக்களைக் கட்டுவதற்கும், மசூதியை நடத்துவதற்கும், துணை நின்றதை இவ்வாவணங்கள் உறுதி செய்கின்றன. சமய வேறுபாட்டை விஞ்சி, சரபோஜிக்கும், சுவார்ஸ் பாதிரிக்குமிடையே நிலவிய நட்பினையும் தரங்கம்பாடியில் ஆங்கிலப் பள்ளி நடத்திய ஜான்பாதரிக்கு அவர் உதவியதையும் இச் சான்றுகள் சுட்டிக் காட்டுகின்றன.

அரசர்களின் உதவியால் அந்தணர்கள் அக்னிஸ்டோமம், பசுபந்தம், வாஜபேயம், சோடசி, வைசுவதேவம், தர்சபூர்ணமாஸா, ஆபஸ்தம்ப சோம பூர்வக அதானம், குண்டல இஷ்டி முதலிய யாகங்களைச் செய்தனர் என்பதையும் ஆவணங்கள் வழி அறியமுடிகிறது.

மராத்திய மன்னர்களின் சமயப் பொறையுடைமைக்கு இவ்வாவணங்கள் தக்க சான்றாய் அமைந்துள்ளன. அரச குடும்பத்தினர், தீபாவளி, பாவுபீஜ், கௌரிபூசை, குலதர்ம பூசை, நவராத்திரி, மகரசங்கராந்தி, பிள்ளையார் சதுர்த்தி, மகாசிவராத்திரி, இராமநவமி, காமன் பண்டிகை ஆகிய பண்டிகைகளோடு அல்லாப் பண்டிகை, கிறித்துமஸ், புத்தாண்டு முதலியவற்றையும் கொண்டாடினர் என்பது பெரிதும் பாராட்டற்பாலது. இது அன்றைய சமூக வாழ்வின் சிறப்பியல்பெனில் மிகையன்று.

மேலும், திருப்பனந்தாள் காசிமடம், கும்பகோணம் காஞ்சி காமகோடி மடம், பெரிய மடம், நரசிம்மபுரம் அகோபில மடம், திருவண்ணாமலை சர்க்கார் மடம், மன்னார்குடி மேருசுவாமியார் மடம், தஞ்சாவூர் சிவபூசை மடம், கோசாமி மடம் முதலியவற்றோடு மன்னர் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தமை இவ்வாவணங்கள்வழி நனி விளங்கும்.

இரண்டாம் சரபோஜியின் காசி, இராமேசுவரத் திருப்பயணக் குறிப்புகள் சமயத்தில் அவருக்கிருந்த நாட்டத்தினையும் அக்காலச் சமய மரபுகளையும் பாங்குற விளக்குகின்றன.

சமூக வாழ்க்கைச் செய்திகள்:- மக்களின் வாழ்க்கை முறையினைப் பற்றி அறிதற்கும் இச் சான்றுகள் பெரிதும் துணைநிற்கும். சாதிப் பாகுபாடு, சாதியை விட்டு நீக்குதல், கீழ் சாதியினரைத் தொட நேர்ந்தால் பரிகாரம் செய்தல், போன்ற பல செய்திகளை இவை தன்னகத்தே கொண்டு திகழ்கின்றன. வலங்கை, இடங்கை என இருவகைச் சாதிப்பிரிவு புதுக்கோட்டைப் பகுதியில் இருந்தமையையும் அவர்களில் வலங்கையினர் 22 சாதியினர் என்பதையும், இடங்கையினர் 6சாதியினர் என்பதையும் இச் சான்றுகள் வழி அறியமுடிகிறது. பிறிதொரு ஆவணம் வலங்கையினர் 24 சாதிகள் எனவும் இடங்கையினர் 9 சாதிகள் எனவும் கூறுகிறது. திருமணக் காலத்தில் பந்தல் போடுதல், வாத்தியங்கள் வாசித்தல், ஊர்வலம் வருதல், ஆடையணி பூணுதல், வாகனங்களைத் தேர்ந்தெடுத்தல்

ஆகியன பற்றிய மனவேறுபாடே இவர்களது பூசலுக்குக் காரணம் என இவ்வாவணங்கள் புலப்படுத்துகின்றன. இத்தகைய பாடுகளை அவர்கள் கூடி முடிவு செய்து அரசனுக்கு அறிவித்த செய்தியினையும் இவ்வாவணங்களில் காணலாம்.

அரண்மனையில் நாடொறும் பல்வகை வேலைகளைச் செய்வோரையும் இவை குறிக்கின்றன. தண்ணீர் நிரப்புதல், சமையல் செய்தல், துணி வெளுத்தல், தீவட்டி பிடித்தல், காவல் காத்தல் முதலிய பல வேலைகளைச் செய்வோர் இறந்துபடின், அவரது பிள்ளைக்குப் பணி உரிமை அளிக்கப் பெற்றது எனவும், ஓய்வு பெற்றோர் ஓய்வூதியம் கிடைக்கப் பெற்றனர் எனவும் இதன்வழி அறியமுடிகிறது. மேலும், கைம்பெண் மணத்தையும், பலதார மணத்தையும் ஆதரித்த நிலை காணப்படுகிறது. பிள்ளையின்றேல் சுவீகாரம் எடுத்துக் கொள்ள உரிமை வழங்கிய செய்தியும் ஆங்காங்குக் காணப்பெறுகிறது. பெண்கள் விற்கப்பட்டமை, உடன்கட்டை யேறியமை ஆகியவை பற்றியும் சில ஆவணங்கள் கூறும்.

மக்கள் தங்களது வாழ்விற்காகப் பல தொழில்களை மேற்கொண்டிருந்தனர். படகு, கப்பல் கட்டுதல், பட்டுப்பூச்சி வளர்த்தல், முலாம் பூசுதல், கட்டிடம் கட்டுதல், காகிதம் செய்தல், சங்கெடுத்தல், நெட்டி வேலை செய்தல், மர, உலோக, தந்த வேலைகள் செய்தல், இசைக் கருவிகளைத் தயாரித்தல், அச்சுத்தொழில் செய்தல் ஆகியவற்றைப் பெருந்தனக்காரர்களும், வண்டியோட்டுதல், காவல் வேலை, பயிரிடுதல், மரம் வெட்டுதல் ஆகிய தொழில்களைப் பிறரும் செய்து வந்த செய்திகளும் ஆங்காங்குக் குறிப்பிடப்பெற்றுள்ளன.

கலை இலக்கியச் செய்திகள்:- நுண்கலைகளான சிற்பம், ஓவியம், இசை, நாடகம், நாட்டியம், ஆகியன மராட்டியர் காலத்துச் செழித்தோங்கி வளர்ந்தமைக்குப் பல்வேறு மோடி ஆவணங்கள் சான்று பகர்கின்றன. குறிப்பாக மராட்டிய ஓவியங்கள் புகழ் மிக்கவை. மறைந்த அரச, அரசமாதேவியரின் ஓவியங்கள் வரையப்பட்டுச் சட்டமிடப்பட்டு அரண்மனையில் மாட்டப்பட்டிருந்தன எனக் குறிப்புகள் உள்ளன. ஓவியம் வரைவதில் ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாய்த் திகழ்ந்தனர் என்பதும் இக்குறிப்புகள்வழி அறியக்கிடக்கின்றது. சரபோஜியின் காசி யாத்திரைக் குறிப்புகளிலிருந்து, ஓவியன் தாமஸ் என்பான் பல்வேறு வகையான தாவரம், விலங்கு, பறவைகளை வரைந்து தந்தனன் என்பது பெறப்படும்.

ப்ளாக்ஸ்மன் என்ற அமெரிக்கர் இலண்டனிலிருந்தபோழ்து அவரிடம் செய்து பெறப்பட்ட ‘சுவார்ஸ் பாதிரியின் மரணப் படுக்கைக் காட்சியின்’ சலவைக்கல் சிற்பம் சரபோஜியை வெகுவாகக் கவர்ந்ததால், தம்முடைய முழு உருவச்சிலையைச் செய்யவும் விரும்பினார். அவருடைய காலத்திலேயே அவரது சலவைக்கல் சிற்பம் நிறுவப் பெற்றதாதால்கூடும் என்ற செய்தியினை 1823ஆம் ஆண்டின் ஆவணமொன்றினால் அறியமுடிகிறது. கட்டிட, சிற்ப வேலைப்பாடுகள் பல மராட்டிய மன்னர்களின் காலத்தில் நடைபெற்று வந்தபோதிலும் அவற்றைத் தெளிவுபடுத்திக் கொள்ளப் போதிய மோடி ஆவணச் சான்றுகள் இல்லை. அரசருக்கும், அரசமா தேவியருக்கும் உருவம் அமைத்துப் பூசை செய்தலும், பொம்மைகள் செய்தலும் இருந்தன என அறியமுடிகிறது.

மராட்டிய நாடக முன்னோடியாகத் திகழ்ந்தவர்கள் , தஞ்சை மராட்டிய மன்னர்களே. இசை, நாடகம், நாட்டியம் முதலியன பெருஞ் செல்வாக்குப் பெற்றிருந்தன எனின் மிகையன்று. ஸாஹஜி, முதலாம் சரபோஜி, முதலாம் துளஜா, இரண்டாம் ஏகோஜி, பிரதாபசிங்கர், இரண்டாம் சரபோஜி, இரண்டாம் சிவாஜி ஆகியோரது காலத்தில் இலக்கியங்கள் பல தோன்றியமைக்கு மோடி ஆவணச் சான்றுகள் கிடைக்கின்றன. சேஷாசலபதி, முத்துக்கவிராயர், கிரிராஜகவி, துண்டிராஜர், ராமபத்திர தீட்சிதர், நல்லாபூதகவி, ஜகந்நாத கவி, வேங்கடேசகவி, திரியம்பகபட், பகவந்தகவி முதலிய புலவர்கள் ஆதரிக்கப்பட்ட செய்திகளும் கிடைக்கின்றன.

'சங்கீத வித்யாதிக' என்ற பிரிவு அரண்மனையில் இருந்ததாகவும், அதில் இசைவல்லுநர்கள் பலர் கூடி இசை நூல்கள் பலவற்றைப் படைத்ததாகவும் அறியமுடிகின்றது.

சரசுவதி மகால்:-தஞ்சைத் தரணிக்கு மிக்க புகழ் சேர்ப்பது சரசுவதி மகால் நூலகம் எனில் மிகையாகாது.

இலக்கியம், இலக்கணம், மெய்விளக்கம் முதலிய 24 தலைப்புகளில் நூல்களும், ஓலைச்சுவடிகளும் அங்குச் சேகரித்து வைக்கப்பட்டுப் பாதுகாக்கப்பட்டு வருவது அதன் சிறப்பாம். வெளிநாட்டிலிருந்து நூல்களைச் சேகரித்த செய்திகள் அதன் பெருமையினை நனிவிளக்கும். பனையோலைகளை நறுக்கி, நூல்களைப் படியெடுத்துக் கட்டி அடுக்கி வைக்கவும், நூல்களுக்குப் பூசை செய்யவும், அறநூல்களைப் படித்துப் பொருள் சொல்லவும் ஆட்கள் இருந்ததாக அறிகிறோம். மேலும் தஞ்சை அரண்மனையிலிருந்ததாகச் சொல்லப்படும் 'நவவித்யா கலாநிதி சாலீ'வும் 'சரஸ்வதி பாண்டாரத்திலேயே' இருந்ததாக ஓர் ஆவணம் குறிப்பிடும்.

மொழி ஆய்வு :– கி. பி. 18, 19-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த மோடி ஆவணங்களான இவற்றில், அதற்கு முந்தைய கால மொழி வழக்கும் சொற்பயன்பாடும் அமையப்பெற்றிருக்கின்றன. இம் மொழியைப்பற்றி ஆராய்ந்து வரும் புணே தக்காணக் கல்லூரி மொழியியல் துறையினர், சில கருத்துக்களை வெளியிட்டுள்ளனர். கி.பி. 1767இல் தென் மகாராட்டிரத்தை விட்டு நகர்ந்து தஞ்சையில் குடியேறிய இவர்களது பேச்சு வழக்கில் இன்றளவும் பழைய மராட்டிச் சொற்கள் கலந்துள்ளன; மேலும் தமிழின் தாக்கத்தால் மொழி நடையில் மாறுபாடும் ஏற்பட்டுள்ளது. இங்குள்ள மராட்டியர்களுக்கும் மகாராட்டிரத்து உறையும் மராட்டியர்களுக்கும் தொடர்பு விட்டுப் போனமையின் இவர்களது மொழி, வளர்ச்சி பெறாமலேயே தங்கிவிட்டது.

கி.பி. 1815-இல் உருவான மராட்டி-மோடி அகராதியானது மோடி ஆவணத்தில் பயின்று வரும் சொற்களின் தொகுப்பாக விளங்குகிறது. இவ்வகராதியைக் கொண்டும் மொழி ஆய்வைத் தொடரலாம்.-

மோடி ஆவணங்களுக்கு இடையே கிடைத்த தமிழ் ஆவணங்களில், மராட்டிய மொழியின் தாக்கம், நடை மாற்றம் ஆகியவை பற்றியும் ஆய்வுகள் வெளிவந்துள்ளன.

எனவே, தமிழ், மராட்டி மொழி ஆய்வுகளுக்கு மோடி ஆவணம் சிறந்ததொரு கருவூலமாகத் திகழுமென்பதில் ஐயமில்லை.

## முதல் தொகுதியில் காணப்பெறும் சிறப்புச் செய்திகள்:

முதல் தொகுதியில் தஞ்சை சரசுவதி மகால் நூலகத்திலுள்ள முதல்கட்ட மோடி ஆவண மொழி பெயர்ப்புக் கையெழுத்துச் சுவடிகள் பதினொன்றும் சேர்க்கப்பட்டுள்ளன. இப் பதினோரு பகுதிகளிலும் சுமார் 160 மூட்டைகளிலுள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட மோடி ஆவணங்களின் மொழி பெயர்ப்பு உள்ளது. இதில் சரசுவதி மகால் நூலக எட்டாம் பகுதியின் தொடக்கத்திலுள்ள மூட்டை எண் 31-சி உம், மூன்றாம் பகுதியின் மூட்டை எண் 123-சி இல், ஆவண எண்கள் 61,63 ஆகியனவும் ஆங்கில ஆவணங்களின் மொழி பெயர்ப்பாகும். முதல் தொகுதி, அரசுரிமைப் பிரச்சினைகள், கல்வெட்டுச் சான்றுகளும் மோடி ஆவணமும், கல்விநிலை, மருத்துவம், இரண்டாம் சரபோஜியின் பயணங்கள், சத்திர தர்மம் போன்ற பல்வேறு சிறப்புச் செய்திகளைக் கொண்டிலங்குகிறது.

## அரசுரிமைப் பிரச்சினைகள்:

இரண்டாம் துளஜாவிற்குக் குழந்தைகள் இல்லையாதலால், அவர் தமது உறவினர்களிடமிருந்து இரண்டாம் சரபோஜியைத் தத்து எடுத்துக் கொண்டார். இது 23-1-1787 இல் நிகழ்ந்தது என்பர் வரலாற்றாய்வாளர் (இராஜய்யன், கே.) இதன் பின்னர், உடனடியாக 31-1-1787இல் துளஜா இறந்துவிட்டபடியால், மிகவும் இளையவரான சரபோஜிக்குப் பாதுகாவலராகத் துளஜாவின் தம்பி அமரசிங்கு ஆட்சிப்பொறுப்பை ஏற்றார். ஆனால், கும்பனியுடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டு தாமே நாட்டை ஆளத் தொடங்கினார். அதுமட்டுமன்றி, அமரசிங்கு தம் 'தாயாகிய திரௌபதாம்பா பாயிடத்தும் மூன்று நாட்டு பெண்களிடத்தும், சரபோஜியிடத்தும் சரியாக நடந்து கொள்வதில்லை' என்பது ஆவுசாகேப்பின் கடிதம் கூறும் செய்தியாகும் (943சி-2-54). அமரசிங்கின் சர்க்கேல் சிவராவ் தன் பிள்ளையையும் 'ரிகார்டு' அலுவலகத்தில் நியமித்துக் கொண்டு தன் செல்வாக்கை முறையற்ற வழிகளில் பயன்படுத்தினார் (912சி-18-32) திரௌபதாம்பாபாயி தன் மகன் தனக்கு இறுதிச் சடங்குகளைக்கூட செய்ய கூடாதென்றும், சரபோஜிக்கே அரசுரிமை கொடுக்கப்படவேண்டுமென்றும் ஆங்கிலேயக் கவர்னர் மிஸ்தர் கேமல் அவர்களுக்கும், சுவார்ஸ் பாதரிக்கும் எழுதினார்.

சென்னைக்குச் சென்றுவிட்ட சரபோஜி தமது அலுவலராகத் தத்தாஜி அப்பாவை நியமித்துக்கொண்டு, தஞ்சையிலிருந்து 'பாபண்ணா' என்பவர் மூலம் அமரசிங் பற்றிய தகவல்களைச் சேகரித்து, ஆங்கிலேய கவர்னர் ஜெனரல் காரன் வாலீசுக்கு எழுதித் தமக்கு அரசுரிமை வழங்க வேண்டினார். மேலும், அமரசிங்கின் அயோக்கியத்தனத்தையும், 12 பண்டிதர்கள் அமரசிங்கிற்காகப் பொய்ச்சாட்சி சொன்னதையும், தத்து எடுத்தது செல்லும் என்பதற்காக வங்காள சட்டப் புத்தக நியாயம் மற்றும் கர்நாடக நியாயம் ஆகியவற்றையும் தொகுத்து எழுதி ஒருநூல் வடிவாக்கி மிஸ்தர் டூரியனின் இரண்டாவது கேப்டன் சாந்தர்ஸ் மற்றும் திருச்சியிலிருந்த மேஜர் பார்பஸ் ஆகியோர் இங்கிலாந்து சென்றபொழுது இங்கிலாந்து நாடாளுமன்றத்திற்காகக் கொடுத்தனுப்பினார். அது தொடர்பாக

லார்ட்பிகட் சாகேப் விசாரணை செய்யும் பொழுது சுவார்ஸ் பாதரியையும் கேட்பாரென்றும், சுவார்ஸ் பாதரிக்கு அமரசிங்கை மோசஞ் செய்யக் கூடாதென்ற எண்ணமிருப்பதாகச் தெரிவதால், அவரிடமும் சொல்லி வைக்க வேண்டுமென்றும் பாபண்ணா சரபோஜிக்கு எழுதினார். (43சி-601சி)

லார்ட் ஹோபர்ட் ஆணையின்படி, கவர்னர் ஜெனரல் காரன்வாலிஸ் மீண்டும் பன்னிரெண்டு பண்டிதர்களை அழைத்து விசாரணை செய்யுமாறு மக்கலோட்டிற்கு எழுதினார். அதன்படி, பொய்ச்சாட்சி சொன்ன பன்னிருவரும் மீண்டும் விசாரிக்கப்பட்டனர். இவர்களில் 6ஆம் எண்ணுள்ள ராமா சாஸ்திரிக்கு அமரசிங், பல்லக்கும் நாளொன்றுக்கு ஒரு வராகன் சம்பளமும் கொடுத்து வைத்துக் கொண்டமையாலும், 4ஆம் எண்ணுள்ள ஜனாசாரி சன்னியாசியாகிவிட்டபடியாலும், 1,2,12ஆம் எண்ணுள்ளோர் இறந்து பட்டமையாலும் இவர்தவிர மீதி 7 பேர்கள் விசாரிக்கப்பட்டனர். அவர்கள் தர்மசாத்திரம் தெரியாதென்றும், பொய் சொன்னதாகவும், மற்றவர்களைப் பின்பற்றி ஒப்புதல் கையெழுத்திட்டதாகவும் கூறி ஒப்புக் கொண்டனர் (943சி 7-6). இதனை சுவார்ஸ் பாதரியும் கேட்டு அறிந்து ஆங்கிலேயக் கவர்னருக்கு எழுதினார். இதனால், 1798 ஆம் ஆண்டு சரபோஜிக்கு அரசுரிமை கிடைத்தது (923சி-9-50).

இதே போன்று கி.பி. 1855ஆம் ஆண்டு இரண்டாம் சிவாஜி இறந்தபின்பு அரசியாயிருந்த காமாட்சியம்மாபாயி தனக்கு அரசுரிமை வேண்டுமென ஆங்கில அரசுக்கு எழுதினார். ஆனால் ஆங்கிலேயர் தஞ்சை அரசை முழுமையாகத் தம் ஆட்சியின் கீழ்க் கொணர்ந்தனர். எனவே காமாட்சியம்மாபாயி சாகேப் கும்பனியாரையும் மற்ற பாயிமார்களையும் பிரதிவாதியாக்கி 20-4-1857இல் நார்ட்டன் என்ற ஆங்கிலேய வழக்கறிஞரைக் கொண்டு வழக்குத் தொடுத்தார். காமாட்சியம்மா பாயிக்குப் பின்னர் சிவாஜி சாவதற்கு முன்பு 17 கலியாணங்கள் செய்து கொண்டார். இவர்களில் இருவர் இறந்துபட 15 பேர்கள் உள்ளனர். பிரதிவாதியாகிய அவர்கள் கொடுத்த பதிலாவது, 'ஹிந்து சாஸ்திரப்படி எவனொரு மராட்டியன் தனக்குபிறந்த பிள்ளை அல்லது சுவிகாரஞ் செய்து கொண்ட பிள்ளை இல்லாமல் இறந்து போனால், அவனுடைய சொத்தில் முதல் மனைவிக்கு மட்டுமல்லாது எல்லா மனைவிகளுக்கும் பாத்தியமுண்டு' என்பதாகும். ஆனால், ஐந்தாவது மன்னரான பாவாசாகேப் அவர்கள் தனக்குப் புத்திர சந்தானமில்லாமல் இறந்துபோனபொழுது ஆறு சம்சாரங்கள் இருந்தனர். இருப்பினும் முதல் சம்சாரமான சுஜான்பாயி மாத்திரமே இராஜ்ஜிய பாரம் நடத்தினார். அச்செய்தி பிரதிவாதியின் வசமுள்ள தஸ்தாவேஜு மூலமாகவும் வம்சவிருட்சத்தின் மூலமாகவும் தெரியவருகிறது எனக் கூறி வழக்கினைத் தொடர்ந்தார் (37சி-55(சி). இதன் விளைவாகக் குடியிருப்பு ஆட்சியர் பொறுப்பிலிருந்த சாரி சாகேப் விசாரணை செய்ய அரண்மனைக்கு வந்தார். பாயி சாயேப்புகளையும், காமாட்சியம்மாபாயியையும் சந்தித்துப் பேசினார். அப்போது சிரஸ்தேதாரின் பதிலில், சரபோஜி ராஜாவின் மூத்த பெண்ணின் பெண் சௌ. சைதம்பாபாயி சிவாஜி ராஜாவின் பட்டராணி; மூன்றாவது பெண்ணின் பெயர் சௌ.காமாட்சியம்பாபாயி என்று கூறினார் (148 சி- 13-6). எனினும், இறுதிவரை அரசுரிமை அளிக்கப்படவில்லை.

## கல்வெட்டுச் சான்றுகளும் மோடி ஆவணமும்

வரலாற்றாய்விற்குப் பெரிதும் துணை நிற்பனவற்றில் கல்வெட்டுச் சான்றும் ஒன்றாகும். அத்தகு கல்வெட்டுச் சான்றுகளைச் சரிபார்ப்பதற்கு மோடி ஆவணங்கள் பயன்படுகின்றன. இதனைச் சரிபார்ப்புச் சான்று (*cross reference*) எனலாம். மேலும் அக் கல்வெட்டில் கண்ட செய்திகளுக்கும் ஆவணத்தில் வரிவான விளக்கமும் கிடைக்கின்றது.

1. திருவையாறு காவிரிப் பாலத்துக் கல்வெட்டு: 1846-47ஆம் ஆண்டு இப்பாலம் கட்டும் பணி முற்றுப்பெற்றதாகக் கூறும் இக் கல்வெட்டு அக்காலத்து ரெஸிடெண்ட்டாக இருந்தவர்களான எச். சி. மாண்ட்கோமரிபர்ட், ஜே. எஃப். பிசப் ஆகியோர்களின் பெயர்களைச் சுட்டுகிறது. கேப்டன் •ஈ.லாஃபோர்டு கட்டுமானப் பொறியாளராக இருந்தாரெனவும், இதனைக் கட்ட ரூ 71, 000 செலாவாயிற்று எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. இத்துடன் 4 பாலங்கள் கட்டப்பட்டுள்ள செய்தியும் அதில் உள்ளது (கல்வெட்டு எண்: 69, புலவர் செ.இராசு)

இக் கல்வெட்டைச் சரிபார்க்க மோடி ஆவண மூட்டை 104சி-89 உம், 167சி-2உம் உதவுகின்றன. முன்னதில் 1847சூன் 11ஆம் நாள் பாலங்கட்டுகிற வேலை முடிந்து விட்டபடியால் மக்கள் போக்கு வரவிற்குத் திறந்துவிட வேண்டுதல் கொடுத்துள்ளனர். பின்னதில் 1848 திசம்பர் 11ஆம் நாள் குடியிருப்பு ஆட்சியர் (பொ) (*Acting Resident*) சர்கேலுக்கு எழுதிய கடிதத்தில் பாலத்திற்குச் சுவர் வைக்கும் செலவினை மகாராஜா அவர்கள் ஏற்றுக் கொண்டமையால், அதற்குரிய தொகை உரூ 5705-7-0ஐ அனுப்பி வைக்க வேண்டுகிறார். மேலும் 1845ஆம் ஆண்டு ஆவணங்கள் சில (138 சி-1, 107 சி-41, 181 சி-26) திருவையாறு காவிரி நதியின் பாலத்திற்கான செலவைப்பற்றிக் குறிப்பிடுவதால் இப்பாலத்தின் வேலை 1845ஆம் ஆண்டிலேயே தொடங்கப் பெற்றிருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது.

2. வெண்ணாற்றுப் பாலத்துக் கல்வெட்டு:- பள்ளி அக்கிரகாரம் அருகே வெண்ணாற்றின் குறுக்கே கட்டப்பட்டுள்ள பாலத்தின் வடகரையில் தமிழ், மராட்டி, ஆங்கிலம் ஆகிய மும்மொழிகளில் அமைந்த கல்வெட்டு ஒன்று உள்ளது. இது 1836ஆம் ஆண்டு லெப்டினென்ட் கர்னல் மக்லீன் அவர்கள் குடியிருப்பு ஆட்சியராக இருக்கும்போது சிவாஜி மகாராஜாவினால் கட்டப்பட்ட பாலத்தைப் பற்றிக் கூறுகிறது (கல்வெட்டு எண்: 68, புலவர் செ. இராசு).

இப்பாலத்தைப் பற்றி மூன்று ஆவணங்கள் கிடைக்கின்றன. 1832ஆம் ஆண்டு (78சி-3) பாலம் கட்டுவதற்காக வெண்ணாற்றுப் படுகையில் மண் எடுத்துச் செங்கல் அறுத்ததால் அப்பகுதி பள்ளமாகிச் சாகுபடிக்கு உபயோகமில்லாதிருப்பதாகவும், அதனை மேடாகச் செய்துதரவும் வேண்டப்பட்டுள்ளது. 1834ஆம் ஆண்டின் ஆவணத்தில் (195சி-2-2) வெண்ணாற்றங்கரைப் பாலத்திற்காக மரங்கள் வகையறா கொடுத்ததன் செலவுக் கணக்கு காட்டப்பட்டுள்ளது. 1836 சனவரி 27ஆம் நாளின் ஆவணத்தில் (190சி-32) மீண்டும் விண்ணாற்றின் பாலத்தின் வேலைக்காக 300 மூங்கில்களையும் 100 பனை மரங்களையும் அனுப்ப முக்கிய கலெக்டர் மகாராஜாவைக் கேட்டுக் கொள்ளுகிற

செய்தி காணப்படுகிறது. எனவே இப்பாலம் 1832 ஆம் ஆண்டு கட்டத் தொடங்கப்பட்டு 1836ஆம் ஆண்டு நிறைவு பெற்றதாகக் கொள்ளலாம்.

3. தஞ்சாவூர் வடவாறு பாலம்:- இதனைப் பற்றிய கல்வெட்டு கிடைக்கவில்லை. ஆனால், 1830ஆம் ஆண்டு இப்பாலத்தின் சுவர்களைக் கட்டிய செலவுக் கணக்கு எழுதி வைக்கப்பட்டுள்ளது (198சி-18-2). அதன் பின்னர் 1856ஆம் ஆண்டில் ஆவணத்தின் மூலம் (125சி-32-1) வடவாற்றுப் பாலத்தின் கண்ணை அடைத்து விட்டார்கள் எனத் தெரிகிறது.

4. நாகாபரணப் பொறிப்பு:- 'சாலிவாகன சகம் 1739 ஈசுவர ஆண்டு தஞ்சாவூர்ச் சத்ரபதி சரபோசி மகாராசா அவர்களுடைய உபயம்' என எழுதப்பட்டுள்ள நாகாபரணப் பொறிப்பைப் பற்றிய ஓர் ஆவணம் இச் செய்தியைச் சற்று விரித்துரைக்கிறது. பசலி 1217ஆம் ஆண்டு மதுரை ஸ்ரீ சுந்தரேஸ்வர சுவாமிக்கு நாகாபரணஞ் செய்ய வெள்ளியும் தங்க முலாமின் வர்க்கமும் வாங்குவதற்கும் கூலிக்கும் சக். 1352 (196சி 2-2) என்றவிடத்து நாகாபரணஞ் செய்ய வாங்கப்பட்ட உலோகங்களும் அவற்றின் விலையும் பெறப்படுகிறது. இதில் குறித்த ஆண்டு பசலி 1217 எனில், ஆங்கில ஆண்டு 1816 ஆதல் கூடும். நாகாபரணஞ் செய்து மதுரைக்கு அளித்தது அடுத்த ஆண்டு எனல் பொருந்தும்.

இவ்வாறாக, கல்வெட்டு, செப்பேடு, ஆபரணம் போன்றவற்றிலுள்ள செய்திகளை உறுதிப்படுத்திக் கொள்வதற்கும், அவை தொடர்பான பிறவற்றை அறிதற்கும் கூட மோடிக் காகிதச் சுவடிகள் பயன்படுகின்றன என்பதனை உணரலாம்.

## கல்விநிலை

மராட்டிய மன்னர்களின் காலத்தில் கல்விநிலை சிறந்திருந்தது என்பதற்குப் பல்வேறு ஆவணங்கள் சான்றாகக் கிடைக்கின்றன. கோட்டையில் நடைபெற்ற நவவித்யா கலாநிதிப் பள்ளிக்கூடம் அவற்றுள் சிறந்ததாகும். 'சர்வ வித்யா சாலா' என்ற பெயரில் தஞ்சைக் கோட்டையில் ஒரு கல்வி நிலையம் இருந்தது. இரண்டாம் சரபோஜியின் காலத்தில் அது 'நவ வித்யா கலாநிதி சாலா' எனப் பெயர் மாற்றம் செய்யப்பெற்று சீர்திருத்தி அமைக்கப்பட்டது (31சி-2-42) இப்பள்ளியில் வேதம், தத்துவம், இலக்கணம், காவியம், நாடகம், அலங்காரம், இசை, சிற்பம், மருத்துவம், சோதிடம் ஆகிய பாடங்களும், தமிழ், தெலுங்கு, மராட்டி, அராபி, பார்சி, உருது, ஆங்கிலம் ஆகிய மொழிகளும் சொல்லித்தரப்பட்டன.

வேதத்தில் நான்கு வேதம், ஆறு சூத்திரம் முதலியனவும், தத்துவத்தில் தர்க்கம், வேதாந்தம், மீமாம்சம், துவைதம், அத்துவைதம், விசிட்டாத்துவைதம், தருமசாத்திரம் முதலியனவும், மருத்துவத்தில் சாத்திரீய (ஆயுர்வேத), தமிழ் (சித்த)? ஆங்கில (அலோபதி), யுனானி முறைகளும் அமைந்திருந்தன.

ஏட்டுக்கல்வி மட்டுமின்றி, இப்பள்ளியில் கவாத்து (களப்பயிற்சி), கழிபட்டை (மற்போர்), குதிரை ஏற்றம் முதலியனவும் கற்பிக்கப்பட்டன (104சி-61). வேதக் கல்வியைப்

பார்ப்பனர்களும், பிறவற்றைச் சத்திரியர்களும் கற்றதாக இன்னொரு ஆவணம் கூறும் (106சி-41). ஆசிரியர்களில் பெண்களும் இருந்தனர் (123 சி-13-10).

வண்டிக்காரர்கள், பையன்களை அழைத்துக் கொண்டுவர வேலையாட்கள் முதலியோரும் இப்பள்ளியில் பணியமர்த்தப்பட்டிருந்தமையின் பிள்ளைகள் பள்ளிக்கு வருவதற்கு வசதியும், சமையல்காரர், பரிசாரகர், நீர்நிரப்புகிறவர், கொட்டியக்காரர், வண்ணான், அம்பட்டன் ஆகியோர் குறிப்பிடப்படுவதால் தங்கிப் படிக்கும் வசதியும் இருந்ததாதல் வேண்டும் (104சி-61).

நவவித்யா கலாநிதி சாலாவின் ஆசிரியர்களுக்குச் சம்பளம் சாராயப் பேட்டையின் வருமானத்திலிருந்து கொடுக்கவும் (123சி-13). பள்ளிக்கூடத்தை அவ்வப்போது பழுது பார்த்துக் கட்ட மரணத்திற்க் கொடுக்கும் தொகையிலிருந்து பெறவும் (160சி-79) ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

இப்பள்ளிக்காகச் சென்னையிலிருந்து மெல்லிய காகிதங்களை வாங்கி நூல்கள் தயாரித்தனர் (160சி-11). ஆங்கிலக் கவிதைகளையும் மராட்டியில் பெயர்த்துத் தேவநாகரியில் எழுதிப் படித்தனர் (188சி-14-6).

முக்தாம்பாபுரச் சத்திரப் பள்ளி:- இஃது ஒரத்தநாடு சத்திரம் எனவும் வழங்கப்பெறும். இது 16-1-1802ஆம் நாள் தொடங்கப்பெற்றது. இச்சத்திர நிர்வாகத்தின்கீழ் ஐந்து பள்ளிக்கூடங்கள் இருந்தன. இவற்றில் மொத்தம் 641 பேர் பயின்றனர். (47சி-39). இதுவும் உறைவிடத்துடன் கூடிய பள்ளி என்பதற்குச் சான்று உண்டு. திருநெல்வேலியிலிருந்து வந்து முக்தாம்பாள்புரச் சத்திரத்தில் ஆங்கிலேயப் படிப்புப் படித்ததுத் தன் ஊருக்கு விடுமுறையில் போகும்போது மாணவருக்குப் பயணப்படி கொடுத்த செய்தியும் காணப்படுகின்றது. (160சி-70). சிரேயஸி சத்திரத்தைச் சேர்ந்த ஆங்கிலப் பள்ளிக்கூடத்தையும் தெற்கு ராஜ வீதியிலுள்ள சர்க்கார் பள்ளிக்கூடத்தையும் எடுத்து மேலவீதியில் சர்க்காருடைய வீட்டில் வைத்து, ஜேம்ஸ், ரோஜஸ் ஆகியோர் ஆசிரியர்களாக நியமிக்கப்பட்டனர்.

தமிழ்ப் பள்ளிக்கூடம்:- தமிழ் சொல்லிக் கொடுக்கத் தனியே பள்ளிக்கூடங்கள் இருந்தன. கோட்டையின் நான்கு வீதிகளிலும் தமிழ்ப் பள்ளிக்கூடங்கள் இருந்ததாக அறிகிறோம் (160சி-23). தமிழ்ப் பள்ளிக்கூடத்திற்கு அவ்வப்போது அரசர் நல்கை வழங்கியமை பல்வேறு ஆவணங்களிலிருந்து அறியக்கிடக்கிறது (59சி-16-3, 160சி-23). ஆடிப் பதினெட்டாம் பெருக்கிற்காகப் பிள்ளைகள் ஆசிரியருக்குக் காசு கொடுப்பது வழக்கமாக இருந்தது. அக்காசினை அரசர் பிள்ளைகளுக்கு வழங்கியதோடு, பூசைக்காகத் தட்சிணை, தின்பண்டம் வாங்கவும் அரசர் பணம் வழங்கியுள்ளார் (111சி-43). அதைப்போலவே, பொங்கலுக்காகவும் வழக்கமாகத் தேங்காய், பழம், கரும்பு, பரங்கிக்காய், பூசணிக்காய் முதலியன வழங்கித் தமிழ் படிப்போரை ஊக்குவித்தமை அறியப்பெறும் (179சி-5-3).

வேதபாடசாலை:- நவவித்யா கலாநிதி சாலாவில் நால்வகை வேதம், அறுவகைச் சாத்திரம் ஆகியன சொல்லிக் கொடுக்கப்பட்டாலும் தனியே வேதபாடசாலை ஒன்றும்

இருந்தது. இரண்டாம் சரபோஜி காலத்தில் தஞ்சைக் கோட்டையின் கீழராஜ வீதியில் இது அமைந்திருந்தது. ருக், யசூர், சாம, அதர்வண வேதங்களுக்குத் தனித்தனியே ஆசிரியர்கள் இருந்தனர். மேலும், வேத நூல்களை வெளியிடங்களிலிருந்து பெற்றுப் பயிற்சியளித்ததும் குறிப்பிடத்தக்கது (160சி-15, 17) வேதங்களையும் அவற்றிற்கான பாஷ்யத்தையும் பரிசோதித்துப் படியெடுத்து எழுதிவைக்கும் முறை இங்கு பின்பற்றப்பட்டது (160சி-21, 44).

ஆரோக்கிய சாலா:- இப்பெயரில் சில ஆவணங்கள் கிடைக்கிறன. ஆரோக்கிய சாலையில் மருத்துவ முறைகளைக் கற்பித்தலும், நோயாளிகளைக் குணப்படுத்தலும் ஆகிய இரு தொழில்களும் நடைபெற்று வந்ததாதல் கூடும். மருத்துவப் புத்தகங்கள் முதலியனவும் ஆங்கே தயாரிக்கப்பட்டன (138சி-4-2, 160சி-54). ஆரோக்கிய சாலா, வேத பாடசாலா ஆகியவற்றிலுள்ள மாணவர்களுக்கு உணவும் அளிக்கப்பட்டது (138சி-4-2).

பிற கல்விக்கூடங்கள்:- ஆங்கிலேயரின் ஆட்சியால், ஆங்கிலப் பாடசாலை என்று தனியாக ஏற்படுத்தி ஆங்கிலக் கல்வியைக் கற்பித்தனர். சிரேயசி சத்திரத்திலும், தஞ்சை மேலவீதியிலும் இத்தகைய பள்ளிகள் இருந்தன (912சி-42-31/ 47சி-39). மராட்டிய மன்னர்கள் கல்வி வளர்ச்சிக்கு உறுதுணையாக நின்றமைக்கு இவை தக்க சான்றுகளாகத் திகழ்ந்தன.

## மருத்துவம்

மராட்டியர் தம் ஆட்சிக்காலத்தில் பல்வேறு மருத்துவ முறைகள் வழக்கிலிருந்தன. சாத்திரீய (ஆயுர்வேத), தமிழ் (சித்த), ஆங்கிலேய (அலோபதி), யுனானி முறைகள் கோட்டையிலிருந்த நவவித்யா கலாநிதி சாலையில் சொல்லித்தரப்பட்டன (31சி-2-42). இவை தவிர, பலவகை விலங்கு மருத்துவர்களும் இருந்தனர் (138சி-67). ஆடு, மாடு, கோழி, நாய், யானை, குதிரை, ஒட்டகம், சிறுத்தை, கரடி ஆகியனவற்றிற்கு மருத்துவம் செய்யப்பட்ட செய்திகளும் மோடி ஆவணங்களில் நிரம்பக் கிடைக்கின்றன. இதினின்று, எல்லா மருத்துவர்களுக்கும் தஞ்சையில் சிறப்பிடம் அளிக்கப் பெற்றமை புலனாகும்.

மானுட மருத்துவம்:- தன்வந்திரி மகால் தவிர, சர்க்கார் ஆரோக்கிய சாலையும் பொது மக்கள் பயன்பாட்டிற்காக அமைக்கப்பட்டிருந்தது (138சி-4-2). மருத்துவர்களில் பலதரப்பட்டவர் இருந்தனர். முக்கிய மருத்துவர், குழந்தை மருத்துவர், கண் மருத்துவர், விஷ மருத்துவர் (138சி-67), பெண் மருத்துவர்(170சி-29-4) என இவர்கள் தத்தம் துறையில் சிறப்புப் பெற்றிருந்தனர். மருத்துவ சாலைக்காக மன்னர்கள் மருத்துவ நூல்களை எழுதச் செய்யவும், விலைக்கு வாங்கவும் நிறையப் பணத்தைச் செலவிட்டனர் (108சி-99-2) (160சி-58, 60). காய்ச்சல், கை, கால் முறிவு, சிரங்கு, காயம், உடற்சூடு, உடல்வலி, மஞ்சள் காமாலை, கண்நோய், விஷக்கடி ஆகியனவற்றிற்கும், மகப்பேறு உண்டாகவும், கர்ப்ப காலத்திலும், மகப்பேறு ஆனபின்னும் மருத்துவம் செய்யப்பட்டது.

சரபோசி காசிப் பயணம் சென்றபோது, அவருடன் டாக்டர் ஸ்ட்டன் என்னும் ஆங்கில மருத்துவர் சென்றதாகவும் அவர் காசியில் இறந்து விட்டமையால், பங்கால்

கவர்னர் ஜனரல், டாக்டர் தலறைன் மக்லோட் என்பவரை அனுப்பி வைத்தார் எனவும் அறியமுடிகின்றது (188சி-11-53).

விலங்கு மருத்துவம்:- விலங்கு மருத்துவம் ஒவ்வொன்றிற்கும் தனித்தனி மருத்துவர்கள் இருந்தனர். குதிரை வைத்தியர் திரியம்பகராவ், லட்சுமணராவ் (170சி-29-2), யானை வைத்தியர் வீரராகு (170சி 29-1), நாய் வைத்தியர் காதர்கான் (184சி 23-3) என்பனவற்றால் இவை உணரப்படும்.

மாட்டிற்கு வரும் மாந்தம், கழுத்து வீக்கம், இரத்தம் கட்டல், வலி, சிரங்கு, வெக்கை, கடுவை, கோமாரி, காயளா, வாயுப்பிடிப்பு, கட்டி புறப்பாடு, வயிற்றுவலி, உஷ்ணம், ஆகிய நோய்கள் குணப்படுத்தப்பட்டதாக நாம் அறியலாம்.

யானைக்கு சளி, வாயுப்பிடிப்பு, இளைத்தல், மாதகி, படமூத, இளைத்தல், வீக்கம், சிரங்கு, அதிக நீர் போதல், கண்ணில் நீர்வடிதல், வெட்டுக்காயம் ஆகியன மருத்துவம் செய்யப்பட்டுக் குணப்படுத்தப்பட்டன.

குதிரைக்கு வாயு உஷ்ணம், கழுத்துவலி, சிரங்கு, பாஸீனா, இரத்தக்கட்டு, மலஜலம் கழியாமை, அஜீரணம் ஆகியவற்றிற்கு மருந்து கொடுக்கப்பட்டது.

ஒட்டகத்திற்கு ஜலதோஷம், காய்ச்சல், உஷ்ணம், சிரங்கு ஆகிய நோய்களுக்கும், சிறுத்தை குட்டி போட்ட பின்பு உடல் நலத்திற்கும், கரடிக்குக் காய்ச்சலுக்கும் வைத்தியம் பார்க்கப்பட்டது. மானுடரோடு விலங்கினுக்கும் மராட்டியர்கள் மருத்துவப் பணி செய்தமை அவர்தம் ஆட்சியின் மாண்பிற்கோர் எடுத்துக்காட்டாம்.

## இரண்டாம் சரபோசியின் பயணங்கள்

பதினோரு மன்னர்களுக்குப் பின்வந்த இரண்டாம் சரபோசி மட்டும் தலப் பயணங்களை மேற்கொண்டதாக நமக்குத் தகவல் கிடைக்கிறது. கி.பி. 1820-22 ஆண்டுகளில் இவர் காசிக்கும், இராமேசுவரத்திற்கும் பயணம் செய்தார். இச் செய்திகள் மூட்டை எண்-188சி-யிலும், 158சி-யிலும் காணக் கிடைக்கின்றன. சென்னை அரசினர் ஆவணக் காப்பகத்திலுள்ள மோடி ஆவண மூட்டை எண் 1281இலும் 'சரபோசி காசி யாத்திரை' எனக் குறிக்கப்பட்டுள்ளது. ஆயின், இது மொழி பெயர்க்கப்படவில்லை. காசிப் பயணத்திற்கு முன்னமேயே கி.பி. 1801ஆம் ஆண்டு சரபோசி சோழ நாட்டுத் தலப்பயணத்தை மேற்கொண்டதாகச் 'சரபேந்திர தீர்த்தாவளி' கூறும்.

கிடைத்துள்ள ஆவணங்களைக் கொண்டு கணக்கிடும் பொழுது, சரபோசி காசிப் பயணத்தைச் சுமார் 18 மாத காலமும், இராமேசுவரப் பயணத்தைச் சுமார் ஒரு மாத காலமும் மேற்கொண்டமை விளங்கும். பயணத்திற்கு முன்னமேயே இதற்கானதொரு பெரிய திட்டத்தினை வகுத்த சரபோசியின் மதிநுட்பம் போற்றற்குரியது (188சி-11-2ஏ). அத்திட்டங்கள் இருவகையன. ஒன்று பயணத்திற்கானது; மற்றொன்று, தாம் பயணத்தை முடித்துத் திரும்பும்வரை தஞ்சையில் அரசு எப்படி இயங்கவேண்டும் என்பதைப் பற்றியது.

காசிக்குச் செல்லும்போது ஒரு வழியையும், திரும்பும் போது வேறு வழியையும் பின்பற்றி, பல்வேறு கோயில்களைக் காண, வழிபடவாய்ப்பு ஏற்படுத்திக் கொண்டார். அந்நாளைய ஆங்கில அரசின் ஆணைப்படி சரபோசி ஆங்காங்குத் தங்குவதற்கு வசதியும்,செலவிற்குப் பணமும் ஆங்காங்குள்ள ஆங்கிலேய அலுவலர் வழங்கி மரியாதை செய்தனர்.

தஞ்சையில் சரபோசி திரும்பி வரும் வரையில் நடக்கவேண்டிய விபரங்களாக 32 செய்திகள் கூறப்பட்டுள்ளன (912சி-38-31). இவற்றை ஏழு பிரிவுகளில் அடக்கலாம்.

1. பண்டிகை, திருவிழாக் காலங்களிலும், பிற நாள்களிலும் அரண்மனைவாசிகள் நடந்து கொள்ளவேண்டிய முறை.
2. அரண்மனைவாசிகளுக்கு வழக்கம்போல் கொடுக்க வேண்டிய மொயின், தானதர்மச் செலவு, உலுப்பை பற்றிய விவரம்.
3. ஆங்கில அரசு அலுவலர்களுடன் அரண்மனைவாசிகள் நடந்து கொள்ள வேண்டியமுறை.
4. அரண்மனைப் பணியாளர், அவர்தம் சம்பளம் பற்றிய விவரம்.
5. அரண்மனை வரவு செலவுக் கணக்கும், ரெஸிடெண்டின் பங்கும்.
6. நீதி விசாரணை.
7. காசிப் பயணத்திற்கு உடன் வருபவர்களுக்கான சம்பளத்தை அவரவர் வீட்டில் கொடுத்து அவர்களது சுபாசுபவங்களைக் கவனித்துக் கொள்வது.

இவ்வகையான உத்திரவுகளைப் பிறப்பித்து அவற்றை நிறைவேற்றத் தம் மகனாகிய சிவாசிக்கு உரிமையளித்து அதனை ரெஸிடெண்டுக்கும், கவர்னருக்கும் அறிவித்துச் சென்றார். காசிப் பயணத்தின்போது கல்கத்தாவிற்குச் சென்று கவர்னர் ஜெனரலைப் பார்த்துத் தம்முடைய மகனை வாரிசாக நியமித்திருப்பதை ஏற்றுக் கொள்ளவேண்டும் என விண்ணப்பித்தார் (188சி-16). இதனை கவர்னர் ஜெனரல் ஏற்றுக் கொண்டு கல்கத்தாவிலிருந்து சென்னை கவர்னருக்கு இசைவாணையும் அனுப்பிவிட்டார். அக்கடிதம் அப்போதைய ரெஸிடெண்ட் ஜான் பைப் மூலமாகச் சிவாஜிக்கு வந்து சேர்ந்ததை மற்றோர் ஆவணம் குறிப்பிடுகின்றது (31சி-100).

மன்னருடன் காசிப் பயணத்தை மேற்கொண்டவர்கள் 300 பேர். காசிக்குச் செல்லும்போதும் திரும்பி வரும் போதும் தரிசித்த சில கோயில்களாவன:

1. மங்களகிரி:- 20-11-1820இல் பெஜவாடாவில் தங்கியிருந்தபோது மங்களகிரி 'பானக நரசிம்ம சுவாமி கோயி'லைத் தரிசித்ததாகத் தெரிகிறது. இக்கோயிலுக்கு வலம்புரிச்சங்கு ஒன்றைக் கொடுக்க நினைத்த மன்னர் அரண்மனையின் சந்திரமௌலீஸ்வரர் சுவாமி அறை, பிரதாபராமசுவாமி மகால், இளைய ஆவுசாகேப் இடம் ஆகிய இடங்களில் இருக்கக்கூடிய வலம்புரிச்சங்குகளில் பெரியதாக எடுத்துத் தங்கத் தகட்டினால் மூடிப் பஞ்சரத்தினத்தின் கொத்தைக் கட்டி, மன்னரின் பெயரைப் பொறித்து மங்களகிரிக்கு அனுப்ப ஆணை பிறப்பித்தார் (188சி-2).

2. திருக்காளத்தி:- 25-7-1821ஆம் நாள் மன்னர் திருக்காளத்திக்கு வழிபடச் சென்றார். அப்போது மன்னரது தகுதிக்கேற்ப ஆயுதங்களைப் பரிவாரங்கள் ஏந்திச் சென்றனர். திருக்காளத்தி சமீன்தார், கோயிலுக்குள் ஆயுதங்களுடன் வழிபடக்கூடாதெனத் தடுத்தார். இதனால் வழிபடாமற்றாது வெளியேறிய மன்னர் 'ஆயுதத்துடன் சென்று சுவாமி தரிசனம் செய்யலாம்' என்ற தல மகாத்மியக் குறிப்பைக்காட்டி மீண்டும் வரும்போது வழிபாட்டுக்குத் தடை நீக்கப்பெறல் வேண்டுமெனக் கவர்னர் ஜெனரலுக்கு எழுதினார். அவ்வாறே தடை நீக்கப்பட்டு 25-3-1822ஆம் நாள் வழிபட்டு மீண்டார் (188சி-16).

3. கயை:- காசியை அடையும் முன்பே 4-5-1821இல் கயைக்குச் சென்று 50 நாட்கள் ஆங்குத் தங்கி அஷ்டகயைப் பூசை முதலியன செய்தார். மீண்டும் 4-11-1821 அன்று கயைக்கு வந்ததாக அறிய முடிகின்றது (188சி-5).

4. பூரி ஜகந்நாத்:- 20-1-1821 அன்று பூரிஜெகந்நாத்தில் மன்னர் புஷ்பாஞ்சலி செய்து வழிபட்டார். உடன்வந்தவர்கள் அனைவரையும் புஷ்பாஞ்சலி செய்வித்து வழிபடச் செய்தார். ஏழுகால நிவேதனத்தில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு காலத்தில் தரிசனம் செய்தார். பல அரசர்களின் அறக்கட்டளை நடைபெறுவதை அறிந்து தாமும் நாளொன்றுக்கு ரூ. 2/- வீதம் ஆண்டுக்கு ரூ. 720/- கொடுத்தார் (188சி-25, 26).

5. தேவகர்:- தேவகரின் தலவரலாற்றுச் சிறப்பினைக்கூறி அத்தகு இடத்தில் மன்னர் நீராடி, கோ தானம் செய்து, அபிஷேகம், பூசை செய்த செய்தி சொல்லப்படுகிறது (188சி-78அ-5). பூரிஜகந்நாத்திலிருந்து கங்கைக்கரையிலமைந்துள்ள ஸல்காகாட், பாகல்புரம் ஆகிய இடங்களின் வழியே தேவகருக்கு வந்ததாக ஆவணம் கூறுகிறது.

6. காசி:- இந்துக்களுக்குச் சிறப்பான புனிதத் தலமாகக் கருதப்படுவது வாரணாசி என்ற 'காசி'யாகும். வடக்கே காசிக்கும் தெற்கே இராமேசுவரத்திற்கும் ஒரு சேரப் பயணம் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். சரபோசியும் இதனைப் பின்பற்றியதைக் காணலாம். 10-7-1821இல் காசிக்குச் சென்ற மன்னர், ஆங்கு சுமார் 105 நாட்கள் காசித் தம்பிரானின் மடத்திலேயே தங்கியிருந்தார். இக் காசித்தம்பிரானின் மடம் தருமபுர ஆதீனத்தின்கீழ் மன்னருடைய உதவியால் இயங்கி வந்தது. காசியிலிருந்து அனுப்பிய சுமார் 9 கடிதங்களில் பல்வேறு செய்திகள் அடங்கியுள்ளன (188சி 11-57, 58, ஊ-1,2, 9-16).

இராமேசுவரப் பயணம்:- காசிப் பயணத்தினின்று 24-4-1822இல் தஞ்சை திரும்பிய மன்னர் உடனே இராமேசுவரப் பயணத்தை மேற்கொண்டார். காசிப் பயணத்திலிருந்த போதே கடிதமனுப்பி விரிவான ஏற்பாடுகளைச் செய்ய உத்தரவு பிறப்பித்தார் (188சி 11-8). அவ்வாணையில், முகாமிடும் சத்திரங்களின் பெயர், அதன் பரப்பு, சவாரி இறங்கத் தகுதி, தண்ணீர் வசதி, சாமான்கள், வைக்கோல் தீனி ஆகியன கிடைக்கும் இடங்கள் இவற்றைத் தெரிந்து எழுதப் பணித்துள்ளார்.

26-4-1822இல் இராமேசுவரப் பயணத் தொடக்கமாக முக்தாம்பாள்புரச் சத்திரத்தில் முகாமிட்டிருந்த மன்னர், பயணத்தை முடித்துக் கொண்டு 21-5-1822இல்

மீண்டும் ஆங்கே வந்து தங்கித் தஞ்சைக்குப் புறப்பட்டார் (188சி 11-2ஏ). இவ்வாவணத்தின்படி, 1822 மே 9, 10 ஆகிய இரு நாட்கள் இராமேசுவரத்தில் தங்கி வழிபாடு செய்தமையை அறியலாம்.

காசியில் 'நெய்த்திவசம்' செய்தால் இராமேசுவரத்தில் 'தயிர்த்திவசம்' செய்வது முன்னோர் வழக்கம். அம்முறையில் பயணத்தின் போது, மீனமேசலில்'தயிர்த்திவசம்' செய்ய காசிப் பயணத்தின்போது கொண்டு செல்லப்பட்ட குடங்களையும், மற்ற பொருட்களையும் தஞ்சாவூரிலிருந்து அனுப்ப ஆணையிடப்பட்டது. (188சி 11-34).

இராமேசுவரம், ஸ்ரீ இராமநாத சுவாமிக்கு வில்வார்ச்சனையும், கோதண்டராமசுவாமிக்குத் துளசி அர்ச்சனையும் நடைபெற ஆண்டிற்கு 330 சக்ரம் மன்னரால் கொடுக்கப்பட்டு வந்தது (186சி 31-1). மேலும் மன்னர், தமது எடைக்குச் சமமான வெள்ளியினையும் சர்க்கேல், தமது எடைக்குச் சமமான துணிமணிகள், ஐந்துவித உலோகங்களையும் தானமாகக் கொடுத்தனர். பிராமணர்களுக்கு 1/2படி அரிசியும், 4 காசும், அரண்மனை ஆட்களுக்கு 1படி அரிசியும் பயணத்தில் கொடுக்கப்பட்டது (912சி-15).

மன்னரின் இராமேசுவரப் பயணத்தின்போது மிகவும் நல்ல மழை பெய்ததாகவும்,இதனால் தண்ணீர் வசதி நன்றாக இருந்ததாகவும் அறியமுடிகின்றது.

இராமேசுவரப் பயணத்தை முடித்துவிட்டுத் தஞ்சை திரும்பியதும், சென்னைக்குப் பயணம் மேற்கொள்ளப் போவதாக இரு கடிதத்தின் மூலம் மன்னர் தெரிவித்துள்ளார். அதற்காக யானைகளையும், ஒட்டகங்களையும் ஆயத்த நிலையில் வைத்திருக்க வேண்டுமெனவும் எழுதியுள்ளார் (188 சி-11, 24, 25). இருப்பினும், சென்னைப் பயணத்தைப் பற்றிய பிற தகவல்கள் மொழி பெயர்க்கப்பட்ட பகுதியில் நமக்குக் கிடைக்கவில்லை. இத்தகைய திருப்பயணங்கள் மராட்டிய மன்னர்களின் சமயப்பற்றினையும் சமய மரபுகளை அவர்கள் போற்றி வந்தமையையும் புலப்படுத்துகின்றன.

## சத்திர தர்மம்

அரண்மனைக்குச் சொந்தமான சத்திரங்கள் 13 இருந்தன (923சி-63) எனக் குறிக்கப்படினும், பின்னாளில் அவை 20 ஆகப்பெருகின. பெரும்பான்மையும் சத்திர நிர்வாகம் பாயிசாகேப்களிடமே இருந்தது. ஆதலின், பாயிசாகேப்களின் பெயர்களாலேயே அச் சத்திரங்கள் அழைக்கப்பட்டன. அவர்தம் காலத்திற்குப் பின்னரும் அப்பெயர்கள் நிலைத்துவிட்டன. இவ்வாறாக பாயிசாகேப்களின் பெயர்களில் அமைந்த சத்திரங்கள் 13. இவற்றில் மிகப் பழமையானது எனக் கூறத்தக்கது முதலாம் துளஜாவின் (கி.பி. 1728) மனைவி பெயரில் அமைந்த இராஜகுமாரபாயி சத்திரமே ஆகும். இது சூரக்கோட்டையில் இருந்தது. இதன்பின்னர், பிரதாபசிங்கன் காலத்தில் சக்குவாரம்பா (திருபுவனம்), யமுனாம்பா (நீடாமங்கலம்), திரௌபதாம்பா (மணமேற்குடி) ஆகியோரின் பெயர்களில் மூன்று சத்திரங்களும், இரண்டாம் துளஜாவின் காலத்தில் இராஜகுமராம்பா (மீனமேசல்), மோகனாம்பா (இராஜாமடம்), இராசசாம்பா (தாராசுரம்), சுலக்சணாம்பா (வேளங்குளம்), உமாபாயி (மகாதேவபட்டணம்) ஆகியோரின் பெயர்களில் ஐந்து சத்திரங்களும்,

சரபோஜியின் காலத்தில் முக்தாம்பாள் (ஒரத்தநாடு) பெயரில் ஒரு சத்திரமும், இரண்டாம் சிவாஜியின் காலத்தில் சைதம்பா (சூரக்கோட்டை), அகல்யாபாயி (மல்லியம்), பஞ்சநத மோகனாம்பா (திருவையாறு) ஆகியோரின் பெயரில் மூன்று சத்திரங்களும் தோன்றின.

இவை தவிர்த்துப் பள்ளியக்கிரகாரத்தில் இலட்சுமிராஜபுரம் சத்திரமும் தஞ்சையில் நடார் சத்திரம், கோட்டை அன்னசத்திரம், சிரேயஸ் சத்திரம் ஆகியவையும் பட்டுக்கோட்டையில் காசாங்குளம் சத்திரமும், தனுஷ்கோடியில் சேதுக்கரைச் சத்திரமும், இராமேசுவரத்தில் ஒரு சத்திரமும் இருந்தன.

சத்திர தர்மம் எவ்வாறு நடைபெற வேண்டும் என்பது குறித்த விதிமுறைகளடங்கிய ஆணை ஒன்று சேனாதுரந்தர் நீலகண்டராவ் ஆனந்தராவ் ஜாதவ் அவர்களால் வெளியிடப்பட்டது (923-9-62). அதில் கண்டவாறு, கதியற்றவன், சம்பாதிக்கச் சக்தியற்றவன், பரதேசி ஆகியோர்களுக்கும், வழிப்போக்கன், குருடன், முடவன், அங்கஹீனன், கிழவன், குழந்தை ஆகியோர்களுக்கும் சத்திரத்தில் இலவச உணவும் உறைவிடமும் கொடுக்கப்படலாம். இவர்களைத் தவிர்த்து, அரசாங்க அலுவலர் அல்லது ஆங்கிலேய அலுவலர் யாராவது வந்தால் அவர்களது தகுதிக்கேற்பச் சிறப்பு உணவு வழங்கலாம். மேலும், பெரிய அதிகாரிகள், அந்தணர், பைராகிகள், பெரியோர் ஆகியவர்களுக்கு உலுப்பைகள் வழங்கலாம். உலுப்பையாவது அரிசியும் அதனை உணவாக்குதற்குரிய பிற பொருள்களுமாம். இவ்வுலுப்பையில் முதல்தரம், இரண்டாம்தரம் எனவும் உண்டு.

"சத்திரத்தின் உத்தியோகஸ்தர், ஆள் ஒருவரும் சத்திரத்தில் சாப்பிடக்கூடாது அல்லது சத்திரத்திலிருந்து ஏதாவது சாமான் முதலியனவும் எடுத்துச் செல்லக்கூடாது அப்படி ஏதாவது நடப்பதாகத் தெரியவந்தால், அவரைக் கண்டிக்க வேண்டியது" என்ற குறிப்பும் ஆவணத்தில் காணப்படுகின்றது. அதைப் போலவே, ஊரிலுள்ளவர்கள் ஜீவனோபாயஞ் செய்வதற்கும், சோம்பேறிகள் தங்குவதற்கும் எவ்விதத்திலும் சத்திரப் இடம் கொடுக்கக்கூடாது என்பது கண்டிப்பு.

வழிப்போக்கர் எவராவது நோயுற்று, சத்திர தர்மத்தை நாடினால், அவருக்குச் சத்திரத்தின் மருத்துவரைக் கொண்டு சிகிச்சையளித்து, நோய் குணமாகும் வரையில் பத்தியம் வகையறா செய்து அனுப்புவது என்ற செய்தியும் சொல்லப்படுகிறது.

முக்தாம்பாள்புரம் அன்னசத்திரம், சிரேயஸ் சத்திரம் போன்ற சில சத்திரங்களில் குழந்தைகளுக்குப் பள்ளிக்கூடங்களும் இருந்தன. இவை தங்கிப் படிக்குப் பள்ளிக்கூடங்களாகும் (47சி-39 912சி-42-31). சத்திர தர்ம வழி அவை பேணப்பட்டன.

மேற்கூறிய ஆவணச் சான்றுகள், மராட்டிய மன்னர்கள் இந்து சமய மரபினைப் போற்றிப் பாதுகாத்ததோடு அதன்வழி அரசோச்சியதையும் கூறாநிற்கும்.

## பதிப்புமுறை

தஞ்சை சரசுவதி மகாலிலுள்ள மூல மராட்டிய மோடி ஆவணங்கள் 1960 ஆம் ஆண்டிற்குப் பின்னரே தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. எனவே, தமிழிலுள்ள இக் காகிதக் கையெழுத்துச் சுவடிகளை மூல ஆவணங்களாகக் கொள்ள வேண்டுவதில்லை

*எனினும், மொழி பெயர்ப்புச் சுவடிகளாகக் கொண்டு கீழ்க்கண்ட முறைகள் பின்பற்றப்பட்டுப் பதிப்பிக்கப்பட்டுள்ளன.*

1. தமிழ் நடை திருத்தப்படவில்லை. ஆனால் ஆங்காங்கே ஏற்பட்டிருந்த எழுத்து, சொற்பிழைகள் மட்டும் சரி செய்யப்பட்டுள்ளன. சான்றாக, தேவநாகரியில் वगैरा 'வகைரா' எனவும் पेटी 'பேடி' எனவும் உள்ள சொற்களை மொழி பெயர்ப்பில் அப்படியே எழுதியுள்ளனர். இவை 'வகையறா என்றும் 'பேட்டி' என்றும் தமிழ் வழக்கில் மாற்றப்பட்டுள்ளன.

2. மொழி பெயர்ப்புப் பிழை இருந்தவிடத்து அது திருத்தப்பட்டு அடிக்குறிப்பில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

3. பிறமொழிச் சொற்களுக்கு (மராட்டி, சமஸ்கிருதம், உருது, பார்சி முதலியன) இயன்றவரை அடிக்குறிப்பில் விளக்கம் தரப்பட்டுள்ளது. இயலாதவிடத்து அச்சொல் அப்படியே கொடுக்கப்பட்டுப் பிறைவளைவிற்குள் கேள்விக்குறி இடப்பட்டுள்ளது.

4. பயிரினங்கள், விலங்கினங்களின் பெயர்கள் மராட்டிய மொழியில் கூறப்படுமிடத்து அவற்றிற்கு இணையான தமிழ்ப் பெயரோ அல்லது உலக அறிவியல் முறைப் பெயரோ (Biological nomenclature) கொடுக்கப்பட்டுள்ளது. இயலாதவிடத்து அப்படியே கொடுக்கப்பட்டுள்ளது.

5. மூல மோடி ஆவணத்திலுள்ள காலம் ஹிஜிரி அல்லது சாலிவாகன ஆண்டாக இருக்குமிடத்தில், அவற்றிற்கு இணையான ஆங்கில ஆண்டு பிறை வளைவிற்குள்ளோ, அல்லது அடிக்குறிப்பிலோ கொடுக்கப்பட்டுள்ளது.

6. ஆவணங்களின் எண்கள் சிலவிடங்களில் தேவநாகரி எழுத்தைப் பயன்படுத்திக் குறிப்பிடப்பட்டுள்ளன. அவற்றிற்கு நேரான எழுத்துக்கள் தமிழில் இல்லையாதலால் கீழே கண்டவாறுஅவை குறிக்கப்பட்டுள்ளன.

| | | | |
|---|---|---|---|
| क = *(க);* | ख = *(கஃ);* | ग = *(ங்க);* | घ = *(ங்கஃ)* |
| च = *(ச);* | छ = *(சஃ);* | ज = *(ஞ்ச);* | झ = *(ஞ்சஃ)* |
| ट = *(ட);* | ठ = *(டஃ);* | ड = *(ண்ட);* | ढ = *(ண்டஃ)* |
| त = *(த);* | थ = *(டஃ);* | द = *(ந்த);* | ध = *(ந்தஃ)* |

7. அடிக்குறிப்பு எண் வரிசை மூவகையில் கொடுக்கப்பட்டுள்ளது. ஆவண எண் அடிப்படையிலும், மூட்டை எண் அடிப்படையிலும், பகுதி எண் அடிப்படையிலுமாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

# நன்றியுரை

வரலாற்றுச் சிறப்புமிக்க மராட்டியு மோடி ஆவணங்களின் தமிழ் மொழிபெயர்ப்பினைத் தொகுதிகளாக வெளியிடுவதற்குப் பலர் பல நிலைகளில் ஒத்துழைப்பு நல்கியுள்ளனர். அவர்கள் அனைவருக்கும் நன்றி பாராட்டுவது கடப்பாடாகும்.

மூல மோடி ஆவணங்களின் மொழி பெயர்ப்பினை அப்படியே வெளியிட்டு ஆய்வுலகிற்கு அரிய கருவூலத்தை வழங்க முன்வந்த தமிழ்ப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர், முதுமுனைவர் வ. அய். சுப்பிரமணியம் அவர்கள்,

இப்பணியின் சிறப்பறிந்து இதனை நிறைவு செய்யப் பல்லாற்றானும் உறுதுணை புரிந்த இந்நாள் துணைவேந்தர் முனைவர் ச.அகத்தியலிங்கம் அவர்கள்,

ஆவணங்களை அச்சேற்ற உரூ. 1,33,000 நிதியுதவி வழங்கிய புதுடில்லி தேசிய ஆவணக் காப்பகம்,

நூல் வடிவாக்க ஒத்துழைத்த தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிவாளர் முனைவர் பெ. சின்னையன் மற்றும் பதிப்புத்துறை உதவி இயக்குநர் திரு செ. இரெ. செயச்சந்திரன் அவர்கள்,

மொழி பெயர்ப்புச் சுவடிகளைப் படியெடுத்து வெளியிட இசைவளித்த சரசுவதி மகால் நூலக இயக்குநர், அலுவலர்கள் மற்றும் படியெடுத்துத் தந்த திருமதி க. இலலிதாம்பிகா அவர்கள்.

தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் மோடி ஆவண மொழிபெயர்ப்பினைச் செய்து தந்த திருமதி எஸ். பத்மாவதிபாய் மற்றும் மோடி வல்லுநராகப் பணியாற்றும் திரு இராக. விவேகானந்த கோபால் அவர்கள்,

தமது முதிர்ந்த அனுபவத்தால், தேவையான இடங்களில், குறிப்புரை எழுதி வைத்த பேராசிரியர் கே.எம். வேங்கடராமையா அவர்கள்,

பதிப்புப் பணியின்போது கருத்துரைகள் நல்கி உடனிருந்து உதவிய அரிய கையெழுத்துச் சுவடித்துறை விரிவுரையாளர்கள் முனைவர் ம.சா. அறிவுடைநம்பி மற்றும் முனைவர் ம. இராசேந்திரன் அவர்கள்,

அச்சுப் பணியினைச் சிறப்பாகவும், விரைவாகவும் செய்து தந்த புதுக்கோட்டை சர்மா சானடோரியம் அச்சகத்தினர்,

அச்சு மெய்ப்புத் திருத்தங்கள் செய்துதவிய புலவர் திரு. பா. கண்ணையன் அவர்கள்,

ஆகிய இவ்வனைவரது கூட்டு முயற்சிக்கும் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

பா. சுப்ரமணியன்

# தஞ்சை மராட்டிய மன்னர் மோடி ஆவணத் தமிழாக்கமும் - குறிப்புரையும்

# தொகுதி - I

## சரசுவதி மகால் பகுதி - I

## மூட்டை எண் 101C

*1797*

*1. திருவையாறில் காகயேந்தார் என்னும் ஊரில் குடத்தில் காசுபோட்டுப் புதைத்திருந்த குடத்தை ஊரார்கள் ஸர்காரில்[1] தாகல்[2] செய்ததற்கு விவரம்: குடத்தின் எடை 6 1/2 சேர் காசு[3] சுமார் 7735 க்கு எடை மனு[4] 2 3/4*

*2. வேட்டை மஹாலின்[5] ஹவால்தாரான[6] ஸகோஜி என்பவர் புலி வேட்டைக்காகப் பாபனாசம் போவதால் அவரிடத்தில் நியமமான குதிரைக்குப் போய்த் திரும்பி வரும் வரையில் தீனியைத் திருவையாறு சுபை[7] யிலிருந்து கொடுக்க உத்திரவாக வேணும்.*

*10. 1. ஸ்ரீதளகேஸ்வர ஸ்வாமிக்கு ராமோஜி - காட்கே[8] யானவர் பூஜை செய்வதற்குப் பூஜை*

---

1. ஸர்கார் - "சர்க்கார்"

2. தாகல் - தாக்கல்

3. காசு-மிகச்சிறியநாணயம்; 32காசு 1 பணம் (பக். 150 இது பேரா.கே.எம்.வேங்கடராமையா அவர்கள் எழுதிய "தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும்" என்ற நூலில் பக்க எண் ஆகும்).

4. மனு - மணங்கு (8 வீசை 1 மணங்கு) (பக்.165)

5. வேட்டைமகால் - வேட்டையாடிப் பிடித்துக்கொணர்ந்த விலங்குகள் இருக்கும் இடம் (zoo) (பக்.457)

6. ஹவில்தார் - இராணுவ அதிகாரி (பக்.75)

7. சுபை - சுபா - பெருநிலப்பகுதி; ஒவ்வொரு சுபாவும் *சீமை*களாகவும் ஒவ்வொரு *சீமை*யும் மாகாணங்களாகவும் பிரிக்கப்பட்டன (பக்.12-13)

8. தளகேசுவர ஸ்வாமிகோயில் - லக்ஷ்மிராஜபுரத்தில் உள்ள கோயில் (லக்ஷ்மிராஜபுரம் - பள்ளியக்கிரகாரம், ராமோஜி காட்கே சரபோஜியின் தமக்கை கணவர் ஆவர் (பக். 316)

எடுத்துக்கொண்டு போவதால் தக்ஷிணை வகையறாக்கள் ம. ரா. ரா[9] திவான்சாயேப் போய்க் கொண்டிருந்த போதுள்ள வழக்கப்படி கொடுக்கிறது.

## மூட்டை எண் 102C

*1827*

***12.** குலால் என்னும் சிகப்புப்பவுடர் காமன் பண்டிகை[10]க்காகத் தயார் செய்யப் பதங்க[11] என்னும் மரத்தின் விறகும் (பட்கடி) வெங்காரம் என்னும் மருந்தும், துணியும், சில்லறைத் தளவாடங்களும் வாங்கவும் மெக்யாடு[12] கூலிக்கும் கூடுதல் 100 சக்ரம்[13].*

*1825*

***38.** ஸரஸ்வதி மஹாலில் புஸ்தகம் எழுதக்கூலி: மராட்டி புத்தகம் எழுதுவதற்கு 1000க்கு ஒரு சக்ரம் வீதம், ஓலைப் புத்தகம் சரீரஸ்வான[13.1] என்னும் வைத்திய சாஸ்திரம் எழுதுவதற்கு 1000க்கு 4 சக்ரம் வீதம்*

## மூட்டை எண் 104C

***61.** நவவித்யா கலாநிதி பள்ளிக்கூடத்தின்[14] வாத்தியார் வகையறா -16*

வேதஞ் சொல்லிக்கொடுப்பவர்கள்

*4. ருக் வேதம், 4. யஜுர் வேதம்[15], 2. ஸாம வேதம், 2. அதர்வண வேதம், 2. சுக்ல யஜுர் வேதம்[16], 2. ஆறு சூத்திரம் சுரௌதி[17] = 16*

*22* சாஸ்திர பாடம் சொல்லிக்கொடுக்கிறவர்கள்:

---

9. 'மகாராஜ் ராஜமான்ய ராஜஸ்ரீ' என்பதன் சுருக்கம்

10. காமன்பண்டிகை - ஹோலிபண்டிகை, பங்குனித் திங்களில் நடைபெறுவது. (பக்.316)

11. பதங்கமரம் - Caesalpinia sappan

12. மெக்யாடு - சிறிய அலுவலர்

13. சக்ரம் - 32 காசு ஒரு பணம்; 10 பணம் ஒரு சக்ரம் (பக். 150)

13.1. சரீரஸ்வான - ஒரு வைத்திய நூல் (?)

14. நவவித்யா கலாநிதிசாலா என்பது கி.பி.1807 இல் இப்பெயர் பெற்றதாதல் கூடும். இது தஞ்சைக் கோட்டையில் இருந்த கல்விநிலையம். (பக்.240)

15. யசுர்வேதம் - கிருஷ்ணயசுர் வேதம் - எசுர் வேதத்தின் இரு பகுதிகளுள் மந்திரமும் பிராமணமும் கலந்திருக்கும் பகுதி. (பிராமணமாவது மந்திரபாகமல்லாத வேதப்பகுதி)

16. சுக்லயசுர் வேதம் - எசுர் வேதத்தின் இருபகுதிகளுள் மந்திரங்களும் பிராமணங்களும் தனித்தனி பிரிக்கப்பட்டுள்ளதும், யாஞ்ஞியவல்கியரால் கண்டறியப்பட்டதுமான பகுதி.

17. சுரௌதி- வேதத்தில் கூறப்பட்ட கருமங்களில் வல்லவன்.

2. தர்க்கம், 2. இலக்கணம், 2. மீமாம்ஸம்[18], 6. வேதாந்தம்[19] - 2. த்வைதம்[20], 2. அத்வைதம்[21] 2.விசிஸ்டாத்வைதம்[22] = 6, 2. தரும சாஸ்திரம்,

8.காவியம் நாடகம் அலங்காரம்,4. காவியம் 2.நாடகம், 2.அலங்காரம்[23] = 22

2. ஜோதிஷம், 2. ஸங்கீதம், 2. சிற்பம், வைத்தியம்,- சாஸ்திரீயம், தமிழ், ஆங்கிலேயம் யுனானி[24], இதற்குச் சரீரம், பலம், சூதி, பங்கம், அம்மை, கண், விஷம். 26 எழுத்துக்கள்[25],

6 மஹராஷ்டிரம், 2.தெலுங்கு, 8.தமிழ் கிரந்தம்[26] கூட, 6.துலுக்கு - 2.பார்சி, 2.அரபி, 2.தென்தேச பாஷை = 6, 4.ஆங்கிலேயம்,.

12. கவாத்து,- 4. கவாத்து[27], 4. கழிபட்டை 4. குதிரைச் சவாரி, 2. குழந்தைகளுக்குப் பாடம் எழுதி வைக்கிறவர்கள், 2. கொட்டியக்காரன், 2. பாளையக்காரிகள் 2. வண்டிக்காரர்கள்.

10சமையலுக்கு

2. சமையல்காரன், 2.இரண்டு பேர், 2.ஜலம் நிரப்புகிறவன், 2. சமையல்காரன், 2. பரிசாரகன்

4. பையன்களை அழைத்துக் கொண்டு வருவதற்கு வேலைக்காரர்கள் 1. கணக்குப்பிள்ளை 1. அம்பட்டன், 1. வண்ணான்

---

18. மீமாஞ்சை - பூர்வமீமாஞ்சை உத்தரமீமாஞ்சை என்ற இரு பிரிவினையுடையதாய் வேத வேதாந்தப் பொருள்களை விசாரித்தற்குக் கருவியாய் உள்ள சாத்திரம். (பூர்வமீமாஞ்சையாவது வேதத்தில் கருமகாண்ட* ஆராய்ச்சி பற்றிச் சைமினி முனிவர் இயற்றிய சாத்திரம். உத்தரமீமாஞ்சையாவது பிரமசூத்திரம் முதலிய நூல்கள்(பிரமசூத்திரம் வியாசர் செய்தது. கரும காண்டமாவது யாகம் முதலிய வைதிக தர்மங்களைப் பற்றிக் கூறும் பகுதி.)

19. வேதாந்தம் - உபநிடதம்

20. துவைதம் - மத்துவாசாரியரால் பிரசாரம் செய்யப்பெற்றதும் சீவான்மாவும் பரமான்மாவும் வேறு வேறென கொள்ளப்படுவதுமான சமயம்.

21. அத்துவைதம் - ஏகான்மவாதம் - பிரமம் ஒன்றைத்தவிர வேறொன்றுமில்லை என வாதிக்கும் மதம்.

22. சித்து அசித்து ஈசுவரன் என்னும் தத்துவத்திரயங்களுள், சித்து அசித்து என்னும் இரண்டும் ஈசுவரனுக்குஉடலாதலால் அவ்விரண்டும் ஈசுவரனும் ஒன்றே என்று கூறும்.

23. அலங்காரம் - அணியிலக்கணம்

24. யுனானி - முகம்மதிய வைத்தியர் கையாளும் கிரேக்க வைத்தியமுறை

25. இங்கு எழுத்துக்கள் என்பது எழுத்துக்களைக் கற்றுக்கொடுப்பவர் என்று பொருள்படும்

26. கிரந்தம் - வடமொழியை எழுதுவதற்குத் தமிழ் மக்கள் வழங்கிய எழுத்து

27. கவாத்து - போர்வீரர் புரியும் உடற்பயிற்சி

*1795*

*6. சாஹக் கோட்டை[28]யின் பேட்டை கோட்டையிலிருக்கும் அமிருதகலசநாத சுவாமி கோவில் குருக்களுக்கு ஹைதருடைய கலாபுக்குப்[29] பின்னர் அக்கோவிலுக்குக் கும்பாபிஷேகஞ் செய்கிறதென்று கண்டிப்பான உத்திரவிட்டார்.*

*67*

*1. ஸ்ரீமகாஸ்ரீஸ்ரீ ஸ்ரீமந்த் சத்திரபதி[30]சாயேப் அவர்களுக்குச் சிநேகிதரான அபிநவபூர்ண பிரியமுள்ள வெங்கடராவ் ஸ்ரீநிவாசராவ் ஆரணி தேசத்தார் ராம்-ராம்.*

*என்னுடைய ஜாகிரை[31] எனக்குக் கொடுக்கும்படி வங்காள தேசத்திலிருந்தும் சீர்மையிலிருந்தும் எழுதிவந்தும் ஸம்பாஜி பண்டிதர் பிள்ளை விரோதஞ் செய்து கொண்டு வந்தார்கள். ஏழையின்மேல் பூர்ணகிருபை கடாக்ஷத்துடன் ஷை ஜாகிரை நம்முடைய ஸ்வாதீனஞ்செய்ய வேண்டுமென்று எழுதிய கடிதம்[32].*

*2. கடிதம் - கவர்னர் அவர்கள் ஈஸ்டான்டோவின் பேரால எழுதியது. அவையெல்லாம் நன்குகேட்டு (தூமகேது) வகையறாக்கள் ஒன்றுக்கொன்று கோள் சொல்வி, கவர்னருக்கு என்ஜ என்னவோ சொல்லியிருப்பதினால் கவர்னருக்கு மிகவும் வியசனம் ஏற்பட்டுத் திரியம்பக சம்பாஜி[33]க்குச் சொன்னார். நாமிங்கு என்ன செய்யாத காரியஞ் செய்கிறோம்? என்று வெள்ளைக்காரர்கள் சென்னைக்கு எழுதுகிறார்களோ தெரியவில்லை.*

*நாம் இராஜ்யத்தைப் பாதுகாக்காமல் சும்மா சுற்றுகிறோமா என்ன? நம்முடைய இராஜ்யத்துக்கு வரும்படி வரவேண்டுமென்று நமக்கு அக்கஸ்ஸூ[34] இருக்கும்தான். அந்தந்தச் சுபைகளுக்குச் சென்று ரயத்து[35]களைக் கண்டு சில இடங்களில் முன்னாலுள்ள அதிகாரிகளை வைத்து, சில இடங்களில் புதிய அதிகாரிகளை நியமித்துச் சென்ற இடம்[36] குத்தகைக்கு இவ்வருஷம் ஜாஸ்தி குத்தகை ஆகும்படி ஏற்பாடு செய்து வருகிறோம். அதை விட்டுவிட்டு, இராஜ்யத்தின் விசாரணையே செய்கிறதில்லையென்று எழுதுகிறவர்களுடையவும் சொல்லுவார்களுடையவும் வார்த்தைகளைக் கேட்டு, கவர்னர் நானாவிதமாகப் பேசினால்*

28. சாஹக்கோட்டை - இது கும்பகோணத்துக்கு அருகிலுள்ள ஊர். இது ஏகோஜியின் முதன் மகனாகிய ஸாஹாஜியினால் எடுப்பிக்கப்பெற்றது. ஸாஹாஜி அரசராக இருந்தபொழுது அவர் தம்பி சரபோஜி சாக்கோட்டையில் இருந்ததாகத் தெரிகிறது. (பக்.14)

29. ஹைதர் கலாபு - ஹைதர் அலி படையெடுப்பால் நேர்ந்த குழப்பம்.

30. சத்திரபதி -இது மராட்டிய அரசர்கள் பூண்ட பட்டப்பெயர். அமர்சிங்கு ஆகலாம்.

31. ஜாஹிர்—உரிமை அறிவிக்கப்பட்ட பகுதி

32. "ஆரணி ஜாகீர்'' என்பது காண்க (பக்.95)

33. திரியம்பக சம்பாஜி - இவர் துளஜாகாலத்திலும் அமர்சிங்கு காலத்திலும் வக்கீலாக இருந்தவர்.

34. அக்கஸ்ஸூ - அக்கரை

35. ரயத்து - நிலத்தை உழுதுபயிரிடுபவர்

36. இடம் - வருஷம்.இங்கே 'இடம்' என்றது தவறான மொழிபெயர்ப்பு

நாம் என்ன முயற்சிக்கிறது? இராஜ்யத்தின் பந்தோபஸ்து செய்தது இப்பொழுது தெரியாது. விதை தெளித்து நடவு ஆகும்பொழுது வெள்ளைக்காரர்களுக்கு நன்கு விளங்கும்.
வேடிக்கை (ஆடுவதைப்) பார்ப்பதற்கும் விளையாடுவதற்கும் இராஜ்ஜியத்தைச் சுற்றுவதற்கும் புறப்படவில்லை. தஞ்சாவூர் பட்டணத்திலிருந்தால் வேடிக்கை (ஆட்டம்) பார்ப்பதற்கு முடியாதா என்ன? இந்த அற்பமான காரியத்திற்காக இராஜ்யத்துக்கு வர வேணுமா என்ன? தவிரவும் இரவில் பெண்களைக்கூட அழைத்துக் கொண்டு பட்டணம் (ரோந்து) சுற்றுவதற்கு வெகு தீவட்டிகளுடனும் வாணவேடிக்கைகளுடனும் புறப்படுகிறேனென்று கவர்னர் சொன்னார்களே! முன்கால முதற்கொண்டு நடந்து வந்தவைகளில் நாம் காற்பங்குகூட சவாரியில் செய்கிறதில்லை. நம்முடைய சவாரியுடன் 50 தீவட்டிகளும், 2 மத்தாப்புக்களும் கொளுத்துகிற வழக்கப்படி நடக்கிறேன். ஆனால் ஐந்நூறு[37] தீவட்டிகளைக் கொளுத்துகிறேனா என்ன? பெண்களின் சவாரியுடனும் 25 தீவட்டிகளிருக்கின்றன. தவிர அதிகமில்லை.

இதற்கும் குறைவாகச் செய்ய முடியுமா என்ன? ஆதியில் காலஞ்சென்ற பெரிய மகாராஜா[38]வின் காலத்தில் சவாரி புறப்பட்டால் 2, 4, ஆயிரம் தீவட்டிகளும் வாணவேடிக்கைகளும் இருப்பது வழக்கம். அந்தப்படி நாமொன்றும் செய்யவில்லை.

இதைப் பார்க்கப் பொறுக்க முடியாத யாராவது வெள்ளைக்காரர்களும் வர்த்தமானப் பத்திரிகைக்காரர்கள் யாராவதோ இருந்தால் அநேக விதமாக எழுதுவார்கள். அவைகளை யெல்லாம் கவர்னரவர்கள் உண்மையென்று எண்ணக்கூடாது. நாம் கவர்னருடைய எண்ணத்தின்படி நடப்பவர்கள். தவிர, வேறுவிதமாகச் செய்யமாட்டோம். நாம் அதிகச்செலவு செய்வதாகச் சொல்லுகிறார்களே, அப்படிச் செய்கிறவனல்ல.

கோட்டையிலிருந்தாலும் இராஜ்யத்திலிருந்தாலும் எல்லோருக்கும் ஒரே சம்பளம் கொடுக்கிறது. ஆனால், அதிகமாக ஒன்றும் கொடுப்பதில்லை. நாம் பிரயாணத்திற்குப் புறப்பட்டதினால் இரண்டாயிரம், இரண்டாயிரத்து அய்யனூர்[39] சில்லறை ஜாஸ்தி செலவு ஆகும். அது ஒன்றும் இலக்ஷமில்லை.[40]

கவர்னர் கேமல்[41] பாஹத்தரவர்கள்[42] நம்பேரில் அதிகச்சுமை போட்டிருப்பதினால் நாம் ஜாஸ்தி செலவு செய்வோமா என்ன? வசூலாகிற தொகை நம்முடைய செலவிற்கே போதுமானதாயிருந்தால் கும்பனிக்குச் சேரவேண்டிய தொகை சேருமா என்ன? கும்பனிக்குத் தொகை செலுத்தாவிட்டால் நம்முடைய நிலைமை என்ன ஆகும்? அது நமக்கு நன்றாகத்

37. ஐநூறு - ஐந்நூறு

38. பெரிய மகாராஜா - அமர்சிங்கின் தமையனாரான துளஜா II

39. இரண்டாயிரத்து அய்யனூர் - 2500

40. இலக்ஷமில்லை - கருதத்தக்கது அல்ல

41. ஸர் ஆர்ச்சிபால்ட் காம்பெல் - Sir Archibald Campbell இவர் 6-4-1789 முதல் 12-2-1789 வரை சென்னைச் கவர்னராகவும் சேனைத்தலைவராகவும் இருந்தவர்.

42. பாஹத்தர் -பஹதூர்

தெரியுமானதால் அதிகச் செலவைச் செய்ய கொஞ்சங்கூட மாட்டோமென்று கவர்னருக்கு நன்கு விளக்க வேண்டும். அஃதன்றி கவர்னரவர்கள் நம்மிடத்தில் அபிமானங்கொண்டு இரக்கப்பட்டு நமக்கே ஸ்தாபனஞ்செய்து கீர்த்தியை அடைந்தார்.

எங்கள்மேல் இவ்வளவு உபகாரஞ் செய்திருக்கையில் நாம் மறந்து விடுவோமா என்ன? நாம் செய்த நன்றியை மறக்கிறவர்களல்ல. கவர்னர் சொல்லிக்கொடுத்த புத்திமதிப்படியே நடப்போமே தவிர கொஞ்சம்கூட வித்தியாசம் உண்டாகாது.

யாரோ கெட்டவர்கள் ஏதாவது புகார்களை உண்டுபண்ணி, கவர்னரிடம் கொடுத்தால் அதை உண்மையென்றெண்ணி நம்முடைய பேரில் அவநம்பிக்கை கொண்டு (நிர்பந்தம்) கட்டாயப்படுத்தக் கூடாது. நம்முடைய நடவடிக்கைகளை விசாரித்தே கட்டாயப்படுத்த வேண்டியிருந்தால் கட்டாயப்படுத்தலாம்.

நாம் எல்லாக் காரியத்திலும் கவர்னர் கேமல் அவர்களையே நம்பியிருக்கிறோம். நமக்கு வேறு ஆதாரமில்லை; கெடுத்தாலும் நன்மை செய்தாலும் கீர்த்தியும் அபகீர்த்தியும் அவர்களுக்கே.

சகாயஞ்செய்து பட்டாபிஷேகஞ் செய்வித்தால் கவர்னருக்குக் கீர்த்தி வரும்படியே நாம் நடப்போம். நாமும் ஜனங்களை எல்லாம் நன்கு ரக்ஷித்து, கீர்த்தியையே அடைவோம். ஆனால் அபகீர்த்தியை அடையமாட்டோமென்று கவர்னர் கேமலவர்களுக்கு நன்கு அறியும்படி விவரமாய் எழுதுகிறது. வெகு பொல்லாப்புடன் பேசினதற்குத் திரியம்பக ஸம்பாஜி என்பவர் நல்லபதிலைக் கொடுத்தார். இனிமேலும் கவர்னர் வகையறா யாராவது ஏதாவது பேசினால் நல்ல தகுந்தபடி பதிலைக் கொடுக்கும்படி எழுதுகிறதென்று ரா. ஸாயேப் அவர்களின் உத்திரவுப்படி எழுதியிருக்கிறேன். எழுதியபடி கவர்னருக்கு நன்கு விளங்கும்படி செய்யவும்.

67. 2. கவர்னரிடம் எழுதிக்கொடுத்த கணக்கில்
ஏன் எழுதவில்லையென்றால் ஸர்கார் ரிகார்டில் ஒன்றுமே எழுதவில்லை. பச்சண்ணா[43]வின் சொந்த ரிகார்டில் கணக்கிருந்தது. தற்போது தேடுகையில் கணக்கு அகப்பட்டது. அதிலிருந்து இக்கணக்கும் வாஸ்தவம்தான். கும்பனியின் கணக்கில் தாகல் செய்த தொகையும் அவர்களுக்குச் சேரும்படி செய்ய வேணடுமென்று கவர்னர் கேமல் பாஹத்தார் அவர்களுக்குத் தெரிவித்து, கணக்கில் தாகல் செய்யும்படி செய்யவும். அறியவும்.

நாம் மாயவரத்திலிருந்து புறப்பட்டு, பேரளத்திலிருந்து தங்கள்பேரால் உத்திரவையும் நம்முடைய கடிதத்தையும் அனுப்பினோம். அது சேர்ந்திருக்குமே! பேரளத்திலிருந்து புறப்பட்டு, திருவாளுருக்கு வந்து சேர்ந்தோம். இங்கிருக்கும் சுபேதார்[44] பதக்தார்[45] வகையறாக்களை அழைத்து அவர்களைப் பார்த்து சுபேதாரை வேலையிலிருந்து நீக்கி வேறொருவரை நியமித்து, பந்தோபஸ்து செய்தோம்.

---

43. பச்சண்ணா - இவர் துளஜாவின் அமைச்சர் (பக்.409)

44. சுபேதார் - சுபாவின் தலைவர் (பக்.74)

45. பதக்தார் - சில ஊர்களின் ஒன்றியம், "பதக்" எனப்பட்டது; பதக்கின் அலுவலர் பதக்தார் (Srinivasan, C.K.Maratha Rule in the Car natic.p.365)

திருவாளூரிலிருந்து நாகூர் பந்தர்[46] 10 நாழிகை வழி ஸமீபத்திலிருப்பதால் அவ்விடஞ்சென்று சமுத்திரத்தைப் பார்த்து காதர்சாயேப்பின் தர்கா[47] வையும் பார்த்து வரவேணுமென்று யஜமானவர்கள் சொன்னதினால் அவ்விடம் ஜாஸ்திநேரம் தங்கக்கூடாது. ஒரு நாளுக்குள்ளே மறுபடியும் வரவேணுமென்று தெரிவித்தோம்.

பிறகு வியாழக்கிழமை காலையில் திருவாளூரிலிருந்து[48] புறப்பட்டு கீவளூரில் வெய்யிலுக்காக இளைப்பாறி அவ்விடமிருந்து புறப்பட்டு, சாயங்காலம் நாகப்பட்டணத்தின் வழியாக நாகூருக்கு வந்து சேர்ந்தோம்.

மிஸ்தர் பாலேயில் நாகப்பட்டணத்திற்கு மேற்கே 3 நாழிகை வழி வரையில் முன்னால் வந்து சாயேப் அவர்களுக்கு மிக்க மரியாதை செய்து அழைத்துக்கொண்டு போனார். நாகூரில் தங்குவதற்கு இடமும் தயார் செய்வித்து ஆயிரம் பேர்களுக்கு விருந்து செய்து ரா.சாயேப் அவர்களுக்குப் பீடிகளையும், பைடன் தேசத்துத் துப்பட்டா ஒன்றையும், சில்லறைச்சாமான் கொஞ்சமும், வேட்டை நாயொன்றையும் கொடுத்து மரியாதை செய்தார்.

ரா. சாஹேப் அவர்கள் சமுத்திரத்தைப் பார்த்து, தர்காவையும் பார்த்துவிட்டு வெள்ளிக்கிழமை காலையில் அவ்விடமிருந்து புறப்பட்டு, சாயங்காலம் திருவாளூருக்கு வந்து சேர்ந்தார். நேற்று இவ்விடம் தங்கி இருந்தார்.

திங்கட்கிழமை பகல் 2 மணிக்குத் திருவாளூரிலிருந்து புறப்பட்டு இரவு 1 மணிக்கு நீடாமங்கலம் போய்ச் சேருகிறார்கள். மா. அவர்கள் கட்டின சத்திர[49] மாகையால் ஒருநாள் அங்கே தங்கி மன்னார்குடிக்குச் சென்று அங்கொரு இரவு தங்கியிருந்து மறுநாள் அவ்விடமிருந்து புறப்பட்டு, புதன்கிழமை சாயங்காலம் தஞ்சாவூர்ப் பட்டணத்திற்குப் போய்ச்சேர நாள் பார்த்திருக்கிறது.

இன்றுமுதல் நான்காவது தினத்தில் பட்டணத்திற்குப் (நகரம்) போய்ச் சேரப்போகிறார். கர்னலும் கூடவேதானிருக்கிறார். காரியதரிசி-கேமல் என்பவர் கர்னலுக்கு ஒரு கடிதம் அனுப்பியிருக்கிறார். அதுவந்து சேர்ந்து தாங்கள் அனுப்பிவைத்த கடிதத்துடன் இங்கு வந்து சேர்ந்ததும் கர்னலுக்குக் கொடுத்துவிட்டேன். கடிதத்தைப் பார்த்து மனதில் வாங்கி நம்மைச் சீக்கிரம் கோட்டைக்குப் போகும்படி எழுதியிருக்கிறார்.

67.2. ரா. சாயேப் இராஜ்யத்தில் தங்குகிற காலமல்ல. சீக்கிரம் போகவேணுமென்று கர்னல் சொன்னார். அதற்கு இனி எங்கேயும் போகிற வேலை இல்லை. நாலுதினங்களில் ஊருக்குப் போய்ச் சேருகிறேனென்று பதிலளித்தார். அறியவும் வேணும்

---

46. பந்தர் - Store House

47. தர்கா - பள்ளிவாசல் (Mosque)

48. திருவாளூர் - திருவாரூர்

49. நீடாமங்கலம் சத்திரத்துக்கு யமுனாம்பாள் சத்திரம் என்று பேர்.(பக்.271 ) யமுனாம்பாள் பிரதாபசிம்மரின் மூன்றாவது மனைவி.

கவர்னர் ரா. சாயேப் பெயரால் எழுதி ரெஸிடெண்டுக்கு[50] அனுப்பினார். அது சேர்ந்ததும் ரெஸிடெண்ட் சம்சாரம் சுகமாகப் பிரஸவித்திருப்பதால் அவர்களைத் தனியாகவிட்டு வருவதற்கு இல்லாமல் அங்கேயே சென்று, மிஸ்தர்அரங்கடின் மற்றும் மிஸ்தர் பிளாக்பர்ன் இவ்விருவருடன் கடிதத்தைக் கொடுத்து, ரெஸிடென்ட் அவர்கள் இவ்விடம் அனுப்பினதின் பேரில் நேற்று இவ்விடமிருவரும் வந்து சேர்ந்தார்கள். அவர்களை ரா.சாயேப்[51] அவர்கள் காணும்படி செய்தார்கள். கவர்னருடைய கடிதம் வந்திருப்பதைக் கொடுக்க ரெஸிடெண்ட் வரமுடியாததினால் நம்மை அனுப்பியிருக்கிறார்.

கவர்னருடைய கடிதத்தை வாசித்து மனதில் வாங்கி அதன்படி நடக்க வேண்டுமென்று இருவரும் சொன்னார்கள். கடிதத்தின் பையைக் கொடுத்தார்கள். அதைப்பெற்றுக் கொண்டு அவர்களுக்குப் போய்வர உத்திரவு கொடுத்தார். இருவரும் திருவாரூரிலிருந்து நேற்றிரவு புறப்பட்டுத் தஞ்சாவூருக்குப் போனார்கள். கவர்னரவர்க ளெழுதிய கடிதத்தை நாம் ரா. சாயேப் அவர்களுக்கு நன்கு படித்துக் காட்டினோம். அதைக்கேட்டு கவர்னருடைய கடிதத்திற்குச் சரியான பதிலை எழுதித்தயார்செய்ய ஆரம்பித்ததின் பேரில் கடித்தை எழுதுகிறோம். பின்பு அனுப்புகிறோம். தெரியவேண்டி எழுதியிருக்கிறேன்.

ஸேக் மியானுடன் 7 குதிரைகளையும் 2சாமரங்களையும் அனுப்பினோம். அது புதுச்சேரிக்கு வந்து சேர்ந்தது.

கொள்ளிடத்தைச் சீக்கிரம் குதிரைகள் (கடக்கும்படி) கரையேறும்படியும் தீனி, புல் கொடுத்து நன்றாக விசாரிக்கும் படியும் அம்மல்தாருக்குக்[52] கண்டிப்பான உத்திரவு செய்யப்பட்டிருக்கிறது. சீக்கிரமே வந்து சேருவார்கள்.

ஆயிரம் விராகன் நாணயம் அகப்படவில்லை . சக்கரங்கள்[53] இருக்கின்றன. அவைகளை அனுப்பக்கூடாதே. கோட்டையை அடைந்ததும் விராகன்களை ஜாக்கிரதை செய்து அனுப்புகிறேன். அறியவேணும். பாக்கி எல்லாப் பிரஸங்கங்களுக்கும் பதிலைப் பின்பு எழுதுகிறேன். என்ன ஜாஸ்தி எழுதுவது. வணக்கம்.

77.சாணார் காசும்[54] -கினிகாசும்[55] கரீதி

---

50. ரெஸிடென்டு - Resident ; கும்பினியாரின் பிரதிநிதிகளாகத் தஞ்சை முதலிய சிற்றரசர்களின் தலைநகர்களில் அச்சிற்றரசர்களை மேற்பார்வை செய்யும் அரசியல் தந்திரிகளாக விளங்கியவர். (பக்.63) அமர்சிங்கு காலத்தில் ரெஸிடென்டாக இருந்தவர் அலெக்சாண்டர் மக்லோட் என்பவர் ஆவர். (பக்.64)

51. ரா.சாயேப் என்றது அமர்சிங்கை.

52. அமல்தார் - வருவாய்த்துறை அலுவலர் (பக்.74)

53. சக்கரங்கள் –32 காசு 1 பணம்; 10 பணம் 1 சக்கரம்; 45 பணம் ஒரு வராகன்.

54. சாணார் காசு - இத்தாலியத் தங்கநாணயம் (பக்.157)

55. கினிகாசு-இதன் மதிப்பு ரூ. 20(பக்.159) கரீது - விலைக்கு வாங்குதல்.

கினிகாசு ஒன்றுக்குக் கும்பனி ரூ. 17.20 விலை ஆகிறது. சாணார் காசு 100க்குப் புலி வராகன் 132 விலை ஆகிறது.

89. 1847 ஜூன் 11 திருவையாரில் காவேரி நதிக்குப் பாலங்கட்டுகிற வேலை முடிந்தது. மேல் மெல்லிய சுண்ணாம்பினால் மணியாசியும் ஆய்விட்டது. காவேரியில் ஜலம் வந்துவிட்டதனால் ஜனங்கள் படகு மூலம் போக்குவரத்து நடத்துகிறார்களாகையால் ஜனங்களுக்கு முன்போலவே சிரமமும், தாமஸமும் ஏற்படுவதால் பாலத்தின் மேல் நடப்பதற்குள்ள தடையை நீக்குவதற்கு வைகாசிமீ 31உ சனிக்கிழமை கன்யா லக்னத்தில் நல்ல முகூர்த்தமாயிருப்பதால் ரா. மகாராஜா சாயேப் அவர்கள் அநேக திரவியஞ் செலவழித்துச் செய்த தருமம் பூர்த்தியடைந்ததினால் மனமூர்ந்து (இச்சையிருந்து) நம்முடன் ரா. மகாராஜா சாயேப் அவர்களும் சவாரி விஜயம் செய்து உத்திரவு கொடுத்து நடத்தினால் அழகு. ஒருவேளை நிர்ப்பந்தமிருக்கும். ஆனால் அதற்காக அப்படி வரமுடியாமலோ அல்லது தாங்களும் ,டிபுடி ஸர்கேல் முதலியவர்களுடன் வந்து நடத்தினால் உத்தமமாக யிருக்குமாகையால், அப்படி வருகிற சங்கதிகளுக்கோ எனக்கு முன்னால் தெரிவித்தால் வருகுற காரியத்தைச் சித்தம் செய்துகொள்வேனாகையால் அந்த விவரத்தைக் கண்டு முன்னால் எழுதி அனுப்புகிற தயவைச் செய்யவேணுமென்று பிரார்த்திக்கிறேன். (கையொப்பம்) முத்துசாமி தாசில்[56]

94. கும்பகோணத்தில் ரா. டபீர் பண்டிதர் அக்கிரஹாரத்தை[57] அளந்து பைமாயேஷ்[58] செய்வதற்குப் பைமாயேஷ்காரர் வந்திருக்கிறார். அவர் அக்கிரஹாரத்தை "வீடுகட்டும் நிலம்" என்று எழுதுவதாகச் சொல்லுகிறார்.

அதை ஸர்வமானியம் அக்கிரஹாரமென்று எழுதச்சொன்னால் அதற்குள்ள ஆதரவுகளைக் காட்டவேண்டியிருக்கிறது. தவிரவும் அவர் அப்படி எழுதச் சம்மதப்படவில்லையாகையால் ஆதரவுகளை ரிக்கார்டு ஆபிஸிலிருப்பதின் நகலை அனுப்பவேணுமென்று அந்த அக்கிரஹாரத்தின் ஜனங்களெல்லாம் நமக்குக் கடிதம் எழுதி அனுப்பியிருக்கிறார்கள். இவ்விஷயத்தில் சர்காரவர்கள் தயவுசெய்து ஆதரவுகளைக் கொடுக்கும்படி ரிக்கார்டு ஆபீஸர்களுக்கு உத்திரவிட வேணுமென்று ஸேவகனுடைய பிரார்த்தனை.

183 சரபோஜி ராஜா சாஹேப் அவர்களுக்குக் காசிவாஸி[59] வித்துவான் ஜனங்களெல்லாம் எழுதிய கடிதம்

மகாராஜாவின் அன்னத்தின் மகிமையினால் கவலையற்று வித்யாப்யாஸமும்[60]

---

56. திருவையாற்றுப்பாலம் முதலியன சிவாஜியின் செலவில் கட்டி முடிக்கப்பட்டன. திருவையாற்றுப் பாலத்துக் கல்வெட்டு. "The Bridge was erected at the expence of His Highness Maharaja Sivajee Raja of Tanjore A.D. 1846-47." (p.470)

57. டபீர் பண்டிதர்- இவர் பிரதாபசிங்கு காலத்திலும், துளஜா காலத்திலும் இருந்த சிறந்த அமைச்சர். அவருடைய இயற்பெயர் நாரோபண்டிதர் என்பதாகும். (பக்.73-74) இவர் பெயரால் கும்பகோணத்தில் ஒரு அக்கிரகாரம் இன்றும் உள்ளது.(பக்.267)

58. பைமாஷ் -19ஆம் நூற்றாண்டில் ஆங்கில ஆட்சியாளர்கள் இந்தியாவில் நடத்திய நில அளவு.

59. காசிவாஸி - காசியில் தங்கியிருப்பவர்கள்

60. வித்தியாப்யாஸம் - கல்விகற்றல்

காலக்ஷேபமுஞ்[61] செய்து வருகையில் சுபால கிருஷ்ண பாகவதரின் குமாரர் நரசு என்பவர் இவ்விடம் வந்து ஜாதி ஸங்கரம்[62] செய்யவேணுமென்று அவனுக்கு அவன்மாதிரி ஜனங்கள் சகாயமாயிருந்து இங்கே நடந்த ஸமாசாரம் எல்லாம் முதலில் அனுப்பித்த கடிதத்தைப் பார்த்துத் தெரிந்திருக்கும். இப்பவும், தர்மபுரி துரோணாசலத் தம்பிரான்[63] என்பவர் கண்ணானான[64] நரசு என்பவனுடைய அபிமானத்திற்காக அவனை ஜாதியில் சேர்க்கவேணுமென்று பிராமணர்களுக்குத் தொந்தரவு செய்து சத்திரத்தை எல்லாம் மூடிவிட்டு, பிராமணர்களுக்குச் சாப்பாடு இல்லாமல் செய்து, ஜாதியில் சேர்க்கவேணுமென்று அநேக முயற்சிகளைச் செய்தான் . ஆனாலும் விஸ்வேஸ்வரருடைய[65] அனுக்கிரஹத்தால் பிராமணர்களுக்கு ஊரில் சாப்பாடு கிடைத்து, இன்று வரையில் ஜாதிக்குழப்பம் ஏற்படாமல் நடக்கிறது.

பின்பு அந்த மடத்தில் இளைய தம்பிரான் பெரியஅருணாசலத் தம்பிரானுக்கு[66] அநேக விதமாக போதனை செய்து, தங்கள் பிராமணர்களுக்கு எல்லாம் சாப்பாடு போடவேண்டுமென்றும்,அநேக பிரபுக்கள் காசி க்ஷேத்திரத்தில் நம்முடைய மூலமாகச் சத்திரங்கள் ஸ்தாபித்திருக்கையில் நாம் கெட்ட பிடிவாதத்தினால் பிராமணர்களை முழுகடிப்பது நமக்கு நியாமல்லவென்று போதனை செய்து வழக்கப்படி சத்திரம் நடக்கிறது. இளையதம்பிரான் சொன்னதின் பேரில் அவருடைய வார்த்தையைக் கொண்டு சத்திரம் நடக்கிறது. ஆனால் அருணாசலத் தம்பிரானுக்கு நரசு என்பவன் மேலுள்ள அபிமானம் போகவில்லை. எப்படியாவது பிராமணர்களில் சேர்ந்து, பிராமணர்களின் வரிசையில் உட்காரவேணுமென்று முயற்சி செய்கிறார்கள்.

அதற்காக மகாராஜா சாயேப் அன்னதானப் பிரபுவாகையால் இதில் பிராமணர்களை உத்தாரஞ் செய்வித்து, பிராமணர்களுடைய கஷ்டங்களை விலகச்செய்து சடப்பத் தம்பிரானுக்குக்[67] கடிதம் எழுதி பிராமணர்களுக்குத் தொந்திர வன்னியில் தினமும் சாப்பாடு போடும்படியாகச் செய்யவேண்டும். தாங்கள் தருமமாக இராஜ்யஞ்செய்து, காசிக்ஷேத்திரத்தில் அன்னதானத்தையும் செய்வித்து, அநேக பிராமணர்கள் காசிவாசஞ் செய்து கொண்டிருக்கையில் இந்த விக்னம் ஏற்பட்டிருக்கிறது. இதை நிவாரணஞ்செய்து பிராமணர்களின் உத்தாரம் செய்ய வேண்டும். இன்னும் அநேகக் கீர்த்திகளுண்டாகும். அசட்டை செய்யாமல் பிராமணர்களிடத்தில் மனது வைத்துப் பாதுகாக்கவேண்டும்.

---

61. காலக்ஷேபம் - உண்டி உறையுளோடு இருத்தல்

62. ஸங்கரம் - கலப்பு

63. தருமபுரி - தருமபுரம் (மயிலாடுதுறைக்கு அண்மையிலிருப்பது. துரோணாசலத் தம்பிரான் - அருணாசலத் தம்பிரான்; இவர் காசியில் குமாரசுவாமி மடத்தில் இருந்த தம்பிரான்களின் ஒருவர். )

64. கண்ணான் - கன்னார்.

65. விஸ்வேஸ்வரர் - காசிவிசுவநாதப்பெருமான்.

66. காசியில் குமாரசுவாமி மடத்தில் இருந்தவர். (திருப்பனந்தாள் காசி மடத்து அதிபராக இருப்பவர்கட்குப் பின் உரிமையுள்ளவராதல் கூடும்)

67. சடப்பத்தம்பிரான் - திருப்பனந்தாள் காசிமடத்து அதிபராக இருந்த காசிவாசி சடையப்ப சுவாமிகள் (பக்.424, 430)

193. சீயாழி[68] யைச் சேர்ந்த குணமருதூர் மாகாணத்தைச்[69], சேர்ந்த நடுக்கரை கீழ்பாதி கிராமம் பூராவும் ஸ்ரீ ஸ்வாமியாருக்கு ஸர்வமானியம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

196. 1814 ஸர்காரின் வாத்தியார் பாளம்பட்டு பட்டுகோசாமியாருக்கு[70] ஐந்து கிராமங்கள் ஸர்வமானியம் கொடுத்த விஷயம்.

206. திருவையாரில் புதிய படகு தயார் செய்ததைக் காரைக்கால் துறைமுகத்தில் நங்கூரம் போட்டு வைக்கப்படுவதால் அதற்குப் படகோட்டிகளை அனுப்ப வேணும். படகு ரக்ஷிக்கிறவர்களுள் தண்டலுடன் ஏழு ஆஸாமிகளை[71] அனுப்புகிறது.

246.ஞாபகக் குறிப்பு:- கிருஷ்ணாஜிபோஸ்லே அவர்களுடைய வரலாறு.

249. ஞாபகக்குறிப்பு:- மிசல். பே. டீ-பாடன் என்பவர் எல்லாத் துரைகளுக்கும் பெண்களுக்கும் இதனால் தெரிவிப்பது யாதனில் 'டாக்யூரோ டைப்' என்று ஒரு யந்திரமிருக்கிறது. அதனால் வெளிச்சம் செய்து பாவ படம்[72] வகையறாவை எழுதுகிற வேலைத்தனம் எனக்குத் தெரியும். இவ்விஷயத்தில் நான் உழைக்கத் தயாராக இருக்கிறேன்.

படத்தின் மாதிரி-6 1/2 அங்குலம் நீளம்-4- 1/4 அங்குலம் அகலாமாயிருக்கும். இல்லாவிடில் அதற்கும் சிறியதாகவுமிருக்கும். செப்புத்தகட்டின் மேல் வெள்ளித்தகட்டைக் கொடுத்து, அதன் மேலெழுதிய படம் ஒன்றுக்கு ரூ. 25 விலை ஆகிறது. துகையை உடனே செலுத்த வேண்டும். நான் வீட்டிற்கு வந்து வேலைசெய்ய வேணுமென்று நினைத்தால் எனக்கொரு கடிதம் எழுதினால் நான் வரச் சித்தமாயிருப்பேன் . அப்பொழுது செய்த வேலைகளைக் காட்டுவேன். நான் வருவதற்கு வண்டிச்சத்தம் கொடுக்க வேணும்.

259. சிவகங்கைக் கோட்டையில் காலியாகவிருந்த சில இடங்களில் சுவர்போட்டு மேல் ஆவரணம் செய்வதால் சிவகங்கைக்குப் போகிற ஜனங்களுக்கும். மிஷின் மாதா கோவிலுக்குப்[73] போகிறவர்களுக்கும் இடைஞ்சலாயிருப்பதால், அந்தச் சுவர்களை இடித்துவிட வேணுமென்று தெரிவிக்கிறேன்.

அவ்வேலைக்கு இப்பொழுது சுவர் போட்டிருக்கிறது போக ஒருபொழுதும் காலி இல்லை. இங்கே நந்தவனம் இருந்தது. அதற்குச் சுற்றிலும் வேலியுமிருந்ததினால் அந்த நந்தவனத்தைப் பாதுகாப்பதற்காக வேலிக்குப் பதிலாகச் சுவர் போடப்பட்டிருக்கிறது.

68. சீயாழி - சீர்காழி

69. மகாகாணம் - சில ஊர்களின் தொகுதி (பக்.12)

70. இவர் அரசகுரு; இசை வல்லுநர்; இவர் மகன் பாலசரஸ்வதிபட் கோசுவாமி(பக்.224)

71. ஆட்கள்

72. பாவபடம் - நிழற்படம்

73. இது சுவார்ஷ் சர்ச்சு ஆகலாம்

அதனால் ஜனங்களுக்கு யாதொரு இடைஞ்சலுமில்லை. இதை நீங்கள் இன்னுமொருதரும் வந்துபார்த்தால் நன்கு விளங்கும்.

262. ரெஸிடெண்டுக்கு முக்தாம்பாள்புரம்[74] போவதற்காக யானையும் ஹெளதாவும்[75] அனுப்பவேணுமென்று—

266. 1832 ஜூலை 11உ தற்போது விஸ்தாரமடைந்த வரிசைகளில் கும்பனி இலாகாவின் சுங்க அதிகாரிகளை நீக்கி நாளைமுதற் கொண்டு ஸர்காரின் அதிகாரத்திற்கு ஒப்படைக்கும்படி தாசில்தாருக்கு உத்தரவிடப் பட்டிருக்கிறது.

300. அங்கே மிஸ்தர் ஜெரீக்[76] சாயேப்புக்கும் தெரியக்கூடாது. இங்கே ஸ்வார்ஷ் பாதரிக்கும் தெரியக்கூடாது.

306. ரா. பாதரி சாயேப் தங்கள் மேல் மிகவும் பிரியமாயிருக்கிறார். ரா. பாதரி சாயேப்பின் பிரியத்தைப் பார்க்க எல்லாமும் அனுகூலமாக இருக்கிறது.

ரா. பாதரி சாயேப்பின் தயவைச் சம்பாதித்து அவர்களிடமிருந்து யோக்கியன் என்று பெயர் வாங்க வேணும்.

308. ரா. கோவிந்தராவ்[77] சாயேப்புக்கு தத்தாஜி[78] எழுதியது நாம் சென்னைக்கு வந்தபின்பு நம்முடைய வேலைகளனைத்தும் சுவாமியின் கிருபையால் அனுகூலமாகத்தானிருக்கின்றன. அதிலும் புதிய கவர்னர் லார்ட்ஹாபர்ட்[79] வந்த பின்னர் ஸ்ரீ மந்த் சத்ரபதி சாயேப் அவர்களின் பேரில் மிக்க தயவுகூர்ந்து நடத்துகிறாராகையால் காரியமும் சீக்கிரமே அனுகூலமாகி, தங்களுடையதும் நம்முடையவும் சந்திப்பும் சீக்கிரமே பகவான் செய்து வைப்பார்.

இப்பொழுது இங்கே அடிக்கடி கவர்னர் வந்து ஸ்ரீமந்த் சத்திரபதி[80] சாஹேப்பையும் அழைத்துக்கொண்டு வேட்டைக்குப் போகிறார். ஆகையால் ஹூஜூரின் உத்திரவானபடி

---

74. முக்தாம்பாள்புரம் - ஒரத்தநாடு

75. ஹெளதா - அம்பாரி

76. அங்கேயென்றது சென்னையை.
ஜெரிக் - ஸ்வார்ஷ் பாதிரி தஞ்சைக்கு வந்ததும் அவரிடத்தில் சென்னையில் நியமிக்கப்பட்டிருந்த பாதிரியார். இங்கேயென்றது தஞ்சையை. ஸ்வார்ஷ் - (பக். 71-72)
Srinivasan, C.K.,Maratha Rule in the Carnatic(Pages 386-389)

77. கோவிந்தராவ் என்பவர் சரபோஜியின் சார்பில் காரியங்களைச் செய்வதற்காகத் தஞ்சையில் இருந்த அலுவலர்.

78. தத்தாஜி அப்பா என்பவர் சரபோஜி சென்னையில் இருந்தபொழுது சரபோஜியிடம் உயர் அலுவலராக இருந்தவர். (பக்.79-80)

79. லார்டு ஹோபர்டு. இவர் 7-9-1794 முதல் 21-2-1798வரை கவர்னராக இருந்தவர் (பக். 62).

80. சத்ரபதி என்றது- சென்னையில் தங்கியிருந்த சரபோஜியை

எழுதுகிறேன். என்னவென்றால் பயிரி என்னும் பக்ஷியையும் -லகட் என்கிற பக்ஷியையும் நல்ல வேட்டையாடுகிறதைப் பார்த்து ரா. தொண்டமானுக்குச்[81] சொல்லி அனுப்பவும்.

இவ்விடம் ரா. நவாப்புக்குப் பக்ஷிகளைக் கொண்டு வந்த இடத்திலேயே இருக்க வேணுமென்று நிறுத்திக் கொண்டார். அவருடைய தகப்பனாரும் இவ்விடம் வரும்படி செய்யவும்.

311. சாயேப் அவர்களுக்குச் சொல்லி தினமும் நாம் காவேரி ஸ்நானம் செய்து ஸ்ரீ அக்னீஸ்வர கல்பகாம்பாவிடம்[82] தினந்தோறும் மூன்று வேளையும் எப்பொழுதும் நல்லதாகி சீக்கிரம் தங்களுடைய இராஜ்ஜியத்திற்கு வந்து சேர வேணுமென்று 4 லக்ஷம் பாரிஜாதக புஷ்பங்கள் ஸ்வாமிக்கு அர்ப்பணஞ் செய்தேன். சங்கதி தங்களுக்குத் தெரிய வேண்டுமென்று எழுதியிருக்கிறேன்.

322. குண்டூரில் வெள்ளைத்துணியைத் தவிர வேறொரு துணிகளும் கிடைக்கவில்லை அதுவும் அதிகவிலையுள்ளதாயிருக்கிறது. துறைமுகமும் இவ்விடமிருந்து ஆறு ஊர்களிருக்கின்றன. அங்கேயும் துணிகள், விலையுயர்வு என்று கேள்விப்படுகிறேன். நம்முடையவர்களில் ஒருவரும் போகிற வேலையில்லை. ஹைதராபாத் இங்கிருந்து 20 ஊர்களிலிருக்கின்றது. அவ்விடமுள்ள வியாபாரமும் தெரிந்து கொள்ளத் தருணமில்லை. குண்டூர் தாலுகா முழுவதும் குக்கிராமம் போலிருக்கிறது. அங்கொன்றும் அபூர்வமாகத் தோன்றவில்லை.

338. பன்னீர் கரீதி[83]க்காக 11 புலிவராகவன்[84].

344. ரா. துளஜா மகாராஜாவின் காலத்தில் இராமேஸ்வரத்திற்கு அனுப்பின பிராமணர்களின் எண்ணிக்கை-அவர்களுக்கு எவ்வளவு சக்ரம் கொடுக்கப்பட்டது? எத்தனை நாளில் போய்த் திரும்பினார்கள்? இதன் விவரத்தை எழுதி அனுப்புகிறதென்று—

351. பணிமங்கலம் - கோதும்பை புள்ளி

368. ரா. மகாராஜா சாஹேப்[85]- அவர்களுக்குப் புத்திர சந்தானமுண்டாவதற்குக் கும்பகோணத்தில் அமரேந்திரபுர அக்கிரஹாரத்தில் ஜபம் பாராயணம், ஹோமம், பிராமண போஜனம், வகையறா ஸ்ரீ ஸ்வாமிகளின் மூலம் செய்விக்கப்பட்டது. அந்தப் பிராமணர்களுக்கு ஸ்நானத்திற்குக் காவேரியில் படித்துறையும் கட்டிக்கொடுத்த விஷயம்.

371. விபூதி மந்திராக்ஷதை ரா. மகாராஜாவிடம் கொடுத்து அவர்களும் இரு பாயிசாயேப்களும் வாங்கிக் கொள்கிறது. கோரோசனம். கிராம்பு சர்க்கரை இவை எல்லாம் சாப்பிடுகிறது.

---

81. புதுக்கோட்டை அரசர், தொண்டைமான் என்று குறிக்கப்படுவர்.

82. இவை திருக்கானூர் சுவாமி, அம்பாள் பெயர்களாம்.

83. க்ரீதி - விலைக்கு வாங்குதல்

84. புலிவராகன் -45 பணம் ஒரு புலிவராகன். புலி (Phuli) = flowery அழகுபடுத்தப்பெற்ற என்பது பொருள். (பக்.150-151)

85. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

374. நாச்சியார்குடி- ஸ்ரீஸ்வாமிக்குப் புஷ்ய சுக்லபக்ஷம் திவிதியை அல்லது திருதியைக்குக்[86] கொடியேற்றமாகப் போகிறது. அந்தக் கொடியேற்று தினத்தன்று சுவாமியின் சந்நிதியில் பூர்ண கும்பத்தில் மந்திரித்துத் தீர்த்தத்தை ஸ்தாபனஞ் செய்து வைத்திருக்கிறது. அத் தீர்த்தத்தை அங்கிருந்து அன்று கொண்டுவந்து த்வஜஸ்தம்பத்துப் பக்கத்தில் வைத்து அங்கே கோவிலின் குருக்கள் மந்திரத்தினால் அதற்குப் பூஜை செய்து வைத்திருக்கும். அச்சமயம் கொஞ்சம் தீர்த்தம் கிடைக்குமாவென்று, வெகு ஜனங்கள் காத்துக் கொண்டிருப்பார்கள். முதலில் வாங்குபவருடைய மனோரதம் எல்லாம் பூரணமாகும். பிறகு கொஞ்சம் கொண்டுபோவது. இப்பேர்ப்பட்ட மகிமையுள்ளது அந்தத் தீர்த்தம். அக்கோவிலுக்கு இப்பொழுது கொடியேற்றமாகிறதே. நாம் அந்தத் தீர்த்தத்தைப்பற்றி ஜாக்கிரதை செய்து யெடுத்து ஒரு குடத்தில் போட்டு, முத்திரைபோட்டுப் பிராமணரிடம் அக்குடத்தைக் கொடுத்து, கூட ஸேவகனையும் அனுப்பவேண்டும். அப்படிச் செய்து அனுப்பினால் ஸர்காரிடம் சேர்ப்பித்து ஸ்ரீ மந்த் ஸ்ரீ சாயேப்பும் சௌ பாயிசாஹேப் இருவர்களும்[87] ஸ்னானஞ் செய்ய வேண்டும். அப்படி செய்தால், புத்திரன் உண்டாகும். எல்லா அரிஷ்டங்களும்[88] விலகும், என்பதாக அந்தத் தீர்த்தத்தின் மகிமை அந்த ஸ்தல மாஹான்மியத்தில்[89] சொல்லப்பட்டிருக்கிறது.

382. நல்ல கனவு காணப்பட்டதா இல்லையா என்று ஸ்வாமிகளுக்குத் தெரியப்படுத்தவேணும்.

சிம்சுமார் பிரதிமை விஷயம்.

387. ஒருகோடி ஸந்தான கோபால மந்திரம் ஜபித்து 12 கிராம்பைப் புத்திர ஸந்தானமுண்டாகுவதற்காகக் கொடுக்கிறது.

391. ஜபம்-ஸ்ரீமந்த் ரா. ஸ்ரீசாஹேப் வேட்டைக்குப் போய்ப் புலியைக் கொன்று விட்டுக் கோட்டைக்குத் திரும்பும்போது ஸ்வாமிகளைப் போய்ப்பார்த்து நமஸ்கரித்து 8 நாட்களில் தரிசனத்திற்கு வருகிறோமென்று ஸ்வாமிகளிடம் சொல்லுகிறதென்று உத்திரவாயிற்று.

396. ஸ்ரீமந் ராஜேஸ்ரீ அவர்களும் சௌ. பாயிசாயேப்களும் ஜபிக்கவேணும். இம்மந்திரத்தை ஜபித்தவர் யாரென்றால்—முன்பு குந்தி என்பவர் ஜபித்து அவருக்கு அந்த ஜபத்தின் பிரபாவத்தினால் பஞ்சபாண்டவர்கள் உண்டானார்கள். இன்னொரு மந்திரம் புராணத்தில் சௌபரி என்பதை ஜபித்து ஸ்ரீகிருஷ்ணஸ்வாமியினிடமிருந்து ஆயிரக்கணக்கான புத்திரர்கள் அந்தப் பண்க்காரனுக்குக் கிடைத்திருக்கிறது. இம்மந்திரம் ஸ்ரீமந்த்துக்காக ஆரம்பித்த ஜபானுஷ்டானத்தின் சக்தியால் புலப்பட்டிருக்கிறது. இம்மந்திரத்தை எழுதி அனுப்பக்கூடாது. நாம் நேரில்தான் உபதேசிக்க வேணும்.

---

86. புஷ்யம் - தைமாசம்; சுக்லபக்ஷம் - வளர்பிறைப் பக்கம்; திவிதியை- இரண்டாம் நாள்; திருதியை - மூன்றாம் நாள்

87. பாயிசாகேப் இருவர் என்றது இரண்டாம் சிவாஜியின் மனைவியர். சைதம்பாபாயியும் காமாட்சியம்பாபாயியும் ஆகலாம்.

88. அரிஷ்டங்கள் —தீங்குகள்

89. ஸ்தலமாகான்மியம் - தலமகிமை.

*397. அக்னிஷ்டோமம் யாகம்[90] விஷயம் - பசு-அல்லது மாவுபசு*

*399. -நிகழும் (மாசி) மாகமாஸம் சுக்லபக்ஷம்-இப்பக்ஷத்தில் த்விதியை திருதியையும் வெள்ளிக்கிழமை வியதிபாதம்[91] இவைகளும் சேரவேணும். ஆனால் அதொரு பெரிய பருவகாலம். இப்பேர்ப்பட்ட நாளில் புத்திர ஸந்தானத்திற்காகப் பாயஸம் தானம் செய்யவேணுமென்று ஸ்கந்தபுராணம் மாக மஹான்மியத்தில் ஸ்ரீமகாதேவர் சொல்லியிருக்கிறார் என்று இருக்கிறது. இப்பொழுது மாகமாஸம் திவிதியை வெள்ளிக்கிழமையன்று எல்லாப் போகமுஞ் சேர்ந்திருக்கிறது. அதனால் அன்று வேண்டியளவு பாயஸம் செய்து ஜபத்தில் பிராமணர்களைத் தவிர்த்து இன்னும் சிலருக்கும் 40,45 பிராமணர்களுக்கு ஸ்வாமிக்கு நிவேதனஞ் செய்து தக்ஷிணை விடையத்துடன் (வெற்றிலை பாக்குடன்) ரா. சாஹேப் அவர்களுக்குப் புத்திரனுண்டாக வேண்டுமென்று ஸங்கல்பம் செய்துகொண்டு தானம் கொடுக்கப்பட்டது.*

*இது நிற்க, பாத்திரபத சுக்லபக்ஷம் (புராட்டாசி) ஸப்தமியன்று தேவகி அம்மாள் தனக்குக் குழந்தைகளுண்டாக வேணுமென்று மாண்டே என்னும் பணியாரத்தைச் செய்து ஒரு பிராமணனுக்குத் தாம்பூலம் தக்ஷிணையுடன் தானம் கொடுத்து, அம்மாதிரியே அவர்கள் 12 வருடம் தானங் கொடுத்தார். அந்த விருதத்தின் மகான்மியத்தினாலே அவருக்கு ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவானவர் பிள்ளையாகப் பிறந்தாரென்று புராணத்திலிருக்கிறது.*

*அதனால் இப்பொழுது மாக (மாசி) மாஸம் சுக்கில பக்ஷம், இரதஸப்தமி[92] மஹா பர்வகாலம் உத்தமமான நாள் இருக்கிறதே என்று மாண்டே (கோதுமை மாவினால் செய்யும் பணியாரம். கூடையைக் கவிழ்த்தாற் போலிருக்கும்) செய்து 12 வருடம் நம்மால் செய்ய முடியாதென்ற யோசனையினால் 12 வருடத்தியதையும் ஆகர்ஷித்து[93] செய்வித்தேன். மாண்டே என்னும் துக்கடாவை ஸ்ரீவரதராஜ ஸ்வாமிக்கு நிவேதனஞ் செய்து, ஸ்ரீமந்த் ரா. சாஹேப் அவர்களுக்குக் குழந்தைகளுண்டாக வேணுமென்று ஸங்கல்பம் செய்து, ஒவ்வொரு பிராமணனுக்கும் 12 வீதம் தாம்பூலம் தக்ஷிணையுடன் 12 பிராமணர்களுக்குத் தானம் கொடுக்கப்பட்டது.*

*ஜபத்தில் வைப்பதற்கு-வேகம்பூர் சந்தனக்கட்டையை வாங்கி சந்தனமிழைத்து ஜபத்தில் வைத்து, அதை ராமச்சார்யர் மூலம் ஸர்காருக்கு அனுப்புகிறேன்.*

*421. -நகரம் என்கிற ஊர் பிராமணர்களுக்கு இனாம் கொடுக்கப்பட்டது.*

---

90. இது ஒரு தலையாய யாகம்; வசந்த காலத்தில் ஐந்து நாட்கள் செய்து முடிப்பது (பக்.372)

91. வியதிபாதம் -27 யோகங்களுள் ஒன்று; நற்காரியங்கள் செய்ய விலக்கப்பட்டன.

92. இரதசப்தமி -மாக (மாசி) மாதத்து வளர்பிறை ஏழாம்நாள்; இந்நாளில் சூரியன் வடக்குப்பக்கம் திரும்புவதாக ஐதிகம். இது டிசம்பர் 22இல் நிகழ்கிறது என்பர்.

93. ஆகர்ஷித்து - ஒட்டுமொத்தமாகச் சேர்த்து

*436. 1840 ரா. ராமாஜி பண்டிதருக்கு[94] ஏப்ரல் 21௳*

தஞ்சாவூர் கமிஷனரு[95]டைய கச்சேரியிலிருந்து ரா. அமரசிங்கு போஸலே அவர்களின் கடன்காரர்களின் தொந்திரவுகளைத் தீர்க்கும் விஷயம்

*439. 1840 மே 9௳ ரா. அமர்சிங்கின் கடன்[96] விஷயம்.*

455.ஸ்வாமியாருக்கு ஆன சகுனம்.

ஸ்ரீஸ்வாமியார் இரண்டு நாளைக்குமுன் ஸ்ரீஸ்வாமிகளுடைய தரிசனத்திற்குப் போயிருக்கையில் தரிசனஞ் செய்து திரும்புகையில் ஸ்வாமியினிடம் தியானஞ் செய்து கொண்டு, "ஜபமாரம்பித்த காரியம் நிறைவேற வேணுமென்று மனத்தில் நினைக்கையில், அக்கோவிலின் பிராமணர் ஒருவர் கையில் சக்கர நாரத்தம் பழம் கொண்டுவந்து, ஸ்ரீமந்த் சாயேப் அவர்களுக்குக் குழந்தை பிறந்ததென்று ஸ்வாமியார் கண் திறந்தவுடன் கையில் கொடுத்தார். இதுதான் சகுனமானது என்று சக்கர நாரத்தம்பழத்தைப் பெற்று, ஜீவண்ணாவிடம் கொடுத்து, ஹூஜூரிடம் கொடுக்கச் சொன்னார்கள். அவர் அனுப்பித்திருப்பார்.

## முட்டை எண் 105 C

*12. 1776* அணைக்கட்டு (அகண்ட காவேரி): இவ்வருஷம் காவேரி நதிக்கு ஜாஸ்தி பிரவாகம் வந்து அணைக்கட்டு உடைந்து போயிற்று. அதைக் கட்டுவதற்கு இன்று வரையிலும் தஞ்சாவூர் சக்ரம்[97] 70,000 செலவாயிருக்கிறது. இன்னும் அணைக்கட்டு நேர்த்தியாவதற்கு ஒரு லக்ஷம் ரூபாய் வரையில் செலவாகும்.

நம்மிடம் இராஜ்யம் வந்த நாள் முதற்கொண்டு 100 வருஷங்களாக அனுபோகம். அகண்ட காவேரி முதற்கொண்டு அணைக்கட்டு உடைந்த இடத்தில் நாம் மண்ணை வெட்டிப் போட்டுக்கட்டி மராமத்து செய்வது. நாணலைப் பயிர் செய்கிறது. இதற்கு ஒருவருடைய கட்டளையும் வேண்டியதில்லை. இந்தப்படி நடந்து வருகிறது.

இவ்வருஷமும் 10 மாத முதற்கொண்டு அணைக்கட்டின் வேலையை நாம் செய்துகொண்டு வருகிறோம். அங்கு சிலர்......மண்ணை வெட்டவிடாமல் தடுக்கிறார்களாகையால் தூரத்திலிருந்து மண்ணை வெட்டிக்கொண்டு வந்து போட்டு அணையைச் சரிப்படுத்த வேணுமாகையால் அப்படிச் சரிப்படுத்த வெகு.........செல்லுகின்றன. இவ்விஷயமாக முதலில்

---

94. ராமாஜிபண்டிதர் - இவர் தஞ்சை மராட்டிய அரசர்களில் இறுதி அரசராகிய சிவாஜி காலத்தில் "சர்க்கேல்" பதவியில் இருந்தவர். (பக்.86,87)

95. அரசு இற்ற பிறகு தஞ்சை ஆட்சியைக் கவனிப்பதற்கு ரெஸிடென்டுக்குப் பதிலாகக் கமிஷனர் பதவி தோற்றுவிக்கப்பட்டது.

96. அமர்சிங்குக்குக் கடன் தொல்லைகள் நிறைய இருந்தமை பின்வருவதினின்று அறியப்பெறும்.
"The treaty of 1793 required the Rajah to pay 60,000 star pagodes towards the clearance of his debts"(பக்.52 அடிக்குறிப்பு)

97. தஞ்சாவூர்ச் சக்கரங்கள் மதுரைச் சக்கரங்களினும் மதிப்புடையவை என்று தெரிகிறது. (பக்.153)

கோரந்தரருக்கு எழுதினதற்குக் கோரந்தர்[98].........சொல்லி அவருடைய அம்மல்தாருக்கு முதலில் பெரிய மகாராஜா ரா. பிரதாப சிங்கஜீ அவர்களின் காலத்தில் நடந்தாற்போல, அணைக்கட்டின் வேலைக்குத் தடங்கலில்லாமல் நடத்துகிறதென்றும், உத்திரவையனுப்பி, யாரோ திருச்சினாப்பள்ளியில் கர்னல் ஜெரக் அவர்களிடம் அனுப்பியிருக்கிறார். இனி அணைக்கட்டு வேலைக்குத் தடங்கலேற்படாது என்று கோரந்தரவர்கள் நமக்குச் சொல்லியனுப்பினார்.

இப்படி இருக்கையில் இப்பொழுது குலாம் அலிகான் என்பவர் அணைக்கட்டு வேலையை நடைபெறாமல் தடுத்து இருக்கிறார். இன்னும் சிற்சில இடங்களில் நாணல் நட்டிருந்ததை அறுத்துக் கொண்டு போய்விட்டார்.

இப்பொழுது காவேரிக்கு ஜலம் வருகிற காலம். ஒருவேளை ஜாஸ்தி தண்ணீர் வந்தால் இன்று வரையில் ஏராளமான திரவியத்தைச் சிலவழித்துக் கட்டினதுகூட வீணாகி அணை உடைந்து போகும். அதனால் காவேரிக்கு ஜலம் வராது.

சோளராஜ்யத்தில் காவேரிக்கு ஜலம் வந்துதான் சாகுபடி ஆகவேண்டும். தேசத்தில் பயிர் வளர்ந்தால்தான் கும்பனிக்குத் துகை சேரும்படிசெய்து பிழைப்பார்கள். இல்லாவிடில் பயிராகாது. கும்பனிக்குச் சேர வேண்டியதையும், நவாபின் துகையையும் செலுத்த இயலாது. வெகு ஜனங்களுக்குக் கஷ்டமுண்டாகும். சோழ மண்டலத்தின் ரயத்துகள்—அநேகம் பேர்கள் பிராமணர்கள் , ஏழைகள், வகையறாக்களும், சுகவாஸிகளும் கூட இங்கு நிலைக்க முடியாது. வழக்கப்படி நூறு வருஷங்களாக நடக்கும் வழக்கத்திற்குக் கூட இப்படித்தடங்கல் செய்து இராஜ்யத்திற்குக் கெடுதி செய்ய வேண்டுமென்று செய்தால் இதைக் கும்பனியார் நியாயப்படி தீர்த்துவிடாவிட்டால் நாம் இந்தப் பிராதை யாரிடம் சொல்லுவது.

நவாபுக்கு[99] நமக்குமிடையில் விசாரிப்பவர் கவர்னர் கௌன்சில். இந்த இராஜ்யத்தின் பந்தோபஸ்து செய்து கொடுப்பவர்களும் கௌனர் கௌன்சில். இந்த இராஜ்யத்தை கும்பனியார்கள் ஸ்தாபித்தவர்கள். ஆகையால் இதைக் காப்பாற்ற வேண்டியதும் கௌனர் கௌன்சில்தான். நம்முடைய நஷ்டமெதுவோ அதுதான் கும்பனியின் நஷ்டம்.
இவ்வருஷம் அணைக்கட்டைச் சீக்கிரமாகக் கட்டவிடாமல் தடைசெய்வதால் தேசம் நன்றாய்ச் செழிக்காமல் (பயிராகாமல்) இராஜ்யம் வெகு இழுப்பிறப்புக்கு வரும். இப்படி வருகிற வருடத்திலும் அணைக்கட்டுக் கட்டத் தடுத்தால்......இவ்வேலைக்கு வாய்வார்த்தையால் தடை செய்தால் அவர்கள் அதற்குப் பதிலைக் கும்பனிக்குக் கொடுக்கும்படி இருக்கும். கடைசியில் கும்பனியின் ஒப்பந்தத்துக்கு வரும் துகையும் அவர்களே கொடுக்கநேரிடும்.

இந்த இராஜ்யம் கும்பனியார்களால் அபிவிருத்தி ஆக வேண்டும். அந்த மானாபிமானம் அவர்களுக்கில்லாமல் நாம் என்ன சொல்லுவது. இவ்விஷயத்தில் தாமதஞ் செய்யாமல் சீக்கிரம் அணைக்கட்டின் வேலை நடக்கும் படியாக நவாப்புக்குச் சொல்லி அவர்களுடைய

---

98. கோரந்தர் - கவர்னர்; அமல்தார் - வரி தண்டும் அதிகாரி

99. ஆர்க்காடு நவாப் முகம்மது அலிகான்

அம்மலதாருக்கு (அதிகாரிக்கு) உத்திரவிட்டுத் தடங்கலில்லாமல், வழக்கப்படி அகண்ட காவேரி முதற்கொண்டு அணைக்கட்டின் வேலையை[100] நடத்துவதற்கு உத்திரவிடவேண்டும். ரபிலாவல் மீ[101] 22உ ஹூஸேன்கான் என்னும் மத்யஸ்தரிடம் நாளது தேதியில் கொடுத்து ஈஷ்டொண்ட் அவர்களிடம் அனுப்பிக்கப்பட்டது.

நகல் ஆங்கிலேய கௌனர் கௌன்சிலவர்கள்[102] கிருகட்[103] ஜனரல் ஸிம்ஸ்ரஸ்டொண்ட் சாயேப் துரையவர்கள் கமாண்டாரவர்களுக்கு எழுதியது.

நீங்கள் சென்ற மீ 28உ எழுதிய கடிதம் 20உ கிடைத்தது. அதிலெழுதிய சமாச்சாரத்தையெல்லாம் நன்கு அறிந்தேன். அணைக்கட்டின் சமாச்சாரத்திற்கு 2 நாள்களில் பதிலெழுதுகிறேன். இவ்வேலைக்கு நவாப் அவர்கள் திருச்சினாப்பள்ளியிலுள்ள தன்னுடைய அதிகாரிக்குக் கட்டளை.

அணைக்கட்டின் வேலையின் விஷயம் பற்றி எழுதியிருக்கிறீர்களே. நீங்கள் சீக்கிரமே இக்கடிதம் பார்த்தவுடன் அணைக்கட்டுக்குப் புறப்பட்டுப்போய், அங்கு நடந்த வேலை போக மேற்கொண்ட வேலையை எல்லாம் முடிகிற வரையில் அங்கேயேயிருந்து சீக்கிரம் முடிக்கவும்.

இவ்வுத்தரவைக் கர்னல் ஜீம்ஸ் அவர்களுக்கு எழுதியது என்னவென்றால்-அங்குள்ள அதிகாரிக்கு நீங்கள் உத்திரவு செய்கிறது. இவ்வேலையை அதி சீக்கிரமாய்ச் செய்விக்கும்படி தயார் செய்விக்கிறது என்றும் இந்த சங்கதிகளெல்லாம் ஸ்ரீமகாராஜா சாயேப் அவர்களுக்குத் தெரிவிப்பது......தயாராகுவதற்குத் தாங்கள் இப்பொழுது அணைக்கட்டின் வேலையிலிருக்கும் உத்யோகஸ்தர் துரைக்கு நன்கு சீக்கிரமாய்இவ்வேலை ஆக வேணும், என்று தகவல் சொல்லி அனுப்பவில்லை போல நமக்குத் தோணுகிறது. நீங்கள் நன்றாகத் தகவல் இந்த வேலைக்காகக் கொடுத்திருந்தால் அவ்வேலை சீக்கிரமே ஆகும்.

சென்ற மாதத்தில் நாம் தங்களுக்கு எழுதிய கடிதம் சேர்ந்திருக்குமே. அச்சங்கதி உங்களுக்குத் தெரிந்திருந்து நடுவில் இவ்வேலை இப்படி ஆக வேணுமா. நம்முடைய அளவில்லாத சலாம். இக்கடிதம் சென்னப்பட்டணத்திலிருந்து எழுதியது. ஜார்ஜ் ஸ்காடன்[104], Brooks, Palkan, Jerdin, Mucki மேற்சொன்னபடி ஜனரல் ஈஸ்டொண்ட் அவர்கள் தனக்குச் சென்னையிலிருந்து கவர்னர் கௌன்சிலவர்கள் ஆங்கிலத்தில் எழுதியபின் கடிதத்தின் மொழி பெயர்ப்பு மராட்டியில் கான்-மத்யஸ்தர்.

272. நவாப்பின் சங்கதியைப் பற்றி எழுதின கடிதம் கர்னல் பர்ன் மூலமாகக் கௌனர் கௌன்சிலுக்குச் சேர்ந்தது என்னவென்றால். நவாப்புக்கு கொடுக்க வேண்டிய துகையில்

100. அணைக்கட்டு பழுதுபார்த்தல் (பக். 93, 94).

101. ரபீஉல் அவ்வல் -முகமதியர் மாதங்களில் மூன்றாவது.

102. சென்னையிலிருந்த கவர்னருக்கு உதவியாகக் குறைந்த பட்சம் மூவர் இருந்தனர். இக்குழுவுக்குக் கவர்னர் இன் கௌன்சில் என்று பெயர்.

103. கிருகட் - Brigade ஆகலாம்; படைப்பிரிவு

104. George Stration ஆகலாம்.

எவ்வளவு கூடுமோ அவ்வளவு துகையைக் கும்பனியின் கஜானாவில் டிபாசிட்டில் வைப்பதாகவும் இங்கிலாந்திலிருந்து தீர்ப்பாகி வருகிற வரையிலும் என்று கர்னல் பர்ன் எழுதினாராம்.

இவ்விஷயத்தில் ஸர்காரவர்கள் கைப்பட தஸ்தாவேஜி ஒன்றும் எழுதி அனுப்பவில்லை . கர்னல் தானாகவே சொன்ன வார்த்தைகளுக்கு நாம் சம்மதிக்க மாட்டோமென்று எழுதிய கடிதம்.

152. 1827 திருவாதி[105] தாலுகாவைச் சேர்ந்த மணவளம் பேட்டை சுறோத்திரியம்[106] கிராமத்தில் பனைமரத்தின் வேர்களை வெட்டும் பொழுது, பேபர்மன் என்றும் சொல்லப்பட்ட 56 சேர் செப்புக்காசு ஒரு பானையில் போட்டுப் புதைத்திருந்த புதையல் அகப்பட்டதென்று அந்தக் காசுகளை ஸர்க்காருக்கு அனுப்பியிருப்பதாகவும், நாளது தேதியில் தாசில்தார் அவர்கள் அர்ஜீ[107] ஹூஜூருக்கு எழுதியனுப்பியிருக்கிறார். அது கலெக்டரிடம் வந்து சேர்ந்தது. அவர் அச்செப்பு நாணயங்களைக் கஜானாவிற்கு அனுப்பித்தார்.

அந்நாணயத்தின் பேரிலுள்ள முத்திரை நன்றாகத் தெரியவில்லை. மண்ணில் புதைந்திருந்ததால் அழுக்குப்படிந்து நன்றாகத் தெரியவில்லை. அந்நாணயத்திற்குப் பேபர்மன் காசு என்று கஜானாவின் ஷாரப் வகையறா ஜனங்கள் சொல்லுகிறார்கள். ஆனால் இத்தனை வருஷத்திற்கு முன்னால் இன்னாருடைய காலத்தில் ஏற்பட்ட நாணயமென்று தெரியவில்லை. ஒரு நாணயத்தின் எடை ஒரு விராகனிடை இருக்குமென்று தோன்றுகிறது. அறியவும். 1827 மார்ச்சு மீ 12உ முகாம் நாகப்பட்டிணம்.

44. 1803 மகாராஜா சபையில் 10 ஜோடி மல்லுஜெட்டிகள் குஸ்தி போட்டதற்கு இனாம் 720 சக்ரம்.

451. 1803 பேசரி என்னும் பறவையை வாங்குவதற்கு வேட்டை அண்ணாசாமி இடம் 5 புலிவராகன்.

2. 1803 வஸ்தாத் இடமிருக்கும் குஸ்தி அப்பியாஸஞ் செய்கிற புத்தகத்தைப் பார்த்ததற்காக இனாம். ரூ.1000.

45. 1819 வேதாரண்யத்தில் ஸ்ரீவேதாரண்யேஸ்வர ஸ்வாமிக்கும் ஸ்ரீவீணாவாதவிதூஷிணி[108] அம்பாளுக்கும் அஷ்டபந்தனத்துக்கு[109] சக்கரம்[110] 200.

105. திருவாதி - திருவையாறு

106. வேதம்வல்ல பிராமணர்கட்கு விடப்பட்ட நிலம் சுரோத்திரியம் எனப்பெறும். (பக். 259-63)

107. அர்ஜி - விண்ணப்பம்

108. வீணாவாதவிதூஷிணி - யாழைப்பழித்த மொழியம்மை

109. அஷ்டபந்தனம் - சுக்கான்கல், கொம்பரக்கு, சாதிலிங்கம், செம்பஞ்சு, தேன்மெழுகு, எருமை வெண்ணெய், குங்குலியம், நற்காவி ஆகிய எட்டுப்பொருள்களையும் இடித்துச் செய்த மருந்தைச் சிலாவிக்கிரகங்கள் அசையாது இருத்தற்பொருட்டுச் சாத்துவது.

110. சக்கரம்; 32 காசு 1 பணம்;10பணம் ஒரு சக்கரம்.

46. 1803. ஸ்ரீபிரஹதீஸ்வர ஸ்வாமி கோவிலில்[111] அஸ்டபந்தனம் கும்பாபிஷேகத்திற்காக ஸ்ரீபிள்ளையாருக்குச் சக்ரம்-200, 133 லிங்கங்களுக்குச் சக்ரம்-200, ஸ்ரீசுப்பிரமணிய ஸ்வாமிக்கும் சண்டிகேசுவரருக்கும்-150

58. 1819 தஞ்சாவூரில் கிராம தேவதை[112]களில் சேர்ந்த எல்லையம்மனுக்கு ஆயுத பூசையன்று பூஜைக்கு 1 சக்கரம்.

99. 1819 இராஜமகால்-நகர்கானாவில்[113] -ரொக்கம்.23ஆபாகவதமேளி[114]டத்தில்-மோஹினி மஹேஸபரிணய நாடகத்திற்காக[115] மாதிரிகள் கரீதிகள் செய்து கொடுத்ததற்குச் சக்ரம்-9

167. 1800 ஹரித்ராநதி-மன்னார்குடி ராஜகோபாலஸ்வாமியின்தெப்ப உற்சவத்திற்குக் குளம் மராமத்துக்கு 10-1/2 சக்ரம்.

15. 1826 பித்தளை நகைகள் வகையறா செய்கிறவன் கொடுத்த மனு.

136. 1833 முத்திரை போடுவதற்கு ஆயுதசாலைக்கு உத்திரவிட வேண்டும்.

173. 1827 மார்ச்சு 2-முகாம்-நாகப்பட்டிணம் கச்சேரி-கலெக்டர் கச்சேரி உத்யோகஸ்தர்கள் வீட்டுக்கு மிறாஸ்தார்களோ அல்லது அவர்களுடைய காரியஸ்தார்களோ ஒருவரும் போகக்கூடாதென்றும், உத்யோகஸ்தர்கள் மிறாசுதார்களுடையவோ அல்லது அவர்கள் காரியஸ்தர்களுடைய வீட்டிலோ கச்சேரியிலோ வேறு எந்த இடங்களிலோ இராகசியமாய்ப் பேசக்கூடாது என்றும், அதைத்தவிர, உத்யோகஸ்தர்கள் ஒருவருடைய வீட்டுக்கு ஒருவர் சென்று இராஜ்யத்தின் சமாச்சாரம் பேசுவதும், அவ்விஷயத்தில் யோசனைகளையும் செய்யக்கூடாதென்றும்,மேற்கண்டபடி எவ்விதமாவது சங்கதிகள் நமக்குத் தெரிந்தால் அத்தருணமே அவ்வுத்யோகஸ்தர்களை வேலையிலிருந்து நீக்கி அவர்களிடமிருந்து ரெகுலேஷன்படி பெரும் அபராதம் வசூலிக்கப்படுமென்றும் தம்கேட் எழுதி ஹுஜூர் கச்சேரியில் பிரசுரித்தார். அதுவுல்லாமல் தனித்தனியாய் ஒன்பது தாலூகாக்[116]களுக்கும் தம்கேட்(?) எழுதி அனுப்பித்திருக்கிறார். அறியவும்.பகல் 8 மணி சனிக்கிழமை.

178. 1833 Feb. 28உ சர்கேலவர்களுக்குக் கலெக்டர் கச்சேரி சிரஸ்தேதார்[117] எழுதியது.

111. பிரகதீசுவரஸ்வாமி கோயில் - தஞ்சைப்பெரியகோவில்

112. தஞ்சாவூர்க் கிராமதேவதைகள் உக்கிரமாகாளி, நாச்சராம்மா, சோலையம்மா, கோடியம்மா, மகாகாளியம்மா, ஐயனார், ரேணுகாதேவி, பத்ரகாளி, எல்லம்மா, காளிகாதேவி என்பனவாம். (பக். 193) கோயில் படம்(பக்.548)

113. நகர்கானா என்பது டமாரம் போன்ற பலவிதமான ஒலிக்கும் கருவிகள் வைக்கப்பட்ட இடம் (பக்.454)

114. பாகவதமேளி - இசைநாடகக்குழு (பக்.230-231)

115. மோஹினி மஹேஸ பரிணய நாடகம் - இது சரபோஜி இயற்றியதாகக் கருதப்படுவது. (பக்.222)(12-289 எண் 2380)

116. ஒன்பது தாலூக்காக்களின் பெயர்கள் அடுத்துக் கூறப்பட்டுள்ளன. (பக்.13)

117. சிரஸ்தேதார் - ஆவணக்காப்பாளர் (பக். 74).

ரா. மகாராஜா சாயேப் அவர்களுக்கு...நேற்று நாம் பீரங்கியின் சத்தத்தைக் கேட்டு சந்தோஷமடைந்தோம். வருஷக் கணக்குக்கிடும் பீரங்கி குண்டுகளும், பண்டிகை சந்தோஷத்திற்காக விடும் குண்டுகளும், இவ்விரண்டுக்கும் சேர்ந்து 46 குண்டுகள் விடப்பட்டன. இராஜா சாயேப் அவர்களுக்கு வயது 25 நடக்கிறதோ அல்லது முடிந்ததோ, நம்முடைய சலாமுடன் சந்தோஷம் . நீங்கள் சன்னிதானத்திற்குப் பிரார்த்தனை செய்கிறதென்றார்.

*179. 1827 மார்ச்சு 29*

ஸர்கேல் ரா. ராமோஜி ஸர்ஜேராவ் காட்கே[118] சாயேப் அவர்களுக்கு ஸர்காரின் சிரஸ்தேதார் எழுதிக்கொண்டது.

முகாம்:- நாகப்பட்டிணம்

யுகாதி[119] பண்டிகைக்காகக் கச்சேரி இல்லை. 29 வியாழக்கிழமை கச்சேரிக்கு வழக்கப்படி வந்தார். 12 மணிக்கு அவரவர்கள் அந்தஸ்துபடி உட்கார வைத்து, பால்யமான சிலபேரைப் பார்த்து, தன் மனத்திற்கு வந்த பேர்வழியைக் கூப்பிட்டு அவர் பார்த்த வேலையையும், ஊரையும், பேரையும் விசாரித்து, அதில் ஏதாவது குற்றத்தினால் வேலையிலிருந்து நீக்கப்பட்டவராக மனதுக்குத் தோன்றினால் அப்பேர்ப்பட்ட பேர்வழிகளை விட்டு விட்டு அப்படியில்லாமல் புதிய வேலைக்குத் தயாராக இருப்பவர்களும் அபராதம் விதிக்கப்படாமலிருக்கும் பேர்வழிகளையும் தாகல் எழுதிக் கொள்ளுகிறார். அப்படி தாகல் செய்யும் பேர் வழிகளில் தாலூகா, குமாஸ்தா உத்யோகத்திற்கு தாகல் செய்யப்பட்ட பேர்வழிகள் 30, பேஷ்கார்[120] ஜனங்களிடமிருந்து கணக்குகளை மஹாராஷ்டிர பாஷையில் எழுதிக் கொள்ளுகிறதென்று வழக்கம். இனிமேல் செய்கிற யோசனையோ, அவருக்குக் கணக்குப்பிள்ளை என்றும், அவருக்குச் சம்பளம் 10 1/2 ரூபாயென்றும் சொல்லி அப்பேர்ப்பட்ட பேர்வழிகள் 2 தாலுகாவுக்குப் பேஷ்கார் ஜனங்களுக்கு ஓலையின் பேரில் உத்திரவு எழுதுகிற எழுத்தாளர்கள் என்றும், 7 ரூ சம்பளமுள்ள 5 பேர்வழிகளையும் தமிழ், தெலுங்கு இவ்விரண்டு எழுத்துக்கள் தெரிகிறதைப் பார்த்து, பதில் எழுதுவதற்காக 10, 12 பேர்களையும் வசூல் செய்யும் (மஜம்தாரின்) வேலைக்கு 5 பேர்வழிகளையும் உப்பளம் வேலைக்காக அதில் வேலை தெரிந்தவரென்று அவர்களில் 2 பேரையும், சிப்பந்தி வேலைக்காரன் புதிய தாலுகாக்களுக்காக ரூ. 2-10-10 சம்பளமுள்ள பேர்வழிகளை 100 வரையிலும் அப்படியே விசாரிப்புக்காரன்[121] வேலைக்கு 50 பேர்களையும் எழுதி வைத்திருக்கிறார். சென்ற கலெக்டரிடம் வேலை பார்த்தபொழுது 10 ரூ. சம்பளம் வரையில் உள்ள ஜனங்களுக்குத் தாலுகா தாசில்தாரவர்கள் (நியமிக்கிற) வைக்கிற வழக்கமிருந்தது. அதனால் வேலை விற்பனை செய்யப்படுகிறது என்கப்பட்ட உறுதியாய்த் தோன்றிக் கொண்டு இம்மாதிரி யுக்திக்கு ஆரம்பித்திருக்கிறார். தற்போது எழுதப்பட்டிருக்கிற பேர்வழிகளுக்கு இன்னும் தீர்மானஞ்செய்து உத்திரவு கொடுக்கவில்லை.

---

118. இவர் இரண்டாம் சரபோஜியின் காலத்தில் சர்க்கேலாக இருந்தவர் (பக்.85)

119. யுகாதி - தெலுங்கர் கன்னடர் முதலியோரின் ஆண்டுப்பிறப்பு

120. பேஷ்கார் - அரசிறை அதிகாரி

121. விசாரிப்புக்காரன் - கிராம ஊழியக்காரர்களில் ஒருவன்

60 தாசீல்தார்களை நியமித்தோ அல்லது டிபுடி தாசீல்தார்களையோ நியமனஞ்செய்து அவர்களுடன் கூட அனுப்புவார் போலிருக்கிறது. போட்டு சிரஸ்தேதார் இராமச்சந்திரராவ் அவர்கள் வருகிற வழியைப் பார்க்கிறார் போல் தோன்றுகிறது. அதனால் கொஞ்சம் சோம்பரித்தனம் தோன்றுகிறது. தஞ்சாவூர் இராஜ்யம் 15 தாலுகாவாகப் பிரிப்பதற்குப் போர்டு உத்திரவு வந்திருக்கிறது.

179.9.பேஸ்ஜி காலத்தில் இருந்த தாலுகா

திருவாதி, கும்பகோணம், மாயவரம், பாபனாசம்,திருவாரூர், நந்நிலம், கீவளூர், மன்னார்குடி, பட்டுக்கோட்டை = 9
6. இப்பொழுது ஜாஸ்தி மிஸ்தர் கேமல் சாயேப் அவர்கள் ஏற்படுத்தியது-கொடவாசல், வலங்கிமான், குத்தாலம், சீயாழி, பேராளே (பேரளம்) திருத்துறைப்பூண்டி =6 =15

இவைகள் டிவிஜன் ஏற்படுத்துவதற்குச் சொல்லியபடி
9. பிரின்ஸிபால் கலெக்டர் அவர்கள் விசாரணையிலுள்ளவை. கும்பகோணம், குத்தாலம், சீயாழி, மாயவரம், பேராள, நன்னிலம், திருவாரூர், கீவளூர், கொடவாசல் = 9

179.3. டிவிஜென்ஸி
திருவாதி (திருவையாறு), பாபனாசம், வலங்கமான் = 3

3. டிவிஜென்ஸி
மன்னார்குடி, திருத்துறைப்பூண்டி, பட்டுக்கோட்டை = 15
ஆக டிவிஜென்ஸி 3க்குத் தாலுகா

இந்த டிவிஜன் பாகஞ்செய்து கொடுப்பவர்களுக்குச் சாதகமாயிருந்தது. மாயவரம் டிவிஜன் தன்னுடைய விசாரணையில் வைத்திருக்கிறார்

ஏனென்றால்-மாயவரம் தாலுகாவின் கிராமங்கள் பேஸ்ஜி மிஸ்தர் ஹாரிஸ் சாயேப் காலத்தில் காவேரி பாய்ச்சலுக்குத் தண்ணீர் தாராளமாகப் பாயாமல் 1210-ஆம் பசலி[122] முதல் 1213 பசலிவரையில் 4 வருஷங்களுக்குத் தாலுக்காவின் கிராமங்கள் வரட்சியினால் நிலங்கள் பூராவும் சாகுபடி ஆகவில்லை. சாகுபடியான நிலங்களில் முழுமையும் விளையாமல் கண்டுமொதலாக வேண்டியதற்குக் குறைவாகக் கண்டுமுதல்[123] ஆகியிருக்கிறது.

அப்படி இருக்கையில் வாலீஸ் சாயேப் அவர்கள் 3 வருஷங்களுக்கும் வரும்படித்துகைக்கு ஜவாபுதாரி ஆகும்போது, இராஜ்யத்தினால் ஒரே வழக்கம் செய்தார். அதென்ன வென்றால்,

10, 11 பசலியின் கண்டுமொதல் சமஸ்தானத்திற்கு ஏற்றமாக இருப்பதால் இவ்வருஷம் சராசரி வாங்கும்படி உத்திரவிட்டார். அது மற்ற தாலுகாக்களுக்குத் தகுந்தது, மாயவரம் தாலுகாவுக்குச் சரியல்ல; என்று சிரஸ்தேதார்கள் அவர்களுக்குத் தெரிவிக்கவில்லை.

122. கி.பி.591 முதல் தொடங்குவதும் கி.பி.1555 முதல் வழங்கப்படுவதுமாகும்.

123. கண்டு முதல் - நிலத்தின் விளைச்சல்

அத்தாலுகாவில் பெரிய மிராசுதார் கடியசேல் சுப்பய்யர்1, அம்பிநாதபுரம் ராமலிங்கம்பிள்ளை1, இப்படிச் சில பேர்களின் தாக்ஷிண்யத்திற்குக் கீழ்ப்படிந்து இருந்ததினால் அவ்வூர் தற்பொழுது எப்படியிருக்கிறதென்றால், திட்டத்தின்படி முழுமையும் சாகுபடி ஆய்க்கொண்டிருக்கிறது.

179. சில கிராமங்களில் ஜமாபந்தி[124] ஸராஸரி கண்டு முதலாக வேண்டியதற்கு இரட்டிப்பு மூணு மடங்கு காணுகிறது. அவைகளில் சில்லறை மிராசுதார்களுக்குக் கிராமமிருந்தால் சில கிராமங்களில் வியாஜ்யம்[125] வகையறாவினால் சமீபத்தில் கொஞ்சம் ஜமாபந்திக்குச் சேர்த்திருக்கிறார்கள்.

பெரிய மிராசுதார்களின் கிராமங்களோ கொஞ்சங்கூட துகை ஜமாபந்திக்கு வரவில்லை என்று இவ்விஷயமான சங்கதி அவருக்குத் தெரிந்திருக்குமாகையால் அதைத் தன்னுடைய விசாரணையில் வைத்திருப்பதாகத் தோன்றுகிறது.

தம்பிக்கி நல்லவன் கோட்டைக் கிராமத்தின் மிராசுதார் தருமராஜத் தேவருக்கு உப்பளம் மிராசுமிருக்கிறது. அவர் உப்பளம் சிப்பந்திகள் பசலி 1232 முதல் 1235 வரையில் செய்த பித்தலாட்டமும் ஒரு உப்பளத்தில் கும்பனி சர்கார் உத்யோகஸ்தர்கள் பெற்றுக் கொண்ட துகையைத் தன்னுடைய குடிக்கணக்கைக் காட்டி அதன்படி ரூ.7500 வரையில் பேர்வழிகளைக் குறித்து வைத்துக்கொண்டு, அந்தப்பிரகாரம் நிருபிக்கிறதாயும் நம்பிக்கையுடன் முச்சலிகை எழுதிக்கொடுத்தார். அதற்குப் பிரின்ஸிபால் கலெக்டர் நேர்நேராக முச்சலிகையில் தன்னுடைய கையொப்பமிட்டு வாங்கியிருக்கிறார். அதில் பட்டுக்கோட்டை தாலுகா தாசீல்தார் அந்தப்பஸலி முதற்கொண்டு தாசில்தார் வேலை பார்த்தவர்களின் பெயர்களையும், உப்பளத்தின் பேஷ்காருடையவும், அமினாக்கள் மணியக்காரர்கள் முதலியவர்களின் பெயரும் C.I.D. களின் பெயரும் தாக்கல் செய்யப்பட்டிருக்கிறது. அந்த ஜனங்களில் சிலர் வேலையிலிருக்கிறார். சிலரில்லை. அவர்களை விசாரித்து, பிறகு என்ன செய்யப்போகிறாரோ தெரியவில்லை. மிஸ்தர் கேமல் பிரின்ஸிபல் கலெக்டராக வந்தபிறகு நேர்நேராகப் பிராதுகளை வாங்குகிறார்-தவிர இதுவரையில் வரமுடியாமலிருக்கிற ஜனங்களுக்குத் தாலுகாவில் ஒரு பெட்டியை வைத்து அதில் பிராதுகளின் வாக்கு மூலங்களைக் கொடுக்கிற ஜனங்கள் பிராதை எழுதி முத்திரையைப் போட்டு ஷெ பெட்டியில் போடும்படி உத்திரவிட்டிருக்கிறார்.

அப்படி நடக்கையில் மன்னார்குடி மிராசுதார்களில் 20 பேர்கள் வரையில் ஒரு வாக்குமூலம் எழுதிப்போட்டதில், வாயிதாவை வசூல் செய்வதற்குத் தாசீல்தார்கள் அநேக வேலைக்காரர்களை அனுப்பி சாப்பாடு போடுகிறதென்றும், இந்தப் பாபத்தில் அதிகச்சிலவு ஆகிறதென்று எழுதியிருந்தது. அந்தப் பிரின்ஸிபால் கலெக்டர் சாயேப் அறிந்துகொண்டு அதன்பேரில் தாலூகாக்களுக்கெல்லாம் பொதுவான உத்திரவிட்டார். அதுஎன்னவென்றால்,

124. ஜமாபந்தி - கிராமத்துக்குடிகள் அரசுக்குச் செலுத்த வேண்டிய வரியைக் குறித்து ஆண்டு இறுதியில் முடிவு செய்வது.

125. வியாஜ்யம் - வழக்கு

எந்த மாதத்திய வாய்தாவோ அந்த மீ 25க்குள் கர்ணம் துகையை வசூல் செய்யவேணும். அப்படி வசூலிக்காவிட்டால் அவருக்கு அபராதம் விதிக்கப்படும். 100க்கு ஒன்று வீதம் சேர்த்து மிராசுதார்களிடமிருந்து துகையை வசூல் செய்யப்படும். ஆனால் தாசில்தார், பேஷ்கார்கள் சேவகனை அனுப்ப அவசியமில்லாமல் உத்திரவிட்டிருக்கிறார்கள். ஆனால் இந்த ஸமஸ்தானத்தின் மிராசுதார்கள் அதின்படி நடந்துகொள்ளுவது சிரமம் என்று தோன்றுகிறது.

திருவாளூர் தாசில்தாரைக் கூப்பிட்டு அனுப்பி இருந்தார். அவர் இங்கு வந்த பின்னர் சொன்னதாவது:-

உங்களைப் பின்பு விசாரிக்கிறேன். தற்பொழுது அவ்வூரில் பெரிய உற்சவமாகையால் அதை ஜாக்கிரதையாக நடத்துகிறதென்று, உத்திரவிட்டுத் தாலுகாவுக்கு அனுப்பினார்.

(கையொப்பம்) ஸேவகன் வெங்காஜி சாமஜி

200-1827 மே மீ 27உ மேஜிஸ்திரேட் சங்கதி முக்தாம்பாபுரம் சத்திரத்தின்[126] ஸர்வமானியம்.

உமயாபுரத்தில் ஷை கிராமம் மிராசுதார்கள் ஸர்காருக்குத் தன்னுடைய மிராசை நியாயப்படி நடத்தவொட்டாமலும் நியாயமாக ஸர்காருக்குக் கொடுக்க வேண்டிய பாக்கியைக் கொடுக்கமாலும் அட்டுழியம் செய்கிறது. அவ்வூரிலுள்ள ஸர்கார் பாக்கியைக் கொடுக்க நியாயமாகச் சம்மதித்திருக்கிற பேர்வழியுடன் சண்டைபோடுகிறது. அவனை ஜாதியிலிருந்து தள்ளியிருக்கிறோமென்கிறது. ஊர் ஜனங்களெல்லாம் மறியல் செய்து ஒன்று சேர்ந்து காலாகாலத்தில் விதை விதைத்துச் சாகுபடி செய்யாமலும் கண்டுமுதல்... ... ... ... ... ... ... கொடுக்கிறதில்லை என்று எல்லோரும் சேர்ந்து பிரமாணம் செய்து கொடுக்கிறது. இப்பேர்ப்பட்ட வேலைக்கெல்லாம்... ... ... ... விவஸ்தை யில்லாமல் வேறு ... ..... ... இருக்கும் கல்யாணராமய்யா என்பவர் இவ்வேலைகளெல்லாம்... ... .... நிர்மாணம் செய்து .... .... .... கொடுக்கிறது. இப்படி வேலை எல்லாம் செய்து கொண்டிருப்பதால் விவரமாக உத்திரவு அனுப்பியிருக்கிறது.

பிரின்ஸிபால் கலெக்டர் சாயேப் அவர்கள் சந்தோஷமாகயிருக்கும் சமயம் பார்த்து உத்திரவைத் தெரிவித்து அவர்சொல்லும் பதிலை நன்கு தெரியும்படி ஸர்கார் பிரார்த்திக்கும்படி எனக்கு 21உ எழுதிய உத்திரவு 23உவந்து சேர்ந்து சங்கதியை அறியலானேன்.

இன்று 25உ அமாவாசை வியாழக்கிழமை காலை 8 மணிக்கு மேல் பிரின்ஸிபால் கலெக்டர் சாயேப் அவர்கள் காலையிலே சாப்பாடு செய்துகொண்டு உட்கார்ந்திருந்தார். தவிரவும் அவருடைய உத்யோகஸ்தர்களுக்கு அமாவசை ஆனதால் பகல் 1 மணி வரையில் கச்சேரிக்கு விடுமுறை யாகையால் அவர்களுமில்லை. அவருக்கு வேறு வேலையுமில்லை. சமயம் நன்றாகயிருந்த வேளையில் காண்பதற்குப் போனேன். என்ன சங்கதி என்று கேட்டார். ஸர்காரிலிருந்து சங்கதி வந்திருப்பதாகச் சொன்னேன். உட்கார்ந்திருந்த இடமிருந்து

126. முக்தம்பாபுரம் - ஒரத்தநாடு ; சத்திரம் (பக்.273)

எழுந்திருந்து தனிமையாக வந்து உட்கார்ந்தார். எனக்கு அவருக்கு எதிரில் அமரச்சொன்னார். எதிரில் உட்கார்ந்து சமாச்சாரம் சொல்ல ஆரம்பித்தேன். அதெப்படி என்றால்.

ஸர்காரிடமிருந்து வந்த உத்திரவைப் பார்த்து அதில் 9, 10 அயிட்டங்களை எழுதிவைத்திருந்தேன். அந்த ரோகாவும் அஸ்ஸலும்[127] கையில் வைத்துக்கொண்டு சொல்ல ஆரம்பித்தேன்.

2, 3 நாழிகை வரையில் கடிதத்தின்படி சங்கதிகளை நன்கு அறிவித்தேன். சில இடங்களில் மறுபடியும் கேட்டார். அந்த இடத்தில் தோன்றினபடி இரண்டாந்தரமும் சொன்னேன். தவிரவும், ஸர்கார் இலாகாவிலிருக்கும் மிராசுதார்கள் இப்படிச் செய்தால் ஸர்கார் வேலை சாகுபடி வகையறா எப்படி நடக்கும். ஸர்கார் வேலைகள் சுலபமாக நடக்கும்படியும் ஸர்காரின் கௌரவம் போகாமல் இருக்கும் படிக்கும் ஒரு கம்பீரமான நல்ல வழியைத் தேட வேண்டிய யோசனையைப் பிரின்ஸிபால் கலெக்டர் சாயேப் அவர்கள் நாடி ஹுஜூரி[128]ன் எண்ணம் நல்ல எண்ணமாக இருப்பதாக சாயேப் அவர்களுக்குத் தெரியப்படுத்தும்படி உத்திரவாகியிருக்கிறதென்றும் சொன்னேன். அதை எல்லாம் கேட்டு அதற்குச் செய்ய வேண்டியவைகளை நன்கு மனதில் அறிந்து கொண்டார். பின்பு உத்திரவிட்டதென்ன வென்றால்,

போலீஸ்.... பார்க்கையில் கும்பனியின் .... பார்க்கிறதாக.... என்று... இப்பொழுது ரா. மகாராஜா சாயேப் அவர்கள் நியமித்திருக்கும் மத்யஸ்தர்களுக்குப் போலீஸ் அதிகாரம் வேண்டுமென்று நாம் உத்திரவிட சம்மதிக்கிறோம் அதேபடி உத்திரவு செய்கிறேன். சரி. கும்பனியின் தாசீல்தார் வகையறாக்கள் போலீஸ் சங்கதியில் எப்படி விசாரணை செய்கிறார்களோ அதேமாதிரி விசாரணை, வாக்குமூலம் விதிப்பது, தண்டனை செய்வது. இப்பேர்ப்பட்ட வேலைகளை எல்லாம் செய்து, அவையெல்லாம் நமக்கு எழுத்துமூலம் தெரிவிக்க வேணும். அவர்கள் இவ்வேலையை ஒப்புக்கொண்டு பார்ப்பதற்கு நியாயம் செய்யவேண்டும். பக்ஷபாதம் செய்யக்கூடாது. அப்படி ஏதாவது செய்தால் அது தன்விசாரணைக்கு வரவேணும். இப்படியானால் இன்றே உத்திரவு கொடுக்கலாம். ஆனால் இவ்வேலை ரா. ஸ்ரீசத்திரசாயேப் அவர்களுக்கு உசிதமென்று தோன்றுகிறதோ இல்லையோ. ஸர்கார் வேலைக்காரர்கள் ஸர்காரில் சம்பளம் வாங்குகிறது. அவர்கள் இந்த வேலையைப் பார்ப்பதென்றாலென்ன என்று எண்ணிக்கொண்டால் எப்படியோ தெரியாது.

ஒருவேளை ஸந்நிதானத்திற்குச் சரியென்று தோன்றினால் அந்த வேலையைப்பற்றி ரெஸிடெண்ட் மூலமாகக்கடிதம் வந்தால் அவ்விரண்டு ஸனதுகள் (உத்திரவுகள்) செய்யலாம்.

ஸர்கார் உத்யோகஸ்தர்கள் அவர்களுடைய ஸர்காரின் அதிகாரத்தில் ரெவின்யுவின் வேலை, சாகுபடி, கண்டு முதல் பணம் வசூல் வகையறா விஷயத்தில் ஆகவேண்டிய ஜாக்கிரதை எவ்வளவிருக்கிறதோ அவ்வளவையும் அவர்களே பார்த்துக் கொள்ளலாம்.

---

127. அஸ்ஸல் - அசல் கடிதம் (original) ரோகா - குறிப்பு

128. ஹுஜூர் - அரசர்

சில்லறை வியாஜ்ஜியம் சிறியதாயிருந்தால் கிராமமுன்சீப்பின் நியாயப்படி6 அடிகள் வரையில் அடிக்கிறது. கொஞ்சம் அபராதம் விதிக்கலாம்· கொஞ்சநேரம் காவலில் வைக்கிறது. இவ்வேலைகளெல்லாம் செய்யலாம். போலீஸ் விசாரணையைக் கூட ஸர்கார் உத்யோகஸ்தர்கள் செய்யலாமெனப்

200 பட்ட.... நாமோரெஸிடென்ட் .............. அல்லது அதன்படி போலீஸ்..... அவர்களிடமே செய்தால்..... செய்துகொண்ட உடன்படிக்கைக்கு விரோதமாயிருக்கிறது.
வேறொரு உடன்படிக்கையே செய்து கொடுத்தாற்போல் ஆகிறதென்றார். அப்பொழுது நான் சொன்னேன். இவ்விஷயத்தில் ஒரு வேலையைச் சொல்லுகிறேன். அதற்கு உத்திரவு கொடுக்கவேணு மென்றேன். சொல்லலாமென்றார். உடன்படிக்கைக்காரராகும் பொழுது ஜட்ஜ் என்றும், கோர்ட்டு என்றும் ,போலீஸ் என்றும் இல்லை. புதிதான வேலையைத் தற்போது சாஹேப் அவர்கள் பார்த்து, ஸர்காரின் கௌரவத்திற்குத் தகுந்தபடி எந்த வேலையைச் செய்வீர்களோ. அதுதான் வழியாயிருக்கலாமே என்றேன்.

பதில்:- நீ சொல்லுகிற வேலை சரிதான். உடன்படிக்கை ஆகும்பொழுது ஆயிதா? ஜட்ஜ் போலீஸ் நியமனஞ் செய்கிறோமென்ற நிச்சயம் தெரிந்திருந்தே அதைப்பற்றின வேலைகளெல்லாம் உடன்படிக்கையில் கண்டு கராராயிருக்கிறது, என்றால் சர்கார் முகாஸா[129] வகையறா கிராமங்களின் மிராசுதார்கள் சாகுபடி செய்வதற்கோ, கண்டு முதல் செய்வதற்கோ ஸர்காருக்கும் பணம் கொடுப்பதில் ஸர்கார் உத்யோகஸ்தர்களின் உத்திரவின்படி நடக்கவொண்ணாமலிருந்து அவர்கள் கும்பனி போலீஸ்சாரிடம் ஸர்கார் சிப்பந்தியின் பேரில் வியாஜ்யம் உண்டு பண்ணிக்கொண்டால் அது நம்முடைய விசாரணைக்கு வந்தால் அப்பேர்ப்பட்ட பிராதுகளை நாம் ஒருபொழுதும். ஏற்றுக்கொள்ளமாட்டோம் தள்ளிவிடுவோமென்று சொன்னார்.

இந்தப்படிக்கி நடந்த ஸமாச்சாரம் பிரின்ஸிபால் சாஹேப் அவர்கள் சொன்னபடி அபிப்பிராயத்தை வேலைக்குப் பிரார்த்திக்கிறேன். அறியவும்.

(கையொ.) வெங்காஜி சாமஜீ

போலீஸ் பற்றி

......ஸர்கார் இலாகாவிலுள்ள மத்யஸ்தர்களுக்குப் போலீஸ் வேலை பார்க்கிற அதிகாரம் கொடுக்கும் விஷயத்தில் சாஹேப்[130] அவர்களின் அபிப்பிராயமிருக்கிறது. ஹுஜுர்ஸந்நிதானத்தில் பிரார்த்தித்தேன். ஆன உத்திரவு- இந்தப்படி நடக்கும் படிக்கு ஸர்கார் உத்யோகஸ்தர்களுக்கு உத்திரவு கொடுக்கிறதற்கு ஹுஜுருக்கு இஷ்டமிருக்கிறது. ஆனால் பிரின்ஸிபல் கலெக்டர் கேமல் சாஹேப் இந்த அதிகாரத்திலிருக்கும் வரையில் ஷெ சர்காரின் மரியாதைக்குக் குறையில்லாமல் வெகு கௌரவத்துடன் நடத்துவார்களென்ற நம்பிக்கையிருக்கிறது. ஆனால், மேல்மேல் ஒரு உறுதியான விவஸ்தை இருக்க வேணுமாகையால் இவ்விஷயத்தில் சாஹேப் அவர்கள் போலீஸ் அதிகாரம் சர்க்கார் முகாஸா

129. முகாஸா - அரசருக்குத் தனியுடைமையான - சொந்தமான நிலங்கள் (பக்.134-135)

130. சாஹேப் என்றது இரண்டாம் சரபோஜியை

சத்திரம் வகையறா ஊருக்கு ஸர்கார் உத்திரவு.....உத்தியோகஸ்தர்....முழு அதிகாரம் கொடுக்கும்படி.... அதன்படி நடத்துவார்களென்ற நம்பிக்கையிருக்கிறது. ஆனால், இந்த ஸமஸ்தானத்தின் அதிகாரம் முன்னிருந்ததைக் கும்பனியார் ஸமஸ்தானத்தில் அதிகாரம் கொடுக்கும்பொழுது எவ்வளவு கிராமங்கள் தேசங்கள் ஒப்புவித்தீர்களோ அவ்வளவும் அவர்களுடைய வசமிருக்கிறது. எவ்வளவு வைத்துக்கொண்டோமோ அதனுடைய அதிகாரம் வழக்கப்படி நம்மிடத்தில்தானிருக்கிறது. ஆனால், கும்பனியாருக்குக் கவர்ன்மெண்ட்போர்டு ஒரே அதிகாரமென்று, ஜட்ஜ் என்கிற அதிகாரம் தனியாகவும், கலெக்டர் என்கிற அதிகாரம் தனியாகவும் செய்தார். கலெக்டர்களுக்கு அவர்களுடைய அதிகாரம் நடக்காமல் அவர்கள் கவர்ன்மெண்ட் போர்டுக்கு இருக்கிற இடைஞ்சலைத் தெரிவித்து, பின்பு மேஜஸ்திரேட் அதிகாரம் கலெக்டருக்குக் கொடுத்தார்களே. அப்படிப்பெரிய அதிகாரஞ் செய்கிறவர்களுக்குகூட முதலில் செய்த ரெகுலேஷனைத் தள்ளி உத்திரவு கொடுக்க நேரிட்டது. அப்படிப்பட்ட வேலைகள் ஸர்காருக்குச் சொந்தமான கொஞ்சம் கிராமங்கள் தோட்டங்களிருக்கின்றன. அதற்கு மேஜஸ்திரேட் அதிகாரங்கூட இல்லாமற் போனால் எப்படி நடக்கும் என்று சொன்னதற்குப் புன்சிரிப்புடன் சரி என்று ஒப்புக் கொண்டார்.

போலீஸ் விசாரணை கும்பனியார் தவிர மற்றவர்கள் பார்க்கக்கூடாதென்ற நியாயத்திற்கு:-

முந்தி தஞ்சாவூர் ஸமஸ்தானத்தில் சில ஊர்களுக்கு மெய்க்காவல் ஆயிருந்த தொண்டமானான பாளையம்பட்டுக்காருக்கு மேஜஸ்திரேட், போலீஸ் எல்லாம் அவர்களுடைய அதிகாரத்தில் கும்பனியார் வைத்திருக்கிறீர்கள் என்று சொன்னதும் கம்பீரமாகச் சிரித்தார்.

224 உடன்படிக்கையின் வேலை எனக்குத் தெரிந்திருக்க வேணுமென்று ஹுஜூரில் உத்திரவாகி உடன்படிக்கையின் நகலை எழுதிக்கொண்டேன். அதை ஸர்கார் பார்த்து எழுதுகோலால் 12 பாபத்தில் அடைகளை வாசித்துக் காட்டினேன். அல்லாமல் மார்க் செய்த இடங்களையும் காட்டினேன்.

மகாராஜாவின் உசிதத்திற்காக ஒப்புவித்துக்கொடுத்து அவர் பூமிவாஸி[131] என்றுமிருக்கிறது என்றவுடன் பக்கென்று சிரித்துக்கொண்டு இது ஆங்கிலேயத்திவில்லை என்றார்.

ஆதியில் உடன்படிக்கை ஏற்படுத்தக்காரணம் மகாராஜா எழுதினதின் பேரில் ஆங்கிலேயத்தில் மொழிபெயர்த்து இருக்கலாம். இந்தப்படிக்கி ரெஸிடெண்ட்..... ஜட்ஜ் சாஹேப்பின் கச்சேரியிலும், கலெக்டர் சாஹேப் கச்சேரியிலும் இருக்கும் உடன்படிக்கையின் நகல்களை........ சும்மா இருக்கும்பொழுது கவர்னர் சாயேப் பரமமித்திர சிநேகிதருக்கு இவ்வளவு வேலை...... மரியாதை கௌரவம் கொடுத்து நடத்துவதற்குப் பிரியமுள்ளவராயிருந்ததால் அந்த ........நடத்த வேணுமென்றும் இவ்வேலையைச் சாயேப்புக்குத் தெரிவிக்கிற விஷயத்தில் ஹுஜூரின்..... எனக்காக உத்திரவின் பேரில் தெரிவித்தேனென்றேன்.

---

131. பூமிவாஸி - Landlord

இவை எல்லாம் பூர்ணமாக அங்கீகரித்து உத்திரவிட்டார். என்னவென்றால்:- இப்பொழுது விடுகிற 18 ஊர்கள் கூட சேர்ந்து கரார் அடையப்போகிற லயனில் மேஜிஸ்ரேட் போலீஸ் வகையறா எல்லாவற்றின் அதிகாரமும் ஸர்காருடையது. அதற்கு யாதொரு வேறுவிதமில்லை. நிச்சயம் தான். தோட்டம் வகையறாவின் மேஜிஸ்ட்ரேட் அதிகாரமும் ஸர்காருக்குக் கொடுக்கலாம். ஆனால், அதனால் கலெக்டருக்குக் கொஞ்சம் இடைஞ்சல் ஆகிறது.

ஒரு பெரிய ஊரில் மிகவும் கொஞ்சம் நிலம் ஸர்கார் கோஸாவின் ஒரு தோட்டம் சின்னதாயிருக்கிறது. அதில் ஒன்றிரண்டு வீடுகளிருக்கின்றன. அவைகளிலுள்ள ஜனங்களுக்கும், ஊரிலுள்ள ஜனங்களுக்கும் சச்சரவு ஏற்பட்டால் அதன் விசாரணை உடனுக்குடன் செய்யத் தாமதமாகிறது. அவ்வளவு ஒரு வேலைக்காகவே யோசிக்க வேண்டும். ஆனால், ஸர்காரின் மரியாதைக்கு எப்பொழுதும் குறைவில்லாமல் நடத்துவதற்குக் கும்பனியின் உத்யோகஸ்தர்கள் எப்பொழுதும் கீழ்ப்படிந்திருப்பார்கள் என்றார். அல்லாமல் தற்போது- ஸர்கார் முகாஸா தோட்டங்களிலுள்ள ஒரு பெண் பிராது செய்திருக்கிறாள். அவ்வேலை நம்மிடமிருக்குமானால் அந்தப்பெண் அப்படிப் பிராது செய்வதற்கு ஒருபொழுதும் காரணமாகாது. இப்படியிருக்கிறதென்றார். அவ்வேலை இன்ன வியாஜ்யத்தைச் சேர்ந்ததென்று எனக்குத் தெரியாது. இப்படிப் பேசுகையில் சாப்பாடு நேரமானதால் 2,3, துரைகள் அவர்களுக்குச் சமீபம் வந்து நின்றார்கள் அவரை ஒருவருக்கொருவர் கையைப் பிடித்துக் கொண்டு மரியாதை..... எனக்கு நீங்கள் சாவகாசமாக வாரும்...... என்று எனக்கு உத்திரவு கொடுத்தார். இந்தப்படி..........

சேவகன் வெங்காஜீ சாமஜீ

*236-1827, 21உ மார்ச்சு*

கேமல்[132]ஸாஹேப் 4 மணிக்கு எழுந்திருந்து 8 மணி வரையில் கச்சேரி செய்து, பின்பு சாப்பிடுவது முடித்துக்கொண்டு 12 மணிக்குக் கச்சேரி ஆரம்பித்து இரவு 7 மணி வரையில் செய்கிறது. க்யாரோசாஹேப் இங்கிலாந்திற்குச் சென்று 3 வருஷங்கழித்து இங்கு வந்ததினால் பெரிய வேலையைக் கொடுக்காமல் கேமல் சாஹேப்பின் வேலைக்கு நியமித்தார்கள்.

*240-1827 முகாம்-சீயாழி-*

சேவகன் வெங்காஜி சாமஜி-விஞ்ஞாபனம்:[133] போலீஸ் சங்கதி விஷயமாக ஸர்காருடைய எண்ணம் தெரிவித்த விஷயமாக நமக்கு ஞாபகப்படுத்தும்படி கலெக்டரவர்கள் சொன்னார்கள்.

**241. 1827**-இரண்டு சிரஸ்தார்களுடைய ஸ்திதியையும்[134] பற்றிக்கேட்டார். அவர்களுடைய ஸ்திதியைத் தெரிவித்தேன்

---

132. கேமல் - இவர் கலெக்டராக இருந்தவர்.

133. விஞ்ஞாபனம் - பெரியோர் முன் பணிந்து அறிவித்தல்;

134. ஸ்திதி - நிலைமை

விஞ்ஞாபனம்—இன்று காலையில் வரும்படி கேமல்சாஹேப் அவர்கள் எனக்கு முந்தானாள் செவ்வாயன்று உத்திரவிட்டார். அதைப் பிரார்த்தித்தேன். அதன்படி இன்று காலையில் அவர்கள் வீட்டுக்குச் சென்றபொழுது அவர் கேட்ட கேள்விகள்

கேள்வி:- ரா. ஸ்ரீமகாராஜா சாயேப் அவர்கள் எனக்கு எந்தக் கணக்கைத் தெரிவிக்கும்படிக் கட்டளையிட்டார் எனக் கேட்டார்.

பதில்:- இன்ன கணக்கென்று இல்லை. தாங்கள் கேட்ட கேள்விகளுக் கெல்லாம் பதில் செய்யும்படி உத்திரவு

கேள்வி:- முன் இங்கிருந்த சிரஸ்தேதாருடைய நடவடிக்கை எப்படி.

பதில்:- தாசீல்தாருக்குத் தாசீல்தார் வேலை செய்து கொடுத்து, அவர்களிடமிருந்து வருஷத்திற்கு இருவரும் 1000 ரூ கொடுப்பது. டிபுடிக்கு ரூ. 500ம், பேஷ்காருக்கு 100 சக்ரம் வீதம் இந்தப்படி கொடுப்பது. இதைத்தவிர, தேவஸ்தானத்திற்கு *Proposal* தீர்த்துக் கொடுப்பதற்கு 100, 200 வீதம் கொடுப்பது. அல்லாமல் பசலி 1234 -இல் வரி ஜவாப்தாரியைப் பாக்ஷா ராவுத்தனிடமிருந்து ஸன்ஜஸீ? பெரிய சிரஸ்தேதார் 6000 ரூ யும் சின்னவர் 4000 ரூயும் கொடுப்பது வழக்கம். அந்த........பஸலி[135] 1233 ஜமாபந்தி கோஷ்பாரா செய்வதற்காக டிவிஷனுக்கு சிரஸ்தேதார் யாருமில்லாமலிருந்தது. அதற்காகக் குண்டோபண்டிதரைக் கும்பகோணத்திற்கனுப்பி டிவிஜன் வேலையைப் பார்க்கும்படி காடன்சாயேப் அவர்கள் உத்திரவு கொடுத்தனுப்பியிருந்தார். அப்பொழுது ஜுன், ஜூலை மாதமாயிருந்தது. அப்பொழுது பாக்ஷாராவுத்துக்கு ஜவாப்தாரி ரங்கராவ் அவர்களிடமிருந்து வேறு பொட்டிக்காரன் கும்பகோணம் குருநாதனென்பவன் முன்பணம் வைக்க (*Deposit*) கஜானாவில் கொண்டு வந்து வைத்தார். அவனைத் தள்ளிவிட்டு க்வேரிஜேஸ் பாக்ஷாராவுத்துக்குத் தீர்த்துக் கொடுத்தார். பின்பு அவன் வழக்கப்படி இதற்கு 4 ஆயிரம் காரியஸ்தன் மூலம் அனுப்பினதற்கு நான் உன்னைக் கரார் செய்திருக்கிறேன். 8 ஆயிரம் ரூபாய் கொடுக்கவேண்டும் என்று அதிகம் கண்டித்தார், இதற்குள் கும்பகோணத்திலிருந்து குண்டோபண்டிதர் வர அவருக்கு இச்சங்கதியைப் பாக்ஷா ராவுத்தின் காரியஸ்தர் தெரிவித்தற்கு அது ஆகாது; வழக்கப்படி எனக்கு 8 ஆயிரம் ரூபாயைக் கொடுக்க வேணுமென்றார். ஒருவருக்கொருவர் சச்சரவு ஏற்பட்டு அவருடைய வேலைகளுக்கு உத்திரவுகளைக் கொடுக்காமல் சோம்பல்பட்டார். அப்பொழுது பாக்ஷாராவுத்தர் இச்சங்கதியைப்பற்றி காடன் சாயேப்புக்கு மனுவை எழுதி அதை அவருடைய சொந்தமான பட்லோர்[136] சுப்பா நாயக்கரிடம் கொடுத்தனுப்பினான். பட்லோர் சுப்பநாயக்கர் காடன் சாயேப்புக்குச் சொன்னதாவது:- என்னுடைய கடிதத்தில் தங்கள் பேரால் ஒருமனு வந்திருப்பதாகச் சொல்ல அவர் அந்த மனுவை வாங்கி, தமிழ் தெரியுமானதால் அவரே படித்துப் பார்த்தார். தெரியாத இடத்தில் சுப்பாநாயக்கை வாசிக்கச் சொன்னார்.

---

135. பஸலி - கி.பி. 591 முதல் தொடங்குவது; கி.பி. 1555இல் அக்பரால் ஏற்படுத்தப்பட்ட ஆண்டுமுறை; பசலியுடன் 591 சேர்த்தால் ஆங்கில ஆண்டு வரும்.

136. பட்லோர் - Butler - உணவு மேடைப்பணியாள்

அவன் படித்த பின்னர் இருவருக்கும் சங்கதி தெரிந்தது. காடன்சாயேப் அவர்கள் மனுவைப் படித்துப் பார்த்து, தன்னுடைய பெட்டியில் வைத்து விட்டு அச்சுப்பாநாயக்கார் மூலம் எழுத்தாளருக்குச் சொல்லியனுப்பியதாவது:-

பாக்ஷா ராவுத்தருடன் நேரில் பேசவேண்டியிருப்பதால் நாளையதினம் ஹுஜூரிடம் வருவதென்று உத்திரவு எழுதியனுப்பினார். அவ்வுத்திரவு அவனிடம் போய்ச்சேருவதற்குள் அவ்விருவரும் சொந்தமான மனிதர்களை அனுப்பி அந்தப் பாக்ஷாவுடன் இராஜி செய்து கொண்டார்கள்.

பின்பு அவன் எழுதின மனு, நான் எழுதவில்லை; என் பேரால் யாரோ எழுதியிருக்கிறார்களென்று பதில் மனுவை எழுதினான்.

241. அம்மனுவும் உத்திரவும் ரிக்கார்டு கச்சேரியிலிருக்கின்றன. முதல் அர்ஜியைக் காடன் சாயேப் போகும்பொழுது எடுத்துக்கொண்டு போனாரோ இல்லையோ என்பது எனக்குத் தெரியாது. மனுவை நான் எழுதவில்லை என்று, இராண்டாவது எழுதியதின் கையெழுத்தும் முதல் தடவை எழுதியதின் கையெழுத்தும் சரியாக இருந்தது.

பிறகு பாக்ஷாராவுத்தன் கையொப்பமிட்ட முச்சலிகாவைக்[137] கொண்டுவந்து பார்க்க, அதுவும் சரியான எழுத்து. முதல் மனுவுக்குப் பாக்ஷாராவுத்தன் செய்த கையொப்பமும் அவனுடையதுதானென்று தெரிந்ததைச் சிரஸ்தேதார்களுக்குக் காட்டினார். அவர்கள் சொன்னதாவது:-

முதல் மனுவின் கையொப்பம் பாக்ஷாராவுத்தனுடையதல்ல. அவன் கையொப்பம் போல யாரோ போட்டிருக்கிறார்கள் என்று சொன்னார்கள்.

பாக்ஷாராவுத்தன் ஸவாரி முகாமில் கோட்டைக்குப் போகும் வெற்றிலையைக் கொண்டு போகத் தடங்கல் செய்ததால் அவ்வேலைக்காக வந்திருந்தான். அப்பொழுது இச்சங்கதியை அவனைக் கேட்டதற்கு அவன் சொன்னதாவது:-
முதல் மனுவின் கையொப்பத்தை என்னுடைய எழுத்தைப் போலவே யாரோ கையொப்பம் போட்டிருக்கிறார்கள். தவிர, நான் கையொப்பம் போடவில்லை என்றான் அதன்படி அவனிடமிருந்து எழுதி வாங்கியிருக்கிற எல்லாம் ஆதரவுகளை ரிகார்டில் காணலாம்.

கேள்வி:- இப்பொழுதிருக்கும் தாசில்தார்களில் யார் யோக்கியர்? யார் அயோக்கியர் என்றார்.

பதில்:- மன்னார்குடி தாசில்தார் அருணாசலம் பிள்ளை என்பவர் ஹேப்ரேம் சாயேப் காலத்தில் இராமசாமி நாயக்கரின் சிபார்சியினால் அவனைத் திருவாதி தாசில்தாராக நியமித்தார்....... அவ்வருஷம் வரட்சியினால் (வரளச்சேதம்) கெடுதல்
ஏற்பட்டிருந்தது. அதில் யுக்தமாயுள்ள கிராமம் அல்லாமல் வெள்ளத்தினால் கெடுதி இல்லாமலிருக்கையில் ஜமாபந்தியில் கண்டு முதல் காணுகிற வேலைக்குக்கூட

137. முச்சலிக்கா - உடன்படிக்கை

மிராசுதார்களிடமிருந்து துகையை வசூலித்து, இந்த ஊரை வெள்ளத்தினால் சேதமான கிராமங்களில் தாகல் செய்திருந்தார். அதை அமீனா[138] திருவேங்கடத்தய்யங்கார் என்பவர் போய்ப்பார்த்து காடன் சாயேப்புக்கு எழுதினார்:- அக்கணக்கைப் பார்த்து. மிராசுதார் வகையறாக்களைக் கூப்பிட்டனுப்பினார். அப்பொழுது ருஜு ஆனது. அவர்களிடமிருந்து பிரமாணம் வகையறாவை வாங்கி, அவரை வேலையிலிருந்து நீக்கினார். அதற்குத் தஸ்தாவேஜுகளில் ரிகார்டிலிருக்கின்றன என்றும், பிறகு அவருக்கு உத்யோகமில்லை. ஸிங்களேர் சாஹேப் வந்த பின்னர் அவருடைய மனுஷன் ரங்கசாமி முதலி என்பவனுக்கு 1000ரூ கொடுத்து அமீனாவென்று செய்து கொண்டார். இச்சங்கதி காடன்சாயேப் சென்னையிலிருக்கும் பொழுது அவருக்குத் தெரிந்து அவனை உத்யோகத்திலிருந்து விலக்கும்படி எழுதினார். அவர் தேசத்திற்குச் சென்ற பின்னர் சிங்களேர் சாஹேப் மன்னார்குடி தாசில்தாராக நியமித்தார்.

திருவாரூர் தாலுகாவில் தாசில்தாராகயிருக்கிற சுப்ராய என்பவரும், (பேஸஜி) அதிகாரியாக திருவாதி தாலுகாவிலிருந்தார். அவரும் வரிபோட்டு வசூல் செய்திருக்கிறார். திருவாதியிலிருக்கும் சுப்பாபிள்ளை என்பவர் வரிபோட்டு வசூல் செய்த விஷயத்தைச் சிங்களேர் சாஹேப்புக்குத் தெரிவித்து அவர் ஓர் ஊரின் சுரணா என்னும் கணக்கைக் கொணர்ந்து பார்க்கையில் இவர் பேரால் ரூ.300 இருந்தது. அப்பொழுது அந்த டிவிஷனில் பதவியைக் குறைக்கப்பட்டு இருந்தவரைக் காடன் சாயேப் இங்குள்ள டிவிஷனில் சீவலூர் தாசில்தாராக நியமித்தார். பிறகு திருவாதி தாலுகாவில் தாகலானார். மற்ற தாசில்தார்களும் அப்படியே ஹுஜூரிடமிருந்து சிரஸ்தேதார்களும் யோக்யமாக இருக்கவில்லை. தாசில்தார்களிடமிருந்து அதிகம் பணத்தை வாங்கிக் கொண்டிருந்ததால் அவர்கள் வரி வகையறாக்களைப் போட்டு.....ஸம்பாதித்து இதற்கு 20ல் ஒருபங்கைக் கொடுத்துக் கொண்டிருந்ததினால்.... யோக்யமானவர்களல்ல.

ஜமாபந்தியைக் காடன்சாயேப் அவர்கள் ஹுஜூரில் தீர்க்காமால் கணக்கை மட்டும் ஹுஜூரில் தயார் செய்து அனுப்பினார். தாசில்தார்கள் ஹுஜூரில் சிரஸ்தேதார்களுக்கென்றும் ஜமாபந்திக்கென்றும் வசூல்செய்து கொடுத்தார்.

கேள்வி:- ஜமாபந்தியைத் தாசில்தார் தீர்த்தார்களா?

பதில்:- காடன் சாயேப் ஒழுங்கு கண்டுமுதல் என்று ஹுஜூரில் ஒரு கணக்கை நிர்மாணஞ்செய்து, அதன்படிக்கி ஆன துகையைப் பார்த்துக்கொண்டு, கண்டுமுதலை மிராசுதார்களுக்குத் தெரிவிக்காமல் துகையை மட்டும் கண்டு எழுதி ஜமாபந்தி தயார் செய்து தாலுகாவுக்கு அனுப்பினார். தாசில்தார்கள் கையொப்பம் வாங்கியிருக்கிறார்கள்.

*253-1850 Jan. 4உ*

தஞ்சாவூர் மகாராஜா[139] சாயேப் அவர்களுக்கு:- புதுச்சேரியிலிருக்கும் லாமோரி என்பவர்

138. அமீனா - பணம் வசூலிக்கும் அலுவலர்

139. மகாராஜா - சிவாஜி II

ஜலசூத்திர[140] வேலை செய்கிறவர் கொடுத்த மனுவென்னவென்றால்:-

அரண்மனையாரவர்களிடத்தில் ஜலசூத்திர வேலைசெய்ய வேண்டியதற்காகச் சென்றிலியர் துரை நாகப்பட்டிணத்திலிருந்து தஞ்சாவூருக்கு வருகிறபோது ஷியார் யெழுத்து வேலையிலிருந்தவரானதால் ஜலசூத்திர வேலை முதலான யாதொரு வேலையும் தெரியாததினாலேயும், நான் மேற்படி வேலைகளில் கும்பனியார் பட்டறையான பரங்கிப்பேட்டை, கடலூர், புதுச்சேரி, தச்சுவாடி

முதலான இடங்களில் நானிருந்து ஜலசூத்திர வேலையும், ஆலை-பட்டுப்பூச்சி சகல வாத்தியங்களைப் பழுதுபார்த்து சுத்தப்படுத்தவும் , இரும்பு பித்தளை, மரம், தண்டவாளம் இதுகளை அந்தந்த வேலைகளுக்குத் தகுந்தபடி சீர்மை வேலைப்படி கடசல் பிடித்து வேலை செய்து நான் வேலைசெய்ததற்காக அந்தந்தப் பட்டறைகளிலிருந்து காரெக்கட்டர்[141] பெற்று வந்திருக்கிற யென்னுடைய வீடாகிய புதுச்சேரிக்கி ஷி சென்றிலியர் துரைசாணி வந்து தன் புருஷன் ஷி சலசூத்திர வேலையை அரண்மனையில் ஒப்புக்கொண்டிருப்பதாயும் அந்த வேலை தன் புருஷனுக்குத் தெரியாததினாலே என்னை வந்து அந்த வேலையை முடித்துக் கொடுக்க வேணுமென்றும் சொன்னதை நான் நம்பியும் இந்தத் தஞ்சாவூருக்கு வந்து ஷி வேலையைத் துவக்கின மீ' த்தில் ரூ.60 சம்பளம் குடுப்பதாயும் 5 மாஸத்தில் 100 ரூ வீதம் அரண்மனையில் சம்பளம் செய்து குடுத்து ஆலையை யெப்பொழுதும் பார்த்துக்கொண்டிருக்க வேண்டியதற்கு ஒருவர் வேண்டியதினாலே, என்னையே இந்த தஞ்சாவூரில் ஸ்தாபித்துப் போடுகிறதாயும், ரொம்பவும் உறுதியாய்ச் சொன்னதை நான் நம்பிச் சமுச்சார சகிதமாய் யெனக்கிருந்த பட்டறையைக் கலைத்துப்போட்டு யிவ்விடத்துக்கு வந்ததில் ஷி ஜலசூத்திர வேலை செய்ய யெத்தனப்பட்ட முன்னுக்கு யென்னைக் கொண்டு போய், அதில் நேமித்து, ஷி வேலையைப் பத்திதான் வந்தாலும் தவறாமலிருந்த போதிலும் நடப்பிக்கிறதென்றும் , ஷி வேலையைப் பார்த்து வருகிற காரியஸ்தர்களுக்கும் சர்க்கீல் பண்டிதரவர்களுக்குத் தெரியப்படுத்தியும் நான் ஷி வேலையை ஜல்தியாய் முடிக்க யத்தினப்பட்டு வந்ததில் ஷி துரை வந்து ஷி வேலையை ஜல்தியாய் முடித்தால் தனக்கு வரப்பட்ட வருமானம் நிறுத்தப்படலாமென்றும் 2௵ வரையில் இழுத்துவிட வேண்டுமென்றும், நம்மைத் தவிர அரண்மனையில் வேறே கெட்டிக்காரர்களில்லை என்றும்

ஷிவேலையை ஜல்தியாய் முடிக்கக் கூடாதென்றும், சொன்னதும் தவிர நீ இப்படி ஜரூராய் வேலை முடித்தால் உன்னை எடுத்துப் போடுவேனென்றும், ரொம்பவும் கண்டித்துச் சொன்னதை நான் யெவ்வளவும் கேளாமல் ஜரூரில் ,ஷி வேலையைச் செய்து கொடுத்தால் அரண்மனையாரவர்கள் சந்தோஷப்பட்டு, இனாம் முலானது செய்து வைப்பார்களென்கிற எண்ணத்தினால் ஷி வேலையை ஜல்தியாய்ச் செய்து வந்ததில் மறுபடி என்னைக் கோவித்துக்கொண்டு, 'இந்த வேலைக்கி இனி நான் வரவேண்டியதில்லையென்றும் தான் பார்த்துக் கொள்ளுகிறதாயும், தன் வீட்டிலிருந்து பொட்டி வண்டி-2, தயார் செய்யச்

---

140. ஜலசூத்திரம் - தண்ணீர் இறைக்கும் யந்திரம்

141. காரெக்கட்டர் -Character certificate நற்சான்றிதழ்

சொன்னார். அந்தப்படி என் சொந்தச் சாமான்களைப் போட்டு வேலை செய்து, தீர்மானமானதின் பிறகு, யெனக்குப் பேசினபடி ரூ.60 குடாமல் ரூ.25 குடுத்தார். பேசினபடி ரூ.60 ஏன் குடுக்கிறதில்லை யென்று கேட்டதற்கு, செலவாயிருக்கிற காலத்தில் பாக்கிப் பணத்தைக் குடுக்கிறதாகச் சொன்னதை நான் நம்பியிருந்தேன்.

அப்படி யிருக்கையில் ஷெ தொரைவீட்டுக் கெணத்தில் நான் பூட்டின தண்ணி சாம்புகிற பம்புவை அரண்மனையார் விலைக்குக் கேழ்ப்பதாக எண்ணி அதன் விலை ரூ.300 என்றும், மறுபடியும் ரூ.700 என்றும், பிறகு எழுநூறு வராகனென்றும் சொன்னது எனக்குத் தெரிந்து அரண்மனை மேஸ்திரி முத்துக் கொத்தனிடத்தில் ஷை 700 விராகனுக்கு அதைப்போல் 5,6 செய்து தருகிறேனென்றும், ஒண்ணுக்கு அவ்வளவு விலை வீணாய்க் குடுக்க வேண்டியதில்லை யென்றும் சொன்னதும், அதன் பிளானைப் போட்டுக் காண்பித்ததும் எவ்விதமாகவோ தெரிந்து, நீ யெனக்குத் தேவையில்லை யென்றும், ஒனக்குப் பாக்கிச் சம்பளம் கிடையாதென்றும்

ஒனக்கு அஞ்சாறு பாஷை தெரியுமானதால் அதற்காக அழைத்து வந்தேனே யல்லாமல் ஷெ வேலை ஜல்தியாய் முடிக்க அழைக்கவில்லை யென்றும், நீ திங்கட்கிழமை தினம் போனால் படி குடுப்பதாயும், இல்லாவிட்டால் குடுக்கிறதில்லையென்றும் சொல்லுகிறார். ஷை ஜலசூத்திர வேலையை முடிக்க பின்னும் ரெண்டு வருஷம் செல்லுமென்கிறதா யிழுத்து விட்டு அரண்மனையார் பணத்தை ரொம்பவும் வாங்கிக்கொள்ள யத்தினம் பண்ணுவதால் ஷை ஜலசூத்திர வேலை ஆறு ஏழு மாசத்திற்குள் நான் முடித்துக் குடுக்கிறதும். தவிர அரண்மனையாரவர்கள் மனதுப்படி யென்னென்னவேலைகள் யெந்தெந்தத் தருணங்களில் வேண்டியிருக்குமோ அந்தந்த வேலைகளை அந்தந்தச் சமயங்களுக்குச் செய்து கொடுக்கச் சித்தமாயிருக்கிறேன்.

ஆகையால் ரா. அரண்மனையாரவர்கள் தயவுசெய்து ஷெ யாரிடத்தில் என் பாக்கிச் சம்பளத்தைக் கணக்குப்படி வாங்கிக் குடுப்பதும் தவிர ஷெயார் சம்பளத்தில் ரூ.60 பிடித்துக்கொண்டு, என்னை அரண்மனை மனுஷராய் அரண்மனை வுறுதிப்படி நியமித்து என்னை மேல்கண்ட வேலைகளை வாங்கிப் பார்த்தால் ஷெ ஜன்றிலி துரைக்குக் குடுக்கிற அதிகத் துகையான சம்பளம் வீணென்றும் சித்தத்துக்குத் தோணும்.

ஆனதால், அரண்மனையார் எனக்கு மேல்கண்டபடி சம்பளம் குடுத்து என்னிடத்தில் வேலை வாங்கி வரவேணுமென்று மிகவும் வணக்கத்துடனே சலாமுஞ் செய்து கேட்டுக் கொள்ளுகிறேன்.

வேணும் சலாம்.
*(sd. P.G. Limary)*

281. பைத்தியம் பிடித்த கோவிந்த னென்னும் என்னுடைய பையன் ஓடிப்போகிறான். குளம் குட்டைகளில் விழுந்து விடாதபடியிருப்பதற்கு, அவனுக்குக் காலில் விலங்குபோட வேண்டியதற்கு மகாராஜா உத்திரவிட வேண்டுமென்று எழுதிய மனு.

# மூட்டை எண் -106C

**34,1862 ஜனவரி 9**

**1. ஏஜண்டு அவர்கள் சிரஸ்தேதாருக்கு எழுதிய கடிதம் . மானேஜர் ரா. கிருஷ்ணா றாவுக்கு :- சென்ற டிசம்பர் மாஸத்திய மா. ஆவு சாஹேப், பாயி சாஹேப், சி. ராஜாயி, ரா. சகா றாம் சாஹேப்[142] இவர்களுடைய income tax போக மொயின் ரூ . 13, 056.**

**சௌ. ராஜாயீயும் ரா. சகா றாம் சாஹேப்பும் இவர்களுடைய ஷெ மாஸத்திய மொயின் income tax போக ரூ . 3535-14-8 ஆக 16591-14-8 கச்சேரியின் டலாயீத்[143] ஸந்தாமியா வகையறாவின் மூலம் அனுப்பினது சேர்ந்து இரசீதை அனுப்புகிறேன்-**

**2. மானே ஜர் கிருஷ்ண றாவுக்கு :-**
**சென்ற டிசம்பர் மாதத்திய மொயினை, வருமான வரி போக வரவு சிலவு செய்ய வேணுமென்று**

**29.கடிதம் எண் 22**
**1862 பிப்ரவரி 28 உ**
**கவர்ண்மெண்ட் ஏஜன்ஸி டி. வெங்காசாமிறாவ் முகாம் வல்லம் -**

**ஸோமனாத பண்டிதர்[144] பக்கத்தில் அடகு வைத்ததும் வேறு விதமாக விநியோகம் பண்ணின நகை பாபத்தும், அதன்மேல் கூடுதலான ரூ 24000 சொச்சத்துக்கு அவருடைய கோட்டையிலுள்ள வீட்டை அரண்மனையில் வரவு வைத்துக்கொள்ளும்படி கமிஷனர் மிஸ்தர் கிண்டர்ஸ்லி[145] சாஹேப் 1842 நவம்பர் மீ 9 உ கவர்ண்மெண்டுக்கு எழுதின கடிதத்தை இத்துடன் அனுப்பியிருக்கிறேன்-**

**புதுப்பட்டணம்[146] வகையறாஅவர்களுடைய நிலங்களை எல்லாவற்றையும் ஜப்தி செய்ய வேண்டுமென்றும், சிலருக்கு மாத்திரம் மகாராஜா சாஹேப் கொடுத்திருப்பதை அவர்களுக்கு நடத்த வேண்டுமென்றும் எழுதியிருக்கிறது - உத்திரவின்படி**

**ஸேவகன் லக்ஷ்மண்ராவ்**

**29.1862 மார்ச்சு மீ 1 உ (சிங்களம்)**
**கண்டி[147]யின் 2ஆவது இராணி பரலோகமடைந்ததற்காக உத்திரகிரியைக்கு ரூ.1500**

---

142. சகாராம் - இரண்டாம் சிவாஜியின் மருமகன்; ராஜாயி என்பவர்

143. டலாயீத் - வெள்ளிவில்லை தரித்த சேவகன்

144. ஸோமநாதபண்டிதர் - இவருக்குச் சோமநாத ஸதாசிவ கேசவ் திக்ஷித் பண்டிதர் என்பது முழுப்பெயராதல் கூடும் (பக். 83-85)

145. இவர் ரெஸிடெண்டாகவும் கமிஷனராகவும் இருந்தவர். இவர் 1842 இல் பல ஆவணங்களில் காணப்படுகிறார் (பக்.67)

146. புதுப்பட்டணம் என்பது சிதம்பரத்துக்கும் கடலூருக்கும் இடையே உள்ள புதுச்சத்திரமாதல் கூடும்.(பக். 85)

147. கண்டி - இலங்கையிலுள்ள ஒரூர். கண்டி அரசரின் பெயர் விக்கிரமசிங்கர்; இவருக்கு நான்கு மனைவியர் இருந்தனர் (பக்.97)

கொடுத்த விஷயமாகக் கடிதம் போக்குவர கடிதத்தில் ஜூன் 11உ இங்கிருந்து ஸாஹேப் அவர்களுக்கு அனுப்பியிருக்கிறது.

மேற்கண்ட இராணியின் கோரியைக்கட்டுவதற்கு ரூ.150 கொடுக்கப்பட்டிருக்கிறது.

நான்காம் இராணியின் முதல் ஸ்வீகார புத்திரன் இராமச்சந்திர ராஜா என்பவருக்குக் கோரிகட்ட ரூ. 100ம் கொடுத்திருக்கிறது. அதையும் ரிகார்டில் பரிசோதிக்க வேணும்.

**50.24-5-62**
அரண்மனையிலிருக்கிற புத்தக வாசக சாலையில் ஆங்கிலேயம், மராடி, புத்தகங்களுக்குத் தங்களிஷ்டப்படி ஷை நிலையத்தின் ஹெட்குமாஸ்தா கொடுத்ததையும் இத்துடன் அனுப்பியிருக்கிறது.

(ஒப்பம்) கிருஷ்ணறாவ்
ஆபீசின் சர்கீல்.

***26.1862 March 12உ***

தஞ்சாவூர் கவர்ன்மெண்ட் ஏஜண்ட் கச்சேரி கிருஷ்ணறாவ் எழுதியது. பென்சின் விஷயம்.

வணக்கம். ஒவ்வொரு வருஷமும் ஆஜர் பார்க்காதபடி பென்சின் கொடுக்கக்கூடாது என்று ஏஜண்ட் சாஹேப் உத்திரவு;
அதை அனுசரித்தே தஞ்சாவூர் பென்சின்தார்கள் நடக்கிறார்கள்.
திருவிட மருதூர் பென்சின்தார்களின் விஷயத்திலோ அநேகர் கும்பகோணம் தாலூகாவிலுள்ள சிலர் இங்கு வாங்குகிறார்கள். அவர்களில் சிலருடைய அடையாளங்கள் கண்டு கச்சேரியில் ஒரு ரிஜிஸ்தரில் எழுதியுள்ளது. அதன்படி ரிஜிஸ்தர் செய்து கொடுக்கிறது. அல்லது செய்யாமலே கொடுக்கிறது.

முதல் சொன்னபடியே அனுசரித்து நடக்கவேணுமென்கிற பக்ஷத்தில் கும்பகோணம் தாலூகாவில் பென்சின் வாங்குகிறவர்களை ஸப்கலெக்டர் ஆஜர்பார்க்க வேணுமா அல்லது எப்படிச் செய்வது ? இங்கே வாங்குபவர்களை யார் ஆஜர் பார்க்கிறது? இதைத் தவிர அவர்களின் சிற்சில புருஷர்களுடையவும், ஸ்திரிகளுடையவும் அடையாளங்கண்டு அந்த ரிஜிஸ்தரில் எழுதப்படவில்லை. அவர்களில் சில பேர் இவ்விடம் ஆஜராகி, கச்சேரியில் பென்சின் வாங்குகிறார்கள். கோஸா[148]வின் சில காரியஸ்தர்களுக்கு அதிகாரம் கொடுத்து அவர்மூலம் அடைகிறார்கள். அந்தக் கோஷாக்களே பிழைத்திருக்கிறார்களோ? இல்லையோ. இதை எப்படி அறிந்துகொள்ளுகிறது? அவ்விஷயத்தில் தங்கள் அபிப்பிராயத்தைச் சீக்கிரம் அறிய விரும்புகிறேன்.

(ஒப்பம்) கிருஷ்ணராவ்.

148. கோஸா - கோஷா; பிற ஆண்கள் காணாதபடித்திரையிட்டு வாழும் பெண்கள்

*33.1862*

ரா. வெங்காசாமி றாயருக்கு எழுதிய கடிதம். ரா.சகாராம் சாஹேப்பும் செள. ராஜாயியும்[149] தங்கள் வாங்குகிற மொயினுக்கு ரசீது லேபிள் ஒட்டக்கூடாதென்கிறார்கள்.

*36.22.3.1890*

கும்பகோணம் ரேஞ்ச் சத்திரம் சூப்பிரெண்டெண்ட் அவர்களுடைய அர்ஜி 1758 உத்திரவு

மகா.ஸ்ரீ.ஸ்ரீ. பிரதாப ஸிங்க ராஜா[150] சாஹேப் அவர்கள் தஞ்சாவூர் கோட்டை செள. சக்வார்பாயி[151] சாஹேப் அவர்களிடம் திரிபுவனத்தின் சத்திரத்திற்கும் அக்கிரஹாரத்திற்கும் மொயின் செய்யப்பட்டிருக்கிறது. வருஷத்திற்குச் சத்திரத்திற்குச் சக்ரம் 3300. பிராமண போஜனம் 100 பேர்களுக்கு, வீடு ஒன்றுக்கு 7 1/2 சக்ரம் வீதம் 2700. தண்ணீர்ப் பந்தல், பானகபூசை ஜாஸ்தி சிலவு, நாள், கிழமை அக்கிரஹாரத்திற்கு வீடொன்றுக்கு நாளொன்றுக்கு 28 சக்ரம்.36ஆகவருஷத்திற்கு 5028சக்ரம்-கும்பகோணம்பிரிவு-மஹாராஜாபுரம்-சேர்வையில் சேர்ந்த தேப்பெருமா நல்லூர் கிராமம் முழுமையும் ஸர்வ மானியமாகக் கொடுக்க உத்திரவாயிருக்கிறது.

*1759 சர்க்காரின் உத்திரவு*

மகா.ஸ்ரீ.ஸ்ரீ. பிரதாபசிங்கஜீ ராஜா சாஹேப். தஞ்சாவூர் கோட்டை, செள.மா.சக்வர்பாயி சாயேப் அவர்கள் திரிபுவனம் சத்திரத்திற்குப் பக்கத்தில் புதிய அக்கிரஹாரம் உண்டு பண்ண கும்பகோணம் பிரிவு - கும்பகோணம் தாராசுரம் சேர்ந்த புஞ்சை நிலம் 6 வேலியும் சுரங்கப்பேட்டையிலும் மரத்தடி நிலம் 2 வேலியும் ஆக-6.

*10.1862 Oct.*

கவர்ண்மெண்ட் ஏஜண்ட் - ஜீ.எல். மாரிஸ் எஸ்கொயர் அவர்களுக்கு மங்கள வாஸம்[152] கிருஷ்ணாபாயி[153] பெரிய அம்மா எழுதிக்கொடுத்த ரசீதின் லேபிளின் மேல் இராணியின் தலையும், கவர்ண்மெண்ட் ஆப் இந்தியா ரசீது பில் ஆப் டிராப்ட் ஒரு அணா என்று இருக்கிறது.

*48.1862 Oct 18உ*

கவர்ண்மெண்டுக்கு -

*1838 கி. பி. - 1840 கி.பியில் திருவிட மருதூரில் தேரை இராஜா பிரதாபசிங்கஜீ அவர்கள் தயார்*

---

149. சகாராமின் மனைவி; இரண்டாம் சிவாஜியின் இரண்டாவது மகள்.

150. இவர் 1739 முதல் 1763 வரை அரசாண்டவர். இவர் துக்கோஜி கத்திக் கல்யாணம் செய்துகொண்ட மராட்டியப் பெண் அன்னபூர்ணாபாயியின் மகன் ஆவர். போன்ஸ்லே வமிச சரித்திரம் (பக். 81) தமிழாக்கம் - சரசுவதிமகால் வெளியீடு 1980.

151. சக்வார்பாயி - இவர் பிரதாபசிங்கரின் மூன்றாவது மனைவி (போ.வ.ச.பக்.82) இவர் பெயரால் அமைந்த சத்திரம் திரிபுவனத்துக்கு அருகில் அம்மாசத்திரம் என்ற ஊரில் இருந்தது. (பக்.270)

152. மங்களவாஸம் - இரண்டாம் சிவாஜியின் காமக்கிழத்தியர் கூட்டம் தங்கிய இடம் மங்களவாசம் அல்லது மங்களவிலாஸ் என்ற பெயரால் குறிக்கப்பட்டது (பக்.330)

153 மோடிப்பலகணி 1-ஆவணம் 79 எண் 20.

*செய்ததைப் பற்றி சிவாஜிராஜா அவர்கள் ஆக்ஷேபனை செய்தாற்போல் அந்தத் தேரின் வேலையைப் பற்றின கரஸ்பாண்டென்ஸ்ஸீம் ஏதாவது இருக்கிறதா என்று சொன்னபடி தேடினதில் இதுவரையிலும் அகப்படவில்லை. நாளை நாளையன்னிக்குள் தேடிப்பார்த்து அனுப்புகிறேன்.*

சேவகன் லக்ஷ்மண்
*தஞ்சாவூர்.*

*41.1823*

*யாதாஸ்து - ரா. மகாராஜா[154] சாஹேப் அவர்கள் இலாகா மா. ஆவுசாஹேப்[155] இலாகா ஆதினம் சாஸ்திரசாலை - இன்னும் மற்ற சாலை (பள்ளிக்கூடம்)யில் உயர்ந்ததான வேதாந்த சாஸ்திரமும் நியாய சாஸ்திரமும் வகையறாவைக் கற்றுக்கொள்ளுவதற்கு ஏற்படுத்திய பள்ளிக்கூடங்களின் விஷயம் பற்றி -*

## முட்டை எண் 107C

*37(1) 1852*

*ம கா.ஸ்ரீ.ஸ்ரீ. திவான் சாஹேப்[156] அவர்கள் 17 கலியாணஞ்[157] செய்து கொண்டதற்கு தக்ஷிணை ரூ.2130-3-0*

*சென்னப்பட்டணம் சைதாபேட்டைத் தாலுகா சின்னகூடலூரில் இருக்கும் ஸ்ர்காருடைய தோட்டத்திற்குப் போகும் பாதையில் பாலங்கட்டுவதற்கு உத்தேசம் சிலவு ரூ.105-15-0*

*(2) 1852*

*அப்தார்கானாவில்[158] (ஜலசாலாவில்) அல்லா வைப்பதற்குத் தின்பண்டம் லாடு கரீதி செய்வதற்கு ரூ.150.*

*(3) 1852*

*ஹூஜூரின் முன்னிலையில் ஜால வித்தை செய்து, வேடிக்கை காட்டின மான்ஸியேர்னிவ பரீட் இவருடைய தம்பியின் டாகிஹோயேப் என்னும் யந்திரம் ஸாமானுடன் ஒன்றை வாங்கினது ரூ.500.*

*1852 ஸரஸ்வதி மஹாலைச் சேர்ந்த விகடகவி முத்துசாமி சின்னசாமியானவன் ஹூஜூரில் ஜாலவித்தை செய்து காட்டினதற்கு ரூ.6.*

---

154. யாதாஸ்து - விண்ணப்பம்; மகாராஜா - இரண்டாம் சரபோஜி

155. ஆவுசாகேப் என்றது துளஜாவின் மனைவியருள் ஒருவர் ஆகலாம்

156. திவான்சாஹேப் - இறுதி அரசரான சிவாஜிII

157. பார்க்க முட்டை எண் = 45C: 55(1857 ஏப்.20) சரசுவதி மகால் பகுதி iv.

158. அப்தார்கானா - தண்ணீர்ப்பந்தல் இருக்கும் இடம் (பக்.458)

*37 (4) 1852*

*மகால் - ஆவுசாகேப்தோட்டம் வகையறாவைச் சேர்ந்த - பழைய சிவகங்கையை வெட்டுவதற்குச் சிலவு - ரூ.1500*

*1852 மோஹரம்[159] திருவையாற்றில் நான்கு புதிய படகுகள் தயாரிப்பதற்கு ரூ.1000/-*

*(5) 1852 சரபேந்திரராஜ பட்டணத்திலிருக்கும்[160] அத்வியாஸ? இடமிருந்து வந்த படகைப் பழுது பார்க்க சிலவு ரூ.535-3–0*

*(6) 1852*

*ஸ்ரீஸ்வாமிமலை ஸ்ரீசுப்பிரமணியஸ்வாமிக்கு கும்பாபிஷேகத்திற்கு ரூ.155.*

*41.1845*

*திருவையாரில் காவேரியின் பாலத்தின் சிலவுக்காக ரூ.5000*

*44.1845*

*சித்திரக்காரன் கோவிந்தசாமி மேஸ்திரியின் மூலம் திருச்சினாப்பள்ளி திருவேங்கட அய்யங்காரிடமிருந்து கல்வின்மேல் எழுத்து வரைந்து காகிதத்தின்மேல் படியும்படி செய்கிற விதத்தைக் கற்றுக்கொள்ளுவதற்கு மேற்சொன்ன அய்யங்காருக்கு ரூ.30.*

*47.1845 கி.பி.*

*ரெஸிடெண்ட்[161] சாஹேப் மூலம் ஸோல்ஜர்கள் சண்டை போடுகிற விதத்தைப் பயிற்சி செய்ய கோவிந்த ஜெட்டி, சுப்பாஜெட்டி என்பவன் திருச்சினாப்பள்ளிக்குப் போனதற்கு படிச்சிலவு இனாம் ரூ.5.*

## மூட்டை எண் 108C

*34.1825*

*மகாராஜ ராஜேஸ்ரீ திவான் சாஹேப் அவர்கள் ஆவுசாஹேப் தோட்டத்திற்குப் போகும்பொழுது இடையன் பால் சட்டிகளை[162] முன்பாகக் கொண்டு வந்ததற்கு இனாம் ரூ.0-4-0*

---

159. மோஹரம் - முகமதியர் மாதங்களில் முதலாவது.

160. சரபேந்திரராஜபட்டணம் தஞ்சையின் மேற்கே மருத்துவக்கல்லூரியின் வடபால் மானோசிப்பட்டி போகும் வழியில் பழைய நீலகிரித்தோட்டம் இருக்கும் இடத்தில் கிணறு, தண்ணீர்ப்பந்தல், அனுமார்கோவில், பழைய கட்டிடங்களின் அடிப்பகுதிகள் உள்ளன. அருகே "உப்பரிகை" எனப்படும் மராட்டியர் கால மண்டபம் உள்ளது. அப்பகுதிதான் (பழைய) வல்லம் போகும்வழி; அங்குதான் சரபேந்திரராசன் பட்டணம் இருந்தது என்று தஞ்சை அரண்மனை மூத்த இளவரசர் கூறினார். (புலவர் செ.இராசு).

161. அரசர்களைக் கவனிக்கும் பொருட்டு அரசர்களின் தலைநகர்களில் கும்பனியார் நியமித்த ஆங்கிலேய அதிகாரி.

162. பால் சட்டி = பாற்குடம்

*91.1833*

*மகால் கஜானாவில் ஆஜர் ரூ.37875 [163] துட்டு 6413 1/2 [164] பைசா - 2141 [165] டாலர் - 43*

*94 (1) 1825*

*சௌ. மா. அஹில்யாபாயி[166] சாயேப் அவர்களிடம் ரா.ஸ்வாமியார் அவர்களுடைய பெண்சாதிக்குத் தோட்டத்துச் சாப்பாடு செய்ததற்குச் சிலவு சக்ரம் 5, பணம் 2*

*(2) ரா. ரா. திவான் சாஹேப்[167] - சிவகங்கைக் கோட்டைக்குப் போன இடத்தில் செட்டுக்காரி பாட்டுப் பாடின ஆஸாமிகள் 10க்கு ரூ.1 கொடுக்கப்பட்டது.*

*99.1825*

*(1) சையத்தின் வீட்டிற்கடுத்துள்ள "காசிம்"[168] அல்லாவுக்கு அல்லா பண்டிகைக்காக சக்ரம்-3.*

*(2) 1825 - ஹுஜூரின்[169] வைத்தியர் அப்பாசாமியின் மூலமாக ராம தேவர்[170] என்னும் வைத்திய சாஸ்திரத்தைக் கரீதி செய்ததற்காக 15 பணம் மஹால் கஜானாவிலிருந்து கொடுக்கிறது.*

*(3) 1825 - கணபதி அக்கிரஹாரத்தில் சுகவாசி பதஞ்சலிதீக்ஷித் 'அருணகேதுகசயன பசுபந்தன யக்ஞத்தைச் செய்வதற்காக இனாம் ரூ.100*

*(4) 1825 - ஆயுத சாலையில் - ஹுஜூர் ஸ்டோரில் வைப்பதற்காக ஆயுதங்களை வாங்குவதற்காக ரொக்கம். சக்ரம் -18.*

*101.1819 - பம்பாயில் வசிக்கிற "பார்சீ ப்ராஞ்சீ" என்னும் வியாபாரிக்கு இனாம் ரூ.5.*

*105.1825*

*(1)ஹுஜூர் சேவகர்களுக்குக் கொடுக்கிற ஹிந்துஸ்தானி மாதிரியான பளபளப்பான இரண்டு*

---

163. துட்டு - ரூபாய் 1க்கு 48 துட்டு (பக்.154)

164. பைசா - ரூபா 1க்கு 192 பைசா (பக்.154)

165. டாலர்- அமெரிக்கா, சிங்கப்பூர் முதலிய நாடுகளில் வழங்கும் நாணயவகை

166. அஹல்யாபாயி - சரபோஜியின் இரண்டாவது மனைவி (போ.வ.ச.பக். 92)

167. திவான்சாகேப் - சரபோஜி II

168. சையத் என்ற பெயர் பிரதாபசிங்கர் காலத்துக்கு முன்னும் அவர் காலத்துத் தொடக்கத்திலும் கில்லேதாராக இருந்து பின் பிரதாப சிங்கரால் கொல்லப்பட்ட சைய்யிது என்பவரையும் (போ.வ.ச.பக்.87) காசீம் என்பது அரசனிடம் சையதுவின் துரோகச் செயல்களைக் கூறிவந்த சையிதுவின் தம்பி காசிம் என்பவரையும் (போ.வ.ச.பக் 88-89) குறிக்கும் என்று தோன்றுகிறது.

169. ஹுஜூர் - அரசர்; சரபோஜி II

170. சரசுவதி மகால் - தமிழ்ச்சுவடிகளின் தொகுதி V பக்.95 ராமதேவர் அஷ்டாங்கபட்சனி, ராமதேவர் சூத்திரம் முப்பது - என்பவை ஆகலாம்.

ஆடையைத் தயார் செய்வதற்குத் தளவாடம் கரீதிக்கும் மெக்யாடு[171] கூலிக்கும் கூட சக்ரம் -500

*(2) 1820*

அம்பார் கானா[172] (களஞ்சியம்)வுக்கு எதிரே புதிய மஹாலில் மண்டபம், சௌகண்டி[173], எத்திக்கட்டு[174] இவைகளைக் கட்ட தளவாடம் கூலி மண்டபம் சௌகண்டிக்கு-1070 சக்ரம், வெள்ளைக்கல்லினால் எத்திக்கட்டுக் கட்டுவதற்கு 430 சக்ரம் மொத்தம் 1500 சக்ரம்

*106.1825*

(1) மகால் - சமுத்திரத்தோட்டம் வகையறா வடக்கே கரையைப் போடுவதற்கு சக்ரம் 1000

*(2) 1825*

ஹுஜூர் சித்திரக்காரன் ஸாரங்கபாணியானவன் 18 ஜாதிகளின் படத்தைக் கொணர்ந்து கொடுத்ததற்கு ரூ.140.

*(3)-1825*

மராமத்து - இலாகா - பழைய சிவகங்கை தஞ்சாவூர் கோட்டை-பழைய சிவகங்கையை வெட்டுவதற்கு சக்ரம்-1000

*(4) 1825*

ஆயுதசாலையிலுள்ள துணியினால் செய்யப்பட்ட படுதாவின் கழிகளை வாங்குவதற்குத் திருச்சினாப்பள்ளிக்குச் செல்லும் ஆஸாமி 3க்கு நாளொன்றுக்குப் படிச்சிலவு சக்ரம்

## மூட்டை எண் 109C

2(1) 1784 சௌமா சுலக்ஷணாம்பாயி[175] சாயேப்- சிலவு - இராமலிங்கப்பிள்ளை இடம்-சத்திரம்[176] ஊமத்தநாடு அடக்கத்தேவன் - அக்கிரஹாரம் யெல்லையைச் சேர்ந்த கட்டுக்கோப்பு[177] குளமும் சுத்தக்கிரயம்[178] தருமத்திற்குத் கரீதி செய்து கொடுத்ததற்குத் தஞ்சாவூர் சக்ரம்-500

*13 (1) 1784*

அரிசிக்காரி நனைந்துபோன அரிசியை விற்றதினால் அபராதம் 2 பணம் விதிக்கப்பட்டது.

---

171. மெக்யாடு - குத்தகைக்கு விடாமல் நேரில் செய்யும் வேலை.
172. அம்பார்கானா-நெற்களஞ்சியம் (பக்.455)
173. சௌகண்டி-சதுரத்திண்ணைக் கொட்டகை (பக்.455)
174. எத்திக்கட்டு-உயர்த்திக்கட்டுதல்.
175. சுலக்ஷணாம்பாயி - துளஜா II இன் நான்காவது மனைவி (போ.வ.ச.பக்.125)
176. சுலக்ஷணாபாயிசத்திரம் (பக்.272)
177. கட்டுக்கோப்பு - கட்டடம்
178. சுத்தக்கிரயம் - எல்லா உரிமையையும் விலைக்குக் கொடுத்தல்.

*(2) 1784*

*கப்பி அரிசிக்காக நெல் 13 1/2 படிக்குப் பணத்திற்கு 6 3/4 வீதம் பணம் 2.*

*(3) 1784*

*சௌமா. பாயிசாஹேப் அவர்களுடைய துளஸி அக்காவும்[179] லவங்கி அக்காவும் வந்ததற்குச் சாப்பாடு செய்வதற்குச் சிலவு*

*அரிசிபடி 2 3/8க்குப் பணம் 1 மட்டை அரிசி - 3 13/16 படிக்குப் பணம் 2 13/16*

*16.1784*

*(1) இராமேசுவரத்தில் மஹாராராஜாவின் அன்னதானச் சத்திரத்திற்குப் பசுமாடு கரீதி செய்ய இராமனாத பண்டாரம்:-*

*சுத்தையான் மூலமாக 4 பசுமாடுகளை ஒன்று 2 சக்ரம் 2 1/16[180] பணம் வீதம்*

*சக்ரம் 8 - பணம் 11 1/4*

*18.1784*

*1. பந்தர் முத்துப்பேட்டை வரவு*

*முத்ரடீ வரி[181], வரத் வரி, போக்கு வரி, துறைமுகம் வரி, இறக்குமதி வரி*

*ஆக சக்ரம் 175-9 5/16*

*18 (2) 1784*

*புதிய உப்பை வித்துமொதல் - ஷ்டி கட்டளவு மரக்கால் 8 வீதம் மரக்கால் 4082க்குக் கலம் 340-2-0 நவி 1க்கு மரக்கால் 48 வீதம் நவி 85க்கு மரக்கால் 2[182] வித்து மொதல் சக்ரம் 51-1/4 பணம்.*

*(3) 1784*

*பட்டுக்கோட்டை வாசலுக்கு விளக்குக்கு எண்ணை கரீதி சேர் ஒன்றுக்கு 1/2 பணம் 1 3/4 சேர் 9 பலம் வீதம் சக்ரம் 1 1/2 பணம் 1/4*

*(4) 1784*

*சௌ.மா.[183] சுலக்ஷணாபாயி சாயேப்சத்திரம் மராமத்துக்கு ஆதம் முத்துப்பேட்டையிலிருந்து சக்ரம் 3165 - 2 7/8 பணம்*

*21 (1) 1784*

*முகாம்தாருக்கு - ஓலை எழுதுவதற்கு எண்ணை விளக்குக்கு இலுப்பெண்ணை நாளொன்றுக்கு 1/4 சேர் வீதம் 7 1/2 சேருக்குப் பணம் 2 1/6*

---

179. பாயிசாயபுகளின் பணிப்பெண்டிர் 'அக்கா' என்று குறிக்கப்பெறுவர். (பக்.336)

180. 2 1/16 என்பது தவறு; 2 13/16 என்றிருத்தல் வேண்டும்.

181. முத்ரடீவரி - முத்திரைப்பத்திரம் விற்ற முதல் வரி ஆகலாம். (பக்.139)

182. நவி 85க்கு மரக்கால் 2: இதனை நவி 85; மரக்கால் 2 என்று படித்தல் வேண்டும். நவி என்பது ஆறு கட்டளவு (பக்.138)

183. சௌ.மா.- சௌபாக்யவதி மாது ஸ்ரீ

23 (1) 1784 துறைமுகம் வரி - படகின் வேலைக்காரனுக்குத் துறையிலிருந்து தண்ணீர் கொண்டுபோய் ஏற்றுவதற்கு 192 குழாய்களுக்குச் சக்ரம் 4-8 பணம். ஊர் ஸோல்ஜருக்கு - சக்ரம்-1-பணம் 3 5/8 . சக்ரம் 6-1 5/8

26 (1) 1784
தட்டான் மகாதேவனிடம் பார் சிப்பாய்கள் நகைகள் செய்வதற்குக் கொடுத்ததில் தங்கத்தைத் திருடினதினால் அவனுக்கு அபராதம் பணம் -1

34.1784 அறந்தாங்கி-
(1) கேப்டன் கபீஸ்துரை தஞ்சாவூரிலிருந்து வந்தாரவருடைய சந்திப்புக்கு (காண்பதற்கு) ஹவால்தர் போனதற்கு சுங்கத்திலிருந்து சிலவு
சர்க்கரை 1, வெற்றிலைப்பாக்கு 1,2க்கு தஞ்சாவூர் சக்ரம் பணம் 1 9/16

36.1784
(1) சௌ. மா. மோஹனாபாயி சாஹேப்[184] அவர்களுடைய ராஜாமடம் சத்திரம்[185] கட்டுவதற்குச் சிலவு சக்ரம் -123 1/2 பணம் 11/16

38.1784 அறந்தாங்கி -
(1) சர்காரிலிருந்து ஈஸ்வரனுடைய கோவிலுக்குப் போய் ஸ்வாமியைப் பார்த்தபொழுது ஸ்வாமிக்கும், அம்மனுக்கும் பழைய வஸ்திரம் உடுத்திருந்ததைப் பார்த்து, ஏன் இப்படி பழையதை உடுத்த வேணுமென்று கேட்டு, குடியானவன் மூலம் அபராதம் 4 பணம் விதிக்கப்பட்டது.

45.1784
(1) தஸ்தாவேஜீ கச்சேரியில் விளக்குக்கு இலுப்பெண்ணை கரீதி செய்யப்பட்டது.

46.1784
(1) பட்டுக்கோட்டை - அறந்தாங்கியில் - அரிசி 15 படி விலை பணம் 8 9/16

(2)அறந்தாங்கி - அரிசிபடி 104 1/4 - 1 1/2 படி வீதம் 24 படி கொண்ட கலம் -4, துவரம் பருப்புபச்சைப்பயர்- உளுந்து - படி - 5 1/2க்குப் பணத்துக்கு 1 1/8 படி வீதம் - 5 பணம், எள்ளு படி 1 பணம் வீதம் = 1 பணம், மிளகுசேர் 3/4க்கு - 1 1/2 பணம்

46 (2) கடுகு - 3/8 பணம், வெந்தியம் பலம் 2 1/2க்கு - 3/16 பணம்,ஜீரகம் பலம் 2 1/2க்கு - 1/2 பணம், சுக்கு பலம் 13 1/2க்கு - 3/16 பணம், ஏலக்காய் 3 விராகனிடை - 1/4 பணம், மிளகாய் -1/2 பணம், மஞ்சள் பலம் 4 1/8 - 3/16பணம், காயம்-விராகனிடை-2- 1/2 பணம், புளி - 28 1/2 சேர் - 2 5/8 பணம், வெல்லம் - 11 1/2 சேர் - 9 5/8 பணம், நெய் - சக்ரம், நல்லெண்ணை சேர் 3 - டாங்க்[186] 2 3/4 பணம், உப்பு படி -1 - 1/2 பணம்

184. இவர் இரண்டாம் துளஜாவின் மூன்றாவது மனைவி(போ.வ.ச.பக்109)

185. இராஜாமடம் சத்திரம் (பக்.271)

186. 1 டாங்க் - 1/3 தோலா(பக்.165)

*(3) 1784*
*கொட்டைப் பாக்கு-260க்குப் பணம் -2, வெற்றிலை-490க்குப் பணம் 2 13/16, விளக்கெண்ணை 1 1/2 சேருக்குப் பணம் - 1 பணம், வாழையிலை 100க்குப் பணம் - 2*

*48.1784*
*(1) பாளயக்காரன் - கோனூர் முகாமில் பச்சை அரிசி -9 படிக்குப் பணம் 5*

*(2) 1784*
*ஒரு கலம் அரிசி - சக்ரம் -1-பணம் 3 1/2*

## மூட்டை எண் 110C

*16 1799*
*(1) நெல்கலமொன்றுக்கு 3 1/2 பணம் வீதம் 500 கலங்களுக்குச் சக்ரம் 175.*
*(2) சுவர்ணாதயம்[187] பருத்தி*
*க. 1843 ஏப்ரல் மீ*
*நீங்கள் சீக்கிரம் கொஞ்சம் நாட்களில் வந்து சேருவீர்களென்று எழுதியதைப் பார்த்த நமக்குச் சந்தோஷமாயிற்று. தங்கள் சிலவுக்கு 1000 ரூ வேண்டுமென்றதாக ராவுஜி எழுதியிருக்கிறார்.*

*அந்தப்படிக் கொடுப்பது சரியென்று அவருக்கும் நாம் எழுதியிருக்கிறோம். அவ்விஷயத்தைப் பற்றி தாங்கள் எழுதவில்லை.*

*மேலும் சர்காரிலிருந்து வேணுமென்ற இயந்திரங்கள் வகையறாவின் விசாரணை செய்தீர்களா? அவைகள் கிடைக்கிறதா? அவ்விவரத்தை எழுதவில்லை. எழுதவும்.*

*மேற்கண்ட காரியங்களுக்குத் தற்போது மிஸ்தர் கிண்டர்ஸ்லி[188] சாயேப் சீமைக்குப் போயிருக்கிறார். ஆனாலும் பெல்லி சாஹேப் அவ்வேலையைப் பார்க்கிறார். ஆகையால் எக்காரியமும் குறைவில்லாமல் ஒரே மாதிரியாக நடக்கும். இதற்குச் சந்தேகமில்லை.*

*(கையொப்பம்) ராஜஸ்ரீ பாபாஜீ ராமாஜீ பண்டிதர்[189] ஸர்கே*

## மூட்டை எண்-111 C

*4. 1823*
*நாலு வீதிகளில் இருபுறமும் சாக்கடைகளைக் கட்டி நடுவில் துமஸ்[190] செய்ய தளவாடம்*

187. சுவர்ணாதாயம் - பணப்பயிர்

188. இவர் ரெஸிடென்டாக இருந்தவர் (பக்.67)

189. மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும், (பக்.86)

190. துமஸ் - இளகிய தரையைத் திமிசுக்கட்டையால் கெட்டிப்படுத்துதல்.

கூலிக்கு சக்ரம்-500

6. (1) 1823

அச்சிட்ட பத்திரங்கள் வித்து முதல்-பலங்கமஹால்? தஸ்தாவேஜீ கச்சேரியில் வரவு ரூ 0-8-0

7. 1851

பங்குனி மீ சுத்த சப்தமி தினம் ம கா.ஸ்ரீ.ஸ்ரீ. திவான் சாஹேப்[191] அவர்களுடைய பிறந்த நாளுக்குச் சிலவு ரூ31-13-16

8 (1) 1851

க்ஷேத்திர புரத்திலிருக்கும் துர்ஜனசிங்கு என்பவர் கங்கோத்திரியின் காவடி இரண்டைக் கொண்டு வந்ததை வாங்கிய வகையில் ரூ.350 சிலவு

(2) 1851

தையல் மஹாவில்[192] சிலவு ரூ.50

10.1823

(1) நகாரா கானா[193]வில்/மேளத்தின் வாத்தியங்களுக்கு முலாம் செய்ய வெள்ளி இடை, நாதசுரம் முதலிய 7 வகைக்கு - 24 1/2 சேர், தவுல் 2க்கு - 22 சேர், உடுக்கு 2க்கு - 14 சேர், ஜால்ராஜோடி 2க்கு - 7 1/2 சேர் = 72 சேர்

(2) 1823

சேதுபாவா சத்திரத்தின் பங்களாவைப் பழுது பார்க்கவும், சுற்றிலும் பந்தல் போடவும் சிலவு சக்ரம் 150

21 1851

(1) மா. ஆவுசாஹேப்[194] அவர்கள் ஸ்ரீகாசி க்ஷேத்திரத்திலிருக்கும் ஸ்ரீகேதாரேஸ்வர ஸ்வாமிகள் கோவிலில் விளக்குப் போட 70 ஆயிரம் திரிகளை இவ்விடமிருந்து அனுப்பியதற்காக விளக்குக்கு எண்ணை கரீதிக்கும் பூஜை பிராமண போசனம் வகையறா சிலவுக்கு குஜராத்தி இராமனாதபட்டு வசம் ரூ125. ஷ்டி துகையை காசிதம்பிரானிடம்[195] சேர்ப்பிப்பதற்கு ஹுண்டிக்கு[196] 100க்கு 4 1/2 ரூ வீதம் 5-10-0 ஆக = 130-10-0

---

191. திவான்சாஹேப் என்றது இரண்டாம் சிவாஜியை

192. தையல்மஹால் - தர்ஜிமஹால் (பக். 453)

193. நகாராகானா - டமாரம் போன்ற பலவிதமான ஒலிக்கும் கருவிகள் வைக்கப்பட்ட இடம். (பக்.454)

194. ஆவுசாகேப் என்பது இரண்டாம் சிவாஜியின் தாயார் அஹல்யாபாய் ஆவர். (பக்.425)

195. காசித்தம்பிரான் - திருப்பனந்தாள் காசிமடத்து அதிபர்,கி.பி.1851இல் காசிமடத்து அதிபராயிருந்தவர் ஸ்ரீகாசிவாசி சொக்கலிங்க சுவாமிகள் ஆவர்(கி.பி.1841-52). (பக்.424-425)

196. ஹூண்டிக்கு - தொகை அனுப்புவதற்குரிய தொகை. தென்னாட்டிலிருந்து காசிக்குத் தொகைகள் அனுப்ப வேண்டியிருப்பின் அந்நாள்களில் திருப்பனந்தாள் காசிமடத்தில் செலுத்தினால் காசி குமாரசாமிமடத்திலிருந்து பெற்றுக் கொள்ளலாம். இதற்கு ஓரளவு தொகை சேர்த்துக் கொடுக்கப்பெறும். (பக்.429)

*41-1849*

*(1) ஜலசூத்திரம் வேடிக்கையைச் சேர்ந்த ஷெ ஆட்கள் முந்தியே கொடுப்பதற்கு ரெஸிடெண்ட் கச்சேரி சிரஸ்தேதாரிடத்தில் கொடுத்தது ரூ.400*

*(2) 1849*

*கந்தர்வகோட்டை - கரிமூட்டை 5க்குக் கலம் -6, மர-4; கலம் ஒன்றுக்கு 0-2-0 அணாவீதம் ரூ.0-12-8*

*42.1849*

*(1) கஜானாவில்*

*ரூபாய்கள் 450-11-0, துட்டு 419- 2-9 நாணயம் ஆக பாபத்து 873- 5-4, 1743- 7-1*[197]

*43.1849*

*சௌ. சி. ராஜஸபாயி*[198] *அமணி ராஜேசாஹேப் அவர்களிடம்-பதினெட்டாம் பெருக்குக்காகத்*[199] *தமிழ்ப் பள்ளிக்கூடத்தின் பிள்ளைகளுக்கு 0-2-6 அணா*

*பூஜைக்காகத் தக்ஷிணை-0-1-0, பஜ்ஜி பக்கோடா தின்பண்டம் வாங்குவதற்கு 0-1-0*

*43.1849*

*(2) ஒட்டகத்திற்கு இலை தழை கரீதி செய்ய ரூ.1-15-0*

*44. 1849*

*சத்திரம்-வகையறாவைச் சேர்ந்த-இராமேசுவரம் சத்திரத்திற்குக் கும்பனியின் கஜானாவிலிருந்து தானியம் மொயின் துகை 1849 ஷு ஜனவரி முதல் மார்ச்சு வரையில் 3 வருஷத்திற்குக் கிஸ்தி ஒன்றுக்கு ரூ. 355-1-8.*

*45. 1849*

*நவவித்தியா கலாநிதி பள்ளிக்கூடத்திற்குப் போதி பௌர்ணிமைக்காக கவாத்துப்*[200] *பூஜைக்காக ரூ.0-13-3*

*46. 1849*

*(1) சௌ. சைதம்பா*[201] *பாயிசாஹேப் அவர்களுடைய தலைத் திவசத்திற்காக*[202] *பிராமணபோஜனம், 600 பேர்களுக்குத் துட்டு, தக்ஷிணைக்காக 1781 1/4 ஷெ விடோபா ஸ்வாமி*

---

197. இவ்விடத்து 3 என்றிருத்தல் வேண்டும்.

198. ராஜஸபாயி அமணி ராஜே - இரண்டாம் சிவாஜியின் முதல் மகள்.

199. 18ஆம் பெருக்கு-ஆடிமாதம் 18ஆம்நாள்நிகழும் காவிரிப்பெருக்கு; அந்நாளில் நடக்கும் விழா.

200. கவாத்து -மல்லர்கள் செய்யும் பயிற்சி

201. இவர் சிவாஜியின் முதல் மனைவியாவர் (பக்.32)

202. மூட்டை , எண் 168C : 51; 2 இல் ஆஸ்தி கொண்டு சென்றது 1851 என உள்ளது.

கோவிலின்[203] வாசலில்ராமாஜி அப்பாஜீ உட்கார்ந்து கொடுப்பதற்கு.

*(2) 1849*
தெற்கு வீதியிலுள்ள நாராயணப்பிள்ளைக்கு கோரோசனம் கரீதி செய்யத் தொகையைக் கொடுப்பது.

*(3) 1849*
ஸ்ரீமன் மங்களவாச ஸத்மத்தின் சாலாவின் மொயின் துகையில் கோட்டை, தெற்கு வீதியிலுள்ள ஸதாசிவ கேசவ தீக்ஷிதருடைய வீட்டைக் கரீதி செய்த வகையில் வரவு 50,000ரூ.

ஷை துகையை மராமத்து இலாகாவின் இரண்டு வண்டிகளிலேற்றி, கோட்டைக்கு வெளியே ஜோளி நாகோபா ஸ்வாமி அவர்களின் ஸமாதியில்.

ஷை உட்கார்ந்து சதாசிவ தீக்ஷிதரிடமுள்ள சாசனம் ஆதரவு வகையறாவை வாங்கி ஷை ஆதரவுகளை மங்கள வாஸத்தில் கொடுக்கப்பட் நக்கிறது.

**48.1846**
**(1)** ஸர்காருடைய ஜபம் வகையறாவைச் சேர்ந்த சைவ பீடத்தின் பூசை செய்கிற ஸப்தரிஷி சாஸ்திரிகளுக்கு மாதத்திற்கு ரூ. 3

**49.1846**
**(2)** ஸர்காருக்கு-முதல் தரமான தங்கக் குர்ணா பட்டைக்கட்டு தயார் செய்து கொடுக்க அட்வான்ஸ் ரூ. 10-0-0

**(3) 184**
நாகப்பட்டிணம்- வியாபாரி' இலக்ஷ்மிநாராயண செட்டி இடம் தங்கம் வாங்குவதற்கு ரூ. 1100-0-0

**(4) 1846**
ஷைவியாபாரியிடம்-தங்கம்-பவுன் காசு 178க்கு ரூ. 2102-10-0 கொடுக்கப்பட்டது.

**50 (1)** கோடிக்கரை முகாமில்-வேட்டையாடிப்பிடித்த புதிய மான்கள் ஸர்காரில் வந்து சேருவதற்குக் கூலி ஆட்கள் 3 பேருக்கு ரூ.2-8-0

**50 (2) 1846**
கொல்லன் அப்புசாமி மேஸ்திரி தங்கம் இரதத்தின் (தேர்) அடிப்பாறையையும் புதிய தேரின் பாறை வகையறாவுக்குக் கூட செய்து கொடுப்பதற்கு ஒப்புக் கொண்டு பெற்றுக்கொண்ட துகை 100ரூ.

**51.1846** கஜானாவின் கணக்கு

---

203. இது கீழராஜவீதியில் அரண்மனைக்கு எதிரேயுள்ளது. (பக்.189 அடிக்குறிப்பு 21)

# முட்டை எண்-112C

*94.1783*

*(1) தாலுகா-குளவாஸல்*[204] *மாகாணம்.*

*மணியம் சக்ரம்-3, எழுதுகிறவனுக்கு-2, வட்டம் மணியம்-3 அங்கமல்? 71/2 பணம், ஹவால்தார் 9-1 பணம், எழுதுகிறவருக்கு-2-7 1/4, காஸஜீக்கு 4-5, தஸ்தகார் 93/4 பணம்.*

*30.1769*

தேவஸ்தானம் திருவலஞ்சுழி-வெள்ளைப் பிள்ளையாருக்குத் தேர்த் திருநாளுக்குத் தேரிழுக்க *1070* பேர்கள்.

*43.1749* தேவஸ்தானம்-லாபம்-

*47.1796*

திருவாரூர்தியாகராஜ ஸ்வாமிக்குத் தேர்த் திருநாளுக்குத் தேரிழுக்க 5000 ஜனங்கள்

*49.1794*

திருவையார்-பஞ்சநதீஸ்வர ஸ்வாமி-தேருக்கு *2360* பேர்கள்

*57.1776*

தஞ்சாவூர்-பெரியகோவில் தேரிழுக்க-*3070* பேர்கள்

*54.1777*

தஞ்சாவூர் பிரஸன்ன வெங்கடேச ஸ்வாமிக்குத்[205] தேரிழுக்க 1800 பேர்கள்.

*128.1796*

திருவிடமருதூர்-தேர்த் திருநாளுக்குத் தேரிழுக்க-*6000* பேர்கள்.

*146.1798.*

*(6) 1 சுபைகள் 75,000 ரூ,* [206]*சுங்கம் 7,500 ரூ* நடுக்கரத்தொரை *4,000 ரூ* = *87,500* வரவு

*(7) 1762*

*1) சுபை*[207] -வேளாம் பத்து

*ரா.* துளஜா ராஜா சாஹேப்பின் பெயரால் சந்தை ஆரம்பிப்பதற்கு முகூர்த்தம் செய்ய பிள்ளையார் பூஜைக்கு 9 7/16 பணம்.

---

204. குளவாஸல் - குடவாசல் ஆகலாம்.

205. அய்யன்கடைவீதிக்கு அடுத்த உயர்ந்த மேடைப்பகுதியில் இருப்பது(பக்கம் 189 அடிக்குறிப்பு 27; பக்கம் 213 படத்தில் எண் 13)

206.சுங்கம் (பக்.140)

207. சுபை சில ஊர்களின் தொகுதி

2) துளஜேந்திர பட்டணம்[208] நிர்மாணம்செய்வதற்கு முகூர்த்தஞ் செய்யசக்ரம்13 -3/16 பணம்.

43.1777 சுபா-வேளாம்பத்து

அதிராம் பட்டணத்திய வியாபாரியின் கப்பலில் அரிசியை ஏற்றிக் கொழும்புக்குப் போயிருந்தது-திரும்பி வரும்பொழுது, கொட்டைப்பாக்கு ஏற்றி வரும்பொழுது காற்றினால் கப்பல் தத்தளித்து வரும்பொழுது, சுபையின் கதபரன்? 10 பேருக்கனுப்பி கப்பலைக் கொண்டு வரும்பொழுது பட்டுக்கோட்டை இராமனாதபுரம் தாலுகாவின் மணியகாரன் 4 துப்பாக்கிக் காவல்காரர்களை அனுப்பி, பண்ணையிலுள்ள படகோட்டியை அடித்து, பண்ணையை எடுத்துக்கொண்டு போக வேணுமென்று வந்தார். நாம் பண்ணையை விட்டு விடாமல் சம்புமகாதேவி பட்டிணத்தில் வைத்திருக்கிறோம். இராமனாதபுரம் கோட்டை பட்டுவின் துப்பாக்கிக்காரார்களும் இருக்கிறார்கள். பண்ணையின் மாலுமியைப் பிடித்துக் காவலில் வைத்திருக்கிறார்கள்.

இதைத்தவிர இராமனாதபுரத்திற்கு எழுதி அனுப்பியிருக்கிறது. கும்பனித் துப்பாக்கிக்காரர்கள் மருந்து குண்டுகளைக் கொண்டுவந்து, பண்ணையைப் பலவந்தமாகப் பிடித்துக்கொண்டு போகவேணுமென்று இராமனாதபுரத்திற்கு எழுதி அனுப்பியிருக்கிறது. அவர்கள் வந்து சச்சரவு செய்தால் நாம் அதற்கு என்ன செய்வது என்று தெரியவேணும்.

இந்தப்படிக்கு-உத்திரவாகி பண்ணை வந்து சேராவிட்டால் பட்டணத்தில் ஒருவரும் இருக்கமாட்டார்கள். இதற்கு உத்திரவாக வேணும். அறியவும்.

42.1823 அர்ஜீ

ஸேவகன் வல்லத்திற்குப் போகும் வழியிலும் குளத்திற்குச் சமீபம் சிவாலயத்தைக்கட்டி நந்தவனம் செய்து, கடை, வீடுகளைக்கட்டி புதிய ஊரை உண்டுபண்ணி, அதற்குச் சரபேந்திர புரம்[209] என்று பெயரிட்டு அன்னசத்திரம், துவாதசி கட்டளை[210], பிராமண போஜனமும் தண்ணீர்ப் பந்தலும் ஏற்படுத்தி, எப்பொழுதும் தருமம் நடக்கவேண்டுமென்று மா. தோட்டத்தைச் சேர்ந்த சம்புமகாதேவ பேட்டைத்தோட்டம்[211] வகையறா மேல்வெளி .....யைச் சேர்ந்த...... டிக்கு உத்திரவானதற்கு ஜாஸ்தி நிலங்களிருக்கின்றன வென்று ஸர்காரில் தெரிந்து (ஹர்காரையை) உத்யோகஸ்தரை அனுப்பி அளக்கும் பொழுது, அதிக நிலங்களை ஸர்காரில் தாகல் செய்தார்கள்.

---

208. துளஜேந்திர பட்டணம் கி.பி.1762 என்றிருப்பதால் துக்கோஜியின் பெயரால் இவ்வூர் அமைந்தது என்னலாம். துக்கோஜிக்குத் துளஜா என்றும் பெயருண்டு.

209. வல்லத்துக்குப்போகும் வழியில் சரபேந்திரபுரம்

210. துவாதசிகளில் கோயிலில் அந்தணர்க்குச் சோறிடல்

211. சம்புமகாதேவபேட்டைத் தோட்டம் - தொண்ணூற்று தோட்டங்கள் என்று சொல்லப்பெறுவதுண்டு. எனினும் 92 தோட்டங்கள் இருக்கும் இடம் ஒரு ஆவணத்திலுள்ளது. சம்பு மகாதேவபட்டணம் தோட்டம் அதில் குறிப்பிடப்பெறவில்லை. (பக்.507 -508 இணைப்பு I)

2) துளஜேந்திர பட்டணம்[208] நிர்மாணம் செய்வதற்கு முகூர்த்தஞ் செய்யசக்ரம் 13 -3/16 பணம்.

43.1777 சுபா-வேளாம்பத்து-

அதிராம் பட்டணத்திய வியாபாரியின் கப்பலில் அரிசியை ஏற்றிக் கொழும்புக்குப் போயிருந்தது-திரும்பி வரும்பொழுது, கொட்டைப்பாக்கு ஏற்றி வரும்பொழுது காற்றினால் கப்பல் தத்தளித்து வரும்பொழுது, சுபையின் கதபரன்? 10 பேருக்கனுப்பி கப்பலைக் கொண்டு வரும்பொழுது பட்டுக்கோட்டை இராமனாதபுரம் தாலுகாவின் மணியகாரன் 4 துப்பாக்கிக் காவல்காரர்களை அனுப்பி, பண்ணையிலுள்ள படகோட்டியை அடித்து, பண்ணையை எடுத்துக்கொண்டு போக வேணுமென்று வந்தார். நாம் பண்ணையை விட்டு விடாமல் சம்புமகாதேவி பட்டிணத்தில் வைத்திருக்கிறோம். இராமனாதபுரம் கோட்டை பட்டுவின் துப்பாக்கிக்காரார்களும் இருக்கிறார்கள். பண்ணையின் மாலுமியைப் பிடித்துக் காவலில் வைத்திருக்கிறார்கள்.

இதைத்தவிர இராமனாதபுரத்திற்கு எழுதி அனுப்பியிருக்கிறது. கும்பனித் துப்பாக்கிக்காரர்கள் மருந்து குண்டுகளைக் கொண்டுவந்து, பண்ணையைப் பலவந்தமாகப் பிடித்துக்கொண்டு போகவேணுமென்று இராமனாதபுரத்திற்கு எழுதி அனுப்பியிருக்கிறது. அவர்கள் வந்து சச்சரவு செய்தால் நாம் அதற்கு என்ன செய்வது என்று தெரியவேணும்.

இந்தப்படிக்கி-உத்திரவாகி பண்ணை வந்து சேராவிட்டால் பட்டணத்தில் ஒருவரும் இருக்கமாட்டார்கள். இதற்கு உத்திரவாக வேணும். அறியவும்.

42.1823 அர்ஜீ

ஸேவகன் வல்லத்திற்குப் போகும் வழியிலும் குளத்திற்குச் சமீபம் சிவாலயத்தைக்கட்டி நந்தவனம் செய்து, கடை, வீடுகளைக்கட்டி. புதிய ஊரை உண்டுபண்ணி, அதற்குச் சரபேந்திர புரம்[209] என்று பெயரிட்டு அன்னசத்திரம், துவாதசி கட்டளை[210], பிராமண போஜனமும் தண்ணீர்ப் பந்தலும் ஏற்படுத்தி, எப்பொழுதும் தருமம் நடக்கவேணுமென்று மா. தோட்டத்தைச் சேர்ந்த சம்புமகாதேவ பேட்டைத்தோட்டம்[211] வகையறா மேல்வெளி .....யைச் சேர்ந்த...... ஷிக்கு உத்திரவானதற்கு ஜாஸ்தி நிலங்களிருக்கின்றன வென்று ஸர்காரில் தெரிந்து (ஹர்காரையை) உத்யோகஸ்தரை அனுப்பி அளக்கும் பொழுது, அதிக நிலங்களை ஸர்காரில் தாகல் செய்தார்கள்.

---

208. துளஜேந்திர பட்டணம் கி.பி.1762 என்றிருப்பதால் துக்கோஜியின் பெயரால் இவ்வூர் அமைந்தது என்னலாம். துக்கோஜிக்குத் துளஜா என்றும் பெயருண்டு.

209. வல்லத்துக்குப்போகும் வழியில் சரபேந்திரபுரம்

210. துவாதசிகளில் கோயிலில் அந்தணர்க்குச் சோறிடல்

211. சம்புமகாதேவபேட்டைத் தோட்டம் - தொண்ணூற்று தோட்டங்கள் என்று சொல்லப்பெறுவதுண்டு. எனினும் 92 தோட்டங்கள் இருக்கும் இடம் ஒரு ஆவணத்திலுள்ளது. சம்பு மகாதேவபட்டணம் தோட்டம் அதில் குறிப்பிடப்பெறவில்லை (பக்.507 -508 இணைப்பு I)

படகுகளைச் செய்வித்தார். அதற்குச் சர்காரின் கரயாரானவன்[219] நாகூர் நாகப்பட்டிணத்திற்கு வந்து முக்கியமான சாமான்களை, ஆணி, பலகைகள் வகையறா படகுக்கு வேண்டியவைகளை வாங்கி, கோடிக்கரைக்கு அனுப்பும்படியான உத்திரவின்படி சரியான சாமான் வாங்கினதும் இங்குள்ள சுங்கக்காரன் தடை செய்யாமல் கோடிக்கரைக்குப் போய்ச் சேரும்படி ஜாக்கிரதை செய்கிறேன்.

(2) 1811 சர்காருடைய தபால்காரனுடன் இரவில் காவல்காரனுடைய ஆள் போகுவது வழக்கம். அந்தப்படி அந்தந்தத் தாலுகாகளுக்கு உத்தரவு கும்பனியில் கூலி கொடுத்தால் மாய்வரம் தாலுகாவின் தாசீல்தார் மிஸ்தருக்கு அர்ஜி எழுதினதில்-வலத்தொரையின் காவல்காரன் சம்பளஞ்செய்து கொடுத்தால் தபால்காரனுடன் ஆளைக் கொடுக்கிறேன். இல்லாவிடில் தன்னால் முடியாதென்கிறான் என்று எழுதியிருக்கிறது.

**63.1808**

வீரகரவாலினீ[220] என்று முத்திரை போடப்பட்டிருக்கிறது.

20 (2) தோட்டத்தில் கொத்துவெட்டு வேலைக்கு மெக்யாடு மனுஷனுக்கு கஞ்சிக்கு ஆஸாமி ஒன்றுக்கு 3/16 அரிசியும்-1/16 கொள்ளும் கொடுக்கிறது.

**21.1776**

(1) ஹுஜூரின்[221] சிலவுக்காக 2000 பரங்கிப்பேட்டை வராகன்[222]

(2) 12 அல்லாக்களைச் செய்வதற்குத் தங்கம் பெள்ளல்[223] சக்ரம் 321-3 1/2 பணம்.

2 அல்லாவுக்கு ஒன்றுக்கு 1/2 சேர் வீதம்-1 சேர்

2 குடைக்கு ஒன்றுக்கு 1/4 சேர் வீதம்-1/2 சேர்

விராகன் ஒன்றுக்கு 2 1/2 1 3/4- 1/2 வீதம் வாங்குவதற்குச் சேர்- 1 1/2 வெள்ளி அல்லா-தங்கம் முலாம் வீதம் இதற்கு 10 அல்லாவுக்கு ஒன்றுக்கு சேர்1/4 வீதம் 2 1/2 சேர். முலாம் செய்வதற்குத் தங்கம் ரேக்கு-முலாமின் இடை. இதற்கு 2 தோலா வெள்ளி சேர் ஒன்றுக்கு 16-4 சக்ரம் வீதம் வாங்குவதற்குச் சக்ரம் 41 1/16 பணம் மூலாமின் ரேக்கு தோலா ஒன்றுக்கு-10-4 1/2 பணம் வீதம் சக்ரம் 20-8 பணம் கூலி 4 1/2 சக்ரம்.

**22-1776**

(1) ஹுஜூரின்[224] வீணையின் தந்தியை வாங்கிக் கொடுத்தற்கு பரங்கிப்பேட்டை வராகன் சுமார் 8

219. கரயான் - கடற்கரைப் பக்கத்துவாழும் வலைஞன்.

220. வீரகரவாலினீ - இது அரசாங்க முத்திரையாகும் (பக்.366)

221. ஹுஜூர் என்றது இரண்டாம் துளஜாவை.

222. பரங்கிப்பேட்டை வராகன் மதிப்பு, சக்கரம் 2 - 8 பணம் ஆகும் (பக். 151).

223. தங்கம் பெள்ளல் - துளைப்பொன்-தூயபொன்.

224. கி. பி. 1776 என்றுள்ளமையின் இங்கு ஹுஜூர் என்பது இரண்டாம் துளஜாவைக் குறிக்கும்.

(2) 1776
அடிசேரிக்குப் பழைய சம்பாநெல்லு பணத்திற்கு 4 1/2 படி வீதம்

23.1776
(1) தஞ்சாவூரின் கோட்டையையும் தேசத்தையுங் காப்பாற்ற கும்பனியின் ஆங்கிலேயச் சேனைகளுக்குச் சிலவுக்கு வருஷத்திற்கு 4 லக்ஷம் (Phuli) விராகன் கொடுப்பதாக ஒப்புக்கொண்டு[225] லாட்பிகட் பாஹத்[226] தரின் பெயரால் கடிதம் எழுதிக் கொடுத்த வகையில்........ ஹுண்டி[227] செய்து சென்னப்பட்டணத்திற்கு கௌர்[228] பேரிடத்தில் சக்ரம் 50,000 அனுப்பினது.

(2) 17776
அணைக்கட்டு-அமரசிங்கு லாலா-திருவையார் சுபையைச் சேர்ந்த 10,000 சக்ரம் அணைகட்டும் வேலைக்குக் கொடுக்கும்படி உத்திரவாக வேணும்.

24.1776
(1) மஹாராஜாவிடம்[229] -சந்தான கோபால கிருஷ்ண ஜபத்திற்காக[230] -பூஜைசாமான் தக்ஷிணை வகையறா-2வது மண்டலத்திற்கு 45 நாட்களுக்கு 54 சக்ரம் நாளொன்றுக்கு 12 பணம் வீதம்.

(2) ஆயுதசாலை[231] -ரா. அமரசிங்கு போஸலே[232] அவர்களுக்குக் குதிரைக்குப் புதிய சேணம் செய்வதற்குச் சக்ரம் 7 பணம் 4

58.1777
(1) தஞ்சாவூரிவிருந்து சௌ. ராஜகுமராம்பாயி[233] சாயேப் அவர்கள் அக்கிரஹாரம் கட்டுவதற்காக வந்தபொழுது கூடவந்த குதிரைக்கு (சுட்விங்க்) தீனி சிலவு. 1 1/8 பணம்.

---

225. இரண்டாம் துளஜா ஆட்சியை ஆங்கிலேயர் தயவால் பெற்றுக்கொண்ட பொழுது ஒரு ஒப்பந்தம் செய்துகொண்டார். அதன்படி தஞ்சைக்கோட்டையில் ஓராங்கிலப்படை இருக்கலாம்; அப்படையின் செலவுக்காக ஆண்டுதோறும் 4 லக்ஷம் ஆங்கிலேயருக்குக் கொடுக்க வேண்டியதாயிற்று. (பக். 49 – 50).

226. லார்டு பிகட் (Lord pigot) சென்னைக்கவர்னராக இருமுறை இருந்தார்(பக்கம் 60-61). பாஹத்தர்-பஹதூர்.

227. ஹுண்டி - காசோலை (cheque)

228. கௌர் - கவர்னர்

229. கி.பி.1776 என்றிருத்தலின் மஹாராஜா என்பது இரண்டாம் துளஜாவை குறிக்கும்.

230. இரண்டாம் துளஜா மூன்றுபேரை மணந்தபோதிலும் குழந்தைகள் இல்லை. ஆகவே மகப்பேற்றுக்காகச் சந்தான கோபால கிருஷ்ண மந்திரம் ஜபம் செய்விக்கப்பெற்றது. (பக். 364).

231. ஆயுதசாலை - ஜிராத்கானா (பக். 455).

232. அமரசிங்கு போசலே என்பவர் துளஜாவுக்குப்பிறகு ஆட்சி எய்திய அமர்சிங்கு ஆவர்.

233. ராஜகுமாராம்பாயி இரண்டாம் துளஜாவின் மனைவி(போ.வ.ச.பக்.109) இச்சத்திரம் மீமிசல் என்ற ஊரில் இருந்தது (பக். 270).

59 1776

ரா. பாபா ஸ்வாமியாருடைய குமாரர் ரா. இராமஸ்வாமியாருக்கு 100 கலம் 20 சக்ரம் வீதம் 3000 கலத்திற்கு 600 கொடுப்பது.

66 1777

(1) ஸ்ரீராம் நவமி[234] உற்சவத்திற்காக நல்லெண்ணை தோண்டி 15க்கு தோண்டி[235] ஒன்றுக்கு 4 சக்ரம் வீதம் 60 சக்ரம்

(2) 1777

பச்சரிசி படி 12க்கு பணம் ஒன்றுக்கு 4 3/4 படி வீதம் 3 5/8 பணம்.

துவரம் பருப்பு 2 1/2 படிக்கு- 1 பணம், நெய் 2 1/2 சேருக்கு- 2 பணம், வெண்ணை 5 சேருக்கு- 2 7/8 பணம்

7•1777

(1) பட்டுக்கோட்டை-கடதங்குடி சேஷப்பய்யாவுக்கும் கும்பேரய்யாவுக்கும் அபராதம்,கெரந்தை குருமூர்த்தியின் மருமகனை வரிப்பணத்திற்குத் தர்மாஸனம்[236] ராமய்யா அடித்ததால் பிராமணனுக்குள்ள மரியாதைக் குறைவு ஏற்பட்டது என்று நாமிருவரும் சேர்ந்த அந்த ஊராரை எல்லோரையும் சேர்த்துக்கொண்டு பந்தக்கட்டு[237] செய்து ஊர் வேண்டியதில்லை. வரியின் துகையைக்கூட கொடுக்க வேண்டியதில்லை என்று, பட்டுக்கோட்டை துரையினிடம் வந்து தஞ்சாவூருக்குப் போகிறோமென்று சொன்ன குற்றத்திற்காக-
குபேரய்யா 3 பணம், சேஷப்பய்யா 3 பணம் = 6 பணம்.

7. 1777

(2) சௌ. இராஜகுமாரம்பாயி சாஹேப் அவர்கள் இராஜகுமாரம்பாபுரம் சத்திரத்திற்கருகில் அக்கிரஹாரம் கட்டினதற்குப் பாக்கி சக்ரம் 1798-8-3

(3) இனாம் சிலவு-பட்டுக்கோட்டை சுபா. இராமனாத் ஹஸேம் மஹாராஜ ஸமுத்திரத்திலிருந்த காட்டுப்புலியைக் கொன்றதற்கு இனாம் முண்டாசு 1-க்கு சக்ரம்-3

28.1777

(1) பண்டார சன்னதி ஊருக்குப் பக்கத்தில் யேனேந்தல் அரசப்பெருமா யேந்தல் 2க்கு சக்கரம் 1-9 பணம்.

---

234. ஸ்ரீராமநவமி - இராமர் அவதரித்த நாள் ஆகிய சைத்ர சுக்கிலபக்ஷத்து(வளர்பிறை) நவமி (ஒன்பதாம்நாள்)

235. தோண்டி - 64 சேர் கொண்ட முகத்தலளவை.

236. தர்மாஸனம் - நீதிமன்றம்

237. பந்தக்கட்டு - சதியாலோசனை

*(2) கொத்தங்குடியிலிருக்கும் ஆவடையானின் பெண்கள் திருட்டுக் குறத்தியினிடமிருந்து நகைகளை வாங்கினதற்காக அபராதம் சக்ரம் 1-2 பணம்.*

***15.1845***

*(1) பியானா என்னும் வாத்தியத்தைச் செப்பனிட மனவேல் நேபராயி என்பவர் கும்பகோணத்திற்குப் போகுவதால் அவருடன் செல்லும் லாயத்தின் 2 மாடுகளுக்குத் தீனி கொள்ளும், தவிடும் கொடுக்கிறது.*

***42.1825***

*(1) ரிஜஸ்தரின் சுருள் ஒன்றுக்கு 5 1/8 பணம்.*

*49 (1) ஹுஜுர் மாடியின் மேல், மேல்மாடியில் 2-வது அங்கணம் கட்டுவதற்கு முகூர்த்தஞ் செய்யும் பொழுது தம்பதி பூசைக்கு[238] ரூ.15.*

## முட்டை எண் 114C

***84.1842***

*ஸர்காருக்கு ஆங்கிலேய ஜான்சன் டிக்ஷனரி (அகராதி) 3 வாங்கினதற்கு[239] கும்பனி ரூ. 7-8-0 கொடுத்திருக்கிறது.*

***86.1842***

*(1) யுத்தசாலை, ஸேனா துரந்தர் ரா. கங்காதர் ரகுமாஜி-சால[240] என்னும் மரத்தின் தடிகள்4-க்கு செப்புக்குழாயின் மேலும் தடியின் பிடிக்கும் ஹுஜுருடைய[241] கொடி ஒன்றுக்கும் கூட தங்கம் கிலிட் கொடுப்பதற்கு-பெள்ளல் தங்கம் 23 தோலா வாங்கினதற்கு 256 சக்ரம் கொடுத்திருக்கிறார்கள்.*

*(2) வடக்கு வாசலிலுள்ள கோழிகள் வைக்கும் அறை விழுந்து போயிருக்கிறதற்கும், வாசலின் கதவுகளைச் செப்பனிடுவதற்கும் தளவாடம் வகையறா சிலவு ரூ.10*

*(3) முஜாதலி மலங்க பக்கீரிடம் வாங்கின ஐந்துவர்ணக்கிளி வகையறாவை ஷெ பக்கீர் நாகூர் நாகப்பட்டணத்திலிருந்து தூக்கிக்கொண்டு வந்த ஆளுக்கு ரூ.3*

***93.1842***

*(1) கவீஸ்வர ஜனங்களின்[242] கூட்டத்திற்கு ரூ.63*

---

238. தம்பதிபூசை - பார்வதி பரமேசுவரராக வரித்துத் தம்பதிகளுக்குச் செய்யும் பூசை.

239. கி.பி.1852இல் சிவாஜியால் வாங்கப்பெற்றனவாதல் வேண்டும். ஆனால் இரண்டாம் சரபோஜி காலத்திலும் 1829இல் வாங்கப்பெற்றன என்று தெரிகிறது (பக். 253).

240. சாலமரம் - ஆச்சாமரம்

241. இங்கு ஹுஜுர் என்றது இரண்டாம் சிவாஜியை

242. கவீஸ்வர ஜனங்கள் - கவிஞர்கள்

*112-1842*
மேரு ஸ்வாமியார்[243] மடத்திற்கு ஸ்ரீராமநவமிக்காக ரூ. 306-4-0

*116-1849*
(1) மதுரை மீனாக்ஷி அம்மனுக்குக் கும்பாபிஷேகம் வகையறாவுக்காக ரூ.2030

(2) குஜலி-இராமநாத பட்டரின் மூலமாக ஸர்காருக்குத் திருவையாறிலுள்ள மண்டபமும் விண்ணாற்றங்கரை மண்டபம், படித்துறை, பங்களா வகையறாக்களை வாங்குவதற்கு ரூ. 6000

(3) ஐரோப்பிய தருமப் பள்ளிக்கூடத்திற்கு ரூ. 125

116 (4) 1849 ஐரோப்பிய பென்சின்காரர்கள் வகையறாவின் பெண்கள் படிப்பதற்காக நீலகிரியில் ஒரு தருமப் பள்ளிக்கூடத்திற்காக ரூ. 125

(5) ரா. முத்தோஜி கோவிந்தராவிடம் (பெரிய அண்ணா)[244] பக்ஷிகள் வாங்குவதற்காக ரூ. 100 ஒரு மாதத்திற்கு.

1849 கும்பகோணம் ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீசங்கராசார்ய ஸ்ரீசந்திரசேகர ஸரஸ்வதி ஸ்வாமி அவர்கள் சமாதி ஆகும் பொழுது அந்த பீடத்திற்கு அவர்களுடைய சிஷ்யரான ஸ்ரீசங்கராசார்ய ஸ்ரீமகாதேவேந்திர ஸரஸ்வதி ஸ்வாமி அவர்களுக்குப் பட்டங்கட்டினதற்காகப்[245] பாதகாணிக்கை.

*117.1771*
(2) நவாப்பின்[246] தர்பார் செலவிற்காக ரூ. 2000, (3) கோரன்தோருக்கு[247] செலவிற்காக ரூ. 100, 2வது Captainக்கு ரூ. 100, மிஸ்தர் த்ரேஸ் ரூ. 50, கோரந்தோருக்கும் 2வது Captionக்கும் பதக்கம்ரூ. 400, இதைத்தவிர ஸம்பாஜி திரியம்பகருக்கு இரண்டு மாதச் சம்பளம் ரூ. 281-12-0

(4) மகமூமலிகான் ரூ. 285, குலர்மலிகான் ரூ 85

*117-1771*
(5) நவாப்புக்குக் கொடுக்க வேண்டியதற்காக மிஸ்தர் ஜீம்ஸ்ஹேவ், மிஸ்தர் காஸ்மேஜர் இவர் மூலமாக ஹூண்டி தயார் செய்து அனுப்பின தொகை ரூ. 6,50,000

---

243. மேருசுவாமியார் மடம் - இது மன்னார்குடியில் இருப்பது. சிவாஜியின் ஞானாசிரியர் சமர்த்த ராமதாஸ் சுவாமிகள் ஆவர். இவர் தஞ்சைக்கு வந்து திரும்பிச் சென்றபொழுது பீமராஜ், ராகவர், ஆனந்தமௌனி என்ற மூவரைத் தஞ்சையில் விட்டுச்சென்றார். ஆனந்தமௌனியின் மாணாக்கர் மேருசுவாமி. இவர் மன்னார்குடியில் அமைத்தது மேருஸ்வாமி மடம் (பக். 438).

244. பெரிய அண்ணா - இவரும் சின்ன அண்ணா என்பவரும் இரண்டாம் சிவாஜி காலத்திலும் அவர்க்குப் பின்னரும் பெரிய அலுவலில் இருந்தவர் ஆவர். (பக். 81).

245. ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதிகள் பிரதாபசிங்கர் காலத்திலிருந்து கும்பகோணம் டபீர் அக்கிரகார மடத்தில் தங்கியிருந்தார். கி.பி.1850இல் ஸ்ரீசந்திர சேகரேந்திர சரசுவதி சித்தியடைந்தார் என்று தெரிகிறது. (பக். 435).

246. நவாபு - முகம்மதலிகான்; நவாபின் தர்பார் செலவுக்குக் கொடுத்தவர் இரண்டாம் துளஜா ஆவர்.

247. கொரந்தோர் - கவர்னர்.

*118.1854 ஞாபகார்த்தம்*
*(1) விலியம் ரௌல் (வைத்தியர்)ரூ. 620, அல்லாப் பண்டிகைக்கு 165*
*ஸ்ரீகாசிக்குப் போய்வந்த ஜனங்களில் ஸ்ரீராமசந்திராவ் காட்கே 12-8-0*
*டபீர் பண்டிதாரின்[248] தருமத்தின் தொகை 3500, கோவிலுக்கு 2700 ரூ.*

*(2) ஸர்காரின் உத்திரவு-முகாம் தஞ்சாவூர் கோட்டை பாதிரியினிடமிருக்கும் ஜனங்களுக்குச் சாப்பாட்டுக்கும் மேல் சாமான்களுக்கும் மாதமொன்றுக்கும் 100 கலம் நெல்வீதம் 1852 ஜூலை ஸ்ரீ 1 ௳ முதல் ஒரு வருஷத்திற்கு 1200 கலம் கொடுத்து வரவும்.*

*119.1807 மூத்த ஆவுசாகேப்[249] உத்திரவு -*

*(1) முகாம்-திருவையார்*
*(1) விதிபாதமான[250] இரண்டாம் நாள் பிரஸாதம் கொடுக்க வந்த தம்பிரானுக்கும்[251] ஹேஜீபுக்கும்[252] பிராமணருக்கும் 5 விடையம்[253] சாலையிலிருந்து கொடுக்கிறது.*

*(2) 1807*

*யானைசாலை-பட்டாபிராம் என்னும் யானைக்குக் கொடுத்துவரும் வழக்கப்படி அரிசி 2 படி, வெல்லம்- 1/2 சேர், நெய் - 1/2 சேர், தற்போது அரிசி ஒருபடியை ஜாஸ்தி கொடுக்கிறது.*

*120.1793 ஜூலை 19௳*
*ஜயிலிலுள்ள ஆஸாமிகளின் ஜாபிதாவும் அவர்கள் கொடுக்க வேண்டிய பாக்கிக்கும் கணக்கு ஒரு பணத்திற்கு 32 காசு.*

## முட்டை எண் 115C

*1. 1747*
*கடப்புகார்[254] ஜமாபந்திக் கணக்குகள்*
*26.1808*
*47 காசுக்கு டக்கே[255] -0-15-11ரூ.*

---

248. டபீர்பண்டிதர்—பக்கம் 77-78.

249. இரண்டாம் சரபோஜியின் முதல்மனைவி யமுனாபாயி (போவ.ச.பக்.134).

250. விதிபாதம் - வியாதிபாதம்

251. தம்பிரான் என்பது திருவையாறு திருக்கோயில் மேற்பார்வை செய்த தருமபுர ஆதீனத்தம்பிரான் ஆகக்கூடும்.

252. ஹேஜீபு - கணக்குப்பிள்ளை (பக். 76).

253. விடையம் -பாக்குடன் கூடிய வெற்றிலை மடிப்பு

254. கடப்புகார் - கடப்பநெல் - குறுவை வகை.

255. டக்கே ஒரு சிறு நாணயம்; இதில் 48இல் ஒரு பங்கு ருக்கே எனப்படும் இங்குக் கொடுத்த கணக்கு விளங்கவில்லை. (பக். 157).

*29.1808*

*ஆங்கிலேய வாத்தியக்காரனுக்குச் சக்ரம் 490-1-0*

*(1) 1807*

சில்லரை நாணயம் பாக்கி-

*271 மரவஞ்சுளி[256],3 பணம்-1 1/2 தளப்படி செப்பு சக்ரம் 2-1-பணம், 7 பணம் தரங்கம்பாடி* வெள்ளிப்பணம்[257], *பெரிது 1க்கு -1/2 சக்கரம், சின்னது 1க்கு- 2 பணம் = 7 பணம்*
*7 பணம் வடயார்பாளி[258] பணம், 3 பணம் கட்டிராயி பணம், 3 பணம் தங்கம் திருவையார் பணம், 3 பணம் வெங்கலம் பணம் புதுச்சேரி சின்னது, 1 பணம் களீ பணம் புதுச்சேரி சின்னது, 7 பணம் அரியலூர் கட்டி பணம் தளப்படி, 4 பணம் சா–2 பணம் = 7 பணம்.*

*(2) சென்னப்பட்டணம் -நாணயம்-வரவு-490 சிலவு 490, போகபாக்கி-0,*

*தினசுவாரி செப்பு நாணயங்கள் பாக்கி, 5 புதுச்சேரியின், 40 நாகப்பட்டினம் ஜெல்லி/, 60 அரியலூர் துட்டு/, 376 1/2 செல்லாத பழைய முத்திரை இல்லாத சின்னது பெரிது கூட*

*46.1844*

*நான்கு நியாய ஸபைகளில்[259] விசாரணை செய்யும் பிறாதுகள்*

*(1) 1845 Jan*

பொய் ஸாக்ஷி சொன்னவனுக்குச் செய்த தண்டனை விவரம்

*அந்தப் பிரதிவாதியின் குற்றத்திற்கு-அவனுக்குக் காலில் விலங்குபோட்டு ஒரு வருஷம் வரையில் அவனிடமிருந்து மராமரத்தின்[260] வேலைகளை வாங்கி வருகிறது என்றும், பின்பு விடுதலை செய்கிற நேரத்தில் அவனைத் தண்டோராவுடன் 4 வீதிகளில் சுற்ற வைத்து, அவனுடைய முழங்காலுக்குக் கீழே பிரம்பால் 6 அடிகள் வீதம் ஒவ்வொரு வீதிக்கும் அடித்து விட்டு விடுகிறது.*

*ஷெ ஸாக்ஷிக்காரனுடைய குற்றத்திற்காக அவன் காலில் விலங்கு போட்டு, ஆறு மாதம் வரையில் மராமரத்தின் வேலைகளை வாங்கிப் பின்பு அவனைத் தண்டோராவுடன் 4 வீதிகளிலும் சுற்றி வைத்து ஒவ்வொரு வீதிக்கும் அவனுடைய முழங்காலுக்கடியில் பிரம்பால்*

---

256. மரவஞ்சுளி என்பது யாது என்று தெரிய வாய்ப்பில்லை.

257. பிரதாபசிங்கர் காலத்தில் தரங்கம்பாடியில் நாணயங்கள் செய்யும் தொழிற் சாலையிருந்தது என்று தெரிகிறது. அங்கு செய்த வெள்ளிப்பணம் பெரியது 1/2 சக்ரம். சிறியது 2 பணம் என்றதனால் தெரியலாம் (பக். 158).

258. வடயார்பாளி - உடையார்பாளையம் ஆகலாம்.

259. நான்கு நியாய சபைகள்: முத்திரித சபை, தரும சபை, நியாய சபை, நியாயாதீச சபை (பக். 167).

260. மராமத்தின் - மராமத்து - பழுதுபார்த்தல்.

*3 அடிகள் வீதம் அடித்து விட்டு விடுகிறது. நல்லதென்றும் தோன்றுகிறதென்று தெரிவித்திருப்பதால் மேற்கண்டபடி தண்டனை செய்வதென்று....... உத்திரவிடுகிறார். கோட்டை, தஞ்சாவூர்.*

***(2) 1845***
***100 சக்ரத்திற்கு மேலுள்ள வியாஜ்யங்களைத் தரும சபையில் தீர்ப்பது என்று தீர்ந்திருக்கிறது.***

## மூட்டை எண் 116C

***1. 1826***
***1. வேதசாலையின் சமயல்காரனுக்குக் கொடுக்க வேண்டிய பாக்கித்துகையைக் கொடுக்கிறது.***

***2. 1826***
*ரா. திவான்சாஹேப்[261]- வேதமூர்த்தி ரா. பாளம்பட்டுப் பட்டுகோசாமியார்[262] வீட்டுக்கு விருந்துக்குச் சென்றபொழுது ஆரத்திசெய்த பெண்களுக்கு இனாம் ரூ.24,வீட்டுப் பெண்களுக்கு 130. அண்டின நாகப்பட்டுகோசாமி அவர்களின் சம்சாரத்திற்கு ரூ.100, குமாரத்திக்கு ரூ.30 = 130 வட்டாரத்திலுள்ள வீட்டுப்பெண்கள் 13 பேருக்கு ஒருவருக்கு ரூ. 5 வீதம் 65 ரூ. ஆக ரூ. 219.*

***4. 1827 மராமத்து இலாகா[263] பழைய சிவகங்கைக் குளத்தின் வேலைக்குத் தளவாடம் கூலி வகையறாவுக்கு 1000 சக்ரம்.***

***6. 1. சிவன்கோட்டையில் சிவகங்கையின்***

***1827. தென்கரையில் கிருஷ்ணசாமி செய்த யாகஞ்செய்ததற்காகப் பிராமண போஜனத்திற்குச் சிலவு-***

***8. 1818***
*ரா. திவான் சாஹேப்[264] குதிரையின் மேல் ஏறினதற்காக ஸ்ரீபஞ்சநத ஸ்வாமிக்கு[265] தக்ஷிணை 5 பணம்.*

***26,1818***
*வெள்ளப்பிள்ளையாருக்குத்[266] தாழம்பு அர்ச்சனை செய்ததற்குத் தக்ஷிணை 1 பணம்.*

---

261. திவான் சாஹேப் - இரண்டாம் சரபோஜி
262. பட்கோசுவாமி - இவர் அரசகுரு; இவரும் இவர் மகனும் இசையிலும் வல்லவர் ஆவர். இவருக்கு ஐந்து கிராமங்கள் சர்வமானியமாகத் தரப்பெற்றன.

263. மராமத்து இலாகா - இமாரதி மஹால் (பக். 453).

264. திவான்சாஹேப் - இரண்டாம் சரபோஜி

265. ஸ்ரீபஞ்சநத சுவாமி - திருவையாற்றில் கோயில் கொண்டுள்ள ஐயாறப்பர்.

266. வெள்ளைப்பிள்ளையார் - இவர் கோயில் தஞ்சைப் பெரிய கோட்டை கீழ வாயிலில் உள்ளது. பக்கம் 213இல் *26) (பக். 189).

*12,1813*

ஹுஜுர் மஹாலில் புதிய பஞ்சாங்கமும் காகிதம் வேண்டிய சாமான்களுக்கும் விபரம் பாளங்கோடி காகிதம் தஸ்தா-45, சிகப்பு திரித்தபட்டு விராகனிடை-1, நல்லெண்ணை சேர்-1, பால்-2, கோதும்பை படி-1 1/2.

*13.1813*

1. தருமஸபை, முத்திரித ஸபை, பிரதிஷ்டித[267] ஸபை இவைகளில் 20 வருஷத்திற்கு முன்புள்ள வீட்டு வியாஜ்யங்களை விசாரிக்க வேண்டியதில்லையாம். இப்பொழுது உள்ளவைகளை விசாரணை செய்கிறது.

*1813*

(2) வைத்தியர் அப்துல்காதிர் மீராகான் அவர்களுடைய இடக்கைக்குத் திருஷ்டியினால் (தோஷத்தினால்) கெடுதல் ஏற்பட்டிருப்பதால் திண்டுக்கல்லுக்குப் போய் பக்கீரிடம் மந்திரித்துக்கொண்டு அனுகூலஞ் செய்து கொள்வதற்கு 30 நாட்களுக்கு விடுமுறை குடுக்க வேணும்.

*16-1813*

(1) வண்டி மகாலில்[268] 2 மாடுகளுக்கு இளைப்பாற (கைப்பான் கொடுப்பதற்கு) வெல்லம் சேர் - 1 1/2, மிளகு - 12 டாங்க்[269], வெங்காயம் - சேர் 1, சுக்கு - 9 டாங்க்

*17-1816*

1. தஞ்சாவூர் கோட்டை-பாராவுக்குக் கொட்டியத்திலிருந்து[270] எண்ணை கொடுப்பதற்கு விவரம்

பெரிய கோட்டைப்பாரா 4க்கு சேர் 2 1/2, அரபு கோட்டைப்பாரா 2க்கு 1 1/4 9 டாங்க்
சிவன் கோட்டைப்பாரா 3க்கு 3/4 சேர், காவளே சௌளூதியில் 13 1/2 டாங்க்
கோட்டையில் சேர் -1, புதிய அரண்மனையில் -9 டாங்க் ஆக 3 1/2 சேர்[271]

---

267. தருமசபை - இதுபெரிய சபை; பெரிய வழக்குகள் விசாரிக்கப்படும்; முத்திரிதசபை - சிறிய வழக்குகள் விசாரிக்கப்பெறும். பிரதிஷ்டித சபையில் எல்லா வழக்குகளும் விசாரிக்கப்பெறும். எனினும் மற்ற நான்கு சபைகளின் சட்ட ஆட்சி எல்லைக்குள் வாராதவை பிரதிஷ்டித சபையில் விசாரிக்கப்பெறும் என்று தெரிகிறது (பக். 168).

268. வண்டி மஹால் - இது தட்டி மஹால் எனப்பெறும் (பக். 453–457).

269. டாங்க் - ஒரு சிறிய எடை; 3 டாங்க் ஒரு தோலா என்று தெரிகிறது தங்கம் எடைபோடுவதற்கும் டாங்க் பயன்பட்டதெனத் தெரிகிறது. (பக். 165).

270. கொட்டியம் - சரக்கறை

271. 3 1/2 சேர் என்ற கூட்டல் தவறு; ஆகையால் டாங்கின் மதிப்பு இதனால் தெரிவதற்கில்லை.

கீழவாசல்

*வாசல் 2க்கு 3 சேர், காவளே சௌகியில்[272] -13 1/2 டாங்க்*
*தர்ஜீரா மண்டபம் -1/4 சேர் 9 டாங்க், கோட்டையில் -1/2 சேர் 3 1/2 டாங்க் ஆக 4 சேர்[273]*

வடக்குவாசல்

*வாசல் 2க்கு சேர் 2*
*காவளே சௌகியில் 13 1/2 டாங்க், 1/2 சேர், கொத்தவால் சௌகி 1 1/4 9 டாங்க்*

*17.1816*
*1. கோட்டையில் -1/4 சேர் 13 1/2 டாங்க், ஹனுமாருக்கு 9 டாங்க் ஆக 4 1/2சேர் 9 டாங்க்[274]*
*ரோந்து 2க்கு சேர் 1 1/2, பாரா–சாவடியில் சேர் 1/4, கண்டேறாயரின்[275] கழிக்கு சேர் 1/4*
*ஹுஸேனி சேர் 1/2, ஹஜாரியில் பந்தத்திற்கு சேர் 1/2,*
*சிவாஜி ஹவால்தார் திட்டியில் 1/4 9 டாங்க், மணி அடிக்கும் எத்திக்கட்டிக்கு[276] 19 சேர்*
*இராஜகோபால கோவில் 4 1/2 டாங்க், கோட்டையின் மேல் 5க்கு 1 1/4 சேர்*
*= 1/2 மனு 1 சேர் 4 1/2 மனு 1/2 சேர்*

*18.1813*
*1. முனிஸிபாலிடியில் வண்டிகளுக்குக் கீல் (தார்) செய்து போடுவதற்குக் கொட்டியத்திலிருந்து ஆமணக்கு படி-5, விளக்கெண்ணை 3 சேர்*

*2.வெடிமருந்து சாலை[277]*

*உப்புக் காச்சுவதற்கு ஆயுதசாலை[278]யிலிருந்து பழய ஹண்டா கெட்டுப் போனதை வாங்கிக் கொண்டு புதிய ஹண்டாவைக் கொடுக்கிறது. வண்டி மகாலிலிருந்து விறகு 20 கண்டி[279] கொடுக்கிறது.*

---

272. சௌகி - சவுக்கை - சுங்கச்சாவடி ; காவற்கூடம்.

273. இதனாலும் டாங்கின் எடை நன்கு புலப்படவில்லை.

274. இதனால் 1 தோலா என்பது 3 டாங்க் என்பது உறுதிபெறுகிறது. இதில் டாங்க் 45 உள்ளன; 45 டாங்க் -1/2 சேர் 9 டாங்க் என்று தெரிகிறது. 1/2 சேர்-12 தோலா -36 டாங்க். எனவே 45 டாங்க்-1/2 சேர் 9 டாங்க்.

275. கண்டேராயர் - மராட்டியரின் குல தெய்வம் (பக். 348).

276. எத்திக்கட்டி - எடுத்துக்கட்டி- சுவரின் மேற்பகுதி

277. வெடிமருந்து சாலை - இது தாரு கானா எனப்பட்டது.

278. ஆயுத சாலை - ஜிராத் கானா எனப்பட்டது.

279. கண்டி - 20 மணங்கு; பாரம் என்னும் நிறையளவு

*19.1813*

*(1) கன்றுக்குட்டிக்கு மாந்தமென்னும் ரோகத்திற்கு மருந்துக்கு கால்சேர் சுக்கு கொட்டியத்திலிருந்து கொடுக்கிறது.*

*(2) ஆரோக்ய மசாலாவின் ஜாபிதாபடி பாபு வைத்தியரிடம் கொடுக்கிறது*

*சுக்கு-9 டாங்க், கண்டத்திப்பிலி- 9 டாங்க்,மிளகு- 13 1/2 டாங்க், மரமஞ்சள்- 9 டாங்க்,க(ர்)ச்சூர்[280] 9 டாங்க், சன்ன இலவங்கப்பட்டை- 9 டாங்க்,மல்லி- 9 டாங்க், நாககேசுரம் (சிறுநாகப்பூ) - 9 டாங்க்,பெருஞ்சீரகம்- 4 1/2 டாங்க், முதல்தரமான ந. எண்ணை 3 சேர்*

*19.1813*

*(3) குடியானவனுடைய பெண் தட்டிமாலில்[281] கொஞ்சம் சாதத்தைத் திருடியதால் அவனுக்கு அபராதம் 3 தேங்காய்*

*20.1813*

*(1) சுப்பிரமணிய சாஸ்திரிகள் செய்த குமார ஸம்பவம் சம்பூ[282] ஹுஜுர் மகாலில் அச்சிடுவதற்காக உத்திரவு கொடுக்க வேணும்.*

*(2) வண்டி மாட்டுக்கு பாரம் தூக்கி மாரில்[283] இரத்தங்கட்டி மாடு நொண்டுகிறதாகையால் உள்ளுக்குக் கொடுக்க கர்க்கம்[284] கோழியின் மசாலை தினந்தோறும் மகால் கொட்டியத்திலிருந்து கொடுக்கிறது.*

*சுக்கு- 9 டாங்க்,மஞ்சள்- 9 டாங்க்,மல்லி- 9 டாங்க், குக்கில[285]- 9 டாங்க் அதலிவ்? 4 1/2 டாங்க், சாராயம்- சேர் 1 டாங்க், மிளகு- 9 டாங்க், பூண்டு- சேர் 1 1/4 .*
*வெந்தயம்- 9 டாங்க், கரிய போளம்- 9 டாங்க், உகேமலி- 4 1/2 டாங்க்*
*தஞ்சாவூர் சுங்கத்திலிருந்து தினம் ஒரு கோழியைக் கொடுக்க உத்திரவாகவேணும்.*

*(3) ஹுஜுரிபங்க்-ஹனுமாருக்கு-ஹனுமந்த ஜயந்திக்குப் பூஜை நைவேத்தியம் வகையறாவுக்கு 5 சக்ரமும் சாமான் வகையறாக்களையும் கொடுக்கிறது.*

---

280. கச்சூர் - பேரீச்சம்

281. தட்டி மகால் - மாட்டுக்கொட்டில்

282. குமாரசம்பவம் - காளிதாசர் இயற்றியது. குமாரசம்பவம் சம்பூ என்பது சுப்பிரமணிய சாஸ்திரி இயற்றினார். சம்பு - செய்யுளும் உரைநடையும் விரவி வருவது. சமஸ்கிருத நூல் விளக்கப்பட்டியல் ஏழாவது தொகுதி எண் 4030 இல் குமாரசம்பவ சம்பு எழுதியது சரபோஜி ராஜா என்றுளது; பக்.3035 இல் இச்சுவடி 11-12-1812இல் படியெடுக்கப்பட்டது என்றும் இதன் ஆசிரியர் இரண்டாம் சரபோஜி என்றும் கண்டுள்ளது. இங்குக்கண்ட மோடி தமிழாக்கக் குறிப்பினால் இந்நூலாசிரியர் சுப்பிரமணிய சாஸ்திரிகள் என்று அறியப்பெறும். இந்நூல் அச்சிடப்பெறவில்லை.

283. மாரில் - மார்பில்

284. கர்க்கம் - மருந்து உருண்டை (அரைத்த மருந்து); Bolus

285. குக்கில் - குங்கிலியம்

*21.1813*

*(1) ஸ்ரீபிரஹதேஸ்வர ஸ்வாமிக்கு[286] அன்னாபிஷேகத்திற்காக [287] சம்பா அரிசி 15 கலம் கொடுக்கிறது.*

*(2) ஆயுதசாலையில்-புதியகனாத்[288]படுதாக்களைத் தயார் செய்ய சிகப்பு (காஷாய நிறம்) நிறம் வர்ணம் கொடுக்க மகால் கொட்டியத்திலிருந்து*
*சிகப்புக்காவி மணு- 1/2, ந. எண்ணை மணு 1 1/2, மெழுகு 2 சேர் கொடுக்கிறது.*

*21.1813*

*(3) ஒட்டகத்திற்கு ஜலதோஷத்தினால் ஜுரம் வந்து தீனியைச் சாப்பிடாததினால் உள்ளுக்குக் கொடுக்க மசாலை*
*அரிசித் திப்பிலி 1 3/4 சேர், கண்டத்திப்பிலி 1 3/4 சேர், பூண்டு 1 3/4 சேர், மிளகு 1 3/4 சேர் சுக்கு 1 3/4 சேர், குடகி-கடுகுரோகிணி 1 3/4 சேர்,காயம் 14 டாங்க், கொனாஞ்சனம்[289] 1 3/4 சேர் சாம்பராணி 1 3/4 சேர், சாராயம் 9சேர், மூக்கிலிழுக்க 3 நாளைக்கு, கிறாம்பு 1 1/2 டாங்க் மாசிக்காய்பட்டை 3/4 சேர், மேண்டிப்பழம்? 3/4 சேர்*

*32.1813*

*(1) இளைய திவான்[290]சாஹேப்-திருவையாருக்குப் போகுவதால் வழக்கப்படி பிருதுகளைக் கொடுக்கிறது.*
*மேளம்-ஸங்கீத மேளம், யானையின் மேலுள்ளவைகள்,கொடியுடன் கூடிய யானை, முக்கிய சேவகர்கள், தீவட்டிக்கு எண்ணை, சந்திரஜோதி மத்தாப்புக்கள்*

*(2) ஹுஜுரின் பிராமணர்கள், பிள்ளையார் செய்பவர்கள் வகையறா திருவையாருக்குப் போவதற்கு 2 யானைகளைக் கொடுக்கிறது.*

## முட்டை எண் 117C

*84.1845*

*(1) ஸங்கீதபதக்[291]-வேஷத்தின் துணிகள் திருட்டுப்போன ஜாமீன்தாரிடமிருந்து வசூல் ஆன துகை ரூ. 5-15-5*

---

286. பிரஹதீஸ்வரர் - தஞ்சைப்பெரிய கோயிலிலுள்ள சிவலிங்கப்பெருமான்.

287. அன்னாபிஷேகம் - ஐப்பசி முழுமதி நாளில் செய்யப்பெறுவது.

288. கனாத் - கனத்து

289. கோரோசனம் ஆகலாம்

290. இளையதிவான் - சரபோஜி II இன் மகன் சிவாஜி.

291. ஸங்கீதபதக் - இசைத்துறை

## முட்டை எண் 116C

***32.1813***

***1. பெரியகோவில்-ஸ்ரீசுப்பிரமணிய சுவாமி ஸ்கந்த ஷஷ்டிக்காக[292] 4 வீதிகளிலும் சுற்றிவர யானையின் மேலுள்ளவைகள்.***

***கொடியுடன் கூடிய யானை, ஈட்டிக்காரர்கள், மேளம்-ஸங்கீத மேளம், சிப்பாய் கோட்டையிலுள்ள கொத்தவால்[293] சுவாமியுடன் போய் வருகிறது. தனிப்பட்ட மகாலிலிருந்து 20 ஈட்டிக்கழிகளைக் கொடுத்து வாங்குகிறது. சிவங்கோட்டையின்[294] வாசலை இரவு 12 மணி வரையில் திறந்து வைக்கிறது. இந்தப்படி உத்திரவாக வேணும்.***

## முட்டை எண் 119C

***14-1751***

***திருவையாருக்குச் சப்தஸ்தானத்திற்குப்[295] போய் வருவதற்காகப் பிருதுகள் வகையறா***

***மேளம் 1, நாதசுரம் 2, சுருதி 2, ஜாலரா 1, தவுல் 1 உடுக்கு 1, சந்திரவாத்தியம் 1, சூரிய வாத்தியம் 1 = 9***

***14-1751***

***6. ஸங்கீத மேளம்***
***புல்லாங்குழல் 1, தித்தி? 1, காஹள[296] 1, தாளம் 1, சங்குவாத்தியம் 1, துதரி[297] 1 = 6***

***7. கார்கானா[298]***
***ஹிந்துஸ்தானி நகாரா 1, கரணா[299] 1, சுர்ணா 1, ஜாலரா 1, டக்கா[299] 1, துரி? 1 = 7***

---

292. முருகக்கடவுள் சூரபதுமனை வென்றதைக்குறித்து ஐப்பசிமாசத்து வளர்பிறை ஆறாம்நாள் நடத்தப்படும் விழா.

293. கோட்டையிலுள்ள கொத்தவால் - கோட்டைக்காவல் அதிகாரம் உள்ளவர் (பக். 75).

294. சிவங்கோட்டை - சிவகங்கைக் கோட்டை.

295. திருவையாறு சப்தஸ்தானம் - பெருந்திருவிழாவில் சுவாமியை ஏழூர்கட்கு எடுத்துச் செல்வர். அது சப்தஸ்தானம் (ஏழூர்) எனப்படும். திருவையாறு, திருப்பழனம், திருக்கண்டியூர், தில்லைத்தானம், திருப்பூந்துருத்தி, திருவேதிகுடி, திருச்சோற்றுத்துறை என்பனவாம்.

296. காகளம் - எக்காளம்

297. துதரி - துத்தி - பக்கவிசையாக ஊதும் ஒத்துக்கருவி; அல்லது துதாரி எனின் நீண்ட ஊதுகுழல்.

298. கார்கானா - தொழிற்சாலை

299. கர்ணா, டக்கா - இசைக்கருவிகள்; இவற்றைக் குதிரைமேல் வைத்து இயக்கினர் (பக். 232).

விவஸ்தையுள்ள ஜனங்களுக்கு உடுப்புகள் ராஜீகை யுடன் 2 பிரதிஹாரர்கள், தம்பூர் ப்பர் கூட

லாயத்திலிருந்து

நம்முடைய கொடியை ஏற்றிக்கொண்டு போகுவதற்குச் செராகாவின் யானை 1, கார்கானாவுக்கு யானை1, மொகலாயக் குதிரை, அசல் ஜரிகை சாமான்போடப்பட்டது1, கர்ணாவுக்கு மட்டக்குதிரை 1,டக்காவுக்கு குதிரை 1, பல்லக்கு தூக்கும் ஆள் 1

கொத்தவாலிடமிருந்து

தம்பட்டம் 4, கொம்பு 2, ஜாஹீத் மஹாலிலிருந்து ஹர்காரா[300] 1

*14.1751*
திவடே அஸாமிகள்–4
சௌ. இரண்டு நாட்டுப் பெண்களுக்கும் பல்லக்கு ஆட்கள்.[301] சௌ. ஜானகிபாயி அம்மாளுக்குப் பல்லக்கு ஆள் ரா. சி. ராமஸேது ஸ்வாமி அவர்களுக்கு ஒத்தை சிப்பாய் அசல் ராகாசாயா என்னும் யானை இந்தப்படிக்குக் கொடுக்கும்படி உத்திரவாக வேணும்.

*16. 1777*
இராமேஸ்வரம்-தரும சத்திரம்-தண்ணீர்ப் பந்தல் இவைகளுக்குக் கொடுப்பது.

*1. 1801*
தஞ்சாவூர் கோட்டை தேவஸ்தானம்[302]-ஸ்ரீகாசி விஸ்வனாத் ஸ்வாமியின் கோவிலுக்கும்[303] வேதசாலைக்குங் கூட சர்காருடைய கோலால்[304] நிலம் வேலி 28-மா. 15-12 1/2குழி[305]

*2. 1778*
ரா. துளஜா மகாராஜாவின் உத்திரவு – மராட்டி குடும்பங்களுக்கு (தேசஸ்த கிரஹஸ்தர்களுக்கு)[306] சுரோத்திரியம்[307] சுபை- மன்னார்குடியைச் சேர்ந்த கச்சேன்[308]

300. ஜாஹித் மாஹல் - ஜாசுதமகால் ஹர்காரா - பணியாள் (பக். 453).

301. இரண்டாம் துளஜாவின் மனைவியர் (போ.வ.ச. பக். 100, 109).

302. தஞ்சாவூர்க்கோட்டை தேவஸ்தானங்கள் 64 என்று ஒராவணம் கூறும் - ஆனால் தஞ்சை அரண்மனை தேவஸ்தான ஆட்சியில் இந்நாளில் உள்ள கோயில்கள் 88 (பக். 191 அடிக்குறிப்பு).

303. இக்கோயில் மேலவீதியில் உள்ளது (பக். 188, பக். 213இல் எண் 4)

304. சர்க்காருடைய கோல் - 14 அடிக்கோல் (பக். 166).

305. 100 குழி ஒரு மா; 20 மா ஒரு வேலி (பக். 166).

306. தேசஸ்த கிரஹஸ்தர்கள் -தேசஸ்த கோகணஸ்த் என்ற இருவகைப் பிராமணப் பிரிவில் முந்தையது.

307. வேதம்வல்லார்க்கு அளிக்கப்பட்ட நிலம் சுரோத்திரியம். பெரும்பான்மையும் தரிசு நிலமே (பக். 259-260).

308. கச்சேன் - திருக்கைச்சினம் என்ற பாடல் பெற்றதலம்

தாலூகாசேகல் மகாவில் தரிசு நிலம் 14 அடி கோலால் கொடுத்தபடி.

கோனேர் நரஸிமம்

நிலம் வேலி–
பிச்சை காட்டகம் வடபாதி 35 1/2 வேலி
மௌஜே[309] மேலப்பாதி கட்டளை 9 வேலி = 44 1/2 வேலி

*(3) 1756*
ரா. பிரதாப ஸிங்க ராஜாவின்[310] உத்திரவு-திருவையார்-தாலுகா ராஜகிரி மாகாணம் மௌஜே-பண்டாரவாடை தேவராயப்பேட்டையைச் சேர்ந்த மகம்மதுகான் சுங்கமதிகாரி-இவருக்கு நிலம் குழி 1350 கொடுத்தார்.

*(4) 1797*
பசுபதி கோவிலில் புதிய பக்கீர் காமில் சாஹேப் அவர்களுடைய தெக்காவின்[311] நிலம், தோட்டம், குளம் கூட அளக்கப்போன வெங்கட்றாமய்யர் சொன்னது நிலம் குழி 6135.

*16 1806*
(6) நகல்-பதியின் நடவேண்டிய கண்ணுக்கும் மரத்துக்கும் கூட எருபோட வேண்டிய விதத்தைச் சென்னப்பட்டணம் பள்ளிக்கொண்டான் மேஸ்திரி எழுதச் சொன்னதைப்பற்றி.

மாங்கண்ணுக்கு :-சாம்பலும் மண்ணும் சேர்த்து கண்ணை நடுவதற்கு 3 அடி ஆழம் பள்ளம் தோண்டி, அதில் சாம்பல், மண் இவைகளைப் போட்டுக் கண்ணை நட்டு தண்ணீர் (விடுகிறது) ஊத்துகிறது.

பொப்பளிமாஸ் மரத்திற்கும் பந்தரி சர்க்கர நார்த்தை மரத்திற்கும் பயிரிடுகிற விதம் 4ஸுத்திய...பாடத்தைக் கொணர்ந்து பொடி செய்து, அம்மரத்தின் வேரைச்சேர்ந்த ஒரு பக்கத்திற்கு விட்டுவிட்டு ஒரு பக்கத்தில் வேரின் பக்கத்தில் குழியைத் தோண்டி, அவ்வேரிலுள்ள சல்லிவேரை ஒருதரம் அறுத்துவிட்டு, அக்குழியில் 4 கூடை பொடியைப் போட்டு அதின்மேல் மண்ணையும் கொட்டி, தண்ணீர் ஊற்றுகிறது. மற்றொரு பக்கத்தில் 2ம்ஸு முதலில் மேற்சொன்னபடி பொடியைப் போட்டு மண்ணையும் போட்டுத் தண்ணீர் ஊற்றுகிறது.

**47.1853 ஜனவரி மீ 2 உ**
(1) தஞ்சாவூர் ரெஸிடெண்ட் வேலை பார்க்கும் ரா. ஸ்ரீ. ஜே. எப். பிஷப்[312] எஸ்கொயர்

---

309. மௌஜே - ஊர் (வருவாய் எல்லைப்படி)

310. இவர் துக்கோஜியின் மகன் ஆவர். 1739-63 வரை ஆட்சிசெய்த மராட்டிய அரசர் ஆவர்.

311. தெக்கா - தக்கியா -பக்கீர்களின் இருப்பிடம்.

312. இவர் 1-11-1847 முதல் 2-1-1853 வரை ரெஸிடென்டாகக் குறிக்கப்பெறுகிறார் (பக். 68).

*அவர்களுக்கு:- கைலாசவாஸி[313] ரா. அமரசிங்கு[314] ராஜா அவர்களுடைய புதல்வி ராஜா அமணிசாஹேப் [315] அவர்களின் அநேக சலாம் விசேஷம்.*

*என்னுடைய சரீர ஸ்திதி ரொம்ப பலஹீனமாயிருப்பதால் என்னுடைய சிவாஜி காசிராவும்[316] வளர்த்த[317] பாலகிருஷ்ண சுவாமியும் நான் செய்த தருமங்களெல்லாம் எல்லாக்காரியங்களும் நான் செய்த will படியும் விவஸ்தையின்படியும் நடத்துவதற்கு நான் இருவருக்கும் எழுதிக்கொடுத்த உடன்படிக்கையின் நகலையும் [318] தங்களுடைய பார்வைக்காக அனுப்பியிருக்கிறேன்*

*(கையொப்பம்)*

*முகாம்:- திருவிடமருதூர்.* *ஸ்ரீராம்*

*(2) 1796*

*திருவையர்-காவேரிக்கு இக்கரையில் சத்திரம் போட்டுத் தருமம் செய்வதற்காக சுபா-கும்பகோணம் தாலூகா-காஸேகாவ் மௌஜே. ஈனம்பூர்[319] தென்பாதியில் ஸர்வமான்யம் உத்திரவுபடிக் கொடுக்கப்பட்டது. வேலி நிலம் 6 1/2–3மா.*

*3,1782*

*ஹுஜூர் உத்திரவு:தஞ்சாவூர் கோட்டை-இராமகிருஷ்ண சுக்கல் என்னும் குஜராத்தி ஒரத்த நாட்டில் தருமஞ் செய்தார். அதற்குக் கொடுக்கப்பட்டிருந்ததெல்லாம் ஸர்காரில் ஜப்தி செய்து அதனுடைய சாஸனங்கள் சீட்டுகள் 7ஐ வரவழைத்து, தஸ்தாவேஜூ கச்சேரியில் கொடுத்திருக்கிறார். தற்போது அந்தத் தருமம் ரா. மோஹனாபாயி [320] சாயேப் அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. அதற்குப் பேஸஜி[321] நடந்த வழக்கப்படி நடத்தும்படி உத்திரவிட்டிருக்கிறார். ஷியை நடத்துகிறது.*

---

313. கைலாஸவாஸி - இறந்தவரைக்குறிக்கும்போது கைலாஸவாஸி என்பர்.

314. இவர் 1786-1798 வரையிலும் அரசாண்டு பின் அரசபதவியிழந்து திருவிடைமருதூரில் வசித்து வந்தவர் ஆவர்.

315. யமுனாபாயி-மோடிப் பலகணி-2, ஆவணம் 619

316. அமர்சிங்கின் சகோதரி மகன்

317. யமுனாபாயின் வளர்ப்புப்பிள்ளை-மோடிப் பலகணி-2, ஆவணம் 619

318. மேல் குறிப்பிட்ட ஆவணம் காண்க.

319. ஈனம்பூர் - திருவின்னம்பர் ; கும்பகோணத்துக்கு அருகிலுள்ளது; பாடல் பெற்ற சிவத்தலம்.

320. மோஹனாபாயி - துளஜா, பிள்ளைப்பேற்றின்பொருட்டுத் திருமணம் செய்துகொண்ட இருவருள் ஒருவர் (போ.வ.ச.பக்.125)

321. பேஸஜி - முன்னர்

**47.1736**

**(4) ஹுஜுர்-உத்திரவு-ரா. மகாராஜ மா. ஸ்ரீசுஜான்பாயி[322] சாஹேப் முகாம் கோட்டை தஞ்சாவூர்.**

தஞ்சாவூர் கோட்டை அன்ன சத்திரத்தில் ரா. ஸ்ரீ. மகாராஜா[323] சாஹேப் கைலாஸ வாஸஞ் செய்தார். அவருடைய 11-ஆம் நாள் முதற்கொண்டு 13-ஆம் நாள் வரையிலும் ஸமாராதனை செய்வித்தார். ஆக 3250 பேர் பிராமண போஜனஞ் செய்ததற்குச் சமயல்காரனுக்குக் கூலி ஆயிரத்திற்குச் சக்ரம் 5 வீதம் கொடுக்கிறது.

*(5) 1736*

தஞ்சாவூர் கோட்டை ம.கா. ஸ்ரீ. சுஜான்பாயிசாயேப் பாலகோபால ஸ்வாமி சந்நியாசி அவர்களுக்குப் பேஸஜி (ராஜா) மாஸத்திற்கு50 சக்ரம் மொயின்[324] கொடுத்துக் கொண்டிருந்தார். அதன்மேல் இவ்வருஷம் 500 சக்ரம் வீதம் மொயின் செய்தார். தற்போது ரா. சாயேப் மனமுர்ந்து வருஷத்திற்கு இவ்வருஷம் முதற்கொண்டு மாஸத்திற்கு 50 சக்ரம் மொயின் கொடுப்பது.

*(6) 1796*

ரா. அமரசிங்கு ராஜா சாஹேப்[325] தஞ்சாவூர் கோட்டை.

மீன பேஸலுக்குப் பிரதிப்பெயர் ராஜகுமராம்பாபுரம். இராஜா மடத்திற்குப் பிரதிப் பெயர் மோஹனாம்பாபுரம்.

இவ்விரண்டு சத்திரங்களுக்கும் விடப்பட்ட கிராமங்களுக்கும் தோப்புகளுக்கும் கூட சாராயம் குத்தகையின் துகையைக் கொடுக்க வேணுமென்று கமாஸிதார்[326] உபத்திரவப்படுத்துகிறான். ஷெ துகையை வசூலிக்க வேண்டாமென்று உத்திரவாக வேணும். ஷெ துகையை வசூலிக்க வேண்டாம்.

7. 1778. இராஜகுமராம்பாபுரம்

இராஜகுமராம்பாபுரத்தில் புதிய கோவிலைக்கட்டி அதில் ஸ்ரீகல்யாணராம ஸ்வாமியின் பிரதிமையைச் செய்து பிரதிஷ்டை செய்திருப்பதற்கு ஸ்வாமிக்கு பூஜை நைவேத்தியத்திற்கும் திருநாளுக்கும் மாதமொன்றுக்குத் தஞ்சாவூர் சக்ரம் 175 வீதம் வருஷத்திற்கு 2100-சக்ரம் மொயின் செய்து கொடுத்து. அந்த மொயினுக்குக் கள்ளப்பத்து பிரதேசம்-வேளாம்பத்து.

**47.1778**

(7) தாலுகா, தாளனூர் மஹாலைச் சேர்ந்த கொடுக்கும் கிராமங்களுக்கு விவரம் இராஜகுமராம்பாபுரம்சந்தை கூட, சுங்கம்கூட மௌஜே கூடலூர். நார்பண்ணே தத்தணி ஆக 4 கொடுப்பது.

322. சுஜான்பாயி சாஹேப், துக்கோஜியின் முதல் மகனாகிய பாவாசாகேப் என்கிற இரண்டாம் ஏகோஜியின் மனைவி; பாவா சாகேப் ஓராண்டே ஆட்சி செய்து இறந்ததும் ஆட்சிப்பொறுப்பை ஏற்றார். (போ.வ.ச. பக்.85)

323. கி.பி.1736 என்றிருப்பதால், இங்கு மகாராஜா என்றது துக்கோஜி ஆகலாம்.

324. மொயின் - உதவித்தொகை

325. இரண்டாம் துளஜாவை அடுத்து 1788-1793வரை ஆட்சி செய்தவர்.

326. கமாவிஸிதார் - பலவூர்களை மேற்பார்வை செய்யும் அதிகாரி அல்லது சத்திர மேற்பார்வை அதிகாரி (பக். 75–77).

*8. 1787*

ரா. அமரசிங்கு இராஜா சாஹேப் மு. தஞ்சாவூர்-கோட்டை. மா. சுலக்ஷணாபாயி சாயேப்-மோஹனாபாயிசாயேப்[327] இவர்களிடமுள்ள கிராமம், தோட்டம், சத்திரம், நெல்லுப்பேட்டை, சைன்யம்,கடைகள் கூட ஜப்தி செய்து ஸர்காரில் சேர்த்துக் கொள்ளுகிறது.

*9. 1788*

ரா. அமரசிங்கு இராஜா சாயேப். மு. தஞ்சாவூர் கோட்டை.
மா. சுலக்ஷணாபாயி சாயேப்-மா. மோகனாபாயிசாயேப் இவர்களிடமுள்ள கிராமம், தோட்டம், வகையறா எல்லாவற்றையும் பேஸஜி ஜப்தி செய்யும்படி உத்திரவிட்டார். அதற்குத் தற்போது அதிராம்பட்டணத்தைத் தவிர மற்ற எல்லாவற்றையும் அவருடையதை அவருக்கு விட்டுவிட உத்திரவிட்டிருக்கிறார். அதன்படி கொடுப்பது.

*10.1758*

மா.கா. ஸ்ரீ. ஸ்ரீ. பிரதாபசிங்கு ராஜா[328] சாஹேப் மு. கோட்டை தஞ்சாவூர்.
சௌ. சக்குவார் பாயி சாஹேப்[328] இவர்களிடம் திருபுவனத்தின் சத்திரத்திற்கும் அக்கிரஹாரத்திற்கும் மொயின் செய்திருக்கிறார்.
சத்திரத்துக்கு சக்-3300, பிராமண போஜனத்திற்கு-2700
100 பேர்களுக்குத் தினமும் 3/4 பணம் வீதம் கொடுப்பது.பாக்கியை உத்யோகஸ்தர்களுக்குச் சம்பளம் கொடுக்கிறது.

*(10) 1848*

அர்ஜி. நாநாராவ் சிதம்பரறாவ் பேஷ்வே ஸர்காருக்குப் பூஜங்கறாவ் பேஷ்வே அவர்கள் எடுத்....சுவீகாரம் வாங்கினது 3 கோர்ட்டிலும் செல்லாதென்று தீர்ப்பான விஷயம் பற்றி.

*(11) 1737*

மா. சுஜான்பாயி சாயேப்[329] அவர்கள் காசீயிலுள்ள தர்மபுரம் மடத்தின் சிஷ்யரான நாயிக்பண்டாரி அவர்கள்ஹுஜூரிடம்வந்து செய்துகொண்ட அர்ஜி.

காசியிலுள்ள அன்னசத்திரம் நந்தவனம் தருமம் நடத்த வேண்டி பேஸ்ஜி500 சக்ரம் கொடுத்து கொண்டிருந்தார்.ஆனால் வருஷத்திற்குத் துகை வந்து சேருகிறதில்லை. ஆகையால் ஒரு கிராமத்தை ஸர்வமானியம் செய்த கொடுக்க வேண்டுமென்று.

---

327. இவ்விருவரும் மக்கட்பேற்றின் பொருட்டு இரண்டாம் துளஜாவால் மணந்து கொள்ளப்பட்டவர் ஆவர் (போ.வ.ச.பக்.125). துளஜா இறந்ததும் அமர்சிங்கு ஆட்சியைக் கைபற்றினார். ஆட்சியைக் கைப்பற்றியதும் செய்த செயல் இவ்விரு வருடைய ஊர்களைப் பறிமுதல் செய்தார் என்று இதனால் தெரிகிறது.

328. காண்க மூட்டை எண். 106c – 36 (கி. பி. 1758)

329. சுஜான்பாயி சாயேப் கி.பி.1737இல் அரசு எய்தியவர்.

330. நாயக்பண்டாரி - திருப்பனந்தாளில் காசிமடத்தை ஏறத்தாழ 1720இல் நிறுவிய காசிவாசி தில்லை நாயக சுவாமிகள் ஆவர். 'தருமபுரமடத்தின் சிஷ்யரான'' என்றிருப்பதால் இவ்வாவணம் மிகச் சிறப்புடையதாகக் கொள்ளப்பெறும். தருமபுர ஆதீனத்துத் தம்பிரான் ஒருவரே திருப்பனந்தாள் காசிமடத்து அதிபராக வருவதற்கு உரிமை உடையவர் ஆவர். எனவே இவ்வழக்கிற்கு இத்தொடர் சான்று பகர்வதாக உள்ளது. (பக். 424)

அதற்குப் பேஸஜி தற்போது தம்முடைய பேரால் அதிகம் தருமம் நடக்க 500 சக்ரம் ஜாஸ்தியும், முன்னிருந்த 500 சக்ரமும் சேர்த்து 1000 சக்ரம் மொயினுக்குதா லூகா குர்சீயைச்[331] சேர்ந்த சோன்பட்[332] என்னும் ஊரில் நஞ்சி புஞ்சி[333] நிலங்களை ஸர்வமான்யம் ஸர்வமான்யம் செய்து கொடுத்தார்.

(12) Feb 26உ மாசி 7 உ

இராணி சாயேப்புக்கு புத்திரன் பிறந்ததினால் ஸர்காரை யானையின் மேல் அம்பாரியில் உட்கார வைத்து, நாலு வீதிகளையும் வலம் வந்து பீரங்கிகளை விட்டார்கள்.

மார்ச்சு மீ 9 உ

மங்கள வாஸத்தின்[334] பெண்கள் அரண்மனையை விட்டு, சர்கேல் பண்டிதர் வீட்டுக்குச் சென்றார்கள். பண்டிதர் அரண்மனைக்கு வந்து கிண்டர்ஸ்லி சாயேப்பின் வீட்டிற்குப் போய்ப் பெண்களைச் சிவங்கோட்டையில் நன்றாக விசாரணை செய்து, கிண்டர்ஸ்லி[335] சாயேப் இரவில் 9 மணிக்கு வெளியே இந்தப்படி நடக்கவேண்டுமென்று உத்திரவு கொடுக்க வேணும்.

வங்காளத்துக்குப் புதிய கவர்னர்[336] வந்த விஷயமாக கிண்டர்ஸலி சாயேப்வகையறா ஐந்து துரைகளுடன் வந்தார். வரும்பொழுது 19உ க்கு

புதிய கல்யாண மகாலுக்கு[337] வாங்கின பெண்களில்25 பேர்களை அவரவர்களிடமிருந்து தஸ்தாவேஜீகளை வாங்கி ஆஸாமிக்கு 3 (மூன்று) வாங்கி வெளியே விட்டார்.

13.1818

பகுதான்யம்[338] ஸ்ரீ ஆவணி 4உ வியாழக்கிழமை

சி. ரா. சிவாஜிராஜா சாயேப் அவர்களுடைய கலியாண[339] மானதற்காக சிராவண பாண்டி (கூடைதானம்) மாப்பிள்ளை ரா. பேஸஜி யசவந்தறாவ் மோஹிதே[340] அவர்களுக்குக் கொண்டு வந்து கொடுப்பதால் அவருக்கு யானை, குதிரை, முதலிய விருதுகளை கொடுக்கும்படி அர்ஜி.

---

331. குர்சீ என்பது திருப்பனந்தாளுக்கு அண்மையிலுள்ள குறிச்சி என்ற ஊராகலாம்.

332. சோன்பட் -இந்நாளில் திருப்பனந்தாளுக்கு வெகு அண்மையிள்ள பட்டம் என்ற ஊர் ஆகலாம் (பக். 424).

333. நஞ்சிபுஞ்சி - நன்செய் புன்செய்

334. மங்களவாசம்–இரண்டாம் சிவாஜியின் காமக்கிழத்தியர் இருந்த இடம்.

335. கிண்டர்ஸ்லி - ரெஸிடெண்டு

336. லார்டு பெண்டிங்க் ஆவார்.

337. கல்யாணமகால் - இரண்டாம் சரபோஜியின் காமக்கிழத்தியர் இருந்த இடம் (பக். 329).

338. பகுதான்ய - யாண்டறுபதனுள் 12ஆவது (கி.பி.1818)

339. இது சிவாஜியின் முதற்கலியாணம்; முதல்மனைவியின் பெயர் சைதம்பாபாயி; (பக்.31)

340. இவர் சைதம்பாபாயின் தந்தைபோலும்.

*47. 1856 Feb 22உ*

*(14) சௌ. சி. ராஜஸபாயி அமணிராஜே[341] சாஹேப் அவர்களுக்குக்கல்யாணமானபின்பு அதிகாரம் வகையறாவைக் கொடுத்ததைப் பற்றித் தேடினார்கள். 1876 நவம்பர் 24உ மா. காமாக்ஷிம்பா பாயிசாயேப்[342] அவர்களிடமுள்ள ரா. நாகராஜ ராமாஜி ஷெடி தேதியில் காலை 3 நாழிக்கு முக்கிய குமாஸ்தா சிவாஜி ராஜாராம் இருவருக்கும் காட்டினது.*

*(15) 1849 ஜூன் 8 உ*

*தஞ்சாவூர் கோட்டை வடக்கு வீதியில் பாவா சங்கர் அக்கிரஹாரத்திலிருக்கும் வல்லம் கோவிந்த ஜோஸியர் பிள்ளை வெங்கட்றாம ஜோஸியர் எழுதிக்கொண்ட மனு ரா. மகாராஜாவின் காலத்தில் கோதானத்திற்காக 20 சக்ரம் கொடுத்துக்கொண்டிருந்தார். நான் சூரிய சித்தாந்தம்[343] கணிதம் செய்து கொண்டிருந்தேன். மகாறாஜா[344] கைலாஸவாஸி ஆனபின்னர் சௌ. பத்மாம்பாபாயிசாயேப்[345] அவர்களுக்காக ஜபம் செய்ததற்காக் 2 சக்ரம் கொடுத்துக் கொண்டிருந்தார். தன்னுடைய தகப்பனார் காலமான பின்பு பாதி கோதானம் அதாவது 10 சக்ரம் கொடுக்கப்பட்டது. ஷு த்திற்கு 8 கோதானம் கொடுப்பதற்கு மாதத்திற்கு 2ரூ வீதம் ஆயிற்று. இந்த 2ரூக்கு ஸரஸ்வதி மஹாலில் 2000 கிரந்தம்[346] புஸ்தகம் எழுதிக் கொடுக்க வேணுமென்று சொன்னார். பாக்கி பேர்கள் 1000 கிரந்தம் எழுதுகிறபடி நான் எழுதினதற்கு எனக்குச் சம்பளமில்லை. நீ 2 ஆயிரம் எழுதுவதற்கு 1000 எழுதியதால் 1000 எழுதியவருக்குத் துகை கொடுத்தாய் விட்டது என்கிறார்கள். மகாராஜா அவர்கள் விசாரணை செய்து ஏழையைக் காப்பாற்ற வேணும்.*

*(16) 1843 Ap. 8*

*தஞ்சாவூர் முகாம் ரா. பாபாஜி ராமாஜி பண்டிதர்[347] சேனாதுரந்தர் ரா. நீலகண்டறாவ் ஆனந்தராவ்[348] ஜாதர் அவர்களுக்கு-*

*அமெரிக்காவிலிருந்து பனிக்கட்டிகள் வந்திருக்கின்றன. அவை விலைக்குக் கொடுக்கப்படும் என்று அறிவிக்கிறீர்கள். அவை அங்கிருந்து இவ்விடம் அதே மாதிரியாக வந்து சேருமென்று தெரிய வந்தால், அப்பேர்ப்பட்ட பெரிய கட்டிகளை ஒன்றிரண்டையோ அல்லது அதை*

---

341. ராஜஸபாயி அமணிராஜே - இரண்டாம் சிவாஜியின் முதல் மகள்.

342. இவர் சிவாஜியின் இரண்டாவது மனைவி ; சரபோஜியின் மகள் வயிற்றுப் பெண். தந்தை எசவந்தராவ் ராமச்சந்திரராவ் சூர்வே (பக். 31).

343. சூரியசித்தாந்தம் - சூரியபகவானால் உபதேசிக்கப்பெற்றதாகக் கருதப்படும் ஒரு வானசாத்திரம்.

344. இங்கு மகாராஜா என்றது இரண்டாம் சரபோஜியை

345. பத்மாம்பா பாயி - சிவாஜியின் மூன்றாவது மனைவி (பக். 32).

346. கிரந்தம் - ஒற்றொழித்து உயிரும் உயிர்மெய்யுமாகக் கொள்ளப்படும் 32 எழுத்தின் கூட்டம்

347. பாபாஜி ராமாஜி - இவர் சர்க்கேல் (பக். 86).

348. ஸேனா துரந்தர் நீலகண்டராவ் ஆனந்தராவ் யாதவ் - சேனைத்தலைவர் (பக். 87).

உடைத்துச் சிறியதான 10,20 ஆகவோ உருகாமல் கொண்டு வரும்படியாயிருந்தால் கொண்டு வரலாம். அப்படிக் கொண்டுவரும் பக்ஷத்தில் அவைகளை உபயோகப்படுத்தும் முறையைத் தெரிந்துகொண்டு எழுதுகிறது. அதே மாதிரியாகவோ அல்லது உருவம் மட்டும் சிறிது குறைந்ததாகவோ இங்கே கட்டி வந்து சேருமென்று தோன்றினால் இம்முயற்சியைச் செய்யவும்.

(கையெழுத்து) பாபாஜி ராமாஜி பண்டிதர்.

47.1849 ஏப் 3 உ

(17) மஹாஸ்வாமி சிவாஜி மகாராஜா அவர்கள் சமூகத்திற்கு ஜலசூத்திர[349] வேலைக்காரனான முத்துசாமி பிள்ளை நமஸ்காரத்துடன் எழுதிக்கொண்ட மனு.

ஸேவகன் அநேக இராஜ்யங்களைச் சுற்றி ஜலசூத்திர வேலைகளைக் கற்றுக் கொண்டு மகாராஜாவைப் பார்க்க வேணுமென்று இங்கு வந்து 1 1/2 வருஷமாயிற்று. இச்சங்கதி ராமராவுக்கும் ஹீரோஜி போஸலேவுக்கும் பெரிய மனிதர்களுக்கும் தெரியும். இப்பவும் சென்ற மீ பங்கில் என்னை அழைப்பித்து நீ கொண்டுவந்த ஜலசூத்திர வேலைகளை எவ்விதமாகக் காட்டுவதென்றிருக்கிறாய் என்று கேட்டார்கள்.

மகாராஜா பார்த்து இன்ன துகையைக் கொடுப்பதாக நிச்சயஞ் சொன்னால் அதைக் காட்டுகிறேனென்று சொன்னேன். ஆனால் மறுபடியும் என்னைக் கேட்டார்கள். இந்தப்படி நாலு விதமாகவும் தர்க்கமான பின்னர், என்னுடைய ஜலசூத்திரம் சுமார் 100 ரூ க்குள் பொருமானமுள்ள சாமான்களினால் செய்யப்பட்டிருக்கிறது. இரண்டு அஸாமிகளிருந்து சுற்றினால்தான் கரையிலிருந்து பூமி மட்டத்துக்குத் தண்ணீர் வரும். இதற்காக எனக்கு 1000 வராகன் கொடுத்தால் காட்டுகிறேன். அந்தப்படிக்கி காட்டுகையில் தண்ணீர் வராமல் போனால் எனக்கு ஷெ துகையைக் கொடுக்க வேண்டியதில்லை, என்று நான் சொன்னதிற்கு இப்பொழுது ஒரு கிணற்றில் போட்டுக் காட்டலாமா என்று பங்கில் என்னைக் கேட்டதற்கு அப்படி நான் காட்டமாட்டேன் என்று சொன்னேன்.

பின்பு நான் சொன்னதாவது-சரி என்று ஒப்புக்கொண்டு 1000 வராகனுக்கு என்னிடமிருந்து கறார்நாமா[350] எழுதிக்கொண்டு மகாராஜா சாயேப் அவர்களுக்கு தெரிவித்துக்கொள்ளுகிறேன் என்று கிருஷ்ணசாமி அப்பா சொன்னார்.

3 நாட்களுக்குப் பின்பு என்னை அழைப்பித்து அனுப்பி நீ கொண்டு வந்திருக்கும் சூத்திரத்தை ஸர்ஜாவுக்குச் சமீபமுள்ள கிணற்றில் இன்று மத்தியானம் 3 மணிக்குள் போட்டுத் தயார் செய்யும்படி மகாராஜா சாயேப் அவர்கள் உத்திரவாயிருக்கிறது என்று பங்கில் சொன்னார்கள். அப்படி தயார் செய்து போடுகிறேனென்று சொன்னேன். அதற்கு எனக்கு என்ன உத்திரவு என்றேன்.

நீ எழுதி வைத்தபடி மகாராஜா சாயேப் அவர்களின் உத்திரவாயிருக்கிறது என்று சொன்னார்கள். ஆனால் மகாராஜா சாயேப் அவர்களின் உத்திரவுக்கு வேறொன்றுமில்லை

349. ஜலசூத்திரம் - தண்ணீர் இறைக்கும் பொறி

350. கறார்நாமா - உறுதிப்பத்திரம்

என்று எண்ணி உத்திரவின்படி மேற்சொன்ன கிணற்றில் யந்திரத்தைத் தயார் செய்து அமைத்தேன். மகாராஜாசாயேப் அவர்கள் வந்து தண்ணீர் வருகிறதைப் பார்த்து நீ சொன்னபடி செய்தது சரிதான். ஆனால் இத்தண்ணீர் இதைக்காட்டிலும் உயரமாக ஏறும்படியாகத் தெரிகிறது. அதன்படி தயார்செய்து வைக்கவேணுமென்றுஉத்திரவிட்டார். அந்தப்படிக்கி 3 நாள் வரையில் மஹாராஜா சாயேப்பின் உத்திரவின்படி நடந்தேன். அத்தினம் 5,6 வராகன் ரொக்கம்பொரும்படியானஒரு கழுத்தாபரணமும் ரூ 10 பொரும்படியான ஒரு ஆடையும் எனக்கு இனாம் கிடைத்தது.

நாலாம்நாள் காலையில் மகாராஜா சாயேப் அவர்களின் உத்திரவின்படி பங்கின் கிருஷ்ணப்பா என்னை அழைத்து வந்து,ஷெ இயந்திரத்தை எடுத்துதாஸ்தான் மஹாலின்[351] கிணற்றில் போடும்படியாக மகாராஜா சாயேப்பின் உத்திரவாயிருக்கிறது என்று சொன்னார். அதன்படி எடுத்துப்போட்டு விட்டேன். பிறகு அந்த இடத்திற்குப் போவதற்கில்லாததால் போகவில்லை. பின்பு அரண்மனையில் வேலைக்காரனை வைத்துக் கொண்டு அதே மாதிரி 2,3,இயந்திரங்களைத் தயார்செய்து, இராஜகோபால ஸ்வாமி கோவிலில்[352] ஒன்றும், சிவகங்கையில் ஒன்றும் போட்டேன். பின்புஎன்னிடம் பேசினபடி துகையை நான் கேட்டதற்குச் சரியான பதிலைக் கொடுக்கவில்லை. ஆகையால் மார்ச்சுமீ 17௳ பங்கில் ஒரு யாதியைக்[353]கொடுத்தேன். அதற்கும் உத்திரவாகவில்லை. என்னிடம் எழுதி வாங்கின தஸ்தாவேஜையும் ஷெ சூத்திரம் போட்ட தினம் நான் எழுதிக் கொடுத்த ஒரு யாதியையும் பங்கில் கொடுத்த யாதி 1ம் இம்மூன்றாவது யாதியும் வரவழைத்து. அதை மகாராஜா சாஹேப் பார்த்து மனதில் வாங்கி ஸேவகனுடைய கஷ்டத்திலிருந்து விலக்க வேணும் என்று மார்ச்சு மீ 20௳ இல் தபால் மூலம் ஒரு யாதியையும் அனுப்பித்தேன். அதற்கும் இதுவரையிலும் உத்திரவு தெரியவில்லை. அத்துடன் அந்நான்கு யாதிகளையும் மகாராஜா சாயேப் அவர்கள் வரவழைத்துப் பார்த்து, ஏழையான என்பேரில் தயவுசெய்து என்னுடைய கஷ்டத்தை விலக்கவேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

இந்த மஹாராஜா சாயேப் பங்கில் இந்த ஒரு ஜலசூத்திரத்திற்கு மாத்திரம் 1000 வராகன் கொடுப்பதாகச் சம்மதித்து எழுதி வாங்கியிருக்கிறார்கள். இதைத் தவிர 100 வராகன் பொரும்படியான ஒரு சீசாவையும் அரண்மனையில் கொடுத்திருக்கிறேன். இப்படியிருக்க எனக்கு இனாம் கொடுத்ததைத் தவிர வேறொன்றும் கிடைக்காது போகலாம் என்றும் சொல்லியிருக்கிறார்கள். இதனால் என் மனதுக்கு மிக்க வியசனமுண்டாயிருக்கிறது. என்னிடம் எழுதி வாங்கினபடி தண்ணீர் ஏறாமலிருந்து, எனக்கு ஏதாவது அவமானம் ஏற்பட்டிருந்தால் இதற்கு முன் இம்மாதிரியான வேலையை ஆரம்பித்த ஒரு துரையின்[354] கதியை நானும் அடைந்திருக்க வேண்டும். என்னுடைய வேலையை மாத்திரம்

---

351. தாஸ்தான் மகால் - நெற்களஞ்சியம் இருக்கும் இடம்

352. இக்கோயில் மதன கோபால் சுவாமி கோயிலாக இருத்தல் கூடும் (பக். 213 இல் 14).

353. யாதி - விண்ணப்பம் அல்லது பட்டியல்

354. துரை என்றது லாமோரியை (மூட்டை எண். 105c – 253.)

வாங்கிக்கொண்டு என்னிடம் கொடுப்பதாகச் சொன்ன துகையைக் கொடுக்காமல் மறுபடியும் மகாராஜா சாயேப்பை நான் பார்க்க முடியாமல் செய்து நடுவிலுள்ளவர்கள் மோசஞ்செய்து கொண்டு வருகிறார்களாகையால் சாஹேப் மனமூர்ந்து பங்கில் கொடுப்பதாகச் சொன்ன துகையை எனக்குக் கொடுக்க உத்திரவு செய்யவேணும்.

*1849 ஏப் 3 உ முகாம் தஞ்சாவூர்.* இந்தப்படிக்கு-முத்துசாமி பிள்ளை.

ஜலசூத்திரத்தினால் செய்யக்கூடுமான வேலைகளின் விவரம்:-

1. ஒருபெட்டி செய்து அதற்குத் தீ வைத்தவுடன் (கொளுத்தினதும்) அதிலிருந்து அநேக மாதிரியான பொம்மைகள் உடம்பு முழுமையும் நெருப்பு மயமாகமுள்ள வைகளாகக் கிளம்பிக் கொஞ்சம் தூரம் செல்லுவது
2. 2 ஸோல்ஜர்கள் செய்து, வாசப்படியில் நிறுத்தி வைத்து இருக்க, வருகிற ஜனங்களை ஜீவனுள்ள வாசற்காப்பான் போல் நேரில் வந்து உள்ளே போகாதபடி தடுப்பது.
3. ஒரு பெட்டியை ஒருவர் திறந்தால்-திடீரென்று (இருந்தாற் போலிருந்து) வெகு வேகமாய்ப் புலிசிப்பாய்கள் வந்து மனிதனுக்குப் பயங்காட்டுவது.
4. சில பொம்மைகளைச் செய்து-அவைகளை அவாந்தரமாக பூமிக்கும் ஆகாசத்திற்கும் நடுவில் நிறுத்தி வைக்கிறது.
5. ஐந்து உலோகங்களைத் தண்ணீராகச் செய்து காகிதத்தின் மேல் எழுதுகிறது.
6. 12 முழம் உயரம் மொஹப்பா? செய்து விடுவேன்.
7. அநேக விதமான சின்ன பக்ஷிகளைச் செய்வேன்.
8. இப்பொழுது அரண்மனையில் கொடுத்திருக்கும் மாதிரியாக சீசாவில் அநேக வேலைத்தனம் செய்வேன்.
9. பக்ஷி ஜாதிகளைச் செய்து தண்ணீரில் போட்டால் அவ்வைகள் எப்பொழுதும் அதனிஷ்டப்படி சுற்றிக்கொண்டிருக்கும்படி செய்வேன்.
10. பொம்மைகள் நடக்கும்படி செய்வேன்.
11. மெழுகு மரங்கள், புஷ்பங்கள் வகையறா அநேகம் வேலைகளைச் செய்வேன்.
12. சின்னக் கண்ணாடிக்குப் பாதரசம் போடுவேன்.
13. அக்னிஸ்தம்பம் ஜலஸ்தம்பம்-வாயுஸ்தம்பம் பிரம்ஹகாருடம்[355] என்கப்பட்ட வேலைகளைச் செய்வேன் கை? அடக்கு தெரியாது.
14. இன்னும் சில்லறை அநேக வேலைகளைச் செய்வேன்.

47. 1849 மே மீ 29

(18) ஷர்வலத்திற்காக ஹுஜுரின் அண்டினவரான அப்பாஜி கிர்மாஜி கீழ்கண்டபடி கொடுக்க உத்திரவாகும்படி எழுதிய மனு. மேளம்—ஸங்கீத மேளம்கூட அம்பாரி-1

ஒட்டகத்தின் பேரிலுள்ள கார்கானா-கர்னா சூர்ணாவுக்கு மட்டக்குதிரை பியாண்டு.

---

355. அக்னிஸ்தம்பம்: அறுபத்து நான்கு கலைகளுள் நெருப்புச் சுடாமலிருக்கச் செய்யும் வித்தை. ஜலஸ்தம்பம்: நீரின் சக்தியை மாற்றும் வித்தை. வாயுஸ்தம்பம்: காற்றை இயங்காமற் செய்யும் வித்தை, பிரம்ஹகாருடம் - விடம் தீர்க்கும் வித்தை.

வாத்தியம் அரபு வாத்தியம், ஈட்டி பைரகா,சிப்பாய்கள், கொம்பு, தம்பட்டம், மத்தாப்பின் கழிகள்-மத்தாப்புகள் கூட, ஆஸாமிகள்-10, நடிகை நடிக்கும் தொப்பம். நெட்டி, குரும்பு? மரம்-4, ஸர்கார்-1, பெண், மாப்பிள்ளைக்குமஹதாபி[356] ஆடைகள்

*47. 1843 Apr. 9* உ

(19) மிஸ்தர் கிண்டர்ஸ்லி ஸாஹேப் அவர்களுக்கு ஸர்கேல்-பாபாஜி ராமாஜி பண்டிதர் எழுதின கடிதம்.

சென்னப் பட்டணத்தில் சுப்ரிம் கோர்ட்டுக்கு[357] விசாரணைக்காக ஸர்கார் உத்யோகஸ்தர்களை அனுப்பினவர்களை முன்காலத்தில் சரபோஜி மகாராஜா அவர்கள் காலத்தில் நடத்திய மரியாதையின்படி நடத்தி சீக்கிரம் அவர்களை விசாரணை செய்து, இங்கு அவர்களில்லாமல் வேலை தவக்கம் இருப்பதால் திரும்ப அனுப்பவும் என்று.

(20) ஸேனா துரந்தர்-ரா. நீலகண்டறாவ் ஆனந்தராவ் ஜாதவ் அவர்களுக்கு.

ஸர்கேல் ரா. பாபாஜி ராமாஜி பண்டிதர் எழுதியது. சுப்ரீம் கோர்ட்டு விசாரணைக்காக சென்னப்பட்டணத்திற்கு அனுப்பிய ஸர்கார் உத்யோகஸ்தர்களைச் சீக்கிரம் விசாரித்து இவ்விடம் அனுப்பவேணு மென்று.

---

356. மஹதாபி - பொன் வெள்ளிச் சரிகைகளால் செய்த

357. சுப்ரீம் கோர்டு - உச்சநீதிமன்றம். இது 1801இல் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் சட்டம் ஒன்றினால் சென்னையில் தோற்றுவிக்கப் பெற்றது. இது சென்னை மாகாணத்தில் வெள்ளையர்க்கு அடங்கிய பகுதிகளிலும் சார்புடைய பகுதிகளிலும் உள்ள மக்களுக்குச் சட்ட ஆட்சிமுறையை உண்டாக்கியது. இது பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நீதிமன்றமாக இயங்கியது (பக். 179).

# சரசுவதி மகால் பகுதி - II

## மூட்டை எண்-166C

***2.1778***
*டாணா[1]-கணக்குப்பிள்ளை. ஹவால்தார்[2] 14-3 1/8*
*ராயஸகார் (எழுதுகிறவன்) 8 = 22-3 1/8*

***19 (1)** நேரில் வந்து காண்கிறபோது வெள்ளி வரவு-தா லூகா விளாகம்-கோமல் பத்து கோனேர் ராஜபுரம்-சேர்வை-அளவர் கணக்கோ சேத்தி கிராமம் சேர்ந்து பதக்கம் (பிரிவு)ஆன தேதியிலிருந்து கமாவிஸி செய்ய[3] வேண்டியதற்காக கிராமத்தார் சர்காருக்கு வெள்ளி சேர் 2க்கு சேரொன்றுக்கு 19 சக். வீதம் 38 சக்.*

## மூட்டை எண்-167C

***38. 1836***
*1ஸேநா துரந்தர் வராஹப்பைய்யா[4] அவர்களுடைய தாயார் பரலோகமடைந்ததற்கு இனாம் கும்பனி ரூ. 200*

*3. 1831 Ap. 12 உ*
*(1) சிவகங்கையின் தண்ணீரைக் கவனிப்பதற்குக் குத்திக்காவளேயைச் சேர்ந்த*
***21** ஆஸாமிகளை நியமிக்க வேணும்.*
*ஸர்கேல் ரா. ராமோஜீ ஸர்ஜேராவ்[5] காட்கே அவர்களுக்கு ஸேனையின் தளகர்த்தனான ரா. பாபுராவ் இங்களே எழுதிய கடிதம்.*

*தற்போது சிவகங்கையில் ஜனங்கள் புழங்குகிற படித்துறைகள் நான்கிருக்கின்றன. அவைகளில் மராட்டியர்களும், சூத்திரர்களும் தண்ணீர் எடுத்துக்கொண்டு போகும்*

---

1. டாணா - சேனை; காவல்
2. ஹவல்தார் - இந்தியச் சேனைத்தலைவருள் ஒரு நிலை

3. கமாவிஸி செய்தல் - மேற்பார்வை செய்தல்

4. வராகப்பையா - இவர் இரண்டாம் சரபோஜி, சிவாஜி ஆகிய இருவர் காலத்திலும் இருந்த பெரிய அலுவலர் (பக். 82).

5. ராமோஜி ஸர்ஜேராவ் (பக். 85–86).

படித்துறையில் தகுந்த காவல்காரனிருக்கிறான். அதுபோக, பிராமணர்களின் புழக்கமுள்ள படித்துறையிலும் முகம்மதியர் பஞ்சமாள் இவர்களுடையவும், படித்துறைகளில் குத்தியின் காவல்காரர்களிருவர்கள்-நியாயாதீஸ[6] ரா. ஹீரோஜி காளேராவ் அவர்களுடைய நந்தவனத்திலுள்ள படித்துறையின் காவல்காரர் ஒருவர்; ஆக, காவல்காரர்கள் 3க்கு முதலில் கவனிக்க 21 பேர்கள் இருந்தார்கள். தற்போது அப்படியில்லாமல் ஒருநாள் ஒவ்வொரு படித்துறைக்கும் ஒன்று அல்லது இரண்டுபேர்கள் மணிப்பிரகாரம் மாத்திரம் இருக்கிறார்கள். ஒரு சமயம் ஒருவருமில்லை. இதற்காக ஜாக்கிரதை செய்ய வேணுமென்று.

*47. 1831 Apr 24*

*(1)* இடையன் இராமசாமி நாயிக்கன் தன்னுடைய கழுத்தை அறுத்துக்கொண்ட விஷயத்தில் சிகித்ஸை செய்ய வைத்தியருக்கு 15 ரூபாய் கொடுத்து ஸபையில் சிலவு எழுதும்படி உத்திரவாக வேணுமென்று ஸர்கேலுக்கு எழுதிய மனு.

*1.1836 ஹுஜுர் பங்க்*

**(1)** ஸந்நத்த பல நிர்வாஹ கதம்ப பலவரநிர்வாஹ ஸேநா துரந்தர ப்ரவேகாக்ர்ய ரா. ஸோமனாத ஸதாசிவத தீக்ஷித பண்டிதர்.[7]

ஹஜாரியிலுள்ள வேட்டு மகாலில்[8] விளக்கேற்றுவதற்கு விளக்கெண்ணை நாளொன்றுக்கு 1/2 சேர் கொடுக்கிறது.

*(2) 1836*

சித்திரக்காரன் சாரங்கபாணி ஸர்காரின் வேலைக்காக கோபுரங்கள் வகையறாவை எழுதிக்கொண்டு வரப்போகுவதால்
இராய்ப் பேப்பர் தஸ்தா 1/2, மன்னார்குடி நாலு சௌரசீ காகிதம் தஸ்தா 1, பென்சில்-6, குலிஸ-6, கரிமாவேனே-9டாங்க், மக்ஷி[9] -9 டாங்க்

*(3) 1836*

ஒரு பாதரியும் சில துரைகளும் வேடிக்கை பார்க்க பகல் 4 மணிக்கு வரப்போவதால் ஆயுதசாலையிலுள்ள மூர்த்தியைத் திறந்து வைக்கிறது. புலி மகாலில்[10] ஜாக்கிரதை செய்கிறது. *பூத பீரங்கியைப் பார்க்க வரும்பொழுது அங்குள்ள காவல்காரன் தடை செய்யாமலிருக்கும்படி சொல்லுகிறது. பெரிய கோவிலில் நந்தியைப் பார்க்க வருவதால் ஜாக்கிரதை செய்கிறது.

---

6. நியாயாதீஸ - தஞ்சையில் இருந்த நான்கு நியாய மன்றங்களில் ஒன்று (பக். 167–169).

7. இவர் சரபோஜி, சிவாஜி ஆகிய இருவர் காலத்திலும் இருந்த அமைச்சர். இவர் பல அடைமொழிகளால் சிறப்பிக்கப்பெறுகிறார் (பக். 183).

8. வேட்டுமகால் - வேட்டைமகால் - வேட்டையாடிப் பிடித்துக்கொணர்ந்த விலங்குகள் இருக்கும் இடம். (பக். 457)

9. மக்ஷீ - மை

10. புலிமகால் என்பது வேட்டைமகால் ஆகலாம்.

**40•1848 நவம்பர் 21௳**

**1. பதல் கண்டி[11]யின் பொலிடிகல் அஸிஸ்ட்யெண்ட் அவர்கள் தஞ்சாவூர் கலெக்டர் அவர்களுக்கு எழுதிய கடிதத்தின் நகல்**

இதிலிருக்கும் நமூனாவில் எழுதுவதற்கும் இத்துடனிருக்கும் வில்ஸனுடைய[12] புத்தகத்தின் extract-இல் எழுதியிருக்கும் இராமாயணம்படி இராமச்சந்திரன் இலங்கையை ஜயத்தார் அதில் உத்தாசையாகயிருந்தகுரங்குகளின்சரித்திரத்தைச் சேர்ந்த "இமாரதி" (கட்டிடங்கள்) வகையறாக்களுக்கு ஆன உண்மையான விலையையறிந்து கொள்ளுவதற்கும், தங்களுடைய உதவியை வேண்டுகிறதற்கு கவர்னர் ஜனரலின்[13] ஏஜண்டு என்னை உத்திரவிட்டிருக்கிறார்.

கையொப்பம்
பதல் கண்டியின் பொலிடிகல்
அஸிஸ்டெண்ட்

பொலிடிக்யால் அஸிஸ்டெண்டு ஆபீஸ் 1848 நவம்பர் 21௳

வில்ஸனுடைய *Descriptive Catalogue* என்ற புத்தகத்தின் *extract Vol-I Page 83.*

மதுரைக்குச் சமீபமுள்ள ஊரில் ஸ்கந்த புராணத்தின் ஒர் அத்யாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த இராவணனுடைய பயத்தினால் குரங்குகள் ஓடிப்போன இடங்களின் கதைகள்.

**2. 1848 Dec 14௳**

***Acting Resident*** அவர்கள் ஸர்கிலுக்கு எழுதிய கடிதத்தின் நகல். இம்மாதம் 5௳யின் ஜுன் மாதத்தின் கடிதத்தைப் பார்க்க எனக்கு மிகவும் சந்தோஷ மேற்பட்டது. இன்னும் திருவையாருக்குப் போகும் ரஸ்தாவில் மகாராஜா சாஹேப் அவர்கள் கட்டின பாலத்திற்கு[14] தற்போது சுவர்போடும் சிலவை அவர்களே செய்வதாக ஒப்புக்கொண்டதில் அவர்கள் காட்டிய உதாரத்தன்மை[15] விஷயத்தில் என்னுடைய அறுமோதனத்தை[16] தயவு செய்து தாங்கள் மகாராஜா சாஹேப் அவர்களுக்குத் தெரியப்படுத்த வேணுமென்று பிரார்த்திக்கிறேன்.

மேற்கண்ட பாலத்தின் வேலையை அடுத்த வருஷாரம்பத்தில் ஆரம்பிக்கும்படி துகையை ரூ 5705-7-0யையும் நீங்கள் என்னுடைய பங்களாவிற்கு அனுப்பினால் நான் தங்களுக்கு நன்றியுள்ளவனா யிருப்பேன்.

முகாம் வல்லம்
**1848 டிசம்பர் 14௳**

கையொப்பம்
ஜே. கேர்ட்
*Act. Collector.*

---

11. கண்டி - இலங்கையில் உள்ள நகரம்

12. வில்ஸன் - இவர் மெக்கன்சி சுவடிகளை ஆய்ந்து நூல் எழுதியவர். இங்குக் குறிக்கப்பட்டவர் அவரா என்று தெரிய வாய்ப்பில்லை.

13. 1848இல் கவர்னர் ஜெனரலாகப் பதவி ஏற்றவர் லார்டு டல்ஹவுசியாவர்.

14. சிவாஜி தஞ்சாவூர் திருவையாறு பாதையில் நான்கு பாலங்களைத் தன் செலவில் கட்டுவித்தார்; திருவையாற்றுப்பாலம் இங்குக் குறிப்பிடப்பெறுகிறது (பக். 470).

15. உதாரத்தன்மை - கொடை

16. அறுமோதனம்(?) - அன்பு; நன்றி

# மூட்டை எண்-169 C

*1. 1821*

*(1). ஹுஜூர் பங்க் சங்கதிகள்*

*டாக்டர் சிவேஸ்தரருக்குப்[17] புலிவிராகன்[18] 100.மைலுக்கு ரூ. 4000*

*(2) சி. சிவாஜிறாவாவிடம் சிவன் ராத்திரி[19] பூசைக்கு ஜவ்வாதும், புனுகும், பன்னீரும் கொடுக்கிறது.*

*(3) கொத்தல் என்கிற லாயத்திலுள்ள சம்பூபிரஸாத்[20] குதிரைக்குக் காலுக்கு ராதிபா. ஒவ்வொரு நாளைக்கு*

*கைவி பச்சைப் பயறு படி -1, இராய பூரி சீனி சேர் -2,நெய் சேர் -2*

*(4) சிவன்ராத்திரி தினம் பெரியகோவில் ஸ்வாமி தரிசனத்திற்கு ஜனங்கள் வருவதால் சிவகங்கைக் கோட்டையின் வாசலை இரவு 12 மணி நேரமும் திறந்து வைக்கிறது.*

*2. 1821*

*1. யாதி[21]-ஸங்கீத வித்யாதிக[22] தருமய்யா ராமஸ்வாமிய்யா[23] ஸா. ஸேது அண்ணாஜி. மிருதங்கம், ஸாரங்க, ஸரவத் முதலியன தோல் வாத்தியங்களை எல்லாம் எலி அறுத்துவிடுகிற தாகையால் கதவுக்கு சாவி, ஆணிகள் 8,கீல்கள்-3, கொண்டி 3 போட்டு கதவை செப்பனிடவும். 4 மத்தளத்திற்கு மூட்டு போட்டுக் கொடுக்கிறது.*

*5. 1809*

*1. தேவஸ்தானம் கோட்டை தஞ்சாவூர் விஜயதசமிக்காக[24] தேவஸ்தானத்தைச் சேர்ந்த 59 கோவில்களின் பெயர்கள்[25].*

*6. 1807 ஹுஜூர் பங்க் செய்திகள்.*

*1. வேட்டை மஹால் மூன்று சிறுத்தைகளுக்கு கொட்டியத்திலிருந்து மசாலை*

---

17. டாக்டர் சிவேஸ்தர் - ஸர் தாமஸ் சிவேஸ்தர் - இவர் சரபோஜி காசியாத்திரையில் இருந்தபோது தஞ்சையிலிருந்த ஆங்கில வைத்தியர் ஆவர். சிவாஜி கி.பி.1821இல் உடல்நலம் குன்றியபொழுது வைத்தியம் செய்தமைக்கு இவருக்கு 100 புலிவராகன் கொடுக்கப்பட்டது.

18. புலிவராகன் புலி - (phuli) - அழகுபடுத்தப்பெற்ற என்று பொருள்படும். 45 பணம் ஒரு புலி வராகன். அதன் சரிபாதியும் உண்டு. (பக். 150).

19. சிவராத்திரி - சிவபக்தர்கள் நாள்முழுதும் பட்டினியிருந்து இரவெல்லாம் கண்விழித்துச் சிவனை 4 காலமும் அருச்சித்து மாசிமாச தேய்பிறை 14ஆம் நாள் அனுட்டிக்கும் விரதம்.

20. சம்பூபிரஸாத் - குதிரைக்குப்பெயர்.

21. யாதி - பட்டியல்

22. சங்கீத வித்யாதிக - இசைவல்லார் உள்ள பிரிவு

23. தருமய்யா ராமஸ்வாமிய்யா - இவர் சேனாதுரந்தரர் வராஹப்பய்யாவின் தந்தை.

24. விஜயதசமி - மகாளய அமாவாசைக்குப் பிறகுவரும் வளர்பிறைப் பத்தாம் நாள்.

25. 64 கோயில்கள் பெயர் - தமிழ்ப் பல்கலைக் கழகப் பகுதி III - மூட்டை - 3c - ஆவண எண்.1. (பக்.188-191)

*மிளகு சேர் 1/2,சுக்கு சேர் 1/2, கண்டத்திப்பிலி சேர் 1/2,திப்பிலி சேர் 1/4,*
*அகல்கரா 9 டாங்க்ரூமசாவரி ஏமம் 1/4 சேர்,அமுக்கராக்கிழங்கு 1/4 சேர், ஓமம் சேர் -1,*
*கற்கண்டு சேர் -1/2,கொட்டைப்பாக்கு -40 ,*
*சிறுத்தைப் புலியின் குட்டிக்கு "நலக்" போடுவதற்கு கொட்டியத்திலிருந்து ஓமம் சேர் 1/4*
*வசம்பு சேர் 1/4 = 1 1/2*

*(2) மா. அஹில்யாபாயி[26] சாயேப்-திருநள்ளார் ஸ்ரீசனீஸ்வர பகவானுக்கு நெய் விளக்குப் போடுவதற்கு தினமொன்றுக்கு 1/2 பணம் வீதம் மூன்று மாதங்களுக்கு சக். 4 1/2 கொடுக்கிறது.*

*8. 1778*
*1. ரா. மகாராஜா[27] சாஹேப் மாயவரத்திற்கு வந்ததற்குச் சிலவு சக். 102-2 3/4*
*11. 1821*
*யானைக்கானா[28]-சம்பு பிரஸாத் என்னும் யானைக்குட்டி வாயுவினால் ஆகாரஞ் செல்லாததால் உள்ளுக்குக் கொடுக்க 5 நாட்களுக்கு*
*காயம் 7 டாங்க், முலிதார் சிங்கு 7 டாங்க், கௌரி பாஷாணம் 7 டாங்க், வெள்ளைப் பாஷாணம் 7 டாங்க், ரஸகற்பூரம் 7 டாங்க், விளக்கெண்ணை சேர் 2, உப்பு சுமார் படி 2*

*11. 1821*
*(2) ஜாம்தார் கானா[29] (துணிமணி)*

*வண்ணான் நாகமுத்து வெளுத்த துணியில் முள்ளிருந்ததினால் அவனுக்கு அபராதம் வாங்கப்பட்டது. தேங்காய் சுமார்-6*

*(3) நகர் பரிஷ்காரமஹால்[30] அப்தார் கானாவிற்கு[31] எதிரிலுள்ள புதுமகால் வகையறாக்களைக் கட்டுவதற்கு மெய்யாடு சிலவு சக். 8 3 27/32.*

*13. 1821*
*1. ஆயுதசாலை[32]-சாது ஜனங்களிடமுள்ள மத்தளம் தயார் செய்ய கோதுமை சேர்-1/4, ந. எண்ணை 1/2, கொடுக்கிறது.*

*(2) 1821*
*தட்டி மகாலில்[33] பிறந்த காகர்ஸி என்னும் பசுமாட்டுக்கு இளவே குணல் என்னும் வலி*

26. அஹில்யாபாயி - இரண்டாம் சரபோஜியின் இரண்டாவது மனைவி; சிவாஜியின் தாய் (பக். 31).

27. மகாராஜா என்றது துளஜா

28. யானைக்கானா - இது ஹத்திகானா அல்லது பீல்கானா எனப்பெறும் (பக். 454).
29. ஜாம்தார்கானா - அரசகுடும்பத்திற்குரிய ஆடைகளும் நகைகளும் வைக்கப்பெற்ற இடம் (பக். 453).

30. நகர பரிஷ்கார் மஹால் - நகரத்தைத் தூய்மையாக வைத்துக்கொள்வதற்குரிய அலுவலர் இருக்கும் இடம் (பக். 456).

31. அப்தார்கானா - தண்ணீர்ப்பந்தல் (பக். 452).

32. ஆயுதசாலை - ஜிராத்கானா எனப்பெறும் (பக். 455).

33. தட்டிமகால் - மாடுகள் கட்டுமிடம் (பக். 457).

*வந்ததற்காக மருந்துகளின் சாமான்:*
*வேப்பெண்ணை சேர் 5, ந. எண்ணை சேர் 3, சுக்கு சேர் 1 கொடுக்கிறது.*

*15. 1846*
*ஸ்ரீமன்மங்கள வாஸம்[34]*
*பித்தளைப்பாத்திரங்களின் தினுசுகள் பாத்திரங்கள்-பட்டு-வாசனைச் சாமான்களின் ஜபிதா-யானையின் தந்த சாமான்கள் வகையறா.*

*16. 1809*
*1. நவவித்யா கலாநிதி பள்ளிக்கூடம் அச்சு வேலைக்காக.*
*யந்திரத்தில் கட்டை உடைந்துபோனதற்குப் போட 1 1/2 முழம் நீளம் ஒரு சாண் அகலம் ஒரு கருப்புக் கட்டையையும், தச்சனும் இமராதி மகாலி[35] விருந்து வரவேண்டும்.*

*2. மகாராஜாவிற்குச்[36] சொந்தத்திற்கு எண்ணையை ஆட்டுவதற்கு12 சேர் பாலை ஹுஜூர் தட்டி மகாலிலிருந்து கொடுக்கிறது.*

*3. காமாக்ஷி அம்மனுக்கு[37] (ஐப்பசி) பூரம் அன்று மஹாபிஷேகத்திற்கு விண்ணாற்றி[38] விருந்து திருமஞ்சனம் வருவதற்கு ஒரு யானையைக் கொடுக்கிறது.*

*4. புதிய வெள்ளிப் பணம்.*
*பெரிய[39] 29க்கு ஒன்று 2 1/2 பணம் வீதம் சக்கரம் 7-2 9/16 [40] ஒன்று சக். 2.2 வீதம்[41] சின்னது[42] 2க்கு 1 பணம்,10 1/2 காசுக்கு 7/16 பணம்[43]*

---

34. ஸ்ரீமன்மங்கள வாசம் - இரண்டாம் சிவாஜியின் காமக்கிழத்தியர் கூட்டம் (பக். 330).

35. இமாரதிமகால் - அரண்மனையிலும் பிறஇடங்களிலும் நடைபெறும் மராமத்து வேலையைக் கவனித்தலாகிய அலுவலுக்கு இமாரதி என்று பெயர். இவரது அலுவலகம் இமாரதி மகால் . (பக். 458).

36. மகாராஜா என்றது இரண்டாம் சரபோஜியை

37. காமாட்சியம்மன் - இவர் கோயில் மேலவீதியிலுள்ளது (பக்.213இல் எண் 7)

38. விண்ணாறு - வெண்ணாறு ; திருமஞ்சனம் - அபிடேகத்துக்குரிய நீர். (பக். 213).

39. பெரிய என்பது பெரியபணம் அதாவது சென்னப்பட்டணம் வெள்ளிப்பணம்; அதாவது 2 1/2 பணம் ஒரு சென்னப்பட்டணம் வெள்ளிப்பணம் (பக். 150).

40. இதிற்கண்டவாறு கணக்கிட்டால் சக்கரம் 7-2 9/16 என்பது தவறு; 7-2 1/2 ஆதல் வேண்டும்.

41. ஒன்று என்பது வராகன் ஒன்றுக்கு என்று பொருள்படும். சக்.2.2.வீதம் என்பது வராகன் ஒன்றுக்கு 2 சக்கரம் 2 பணம் வீதம் என்பதாகும். 2 1/4 சக்கரம் அதாவது 2 சக்கரம் 2 1/2 பணம் கொண்டதும் ஒருபுலிவராகன் என்று தெரிகிறது. ஆனால் இங்கு 2 சக்கரம் 2 பணம் வீதம் என்றுளது. இங்ஙனம் மதிப்பு மாறுபடுவதுண்டு (பக். 150–151).

42. சின்னது என்பது சின்னப்பணம் ; இங்குச் சின்னது என்பது அரைப்பணம் ஆகலாம். (பக். 152).

43. 7/16 என்பது தவறு; 21/64 என்றிருத்தல் வேண்டும்.

*17. 1821*

1. இராஜமகால்-மராமத்திலாகாவிலிருந்து ஈட்டிகள்-*Refle*[44] அடி கூட கொண்டு வருகிற மாதிரிப்படி 15ஐ புதியதாகச் செய்து கொடுக்கிறது.

2. மராமத்திலாகாவின் மாட்டுக்கு வகவே என்னும் வலி வந்ததற்காக உள்ளுக்குக் கொடுக்க வெந்தியம் படி-1/4, ந. எண்ணை 1 சேர் கொடுக்கிறது.

*23. 1787*

1. மன்னார்குடி கிளியெனூர் மகாலில்- வரவு வைத்த வகையில் பேடி? வெள்ளி சேர் 2க்கு 20 சக். வீதம் 40 சக்.

*25-1804*

1. கணக்கு ஜாபிதா-சுலக்ஷணாம்பாபுரம்[45] சௌ. மா. அஹில்யாபாயி சாயேப் குஞ்ஜ்யாயிஸி[46] ஒப்புக்கொண்டது ரூ 600க்கு மதுரைப்பணம் 1க்கு 8 பணம்[47] வீதம் சக். 480.

*2. 1803*

கும்பகோணம் தாலூகா-ஸமுத்திராங்குடியில் குளத்தில் அகப்பட்டவைகளின் ஜாபிதா ஜில்ஹேஜ்[48] மாதம்.

2.விக்னஹரபீடம் பிரபாவளி -2, 2. நாயெகர-2 அலங்காராஸனம் -2, 2. ஸ்கந்தர், 2. அம்மன், 2. சண்டிகேசுவரர், 1. அஸ்திரதேவர் பாயி[49]-1,ரேன் பீடம்? -1, திரஸி? (தீவட்டி)-1, 2.ஸபாபதி அலங்காரம், 2.ப்ரா அம்மன், . ஜீவன நாயகர், 2. சுப்பிரமணிய ஸ்வாமி-அம்மன் இல்லாமல் பக்த திரஸி-1, 1.க்ருகோரனி தாதி, 1.படாரி, 1.திரஸி-1, 1.பிரதினம் 21/22 = 24

*26-1821*

1. ஸரஸ்வதி மஹாலில் இராமாமிருத தரங்கம் என்னும் கிரந்தத்தின் பிரதிகளை மாப்பிள்ளை ரா. நாகோஜி மொஹிதே[50] இடம் கொடுத்து வாங்குகிறது.

*27. 1804*

மாரியம்மன் கோவில் முதலான 17 கிராமங்களின் கண்டு முதலிலிருந்து திருடின நெல்லின் கணக்கு.

---

44. Rifle - சுழல் துப்பாக்கி

45. சுலக்ஷணாம்பாபுரம் - வேளங்குளம் என்ற ஊர். சுலக்ஷணாபாயி இரண்டாம் துளஜாவின் மூன்றாவது மனைவி. இவர் இறந்தபிறகு இச்சத்திரம் இரண்டாம் சரபோஜியின் மனைவி அஹல்யாபாயிக்கு உரியதாயிற்று (பக். 273).

46. குஞ்ஜ்யாயிஸி - மேற்பார்வை

47. ஒரு ரூபாய்க்கு 6 1/2 பணம் வீதம் கணக்கிடுதலே பெரும்பான்மை.மதுரைப்பணம் ஒரு ரூபாய்க்கு 8 பணம் வீதம் கணக்கிடப்பட்டது என்று இதனால் தெரிகிறது.

48. ஜில்ஹேஜ் - முகமதியர் மாதங்களில் 12ஆவது.

49. திருவிழாக்காலங்களில், சுவாமி புறப்படுவதற்குமுன் தெருக்களைச் சுற்றிக்கொண்டுவரும் ஆயுத வடிவமான மூர்த்தி.

50. நாகோஜி மோஹிதே - இவர் இரண்டாம் சரபோஜியின் மகள் இராஜகுமாரபாயியின் கணவன். இராஜகுமாரபாயி என்பவர் அஹல்யாபாயியின் வயிற்றில் பிறந்த இரண்டாவது மகள் (போ.வ.ச.பக்.138)

*28.1778*

*1. திருமாந்துரையின் குடிகளும், பெரும் விவசாயிகளும்,ஹைதருடைய காலத்தில்[51] கொள்ளை அடித்ததினால் ஒப்புக்கொண்டது சக்-120.*

*36.1799*

*1. மோதிராஜ் என்னும் யானைக்குச் சளியானதால் தண்ணீரைக் கொஞ்சமாக குடிப்பதற்கு உள்ளுக்கு மருந்து*

*குசவியின்? விரை 12 சேர், வெல்லம் 10 சேர், ஓமம் 1 சேர், நெய் 1 சேர்*

*30.1782*

*1. ஸர்காருக்கு மனு.*

*ஸேவகனான வீரராகவ நாயக்கன்-வேலையிலிருந்து விலகின நாள் முதற்கொண்டு தினமொன்றுக்கு 6 படி அரிசி வீதம் திருடிச் சமைத்து 11 பேர்களுக்கு அன்னமளித்து நானும் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். அந்த 11 ஆஸாமிகளின் பெயர்கள்.*

*33. 1809*

*2. கத்தியைச் சொருகுகின்ற உறை தயார் செய்ய 4 தச்சன்களுக்கு 7 5/16 பணம்.*

*3. டூரியன்[52] துரைக்கு வீட்டில் மான்கொட்டகைக்குக் கொரடுகட்ட சக். 1-1 15/16*

*4. ஹஜாரி வாசலி[53]ன் வடவண்டை வாசப்படி மண்டபத்தில் மேல் நகார்கானா[54] கொரடின் சுவறு போடுவதற்குச் சிலவு சக் 2-1 5/16*

*(1)வேட்டை மகால்-ஜவ்வாது பூனைக்குச் செய்வதற்கு 51/2 பணம்*

*(5) யுத்த வண்டியின் வேலைக்கு மெக்கயாடு சிலவு சக்.1-4 3/16*

*ஜயவந்த வண்டியைப் பழுதுபார்க்க சக் 3-1/8 பணம்.*

*(6) கொட்டியத்திலிருந்து மகாராஜா சாப்பிடுகிற இடத்திற்கு விளக்குக்கு ந. எண்ணை 1/2 சேர் கொடுக்கிறது.*

*(7) சிவகங்கையின் பூஜைக்குத் தக்ஷிணை-1 பணம்*

*(8) குதிரைக்கு உஷ்ணந் தணிவதற்காக "தஹிபுத்தி" என்னும் தயிர்சாதம் 2 வாரங்களுக்குத் தினமொன்றுக்கு கைவி அரிசி படி -5 இடை, தயிர் சேர் -10*

*வெங்காயம் வீ -1/4, ஜீரகம் சேர் -1/4 - 4 1/2 டாங்க் மல்லி சேர் -1/4 - 4 1/2 , ஸஜீமா கொள்ளு*

*(9) திருநாகேஸ்வர ஸ்வாமிக்கு உற்சவத்திற்கு வழக்கப்படி வாஹனங்களைத் தூக்குவதற்கு ஜனங்களைக் கொடுக்க வேணுமென்ற அர்ஜி*

*(10) நவராத்திரிக்காக ஸதருக்கு இரத்தினசபை மாடியைக் கூட்டி "பெருக்கி டேராவுக்கு காட்சீ மண்ணைக் கூட்டிப்போட சிலவு மெக்யாடு பணம் 2 3/4*

---

51. தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும் (பக். 91-92).

52. டூரியன் - இவர் கி.பி.1798 முதல் தஞ்சையில் ரெஸிடென்டாக இருந்தார் (போ.வ.ச.பக்.133-134).

53. ஹஜாரிவாசல் - வடக்குவாசல் (பக். 455).

54. நகார்கானா - டமாரம் போன்ற பலவிதமான ஒலிக்கும் கருவிகள் வைக்கப்பெற்ற இடம் . (பக். 454-455).

*33.1809*

*(11) நாளையதினம் ஆயுதங்களைக் கழுவ தாஸ்தான் மகாவின்[55] லாயத்திலுள்ள குளத்திற்குப் போவதால் அவர்களுக்கு வழக்கப்படி பிருதுகளைக் கொடுக்கிறது.*

*36.1799*

*(2) கிரிராஜ் என்னும் குதிரைக்கு வாயுவுக்காக உள்ளுக்குத் தினம் கொடுக்க ஒரு வாரத்திற்கு இஞ்சியைக் கொடுக்கிறது.*

*(3) அமரசிங்கு[56] அவர்களிடமுள்ள கணக்குப்பிள்ளை தஸ்தாவேஜு ஆபிஸிக்கு 3 நாட்கள் வருவார். அவரைப்.........பார்த்துக் கொள்ளுகிறது.*

*37.1821*

*(1) யாதி. மகால் அன்னசத்திரம் மல்லியம்[57] சௌ. மா. அஹல்யா பாய் சாஹேப் நாகபட் சதாசிவபட் லாண்டகே சத்திரத்தின் தருமத்திற்காக வெங்கடாசாரி அய்யங்காரிடமிருந்து 1/4 வேலி ஸர்வமானியம் நிலத்தை வாங்குவதற்கு 200 சக்ரம் போதை (கஜானா) யிலிருந்து கொடுத்து வருஷத்திற்குப்பின் பயிர் வருமானத்தில் திருப்பி வாங்க உத்திரவு செய்ய வேணுமென்று.*

*38.1809*

*1. மகால்-ஸர்பத் கானா[58]விலிருந்து மூனா? (இரும்புக்கொக்கி) ஒன்றை ஜான்மிஸ்திரியேவுலஹாஸ கொரவஞ்சி நாடக[59]த்திற்காக பாகவத் மேள[60] இடத்தில் கொடுக்கிறது.*

*40-1799*

*(1) தஸ்தாவேஜீ ஆபீஸீக்கு-ரா-அமரசிங்கு போஸலே இடத்தில் மிகிமாவில் கணக்கு எழுதிக்கொள்ள அவர்களிடமுள்ள கணக்குப்பிள்ளை வருவார். அவரிடம் கணக்கை எழுதும்படி செய்கிறது.*

*2. பெரிய கோவில் ஸ்வாமிக்கு லக்ஷம் வில்வார்ச்சனை சக் - 10*
*கடைவீதி ராமசாமி[61]க்கு லக்ஷம் பன்னீர்பூ அர்ச்சனை- 5*

---

55. தாஸ்தான் மகால் - நெற்களஞ்சியம் (பக். 453).

56. அமர்சிங்கு - 1798இல் பதவியிழந்து திருவிடைமருதூரில் இருந்தவர்.

57. மல்லியம் சத்திரம் - மயிலாடுதுறைக்கருகில் உள்ளது மல்லியம். இங்குள்ள சத்திரம் இரண்டாம் சரபோஜியின் மனைவி அஹல்யாபாயியின் மேற்பார்வையில் இருந்ததாகத் தெரிகிறது (பக். 273, அடிக்குறிப்பு 97 ஆ).

58. ஸர்பத்கானா - குளிர்பானம் தரப்படும் இடம் (பக். 452).

59. கொரவஞ்சி நாடகம் - குறவஞ்சி நாடகம். இது முத்துக்கவிராயர் என்னும் புலவரால் ஸாஹஜி பேரில் எழுதப்பட்டது (பக். 226, 445).

60. பாகவதமேளா - இசை நாடகக்குழு (பக். 230–231).

61. இது அய்யங்கடைவீதியிலுள்ளது. பஜார் ராமசாமி என்று ஒரு ஆவணத்தில் குறிக்கப்பட்டுள்ளது (பக். 188 அடிக்குறிப்பு எண். 11).

ஸ்ரீகிருஷ்ண ஸ்வாமிக்கு[62] பாரிஜாத புஷ்பார்ச்சனை - 5
3. யாதி கள்ளப்பத்து-பாளையம்பட்டைச் சேர்ந்த நம்ராபட்டி என்னும் ஊரில் யேகரமூர்த்தியின் குதிரை பயிரில் மேய்ந்ததற்காக முரட்டுத்தனமாய் காதையும் வாலையும் அறுத்து விட்டதினால் அபராதம் சக்.3

*41.1821*

1. ஸர்காரிடமிருந்து வந்த இரதி மன்மதருடைய படத்தை இராஜமஹாலில் [63]வைக்கிறது.
கிருஷ்ண விலாஸத்தின் குளத்திற்குத் தண்ணீர் விடுகிறது.
மகால்-ஆயுதசாலையைச் சேர்ந்த மகாலிலுள்ள சிங்காதனத்தை முகூர்த்தத்தின்படி ஹுஜூர் மாடியில் கொண்டு போகிறது.
2. யாதி-திருவையார் தேவஸ்தானம்—ஸ்ரீஸ்வாமிக்குத் தைப்பூசத்திற்கு மண்டகப்படிக்காக தஞ்சாவூரில் நாணேகார் செட்டியார் 10 சக்ரம் கொடுத்து, மண்டபப்படியைச் செய்வது வழக்கம் ஷெ துகையை வசூல் செய்ய (ஜகாயதி) சுங்கத்திலிருந்து ஒரு சிப்பாயைக் கொடுக்க வேணுமென்று- (பஞ்சநதீஸ்வர)[64]
3. சௌ. சி. ஸக்வார் பாயிசாகேப்[65] அமணி ராஜே சாயேப் [66] அவர்களிடம் ஜாம்தார்-கானாவிலிருந்து ஒரு ஜோடு (பாதரக்ஷயை)தைத்துக்கொடுக்கிறது.

*42.1821*

(1) நகரசுத்தி மகால்
ஒரு மாட்டுக்குக் கழுத்து வீங்கியிருப்பதற்கு ஒத்தடம் கொடுக்க கைலி உப்புபடி-1/2
மாட்டுக்குச் சிரங்கு வந்ததற்குத் தடவ வேப்பெண்ணை சேர் 2 கொடுக்கிறது.
(2) ஜாமதார்கானாவில் 32 கொடிகளைத் தயார் செய்ய வேண்டிய சாமான்கள்
சுவர்ணக் காவி -சேர் 2, கோந்து -சேர் 1, காசுக்கட்டி -சேர் 1/2, பால் -சேர் 3
எலுமிச்சம்பழம் -சேர் 50
(3) யாதி-சௌ. சைதம்பாயி[67] சாயேப்-இடம் கொட்டியத்திலிருந்து சாமான் வகையறா கொடுப்பது துவரை 15 கலம்
வத்தலுக்கு-காய்கறி வகைகள்-கத்தரிக்காய், அவரைக்காய் வகையறா வடாம்போட, இலந்தைப் பழம்-10 கலம், நெல்லிக்காய் - 7 கலம்

*42.1821*

(4) இராஜ மஹால்

---

62. நவநீத கிருஷ்ணசுவாமி (இக்கோவில் மேலவீதியிலுள்ளது)(பக். 189 அடிக்குறிப்பு 30; பக் 212இல் 8).

63. ராஜ்மஹால் - அரண்மனையில் அரசர் இருக்கும் இடம்.

64. பஞ்சநதீஸ்வர - திருவையாற்றில் கோயில் கொண்டுள்ள ஐயாறப்பர்.

65. ஸக்வார்பாயி - அமர்சிங்கரின் மனைவியருள் ஒருவர்

66. அமணிராஜேசாயபு - அமர்சிங்கரின் மகள்(?)

67. சைதம்பாபாயி - சிவாஜியின் முதல் மனைவி (பக். 32).

*(5) 1821*

நவவித்யா கலாநிதி பள்ளிக்கூடம் மாடியின் கீழே கேசவப்பட்டுக்கு வசிப்பதற்குமிடமும், சமையில் அறையில் பைராகி[68]களுக்குத் தங்க வசதிக்கும் மெய்யாடும்[69] தளவாடமும் சிலவு சக். 26-3 15/16

*( 6) 1821*

சிங்காதனத்தை மாடியில் வைப்பதற்கு முகூர்த்தம். மாக மாஸம்[70] சுக்கிலபக்ஷம்[71] திங்கட்கிழமை பகல் 12 நாழிகைக்கு மேல் 15 நாழிகைக்குள் நல்ல முகூர்த்தம்.

*44-1809*

(1) தஞ்சை கோட்டை தேவஸ்தானம் சென்னப்பட்டணம் வெள்ளிப்பணம் 400க்கு ஒன்று 2 1/2 பணம் வீதம் சக். 100

(2) கல்யாண மகால்[72] மாடியில் அச்சு வேலைக்காக ஆயுதமாகாவிலிருந்து வெள்ளை மேஸா?5 கொட்டியத்திலிருந்து இங்களீக[73] 1/4 சேர்

(3) சிப்பாய்களின் 3 குதிரைகளுக்கு-ஜாஹரஹ தவஹேல கடக்யா? வின் முடிச்சிக்கட்டி வெடித்ததினால் தடவுவதற்கு மருந்து-சூடம்சேர் -19, வெங்காரம் -19, முருதார்சிங்கு -9 டாங்க், வசம்பு -1/2 சேர் வேப்பெண்ணை -3/4 சேர், புசிநவி -1/4 சேர்

(4) ஸாரங்கி[74] வாத்தியக்காரர் குப்புசாமி கோபாலய்யா இருவரும் ஸாரங்கி வாத்தியத்தின் சாமான்களை தினமும் கொண்டு வருவார்கள். போவார்கள். அவர்களுக்கு விடவும்

*43-1841*

(1) வேஷத்தின் ஸமஜாவிஸி

ஜாபிதா ஸ்ரீமத் கௌஷளகச்சேரணே சிவராத்திரிக்காக ஹுஜுர் கிருஷ்ண விலாஸம் மாடியில் பெண்களின் விகடகவிகளின் வேஷம் வகையறா போட்டுக்கொண்ட விவரம்.

*43-1841*

(1)கோந்தளத்தின்[75] விவரம்-பூதகோந்தளம்-ரேணுகாதேவியன்-பவானியின்-ஸரஸ்வதியின் கோந்தளம்-நடிக்கின்ற பெண்களின் பெயர்-வாத்தியங்கள்-வேஷத்தின் துணிமணி வகையறாக்களின் விவரம்–பெண்கள் நாடகம் நடித்தார்கள்.

---

68. பைராகிகள் - வடநாட்டிலிருந்து யாத்திரையாக வரும் துறவிகள்.

69. மெய்யாடு - குத்தகைக்கு விடாமல் தாமே செய்யும் வேலை.

70. மாகமாஸம் - மாசித்திங்கள்

71. சுக்லபக்ஷம் - வளர்பிறை

72. கல்யாண மகால் - இரண்டாம் சரபோஜியின் காமக்கிழத்தியர் தங்கியிருந்த இடம் (பக். 329–330, 459).

73. இங்குலிகம் - சாதிலிங்கம்

74. ஸாரங்கி - இது ஒரு வடநாட்டு இசைக்கருவி

75. கோந்தளம் - மராட்டியருக்குரிய தனி நிகழ்ச்சி. கோந்தளம் என்ற பறையைக் கோந்தளர் அடிப்பர். இதில் பெண்களும் பங்கு கொள்வர். (பக். 347–348).

*(2) 1841 ரஜப்சந்த்[76] வெள்ளிக்கிழமை பிள்ளையாருக்கு எதிரில்-சிரைனே-நாடக சாலாவின் பெண்கள் மேளம் வாசித்தார்கள். மண் பிள்ளையாரைப் பிருது-யானை- குதிரை மேளதாளத்துடன் வடவாற்றில்[77] கொண்டுபோய் போட்டார்கள்.*
*(3) சந்த். காலையில் சௌ. சி. ராஜஸபாயி அமணிராஜே[78] சாஹேப்புக்கு எட்டாவது மாதத்தில் மடி நிரப்பினார்கள். மத்தியானம் விஜயவிலாஸ்[79] மகாலில் ஆவுசாப்[80] இருந்த இடத்தில் சௌ. சி. ராஜ்யாயீக்கு மடியை நிரப்பினார்கள். கர்நாடக நாட்டியமும் பாட்டுக் கச்சேரியும் நடந்தது.*

## மூட்டை எண்-170C

*29. 1858*
***1.யானை வைத்தியர் வீரராகு, 2.குதிரை வைத்தியர் திரியம்பகராவ் லக்ஷமணராவ் ஜகதாப், 3.வைத்தியர் சாமிசாஸ்திரி அப்புசாஸ்திரி மாஸம் ரூ.7, 4.விஷ வைத்தியம் சிதம்பர சாஸ்திரி நாராண சாஸ்திரி ரூ.5,** பெண் வைத்தியர் மருத்துவச்சி லச்சுமி ரூ.3 **5.ஸரஸ்வதி பாண்டார்[81] பூஜை செய்கிறவன் கோபாலய்யா கன்னய்யா** ரூ.3 காகித புத்தகம் எடுக்கிறவர்கள்: சங்கர்பட் மகாசப்தே ரூ.3 ஓலை புத்தகம் எடுக்கிறவன்: குப்பாபட்டர்-சாம்பபட்டர் ரூ.3 **நாகேஸ்வரஜோஷி-ராமலிங்க ஜோஷி***
*1. 6. 1858*
*வாத்தியார் வேதமூர்த்தி ரா. பாளம்பட் பட்கோசாமி[82]-30 வேதமூர்த்தி ரா. சிவுபாள கோவிந்தபட்கோசாமி-15.*

*14.1857*
*1. சி. விஜயமோஹன முக்தாபாய்[83] அமணி ராஜே சாயேப்-இடமுள்ள 15 ஆஸாமிகளுக்கு மாதம் 1க்கு 2 1/2 ரூ வீதம் 619.*

## மூட்டை எண்-172C

*19. 1830*
*1. புலி[84] வராகனின் மதிப்பு*

---

76. ரஜப் சந்த் - முகமதியர் மாதங்களில் ஏழாவது.

77. வடவாறு-தஞ்சைக்கும் கரந்தைக்கும் இடையில் பாயும் ஆறு (பக். 213).

78. ராஜஸபாயி அமணிராஜே - இரண்டாம் சிவாஜியின் மூத்த மகள்

79. விஜயவிலாஸ்மகால் - அஹல்யாபாயி இருந்த அரண்மனைப் பகுதி.

80. ஆவுசாப் - அஹல்யாபாயி

81. ஸரஸ்வதிபாணடார் - சரசுவதிமகால்

82. வேதமூர்த்தி ரா. பாளம்பட் பட்கோசுவாமி - இவர் அரசகுரு; இசையிலும் வல்லவர் (பக். 224).

83. இவர் சிவாஜியின் இரண்டாவது மகள் (இவர் தான் சிவாஜிக்குப் பின் மூத்த இளவரசியாக இருந்தவர்.)

84. புலி - (phuli) புலிவராகன்— 45 பணம் (பக். 150).

# முட்டை எண் – 173C

*8. 1816*

1. மிஸ்தர் ஜான்பாதரி[85] துரைக்கு 260 புலிவராகன் கொடுக்கிறது.

*17 1. 1834*

வேட்டை மகாலுக்கு தினந்தோறும் கொடுக்க வேண்டிய மொயின் துகையும் சாமான்களுடையவும் ஜாபிதா.

*24.1814*

1. யானைக்கானா-2 யானைகளுக்குக் "கசிவீ" ஏறியிருப்பதினால் பத்துப்போட தினமும் கொடுக்கும் ஜாபிதா-அபின் சேர்-2, சிந்தூரம் சேர்-2, வெண்ணை சேர் -1 வீதம் 3 நாட்களுக்கு கொடுக்கிறது.

*24. 1814*

(2) வெடிமருந்து சாலை[86] வெடிமருந்து தயார் செய்ய கொட்டியத்திலிருந்து சாராயம்-புட்டி சரக்கு சேர்-4, பூண்டு சேர் -1, எலுமிச்சம்பழம்-20 வேலை முடியும் வரையில் கொடுக்கவும்.

*9. 1816*

1. கும்பனியிலிருந்து ஸர்காருக்குக் கொடுப்பதென்று தீர்ந்த 1லக்ஷம் ரூபாயும் 5வது பாகமும்[87] ரெஸிடெண்ட்[88] இடமிருந்து பெற்றுக்கொள்ளப்பட்டது. அதற்கு 18-6-1816ல் சென்னப்பட்டணம் வெள்ளிப்பணம் 630000க்கு வராகனொன்றுக்கு 45 பணம் வீதம் புலி வராகன் 14000 வரவு வைக்கிறது.

*7. 1834*

(1) ஸரஸ்வதி மஹாலின் தரும சாஸ்திரிகள் நிர்ணய ஸிந்து[89] முதலிய கிரந்தங்களைப் பார்த்துச் செய்த தீர்மானம். தூர தேசத்தின் ஒரு பிராமணனுடைய சம்சாரம் இறந்தற்கு அவன் வருவதற்கு 10 நாழிகை செல்லுமாகையால் க்ஷேத்திரபுரம் அக்ராரத்தின் அண்ணாகுட்டி என்பவர் அவளை தகனம் செய்ததினால் 10 நாள் தீட்டு என்று ஊரார் சொன்னதற்கு சாஸ்திரப்படி 3 நாள்தான் என்று தீர்மானிக்கப்பட்டது.

(2). உடுப்பி தந்தமுள்ள யானைக்கு வாயுவினால் கால் பிடித்திருப்பதால் உள்ளுக்கு மருந்து. 45 நாட்களுக்கு மாவுத்து[90] வசம் கொடுப்பது.

---

85. ஜான்பாதரி - இவர் தரங்கம்பாடியில் ஒரு ஆங்கிலப்பள்ளி நடத்தி வந்தவர் என்று தெரிகிறது (பக். 211, 245, 266).

86. வெடிமருந்து சாலை - தாருகானா எனப்பெறும் (பக். 452).

87. 25-10-1799இல் இரண்டாம் சரபோஜி ஒரு உடன்படிக்கை செய்துகொண்டார் இதன்படி வசூல் செய்யும் உரிமை கும்பினியாருக்கு உரியதாயிற்று. இதில் ஏழாவது ஷரத்தின்படி ஒரு லக்ஷம் வராகனும், அமர்சிங்குக்குக் கொடுக்கும் தொகையும் வசூல் செய்வதற்குரிய செலவுகளும் போக எஞ்சியுள்ள நிகர வருமானத்தில் ஐந்தில் ஒரு பங்கும் அரசர் பெற்றுக்கொள்ள வேண்டும் என்பதாகும் (பக். 53-54).

88. ரெஸிடென்டாக இருந்தவர் வில்லியம் பிளாக்பர்ன் ஆவர்.

89. நிர்ணயசிந்து - தீர்ப்புக்கூறுவதற்குப் பயன்படுத்தப்பட்ட சட்ட நூல்களில் ஒன்று. இந்நூலாசிரியர் கமலாகரபட்டர் ஆவர்.

90. மாவுத்து - யானைப்பாகன்

**சுக்கு 1/4 சேர், அரிசித்திப்பிலி 1/4 சேர், கண்டத்திப்பிலி 1/2 சேர், காயம் 1/2 சேர், கோதுமைப்படி 2, செவ்வியம் 1/4 சேர்,** அபின் 1/4, சேர் உப்பு படி 2, பனைவெல்லம் 2 சேர், ஜகாய[91] த்திலிருந்து பானை 1ம் செட்டி 1ம் விறகு 2 மனு[92] கொடுக்கிறது.

*(3) கோதானம்[93] ஜாபிதா-சகம் 1757[94] சைத்ரசத்த ஸப்தமி[95] ஜோஸி நாகோபா கோஸாவீக்கு[96] ராமநவமிக்காக[97] கொடுக்கிறது.*

***16. 1834***

*(1) மந்திரி வர்ய ஸதாசிவ கேசவ பண்டிதர்[98] வீட்டின் கிணற்றுக்குச் சிவகங்கை ஜலம் விடுகிறது.*

*(2) மராட்டி எழுத்துக்களைக் கற்பிக்கிற சாமாசாரியார் வீட்டுக்குச் சென்று சீக்கிரமாக வராமலிருந்ததினால் பள்ளிப் பையன்கள் வெளியே வந்து சாக்கடையில் விழுந்து காயப்பட்டதினால் அபராதம் 6 பணம் வாங்கப்பட்டது.*

***10.1834***

*1. யுத்தசாலையில்-கிலிட்[99] வேலைக்கு வேண்டிய சாமான்கள் ஜாபிதா*
*புளி சேர் 1/2, உப்புபடி 5, தேங்காய்(கொப்பரை) சேர் 5*
*எலுமிச்சம் பழம் 100, பாதரசம் 1/4 சேர், சீயக்காய் 5 சேர்*
*அவல்படி 20, கெட்டித்தயிர் படி 20, வெல்லம் 1/4 மனு கொடுக்கிறது.*

*(2) ஸர்காருக்கு முரப்பா[100] செய்வதற்குச் சாமான் கொட்டியத்திலிருந்து*
*திராக்ஷை 1 சேர், ஜீரகம் 2 சேர், இந்துப்பு 8 1/2 சேர், எ. பழம்-140*
*இஞ்சி 1/4 சேர், பந்தர் பழம்[101] 7, துருஞ்சு[102] 5, கரும்பு 15*

---

91. ஜகாயத் - சட்டிபானை செய்யும் இடம் ஆகிய பராஸ்கானா ஆகலாம்

92. மனு - மணங்கு

93. கோதானம் - பசுவைத் தானம் ஆக அளித்தல்

94. சகம் - சாலிவாகன சகாபதம், சகரயாண்டுடன் 78 சேர்த்தால் ஆங்கில ஆண்டு வரும். சகம் 1757 கி.பி.1835

95. சைத்ரம் - சித்திரைமாதம்; சுத்தம் வளர்பிறை; ஸப்தமி - ஏழாம் நாள்.

96. கோஸாவி - கோஸ்வாமி (வணங்கத்தக்க பெரியார்களைக் கோஸ்வாமி என அழைக்கும் மரபு இருந்தது.)

97. இராமர் அவதரித்த நாளாகிய சைத்திர சுக்கிலபக்ஷத்து (வளர்பிறை) ஒன்பதாம் நாள்.

98. ஸதாசிவ கேசவபண்டிதர் ; (பக். 83-85). இவர் வீடு தெற்கு வீதியில் இருந்தது (பக். 85). சிவகங்கையினின்று பூமியில் பாதை அமைத்துத் தண்ணீரைக் கொணர்ந்ததாகத் தெரிகிறது

99. கிலிட் - முலாம்பூசுதல்

100. முரப்பா - பாகில் ஆறவைத்த தின்பண்டம்

101. பந்தர் என்ற மசூலிப்பட்டணத்திருந்து வந்த பழம் ஆகலாம்.

102. துருஞ்சி - பேரெலுமிச்சை

*10.1834*

(3) தஸ்தாவேஜு மகால்[103]

காகிதக்காரனுக்கு முத்திரை போட்டுக்கொடுக்க 300 ஒலைகள். முத்திரை போட காகிதத்தைக் கத்தரித்துக் கொடுக்கிறது: ஸர்காரின் தாவா விஷயத்திலும் கொடுக்கல் வாங்கல் விஷயத்திலும் வழக்கப்படி முத்திரை போட்டுக் கொடுக்கிறது.

(4) யுத்தசாலையில்[104]-அல்லாப் பண்டிகைக்காக "பராயிமா"வினிடத்தில் இரண வித்தை வாயு ஸ்தம்பம்[105]வேஷத்திற்கு ஹாவால்தார் கருப்பனாசாரி வசம் கொட்டியத்திலிருந்து எ. பழம் -20, வா. இலை -5, சிகப்புப் பருத்தி-கட்டு-3, அரிசி மாவு படி-2, மஞ்சள் சேர் -1/2, ஜாமதார் கானாவிலிருந்து காதி[106] துண்டு 1முழம் கொடுக்கிறது.

(5) தன்வந்திரி மகாலிலிருந்து[107]ஜயதக்ஷ்ப்ரதீக ஸைநீக [108]முகாஜிக்கு விஜய பைரவ சொடல எண்ணைசேர் 1/4 கொடுக்கிறது.

(6) கொட்டியத்திலிருந்து ஸ்ரீசிவ சுகிருதாபி விருத்தி க்ருதக்ஞ வரிஷ்ட ஜனபதக்[109]கின் தோட்டத்தின் 25 3/4சேர் கஞ்சாவைக் கேட்டு வாங்கி, தண்ணீர் (ஜல) சாலையில் கொடுக்கிறது.
(7) கிருஷ்ண விலாஸத்தின் சௌகண்டிக்குப்[110] பராஜோதந்தராஜ் சொன்னபடி கட்டையினால் ஒத்தப்படி (மிதி) தயாரித்துக் கொடுக்கிறது.
(8) யுத்தசாலையில் சொல்வி டஹீட் ஜைத்ராவிலிருந்து பழுதாய் வரும்விலங்குகளைத் தயார் செய்து கொடுக்கிறது.

## மூட்டை எண்- 175C

*7. 1854 Ap.*

(1-8) முகாசா[111] கிராமங்களின் கூடுதல் வசூல் பாக்கி கிராமவாரி ஸ்டேட்மெண்டுகள்
17. ஆரணி ஜாகீர்தா[112]ருடைய வரவு சிலவு கணக்கு-1797 வரு

103. தஸ்தாவேஜி மகால் -தப்தர்கானாவாகும் (பக். 453).

104. யுத்தசாலை என்பது ஜிராத்கானா வாகும் (பக். 452).

105. வாயு ஸ்தம்பம் - காற்றை இயங்காமல் செய்யும் வித்தை

106. காதி - முரட்டுத்துணி

107. தன்வந்தரி மஹால் - மக்கள், விலங்குகள், பறவைகள், ஆகிய எல்லாவற்றுக்கும் வைத்தியம் செய்யக்கூடிய வைத்தியர்கள் இருந்து ஆய்வு செய்த இடம்; இங்குப் பல மருந்துகளும் செய்யப்பெற்றன.

108. பிரதீகம் - உறுப்பு; சைனிக் - பட்டாளத்துப் பதவிகளில் ஒன்று

109. சுகிருதாபிவிருத்தி க்ருதக்ஞ வரிஷ்ட ஜனபதக்: சுகிர்தாபிவிருத்தி-நன்மையை வளர்க்கிற; க்ருதக்ஞ - செய்நன்றி அறிகிற ; வரிஷ்ட - மேலான; ஜனபதக் - மக்கட்கூட்டம்.

110. கிருஷ்ணவிலாஸ் - அரண்மனையின் ஒரு பகுதி, சௌகண்டி - சதுரத்திண்ணைக் கொட்டகை

111. முகாசா-கிராமங்கள் விவரம் (பக். 134–135).

112. ஆரணி ஜாகிர்தார் (பக். 95).

*8. 1824*

ஸர்காரிலிருந்து கிருஸ்மிஸ்[113] பண்டிகைக்காக துரைக்கு ஐந்துக்கள் வகையறா கிருஸ்மிஸ் பண்டிகையின் முந்தினநாள் அனுப்பியதாக ரெஸிடெண்ட் ஜான்பைப்[114]சாயேப்

வாழக்காய் தார்-10, வாழைப்பூ தார்-10, செவ்வந்தி பூ-5000, மாவிலைகட்டு-காட்டுப்பன்றி-1, முயல்-1, பக்ஷிகள்-20. இந்தப்படி க்யாப்டன் ட்வீட் சாயேப்-ஜான் பாதரி சாயேப்[115]-டானியல் கொலப்[116] இவர்களுக்குக் கொடுத்தார்கள். கிருஸ்மிஸ் தினத்தில் மேற்படி துரைகளுக்கு பழவர்க்கங்கள் தட்டு-30, வாழைப்பழம் தார்-2 அனுப்பித்தார்.

*(9) 1824*

முக்தாம்பாபுரம் சத்திரத்தில்[117] அரிசி வகையறா சாமான்களுக்கு மாதாமாதம் (நஷ்டம்) நாசமடைகிறது என்று சத்திரம் காமவிஸிக்காரர் சொன்னார். இதன் காரணம் பின்னால் தெரிய வந்தது. கணந்தங்குடி கிராமத்தின் கள்ளர்களும், வலயர்களும் இரவில் மூன்று பேர்கள் சத்திரத்தின் மேலேறி வந்தார்கள். அது சத்திரத்தின் கமாஸிதாருக்குத் தெரிந்து 3 திருடர்களைப் பிடித்து, சிப்பாயிடம் ஒப்புவித்த விஷயம்

சத்திர தர்மத்தின் காரியம் ஆரம்பமான நாள் முதற்கொண்டு 25௵ வரையில் இப்பேர்ப்பட்ட திருட்டுப் போகவில்லையாகையால் சத்திரத்தின் தர்மம் அத்யந்த ஸுலபமாக[118] நடந்து நாளுக்கு நாள் விருத்தியடைந்தது. அந்தப்படியே இனிமேலும் நடக்கும்படி செய்யவேணும்.

*21. 1825 Aug 1*

(15) கும்பகோணம் தாலூக்காவில் மேலக்காட்டூர் கிராமத்தின் எல்லையில் பாண்டியன் ஆற்றினுடைய (ஸாங்கூ) பாலம் பழையதாக (பழுதாகி) விட்டதால் ரிப்பேர் செய்யவேண்டிய விஷயம்.

*(18) 1825 Aug 5*

ரெஸிடெண்ட்[119] சாயேப் தண்ணீரின் பிரவாஹத்தைப் பார்க்க ஹௌதாவில்[120] உட்கார்ந்து போகையில் தேவதாஸி 'அங்கு' என்பவளின் பெண் நாகூ என்பவள் வண்டியில்

---

113. கிருஸ்மிஸ் - Christmas; டிசம்பர் 25இல் கொண்டாடப்பெறும் விழா.

114. ஜான் பைப்-இவர் 1824 முதல் 1838வரை ரெஸிடென்டாக இருந்தவர் (பக். 66).

115. தரங்கம்பாடியில் ஆங்கிலப்பள்ளி நடத்திவந்தவர் (பக். 211).

116. ஸ்வார்ஷ் பாதிரியார்க்குப் பிறகு தஞ்சையிலிருந்த பாதிரியார் ஆவர்.

117. சரபோஜி, முக்தாம்பாள் நினைவாக எடுப்பித்த சத்திரம் (பக். 273–275). முக்தம்பாபுரம் - ஒரத்தநாடு.

118. அத்யந்த ஸுலபமாக - மிக எளிமையாக

119. ரெஸிடெண்ட் - ஜான்பைஃப்

120. ஹௌதா - யானைமேல் (அம்பாரி) பீடம்

உட்கார்ந்து, ஒரமாகப் போகாமல் வண்டியை எதிரே கொண்டுவந்ததால்அந்த நாகுவிற்கு இன்று ஒரு சக்ரம் 2 பணம் அபராதம் போடப்பட்டது.

*(23) 1856 June 4*
(6) கர்பூர் தோட்டம் ஜம்புகாவேரி[121] யின் சருக்கையின் கரையின் மேல், பாதை (ரஸ்தா) வகையறா செப்பனிடுகிற விஷயம் மணக்கரம்பே வாய்க்கால் வெட்டு கடுவெளி கிராமம் ரஸ்தா ரிபேர் செய்வது.
*(24)1841 Mr. Brookings[122] Account*

*26.1828 மே 2*
(32) பிரின்ஸிபால் கலெக்டருடைய தகப்பனாருடைய படத்தை அனுப்பியிருக்கிறார்.

*26.1828 June 9*
(55) ஸர்கார் இலாகாவின் ஜனங்களின் மேல் சம்மன் வாரண்டு அனுப்புவது உடன்படிக்கைக்கு விரோதமாகும்.[123]

*27. 1826*
*1. Received letter from Resident to Serkele*

*27.1826 Ap. 5*
(31) ரா. அமர்சிங்கு போஸ்லேயின் கடனுக்காக[124] நியமித்த கமிஷனர் ஸர்கார் ரிகார்டு குமாஸ்தா அம்பாஜி பண்டிதர்களிடமிருந்து ஷிகடன் கணக்குகளின் பெட்டியைப் பெற்றுக் கொண்டதற்கும் திருவிடமருதூரிலிருந்து வந்த சில கணக்குகளின் பாயக்கட்டு[125] பெற்றுக் கொண்டதற்கும் எழுதியனுப்பித்த ரசீது ரெஸிடெண்ட் சாயேப் மூலம் சிரஸ்தேதார் வெங்கட்றாவ் ஸர்கார் கொண்டு வ்ந்து கொடுத்தார். அந்த ரசீதும் பேஸஜி அம்பாஜி பண்டிதருக்கு நேர்நேராக கொடுத்த ரசீதும் சென்னப்பட்டணத்திலிருந்து அம்பாஜி பண்டிதர் அனுப்பித்ததும் ஹுஜுர் நவீஸ் (ஹுஜுர் காரியதரிசி)யின் மகாலிலிருக்கிறது.
*27.1826 May 30*
(51) கும்பனியின் தந்திரம்
கும்பனியின் சுபேதார்கள் துப்பாக்கியைச் சுட்டுக்கொண்டிருக்கும் போது (துப்பாக்கி-அப்யாஸம்) கோட்டையிலுள்ளவர்களும் ஸர்கார் உத்யோகஸ்தர்களின்

121. ஜம்புகாவேரி - வெண்ணாற்றுக்கு வடக்கே பள்ளியக்கிரகாரம் என்ற ஊரை ஒட்டிச் செல்லும் ஒரு வாய்க்கால்.

122. புருகிங் - (Brooking) என்பவர் தஞ்சாவூர் தெற்கு வீதியில் இருந்த ஆரோக்கிய சாலையில் மருத்துவராக இருந்தவர் (பக். 288-289).

123. உடன்படிக்கையின் 12ஆவது ஷரத்து வழக்குகள் பற்றியது. "அரசரது உறவினர், பணியாட்கள் அல்லது தஞ்சைக் கோட்டையில் வசிக்கும் பிறர் பேரில் இவர்கள் அல்லாத மற்றையோர் வழக்குத் தொடுக்க வேண்டும் எனில் முதலில் தஞ்சையில் உள்ள கம்பெனியின் பிரதிநிதியிடம் கூறினால் அவர் அரசரிடம் முறையிடுவார்; அரசர் உடனே இவ்வழக்கைத் தன்னுடைய நீதிமன்றத்தில் விசாரிக்கச் செய்வார்" என்பதாகும்; ஆகவே ஸர்க்கார் இலாகாவின் ஜனங்களின் மேல் வாரண்டு அனுப்புவது உடன்படிக்கைக்கு ஏற்றதன்று எனப்பட்டது (பக். 54–55).

124. அமர்சிங்கு தான் ஆட்சியில் இருந்த காலத்தில் நிறையக் கடன்பெற்றிருந்தார் என்பது அறியலாகும்.

125. பாயக்கட்டு - கிராம அதிகாரி

குழந்தைகளும் சென்று பார்த்த போது, முதலில் ராஜியாக எழுதி வாங்கினார்கள். பின்பு பலாத்காரமாக எழுதினீர்கள் என்றும் அவர்களை விட வேண்டுமென்று ஸர்கார் சொல்வி அனுப்புகிறார்கள். இப்படி அநேக பேர்களுக்குச் சர்காரிலிருந்து சொல்லியனுப்பினதின் பேரில் விட்டிருக்கிறார்கள். ஆனால், கும்பனியின் ரெகுலேஷனில் பேர் வழிகளின் பெயர் தாகல் செய்த பின்பு மறுபடியும் விடுதலை செய்வதில்லையாகையால் ஸர்கார் உத்யோகத்திலிருப்பவர்களில் யாராவது இனி அவர்கள் குழந்தை வகையறா எழுதிக் கொண்டால் விட முடியாதென்று எல்லோருக்கும் தெரியும்படியாகத் தம்பட்டம் அடித்து இனி ஒருவரும் போய் எழுதிக் கொள்ளாமலிருக்க வேணுமென்று கியாப்டன் டுடி[126] சாயேப் அவர்கள் தங்களுக்கு அவருடைய சலாமுடன் எழுதி அனுப்புமென்று சொல்லியிருக்கிறார்.

*27.1826 July 25*

(67) ரா. அமரசிங்க போஸலேயின் கடன் கணக்கை[127] ருஜு பார்ப்பதற்காக அவர் காலத்திய கணக்கு மூட்டைகளை அனுப்பும் பொழுது, அத்துடன் கூட ஓர் ஸர்கார் மனிதனையும் அனுப்ப வேண்டுமென்று ரெஸிடெண்ட் சாயேப் ஆங்கிலேயத்தில் கடிதம் எழுதியனுப்பியிருக்கிறார்.

## மூட்டை எண்-177C

*33.1834*

(1) ஸ்ரீராமதாஸ ஸ்வாமிகளின்[128] கோவிந்தபாளா[129] ஸ்வாமிகளின் தாயார் ஸ்ரீபாளாபாய் அம்மா அவர்கள் ஸ்ரீராமநவமி உற்சவத்தில்-லலித-(ப்ரஸாத பாராப்தி சீதா கல்யாணம்) தினத்தில்[130] பாதுகை[131] வெளியில் புறப்படுவதற்கு மேளம், ஒட்டகத்தின் மேலுள்ள பிருதுகள், கொம்பூ தப்பு[132] வகையறாக்களைக் கொடுக்க உத்திரவாக வேணும்.

*(2) 1834*

யாகத்தின் பாத்திரங்களைத் தயாரிக்க கொட்டியத்திலிருந்து ந. எ. 10 சேர் கொடுக்கிறது.

---

126. கியாப்டன் டுடி - அலுவலில் உள்ள சேனைத் தலைவன்.

127. அமர்சிங்கரின் கடன்: 1792இல் கும்பினியாருடன் செய்துகொண்ட உடன்படிக்கையின் ஆறாவது ஷரத்தில் (பிரிவில்) ''60,000 என்றுள்ளது.

128. ஸ்ரீராமதாஸ் சுவாமிகள் - இவர் சிவாஜியின் ஞானாசிரியர். கி.பி.1680இல் தஞ்சைக்கு வந்து திரும்பியவர்.

129. கோவிந்தபாளா - ஸ்ரீராமதாஸ் சுவாமிகள் தம் நாட்டுக்குத் திரும்புங்கால் தஞ்சையில் தன் சீடர்களுள் பீமராஜ் சுவாமிகளை இருக்கச் செய்தார். இவரது சீடர்கள் ஜோஸிராம்பாவா, கோவிந்தபாளா, ஆத்மாராம் என்ற மூவர். இம்மூவரும் தனித் தனி மடங்கள் நிறுவினர். கோவிந்தபாளா நிறுவிய மடம் தஞ்சையில் சகா நாயக்கன் தெருவில் உள்ளது. இங்குக்குறித்த கோவிந்தபாளா மடத்தைத் தாபித்த கோவிந்தபாளாவின் வழியில் வந்தவர்.

130. லலிததினம் - ஸ்ரீராமநவமி திருவிழாவில், சீதா கல்யாணம் முடிந்தபிறகு பட்டாபிஷேக கோலத்துடன் இராமபிரான் ஊர்வலம் வரும் நாள் ''லலிததினம்''எனப்பட்டது.

131. பாதுகை - சகாநாயக்கன் தெருவிலுள்ள கோவிந்த பாளா மடத்தில் பீமராஜரின் பாதுகை பூசை செய்யப்பெறுவது.

132. தப்பு - ஒருவகைப் பறை

*(3) 1834*

ஸரஸ்வதி பாண்டாரிலிருந்து புது பஞ்சாங்கமொன்றை ஸர்கேலின் வேலைபார்க்கும் நியாயாதீச[133] ரா. ஹீரோஜி காளேராவுக்குக் கொடுக்கிறது.

*4. 1837*

1. கோவிந்தராவ் முத்தோஜி-தரங்கம்பாடியிலிருந்து நல்ல பீரங்கி மருந்து வகையறாவின் திரவியத்தைக் கொண்டு வரப் போகுவதற்காக 15 நாளைக்கு சக். 9-3 பணம் கொடுக்கிறது.

*6. 1814*

(1) இராஜ மகாலிலிருந்து வெள்ளிப் பஞ்சபாத்திரம் ஒன்றினிடை ஒரு சேர் நாலறைத் தோலா[134] அரை மாஸா ஒரு குஞ்ச்[135]

*(2) 1814*

சிப்பாய் ஜெயிதாஸோா ஆவுசாப் காடிகே அவர்களுக்குத் தற்பொழுது காலடிக்கு ரோகம் வந்திருப்பதால் மருந்து செய்து, மேல் தடவ ஜபானி ஹணமந்தறாவ் ஸாளங்கியிடம் கொடுக்கிறது.
மார்வுத சேர் 1/4, மனஸ்ஸிலை[136] டாங்க் 41/2, முடதார்சிங்கு டாங்க் 9, செவ்வீரம் டாங்க் 9, வெண்காரம் டாங்க் 9, களிப்பாக்கு சேர் 1/4, ந. எண்ணை சேர் 1/2, செஞ்சந்தனம்-(கோமரபாச்சி), அவு? 8 எ.பழம்-15

*(3) 1814*

முக்தம்மாபுரம் மன்ன ஸத்திரத்தில் வித்யார்த்திக்குப் பாடம் சொல்ல "மணிசப்த கண்டமும்" அதன் "வியாக்னமும்"[137] மூலம் மதுரா நாதீய புத்தகம் ஸரஸ்வதி பாண்டாரிலிருந்து கொடுத்து வாங்க உத்திரவு செய்ய வேணும்.

*(7) 1834*

1. யுத்த சாலையிலிருந்து 10 மனு[138] கரடா கடுதாசி வெடிமருந்து சாலைக்கு[139] வெளியே போக உத்திரவு செய்ய வேணும்.

*2. 1834*

ரா. ஸ்வாமியார் நாளைக்கு இராமநவமிக்காகக் கதைசெய்ய வருவதற்கு-"நலிபங்க்" கின்[140]

133. நியாயாதீச - தஞ்சையிலிருந்த 4 நீதிமன்றங்களில் நான்காவது (பக். 167).

134. 3 தோலா 1 பலம்; 8 பலம் 1 சேர்.

135. மாஸா என்பது ஒரு உளுந்து எடையுள்ளது; குஞ்ச் என்பது குன்றிமணியாகலாம்.

136. மனஸ்ஸிலை - ஒருவகைப் பாஷாணம்; மருந்துச் சரக்கு.

137. வியாக்னம் - வியாக்கியானம்

138. மனு - மணங்கு

139. வெடிமருந்துசாலை - தாருகானா (பக். 452).

140. நலிபங்க்(?) - (பக். 458).

வாசப்படிக்கு முன்னால் ஸர்கார் (ஹுஜூர்) பங்க் ஹனுமாரின் எதிரில் கிழக்கிலுள்ள வாசப்படியின் வழியாய்ச் சாயிதான மகாலுக்குப்[141] போகும் வழியில் வழக்கப்படி வாகனத்திலிருந்து இறங்குகிறது. பின்பு சாயீதான் மகாலின் தென்னண்டை வாசலின் வழியாய் அவரிடமுள்ள இருவர் ஹுஜூருடன் கர்ச் மகால்போதேவின்[142] வழியாய் இராமஸ்வாமி மகாலுக்குப் [143] போகிறது. அதற்கு வழக்கப்படி ஜமுக்காளம் விரிக்கிறது. சந்தனம் புஷ்பம் விடையம் வித்ர? ஸபையின் சாஸ்திரிகள் வகையறா கோசாமி வகையறாக்கள் தயாராயிருக்கிறது.

7.1834

(3) உத்திரவு

தன்வந்திரி மகாலுக்கு-ஹுஜூர் வேலைக்காரனான கோவிந்தறாவ் சாங்கோஜியின் தங்கை காயலாவாகயிருப்பதால் ஒரு மண்டலத்திற்குப் பூர்ண சந்திரோதய மாத்திரையும் சுவர்ணமாலே; வஸந்த மாத்திரையும் கொடுக்கிறது.

(4) 1834

வங்காளத்தின் கவர்னரிடமிருந்து[144] ஸர்காருக்குக் கடிதம் வந்தமைக்கு ஜரிகை வேலையையும் பூப்போட்ட உறையுடன் ஜாமதார்கானாவில் வரவு வைக்கிறது.

(5) 1834

லாயத்தில் 211 காளை மாடுகளுக்கு[145] 'வக்கையின்' உபத்திரவமும் "கடுவையின்' உபத்திரவமும் வராதபடியிருக்க 7 நாட்களுக்கு மசாலை தயார்செய்து கொடுக்க தினமொன்றுக்குக் கச்சே கருவாடு தினம் 9 டாங்க்[146] வீதம் 26 1/4 சேர் 9 தோலா, வெங்காயம் 9 டாங்க் வீதம் 26 1/4 சேர் 9 தோலா, தயிர் படி-105 1/2, ஜீரகம் 4 1/2 டாங்க் வீதம் 13 சேர் 13 1/2 தோலா, வெந்தியம் 4 1/2 டாங்க் வீதம் 13 சேர் 13 1/2 தோலா கொடுக்கிறது.

(6) 1834

தட்டிமாவில் கன்றுக்கு 'வக்கையின்' உபத்திரவம் வராமலிருப்பதற்குப் பன்னியின் நெய் போடுவதற்கு இலவம்பஞ்சு, 3சேர் யுத்தசாலையிலிருந்து கொடுக்கிறது.

(7) 1834

தன்வந்திரி மகால்-புலி காயப்படுத்தின ஒருவருக்குக் காயம் குணப்படுத்தும் தைலம் 1 சேர் கொடுக்கிறது.

---

141. சாயிதான்மஹால் - ஜாசுதமகால் ஆகலாம். (பக். 453)

142. போதேமகால் - அரசாங்கப் பொருள்நிலையம்(பக். 456).

143. இராமசாமி மகால் பார்க்க மூட்டை எண் 912-18-32 (சரசுவதி மஹால் பகுதி VI)

144. சென்னைக் கவர்னர், வங்காளக் கவர்னர் ஆணையின்படி நடக்கும் கடப்பாடுண்டு (இக்கால கட்டத்தில் கவர்னர் ஜெனரல் வார்டு வில்லியம் பென்டிங் ஆவர்).

145. இதில்கண்ட கணக்குத் தவறு என்பது ஆய்வு செய்து எழுதப்பட்டுள்ளது . (பக். 164–165).

146. டாங்க் என்பது தோலாவின் மூன்றில் ஒரு பகுதி (பக். 165).

*(8) 1834*

யுத்த சாலைக்குத் தரும ஸபை[147] யின் கணக்கு மூட்டைகள் நவவித்யா கலாநிதி பள்ளிக்கூடத்திற்குக் கொண்டு போவதற்கு 2 வண்டிகளும் 4 வேலைக்காரர்களையும் கொடுக்கிறது.

*(9) 1834*

யுத்த சாலையில் ஸேநா துரந்தர் கங்காதர் ரகமாஜி[148] அவர்களிடமிருந்து பழுதான (முத்திரை) அச்சு வகையறாவுக்குத் தங்கம் மூலாம் கொடுக்க, பெள்ளல் தங்கம்[149] வாங்குவதற்குக் கும்பனி ரூ. 1000 கொடுக்கிறது.

*17.1834*

10. யானையின் மேல் மூன்று பேர்கள் உட்காரும்படியான ஜீனுக்குத்[150] தங்கம் மூலாம் கொடுக்க பெள்ளலும் தங்க ஜரிகை வாங்குவதற்கும் கும்பனி ரூ.400

*(11) 1834*

யுத்தசாலையிலிருந்து இராஜ கோபாலசுவாமி கோயிலுக்கு[151] 15 மனு . கரடா கடுதாசிகளைக் கொண்டு போக வெளியே போக உத்திரவிட வேண்டும்.

*(12) 1834*

தன்வந்திரி மகாலிலிருந்து மண்ணெண்ணை 4 டாங்க் சுஸமந்தராவுக்குக் கொடுக்கிறது.

*(13) 1834*

ஸர்காரின் சிலவுக்காக 3 சேர் தாமரைக்கிழங்கு நாளை பரிசாரகன்[152] கிருஷ்ணய்யாவிடம் கொடுக்கிறது.

*(14) 1834*

களஞ்சியத்தில் கும்பனியிலிருந்து நெல் வரவு கலம் 21150-10 மரக்கால்

*8. 1816*

1. சாலுவநாயக்கன் பட்டணத்திற்குத் தபால் போக்குவரத்து ஏற்படுத்தியதில் பாக்கி 15 நாட்களுக்கு சக். 4-6 பணம் கொடுக்கிறது.

---

147. நான்கு நீதிமன்றங்களில் ஒன்று (பக். 167–168).

148. கங்காதர் ரகமாஜி - இவர் சிவாஜி காலத்திலிருந்த சேனைத் தலைவர்; இவர் 1836இல் அக்னிஷ்டோமம் என்ற யாகம் செய்தவர் (பக். 372).

149. பொள்ளல் தங்கம் - தூய தங்கம் (பக். 389).

150. ஜீன் - சேணம்

151. இக்கோயில் வடக்குராஜவீதியில் உள்ளது (பக். 213இல் 14).

152. பரிசாரகன் - கோயில் பணியாள்

*9. 1837*

*1. ஜர்கா கானா[153] விலிருந்து வியாபாரிக்குக் கொடுத்த ரூ. 3500 அரண்மனைக்கு வெளியே எடுத்துக்கொண்டு போக உத்திரவு கொடுக்க வேண்டும்.*

*12. 1834*

*1. யானைகளுக்கெல்லாம் சோப் கொடுக்க மாவுத் இராமசாமியினிடம் 3 நாட்களுக்குக் கொடுக்கிறது. கடுக்காய் சேர் 10, தானிக்காய்[154] சேர் 10, காசிக்கட்டி[155] சேர் 10, கத்தைக் காம்பு சேர் 10, மாசிக்காய் சேர் 10, வட்டையின் களிப்பாக்கு சேர் 1, இங்களீக சேர் 1, மெழுகு சேர் 10, முடதார் சிங்கு சேர் 1/2, செங்கொட்டை சேர் 20, கல்னார் சேர் 1, கல்மதம் சேர் 1 நஎண்ணெய்சேர் 25, அரக்குப்பொடி சேர் 5, ஆட்டின் செர்பீ 10, தங்கத்திலிருந்து சின்னப்பானை, பானைகள், செட்டிகள், ஜாமாதர் கானாவிலிருந்து 2 முழம் சவுக்கம் கொடுக்கிறது.*

*12.1834*

*(2) யுத்தசாலையில் -இரவில் ஸதருக்குச் சன்னத்த பல நிர்வாஹக் கதம்பத்[156] திலிருந்து காலாட்படையின் கொடியை மஹாராஜ சபைக்குக் கொண்டுவந்து மறுபடியும் போய் சேர்ப்பதற்கும் 1/2 சேர் சிலவாகும். சந்திரஜோதி என்னும் 9 தீவட்டிகளுக்கு மகாலில் சிலவு எழுதுகிறது.*

*(3) 1834*

*கொட்டியத்தில் காளைமாடு ஒன்று காயிலாவாகயிருப்பதற்கு மருந்து உள்ளுக்குக் கொடுக்க சாமான்கள்:-*
*சுக்கு சேர்-1/4, கண்டத்திப்பிலி -1/4, வசம்பு-1/4, கடுகுரோகணி-1/4, மிளகு-1/4, மிளகாய்1/4, ஓமம் -1/4, உப்பு சேர்-1/16, சித்தரத்தை சேர்-1/4, இந்துப்பு-சேர் 1/4, மரமஞ்சள் சேர்-1/4, தேசாவரிஜீரகம்-1/4 கொடுக்கிறது.*

*(4) 1834*

*தண்ணீர்ப்பந்தல்-அல்லாப்பண்டிகைக்காக டால்சாஹேப், ஹைதர் சாஹேப், நால் சாஹேப் வகையறா ஐந்து அல்லாக்களை வைத்திருப்பதற்காக வழக்கப்படி மகாலோமாவிலிருந்து சாமான் வகையறாக்களைக் கொடுக்கிறது.*

*(5) 1834*

*தன்வந்தரி மகால்-வைத்தியர்களின் ஸங்கதிகளை எழுத யுத்தசாலையிலிருந்து நகல் கடுதாசி தஸ்தா 4, ஹுஜூர் மகாலிலிருந்து பேனாக்கள்–4, ஹுஜூர் மகாலிலிருந்து பென்சில்கள்-4.*

---

153. ஜர்காகானா - காசுக்கடை (பக். 453–456).

154. தானிக்காய் - கொத்தமல்லி

155. காசுக்கட்டி - ஒருவகைக்கூட்டு மருந்துச்சரக்கு

156. ஸந்நத்த பல நிர்வாஹக கதம்பம்-ஒருபடை ஆயத்தமாகவுள்ள; கவசம் பூண்ட

*(6) 1834*

**ஸந்நத்த பல நிர்வாஹ கதம்பம் பாலவர நிர்வாஹ ரா. சோமனாத் சதாசிவ பண்டிதர்**[157]

**கொறவனுடைய வேலையைக் கற்க ஆவுசாப் தோட்டம் வகையறாவிலிருந்து மூங்கில் சுமார் 10 கொடுக்கிறது**

*(7) 1834*

**உத்திரவு-ஸர்காரின் சிலவிற்காக மருதாணித்தைலம் தயார் செய்ய மருதாணிப்பூவை ஒன்றுவிட்டு ஒருநாள் வீதம் 3 தரம் கொடுக்கிறது.**

*(8) 1834*

**ஸர்காருக்குத் தைலஞ்செய்ய ஒருநாள் விட்டொருநாள் 7 சேர் வீதம் 3 தரம் கொடுக்கிறது.**

*(9) 1834*

**ஸைநிக விசித்ரராவ் பாண்டலகருக்குப் புலி அடித்துக் காயமானதற்குப் பட்டிக்கட்ட நெய் சேர்-1/4, வேப்பெண்ணை சேர் -1/4, வெங்காயம் 9 டாங்க், எ. பழம்-2 அகலமுள்ள 1 1/2 முழம் நீளம் சவுக்கமொன்றைக் கொடுக்கிறது.**

*16-1776*

1. நகல்-துர்முகி,[158], ஐப்பசிமீ 25உயில் ரா. ஸ்ரீமகாராஜா[159] சாயேப் அவர்களுக்கு மணிக்குடி[160]சாமிய்யா என்பவர் குத்தகைச் சீட்டை எழுதிக் கொடுத்தார்.

*20. 1814 சௌவல் சந்த்*[161] *14உ*

1. சர்பத்கானா[162]-பாயம்மாபாயி[163] அமணி ராஜே சாஹேப்பின் திரஷ்டிக் கல்யாணத்திற்[164]காகக் கரும்புக் கிளிகள் வகையறா அநேக மாதிரி சாமான்கள் தயாரிக்க நெட்டி[165]மகாலுக்கு உத்திரவிடுகிறது.

---

157. காண்க, தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும் (பக். 83–85).

158. துர்முகி - யாண்டறுபதனுள் முப்பதாவது(கி.பி.1776)

159. மகாராஜா என்றது துளஜா II

160. மணிக்குடி - திருப்பனந்தாளுக்கு அண்மையிலிருக்கும் ஊர்.

161. சௌவல்சந்த் - முகமதியர் மாதங்களின் பத்தாவது; ஷவ்வால்

162. சர்பத்கானா - குளிர்பானம் தருமிடம் (பக். 452).

163. பாயம்மாபாயி - அஹல்யாபாயி பெற்றெடுத்த மூன்றாவது மகள் (போ.வ.ச.பக்.138) (இவருடைய மகளே காமாட்சியம்பாபாயி ஆவர்)

164. திருஷ்டிக்கல்யாணம் - பூப்பு எய்திய காலத்து நடத்தும் சடங்கு

165. நெட்டி மகால் - நெட்டியினால் கிளி முதலியன தயாரிக்குமிடம் (பக். 399).

*2. 1814*

ஞாபகக்குறிப்பு:-அரண்மனைக் கோவிலிலுள்ள கிணற்றைக் கலியாணத்திற்காகப் பலகைகளால் மூடியதை மறுபடியும் திறந்து கொடுக்கவில்லை. ஆகையால் பிராமணனுக்கு மிகவும் கஷ்டம். இப்பவும் முன்போல் கிணற்றைத் திறந்து சுற்றிலும் சுவர்களைப் போட்டு கிணற்றுக்குச் சிவகங்கையின் ஜலம்விட வேணும்.[166]

*3. 1814 7உ*

ஸரஸ்வதி மஹாலின் தரும சாஸ்திரிகள் விஞ்ஞானேஸ்வர்[167] யாதி நூல்களைப் பார்த்து, இந்தப்படி எழுதியிருக்கிறார்கள். ஒரு நாளிரவில் 8 மணிக்கு வண்டிக்காரனுடைய தம்பியின் பிள்ளை 18 வயதுள்ள இராமனைக் கற்கள் ஏற்றிய வண்டியுடன் அனுப்பி அவனுக்குப்பின் வீரராகு என்னும் வண்டிக்காரன் வந்து கொண்டிருக்கையில் 4 மாதத்திய காளைக் கன்றின் மேல் சக்கரமேறி செத்துப் போனது. அந்த தப்பிதத்திற்காக சக். 1-2 1/2 பணம் வண்டிக்காரன் வீரராகுவிடமிருந்து அபராதம் வாங்குகிறது. கன்றுக்குட்டியின் விலையை வாங்கி கன்றுக்குட்டிச் சொந்தக்காரனுக்கு (அய்யம்பெருமாள்) கொடுக்கிறது.

*22.1834*

*1. இராஜமகாலில்-புகணிக்கு?*

வாயுவினால் வயிறு உப்புவதால் உள்ளுக்குக் கொடுக்க 9 நாட்களுக்கு ராமசாமி மாவுத்வசம் கொடுக்கிறது. சர்க்கரை சேர் 1/2, பொட்டிலுப்பு சேர் 1/4 9 டாங்க், இந்துப்பு 1/4 சேர், காகாணி உப்பு 1/4 சேர், கல் உப்பு 1/4 சேர், அப்பளாங்காரம் உப்பு 1/4 சேர்9 டாங்க், வெண்காரம் 1/4 சேர் நவச்சாரம் 1/4 சேர், மிளகு 6 1/4 சேர், கண்டத்திப்பிலி 1 1/4 சேர், கசப்பு விருந்தாவனத்தின் பழம் -100, அன்னபேதி 1/4 சேர், கடுக்காய் 12 1/2 சேர், சுக்கு 2 1/2 சேர், ஸல்வாதியின் வேர் -2 சேர், விறகு யுத்தசாலையிலிருந்தும் சுங்கத்திலிருந்து பானை- 1, சட்டி-1 கொடுக்கிறது.

*2.1834*

கல்யாண மகாலில் பாயிமார் உபதேசம் வாங்குவதால் 5 படி துண்ணூறு[168] கொடுக்கிறது.

*3. 1834*

இராமசங்கர் கருட என்பவருக்கு ஸ்ரீராம் நவமி உற்சவத்திற்காக ஸப்தமி தினம் பட்டணப் பிரவேசத்திற்கும், லலித தினம் கோட்டைக்கு வெளியேயுள்ள ஸமாதிக்குப் போய்வர நாள் 2க்கு வழக்கப்படி எடுபடி பிருது வகையறா கொடுக்கிறது.

*(4) 1834*

கன்னியாகுமாரி என்னும் யானைக்குட்டிக்கு வாயுவினால் வயிறு உப்புவதால் (பெருகுவதால்) உள்ளுக்குக் கொடுக்க மாவுத் வசம் கொடுக்கிறது.

---

166. பார்க்க மூட்டை எண் 173c-16-1 (சரசுவதி மஹால் பகுதி II)

167. விஞ்ஞானேஸ்வரீயம் - இது ஒரு நீதி நூல் அல்லது சட்ட நூல் ஆகும் (பக். 182).

168. துண்ணூறு–திருநீறு (விபூதி)

தாளகம் சேர் 1/4, இங்களீக சேர் 1/4, ரஸ்கற்பூரம் சேர் 1/4, வெண்காரம் சேர் 1, ரஸஸிந்தூரம் சேர் 1/4, வெல்லம் சேர் 5, வாயுவினால் மார் வலிப்பதால் பத்துப்போட சர்க்கரை சேர் 6, ரத்த போளம் 6, கோழிமுட்டை 50, கரியபோளம் சேர் 5, கருப்பு உப்பு சேர் 1/2,எ. பழம் 60, ஜகாயதி[169] விருந்து பானை1-சட்டி 2 கொடுக்கிறது.

*22.1834*

*(5)* அல்லா வைக்குமிடத்திலிருக்கிற அல்லா வகையறாக்கள் 9ம் நாள் ஊர்வலத்திற்கும் கோட்டையின் வெளியேயும் போவதற்கு தேர் தயார் செய்வதைப் பற்றி
தங்கத்தேர்- 1, வெள்ளித்தேர்- 1, யானைத் தந்தத்தின் தேர்-2—பெரியது-1, சின்னது-1,—ஸங்கீத தேர் 1/2 இவைகளுக்கு மஹாலோமாலி[170] விருந்து வேண்டிய சாமான்களைக் கொடுக்கிறது.

*(6) 1834*

முகாஸா-கடுவளி கிராமத்தில் புதிய மதகுகட்ட தளவாடம், மெக்யாடு உத்தேசம் சக்.909–8 3/4 (தொளாயிரத்தொன்பது சக்ரம் எட்டே முக்கால் பணம் ஒன்றை வீசம்)

*(7) 1834*

ஸர்கேல் பாபாஜி ராமாஜி பண்டிதர்[171] திருவையாற்றுக்குப் போய்வர லாயத்திலிருந்து ஒரு தேரும், வண்டி 1ம் அலாஹிதா மகாலி[172] விருந்து பல்லாக்கு 1ம் கொடுக்கிறது.

*(8) 1834*

தேவஸ்தானத்தின் துகையைக் கொண்டு வருவதற்கு
பெட்டி-1, சாவி 1, வண்டி-1 தகுந்த ஜனங்கள் 1, குண்டு, துப்பாக்கி-1, குதிரை 1, சராப்[173]-1, யுத்தசாலையிலிருந்து கொடுக்கிறது.

*(9) 1834*

யுத்தசாலையில்-மணியைக் கணக்கிடுகிறவனிடமுள்ள மணிகாட்டும் வட்டில் பழுதானதை வாங்கிக்கொண்டு செப்பினிட்டுக் கொடுக்கிறது.

*(10) 1834*

ஸதாரா தேசத்திய அப்பா பட்டார் இராமேஸ்வர யாத்திரையை முடித்துக் கொண்டு கோட்டையின் வெளியே "செராய்"[174] சாவடியிலிறங்கி இருப்பதால் அவர் ஊரிலிருக்கும் வரையில் சாப்பாடு வகையறாக்களைக் கொடுக்கிறது.

---

169. ஜகாயத் - சட்டி பானை செய்யும் இடம் ஆகிய பராஸ்கானா ஆகலாம் (பக். 453).

170. மஹாலோமால் - மகாலிலுள்ள மகால்.

171. தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும் (பக். 86–87).

172. அலாஹிதாமஹால்- இங்கிருந்து பல்லக்குக் கொடுக்கப்பட்டது ஆகலின் இது பால்கி மஹால் ஆதல்கூடும் (பக்.453) (அலாயிதா-தனி)

173. சராப்பு-நாணய நோட்டக்காரன்

174. சராய் - வழிப்போக்கர் தங்கும் விடுதி

*23.1816*

*(1) தரங்கம்பாடியின் தென்மார்க்*[175] *காரர்களின் வக்கீல் வீரராகவ அய்யங்காருடைய குமாரன் விஜயராகவ ஐயங்காருக்கு சக். 3-8 பணம்.*

*29.1834*

*(1) தட்டி மகாவில் வெய்யிற் காலமானதால் கன்றுக்கு 'கோமாரி' என்னும் வியாதியும் 'வக்கே' என்னும் வியாதியும் வராதபடி இருக்க, வழக்கப்படி மருந்துக்குச் சாமான்களை கொடுக்கிறது. கொட்டியத்திலிருந்து*
*வெந்தயம் படி-18, ஜீரகம் படி-12, கஸகஸா படி-6, வெங்காயம் படி 160, கச்சே கருவாடு*[176] *படி-80, தயிர் படி-240, வால்மிளகு சேர்-12, சிறுநாகப்பூ சேர்-8, ந. எ. மனு-2, வேப்பெண்ணை மனு-1/2, எ. பழம்-600, ஜகாயதியிலிருந்து தொட்டிகள்-13, பெரியபானை-20, கலையம்-20 சட்டி-20 கொடுக்கிறது.*

*(2) 1833*
*தெற்கு வீதியில் ஸ்ரீகாசி விஸ்வநாத ஸ்வாமிக்கு*[177] *கும்பாபிஷேகத்திற்காக சக். 100 கொடுக்கிறது.*
*500 பேர் பிராமண போஜனத்திற்குச் சாமான்களைக் கொடுக்கிறது.*

*(3) 1834*
*ஸர்காருக்காக மாரியம்மன் கோவிலிலிருக்கும் காதிர்சாவிடம் பஞ்சவர்ணகிளியை வாங்குவதற்கு கும்பனி ரூ. 26-4-0 தரகு ரூ.1-4-0*
*ஷியை வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தவனுக்கு காவி(சிகப்பு) வர்ணமுள்ள துப்பட்டா ஒன்றைக் கொடுக்கிறது.*

*30.1833*
*(1) மகாதேவறாவ் என்பவர் கல்யாண மஹாலின் நகை ஒன்றை ஒருவருக்கும் தெரியாமல் வாங்கி சிலவு செய்ததினால் அபராதம்.*

*(2) 1833*
*யானைகானா-இராஜ மஹால்-தந்தமுள்ள யானைக்கு ஜாஹார் பந்த் வந்து மிகவும் இளைத்துப் போனதால் உள்ளுக் கொடுக்க தினமும்*
*8 கோதும்பையின் ரொட்டி, 4 சேர் ந. எண்ணை 4 சேர் வெல்லம் கொடுக்கிறது.*

*(3) 1833*
*ஸங்கீத வித்யாதிகத்தில்*[178] *வேஷம் பூணுகிற சாமான்கள் தயார் செய்ய கொட்டியத்திலிருந்து*

175. தென்மார்க் - Denmark
176. புதிய உப்பு மீன் கண்டம்
177. தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும் (பக். 213இல் 11).
178. இசையில் வல்லவர் இருக்கும் பகுதி (பக். 22.9).

*ஸோன் பித்தளைக் கட்டு-1/2, வெள்ளை நூல் சேர்-1 1/2, விளக்கெண்ணை நாளொன்றுக்கு-2 சேர் வீதம் வேலை முடியும் வரையிலும் கொடுக்கிறது.*

*(4) 1833*

*மா. சௌ. காமாக்ஷியம்பா பாயிசாப்*[179] *அவர்களிடமிருந்து அலகாத்? என்கிற துணியைத் தைப்பதற்கு வெண்பட்டு ஒரு வராகனிடையைக் கொடுக்கிறது.*

*(5) 1833*

*சி. ப்ரதாப ருத்ரமானே ராவ் இங்களே*[180] *இவருடைய பூணூல் கலியாணத்திற்குச் சாப்பாடு 5100 பேர்கள்.*

*வ. ரா. ஹனுமந்தராவ் சுந்தர்ஜீ ஸர்ஜேராவ் காட்கே*[181] *இவர்களுடைய விவாகத்தில் 7750 பேர்களுக்குச் சாப்பாடு.*
*100க்கு 32 1/2 படி வீதம் 4176 படிக்கு நெல் கலம் 348.*

*(6) 1833*

*யானை கானா பில்-வைக்கோல் கொண்டு வரும் மாடுகளைக் கட்ட கோட்டையின் வடக்கு மேல் வெளியின் லயனின் ஒட்டுச் சாவடிக்குச் சமீபமுள்ள காலி இடத்தில் ஒட்டு அங்கணம் 80ஐக் கட்ட தளவாடம் வகையறா சிலவுக்கு துகையைக் கொடுக்க வேணும்.*

*31.1834*

*1. வண்டி மகாலில்*[182]*-மாட்டுக்கு வாயுவின் வலிக்கு உள்ளுக்குக் கொடுக்க.*
*சுக்கு டாங்க்-9 , மிளகு டாங்க்-9, வசம்பு டாங்க்-9 , மரமஞ்சள் டாங்க்-9, சித்திரத்தை டாங்க்-9 , பூண்டு சேர்-1/4, ஓமம் டாங்க்-9 கொடுக்கிறது.*

*(2) 1814*

*யானைக்கானாவில் காமாக்ஷி என்னும் யானைக்குட்டி வாயுவினால் ஜலம் கொஞ்சமாகக் குடிப்பதால் உள்ளுக்கு குக்குலாதி கவளம் (உண்டை) நாளொன்றுக்கு இடையில்*
*சுக்கு சேர்-1, அரிசிதிப்பிலி சேர்-1, கண்டதிப்பிலி சேர்-1, கடுகு ரோகணி சேர்-1, கோஷ்டம் சேர்-1, ஓமம் சேர்-1, கருஞ்சீரகம் சேர்-1, சித்திரமூலம் வேர்-1, ரிங்கிணி? சேர்-1, நன்னாரி சேர்-1, அதிவிம சேர்-1, மரமஞ்சள் சேர்-1, தேவச்சரக்கட்டை சேர் -1, குக்கில சேர்-1, களக்கொடி சேர்-1, வெண்காரம் சேர்-1, வசம்புசேர்-1, நெல்வி முள்ளி சேர்-1, கடுக்காய் சேர்-1 , பொரசவிரை சேர்-1, இபஜோதே? சேர்-1, வாவடிங் சேர்-1, கடுகு சேர்-1, காட்டுக்கடுகு சேர்-1,*

---

179. இவர் சிவாஜியின் இரண்டாவது மனைவி; 1829இல் இவர் திருமணம் நடந்தது (பக். 31).

180. இரண்டாம் சரபோஜிக்கு அஹல்யாபாயிடம் பிறந்த பெண்களுள் ஒருவர் சக்வார்பாயி. இவரது கணவன் ராமச்சந்திரராவ் எச்வந்தராவ் மானே இங்களே ஆவர். இவர்கட்குப் பிறந்தவர் பிரதாபருத்ர மானே இங்களே (குறிப்பு: இவரது மகன் ராஜாராம் என்பவரே 1855இல் இரண்டாம் சிவாஜி இறந்தபின் சுவீகாரம் எடுத்துக்கொள்ளப்பட்டுத் தஞ்சை அரசரானார்)

181. இவர், சர்க்கேலாக இருந்த ராமோஜி சர்ஜேராவ் காட்கேயின் மகன் ஆகலாம் (பக். 85).

182. வண்டிமகால் என்பது மாடுகள் இருக்கும் தட்டி மகால் ஆகலாம் (பக். 457).

*குராஸனீ ஓமம் சேர்-1 , தேசாவரி கருஞ்சீரகம் சேர் -1, இஸ்வர வேர் சேர்-1 , ஜடாமாஞ்சி சேர்-1, பேய்ப்புடல் சேர்-1 , அளஞ்சி வேர் சேர்-1, இந்துப்பு சேர்-1 , சித்தரத்தை சேர்-1, ஆக சேர் 32 3/4 கொட்டியத்திலிருந்து கொடுக்கிறது.*

*(3) 1814*

*நாரளி பௌர்ணிமைக்காக ஸ்ரீபெரியகோவில் ஸ்வாமிக்குச் சுமார் 1000 தாமரைப்பூவைக் கொடுக்கிறது.*

*32.1812*

*(1) வைசாக சுத்த நவமி திதி[183] புதன்கிழமை ஸர்காரின் குருவின்[184] புண்ய திதிக்காக வழக்கப்படிக்கு ஜாஸ்தி ஒவ்வொரு வருஷமும் கொடுக்கிறது*

*முதல் தரம் அரிசி படி-1, தங்கத்தின் உருண்டை-8, 6 கால் வராகனிடையுள்ளது. 8 அரை வராகனிடையுள்ளது—–8*

*34.1787*

*(1) உத்திரவுகள் ஹஜரத்[185] ஹஸஞ்சா பக்கீரானவர் தனக்குப் பேஸஜி[186]தெக்யால்[187] செய்வதற்குச் சாலியமங்கலத்தின் குடிகளிடமிருந்து, அனாதிதரஸீ[188]காலி இடத்தை 2 1/2 வேலியை 700 சக்ரத்திற்கு அவர்களிடமிருந்து வாங்கி அந்த..........இடத்தில் மரம், செடி.....பயிர் செய்து, தருமஞ்செய்ய தெக்யால் செய்தேன். அதை ஸர்காரில்.........தற்போது........மனமூர்ந்து அந்த தெக்யாலை தனக்குக் கொடுக்கும்படி உத்திரவாக வேணும்.*

*(2) 1787*

*தைலம் தயார் செய்ய-ப்ரஸன்ன கிருஷ்ணய்யாவிடம் 2 மனு மகாராஜாவுக்கு[189]*
*30 சேர் சுலக்ஷணாபாய் சாயேப்புக்கு[190]*
*30 சேர் மோஹானாபாயி சாயேப்புக்கு[190] = 3 1/2 மனு*

*இதற்குச் சாமான்*

*நன்னாரி சேர்-8 3/4, விளாமிச்சம் வேர்-8 3/4, சேர், மலாகா[191] சந்தனக்கட்டை-8 3/4, சேர்,*

---

183. வைசாகம் - வைகாசி; சுத்தம் - வளர்பிறை; நவமி - ஒன்பதாம் நாள்.

184. சர்க்கார்குரு - சமர்த்த ராமதாசர்

185. ஹஜரத் - சிறந்தோன்.

186. பேஸஜி - அரசர் (துளஜா II)

187. தெக்யால் - பக்கிரி தங்குமிடம்

188. அனாதிதரிசு - பலகாலமாகப் பயிரிடப்படாது கிடந்த நிலம்.

189. மகாராஜா - துளஜா II

190. சுலக்ஷணாபாய், மோஹனாபாய்; மகப்பேற்றின் பொருட்டுத் துளஜா மணந்து கொண்ட இருவர் (போ.வ.ச.பக்.125)

191. மலேஷியா தீபகற்பத்தின் மேற்குக்கரையிலுள்ளது மலாக்கா.

ஏலக்காய்-8 3/4 சேர், அசுவகெந்தி-8 3/4 சேர், கோரைக்கிழங்கு-8 3/4 சேர், வெட்டுவேர்-8 3/4 சேர் = 81 சேர். 9 1/4 கொம்பறக்கு சேர்-1, தக்கோலம்[192] சேர்-1, மரமஞ்ச சேர்-1, மஞ்சஷ்டி சேர்-1, சோப்? சேர்-1, ஜடாமாஞ்சி சேர்-1, விளாம்பழம் தூசு? சேர்-1, மைஸா குக்கில் சேர்-1, வெண்குங்குலியம் சேர்-1, அகில்கட்டை-1, அசுவகந்தி-1.

கல்கத்திரவியம்[193]

ஏலக்காய், கிராம்பு, கோஷ்டம், அதிமதுரம், ஜீரகம், ஸன்னலவங்கப் பட்டை, ஸரா...... வேப்ப......தின், கோரைக்கிழங்கு, வெட்டுவேர், தாமர வளையம்,[194] நாககேஸரம்[195] கல்பாசீ, ஜாதிக்காய், (ஜம்பகமொட்டு)சாம்பேகன்யா?, மரமஞ்சள், ஆக 29 வகைக்கு 1க்கு 1/4 சேர் 13 1/2 குஞ்ச[196] வீதம் வராகன் இடை, 25 பச்சை கற்பூரம், 42 குங்குமப்பூ 67 பசும்பால், வெள்ளைத்துணி பெரிய பானைகள், விறகு, தாம்பு கயிறு ந. எ. 3 1/2 மனு

திருவாளூரி[197] லிருந்து செவ்வெள நீர் கிழங்கு மரங்கள் வகையறா.
அடப்பம் பட்டை, புவித்துடக்கிப் பட்டை, அவரைப் பட்டை, மாதளம் பட்டை, வேப்பம் பட்டை, அரசம் பட்டை

*34.1787*

(2) கருங்காலி பட்டை, வேளாம் பட்டை, அழிஞ்சிப் பட்டை, வெள.....அ.....ச...., 10 வகைக்கு 9 சேர் வீதம் ஆவுசாப் தோட்டத்திலிருந்து. அத்திப்பட்டை, நாகப்பட்டை, இச்சிப்பட்டை, அமுக்காராங்கிழங்கு நாணாப் பட்டை, அடப்பம் பட்டை, வளவேல் பட்டை, கோரைக்கிழங்கு வேர், மருதம் பட்டை, நெல்லிப் பட்டை, மோப்ப....., பொரசம் பட்டை, மகிழம் பட்டை, சிந்திக் கொடி, கருவேல்பட்டை, கு........, ஒ......... ......ஸ்வாலை........ 17 வகைக்கு 9 சேர் வீதம் கொட்டியத்திலிருந்து விளக்குக்கு எண்ணை. தினந்தோறும் 9 டாங்க் கொடுக்கிறது.
மேலே சொன்ன சாமான்களைக் கொண்டுவந்து கொடுக்கிறது.

*35.1834*

(1) உத்திரவு-புதுக்கோட்டையில் வசிக்கும் பாடக்ன் ஆதிப்பையாவின் வீட்டை பேஸஜீ ஸர்காரில் சேர்ந்திருந்ததைத் தற்போது அவருக்கு இனாம் கொடுக்கிறது.

*(2) 1834*

வேட்டை மகாலில்[198]-காயலாவாக விருக்கும் கரடிக்கு ம்ருந்துக்கு- கொட்டியத்திலிருந்து கஸ்தூரி-வராகனிடை 1/2, தட்டி மகாலிலிருந்து பால் சேர் 5 கொடுக்கிறது.

---

192. தக்கோலம் - வால்மிளகு

193. கல்கத்திரவியம்—மருந்து உருண்டை செய்வதற்குரிய பொருட்கள்.

194. தாமரைவளையம் - தாமரைத்தண்டு

195. நாககேசரம் - சிறுநாகப்பூ; பெரியலவங்கப்பட்டை

196. குஞ்ச - குன்றிமணி

197. திருவாளூர் - திருவாரூர்.

198. வேட்டைமகால் - வேட்டையாடிப்பிடித்த விலங்குகள் இருக்கும் இடம் (ZOO) (பக். 457).

*(3) 1834*
ஸரஸ்வதி மகாவில் புத்தகங்களின் கணக்குக்காக கோரா் கடுதாசி 5 தஸ்தாவை யுத்தசாலையிலிருந்து கொடுக்கிறது.

## முட்டை எண்–179C

*24.1837*
(1) ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமிகளின் மடத்திற்குக் கொடுக்கப்பட்ட ஓலைச்சுவடியை வெளியே கொண்டு போவதற்கு உத்திரவு கொடுக்க வேண்டும்.

*(2) 1837*
ஞாபகக்குறிப்பு:- மா. ஆவுசாப்[199] வசமுள்ள வெள்ளி வெற்றிலைப் பெட்டியை இராஜமகாலிலிருந்து வேண்டிய வெள்ளியைப் போட்டு பழுதுபார்த்து கொடுக்கிறது.

*2. 1838*
1.உத்திரவு
லாயத்திற்குச் சொல்லியனுப்பி, மூடப்பட்ட வண்டியொன்றை இரவு 5, மணிக்கு சிவன் கோட்டை[200] யில் சௌ. மா. பத்மாம்பாயி[201] சாயேப் அவர்களுடைய இருப்பிடத்தில் தயாராயிருக்கிறது.

*2. 1838*
ஜாமதார்கானாலிலிருந்து ஸர்கார் சமையில் இடத்தில்[202] பொங்கலுக்காக வழக்கப்படி தங்க ரேக்குகளைக் கொடுக்கிறது.

*3. 1838*
சி. ராஜபாயி அமணிராஜே[203] சாஹேப் அவர்களுடைய கலியாணமான முதல் வருடத்தில் பொங்கலுக்கு வர்ணம் கொடுக்க கரும்பு தேங்காய், வாழைப்பழம் வகையறாக்களைக் கொடுக்கிறது.

*3. 1838*
(1) உத்திரவு
பெரிய கொட்டியத்திற்குச் சொல்லி மகாராஜா ஸபையிலுள்ள கண்ணாடி லஸ்தர்[204] கொளுத்துவதற்கு 8 மெழுகு வத்திகளைக் கொடுக்கிறது.

---

199. ஆவுசாப் என்பது சிவாஜியின் தாயார் அஹல்யாபாயியைக் குறிக்கும்.

200. சிவன்கோட்டை - சிவகங்கைக் கோட்டை

201. பத்மாம்பா - சிவாஜியின் மூன்றாவது மனைவி

202. சமையல் இடம் - முபதக் மஹால் அல்லது முதுபோகி எனப்படும் (பக். 453).

203. ராஜஸபாயி அமணி ராஜே-சிவாஜி II இன் மூத்தமகள்

204. லஸ்தர் - சரவிளக்கு

*(2) 1838*

உத்திரவு-பெரிய கொட்டியத்திலிருந்து மா. ஆவுசாப் இடம் சர்க்கரைப் பொம்மைகள் தயாரிக்க தென்னஞ்சர்க்கரையை 30 சேர் கொடுக்கிறது.

*(3) 1838*

ஸங்கீத வித்யாதிக-யாதி-மாட்டுப் பொங்கலின் வேஷத்திற்காக கொட்டியத்திலிருந்து-கொடுக்கும் சாமான்கள்

மஞ்சள் திரிசூர்ணம்[205]-1/4 சேர், மிருதுவான குங்குமம்-1/4 சேர், மஞ்சப் பொடி-1/2 சேர், கோபி சந்தனம்-1/4 சேர், ந. எ. -3/4 சேர், வெண்ணை-6 சேர், தயிர்பானையுடன் சட்டி-1, ஜாமதார்கானாவிலிருந்து சிகியானிதுயா? 10, ஜிகனா பொட்டு 1 விராகனிடை, புஷ்பம், ஹாரம், சந்தனம், ஜவ்வாது, தலைநாடா வகையறா தட்டி மகாலிலிருந்து பாலுடன் ஒருபானையைக் கொடுக்கிறது.

*(4) 1838*

ஸர்காருக்குச் சிந்திக்கொடியின் தைலஞ்செய்ய கொட்டியத்திலிருந்து பச்சைக் கற்பூரம் -12 விராகனிடை, மட்டிப்பால்-10 சேர்.

*(5) 1837*

கோட்டையின் தெற்கலங்கத்திலிருக்கும் மளகீ கோபாலநாய்கர் கொடுத்த மனு-ஸ்ரீவெங்கடாஜலபதியின் வேண்டுகோளுக்காகத் தைமீ 9உ கப்ஸேர்வை? செய்து, என் வீட்டுக்கெதிரில் ஹிரண்யன் நாடகத்தை ஆடுவதற்குக் கோட்டையின் கொத்தவாலுக்கு[206] உத்திரவிட வேண்டும்.

*(6) 1837*

களஞ்சியத்திலிருந்து-ஸிம்ஹராஜ சாமராஜ அவர்களுக்கு 150 கலம் நெல்லை இனாம் கொடுக்கிறது.

*(7) 1837*

மந்திரிவர்ய ஸதாசிவ கேசவதீக்ஷித பண்டிதருக்கு[207] ஸதரில் பொங்கலுக்காக கொப்பி விளைபாஷணத்திற்கு ரூ. 5 கொடுக்கிறது.

*(8) 1837*

(1) உத்திரவு: லாயத்தில் சொல்லி ரங்கநாத கவி[208] கேட்கும்பொழுது ஒரு வண்டியைக் (டாங்கா) கொடுக்கிறது.

---

205. திரிசூர்ணம் - வைணவர் நெற்றியிலணியும் ஸ்ரீசூர்ணம் (செம்மை அல்லது மஞ்சள் நிறமான பொடி)

206. கோட்டையின் கொத்தவால் - கோட்டைக்காவல் அதிகாரம் உடையவர் (பக். 75).

207. தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும் (பக். 83).

208. இவர் சிவாஜிII காலத்தில் இருந்த கவிஞருள் ஒருவர்

*(2) 1837*

வாத்தியங்களை தயாரிக்க - ஜீராத்கானாவிலிருந்து தம்பூருக்கு 4 நூல் 1 1/4 சேர் காதண்யா? 40 ப்ரேஸ் காத்தாடி, 10 இஸநர் டாம்ப் யுத்தசாலையிலிருந்து 4 பக் ஜோலி வர்ணமிட்டது, 4 தம்பூர் வாசிக்கும்படியான கடைசல் பிடித்த கழிகள் ஜோடி.

*8.1837*

(3) உத்திரவு-ஜிராத்கானாவிலிருந்து வெள்ளைக்காரனுடைய வீட்டிற்குச் சர்க்கரை பொம்மைகளை அனுப்ப

கோரா கடுதாசி 2 தஸ்தா, தட்டு, தாம்பாளம் மூங்கில் 25, மூங்கில் பெரியதட்டு 1யும் கொடுக்கிறது.

*(4) 1837*

கருடன் நாரே எனப்படும் பறவையைப் பக்கீர் என்பவன் கொணர்ந்து கொடுத்ததற்காக ஜாமதார்கானாவிலிருந்து ஒரு வேஷ்டியைக் கொடுக்க உத்திரவாக வேணும்.

*(5) 1837*

ஸர்காருக்கு ஹெரால்டு -1 கன்ஸர் வேடிவ் -1 என்னும் இரண்டு வர்த்தமான பத்திரிகைகள் வருவதால் அதற்கு டிசம்பர் மாதத்திற்குத் தபால் கட்டணம் ரூ.2.10.0. Asiatic Journal இங்கிலாந்திலிருந்து வருவதற்கு தபால் கட்டணம் ரூ.2-4-0.

*(6) 1837*

ஸர்காரின் உத்திரவு. மஹால் போதே[209]யிலிருந்து ஸேநா துரந்தர் ரா.கங்காதர் ரகமாஜி அவர்களுக்குச் சக்.2000.ஸேநா துரந்தர் ரா.வரஹப்பாய்யா ராமசாமி அய்ய தீக்ஷித[210] - 2000 ஸேநா முகவர்ய க்ருத விக்ஞப்ரவேக ரா. நீலகண்டராவ் ஆனந்தராவ் ஜாதவ்[211] 2000 கொடுக்கிறது.

*5. 1837*

1.வேட்டை மகால்-பைரீக்கு? மருந்து கொட்டியத்திலிருந்து குங்குமப்பூ வராகனிடை -2, கோரோசனம் வராகனிடை -1, ஜாதிக்காய் வராகனிடை -3, ஜாதிப்பத்திரி வராகனிடை -2, வால்மிளகு வராகனிடை -1, மமாயி? வராகனிடை 1, சுக்கு வராகனிடை -2, ஏலம் வராகனிடை -1, கிராம்பு வராகனிடை -2, கொடுக்கிறது.

*(2) 1837*

உத்திரவு - பெரிய கோவில் சுவாமிக்குப் பொங்கலுக்காக எள்ளுருண்டை நிவேதனஞ் செய்ய, கொட்டியத்திலிருந்து எள்ளு, வெல்லம் - கொட்டியத்திலிருந்து வெள்ளித் தாம்பாளம்.

---

209. மஹால்போத்தே - கஜானா; அரசாங்கப்பொருள் நிலையம், (பக். 456).

210. தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும் (பக். 82).

211. தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும் (பக். 87).

*5. 1837*
*(3) ஸரஸ்வதி பண்டார் நாலு வீதிகளிலுள்ள தமிழ்ப் பள்ளிக் கூடங்களுக்குப் பொங்கலுக்காக வழக்கப்படி*

*தேங்காய் 150, வா.பழம் 300, கரும்பு 25, பரங்கிக்காய் 6, பூசனிக்காய் 6, இவைகளைக் கொடுக்கிறது.*

*21.1837*
*(1) காளாகோட் திவான் வாடா தோட்டம் வகையறா தோட்டத்திலிருக்கும் பூனையின் ஜவ்வாது 11 3/8 வராகனிடை, புனுகு 2 வராகனிடை ஷை வீதம் ஜவ்வாது, புனுகு சிவங்கோட்டை ஸர்கார் அசல் மகாலில் சேர்ப்பிக்கிறது.*

*(2) 1837*
*ஸங்கீத வித்யாதிக பதக்கம்[212] -குவாலியரின்[213] பாட்டு வித்வான் கல்யான ஸிங்கு வகையறா அஸாமி 3க்குத் தங்கள் தேசத்திற்குச் செல்ல இனாம் சு.ரூ.60 கஜானாவிலிருந்து கொடுக்கிறது.*

*(3) 1837*
*உத்திரவு- பிராணி பீபீக்கு இனாம் 20 கொடுக்கிறது.*

*(4) நியாயசபை[214] திருடனை விட்டு விடுகிறதைப் (விடுதலை செய்வதை) பற்றி*

*(4) 1837*
*லக்ஷ்மணராவ் ஜகதாப் என்பவருடைய பெண்ணின் கழுத்திலிருந்து தங்கமணியைத் திருடின முத்துக்கருப்பனுக்கு அக்டோபர் மீ 17உ முதல் 2 மாதம் வரையில் காலில் விலங்கைப் போட்டு, சிறையில் போட்டு, மராமத்து வேலையை வாங்கி, டஹீட ஜைத்ரகம் ஹீரும்? கோட்டையின் விச்ரம்பீக்கு[215] எதிரில் 12 அடிகள் வீதம் அடித்து, டாணா வகையறாக்களில் காட்டி, விட்டு விடுகிறது என்று தீர்ப்பு.*

*(14) 1824 மே 1825 கும்பினி சம்ஜாவிஸி*

*(15) Apr. 1837 (1823 மே 1824 ஷை)*

*16.உத்திரவு*
*பெரிய கொட்டியத்திலிருந்து மாகாராஜா ஸபையின் கண்ணாடி லாந்தர்களுக்கு 68 மெழுகுவர்த்திகளைக் கொடுக்கிறது.*

---

212. தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும் (பக். 229).

213. குவாலியர் - மத்தியப்பிரதேசத்திலுள்ளது. (பக். 230).

214. நியாயசபை - நான்கு நீதிமன்றங்களுள் ஒன்று (பக். 167).

215. சீர்திருத்துமிடம் ஆகலாம்.

(2) உத்திரவு–கொட்டியத்திலிருந்து மா. ஆவுசாப் அவர்களிடத்தில் சக்கரைப் பொம்மைகளைத் தயாரிக்க தேங்காயின் சர்க்கரையை 30 சேர் கொடுக்கிறது.

16.1822 மே 1823 ஏப்.

1. ஞாபகக்குறிப்பு - காசி யாத்திரையில் வாங்கின ரூபாய் ஸம்ஜா விஸியில் வரவேண்டிய பாக்கி.

| | | | |
|---|---|---|---|
| முத்திரை ரூபாய் | 48,600 | | |
| ரஸீது 4 | | | |
| இதற்கு மகாவில் எழுதி வந்தபடி | 3738 | -7 | -4 |
| | 52338 | -7 | -4 |
| இதைத்தவிர சென்னப்பட்டணம் ரூ. ரஸீது-2. | 30000 | | |
| | 82338 | -7 | -4. |

(2) 1822 டிசம்பர் 2உ கவர்ண்மெண்டில் உத்திரவின்படி தஞ்சாவூர் ரெஸிடெண்ட்[216] அவர்கள் மூலம் வந்த ரசீதின்படி - தஞ்சாவூரின் கனம்பொருந்திய மகாராஜா[217] அவர்களுக்குத் திருச்சினாப்பள்ளி கிடங்குகளிலிருந்து அதிர்வேட்டுக்காக மருந்து அனுப்பினதற்குக் கணக்கு.

100 பௌண்டர் கொள்ளும்படியான காபூர் போஸிடன்

| | | | |
|---|---|---|---|
| 24 பீபாய்களுக்கு | ரூ. 1044 | -5 | -0 |
| 6 மெழுகுதுணி (Oil cloth) யின் விலை | ரூ. 23 | -1 | -6 |
| சின்ன சாக்குபைகள் 120க்கு | ரூ. 11 | -5 | -11 |
| நாட்டுத்தாம்புகயிறு | ரூ. 3 | -15 | -3 |
| சீமைதாம்பு கயிறு | ரூ. 2 | -0 | 0. |
| சென்னப்பட்டணத்திலிருந்து திருச்சினாப்பள்ளிக்குக் கொண்டுவர 4 வண்டிகளின் மாடுகளுக்கும் வண்டிக்காரனுக்குங்கூட கூலி | ரூ. 91 | -0 | -0 |
| ஷெ வண்டி திருச்சியிலிருந்து தஞ்சாவூர் வரக்கூலி | ரூ. 14 | -0 | -0 |
| | ரூ. 1189 | -11 | -8 |

216. ரெஸிடெண்டு வில்லியம் பிளாக்பர்ன் (BlackBurn)

217. மகாராஜா என்றது இரண்டாம் சரபோஜியை

*முகாம் சென்னப்பட்டணம் மில்டிரி போர்டு ஆபிஸ்*
*1823௵ பிப்ரவரி 22உ*

ஜே.எம். மாரவியாஸ்
(ஆங்கிலத்தில் கையொப்பமிருக்கிறது)
மில்டரி போர்ட்டு அகவுண்டெண்ட்
செக்ரடரி

*1823௵ மார்ச்சுமீ 16உ எழுதிக்கொள்ளப்பட்டது.*

*13-1826 to 1827*
*(1) தஞ்சாவூர் 1826 ௵ அக்டோபர் மீ 18*

நம்முடைய தேசத்தில் 1235 ம் பசலி[218] வருமானத்தின் அய்ந்திலொரு பாகத்திலும், ஒரு லக்ஷம் விராகன் கணக்கிலும்[219] ஆபிஸியால் வருஷம்[220] 1826-1827 பந்திக்கொண்ட தானியம்[221] வகையறாக்களுடைய விலை ரூ 71720 அணா 6 பைசா 11 கும்பனியார்களின் கணக்கில் ரெஸிடெண்டு காப்டென் சான் பயிபுசாயப் இடத்தில்[222] வரப்பத்திக் கொண்டோம்.

*(2) ஞாபகக்குறிப்பு- கலெக்டருடைய கணக்குப்படி 1826 ௵ மே மீ 1உ யிலிருந்து 1827 ௵ ஏப்ரல் மீ 30உ வரையில் தஞ்சாவூர் ஸமஸ்தானத்தில் விபரம்.*

**வரவு**

| | | |
|---|---|---|
| நிலவரி | ரூ. 3146281-1 | -6 |
| உப்பு வருமானம் | ரூ. 235659 -10 | -4 |
| நில கஷ்டம்[223] | ரூ. 376395-6 | -1 |
| கடல் கஷ்டம்[224] | ரூ. 29101 -6 | -5 |
| ஆப்காரி சாராயம் | ரூ. 34206 -6 | -8 |
| சில்லறை குத்திகை வருமானம் | ரூ. 15818 -6 | -8 |

---

218. 1236ஆம் பசலி கி.1826; (கி.பி.591 முதல் தொடங்குவதும் 1555 முதல் அக்பரால் வழக்கப்படுத்தப்பட்டதுமான ஆண்டுமுறை (பக். 368).

219. இரண்டாம் சரபோஜி கும்பினியோடு செய்துகொண்ட ஒப்பந்தம் ஏழாவது ஷரத்தின்படி ஐந்தில் ஒரு பங்கும் ஒரு லக்ஷம் வராகனும் பெறும் உரிமை பெற்றார்.

220. ஆபிஸியல் வருஷம் - Official Year

221. இவ்வுடம்படிக்கையின் 15ஆவது ஷரத்து: அரசருக்கு வேண்டிய அளவு நெல் முதலிய தானியங்களைக் கால விலையின்படிக் கும்பினியாரே கொடுக்கவேண்டும் என்பது (பக். 54).

222. ரெஸிடெண்டு காப்டன் சான் பயிபு சாயபு இடத்தில் Captain (John Fyfe)

223. நிலகஷ்டம் - உள்நாட்டுப் பண்டங்களின் மேல் விதிக்கும் வரி (கஷ்டம் - Customs Duty)

224. கடல் கஷ்டம் - இறக்குமதி வரி Tax on Looms (பக். 137–138).

| | | | |
|---|---|---|---|
| மொதரப்பா[225] | ரூ. 8296 | -15 | -5 |
| ஸ்டாம்ப்[226] | ரூ. 52695 | -2 | -7 |
| | 3899452 | -4 | -10 |

## சிலவு

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| சம்பளக் கமிஷன் | 61994 | -10 | -6 |
| கட்டணம் வசூல் | 114934 | -0 | -11 |
| சார்விஸ் எக்ஸ்ட்ராட் | 10813 | -2 | -11 |
| ரிபேர்டாக்ஸ் மராமத்து[227] | 54389 | -11 | -6 |
| ஸாலக்-யார்ஜஸ் | 45159 | -0 | -0 |
| நிலகஷ்டம் கட்டணங்கள் | 4654 | -7 | -8 |
| கடல் கஷ்டம் கட்டணங்கள் | 3582 | -0 | -9 |
| ஸ்டாம்ப் கட்டணங்கள் | 3117 | -6 | -1 |
| பென்சின்[228] தருமசிலவு | 146517 | -8 | -8 |
| | 445262 | -1 | -0 |

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| சில்லரை வரவு | 91167 | -10 | -1 |
| வட்டி | 91 | -6 | -7 |
| மராமத்து இனம் பாஜகஸ்தம் | 3892 | -12 | -9 |
| தண்டல் செய்யும்பொழுது வந்ததுகை | | | |
| கட்டணம் வசூல் ரீபண்ட்[229] | 4440-5 | | -5 |
| சம்பளக் கமிஷன் | 3417 -12 | | -9 |
| பென்சின் | 13 -4 | | -9 |
| | ரூ. 103023 -4 | | -4 |

225. மொதரிஃபா - தொழில்வரி

226. முத்திரைக்காகித வருமானம் Stamp duty

227. Repair, Tax, maramat

228. பென்சின் - Pension (ஓய்வூதியம்)

229. Refund - திரும்பப்பெறல்

| | | | |
|---|---|---|---|
| | 4002475 | -9 | -2 |
| | 33629 | -14 | -8 |
| தமாவீ? | 4036105 | -7 | -70 |
| | 334 | -6 | -1 |
| சட்டம் கட்டணங்கள் தமாவீ | 25718 | -11 | -9 |
| | 471315 | -2 | -10 |
| போக பாக்கி | 3564790 | -5 | -0 |

ஸமோஹி சிலவு ரூ. 350000 ஸர்காருக்கு
ரூ. 87500 ரா. அமரசிங்கு போஸலே அவர்கள்
சம்சாரத்திற்கு 437500 3127290 -5
625458 -1 -0

போக பாக்கி ஐந்திலொன்று.
போக பாக்கி ரூ 2501832-4-0 யில் கௌனர் மெண்டின் உத்திரவின்படி திருவையார் தா லூகாவைச் சேர்ந்த 4 கிராமங்களுக்கு 1225 பசலி முதல் 1234 பசலி வரையிலும் பாக்கி 62415-10-3 போக பாக்கி கும்பனிக்கு வந்த 2439416-9-9

ஜே. ஹெச். டனர்பூல்
அக்கௌண்ட்யண்ட் ஜனரல்
சரியான நகல்
செக்ரிடரி டிஹில்

முகாம் சென்னப் பட்டணம் அகௌண்டெண்ட் ஜனரல் ஆபீஸ் 1827 நவம்பர் மீ 12உ இந்தப்படிக்கு கணக்கு கிருஷ்ண விலாஸத்தில் தாவித் பிள்ளையானவர்[230] எழுதச் சொன்னது. 1827 நவம்பர் மீ 24உ

## மூட்டை எண்-184C

1215[231]

(1) செவ்வாய்க்கிழமை தானத்திற்கு-கேதுவுக்குப்[232] பிரிதியாக தானம் துவரம் பருப்பு-2படி

230. தாவித் பிள்ளை - இவர் இரண்டாம் சரபோஜி காலத்தில் இருந்த அலுவலர். இரண்டாம் சரபோஜி காசிப்பயணத்தில் உடன்சென்ற அலுவலர்களின் ஒருவர் (பக். 114).

231. இங்கும் அடுத்து (346 ஆம்பக்கம் வரையில்) வரும் ஆண்டுகள் ஹிஜ்ரி அல்லது ஸூஹர்ஸன் ஆண்டுகளாகும். இவை முஸ்லிம் ஆண்டுகளாகும். ஸூஹர்ஸன் ஆண்டுடன் 599 சேர்ப்பின் ஆங்கில ஆண்டு வரும். எனவே இங்குகண்ட 1215உடன் 599 சேர்ப்பின் அது 1814 ஆகும். ஹிஜ்ரி ஆண்டுடன் 586 சேர்த்தால் ஆங்கில ஆண்டுவரும். (பக். 367–368).

232. கேது - நவக்கிரகங்களில் ஒன்று

கொள்ளு-2 பணம்,பவளம்[233] 2 படி

*1214*
(1) மல்ஹார்ஜி அப்பாவின் கல்யாணமாய் ஒரு மாஸமான தினம் காசா[234] மடிரொப்புக்கிற சாமான்களைக் கொடுக்கும்படி சரபத்கானாவிற்கு உத்திரவாயிருக்கிறது.

*(2) 1214*
திரிபுவனத்தின் தம்பிரானி[235]டமுள்ள ஆடை ஒன்றை ஜாமதார்கானாவில் வைக்கிறது.

*(3) 1214*
வைத்தீஷ்வரன் கோவில் தம்பிரானி[236]டமுள்ள
வாழைப்பழம்-5, எ. பழம் -4
ஸரபத் கானாவில் வைக்கிறது.

*(4) 1214*
ஸரஸ்வதி பிரஸாத் என்கிற யானைக்குட்டிக்கு மாதகி
வெங்காயம்3 சேர்,வெல்லம் 3 சேர், சாராயம்3 சேர், மிளகு 1/4 சேர்,
சுக்கு 9 டாங்க், = 9 சேர் 2 பலம் 9 டாங்க்
*1214*
5. பவானி பிரஸாதமென்கிற யானைக்குட்டி தஞ்சாவூர்க்குப் போய், தங்க ஹெளதாவை ஏற்றிக்கொண்டு வந்ததற்காக யானைக்குட்டிபடமூத?செய்து கொண்டிருக்கிறது. இதற்காக மருந்து. தடிகரிமேன் இடை
சன்ன லவங்கப்பட்டை 1/4 சேர், நலிதால் ஜீனி 1/4 சேர், சிறுநாகப்பூ 1/4 சேர், ஜீரகம் - 1/4 சேர், மல்லி 1/4 சேர், மிளகு 1/4 சேர், சுக்கு 4 1/2 டாங்க், நெய் 1 சேர், ஜாதிக்காய் 2 டாங்க், ஜாய பத்திரி 2 டாங்க்..............9 டாங்க் = சேர் 2 1/2 –17 1/2 டாங்க்

*(6) 1214*
இராஜ் மகாலுக்குச் சொல்லி வைத்தீஷ்வரன் கோவிலின் தம்பிரான்[236] காணவந்த பொழுது கொடுத்த ருத்திராக்ஷத்தின் மாலையையும் பவளமும் மோர்தமும்?[237] கூட வரவு வைக்கிறது.

*(7) 1214.* போலிசுக்கு ஒரு சால்வையைக் கொடுக்கிறது.

---

233. பவளம் - மகிழம்பூ ஆகலாம்

234. காசா - மிகச்சிறந்த (முறையில்)

235. திரிபுவனம் என்பது கும்பகோணத்துக்கும் திருவிடைமருதூர்க்கும் இடையிலுள்ள தலம். இவ்வூர்ச் சிவன்கோயில் தருமபுர ஆதீனத்துச் சீரிய பரிபாலனத்திலுள்ளது. அந்நாளிலும் தருமபுர ஆதீனத்தம்பிரான்களில் ஒருவர் இவ்வூரில் இருந்தார் என்று இதனால் தெரிகிறது.

236. வைத்தீசுவரன் கோயிலும் தருமபுர ஆதீனத்துச்சீரிய பரிபாலனத்தில் உள்ள இருபத்தெட்டுத் திருக்கோயில்களுள் சிறப்பானது.

237. மோர்தம் - மோதிரம்(?)

*1. 1212*

இனாம். வாசுதேவ நாயக்கன் கடனிருந்து விடுதலையடைய 1000 வெள்ளி புலி வராகனைக்[238] கொடுக்கிறது.

*1215.*

*(1)* திருவாரூர் சதவிக்னேஸ்வர ஸ்வாமிக்கு[239] உற்சவ லக்ன பத்திரிகை பாவ[240] ஹு ஆவணிமீ 26உ வெள்ளிக்கிழமை.

*(2)* முத்தம்மாபுரம் சத்திரத்தில்[241] ரம்சான்[242] மீ 9உ 4570 பேர்கள் சாப்பிட்டார்கள்.

*(3) 1215*

வடக்குவாசலுக்குக் கிழக்கில் கொந்தளக்காரர்களு[243]டைய வீட்டுக்குச் சமீபத்தில் பிள்ளைகள் எழுதுகிற பள்ளிக்கூடம் இருக்கிறது. அந்தப் பள்ளிக்கூடத்தின் வளசணிக்குத்[244] தென்னண்டை பாஞ்சேவார்[245] கிழவன் கழுத்திற்கு சுருக்குப் போட்டுக்கொண்டு இறந்தான்.

*8. 1214*

*(1)* மராமத்து மகால்[246] திவான்வாடா-

சி. ராஜகுமராபாயி அமணிராஜே[247] பாயம்மாபாயி அமணி ராஜே இருவருடைய கல்யாணத்திற்காக நாராயணாசாரியிடம் யானைத் தந்தத்தின் கட்டில் 2க்கு கால் 8க்கு ஹுஜுர் மகாலிலிருந்து யானைத்தந்தம் 2 1/2 மனு கொடுக்கிறது.

*5. 1212*

*1.* பாவுபீஜ[248] பண்டிகைக்கு ஒவாளணி[249]க்கு வழக்கப்படி 40 சக்.தஸ்தாவேஜு

---

238. 45 பணம் ஒரு புலிவராகன். வெள்ளிப் புலிவராகவன் என்பதால் புலிவராகன் வெள்ளி நாணயம் என அறியப்பெறும். (பக். 150).

239. திருவாரூர் சதவிக்னேசுவரர் - தியாகராச சுவாமி என்றிருக்கலாம்

240. பவ-யாண்டறுபதனுள் எட்டாவது (கி.பி.1814) (1215 + 599 = 1814)

241. முத்தம்மாபுரம் சத்திரம் - ஒரத்தநாடு சத்திரம் (பக். 273).

242. ரம்ஜான் - முகம்மதியர் மாதங்களுள் ஒன்பதாவது

243. கொந்தளக்காரன் - கோந்தளம் வாசிப்பவன் (பக். 347-348).

244. வளசணி - வளைசல் ஆகலாம் ; சுற்றுப்புறச்சுவர் (?)

245. பாஞ்சேவார் - அரிஜன் போலும்

246. மராமத்து மகால் - இமாரதி மஹால் (பக். 458).

247. ராஜகுமாரபாயி அமணி ராஜே என்பவர் இரண்டாம் சரபோஜிக்கும் அவர் மனைவி அஹல்யாபாயிக்கும் பிறந்த இரண்டாவது மகள் (போ.வ.ச.பக்.138)

248. பாவுபீஜ் - தீபாவளி ஆகிக் கார்த்திகை சுக்லபட்சம் திவிதீயை நாளில் தங்கை தன் தம்பி அல்லது அண்ணனுக்கு விருந்தளித்துத் துணிமணிகளைக் கொடுத்து ஆரத்தி எடுப்பது வழக்கம்; அப்பொழுது தங்கைக்குத் தமையன் ஆரத்தித் தட்டில் பணம்போடுவார் (பக். 309).

249. ஒவாளணி - ஆரத்தி (சுற்றுதல்) எடுத்தல்

சௌ. ராஜம்மாவிற்கு[250] 200
சி. சிவாஜிராஜா சாயேப்பீடம் 200 சக்.[251] = 400

21. 1214

(1) கும்பகோணம் ஸவாரி முகாமிற்கு பீரங்கியை இழுத்துக்கொண்டு வந்த மாட்டு ஜோடிகள் 8க்கு கைப்புவர சாமான்கள் ஜாபிதா.

(2) 1214

6 ஒட்டகங்களுக்கு கைப்பு[252]வர சாமான்கள்.
வெல்லம் 9 சேர், வெங்காயம் 9 சேர், மிளகு 1 1/4 சேர்
மஞ்சள் 1 1/2 சேர் கொடுக்கிறது.

(3) 1214

கார்பாரி[253] இராமசாமி பண்டிதரின் பெண்களும், குழந்தைகளும் டோலியுடம்[254] திருவையாருக்குப் போவார்கள். வாசற்காப்போனுக்கு அவர்களை விடும்படி உத்திரவிடுகிறது.

(4) 1214

யுத்தசாலையில் சொல்லி, கிருஷ்ண விலாஸ[255]த்திலுள்ள ஜல சூத்திரத்தின்[256] பெரிய பெட்டி கெட்டுப் போனதைச் செப்பனிடுகிறது.

(5) 1214

"டப் காணி" லாவணி பாட்டு[257], பாடுகிற சிப்பாய்கள் 8 பேருக்கு இரவில் சாப்பாடு அளிக்கிறது.

(6) 1214

லாவணி பாட்டில் ஆடுகிற பிராமணர்களின் பெண்கள் 2க்கு வருஷப் பிறப்பு வரையில் தினப்படி இரவில் சாப்பாடு அளிக்கிறது.

---

250. ராஜம்மா - இரண்டாம் சரபோஜியின் முதல் மனைவி யமுனாபாயி (போ.வ.ச.பக்.134); இவர் மகள் ராஜம்மா. ராஜம்மாவின் கணவன் ஜிவாஜி கோவிந்தராவ் மோஹிதே என்பவர் ஆவார்.

251. பாவுபீஜ் பண்டிகையில் ஆரத்தி தட்டில் சிவாஜி போட்ட பணம் 200 சக்கரம்.

252. கைப்பு - குடிவெறி

253. கார்பாரி : ஒரு பெரிய அலுவலர்; இவர் அரசரது மெய் காப்பாளர்களின் தலைவன் ஆதல் கூடும் (பக். 75).

254. டோலியுடம் - டோலியில். டோலி-தூக்கிச் செல்லும் மஞ்சம்.

255. கிருஷ்ணவிலாஸ் - அரண்மனையின் தரைப்பகுதி

256. ஜலசூத்திரம் - தண்ணீர் இறைக்கும் இயந்திரம்

257. லாவணிப்பாட்டு - இது ஒரு வகை இசைப்பாடல்; பொதுமக்களின் மனத்தைக் கவரவல்ல நாட்டுப்புறப் பாடல் வகையைச் சார்ந்தது; தஞ்சை மராட்டியர் காலத்தில் பெருவழக்கில் இருந்தது. இருகட்சிகளில் ஒருகட்சி ஒரு கருத்தைப் பற்றி வாதிடும். கட்சித்தலைவர் உடனுக்குடன் பாடல் புனைந்து பாடும் திறமையுடையவராய் இருப்பார். லாவணி பாடுவதில் ஆண்களே பங்கு கொள்வர் டப் என்ற தோல் இசைக்கருவி பயன்படுத்தப்படும். (பக். 226).

*(7) 1214*

மகாமகத்திற்கு[258] கும்பகோணத்திற்குப் போய் வந்த 14 யானைகளின் பெயர்களின் ஜாபிதா.

*14. 1215*

(1)கர்னல் ஸீயெல்[259] என்னும் வெள்ளைக்காரர் வந்ததினால் யுத்தசாலையில் தெரிவித்து 17 குண்டுகளைப் போட வெடிமருந்தைக் கொடுக்கிறது.

*(2) 1215*

அம்மாபட்டணத்தின் கரியான் ஸமுத்திரத்தில் மூழ்கி சங்கை எடுத்ததற்காககாரியஸ்தருக்கு முண்டாசு-1

8 கரியான்களுக்குத்[260] துப்பட்டா -8 கொடுத்தார்கள்.

*(3) 1215*

லாயத்தில் வாவி குதிரைக்குக் கொள்ளு உடன் உள்ளுக்குக் கொடுக்க, தினமொன்றுக்கு 1 சேர் ந. எண்ணையைக் கொடுக்கிறது.

*(4) 1215*

வேட்டை மகால்-டூரியனுடைய தோட்டத்திலுள்ள பிராணிகளுக்கு ஒரு இரட்டை பத்தி பாயையும்[261] புலியின் மகாலுக்கு[262] ஒரு இரட்டைப் பத்தி பாயையும் கொடுக்கிறது.

*(5) 1214*

குதிரைக்கு வாயுவுக்காக உள்ளுக்கு கொடுக்க மசாலாவின் ஜாபிதா.

*(6) 1214*

இருமாப்பிள்ளை[263] சாயேப்களிடமுள்ள 2 சாமரத்தின் ஜோடியை அலம்பி சுத்தம் செய்து கொடுக்க வேண்டிய சாமான்களின் எடையின் ஜாபிதா.

*(7) 1214* ஜாபிதா

ஞானானந்த நாதரென்பவர் எழுதிக்கொண்டது. என்னவென்றால் ஸ்ரீஸ்வாமியார் வீட்டிலிருந்து புறப்பட்ட நாள் முதற்கொண்டு ஊரில் பிக்ஷயை வாங்கி, ஸ்ரீஸமாதியில் ஸ்ரீயின்

---

258. மகாமகம் - மாசித்திங்களில் குரு சிங்கராசியிற் சேரும் புண்ணியநாள்; இது பன்னிரண்டாண்டுகளுக்கொருமுறை கும்பகோணத்திற் கொண்டாடப்பெறுகிற பெருவிழா.

259. கர்னல் ஸீயெல் - ஒரு சேனைத்தலைவர்

260. கரியான் - கரையான்-கடற்கரைப் பக்கத்துவாழும் வலைஞன்

261. இரட்டைப்பத்திபாய் - ஏன் என்று தெரியவில்லை

262. புலியின் மகால் என்பது வேட்டை மகாலின் ஒரு பகுதியேயாதல் வேண்டும்.

263. இரண்டாம் சரபோஜியின் மாப்பிள்ளைகளில் ஒருவர் எசவந்தராவ் ராமச்சந்திரராவ் (பாயம்மாபாயியின் கணவர்) (பக்.31) பிறிதொருவர் ஜிவாஜி கோவிந்தராவ் மொஹிதே. (இவர் ராஜம்மாவின் கணவர்). (மேலும் இருவர் உண்டு)

பாதத்தண்டை காலக்ஷேபம் செய்து வருகிறேன். தினந்தோறும் கோட்டைக்கு வந்து திரிந்து போகுவதற்குச் சக்தியில்லை. ஆதலால் என்னுடன் 5 பேர்களுக்குக் காலக்ஷேபம் நடக்கும்படிக்கு மஹால் அன்னசத்திரம் தஞ்சாவூர், இதிலிருந்து உப்பு புளி வகையறாவுடன் 2 உலுப்பைகளை[264] தினப்படி, இதைத்தவிர நாதபந்த்து ஸம்ப்ரதாயத்தின் பிருது(சின்னம்) புதிய ஒரு சைலி,[265] ஒரு கிழிசல், ஒரு ஸரஞ்சையின்? கழி ருத்திராக்ஷத்தின் குண்டலம் 2, ஐந்து முகமுள்ள ஜோளி,[266] ஒரு ருத்திராக்ஷத்தின் மாலை,ஒரு கண்டா?[267] கிருஷ்ணாஜினம் [268] 4. பெண்சங்கு ஒன்று இந்தப்படிக்கிருக்கிறது. ம கா. ரா. ரா சத்திரபதி[269] அன்ன தாதா[270] சாஹேப் மனமுர்ந்து கொடுக்க உத்திரவு செய்ய வேண்டும் ஷேசொன்னபடி கொடுக்கிறது.

*10. 1212*

*1. ம கா. ஸ்ரீ. ஸ்ரீ. திவான்சாஹேபிடம்[271] ம்ருத்யுஞ்ஜய[272] ஹோமத்திற்காக ஆடு ஒன்றுக்கு* ( *பணம்.*

---

264. உலுப்பைகள்: சத்திரத்துக்கு வரவியலாதவர்கட்கும், பெரிய அதிகாரிகட்கும், வந்து உண்பதற்கு விரும்பாதவர்கட்கும் அரிசியும், அதற்குரிய உப்பு, புளி முதலிய பொருள்களும் அளிப்பது வழக்கம். இது உலுப்பை எனப்படும். இங்ஙனம் உலுப்பைகள் அந்தணர்கட்கும், பைராகிகட்கும், வெள்ளையர்களாகிய பெரிய அலுவலர்கட்கும் அளிக்கப்பெற்றன (பக். 278-9)

265. சைலி - நீண்ட அங்கி

266. ஜோளி - பிச்சை ஏற்கும் பை

267. கண்டா - பூசைக்காலத்தில் ஒலிப்பதற்குரிய மணி.

268. கிருஸ்ணாஜினம் - உட்காருவதற்குரிய மான்தோல்

269. சத்திரபதி என்றது இரண்டாம் சரபோஜியை

270. அன்னதாதா - சோறிடும் வள்ளல்

271. திவான்சாஹேப் என்றது இரண்டாம் சரபோஜியை

272. மிருத்யுஞ்ஜய - மரணத்தை நீக்கவல்ல மந்த்ரம்

மஹா ம்ருத்யுஞ்ஜய மந்த்ரம்
ஓம் ஜூம் ஸ:.த்ரயம்பகம் யஜாமஹே ஸுகந்திம்
புஷ்டி வர்த்தனம் ...........நக்ஷத்ரே .......ராசௌ
ஜாதம் சிவாஜி மஹராஜ் நாமாநம்
ம்ருத்யோ : பாலய பாலய ரோகான் மோசய மோசய
ஆயுர் வர்த்தய வர்த்தய தீர்காயுஷ்மந்தம் குரு குரு
உர்வாருகமிவ பந்தனான் ம்ருத்யோர் முக்ஷீய மாம்ருதாத்
ஸ: ஜூம் ஓம்

ம்ருத்யஞ்ஜய ஹோமத்திற்கு வேண்டிய த்ரவ்யங்கள்

1) சீந்தில் கொடி, 2) வடாங்குரம் (ஆலமொட்டு), 3) எள்ளு
4) தூர்வா ( அறுகம்புல்), 5) பால், 6) நெய், 7) பாயஸம்

*25. 1214*

*1. திருவிடமருதூர் தம்பிரான்[273] ஹுஜுரைக்காண வந்தபொழுது கொடுத்தசாதர்[274] ஒன்றை ஜாமதார்கானாவில் வரவுவைக்கிறது.*

*(2) சி. ராஜகுமராபாயி-பாயிம்மா அமணி ராஜே இவர்களுடைய கலியாணத்திற்காக மஞ்சள் தினம் விருந்துக்காக சென்னப்பட்டணம் வெள்ளிப்பணம்[275] 40 சக்.*

*(3) 1214*

*ஸ்ரீசந்திர மௌளீஸ்வர ஸ்வாமி[276] கோவிலிலிருந்து. ஸ்ரீதிவான் சாயேப் மகாமகத்திற்கு கும்பகோணத்திற்கு ஸவாரி போகும் போது கூட கொண்டுபோன சுவாமிகளின் ஜாபிதா சுவாமி அசல் பல்லாக்கின்மேல் மூடி துணியுடன்.*

*(4) 1214*

*சி. ராஜகுமராபாயி-பாயம்மா பாயி இவர்களுடைய கலியாணத்தில் வந்த வராத் என்னும் தினத்தில் பிராமண போஜனம் 1310 பேருக்குச் சமையல் செய்ய கூலி சக்.195 1/4*

*(5) 1214*

*சௌ. பாயிசாப் இடம் தங்க அன்னபூர்ணா மூர்த்தி ஒன்றை வார்த்துக்கொடுக்க சக். 2250 தங்கம் 9 மாத்துள்ளது,[277] 10 சேர் கரீதி-விராகனிடை ஒன்றுக்கு சக்.2-8 1/8 வீதம்.*

*(6) 1214*

*ஸ்ரீமகாராஜா சாயேப் அவர்களுடைய பிறந்த நக்ஷத்திரத்திற்காக (பங்குனி)பால்குண சுத்த தசமி[278] செவ்வாய்க்கிழமை தானத்திற்கு ஜாபிதா.*

*(7) 1214*

*கொத்தவால் செய்தி-இரவில் ரோந்து செய்து கொண்டிருக்கையில் புவாஜி போஸலேயின் வீட்டில் திருடின தாண்டவராய் என்பவனை சிகப்பு கம்பத்திற்குக் கட்டி பிரம்பினால் 12 அடி, அடித்து விட்டுவிடப்பட்டது.*

---

273. திருவிடைமருதூர் மகாலிங்கப்பெருமாள் கோயில் இற்றை நாளில் திருவாவடுதுறை ஆதீனத்துப் பரிபாலனத்தில் உள்ளது. ஆகவே இங்குக் குறித்த தம்பிரான் திருவாவடுதுறை ஆதீனத்தவர் ஆகலாம்.

274. சாதர் - சாதரா (பொன்னாடை)

275. சென்னப்பட்டணம் வெள்ளிப்பணம் 2 1/2பணம் (பக். 150).

276. மராட்டிய மன்னரது வழிபாட்டுக்கு மட்டும் உரிய சந்திரமொலீசுவரர் ஆவர். இவர் கோயில் தஞ்சை அரண்மனையில் உள்ளது. (பக் 191 அடிக்குறிப்பு)

277. மாத்து - மாற்று ; தங்கத்தின் தூய்மையைக் குறிப்பது. 10 1/2 மாற்று மிகச் சிறந்தது; ஒன்பது மாற்று என்பது மாற்றுக்குறைவானதே.

278. சுத்தம் - வளர்பிறை தசமி - பத்தாவது நாள்

*(8)1214*

மகாமகத்திற்கு சரபோஜி ராஜா போகும்பொழுது கொத்தவால் செய்ய வேண்டிய வேலைகளுக்கு உத்திரவாக வேண்டுமென்று கொடுத்த மனு:-

ஸேவகனிடம் 8 ஜாமான்களை நியமிக்கிறது. இரவில் 10 மணிக்கு மேல் கோட்டையில் ஒருவரும் நடமாடக்கூடாதென்று தண்டோரா போடுகிறது. யாராவது அகப்பட்டால் அவர்களை விசாரணை செய்து, அபராதம் போடப் படும். இரவில் 9 மணிக்கு 3 வாசல்களையும் சாத்த வேண்டும்.

*(9) 1214*

திருப்பயணத்தில்[279] பத்ஸஹாயேஸ்வர ஸ்வாமி மாதத்திற்கு ஒரு கோதானம் கொடுப்பது வழக்கம். அது தற்பொழுது சேரவில்லை.

அச்சுவேலை பிராமணர்களும் ரா. ரா. பாளம்பட் பட்டு கோசாமியும் ரா.ரா. பெரிய மாப்பிள்ளையும்[280] மூலம் பிராமணர்களுக்குக் கொடுத்தால், ஒரு கோதானத்தை ஸ்ரீஸ்வாமிக்குக் கொடுக்க உத்திரவிட வேண்டும்.

*15.1202*

(1) ம.கா.ரா.ரா. திவான் சாயேப் இவர்கள் தீர்த்தயாத்திர[281] செய்வதற்காக "நெய்த்தேவசம்" மார்க்க சிர்ஷ பகுள திவிதியை[282] செவ்வாய்க்கிழமை-இதற்காக 6 ஆஸாமிகளுக்குப் பணம் 5 வீதம் சக்.3

*(2) 1202*

அம்பாஜி மோரேஸ்வரைச் சேர்ந்த ஹிந்துஸ்தானி பாடகன் ஸகாராம் இவருக்கு தஞ்சாவூரில் அபராதம் விழுந்ததை மன்னித்த வகையில் கொடுக்கிறது. சக்.6 5/8.

*15.1202*

3. கும்பகோணத்தில் ஸ்ரீசங்கராசார்ய[283] ஸ்வாமிகளுக்குக் கனகாபிஷேகத்திற்காக சக். 500

*17.1215*

1. ரா. சிவாஜிராஜே சாயேப்[284] அவர்களுடைய மரத்தினால் செய்த ஸபாபதியின்[285]

---

279. திருப்பயணம் - திருப்பழனம்; இத்தலம் திருவையாற்றுக்கருகில் கும்பகோணம் செல்லும் பெருவழியிலுள்ளது.

280. பெரியமாப்பிள்ளை என்பது இரண்டாவது சரபோஜியின் முதல் மனைவி யமுனாபாயியின் மகள் ராஜம்மாவை மணந்த ஜிவாஜி கோவிந்தராவ் மொகிதேயாகலாம்.

281. 1202 என்பது கி.பி.1801 ஆகும். இரண்டாம் சரபோஜியும் நாட்டிலுள்ள தலங்களைத் தரிசிக்கச் சோழநாடு முழுமையும் ஒரு தடவை சென்றதாகப் போ.வ.ச.பக்.137இல் உள்ளது.

232. மாக்கசீருஷம் - மார்கழித் திங்கள்:- பகுளம் - தேய்பிறை;திவிதியை-- இரண்டாம்நாள்.

283. இவர் நான்காவது மகாதேவேந்திர ஸரஸ்வதி சுவாமிகள் ஆவர். இவர் 1783 முதல் 1814 வரை வாழ்ந்தவர் ஆவர் (பக். 433).

284. இவர் இரண்டாம் சரபோஜியின் மகன் ஆவர்.

285. சபாபதி - நடராசப்பெருமான்

மூர்த்திக்குக் குர்னபட்டை[286] ஒட்டி சாயமும் தடவிக்கொடுக்கிறது.

**(2) 1215**

பாகவதமேளின் ஹுஜூர் பிள்ளையார் முன்னிலையில் நாடகம் ஆடுவதற்கு வழக்கப்படி சாமான்களைக் கொடுக்கிற விவரம்.

**19-1215**

1. திருவையாறிலிருக்கும் வேஷதாரி[287] ராமலிங்கனுக்கு இனாம் சக்-5

**2. 1215**

திருவையாறில் பஞ்சநதீஷ்வர[288] ஸ்வாமியின் தரிசனத்திற்குப் போகுவதால் வழக்கப்படி சிலவு சக்-9.

சௌ. மா. அகில்யாபாய் சாயேப் இடம்

சி. சிவாஜி ராஜா இடம்

சி. சுலக்ஷணாபாயி அமணிராஜே[289] சாயேப் இடம்

சி. ராஜம்மா அமணிராஜே சாயேப் இடம்

சி. ராஜகுமராபாயி அமணிராஜே சாயேப் இடம்

சி. பாயம்மா அமணிராஜே சாயேப் இடம்

சி. ஸக்வார் பாயி அமணிராஜே சாயேப் இடம்

ஆக சக். 9 கொடுக்கிறது.

**21-1214**

1. வெடிமருந்து சாலை[290]

மத்தாப்பின் தூண் நான்கு வீதிகளிலும் நட்டதை எடுத்து இராஜகோபால ஸ்வாமி[291] கோவிலில் வெடிமருந்து சாலையில் வைப்பதற்கு அஸாமி 4க்கு 1க்கு 3/4பணம் வீதம் 3 பணம்.

**(2) 1214**

பாஜீநஸ்? வெள்ளிப்புலி விராகன் ஒன்றுக்கு 20 வராகன் வீதம் 6000க்கு 3000[292] சென்னப்பட்டணம் பணம் 540000 க்குப்புலி வராகனொன்றுக்கு 45 வீதம் வராகன் புலி 12000 = 15000

---

286. குர்ணாப்பட்டை - குருநாப்பட்டை - ஒளியுள்ள ஒருவகை மெல்லிய வர்ணத்தகடு

287. வேடதாரி - மாறுவேடம் போடுபவர்

288. பஞ்சநதீஷ்வரர் - திருவையாற்றில் கோயில் கொண்டுள்ள ஐயாறப்பர்.

289. சுலக்ஷணா முதல் ஐவரும் இரண்டாம் சரபோஜியின் பெண்கள் ஆவர்; ஸக்வார்பாயி அகல்யாபாயியின் 4ஆவது மகள்; ராஜம்மா சரபோஜியின் முதல் மனைவி யமுனாம்பாபாயியின் மகள் ஆவர்.

290. வெடிமருந்துச் சாலை - தாருகானா (பக். 452).

291. தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும் (பக். 213–14; 189–92).

292. இது தவறாக உள்ளது.

*21.1214*

*3. கிருஷ்ணாஜி யேசாஜி போவார் என்பவர் தான் குழந்தையின் வேண்டுகோளுக்காக ராஜகிரியிலுள்ள மார்த்தண்ட பைரஸ்சாமியைப் பார்க்க போய்வரவும், கும்பகோணத்திற்கு மகாமகத்திற்கு ஸ்நாநத்திற்குப் போகவும், மூடின பல்லாக்கு வகையறாவைக் கொடுக்க வேணுமென்று கொடுத்த மனு.*

*23. 1212*

*1. திரௌபதாம்பாபுரம்[293] பானார் கோட்டையில் அஸைன் பலகைகள் என்கிற சீமைப் பலாவின் பலகையை வாங்க ஆசாரி இடம் பரங்கி பேட்டை வராகன்[294] 100.*

*2. 1212*

*இராமேஸ்வரத்திற்குப் போகிற வழியில் பாம்பன் கோட்டையில்? அசனி என்னும் பலகையை வாங்கச் சிலவு சக். 92-1*

*தொப்பங்கட்டி இராஜா மடத்திற்கு வந்துபோக பாதிகூலி போக பாக்கி பணம் 7 1/2*

*3. 1212*

*நாய் வைத்தியம் காதர்கானுக்கு இனாம் சக். 5*

*(4) 1212*

*ஹுஜூர் ஹரிஹர விலாஸ் மாடியில் துளஜி பிருந்தாவனப் பூஜைக்கு[295] வழக்கப்படி சக்-10.*

---

293. திரௌபதாம்பாள் பிரதாபசிங்கரின் மனைவி; திரௌபதாம்பாபுரம் என்பது மணமேற்குடியென்ற ஊராகும். (பக். 271).

294. பரங்கிப்பேட்டை வராகன் சிறிது மதிப்பு அதிகம் உடையது (பக். 151).

295. துளஜி பிருந்தாவன பூஜை - திருத்துளசிச் செடிக்குப் (பக். 275–276).

## சரசுவதி மகால் பகுதி–III

## மூட்டை எண்-120 C

***7.1768***

*(1) கட்டுவீணை பாகவதருக்குச் சக் 8-8–ப.*
*வடேர்பாளயத்தின்[1] ஸ்வாமிக்குச் சக்.6-2-0*

***8.1768***

*1. திருவாரூர் சுங்கத்தில்- திருச்சினாப்பள்ளிக்கு நவாப்[2] ஸாஹேப்புடைய மட்டக் குதிரையை வாங்கிக் கொண்டு போனதற்குச் சுங்கதிகாரி அதிக வரியை யெழுதினதினால் அவனுக்கு அபராதம் சக்.1-2 பணம்[3] விதிக்கப்பட்டது.*

***10. 1768***

*மட்டக்குதிரையின் அழுக்கை எடுக்க சீயக்காய் சேர் 1-9 டாங்க்[4] வீதம் 7/8 மனு.*

*மட்டக்குதிரைக்கு வலிவந்ததற்கு 5 1/8 பணம், மசாலை பணம் -3 7/16, மிளகு 15/16 மனு, பூண்டு 1/4 மனு, வலம்புரிக்காய் 1/4 மனு, காயம் 1/4 மனு, வாவடிங்க்[5] 1/4 மனு, சுக்கு 1/8 சேர், வசம்பு 1/8 சேர், மஞ்சள் 1/8 சேர், ஓமம் 1/8 சேர், கருஞ்சீரகம் 1/8 சேர், போஸ்து[6] 1/8 சேர், அபின் 1/4 மனு, சாராயம் 1/2 மனு*

உடம்பின்மேல் போடுவதற்குப் பத்து.

*கித்தான், மொத்தமானது[7] துணி-1 11/16 பணம்,காவி சேர் 3/16-3, பூண்டு மனு 1/4 - 6, மிளகு சேர் 1/8 - 6, விளக்கெண்ணைய் 1/8-3, நெய் சேர் 1/8 - 3, ந.எண்ணைசேர் 20-2 = மனு 3/4 - 23*

1. வடேர்பாளையம் - உடையார் பாளையம்

2. நவாப் என்றது முகம்மது அலியை

3. பத்துப்பணம் ஒரு சக்கரம் (பக். 149).

4. மூன்றுடாங்க் - 1 தோலா. (பக். 165)

5. Embelia rives ஒருவகை மூலிகை

6. போஸ்து - கசகசா Pudendum muliebre

7. மொத்தமானது - கனமானது

*(2) 1768*
*மட்டக்குதிரைக்குத் திவடா ?*
*மிளகு மனு - 7/16 மனு 1/4 மனு , டாங்கணகார்? 3/4 மனு 4 1/2 டாங்க், மாதிரி 1க்கு 1/2 சேர் , மஞ்சள் 3 டாங்க், கருஞ்சீரகம் 3 டாங்க், வாவடிங் 3 டாங்க், ஓமம் 3 டாங்க் , கந்தவீட் 2 டாங்க் ஆக 14 டாங்க்*

*14.1768*
*(1)மாயவரநாத ஸ்வாமி[8] கோவிலின் பெரிய கோபுரத்திற்காகச் செலுத்தினது சக்.2026 -8 1/4*

*24.1768*
*முதல்தரமான உலுப்பைகளுக்குச்[9] சம்பாப் பச்சை அரிசி படி 18க்குப் பணமொன்றுக்கு 2 1/4 படி வீதம் 8 பணம்*

*32.1768*
*திருவாரூர் - ஸ்ரீத்யாகராஜஸ்வாமி ஸமஸ்தானத்தில் வேதிகா[10] செய்வித்ததற்குச் சக்ரம் 190*

*42.1768*
*(1) ரா. அமரசிங்குப் போஸலே[11] அவர்கள் வைசாகக் கிருஷ்ண பக்ஷம் தசமி[12] அன்று பிறந்த தினத்திற்காகச் சிலவு சக்.24 – 7 1/16*
*(2) சாதம்பங்குடி - தொரைக்கு - கொள்ளிடத்தின் படகைக்கட்ட சிலவு சக்.119-4 1/2, கும்பகோணம் காவேரியின் படகைக்கட்ட சிலவு சக்.60-6 1/16*

*(3) 1768*
*ஆஷாட கிருஷ்ண நவமி[13] -ரா. பாவா சாயேப்[14] அவர்களுடைய தேவசத்திற்குச் சிலவு சக்.23-1 1/2 சிறாவண சுத்த சதுர்த்தி[15] - ரா. துளஜா[16] - ராஜே சாயேப் தேவசத்திற்குச் சிலவு சக்.21- 9 3/4*

---

8. மாயவரநாதசுவாமி - மயிலாடுதுறையிலுள்ள மயூரநாதசுவாமி

9. உலுப்பைகள் - சத்திரத்திற்கு வரவியலாதவர்கட்கும், பெரிய அதிகாரிகட்கும் வந்து உண்பதற்கு விரும்பாதவர்கட்கும் அரிசியும், உப்பு, புளி முதலிய பொருள்களும் தருவர். இது உலுப்பை எனப்படும். உலுப்பைகளில் முதல் தரம் இரண்டாம் தரம் என்றும் தரம்பிரிப்பதும் உண்டு. அதனால் இங்கு முதல்தரமான உலுப்பை என்றுள்ளது.

10. வேதிகா - பலிபீடம்

11. அமர்சிங்கு - இவர் பிரதாபசிங்கரின் மகன், இரண்டாம் துளஜாவுக்குப் பின் அரசு எய்தியவர்: 1788 முதல் 1798 வரை ஆட்சிபுரிந்தவர்

12. வைசாகம் - வைகாசி; கிருஷ்ணபக்ஷம் - தேய்பிறை; தசமி - பத்தாவது நாள்.

13. ஆஷாடம் - ஆடி; கிருஷ்ணபக்ஷம்; தேய்பிறை; நவமி - ஒன்பதாவது நாள்

14. பாவா சாகேப் - துக்கோஜியின் முதன்மகன்; 1736-37இல் ஓராண்டே ஆட்சிசெய்தார்.

15. சிராவணம் - ஆவணி; சுத்த - வளர்பிறை; சதுர்த்தி - நான்காவது நாள்.

16. கி. பி. 1768 என்றுள்ளமையின் துளஜா என்றது துக்கோஜியை

*(4) 1768*

மார்கசீர்ஷ சுத்த ஏகாதசி[17] - ரா. பிரதாபசிங்கஜி[18] ராஜா அவர்களுடைய தேவசத்திற்குச் சிலவு சக்.556 - 2 13/16

*42.1768*

*(5)* ஹுஜுர்[19] சிலவு - ஸர்க்காருக்குப் பதக்கம் வாங்கிக் கொடுத்தது. பூகண்ஜீ காசிதாஸ் ஸாவகாருடையகடையில் ரா. டபீர் ஸ்வாமிகள்[20] வைரப் பதக்கம் ஒன்றை வாங்கி விஜய தசமிக்காகக்[21] கொடுத்தார். இதன் விலை - *1000* வராகன்.

*(6) 1768*

தஞ்சாவூர் கோட்டை - ஸ்ரீவிஜயராமஸ்வாமியின்[22] கோவில் கோபுரத்தின் வேலைக்காக சக்.*1000*

*44.1768*

சென்னப்பட்டணம் துரை மிஸ்தருடைய சம்சாரத்திற்குச் சென்னையிலிருந்து திருச்சினாப்பள்ளிக்குச் செல்லுகையில் மாயவரத்தில் இறங்கி, தங்கினதற்கு உலுப்பைச்[23] சிலவு சக் 2-6 பணம்.

*45.1768*

நூற்றுக்கு 2 1/2 வட்டி வீதம் கடனுக்குச் சக்.625

## மூட்டை எண்-121 C

*2. 1785*

*(1)* நெய் ஒரு பணத்திற்கு 1 3/4 சேர் வீதம் 23 சேருக்குச் சக் 1- 5 3/4[24] தேங்காயெண்ணெய் ஒரு பணத்திற்கு 2 சேர்வீதம் 24 சேருக்குச் சக். 1–2 1/4[25]

---

17. மார்கசீர்ஷ -மார்கழி; சுத்த - வளர்பிறை; ஏகாதசி - பதினொராம் நாள்.

18. கி. பி. 1739 முதல் 1763 வரை ஆட்சி செய்தவர்; இரண்டாம் துளஜாவின் தந்தை.

19. ஹுஜுர் - அரசர் - துளஜா II

20. டபீர்பண்டிதர் என்ற பெரிய அலுவலர்.

21. விசய தசமி - மகாளய அமாவாசைக்குப்பின் வரும் வளர்பிறைப் பத்தாம் நாள்.

22. இக்கோயில் மேல வீதியிலுள்ளது.

23. உலுப்பை - சத்திரத்துக்கு வரவியலதவர்கட்கும், பெரிய அலுவலர்கட்கும் பைராகிகட்கும் தரப்படும் அரிசி பருப்பு முதலிய உணவுப்பொருள்கள்.

24, 25. இவ்விரு கணக்குகளும் தவறு

*10. 1765*

*(1) ஸர்காருடைய தணல் அடுப்புக்கு நெய் தோண்டி 1க்கு 4 சக்ரம்.*

*13.1785*

*(1)இலுப்பெண்ணெய் 156 1/4 சேருக்குச் சக்ரம் 5–5 3/4,நெய் 151 சேருக்குப் பணத்திற்கு 1 1/2 சேர் வீதம்.*

*(2) 1785*

*தேங்காய் 100க்கு 3 பணம் வீதம் சக் 3 - 3 1/4, முந்தன் வாழைக்காய் 348க்கு 100-1 பணம் வீதம் 3 1/2 பணம்.*

*(3) 1785*

*குத்தாலம்-ரா.பாவா ஸ்வாமி[26] யாருடைய புண்யத் திதிக்கு வழக்கப்படி பந்தல் போடுவதற்குக் கீத்து - மூங்கில் - கம்பம் இவைகளைக் கொடுக்கிறது.*
*கும்பகோணத்தில் ஸ்ரீஸாரங்க பாணி ஸ்வாமியின் தேர்த் திருநாளைக்குத் தஞ்சாவூரிலிருந்து வஸ்திரம் கொண்டு வந்த வகையில் சௌ. நடுபாயி சாயேப்[27] அவர்களிடமுள்ள வண்டியின் மாட்டுக்குக் கும்பகோணம் வந்ததிற்குத் தீனியைக் கொடுக்கிறது.*

*(4) 1765*

*கும்பகோணத்தில் - புதிய அக்கிரஹாரத்தைக்[28] கட்டினதைத் தானஞ்செய்ய 200 உலுப்பைகளுக்குச் சிலவு சக்.-3-5.*

*(5)1765*

*சீமையிலிருந்து சென்னைக்கு வந்த நாய்கள் தஞ்சாவூருக்கு வருகின்றன. ஆனைக்காரச் சாவடியிலிருந்து கோட்டைக்குள் வருகிற வரையிலும் தீனி கொடுக்கிறது. நெய் பணத்திற்கு 1 1/2 சேர் வீதம் 10 சேருக்குச் சக்.1 3/8, ஸாரா? சேர் 2 1/2 க்குப் பணம் 1, விளக்குக்கு விளக்கெண்ணெய் 1/2 சேர், 9 டாங்க்குக்கு[29] 1 1/16 பணம்.*

*13.1785*

*(6) கர்னல் துரை ஈஸ்டெண்ட் அவர்கள் தஞ்சாவூரிலிருந்து சென்னைக்குப் போகையில் கும்பகோணத்தில் இறங்கினதற்கு உலுப்பைகள், தட்டுகள் வகையறா சிலவு சக்.0-7 3/8.*

*(7) 1785*

*மிஸ்தர் அட்லிஸ்டன்[30] துரையின் தரகாளி செங்கல்ராய முதலியின் சம்சாரம் குழந்தைகள்*

---

26. பாவா ஸ்வாமி - சேதுபாவாஸ்வாமி; இவர் சமர்த்த ராமதாசரின்சீடர்

27. நடுபாயி சாகேப் - துளஜாவின் மனைவியருள் ஒருவர்.ராஜஸபாயி ஆகலாம்

28. புதிய அக்ரஹாரம் - டபீர் அக்கிரகாரத்தினும் வேறானது.

29. மூன்று டாங்க் ஒரு தோலா

30. Hudleston Resident (Pierson Memories of Schwartz Vol.II Page 136)

சென்னையிலிருந்து சீயாழி மார்க்கமாய் தஞ்சாவூருக்கு வருவதால் அவர்கள் தங்குமிடத்தில் உப்பைகள் கொடுக்கிறது.

கும்பகோணம் முகாமில்
சம்பாப் பச்சை அரிசி பணத்திற்கு 1 13/16படி வீதம் 3 படிக்கு 1 5/8 பணம்.

(8) 1785
தியாகராஜ ஸ்வாமி, திருவிடமருதூருக்குப் பிரயாணம் வந்ததற்குக் கொடுத்த குதிரை. யானை வகையறாவுக்குக் கொள்ளு மசாலை வகையறா ஜாபிதாபடி சிலவு சக். 38 - 8 1/8.

(9) 1785
மகால் - களஞ்சியம் தாஸ்தான்[31] சக்ரம் 15 -8 3/16 வெல்லம் தூக்கு 105க்கு சேர் பணம் ஒன்றுக்குச் சேர் 3 வீதம், புகையிலை - தூக்கு 10க்குச் சேர் 62 1/2க்குத் தூக்கு 2 பணம் வீதம்.

(10) 1785
யேத்தம் போடுவதற்குப் புதிய தோல்வாய்? கட்டுவதற்குப் புதிய செங்கல் 1000க்கு 1 சக்ரம் வீதம் 2500 - 2 1/2 சக்

நீர் கலம் 15க்குக் கலம் 1 பணம் வீதம் 15 கலம் - 15 பணம், மணல் 25 கலத்திற்கு 10 கலம் ஒரு பணம் வீதம் 2 1/2 பணம், வெல்லம் தூக்கு 2 1/4 பணம் வீதம் 7 1/4 தூக்குச் சக் 1-6 3/16[32], 6 சேர் கடுக்காய் - 8 சேர் - ஒரு பணம் வீதம் 3/4 பணம். ஆக தளவாடம் சக் 5-9 9/16, மெய்யாடு[33] -சக் 2.1/8 பணம், கொத்து 4க்கு 4 பணம், கொழந்தை சித்தாள் 5க்கு ஒன்றுக்கு 3/4 பணம் வீதம்.

13.1785
(11)கும்பகோணம் - மகாமகக் குளத்திற்குச் சமீபம் உள்ள அன்னச்சத்திரம் சிலவு 802 சக்,

(22) 1785
சிவஸ்தலம் - ஸ்ரீ ஆதிகும்பேஸ்வரர் சக்.499-8 1/2

14. 1765
நூற்றுக்கு 3 வட்டி வீதம் கடன் வாங்கினது சக்.1400.

21.1785
(1) ஸர்காருக்கு - விஜயதசமி தினம் சிலவு கல்லிழைத்த வைரம் காப்பு ஜோடி 1க்கு 2000 வராகன். பச்சை பிச்சுவா(சின்னகத்தி) கல்லிழைத்த 1க்கு 1000 வராகன்.

29.1758
கணக்கு அணக்குடி வகையறா கண்டு முதல் கலம் 1250000.

---

31. தாஸ்தான்மகால் - நெற்களஞ்சியம்; அம்பர்கானா என்பதும் நெற்கிடங்காகும்.

32. கணக்குத்தவறு, 1-6 5/16 ஆக இருக்கவேண்டும்.

33. மெய்யாடு - குத்தகைக்கு விடாமல் சொந்தமுறையில் வேலை செய்வது.

*39 1765*

*(1) இனாம் சிலவு - ஸ்ரீமகாராஜா[34] சாயேப் அவர்கள் பெரிய மனதுடன் சுபேதார்[35] ரகுனாத் அண்ணாஜி அவர்களுடைய பிள்ளையின் கலியாணத்திற்காக 1000 சக்ரம் கொடுக்க உத்திரவின்படி கொடுக்கப்பட்டது.*

*(2) 1765*

*ஆறு வெட்டு – சிலவு – வடவார் ஆறு[36] வெட்டுவதற்கு உத்திரவின்படி 4000 சக்ரம். வடவார் ஆற்றுக்கு மேலண்டை சாலியமங்கலத்திற்குக் கீழண்டை வெட்டுவதற்குக் கூலி சிலவு 300 சக். வடவார் ஆறு - தஞ்சாவூருக்கு மேலண்டைத் தலப்பிலிருந்து வெட்டுவதற்குக் கூலி 1000 சக். ஆக 1300 சக்.*

*58.1765*

*பெருமாள் பத்து*

*மேல் பாலம் கட்ட சிலவு - மரப்பாலம் கட்டச் சிலவு சக.13-1 1/2*

*67.1765*

*பந்தர் நாகூர்[37] தர்பங்கா[38]விலிருந்து பேரீச்சம்பழம் வாங்கினதற்கு 10 சேர் விலை 2 1/2 பணம்.*

*68.1765 பந்தர் நாகூர்.*

*1.கருங்காலி உத்தரம் 30ம் கருங்காலி 30 பலகைகளையும் சக் 67 1/2 சக்ரத்திற்கு நாகப்பட்டிணத்தில் வாங்கினதை ஆற்றின் வழியாய்க் கொண்டுவரத் தொப்பம் கட்ட, கொழும்பு கயர் - தளவாடம், கூலி -25, ஆஸாமிக்குச் சிலவு சக்ரம் 5-4 1/2*

*69.1765 நாகூர் பந்தர்*

*1.தெற்கிலிருந்து வடக்கே சாராயத்தின் குப்பிகளை 10ஐ கொண்டு போனதற்கு வரி துரையினிடமிருந்து வெள்ளிப்பணம் 6க்குத் தஞ்சாவூர் பணம் 4 7/8*

*2.1765*

*தலைவலி தண்ணீர் வாங்கினதற்குச் சக். 3-9*

*லவண்டரின் தண்ணீர் வாங்கினதற்குச் சக் - 4-3 5/8*

---

34. மகாராஜா என்பது இரண்டாம் துளஜாவை

35. சுபேதார் - சுபா என்னும் நாட்டுப்பகுதியின் தலைவர் சுபேதார். சுபாவின் ஆட்சித்தலைமை மட்டுமன்றி இராணுவத்துறையும் இவர் அதிகாரவரம்பில் இருந்தது.

36. வடவாறு - தஞ்சைக்கும் கரந்தைக்கும் இடையிலுள்ள ஆறு.

37. பந்தர் நாகூர் - பந்தர் - Store House

38. தர்பங்கா (?)

*3.1765*
*தஞ்சாவூருக்கு வெடிமருந்து சாலைக்குக்[39] கந்தகம் வாங்கினது. தர்பங்கா - நாகூர் ஸர்கார் மனகி ராமய்யா வசம் வாங்கி - தயார் செய்த கந்தகம் இடை பாரம்[40] 28க்குப் பாரமொன்றுக்கு 20-1 5/16வராகன் 1253 1/2 வராகன். கட்டுவதற்குத் தாழம்பாய் 102க்கும், கோணிகள் தைக்கவும், தஞ்சாவூருக்குக் கொண்டுபோக மாட்டு 56க்கு ஒன்றுக்குச் சக் 1-2 வீதம் சக்.1323-8-0.*

## மூட்டை எண் 122-C

*(1)1769*
*நௌபத்[41] நகாராவை யானையின் மேல் தொங்க விடுவதற்கு மரத்தினால் குதிரை செய்வதற்கு சிலவு சக்.11-9 5/16*
*(2)1769*
*ஜாம்தார் கானாவில்[42] அறையையும், சாவடியையும் கட்டுவதற்கு சிலவு சக்.122-2.*

*(3) ரா. ஸ்ரீமகாராஜாவின்[43] பிறந்த நாளுக்காக ஆடைக்காகத் துணி சிலவு சக்.173-2.*

*1769*
*கின்காப் கிரமஞ்சி தங்கத்தினால் மரம், புட்டாவும் போட்டதற்கு 1க்கு 30 வராகன் வீதம் 2க்கு 60 வராகன்.*

*1769*
*பெரியபாயி சாயேப்[44] அவர்களுடைய ஆடைக்கு ச-130-4, நடு[45]பாயி சாயேப் அவர்களுடைய ஆடைக்கும் சிறுகுழந்தைக்கும் ச.175-3*

*2(1)1769*
*ஸர்காரில் - காமம் பண்டிகைக்காக[46] வெள்ளிப் பிச்சாங்குழலுக்காகத் தஞ்சாவூர் இடை சேர் - 3 1/4க்கு சேர் ஒன்றுக்கு 19 சக். வீதம் சக். 61-7 1/2*

---

39. வெடிமருந்துச்சாலை - தாருகானா எனப்படும்

40. பாரம் - 20 மணங்கு இடை - எடை

41. நௌபத்-இசைக்கருவி ( Ceremonial Music the right to use which was specially granted by the government(Records of Fort. St. Geroge. Country Correspondence, Millitary Dept. 1757, Madras 1913, Index, Page XIII).

42. ஜாம்தார்கானா-அரசகுடும்பத்தினர்க்குரிய நகைகளும் ஆடைகளும் வைக்குமிடம்.

43. மகாராஜா என்றது இரண்டாம் துளஜாவை.

44. பெரியபாயி சாயப் என்றது இரண்டாம் துளஜாவின் மூத்த மனைவி மோகனாம்பாயி

45. நடு என்பது ராஜஸபாயி ஆகலாம் (போ.வ.ச. பக். 124,125)

46. காமம்பண்டிகை-ஹோலி பண்டிகை.

***(2)1769***

***இனாம் சிலவு - ஸ்ரீகாளஹஸ்தீஸ்வரரை[47] நினைக்கிற பிராமணருக்கு 100 கலம் மான்யம் சக்.34-3.***

***4-1769***

***ஸர்கார் சிலவு - தேவஸ்தானம் - ஸ்ரீநவனீத கிருஷ்ண ஸ்வாமிக்கு[48] சக்.30***

***4-1769***

***(1) சி.அபரூபபாயி சாயேப்[49] அவர்களுக்கு ஏழரை நாட்டுச் சனி[50] ஆரம்பித்திற்காக சிலவு சக்.94-4 5/16. திருநல்லார்[51] பிரதிமை[52]க்குப் பூஜைக்காக ஸாமான்களுக்குச் சக்.23-2 1/2, சனி ஆரம்பித்திற்காகச் சாமான் சக்.71-1 3/4.***

***(2)1769***

***நவாப் மஹமத் அலிகான்[53] ஆனி மீ'த்திற்காகச் சக்.24 கொரடாச்சேரி தொரை நாகப்பட்டினம் திருச்சினாப்பள்ளி.***

***(3) 1769***

***ஸர்கார் ரசீது கஜானாவில் - ஹேஜீப் (கணக்குப்பிள்ளை) அண்ணாஜி பண்டிதரின் மூலமாக 2 பைகளுக்குத் தஞ்சாவூர் சக்.1000***

***(4) 1769***

***ஆஷாட சுத்த பௌர்ணிமைக்கு[54] வியாஸ பூஜைக்கு[55] ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமி***

---

47. ஸ்ரீகாளஹஸ்தீசுவரர்-திருக்காளத்தியில் கோயில் கொண்டுள்ள சிவபெருமான்.

48. மேலவீதியிலுள்ளது.

49. அபரூபபாயி-இரண்டாம் துளஜாவின் மகள் (போ. வ. ச. பக். 125)

50. ஏழரைநாட்டுச்சனி-ஏழரையாட்டைச்சனி- சந்திரலக்கனத்திலிருந்து 12, 1, 2ஆம் தானங்களில்ஏழரையாண்டிலிருந்து பிடிக்கும் சனி.

51. திருநல்லார்-திருநாள்ளாறு; சனிபகவானுக்குச் சிறப்பான தலம்

52. பிரதிமை-சனிபகவான் திருவுருவம்

53. நவாபு மஹமத் அலிகான்-இவர் ஆர்க்காட்டு நவாபு; எப்படியாவது தஞ்சையைக் கைப்பற்ற வேண்டும் என்று கருதி, ஏதாவது காரணம் கூறித் தஞ்சையைத் தாக்குவதே எண்ணமாகக் கொண்டு, துளஜா கப்பம் செலுத்திய போதிலும், அதைக்கருதாது 17-9-1773 முதல் ஏறத்தாழ மூன்றாண்டுகள் தஞ்சையைத் தன் ஆட்சியின் கீழ்க்கொணர்ந்தார். இவரது மூத்த மகன் உம்ரஉல் உமாரா; இரண்டாவது மகன் மதார் முலுக் என்பவர்.

54. ஆஷாடம்-ஆடித்திங்கள்; சுத்த-வளர்பிறை; பௌர்ணிமை-முழுமதி நாள்.

55. வியாசபூஜை-வியாசர் என்பார் வேதங்களை வகுத்தவரும், பிரமசூத்திரம், பாரதம், பதினெண்புராணம் முதலியன இயற்றியவருமான முனிவராவர். பிராமணத்துறவிகள் சாதுர்மாஸ்யத் தொடக்க நாளாகிய ஆஷாடசுத்த பௌர்ணமி நாளில் (ஆடி மாசம் நிறைமதி நாளில்) வியாசருக்கு பூசை செய்பவர். அப்பூசை வியாசபூசை எனப்படும். (சாதுர் மாஸ்யமாவது, நான்கு மாதங்கள் ஒரேயிடத்தில் பிராமணத்துறவிகள் தங்கியிருப்பது; நான்கு மாதங்கட்குப் பதில் நான்குபக்ஷம் தங்கியிருப்பதுண்டு; பக்ஷம் 15 நாள்).

அவர்களுக்குச் சக் 500

(5) 1769
விஜயதசமிக்கு[56] சாமான்கள் தயார் செய்ய பட்டு நூல். அரக்கு நிறம் சேர் - 10, வெள்ளை நிறம் சேர் - 5, பச்சை நிறம் சேர் - 5, மஞ்சள் நிறம் சேர் - 5, காவி நிறம் சேர் - 2 = 27 சேர்.

சிகப்பு 1 3/4 மனு, பச்சை 28 சேர் = மனு 2 சேர் 18. பச்சைப்பட்டு சேர் 1க்கு 5 1/2 சக் வீதம் 1/2 மனு சக்-110. வெள்ளைப்பட்டு சேர் 1க்கு 6 1/2 சக்.வீதம் 1/2 மனு சக்130 = 1 மனு 240 சக்.

(6) 1769
ஸர்கார் சிலவு பாத்திரபத கிருஷ்ணபக்ஷம் சதுர்த்தி[57] ரா. துளஜா ராஜா சாயேப் அவர்களின் பக்ஷத்திற்காக[58] சிலவு சக்.11-6.

(7) 1769
ஸர்கார் சிலவு
பாத்திரபத கிருஷ்ணபக்ஷம் நவமிக்கு[59] கைலாஸவாஸி[60] ஏகோஜி[61] ராஜா சாஹேப் அவர்களின் பக்ஷத்திற்காக[62] சிலவு சக்.11-6.

(8) 1769
அகண்ட காவேரியில் காட்டுப்பிள்ளையார் ஐனார்குடியின் அணையைச் செப்பனிட சாமான்களைக் கொடுக்கிறது.
கப்பாணி கயர் - பெரிய தாம்பு கயர் - சின்ன தாம்பு கயர் - சாக்குபை-1 அனுப்புவதென்று ரோகாப்படி[63] சிலவு சக்.3-2 1/2. தாம்புகயர் அகண்ட காவேரிக்கரைக்குக் கொண்டு போக வண்டிச் சத்தம் மாடு ஒன்றுக்கு 8 பணம் வீதம் சக்.4 1/2

(9) 1769
கைலாஸவாஸி பிரதாப ஸிங்கஜீ[64] இராஜா சாயேப் - சௌ. மா. யமுனாபாயி சாயேப் -

---

56. விஜயதசமி-மஹாளய அமாவாசைக்குப் பின் வரும் வளர்பிறைப் பத்தாம் நாள்.

57. பாத்திரபதம்-புரட்டாசித்திங்கள், கிருஷ்ணபக்ஷம் தேய்பிறை; சதுர்த்தி-நான்காம் நாள்.

58. பக்ஷத்திற்காக-நன்மைக்காக

59. நவமி-ஒன்பதாம் நாள்

60. கைலாஸவாஸி-இறந்தவர்கட்குக் கொடுக்கும் அடைமொழி

61. தஞ்சையில் மராட்டிய அரசை 1676 இல் ஏற்படுத்தியவர்

62. பக்ஷத்திற்காக-நினைவுக்காக(?)

63. ரோகா - குறிப்புச்சீட்டு.

64. பிரதாபசிங்கு - துளஜாவின் தந்தை; 1739இ முதல் 1763 வரை ஆட்சிபுரிந்தவர்

சௌ.மா. சக்குவார் பாயி சாயேப்[65] இவர்களுடைய தெவசத்திற்காக நாகப்பட்டிணம் வராகன் 15க்கு ரூபாய் 52 1/2

*(10) 1769*
*ஸர்கார் சிலவு - மாடியின் கீழே பந்தல் போடுவதற்குச் சக்.3-8 1/4*

*5. 1769*
*(1) திவான் வாடா (கும்பகோணம்) எல்லா மஹால்களிலும், விளக்குப்போட சிலவு சக்.15*

*(2) 1769*
*காய்கறிகளின் விலை.*
*87 பொடலங்காய் - பணத்திற்கு 60 வீதம் கத்தரிக்காய் தூக்கு1க்குப் பணம் 5/16.*

*10-1769*
*புகையிலை துலாம் 2க்கு 2 சக்., வெற்றிலை 3000க்கு 6 பணம்,*
*1769. கூளப்பாடி வட்டம்*
*13 (1) கும்பகோணத்தில் அன்னசத்திரத்திற்குச் சக்.194-9 1/8*
*(2) வெட்டி வேர் முட்டி[66] 4க்கு வரி 2 பணம்.*
*(1) கும்பகோணத்தில் காவேரியின் கரையில் ஒரு துலுக்கன் பிள்ளையார் சதுர்த்தி தினம் கற்களை எறிந்ததினால் ஒரு பிராமணனுடைய தலை உடைந்து அபாயம் நேரிடும்படியாக விருந்ததினால் அவனுக்கு அபராதம் 3 பணம்.*

*16-1769*
*ஸ்ரீஸாரங்கபாணி ஸ்வாமி[67] கோவிலின் யானைக்கு நல்ல வெல்லத்தைக் குடுக்காமல் பழைய வெல்லத்தைக் கொடுத்ததினால் கோமுட்டி மூலம் அவனுடைய கணக்குப் பிள்ளைக்கு 1 பணம் அபராதம் விதிக்கப்பட்டது.*

*17-1769*
*ரா. பாபா ஸ்வாமியார் ஸங்கமுகத்திற்கு (காவேரிப்பூம்பட்டணம்) போய்வரும் பொழுது மாயவரத்தில் இறங்கியதற்கு அவர்களுக்கு 50 உலுப்பைகள் 8 5/16 பணம் அசல் சம்பா அரிசி - படி - 25க்குப் பணத்திற்கு 3 படி வீதம்.*

*சிலவுக்கு உலுப்பை*
*சக் 1-4-1/8 பசான்[68] பச்சை அரிசி படி 50க்குப் பணத்திற்கு 3 1/2 படி வீதம்.*
*18-1769.*
*சுங்கம்*

---

65. யமுனாபாயி, சக்வார்பாயி - இவர்களில் யமுனாபாயி பிரதாபசிங்கரின் மூன்றாவது மனைவியாவர்; சக்வார்பாயி பிரதாபசிங்கரின் ஐந்தாவது மனைவியாவர்; இவ்விருவரும் பிரதாபசிங்கர் இறந்தபொழுது உடன்கட்டை ஏறினர். (போனஸ்லே வமிச சரித்திரம் தமிழாக்கம் ப.116 சரசுவதிமகால் நூலக வெளியீடு 1980)

66. முட்டி-கைப்பிடியளவு

67. கும்பகோணத்திலுள்ளது.

68. பசான் - சித்திரைமாசத்தில் அறுவடை ஆகும் நெல்

*21. 1769*

*1. கும்பகோணம்*

*பால் சேர் 10க்கு 1 பணம், தயிர் சேர் 20க்கு 2 பணம்*

*2. 1769.*

*யானை மஹால்[69]*

*திருவிடமருதூர் மஹாலிங்க ஸ்வாமி கோவிலின் யானை முத்துரங்காவிற்குத் தீனி நாளொன்றுக்கு 1-1/8 பணத்திற்கு 2-5/8 படி வீதம் -6 பணம் வீதம் நாள் 29க்குத் தீனிச் சிலவு சக்.45-6 3/4*

*4. 1769*

*(1) கும்பகோணம் சாரங்கபாணி ஸ்வாமி கோவிலின் யானைக்குத் தினமும் உடைத்த அரிசி 16 படி வீதம் சக்.18-4 7/8, நெய் - தினம் 1க்கு 1 1/2 சேர், வெல்லம் - தினம் 1க்கு 1 1/2 சேர்*

*4. 1769*

*11. யானைக்குத் திவாடா 26 நாட்களுக்குத்தினம் 1க்கு*
*மிளகு 1 சேர், மஞ்சள் 3 1/4 சேர், ஓமம் 3 1/4 சேர், சுக்கு 9 டாங்க், வசம்பு 5 டாங்க், அரிசித்திப்பிலி 5 டாங்க், காயம் 1 டாங்க், டாங்கணகார்? 3 டாங்க், குக்கில[70] - 3 டாங்க், உப்பு 1/2 சேர்.*
*புல்லு - 4 1/2 வீதம் 30 நாள்களுக்கு சக். 13 1/2.*

## முட்டை எண் – 123C

*1. 1821*

*(1) பீரங்கி மாட்டுக்கு - கைப்பு[71] மருந்து, மிளகு - 3 1/2 சேர், வெல்லம் 1/4 மனு, வசம்பு 3/4 டாங்க், சுக்கு 1 1/2 சேர் 9 டாங்க், இஞ்சி 2 சேர், வெங்காயம் 5 சேர்.*

*2. 1821*

*(1) பீரங்கி கானா[72]வின் மாட்டுக்குச் சாராயம் சேர் 3/4 டாங்கி.*

*3. 1821*

*(1) யாத்திரையில்[73] - மாயா[74] என்னும் ஊரில் தங்கினபோது கடைகளில்லாததால் எல்லா ஜனங்களுக்கும் கோதும்பை நொய்யும் அரிசியையும் 18 ரூ விற்கப்பட்டது.*

---

69. யானைமகால் - ஹத்திகானா அல்லது பீல்கானா திருவிடமருதுர்-திருவடைமருதூர்

70. குக்கில - குங்குலியம்.

71. கைப்பு - குடிவெறிதரக்கூடிய

72. பீரங்கிகானா - தோப்கானா. (பக். 453).

73. யாத்திரையில் - இரண்டாம் சரபோஜியின் காசி யாத்திரையில்; ஆண்டு 1822ஆக இருத்தல் வேண்டும்.

74. மாயா - பாரத நாட்டில் உள்ள ஏழு சிறந்த நகரங்களில் ஒன்று (இந்நாளில் ஹரித்துவார் என்று கூறப்படும்)

*5. 1821*

(1) பூபாலி[75] ரூபாயில் வெள்ளி ஜாஸ்தி 1/2 காசு ஆனதினால் வட்டம் 1/2

*17. 1821*

(1) பூபாலி 80 ரூபாய் இடை சேரால் ரூபாய் ஒன்றுக்கு கோதும்பை நொய் - மனு, கொண்டக்கடலை - 1ம.5 சேர்.

(2) பெண் சந்நியாசிக்கும் அவளுடனுள்ள ஜனங்களுக்குக்கூட தினமொன்றுக்கு சக்.1/8 வீதம்.

*(3) 1821*

யானையின் அரிசி - மனு 3 சேர் 8க்கு ரூ 8

*(4) 1821*

மஹாவின் அரிசியை இரவு துப்பாக்கிக்காரனுக்கு வித்து முதல் செய்த வகையில் வரவு 5 1/2 சேர் ரூ 41.

*(5) 1821*

வைத்தியர் மஸ்தானு[76]டைய பிள்ளைக்குக் கார்த்திகை மாதம் பாக்கி, உலுப்பைக்கு ஜாட்டா ரூ 4-9-0

*(6) 1821*

ஷாஹாபுரத்தி[77]லிருந்து வரும்பொழுது வழியில் மலையின்மேல் கட்டை வண்டி, வண்டிகள் ஏறும்பொழுது, சிப்பாய்கள் வண்டிகளைத் தள்ளினதில் சிப்பாய்கள் 15 பேருக்குச் சாப்பாட்டுக்கு ரூ.1

*(7) 1821*

துலுக்காணி எழுத்தில் கணக்கும் முத்திரையு மிருக்கிறது.

*11. 1832*

குறிப்பு— சுலக்ஷணாம்பாபுரம்[78] அக்கிரஹாரத்தின் பிராமணர்களுக்கும் கோவிலுக்கும் மா. சுலக்ஷணாபாயி சாயேப்[79] அவர்கள் உத்தமநல்லூர்[80]16 தோட்டத்தைச் சேர்ந்த திருவிடமருதூர்த் தோட்டம், திருவிடமருதூர் க்ஷேத்திரத்தில் அக்கிரஹாரத்தைக் கட்டி சுலக்ஷணாம்பாபூர்[81] என்று பெயரிட்டு, தன்னுடைய சொந்தமான கோட்டூர்த் தோட்டத்தின்

75. பூபாலி - மத்தியபிரதேசத்திலுள்ள போபால் ஆகலாம்.

76. மஸ்தான் - நாட்டுவைத்தியர். (பக். 286).

77. ஷாஹாபுரம் - மத்தியப்பிரதேசத்திலுள்ளது (ஆண்டு தவறு என்று தோன்றுகிறது; சரபோஜி காசியாத்திரையினின்று திரும்பியது 1822 ஆகையால்)

78. வேளாங்குளத்துக்குச் சுலக்ஷணாம்பாபுரம் என்று பேர். (பக். 272).

79. சுலக்ஷணாபாயி என்பவர் இரண்டாம் சரபோஜிக்கு அகல்யாபாய் வயிற்றில் பிறந்த முதற்பெண் (போ.வம்.ச.பக்.135)

80. உத்தமநல்லூர்—இது 96 தோட்டங்களில் ஒன்று (பக்-507) இணைப்பு 4; இதில் 42ஆவது உத்தமநல்லூர்) உத்தமநல்லூர் 16 தோட்டம் என்று பக்கம் 507இல் கூறப்படவில்லை. திருவிடைமருதூர்த் தோட்டமும் பக்கம் 507ல் இடம்பெறவில்லை.

81. சுலக்ஷணாம்பாபூர் என்பது திருவிடைமருதூரில் சரபோஜியின் மகள் சுலக்ஷணாபாயி அமைத்த உட்கிடை ஊராகும்.

புஞ்சை மரஞ்செடி புரம்போக்கு ஸகல சமுதாயங்களுடன் 1832 கி. பி. பரிதாவிஷூ பாத்ரபத[82] வத்ய அமாவாசை சூரிய கிரகண பர்வ காலத்தில் தண்ணீர் விட்டுத் தானஞ் செய்து கொடுத்திருக்கிறார். இதற்கு ராஜாவின் உத்திரவிற்குச் சொந்தமான சனது[83] இல்லை. பாயிசாயேப் அவர்கள் செய்துகொடுத்த சனதுக்கு மட்டில் ஸ்ரீராம்[84] என்று பாயி சாயேப்பின் கையெழுத்திருக்கிறது. உடனே 6,7 மாதங்களில் அவர்கள் பரலோகமடைந்ததால் ஸர்காரில் தாகல் ஆகி ஸர்காருடைய அனுபோகத்தில் தானிருக்கிறது. ஆனால் தோட்டம் பிராமணர்களுடைய அனுபோகத்தில்லை என்று தெரிய வருகிறது.

காளயுக்தி[85] ஷூ முதற்கொண்டு ஒவ்வொருபங்குக்கும் 100 கலம் வீதம் 30 பங்குகளுக்கு வருஷத்திற்கு 3000 கலம் நெல் ரோகாவின் ஒவ்வொரு ஷூமும் சேருகிறது.

*19. 1833*

சுலக்ஷணாம்பாபுரம் அக்கிரஹாரத்தின் பிராமணர்களுக்கு மான்யம் பற்றி.

*25.1841*

1.சுலக்ஷணாம்பாபூர் - அரிசி 892 படிக்கு சக் 19- 8 7/8

*26.1842*

1.மான்யம் - பாபத்து

8 1/4 சேர் மரக்காலினால்[86] ஷூமொன்றுக்கு கலம் நெல் கடப்புகார் 1500 - சம்பா கலம் 1500-30 பங்குகளுக்கு.

*128-1844*

மனு சாம்பசிவஹரி கொடுத்தது. என்னுடைய தகப்பனார் (ஹரிகணேஷ்) காசிக்குப் போகையில் தினந்தோறும் வேண்டிய சாமான்களுடன் 4 உலுப்பைகள் வீதம் கொடுப்பதற்குக் காசித் தம்பிரானுக்கு[87] உத்திரவு ஆயிருந்தது. அதன்படி கொடுத்துக்கொண்டிருந்தார்கள். அவர் காலமானதால்[88] ஷெ; உலுப்பைகளை ஸேவகன் காசியிலிருக்கும் வரையிலும் கொடுக்க, தம்பிரானுக்கு உத்திரவாக வேணுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன்.

---

82. பாத்ரபதம் - புராட்டாசி மாசம்; வத்ய-தேய்பிறை; அமாவாசை - மறைமதி; சூர்ய கிரகணகாலத்தில் தானம் செய்வது மரபு பரீதாபி - யாண்டறுபதனுள் 46 ஆவது

83. சனது - உரிமை ஆணை

84. ஸ்ரீராம் - அரச குடும்பத்தினர் இங்ஙனம் கையொப்பமிடுபவர் என்றும் தோன்றுகிறது.

85. காளயுக்தி - யாண்டறுபதனுள் 53ஆவது (கி.பி.1852)

86. 8 1/4 சேர் கொண்டது ஒரு மரக்கால் என்றமுகத்தலளவை 1775இல் சொல்லப்பட்டுள்ளது. (பக். 164).

87. காசித்தம்பிரான் - திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து அதிபர்; இவர் பரிபாலனத்தில் இருப்பதே ஸ்ரீகாசியிலுள்ள ஸ்ரீகுமாரசுவாமி மடம். இந்த வேண்டுகோள் விடுத்த சாம்பசிவஹரி காசி குமாரசுவாமி மடத்தில் தங்கியிருந்தவர் ஆவர்.

88. காலமானவர் 1841இல் இறந்த காசிவாசி இராமலிங்க சுவாமிகள் I (1838-1841) ஆகலாம்.

இவருக்குத் தினமொன்றுக்கு 2 உலுப்பைகளை[89] காசியிலிருக்கும் வரையில் கொடுப்பதென்று உத்திரவாயிருக்கிறது.

*12. 1811*

*1.சாராயத்தின் விலையைப் பற்றி-சாராயம் பேட் தஞ்சாவூர் - உள்ளூரில் நியமித்த - நவவித்யா கலாநிதி சாலா பள்ளிக்கூடம்[90].*

கோட்டையில் காளேராவப்பாவின் காலத்தில் 10 சேர் சொம்பினால் செம்பொன்றுக்கு 8 பணம் வீதம் விற்று ஒரு பணம் சம்பளம் போக பாக்கி 7 பணத்தை சர்காரில் வாங்கிக்கொண்டு வந்தார்கள்.
அதின் பிறகு நீலகண்ட பிள்ளையின் காலத்தில் செம்பொன்றுக்கு 12 பணம் வீதம் 11 பணம், 10 பணம் இந்தப்படி 3 வீதமாகச் செய்து, செம்பொன்றுக்கு ஒரு பணம் கடைக்காரனுக்குச் சம்பளம் போக, பாக்கி சர்காருக்கு இன்று வரையிலும் நடந்துவந்தது.

இப்பொழுது திருவையார் தாலூகா சாராயக் கடைக்காரன் கோட்டைக்கு வெளியே சர்காரின் செம்பொன்றுக்கு 4 1/2 புட்டி வீதம் போட்டு, புட்டி ஒன்றுக்கு குத்தகைக்காரன் கொடுப்பது. 1 1/2 பணம் ஜாஸ்தி அரைப்பணம் ஆக 2 பணம்வீதம் விற்றதினால் கோட்டையில் சாராயம் குடிப்பவர்களெல்லோரும் கோட்டைக்கு வெளியில் சென்று சாராயம் குடிக்கிறார்கள். அதனால் நம்மிடமுள்ள சாராயம் விற்பனை ஆகிறதில்லை. ஆகையால் செம்பொன்றுக்கு 9 பணம் வீதம் விற்று ஒரு பணம் அவனுடைய சம்பளம் போக பாக்கி 8 பணத்தைச் சர்காருக்குக் கொடுக்க உத்திரவு செய்யவேணும்.

*12-1811*

*(2)ஹஜாரியில் Shower bath வைப்பதற்குப் புண்யாஹ வாசனத்திற்குத்[91] தக்ஷிணை 1 பணம்.*

*(3) 1811*

*ஸர்வர்ஹூஸேனி அல்லாவுக்கு அல்லாப்பண்டிகைக்காக[92] 10 சக்ரம்*

*(4) 1811*

*பெரிய ஹூஸேநிக்கு 11 சக்ரம்*

*(5) 1811*

*பெரிய கோவில் நந்திக்கு மழை பெய்வதற்காக அபிஷேகம் பூஜை நிவேதனம் ஜபமத்திற்குக் கூட 1/4 மண்டலத்திற்குத்[93] தினமொன்றுக்கு 3 1/2 சக்ரம் கொடுப்பது.*

*(6) ஜனவரி பண்டிகைக்காக மிஸ்தர் பிளாக்பர்ன்[94] சாயேப்புக்கு இனாம் 500 சக்ரம்*

---

89. உலுப்பை - அரிசிபருப்பு முதலியன கொடுத்தல்.
90. நவவித்யாகலாநிதி பள்ளிக்கூடம். (பக். 240).

91. புண்யாஹவாசனம் - தூய்மை செய்வதற்குரிய சடங்கு

92. அல்லாப் பண்டிகை - முகரம் பண்டிகை

93. மண்டலம் - 40, 41, 45 நாள் கொண்ட கால அளவு

94. பிளாக்பர்ன் - கி.பி.1811 என்பதால் இவர் வில்லியம் பிளாக்பர்ன் ஆவர்.

*(7) 1811*

*ம. ரா. திவான்சாயேப்[95]- சென்னையிலிருந்து வரும்பொழுது கூடவந்த பக்கிரின்[96] பிள்ளை மீர்சாயேப்புக்கு அல்லாப் பண்டிகைக்காக 15 சக்ரம்.*

*13. 1811*

*(1)* நவவித்யா கலாநிதி பள்ளிக்கூடம் படிக்கிற பிள்ளைகளுக்குக் காவியப்பாடம் சொல்லுகிற சுப்பா சாஸ்திரிக்கு மாதத்திற்கு 15 சக்ரம் சம்பளத்தைச் சாராயப் பேட்டையின் துகையிலிருந்து கொடுப்பது.

*(2) 1811*

திருவாளூர்த்[97] தோட்டத்தின் தோட்டக்காரனுக்கு ஸர்காரின் தபாலைத் திருவாளூரிலிருந்து நாகப்பட்டிணத்திற்குக் கொண்டு போவதும், அங்கிருந்து தபாலை எடுத்துக்கொண்டு நீடாமங்கலத்தில் சேர்ப்பிக்கிறது. இதைத்தவிர மழையின் குறைவால் தோட்டத்திற்குத் தண்ணீரிறைக்கிறது. இந்தப்படிக்கி தோட்டக்காரனுக்கு வேலை சரியாயிருக்கிறது. ஆனால், தோட்டத்தில் கொத்து வெட்டு இல்லாததால் ஸ்ரீங்கார் தோட்டம், புதிய தோட்டம் திருவங்காடு[98] தோட்டம் கூட இம்மூன்று தோட்டங்களில் வாழை வகையறாவுக்கு ஹர்காரா[99]வின் பார்வையில் மெய்யாடு கூலி கொத்து வெட்டுக்கு 5 சக்ரம்

*(3) 1811*

*கூடலூரில் - பழவர்க்கங்களையும், வாழைக்கன்றுகளையும் வாங்கினது சக்.30*

*(4) 1811*

*ரா. ஸ்வாமியா[100]ரவர்களுடைய பாதுகையைக்கொண்டு வருவதற்காக பூஜைச் சாமான்கள் வகையறா ஜாபிதா பாதுகையுடன் வரும் கோசாமியார்களுக்குச்[101] சந்தனம் பாக்கு வெற்றிலை.*

*13-1811*

*(5)* நெல்லுமண்டியில் எல்லாம் நெல்லின் விலை உயர்ந்திருப்பதால் நெல்லின் விலை உயருவதற்காக ஸர்காரின் பத்துகட்டு[102], மகமை[103], இதைத்தவிர சில்லரை மகமை வகையறா 2 மாதத்திற்குக் கொடுக்கவேண்டியதில்லை என்று உத்திரவாயிருக்கிறது. அப்படியே செய்கிறது.

---

95. திவான்சாயேப் என்றது இரண்டாம் சரபோஜியை.

96. பக்கீர்—: பக்கீர்-பக்கிரி-முகமதியப்பரதேசி.

97. திருவாளூர் - திருவாரூர்.

98. திருவங்காடு - திருவாரூரில் உள்ள தோட்டம் ஆகலாம்.

99. ஹர்காரா - பணியாள்

100. ரா. ஸ்வாமியாருடைய பாதுகை-சிவாஜியின் குருவாகிய சமர்த்த ராமதாசரின் பாதுகை (காலணி)

101. கோசாமியார் (வணங்கத்தக்க பெரியோர்கள்)

102. பத்துக்கட்டு - சாகுபடி செய்யும் நிலம்

103. மகமை - கோயில், சத்திரம் முதலியவற்றின் செலவுக்காக வசூலிக்கும் வரி.

*(6) 1811*

*ம.ரா. திவான் சாயேப்[104] அல்லாப் பண்டிகைக்காகச் சுற்றிப் போய்ப் பார்த்து வந்ததற்கு அந்தந்த அல்லாவுக்கு இனாம் சக்.42 1/2 கொடுக்கப்பட்டது.*

*(7) 1811*

*திவான்சாயேப் மாடியின்மேல் லஜ்யாவில்[105] அமர்ந்து பக்கீரு[106]டைய வேடிக்கையைப் பார்த்ததற்கு 10 சக்ரம் கொடுக்கப்பட்டது.*

*(8) 1811*

*ரா. துளஜாராவின்[107] தேவசத்திற்குத் தானஞ்செய்ய நகைகள் தயார் செய்ய, தங்கம் வெள்ளி சிலவு-பெள்ளல் தங்கம்[108] வராகனிடைக்கு சக்.2-4 15/16 வீதம் சக். 61 1/2 பணம் 3/4*

*வெள்ளி வஸ்துகட்டி இடை 3 1/4 சேருக்குச் சேரொன்றுக்கு சக்.17-2 வீதம் சக்.55-9 பணம்.*

*ருத்திராக்ஷம் 13க்கு ஒன்று 2 பணம் வீதம் சக்.2-6=சக்.120-3/4 பணம்.*

*(9) 1811*

*ரா. துளஜா ராஜே சாயேப் அவர்களுடைய தேவசத்திற்குப் பூரி[109] சிலவு 20 சக்ரம்.*

*(10) 1811*

*நவவித்யா கலாநிதி பள்ளிக்கூடத்தில் சித்திரக்காரி செங்கம்மாளுக்கு மாசத்திற்கு 3 சக்ரம் சம்பளம்.தற்காலம் சாப்பிடுவதற்கு சக்.3 ஆக 6 சக்.*

*(11) 1811*

*கொடிகாடு காட்டின் உத்யோகஸ்தன் ரா.முத்தோஜிஅப்பா அவர்கள். ஸர்காரின் 2 படகுகளுக்குக் கீல்(தார்) தடவுவதற்காக, கீலுக்காக - பீரி[110]யை வாங்குவதற்காக 200 சேருக்குப் பணமொன்றுக்கு 12 1/2 சேர் வீதம் சக் 4-6-0*

*13.1811*

*(12) சென்னையிலிருந்து சர்காருக்கு வந்த சாமான்கள்-யானைத் தந்தம் சேர் 20 ராதல்[111]*

---

104. திவான்சாகேப் என்றது இரண்டாம் சரபோஜியை

105. லஜ்யா - அரசர் அமரும் ஆசனம்

106. பக்கீர்-பக்கீர் முகமதியப் பரதேசி

107. துளஜா - இரண்டாம் சரபோஜியைச் சுவீகாரம் எடுத்துக்கொண்ட இரண்டாம் துளஜா ஆவர்.

108. பெள்ளல்தங்கம் - துளைப்பொன் அதாவது தூய தங்கம்- (பக். 386).

109. பூரி - அந்தணர்கட்கு அளிக்கும் தட்சணை

110. பீரி - வைக்கோல்கட்டு

111. ராதல் - ராத்தல்-40ரூ.எடை (Arabian Pound 40 Tolas - Tamil Lexicon M.U)

*3 1/2 இதற்கு வராகன் புலி 126-13/16, பிடில் வாத்தியம் 1க்கு -6 வராகன், தோல் தந்திகள் சுமார் 48க்கு 2 வராகன்.*

*(13) 1811*

*களஞ்சியம் மஹால்*[112] *- லக்ஷ்மாயிடம் நெல்லு வாங்கின வகையில் மகாவில் கலம் 39க்குப் பணமொன்றுக்கு 3 5/8 படி வீதம் சக்.25 8-3/16*

*(14) 1811*

தேவஸ்தானம் பெரிய கோவில் சுவாமிக்கு உற்சவத்திற்கு

*திருநாள் மொயின் சக் - 1700, தினப்படி மொயின் சக்.- 1200,*

*திருநாளுக்கு மண்டபப்படி பாபத்து*[113] *சௌ. அகில்யாபாயி*[114] *சாயேப் அவர்களிடம் 250, = 3150. பூதவாஹனத்திற்கு-50, யானை வாஹனத்திற்கு-50, விருஷ*[115] *வாஹனத்திற்கு-75, தீர்த்தவாரி*[116]*-75, = 250.*

*(15) 1811*

*வைத்தியம் குட்டிப்பாவின் இளைய குமாரனின் திரஷ்டிக் கல்யாணத்திற்கும்*[117] *பேரனின் பூணூல் கல்யாணத்திற்கும் இனாம் சக்.30*

*(16) 1811*

*மாசி மாசம் மஹாசிவராத்திரிக்காக விளையாடுவதற்கு*

*சௌ. ராஜம்மாவிடம்*[118] *சக். 10 காசு 500, உபலம்மா சக். 10 காசு 500,*

*மா. சந்திர ரேகாபாயி பணம் 7 1/2=20-7 1/2 1000 இன்னும் பாக்கி பாயிசாயேப்களிடம் சக்.500-காசு 14000.*

*(17) 1811*

*ரா. ராமஸ்வாமி*[119] *அவர்களுடைய புண்ய நிதிக்காக லலித (ஸ்வாமியிடமிருந்து பிரஸாதம் வாங்குவது) தினம் பாதுகையின் பூஜைக்காக*[120] *தக்ஷிணை சக்.5.*

112. களஞ்சியம் மகால் - தாஸ்தான் மகால்.

113. பாபத்து - தொடர்பாக

114. அகில்யாபாயி - இரண்டாம் சரபோஜியின் இரண்டாம் மனைவி

115. விருஷ - விருஷபம் - காளை

116. தீர்த்தவாரி - திருவிழாமுடிவில் சுவாமிக்கு நடைபெறும் நீராட்டுவிழா.

117. திரஷ்டிக்கலியாணம் - மனையறம்படுத்தல்

118. ராஜம்மா - இரண்டாம் சரபோஜியின் நான்காவது மகள் (யமுனாபாயியின் மகள்)

119. ராமஸ்வாமி - ஸ்ரீராமதாஸ் சுவாமிகள்; சிவாஜியின் ஞானாசிரியர்.

120. பாதுகையின் பூஜை – காண்க மூட்டை எண் 123c – 13-4

*(18) 1811*

சி. ஐந்துபாயி சாயேப் தங்களுடைய பற்களை வேகோஜி கோடே என்பவர் காசி சேத்திரத்திற்குக்கொண்டு போவதற்காக இனாம் ரூ.50. கொடுத்தார்கள்.

*(14) 1811*

(1) அடிசேரி நெல்லு[121] பணத்திற்கு 3 5/8 படி வீதம் கொடுக்கிறது.

*(2) 1811*

ஹுஜூர்[122] பக்ஷிகளின் கூட்டத்தை வாங்கியதற்கு ஒரு பணம் கொடுக்கப்பட்டது.

*(3) 1811*

மி. ஜான் பாதரி[123]யினிடமிருந்து சீர்மைப் பயிர் கன்றுகள் கொண்டு வந்ததற்காக இனாம் 5 பணம்.

*(4) 1811*

மருதப்ப மேஸ்திரி தரங்கம்பாடிக்கும், நாகப்பட்டணத்திற்கும் சென்று பாதரியின் கோயிலின் மாதிரியைப் பார்த்துவர படிச்சிலவு சக்.5

*15. 1811*

(1) அஹோபில ஜீயேர்[124] ஸ்வாமிகளுக்குப் பிக்ஷை[125] செய்வித்ததினால் சிலவு காணிக்கை சக். -1, கனகாபிஷேகம் சக். -100, பாதுகை பூஜை சக். 100, ஹஸ்தோகத்திற்கு[126] - 2, பிராமண போஜனத்திற்கு- 25, = 228. — 235

*(2) 1811*

திவான் சாயேப்[127] வேட்டைக்காக, கொள்ளிடத்திற்குப் போய் வந்ததற்குச் சிலவு சக்.6-3 பணம்.

*(3) 1811*

ஸ்ரீபஞ்சநதீஸ்வர ஸ்வாமிக்கு (திருவையார்) தவனி பௌர்ணிமை தினம் கொளுந்து அர்ச்சனை செய்ததற்காக தக்ஷிணை பணம் -1

---

121. அடிசேரிநெல்லு - நெற்களஞ்சியத்தில் அடிப்பகுதியில் இருக்கும் நெல்.

122.ஹுஜூர்- அரசர்-இவண் இரண்டாம் சரபோஜியைக் குறிக்கலாம்.

123. ஜான் பாதரி - இவர் தரங்கம்பாடியில் ஆங்கிலப் பள்ளி நடத்தியவர். (பக். 211, 243, 266).

124. அஹோபில ஜீயர் - அஹோபில மடத்து அதிபர். ஆழ்வார் திருநகரில் தோன்றிய வண்சடகோபர் என்பவரால் ஆந்திர மாநிலத்தில் தோற்றுவிக்கப்பட்ட மடம் அகோபில மடம் ஆகும். (பக். 436).

125. பிக்ஷை - மடத்து அதிபர்களுக்கும் அவரைச் சார்ந்தவர்களுக்கும் உணவு அளிப்பது

126. ஹஸ்தோகம் - கையில் நீர்வார்த்தல்

127. திவான்சாயேப் - இரண்டாம் சரபோஜி

*(4) 1811*

ரா. ஸ்வாமியார்[128] சத்திரத்திற்கருகிலுள்ள மிஸ்தர் ப்ளாக்பாண்[129] அவர்களுடைய பங்களாவிற்குச் சமீபத்தில் ஹூஜூரின்படகு கோடிக்கரையிலிருந்து கொண்டு வந்து வைத்ததினால் (கரியானுக்கு) படகோட்டிக்குப் படிச்சிலவு சக்.10.

*(5) 1811*

ஹூஜூர் முத்தண்ணாவின் மூலம் செவ்வெளநீர் நெத்துகளை வாங்கினதற்கு 13 பணம் கொடுக்கப்பட்டது.

*(6) 1811*

கடப்பையி[130]விருந்து வந்த பாட்டு வித்வானுக்கு இனாம் ரூ.15.

*(7) 1811*

திருச்சினாப்பள்ளி - தாயுமான பிள்ளையிடமிருந்து Lapatasff 2 சீசாவை வாங்கினதற்காக 24 பணம் கொடுக்கப்பட்டது.

*(8) 1811*

வடக்கே (வடதேசத்திலிருந்து) வந்த பையிராகி
கோசாவி-, தனபிரி-1, காரபகிரி-1, பஞ்சனகிரி-1, ஹீராபுரி-1 = 4. ஆக 4 ஜதைக்கு 80 ஆஸாமிகளுக்கு இனாம் 80 சக்.

*16. 1811*

1. ரா. சிவாஜிராஜே சாயேப் அவர்களுக்குக் குடுமி கல்யாணமும்[131] அக்ஷராரம்பம் (பள்ளிக்கூடத்தில் வைத்தற்கும்) கத்தியைக் கட்டுவதற்கும்[132]

ஆங்கிலஸூ நிஜ வைசாக[133] சுத்த துவாதசி[134] சி. சௌ. அமணிராஜே சுலக்ஷணாபாயி[135]

---

128. ரா ஸ்வாமியார் – ஸ்ரீ இராமதாஸ் சுவாமிகள்

129. பிளாக்பர்ன் - ரிஸிடெண்ட்

130. கடப்பை - ஆந்திரமாநிலத்திலுள்ள ஓர் ஊர்

131. குடுமிக்கல்யாணம் - குழந்தை பிறந்து ஓராண்டிற்கு முன்பும், உபநயனத்தின் போதும் செய்யப்படும் மயிர்களைதல் சடங்கு.

132. கத்தியைக்கட்டுதல் - இது கண்டோராவ் என்னும் சுவாமியின் முன்னிலையில் நடைபெறுவது

133. நிஜ வைசாகம் - சாந்திரமானத்தில் சிற்சில ஆண்டுகளில் 13 மாதங்கள் வரும். ஏதாவது ஒரு மாதம் இரண்டு தடவை கணக்கிடப்பெறும் அவ்விரு தடவை வரும் மாதத்தில் இரண்டாவதாகக் கணக்கிடுவது நிஜ (உண்மையான) மாதம்; பிறிதொன்று அதிகமாசம் என்று குறிக்கப்படும். வைசாகம் வைகாசி.

134. சுத்த - வளர்பிறை; துவாதசி - பன்னிரண்டாம் நாள்

135. சுலக்ஷணாபாயி - இரண்டாம் சரபோஜியின்முதல் மகள் (மூட்டை எண் 123C, -11)

சி அமணி ராஜே ராஜம்மாபாயி[136] இவருடைய விவாகத்திற்குப் போடவேண்டிய பாக்கியருக்கிற கோந்தளம்[137] குலதருமம்[138] செய்வதற்கு விவாகத்தின் 4 கோந்தளங்களில் 2 கோந்தளம் வழக்கப்படி போடப்பட்டது.
16.1811

(3) சி.சிவாஜிராஜா சாயேப் அவர்களுக்கு இடுப்பில் சின்னக் கத்தியைக் கட்டுவதற்குக் கண்டேராய[139] என்னும் ஸ்வாமியின் முன்னிலையில் நடந்ததற்குச் சிலவு.

(4) 1811
மிஸ்தர் ஜான்பாதரி அவர்கள் சென்னையின் மிஸ்தர் பேபவி பாதரியின் பேரால் 2-ஹூண்டிகளைக் கொடுத்தார். அவைகளைச் சென்னை சீனிவாசராவிடம் கொடுத்தார். அனுப்பித்த வகையில்

| | விராகன்புவி | மைவி | காசு |
|---|---|---|---|
| ஹூண்டி 1க்கு பௌண்ட் 100க்கு | 235 | 1 | 40 |
| ஹூண்டி 1க்கு பௌண்ட் 100க்கு | 23 | 11 | 9 |
| | 258 | 22 | 49 |

ஆக இருநூத்தி ஐம்பத்தெட்டு வராகன் மைவி[140] 21 பணம் காசு நாற்பத்தொன்பது.

(5) 1811
ஹூஜூரின் படகின் வேலைக்காக காசி ரட்டு[141] வாங்கினதற்குச் சக். 10- பணம் 5

(6) 1811
புதிய படகுகளைத் தயார் செய்தவைகளில் கணேச பொரவீ என்னும் படகைக் காவேரி நதியில் விடும்பொழுது பூஜைக்குத் தக்ஷிணை பணம் 2

(7) 1811
மகா ஸ்ரீ திவான் சாயேப் - பில்வநெல்லூரிலுள்ள காட்டுக்கு வேட்டைக்குப் போய்வரச் சிலவு பணம் 14 1/2-5 காசு

(8) 1811
படகின் வேலையைச் செய்கிற அஸாமிகளுக்கு இனாம்
காத்தான் சக்.- 1, மாரீ சக்.- 1, கந்தன் சக்.- 1 = 3

136. ராஜம்மாபாயி - இரண்டாம் சரபோஜியின் நான்காவது மகள்

137. கோந்தளம் - (பக். 347).

138. குலதர்மம் - ஆண்டு முழுவதும் குறிப்பிட்ட நாட்களில் சந்திரமௌலீசுவர சுவாமிக்குச் செய்யப்படும் பூசை.

139. கண்டேராவ் - இவர் மராட்டியருடைய குல தெய்வங்களில் ஒருவர்; சதாராவுக்கு அருகில் ஜெஜூரி என்ற ஊரில் கோயில் கொண்டுள்ளார். (பக். 348).

140. மைவி என்பது பணம் போலும் (இங்குக் கண்ட கணக்கில் தவறு இருக்கிறது)

141. ரட்டு - முரட்டுத்துணி

*(9) 1811*

ஹூஜூரின் படகின் வேலையைச் செய்வதற்கு விண்ணாற்றங்கரை இராமசாமி தோட்டத்தில் கூலி ஆட்கள் 3 பேருக்கு சக்.12-6 பணம்.

*17 1811*

*(1)* கணபதி அக்கிரஹாரம் -திருவேதகுடி முகாஸா, தாராசுரம், தெரமா நெல்லூர் கீரக்கொல்லை வட்டம்-கீழ்காட்டூர் தோட்டம் வகையறா கூட கலம் 1க்குப் பணம் 4,

*(2) 1811*

ரா.சிவாஜி ராஜா சாயேப் அவர்களுக்குக் குடுமிக் கல்யாணஞ்செய்வதற்குரொட்டி சுமார் 785க்குப் பணமொன்றுக்கு 125 ரொட்டி வீதம் 6 1/4 பணம்.

*(3) 1811*

யானைசாலை[142]-மாரியம்மன் கோவில் யானைக்கும் முக்தம்பாள்புரம் கோவில் யானைக்கும் காய்கறிக்காகத் திருவையாருக்குப் போனபொழுது பில்லுக்கட்டு தினம் 15 வீதம் சக்.75-9 பணம்.

*(4) 1811*

சௌ. அபரூபபாய் அவர்களுடைய தேவசத்திற்குச் சக். 10

*(5) 1811*

ஸர்காருக்கு வடதேசத்திலிருந்து நரஸிங்கராவ் கதம் அவர்கள் குதிரைகள், ஒட்டகம், துணிகள் வகையறா வாங்கி அனுப்பினதற்கு அதனுடன் கூடவந்த வேலைக்காரர்களுக்குச் சம்பளம் ஜாடாவுக்கு ரூ.100-11-6 க்கு ரூபாய் ஒன்றுக்கு 5 1/2 பணம்[143] வீதம் சக்.55- 3 7/8.

*(6) 1811*

மிஸ்தர் டூரியன்[144] சாயேப்புக்கு 1811 ஜனவரி மீ" த்திற்குச் சேரவேண்டிய 1000 பௌண்டுக்கு மிஸ்தரானவர் சீமையில் ஒரு வியாபாரியின் மூலம் 1000 பவுண்ட் வாங்கி, அதற்குச் சென்னப்பட்டணத்தில் மிஸ்தர் அடத்ரீன் டிபாரிஸ் அண்டுகோவுக்கு 1000 பவுண்ட் செலுத்துவதற்காக பில் அனுப்பின பாபத்து விராகன் புலி 3157 மைவி 3 1/2 காசு 46.

*(7) 1811*

ரா. சிவாஜி ராஜா சாயேப் அவர்களுக்குக் குடுமிக் கல்யாணமானதற்கு மிஸ்தர் ப்ளாக்பர்ன் சாயேப் சேவகனுக்கு இனாம் ரூ.10

*(9) 1811* எட்டியாபுரம் பாளயக்காரனிடமிருந்து நாய்கள் கொண்டுவந்த ஆட்களுக்கு ரூ.10 இனாம்.

*(10) 1811*

ரா.சிவாஜி ராஜாசாயேப்புக்குக் குடுமிக் கல்யாணத்திற்கு ஸரஸ்வதி பூஜைக்குத் தக்ஷிணை வழக்கப்படி கொடுப்பது.

---

142. யானைசாலை - ஹத்திகானா அல்லது பீல்கானா. (பக். 454).

143. ரூபா ஒன்றுக்கு 5 1/2 பணம் என்பதற்கு இது ஆதாரமாகும்

144. டூரியன் - -ரெசிடெண்ட்.

*(11) 1811*

*திருவையாரில் பஞ்சநதீஸ்வர சுவாமி கோவிலின் தாஸிகளுக்கும்(நடிகை) மேளக்காரனுக்கும் இனாம் 5 சக்.*

*17 (12) 1811*

*திருவையாரில் குள்ளவாத்தை வளர்க்கிற கைலாஸத்திற்குத் தஞ்சாவூர் கோட்டை அன்னசத்திரத்தில் தினமும் 2 படி அரிசியும் மேல் சாமான்களும் கொடுக்கிறார்கள். அரிசிக்காக நெல்லைக் கொடுக்க உத்திரவாயிருக்கிறது.*

*(13) 1811*

*மா. ராஜஸபாய்[145] பெரிய ஆவுசாயேப் அவர்களின் தேவசத்திற்குப் பூரி 10 பணம் கொடுக்கிறது.*

*(14) 1811*

*குஜராத்தி மடத்தில்[146] மதுரையிலிருக்கும் தெலுங்குப் பிராமணர் சம்சாரம் இறந்ததற்கு உத்திரகிரியைக்கு 1 1/2 சக்.*

*(15) 1811*

*சி.சிவாஜி ராஜாவுக்குக் குடுமிக்கல்யாணமானதால் இராணாயீ, ஸட்வாயீ என்னும் தெய்வங்களுக்கு வழக்கப்படி கொடுக்கிறது.*

*(16) 1811*

*திருவையாரில் - வேஷம் போட்டுக் கொள்ளுகிற இராமலிங்கன் தினமும் வேஷம் போட்டுக் கொண்டு வந்ததற்கு இனாம் 5 சக்.*

*59-1841*

*ரா.ராமண்ணா கோஸாமிக்கு ஸர்கேல் எழுதியது.*

*2 லகோடாக்கள்[147] (packets) கப்பலில் சீமைக்கு அனுப்ப அர்பத்நட் அவர்களுக்குத் தபால் சிலவுக்காக புலி -2. சின்னப்பணம் 8 காசு 35 கொடுக்கிறது[148].*

---

145. ராஜஸபாயி - இரண்டாம் துளஜாவின் மனைவியருள் ஒருவர் (போ.வ.ச.பக்.125)

146.குஜராத்தி மடம்-தஞ்சை மேலவீதியில் இருக்கிறது.

147. லகோடாக்கள் - அரக்குவைத்த உறைகள்

148. புலி - புலிவராகன் (Phuli), சின்னப்பணம் - 2 1/2 பணம் கொண்ட பெரியபணம்; சின்னபணம் என்பது சாதாரண பணம்; அதாவது 32 காசு கொண்ட பணம்.

*60.1828*

*சிவகங்கை ஜமீன்தாரின்[149] பிள்ளையை ஜெயிலிலிருந்து விடுவிக்க ரா. மகாராஜாவுக்குச் சிரஸ்தேதார் எழுதிய கடிதம்.*

*66.1828 ஆகஸ்டு மீ 4*

*ராயக்யாப்டன் ஜான் பைப்[150] பைப் சாயேப் ரெஸிடெண்டு அவர்களுக்கு ரா. ராமோஜி ஸர்ஜேறாவ் காட்கே ஸர்கேல்[151] எழுதியது...ஸர்காரிடம் ஒப்பித்த 10 ஊர்களைப் பற்றி எழுதிய கடிதம்*

*72.1828*

*ரெஸிடெண்டுக்கு ஸர்கேல் எழுதியது.*

*திருவையாரில் ஸர்காரின் நிலத்தை அளந்து கொண்டிருக்கும் 5 அஸாமிகளை போலீஸார் பலாத்காரமாகத் தாசில்தாரிடம் இழுத்துக் கொண்டுபோய் ஜெயிலில் போட்டிருக்கிறார்கள். இது உடன்படிக்கைக்கு விரோதமான செயல்[152] என்று.*

*73.1828*

*ரெஸிடெண்டுக்கு ஸர்கேல் எழுதியது. கும்பனி தாசில்தார் சம்மனுக்கு ஆஜர் ஆகாவிட்டால் அவர்களுடைய சொத்துக்களை ஜப்தி செய்கிறது. ஹாஜர் ஆனது ஜப்தியை ரத்து செய்கிறது. போலீஸார் ரெஸிடெண்டுக்கு எழுதி, சர்கார் சிப்பந்திகளை அழைக்க வேண்டும்[153]*

*76.1828*

*மாஜிஸ்ரேட் அதிகாரத்தைப் பற்றி எழுதிய கடிதம்.*

*77.1828*

*ரா.ராமண்ணா கோசாமிக்கு - ஸர்கேல் எழுதியது.*

---

149. சிவகங்கை ஜமீன்தார் - ஸாஹஜியின் தம்பி முதலாம் சரபோஜி காலத்தில் இராமநாதபுரத்தின் ஆட்சிப்பொறுப்பு எய்துவது பற்றிச் சச்சரவு ஏற்பட்டது. கிழவன் சேதுபதியின் சுவீகார மகன் விஜய ரகுநாதர் 1720இல் இறந்தார்; இறப்பதற்கு முன் தன் உடன்பிறந்தவனின் மகன் தண்டைத்தேவரை அரசனாக்கினார்; கிழவன் சேதுபதியின் காமக்கிழத்தியின் மகன் பவானி சங்கர் தான் அரசனாக விரும்பினார். தஞ்சை அரசர் உதவி புரிந்தார். ஆனால் பவானி சங்கர் தான் கூறியவண்ணம் பாம்பாற்றுக்கு வடபாலுள்ள நாட்டைத் தரவில்லை. ஆகவே சரபோஜி தண்டைத்தேவருக்கு உதவிபுரிந்து பவானி சங்கரொடு போர்புரிந்து சிறைப்படுத்தினார். பின்னர்ப் பாம்பாற்றுக்கு வடபகுதியைச் சரபோஜி பெற்றார். எஞ்சிய பகுதி ஐந்தாகப் பிரிக்கப்பட்டு மூன்று பகுதிகளைத் தண்டைத்தேவரும், எஞ்சிய இரண்டு பகுதிகளைச் சசிவர்ணத்தேவரும் பெற்றனர். சசிவர்ணத்தேவர் சிவகங்கைச் சீமைக்கு உரியவரானார். இதுவே சிவகங்கை சமஸ்தானம் தோன்றிய வரலாறாகும் (பக். 88–89).

150. ஜான் பைப் - (பக். 66).

151. ராமோஜி ஸர்ஜேராவ் காட்கே. (பக். 85).

152. சரபோஜி கும்பினியாரிடம் செய்துகொண்ட உடன்படிக்கையின் 12ஆவது ஷரத்தின்படி 'அரசரது உறவினர் பணியாட்கள் அல்லது தஞ்சைக் கோட்டையில் வசிக்கும் பிறர் பேரில் இவர்கள் அல்லா மற்றையோர் வழக்குத் தொடுக்க வேண்டுமெனில் முதலில் தஞ்சையில் உள்ள கம்பெனியின்பிரதிநிதியிடம்கூறினால் அவர் அரசரிடம் முறையிடுவார்; அரசர் உடனே அவ்வழக்கைத் தன்னுடைய நீதிமன்றத்தில் விசாரிக்கச் செய்வார்' என்றிருப்பதால் ஸர்க்கார் நிலத்தை அளந்த ஆட்களைக் கும்பினி போலீஸ் வன்முறையில் இழுத்துச் சென்றது சிறைப்படுத்தியது உடன்படிக்கைக்கு விரோதமாகும் (பக். 54–55).

153. உடன்படிக்கைக்கு ஏற்பக் கூறப்பட்டது.

*சீமைக்கு 2 லகோடாக்களை வெவ்வேறு கப்பலில் அனுப்புகிறது. தாங்கள் அனுப்பிய மாம்பழங்கள் சர்காருக்குச் சேர்ப்பித்தேன். சாப்பிட்டு மிகவும் நன்றாக இருப்பதாகப் புகழ்ந்தார்கள்.*

*78.1828*

*ஷை தினமும் மாம்பழங்களை அனுப்புகிறது.*

*81.1828*

*ஷை மோஸ் என்னும் மருந்தை 2 பவுண்ட் வாங்கி அனுப்புவது.*

*82.1828*

*ரா. ராமண்ணாவுக்கு ஸர்கேல். பிஸ்டோலை[154] வாங்கி அனுப்புகிறது. ஸர்கார் தங்கள் மேல் மிகவும் சந்தோஷப்பட்டு, தங்களுக்கு 100 வராகன் இனாம் கொடுக்கும்படி உத்திரவாயிருக்கிறது. நீங்கள் தங்களிடமுள்ள துகையில் 100 வராகனைச் செலவு எழுதி எடுத்துக் கொள்ளுகிறது.*

*84.1828*

*ஷை சிகப்பு வாங்குகிற விஷயமாகவும் செப்புத் தகடு 583 களில் தினம் 4 வீதம் மேல் கோணிச் சாக்கைப் போட்டுத் தைய்த்து அனுப்புகிறேன்.*

*88.1828*

*ஷை வைத்தியர் கடையில் மருந்துகளை வாங்கி அனுப்புகிறேன். செப்புத் தகடு 583க்கு இடை 7 1/2 கண்டி 3 மணங்கு கண்டி[155] ஒன்றுக்குத் தரகாளிக்குச் சேராமல் 740 புலி விராகனுக்கு வாங்கினேன்.*

*பொடி டப்பா[156] 1க்கு 1 புலிவராகன் வீதம் 7 டப்பாக்களை அனுப்பியிருக்கிறேன்.*

*வேட்டையில் பன்றி - மான் வகையறாக்களைப் பிடிக்கும் நாய் 2 முழம் நீளம் - உயரம் 1 1/2 முழம் - இதை ஏலத்தில் எடுத்தவனுக்கு 36 புலிவராகன் கொடுத்தால் கொடுக்கிறேனென்கிறான்.*

*88.மெழுகுத் துணியும் மூங்கில் கூடைகள் வருவது நின்று போய்விட்டது.*

*89.ஷை 5 நல்ல முத்துக்கள் வாங்கின விஷயம்.*

*92.1828*

நாஞ்சிக்கோட்டையாருக்கும்-வள்ளுண்டாபட்டு வாசிகளுக்கும் ஆன வியாஜ்யம் விஷயம்:-

*பிரமாணம் செய்கிறவர்கள் நெருப்புச் சட்டியை வெறும் கையில் வைத்துக்கொள்ள*

---

154. பிஸ்டோல் - கைத்துப்பாக்கி; அல்லது 18 ஆங்கில வெள்ளி மதிப்புடைய ஸ்பானிய தங்க நாணயம் (அ.சிதம்பரநாதச்செட்டியார், ஆங்கிலத் தமிழ்ச் சொற் களஞ்சியம், சென்னைப் பல்கலைக் கழகம், 1965)

155. கண்டி - 20 மணங்கு; பாரம் என்னும் நிறுத்தலளவை

156. பொடிடப்பா - அரசர்கள் சிலர் பொடி போடும் வழக்கமுடையவர் ஆகலாம்.

வேண்டுமென்று நாஞ்சிக்கோட்டையார் சொல்லுகிறார்கள். அது சரி என்று தோன்றவில்லை என்று முக்ய கலெக்டர்[157] சாயேப் தெரிவிக்கிறார்.

கோட்டையின் லயன் மிகவும் அடங்கிப் போயிருந்தது. அதனால் கோட்டையிலுள்ள ஜனங்களெல்லோருக்கும் இன்னும் வாஹனங்களுக்கும், மிருகங்களுக்கும் கொஞ்சம் அசைவதற்குக் கூட இடமில்லாமலிருந்தது. அதை கைதம் ஹானரபில் கௌனர்மெண்ட்டார் தாராளமாகவும் ஜனங்களுக்கு நன்மையாயுள்ளதாயுமான நீதியுடன் இப்பொழுதே ஒரு வருஷம் முதற்கொண்டு பரிகாரமாகி கொஞ்சம் சுகத்திற்கு ஆளாயிருக்கிறார்கள்.

*99.1828*

சராப் சாவடி[158]யிலுள்ள கடைக்காரர்களெல்லாம் கொடுத்த மனு.

வெய்யிற் காலத்தில் அகழியின் ரேவணியின்[159] மேல் தண்ணீர் பந்தல் வைக்க உத்திரவு கொடுக்க வேணுமென்று.

குறிப்பு- பாளாதீக்ஷிதரிடமிருந்து சுரௌதம்[160], புத்தகங்கள்[161] வந்ததற்கு ஜாபிதா. மஹாலில் எழுதிய புத்தகங்களின் ஜாபிதா.

*120-1841*

கருந்தட்டான் குடி-சஞ்சீவப்பிள்ளை கொடுத்த பிராது. தன்னிடமுள்ள 16 சேர் கரக்கும்படியான பசுமாடும் கன்றும் ஸர்காரில் வாங்கிக் கொண்டு எனக்கு மாதத்திற்கு 10 சக்ரம் கொடுத்து வந்தார்கள்.

ஒரு காலத்தில் காளைமாடு வாங்குவதற்கு என்னை ஸர்காரில் பணம் கொடுத்து அனுப்பினார்கள். வெகுதூரம் சென்று காளையைக் கொண்டு வந்து கொடுத்தேன். சம்பளம் ஒன்றும் பேசவில்லை. என்னுடைய பாக்கிச் சம்பளத்தைக் கொடுத்து இனிமேலும் சம்பளம் கொடுக்க வேணும். இல்லாவிடில் என்னுடைய பசுமாட்டையும் கன்றையும் எனக்குத் திருப்பிக்கொடுக்க வேணுமென்று-

*121. 1841 ஜுலைமீ 22*

ரெஸிடெண்டுக்கு[162] - பக்கீர் இமாம் - அலிசாவும் - காஸிம்ஸா எழுதிக்கொண்டது.

---

157. 7-6-1827இல் ஏ.டி. காமல் கலெக்டராக இருந்தார். 23.12.1829இல் நெல்சன் கலெக்டராக இருந்தார்; ஆகவே இங்குக் குறிக்கப்பட்ட கலெக்டர் மேற்கண்ட இருவரில் ஒருவராதல் கூடும்.

158. சராப்சாவடி - காசுக்கடைக்காரர்; சராய்-வழிப்போக்கர் தங்குமிடம்.

159. அகழியின் ரேவணி – அகழியின் கரை

160. சிரௌதம் - வேதத்தில் விதிக்கப்பட்ட கருமங்கள்

161. பிறரிடத்திலிருந்து வாங்கிய புத்தகங்கள் காண்க. (பக். 252).

162. ரெஸிடெண்டு - கிண்டர்ஸ்லி ஆகலாம். (பக். 67).

சோளராஜா[163] காலத்தில் - நாஞ்சிக்கோட்டைக்கு வடக்கு, கந்தர்வகோட்டை ரஸ்தாவுக்குக் கிழக்கு, அலியக் குளத்திற்கு மேற்கு, கோட்டை அகழிக்குத் தெற்கு, இந்த நான்கெல்லையில் கொஞ்சம் நிலத்தைக் கொடுத்தார். ஏராளமாகச் சிலவு செய்து தெக்கால்[164] சுடுகாடு - 4 குளங்களை வெட்டி அந்த வரும்படியைக்கொண்டு கந்திரி[165] வகையறா திருநாட்களை 1000ஞு காலமாக நடத்தி இருக்கிறோம். இப்பொழுது மகாராஜா சாயேப்[166] அவர்கள் நம்முடைய இடத்தில் பிரவேசித்து தோட்டம் வகையறா செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள். நாங்கள் 36 குடும்பங்களுக்கும் க்ஷேமமுண்டாகும்படி பிரார்த்திக்கிறோம். மகாராஜா சாயேப் இங்குப் பிரவேசிக்காதபடி செய்யும்படி.

*137. 1844*

மகாராஜாவிற்கு - புரந்தர ஸ்வாமியின்[167] புண்ய திதிக்கு 2 பிராமண போஜனத்திற்கு ரூ.10 கொடுத்துக் கொண்டிருந்தது நின்றுவிட்டது. அதை மறுபடியும் கொடுக்க வேணுமென்று மனு. மகாராஜாவிற்கு - ஆடேகரி[168] தாண்டவராயபிள்ளை.

*139 1844*

மகாராஜாவிற்குப் பட்டாபிஷேகமான பொழுது, தன்னை மகாராஜாவானவர் நல்ல பெயரளித்தார். பின்பு செள. காமாக்ஷிஅம்மா பாயிசாயேப்[169] அவர்களுடைய கொட்டியத்தில்[170] 3 1/2 சக்ரம் வாங்கி வேலைக்கிருந்தேன். இப்பொழுது என்னை வேலையிலிருந்து நீக்கி இருக்கிறார்களென்று.

*61. கி.பி. 1828*

*நினைவுக் குறிப்பு*

*1828 ஜனவரி 1முதல் டிசம்பர் 31 வரை-வீட்டின் கட்டிடப் பழுது பார்ப்புக் கட்டணம் ரூ. 1003-4-53.*

---

163. சோழராஜா காலத்தில் என்பது பொருந்துமாறில்லை

164. தெக்கால் - தைக்கா - பக்கிரிகள்தங்குமிடம்

165. கந்திரி - மகம்மதியப் பெரியவர்கள் நினைவில் நடத்தப்பெறும் பெருவிழா.
Muhammadan festival held in honour of a deceased holy person as the annual festival held at Nagur in honour of Saint Miran Sahib (Tamil Lexicon Mad.Uni)

166. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

167. புரந்தரஸ்வாமி என்பது இசை மேதைகளில் ஒருவராகிய புரந்தரதாசர் ஆகலாம். இவர் பண்டரிபுரத்துக்கு அண்மையிலுள்ள "புரந்தரகட்" என்ற ஊரில் கி.பி.1491இல் பிறந்தவர். 1564வரை இசைத்தொண்டு புரிந்தவர். இவர் சிறந்த இசை மேதையாதலின் இவரது புண்யதிதி - நினைவுநாளைத் தஞ்சையில் இசைவல்ல மராட்டிய மன்னர்கள் நடத்திவந்தனர் ஆதல்கூடும்.

168. ஆடேமஹாலிலிருந்து ஒவ்வொரு சமையல் கூடத்துக்கும் தண்ணீர் கொண்டு போவது பழக்கம். அங்ஙனம் தண்ணீர் கொண்டு சென்று தருபவர் "ஆடேகரி" ஆவர் (பக். 453 அடிக்குறிப்பு 16).

169. இவர் சிவாஜியின் இரண்டாவது மனைவியாவார். (பக். 31).

170. கொட்டியம் - சரக்கறை *ஆங்கில ஆவணம்–இராக விவேகானந்த கோபால் மொழிபெயர்த்தது.

*தஞ்சாவூர்*
*1829 ஜன. 1*

*வருவாய்த்துறைத் தலைவர் மற்றும் உறுப்பினர்களுக்கு*

செயிண்ட் ஜார்ஜ் கோட்டை

பெருமதிப்புடையீர்,

*27ஆம் நாளிட்ட தங்களின் செயலரது கடிதம், அதன் உள் இணைப்புடன் கிடைக்கப் பெற்றது எனது பெருமிதமாகும். தலைவருக்கு எழுதிய என்னுடைய பதிலில், கம்பெனி நிலங்களையும், மதிப்பிற்குரிய அரசரின் நிலங்களையும் பரிமாறிக் கொள்வதற்குரிய காரணம் பற்றி விளக்கியிருந்தேன். ஜனவரியில் இங்கிலாந்திற்குத் திரும்புவதற்கு முன் ஆண்டறிக்கையினையும், பசலிக் கணக்கினையும் தயாரித்து, தலைவர் அவர்களுக்குச் சமர்ப்பித்தலே எனது தலையாய பணியாக இருக்கும். இதற்கிடையில், அரசர் கோரும் புதிய நில ஆட்சியுரிமை குறித்த பணியினை மேற்கொள்ள விருப்பதால், எதனைக் கொள்வது, கொடுப்பது போன்ற பரிமாற்றத்தினை நாம் தெளிவாக்கிக் கொள்வது நலமாகும். நான் தற்போழ்து நாகப்பட்டினத்தில் இருப்பதைப் பெருமிதமாகக் கருதுகிறேன்.*

(ஒப்பம்) ஜே. காட்டன்
மேன்மைமிகு ஆட்சியர்

*22, ஆகஸ்டு, 1828*

***63. கி. பி. 1826***

பெறுதல்
மேன்மைமிகு சமீர் எஸ்கொயர்
அரசுச்செயலர் பொறுப்பு
மதுரை
ஐயா,

மேன்மைமிகு தஞ்சை அரசர், அவரது குடும்பத்தினர், அவர்தம் சத்திரம் ஆகியவை சார்ந்த தஞ்சையின் பல்வேறு பகுதிகளிலுமுள்ள கிராமங்கள்[171] மீதான விரிவுபடுத்தப்பட்ட அவரது ஆட்சியுரிமை பற்றிய வினா தற்போது அரசின்முன் உள்ளது. மேதகு ஆளுநர் அவர்கள் தஞ்சை வந்தபோழ்து, இது அவர்முன் பணிவாகச் சமர்ப்பிக்கப்பட்டது. இதற்கிடையில், மன்னார்குடியிலுள்ள காவல் அலுவலர், மேன்மைமிகு அரசரின்கமாவிசுதார்கள்[172] அதிகாரத்தைப் பயன்படுத்தியதை அறிவித்தனர். அதனைத் தாங்கள் மேதகு ஆளுநருக்குத் தெரிவிக்குமாறு வேண்டுகிறேன். மேலும், எனது கோரிக்கையிலுள்ள உண்மைத் தன்மையினை மேதகு ஆளுநர் அவர்கள் அறிந்து, அதனை ரெஸிடெண்டுக்குத் தெரிவிக்க

171. பல்வேறிடங்களில் இருந்த ஊர்கள். (பக். 134–135).

172. கமாவிசுதார் –பல ஊர்களை மேற்பார்வை செய்யும் அதிகாரி; சத்திர மேற்பார்வை அதிகாரி. (பக். 75-77)

ஏதுவாகும். இதனால், மேலும் நிகழ உள்ள பூசல்களும், மோதல்களும் அங்குத் தவிர்க்கப் படுவதோடு, மேன்மைமிகு அரசர் உடன்பாட்டில் காணப்பெறாத உரிமைகளைப் பயன்படுத்துவதைக் தவிர்க்கவும் இது உதவும்.

தஞ்சாவூர்
நாகப்பட்டினம்
ஆக, 26, 1826

தங்களுக்கு மதிப்பளிக்கும்
ஐயா,
தங்களின் மிகப்பணிவுள்ள ஊழியன்
(ஒப்பம்) ஜான் காட்டன்
மேஜிஸ்டிரேட்

## மூட்டை எண் 124-C

*28.1856*

(1) மனுவகையறாக்களைஒரு அணா முத்திரைப் பத்திரத்தின் மேல் கொடுக்கவேணும்.

*(2)1856*

வெங்கட்ராமய்யர் என்பவர் ஏலக்கிரய சாசனத்தில் வரியைப் பிளந்து எழுதின சங்கதி விஷயமாக வரவுவைத்துக் கொள்ளுகிறது.

*(3)1856*

ரெஸிடெண்ட்[173] சாயேப் அவர்களுடைய உத்தரவின்படி கோட்டையில் வண்டிகள் வகையறாக்களை ஏலம் போடுவதற்குப் பிரசித்தி பத்திரம் (Notice) அனுப்பியதைப் பிரசுரப்படுத்துகிறது.

*(4) 1856*

நான்கு வீதிகளிலும் சந்துகளிலும் உள்ள சாக்கடையிலுள்ள மண்ணை எடுத்து ஜாக்கிரதை செய்கிற விஷயம்.

*29.1856*

1. கோட்டையில் வசிக்கும் வியாபாரி அம்பா சங்கர் என்பவருக்குக் காரைக்கால் பிரெஞ்சு சர்காரிடமிருந்து பிரஞ்சு பாஷையிலும் தமிழிலும் எழுதிய அறிக்கை வந்தது.

*30.1856*

1. நியாயாதீச சபைக்கு[174] எழுதிய கடிதங்கள். கருமாதிகாரம்[175] தருமாதிகாரம்[176] வகையறா தெரிய வேண்டுமென்று சர்காரில் வருகிறார்கள். அந்த யாதிக்கு (மனுவுக்கு) ஸரஸ்வதி மஹாலிலுள்ளவர்கள் நிர்ணயம் (தீர்மானம்) சொல்லுகிற பிரகாரம் விஷயமாக நாம் அவர்களுக்கு எழுதிய கடிதத்தின் நகலைத் தாங்கள் பார்ப்பதற்காக இதில்

---

173. ரெஸிடெண்ட் - பார்பஸ் (H.Forbes) ஆவர். (பக். 68–69).

174. நியாயாதீச சபை-1800க்குப்பிறகு தஞ்சையில் இருந்த நான்கு நீதிமன்றங்களில் பெரியதாகும். (பக். 167)

175. கருமாதிகாரம் - செயல்படுத்தும் அதிகாரம்

176. தருமாதிகாரம் - நீதியைக் கூறுவதற்குரிய அதிகாரம்

வைத்திருக்கிறது. அதைத் தாங்கள் மனதில் வாங்கி (யோசித்து) அதில் கண்டபடி ஷெ சங்கதி விஷயமாக ஸர்காரில் வரும் மனுக்களுக்கு ஷெ மஹாவிலுள்ளவர்கள் செய்யும் தீர்மானத்தைத் தம்முடைய தர்மத்தை ஜயிக்கச் சரியாக விருந்தால் அவ்விஷயத்தில் சரி என்று நடக்கலாம் என்று ஸர்கீல் - நீலகண்டறாவ் ஆனந்தராவ் ஜாதவ்[177] தெரிவிக்கிறார்.

## மூட்டை எண் 125-C

*1856 ஜூன் 26உ*

*30-1856*

(1) நாலுவீதி வகையறாக்களிலுள்ள தொட்டியிலுள்ள குப்பையையும் சாக்கடையின் மண்ணையும் எடுக்கும் விஷயம்.

*(2) 1856*

சர்காரின் வண்டிகளையும் சில சாமான்களையும் ஏலம் போடுகிற விஷயம்.

*(3) 1856*

மா. தராயீ சாயேப்பும்[178] அமணி வகையறா 8 பாயிசாப்பும் அவர்களுடைய இஷ்டப்படி சுகமாக, தனித்தனியாக[179] இருக்கும் விஷயமாக ஏற்பாடு செய்வது என்று.

*(4) 1856*

கச்சேரியின் கணக்குகளைத் தமிழில் அல்லது ஹிந்தவியி[180]லாவது எழுதுகிற விஷயம்.

*(5) 1856*

ஆஸ்பத்திரியில் தென்னண்டையில் மேலுள்ள ஜன்னலைப் பழுது பார்க்கிறதென்ற விஷயம்.

ஆஸ்பத்திரி வித்து முதல் - சில விவஸ்தையைக் கண்டு டாக்டர்[181] அவர்கள் எழுதிய கடிதத்தை ஆதாரத்துடன் வைக்கிறது.

---

177. இவர் இரண்டாம் சிவாஜி காலத்தில் சர்க்கேல் ஆக இருந்தவர். (பக். 87).

178. சிவாஜி 1852இல் ஒரேநாளில் 17பேரைத் திருமணம் செய்துகொண்டார். அவர்களின் ஒருவர் தராயி. (பக். 34).

179. சிவாஜி இறந்தபொழுது 17 பேரில் இருவர் இறந்து விட்டனர். எஞ்சிய 15 பேருள் ஏழுபேர் மாமியாருடன் சதர்மாடியில் இருந்தனர்; எஞ்சிய எண்மர் ராம்மாடியில் இருந்தனர். இங்ஙனம் பிரிந்த எண்மருள் ஒருவர் இங்குக் குறிக்கப்பெற்ற "தராயி" என்பவர். இவர்கள் எண்மரும் எழுவருமாகப் பிரிந்துறைவதையே "இஷ்டப்படி சுகமாகத்தனித்தனியாக" என்பது குறிக்கும். (பக். 34, 35).

180. ஹிந்தவி - மராட்டியமொழி

181. வில்லியம் ரௌஸ் என்று ஒரு வைத்தியர் 1854இல் இருந்ததாகக் குறிக்கப் பெறுகிறார். இக்குறிப்பு எழுதப்பட்ட காலமாகிய 1856இலும் அவரே வைத்தியராக இருந்திருக்கலாம். (பக். 288).

*31-1856*

*(1) ஹுஜூரிலுள்ள[182] நகைகளின் ஜாபிதாவைத் தஸ்தாவேஜு கச்சேரியில் வைத்துக் கொண்டு நகலைத் தங்கள் கையொப்பத்துடன் அனுப்புகிறது.*

நகைகளின் ஜாபிதா

பாத்திரங்கள் வகையறா, ருத்திராக்ஷத்தின் நகை, தானஞ்செய்யும் நகை, ஆங்கிலேய நகை துலுக்கு நகை, ஸ்வாமியின் மூர்த்தி ஆயுதங்கள் வகையறா, மாட்டின் நகை, மயிலின் நகை, பொம்மையின் நகை, பக்ஷிகளின் நகை ஸ்வாமியின் உபசாரத்தின் நகை, சூத்திரச்சியின் நகை குஜராத்தியின் நகை, நாயின் நகை, சில்லறை - பெண்கள் குழந்தைகளின் நகைகள்.

*32-1856*

*(1) பழைய சிவகங்கையின் தண்ணீர் வீணாகப் போகாமல் செய்கிறது. அங்குள்ள தளவாடங்களை வரவழைத்துக் கொள்ளுகிறது.*

வடவாற்றின்[183] பாலத்தின் கண்ணை அடைக்கிற தென்றும்.

*33. 1856*

*(1) மா. புதிய பாயி சாப்[184] அவர்களைக் காணவரும் உறவினர்கள் வகையறா சர்காரில் தெரிவித்துவிட்டுப் போகவேண்டுமென்று.*

*34-1856*

*(1) கொத்தவால்[185] நடந்துகொள்ளவேண்டிய விஷயம். நியாயஞ்செய்யும் கட்கோ தியாகராஜ அவர்கள் கோட்டையில் போலீஸ் அதிகாரத்தில் நடந்து வருகிற வேலையில் ஏதாவது நஷ்டம் (கம்மி) ஏற்பட்டால் எதனால் உண்டாயிற்று என்று தெரியாமலிருக்கிறது. அதனால் கொத்தவால் செய்ய வேண்டிய வேலைகளின்னவை என்று ஒரு ஏற்பாடு. ஆனால் அதில் ஏதாவது குறைவு ஏற்பட்டால் அதற்கு அவரைப் பாத்தியஸ்தராகச் செய்யத் தகுந்த காரணங்களிருக்குமென்கிற தாத்பர்யத்தினால் இதனடியில் கண்ட ஏற்பாடு செய்ய வேண்டியிருக்கிறது.*

*அவை யாதென்றால்:-*

*(1) நீங்கள் கொத்தவாலுக்கு உத்திரவிடுவதைக் கட்டளையில் மூலமும், அதற்குக் கொத்தவால் சொல்லும் பதிலை மனுவின் மூலமும் தெரிவிக்க வேணும்.*

*(2) கொத்தவாலுடைய பயம் சேவகனுக்குமிருக்கும்படி கொத்தவால் அபராதம் விதிக்கும் அதிகாரம் கொத்தவாலுக்கு இருக்க வேண்டிய தவசியமானதால் கொத்தவால் ஒரு*

---

182. ஹுஜூர் என்பது சமஸ்தான அலுவலகம் என்று இங்குப் பொருள்படும்.

183. வடவாறு - தஞ்சைக்கும் கரந்தைக்கும் இடையிலுள்ள ஆறு.

184. புதியபாயி சாயபுகள் - சிவாஜி ஒரே நாளில் திருமணம் செய்துகொண்டவர்களில் சிவாஜிக்கு முன்னரே இறந்த இருவர் போக எஞ்சிய பதினைவர். (பக். 34).

185. கொத்தவால் - கோட்டைக் காவல் அதிகாரம் உடையவர் (பக். 75).

சேவகனுக்கு 15 நாட்களின் சம்பளம் வரையில் அபராதம் விதிக்கலாம். அதற்கும் அதிகம் அபராதம் விதிப்பதாயிருந்தால் அதைத் தங்களிடம்[186] தெரிவிக்க வேணும்.

*34-1856*

(3) ஸேவகன் வேலையில் தவறினால் கொத்தவால்அவனிடமுள்ள தஸ்தாவேஜை எழுதி வாங்கிக்கொண்டு அபராதம் விதிக்கலாம்.

(4) திருட்டு சங்கதி ஏதாவது கொத்தவாலிடம் வந்தால் திருடினானென்று பிராது யாருடைய பேரில் செய்யப்பட்டிருக்கிறதோ அவனிடமிருந்து மட்டும் தஸ்தாவேஜை எழுதி வாங்கிக் கொண்டு அதனுடன் அதில் சம்பந்தப்பட்ட எல்லோரையும் தங்களிடம் அனுப்ப வேணும். எழுதிக் கொடுக்க ஆக்ஷேபித்தால் அவர்களையும் அப்படியே.

(5) தாணாக்காரனை[187] கொத்தவால் மாற்றினால் ஏன் எதற்காக என்று தங்களுக்கு[188] உடனுக்குடன் தெரிவிக்க வேண்டியது.

(6) நகரம் சுத்தமாகப் பாதுகாக்க வேண்டிய வேலை, கொத்தவாலும், நகரசுத்தி மஹால்தார்களும்[189] சேர்ந்து செய்ய வேண்டியதாகையால் இராஜ வீதிகளின் சாக்கடைகளும், அலங்கத்தின் தெருவின் சாக்கடைகளும், சுத்தமாக இருக்கிறதாவென்று சுற்றிப் பார்த்து, கொத்தவால் தங்களிடம் தெரிவிக்க வேணும். அது சரிதானாவென்று நீங்களும்[190] சுற்றிப் பார்க்க வேணும். சின்ன சாக்கடையின் மண்ணைக் கொத்தவால் எடுக்கச்சொன்னதைக் கோட்டைக்கு வெளியே கொண்டுபோய்ப் போடவேண்டியதற்கு ஜாக்கிரதை ஆகிறதாவென்று பார்க்க வேணும்.

(7) கோட்டைக்கு வெளியே லயனின் தெருக்களில் யாராவது குப்பை வகையறாவை எறிந்து, அதை எடுக்கும்படி கொத்தவால் சொல்லி, அவர்கள் எடுக்காமல் போனால் அல்லது அடிக்கடி எறிந்தாலும் அவர்களைக் கொத்தவால் தங்களிடம் கொண்டு ஆஜர் செய்ய வேண்டும். அவர்களுக்கு நீங்கள் தகுந்தபடி கண்டிக்க வேணும்.

(8) சூதாட்டம் வகையறா விளையாடுகிறதைத் தடைசெய்வது கொத்தவாலுக்குச் சேர்ந்ததினால் அப்பேர்ப்பட்ட ஜனங்களிடமிருந்து கொத்தவால் எழுதி வாங்கிக்கொண்டு அபராதம் போடுவதாயிருந்தாலும் அவர்களைத் தங்களிடம் அனுப்ப வேண்டும்.

(9) திருட்டு . . . போகாமலிருக்கும்படிக்கு நீங்கள் விலேதார் ஆத்மனாத கோவிந்தனுக்கும், கொத்தவாலும், கோட்டையிலும், கோட்டைக்கு வெளியில் லயனிலும் ரோந்து சுற்றுவதற்கு ஒரு . . ஏற்பாடு செய்து அதன்படி ஜாக்கிரதை செய்கிறது.

186. தங்களிடம் என்றது கட்கோ தியாகராஜா அவர்களை; இவர் நியாயம் செய்யும் அதிகாரி.

187. தாணாக்காரன் - காவல்காரன்

188. தங்களுக்கு என்றது மேற்கண்ட தியாகராஜாவுக்கு

189. நகரசுத்திமகால் - நகரத்தைச் சுத்தம்செய்யும் வேலையைக் கவனிப்பவர்.

190. நீங்களும் என்றது மேற்கண்ட தியாகராஜாவை

*34 1856*

*(10)* நகரத்தைப் பரிசுத்தமாக வைக்க வேண்டிய வேலை போலீஸாருடையதும், நகர மஹால்[191] காரருடையவும் ஆனதால் கீழ்க்கண்டபடி சுத்தஞ் செய்யும் வேலைக்கு வண்டிகள் 25- ஒட்டன்[192] 8 பையன்கள் - 8 ஆள் 5- பெண்கள் 13.

இந்தப்படி இருந்தாக வேணும் என்று தெரிகிறதால் -அந்தப்படி நியமிக்கிறது. அதற்கு இப்பொழுது இருக்கும் வண்டிகள், ஆள்கள் வகையறா போக இன்னும் தங்களுக்கு ஏதாவது வேண்டியிருக்கிறதைத் தெரிவித்தால் அந்தப்படிக்குக் கொடுக்கப்படும். இந்த வேலைக்குக் கொத்தவாலை ஜவாப்தாரியாகச் செய்து மேற்சொன்னபடி வண்டிகளையும், ஆட்களையும் கொத்தவாலின் வசம்விட்டு அவைகளுக்குத் தினந்தோறும் சகாயம் செய்து ஜாக்கிரதை செய்கிறது.

இதுவரையிலும் நடந்து வந்த வழக்கப்படி சின்ன சாக்கடை வகையறாவின் மண்ணைக் கொத்தவால் எடுக்கச் செய்து, ஜாக்கிரதை செய்யவேணும். அப்படி செய்வதற்கு வீட்டுக்காரர்கள் யாராவது ஆக்ஷேபித்தால் அந்தந்த வீட்டுக்காரர்களைக் கொத்தவால் கண்டித்து ஜாக்கிரதை செய்யலாம். அவ்வேலையில் ஏதாவது குறைவு ஏற்பட்டால் அஜாக்கிரதை எவருடையதோ அவரைக் கண்டிக்கவேணும். மேலும் மேல் நீங்கள் பார்த்து வரவேணும். சுற்றிப் பார்த்துக் கொண்டுமிருக்கவேணும்.

*பிப் 15வ 1856* (கையொ) நீலகண்டராவ் ஆனந்தராவ்ஜாதவ்.
ஸர்கேல் வேலை பார்க்கிறவர்.

*35.1856*
தருமஸபைக்கு[193] எழுதியது

*(1)* இரட்டிப்புத் தண்டனை *Deposit* க்கு நகைகளைக் கொண்டுவந்து வைக்கிறார்கள். அதற்குப் பதிலாக ரொக்கம் துகையைக் கொண்டு வந்து கொடுத்து, விசாரணை செய்ய வேணுமென்று, நியாயதிபதிக்கு எழுதிய கடிதத்தின் நகலை அனுப்பியிருக்கிறது.

*(2) 1856*
10 பணத்திற்குக் குறைவான துகை வியாஜ்யத்திற்கு முத்திரைக் கடுதாசியில் கொடுக்க வேண்டியதில்லை.

*38.1856*
*(2)* மேல வீதியிலிருக்கும் சர்காரின் வீட்டில் புதிய பள்ளிக்கூடம் வைப்பதற்கு ரோஜஸ் என்னும் வாத்தியார் வகையறாக்களுக்கு அதிகச் சம்பளம் செய்துகொடுக்கும் விஷயம்

191. நகரமஹால் என்றது நகரசுத்தி மகால்

192. ஒட்டன் - மண்வேலைசெய்பவன்

193. தருமஸபை - தஞ்சையில் 1800 முதல் இருந்த நான்கு நீதிமன்றங்களில் ஒன்று.(பக். 168–169).

# மூட்டை எண் 127-C

கல்லணை விஷயம்[194]

*31.1830*
சாராயம் ஜவாப்தாரி துகையின் ஜாபிதா.

*13. 1845*
தருமஸபை, முத்திரித ஸபை[195] இவைகளின் வேலை

*29. 1798*
முத்துக் குளிப்பின் துகை வந்தால் நல்லதாயிற்று

முத்துக்குப் பதிலாகத் துகையை வரவழைப்பதற்குக் கௌனர்களுக்குப் பேஸஜி[196] கடிதம் எழுதினதற்குப் பதில் வரவில்லையே என்று ரா. நாகோபாவுக்குச் சொல்லி இன்னுமொரு கடிதத்தைக் கௌனருக்கு அனுப்புகிறது.

*15-1844*
(1) உத்திராதிமடத்திலிருந்து[197] ஸ்ரீமுகம்[198] வந்ததற்குத் தக்ஷிணை சக்.12 1/2. யுத்த[199] வெடிமருந்தின் பூஜை போடுவதற்கு 1/8 பணம்.

*(2) 1844*
மகம்மது பீர் அவலியாவின் தெக்காவின்[200] விஷயம்

*(3) 1844*
கொடமுருட்டி நதியின்[201] பாலங்கட்டுவதற்குச் சிலவு சக்.3000

*40.1814*
(1) காகிதத்தின் வியாபார விஷயம் பற்றி

<u>காகிதம் குட்டி வீரபத்திரன் எழுதிக்கொண்ட மனு என்னவென்றால்:-</u>

---

194. கல்லணை விஷயம் ஒன்றும் எழுதப்படவில்லை.

195. முத்திரிதஸபை - தஞ்சையில் 1800 முதல் இருந்த நான்கு நீதிமன்றங்களில் ஒன்று (பக். 168-169)

196. பேஸஜி - அரசன்; இரண்டாம் சிவாஜியாகலாம்

197. உத்திராதிமடம் - கும்பகோணத்தில் இப்பெயரால் மடமுளது

198. ஸ்ரீமுகம் – அரசர், ஞானாசிரியர் போன்றவர்கள் எழுதும் கடிதம்.

199. யுத்தசாலை - ஜிராத்கானா. (பக். 445).

200. தெக்கால் - தைக்கா-பக்கிரிகள் தங்குமிடம்

201. தஞ்சையிலிலின்று திருவையாற்றுக்குப் போகும் பாதையில் நான்கு பாலங்களைச் சிவாஜி ரூ.71,000 செலவில் கட்டுவித்தார்; அந்நான்கனுள் குடமுருட்டி பாலம் ஒன்றாகும். (பக். 470).

ஸேவகன் மன்னார்குடி, கும்பகோணம், பந்தநல்லூர்[202], திருக்காட்டுப்பள்ளி, திருவாரூர் இந்த ஐந்து ஊர்களிலும், காகிதப் பட்டையின் சாவடிகள் 19 பங்குகள், 21 விதமான காகிதங்களைத் தயார் செய்து, சர்காருக்கும் கும்பனிக்கும் வேண்டிய காகிதங்களை எல்லாம் கொடுத்து, துகையைப் பெற்றுக்கொண்டு வீதப்படி பங்கு போட்டுக் கொள்ளுகிறது. இந்தப்படி வழக்கம். இவர்களில் கஷ்டத்தினால் தன்னுடைய பங்கை விற்க வேண்டியிருந்தால் பரம்பரையாகக் காகிதத்தின் விற்பனை செய்கிறவர்களுக்கே 21 பங்காளியைச் சேர்ந்தவர்களில் யாருக்கு வாங்கச் சக்தி யிருக்கிறதோ அவருக்கே கொடுக்க வேணும். பிறத்தியில் விற்கக் கூடாது.

இப்படி நெடுநாளாக வழக்கம் நடந்து வருகிறது. இப்படியிருக்கையில் ஸேவகனிடம் கூலிக்கு வேலை செய்கிறவனும் தேங்காய் வியாபாரியுமான இராமசாமி என்பவன் கும்பகோணத்தில் தனிமையான காகிதப் பட்டையை ஏற்படுத்தி காகிதம் விற்பனை செய்து வருகிறான். பேளஜீ வழக்கப்படி நடக்காமல் ஸேவகனைத் தவிர பிறர் காகிதத்தின் விற்பனை செய்வதால் நாமெல்லோருஞ் சேர்ந்து காகிதத்தின் வியாபாரத்தை விட்டுவிட வேண்டுமென்று இருக்கிறோம்.

தற்போது அநேகம் பேர்கள் காகித வியாபாரத்தை நிறுத்திவிட்டால் ஸர்காருக்கும் கும்பனி கச்சேரிக்கும் காகிதமின்றி புகார் ஆகும்.

இதற்காக ரா. மகாராஜா சாஹேப்[203] மனமூர்ந்து கலெக்டர்[204] சாயேப்புக்கு எழுதியனுப்பி நம்முடைய வழக்கப்படி நடக்கும்படி உத்திரவு செய்யும்படி உத்திரவிட வேண்டும்.

*36. 1830*
*(1)* கணபதி அக்கிரஹாரத்தின் வாய்க்காலைக் கட்ட வேணுமென்று.

*(2) 1830*
நாஞ்சிக்கோட்டை எல்லையில் மதகு கட்ட

*(3) 1830*
அகண்ட காவேரி மராமத்து பாபத்துக்கு லயனிலுள்ள 18 கிராமங்களின் ஜனங்கள் வீதப்படி கொடுக்க வேணும்.

*(4) 1830*
கல்லணையின் சங்கதி

காவேரி கல்லணை பழைய வேலை நீளம் 30 கெஜம்-அகலம் 15 கெஜம் இடித்ததென்ற சங்கதி பிரின்ஸிபால் கலெக்டருக்கு[205] வந்தது. அச்சங்கதிக்குக் கேட்டுக் கொண்டதாவது,

202. பந்தணை நல்லூர் என்ற ஊருக்கருகே 'காகிதப்பட்டறை' என்ற ஊருள்ளது.

203. மகாராஜா என்றது இரண்டாம் சரபோஜியை

204. கி.பி.1814இல் கலெக்டர் யார் என்று தெரியவில்லை

205. கி.பி.1830இல் கலெக்டர் மிஸ்தர் கிண்டர்ஸ்லி ஆவர். (பக். 71).

தற்போது நேற்று அணைக்கரையின்[206] பேஷ்கார்[207] வகையறாக்கள் எழுதிய மனுக்கள் சிவில் இஞ்சினியர் ப்ரேபர் சாஹேப் அவர்கள் மராமத்து நடக்கும் இடத்தைப் பார்த்துச் சொன்னதாவது-

தினம் 500 ஆட்கள் வேலை செய்து பழைய மராமத்தில் கற்களை உடைத்து எடுப்பதில் 10 நாட்களாகியும் கொஞ்சங்கூட வேலை ஆவது சிரமமாயிருக்கிறது. 1000ரூபாய் வரையில் செலவாயிருக்கிறது. அப்படி ஆனாலும் அவ்வேலை செய்வதால் பலவத்தரமான ஆபத்து இராஜ்யத்திற்கு நேரிடும் போலிருப்பதால் பழைய கட்டிடத்தின் வழிக்குப் போகாமலிருக்க வேணுமென்று மேலான இடித்த சில இடங்களை மறுபடியும் கட்டுவதென்றும், முன்னால் செய்த யோசனை வேண்டியதில்லை என்றும், கடுமையாக உத்திரவிட்டிருக்கிறார் என்று முக்ய கலெக்டர் சாயேப்புக்கு சங்கதி வந்து அவர் மிக்க சந்தோஷமடைந்தாரல்லாமலும் எல்லா ஜனங்களுக்கும் அளவில்லா சந்தோஷமுண்டாயிற்று, என்று சர்க்கேல் ரா. ராமோஜி சர்ஜேராவ் காட்கே[208] அவர்களுக்கு-கலெக்டர் கச்சேரியிலிருந்து சர்க்காருடைய சிரஸ்தேதார்[209] வெங்காஜி சாம்ஜீ தெரிவிக்கிறார்.

(5) 1830

காவேரி கல்லணை மராமத்து:

ப்ரேபரும்[210]- காடனும்[211] இவ்விரண்டு துரைகளுமிருந்து வேலை நடந்துகொண்டிருக்கிறது என்று அணைக்கரையில் வேலை பார்க்கும் டபேதார்[212] மனு எழுதியிருக்கிறான்.

மேலெழுதிய 30 கெஜம் நீளம், 10 கணவாய்[213] வைத்து, அதன்மேல் மூடு பாறையைப்போட்டு, அக்கணவாய் வழியாய்த் தண்ணீர் உள்ளாறில் போகும்படியாகவும் அத்துடன் மணலும் செல்லுமதனால் நதி பார்வையாகி, தண்ணீர் தாராளமாகக் கிழக்கே வரும் என்று யுக்தி

206. அணைக்கரை - காவிரியின் பெரிய அணை

207. பேஷ்கார் - நாட்டின் ஒரு பகுதியின் அரசிறை அதிகாரி:
"A Revenue Officer placed incharge of a division of Taluk and invested with the same authority as a Tahsildar" (Tamil Lexicon, Madras University)

208. ராமோஜி சர்ஜேராவ் காட்கே - இவர் இரண்டாம் சரபோஜி காலத்தில் சர்கேல் ஆக இருந்தவர். (பக். 85).

209. சிரஸ்தேதார் - மாவட்ட ஆட்சியர் அலுவலகம், வட்டாட்சியர் அலுவலகம், நீதிமன்றம் ஆகியவற்றுள் அலுவலர்கட்குத் தலைவரான அதிகாரி.

210. ப்ரேபர் - இவர் பொறியாளர் (இஞ்சினியர்) என்று மேலே கூறப்பட்டுள்ளது

211. காடன் என்பவரும் பொறியாளர் போலும்

212. டபேதார் - தலைமைச் சேவகன்

213. கணவாய் - வழி

செய்து 1000 ரூபாய் (மதிப்பு) எஸ்டிமேட் போட்டு வேலை நடக்கிறது. இது வரையில் ரூ. 7000 வரையில் சிலவாயிருக்கிறது என்று ஸர்கேலுக்கு சர்கார் சிரஸ்தேதார் தெரிவிக்கிறார்

*(6) 1830*

அணைக்கரை காவேரி கல்லணை இடித்த வேலையை நிறுத்துகிறதென்று ப்ரேபர்-இஞ்சீனியர் சாயேப் உத்திரவிட்டதைக் கலெக்டருக்குத் தெரிந்து, கலெக்டர் சாயேப் அணைக்கரைக்குச் சென்றிருந்தார். ஷெ சிவில் இஞ்சீனியர் சாயேப் அங்கிருந்தார். இருவரும் யோசித்து முன்னால் தீர்மானித்தப்படி 10 கணவாய்களை வைத்து வேலையை நடத்துகிறது. ஆனால் சென்னையிலிருந்து உத்திரவு வராமல் நாம் வேலையை நிறுத்தக்கூடாது என்றுமறுபடியும் வேலையை ஆரம்பிப்பதற்கு உத்திரவிட்டார். ஆனாலும் அவ்வேலையைச் செய்தால் நிறுத்த முடியாதென்று அதற்குள்ள மிகக் கெடுதிகளையும் எழுதி ஒரு கடிதம் தயார் செய்து ஷெவேலைக்கு 8 நாட்களில் பதில் வரவேணுமென்றும் எழுதியிருக்கிறாராம். இன்னும் உத்திரவு வரவில்லை. மறுபடியும் வேலை நடந்து கொண்டிருக்கிறதென்று ஸர்கேலுக்கு சிரஸ்தேதார்[214] தெரிவிக்கிறார்.

*36.1830*

(7) சீமை தேசத்தின் ஆங்கிலேய மன்னர்[215] ஜூன் மாதத்தில் பரலோகமடைந்ததால் நவம்பர் மீ 3உ முதல் துயரத்தோடிருக்க ஆரம்பிக்க வேணுமென்று கவர்னரவர்கள் உத்திரவிட்டிருக்கிறார்.

*(8) 1815*

திருவிடைமருதூரில்-தைப்பூசத்திற்கு[216] ஏராளமாக ஜனங்கள் வருவார்களாகையால் ஆற்றில் ஜலம்வரவேணுமாகையால் திருவையாறிலும், கணபதி அக்கிரஹாரத்திலுமுள்ள மதகை மூடி, தண்ணீர் தாராளமாகக் கிழக்கே பிரவாகம் வரும்படிக்குச் செய்ய உத்திரவு.

*(9) 1815*

...வேண்டுமென்கிறார் என்ற இடத்தில் வேண்டாமென்கிறார் என்று துரையானவர் கைத்தவறுதலால் அசல் கடிதத்தை எழுதிக் குடுத்தார். அதனுடைய நகலை எழுதுகிற எழுத்தாளன் தனக்கு அதன் அர்த்தம் புரியாததினால் இருக்கிறபடி நகலை எழுதினான். எழுதிய கடிதத்தைப் பார்க்காமல் கையெழுத்து போடுகிறது துரையின் வழக்கமாகையால் அதன்படி கையெழுத்துமாகி, தபாலிலும் அனுப்பப்பட்டது.

இன்று நான் கச்சேரிக்குச் சென்றபொழுது, அந்த அஸ்ஸல் கடிதத்தை ரகுபதிராயரிடமிருந்து படித்துப் பார்த்ததில் வேண்டுமென்கிறாரென்னு மிடத்தில், வேண்டாமென்கிறாரென்று எழுதியதைப் பார்த்தேன். பின்பு ரகுபதிராயர் அக்கடிதத்தை எடுத்துக்கொண்டு துரையினிடம் சென்று தெரிவித்தார். நகல் எழுதுகிறவர் ஏன் நேற்றே பார்த்துத் திருத்தும்படி சொல்லக்கூடாது என்று அவன் பேரில் ஆத்திரங்கொண்டு அபராதம் விதித்தாரல்லாமல்,

214. சர்கேல் என்றது ராமோஜி சர்ஜேராவ் காட்கேயை; சிரஸ்தேதார் என்றது வெங்காஜி சாம்ஜியை.

215. 1830இல் இறந்த ஆங்கில மன்னர் நான்காம் ஜார்ஜு ஆவர் (பக். 355).

216. திருவிடைமருதூரில் தைப்பூசத்திருவிழா இந்நாளிலும் மிகச் சிறப்பாக நடைபெறுகிறது.

பின்பு அதற்கு யோசனை செய்தாராவது, கடையசியிலுள்ள 2 எழுத்துகளை மட்டும் திருத்தினால் பாக்கிக் கடிதம் சரிதானென்று சொல்லி, அதற்காகப் போர்டு செகரிடரி எவியெட் சாயேப்புக்குக் கடிதம் எழுதுவதாகச் சொன்னார். அதன்படி அவருடைய பெயரால் கடிதமெழுதி விலாஸத்தையும் எழுதி முத்திரையும் போட்டு அனுப்பினார். அந்தக் கடிதம் அந்தரங்கமானதல்ல. விலாஸத்தின் மேல் "சர்வீஸ்"[217] என்று எழுதி, தபால் கட்டணமில்லாமல் தன்னுடைய கையொப்பமும் போட்டு, தபாவில் அனுப்பியிருக்கிறார். இக்காரியம் மேல்மேல் நடக்க வேண்டியதாகையால் அற்பம் (நுட்பம்) என்று நினைக்கக்கூடாது போலிருப்பதால் இவ்விஷயமாக ரா. வெங்கடறாவும் சென்னையிலிருப்பதால் அவர் எங்கிருக்கிறாரென்று அறிந்து கொண்டு ஸர்கார் விஷயமாக ஜாக்கிரதை யாகும்படி செய்யவேணு மென்று ஸர்கேலுக்கு[218] சிரஸ்தேதார் எழுதுகிறார்.

*36.1830 Sep 15௳*
*The Honourable Major General Sri Hudson Love B.C.B Lieutenant Governor Of Ceylon.*

...கொளும்பு கவர்னர் சாயேப்-நேற்றுச்சாயங்காலம் இங்கு வந்து சேர்ந்தார். நாகப்பட்டிணத்திலிருந்து அவர் ஸந்நிதானத்தைக்[219] காண்பதற்காகத் தஞ்சாவூருக்குப் போகிறார். கவர்னரும் அவருடன் 3 உத்தியோகஸ்தர்களான துரைகளும் வருகிறார்கள். அவர்களுக்கு நீடாமங்கலத்தில் பல்லாக்குத் தூக்குகிறவர்களின் 3 ஜதை அங்கிருக்க வேணும். ...சாமான்களுக்காகக் காவடிக்காரர்கள் 10 பேர்கள் தயாரிக்கவேணும். பூண்டியில் 3 துரைகளும் அமரும்படியாக சாரட்[220]- 1, க்யார்கள்[221] -1, இவ்விரண்டுமிருந்தால் உடனே தஞ்சாவூருக்கு வருவார் என்று ஸர்கேலுக்கு[222] சிரஸ்தேதார் தெரிவிக்கிறார்.

*(11) 1830*
...சனிக்கிழமை காலையில் 9 மணிக்கு, தஞ்சாவூருக்கு வந்து சேர்ந்தார்கள். ஞாயிற்றுக்கிழமை 10 மணிக்கு ஹுஜுரைப் பார்ப்பதற்காகத் தயவு செய்து வந்தார். அவருக்காக 15 குண்டுகளைப் போட்டு *Tweed Sahib* சொன்னபடி தகுந்த மரியாதைகளெல்லாம் செய்யப்பட்டது. அந்த லெப்னல் கவர்னர்[223] அதிக மரியாதையுடனும் ஸந்தோஷத்துடனும் ஹுஜுரைப் பார்த்து, அன்று இங்கிருந்து 2ஆம் நாள் காலையில் சத்திரத்திற்குப் போய் ஒரு நாளிருந்து அங்கிருந்து

217. இந்நாளில் அஞ்சல் தலையில் "சர்வீஸ்" என்றுள்ளது; அந்நாளில் "சர்வீஸ்" என்று கையால் எழுதப்பெறும் வழக்கம் இருந்தமை பெறப்படுகிறது.

218. 1815இல் சர்க்கேலாக இருந்தவர் ராமோஜி ஸர்ஜேராவ் காட்கே ஆவர். (பக்.85)

219. சன்னிதானம் என்றது அரசரை; இரண்டாம் சரபொஜியை

220. சாரட் - குதிரை பூட்டிய வண்டி வகை.

221. கயார்கள்(?) - சாமான்களை ஏற்றிவருவதற்குரியது

222. 1830இல் சர்க்கேலாக இருந்தவர் ராமோஜி ஸர்ஜேராவ் காட்கே ஆவர். (பக். 85–86).

223. லெப்னல் கவர்னர் - மேஜர் ஜெனரல் சர் ஹட்ஸன்லோ என்பவர் ஆவர்.

புதுக்கோட்டைக்குச் சென்றார். அந்த சாயேப்புடைய பிரயாணத்திற்குச் சர்காரிலிருந்து செய்ய வேண்டிய ஜாக்கிரதைகளை முன்னதாகவே செய்யும்படி முக்கிய கலெக்டர்[224] சாயேப் நமக்குத் தங்களிடமிருந்து தெரிவித்த விஷயத்தில் நாம் அவருக்கு நன்றி காட்ட வேண்டும். நம்முடைய ஸலாமுடன் அவருக்குத் தெரிவிக்கிறது.

ஸர்கேல் பாபாஜீ ராமாஜீ[225].

*(12) 1830*

கவர்னரின்[226] குமாரர் ரெஸிடெண்ட்டாக தஞ்சாவூருக்கு வரப் போகிறார். மிலிடரியிலிருக்கும் குமாரர்தான் வரப்போகிறாரென்று ஸர்கேலுக்குச் சிரஸ்தேதார்.

*(13) 1830*

மனு-தஞ்சாவூர்-ஸர்காரின் பஞ்சாங்கம் கணிதம் ஜோஸி அவர்களுக்குக் கும்பனி மொயின் விஷயம் 8 ஜோஸ்யர்களில் வெங்கட்ராம் என்பவர் பரலோகமடைந்தாரென்று.

*(14) 1830*

திருவாரூர்- ஸ்ரீஸ்வாமி[227]யின் கோவிலில் ஸ்வாமியின் பூஜை நேரத்தில் சுத்த மத்தளம் வாசிக்கிறவன் குருக்களிடம் உபதேசம் பெற்று, சைவ தீக்ஷையைக் கொண்டு, அவனே பரம்பரா சுத்த மத்தளம் வாசிப்பது அந்த ஸ்தலத்தின் வழக்கம்.

இப்படியிருக்கையில் பங்குனி மாத முதற்கொண்டு கோவிலின் அமீனா வகையறாக்கள் அவனை வேலையிலிருந்து விலக்கி, குருக்களிடமிருந்து சைவதீக்ஷ உபதேசமில்லாத மேளக்காரனைக் கொண்டு சுத்த மத்தளம் வாசிக்கிறார்கள். ஆனால் அந்த ஸ்தலத்திற்கு ஆகம சாஸ்திரப்படி விரோதமாக இதுவரையிலும் நடவாத வேலை நடக்கிறது. அப்படி இல்லாமல் முன்போல் நடத்த வேணுமென்று.

*(15) 1822 July 19உ*

மனு சுப்பிரமணி சாஸ்திரி.

ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமியார் மடத்தில்[228] வியாஸ பூஜைக்கு[229], மடத்தில் பந்தல் போட்டு

224. 1830இல் கலெக்டராக இருந்தவர் மிஸ்தர் கிண்டர்ஸ்லி ஆவர் (பக். 71).

225. பாபாஜி ராமோஜி - சரபோஜி காசியாத்திரையாக 1820-22இல் சென்றபோது யாத்திரையில் உடனிருந்த சர்க்கேல் ஆவர்; பின்னரும் தஞ்சையில் சர்க்கேலாகத் திகழ்ந்துள்ளார். (பக். 86).

226. கவர்னர் - ஸ்டீபன் ரம்போர்டு லூஷிங்டன் ஆவர்

227. ஸ்ரீஸ்வாமி - தியாகராஜசுவாமி

228. இந்தக் காலக்கட்டத்தில் இருந்த சங்கராச்சாரியர், ஐந்தாவது சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி அவர்கள் ஆவர்; இவர்கள் காலம் 1814-1851. (பக். 453).

229. வியாஸ பூசை - வியாசர் என்பார், வேதங்களை வகுத்தவரும் பிரமசூத்திரம் பாரதம் பதினெண்புராணம் முதலியன இயற்றியவருமான முனிவர் ஆவர். பிராமணத்துறவிகள் சாதுர்மாஸ்யத் தொடக்கநாளாகிய ஆஷாட சுத்த பௌர்ணமி நாளில் (ஆடி மாதம் நிறைமதி நாளில்) வியாசருக்குப் பூசை செய்வர். இப்பூசை வியாசபூசை எனப்பெறும் (சாதுர்மாஸ்யமாவது நான்கு மாதங்கள் ஒரே இடத்தில் பிராமணத்துறவிகள் தங்கியிருப்பது; நான்கு மாதங்கட்குப்பதில் நான்கு பக்ஷம் தங்கியிருப்பதும் உண்டு; பக்ஷம் - 15 நாள்)

அலங்காரம் வகையறா செய்து கொடுக்கிறது. 12 தேவஸ்தானங்களிலிருந்து பிரஸாதம் வகையறா கொண்டு வருவது வழக்கம்.

தாசில்தார் வகையறாக்கள் வருவது இந்தப்படி நடப்பதற்கு உத்திரவாக வேணும்.

*16.1822 May 19உ*

சாலுவ நாயக்கன் பட்டணத்தில் கப்பலின் வேலைக்காக, சுரப்பின்னை மரங்கள் வேண்டியிருப்பதால் அம்மரங்களிருக்கும் இடங்களைத் தங்களுக்குத் தெரிவிக்கவும்,ஷ்டி மரங்களை வெட்டிச் சேகரம் செய்து கொண்டு வருவதற்காகவும் படகோட்டி மாரி அப்பாவைத் தங்களிடம் அனுப்பியிருக்கிறது. நாகப்பட்டிணம்-ஸர்கார்சிரஸ்தேதாருக்கு.

*17.1830 March 18உ*

கவர்னர் சாயேப்-ஹுஜுரைக் காண்பதற்குத் தஞ்சாவூருக்கு வந்தால் (ஒரு விவஸ்தை) ஏற்பாடு ஆகுமென்று மிஸ்தர் கிண்டர்ஸலி சாயேப் கலக்டெர் சொன்னாரென்று ஸர்கேலுக்கு சிரஸ்தேதார் எழுதுகிறார்.

*18-1830*

முகாம்-வல்லம்—சென்னையிலிருந்து வினேரிபிள்[230] அர்ச்சீ டிங்கேன் என்னும் பெரிய பாதரியானவர் ஜனவரி 30உ நாகப்பட்டணம், தஞ்சாவூர், திருச்சினாப்பள்ளி முதலிய இடங்களுக்கு வருவாரென்று தாசீல்தார் வகையறா ஜனங்களுக்கு உத்திரவு எழுதி கலக்டெரிடம்[231] வந்து இருக்கிறதென்று விஷயத்தைச் சிரஸ்தேதார் ஸர்கேலுக்குத் தெரிவிக்கிறார்.

*19-1830 July 22உ*

கலெக்டர் அவர்கள் என்னைச் சாகுபடி விஷயமாகக் கேட்ட கேள்விகளுக்கு நான்[232] கொடுத்த பதில்:-

காவேரியில் ஒன்றரை முழம் தண்ணீரிருக்கிறது. குடமுருட்டி நதியிலும் ஷ்டிபிரிவு மூடிகொண்டான் ஆற்றிலும் மாத்திரம் தண்ணீர் நீந்தும்படியாக ஓடுகிறது. இந்த ஸமஸ்தானத்தினால் ஆறுவெட்டு என்னும் வேலை முன்காலத்தில் ஆய்க்கொண்டிருந்தது. ஜப்திக்குப் பிறகு[233] ஆறுவெட்டு மேஸ்தரிக்குச் சாயேப் அவர்கள் முழு மராமத்து செய்தார். பிறகு கண்டு முதலான பின்னர் கொஞ்சம் கொஞ்சம் நடந்து வந்தது. சமீபத்தில் கொஞ்சங்கூட இல்லாமல் நின்றுவிட்டது.

காவேரி; ஆறு மாயவரம் வகையுறா இடங்களில் நிலம் மட்டத்துக்குச் சரியாக ஓடுகிறது. கேள்விமுறை இல்லாமல் போய்விட்டதென்றேன்.

---

230. வினேரிபிள் - (Honourable) - மரியாதைக்குரிய

231. கலக்டர் - கிண்டர்ஸ்லீ

232. நான் என்றது சிரஸ்தேதாரைக் குறிக்கும்.

233. "ஜப்தி"என்றதுசரபோஜியோடு கும்பினியார் உடன்படிக்கை செய்துகொண்டுநாட்டாட்சியுரிமையைப்பெற்றமையாகும்.

இஞ்சனீயர் சாயேப் அதைப் பார்க்க வேணுமென்றார். கலெக்டர் உத்யோகம் செய்கிறவருக்குப் பாத்தியமில்லாமல் போனதால் இப்படி ஆயிற்று என்றேன். இப்பொழுதிருக்கும் நிலமையைப் பார்க்க ஆடி மாதம் பிறந்ததும் பூர்ண பிரவாஹம் வராமலிருக்கிறது.

கலெக்டரவர்கள் சாகுபடி வேலைக்கு ஜாக்கிரதை செய்யவேணும். ஸமஸ்தானத்தை விட்டுவிட்டு, கோடிக்கரை என்னும் மூலையில் போய் உட்கார்ந்திருக்கிறார்- இன்னும் கொஞ்சகாலத்தில் ஜனங்களுக்குச் சாகுபடி என்னும் உழும் வேலை என்கிறசிரமம் இல்லாமல்போய், கருவை மரங்கள் தானாகவே முளைக்குமென்று சொன்னேன். முக்ய கலெக்டரின் ஜாக்கிரதையின் மேல் தெரியவருகிறது என்று ஸர்கேலுக்கு சிரஸ்தேதார் தெரிவிக்கிறார்.

*20-1830 Nov. 7௳*
ரெஸிடெண்ட் பைப்[234] சாயேப் கப்பலேறிப் போகவில்லை என்று கலெக்டர் சொன்னாரென்று ஸர்கேலுக்கு-ஸிரஸ்தேதார்.

*21-1830Sep. 14 ௳*
பாளையம்பட்டு விஷயத்தை (வரலாறை) கலெக்டரவர்கள் கேட்டதற்குத் தெரிவித்தேன் என்று ஸர்கேலுக்கு-சிரஸ்தேதார் தெரிவிக்கிறார்.

பாளையம்பட்டு[235] விபரம்

*முக்ய கலெக்டர் கிண்டர்ஸலி சாயேப் கேட்டதாவது:-பாளயம்பட்டு என்று 13 இருக்கிறதே. அவையெல்லாம் முற்கால முதற்கொண்டி ருக்கிறதா? அப்படி அல்ல* கைலாசவாசீ ம. கா. ஸ்ரீ.ஸ்ரீ. பிரதாபசிம்ம ராஜா காலத்தில்-ஸர்கேல்-நானாஜி ஜகதாப் என்றிருந்தார். அவரால் தென்தேசத்தை ஸாதித்தார். பிறகு அப்பக்கத்திலுள்ளவர்கள் கள்ளர்கள். அவர்களுடைய சச்சரவு சம்பவிக்காமலிருக்கும்படி பட்டுக் கோட்டையில் குதிரைச்சிப்பாய்களை வைத்து ஜாக்கிரதை செய்திருந்தார். அதற்கும் அப்புறம் ரொம்பதூரம் இராஜ்யமிருப்பதால் அங்கே சிலருக்குப் பாளையம்பட்டு என்று செய்துகொடுத்து வைத்தார்

*எத்தனைக் காலமாயிற்று?* ஜப்திக்கு[236] முன் 40, 50 வருஷத்திற்கு முன்னாலிருக்கலாம்.

*இந்தப் பாளையக்காரர் அந்தப் பூமியின் அனுபோகஸ்தர்களா?*
அப்படி கொஞ்சம் பேரிருக்கலாம். ஸர்காரில் யோக்கியமான கத்தி வேலையைத் தெரிந்தவர்களையும் பார்த்துப் புதிதாயும் நியமித்திருக்கிறார் போலிருக்கிறது.

*அவர்களை நியமிக்கும் போது என்ன ஒப்பந்தம்?*

---

234. ஜான்:பைப்

235. பாளையப்பட்டு—அரசனுக்கு உரிய காலங்களில் உதவ வேண்டும் என்ற நிபந்தனையுடன் பாளையக்காரருக்கு விடப்பட்ட ஊர்த்தொகுதி.

236. ஜப்தி - என்றது சரபோஜி வெள்ளையர்க்கு வரி வசூல் செய்ய விட்டுக்கொடுத்தது

அவரவர்களுக்கு இன்னஊர்களென்றுகரார்செய்து அதில் வரும் வருமானத்தில் ஸர்காருக்கு இன்னபாகத்தைக் கொடுப்பதென்றும் அதைத்தவிர, இன்னார் வேலைக்காரர்களை வைத்துக்கொள்வதென்றும், அதில் சில பேர்கள் ஸர்கார் அரண்மனையில் வேலைசெய்து வருகிறதென்றும் பாக்கிபேர் பாளையக்காரனிடமிருக்கிறதென்றும், முன்னால் வேலை ஏதாவது இருந்தால் ஜனங்களுடன் பாளையக்காரன் வேலைபார்க்க வேணுமென்றும் அவரவர்களிடம் அர்ஜி ரோகாக்களை[237] எழுதி வாங்கி உத்திரவிட்டிருக்கிறார் என்றேன்.

*அதன்படி நடந்து வருகிறதா?*
ஜப்திக்குப் பின்னில்லை என்றேன். கேட்டுக்கொண்டு மௌனமாக இருந்தார்.

இக்காரியம் இத்தனை நாள் விசாரிக்காமல் விசாரிக்கிறீர்களே என்ன காரணமென்றேன்.போர்டிலிருந்து கடிதம் வந்திருக்கிறது. அதில் நான் தங்களைக் கேட்ட கேள்வி பதில்களிருப்பதால், நீங்கள் கும்பனியில் வெகுகாலமாய் ஸர்காரில் வேலையிலிருந்தீர்களல்லவா? இருந்தேன்.

ஸர்காரின் சங்கதிகள் உமக்குத் தெரிந்திருக்கலாம் என்று கேட்டேன் என்றார். மேஸ்தர் ஹேப்ரன் சாயேப் அவர்கள் கலெக்டராக இருக்கும்பொழுது போர்டின் கடிதம் இந்தமாதிரி வந்து ஸர்காரிலிருந்து சில ஆதாரங்களைக் கொண்டு வந்து பார்த்துப் போர்டுக்கு ஷி சாயேப் எழுதியிருக்கிறார். அதை ரிகார்டில் பார்க்கலாம். தெரியவரலாம் என்றேன்.

## மூட்டை எண். 128-C

*(டபீர் பண்டிதர்[238] கிராமம்)*

*1. 1777*
*சம்பா அரிசி பணத்திற்கு 3 1/4 படி*

*4. 1777*
*(1). ரா. மகாராஜா[239] சாஹேப் அவர்களுக்கு ஹஜரத் சாயேப் தோட்டத்[240]திலுள்ள குளத்தின் ஜலத்தை அனுப்பித்த வகையில் சிலவு சக். 6-9 பணம்.*

*(2) 1777*
*திருவையாரில் திவான்வாடா[241] பழுதுபார்க்கத் தளவாடம் சிலவு*

237. அர்ஜு - விண்ணப்பம்; ரோகா-அரசாங்க உத்தரவு

238. டபீர் பண்டிதர்; இவர் பிரதாபசிங்கர் காலத்தில் இருந்த அமைச்சர் ஆவார். இவருக்கு டபீர் நரோ பண்டிதர் என்பது பெயர். டபீர் என்ற சொற்குச் செயலர் என்று பொருள். (பக். 77-78).

239. மகாராஜா என்றது பிரதாப சிங்கரின் மகன் துளஜாவை; இவர் 1765 முதல் 1787 வரை ஆட்சிபுரிந்தவர்.

240. ஹஜரத் சாயேப் தோட்டம் (ஹஜரத்-சிறந்தோன்)

241. திவான்வாடா - அரசரது அரண்மனை

ரா. பாவா ஸ்வாமியாருடைய படித்துறைக்குத் தடவ சுண்ணாம்பு 3 பணம், இரும்பு 5 பணம் ரா. பாவா ஸ்வாமியார் படித்துறையின் சௌகண்டிக்கு[242] ஊஞ்சலுக்குக் கொக்கி செய்வதற்கு புஷ்யமண்டபத்தில்[243] எத்துக்கடியின்[244] கதவைப் பழுதுபார்க்க 5 பணம்.

5. 1783

(1) நகல்-அப்பாசாமி செக்கின் திருமங்கலக்குடி ஸேவகன்-ஹைதருடைய காலத்தில்[245] வேலை பார்த்ததற்காக ஸர்காருக்கு வரும்படி கட்டுக் காணிக்கை[246] கொடுப்பதாக ஒப்புக் கொண்டது ரூ. 100

14•1777

(1) பந்தர் நாகூர்

மாஜி கமாவிஸிதார் கனகசபை பிள்ளையின் ஜவ்வாது பூனையை ஸர்காருக்கு அனுப்பித்ததற்குக் கூலி-சக். 2-பணம் 4

(2) 1777

அதிம் ஹத்பீ மரக்காயருடைய[247] கப்பலுக்கு 50 முத்திரைகள் போடப்பட்டிருந்ததை ஸர்காரின் உத்திரவன்னியில் உடைத்ததாலும், இதைத்தவிர துறைமுகத்தின் தளவாருக்கு[248] அடித்ததினாலும் அபராதம் சக்.25-2 பணம்.

(3) 1777

ராவூத் நைநான் மொகலாயத்தில் ஏற்றுமதிச் சரக்குகளை வாங்கிக் கொண்டு போனதில் தற்போது அவனிடமிருந்து வேற்றுமை வந்ததினால் தனிப்பட்டதாக வாங்கினது வராகன் 1 1/4க்கு சக். 2-6 1/4 ப[249]

(4) 1777

காதர்கட் மரக்காயாரின் கப்பலுக்குப் பட்டணச்சேரியின் முத்தியான் உத்திரவின்றி கட்டுமரத்தை விட்டதினால் அபராதம் வாங்கினது சக். 2-4 ப.

(5) 1777

சந்தனாதி அத்தர் 2 குப்பிக்கு வாங்கினதற்குச் சக்.4-2ப.

---

242. சௌகண்டி - சவுக்கண்டி - தோப்பில் கட்டப்படும் சவுக்கை; சவுக்கயாவது சதுரத்திண்ணைக்கொட்டகை

243. புஷ்யமண்டபம் - திருவையாற்றில் காவிரிக்கரையில் உள்ள மண்டபம்.

244. எத்துக்கடி - எடுத்தக்கட்டி - கைப்பிடிச்சுவர்

245. ஹைதருடைய காலம் - ஹைதர் படையெடுத்தகாலம்

246. கட்டுக்காணிக்கை - தவறு செய்தமைக்காகக் கட்டுப்பட்டு அரசுக்குத் தரும் பொருள்.

247. மரக்காயர் - தமிழ் பேசும் முஸ்லீம்களுள் ஒரு வகையினர்

248. தளவான் - தளம்—படைக்குத் தலைவன்

249. 2 1/4 சக்கரம் மதிப்புடைய வராகன்களும் உண்டு;
(எனினும் 1 1/4 வராகன் சக்.2 - 6 1/4 என்பது தவறு)

*(5) 1777*

***சென்னையிலிருந்து சாமான் செலங்கைப்[250] போட்டு நாகூருக்குத் கொண்டு வர காற்றில்லாமல் செலங்கு சங்க முகத்தின்[251] துறைக்கு வந்து தங்கியிருப்பதால்-நாகூரிலிருந்து கனக ஸபாவின் மேல் துடுப்புக் காரர்களை அனுப்பி செலம் ஒடையான் தண்ணீரை அறுத்துக் கொண்டு வருவதற்குக் கூலி தஞ்சாவூர் சக்.6-2 பணம்.***

*(15) 1777*

***(1) திருவிடமருதூர்.***

***கொள்ளிடம் ஒடப்புக்கட்டு ஆள்[252] மாகாணம் சோளவார் முதற்கொண்டு நாணநோடு மாகாணத்தின் எல்லைவரைக்கும் ஒடப்பின் வேலைக்காக ஆள் மாகாணம் வரவு சக்ரம்.***

*(2) 1777*

***மணித்தலப்பைச் சேர்ந்த இலவம்காய் வித்து முதல் பாபத்து[253] சுமார் 9200க்குப் பணமொன்றுக்கு 200 வீதம் சக். 4-6 பணம்.***

*(16) 1777*

***(1) டபீர் பண்டிதரின் கிராமங்கள்***

***முகாஸா கிராமம், சொக்கசூ, தளயனூர், நன்னிமங்களம்.***

## மூட்டை எண்-134 C

*2. 1831*

***ஜாம்தார்கானா[254] வரவு சிலவு கணக்குகள்.***

*1. 1843*

***சுபான்ஜி புதாஜீ மோஹிதே[255] அவர்களுக்கு ஒரு மாஸத்திற்குச் சம்பளம் 124ரூபாய்க்கு ஒரு ரூபாய்க்கு 37படி நெல்லு வீதம் நெல்லு கலம் 1, 1-2 மரக்கால்***

*3. 1832*

***1. சிதம்பரத்திற்குப் பிரயாணஞ் செல்லுவதற்கு வண்டிகளில் சாமான் ஏற்றிப்போகும் வண்டி ஒன்றுக்கு நாளொன்றுக்குப் பணம் 3 வாடகை.***

---

250. செலங்கை - (செலங்கு)

251. சங்கமுகம் - காவிரி கடலொடு கலக்குமிடம்.

252. ஒடப்புக்கட்டு ஆள் - உடைப்பை அடைக்கும் ஆள்

253. பாபத்து - தொடர்பாக

254. ஜாம்தார்கானா-அரசு குடும்பத்தினரின் ஆடையாபரணங்கள் வைக்கப்பட்டுள்ள இடம்.

255. இவர் ஜாம்தார்கானாவின் மேற்பார்வை அதிகாரியாதல்கூடும்.

*(2) 1832*

சௌ. மூன்றுபாயி சாப்கள்[256] உபதேசம் பெற்று, சிவபூஜை செய்ய ஆரம்பித்ததைப் பற்றியுள்ள ஜாபிதாவை அனுப்பியிருக்கிறது.

## முட்டை எண்-136 C

*7. 1785*

*(1)* நாகூர் தர்காவில்[257] பாத்யா செய்கிறவன் ஒப்புக்கொண்ட பாபத்து காண்பதற்கு ஒப்புக் கொண்டது பாபத்து, காகிதம் பழைய புதுச்சேரி ரூ.2500

*(2) அரிசி 30 கலத்தின் விலை 100 சக்.*

*(3)* புலிவராகன் 7க்கு வராகனொன்றுக்கு சக்.2-4 வீதம்[258] சக். 16-8 பரங்கிப்பேட்டை வராகன் 159-3/6-1/4 இதற்கு வராகனொன்றுக்கு சக். 28-3/4 வீதம் சக். 351-1

*(4)* மாதளம் பேட்டை-கோனார், செட்டி வகையறா, ஹைதருடைய காலத்தில்[259] பாஹத்தருடைய[260] சிலவுக்காக வரியை வாங்கினதால் அபராதம்[261] சக். 120

*(5)* ஸ்ரீதர் மேதா என்னும் குஜராத்தி விண்ணாற்றங்கரைக்குச் சமீபமுள்ள செம்பாறாங்கற்களைப் படித்துறைக் கட்டுவதற்காக வாங்கினதற்குப் பாரவண்டி ஒன்றுக்கு 1/2 சக். வீதம் 250 வண்டிகளுக்குச் சக்.125.

## முட்டை எண்-137 C

*12.1811*

கணக்கு-மதனபல்லியிலிருந்து குதிரைகளை வாங்கிக் கொண்டு வந்த வகையில் வரவு

---

256. "1834 மாதுஸ்ரீ சைதம்பாபாயி, காமாட்சியம்பாபாயி, ஆவு சாயேப் அவர்களின் சிவபூசைகள் ஒருவருஷம் பூர்த்தியானதற்கு விசேஷ பூசைகள்" என்ற ஒரு குறிப்பு இருத்தலால் இங்குக்குறித்த மூன்று பாயிசாயபுகள் சைதம்பாபாயி,காமாட்சியம்பாபாயி, ஆவுசாயேப் ஆகிய மூவராகலாம். சைதம்பாபாயி என்பவர் இரண்டாம் சிவாஜியின் முதல் மனைவி.? காமாட்சியம்பாபாயி சிவாஜியின் இரண்டாவது மனைவி; ஆவுசாயேப் என்றது சிவாஜியின் தாய் அஹில்யாபாயியை.

257. தர்கா-பள்ளிவாசல்: பாத்தியா-முகமதிய திருமணம் அல்லது இறப்பில் குரான் ஓதுதல்.

258. 2 1/4 சக். 1 புலிவராகன் ஆனால் இங்குச்சக்கரம் 2 பணம் 1, ஒரு புலிவராகன் என்றுள்ளது. இதனால் புலிவராகன் மதிப்பு மாறுபடுதலுமுண்டு என்று தெரிகிறது. (பக். 151)

259. ஹைதர் படையெடுத்த காலம்

260. பாஹத்தர்-பஹதூர் (ஹைதர்).

261. ஹைதர் பக்கம் நின்று வரிவசூலித்தவர்கட்கும். பிற்காலத்தில் அபராதம் விதிக்கப்பட்டமை அறியப்பெறும். (பக். 92)

13.1803

(1) சென்னையிலிருந்து வாங்கிக்கொண்டு வந்த சாமான்கள்- டர்பன்டெயின்[262] -பெரிய சீசா 3க்கு சீசாவொன்றுக்கு 1/2 காலன், மரஎண்ணைய் சீசா 3க்கு ஒன்றுக்கு 1 1/2 காலன் விராகன் 4, தர்பஸ்[263] வாத்தியத்திற்குத் தந்திச்சுருள் 2க்கு ஒன்றுக்கு 30வீதம்60க்குஒன்றுக்கு 3 பணம்[264]

(2) 1805

காசியிலிருக்கும் கிரந்தங்களை எழுதி ஸர்காருக்கு அனுப்புவதற்கு திருப்பனந்தாளில் காசித் தம்பிரானிடம்[265] 1000 ரூபாய் அனுப்பினதற்கு ரூபாய் சேர்ந்ததற்குத் தம்பிரான் பதில் எழுதியகடிதம்[266].

(3) 1802[267]

காசீ, கயை, பிரயாகை[268] இம்மூன்றிடங்களில் ஆன சிலவிற்குக் கணக்கு. காசீயில் கோவில் கட்டுவதற்குக் கணக்கு.

15.1815

(1) யாழ்ப்பாணத்தில் நைவேத்யேஸ்வர ஸ்வாமிக்குப் பூஜை நிவேதனத்திற்கு உபயம் சக்.31-7/8

(2) 1807

நாகூரிலிருந்து விக்ரஹம் வகையறா சாமான்கள் கொண்டுவந்த வகையில் வரவு 15 சக்ரம்.

(3) 1807 சக். 5

நாகூர் தர்காவிற்கு வேண்டுகோளுக்கு பாதத்திற்குத் தங்கத்தின் புஷ்பம் செய்து போட்டதற்குத் தங்கம் 4 விராகனிடை ஆணிகளுக்குவெள்ளி விராகனிடை 1-1/8க்கு விலை வராகன்.

(4) 1807

178 1/2 சென்னையிலிருந்து கப்பல் நாகூர் துறையில் வந்து சாமான்களை இறக்கி, வெட்டாறு நதியின் வழியாக பெரிய பெட்டிகளைத் தஞ்சாவூருக்குக் கொண்டு வர ஆன சிலவிற்கு விபரம் விராகன்.

---

262. டர்பன்டெயின்-கற்பூரத்தைலம்

263. தர்பஸ்-ஒரு இசைக்கருவி

264. இங்குள்ள கணக்கு விளங்கவில்லை

265. இந்தக்காலகட்டத்தில் திருப்பனந்தாள் காசிமடத்து அதிபராக இருந்தவர்கள் காசிவாசி சடையப்பசுவாமிகள் II ஆவர். (பக்.424)

266. பதில் கடிதம்- திரு ஆர். ஜயராமன் அவர்கள் எழுதிய ''சரஸ்வதி மகால்'' என்ற நூல் பக். 28 காண்க (பக். 428)

267. இரண்டாம் சரபோஜியின் காசிப்பயணம் 1821-22இல் நடந்தமையின் இங்குக்குறித்த ஆண்டு 1802 என்பது தவறு. - (பக். 101-102)

268. பிரயாகை என்பது அலகாபாத் என்ற நகரமாகும்; இது கங்கையும் யமுனையும் சேருமிடத்தில் இருப்பது.

***(5) 1806***

***கணக்கு:-***

***ஹுஜுர் மகாலுக்கு-பிரம்புப் பாய்களைத் தயார் செய்ய பெரம்பை வாங்கி அனுப்புவதற்கு உத்திரவின்படி அசல் பிரம்புக் கட்டுக்கு சுமார் 300 வீதம் 10,000க்கு இஸ்காடி வராகன் 4 7/8வீதம் 48-3/4வராகன்[269]***

***(6)1806***

***நகல்-நாகூர் துறையின் கப்பலில் சாமான்களை ஏற்றின உத்யோகஸ்தர்களிருவரும் எழுதிக் கொடுத்த சீட்டு. தங்களிடமிருந்து நாம் கொல்பேனா துறைமுகம், மலாகா[270] துறைமுகம் இவைகளை வாங்கினதைச் சாமினாத செட்டியாருடைய கப்பலில் ஏற்றப்பட்டது. முத்துச்சிப்பி 15 தூக்கின் கணக்குப்படி இஸ்காடி வராகன் சுமார் கரீதி வகையறா கூடுதல் 1713 7/8***

***ஸேக் மயாரன்கதா என்பவருடைய கப்பலிலேற்றிய முத்துச் சிப்பிகள் 5 தூக்குக் கணக்குப்படி கரீதி வகையறா கூடுதல் இஸ்காடி வராகன் சுமார் 1630 1/2 ஆக 2 கப்பல்களுக்கு 33441/4 துறைக்குப் போய்ச் சேர்ந்து வித்து முதல் செய்து 100க்கு 5 வராகன் வீதம் கொடுப்போம்.***

***21.1808***

***(1) மிஸ்தர் டூரியன்[271] சாயேப் அவர்கள் மூலமாய் லண்டன் நகரில் வசிக்கும் க்ரீன்வார்டு என்னும் தட்டானிடம் கல்லிழைத்த நகைகளைத் தயார் செய்வித்து வரவழைத்ததற்கு***

***கூலியைச் சுங்கம் வகையறா கூட பவுன் 8026-11 ஷிலிங்கு இதற்கு 1புலி விராகனுக்கு 7ஷி.3 பென்ஸ் விதம்***

| வராகன்புலி | மைவி | காசு |
|---|---|---|
| 22142 | 1/2.4 | 37 |

---

269. இதிற்கண்ட கணக்கு:-

300 பிரம்புவிலை இஸ்காடி வராகன் 4 7/8

10000 பிரம்புவிலை இஸ்காடி $\frac{39}{8} \times \frac{10000}{300}$

———

8 300

325 162 1/2

2

48 3/4 வராகனுக்கு, இஸ்காடி வராகன் 162 1/2

1 வராகனுக்கு 162 1/2 - 48 3/4 = 325/2 ? 195/4 = 10/3

இக்கணக்கால் 1 வராகனுக்கு 3 1/3 இஸ்காடிவராகன்; அதவாது 3 வராகனுக்கு 10 இஸ்காடி வராகன் ஆகும்.

270. மலாக்கா-சுமத்திராவுக்கு கிழக்கே மலேஷியா தீபகற்பத்துக்கு மேற்கில் உள்ளது மலாக்கா கடற்பகுதி (பக். 391)

271. மிஸ்தர் டுரியன் இவர் கி.பி. 1798 முதல் ரெஸிடெண்டாக இருந்தவர். (பக். 65–66)

*(2) 1807*

யாதாஸ்து[272] டாக்டர் முசீல் சென்னையில் சாமான் வாங்கினதற்கு விவரம்

*Hope & Co*இல் வாங்கினது

| | புலிவராகன்[273] | மைலி | காசு |
|---|---|---|---|
| | 412 | 12 | 60 |
| பராமீட்டர் 1க்கு | 25 | 0 | 0 |
| ராயல் பேப்பர் 20ரீம் | 360 | 0 | 0 |
| மார்பின் பேப்பர் 8 தஸ்தா | 7 | 0 | 0 |
| கோணிப் படுதா | 4 | 12 | 60 |
| லாட்டரி டிக்கெட் 2க்கு | 16 | 0 | 0 |
| | 412 | 12 | 60 |

| | | | |
|---|---|---|---|
| கார்டன் கடையில் தேத்தண்ணீர் அருந்தும் வெள்ளிப்பாத்திரம் 1க்கு புலி வராகன் | 40 | 0 | 0 |

*21. 1807* ஹிப்கரியின் கடையில்

| *(2)* | புலிவராக | மை. | காசு |
|---|---|---|---|
| மெஸ்க்ரிபோபின் பத்தகம் 1க்கு | 7 | 0 | 0 |
| இல்யாக்திரிக் ஸிடியின் 1க்கு | 2 | 0 | 0 |
| கணக்கு 4க்கு | 7 | 0 | 0 |
| *Chemistry Book* 1க்கு | 5 | 0 | 0 |
| ஷை | 3 | 0 | 0 |
| மருந்துப் புத்தகம் | 2 | 0 | 0 |
| பிரெஞ்சு*Chemistry Book* 1க்கு | 15 | 0 | 0 |
| சில்பம் மாதிரி 1க்கு | 40 | 0 | 0 |
| இயந்திரம் (ஸம்புக்தமென்னும்) 1க்கு | 20 | 0 | 0 |
| இராசாயனப் பொருளின்பெட்டி | 60 | 0 | 0 |
| | 163 | 0 | 0 |

272. யாதாஸ்து-நினைவுக்குறிப்பு.

273. இங்குள்ள கணக்கால் மைலி என்பது எத்தனைப் பணம் என்பது தெரியவில்லை.

# முட்டை எண்-138 C

*68-1798*

அமரசிங்கு போஸலே[274] அவர்களின் பெண்டுகள் சிலவுக் கணக்கு

*1. 1845*

திருவையார் நதி[275]க்குப் பாலங்கட்டுவதற்கு ரூ.5000

*4-1845*

(1) குறிப்பு:-

தரங்கம்பாடியின் பாக்கிக்[276] கூட சென்னப்பட்டணம் வெள்ளி[277] 8 பணத்திற்கு ஒரு பணம் வீதம் சக்ரம் 2500க்கு ஒரு வராகனுக்கு 2 சக்.2 15/16பணம் வீதம் வராகன் 1114-4-5/8

*(2) 1845*

ஸர்காரின் இலாகாவினால் பள்ளிக்கூடம் ஆரோக்ய பள்ளிக்கூடம்[278] வகையறா வேதபாட சாலை, இன்னும் பையன்களுக்குச் சாப்பாடு வகையறாவினால் ஏற்படும் சிலவு 8000க்கு கணக்குத் தயார் செய்து கொடுப்பதென்று உத்திரவு

*(3) 1845*

ஸ்ரீமத் வீரஸிம்ஹேந்திர சிவேந்திர ச்ரேயஸிக்குச் சேர்ந்த விஜய ஸைதம்பா ச்ரேஸியின் ஆரோக்ய சாலையில் ஸர்காரிலிருந்து நியமிக்கப்பட்ட பேர்வழிகளின் ஜாபிதாவைக் கொடுக்க வேணுமென்று.

*(4) 1845*

மரக்காலுக்கு முத்திரையைப் போடுகிற விஷயம்.

*(5) 1845*

களஞ்சியம் நெல் கலமொன்றுக்கு 12 அணா வீதம் 6000க்கு ரூ. 4718-12-0[279]

---

274. அமரசிங்கு-துளசாவுக்குப்பிறகு அரசைக் கைப்பற்றி 1798 இல் அரசிழந்தவர்.

275. தஞ்சாவூரின்று திருவையாற்றுக்குப் போகும் பெருவழியில், சிவாஜி நான்கு பாலங்களைத் தன் செலவில் கட்டுவித்தார்; அவற்றுள் ஒன்று திருவையாற்றுக் காவேரிப் பாலம்.

276. தரங்கம்பாடியில் டேனிஷ்காரர்கள் பல ஆண்டு தங்கியிருந்தனர்; அதற்காக அவர்கள் தஞ்சை அரசருக்கு ஆண்டுதோறும் 2000 சக்ரம் "தோ:பா"வாகச் செலுத்தி வந்தனர். (தோ:பா-கப்பம்).(பக்.146)

277. சென்னப்பட்டணம் வெள்ளிப்பணம் என்பது ஒரு நாணயம் 2 1/2 பணம் கொண்டது. 4 வெள்ளிப் பணம் ஒரு சக்கரம், 4 1/2 சக்கரம் 1 புலிவராகன், (பக்.150)

278. ஆரோக்கிய பள்ளிக்கூடம் என்பது ஆரோக்கியசாலையாதல் வேண்டும். ஆரோக்கியசாலை ஒன்று சிவாஜி காலத்தில் ஏற்படுத்தப்பட்டது; அங்குப் பொதுமக்கள் சென்று வைத்தியம் செய்துகொள்ளலாம்.

279. நெல்விலையும் அதிகமாகத் தெரிகிறது; 6000க்கு ரூ. 4718-12-0 என்ற கணக்குத் தவறு ஆகும்.

*(6) 1845*

*ஜாபிதா புதிய ஆஸ்பத்திரியில்*[280] *ஸர்காரின் வேலையிலிருக்கும் ஆஸாமிகளுடையவும் சம்பளம் வகையறாவைப் பற்றினதும்*

*7.1776*

*(1) கருடவாகனத்திற்கு அடிப்பட்டறைக்கும் கல்ப விருக்ஷத்துக்குக்*[281] *கூட வெள்ளிக்குத் தங்க முலாம் கொடுக்க தங்கம்.*
*1 1/2டாங்-தோலா 1க்கு 10 சக்-4 பணம் வீதம் 15-6 பணம்*[282].

*(2) 1776*

*ரா. திவான் சாஹேப்*[283] *அவர்களின் கல்யாணத்திற்கு மேளம் ஸங்கீதமேளம்*[284]
*சக். 2 1/2 மேளம்-ஜோடி 1க்கு ஆஸாமிகள் 8.*

*(3) 1776*

*ரா. திவான் சாகேப் அவர்களுடைய கலியாணத்தில் வாக் நிச்சயத்திற்கு*[285] *மேடையில் நடந்த கேளிக்கைக்கு*[286] *18 மேடைக்குச் சக். 4618.*

*(4) 1776*

*மணி அடிப்பவர்கள்-கஸபா*[287] *கும்பகோணம் சுபை*[288]*யில் மணி அடிக்குமிடத்தில்*
*4 பேரிருந்தார்கள். ஆஸாமி 1க்கு 1 1/2 சக்ரம் சம்பளம்.*

*(5) 1776*

*அணைக்கட்டு-அணை ஒடப்பு*[289] *வேலைக்காக மெய்யாடுக்கு*[290] *வந்த ஸாமான் வகையறாவைக் கணக்கெழுத 2 கணக்குப் பிள்ளைகள் வேண்டுமென்று.*

---

280. புதிய ஆஸ்பத்திரி என்றமையால் இதற்கு முன்னரும் சரபோஜி காலத்தில் ஆரோக்கியசாலை இருந்தமை பெறப்படும். (பக். 289)

281. கல்ப விருக்ஷம்-கற்பக மரம்-வேண்டியதை வேண்டியாங்கு அளிக்கும் விண்ணுலக மரம். (பக். 165 காண்க)

282. டாங்க் என்பது தோலாவின் மூன்றில் ஒரு பங்கு. (பக். 165)

283. திவான் சாஹேப் என்றது இரண்டாம் துளஜாவை, இவர் 14-11-1776 இல் இரண்டு திருமணங்கள் செய்துகொண்டார் என்று தெரிகிறது. (பக். 23) (போ-வ-ச. பக். 125)

284. சங்கீத மேளம்-நாதஸ்வரத்துடன் பொருந்திய மேளம்.

285. வாக்நிச்சயம்-திருமணத்தை உறுதி செய்யும் சடங்கு

286. கேளிக்கை–மகளிர் நடனம்.

287. கஸ்பா-தலைமையூர்.

288. சுபை-சுபா-சில ஊர்கள் கொண்ட பகுதி

289. அணைஒடப்பு-காவிரியின் அணை உடைப்பு

290. மெய்யாடு-குத்தகைக்கு விடாமல் தாமே செய்யும்வேலை

*(6) 1776*

ஸ்ரீரங்க ஸ்வாமிக்கு[291] விமானப்பிரதக்ஷிணஞ்[292]செய்கிற திருவேங்கடாச்சாரிக்குச் சம்பளம் 6 ரூ.

*(7) 1776*

மகாராஜா சாயேப்[293] காலத்தில் பைராகி ஒருவர் ஒரு பிராமணப் பையனைப் பிடித்துக் கொண்டு வந்ததற்குச் சாப்பாடு, உடைகளுக்கு மாதத்திற்கு 3 சக்ரம்.

*16. 1845*

*(1) துட்டு நாணயம் 4675க்கு ரூபாயொன்றுக்கு 46 3/4 துட்டு வீதம் 100க்கு.*

*(2) துட்டு 556 3/4க்கு ரூபாயொன்றுக்கு 48 துட்டு வீதம்[294] ரூ 11-9-0*

*21.1811 ரசீது ஜாபிதா*
*(1) பாளேபட்டு[295] பயப்பாநாடு சக்.500*

*28.1776*
*(1) ஸரஸ்வதி பாண்டாரில் (மஹாவில்)-புஸ்தகங்களின் பூஜை செய்கிற இராமபட்டர் கொடுத்த மனு- தன்னுடைய தகப்பனாருக்கு 6 சக்ரம் கொடுக்கப்பட்டது. தற்போது 3 சக்ரம் கொடுக்கப்படுகிறது. முன்மாதிரி 6 சக்ரம் கொடுக்க வேணும்.*

*29.1768*
*(1) நவராத்திரிக்கு நல்லண்ணை மனு ஒன்றுக்கு 2சக்-2 பணம்[296]*

*32.1833*
*ஹுஜுர்[297] உத்திரவு:-*

நெய் நிறுக்கும் நிறைப்படிக்கல்லின் மேல் ஒருமனு இரண்டரைச் சேர் ஒன்பது டாங்க் என்று ஸர்காரைச் சேர்ந்த பேட்டையிலும் கடைகளிலும் என்று எழுதி நடத்துகிறது.

---

291. ஸ்ரீரங்கஸ்வாமி-ஸ்ரீரங்கத்தில் கோயில் கொண்டுள்ள அரங்கநாதர்

292. விமானப்பிரதக்ஷணம்-கிரிபிரதக்ஷணம்-கோயிலை வலம் வருதல்

293. மகாராஜா என்றது இரண்டாம் துளஜாவை

294. ரூபாய்க்கு 48 துட்டு என்பது பெருவழக்கு. ஆனால் மேலே ரூபாய்க்கு 46 3/4 துட்டு என்றுள்ளது. 4 பைசா 1 துட்டு; 48 துட்டு ஒரு ரூபா (பக். 154)

295. பாளேபட்டு-பாளையப்பட்டு-அரசனுக்கு வேண்டிய காலங்களில் உதவவேண்டும் என்றநிபந்தனையுடன் விடப்பட்ட ஊர்த்தொகுதி

296. 32 காசு 1 பணம்; 10 பணம் ஒரு சக்கரம்.

297. ஹுஜுர்-அரசர்; இறுதி அரசராகிய சிவாஜி

*(2) தன்வந்தரி மகால்[298] முலைப்பால் தைலம் செய்வதற்குப் பால் வாங்குவதற்கு ரூ. 2.*

(3) ஸரஸ்வதி மகால்

*ச்ரௌத[299] புத்தகங்களை எழுதுவதற்கு ஸ்ரீதாளம் எழுதாதது ஒன்றுக்கு ஏடு வீதம் எழுதாத 2க்கு ஒன்றுக்குக் கும்பனி ரூ 2 1/4 வீதம் ரூ. 4 1/2.*

ஷெஎழுதாததின் பேரில் (ஸ்ரீதாளம் மேல்) கிரந்த[300] லிபி[301] எழுதுகிறவனுக்கு முன்னால் பாக்கி குடுப்பது ரூ 3.

*33.1845*
*(1) நாலு வீதிகளின் சாக்கடையின் மண்ணை, உடனுக்குடன் எடுத்து சுத்தி செய்யாமலிருந்த அஜாக்கிரதைக்காக அபராதம் ரூ 6க்கு ரசீது.*

*35-1845*
*(1) ஒரு ரூபாய்க்கு 48 துட்டு வீதம் ரூ 8-1-0க்கு 389 3/4 துட்டு.*

*42.1776*
*(1) தஞ்சை கோட்டைத் தேவஸ்தானம் கீழவாசல் வீரபத்திர சுவாமி கோவிலுக்குக் கும்பாபிஷேகத்திற்குப் பத்து சக்ரம் மொயின்[302] கொடுப்பது.*

*(2) 1776*
*மனு. கள்ளப்பத்து-மழையில்லாததால் வருண ஜபம்[303] ருத்திராபிஷேகம்[304] 1/4 மண்டலம்[305] செய்வித்தற்குத் தினம் சக். 2 பணம் 3 சிலவு.[306] விராட பர்வம்[307] வாசிக்கிற பிராமணர்களுக்கு ஒவ்வொரு 1பணம் வீதம் ஆக மொத்தச்சிலவு 67 சக்-2 3/8 பணம் சிலவு.*

---

298. இம்மகாலில் மக்களுக்கும் விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் வைத்தியம் செய்யும் மருத்துவர்கள் இருந்து ஆய்வு செய்தனர் என்றும் அம்மருத்துவர் பல மருந்துகளைச் செய்தனர் என்றும் தெரிகிறது. (பக். 289)

299. சிரௌதம்-வேதத்தில் விதிக்கப்பட்ட கருமங்கள்

300. கிரந்தம் -சமஸ்கிருதத்தை எழுதுவதற்குத் தமிழ்மக்கள் பயன்படுத்திய எழுத்து முறை (தேவநாகரி எழுத்துமுறை வேறு)

301. லிபி-எழுத்துமுறை

302. 37 ஆக இருக்க வேண்டும்

303. வருணஜபம்-மழைவேண்டி மழைக்கடவுளாகிய வருணனை நோக்கி வேத மந்திரங்கள் ஓதுவது.

304. திருவுருத்திர மந்திரத்தை ஓதிக்கொண்டு இறைவனுக்குத் தண்ணீர் அபிஷேகம் செய்வது; திருவுருத்திரம் என்பது மூன்று வேதங்களில் நடுவணதாகிய யசுர் வேதத்தில் நடுவண் இருப்பதாகும். (பக். 379)

305. மண்டலம்–40, 41, 45 நாள் கொண்ட கால அளவு

306. 10 பணம் ஒரு சக்கரம்

307. பாரதத்தில் 18 பருவங்களில் ஒரு பருவம், விராடபருவம்

*(3) 1776*
*சென்னப்பட்டணம் தட்டி செய்கிறவனுக்கு ஆற்றில் ஓடம் விடுவதற்கு ஆட்கள் 13க்குப் புலிவராகன் 12*[308].

*(4) 1776*
*பே மேஸ்திரி*[309] *வெள்ளைக்காரனுக்கு வீடு கட்டுவதற்கு 1000சக்ரம் கஜானாவிலிருந்து கொடுக்கிறது.*

*(5) 1776*
*அணைக்கட்டு, அமரசிங்கு லாலா அணைக்கட்டின் வேலைக்கு 2000 சக்ரம் கொடுக்கிறது.*

*(6) 1776*
*துணி ஜாபிதா சர்காருக்கு-மந்தில் மஹதாபி*[310] *1க்குத் தோலா 131/4தோலா 1க்கு 13/16 வராகன் வீதம் வரா. 10-13/16*[311].

*44-1776*
*(1) அமரசிங்கு போசலே*[312] *அவர்களின் குஸும்பா*[313] *முண்டாசுக்குச்*[314] *சாயம் போட சக். 1-9 பணம்.*

*47 (1) 1776*
*உத்திரவு ஹுஜுர்*
*ரா. மகாராஜா சாயேப் அவர்களுடைய இரண்டு கல்யாணங்களுக்குக்*[315]*கர்னல் ஆபர் வெள்ளைக்காரனிடமுள்ள வெள்ளைக்காரன் அதிர்வேட்டு விட்டதற்கு இனாம் 53 ரூ.*

*(2) 1776*
*அமரசிங்கு போசலேஅவர்களுக்குக் கார்த்திக சுத்தம்*[316] *துவாதசி. துளசி விருந்தாவன பூஜைக்கு ந. எண்ணை 15 சேர், அகல் 40, பருத்தி-2 சேர் கொடுப்பது.*

---

308. 4 1/2 சக்கரம் அல்லது 45 பணம் ஒரு புலிவராகன். (பக். 150)

309. Pay master படைவீரர்க்குச் சம்பளம் கொடுக்கும் அதிகாரி

310. மந்தில்--கப்பல் பாய்தாங்கியைத் தூக்கும் கயிறு; மஹதாபி-பொன்வெள்ளிச் சரிகைகளால் நெய்த ஆடை.

311. 10 13/16 என்பது தவறு; 10 49/64 என்றிருக்க வேண்டும்.

312. அமரசிங்குபோஸலே- இரண்டாம் துளஜாவின் தம்பி; பிரதாப சிங்கரின் மனைவியின் மகன்.

313. குஸும்பா-குசும்பா-குசும்பச்செடியிலிருந்து எடுக்கப்படும் சிவப்புச் சாயம்

314. முண்டாசு-தலைப்பாகை.

315. சுலக்ஷணாம்பாபாயி, மோஹனாபாயி ஆகிய இருவரைத் திருமணம் செய்துகொண்டமை இங்குக் குறிக்கப்பெறுகிறது. (போ. வ. ச. பக். 125).

316. சுத்தம்-வளர்பிறை; துவாதசி-12ஆம் நாள்.

*49.1776*

*(1)* ஹுஜுர் விளையாடுவதற்காக 4 பிள்ளையாருக்கு வெள்ளரிப்பிஞ்சி, கத்திரிக்காய் இவைகளுக்கு மொயின் சக் 20 கொடுப்பது.

*(2) 1776*

கைலாஸவாசீ ஏகோஜி ராஜா[317] அவர்களுடைய சம்சாரம் கங்காபாய் பரலோகமடைந்ததற்கு உத்திரகிரியைக்கு 50 சக். கொடுக்கப்பட்டது.

*50.1776*

*(1)* நவராத்திரிக்காக 12 பிராமணர்களின் மூலம் இராமாயணம் பாராயணம் செய்வித்து 12 பட்டாபிஷேகஞ் செய்வித்ததற்கு ஒவ்வொருவருக்கும் 12 சக்ரம் வீதம் 12 பேருக்கு 144 சக்.

*(2)* ஹுஜுர் அரண்மனையில் ஐப்பசிமீ நவராத்திரி மஹாநவமி[318] தினம் ஹோமத்திற்குப் பூர்ணாஹுதிக்குத்[319] தக்ஷிணை- பாளம்பட்டருக்கு 2சக். பட்டுகோசாமி[320] யாருக்கு 2 சக்.

*(3) 1776*

ஐப்பசிமீ நவராத்திரிக்காக சுவாமிகளுக்குப் பூஜை விவரம்.

கண்டேராவ்[321] சக்-5, பவானி[322] சக்-5, மஹிஷாஸுரமர்தினி[323] சக்-5, ஸ்படிக்க விங்கம் சக்-5, மாயராணி மஹிஸாயீ சக்-5, ஸயீபாயி ஆவு[324] சக்-5, கைலாஸவாஸி[325] ரா. பெரிய

---

317. இவர் 1736இல் தஞ்சையை ஆண்ட இரண்டாம் ஏகோஜி (பாபா சாயேப்) ஆகலாம்.

318. மஹாநவமி–நவராத்திரியின் இறுதிநாள்.

319. பூர்ணாஹுதி: ஓமகுண்டத்தில் நெருப்பை வளர்த்து அதில் மந்திரங்கள் ஓதிச்செய்யும் ஓமம்; ஓமத்துக்குரிய எல்லாப் பொருள்களும் குறைவறக் கொணர்ந்து ஓமம் செய்யின் அது பூர்ணாகுதி எனப்பெறும்.

320. இங்குக் கண்ட பட்கோசுவாமி ஜகந்நாதபட்கோசுவாமி ஆகலாம்.

321. மராட்டியர் வழிபடும் தெய்வங்களில் கண்டேராவ் ஒருவராவார். இவர் சாதாராவுக்கு அருகில் உள்ள ஜெஜுரி என்ற ஊரில் கோயில் கொண்டுள்ளார்.

322. துளஜாபவானி எனப்பெறுவர்; துளஜாபுரத்தில் உள்ளதெய்வம்.

323. மகிஷாசுரமர்த்தினி-எருமைத்தலையுடைய மகிடன் என்ற அசுரனை அழித்த துர்க்கை.

324. ஸயிபாயி-சிவாஜி மஹாராஜாவின் முதன் மனைவியும் சம்பாஜியின் தாயும் ஆவார் என்று தோன்றுகிறது.

325. கைலாஸவாஸி-இறந்துபட்டவர்களைக் குறிக்கும் பொதுச்சொல்.

*மஹாராஜா[326] சௌ. யமுனாபாய் சாயேப்[327], சௌ. ஸக்வார் பாய்[328], சாயேப் இவர்களுடைய உருவம் 1.சக்.-5 = 35 சக்ரம்*

*53-1776*

*(1) சென்னை வக்கீல் திரியம்பக ஸம்பாஜீ[329] ஸேவகனுக்குச் சேரவேண்டிய கூடுதல் 400சக். கஜானாவிலிருந்து கொடுக்கிறது. 54-1776*

*(1) ஹுஜுர் பங்க் உத்திரவு*

*திரௌபதாபாயி சாயேப்[330] சுலக்ஷணாபாயி[331] திரஷ்டி முகூர்த்தத்திற்காக[332] 20 சக். சுவாமியின் வேண்டுகோளுக்கு முதலில் கஷ்ட காலத்தில்[333] வேண்டினதற்கு சக். 20 விபரம்.*

*துர்தா தூர்த பிபி-1 சக், அடசோனகே பிபி-1 சக், தாரககே பிபி-1 சக்.*

*(2) 1776*

*ஸ்ரீ ஆவுசாயேப்[334] அவர்களிடம் கலியாணமான இரவில் பெண்ணைப் பார்க்கும் சடங்குக்கு[335] வேண்டிய துணிமணிகளின் ஜாபிதா.*

*(3) 1776*

*அன்னசத்திரம்-தஞ்சாவூர் கோட்டை சமையல்காரன் 8 பேர்களுக்குநாளொன்றுக்கு2 1/2 உலுப்பையும்[336] 1 1/2 பணமும். சத்திரத்தில் அத்யாயனஞ்[337] சொல்லுகிற பிராமணன் சாமி அய்யங்காருக்கு 3 உலுப்பை.*

---

326. பெரிய மஹாராஜா என்றது பிரதாபசிங்கரை.

327. யமுனாபாயி சாகேப் என்பவர் பிரதாபசிங்கரின் மூன்றாவது மனைவி; இவர் பிரதபாசிங்கர் இறந்த பொழுது உடன்கட்டை ஏறியவருள் ஒருவர் ஆவர்.

328. ஸக்வார்பாயி என்பவர் பிரதாபசிங்கரின் ஐந்தாவது மனைவியாவர்; இருவரும் பிரதாபசிங்கர் இறந்தபொழுது உடன்கட்டையேறியவருள் ஒருவர் ஆவர்.
குறிப்பு:- மேலே கண்ட மூவருக்கும் உருவம் அமைத்துக் குலதர்மம் பூசைநாளில் பூசை செய்தனர் என்று தெரிகிறது.

329. இவர் துளஜா காலத்திலும் அமர்சிங்கு காலத்திலும் சென்னையில் மராட்டிய அரசருடைய வக்கீலாக இருந்தவர். 330. திரௌபதிபாயி - பிரதாபசிங்கரின் மனைவி: துளஜாவின் தாய்

331. மக்கட்பேற்றின் பொருட்டுத் துளஜா மணம் செய்துகொண்ட இருவருள் மஹாடிக் வமிசத்தில் பிறந்தவர் சுலக்ஷணாபாயி என்பவர் ஆவர். (போ.வ.ச.பக்.125)

332. திரஷ்டிமுகூர்த்தம் - மனையறம்படுத்தல்

333. கஷ்டகாலம் என்றது துளஜா நாடிழந்து அரண்மனையிலேயிருந்த காலத்தை

334. ஆவுசாயேப் என்றது திரௌபதாம்பா பாயியை

335. கல்யாணமான இரவில் பெண்களைப் பார்க்கும் சடங்கு என்பது மனையறம் படுத்தலேயாகலாம்.

336. உலுப்பை - சத்திரத்துக்கு வரவியலாதவர்கட்கும் பெரிய அதிகாரிகட்கும் அளிக்கப்படும் அரிசி முதலியவை.

337. அத்யயனம் சொல்லுதல் - வேதம் கற்பித்தல்

*(4) 1776*

மனு. திருவழுந்தூர் பெருமாள் அய்யங்கார் பொரசெலைப் பெருமாள் பொரசெலையின் மூர்த்தி செய்கிறவருக்கு தஞ்சாவூர் அன்னசத்திரத்திலிருந்து தினந்தோறும் 3 உலுப்பை கொடுக்கிறது.

*57 (1) 1776*

நவராத்திரியின் ஸதருக்கு[338] வாணவேடிக்கைக்கு வெடிமருந்து தயார் செய்வதற்கு வேண்டிய சாமான்களைக் கொடுப்பது.

எடை

*1/4 தகரம், 1/2 மனு ஈயம், 2 மனு பரள்நார், 1/4 மனு வெள்ளை நூல், 1 சேர் பஞ்சு, 2 1/2 மனு கர்டா கடுதாசி, 2 1/2 மனு இரும்பு, மத்தாப்புகள் சந்திர ஜோதிகளின் கழிகளும் சில்லரை ஆயுதங்களையும் தயாரிக்க, 25 சேர் ந. எண்ணை.*

57. 1776

*(2) கோட்டை திருக்காட்டுப்பள்ளி வெள்ளைக்காரச் சிப்பாய்களுக்குக் கவாத்[339] செய்ய சாவடிகட்ட நீளம் 92 கெஜத்திற்கு அங்கணம் 42 கட்டுவதற்கு.*

*சாமான் சேகரிப்பது 9276, கம்பம் வகையறா கூலி சக்ரம் 25 சுங்கத்திலிருந்து கொடுக்கிறது.*

*(3) 1776*

கீழவாசலின் கதவுக்குத் தடவ மரயெண்ணைய்-1 மனு, தயிர்-1 மனு

*(4) ஜாபிதா- துர்கராஜ-பாக்கி-மகா தேவபட்டணம்[340] கோட்டை பழுதாயிருக்கிறது. மூங்கில் கண்ணுகள் 10 இலக்ஷம் வரையில் முளைத்திருக்கின்றன. இதற்காக அரண்மனை கல்லுமுள் வகை பிடுங்கி செப்பினிட மன்னார்குடி சுங்கத்திலிருந்து சக். 25 கொடுக்க உத்திரவு செய்ய வேண்டும்.*

*(5) ஹாகிபரதுவின் மூலமாக துலுக்குப்பெண் ஹுஸைனி இடமிருந்து வெள்ளைக்கார துப்பாக்கியொன்று வாங்கினதற்கு விலை பரங்கிப்பேட்டை வராகன்[341] 1 1/2 இதற்குத் தரகு இல்லை.*

*(6) ஹுஜுர்[342] குழந்தையை வாங்கினதற்கு[343] பரங்கிப்பேட்டை வராகன் 8.*

*(7) அமரசிங்கு போஸலே மாரியம்மன் கோவிலுக்குப் போவதற்கு சிலவு சக். 2 பணம் 7.*

---

338. ஸதர் - சதிர் (நாட்டியம்) - தர்பார்

339. கவாத் - வீரர் செய்யும் உடற்பயிற்சி

340. மகாதேவி பட்டணம் - துக்கோஜி தன் தமையன் சரபோஜியின் ஆட்சிக் காலத்திலேயே பிரிந்து சென்று தங்கியிருந்த ஊர்; மன்னார்குடி சுபாவில் உள்ளது ; இங்கு இருக்கும்பொழுது இவர் சிவகாம சுந்தரி பரிணயம் என்ற நூலை எழுதினார்.

341. பரங்கிப்பேட்டைவராகன். (பக். 151)

342. ஹுஜுர் - இரண்டாம் துளஜா

343. குழந்தையாக இருக்கும்பொழுதே பணிப்பெண்கள் ஆக்குவதற்கு விலைக்கு வாங்குவர் போலும்.

*(8) மிஸ்தர் ஆர்ன் வெள்ளைக்காரனுடைய தரகாளி இர்சப் மொதலியின் வீட்டில் களவு போன சாமான்களின் மதிப்பு பரங்கிப்பேட்டை வராகன் 41 1/2.இத்துகையை கோட்டையின் கொத்தவாலுடைய சம்பளத்திலிருந்து வசூல் செய்து முதலிக்குக் கொடுக்கிறது.*

*(9) அஹோபில ஆசார்யருக்கு[344] தக்ஷிணைக்காக சக். 2000 ரூபாய் 1000.*

*(10) பூர்ணாசார்யரின் பிள்ளை வெங்கடாசார்யரிடமிருந்து ஹுஜுர் சாலிக்கிராமத்தை[345] வாங்கினதற்குத் தக்ஷிணை சக். 200*

*அணைக்கட்டுக்கு-களஞ்சியத்தின் நெல்லின் அரிசியை அனுப்பியிருப்பது வித்து முதல் ஆகும் வரையில் பணத்திற்கு 1/8படி ஜாஸ்தி கொடுப்பது. அக்கம் பக்கத்து ஊர்களிலிருந்து அரிசி வந்து விற்பனை ஆகாதபடி உத்திரவிடவும்.*

*58.1776*

*(1) ஹுஜுர் உத்திரவு*

*தஞ்சாவூர் கோட்டையின் அதிர்வேட்டுக்கும் கோட்டை வாசலின் பூட்டுக்கும் மகாநவமி ஆயுதபூஜை[346] தினம் தடவ ந. எண்ணெய் 1 மனு கொட்டியத்திலிருந்து[347] கொடுக்கிறது.*

*(2) பாத்திரபத பகுள சதுர்த்தி[348] கை. வா. ரா. துளஜாராஜாவின்[349] தேவசம் பாத்திரபகுள நவமி[350] ரா. ஏகோஜி[351] ராஜாவின் தேவசம்.*

*(3) அணைக்கட்டு-அமரசிங்குலாலாவிடம்-*
*அணையின் வேலைக்காக-3000, 3000, 5000, 3000, 2000, 1000 சக்ரம் கொடுக்கிறது.*

*(4) பழைய சிவகங்கையின் வாரியின் மண்ணை வெட்டி எடுப்பதற்காக கூலி சக். 20*

---

344. ஆழ்வார் திருநகரியில் தோன்றிய வண்சடகோபர் என்பவரால் ஆந்திரநாட்டில் தோற்றுவிக்கப்பட்ட மடம் அகோபிலமடம் எனப்பெறும். கும்பகோணத்துக்கு அருகில் நரசிம்மபுரத்தில் அகோபில மடத்தின் கிளையிருந்தது.

345. சாலிக்கிராமம் - சாளக்கிராமம்,திருமால் உருவாகக் கருதிப்பூசிப்பதற்கு உரியதும் கண்டகி நதியில் கிடைப்பதுமாகிய சிலை சாளக்கிராமம் எனப்பெறும். கண்டகி நதியானது நேபாளத்தில் தோன்றிக் காசிக்கு அருகில் கங்கையில் கலக்கும் ஓராறு என்று கருதப்படுகிறது.

346. மகாநவமி – நவராத்திரியின் இறுதி நாள்.
ஆயுதபூசை - மகாநவமி நாளில் ஆயுதங்களுக்குச் செய்யும் பூசை.

347. கொட்டியம் - சரக்கறை

348. பாத்திரபதம் - புரட்டாசி மாசம்; பகுளம் - தேய்பிறை; சதுர்த்தி - நான்காவது நாள்

349. இது 1776க்குரிய குறிப்பாகத் தெரிவதால் இங்குக்கண்ட துளஜா கி.பி.1738இல் இறந்த துக்கோஜி ஆகலாம். கை.வா.கைலாசவாசி

350. பகுள-தேய்பிறை; நவமி-ஒன்பதாம் நாள்

351. இங்குக் கண்ட ஏகோஜி இரண்டாம் ஏகோஜி ஆகிய பாவாசாகேப் ஆகலாம்.

*(5) சென்னையிலிருந்து லாட்பிகட் பாஹத்தர்[352] அவர்கள் 16 பெண்களைத் தஞ்சாவூருக்கு அனுப்பினார். அவர்களுக்குப் பாபனாசத்தில் சாப்பாட்டுக்கு 8-5/8 படி[353] அரிசி 3 பணம். பணத்திற்கு 2 15/16வீதம்.*

*(6) திருவிடமருதூர்-வட்டத்தைச் சேர்ந்த மணித்தலப்பின் ஒடப்பு வகையறாவும் பிலவநல்லூரின் ஒடப்பு வகையறாவும் கொள்ளிடத்தின் ஒடப்பு அடைப்பதற்காகச் சிலவு தஞ்சாவூர் சக். 1200.*

*62-1776*
*(1) உத்திரவு:சௌ. ராஜகுமாரபாயிசாயேப்[354] இடம் பட்டாபிஷேகத்திற்காக[355] தங்கத்தாலி தங்கம் வெள்ளி புஷ்பங்கூடியது 2 சக்ரம்.*
*மூக்குக்கு முத்து கடுக்கன் ஜோடி விருவேதி ஜோடவி? ஜதை-1 நக்ஷிணை சக்-10.*

*62.1776*
*(3) ம.ரா. ரா.திவான்சாயேப் அவர்களுடைய கலியாணத்தில்[356] பந்தலுக்குப் பாக்கு மரத்தில் தூண்கள் 100 கொடுப்பது.*

*(4) கர்னல் ஆபர் வெள்ளைக்காரனிடம் தௌலத்[357] லாயத்தில் அதிர்வேட்டின் குண்டுகள் வார்க்குமிடத்திற்கு 200 கீத்துகளைத் திருவையார் சுபையிலிருந்து கொடுப்பது.*

*63 (1) 1776*
*கிருஷ்ணவிலாஸத்தில்[358] பிராமண போஜனமாகுவதைக் கெஞ்சண்ணாவின் பிள்ளை நாகண்ணா பார்வையிடுகிறது.*

*65-1775*
*(1) ஜாபிதா*
*ஸ்ரீபிரதாபவீர ஹனுமார்[359] எத்துக்கட்டிக்குக் கீழேயுள்ள துக்குத் தினந்தோறும் மொயின்[360]*

---

352. லாட்பிகட் - பாஹத்தர் - பஹதூர் இவர் கவர்னர் ஆவர்.

353. 8 5/8 படி என்பது தவறு; 8 13/16 என்றிருத்தல் வேண்டும்.

354. ராஜகுமாரிபாயி - இரண்டாம் துளஜா முதலில் மணந்த மூவருள் இளையவர் (போ.வ.ச.பக்.125)

355. லார்ட் பிகட் 11-4-1776இல் துளஜாவை அரசகட்டிலில் அமர்த்தியபொழுது துளஜா பட்டாபிஷேகம் செய்துகொண்டார் என்று தெரிகிறது.

356. திவான்சாகேப் என்றது இரண்டாம் துளஜாவை; கல்யாணம் என்றது பிள்ளைப்பேற்றின்பொருட்டு இருவரை மணம் செய்து கொண்டமையைக் குறிக்கும் (போ.வ.ச.பக்.125)

357. தௌலத் - தவலத் - அரசாங்கம்

358. கிருஷ்ணவிலாஸ் - அரண்மனையின் தரைப்பகுதி

359. பிரதாபவீரஹனுமார் - இவர் கோயில் மேலவீதி வடகோடியிலுள்ளது.

360. மொயின் - உதவித்தொகை

கொடுக்கப்படுகிறது. இதைத்தவிர அதிகஞ்செய்து கொடுக்கிறது. சக்.9. 1 பணம் மொகலாயராஜ்ய பாரத்தில் நவாப்பின் காலத்தில்[361] அடைந்த 8மீக்கு 8 சக்.

சக். 4-5 1/2 பணம். மஹாராஜா[362] சாயேப்புக்குப் பட்டாபிஷேகமான[363] பின்னர் ஜாடாவுக்குப் பாக்கிமீ 4க்குக் கொடுத்தது. சக். 13-6 1/2 பணம்.

மேற்கண்ட துகையைத் தேவஸ்தானத்தின் மத்யஸ்தீ[364] அம்பி குருக்கள் அவர்களிடமிருக்கிறது. அதனால் துகை பாக்கி இருக்கிறது. கோவிலில் பூஜை நிவேதனம் நடக்கிறதில்லை. ஸ்தானீகர்[365] ஆஜரில்லை யாகையால் துகையைக் கொண்டு கவசம் செய்கிறது.

(2) 1775
மனு ஸ்ரீஸஞ்சீவீ ஜ்யாகிருத ஸ்தலம்[366] கோவில் பெரிய ஹாஜாரத்திற்கு வடக்கு வீதிக்குக் கில்லண்ணா அப்பாவின்[367] வீட்டிற்கு எதிரிலிருக்கிறது. அதற்கு ம.ரா. பெரிய திவான் சாயேப்[368] பட்டத்திலமர்ந்த போது மொயின் செய்து கொடுத்தார். 3/4 படி சம்பா அரிசி, 1/2 சேர் ந. எண்ணை.

(3) பெரிய கோவில்[369] நந்திக்கு மிளகு அபிஷேகம்[370] செய்ய வேண்டி நாளொன்று 7 சக்ரம் வீதம் 3 நாட்களுக்கு 21 சக்ரம் கொடுக்கிறது.

65.1775
(4) ஜாபிதா-ரூபாய்-புதிய புதுச்சேரி தத்தோஜி காசீதாஸ் தவே அவரிடம் ஹுஜூர் வாங்கினது ரூ. சுமார் 1000. இதற்கு ரூ. ஒன்றுக்கு அரைமுக்காலே வீசம் அரை சக்ரம் வீதம்
சக்ரம் 684-3 1/2 பணம்.

---

361. நவாப்பின் காலம் - நவாப் முகம்மது அலி தஞ்சையை ஆட்சி செய்த காலம்; அதாவது 17.9.1773இலிருந்து 11.4.1776வரைப்பட்ட காலம்

362. மஹாராஜா என்றது இரண்டாம் துளஜாவை

363. இரண்டாவது தடவை பட்டாபிஷேகம் ஆனது 11.4.1776இல்

364. மத்யஸ்தீ - மத்யஸ்தர் - ஒரலுவலர்

365. ஸ்தானீகர் - கோயில்களை வழிவழி மேற்பார்வை செய்யும் உரிமை உடையவர்.

366. இது குருகுலசஞ்சீவி கோயிலாக இருக்கலாம்.

367. கில்லண்ண அப்பா - இவர் பெயரால் ஒரு மண்டபம் கருந்தட்டாங்குடி வடவெல்லையில் பெருவழியிலுள்ளது. கிலிபிலி அண்ணா ஆகலாம். (லிங்கோஜி போன்ஸ்லே)(போ.வ.ச.பக்.121,122)

368. பெரியதிவான் என்றது பிரதாபசிங்கராக இருக்கலாம்.

369. பெரியகோயில் என்றது தஞ்சைப் பெரிய கோயிலாகிய ராசராசேச்சுரத்தை

370. பெரியகோயில் நந்திக்கு மிளகு அபிஷேகம் ஏன் செய்யப்பெற்றது என்று இக்குறிப்பினால் அறிவதற்கில்லை; ஆனால் மழை பெய்வதற்காக மிளகு அபிஷேகம் செய்வதுண்டு என இந்நாளில் தஞ்சையில் கருதுகின்றனர்.

(5) மணிதலப்பாறு வெட்டுவதற்குச்சிலவு.

(6) உத்திரவு-தஸ்தாவேஜி கச்சேரியில் படி (அளவு)களைப் பரிசோதனை செய்து வைத்துக்கொண்டு ஊரிலுள்ள படிகளை எல்லாம் பரிசோதித்துப் பார்க்கிறது.

(7) 1775

படியையும், மரக்காலையும் பரிசோதிக்கிறது. தஞ்சாவூர் கோட்டையிலும் வெளியிலும் கூட 8 1/4 சேர் மரக்கால் செய்கிறது. இதற்கு 2 படி படி ஒன்றுக்கு 4 சேர் 9 டாங்க் வீதம் கணக்கிடுகிறது.

66.1776

ஹுஜுர் பங்க் உத்திரவு.

தீபாவளிக்கு ந. எண்ணெயையும், சீயக்காயும் எல்லோருக்கும் கொடுக்கிற ஜாபிதா.

67.1775

மனு.

வைத்தியம் நடக்க வேண்டி சம்பளம் செய்து கொடுக்க வேண்டியதின் விவரம்.

முக்கிய (ப்ரண்ய) வைத்யர் 2 பேருக்குச் சக்.12, வைத்யர் சக்.17, குழந்தையின் வைத்யர் சக்.8, கண் வைத்யம் மீராகானுடைய பிள்ளை சக். 5, நோயாளிகளுக்கு-சமையல்காரன், கஷாயம், கல்கம்[371] செய்து கொடுக்க பெண்பிள்ளை காமாக்ஷி சக்.1 1/2

தஞ்சாவூர் சுங்கத்திலிருந்து நோயாளிகளுக்குப் பத்தியம்,[372] ஜலம் கொடுப்பதற்கு மருந்துக்கும் நாளொன்றுக்கு 4 பணம் வீதம் மாதத்திற்கு 12 சக். காமாடி[373] அஸாமி 1க்குத் தினமொன்றுக்கு 1-8 பணம். சக். 13-8 பணம் இந்தப்படிக்கி நடக்க உத்திரவாக வேணும்.

67.1775

(2) தஞ்சாவூர் கோட்டைக்கு ரோந்து[374] நியமனம்.

ரோந்துகாரர் 9 - விவரம்

வெள்ளைக்காரனிடமுள்ள ரோந்து–பெரிய ரோந்து-1, நேஹ ரோந்து-1 = 2, ரோந்துகள் 7, = 9

ஆக 9 ரோந்துக்கு-பட்டுக்கோட்டை ரோந்து 2, காளாகோட் ரோந்து 6 இவர்களுக்கு நியமனம்.

மேளக்காரன் ஜோடி 1க்கு ஆஸாமிகள் 7க்கு ஆஸாமி 1க்கு சம்பளம் ரூ 4 வீதம் 28 ரூ திவடே ஆஸாமி 18க்கு 51 ரூ. 18 காவளே அஸாமி[375] ரூ.3 வீதம் 14 பேருக்கு 48 ரூ.பாராக்காரர்கள்[376]

371. கல்கம் - மருந்துருண்டை

372. பத்தியம் - மருந்துக்கு ஏற்ற உணவு

373. காமாடி - காமாட்டி - வேலையாள்

374. ரோந்து - இரவில் காவல் செய்பவன்

375. காவளே அஸாமி - காவல் செய்யும் ஆள்

376. பாராக்காரர்கள் - காவலாட்கள்

தப்பு தம்மட்டம் காரர்கள், மணி தூக்கிக்கொண்டு போகும் ரோந்துக்காரன் கூட 19. காசி பணம்[377] வைத்திருக்கும் அஸாமி -1 ஹேஜிப்[378] — அஸாமி -1க்கு சம்பளம் ரூ 6 60 ஆக ரூ. 193[379].

# மூட்டை எண் 139-C

1. 1822

(1) ஹுஜுர் பங்க் சமாசாரம்.

காவேரியில் விளக்கேற்றி விடுவதற்காகப் பருத்திக்கொட்டையின் மூட்டை கட்டுவதற்காகக் கொட்டியத்திலிருந்து பருத்திக் கொட்டை மனு -1.
ஜாம்தார்கானா விலிருந்து 2000 மூட்டை கட்டுவதற்குக் கந்தல்

(2) 1822
அரண்மனையின் கோவிலில் ஆகாச தீபமேற்றுவதற்காக [380]வழக்கப்படி மராமத்து இலாகா[381] விலிருந்து மூங்கில் ஒன்றைக் கொடுப்பது.

(3) 1822
வடக்கு வீதியில் சாக்கடை கட்டுவதற்குக் கப்பிக்கல் கொண்டு வருவதற்குக் காமாட்டி[382] வண்டிக்காரர்கள் அஸாமிகள் 7க்கு மெய்யாடு[383] 50-4-0
(4) 1822
வேதாரணயத்திற்கு யானையைக் கொண்டு போவதற்காக நாள் 4க்கு 3 பணம் வீதம் 12 பணம்.

5 (5) 1822 லாயம்

(1) 1822
பூர்ணாஹுதிக்கு முகூர்த்தம்-பூர்ணாஹுதிக்குக் குடுப்பதற்கு முகூர்த்தம்
ஆயுதங்களைக் கழுவ முகூர்த்தம்-ஆயுத பூஜை முகூர்த்தம். யானை, குதிரையின் பூஜை

(2) 1822
கடைத்தெருவின் கொடியைக் கொடுப்பதற்கு முகூர்த்தம்.

---

377. காசிபணம் - காசுபணம் (பணப்பெட்டி ஆகலாம்)

378. ஹேஜிப் - கணக்குப்பிள்ளை (பக்.76)

379 கணக்குச் சரியாக இல்லை.

380. ஆகாசதீபம் - உயர்ந்த கம்பத்தில் வைக்கப்படும் விளக்கு

381. மராமத்து இலாகா - இமாரதி மகால்

382. காமாட்டி - வேலையாள்; மண்வெட்டுவோன்

383. மெய்யாடு - சிற்றாளிகளிடத்து வேலைவாங்குபவன் (குத்தகைக்கு விடாமல் சொந்தமாக வேலை செய்தல்)

*(3) 1822*
*பிருதுகளை அவிழ்ப்பதற்கு முகூர்த்தம்.*

*(4) 1822*
*ஆயுதங்களைத் தூக்குவதற்கு முகூர்த்தம்*

*(5) 1822*
*வன்னிமரத்தை[384] நடுவதற்கு முகூர்த்தம்*

*(6) 1822*
*தரங்கம்பாடி துறைமுகம் முகூர்த்தம்.*

*மேன்மையான பாக்கித்[385] துகையை சக். 2500க்குத் தங்கம் ரூபாய்[386] 259க்கு ஒன்றுக்கு 9-6[387] ஒற்றைப் பணத்தின் 56 பங்கில் 9 பாகம் வீதம் 2490-5-5/8 944-6-0 கும்பனி ரூ. 10 தங்கம் ரூபாய்[388] 2க்கு ஒன்றுக்கு 5 ரூபாய் வீதம் 4-11/16 அஸ்ஸல் ரூபாய் 14-5/8*

*5-1822*
*(7) திருஷ்டி தோஷம்[389] பரிகாரஞ் செய்ய மாடுகள் 8க்கு உப்புபடி-2, து. பருப்பு படி-1 = 3 மிளகாய் சேர் 3, து. பருப்பு சேர் 1 1/2, மருதாணிவிரை சேர் 1 1/2, து. பருப்பு சேர் 3/4*

*(8) 1822*
*விஜயதசமிக்கு, ம கா.ஸ்ரீ.ஸ்ரீ. சாயேப் அவர்களும் சி.சிவாஜி ராஜா சாயேப்பும் ஸகல எடுபடிகளுடன் சீமோல்லங்கனச் சுவடிச் சாவடிக்கு [390] போகுவதால் கொடுக்க வேண்டிய பிருதுகளின் ஜாபிதா—கொடியேற்றிய யானை-1.*

*ஈட்டி வகையறா, மேளம் ஸங்கீத மேளம் ஜலதியின்? யானை, அம்பாரியின் யானை[391]*

---

384. வன்னிமரம் நடுதல் - பொதுவிடத்தில் வன்னிமரம் நடுதல் உண்டு. அது வன்னிமன்றம் எனப்படும் (சிலப்.21-5)மணி.6-87 காண்க)

385. மேன்மையான பாக்கி என்பது தோ:.பா (Topha): தரங்கம்பாடிக்காக டேனிஷ்காரர்கள் தஞ்சை அரசருக்கு வழிவழி ஆண்டுதோறும் 2000 சக்கரம் அளித்து வந்தனர் (பக்கம் 146)

386. தங்க ரூபாய் - இது மோஹரா என்றும் கூறப்படும்; 5,7 1/2,10,15 ரூபா மதிப்புடைய மோஹராக்கள் இருந்தன.

387. 9-6 என்பது: தங்க ரூபாயின் மதிப்பு ரூபாய் 10 ஆதல் வேண்டும்; தேய்ந்ததாகையால் மதிப்பு 9 ரூ. 6 அணா ஆயிற்றுப் போலும்.

388. இங்குக் குறித்த தங்கரூபா ஒன்றுக்கு மதிப்பு ரூ.5

389. கண்ணூறு; கண்ணேறு

390. சீமோல்லங்கனச்சாவடி - விஜயதசமி நாளில் அம்பு போடுவதற்குரிய இடம்; விஜய மண்டபத் தியாகராசர் கோயிலிடத்தில் அம்பு போடுவது வழக்கமெனத் தெரிகிறது.

391. அம்பாரி-விதானத்துடன் கூடிய 'யானைமேற் பீடம்'

ஹௌதாவின் யானை[392], தஸ்தாவேஜின் யானை, ரங்காதிங்கா என்னும் யானை, பீரங்கி யானை, சிப்பாயிகள், சண்டைச் சிப்பாயிகள், கொத்தவால் குதிரைகள், சீமோல்லங்கனத்தேர், யுத்தசாலையில் வேட்டு போடுவது, கோட்டையின் மேல் செல்லுகையில்-21, வரும்பொழுது-21, வன்னிமரத்தின் பூஜை[393] செய்யும்பொழுது-21, ஸர்பாஜி? துப்பாக்கிக் குதிரை-1, பீரங்கியை இழுக்க வேண்டிய மாடுகளும் ஆஸாமிகளும் பட்டணத்தை அலங்கரிப்பது, வாழைமரம்-மாவிலை, திருஷ்டிக்கு சுங்கத்திலிருந்து திருஷ்டி சுற்றுவதற்கு, வாணம்-மத்தாப்புக்கள், சந்திர ஜோதிகள்.

*5-1822*
*(8)* தீவட்டிக்கு எண்ணெய் வகையறாக்களைக் கொடுக்கிறது.

*(9) 1822*
மேல வீதியிலுள்ள குஜராத்திகள் புதிய மடத்தைச்[394] செய்தார்கள். அதன் பிரஸாதம் தேங்காய் மூடி-4, வா. பழம்-4

*(10) 1822*
தீபாவளியின் தீர்மானம்.
நிஜம் ஆஸ்விஜ[395] பகுள[396] திருயோதசி[397] முதல் நாள் திருயோதசி பகல் 25 நாழிகைக்கு மேல் சௌ. பாயிசாயேப்மார்கள் எண்ணெய் தேய்த்து ஸ்னானஞ் செய்வது.

அதேநாள் முன் இரவில் மாப்பிள்ளையின் பண்டிகை-சூர்யோதயத்திற்கு முன் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்வது சதுர்த்தி[398] மாப்பிள்ளையின் பண்டிகை.

கார்த்திக சுத்த பிரதமை[399]-பிரதமையின் பண்டிகை
கார்த்திக சுத்த திவிதியை -ப்ராத்ரு த்விதியை[400]

---

392. ஹௌதா - விதானமில்லாத யானைமேற்பீடம்

393. வன்னிமரம் பூசை - வன்னிபத்திரம் (இலை) விநாயகருக்குரிய பத்திரங்களுள் (பச்சிலைகளுள்) சிறந்ததொன்று. பாபத்தைச் சமிக்க (போக்க)ச் செய்தலால் சமி என்றும் பெயருண்டு. இம்மரத்தை வடகிழக்குத் திசையில் வைத்து வளர்ப்பர். இது பகைவர்களை அழிப்பது. ஆகவே இதனை வளர்த்துப் பூசனை புரிவர்.

394. குஜராத்திமடம் 1822இல் மேலவீதியில் ஏற்பட்டது எனத் தெரிகிறது.

395. நிஜஆஸ்விஜம் - சாந்திரமானத்தில் ஏதாவது ஒரு மாதம் இருமுறை வரும்; முதலது அதிகமாசம் என்றும் அடுத்தது நிஜமாசம் என்றும் கூறுவது மரபு. ஆஸ்வீஜம் என்பது ஐப்பசி மாதம்

396. பகுளம் - தேய்பிறை

397. திரயோதசி - 13 ஆம் நாள்

398. சதுர்த்தசி - 14ஆம் நாள்

399. கார்த்திக - கார்த்திகை மாதம்; சுத்தம் - வளர்பிறை: பிரதமை - முதல் நாள்

400. பிராத்ரு - உடன் பிறந்தவன்; திவிதியை - இரண்டாம் நாள்

*13.1822*
*நகர பரிஷ்கார் மஹால்*[401]
*ஹஜாரியில்*[402] *புலிக்கு மண்டம் வகையறா கட்டுவதற்கு*

*தச்சன்- 10க்குச் சக். 1-4 1/4, கொல்லன் -2க்கு சக். 0-3*
*காமாட்டி- 3க்குச் சக்.0-2 3/8, பையன்கள்-3 சக். 0-1 5/16 = ஆக 18*

*14.1822*
திருவையாரின் யானைக்குட்டி சென்னைக்கு டாக்டர் பீ மக்லோட்[403] துரையிடம் செல்லுவதால், கூடப்போகிற ஆசாமி 20 பேருக்குத் தினம் 1/2 பணம் வீதம் 2 சக்.[404].
15.1822
சைதம்பாபூர் அன்ன சத்திரம்[405] ஒரு பசுமாடு காளைக்கன்று போட்டதற்கு நாள் 4க்கு குளிருக்காக சாமான் கொட்டியத்திலிருந்து தற்பொழுது படியினால் அரிசி படி-4 வெல்லம் சேர்-4 சுமார் தேங்காய்-8 கொடுப்பது.

## மூட்டை எண்-140C

*3. 1856*
*(1) குறிப்பு- ஸரஸ்வதி மஹால் (பாண்டார்) புஸ்தகம் எடுக்கிறவன்- சேஷாசலய்யா பரலோகமடைந்தார்.*

*பாடுகிறவர் மீராயீ நாகதலீ பரலோகமடைந்தார்.*

*23.1856*
*நியாயாதீச சபை-தரும ஸபை-முத்ரிதஸபை*[406] *இம்மூன்று சபைகளிலும் நியமிக்கப்பட்ட ஆஸாமிகளின் ஜாபிதா.*

*1.1856*
*18864 13/16 படி நெல்லின் விலை ரூ 60-6-0*

---

401. நகரபரிஷ்கார் மகால் - நகரத்தைத் தூய்மையாக வைத்தலைக் கவனிக்கும் அலுவலகம் ஆகலாம்.

402. ஹஜாரி - வாயில்

403. மக்லோட் என்பவர் துளஜாவின் ஆட்சிக்காலத்தில் 1797 வரையில் ரெஸிடெண்டாகக் குறிக்கப்படுகிறது. இங்குக் குறித்த மக்லோட் ரெஸிடெண்டாக இருந்தவரா அல்லது வேறொருவரா என்று தெரியவில்லை.

404. 20 X 1/2 = 10 பணம்; 10 பணம் 1 சக்கரம்; 2 சக். என்றிருப்பதால் இருநாள்களின் கணக்காகலாம்.

405. சைதம்பாபுரம் என்பது சூரக்கோட்டைக்கு அருகில் இருப்பது. இவ்விரு ஊர்களில் இருந்த சத்திரங்களும் பிற்காலத்தில் ஒருங்கு சேர்க்கப்பட்டன (பக்கம் 277). சைதம்பா என்பவர் இரண்டாம் சிவாஜியின் முதல் மனைவியாவார். இச்சைதம்பா சரபோஜியின் மூத்த பெண்ணின் மகள் ஆவர் (பக்கம் 32). சரபோஜியின் மூத்த பெண்ணின் பெயர் சுலக்ஷணாபாய் ஆகும் (போ.வ.ச.பக்.135).

406. இவை சரபோஜி II காலத்தில் இருந்த நீதிமன்றங்கள் (பக்.167-169).

*2. (1) 1856*
வாத்தியார்-எட்வேர்டு ஜோன்ஸ் அவர்களுக்கு ரூ. 60 சம்பளம்.

*4. 1856*
(1) அபராதம்-வேலைக்கு வராததால். கவிதை செய்கிற ஸைத்ஹீஸேன்ஸைத் ஈஜாபராயீக்கு 10 நாட்களுக்கு ரூ 1.பாடுகிறவன் கிருஷ்ண இராமசாமிக்கு 10 நாட்களுக்கு ரூ. 0-8-0

மிருதங்கம் வாசிக்கிற ஹீரோஜீ கோபால்ராவ் 4 நாட்களுக்கு 0-6-5 பை.ஸேநா துரந்தர் ரா. ராமய்யா, வரஹப்பய்யா[407] தீக்ஷிதர் என்று மோடி எழுத்தில் கையொப்பமிருக்கிறது.

*7.1855*
(1) செட்டைக்காரர்களின்[408] ஜாபிதா
ஆடுகிறவன் காத்ரின்யின்ஸீக்குச் சம்பளம் ரூ. 5, பிடில் வாசிக்கிற யைஸிக்ஜான்சன் சம்பளம் ரூ.15, விலியம் ரௌஸ்[409] வைத்தியர் சம்பளம் ரூ. 25

*(2) 1855*
ஹுஜுர் பங்க் உத்திரவு

தஸ்தாவேஜீ ஆபீஸ்[410] மஹாலோ மஹால்[411] சபைகளில், தேவஸ்தானம், சுங்கம்-மகால் ஆவுசாப் தோட்டம்[412] வகையறா திம்மதி[413] வகையறா பாக்கி இடங்களில் காலை 10 மணி முதற்கொண்டு 11 மணிக்குள் ஆஜராகி அவரவர்கள் பாக்கவேண்டிய வசூல் வகையறா எந்தெந்த வேலைகளைப் பார்க்கவேண்டுமோ, அவைகளெல்லாம் சாயங்காலத்திற்குள் செய்ய வேண்டுமென்று சொன்ன சால்சாப் விஸ்தாரமாக சொன்ன உத்திரவின்படி ஒவ்வொரு இடத்திலும் அப்படி நடக்காமலும் அதற்கு விரோதமாக நடந்தால் அவர்களைக் கண்டிக்கிறதென்றும் கண்டிப்பாய் உத்திரவிடப்பட்டிருக்கிறது.

ஸி.ஐ.டி. மகால்காரர்கள்[414] காலம் நியமமன்னியில் அவர்களுக்கு எப்பொப்போ ஆஜர் பார்க்க வேணுமென்று தோன்றுமோ அந்நேரங்களில் ஹாஜர்[415] பார்த்து, மேற்சொன்ன

---

407. இவர் சிவாஜி காலத்தில் அமைச்சராக இருந்தவர்களில் ஒருவர் (பக்கம் 82)

408. செட்டைக்காரர்கள் - வெள்ளையர்

409. இவர் வைத்தியர்; இவருக்கு மாதவூதியம் ரூ.620/-(மூட்டை எண் 114c–118–1)

410. தஸ்தாவேஜி ஆபீஸ் என்றது தப்தர்கானாவை (பக்கம் 453)

411. மஹாலோ மஹால் - மகால்களுக்குள் மகால்

412. ஆவுசாப் தோட்டம் என்றது 96 தோட்டங்களில் (பக்கம் 507-508) எது என்று தெரியவில்லை. ஆவுசாப் என்பது அஹல்யாபாயியை.

413. வழக்குமன்றத் தீர்ப்பில் கையொப்பம் இடும் அலுவலர் திம்மதி எனப்பட்டார் (பக்கம் 76)

414. ஸி.ஐ.டி.மகால் என்றது ஜாசுதமகாலை (பக்.453)

415. ஹாஜர் - வருகை

உத்திரவிற்கு விரோதமாக நடக்கிறவர்களின்னார் என்று-தெரியும் படியாகவும், இன்ன மகாலைச் சேர்ந்தவர்கள் என்றும் எழுதிக்கொண்டு தெரிவித்துக் கொண்டு வரவேண்டியது.

*8-1855*

*(1) ஆவுசாயேப் தோட்டத்தில் வேலை பார்க்கும் காசீனாத அப்பாஜியைக் கூப்பிட்டு அனுப்பினதற்கு அவர் அலக்ஷியம் செய்து வராததினால் அவர் வந்து பார்க்கிறவரையில் அவருடைய சம்பளத்தைப் பிடிக்கிறதென்று ஸர்கேல்[416] உத்திரவிட்டிருக்கிறார்.*

*11-1855*

*(1) ரா. முத்தோஜி கோவிந்தராவ்[417] அவர்களுக்கு மாதமொன்றுக்குச் சம்பளம் ரூ. 49 வீதம் 331-13-0*

*ரா. வராஹப்பய்யா ராமய்யா[418] அவர்களுக்கு மாதமென்றுக்கு ரூ 95 வீதம் 642-13-0*

*12-1801*

*(1) பெரிய கோவில் ஸ்வாமிக்கு நித்யப்படி மொயின் மாதம் ஒன்றுக்குச் சக்.200*

*(2) ஆங்கிலேயே தேதி 1801 ஜுன் 30உ முதற்கொண்டு*

*(3) தாஸ்தான் மஹால்[419] தோட்டத்தில் சௌ. முத்துலக்ஷிமிபாய் அம்மா, லக்ஷம் பிராமண போஜனத்திற்காக தக்ஷிணை சக்ரம் வகையறா பணமொன்றுக்கு 24 1/2 காசு[420] வீதம் சக்.54க்கு 12250 காசு[421]*

*(4) மைலி ரூபாயின் 1/2 பணம்[422] கொடுத்த வகையில் 195-7 பணத்துக்கு முழுப்பணம் சக். 97-8 1/2*

*(5) ம கா.ஸ்ரீ.ஸ்ரீ திவான் சாயேப் பெரியகோவிலில் 108 லிங்கங்களைப் பிரதிஷ்டை செய்ததற்கு நிரந்தரம் பூஜை நடக்க வேண்டி, மேஸ்தர் ஹாரிங்டன்[423] துரையினிடம் பணம் கொடுத்து, வட்டியின் துகையில் பூஜை நிவேதனம் நடக்க வேண்டியதற்காக விராகன் புலி- 5000*

---

416. நீலகண்டராவ் ஆனந்தராவ் ஜாதவ் ஆகலாம்.

417. முத்தோஜி கோவிந்தராவைப் பெரிய அண்ணா என்பர் (பக்.911)

418. இரண்டாம் சிவாஜியின் அமைச்சர்களில் ஒருவர். (பக். 82)

419. தாஸ்தான் மகால் - நெற்களஞ்சியம் இருக்கும் இடம்.

420. பணம் ஒன்றுக்கு 32 காசு என்பது பொதுவிதியாக இருக்க இங்குப் பணமொன்றுக்கு 24 1/2 என்றது எங்ஙனம் என்று தெரியவில்லை.

421. இக்கணக்குத் தவறு.

422. மைலி ரூபாயில் 1/2 பணம் என்பதால் எத்தனைப் பணம் ஒரு மைலி ரூபாய் என்பது தெரிய வாய்ப்பில்லை.

423. மேஸ்தர் ஹாரிங்டன் என்பவர் கம்பெனி அலுவலர் அல்ல; தனிப்பட்டவர்; சென்னையில் இருந்த ஒரு வியாபாரி (பக்கம் 196)

*(6) பெரிய கோவில் ஸ்வாமிக்கு இலக்ஷம்-எருக்கம் பூ*
*கொங்கணேஸ்வர சுவாமி[424] கோவிலிலுள்ள ஸ்ரீசனீஸ்வர ஸ்வாமிக்கு இலக்ஷம் செம்பறத்தம் பூ*
*ஸ்ரீபிரதாப் வீர ஹனுமர்[425]ருக்கு இலக்ஷம் துளசி. இதற்கு அர்ச்சனைக்கு தக்ஷிணை 5 பணம் நாளொன்றுக்கு அர்ச்சனை ஒன்றுக்கு 1 பணம்.*

*(7) மாலே என்னும் ஊருக்குப் போய் குதிரைகளைக் கொண்டு வருவதற்காகச் சென்றவர்களுக்குப் படிச் சிலவு.*

*(8) பெரிய கோவிலிலுள்ள ஸோமாஸ்கந்த குருக்களுக்கு மாதத்திற்கு சக். 7 சம்பளம். பட்டணத்தைச் சீர்திருத்த சிலவு சக். 40*

*(9) பெரிய கோவில் சுவாமியின் தேருக்குப் புதிய காடா(சக்கரம்) செய்வதற்குச் சக் 500, தேர்த் திருநாளுக்காக சக். 3150*

*(10) ஸ்ரீவேதாரண்யேஸ்வர[426] ஸ்வாமியின் கோவிலிலிருக்கும் காசி தேசத்தின் யோகீஸ்வரருக்குப் பிராமண போஜனத்திற்காகத் தினம் 1க்கு 12 பிராமணாளுக்குத் தினம் சக் 1-2 பணம் வீதம் மாதம் 1க்கு 36 சக்.*

***12.1801***
*(11) இலக்ஷப்பிராமண போஜனத்திற்குச் சாமான் வாங்க சக். 5000*

*(12) மராமத்து இலாகா[427] பழைய சிவகங்கையின் வாரியின் ஒடப்பைக் கட்டுவதற்குச் சக்.50*

*(13) சௌ. முக்தாபாய்[428] பெரிய கோவிலில் இலக்ஷம் விளக்கேற்றினதற்குச் சிலவு சக். 21*
*சௌ. மா. அஹில்யா பாயி[429] சாயேப் அவர்களிடம்-பெரியகோயில் சுவாமிக்கு இலக்ஷம் தாமரைப்பூ அர்ச்சனைக்காக தினமொன்றுக்கு 1 பணம் தக்ஷணை.*

***14. 1802***
*(1) ம கா. ஸ்ரீ. ஸ்ரீ. சரபோஜி ராஜா அவர்களின் உத்திரவு*
*கை. வா. ரா. ஸ்ரீதுக்கோஜி[430] ராஜாவின் பெண். மா. ஸ்ரீபார்வதி பாயியின் நாட்டுப் பெண்.*

---

424. மேலவீதியில் உள்ளது (பக்.213இல் 3)

425. இவர் கோயிலும் மேலவீதியில் வடகோடியில் உள்ளது (பக்.213இல் 9)

426. வேதாரண்யம் திருமறைக்காடு என்றும் வழங்கப்பெறும்

427. மராமத்து இலாகா என்பது இமாரதி மகாலை (பக்கம் 458)

428. முக்தாபாய் - இரண்டாம் சரபோஜியின் காமக்கிழத்தி; இவர் வேண்டுகோட்படி இவர் இறந்ததும் ஒரத்தநாட்டில் ஒரு சத்திரம் இவர் பேரால் அமைக்கப்பட்டது (போ.வ.ச.பக்.136)

429. அஹில்யாபாயி - இரண்டாம் சரபோஜியின் மனைவி (போ.வ.ச.பக்.134).

430. கை.வா - கைலாசவாசி; துக்கோஜி - இவர் ஏகோஜியின் மூன்றாவது மகன் ஆவர். இவர் 1728-1736 வரை ஆட்சி செய்தவர். இவர்க்குப் பார்வதிபாயி என்ற மகள் இருந்தமை இக்குறிப்பால் தெரிகிறது (மூட்டை எண். 32c - 14)

மா. அம்பிகா பாய் சக். 12 1/2

கை. வா. ரா. ஏகோஜி ராஜாவின் பேரன் கோவிந்தராவ்காட்கே[431] சக். 25

கை. வா. ரா. பிரதாப் சிங்கு ராஜா அவர்களுடைய ஸ்திரிகளிருவரின் தம்பி சக். 33-3 1/4

15.1855
(1) தாஸ்தான்[432]கோட்டை தஞ்சாவூர் ரூபாய் 1க்கு 27 3/8 படி நெல்.

(2) 1855
ஓலை எழுதுகிற-நெல் களஞ்சியத்திலிருந்து 3/4 படி சதாசிவ சுப்பாபட் 3/4 படி மன்னார்குடி சீதாராம சாஸ்திரி = 1 1/2 படி.

(3) 1855
வேதமூர்த்தி சிவ். பாளபட் கோவிந்தபட்கோசாமி[433] 3 3/4 படி நெல்

16. 1855
(1) பாடுகிறவர்கள்

கேமிஸ்துரை, மனமேல் ஜேப்ராயி, யைஸிக் ஜான்ஸன் இவர்களுக்குத் தஞ்சாவூர் கோட்டை தாஸ்தான் மகாலிலிருந்து நெல்லு கொடுப்பது.

19.1855
(1) பாட்டு வித்வான்களில்
கேமிஸ் துரை ரூ. 9-4-4, மாத்ரபயின்ஸி ரூ. 3-4-10, ரொஜேப் ப்ராஞ்ச்சீஸ் ஹெகோபர் ரூ. 1-12-4 அர்சிபல் ப்ராஞ்ச்சீஸ் ஹேகோபர் ரூ. 1-12-4 = 16-1-10

(2) 1855
முகாஸா[434] கடப்புகார்[435]-கலம் 13 அணா விதம் 8000 கலம்

(3) 1855
தாஸ்தான் மஹால் கோட்டை தஞ்சாவூர் ரூபாயொன்றுக்கு 33 13/16படி விதம் ஒரு மாதத்திற்குப் பாவலோக்களுக்குக் கலம் 6227 நெல் கொடுப்பது.

---

431. கோவிந்தராவ் காட்கே (பக்கம் 18)

432. தாஸ்தான் மகால் - நெற்களஞ்சியம் (பக்கம் 453–12)

433. பாளபட் - பாளம்பட் என்றிருத்தல் வேண்டும். இங்குக் குறித்த கோவிந்தபட் கோசுவாமி என்பவர் 19 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியின் வாழ்ந்த இசைவல்லுநர் போலும்.

434. முகாஸா - இரண்டாம் சரபோஜி தனக்குரிய தனியுடைமையாக வைத்திருந்த நிலங்கள்; இவற்றுக்குத் தீர்வை இல்லை.

435. கடப்புகார் - கடப்பநெல் - கருங்குறுவை நெல்

*20.1828*

*(1) டபீர் குளக்கரை[436]யில் வசிக்கும் ஸ்வயம் பிரம்ஹ ஸ்வாமி அவர்களுக்கு சக். 4*

*(2) 1828*

*கருத்தட்டாங்குடியிலிருக்கும் முகுந்த ஸ்வாமிக்கு சக்.4*

*(4) 1828*

*சி. ரா. சிவாஜி ராஜா சாயேப் அவர்களிடம் கணேச புராணத்தின்[437] பட்டாபிஷேகத்திற்கு உத்திரவின்படி சக். 5 அதிகம் பூஜை தக்ஷிணை வகையறாவுக்காக 20 1/2 சக் கொடுக்கிறது.*

*(5) 1828*

*பஜன சாலையின் விடோபாவின்[438] மூர்த்தியை மாடியின் கீழே கொண்டுவரும் பொழுது 1/2சக்.கொடுப்பது.*

*22.1843*

*(1) (கவனம்) கவிதை செய்யும் கிருஷ்ணாஜி ஜிவாஜி அவர்களுக்கு மாதத்திற்கு ரூ. 5 வீதம்.*

## மூட்டை எண்-141 C

*15.1785*

*மாதோஸ்ரீ த்ரௌபதாபாயி[439] வசம் ரா, திவான் சாயேப்[440] அவர்களுக்கு ஆரோக்ய ஸ்னானம்[441] செய்து வைத்ததற்கு வேண்டுகோளுக்குச் சிலவு சக். 85-3 3/4*

## மூட்டை எண்-142 C

*16.1811*

*(1) கல்யாண மகாலில்[442] எழுத்தின் அச்சுவேலை நடப்பதால் நகாசுகாரர் அஸாமி 4க்கு.*

*(2) ஆங்கிலேய சுப்புராவ் அவர்களுக்குத் தீவட்டிக்கு எண்ணைய் 19 சேர் கொடுக்கிறது.*

---

436. டபீர்குளம் - தஞ்சாவூரின் கிழக்கு எல்லையில் உள்ளது.

437. இது அச்சிடப் பெறவில்லை; சமஸ்கிருதத்தில் எழுதப்பட்ட சுவடி

438. விட்டோபா - விட்டோபா கோவில் கீழவீதியிலுள்ளது (பக்.213இல் 23). விட்டோபா திருவுருவத்தைப் பண்டரிபுரத்திலிருந்து இரண்டாம் சரபோஜி கொணரச்செய்து கி.பி.1819 இல் தஞ்சையில் தாபித்தார் (பக்.189) விட்டோபா என்பது செங்கல் மேல் எழுந்தருளியவர் என்று பொருள்படும் என்பர். (Vitobha - he who stood upon a brick- Kincaid, P.A. & Parasnis,D.B., A History of the Maratha People, 1968, page 105)

439. திரௌபதாபாயி - பிரதாபசிங்கரின் மனைவி; இரண்டாம் துளஜாவின் தாய்.

440. திவான்சாகேப் - இரண்டாம் துளஜா

441. ஆரோக்ய ஸ்நானம் - நோய் தீர்ந்தபின் செய்யப்படும் ஸ்நானம்.

442. கல்யாண மகால் - இரண்டாம் சரபோஜியின் காமக்கிழத்தியர் தங்கியிருந்த இடம் (பக்கம் 329)

*19.1811*

**(1) இலகு சந்தனாதி தைலத்தின் சாமான் விவரம் :**

*மலாகா சந்தனக்கட்டை, வெட்டு வேர், நகங்கள்? கோஷ்டம், அதிமதுரம், கல்பாசீ, வேகம்பர் சந்தனக்கட்டை, மஞ்சிஷ்டை, ஸரளு? தேவதாரம், சவ்யம், ஏலக்காய், இலவங்கப்பத்திரி, நாககேஸரம், சமுத்திரபச்சை, சிலாரஸம், ஓரம், ஜடாமாஞ்சி, வால்மிளகு, தொட்டாச்சுருங்கி வேர், கோரைக்கிழங்கு, மரமஞ்சள், விரளி மஞ்சள், நன்னரி வேர், கடுகு ரோகணி, கிராம்பு, கிருஷ்ணாகர் கட்டை, குங்குமப்பூ, ஹரேனுக?*

*19 (1) வெட்டிவேர், இலவங்கப்பட்டை வகை ஒன்றுக்கு 9 டாங்க்*

*ந. எண்ணைய்-10 சேர், கொம்பு அரக்கு-5 சேர், பசும்பால்-1 மனு*

**(2) மகாசந்தனாதித் தைலத்தின் சாமான்களின் ஜாபிதா :**

*மலாகா சந்தனக்கட்டை, வெட்டிவேர், அதிமதுரம், நெல்லிமுள்ளி, ——,நன்னாரி வேர்,பேராமுட்டி வேர், வகைக்கு 7 சேர், பசும்பால் மனு-1, பரமவழுக்கைகட்டு-3, தண்ணீர் விட்டாங்கிழங்கு மனு-4, கட்டு-4, செவ்விளநீர்-40,ந.எண்ணைய்-10 சேர், மஞ்சிஷ்டை, காட்டாத்திப்பூ, நீலோத்பலத்தின் கிழங்கு, நீலோத்பலத்தின் தண்டு, ரக்தோத் பலத்தின் கிழங்கு, ரக்கோத் பலத்தின் தண்டு, தாமரைக்கிழங்கு, தாமரைத்தண்டு, வேகம்பூர் சந்தனக்கட்டை,பழம்பாசீ, வாணஞ் செய்யும் மூங்கிலின் வேர்,| 19 (2) தர்ப்பையின் வேர், கரும்பின் வேர்,கர்நாடக சிங்கி*

*ஊசி பாலை வகைக்கு 5 டாங்க்*

*குங்குமப்பூ, பச்ச கற்பூரம், ஈரமான புனுகு, ஜவ்வாது கஸ்தூரி வகைக்கு 10 டாங்க்*

*5.1811*

*(1) லாயம்*

*லக்ஷ்மிவதானென்னும் குதிரைக்கு வாயுவுக்காக உடம்பின்மேல் தைலம் தடவினதற்கும் உள்ளுக்குக் கொடுப்பதற்கும்., கடுகு ரோகிணி 3/4 சேர், களிப்பாக்கு 3/4 சேர்,, ஏலக்கா 3 1/2 டாங்க், கிறாம்பு 3 1/2 டாங்க்,, ஜாதி பத்திரி 31/2 டாங்க், பெரிய வெங்காயம் 31/2 டாங்க், பித்த ரோகணி3·1/2 டாங்க், புகையிலை 3 சேர் 9 டாங்க், சாராயம் 10 1/2 சேர், வெற்றிலை 150*

*(2) 1811*

*யுத்தச் சிப்பாய்களுக்குப் பைபர்பந்த்? செய்வதற்கு யுத்தசாலையிலிருந்து 6050 காவித் துப்பாக்கிகள், 220 சக்குமுக்கிக் கல்லுகள்[443], 100 மோரடி?, 60 நாடதோல்?, பழையதை வாங்கி அதற்குப் பதிலாக புதிய துப்பாக்கிகளைக் கொடுப்பது*

*9.1811*

*நாகபஞ்சமிக்காக[444] ஒரு ஜோடி கையின் விரல்களுக்குச் சுற்றுச் சுற்றுவதைத் தயார் செய்ய*

443. சக்குமுக்கிக்கல் - சக்கிமுக்கிக்கல் - நெருப்பு உண்டாக்க பயன்படுத்திய ஒருவகைக்கல்

444. நாக பஞ்சமி - இவ்விரதம் சிராவணம் அதாவது ஆவணி மாதத்தில் மறைமதிக்குப் பிறகு 5ஆவது நாளில் வருவது. அன்று பாம்புப் புற்றுக்குச் சென்று வழிபாடு செய்து புற்றில் பாலை வார்ப்பது பழக்கம் (பக்கம் 308).

*இங்களீக 3/4 சேர், அரிதாரம்[445] 1 சேர்,, பூ நீலம் சேர் 1/4 9 டாங்க், நல்ல அரக்கு 3 சேர்,*

***10-1811***

*(1) ஜான்பாதரி சாயேப்[446] அவர்களுடைய கலியாணத்திற்காக இனாம் 100 புலிவராகன்.*

*(2) குழந்தைகளுக்கு உடம்பு சரியாகயில்லாததால் 1 பணம் எடை கஸ்தூரியைக் கொடுக்கிறது.*

*(3) 1811*

*ஹுஜுரின் பாசிங்கு[447] (கலியாணத்தில் பெண், மாப்பிள்ளைகளின் நெற்றியில் கட்டுகிறது) வேலைக்காகத் தங்கம், வெள்ளி வர்த்தி வகையறாவின் விலையும் கூலியும்.*

***11.1811***

*(1) ஸரஸ்வதி மஹாலிலிருந்து*

*அமரப்புத்தகத்தின்[448] நகல்-1, சப்த புத்தகத்தின் நகல்-1, ஸமாஸசக்ர[449] நகல்-1 இவை 3ம் மாப்பிள்ளை[450]யிடம் கொடுத்துத் திரும்பி வாங்குகிறது.*

*(2) 1811*

*சென்னப்பட்டணம் வெள்ளிப் பெரிய பணம் 100க்குப் பணமொன்றுக்கு 21/2 பணம் வீதம் 25 சக்கரம்.*

*(3) 1811*

*இராஜ்ய குதிரைகளில் ஒரு குதிரைக்குப் பேகம்மை காண்ட்டே?என்னும் ரோகம் வந்ததினால் உருண்டைகள் செய்து உள்ளுக்குக் கொடுக்க.*

*காசிக்கட்டி 9 டாங்க்,மிஸரீ 9 டாங்க், அபின் 9 டாங்க்,இராஸ சிந்தூரம் 9 டாங்க்*

*11 (3) நஹசர்மாஹன் சேர் 10-9 டாங்க், அதிவிடையம் 9 டாங்க், இஞ்சி சேர் 2, நல்ல வெல்லம் சேர் 1/2,கோரோசனம்[451] 2 டாங்க், குங்குமப்பூ 2 டாங்க், பூலாங்கிழங்கு 9 டாங்க், அதிமதுரம் சேர் 1/4 9 டாங்க், அகல்கரா 9 டாங்க், காயம் 9 டாங்க், எலுமிச்சம் பழம் 10, அவல் படி 1/2, முதபகி[452]யிலிருந்து பானை 1ம் சட்டி 1ம் = 2*

---

445. அரிதாரம் - ஒரு மருந்துச் சரக்கு; (மான் வயிற்றில் பிறக்கும் கத்தூரி அல்ல)

446. ஜான் பாதரி - தரங்கம்பாடியில் ஆங்கிலப்பள்ளி நடத்தி வந்தவர் ஆவர் (பக்கம் 211, 266)

447. பாசிங்கு - திருமணத்தில் பெண்,மாப்பிள்ளையின் நெற்றியில் கட்டும் அணி.

448. அமரம் - இது வட மொழி நிகண்டு; முதற்குறிப்பினால் பெயர் பெற்றது.

449. ஸமாஸ சக்ரம் - தொகைகளின் இலக்கணம் கூறும் நூல் போலும்.

450. இரண்டாம் சரபோஜிக்கு ஐவர் பெண்கள் இருந்தனர். இங்குக் குறித்த மாப்பிள்ளை யார் என்று தெரிய வாய்ப்பில்லை.

451. கோரோசனம் - பசு வயிற்றினின்று எடுக்கப்படும் மஞ்சள் நிறமுள்ள வாசனைப் பண்டம்.

452. முதபக் - சமையல் கூடம் (முபதக்-பக்கம் 453)

*(4) 1811*
*கலியாணத்திற்குத்[453] தட்டு வைப்பதற்கு வேண்டிய சாமான்:-*

*தேங்காய்-19, கொப்பரை-3, துருஞ்சு-3, மாம்பழம்-12, சக்கர நார்த்தைப்பழம்-31, எ.பழம்-120, வாழைப்பழம்-160, வெற்றிலை-360, பாக்கு-1 சேர், மோபதி என்னும் சர்க்கரை-6 சேர், இராயபுரி சர்க்கரை-1/2 சேர் 9 டாங்க், சர்பத்கானா[454]விலிருந்து 5 மாதுளம்பழம், ஜிராத்கானாவிலிருந்து 15 மூங்கித்தட்டுகள்.*

*11-1811*
*(5) நவவித்யா கலாநிதி பள்ளிக்கூடம்[455] கவாத் செய்யும் இடம் விஷயம்*

*(6) 1811*
*ஜிராத்கானாவின் மண்டபம் செப்பனிடுவதற்கு அஸாமி 10 பேர் கூலி-6 பணம்.*

*17 (1) தருமஸபைக்கும், முத்திரித ஸபைக்கும் சொல்வி 100 ரூபாய்க்குள்ளிருக்கும் விவாஹார[456] முத்திரித ஸபையில் தாகல் செய்து தீர்ப்பது.*

*100 ரூபாய்க்கு மேற்பட்ட விவஹாரம் தருமஸபையில் தாகல் செய்து தீர்ப்பது.*

*(2) நாயின் வைத்யர் குமாரஸாமியின் கலியாணத்திற்குத் தட்டின் ஜாபிதா.*

*(3) வைத்தியர் குட்டப்பாவின் குமாரரிடம் நாயிக்கு லேகியம் செய்ய சாமான் கொடுக்கிறது.*

*வட்டத்திருப்பி சேர் 1/4, காட்டாத்திப்பூ சேர் 1/4, கோரைக்கிழங்கு சேர் 1/4, அதிவிடயம் சேர் 1/4, இலவம் பிசின் சேர் 1/4*

*(4) யானை மஹால் சிவபிரஸாதம் என்னும் யானைக்குட்டிக்கு வாயுவினால் ஜ்யாஹாரபாத? என்னும் ரோகம் வந்ததினால் உள்ளுக்குக் கராம் குடுக்க மகம்மது வசம்.*

*சுக்கு 2 சேர், அரிசிதிப்பிலி 2 சேர், பூண்டு 2 சேர், வெல்லம் 2 சேர், கந்தவீட்? 2 சேர், தேன் 2 சேர், மிளகு 2 சேர், = 14*

*வலிப்பிரஸாத என்கிற யானைக்குட்டிக்கு நஜாவினால்? கன்னமும் கடவாயும் வீங்கியிருப்பதால் உள்ளுக்குக்காரம் கொடுக்க ஜபானிஹுஸைனிடம்*

---

453. கல்யாணம் என்பது இரண்டாம் சரபோஜியின் மூன்றாவது மகள் பாயம்மா பாயியின் திருமணம் ஆகலாம். பாயம்பாபாயி பிறந்தது 1803 ஆகும் (போ.வ.ச.பக்.138)

454. சர்பத்கானா - குளிர்பானம் தயார் செய்யுமிடம் (பக்கம் 452)

455. இது தஞ்சைக் கோட்டையிலிருந்த கல்வி நிலையம் (பக்கம் 240)

456. விவகாரம் - வழக்கு; தரும சபை, முத்திரித சபை (பக்.168-169)

மிளகு சேர் 1, பூண்டு சேர் 1, மஞ்சள் சேர் 1, சுக்கு சேர் 1, அரிசிதிப்பிலி சேர் 1, இந்துப்பு சேர் 1, இஸ்வர வேர் சேர் 1, பொடுபத்திரி சேர் 1, வெள்ளருகு சேர் 1, இந்திர ஜோதி சேர் 1, பொரசவிரை சேர் 1, காயம்ஹீரா?நல்லது சேர் 1, மைசாகூர்குக்கில சேர் 1,டாங்கணகார்? சேர் 1, = 12

(5) லாயம்-திருவையாரில் சீக்கான குதிரைகளுக்குத் தடவுவதற்கு மாசலை.

பாதரஸம் 40 வராகனிடை, அரிதாரம் 8 வராகனிடை, ஜாதிக்காய் 8 வராகனிடை, அபின் 4 வராகனிடை, தைலப்பாஷாணம் 8 வராகனிடை, வெள்ளைப்பாஷாணம் 8 வராகனிடை, டாங்கணகார் 1/2 சேர், ஏலம் 1/2 சேர், சன்னலவங்கப்பட்டை 1/2 சேர், கண்டுரி கொளுந்து வேர் 1/2 சேர், விளக்கெண்ணெய் 3 சேர், விறகு கட்டு-2, பானை-2.

17-1811
(5) நீளா என்கிற குதிரைக்கு 3 பத்துப்போடுவதற்கு

ருசியில்லாத மண்(ஜாமதார்கனாவிலிருந்து) சேர்-1, சாம்பிராணி சேர்-3, உப்பு சேர்-1 1/2, புளி சேர்-12,செங்கொட்டைசேர்-2, சௌக்காரம் சேர்-1/2, ஆட்டின் ரத்தம் சேர்-2, சீயக்காய் சேர்-1, பூந்திக்கொட்டை சேர்-1, வெண்ணெய் சேர்-1/4,

மசாலை
சுக்கு சேர்-1, டாங்களகாரம் சேர்-1, வெல்லம் சேர்-3, குங்கிலியம் சேர்-1, அபின் வராகனிடை-4, மாசிக்காய் வராகனிடை-1, 'கைத்' என்னும் குதிரைக்குப் பத்துப்போட
'கைத்' என்னும் குதிரைக்குப் பத்துப்போட
பாலைப் பட்டை-1, பெரிதுபாதி-1, கோழி முட்டை-25, சன்ன லவங்கப் பட்டை சேர்-1/2, உப்பு படி-1 1/2, உளுந்து-1/2படி,
மசாலை சுக்கு சேர் -1, வெல்லம் சேர் - 2, சிக்பு...குக்கில சேர் - 1, அபின் வராகனிடை - 1, கிராம்பு, சேர் - 1, சீயக்காய் சேர் - 1, பூந்திக் கொட்டை சேர் - 1
17-1811
(6) பிரசவித்தவளுக்குக் கொட்டியத்திலிருந்து 1 பணம் இடை கஸ்தூரியும், மராமத்து இலாகாவிலிருந்து வேப்பஞ்சிராய் ஒரு கூடையும் கொடுக்கிறது.

(7) 1811
பழைய கணக்குகளைக் கட்ட பழயதைக் வாங்கிக்கொண்டு புது 20 துண்டுகளை ஜாமதார்கானாவில் கொடுக்கிறது..

(8) 1811
வண்டி மகால்[457] உஷ்ணத்தினால் மாடு உயிருடனிருக்க முடியவில்லையாகையால் வயிற்றில் குடுக்க தினமும் 2 சேர் பால், பருத்திக்கொட்டை சேர் 2 ஒரு வாரத்திற்குக் கொடுப்பது.

(9) ஹிந்துஸ்தானி பாடுகிறவர் மீர்ரஹிமான் குழந்தைக்கு முடியிறக்க, நாகூருக்குப் போய்வர விடுமுறை வேணுமென்று.

457. வண்டிமகால் - மாடுகள் கட்டப்படும் தட்டிமகாலாக இருக்கலாம்.

*20.1811*

*(1) ஹுஜூர் பங்-*

ஹுஜூருடைய நாய்க்குச் சொறிசிரங்கு வந்திருப்பதால் எண்ணைய்தடவித் தேய்ப்பதற்கு அறப்பு தினந்தோறும் 101/4 சேர் கொடுக்கிறது.

*(2) ஜாபிதா ஆரோக்யமாக யிருக்கட்டும் தையிலஞ் செய்ய சாமான்கள் ஜாபிதா*

மிளகு 9 டாங்க், ஜீரகம் 9 டாங்க், கல்கிரால் பீனி 4 1/2 டாங்க், சிறுநாகப்பூ 4 1/2 டாங்க், மல்லி 1/4 சேர், பூலாங்கிழங்கு 9 டாங்க், மரமஞ்சள் 9 டாங்க், வேப்பாளம்பட்டை 4 1/2 டாங்க், பெருஞ்சீரகம் 4 1/2 டாங்க், வெண்குங்கிலியம் 4 1/2 டாங்க், சாம்பராணி 4 1/2 டாங்க், வெட்டிவேர் 4 1/2 டாங்க், காஸா ஏலம் 4 1/2 டாங்க், ந. எண்ணை 4 1/2 சேர், பசும்பால் 2 சேர், எலுமிச்சம்பழம் 10, இளநீர் 2.

*21.1811*

*(1) ஹுஜூர் பங்க்*

திருவையாரில் படகின் வேலைக்கு வேண்டிய சாமான்கள்:-

கட்டு ஆணி, காசரங்கி?, வடணி?, வச்சி ஆணி வகையறா

*(2) 1811*

திருவையாரில்-ஆங்கிலேயர்களின் சாப்பாடு செய்வதற்கு வேண்டிய சாமான்களின் விவரம் இராயபுரி சர்க்கரை-1/4மனு, நாபாது சர்க்கரை-1/4 மனு, வாதாங்கொட்டை-5 சேர், நெய்-15 சேர், ஜாதிக்காய் வராகனிடை-1, ஜாதி பத்திரி வராகனிடை-1, கிராம்பு-2 டாங்க், ஏலக்காய்-2 டாங்க், எ. பழம்-10, தேங்காய்-5.

*23.1811*

*(1) விண்ணாற்றின் படகு செய்ய சாரங்கபாணி அய்யாவிடம் சக். 100*

*(2) 1811*

லாயத்திலுள்ள லக்ஷிமி ராஜ ஸம்ராட்[458] என்னும் குதிரைக்கு வாய்வுக்காகத் தைலம் செய்து ஸர்வாங்கமும்[459] தடவி வழிக்கிறது.

ந. எண்ணை சேர் 2, வேப்பெண்ணை சேர் 2, விளக்கெண்ணை சேர் 2, கரஞ்ச? எண்ணை சேர் 2, வெள்ளைப் பாஷாணம் 4 1/2 டாங்க், செவ்வீர் 4 1/2 டாங்க், இரஸ கற்பூரம் 4 1/2 டாங்க், சித்தரத்தை 4 1/2 டாங்க், மனச்சிலை 4 1/2 டாங்க், வெள்ளைநாபீ 4 1/2 டாங்க், மோர் (கூ) தூத் 4 1/2 டாங்க், சித்திரமூலம் சேர் 1, நெல்லிக்காய் கந்தகம் 9 டாங்க், வெற்றிலை 200.

இரண்டுவாரத்திற்கு

சுக்கு சேர்-1, சித்தரத்தை சேர்-1, கடுகு ரோகணி சேர்-1, வெள்ளை அருகு சேர்-1, மிளகு சேர்-1, பூண்டு 1 1/2 சேர், பெரம்பின் வேர் 1 சேர், சோப் சீனி 1 சேர், காயம் டாங்க் 14, டாங்கண? காரம் 4 டாங்க் 14.

---

458. ஸாம்ராட் - ஏகாதிபத்தியம்

459. ஸர்வாங்கமும் - எல்லா உறுப்புக்களுக்கும்.

*(3) லாயத்தில்-லக்ஷிமிராஜ ஸம்ராட் குதிரைக்கு வாயுவுக்கு தையிலஞ் செய்ய இலை தழை வகையறா.*

**நுணா, தழுதலை, அழிஞ்சி, விழுதி, ஆடாதொடை, உத்தாமணி, எருக்கஇலை, கருடன் வேப்பிலை**

***23.1811***
*(4) அன்னக் காவடி காவடிக்கு அரண்மனையின் பெரிய கோவிலுக்கடுத்த சந்திலுள்ள பழைய செங்கலை வண்டியிலேற்றிக் கொண்டு போகச் சிலவு 2 1/2 பணம்.*

***24 1811***
*(1) ஸமுத்திரம் என்னும் ஏரியிலுள்ள கப்பல் பழுது பார்க்க மராமத்து இலாகாவிலிருந்து கருங்காலிப் பலகை-17 இரும்பு இடை 3 மனு.*

## மூட்டை எண் 144-C

***6.1804***
*நாகோஜி ஸகோஜி ஹவால்தாரானவர் நாகபூருக்கு பாஜ்[460] என்னும் பறவையை வாங்கி வருவதற்காகப் போனதற்குச் சென்னப்பட்டணம் வரையில் சென்று "ஷாங்கோஷே" வகையறா ஜந்துக்களை வாங்கி வந்த விஷயம்.*

*சீமையிலிருந்து வாங்கி வந்த ஜந்துக்கள்*

*சீமைக் குரங்கு, வங்காளம் குரங்கு, சீமை நரி, சீனாவின் கோழி*

***8.1843***
*(1) தஞ்சை மேலவீதி பச்சண்ணா[461] சந்திவிருக்கும் வலக்கை இடக்கை[462] என்னுமிரண்டு பாஞ்சாளர்கள்[463] தங்களுடைய கலியாணத்தில் புழங்க வேண்டிய முறையைப்பற்றி ஸர்காரில் எழுதிக் கொடுத்த உடன்படிக்கை.*

***6.1804***
*(2) அரிசி ரூபாய்க்கு 9 1/2 படி வீதம் வாங்கினது.*

---

460. பாஜ் - ஒரு வகைப்பறவை; வேட்டை ஆடுவதற்குரியது; ஆண்பறவை ஜுரா என்றும் பெண் பறவை பாஜ் என்றும் பெயர் பெறும். (Gajasastra Sara with Pakshilakshana) சரசுவதி மகால் வெளியீடு - ஏ.கிருஷ்ணசாமி மாடிக்ராவ் போ.வ.ச.பக்.138இல் பாஜ் என்ற பறவை கி.பி.1803இல் தஞ்சையில் இருந்தது என்று குறிக்கப்பட்டுள்ளது. மேலும் அந்த இனத்துப் பறவையைக் கொணர்வதற்காகச் சென்றிருக்கலாம்.

461. பச்சண்ணா - இவர் இரண்டாம் துளஜாவின் அமைச்சர் (பக்.409)

462. வலக்கை இடக்கை - வலங்கை இடங்கை - மக்கட் பிரிவினருள் வேறுபாட்டுணர்ச்சி தோன்றியபொழுது அரசனிடம் முறையிடுங்கால் அரசனது வலது பக்கத்தில் இருந்தவர் வலங்கையர் என்றும், இடது பக்கத்தில் இருந்தவர் இடங்கையர் என்றும் கூறப்பெற்றதாகத் தெரிகிறது. வேறுவிதமாகவும் கூறுவதுண்டு (பக்கம் 408)

463. பாஞ்சாளர்கள் - பஞ்சாளத்தார் - பஞ்சகம்மாளர்: தட்டார், கன்னார், சிற்பி, தச்சர், கொல்லர் எனுமிவர் (பக்.409)

7.1807

(1) ஜாபிதா-மிஸ்தர் ஹிபகி அவர்களிடமிருந்து வாங்கப்பட்ட சாமான்கள்

ஆங்கிலேய ஸங்கீதத்தின் புத்தகங்கள் 15 புலி விராகன், 6 1/2 மைலி, 120 காசு, துதாரி[464] என்னும் வாத்தியம் ஜோடி 1க்கு 40 புலி விராகன், சர்பகாஹளா[465] என்னும் வாத்தியம் 55 புலி விராகன், ஆங்கிலேய புத்தகங்கள் 64 புலி விராகன்.

(2) சம்ஜாவிசி[466] வைய்யாபுரி வைத்தியர் இரண வைத்தியத்தின் ஆயுதங்கள் ப்யாகிட்பேகு திருச்சினாப்பள்ளியில் 12 புலி விராகனுக்கு வாங்கப்பட்டது.

1805

(1) 5 நியாதிபதிகள் முன்னிலையில் வியாஜ்யம் விசாரணை:-[467]

வாதி-நாராயணராவ்

பிரதிவாதி-மங்கப்ப மொதலி

துகை 600 சக்ரம் கொடுக்க வேணுமென்று பிரதிவாதியைக் கேட்டதற்கு-தனக்கு அநேக இடங்களிலிருந்து கடன் துகை வரவேண்டியிருக்கிறது. ஆனால் ஒருவரும் துகையைக் கொடுக்கிறதில்லை. காலக்ஷேபம் செய்வது கஷ்டமாயிருக்கிறதென்றார்.

பிரதிவாதியைக் காவளா[468] என்னும் பாராவில் போட்டு விசாரணை செய்த பொழுது, முதலியானவன் வாதிக்கு ஒரு சீட்டு எழுதிக் கொடுத்திருப்பதாகச் சொன்னான். கெடுவுமாய் விட்டது. சீட்டை வாதி காட்டினார். பார்த்தபொழுது 2 வீட்டின் சாஸனமும் உண்மை அல்ல. ஆதலால் முதல் ஈடுகாரனுக்கு 200 சக்ரம் வாதி கொடுத்து வீட்டை எடுத்துக்கொள் என்று நியாயாதிபதி சொன்னதற்கு:- வாதி தனக்கு வீடு வேண்டாம். 100 சக்ரம் குறைத்துக் கொண்டு பாக்கி 500 சக்ரம் ரொக்கம் வேணுமென்றார்.

அந்தவீட்டின் மதிப்பு 832சக். 3 1/2 பணம். பிரதிவாதி வாய்தா கொடுத்தால் துகை கொடுக்கிறேனென்றான். அதற்கு நியாயாதிபதி கெடு கொடுக்க முடியதென்றார். பிறகு நியாயாதிபதியானவர் ஈட்டுக்காரன் கீழேயுள்ள இடம் (காலி) 200 சக்ரத்திற்கு எடுத்துக் கொள்ளுவதென்றும், நாராயணறாவ் (வீட்டின்) காலியின் மேலுள்ள சாமான்களை (தளவாடம்) வகையறாக்களை 600 சக்ரத்திற்கு எடுத்துக் கொள்ளுவதென்றும் தீர்ப்பு செய்தார்.

மேற்சொன்ன பிரதிவாதியினிடமிருந்து இரண்டு ஈட்டுக்காரர்களுக்கும் சாசனம் செய்வித்தார்.

(2) பலவ்யவஸ்தாபக கதம்பம் பேர்வழிகளின் ஜாபிதா.

464. துதாரி - வாத்திய விசேடம்

465. சர்பாகன் - வாத்திய விசேடம்

466. சம்ஜாவிஸி - சமாதானப் படுத்துபவர்

467. இந்நாட்கள் பெரிய வழக்குகள் ஆயின் இரண்டுக்கு மேற்பட்ட நடுவர் இருப்பது போல அந்நாளிலும் இருந்தமை இதனால் பெறப்படும்.

468. காவளா - காவல்(?)

# சரசுவதி மகால் பகுதி–IV

## மூட்டை எண் - 34 C

*139-1824 Dec.18 உ*

*கும்பனி கச்சேரியின் ரிபோர்ட்*

*கலெக்டர் மிஸ்தர் காடன் சாயேப், உதவி கலெக்டர் மிஸ்தர் ப்ளாக்பர்ன் சாயேப் இருவரும் கச்சேரிக்கு வந்து சிரஸ்தேதார்[1] ரிகார்டின் ரிபோர்ட் செய்து கொண்டிருக்கையில் ஸேவகனான நம்மைக் கூப்பிட்டு அனுப்பித்து ஸர்காரில் எத்தனை ஸபைகளிருக்கின்றன? என்று கேட்டார். அதற்குப் பதில் 4 ஸபைகளிருக்கின்றன வென்று சொன்னோம். எந்தச் சபையில் எந்த வியாஜ்யத்தை விசாரணை செய்வது என்று கேட்டதற்கு (1) தர்ம ஸபை என்கப்பட்ட பெரிய ஸபையில் பெரிய வியாஜ்யங்களைத் தீர்ப்பதென்றும் (2) முத்திரித ஸபையில் சில்லறை வியாஜ்யங்களனைத்தும் தீர்ப்பதென்றும் கோட்டைக்கு வெளியேயுள்ள (3) ப்ரதிஷ்டித ஸபையில் அங்குள்ள வியாஜ்யங்களனைத்தும் தீர்ப்பதென்றும், ஸபையில் ஒருவேளை வியாஜ்யம் தீராமல் போனால் அதைக் கார்பார் ப்ரஸங்கத்தில் விசாரித்துத் தீர்ப்பதென்றும் சொன்னோம்.*

*139,1824 Dec. 18 உ*
*நியாயநிசி மஹால் என்கப்பட்டது என்னவென்று கேட்டார்.*

*அதற்குப் பேஸஜி அவருடைய மஹாலில் எல்லாம் வியாஜ்யங்களையும் தீர்த்து, தண்டனைகூட செய்து கொண்டிருந்தார். இப்பொழுது ஸபைகளில்லாமல் போன நாட்களிலிருந்து அந்தந்த ஸபைகளில் வேலை நிரவிப் போனதினால் நியாயநிசி மகாவில்லை என்று சொன்னோம். இன்னும் திருட்டு, கொலை இந்த வேலை வந்தால் அதை எங்கே விசாரிப்பது என்று கேட்டார்.*

1. சிரஸ்தேதார் - ஆவணக் காப்பாளர் (ஆவணம் - Record)

அதற்குப் போலீஸ்காரன் (கொத்தவால்) விசாரணை செய்து, அந்த விஷயத்தை ஸர்காரில் தெரிவித்து ஸர்காருடைய உத்திரவின்படி தண்டனை வகையறா செய்வது என்று சொன்னோம்.

ஸபையின் வேலைகள் விசேஷாகாரமாக எனக்குத் தெரியாது. தெரிந்த மட்டில் தெரிவித்தேன். இன்னும் இவ்விஷயமாக ஏதாவது அறிய வேண்டியிருந்தால் அதை எழுதி அனுப்பச் சொல்லுகிறேன் என்று சொன்னேன்.

அதற்கொன்றும் எழுதி அனுப்பென்று சொல்லவில்லை. நம்முடைய ஜோடுதாரி[2]யிருக்கிறார். அவருக்கும் இந்த அனுபோகம் தெரிந்திருக்கும். கூப்பிட்டுக் கேட்டால் சொல்லுவாரென்று சொன்னேன். பிறகு குப்பண்ணாவைக் கூப்பிட்டுக் கேட்டார்கள். அதற்குத் தெரிந்த அனுபோகம் சொன்னார். இதை அறியவும். முகாம் - நாகப்பட்டணம்.

*209. 1846 மார்ச்சு மீ 7௨*

கோட்டைக்குள் வசிக்கும் வீரராகு பிள்ளை - நியாயாதீச ஸபை[3] பிரதி வாதியானவர் எழுதிக் கொண்டது. என்னவென்றால்,

வாதியான நீலகண்டர் வகையறா 32 பேர்கள் என்னுடைய பெண்ணைப் பலாத்காரமாகத் தூக்கிச் சென்று திருட்டுத்தனமாகத் தாலியைப் போல கட்டிய சங்கதிக்கும் நான் செய்த பிறாதுக்கு நியாய சபையார் விசாரித்து பேஸஜி ரா.கைலாஸவாஸி பெரிய மகாராஜா சாயேப்[4] அவர்கள் காலத்தில் கல்லுக்காரன் மேட்டு நாயிக் 1, வீரராகுநாயிக் 1, ரங்கனாத பிள்ளை -1, இந்த 3 பேர்களுக்கான மூன்றுவித தீர்ப்புப்படி ஷெ நீலகண்ட வகையறாக்களுக்குத் தண்டிப்பதென்று தீர்ப்பானது.

அதற்கு ஷெயார் வியசனமடைந்து தர்மஸபையில் மறுபடியும் விசாரிக்க வேண்டுமென்று பிராது செய்தார். அதற்குத் தர்மஸபையார் விசாரித்து, கீழ்க்கோர்ட்டுத்[5] தீர்ப்பை உறுதிசெய்தார்.

மறுபடியும் ஷெ நீலகண்ட வகையறாக்கள் நியாயாதீச சபையில் மறுபடியும் விசாரிக்க பிறாது செய்திருக்கிறார். ஆனால் அவர்கள் வாதியின் பக்ஷபாதமாக முன் தீர்ப்பை மாற்ற வேண்டுமென்று சிற்சில தர்ம சாஸ்திரத்தின் வசனங்களினால் ஷெ வாதிக்கு அர்த்த தண்டனை (அபராதம்) என்று தீர்ப்பு செய்வதற்கு மிக முயற்சி செய்கிறவர்களாக யிருப்பதாகக் கேள்விப்படுகிறேன். ஆனால் ஷெ நீலகண்டின் சிறு தாயார் சுந்தரம்மா என்பவர் 400, 500 ரூபாய் ஆனால் சிலவு செய்து முன் செய்த தீர்ப்பை மாற்றி, தன்னுடைய பக்ஷமாக இரண்டாவது தீர்ப்பைச் செய்து கொள்ளுவேன் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார். ஷெ நீலகண்ட வகையறா மிக்க பணக்காரர்களும் பெரிய மனுஷாளுடைய சிபார்சுமிருப்பதால்

---

2. ஜோடுதாரி - ஒத்தநிலையிலுள்ள அலுவலர்(?)

3. நியாயாதீச சபை - தஞ்சையிலிருந்த நான்கு நீதி மன்றங்களுள் ஒன்று

4. பெரிய மகாராஜா என்றது இரண்டாம் சரபோஜியை

5. கீழ்க்கோர்ட்டு - நியாய சபை.

நியாயாதீச சபையார்கள் ஷெயார் பக்ஷமாகவே வேறு தீர்ப்பைச் செய்வதற்கு முயற்சியுள்ளவர்களாக யிருப்பதாகக் கேள்விப்படுகிறேன். ஆனால் நான் மிக்க ஏழை. என் கையில் பணமுமில்லை. நிராதாரி[6] யான என்னுடைய பிறாதை நியாயப்படிக்கித் தீர்ப்பு செய்வதற்கு மகாராஜாவைத்[7] தவிர வேறொருவருமில்லை.

ஆனால் முன்னால் சாஸ்திர ஸம்பன்ன[8] ரான அண்ணாசாஸ்திரி அவர்கள் ஷெ சங்கதி விஷயத்தில் வீரராகு நாயிக்குக்கும், அரங்கனாத பிள்ளைக்கும் சரீர தண்டனை[9] செய்வதென்று அநேக தர்மசாஸ்திராதி நூல்களைப் பார்த்து நிர்ணயஞ்[10] செய்திருக்கிறார்கள். இன்னும் நியாயகர்த்தே[11] ஹரிசக்ரபாணி அவர்கள் விக்ருதி[12] ஷூ ஆகஸ்ட்டு மாதத்தில் இவ்விஷயத்தில் 162 நீர் பிராதில் தீர்ப்பு செய்திருக்கிறார்.

தற்போது நான் செய்த பிறாதின் சங்கதிக்கு ஷெ யாருக்கு சரீரதண்டனைதான் என்று நியாய ஸபையிலும், தர்மஸபையிலும் நிர்ணமாயிருக்கிறது. இப்படியிருக்கையில் நியாயாதீச ஸபையாருக்கு மட்டில், அச்சாஸ்திரங்கள் அகப்படாமல் வேறு சாஸ்திரங்களின் வசனங்களினால் ஷெ வாதிக்கு அர்த்த தண்டனை (அபராதம் போடுவது) என்று நிர்ணயம் செய்ய வேண்டுமென்று தோணியிருக்கிறது. அதைப்பார்க்க வாதியின் பக்ஷபாதத்தி[13] னால் என்று குழந்தை முதற்கொண்டு, வயோதிகர்கள்[14] வரையில் எல்லோருக்கும் தெரிய வரும். அது சர்காருக்கும் நன்குவிளங்கும். ஆனால் செய்த சங்கதிக்கு அநேகமாய் சங்கதிக்கு அபராதம் விதிப்பதென்று நிர்ணயமாய் இதைப் பார்க்கிலும் அதிகமான ப்ரமாதகரகாரியம் செய்து அபராதம் கொடுத்து மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளலாமென்ற தைரியத்தினால் ஜனங்கள் துணிவார்கள். அப்படி ஏற்படாமலிருப்பதற்கு முன் சொல்லப்பட்ட இவ்விஷயத்தில் அண்ணா சாஸ்திரி அவர்கள் நிர்ணயஞ் செய்திருக்கிறதைத் தர்ம சாஸ்திரம் நிர்ணய ஸிந்து[15] முதலிய கிரந்தங்களின் ஆதாரமும் விக்ருதி ஷூ ஆகஸ்ட்டு மாதத்தில் நியாய கர்த்தா ஹரிசக்ரபாணி அவர்கள் நிர்ணயஞ் செய்த ஆதாரம் இப்பொழுது நான் செய்த பிறாதுக்கு நியாயஸபையிலும், தர்மஸபையிலும் ஆன நிர்ணயமான சாஸ்திரத்தின் ஆதாரமும் ஸரஸ்வதி மஹாலில் இவ்விஷயத்திலிருக்கிற சாஸ்திரங்களும், தற்காலம் நியாயாதீச சபையின்

---

6. நிராதாரி - ஆதாரமில்லாதவன்; ஏழை

7. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

8. ஸம்பந்நர் - நிறைவுள்ளவர்

9. சரீரதண்டனை - அடித்தல், சிறையிடல் போன்றவை

10. நிர்ணயம் - தீர்ப்பு

11. நியாய்கர்த்தே - நீதிபதி

12. விக்ருதி - யாண்டறுபதனுள் 24ஆவது (கி.பி.1830 ஆகலாம்)

13. பக்ஷபாதம் - ஒரு தலைச்சார்பு

14. வயோதிகர் - முதியவர்

15. நிர்ணய சிந்து - கமலாகரபட்டர் என்பார் வடமொழியில் எழுதிய நீதிநூல் என்று தெரியவருகிறது (பக்கம் 191, எண் 829; Catalogue of printed Books in T.M.S.S.M.Library, Thanjavur, 1940)

ஷி வாதிக்கு அபராதம் விதிப்பதென்று நிர்ணயிப்பதற்கு ஆரம்பித்திருக்கிறார்கள். அந்தத் தர்ம சாஸ்திரிகளும் வித்வான்களும் ரா. மகாராஜா சாயேப் அவர்களுடைய சன்னிதானத்தில் பரிசோதித்துப் பார்த்தால் மேல்கண்ட விஷயமெல்லாம் நன்கு விளங்கும். இப்பேர் பட்டதற்கு ஸ்ரீமந்த் ராஜஸ்ரீ சத்ரபதி அவர்கள் நீதிபராயண[16]ரான மகாராஜா சாயேப்பின் சரணத்தைத்[17] தவிரஎனக்கு வேறொன்றுமில்லை யாகையால் நான் செய்த பிறாதிற்கு நியாயமாக விசரானை செய்து. தகுந்த தண்டனை செய்வதினால் மறுபடியும் இப்பேர்ப்பட்ட காரியங்களை மற்ற ஜனங்கள் செய்யாமலிருக்கும்படி செய்ய வேணுமாய் உத்திரவு செய்ய வேணும்.

(கையெழுத்து) வீரராகு பிள்ளை

*35.1814*

*(a) Recipe for a bell dripping yellow saliva*

மிளகு 9 கழஞ்சு, ஜீரகம் 9 கழஞ்சு, வெந்தயம் 9 கழஞ்சு, வெங்காயம் 1/4 சேர், நெய் 1 சேர் இவைசேர்த்து 3 நாள் கொடுக்கவும்.

*Recipe for a bell coughing by heat.*

சுக்கு-9 கழஞ்சு[18], வெல்லம்-1/4 சேர், மஞ்சள்-9 கழஞ்சு, கள்ளு-1 சேர் 3 நாளைக்கு

*261 (1824)*

*Three kinds of payments of food materials in kind in the choultry*

*1) Strangers*

*2) to recipients in special arrival of king.*

*3) to students*

*43.1825*

*Repair the 4 main streets 100*

## மூட்டை எண்-35 C

*63. 1756*

தஞ்சாவூர் கோட்டை-வரிகளின் விவரம்

துணிவரி, ஓடு, நெல்லு, அரிசி, மூங்கில், பயிறு, எருமை, எலுமிச்சை, ஆடு, குஸிம்பி புஷ்பம், செருப்பு எண்ணைய், வண்டிவரி, விறகு, குதிரை, உப்பு சாமான்கள், சாராயம், பட்டுநூல், பல்லக்கு வரி, வாழை வரி, பருப்புகள், நெய், மாடுகள், கயறு, மாமிசம், காராமணி, ராகி(வரகு)வரி, விளாம்பழம், வைக்கோல், பேரீச்சை, எள்ளு, பாக்கு, கோதுமை, இரும்பு உளுந்து, மஞ்சள், கொள்ளு, பாய், வெல்லம், வெற்றிலை, வெங்காயம், நாடகம், துவரை, பெரும்பயர், மொச்சை, போர்வை, மண்வெட்டி

16. நீதிபராயணர் - நீதியை நிலைநாட்டுபவர்

17. சரணம் - திருவடிகள்

18. கழஞ்சு - 10 காணம் கொண்டது ஒரு கழஞ்சு; ஒரு காணம் நான்கு குன்றிமணி எடையுடையது (சதாசிவ பண்டாரத்தார்-பாண்டியர் வரலாறு: பக்கம் 179 (1969)

பலசரக்கு வரி

காய்கறி கட்டு, புண்ணாக்கு, கொப்பரை, சந்தனக்கட்டை.

சேர்

## மூட்டை எண்-37 C

*21.1803*

ஹாஜாரியின்[19] மண்டபத்தின் மேல் கோட்டையைக் கட்டி சுண்ணாம்பினால் சிகரம் செய்து வைக்க சிலவு சக். 3 1/2

*84.1834*

(a) ஸங்கீத வித்யாதிக பிரிவுக்குச்[20] சொல்லி லக்ஷமண கோஸாவி அவர்களுடைய மேள வாத்தியங்களுடன் பகல் 2 மணிக்கு மந்திரிவர்ய சதாசிவ கேசவ பண்டிதரு[21]டைய வீட்டில் தயாராக இருக்க வேணும்.

## மூட்டை எண்-45 C

*17.1805*

சரபோஜி ராஜபுரம்

ரா. தத்தாஜி அப்பாவுக்கு[22]-கும்பகோணத்தில் சுரோத்தியம்[23] கொடுத்து, அதற்குச் சரபோஜி ராஜபுரம் என்று பெயரிட்டார்; வேலி-50

*66 1786*

பரவானகி[24]

மன்னார்குடி-பாகவத மேள[25]த்திற்குச் சிரோத்தியம் கொடுக்கப்பட்டது.

---

19. ஹஜாரி - வடக்கு வாசல்

20. ஸங்கீதவித்யாதிக பிரிவு - இசைவல்லவர் இருக்கும் பிரிவு (பக்.229)

21. தஞ்சை மராட்டிய மன்னர் கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும் பக்.83

22. தத்தாஜி அப்பா - சரபோஜி, அமர்சிங்கு பிடியினின்று விடுபட்டுச் சென்னையிலிருந்த பொழுது சரபோஜியிடம் உயர் அலுவலராக இருந்தவர் (பக்கம் 79)

23. வேதம் வல்ல பிராமணர்கட்குக் கொடுக்கப்பெறும் நிலம் 'சுரோத்திரியம்' எனப்படும். அரசாங்க ஊழியம் செய்தவர்கட்கு அளித்த நிலமும் சுரோத்திரியம் என்று சொல்லப்பெறும் (Tamil Lexicon M.U.)

24. பரவான்கி - அரசனிடும் ஆணை; இதில் அரசனது கையொப்பம் இருக்காது (பக்கம் 365)

25. பாகவதமேளா என்பது ஒரிசை நாடகக்குழு. மெலட்டூர் பாகவத மேளாவினும் வேறாக மன்னார்குடியிலும் பாகவத மேளாவிருந்தாதல் வேண்டும் (பக்கம் 230-231)

*49.1857 ஞு*

*(1) தினப்படி டைரி*

25ஞு ஸர்வீஸானவர்களுக்குள்ள பாக்கியிருக்கிற சம்பளத்தையும் இனாமும் கும்பனியார் கொடுக்கத் தயாராக யிருப்பதால் மேற்படி ஜனங்கள் ஒருவாரத்திற்குள் ஆபிஸில் வந்து பெற்றுக்கொள்ளலாம். அப்படி வராத பக்ஷத்தில் அவர்களுக்கு இனாம் கிடைக்காது என்று இஸ்தியார் நாமா[26]வை எழுத ஆபிஸின் வாசலுக்கு 1ம் கோட்டையின் 3 வாசலிலும் ஹாஜாரி வாசலுக்கும் இப்படி ஒட்டினார்கள்.

*(2)* ஸர்கேல்[27] வேலை பார்க்கிறவரும் பெரிய அண்ணா[28] இருவரும் ரெஸிடண்ட்[29] ஆபிஸீக்குச் சென்று சாயேப்பைக் கண்டு திரும்பினார். புதிய உறவினர்களில் 4 பேர்கள் சாயங்காலம் துரையைப் பார்க்கப் போனபொழுது தற்போது பார்க்கமுடியாதென்று அனுப்பிவிட்டார்.

*(3) 1857*

கமிஷனர் பார்பஸ் சாயேப் காலை 10 மணிக்கு அரண்மனைக்கு வந்து சங்கீதமஹால் மண்டபத்திற்குத் தற்போது பிரதிப்பெயர் ஹுஜுர் மஹால்[30] மண்டபத்தில் யசவந்த மஹாலில் இருந்த ஆயுதங்களையும் சங்கிராம பாண்டார்[31] கோபுரத்தின் மேலிருந்த ஆயுதம் வகையறாக்களைஷெகோபுரத்தின் பின்பக்கத்தில் சுவற்றை இடித்துச் சாரங்கட்டி கோபுரத்தின் மேலுள்ள ஆயுதங்கள் துப்பாக்கி வகையறா பாக்கி சாமான்களையும் எடுத்துக்கொண்டுபோய், மேற்சொன்ன மண்டபத்தில் வைக்க ஆரம்பித்து வைத்தார்கள். இருப்பிடத்திற்குப் போகும்பொழுது மண்டபத்தையும் யசவந்த மஹாலையும்[32] கடந்துபோனார்.

*49 (4) கமிஷனர் பார்பஸ் சாயேப்*

பகல் 10 மணிக்கு அரண்மனைக்கு வந்தார். ஹஜாரி வாசலில் சிப்பாய்களை நிறுத்தியிருந்தார். இராமய்யாவுக்கு[33] ஜனங்களை அனுப்பிவிடுமென்று உத்திரவிட்டு பின்பு அதிகாரத்திலிருந்து சிப்பாய்களின் துப்பாக்கிகளை வண்டியில் போட்டு, அரண்மனைக்குக் கொண்டு வந்து

---

26. இஸ்தியார் நாமா - விளம்பரம் (Poster)

27. ஸர்கேல் - அண்ணாஜி தியாகராச பண்டிதராக இருக்கலாம் (பக்.4-117)

28. பெரிய அண்ணா முத்தோஜி கோவிந்த் - இவரும் சின்ன அண்ணா என்பவரும் இரண்டாம் சிவாஜி காலத்திலும் அவர்க்குப் பின்னரும் பெரிய அலுவலராக இருந்தவர் ஆவர் (பக்கம் 81)

29. ரெஸிடென்ட்; ரெஸிடென்டாகவும் கமிஷனராகவும் இருந்தவர், பார்பஸ் (H.Forbes) ஆவர் (பக்.68-69)

30. ஹுஜுர் மகால் - சங்கீத மகாலுக்குரிய மறு பெயர் என்று இவ்வாவணத்தால் அறியப்பெறும்.

31. சங்கிராமபாண்டார் என்றது ஆயுதசாலையை; இது ஜிராத்கானா எனப்பெறும் (பக்கம் 455)

32. யசவந்தமகால் - சங்கீதமகால் ஆகிய ஹுஜுர் மகாலில் ஒரு பகுதி. (இவ்வாவணம் முதற்பகுதி காண்க)

33. ராமய்யா என்றது வராஹப்பய்யாவை (பக்கம் 82)

*ஸங்கிராம பாண்டாரத்திலுள்ள ஆயுதங்களை வைத்த ஹுஜூர் மஹாவிலேஷிசிப்பாய்களின் துப்பாக்கிகளையும் வைத்தார்கள்.*

*தவிர மா. காமாக்ஷிம்பா பாயி[34] சாயேப் அவர்களின் அபராதி[35] கோபாளஜீகாளே பார்பஸ் சாயேப்பிடம் ஒரு காகிதத்தை இராணி அவர்கள் கொடுக்கச் சொன்னதாகச் சொல்லிக் கொடுத்தான்.*

*(5) திருவாதி[36] தாலூகாவின் கச்சேரியை ஜயங்கொண்ட வாசலுக்கு[37] வெளியில் பேசஜி[38] ஹரிசக்ரபாணி[39] பண்டிதர் சபையின் கச்சேரி செய்த இடத்தில் அமைத்தார்கள்.*

*(6) ரெஸிடெண்டின் வேலையைப் பார்க்கிற கலெக்டர் சேரி சாயேப்[40] காலையில் பிள்ளை பெண்சாதிகளுடன் முதலில் ஹஜாரிக்கு வந்து புலிமால்[41] கோழி வகையறாவைப் பார்த்து விட்டு பின்னர் களஞ்சியத்திற்குச் சென்று லாயம், தட்டிமால் வகையறாவைக் கண்டு திரும்பி அரண்மனைக்கு வந்து ஸரஸ்வதி மஹாலையும் மூர்த்தியையும் பார்த்துவிட்டு மகாராஜா சபைக்குச் சென்று பார்த்துப் பின்பு தங்களுடைய இருப்பிடம் போனார்.*

*(7) ரெஸிடெண்ட் சேரி சாயேப்பும் சுப்ரீம் கோர்ட்டு[42] வக்கில் நார்டன்[43] சாயேப் இருவரும் அரண்மனையில் மா. காமாக்ஷியம்பா பாயிசாயேப் அவர்களிடம் வந்து அவர்கள் கொடுத்த வியாஜ்யத்தில்[44] எழுதின சங்கதிகள் எல்லாம் சரியாவென்று பிரமாண பூர்வமாக சொல்ல*

---

34. காமாட்சியம்பாபாயி - இவர் இரண்டாம் சிவாஜியின் மூத்த மனைவியர் மூவருள் சிவாஜி இறந்த பிறகும் வாழ்ந்திருந்தவர் ஆவர்.

35. அபராதி - தீங்கு செய்தோன் (?)

36. திருவாதி - திருவையாறு

37. ஜெயங்கொண்ட வாசல் - கிழக்கு வாசல் - பத்தேதர்வாஜா - ஜெயிக்கப்பட்ட வாயில் (போ.வ.ச.பக்.77)

38. பேசஜி - முன்னர் சொல்லப்பட்ட

39. ஹரிசக்ரபாணி - நியாயசபையின் நீதிபதி (பக்.175)

40. ரெஸிடெண்டாக இருந்தவர் பார்பஸ்; இவர் சென்னைக்குச் சென்றதும் கலெக்டர் செரீ ரெஸிடெண்டு வேலையும் பார்த்தார் என்று தெரிகிறது (பக்கம் 68).

41. புலிமகால் - வேட்டைமகாலாக இருக்கலாம் (பக்.457)

42. 1801இல் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் சட்டம் ஒன்றினால் ஒரு சுப்ரீம் கோர்ட்டு (உச்ச நீதிமன்றம்) அமைக்கப்பட்டது. இது சென்னை மாகாணத்தில் வெள்ளையருக்கு அடங்கிய பகுதிகளிலும் சார்புடைய பகுதிகளிலும் உள்ள மக்கள் மேல் சட்ட ஆட்சி முறையை உண்டாக்கியது. இது பிரிட்டிஷ் அரசாங்கத்தின் நீதிமன்றமாக இயங்கியது. கவர்னர் சபைக்கு வேறாகச் சுயேச்சையாக இயங்கியது (பக்.179)

43. 1855இல் சிவாஜி இறந்ததும் அரண்மனையிலுள்ள சொத்துக்கள் எல்லாவற்றையும் அந்நாளைய கும்பினி அரசாங்கம் பறிமுதல் செய்தது. ஆகவே சிவாஜியின் மூத்த இராணி காமாக்ஷியம்பா பாயி சாகேப் வழக்குத் தொடுத்தார். அந்த வழக்கை நடத்துவதற்கு வக்கீலாக இருந்தவர் நார்ட்டன் என்பவர் ஆவர். இவர் முழுப்பெயர் ஜான் புரூஸ் நார்ட்டன்

44. வியாஜ்யம் - வழக்கு

வேண்டுமென்று, சேரி சாயேப் அவர்கள் மா. காமாக்ஷியம்பா பாயி சாயேப் அவர்களின் கையில் சபையின் சாமி சாஸ்திரிகளைக் கொண்டு உப்பு, துளசியைக் கொடுத்து பிரமாண பூர்வமாகத் தெரிந்து கொண்டு போனாரென்று ஊர் ஜனங்கள் சொல்லுகிறார்கள்

*8.1857 ஹ டிசம்பர் 21ௗ ஞாயிற்றுக்கிழமை*

ஆவுசாயேப்[45] பாயிசாயேப் வகையறாக்களிடமிருந்து வக்காலத்து வாங்கினவரான சுப்ரீம் கோர்ட்டு வக்கில் நார்டன் சாயேப் அவர்கள்இராஜ்யவிஷயமாக சுப்பிரீம் கோர்ட்டில் பிராது செய்து, நார்டனின் எண்ணப்படி மா. காமாக்ஷியம்பாபாயி சாயேப் பாத்தியஸ்தர் இராஜா சாயேப் அவர்களுடைய சொத்துக்கள், வரும்படி முகாஸா கிராமங்கள், [46]தேவஸ்தானம்,[47] சத்திரம்[48] வகையறா ஜப்தி ஆயிருக்கிறதை விடுதலை செய்வதென்று ஷிகோர்ட்டில் தீர்ப்பான தென்று இங்கிருக்கும் நார்டன் சாயேப்பின் பெண்சாதி தன்னுடைய காரியஸ்தருக்குக் கடிதம் வந்திருப்பதாகவும், அவர்கள் வெள்ளைப்பிள்ளையார்[49] வகையறா ஸ்வாமிகளுக்குத் தேங்காய்களை உடைத்ததாக ஊரில் பிரசித்தமாக எல்லா ஜனங்களும் சொல்லிக் கொள்கிறார்கள்.

*(9)* காலையில் பார்பஸ் சாயேப் ஆபிஸிலிருந்து வடக்குக்கோட்டையில் [50] வந்து மூலை ஹனுமார் கோவிலுக்குப்[51] பின்னாலிருக்கிற ஸங்கிராம பாண்டார் ஜிராத்கானா விலுள்ள வெடிமருந்தின் பீபாய்களை 4,5 கும்பனியின் காவலிலிருந்ததை எடுத்து வந்து ஷிபீபாய்களின் தண்ணீர் விட்டு அகழியில் ஊத்தினார்கள். வெடிமருந்திருந்த இடத்திலிருந்த கும்பனியின் காவலை நீக்கிவிட்டார். அதிலிருந்த குண்டுகளை உருக்கி விட்டார்கள்.

*(10)* கருந்தட்டாங்குடியின் கும்பனி போலீஸ்காரரர் கோட்டைக்கு வெளியே கருந்தட்டாங்குடி வகையறாவுக்கு ஸர்காரின் பாக்கி கிராமங்களும், சத்திரம், தேவஸ்தானம், கொஞ்ச நாட்கள் வரையில் ஜப்தி செய்து கமிஷனரின் உத்திரவுப்படி கும்பனியில் தாக்கல் செய்யப்பட்டிருக்கிறதென்று தண்டோரா போடப்பட்டது.

*(11) 1857 நவம்பர்மீ 12ௗ*

கமிஷனர் பார்பஸ் சாயேப் அரண்மனைக்கு வந்து ஸரஸ்வதி மஹாலிலுள்ள ஆங்கிலேயப் புத்தகங்களைப் பார்த்துவிட்டுப் போனார்.

---

45. ஆவுசாயேப் - அஹில்யாபாய்

46. முகாஸா கிராமங்கள் (பக்கம் 134-135)

47. தஞ்சை மராட்டிய மன்னர்கால அரசியலும் சமுதாய வாழ்க்கையும், பக்.188-191

48. மேற்படி நூல் பக்.506

49. கீழவாயிலில் உள்ள கோயில் வெள்ளைப் பிள்ளையார் கோவில் (பக்.197 ; பக்கம் 213இல் 26)

50. வடக்கு வாசல்

51. இவ்வனுமார் கோயிலுக்குக் குருகுல சஞ்சீவி என்று பெயர்

*50.1857 Oct.*

*(1) தினப்படி பட்டியல்*

தவிர-பெரிய அண்ணா என்கிற நா. முத்தோஜி கோவிந்தராவ் இவரும் கோட்டைக்கு வந்து சேர்ந்தார்.

*(2) 1857*

ஸர்கேல், சூர்நவிஸ்[52],மஜம்தார்,[53] ரெஸிடெண்ட், சிரஸ்தேதாருடைய பிள்ளை ரா. ராமச்சந்திரராவ், சூர்மகால்[54] ரிகார்டு ஆபீஸ் பட்னவீஸ்,[55] சின்ன அண்ணா என்பவரான ரா. வெங்கடராவ் கோவிந்தராவ் வகையறா எல்லோரும் சூர்மஹால் ரிகார்டுக்கு வந்து, கமிஷனர் சாயேபின் சீலை வில்லைக்காரனுடைய சாக்ஷியுடன் உடைத்து, உள்ளிருந்த தஸ்தாவேஜுகளைத் தேடி, அவைகளில் மா. சுஜ்யான்[56] பாயி சாயேப் அவர்கள் இராஜ்யபாரஞ் செய்தகாலத்திலுள்ள சிக்கா ஸனதுகளில்[57] நான்கையும் வம்சாவளி விருக்ஷத்தையும்[58] எடுத்து. அதற்கு நகல் எடுத்து, ரிக்கார்டில் வைக்கப்பட்டது. மறுபடியும் சீல் போடப்பட்டது.

*55•1857 Ap. 20* உ

*( c )* சென்னப்பட்டணம் சுப்ரீம் கோர்ட் வாதி-காமாக்ஷிம்பா பாயி சாயேப் பிரதிவாதி-கும்பனியாரும்

சையம்பா பாயிசாயேப், உமாம்பா பாயிசாயேப், ஜயந்தம்பா பாயிசாயேப், ஜீஜாயி பாயிசாயேப், தீபாம்பா பாயிசாயேப், ராமகுமராம்பா பாயிசாயேப், சகுணாம்பா பாயிசாயேப், அபரூபாம்பா பாயிசாயேப், யசவந்தம்பா பாயிசாயேப், அனசாம்பா பாயிசாயேப், கௌராம்பா பாயிசாயேப், அருணும்பா பாயிசாயேப், ஸீகுமாராம்பா பாயிசாயேப், கிரிஜாம்பா பாயிசாயேப், சீமாம்பா பாயிசாயேப்

சிவாஜியானவர் வாதியாகிய மா. காமாக்ஷியம்பாபாயி சாயேப் அவர்களை விவாகஞ் செய்து கொண்ட பின்னர் சாகுவதற்கு *3* ஷ முன்னால் 17 கலியாணங்கள்[59] செய்து கொண்டாரல்லவா?அவர்களின் சோயிரம்பாபாயியும், துகாம்பா பாயியும் இவ்விருவரும்

52. சூர்நவீஸ் - சூர்மகால் அலுவலர் (?)

53. மஜூம்தார் - நிலவரிக்கணக்கு எழுதும் பொறுப்பு உடையவர் (பக்.340)

54. சூர்மகால் - ஹுசூர் மகால்; சங்கீத மகாலின் வேறு பெயர் (2-223)

55. பட்நவிஸ் - கணக்கு அலுவலர்

56. சுஜ்யான்பாயி - இவர் 1736-37இல் ஆட்சி செய்த பாவாசாகேப் எனப்பெற்ற இரண்டாம் ஏகோஜியின் முதல் மனைவி ஆவர். இவர் இரண்டாம் ஏகோஜி பிறந்ததும் அரசாட்சி செய்தார்.

57. சிக்காசனதுகள் - முத்திரையிட்ட நன்கொடை ஆணைகள்

58. வமிசாவளி விருக்ஷம் - கால்வழி முறை (Genealogical Table)

59. சையம்பா முதல் சீமாம்பா வரையில் பதினைவர்.சிவாஜி இறப்பதற்கு மூன்றாண்டுகட்கு முன் திருமணம் செய்து கொண்ட 17 பேர்களில் சிவாஜிக்கு முன் இறந்த இருவர் தவிர்த்து எஞ்சியவர் ஆவர்.

பிள்ளைகுட்டி ஒன்றுமில்லாமல் இராஜா சாயேப்புக்கு முந்தியே இறந்து விட்டார்களல்லவா மேற்சொன்ன பாக்கி 15 பேர்களுடையதல்லவா? அவர் மேற்சொன்னபடி கிரமமாக விவாகஞ் செய்யப்பட்டவர்களல்லவா.

அவர்களெல்லோரும் உயிருடனிருக்கிறார்களல்லவா? அவர்கள் ஹிந்துக்களும் தஞ்சாவூரில் வசிப்பவர்களல்லவா. பிரதிவாதிகள் கொடுத்த பதிலில் ஹிந்து சாஸ்திரப்படி எவனொரு மராட்டியன் தனக்குப் பிறந்த பிள்ளை அல்லது ஸ்வீகாராஞ்செய்து கொண்ட புத்திரன் இல்லாமல் இறந்து போனால், அவனுடைய முதல் பெண்ஜாதி மாத்திரம் அவனுடைய சொத்துக்குப் பாத்தியமுள்ளவளாகமாட்டாள். அவருடைய எல்லா ஸ்திரீகளும் ஒரே மாதிரியாக பாத்தியமுள்ளவர்கள் என்கிறார்களல்லவா.

தஞ்சாவூரின் ஐந்தாவது மன்னரான பாவாசாயேப்[60] அவர்கள் தனக்குப் புத்திர ஸந்தானமில்லாமல் ஆறு பெண்சாதிகளை[61] விட்டுவிட்டு இறந்து விட்டாரல்லவா? அவர்களின் முதல் சம்சாரமான சுஜான்பாயி என்பவர்கள் அவருடைய எல்லா இராஜ்யமும் தான் முக்கிய பாத்தியமுள்ளவரென்று எல்லாவற்றையும் வசப்படுத்திக் கொண்டு இராஜ்யபாரம் நடத்தினாரல்லவா.

அந்த பாவா சாயேப்புக்கு எத்தனைச் சம்சாரங்களிருந்தன. அது இப்பொழுது பிரதிவாதியின் வசமுள்ளதஸ்தாவேஜு மூலமாயும். வம்ச விருக்ஷத்தின் மூலமாகவும் தெரியவில்லையா.

இந்தக் கேள்விக்குப் பதில் வேண்டுகிறவரான

*1857 Apl. 20* கையெழுத்து ஜான்ப்ரூஸ் நார்டன்

*50 (A) 1857 Dec. 16௳*

இன்று ஹனுமார் ஜனனம். சிலை உடைத்து ஸர்வீஸ் மாதப்பட்டியலையும் தேடிப்பார்த்தார்கள்.

சாயங்காலம் ரிகார்டு ஆபிஸிலுள்ள ஸ்ரீஹனுமாருக்குப் பூஜை வகையறா செய்து பிரஸாதத்தை எல்லோருக்கும் கொடுக்கப் பட்டது.

## மூட்டை எண் – 46C

*24-1857 Jan 3௳*

சி. விஜயமோஹன முக்தாபாயி[62] இவர்களுடைய சங்கதி விஷயமாக ரெஸிடெண்ட் அவர்கள் எழுதிய கடிதத்திற்கு எழுதிய பதில்:-

---

60. பாவாசாகேப் - 1736-37இல் ஆட்சி செய்த இரண்டாம் ஏகோஜியாவர். இவர் ஐந்தாவது மன்னர் என்பது பின்வரும் கால்வழி முறையால் அறியப்பெறும்:
ஏகோஜி I (1)
சஹாஜி II (2) சரபோஜி I (3) துக்கோஜி I (4)
பாவா சாகேப் (5) (ஏகோஜி II) பிரதாபசிங்கர்

61. ஆறு மனைவியர்: 1) சுஜான்பாயி, 2) ஜயந்திபாயி, 3) சக்வார்பாயி, 4) சுகுமார்பாயி, 5) கிரிஜாபாயி, 6) பார்வதிபாயி (போ.வ.ச.பக்.81)

62. இவர், சிவாஜியின் முதன் மனைவி ஆகிய சைதம்பாபாயின் இரண்டாவது மகள் ஆவர்.

எப்பொழுதும் லக்ஷுமியினால் அலங்கரிக்கப்பட்ட ரா.ரா. மஹாராஜா. ஸ்ரீஹென்ரீ பார்பஸ் எஸ்கொயர் தஞ்சாவூர் ரெஸிடெண்ட் அவர்களுக்கு:- ஸேவகனான ரா. நீலகண்டராவ் ஆனந்தராவ் ஜாதவின்[63] அநேக சலாம். விசேஷம். மேல் . டிசம்பர் மீ 25உ வியாழக்கிழமை இரவு 12 மணிக்கு மேல் சௌ. சி. ராஜஸபாயி[64] அமணி ராஜே சாயேப் அவர்கள் பரலோகமடைந்தார். அதற்கு முன்னமே அவர்களிடமிருந்த சி. விஜயமோஹன முக்தாபாயி அமணிராஜே சாயேப் அவர்களை உடனே ஹுஜூர் மகாலில் கொண்டுவந்து வைத்தார். அது தங்களுக்குத் தெரிந்ததே. அவ்விடத்தில் மாப்பிள்ளை ரா. ஸகாராம் மோஹிதே[65] வந்து போனாரென்று யாரோசொல்லியேமிஸ்தர் நார்டன் ஸாயேப் அவர்கள் தங்களுக்கு எழுதியிருக்கிறார்.

18 மாதத்தின் குழந்தையாகயிருக்கையில் அவர்களுடைய தாயார் மா. சைதம்பா பாயிசாயேப் அவர்கள் தெய்வகதியை அடைந்ததும்[66] அக்குழந்தை சௌ. ராஜஸபாயி அமணிராஜே சாயேப் அவர்களிடம் காப்பாற்றுவதற்கு ஒப்புவித்து பெரிய அண்ணாவை வேலையைப் பார்க்க நியமித்தார்.

அதன்படி இன்று வரையிலும் நடக்கிறது. பெரிய அண்ணா-1 நாமும் ரெஸிடெண்ஸி சிரஸ்தேதார் வெங்கட்றாவும் அவருடைய குமாரர் ராமச்சந்திரராவும் தவிர தர்பாருடைய பரம்பரையாய் வேலைபார்த்து வருகிறவர்களும் இப்படி மகாராஜா சாயேப் நம்பிக்கையோடு பாயிசாயேப் வகையறாக்களுடைய பங்குகளில்[67] நியமித்து வேலைபார்த்து வந்திருக்கிறார்கள். அப்பேர்ப்பட்டவர்களில் சிலருடன் வெளியேயிருந்து அவர்களிடமுள்ள நல்ல பெண்களின் சமீபத்திலிருந்து எப்பொழுதும் காத்திருந்து வேறில்லாமலிருக்கையில் ஷிசாயேப் தன்னுடைய சம்சாரம் தெய்வகதி அடைந்த தினம் என்ன செய்வதென்று தோன்றாமல் விசனமுள்ளவர்களுக்குச் சமாதானம் செய்து அசந்து போனார். இப்பேர்ப்பட்ட ஜனங்களும் சமீபத்திலிருக்கையில் அவர்களுக்கும் தெரியாமல் எப்படி வந்ததோ. இருக்கட்டும். ரெஸிடெண்ஸி சிரஸ்தேதார் இவ்விஷயத்திலென்று சொன்னாலோ அவரும் இத்தர்பாரின் பரம்பரையைச் சேர்ந்தவரே. இன்னும் விசுவாசமுள்ளவரென்று சொல்லுவதில் பெரிய மகாராஜா[68] அவர்கள் அவரை கல்யாண மஹாலில் வேலை பார்ப்பதற்கு நியமித்ததினாலேயே நன்கு விளங்கும். அவருடைய நடத்தையைப்பற்றி தங்களுக்குத் தெரியாததை நான் என்ன சொல்லமுடியும்.

ரா. பெரிய அண்ணா முக்தம்பாபுரம் சத்திரம்[69] எவர்களுடைய பேரால்

63. இவர் சர்க்கேல் ஆக இருந்தவர்; சேனைத்தலைவரும் ஆவர் (பக்.87)

64. ராஜஸபாயி - இவர் துளஜாவின் மனைவியர்களுள் ஒருவர்; இவருக்குக் குழந்தைகள் பிறக்கவில்லை (பக்.125)

65. ஸகாராம் - இரண்டாம் சிவாஜியின் மாப்பிள்ளை

66. தெய்வகதியடையல் - இறத்தல்; சைதம்பா 1851இல் இறந்தார் (மூட்டை எண் 168 C - 51 - 2)

67. பங்கு - தங்கியுள்ள அரண்மனைப் பகுதிகள்

68. பெரிய மகாராஜா என்றது இரண்டாம் சரபோஜியை

69. முக்தம்பாபுரம் சத்திரம் - ஒரத்தநாடு சத்திரம்

கட்டப்பட்டிருக்கிறதோ அந்த முக்தாபாயியின் தம்பிப்பிள்ளையும் பரம்பரையின் ரா. பிரதாப சிங்க ராஜாவின் காலம் முதற்கொண்டு மேற்சொன்ன மாதிரியாக சம்பந்தம் அவர்களுடைய குலத்திலிருக்கிறது.

இன்னும் விசுவாசமுள்ளவரென்று சொல்லுவதில் ரா. மகாராஜா சாயேப் தன்னுடைய தாயார், தங்கை, சம்சாரம் இன்னும் சில சமீபத்திலிருக்கும் உறவினர்கள் இருக்கையில் அவருடைய இளைய குமாரத்தியை மூத்த பெண்ணின் ஸம்ரக்ஷணையில் வைத்து ஷெி பெரிய அண்ணாவிடமே அக்குழந்தையை ஒப்புவித்து இருக்கிறார். அதுபோதுமான அடையாளமென்று எண்ணுகிறேன்.

# மூட்டை எண்-47 C

*1825*
*முக்தாம்பாபுர சத்திரம் கலம் நெல்லின் விலை 1/2 சக்.*
*39-1825*
*முக்தாம்பாபுரம் அன்னசத்திரத்திலிருந்து வந்த கடிதம்:-*

தீர்த்த ஸ்வரூபமான ம. ஸ்ரீ. ஸ்ரீ. சாஹேப்[70] அவர்களுக்குப் பாலகிருஷ்ணனுடைய அநேக நமஸ்காரம்:-

ரெஸிடெண்ட் ஜான்பைப்[71] சாஹேப்பும் 2 துரைகளும், ஒரு துரைசாணியும் ஆக 4 பேர்கள் பல்லக்கு ஸவாரியுடன் சத்திரத்திற்கு வந்தார்கள். துரைகள் வருகிறதற்கு முன்னால் சிரஸ்தேதார் வெங்கடறாவ் ராமாஜி வெங்கட்றாவின் வீட்டிலிறங்கினார். வெங்கடறாவுடைய உத்திரவின்படி 10 தட்டுகளுடன் (ஒரு தட்டென்றால் 11ரூ கும்பனி வைத்தது) துரைகளைக் கண்டார். பங்களாவில் வந்தார்.
பங்களாவில் சாப்பாடு தயாராயிருந்தது. சவாரி இறங்கினதும் சாப்பிட்டார்கள். நம்மைக்கூப்பிட்டு அனுப்பினதற்கு நாமிருவரும் ஒரு பொப்பளிமாஸ்ஸும் 8 பந்தர் ஆரஞ்சுப் பழங்களுடன் கண்டோம்.. சத்திரத்தில் பந்தர் ஆரஞ்சுகள் காய்க்கின்றனவாவென்று கேட்டதற்கு ஆமென்று பதிலளித்தேன். எல்லோரும் பங்களாவிலிருந்து புறப்பட்டார்கள். நாம் சத்திரத்திலிருந்து போய் எதிர்கொண்டழைத்தோம்.

5 பள்ளிக்கூடங்களைப் பார்த்து, ஒவ்வொரு பள்ளிக்கூடத்திலும் எவ்வளவு பையன்கள் வாசிக்கிறார்களென்று கேட்டு, ஒவ்வொரு வகுப்பிலும் 1, 2 பையன்கள் வீதம் பரிக்ஷை செய்து வந்தார்கள். பின்பு சத்திரத்திற்கு வந்தார்கள். கச்சேரியைப் பார்த்து மாடியில் சென்று படத்தைப்[72]பார்த்து மாடியில் எடுத்துக் கட்டியைச் சுற்றிப்பார்த்து முத்து லக்ஷ்ம்பாயி

70. தீர்த்தஸ்வரூபம் - கடவுளின் உருவமாக விளங்குகிற; சாகேப் என்றது சரபோஜியை

71 ஜான்பைப்—John Fyfe—ரெஸிடெண்டு

72. படம் என்றது இரண்டாம் சரபோஜி குதிரை மேல் இருப்பது போன்ற படமாகும்; இந்நாளிலும் அச்சத்திரத்தில் உள்ள படம் அதுவாகலாம்.

அம்மாளின் மஹாலின் வழியாக, பங்களாவுக்குச் சென்றார்கள், பிறகு வெங்கட்ராயர்[73] சத்திரத்தில் படிக்கிற பையன்களின் எண்ணிக்கையையும் சாப்பிடுகிற நான்கு வர்ணத்தின் ஜனங்களின் எண்ணிக்கையையும் சத்திரத்திலாகிற சிலவையும், ரொக்கத் துகையையும், பாக்கித் துகையையும் கண்டு 2 ஜாபிதாக்களை எழுதிக் கொண்டு வந்து வாங்குங்களென்றார். அதன்படி படிக்கிற பையன்களின் துகை விரிவாக 641. சத்திரத்தில் பரதேசி நாளைக்கு 3 வேளை சாப்பிடுகிறவர்கள் 4020. பகிராகிக்கும், உலுப்பைதாரர்களுக்கும் கொடுக்க வேண்டிய நெல் கலம் வருஷத்திற்கு-45,000 கலம்.

ரொக்கம் பணம் மாதமொன்றுக்கு

சம்பளக்காரர்கள் 9000, சில்லறைச்செலவு 2000, தேவஸ்தானம் வகையறா 1050 = 3050

இந்தப்படி ஒரு வருஷத்திற்கு 36,000வீதம் 2 ஜாபிதாக்கள் எழுதிக்கொடுத்தார், வெங்கட்ராயர் நாம் ஜாபிதாவைக் கொடுப்பதற்கு முன் ஷெ துகையின் சுமாரைத் தெரிவித்திருந்தாராம். நம்முடைய ரோகாவை வாங்கி விவரமாகத் தெரிவித்தார். நெல்லின் தற்போது காலக்கிறயப்படி விலை என்னவென்று துரை கேட்டார். கலம் அரைப்பணம் வீதம் 36 ஆயிரம் சக்ரம் ஆகிறதென்று சொன்னார். இவ்விவரத்தைக் கேட்டு வருஷத்திற்கு 70 ஆயிரம் சக்ரம் ஆகிறதே என்றோம். நெல்லு மலிவானால் வருஷத்திற்கு 60 ஆயிரம் சக்ரம் சுமார் இதன் விலை ஆகுமென்றார். பிறகு தருமம் நடக்கிற விதத்தை எல்லாம் வெங்கட்ராயர் தெரிவித்தார். அதையெல்லாம் கேட்டு மகிழ்ச்சியடைந்தார். பின்பு 12 மணிக்குப் பழவர்க்கங்களைச் சாப்பிட்டார்கள்.

உடனே சத்திரத்தின் கடைகளின் வியாபாரிகள் வரிகொடுக்கிற குத்தகைக்காரர்களினாலும் புகையிலை வெற்றிலையின் குத்தகைக்காரர்களினாலும் உண்டாயிருக்கிற நிர்ப்பந்தம் சொல்லுவதற்குக் காத்துக் கொண்டிருந்தார்கள். அவர்களைக் கூப்பிட்டு சங்கதிகளை யெல்லாம்கேட்டார்.

வியாபாரிகள் சொன்ன பதில்:-

வெகு நாளாக வரியில்லாமல் வியாபாரஞ் செய்து வந்தோம். பிறகு கும்பனியின் சஞ்சாயித்தில்[74] வரியைக் கொடுத்து சுகமாக வியாபாரஞ் செய்தோம். இப்பொழுது 2வருடமாக குத்தகைக்காரன் செய்கிற நிர்ப்பந்தம் எல்லாவற்றையும் தெரிவித்தார்கள். 2 நாழிகை வரையிலும் வியாபாரிகளின் விண்ணப்பத்தைக் கேட்டுக் கொண்டு உடனே இவ்விடத்தின் பேஷ்காரரை அழைத்து வாருமென்றார். பேஷ்காரர் வந்து சேர்ந்தார்.

வியாபாரிகளுக்குக்குத்தகைக்காரன்வெகு நிர்ப்பந்தம் செய்கிறானென்று சொல்லுகிறார்கள். இனி குத்தகைக்காரன் கட்டளைக்கு விரோதமாக பீறினால் உன்னிடமிருந்து ஆக வேண்டியதை விவரிக்கிறது.

---

73. வெங்கடராயர் என்றது சிரஸ்தேதார் ஆகலாம்

74. சஞ்சாயத்து - நிர்வாகம்

உனக்கு அடங்காத வேலைகளுக்குக் கலெக்டருக்கு எழுதி அனுப்புவதென்று சொல்லி பேஷ்கார் சுப்பிரமணிபிள்ளைக்கு நேராக உத்திரவிட்டார். வரிகொடுக்கிற குத்தகைக்காரருக்கும் இனிமேல் நல்லவழியாக நடக்கவேணும் என்று வெங்கட்ராயரும் நன்கு உத்திரவிட்டார். பிறகு மத்தியானச் சாப்பாட்டைச் சாப்பிட்டார்கள்.

சாப்பிடும் பொழுது ஹுஜுருக்கும்[75] இளவரசருக்கும்[76] வெகு நன்மையுண்டாக வேணுமென்று பகவானுக்கு அதிகப் பிரார்த்தித்து ஸர்காருக்குத் தன் பேரால் மிகவும் ஸலாம் எழுதி அனுப்பும்படி பொட்லர்[77] ராமசாமி வசம் சொன்னார்களாம்.

39 புறப்பட்டார்கள் முதலில் கர்னல் ப்ளாக்பர்ன்[78] சாயேப்புக்கு இப்படியே மரியாதை செய்கிற வழக்கப்படியே செய்தோம்.

---

75. ஹுஜுர் என்றது இரண்டாம் சரபோஜியை

76. இளவரசர் என்றது சரபோஜியின் மகன் சிவாஜியை

77. பொட்லர் - Butler

78. பிளாக்பர்ன் - இவர் 1811 முதல் ரெஸிடெண்டாக இருந்தவர் (பக்.66)

# சரசுவதி மகால் பகுதி–V

## மூட்டை எண் – 72C

*30·1735*

*ம கா.ஸ்ரீ.ஸ்ரீ. ஏகோஜி மகாராஜா-முகாம் தஞ்சாவூர் கோட்டை-அவர்களுக்கு எழுதிக்கொடுத்த கரார் நாமா*[1]

*20·எடையாத்தங்குடி படம் Plan*

சுபா. கும்பகோணம் அதம்பார் பத்து[2] கீழ்முகம் பொலகம் சேரவாயடயாத்தங்குடி சுரோத்திரியத்திற்குப் பிரதிப்பெயர் சரபோஜராஜபுரம் சூர்ய சந்திரருள்ள வரையில் கொடுக்கப்பட்டது. நிலம் குழி 29222 5/16க்குப் பாகமொன்றுக்குக் குழி 2087 5/8.

சோனஜி/ அப்பாவுக்குக் குழி –14611 1/8, திரு சிதம்பல பிள்ளை குழி –10436 9/16, சுப்பராவ் குழி –4174 5/8 = 29222 5/16

*11. 1828*

ம கா.ஸ்ரீ.ஸ்ரீ. சரபோஜி ராஜா சாயேப் அவர்கள் பீமறாவ் பேரனும், ஜெமாயீன் ராயருடைய புத்திரரும், ஆன வெங்கடறாயர் என்கிற ரெட்டிராயருக்குக் காஷ்யப[3] கோத்திரம் ஆஸ்வலாயன[4] சூத்திரம் ருக்வேதாத்யாயீயு[5]மான இவருக்கு.

கும்பகோணத்தில்-காவேரி ஆற்றுக்குத் தென்கரையில் தருமஞ் செய்வதற்காக மௌஜே அக்ரஹாரம் பெரும்பாண்டியைச் சேர்ந்ததில் காவேரிக்குத் தென்னண்டை யாகசாலை, மேற்சொன்னவர்வாங்கின இருப்பிடத்தின் வேலிக்கு வடக்கு

---

1. கரார் நாமா - உறுதிப்பத்திரம்

2. அதம்பார் பத்து - தாழ்வான நிலப்பகுதி

3. காசியப - அதிதியிடம் தேவர்களையும், திதியிடம் அசுரர்களையும் பெற்ற ஒரு முனிவன்

4. ஆசுவலாயனர் - ரிக் வேதத்துக்குரிய கிருஹ்ய சூத்திரங்களை எழுதிய முனிவர்

5. ருக்வேதாத்யாயி - இருக்கு வேதத்தை ஓதுபவர்

டி அக்கிரஹாரத்தின் கொல்லையின் வேலிக்கும் கொள்ளடிபடுகைக்கும்[6] கிழக்கு பாளு செட்டியாருடைய அக்கிரஹாரத்தின் கொல்லையின் வேலிக்கு மேற்கு இந்நாங் கெல்லைக்குட்பட்ட நிலம் யாகசாலை தருமஞ்[7] செய்வதற்கு.

133 குழி புஞ்சை நிலம் ஜலதருபாஷாண[8] நிதி நிக்ஷேப[9] அக்ஷிண ஆகாமி[10] ஸித்த ஸாத்ய[11] இப்பொழுதுள்ளதும் இனி ஏற்படப் போகிறதும் குல்பாப குல்கானு ஸகல சமுதாயங்களுடன் (ஸங்கல்ப பூர்வமாக) தாரா தத்த பூர்வமாக[12] ஸர்வமானியம்[13] கொடுத்திருப்பதைப் புத்திர பௌத்திர பரம்பரையாய் நடத்துவது.........................................................

*18-1814*

*(1) ஸர்காருடைய லாயத்தில் லால்ஹிந்த என்கிற குதிரைக்கு வயிற்றுக்குள் கொடுக்க.*
*மாசாலை 30 நாளுக்கு ஜாபிதா-குக்கில-டாங்க் 4 1/2, டாங்கணகார் உப்பு டாங்க் 4 1/2 (போரெக்ஸ்), காயம் டாங்க் 4 1/2 , சித்திரமூலம் 1/4 சேர், பொரச விரை 1/4 சேர், குராஸனி ஓமம் 1/4 சேர், சுக்கு 1/4 சேர், வெற்றிலை 100*

*(2) 1814*
*கீழ (ஜெய) வாசல்[14] வெள்ளைப் பிள்ளையாரின் கோவிலைக் கட்டுவதற்குக்[15] கொடுத்த மனு.*
*(3) 1814*
*சிவகங்கைக் கோட்டையில் கோட்டையைப் பழுது பார்ப்பதற்குத் தளவாடச் சிலவு 100 சக்ரம்.*
*21-1814 போலீஸ் ரிபோர்ட்டு*
*(1) அதிராமபட்டணம் முத்து வியாபாரியின் முத்துக்களைத் திருடின ஆஸாமிக்குச் சிவப்புக் கம்பத்திற்கட்டி பெரம்பால் 6 அடித்தார்கள்.*

*(2) திருவாரூர் திவான்வாடா[16] பழுது பார்க்க.*

---

6. படுகை - ஆற்றோரத்து நீரில்

7. யாக சாலை–அமைத்த இடத்தை யாகம் செய்தவருக்கே நன்கொடையாக அளிப்பது

8. ஜலதரு பாஷாணம் - தண்ணீர், மரம், உலோகங்கள்

9. நிதி நிக்ஷேபம் - பூமியின் கீழ் உள்ள புதையல்

10. ஆகாமி - பிற்காலத்து அனுபவித்தற்குரிய சுதந்திரம்

11. ஸித்த ஸாத்ய - அனுபவித்தற்குரியது (?)

12. தாராதத்தபூர்வம் - நீர்வார்த்து (க் கொடுத்தல்)

13. ஸர்வ மானியம் - எந்த விதமான தீர்வையும் செலுத்தாமல் அனுபவிக்குமாறு அளிக்கப்பெறும் நிலக்கொடை (பக்.263)

14. கீழவாசல் வெற்றி வாசல் எனப்படும் (போ.வ.ச.பக்.77); இங்கு வெள்ளைப் பிள்ளையார் கோயில் உள்ளது (பக்கம் 213இல் 26)

15. வெள்ளைப் பிள்ளையார் குறவஞ்சி என்ற நூலால், இக்கோயில் நாயக்கர் காலத்தது என்று அறிய வருகிறது. எனவே இங்குக் கட்டுதல் என்பது புதுப்பித்தல் ஆகலாம்.

16. திவான் வாடா - அரண்மனை

*(3) 1814*
மராமத்து இலாகா

ஆயுதசாலையில்-செலவைக்கல் சமீபம் வைப்பதற்கு இரும்பு ஆயுதங்கள் செப்பனிடும் வேலைக்கு

தேங்காய் எண்ணைய் கொட்டியத்திலிருந்து-5 சேர், ஜாமதார்கானாவிலிருந்து கந்தைத்துணி -4 சேர், கொடுக்கும்படி உத்திரவாக வேண்டும்.

*(4) 1814*
பஞ்சாங்கம்[17] அச்சிடுவதற்கு வேண்டிய சாமான்-மைபிடிப்பதற்கு நல்லெண்ணைய் சேர்-2.

புத்தகங்களுக்குத் கோடு போடுவதற்குச் சிவப்புப் பருத்தி கட்டு-5 ஆணிகளும், உத்திரவானபடி கொடுப்பதற்கு உத்திரவு செய்யவும்.

*(5) 1814*
வண்டிகள் வைக்குமிடம் மாட்டுக்குக் காலில் கட்டி புறப்பட்டு, கால் வீங்கினதற்கு வயிற்றில் கொடுப்பதற்கு மருந்து:-

சுக்கு டாங்க் 9, சித்திரத்தை டாங்க் 9, கடுகுரோகணி டாங்க் 9, மிளகு டாங்க் 9, பூண்டு சேர் 1/4, ஈசுவரவேர் சேர் 1/4, சித்திரமூலம் சேர் 1/4, சோப்சீனி சேர் 1/4, ஓமம் டாங்க் 9, கருஞ்சீரகம் டாங்க் 9, காயம் டாங்க் 1

*(6) 1814*
ஸ்ரீபிருஹதீஸ்வர ஸ்வாமி கோவில்[18] த்வாஜா ரோஹணத்தின்(கொடியேற்றத்தின்)தூணைத் தயார் செய்ய தோட்டங்களிலிருந்து 2 பொன்னக்காய் மரங்கள்[19] கீல் (தார்) செய்து தடவுவதற்கு மகால் கொட்டியத்திலிருந்து.
நல்லெண்ணைய் ஒரு மனு, குங்கிலியம் 1 1/2 மனு, மஹால் ஜாமதார் கானாவிலிருந்து வெள்ளைக் காதித்துணி-3, மஹால் ஆயுதசாலையிலிருந்து தேங்காய் நார்-1/4 மனு.

*(7) 1814*
வைதீஸ்வரன் கோவிலுக்கு "ஆனந்தவல்லி" என்கப்பட்ட யானைக்குட்டி ஒன்றை இனாமாகக் கொடுத்ததற்காக யானைப்பாகன் இருவரையும் மேற்கண்ட யானைமாவில் தாக்கல் செய்கிறது.

---

17. பஞ்சாங்கமாவது திதி,வாரம்,நக்ஷத்திரம்,யோகம்,கரணம் ஆகிய ஐந்தையும் காட்டும் நாட்காட்டியாகும்.

18. தஞ்சைப் பெரிய கோயில்

19. புன்னை மரங்கள்

# மூட்டை எண்.-73 C

*9. 1852*

*(1)* ம கா.ஸ்ரீ.ஸ்ரீ. திவான் சாஹேப்[20] அவர்கள் 17 கலியாணங்கள் [21] செய்துகொண்டதற்குத் தக்ஷிணை செலவு *2130-3-0*

*(2) 1852*

லகாம் ஹுஸைன் அல்லா ஊர்வலம் சுற்றி வருவதற்குப் பிருதுகளை வழக்கப்படி கொடுக்கிறது.

ஈட்டிக்காரர்கள்-40, யானையின் மேலுள்ள பிருதுகள், மேளம், ஸங்கீத மேளம், அரபி வாத்தியம், துருப்புகள், கோட்டையிலும், கோட்டைக்கு வெளியிலுமுள்ள தப்பு தம்பட்டம்[22] வகையறா

நெட்டியினால் செய்த மரங்கள் 20 திவட்டிகள், வாணங்களின் கழிகள், பல்லாக்குத் தூக்குகிற ஆள் 5, டகோரா வாத்தியம் ஜோடி-1 குதிரையின் ஜேணங்கள்[23] , கல்லெழைத்த பட்டி, ஹுக்கா[24] கட்டுவதற்குப் பட்டுக்கயறு

*(3) 1822*

யானை மகால்

ஜாவ்ஜீ பிரஸாத என்கப்பட்ட யானைக்குட்டிக்கு முன்காலில் சிறங்கு புறப்பட்டிருப்பதால் பொடி செய்து தடவுவதற்கு மருந்து.

மாசிக்காய் சேர்-1/4, கல்கோடரி சேர்-1/4, சிங்கரூப சேர்-1/4, மரமஞ்சள் சேர்-1/4, துருசு சேர்-1/4, நாபி நாளி சேர்-1/4, மிருதார் சிங்கு சேர்-1/4, மிளகு சேர்-1/4, ஜீரகம் சேர்-1/4, எலுமிச்சம்பழம்-3

கடக தந்தமுள்ள[25] யானைக்குட்டி நொண்டி ஆனதால் வயிற்றில் கொடுப்பதற்கு மருந்து:-

சுக்கு சேர்-1/2, மிளகு சேர்-1/2, அரிசித்திப்பிலி சேர்-1/2, கண்டத்திப்பிலி சேர்-1/2, கடுகுரோகணி சேர்-1/2, கருஞ்சீரகம் சேர்-1/2, சித்தரத்தை சேர்-1/2, ஓமம் சேர் 1/2 மொரப்பா[26] சேர்-1/2,கோஷ்டம் சேர் 1/2, பொரச விரை சேர்-1/2, காயம் டாங்க்-9

---

20. திவான் சாகேப் என்றது இரண்டாம் சிவாஜியை

21. இவர் 18.7.1852இல் மணம் செய்து கொண்ட பதினெழுவர் பெயர் (பக்.34) மூட்டை எண் 45C-55

22. தப்பு - ஒரு சிறு பறை

23. ஜேணங்கள் - மெத்தை; கலனை (Horse saddle)

24. ஹுக்கா - புகை குடிக்கும் கருவி வகை

25. கடகதந்தம் - வட்டமான தந்தம்

26. முரப்பா - பாகில் ஊற வைத்த தின்பண்டம்

டாங்களகார்? டாங்க்-9 (போரெக்ஸ் இங்கிலீஷ்), குக்கில சேர்-1/4, பூண்டு சேர்-1/2, காட்டுக்கடுகு சேர்-1/2, கட்டித்தயிர் சேர்-10, உப்புபடி 2, கொடுப்பது.

9.1822
(4) கொட்டியத்திலிருந்து கொடுக்கிறது. மாட்டுக்கு வயிற்று வலிக்காக மருந்து:-

சுக்கு டாங்க்-9, பூண்டு சேர்–1/2, அக்கல்கரா[27] டாங்க்-4, ஈசுவரவேர் டாங்க்-9, வெங்காயம் சேர்-1, மிளகு டாங்க்-4, அபின் டாங்க்-2, பெரப்பம் ஓடு டாங்க்-9, ஓமம் டாங்க்-9, டாங்கணகார் டாங்க்-4 (போரெக்ஸ்) (இங்கிலீஷ்)

## மூட்டை எண் -75 C

3. 1841
ஸரஸ்வதி மஹாலில் - புதுச்சேரியிலிருக்கும் முத்துசாமி பிள்ளையினிடம் தமிழ் அகராதி 11வது நிகண்டு[28] அச்சிட்ட வஹிகள்[29] மூணு கரீதி செய்ததற்கு ரூ.4-8-0.

(2) பிடில் தந்திகளை - ராபர்ட்ட வெள்ளைக்காரனிடம் கரீதி செய்த வகையில் ரூ.3-8-0.

சென்னையில் தமிழ் வர்த்தமானப் பத்திரிகை[30] தேசாபிமானி என்கிற பத்திரிகையின் 3 நகல் (1827) ரூ.65.

(3) ஸ்ரீவேத விநாயக ஸ்வாமிக்கு ஹஜாரியின் வாசலுக்கடுத்த சுவாமி கோவிலில் வைத்து, கும்பாபிஷேகஞ் செய்த வகையில் ரூ.5.

ஸங்கீத வித்யாதிக பதக்கம்[31]-வரவு

8.1841
(1) படே ஹுஸேனி சாயேப் தர்கா[32]வுக்கு ரூ.23., ஸர்வர் ஹுஸேனி சாயேப் தர்கா[32]வுக்கு ரூ.17.
(2) அல்லாப் பண்டிகைக்காக இராஜ்யத்தின் அல்லாவிற்கு ரூ.11.
(3) கமான் ஹுஸேனீ அல்லாவுக்கு ரூ.11., பர்சீஹுஸேனி அல்லாவுக்கு ரூ.7.
(4) அல்லாப் பண்டிகைக்காக டால்ஸாஹேப் வகையறா அல்லாக்களுக்கு ரூ.64.

---

27. அக்கல்கரா - மருந்துவேர் ஆகலாம்.

28. அகராதி 11ஆவது நிகண்டு - சூடாமணி நிகண்டின் 11ஆவது பகுதி ஆகலாம்.

29. வஹிகள் என்பது காகிதச் சுவடிகளைக் குறிக்கும்

30. வர்த்தமான பத்திரிக்கை - செய்தித்தாள்

31. பதக்கம் - பிரிவு (பக்கம் 229)

32. படேஹுஸேன் தர்கா (பக்கம் 212; 213இல் 15)

*9-1841*

*(1) காசியிலிருந்து அங்கப்பிரதக்ஷிணஞ்[33] செய்து கொண்டு வந்த கிருஷ்ணாஜி பண்டிதர் என்னும் பிராமணர் காவடி கொண்டு வந்ததற்குப் பூஜைக்கு ரூ.355.*

*(2) லக்ஷ்மீராஜபுரம் சத்திரத்திற்கு[34] ரூ.10.*

*10-1841*

*(1) க்யாப்டன் ஹாரீஸ் அவர்கள் செய்த ஆபிகா மிருகத்தின் படத்தின் புத்தகம் 4 மதறாஸிலிருந்து ஸர்காருக்கு ரெஸிடெண்ட்[35] அனுப்பித்ததற்கு 4 நகலுக்கு ரூ.4-6-0.*

*(2) 1841*

*விண்ணாற்றங்கரை கடைத்தெருவில் விடோபாவின் படித்துறைக்கு எதிரில், வடிகால் கால்வாய்க்கு வடகரையின் மேலிருந்து ரஸ்தா போடுவதற்கு ரூ.200.*

*(3) ஹுஜூருடைய உத்திரவு*

*ம கா.ஸ்ரீ.ஸ்ரீ. சிவாஜி ராஜா சாஹேப் ஒவ்வொரு மஹாலிலும் ஸ்வாதீனமுள்ள (அதிகாரத்திலுள்ள) ஸபை, மொகாஸா, தோட்டம், சத்திரம் வகையறா சுங்கம் தேவஸ்தானம் கூட தினப்படி கணக்கு அநேக நாணயம் வாரிகளில் வரவு சிலவு செய்து வருவது வேண்டியதில்லை. இவ்வருஷ முகற்கொண்டு கும்பனி நாணய வாரியில் ரூ சுபையில் கணக்கு எழுத வேணும். கையிருப்பு வகையறா இருப்பதை ரூபாய் நாணயப்படி நடத்துகிறது.*

*10-1841*

*(5) இனாம் ரஷியாவின் பிரின்ஸ் அலேகஸிஸஸாலடமாப்[36] வந்ததற்கு ரெஸிடெண்டு[37] இடமுள்ள ஹர்காரவுக்கு ரூ.30.*

## மூட்டை எண்-76 C

*10-1836*

*குறிப்பு-சரபேந்திர ராஜ பட்டணத்திற்கு[38] ஹுஜூர்[39] சென்றிருந்தபொழுது, தங்கம் வெள்ளி வரவு சிலவு*

---

33. அங்கப் பிரதட்சணம் - உடம்பால் புரண்டு வருதல்

34. லக்ஷ்மிராஜபுரம் என்பது வெண்ணாற்றங்கரை வடபகுதி பள்ளியக்கிரகாரம் ஆகும். இச்சத்திரத்தை அமைத்தவர் சரபோஜியின் மைத்துனராகிய ராமோஜி சர்ஜேராவ் காட்கே ஆவர் (பக்கம் 277)

35. ரெஸிடெண்ட் கின்டர்ஸ்லி ஆகலாம் (பக்கம் 67)

36. இந்த ரஷிய இளவரசர் யார் என்று தெரிய வாய்ப்பில்லை

37. எர்ஸிடெண்டு கிண்டர்ஸ்லி ஆகலாம் (பக்.67)

38. இது பட்டுக்கோட்டை தாலுகாவில் உள்ள ஊராகலாம்.

39. ஹுஜூர் என்றது இரண்டாம் சிவாஜியை

*(1) பென்சிலுக்குக் கட்டுகிற அரஞாண் மூணுக்கு 9 வடமாகச் செய்து, அதில் ஷடி ருத்திராக்ஷங்களைக் கோத்து மொகப்பு புதிதாய்ச் செய்வதற்குத் தங்கம் இடை.*
*(2) கடிதங்கள் போடும் குழாய் ஒன்றுக்கு இடை.*
*(3) இரும்பு ஆங்கிலேய அடுப்புகள்.*
*(5) 1836*
*ஸேனாதுரந்தர் - ரா. சோமனாத சதாசிவ தீக்ஷித பண்டிதரவர்களுக்கு வைரம் "வாஹநக்"[40] புலிப்பல் வைத்துக் கட்டின வைரப்பதக்கமொன்றை இனாம் கொடுத்தார்.*

*(6) 1827*
*யுத்த சாலையில் - ஒரு தச்சன் வேலை செய்துவிட்டு வீட்டுக்குப் போகையில் பாராக்காரன் (காவல்காரன்) அவனுடைய வேஷ்டியை உதறிப் பார்த்த பொழுது 2-1/4 டாங்க் நிறையுள்ள ஒரு பித்தளைத் தகடு வேஷ்டிக்குள் ஒட்டியிருந்தது. கீழே விழுந்ததைப் பார்த்து, சொன்னதினால் வேலை செய்யுமிடத்தில் வேஷ்டியை உதறாமல் அஜாக்கிரதையாய் வந்த குற்றத்திற்காக அபராதம் 6 தேங்காய் விதிக்கப்பட்டது.*

*(2) குளிர்ந்த பானங்கள் வைக்குமிடத்தில் சௌ. சி. சைதம்பாயி[41] சாயேப் அவர்களுக்குப் பெண் குழந்தை பிறந்ததினால் முதல்நாள் முதற்கொண்டு பார்சை (நாமகரணம்) வரையில் மகாவில் அசல் சந்தனம் தயாரிப்பதற்குச் சாமான் கரீதிக்கு 32 சக்கரம் கொடுக்கிறது.*

*(6) 1827*
*(3) ஹுஜூரின்[42] பஞ்சடைந்த சட்டைக்குப் பொத்தான் செய்து தைய்க்க பழையபுலிவராகன் 7*

*(4) 1827*
*நாகூர் காதிர் சாயேப் தர்காவுக்கு நகாரா வாத்தியம் தயார் செய்வதற்குச் சக்ரம் 6.*

*(5) 1827*
*லாயம் - டாக்டர் நாலிக் வெள்ளைக்காரரிடம் சீமைக் குதிரை 5 அடி உயரமுள்ளதைக் கரீதி செய்ததற்கு ரூ.3,000.*

*(6) 1827*
*சென்னப்பட்டணம் மாஜி கவர்னர் சாயேப்[43] அவர்களுக்கு ரூ.3,500.*

*(7) 1827*
*சென்னப்பட்டணம் மாஜி கவர்னர் மன்றோ மே இவர்களுடைய மகூதி [44] கட்டுவதற்குக் கும்பனி ரூ.3,500 கொடுக்கப்பட்டது.*

---

40. வைரம் வாஹநக்' என்பது புலிப்பல் வைத்துக் கட்டின வைரப் பதக்கம் என்று பொருள்படும்

41. சைதம்பாயி - சிவாஜி IIஇன் முதல் மனைவி. இவர் இரண்டாம் சரபோஜியின் மூத்த மகள் சுலக்ஷணாபாயி (போ.வ.ச.பக்.135)யின் மகள் (பக்கம் 32)

42. ஹுஜூர் என்றது இரண்டாம் சரபோஜியை

43. மாஜி கவர்னர் என்றது 10.6.1820 முதல் 6.7.1827 வரை கவர்னராக இருந்த ஸர் தாமஸ் மன்ரோவை (பக்.63)

44. மகூதி - கல்லறை (Tomb )

*(8) 1827*

இராஜா மஹாலில் - கோட்டூரில்[45] வசிக்கும் கிருஷ்ண சாஸ்திரிகளிடமிருந்து வலம்புரிச் சங்கு ஒன்றை ரூ.169க்கு வாங்கப்பட்டது.

*(9) 1827*

ஜீராத்கானா - (ஆயுதசாலையில்) குதிரை கட்டுவதற்கு 2 பெரிய கூடாரங்களைத் தயார் செய்ய காதித்[46] துணி வாங்குவதற்குச் சக்கரம் - 500.

*(10) 1827*

ஆயுதசாலையில் - சிவகங்கைக்கோட்டை, மாடியிலுள்ள "அஸ்மான்கிரியா"[47] வைத்தைப்பதற்குச் சக்கரம் - 160.

*(11) 1827*

ஆயுதசாலை - தேசத்தின் ஜனங்களுக்கு ஸாமான் தயார் செய்து கொடுப்பதற்கும், கரீதி செய்வதற்கும் கூலிக்கும் சக்கரம் - 69-1/2.

*(12) 1826*

தட்டி மஹாலில் - சௌ. மா. அகில்யா பாயி சாயேப் அவர்களுடைய தட்டிமாலில் ஆடு மாடுகள் கட்டுவதற்கு இடம் போறாததினால் நாடக சாலை விழுந்து போன காலி இடம் 15 அங்கணங்களைக் கொடுத்து, கட்டிக் கொடுப்பதற்குத் தளவாடம் கூலி சக். - 110.

*(13) 1826*

களஞ்சியம்[48] மண்டபம் 65 அங்கணங்களையும் தாள்வாரமும் பழுதுபார்க்க தளவாடம் கூலி சிலவு சக்ரம் - 498.

*(14) 1827*

சிவகங்கைக் கோட்டையில் புதுத் துண்டு 8க்கு உயரம் 1-1/2 கஜத்திற்குக் கோட்டை வெளியிலிருந்து மண் வெட்டிக் கொண்டு வந்து போடுவதற்குச் சக்கரம் - 250.

*(15) 1827*

இராஜ மஹாலில்[49] - சர்காருடைய நாய்க்குத் தங்கப்பட்டை செய்வதற்குத் தங்கம் கரீதி ரூ.275—8-4.

*(16) 1827*

தஞ்சாவூர் கோட்டை வாண வேடிக்கைக்காக வாணங்கள் தயாரிப்பதற்கு ரூ.358.

---

45. கோட்டூர் - ஆடுதுறை ரயிலடியிலிருந்து திருமங்கலக்குடி; அங்கிருந்து, ஐந்து கி.மீ. தொலைவில் உள்ளது! இவ்வூர்; மன்னார்குடி வட்டத்திலும் ஒருருண்டு.

46. காதி துணி - இரட்டுத்துணி (Double threaded Coarse cloth)

47. அஸ்மானகிரி - மேற்கட்டி

48. களஞ்சியம் என்பது தாஸ்தான் மஹாலை (பக்.453)

49. ராஜ்மகால் என்பது அரசரது அரண்மனையாகலாம்.

*(17) 1827*

விகட கவிகள்[50]-குருவைய்யர். இடையன் வேஷம் போட்டுக் கொண்டு வந்தற்கு இனாம்–1 வெங்கட சுப்பா. காவடி கொண்டு வந்ததற்கு இனாம்.-1.

*(18) 1827*

க்யாப்டன் ஜான்பைப்[51] ரெஸிடெண்ட் சாயேப் அவர்களுடைய வீட்டில் வெள்ளைக்காரர்களுக்கு வேடிக்கை காட்டுவதற்கு விஜயதசமி தினத்தன்று[52] விடுகிற வாணத்தில் பாதி பாகம் தயார் செய்வதற்கும், அபூர்வமான வாணங்கள் தயாரிப்பதற்கும் சக்ரம் 180.

*(19) 1827*

உத்திரவு-ஹுஜுரின்[53] யுத்தத்தின் ஆயுதங்களைத் தீட்டிப் பளபளப்பாகச் செய்வதற்கு நாள் பார்த்து முகூர்த்தம் செய்ததற்குத் தக்ஷிணை கும்பனி ரூ.2.

*(20) 1827*

நாகூர் காதிர் சாயேப் தர்காவுக்கு உர்ஸா பீர் உற்சவத்திற்காக ஸர்காரிலிருந்து மூடுகிற வஸ்திரத்தை வழக்கப்படி அனுப்புவதற்குச் சக்ரம் 20க்கு ரூ.31-1-0.

*(21) 1827*

மராமத்து இலாகா[54] சௌ. இராஜகுமராம்பாயி அமணி ராஜே சாயேப்[55] அவர்களுக்கு இரத்தின ஸபையின் மாடியில் மஹால் கட்டுவதற்குத் தளவாடம் வகையறா சிலவுக்காக ரூ. 4,000

*(22) 1827*

சென்னைப்பட்டணத்திலிருந்து வந்த டாக்டர் மெக்காவின் என்பவர் ஹுஜூருடைய கண் வைத்தியம் செய்ததற்காக இனாம் ரூ.4,000.

*(23) 1827*

ஸ்ரீஇரத்தின புரேஸ்வர ஸ்வாமி[56] கோவில் தேர்முட்டி கட்டுவதற்குச் சிலவு ரூ.300 (வடக்கு வீதியிலிருக்கிறது).

*(24) 1827*

உமர்கான் மூலம் மண்தைலம் 5 சீசா கரீதி செய்த வகையில் சிலவு–8.

---

50. விகடகவி - நகைச்சுவை நடிகர்

51. ஜான்பைப் - John Fyfe (பக்கம் 66)

52. விஜயதசமி - மகாளய அமாவாசைக்குப் பிறகு வரும் வளர்பிறை 10ஆம் நாள்

53. ஹுஜுர் - இரண்டாம் சரபோஜி

54. மராமத்து இலாகா என்றது இமாரதி மகாலை

55. இராஜகுமாராம்பாயி அமணி ராஜே சாகேப் என்றது இரண்டாம் சரபோஜியின் இரண்டாவது மகளை (போ.வ.ச.பக்.138)

56. இரத்னகிரீஸ்வரர் கோயில் ஆகலாம் (பக்கம் 213இல் 16) வடக்கு வீதி தூய பேதுரு மேனிலைப் பள்ளிக்கு அருகில் உள்ளது.

*(25) 1827*
சென்னப்பட்டணத்திலிருந்து வெவ்வேறு மாதிரி சாமான்களைக் கரீதி செய்த வகையில் சிரஸ்தேதார் வெங்கடராயர் மூலம் கடிதம் மூலமாக வட்டிக்காக அனுப்பித்த துகை ரூ.10,000.

## மூட்டை எண்-77 C.

*(2) 1842*
(1) கும்பகோணம் ஸாரங்கபாணி ஸ்வாமிக்குக் கும்பாபிஷேகம்.

(2) பத்திராசலத்திலிருந்து வந்திருந்த தெலுங்கு ஸ்ரீதரானந்த ஸரஸ்வதி சுவாமி அவர்கள் காசி யாத்திரைக்குச் செல்லுவதால் வழியில் பிக்ஷைக்கு அவருடன் செல்லுகிற சீடர்களுக்கும், சன்னியாசி அவர்களுடைய எண்ணப்படி விசாரணை செய்கிற சிலாலிகித[57] அஷ்டலிபி[58] சுப்பையாவிடம் 50 ரூ. கொடுக்கப்பட்டது. (கல்லில் எழுதிய எட்டுவித எழுத்துக்களை அறிகிற சிலாலிகித அஷ்டலிபி).

பஞ்சாங்கம் கணிக்கிற பாலகிருஷ்ண ஜோஸியருக்கு ரூ. 43-12-0.

(3) ம.ஸ்ரீ. திவான் சாயேப் அவர்களுக்குச் சென்னையிலிருந்து கவர்னர் ஹிமோஎலி[59] கனம் நியாரட்பீட் சாயேப் அவர்கள் எழுதிய கடிதத்தை வாங்கிக்கொண்டு, ரெஸிடெண்ட் வேலை பார்க்கும் மிஸ்தர் கிண்டர்ஸ்லி அவர்கள் மகாராஜா[60] சபையின் ஸதரில் ஸர்க்காரைக் கண்டு கடிதம் கொடுத்தற்காக டாலயித்[61] சேவகனுக்கு ரூ.33-4-0.

(4) மகர்னோம்புச்சாவடி பாதிரி பள்ளிக்கூடம் வகையறாவின்.

## மூட்டை எண்-78 C.

*(3) 1832*
முதவில் விண்ணாற்றுப் பாலத்தின்[62] வேலைக்காகவும், நீலகிரி வகையறாவின் வேலைக்காகவும், ஷை படுகையில் உத்திரவின்படி செங்கல்லை அறுப்பதற்காக உத்திரவு கொடுத்த இடத்தில் பள்ளமாகி, சாகுபடிக்கு உபயோகமில்லாமல் நான்கு வருஷங்களாகக்

57. சிலாலிகிதம் - கல் மேல் எழுத்து

58. அஷ்டலிபி - எண் வகை எழுத்து முறை

59. கவர்னர் ஹிமோஎலீ என்பது யார் என்று தெரிய வாய்ப்பில்லை. இங்குக் கவர்னர் எழுதிய கடிதத்தை ரெஸிடென்ட் கின்டர்ஸலி மகாராஜாவிடம் கொடுத்தார் என்றிருப்பதால், அந்நாளில் இருந்த கவர்னர் லார்ட் எபின்ஸ்டன் ஆகலாம் (பக்.67)

60. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

61. டலாயித் - வெள்ளி வில்லை தரித்த சேவகன்

62. வெண்ணாற்றுப்பாலம் 1836இல் கட்டி முடிக்கப்பட்டது என்று அப்பாலத்திலுள்ள கல்வெட்டினால் அறியப்பெறும் (பக்கம் 470)

காவியாக விழுந்திருக்கிறது. அந்தப் படுகைப் பள்ளத்தை மேடாகச் செய்து கொடுப்பதற்குக் கொடுத்த மனு.

*(6) 1841*

(1) (படே) பெரிய ஹூஸேநீ அல்லாவுக்கு[63] மோஹரம் பண்டிகைக்கும் கொடியேற்றம் விளக்குக்கு எண்ணை சரபத்-கிசடி இவைகளுக்காக 10 தினங்களுக்கு 11 சக்ரம்.

(2) அப்தார் (தண்ணீர் பந்தல்) கானாவில் - 11 நாளைக்கு அல்லாவுக்கு டான்ஸாவுக்கு ரூ.11, பல்ஸாவுக்கு ரூ.11, ஹைதர்ஸா ரூ.11 அதிஹுஸேனீ ரூ.11, புஷ்பம், நவபாண்டம் வகையறா ரூ.20.

*(8) 1841*

(1) ரா. துளஜாராஜாவின்[64] காலத்தில் தட்டான்களுக்கு[65] கொங்கணேசுவரஸ்வாமி[66] கோவிலுக்குப் பின் வீடுகட்டிக் கொள்வதற்குக் கொடுத்த இடம் விஷயம் (சிவகங்கைக் கோட்டையிலிருந்த இடத்திற்குப் பதிலாக)

*(2) 1841*

கோட்டைக்கு வெளியில் கருத்தட்டாங்குடி - குருவிக்காரத் தெருவிலிருக்கும் வேட்டைக்காரர்கள் தங்களுக்கு ரா. பிரதாபசிங்கராஜா[67] காலத்தில் கொடுத்த இடம் விஷயம் கும்பனியில் தொந்தரவு செய்வதால் ரிகார்டிலிருந்து தங்களுடைய தஸ்தாவேஜைக் கொடுக்க வேணுமென்று கொடுத்த மனு.

*(9) 1838*

யமுனாம்பாபுரம் சத்திரம்[68] வகையறா அன்னசத்திரங்களின் கணக்கு.

## மூட்டை எண்–80 C.

*(2) 1841*

சிலோன் கவர்ன்மெண்ட் பென்சின்[69] ஜாபிதா (ஆங்கிலம்)

---

63. படேஹூஸேன் அல்லா (பக்.212; 213இல் 15)

64. இரண்டாம் துளஜா

65. தட்டான் - பொற்கொல்லர்

66. இக்கோயில் மேலவீதியிலுள்ளது (பக்.213இல் 3)

67. பிரதாபசிங்கர் - இவர் 1739-63 வரை ஆட்சி செய்தவர்.

68. யமுனாம்பாபுரம் அன்ன சத்திரம் - நீடாமங்கலத்துக்கு யமுனாம்பாபுரம் என்று பேர்; யமுனாம்பாள் என்பவர் பிரதாபசிங்கரின் மூன்றாவது மனைவியாவர் (போ.வ.ச.பக்.166) (பக்கம் 271; 360)

69. பென்சின் - பென்ஷன் - ஓய்வூதியம்

*1841*
ரெஸிடெண்டுக்கு[70] எழுதின மனுக்களின் ஜாபிதா (ஆங்கிலம்).

*(3) 1850.*
தற்பொழுது பங்க்கு வேலை பார்க்கிற ஸேநா துரந்தர் ரா. நீலகண்ட ராவ் ஆனந்த ராவ் ஜாதவ்[71] அவர்களின்பேரால் சூர் மஹால் ரிகார்டிலிருந்து எழுதின கடிதங்களின் டைரி.

## மூட்டை எண்–85 C

*(34) 1814*
*(1) ஸர்கார் உத்திரவு*
காலிசெம்ப நொட்டியான் ஸமுத்திரத்திலிருந்து, ஒரு பெரிய மீனைப் பிடித்துக் கொண்டு வந்ததற்காக ஐந்து பணம்[72] இனாம் கொடுக்கப்பட்டது.

*(2)* பாட்டு வித்வான் தில்வார் ஆலிக்கு இனாம் பத்து சக்கரம்[73] கொடுத்தார்கள்.

*(3) 1820*
ம.கா.ஸ்ரீ.ஸ்ரீ. திவான் சாயேப்[74] அவர்களுக்கும், சி. ரா. சிவாஜி ராஜா[75] சாயேப் அவர்களுக்கும் ஏகனாத தியாகராஜ என்பவர் கங்கா அபிஷேகஞ் செய்ததற்குத் தக்ஷிணை பொன் ரூபாய் 2[76] கொடுக்கப்பட்டது.

*(35) 1777*
*(1) ஹுஜூர்[77] உத்திரவு*

அய்யம்பேட்டைக்குப் பக்கத்தில் ஸாஹேப்பின் தோட்டத்தில் சௌகண்டி [78]கட்டிடம் கட்டுவதற்கு ஆட்கள், கொல்லன், தச்சன், கொத்தன் வகையறா

*(2) 1777*
தஞ்சாவூர் கோட்டையையும், இராஜ்யத்தையும் பாதுகாப்பதற்காக, ஆங்கிலேய கும்பனியின் (சிப்பாய்களின்) சேனையின் சிலவுக்காக வருஷத்திற்கு நான்கு இலக்ஷம் வராகன்

---

70. கிண்டர்ஸ்லி ஆக இருக்கலாம்

71. இவர் சிவாஜி II காலத்தில் இருந்த பெரிய அதிகாரி (பக்கம் 87)

72. 32 காசு ஒரு பணம் (பக்கம் 150)

73. 10 பணம் ஒரு சக்கரம் (பக்கம் 1 150)

74. திவான்சாகேப் என்றது இரண்டாம் சரபோஜியை

75. இரண்டாம் சரபோஜியின் மகன் சிவாஜி

76. பொன் ரூபா - மோஹரா; 15, 7 1/2, 5 ரூபாய் மதிப்புடையவை (பக்கம் 152)

77. ஹுஜூர் என்றது இரண்டாம் துளஜாவை

78. சௌகண்டி - சதுரத்திண்ணைக் கொட்டகை

*கொடுப்பதாக ஒப்புக்கொண்டு[79] லாட்பிகட்[80] பந்தர்[81] அவர்கள் பெயரால் வருஷா வருஷம் போல் கடிதம் எழுதின கொடுத்த பாபத்தில் கொடுப்பதற்கு மாசி மீ கெடு[82] புலி ஒரு லக்ஷம் வராகன் கொடுக்க வேண்டியதில் பேஸஜி வரவு 53,000 வராகன் பெற்றுக்கொண்டது போக பாக்கி வராகன் 47,000 வராகனுக்கு மிஸ்தர் ஜேம்ஸ் அவர்களுக்குக் கடன் வாங்கிக் கொடுத்து 21,000 வராகன் போக பாக்கி ஜாடாவுக்கு வராகன் 26,000.*

*(3) யானைக்கானா*

*கஸ்தூரி ரங்கா என்கிற யானைக்கு தீனி.*

*Micture (கலப்பு)*
*மிளகு 13-1/2 டாங்க், மஞ்சள் 5 டாங்க், பூண்டு 5 டாங்க், கருஞ்சீரகம் 5 டாங்க், ஓமம் 5 டாங்க், கருப்பு உப்பு 5 டாங்க், சுக்கு 5 டாங்க்,*

*Micture - (கலப்பு)*
*அரிசித்திப்பிலி 5 டாங்க், வசம்பு 5 டாங்க், கடுக்காய் 3 டாங்க், அகல்கரா 3 டாங்க், டாங்கணகார் (Borax) 2 டாங்க், குக்கில 2 டாங்க், காயம் 1 டாங்க், மிளகு 13-1/2 டாங்க்,*

*ராதிப - புஷ்டியைக் கொடுக்கும் படியான ஆகாரம்.*

*நெய் சேர் 1 வெல்லம் சேர் 1, பால் மனு 1/2 = மனு 1/2 சேர் 2, ஒரு காசு - 3 = 4 = 2*

*ஜாஸ்தி தீனி கடுகரோகணி 3 டாங்க் வீதம் கொட்டியத்திலிருந்து கொடுப்பது.*

*(4) 1777*
*கும்பனிக்குக் கொடுக்க வேண்டியதைச் சென்னப்பட்டணத்தில் அநாமத்தாக வைப்பதற்காக இவ்வருஷம் 4 லக்ஷம் வராகன் கொடுப்பதாக ஒப்புக்கொண்டதில் தை மாஸம் கெடுவிற்கு 50 ஆயிரம் வராகன் புலி[83] போக பாக்கி 3-1/2 இலக்ஷம் வராகன் புலி கொடுக்க வேண்டியதில் மாசி மீ கெடுவிற்கு ஸாவுகாரிடம்[84] ஸர்காரிவிருந்து துகையைச் செலுத்தி ஹுண்டியை அனுப்பின வகையில் ஸாவுகாருக்குப் புலி வராகன் கொடுப்பது.*

---

79. துளஜா II கம்பெனியின் தயவால் இரண்டாம் முறை அரசு கட்டில் ஏறியதும் கம்பெனியாரோடு 1776இல்ஒரொப்பந்தம் செய்து கொண்டார். அவ்வொப்பந்தத்தின்படி தஞ்சைக் கோட்டையில் ஆங்கிலேயர் படை இருக்கலாம். அப்படையின் செலவுக்காக நான்கு லக்ஷம் வராகன் அரசர் கொடுக்க வேண்டும் (பக்கம் 49-50)

80. லாட்பிகட் - Lord Pigot; இவர் சென்னைக் கவர்னர்; துளஜாவைப் பட்டமேற்றி மேற்கண்ட ஒப்பந்தம் பெற்றவர்

81. பந்தர் - பஹதூர் என்றிருத்தல் வேண்டும்

82. மாசி மாசம் கெடு ஒரு லக்ஷம்; (நவம்பரில் 20,000; டிசம்பரில் 40,000; சனவரியில் ஒரு லக்ஷம்; மார்ச்சில் ஒரு லக்ஷம்; ஏப்ரலில் ஒரு லக்ஷம் - என்பது ஒப்பந்தத்தில் கண்டது (பக்.50)

83. வராகன் புலி - புலிவராகன் (45 பணம்) (பக்கம் 150)

84. ஸாவுகார் - பணம் கொடுக்கல் வாங்கல் செய்பவர்

50, 000 - முக்கிய ஹூண்டி பாபத்து வராகன், 500, 100க்கு வட்டி 1 வீதம் வராகன், = 50,500

*(5) 1777*

திருச்சினாப்பள்ளியிலிருக்கும் கர்னல் பாலேடன் வெள்ளைக்காரருக்கு 4 பீப்பாய் சாராயம் தரங்கம்பாடியிலிருந்து 30 ஆடம்[85] தேங்காய் எண்ணெய் திருவிடமருதூரிலிருந்து திருச்சிக்குப் போகிறதற்குச் சுங்கம் வரியை விலக்குவது.

*35 (6) 1777*

மிஸ்தர் சார்லஸ் ஹெட்வார்ட் ஜோன்ஸ் என்பவருக்கு-டேராவின்[86] கம்பத்திற்காகச் சுமார் 40 மூங்கில்களைத் திருவையாற்றின் துகையிலிருந்து அவரிஷ்டம் போல் மூங்கில்களை வாங்கிக் கொடுத்துச் சிலவை வரவு வைக்கவும்.

*(7) 1777*

கோட்டையின் வெளியில் விண்ணாற்றங்கரையில் புதிதான கோவில்களைக் கட்டுகிறார்கள். அந்தவேலைக்காக தென்ன மரங்கள்.

8ஐ நீலமேக ஸ்வாமியின்[87] கோவிலுக்காகத் திருவையார் கல்யாண மகாலிலிருந்து கொடுக்கிறது.

8 மரங்களை ஸ்ரீமணிகொண்டப் பெருமாள்[88] ஸ்வாமியின் கோவிலுக்குக் கொடுக்கிறது.

*(8) 1777.*

மிஸ்தர் தான்வேல் ஸாமர்யேன் என்னும் வெள்ளைக்காரர் நமது இராஜ்யத்தில் நெல்லை வாங்கிக் கொண்டு நாகூர் பந்தரின்[89] துறைமுகத்திற்கும் திருமல் வாசல்[90] துறைமுகத்திற்கும், நெல்லை, கப்பலில் ஏற்றி, சென்னப்பட்டணத்திற்கு அனுப்புகிறார். அதற்கு இரண்டு துறைமுகங்களிலும் சுங்கம் வரியைப் பாதி வசூல் செய்து பாக்கிப் பாதி வரியை வரவு வைத்துக்கொண்டு விடவும்.

*(9) 1777.*

தாஸ்தான் மகால் குளத்திற்குச்[91] சிவகங்கையின் (குளத்தின்) தண்ணீரை இரைத்து விடுவதற்காகக் கூலிக்குப் பத்துச் சக்கரம்.

---

85. ஆடம் - எண்ணெய் முதலியவற்றின் அளக்கும் கருவி

86. டேரா - கூடாரம்

87. (பக்கம் 190இல் 87) (பக்கம் 213இல் 38)

88. மணிகொண்டப்பெருமாள் - தஞ்சை மணிபர்வதப் பெருமாள்; மணிக்குன்றப் பெருமாள் எனவும் வழங்கப்பெறும்; இக்கோயில் களிமேடு என்னும் ஊரில் இருந்தது; பின்னர் வெண்ணாற்றங்கரையில் கட்டப்பெற்றது (பக்.190இல் 40) (பக்கம் 213இல் 37)

89. பந்தர் - Store House

90. திருமல்வாசல் - திருமுல்லைவாசல் (சீர்காழி வட்டத்திலுள்ளது)

91. குளம் - ஐயன் குளமாகலாம்

*(10) 1777*

ஆங்கிலேயம் எழுதுகிற முத்துகிருஷ்ண முதலியாருடைய வீட்டை ஸர்காரில் எடுத்துக்கொண்டு அதன் கிரயத்தை மகால் போதேயிலிருந்து கொடுக்கிறது.

## மூட்டை எண். 86 C (நாணயவாரி 1830)

*34-1788*

*(1) ரா. அமரசிங்க போஸலே[92] அவர்கள் 40கலம் வாரத்திற்குக் கம்மியுள்ள ஊர்களுக்கு 40 கலம் வாரம் செய்து கொடுத்தார்.*

*கும்பனி மரக்காலுக்கு 8 1/4 சேர்[93] மரக்காலால் கணக்கிடுவது.*

*24-1786*

உத்திரவு:- சதாசிவ பாண்டியாவுக்குத் திருப்பந்துருத்தி[94] பெரமூர் இவ்விடங்களில் ஸர்வமானியம்[95] 5 வேலி கொடுத்தார். அவைகளை ஸ்வாமிக்கும் பிராமணர்களுக்கும் கொடுத்த விஷயம்.

நாரசிங்கன் பேட்டை[96]-அக்கிரஹாரம்[97] விஷயம்.

*36-1852*

பொலிடிகல் டிபார்ட்டுமெண்ட் மதறாஸ் சர்க்காருடைய உத்திரவு 1860ஷு ஜூலைமீ 28உ-நீ-ர் 1314ன். தஞ்சாவூரின் கமிஷனர்[98] எச்.டி. பிலிப்ஸ்[99] எஸ்கொயர் அவர்கள் கவர்ண்மெண்ட் காரியதரிசி. டி பைட்ர்யாபுட் எஸ்கொயர் அவர்களுக்கு எழுதியது. எழுதியபடி படிக்கப்பட்டது.

1) தஞ்சாவூரின் வேலையை முடிப்பதற்காக கமிஷனர் என்னும் உத்தியோகம் நான் விட்டு விடுகிறதற்கு முன்பு அவ்வேலையைப் பார்ப்பதில்/தௌலத் பாவலோக[100]

---

92. அமர்சிங்க போஸலே - துளஜா II இறந்ததும் அவர் தம்பி அமர்சிங்கர் 1788இல் சரபோஜியின் பாதுகாவலர் என்ற முறையில் அரசைக் கைப்பற்றினார். இவர் அரசர் ஆனதும் குடிவாரம் 40 இல்லாத ஊர்களில் 40 தருமாறு ஆணையிட்டார் என்று தெரிகிறது. (பக்.27)

93. 8 1/4 சேர் கொண்டது ஒரு மரக்கால் (2-148) (பக்.164)

94. திருப்பந்துருத்தி - திருப்பூந்துருத்தி (திருக்கண்டியூர்க்கருகில் உள்ளது)

95. சர்வமான்யம் - எந்தவிதமான தீர்வையும் செலுத்தாமல் அனுபவிக்குமாறு கொடுக்கப்பெறும் நிலக்கொடை (பக்கம் 263)

96. நரசிங்கன்பேட்டை அக்கிரகாரம் 4-424 காண்க (பக்கம் 268)

97. அக்கிரகாரம் - பார்ப்பனர் குடியிருப்பு

98. 1855இல் சிவாஜி II இறந்த பிறகு ரெஸிடெண்டு பதவிக்குப் பதிலாகக் கமிஷனர் பதவி ஏற்படுத்தப் பெற்றது

99. இவர் 28.7.1860 வரை ரெஸிடென்டு கமிஷ்னர் வேலையில் இருந்தவர் (பக்கம் 69)

100. தௌலத் பாவலோக - அரசாங்க அலுவலர்

என்பவர்களுடைய பென்சின்தார்களுடைய ஜாபிதாவிலுள்ள 1500 நிரின்படி 1500 நீருள்ள கோபாள நாநாஜி அவர்களிடமிருந்து எனக்குக் கிடைத்த கவர்ண்மென்டின் சகாயத்தினால் நான் ஒப்புவித்துக் கொள்ளுவதற்கு நான் பாத்தியஸ்தனென்று நினைக்கிறேன்.

*2)* இராஜா சாயேப் அவர்களுடைய கடன் விஷயமாக நான் எழுதின அநேகக் கடிதங்களிலிருந்து அந்த தர்பாரின் ரிக்கார்டுகளின் ஒழுங்கற்ற பிரகாரம்படி ஆளைப்படி கேட்பதற்கு எனக்குண்டான சிரமமின்ன மாதிரி என்று கவர்ண்மெண்டார்கள் சாமார்த்தியமுள்ளவர்களாக இருப்பார்களென்று நான் அறிகிறேன்.

முதலாவதாக மஹாராஷ்டிர கணக்குகளின் மூட்டைகளை என் முன்னிலையில் கொண்டு வந்து வைப்பதைத் தவிர வேறொன்றும் செய்வதில்லை. இது அரண்மனையின் பழைய கணக்குப்பிள்ளைகளின் வழக்கமாக யிருந்தது. அது கேவலம் அதைப்பார்ப்பதினாலேயே மலைத்துப் போகும்படியாயிருந்தது. ஏனென்றால் அந்தந்தக் கணக்குகளுக்குச் சிரமப்பட்டு ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறதைப் பார்க்கலாம்.

ஆயிராவிட்டால்:- அறிவித்திருக்கலாம். அந்த ஸாதகம் எப்படியிருந்தாலும் அவ்வறிவு அந்த ராஜாவின் ரிகார்டிலுள்ள கணக்குகளின் கட்டிலிருந்து யதார்த்தத்தை[101] அறிய ஒன்றும் பிரயோசனமல்ல. சூக்ஷமமாகவும் ஞாபகசத்தியுடனும். இந்தக் கணக்கு ஏற்பட்ட காலத்தில் ப்ரத்யக்ஷயமாக (நேராக) இருந்து பார்த்து அறிந்தாலொழிய வேறொன்றும் விஷயத்தை அறிய வேண்டியிருக்கிறது.

*22.1806*

*(2)* கணக்கும் ராமோஜி காட்கேராவ்[102] வகையறாக்களுக்கு இனாம். பள்ளி அக்கிரஹாரம் தோட்டம்.

விண்ணாற்றங்கரை அக்கம்மா தோட்டம் ராய்பேட்டை தோட்டம்.

*13.1830*

**(1) கல்யாண மஹாலில் நாணய வாரி**

பெரிய பணம், போரே பணம், தகடுசுளி“பதல்வட்ட போரே பணம், மைலி பணம்[103], சௌரி பணம், ஸோங்குஸாவின் பணம், சம்பு வெள்ளி சேர்க்கப்பட்ட பணம்

*(2)* பழைய 1/8 ரூபாய்கள்

தெலுங்கு துட்டு[104], முழு துட்டு, பாதி துட்டு, கால்துட்டு[105], ஒத்தைக்காசி, அரைக்காசி,

101. யதார்த்தம் - உண்மையான நிலைமை

102. இவர் சர்க்கேல் ராமோஜி ஸர்ஜேராவ்காட்கே ஆகலாம் (பக்.85)

103. மைலி காசு - செப்புக்காசு; ஒரு பக்கம் யானையும் சாமுண்டி என்ற சொல்லும், பிறிதொரு பக்கம் மைலி காசு என்று ஆங்கிலத்தில் கன்னடத்திலும் எழுதப்பட்டிருக்கும்

104. துட்டு - 48 ஒரு ரூபா (பக்.154) 4 பைசா ஒரு துட்டு

105. 4 பைசா துட்டு எனின் கால் துட்டு என்பது ஒரு பைசா

செல்விக்காசி, கால்காசி, செம்பின் மேல் தங்கமுலாம் காசு,சின்னயானையின் செப்புக்காசு,[106] புதுச்சேரி செப்புக்காசு, தங்கம் புலி மொலாம் விராகன், புலி விராகன் வெள்ளி, கட்டி சுழி, தஞ்சாவூர் காசு, ஆங்கிலேய வெள்ளைக்காரக் காசு, செப்பு தஞ்சாவூர் அரைக்காசு, ஆற்காடு பைஸா, ஆற்காடு 1/2 பைசா, மஹாதேவர் அம்பாள் காசு[107], காளை மாட்டுக்காசு, யானைக்காசு[108], நாகூர் பைசா, மகம்மதியசெப்புக்காசு, நாகபூர் பைசா, வெங்கடகிரி காசு,மயில்காசு, அநேக வித காசு.

வெள்ளைக்காரன் காசு, பாஹத்திரி காசு, சின்ன யானைக்காசு, சுவாமி பிள்ளையார் கூட, மொள ஒத்தை விராகன், துர்க்கை விராகன், அனந்தகிரி விராகன், கிணி காசு[109], ராமடக்கா[110], தெலுங்குக் காசு, நாகபுரியின் பைஸா, பள்ளேனா சந்திரன் விராகன், கோளே ஒத்தைப்பத்தி விராகன், அச்ரபிக்கு பிரதிப்பெயர் முரேசரீபஹு, சுல்தானி விராகன், சுல்தானி பணம், தலைக்காசு ரூபாய், தார்வாட விராகன், அரியலூர் பணம், ஒடையார் பாளையம் பணம், கட்டிராயீ பணம், மரவஞ்சுழி, கிருஷ்ணராஜ, அகந்தர் விராகன், நகர் விராகன், துலுக்காணி ஆற்காடு மோஹர், அமதாராதஹீ மோஹர்,

இங்கிலாந்து மூன்றாவது ஜார்ஜ்[111]

மிரஜாபுரி, கந்தரி சாயீ, கல்பா ரூபாய், நாகபுரி
தொம்பசாயீ, முட்டைஸா, ஜ்யான்ஸீ, பாஜார்கட,
பகவான் சாயீ, நேஹனா பாத், பிரதாப கட, ஜனாயீர் அரை ரூபாய்,
பூபாளி, பெரிய மலை, ஜயருஸ், ஸம்சோ, கமலசாயீ, சித்தூரி,
ஸ்ரீங்கார கொண்டை ரூபாய், பனேஜ்யா ராஜ்யாசாயி, முரஸேராஸஹ,
ஸீலதாமைதனூ சாயீபணம், மிஸர், மைசூர் பணம், தெலுங்கு ஜெல்வி,
ஸ்ரீராதா பணம், கண்ட ஸ்ரீநாராயண, ஸ்ரீநாராயண,

பிரெஞ்சு டாலர், பிரெஞ்சு டாலர் நாபராட், டாலர், ரிங்க்ஸ் டாலர்,
துஹேரன் பாரக, தரங்கம்பாடி பணம், ஹாலெண்ட் பணம்,
வெஸ்ட் ப்ரஷீயா பணம், ஸ்டீகர் டாலர், ஸ்பெயின்,
டேனிஷ், அலங்கானி, முரசதார்பாத், பளசாயீ,
ஸ்ரீராம் சிவ சக்ரவர்த்தி, கூஷீபா சாயி, பிரயாகம் சின்ன பைசா,
மதுர சாயீ, ராஜகட், ஸிகென், கத்தி, விஜயம்,
லகது, பாக்ஷாயி காசு, காசி க்ஷேத்திரத்தின் துட்டு,

106. யானை உருவம் பொறிக்கப்பட்ட காசு (பக்.164)

107. உமாமகேசுவர வராகன் எனப்படும் (பக்.161)

108. இது ஒரு பொன் நாணயம் (பக்.161)

109. கிணிக்காசு 1க்கு ரூ.17-2-0 விலை (பக்.156)

110. இந்நாணயம் பெரிய கிண்ணம் போன்ற உருவம் உடையது. இராமரும் சீதையும் தம்பிமார்களும் அனுமனும் இருக்கும் காட்சி இதிலுண்டு. வைணவர் இந்நாணயத்தைப் பூசைக்குரியதாகக் கொள்வர் (பக்.161)

111. கி.பி.1760 முதல் 1820 வரை இங்கிலாந்தின் அரசர்

சதுரமான பராவின் காசு, சீமைப் பைஸா, கும்பனி பைசா, யானைப் பைசா, கவி பணம், பதல் வட்ட போரே, மாதிரீ பணம், நந்திக் காசு[112]

# மூட்டை எண்-89 C

*28.1779*

*(1) சடோல என்னும் பக்ஷியை ஹுஜூர்[113] 2 1/2 வராகனுக்கு வாங்கினார்கள்*

*(2) 1779*

*தஞ்சாவூர் கோட்டை தேவஸ்தானத்தைச்[114] சேர்ந்த 4 சிவ, விஷ்ணு ஸ்தலங்கள் கும்பாபிஷேகத்திற்கு 800 சக்கரம் கொடுக்கப்பட்டது.*

*(3) 1779*

*ஸ்ரீஎல்லையம்மனுக்கு[115] உத்ஸவத்திற்கும் ஸரஸ்வதி பூஜைக்கும் 1/2 சக்கரம் கொடுக்கப்பட்டது.*

*29.1779*

*விண்ணாற்றங்கரையில் புதிய அக்கிரஹாரம் கட்டுவதற்குச் சிலவு தஞ்சாவூர் சக்கரம் 500.*

# மூட்டை எண்-90 C

*114.1821*

*4 வீதி இருபுறம் சாக்கடைகட்டி துமஸ்[116] போடுவதற்கு.*

# மூட்டை எண்-93 C

*132.1843*

*நியாயாதீச சபை[117] விவகாரம்*

# மூட்டை எண்-94 C

*47.1804*

*ஸரஸ்வதி மகால்*

---

112. நந்திகாசு-காகதீய அரசர் காலத்து நந்தி வாகனம் பொருந்தியும், நந்தி படுத்த நிலையிலும், நந்தியின், மேல் இலிங்கம் அமைத்தும் காசுகள் உண்டு (பக்.162)

113. ஹுஜூர் என்றது இரண்டாம் துளஜாவை

114. தஞ்சாவூர்க்கோட்டைத் திருக்கோயில்கள் 64 என்று ஒரு ஆவணம் கூறும் (பக்கம் 187-191)

115. எல்லையம்மன் - (பக்கம் 189இல் 22; பக்கம் 213இல் 12)

116. துமஸ் - திமிக - இளகிய தரையைத் திமிசுக் கட்டையால் கெட்டிப்படுத்துதல்

117. இது தஞ்சையிலிருந்த நான்கு நீதி மன்றங்களுள் ஒன்று (பக்.167-168)

ஓலைப் புத்தகங்களுக்குக் கயிறு திரிப்பதற்கு உத்திரவாக வேணும் மகாலிலுள்ள 2 எழுத்தாணிகளைத் தீட்டிக் கொடுக்கிறது.

## முட்டை எண்-95 C

*34.1796*
(1) ஸர்காரின் சிலவும் தான தர்மச் செலவும், தினப்படி சிலவும் விஜயதசமி பொங்கல் பண்டிகைக்குச் சாமான் கொடுத்த பாபத்தும், காமம் பண்டிகைக்கு[118] தாசிகளுக்குப் படிச்சிலவும், வருகிற வெள்ளைக்காரர்களுக்கு உலுப்பை வகையறா சிலவு-248352 விராகன் புலி[119].

*(2) 1796*
காரைக்கால் முதலான 4 மாகாணங்களை மீட்டினதற்கு மிஸ்தர் மக்லோட்[120] துரையினிடம் 5152 விராகன் புலியைக் கொடுக்கிறது.

*(3) 1796*
மிஸ்தர் மக்லோட் துரைக்கு முத்துப்பேட்டைத் துறைமுகத்தில் நெல் அரைத்தற்கு வரவேண்டிய சக்ரம்.

நெல் அளந்ததற்கு 5865-4-1/2, வாடகை வரி 1375-2-1/16 = 72411 1/2

*(4) 1796*
முதலையைப் பிடித்துக்கொண்டு வந்தவனுக்கு 5 சக்ரம்.

*(5) 1796*
நீர்நாயைப் பிடித்துக் கொண்டு வந்தவனுக்கு 5 பணம்.

*(6) 1796*
ரா. சிவாஜி ஸம்பாஜி[121] பண்டிதருடைய உத்திரக்கிரியைக்கு 1000 சக்ரம்.

**6. 1787**
(1) பகவந்த் கேசவ புரந்தர்-எழுதிக்கொடுத்த அர்ஜி:
ஹஸநசா பக்கீர்கொடுத்த அர்ஜி சூலமங்கலத்திலுள்ள தெக்யாவின் நிலத்தை ஜப்தியிலிருந்து விடுவிக்க வேணுமென்று.

---

118. காமன் பண்டிகை - ஹோலி பண்டிகை; இது பால்குண (பங்குனி) மாசத்தில் நடத்தப்பெறுவது (பக்கம் 316)

119. 45 பணம் ஒரு புலி வராகன் (பக்.150)

120. மிஷ்தர் மக்லோட தஞ்சையில் முதல் ரெஸிடெண்டாக வந்தவர் (பக்.64)

121. இவர் நோய்வாய்ப் பட்டிருந்தார் என்றும் இவருக்கு வைத்தியம் செய்தவர் மிஸ்தர் கனடின் என்றும் வேறோர் ஆவணத்தால் தெரிகிறது (பக்.280)

(2) ஸேக் உஸ்மானின் தம்பி ஸாகிஸா பக்கீர் அவர்களுக்கு பசுபதி கோவிலில் கொடுத்த ஸர்வமானியம்[122] விஷயம்.

(3) ஹஜரத் படேசா புரானி ஸேக் ஹுஸேநீ சாயேப்பின் வசத்தில்-தெக்யால் பேட்டைக்குப் போயிருக்கிறார். அப்பொழுது அவருக்குத் திருவையாற்றில் தரப்பு பட்டீஸ்வரன்[123] மாகாணத்தைச் சேர்ந்த 2 கிராமங்களைக் குடுத்த விஷயம்.

(4) தஞ்சாவூர் கோட்டைக்கு வெளியே நகரத்தில் மஸூதி இருந்தவைகளெல்லாம் முஸலாலி[124] வந்து போனதால் நகரத்தை இடித்து விட்டதினால் முஸல்மான்களுக்கு "நிக்கா[125] செய்வதற்கு யோக்யதை[126]யில்லையென்று, நாவிமஸாவின் கடையில் கோட்டைக்கு ஹஜாரங்கஜாவுக்கு மஸீது கட்டியிருக்கிறது. அதற்கு விளக்குக்கு எண்ணை, வத்திக்கும் புகாவின்? தினம் குத்பாவும்[127] வருஷத்துக்கொரு தினம் உற்சவமும் வரும். பகீர் பகிராக்களுக்குச் சாப்பாடு தண்ணீர் இந்தப்படி தருமம் நடக்க வேண்டி சுபா[128] விலிருந்து ரயத்து[129]களிடமிருந்து ஆனாதி தரிசி நிலம்[130] 12648 குழியைச் சாலிய மங்கலத்திலும்[131]........ணவு நாட்டிலும் கொடுத்தார்கள். தண்ணீர்ப் பந்தல், சால், தோப்பு குளம் வெட்டி வீடுகட்டி அதற்கு "மஹமந்தபுரம்" என்று பெயரிட்டு தருமம் செய்கிறது.

(5) ஸயீதக்காவின், 13 1/2 வேலி நிலத்தின் விஷயமாக ஸர்காரில் கொடுத்த மனு.

(6) மேல்தக்யால் நிலத்தின் கணக்கு

---

122. ஸர்வமானியம் - எந்தவிதமான தீர்வையும் செலுத்தாமல் அனுபவிக்குமாறு கொடுக்கப்படும் நிலக்கொடை (பக்.263-264)

123. பட்டீஸ்வரன் - திருப்பட்டீச்சரம் என்றவூர்

124. மஸலாலி - Monsicw Lally: Count & Lally; இவர் டூப்ளேக்குப் பிறகு புதுச்சேரிக்குக் கவர்னராக வந்தவர்; தஞ்சையைக் கைப்பற்ற எண்ணி 25.6.1758இல் காரைக்காலுக்கு வந்தார்; திருவாரூருக்கு வந்து அங்கிருந்து தஞ்சையைத் தாக்கினார். 2.8.1758இல் பெரும்போர் நடந்தது. காரைக்காலில் இங்கிலீஷ் கப்பற்படை வந்ததைக் கேள்வியுற்ற லாலி பின்வாங்கினார்; 18.8.1758இல் காரைக்காலுக்குத் திரும்பினார். (சீனிவாசன் 281-83) இப்போரில் நிகழ்ந்த சேதமே இங்குக் குறிப்பிட்டதாகலாம்.

125. நிக்கா - முகமதியர் திருமணம்

126. யோக்கியதை - தகுந்த இடம் என்று பொருள் படக்கூடும்.

127. குத்பா - மகமதியப் பள்ளியில் சில விசேட நாள்களில் நிகழ்த்தும் பிரசங்கம்; Sermon at a Mosque after prayers on Friday on the feast day after Ramzan or Bakrid.

128. சுபா - பலவூர்களைக் கொண்ட நிலப்பகுதி

129. ரயத்து - நிலத்தை உழுது பயிரிடுபவர்

130. அனாதி தரிசு நிலம் - பலப்பல ஆண்டுகளாக உழுது பயிரிடப்படாத நிலம் (பக்கம் 260)

131. சாலியமங்கல வட்டத்தில் கடதம்பட்டு வல்லார்பட்டு என்ற ஊர்கள் அளிக்கப்பட்டன (பக்கம் 209-266)

*(7) ரா. சிவாஜி மகாராஜா அவர்களுடைய விவாகத்திற்கு வந்த 18 மக்கான்தார்களுக்கு[132] மரியாதை செய்வதற்கு உத்திரவிட்ட விஷயம்.*

*(8) கீழ்தக்யால் பகீருடைய மான்யத்தின் கணக்கு விஷயம்.*

*(9) 18 மக்கான்தார்களின் பெயரும், தினப்படி அடைவதையும் அடையாததையும் ஹாஜராயிருந்த[133] மக்கான்தார்களும், ஹாஜரராயில்லாத மக்கான் மக்கான்தார்களுடையவும் விவரம்.*

*(10) பிரதாப சிம்ம இராஜா[134] நாகூருக்குப் போகும் பொழுது. வட்யார்[135] கோவிலுக்குப் போனபோது ஹஜரத்[136] பாபாசாயேப் அவர்களின் தர்கா[137] குளம், மண்டபம் விஷயம்.[138]*

## மூட்டை எண்-97 C

***18.1831***
*(2) ஒரு கடிதத்திற்குத் "திருவனந்தபுரம் தபால் கட்டணம் செலுத்தப்பட்டது என்று முத்திரை இருக்கிறது. லேபிள் இல்லை.*

## மூட்டை எண் – 99C

***35.1821***
*(பரவானகி) உத்திரவு*

*ம.ரா.ரா. சரபோஜி ராஜா சாயேப் வஜாரத்மாப்[139] - லக்ஷ்மண்றாவ் குஜலி அவர்கள் திருவிடமருதூரில் மா. சுலக்ஷணாம்பா. பாயிசாயேப் அவர்களுடைய அக்கிரஹாரத்தில் வீரசோழன்[140] ஆற்றங்கரையில் படித்துறை கட்டுவதற்கு இனாம் 50 சக்ரம் கொடுத்திருக்கிறார்.*

---

132. மக்கான்தார் - மேற்பார்வையாளர்

133. ஹாஜராயிருந்த - வந்திருந்த

134. இவர் துக்கோஜியின் மகனாவர்; 1739-63வரை அரசாட்சி செய்தவர்

135. வடயார் - வடயாரங்குடி (பக்.208)

136. ஹஜரத் - சிறந்தவர்

137. தர்கா - பள்ளிவாசல்

138. இத்தர்க்காவுக்குத் தீபாநகரப்பேட்டை சுங்கத்தினின்று நாடோறும் ஒரு காசு வீதம் அளிக்குமாறு அரசர் ஆணை அருளினார். இது 1740 இல் நிகழ்ந்தது (பக்கம் 208)

139. வஜாரத்மாப் - சிறந்தவர்கள்

140. திருவிடைமருதூர்க்கருகில் ஓடும் காவிரியின் கிளையாறு.

# மூட்டை எண்-100 C

*7.1819*
*பார்ப்பதற்கு வந்தவர்கள் மூலம் வரவு:-*

***இலங்கைத் தீவிலுள்ள ஆங்கிலேய சிநேகிதர் இடங்களையும், பட்டணங்களையும் இதனுடன் சிங்கலி சீர்மை தேசத்தின்[141] கவர்னரும், முக்கிய சேனாபதியான கனம் ஜனரல் ஸர்பர்ட் பைன்ரிங் பியாரோனெட் (Baronet[142]) ஜைட் க்ராட்கிறாஸ் மிக்க கனம் பொருந்திய பட்டாளத்தின் திப்யாத். இவர்கள் இங்கிலாந்தின் ராஜபுத்திரரான கனம் கின்ரிஜண்ட் அவர்கள் மேலெழுதிய கொழும்பு கவர்னரின் மூலம் மிஸ்தர் ரெஸிடெண்ட் 'பிளாக்பர்ன் அவர்கள் மகாராஜா சபையின் ஸபையில் ஸர்காருக்கு 2 குதிரைகளைக் கொடுத்ததற்கு வரவு வந்த துகையின் ரூபாயின் விவரம்.***

***0 ரெஸிடெண்ட் பிளாக்பர்ன் சாயேப் ரூ. 1-4-0, 5 கியாப்டன் மைக்பல், 5 ஸர்தாமஸ் சிவே ஸ்திரி[143], 5 ரெவரெண்ட் ஜான்கொலப்[144], 0 ரெவரெண்ட் ஸ்வர்ச்நைடர் 4, 0 மிஸ்தர் ப்ளாக் பர்ன்[145] 2 3/4 4-8-0, 5 மிஸ்தர் ஸிகின், 5 க்யாப்டன்[146] லவிட், 5 லெப்டன்[147] மைக்பல், 5 லெப்டன் ஷாக்வெல், 5 லெப்டன் ஹோவியானஸ், 5 சிரஸ்தேதார் ஸோஹிரோபா நாயிக் —ர் 5 சுப்ராய முதலி, 5 வெங்கடராவ், = 55***
***8 1/2 சக்கம், 1 1/4 தங்கம்***

***40.1819***
***கோட்டைக்குள்ளிருக்கும் கொத்தவால் நாகலிங்கம் ஸேர்வைக்காரன் கோட்டைக்கு வெளியில் ஆஸ்பத்திரி[148] மெக்யாடு[149] சிலவிற்கு 107 சக்ரம் கொடுக்கப்பட்டது.***

---

141. சிங்கலிசீர்மை தேசம் - இலங்கை

142. பியாரோனெட் - Baronet - இளங்கோமான்; கோமானுக்கு அடுத்தபடி தாழ்ந்த பட்டம். (A title of hereditary rank or degree of honor next below a baron and above a knight)

143. சரபோஜி II காசி யாத்திரையில் இருந்தபொழுது தஞ்சையில் இருந்த ஆங்கில வைத்தியர் ஸர்தாமஸ் சிவேன்தர் ஆவர் (பக்.287-232)

144. கொலப் - இவர் தஞ்சையில் இருந்த சமய போதகர். இவர் 21.5.1849இல் தன் 49 ஆம் வயதில் இறந்ததாக மானம்புச்சாவடி கல்லறைக் கல்வெட்டால் அறியப்பெறும் (புலவர் செ.இராசு)

145. பிளாக்பர்ன் - இவர் உதவி கலெக்டர் (பக்கம் 70)(2-205)

146. க்யாப்டன் - Captain - சேனைத்தலைவன்

147. லெக்டன் - Lieutenant - An officer next below a captain in the army.

148. ஆஸ்பத்திரி என்பது இரண்டாம் சரபோஜி ஏற்படுத்திய ஆரோக்ய சாலையாதல் வேண்டும்.

149. மெக்யாடு - சிற்றாள்களிடத்தில் வேலை வாங்குபவர்

# சரசுவதி மகால் பகுதி–VI

## மூட்டை எண் – 912C

*14. 1796*

*(1). சென்னப்பட்டணம் ஸ்ரீ. ஸ்ரீ. சரபோஜி மகாராஜா*[1] *அவர்களுக்குக் குடுப்பது.*

*Postal seal (Tanjore) Madras. Despatched 5 Raja's received 9 Rajas at Madras. Original letter.*

*14. 1796*

*(6) ரா. யசவந்த் ராவ்ஜி அவர்களுக்கு ஸேவகன் அண்ணாவின் நமஸ்காரம் இங்குள்ள சமாச்சாரமோ ரெஸிடெண்ட் மக்லோட் ஜப்திசெய்த*[2] *இராஜ்ய கார்பார்களும் நியமித்தபடி கார்பாரும் நடந்து வருகிறது. நியாய மஹாவில் நியமனஞ் செய்தார். 5 பேருக்குள் மேஸ்தர் பாதரி சாஹேப் ஆனவர் சொல்வி ஹரிபட்டருக்கும் வேலைசெய்து கொடுத்தார்.*

*ஸர்கேல் பாபாவானவர்*[3] *தன்னுடைய கார்பார் பேஸஜி (உத்யோகம்) போன பிறகு இன்று வரையிலும் ஸமஸ்தானத்தின் பாக்கி எல்லாவற்றையும் எடுத்து எழுதிக் கொடுத்தார். அதற்கு மக்லோட் ரயத்துகளுடைய*[4] *கையொப்பம் வாங்கிக் கொடுத்தால் நாம் வசூல் செய்கிறோம். இல்லாவிடில் அந்தப்பாக்கிக்கு நீங்கள் பதில் கொடுக்கும்படி ஆகுமென்றார்.*

---

1. சென்னைப்பட்டணம் ஸ்ரீசரபோஜி ராஜா என்றமையால் அமர்சிங்கு பிடியினின்று சரபோஜியை விடுவித்து அவரையும் அவருடைய தாய்மார்களையும் சென்னைக்குக் கொண்டு சென்றமை இதனால் அறியப்பெறும். "Orders were transmitted to Tanjore that serfojee & the Baie Sahebs should be rescued from the vexatious interference of Ameer Sing .... On the 21st Nov, this plan ... was carried into effect .... and on the 10th of January 1793, the whole party accompanied by their faithful friend and protector safely reached the presidency" - Pearson, Hugh, D.D., Memoirs of the Life and correspondence of the Rev. Christian Frederick Swartz, London, 1834, page 268)

2. அமர் சிங்கு கும்பினிக்குக் கொடுக்க வேண்டிய தொகைகளைக் கொடுக்காமற்போனால், மன்னார்குடி, திருவையாறு, மாயவரம், பட்டுக்கோட்டை ஆகிய சுபாக்களினின்று வசூல் செய்து கொள்ளலாம் என 1787இல் ஒரொப்பந்தம் செய்து கொள்ளப்பெற்றது. இதன்படி ரெஸிடெண்டு மக்லோட் ஜப்தி செய்தார் என்று தெரிகிறது. (பக்கம் 64)

3. இவர் அமர்சிங்குக் காலத்தில் சர்க்கேலாக இருந்தவர். அப்பொழுதுதான் மக்லோட் மூன்று சுபாக்களை ஜப்தி செய்தார் (பக்கம் 85) அதனால் ஸர்க்கேல் பதவியிழந்தார்.

4. ரயத்துக்கள் - நிலத்தை உழுது பயிரிடுவோர்.

இந்தச் சங்கதியைக் கேட்டு மாயவரம், மன்னார்குடி ஊர்களிலுள்ள ரயத்துக்கள் ஊரை விட்டு ஓடிப்போனார்கள். ஜப்திக்காரருடைய ஜனங்களுக்காக அவர்கள் வரவேண்டி யிருக்கிறது.

இங்கிருந்து நேற்று சிவராயர்[5] குமாரர் ஜீவட்றாவ் என்பவரைச் சென்னையிலிருந்து பாலேபீல் என்பவர் அனுப்புங்கள்; நான் அவ்விடம் பார்த்து வருவதாக எழுதி வந்ததாம். அதன்படி ஜீவட்ராயருடன் சில நகைகள் வீடு, வாசல் செலவுக்கு வேண்டிய சாமான்கள் வகையறா கொடுத்து அனுப்பியிருக்கிறார். ஹெஜீபுக்குச்[6] சால்சாப் ஜீவட்றாவ்[7] மூலம் அனுப்புகிறது. நிச்சயஞ்செய்து, சென்னப்பட்டணத்திதற்கு அனுப்பி யிருக்கிறார். அறியவும்.

அதற்கு மக்லோட்[8] விபக்ஷி[9]யினிடம் (அமரசிங்) சென்று சொன்னார். கூட சேதுபண்டிதரையும் உபலாவணியா பிள்ளையையும் அழைத்துச்சென்றார். விபக்ஷியானவர் சொன்னதாவது:-

கணபதி அக்கிரஹாரத்தைத் தன் மகளுக்குக் கொடுத்திருக்கிறது. அவர் வார்த்தையைக் கேட்டு மனதுக்குத் தோன்றுகிறாற்போலப்பேசுகிறாய். சுகமாக உன் மனதிற்கு வந்தபடி செய்துகொள்ளென்று கண்டித்துச் சொன்னாராம். 3 சுபாவுக்கும்[10] ஸர்வமான்யம் மத்யஸ்தம் நியமிக்கிறேனென்று மக்லோட் சொன்னார். சுகமாகச் செய்து கொள்ளுங்கள் என்று சொன்னார். ஸர்கேல் பாபாஜி அவர்கள் சேது பண்டிதருக்கும், உபலாவணியாபிள்ளைக்கும் ரொம்ப அடங்கி ஹுஜாராய்[11] நடக்கவேணுமென்று கண்டித்துப்பேசினார். ஜப்தி ஆன சுபாக்களுக்கும் ராஜாவின் மூலமாக தாசீல்தாரை[12] நியமிக்கப்போகிறார். சிவராயர் விபக்ஷிக்குச் சொன்னதாவது:-

இப்பொழுது ஸர்கேல் பாபாவுக்கு என்ன வேலை, அவர் வந்த வேளையின் குணம் ஸமஸ்தானம் ஜப்தி செய்து விட்டாரே. இனி அவரை நீங்கள் வீட்டிலிரும் என்று சொல்லுகிறேன் என்றாராம். அதற்கு விபக்ஷியானவர் சரி ஆகட்டும் சொல்லுகிறேன்றாராம். ஸர்கேல் பாபாவுக்கு வீட்டிலிரும் என்று சொன்னாற்போலிருக்கிறது. இந்தப் பிரசங்கம் மிஸ்தருடைய முன்னிலையில் நடந்தது. அவர் சொன்னதாவது:- அந்த மனுஷனுக்கு இப்படித்தான் ஆகவேண்டும் என்றார்.

---

5. இவரும் அமர்சிங்குக் காலத்தில் சர்க்கேலாக இருந்தவர்; சர்வாதிகாரி(பக்.28)

6. ஹேஜிப் - கணக்குப்பிள்ளை (பக்.76)

7. ஜீவட்ராவ் - சிவராயருடைய மகன்

8. மக்லோட் - ரெஸிடெண்டு (பக்.64)

9. விபக்ஷி - எதிரி(அமர்சிங்கு)

10. மூன்று சுபாக்கள் - பாபநாசம், மன்னார்குடி, மாயவரம் (3-8)

11. ஹுஜார் - அரசணைப்படி

12. தஹஸில்தார் - ஒரு தாலுகா அல்லது சிறிய பிரிவில் வரிவசூல் செய்யும் அலுவலர். (பக்.74)

மிஸ்தர் ஸ்வார்ஷ் பாதரி[13] சாயேப் இவர்களிடமிருந்து சமாசாரம் லாட்ஹோபரபட்[14] ஆனவர் ராஜா ஸ்ரீமந்த் சத்திரபதி சாஹேப் புறப்படுகிற நாள் நிச்சயஞ் செய்து சொல்லுவதற்கு மிஸ்தர் ஜெரிக்[15] சாஹேபுக்குச் சொல்லியிருப்பதாகச் சொல்ல ஆரம்பித்தார்கள். இதைத்தவிர, புறப்படுகிற தினம்[16] லாட் சாஹேப்[17] வந்து வஸ்திரம், ஆபரணம் கொடுத்து சிலவுக்கும் சாமான்களும் கூட கொடுப்பதற்கு ஸந்நாஹா (யானை, குதிரை, சிப்பாய் முதலிய ராஜசின்னம்) வகையறாவைக் கொடுத்து அனுப்பப் போவதாகச் சொன்னார். 4,5 நாட்களில் புறப்படுவார்களென்று நான் எண்ணுகிறேனென்று சொன்னார். அறியவும்.

*8-1796 Jan 27*

ஸ்ரீ யசவந்த கிருஷ்ணாஜி[18]

ஸ்வாமிகளுடைய ஸேவைக்கு ஸேவகன் அண்ணாவின்[19] அனேக நமஸ்காரம் (அமரசிங்க்) விபக்ஷியினிடமிருந்து ஸமாச்சாரமோ, ரஜப்[20] மீ 12 உ இரவில் மிஸ்டர் மக்லோட்[21] ஆனவர் இராஜ்யத்தை முழுமையும் கம்பெனியாருடைய துகைக்காகக் கொடுத்து விடுகிறது, இல்லாவிடில் சிவராயரிடம் ஒப்புவிக்கிறது; இந்தப்படி கொடுத்தால் சிவராயரிடம் ஒப்புவிக்கவில்லை. இராஜ்யத்தையும் கொடுக்கப் போவதில்லை என்று சொன்னார்.பிறகு மக்லோடானவர் ஓர் உடன்படிக்கை வருமானம் கும்பனியின் துகைக்காக பாபனாசம், மன்னார்குடி, மாயவரம் இந்த 3 சுபாக்களையும் மிஸ்தர் ஜாம் என்பவர் காலத்தில் 5,55,000 (ஹொன்ன) விராகன் கூட இருக்கிறது. அதன்படி விட்டு விடுகிறது. 3 வருஷத்திற் கொருமுறை கணக்குத் தீர்ப்பது. கும்பனியின் துகை பாக்கி இருக்குமானால் ஈடுசெய்து கொடுக்கிறது. கும்பகோணம் சுபா, பட்டுக்கோட்டை (ஜகாயதி) வரிகள் வகையறாக்களை விபக்ஷியானவர்

13. ஸ்வார்ஷ் பாதிரி - இவர் ஒரு ஜெர்மன் பாதிரியார். இவர் 1769இல் தஞ்சைக்கு வந்தார்; தம் சமயப்பணியைச் செய்தார்; துளஜாவுக்கு நண்பர் ஆனார். கும்பினியாரிடத்தே இவருக்கு மிகுந்த செல்வாக்கு இருந்தது. துளஜா கி.பி.1787இல் சரபோஜியைச் சுவீகாரம் எடுத்துக்கொண்ட பிறகு இவருடைய ஆதரவில் இருக்கச் செய்தார். அமர்சிங்கு அரசைத் தனக்கு உரியதாக ஆக்கிக் கொண்டதும் சென்னை அரசங்கத்துடன் வாதாடிச் சரபோஜியே பட்டத்துக்குரியவர் என்பதற்காக மிகுந்த முயற்சிகள் எடுத்துக் கொண்டு வெற்றி பெற்றார். (பக்.71-72)

14. ஹோபர்ட் - இவர் 7-9-1794 முதல் 21-2-1798 வரை கவர்னராக இருந்தவர்.

15. ஜெரிக் - ஸ்வார்ஷ் சென்னையினின்று தஞ்சைக்கு வந்தபொழுது சென்னையில் சரபோஜிக்குத் தன் இடத்தில் நியமித்த பாதிரியாவர்.(போ.வ.ச.பக்.132)

16. அமர்சிங்குக்கு ஆதரவாகச் சில பண்டிதர்கள் கூறிய கருத்தை மாற்றுவதற்கு மீண்டும் அவர்களைக் கொண்டே தம் கருத்தைக் கூறச் செய்வதற்கு முயற்சிகள் எடுக்கப்பட்டன. அங்ஙனம் அவர்கள் கருத்தைப் பெறுவதற்கு முன் சரபோஜி தஞ்சைக்கு அனுப்பப்பட்டார். (போ.வ.ச.பக்.132)

17. லாட்சாஹேப் என்றது கவர்னராகிய லார்ட்ஹோபர்டு ஆகலாம்.

18. யசவந்த கிரஷ்ணாஜியென்பவர் சென்னையில் கும்பனியார் ஆதரவில் சரபோஜி இருந்த காலத்தில் சரபோஜியின் அலுவலர் என்று தெரிகிறது. (3-1)

19. அண்ணா என்றது பாபண்ணா என்பவர் போலும்(3-108 காண்க)

20. ரஜப் - முகமதியர் மாதங்களில் ஏழாவது (ஏப்ரல் மாதத்துக்குச் சரியான மாதமாகலாம்)

21. மக்லோட் - ரெஸிடெண்டு; துளஜாவின் ஆட்சிக் காலத்தின் இறுதியிலும் அமர்சிங்குக் காலத்திலும் இருந்தவர்

வைத்துக்கொண்டு காலங்கழிக்கிறது. அதிலிருந்து வருடத்திற்கு 60,000 விராகன் கடனுக்குச் செலுத்துகிறது. இந்தப்படி சம்மதித்தால் கையொப்பம் போட்டுக் கொடுங்கள். இல்லாவிட்டால் சிவராயரிடம் ஒப்புவித்து விடுங்கள் என்று எழுதி அனுப்பினார். உடனே சாயங்காலம் 4,5 தரம் சொல்லி அனுப்பி இராத்திரி 9 மணிக்கு மிஸ்தர் மாக்லோட் கோட்டையில் வாசலை மூடி ரிஜிமெண்ட் மிஸ்தர் இராமன் வீட்டு சமீபம் கொண்டு வந்து வைத்து, பட்டாளம் முழுமையும் திரட்டி வாசலுக்கு அருகில் கொண்டு வந்து வைத்து, மக்லோட் விபக்ஷி அவர்களிடம் போய்ச் சொன்னதாவது:-

ஸமாதானமாகக் கையொப்பமிட்டுக் கொடுத்தால் நலம். இல்லாவிட்டால் கும்பனியின் விரோதமுண்டாகும் என்று சொன்னார்.

பிறகு விபக்ஷி ஜப்தி செய்யப்பட்ட 3 சுபைகளின் கடுதாசியில் கையெழுத்திட்டுக் கொடுத்தார். சிவராயருடைய வழி இங்கிலீஷ்காரர்கள் போக வேண்டியதில்லை என்று தீர்மானமானது. விபக்ஷியானவர் நேற்று ஸர்கில் பாவாவிடமிருந்து பிரமாணம் வாங்கினார்களாம். என்னவென்றால், ஆங்கிலேயருக்கு 3 சுபை கொடுத்திருக்கிறதே அவர்களிடம் சென்று, கார்பார் செய்கிறதில்லை என்று நம்பிக்கையுடன் சொன்னாராம்.

பிறகு மிஸ்டர் மாக்லோட் 3 சுபாக்களுடைய கணக்குகளைக் கேட்டதற்கு கீலக வருஷ முதல் இதுவரையில் ஒன்றும் பாக்கியில்லை. அவரிடம் நாநாவிதமாகச் சேர்த்து 4,5 லக்ஷம் விராகன் பாக்கியிருப்பதாக எழுதிக் கொடுத்தாராம். அதற்கு ரெஸிடெண்ட் மாக்லோட், பாக்கிக்கு ரயத்துகளுடைய கையெழுத்துகளை வாங்கிக் கொடுத்தால்தான் ஒப்புக் கொள்ளுகிறே னென்றார். இந்தக் கணக்கு எனக்குத் தேவையில்லை, என மகாராஜாவிடம் திருப்பி அனுப்பி விட்டார்.

நேற்றைய தினம் 3 சுபைகளுக்கும் மக்லோட் சிப்பந்திகளை நியமித்தார். மிஸ்டர் ஸ்வார்ஷ் பாதிரி சாயேப்பினுடைய மூலமாய் உபலாவணியா பிள்ளையைக் கார்பாரியாய் நியமித்தார். பாபனாசத்துக்குப் பாபண்ணாவை நியமித்தார். துபாஜி ஜாயனு மூலமாய் மன்னார்குடிக்கு முத்துசாமி அய்யங்காரை நியமித்தார். மாயவரத்துக்கு சேஷ அய்யங்காரை நியமித்து வஸ்திரம் கொடுத்து, மறுபடியும் அர்ஜ் அடமானி கிருஷ்ணப்பாவை மத்யஸ்தராக நியமித்தார். சீயாழியில் சேஷய்யரை நியமித்தார். ரிகார்டு சேதுபந்த் இடம் ஒப்புவித்தார். மத்யஸ்தர்ம நாயனாவுக்குக் கொடுத்தார். ஜப்தி கார்பார் இந்தப்படி நியமனம் செய்தார்.

விபக்ஷியானவர் பட்டுக்கோட்டை சுபா ஒன்றை மட்டும் வைத்துக்கொண்டு நிர்வாகம் செய்ய முடியாது. அதனால் அதையும் கும்பனியில் ஒப்புக்கொண்டு ஐந்தில் ஒரு பங்கு கொடுத்தால் போதுமென்று எழுதிக் கொடுத்தாரென்று கேள்விப் படுகிறோம்.

மிஸ்தர் பாதரி சாயேப்[22] சொன்னதாவது: "ஸ்ரீமந்த் சத்ரபதி மகாராஜா சாயேப் ஜனவரி மீ 23உ தோட்டத்திலிருந்து பறப்பட்டு........ பரஸ்தானம்[23] வைத்துஇருக்கிறார். 2,3

22. மிஸ்தர் பாதரி சாயேப் என்றது ஸ்வார்ஷ் பாதிரியாரை

23. பரஸ்தானம் - வெளியூர்க்குப் புறப்படுவதற்கு முன் நல்லவேளை பார்த்துத் தன் இடத்திலிருந்து வேறோர் இடத்துக்குச் சென்று தங்குவது

நாட்கழித்துப் புறப்பட்டு வரப்போகிறாரென்று, சொன்னார். அதனால் தபாலில் கடிதத்தை அனுப்பினால் வந்து சேருமோ, சேராதோ என்று நினைத்து எழுதவில்லை. இன்று 4 நாள் ஆகுமென்று சொன்னார். அதற்காகக் கடிதத்தை இன்று எழுதி அனுப்பி யிருக்கிறேன்.

*14 (12) ரா. ஸ்ரீ. யசவந்த் கிருஷ்ணாஜி ஸ்வாமிகளுக்குக் கொடுப்பது*
*ஸேவக அண்ணாவின் அநேக நமஸ்காரம்.*

*விபக்ஷி (அமரசிங்கு) யின் சமாசாரம்.*

ரெஸிடெண்ட் மக்லோட் வந்து சேர்ந்த பின் ஜப்தி செய்வதென்று நிச்சயஞ் செய்து, ஸர்கேல் பாபாவுக்கு ஜப்தியின் கார்பார் கொடுப்பது என்று வந்தாராம். அதற்குச் சிவராயர் பாபாவுக்கே முன்னால் கார்பார் கொடுத்திருந்தால் அப்படிக் கொடுக்கப்படவில்லை..

மக்லோட் தினந்தோறும் மிஸ்தர் ஸ்வார்ஷி பாதரி சாயேப்பின் பேட்டிக்கு வருகிறார். எல்லா விஷயங்களையும் மிஸ்தர் பாதரிசாயேப்பைக் கேட்டு நடக்கிறது. மிஸ்தர் மக்லோட்டும் கர்னலும்[24] திவான் அரண்மனையையும் பாக்கியையும் சுற்றிப் பார்த்தார்.

சிவராயருடைய கடன்காரர்கள் சென்னையிலிருந்து அநேகபேர் வந்திருக்கிறார்கள். கடன்காரர்களின் தொந்திரவு அதிகம். இதைத்தவிர கும்பனியாருக்குக் கொடுக்க வேண்டிய துகைக்கு மக்லோட் அதிகமாகக் கண்டிப்பாயிருக்கிறார். அதற்குச் சிவராயர் அவர்கள் அண்ணந் தம்பிமார்கள் திவான் அரண்மனையில் ராமஸ்வாமி மஹாவில் உட்கார்ந்திருக்கிறார்கள். நேற்று ரெஸிடெண்ட் மக்லோட் திவான் அரண்மனைக்குப் போயிருந்தார். கூட 4 சோல்ஜர்களையும் அழைத்துக் கொண்டுபோய் கும்பனியின் துகையைக் கொடுத்தால் சரி, இல்லாவிட்டால் பாராவை வைத்து விடுவேனென்று சொன்னாராம். 8 தினங்களில் துகையைக் கொடுக்கிறோமென்று சொன்னார்களாம். பிறகு சோல்ஜர்களைக் கூட அழைத்துக் கொண்டு போய்விட்டார்.

பாபா[25] அவர்கள் வேலை பார்க்கிறார். ஆனால் அவருக்கு எந்த வேலையையும் செய்ய விடுகிறதில்லை. பாபாவும் காலத்தை அனுசரித்து சிவராயர் மனஸுப்படி நடந்து வருகிறார். பட்டுக்கோட்டையின் வரும்படி சின்னய்யங்காருக்கு 150 ஆயிரம் ரூபாய்க்கு அண்ணாசாமி அய்யங்கார் எழுதிக் கொடுத்தார். பாபா நிர்ணயஞ் செய்து வரும்படியைச் சிவராயர் குடும்பத்திலே தீர்ப்பதால் ஒரு பிரசங்கமும்(வேலையும்) நடக்க ஒட்டவில்லை.
பாபாவும் சொல்லுகிறாராம். எனக்கும் தெருவுக்கு இழுத்து கெடுத்துவிட்டீர்களே என்று ரொம்ப வியசனத்துடனிருக்கிறாராம். கான் சாயேப்[26] மாரடைப்பால் பரலோகமடைந்தார். அறியவும்.

*14 15.1.1794*
*(24) ரா. ஸ்ரீ. யசவந்த் கிருஷ்ணாஜி அவர்களுக்கு ஸேவகன் அண்ணா அநேக நமஸ்காரம்.*

24. கர்னல் என்பவர் ஸர்டேவிட் பயர்ட் (Baird) ஆவர்.
25. பாபா என்றது ஸர்க்கேல் பாபாவை (பக்.85)
26. கான்சாயேப் - கான்சாகேப் கம்மந்தான் ஆக இருப்பதற்கில்லை

அமரசிங்கு உடம்பு சரியாக இல்லை 8 நாட்களாக வெளியில் புறப்படுவதில்லை. ஜபம்; தபம் பிராமண போஜனம் நடத்துகிறார்கள்.

நாடுகளின் சமாசாரமோ, இவ்வருஷத்துக்கு மன்னார்குடி பதக நவிஸ்[27] உத்யோகத்தை யேரங்குடி கிருஷ்ணாறாயருக்குக் கொடுத்தார். மாயவரம் பெரம்பலூர் வெங்கடாசல அய்யருக்குக் கொடுத்தார். கும்பகோணத்தை இராமஸ்வாமிக்குக் கொடுத்தார். பாபனாசம் தரசீ[28] வெங்கப்பய்யாவுக்குக் கறார் செய்தார். சீயாழி பட்டுக்கோட்டை கைலாசமய்யருக்குக் கறார் செய்தார். இந்தப்படி வேலைகள் நடக்கின்றன. இனி நடக்கப் போகிற விஷயங்களுக்குப் பின்னால் எழுதுகிறேன். தாங்களறியவும்.

*3.7.1794*

*(26) ரா.ஸ்ரீ யசவந்த் கிருஷ்ணாஜி அவர்களுக்கு ஸேவகன் அண்ணாவின் அநேக நமஸ்காரம்.*

திருநெல்வேலியிலிருந்து ஷாஹீகான் என்பவர் கோட்டைக்கு வெளியில் அசரோபசாஷாவினுடைய தெக்காவில் வந்து இறங்கினார். விபக்ஷி அவரைப் பார்க்கப் போனார். ஒரு குதிரையையும் சால்வையையும் கொடுத்தார்கள்.

***(37) 20.9.1794***

*ரா.ஸ்ரீ. யஸவந்த்கிருஷ்ணாஜி ஸ்வாமி அவர்களுக்கு ஸேவக அண்ணாவின் அநேக நமஸ்காரம்.*

இங்கு ஊரில் ஜனங்கள் பேசிக்கொள்வதாவது- சென்னப்பட்டணத்திற்கு 10,20 பேர் வந்திருக்கிறார்கள். புதிய கவர்னர்[29] வந்திருக்கிறார். அநேக கடிதங்கள் வந்திருக்கின்றன. அதனால் ரா. ஸ்ரீ. ஸ்ரீமந்த் சத்ரபதி[30] அவர்களின் கார்யம்[31] ஊர்ஜிதமாகுமென்று பேசிக் கொள்ளுகிறார்கள்.

*(42) ரா.ஸ்ரீ. தத்தாஜி அப்பாசாயேப்[32] அவர்களுக்கு இராமச்சந்திர சிவாஜியின் அநேக ஆசிர்வாதம்.*

பாதரி சாயேப்[33] அவர்களைக் கண்டேன். அவர்களும் ஸந்தோஷத்துடன் " ஸ்ரீசத்ரபதி[34]

27. பதக்நவிஸ் - பதக் என்ற ஊர்களின் ஒன்றியத்தின் அலுவலர்

28. தரசீ - தர்சி ஆறு சிப்பாய்களுக்குத் தலைவன். (பக்.342)

29. புதிய கவர்னர் என்றது 7-9-1794 இல் பதவியேற்ற லார்டு ஹோபர்டு என்பவரை

30. ஸ்ரீமந்த் சத்ரபதி என்றது சரபோஜியை

31. கார்யம் என்றது சரபோஜி ஆட்சி பெறுவதை

32. மூட்டை எண் 912C-இல் 14 (24), (26), 14, 8, 14 (50) ஆகிய இவற்றில் "ரா. ஸ்ரீ யசவந்த கிருஷ்ணாஜி அவர்கட்கு ஸேவகன் அண்ணா" எழுதியனவாக இருக்க, இங்கு "ரா. ஸ்ரீ தத்தாஜி அப்பா சாயேப்" அவர்கட்கு எழுதியாக இருத்தலின் யசவந்த கிருஷ்ணாஜி மட்டுமன்றி ரா. ஸ்ரீ தத்தாஜி அப்பாவுடன் இருந்தனராதல் வேண்டும்.

33. பாதரி சாகேப் என்றது ஸ்வார்ஷ் பாதிரியாரை.

34. சத்ரபதி என்றது சரபோஜியை

சுகமாக இருக்கிறாரா? தினந்தோறும் குதிரையைப் பழக்குகிறாரா? ஆங்கிலயமும் உங்களுடைய எழுத்தும்[35] எழுது கிறாரா? வேட்டைக்குப் போகிறாரா? என்று கேட்டார்.

அதற்கு நான் மிகவும் சிரத்தையுடன் ஆங்கிலேயம் எப்பொழுதும் பேசுகிறார். தங்களை எப்பொழுதும் நினைக்கிறார். நம்முடைய எழுத்துக்களையும் ரா. பாபாவினிடமிருந்து கற்றுக் கொள்ளுகிறார். முன்னால் வேட்டைக்கு 2 பங்களா இருந்தன.இப்பொழுது அவைகளில்லை. குதிரைகளையும் பழக்குகிறார்கள்.

பாயிசாயேப்[36] அவர்களுக்கு அரண்மனைகூட மிகவும் சிறியதாயிருப்பதால் சுற்றுவதற்குக்கூட இடமில்லை, உட்கார்ந்த இடத்திலேயே உட்கார்ந்திருப்பதால் சரீரத்திற்குச் சௌக்கியமில்லை என்று கண்ணீருடன் சொன்னார்.

பிறகு விபக்ஷி[37] யினிடத்திலுள்ள புத்தி ஹீனத்தை எல்லாம் சொன்னார்.

*14. 19.10.1795*
*(47)* ஹாஜாரி[38] வாசலில் ஜனங்கள் ஜயராம் காட்கே, ரகுமாஜி காட்கே, அபாஜிராவ் வகையறா, 15,20 பேர்கள் கூத்தாடிக் கொண்டு இருக்கிறார்கள். ஸமஸ்தானத்தை இழுப்பிறப்புக்குக்[39] கொண்டு வந்து கெடுத்து விட்டார்கள். அறியவும்.

*14. 4.9.1795*
*(50)* ரா. ஸ்ரீ. யசவந்த் கிருஷ்ணாஜி அவர்களுக்கு ஸேவகன் அண்ணா அநேக நமஸ்காரம்.

இராமனாதபுரத்திலிருந்து முத்து ஈரளப்பிள்ளை என்பவர் தஞ்சாவூருக்கு வந்திருக்கிறார். அவரிடம் 4 சுபாக்களையும் குத்தகைக்கு 30 லக்ஷம் சக்கரத்திற்குத் தீர்த்து தேசம் அவருடைய சுவாதீனமாகப் போகிறது. விபக்ஷி (அமரசிங்கின்)யின் பேட்டியுமானது. சால்வைகளையும் கொடுத்தார். பிராமணன்[40] க்ஷயரோகத்தினால் ரொம்ப சக்தியில்லாமலிருக்கிறார். ஆங்கிலேயர்கள் வந்து பார்க்கிறார்கள். அறியவும்.

*(55)* ரா. ஸ்ரீ. ஸ்ரீமந்த் சத்ரபதி[41] மஹாராஜா சாயேப் தை மாஸம் 27 உ[42] சனிக்கிழமையன்று புறப்பட்டு வருகிறாரென்று எழுதி வந்ததினால் ரொம்ப சந்தோஷத்தை அடைந்தேன்.

35. மராட்டிய மொழிக்குரிய எழுத்து.

36. துளஜாவின் மனைவியருள் ஒருவர்.

37. விபக்ஷியென்றது அமர்சிங்கை

38. ஹாஜாரி வாசல் என்றது வடக்குவாசலை

39. இழுப்பிறப்பு - இழுப்பும்பறிப்பு - இழுபறி போராட்டம்

40. பிராமணன் என்றது சிவராவ் ஆகலாம்.

41. ஸ்ரீமந்த் சத்ரபதி என்றது சரபோஜியை

42. தை 27 என்றது 6.2.1796 ஆகலாம்.

மிஸ்தர் மக்லோட் அவர்களின் சம்சாரம் அம்பாரியில்[43] உட்காரவேணுமென்று ஆசைப்பட்டதினால் ஸர்கார் அவர்களுக்கு அம்பாரியைக் கொடுத்தனுப்பினார்கள். தம்பதிகளிருவரும் அம்பாரியில் அமர்ந்து மாரியம்மன் கோவில் வகையறாவைச் சுற்றி வந்தார்கள்.

மிஸ்தர் ஸ்வார்ஷ் பாதரி சாயேப் சாபான் 5உ[44] இங்கிருந்து புறப்பட்டு ஸ்ரீமந்த் சத்திரபதி மஹாராஜ சாயேப் வருவதால் எதிர் கொண்டழைப்பது என்று நிச்சயம் செய்திருக்கிறார்.

*14 (79)*

ஸ்ரீ.ஸ்ரீ சரபோஜிராஜா ஸ்ரீராம் அவர்கள் மேஜர் ஜனரல்[45] விலியம் கேடர்ஸ் கவர்னர்[46] சாஹேப் ஸலமுலமுலாஹீதாலா[47] சாஹேப் முஷபகமதர தான கபரதான கர பர்மாயேதோஸ்தான பைஜபகஷ பைஷரசான -ஹானரபிள்[48] இன்று ஸலாம்.

*1791 கி. பி*

நீங்கள்[49] சத்ருவை ஜயிப்பதற்குப் போகும்பொழுது தஞ்சாவூரில் தங்களைப் பார்த்தேன். அப்பொழுது என்னுடைய கஷ்டங்களை எல்லாம் சாஹேப்புக்குத் தெரிவிப்பதற்குப் போதுமான நேரம் இல்லை என்று நாமும் வருவதற்கு உத்திரவு கேட்டதற்கு அப்படி அவசியமில்லை. நாம் சத்ருவை ஜயித்து வரும்பொழுது எங்களுக்கு நியாயப்படி நடத்துகிறேனென்று வாக்களித்தீர். அன்று முதலிது வரைக்கும் சாஹேப் ஜயமடைந்து மதராஸிலிருந்து வந்து சேர வேணுமென்று எப்பொழுதும் பிரார்த்தித்துக் கொண்டிருந்தோம்.

இப்பொழுது சாஹேப்புக்கு ஞாபகமூட்டுவதற்கு நானும்[50] என் தாயாரும், பாட்டி எல்லோரும் கஷ்டப்படுகிறோம். அவை எழுதி முடியாது. அவர்களைக் கோவிலுக்குக் கூட போகவொட்டாமல் அதிக மரியாதைக் குறைவாகச் செய்து ஜயிலில் போட்ட கைதியைப் போல ஒரே இடத்தில் வைத்திருக்கிறார். ஆதலால் அவர்களுடைய சரீரத்தில் உபாதி[51] ஏற்பட்டிருக்கிறது. நம்முடைய பாட்டியோ[52] அஸாத்யமான உபாதியுடன் கூடியவளாயிருக்கிறார்.

---

43. அம்பாரி - யானை மேல் தவிசு

44. சாபான் 5உ என்றது 15-2-1796 ஆகலாம். ஷ:ப்பான் முகமதியர் மாதங்களில் 8ஆவது.

45. மேஜர் ஜெனரல் - லெ:ப்டினன்ட் ஜெனரலுக்கு அடுத்த பதவி வகிப்பவர் .

46. விலியம் கேடர்ஸ் கவர்னர் என்று கவர்னர்கள் பட்டியலில் காணப்பெறவில்லை.

47. இதுவும் அடுத்துள்ளனவும் மொழிபெயர்க்கப்பெறவில்லை.

48. ஹானரபிள் - honourable. - இவ்வடைமொழி மதிப்புக்குரிய அல்லது பெருமைக்குரிய என்று பொருள்படும்.

49. நீங்கள் என்றது சரபோஜியை; சத்ரு என்றது அமர்சிங்கை.

50. நான் என்றது யார் என்று தெரியவில்லை.

51. உபாதி - நோய்

52. பாட்டி என்றது திரௌபதாம்பா பாயியை.

நம்முடைய இராஜ்ய பதவியையும் நம்முடைய பாத்தியதையும், அபகரித்து நமக்கு கொன்றுவிட வேண்டுமென்று முயற்சித்தார். அந்த அமரசிங் இப்பொழுது நம்முடைய பாட்டி திரௌபதாபாயி சாஹேப் அவர்கள் பரலோகமடைந்தால் அவர்களுடைய கிரியையைத் தான்செய்ய வேணுமென்று யோசனை செய்திருப்பதாகக் கேள்விப்பட்டேன்.

அப்படி அவருக்கு உத்திரவிட்டால் இராஜாவின் குடும்பம் அதிகஹீனதசையடைந்து மரியாதையில்லாமல் போகும். என்னுடைய தாயார், தகப்பனார், சாஹேப்தான். ரக்ஷணை செய்வதால் நமக்கு சாஹேப்பைத் தவிர வேறு ஆதாரமில்லை. ஆகையால் சாஹேப் எங்கள் மேல் தயவு செய்து நம்முடைய குடும்பத்தின் பேரில் உபத்திரவஞ் செய்யாமல் உத்திரவு செய்து, நியாயமாக விசாரணை செய்து நம்முடைய சாஸ்திரப்படிக்கும், ஜாதி விவகார வழக்கப்படிக்கும், நமக்குத்தான் அதிக பாக்கியதை இருக்கிறதென்று தங்களுக்குத் தெரிந்த பின்பு அந்தக்கிரியை முழுமையும் நானே செய்து முடிக்கிறேன். அமரசிங்குக்கு யாதொரு பாத்தியதையு மில்லாத படியால் அவர் செய்யக் கூடாது.

தற்காலம் அவர்[53] இராஜ்யபாரஞ் செய்வதால் இராஜா சாஹேப் பெண்களுக்குக் கிரியை எந்த மரியாதைப்படி நடத்த வேணுமோ, அந்தப்படிக்கி நடக்கும்படியும், மரியாதையும் நம்மிடமிருந்துதான் கிரியைகளைச் செய்யும்படி உத்திரவு அனுப்ப வேண்டும். நாம் இன்னும் என்ன விசேஷம் தங்களுக்கு எழுதுவது.

ஸ்ரீராம் பிரதாப[54] தஞ்சாவூர் துளஜா மகாராஜாவின் தாயார் மா.ஸ்ரீ.திரௌபதாம்பாபாயி சாயேப்[55] அவர்கள் எழுதியது.

*14(25)* ஸேது பாவா ஸ்வாமியாரின்[56] பிள்ளையின் பிள்ளை(பேரன்) 8 வயதுள்ள பூணூல் மட்டும் ஆனவர் தைவகதி[57] அடைந்த பொழுது விபக்ஷியும்[58] பிராமணரும் அவர்களுடைய வீட்டுக்குப் போயிருந்தார்கள்.

***14.26-8-1794***

*(49)* இங்கே நடக்கிற சங்கதிகளுக்குக் கும்பனியிலிருந்து கண்டிப்பாய் நியாயமாக நடத்துவதற்குக் கர்னாலுக்கு[59] ஒரு கடிதமும் சிவராயருக்கு[60] ஒரு கடிதமும் வந்தாலும்,

---

53. அவர் என்றது அமர்சிங்கை

54. ஸ்ரீராம்பிரதாப் - இங்ஙனம் அரசர்கள் கையொப்பமிடுவர். இங்கு எங்ஙனம் ஸ்ரீராம் பிரதாப் என்று கையொப்பம் அமைந்தது என்று தெரியவில்லை.

55. இக்கடிதம் திரௌபதாம்பா பாயி சாகேப் ஆணையின்படி எழுதப்பெற்ற தாதல் வேண்டும்.

56. ஸேதுபாவா ஸ்வாமி - சிவாஜியின் ஞானாசிரியராகிய சமர்த்த ராமதாஸரின் சீடர்; இவர் மடம் தஞ்சையில் உள்ளது. (பக்கம் 439 அடிக்குறிப்பு)

57. தெய்வகதி அடைதல் - இறத்தல்

58. விபக்ஷி என்றது அமர்சிங்கை

59. கர்னால் - Colonel - சேனாபதி

60. சிவராயர் - அமர்சிங்கு காலத்திய சர்க்கேல்; அமர்சிங்கின் முழு அன்பும் ஆதரவும் பெற்றவர் .

எப்பேர்ப்பட்ட காரியமும் சுலபமாக நடக்கும். இல்லாவிடில் நாளுக்கு நாள் ரொம்ப அவமானமாக இருக்கிறது. மிஸ்தர் ஸ்வார்ஷ் பாதரி சாயேப்புக்குத் தெரிவித்த இவ்விஷயத்தில் தான் பேசக் கூடாதென்கிறார். கர்னாலும் அமரசிங்கின் வசமாயிருக்கிறான்.[61] இப்படிக்கு ஆக்ஞைப்படி நடக்கிறேன்.

*14. A.D. 1800*

*(64)* ரா. சரபோஜி ராஜே போஸலே சந்தாவர்கர்.[62] இவர் பாகீநகரியிலிருந்து சந்தாவருக்குப்[63] போகிறார்கள். அவருடன் கூட 50 ஒட்டகமும் துணிகளும் 60 செல்லுகின்றன.

*15 (9)* சாஹேப்[64] அவர்கள் இராஜ்யத்திற்கு வந்து சேரவேணுமென்று ஒரு லக்ஷம் ஸ்ரீராம நாமத்தை எழுதியிருந்தேன். இதற்குப் பிராமண போஜனமாக வேணும். பிறகு 2ஆவது தரம் ஆரம்பிக்கவேணும். காரியம் ஸித்திக்கும் என்று நமக்கு ஒரு பெரிய சந்நியாஸி சொல்லியிருக்கிறார்.

*15 (16)* பிரஹஸ்பதி (குருதசையில்) சனி புக்தி சனி அந்தரம் புக்தியில் ஒரு பலம் இரண்டாவது, சனி புக்தியில் அந்தரம் புதன் புக்தி இது காரியத்திற்குப் பலம். சனி புக்தியில் அந்தர சுக்ர புக்தி காரியத்திற்குப் பலம். இது தவறினல் 3 புக்தியும் 19 மாஸத்திற்கப்பால் ஸந்தேகமில்லாமல் பட்டாபிஷேகமாகும்.

*15(20)* ரா. ஸ்ரீ. அண்ணாஜி[65] பண்டிதர் ஸ்வாமியின் ஸேவைக்கு ஸேவக யசவந்த கிருஷ்ணாஜியின் அநேக நமஸ்காரம்.

28உ யன்று[66] ஸ்ரீமந்த் சத்ரபதி மகாராஜாவும் மாதோஸ்ரீ பாயிசாயேப்[67] எல்லோரும் சைதாபேட்டையிலிருந்து புறப்பட்டுப் பல்லாவரம் சாவடிக்கு வந்து சேர்ந்தார்கள். இந்தச் சங்கதியை ஸ்வார்ஷ் பாதரி சாயேப் அவர்களுக்குத் தெரிவிக்கவும்.

ஸ்ரீமந்த் சத்ரபதி சாயேப் சீயாளி,[68] மாயவரம், கும்பகோணம் இந்த வழியாக வருவதால் நீங்கள் பாதரி சாயேப் அவர்களுக்குச் சொல்லவும். என்னவென்றால்,

அந்தந்த சுபாவின் அம்மல்தாரவர்கள்[69] அவரவர் எல்லைக்குள் அவரவர்கள்

61. அமர்சிங்கின் சார்பில் இருக்கும் கர்னல் டேவிட் பயர்ட் (Sir David Baird) என்பவர் ஆவர் (Basu - Rise of Xian Power in India , Page 354)

62. சந்தாவர்கர்/ - தஞ்சாவூர்க்காரர்

63. சந்தாவர்.(?) - தஞ்சாவூர்.

64. சாஹேப் என்றது சரபோஜியை ஆகலாம்.

65. இங்குக்கண்ட அண்ணா என்பது அண்ணாஜிபண்டிதர் ஸ்வாமியாகலாம்.

66. 28உ என்பது தை 28 (7-2-1796)

67. பாயிசாஹேப் என்றது துளஜாவின் மனைவியருள் மோஹனாபாயி சாகேப் ஆகலாம்.

68. சீயாளி - சீர்காழி

69. அம்மல்தார் - சுபாவின் வருவாய்த்துறை அலுவலர்.(பக்கம்.74).

ஹாஜீரிலிருந்து எங்கே மகாராஜா தங்குவாரோ, அங்கங்கே விடுதிகளைச் செய்து கொடுத்து, சாமான்களையும் சுமாரான விலைக்குக் கொடுக்கும் படியும் மிஸ்தர் மாக்லோட்[70] அவர்களுக்குச் சொல்லி உத்திரவு அனுப்பும்படி சொல்லவும்.

*20.7.1796*[71]

*(29) ரா.ஸ்ரீ. தத்தாஜி அப்பா*[72] அவர்களுக்கு-ஸிநேகிதர் ரகோஜி மஹாடிக் ராம் ராம்.

ஒரு கடிதம் எழுதினதற்குப் பதில் வரவில்லை. இப்பொழுது மக்லோட் வந்த நாள் முதற்கொண்டு அவருடைய அந்தரங்கத்தைத் தெரிந்து கொள்வதற்குப் பச்சை மால்சேஹோ பந்த்தும்[73] நாமும் அதே முயற்சியிலிருக்கிறோம்.

இப்படி யிருக்கையில் நம்முடைய யசமான் சாயேப்[74] அவர்களுடைய வேண்டியவர்கள் அந்தரங்கமாகப் பேசுவதற்குப் பெரிய மனுஷ்யாள் ஒருவரும் இல்லையா என்று மக்லோட் விசாரித்தார்.

அதற்கு நாமிடங் கொடுக்காமலே அந்தரங்கமான சங்கதியை அறிந்தோம். அந்தச் சங்கதி என்னவென்றால் ஸ்ரீமந்த் ராஜாஸ்ரீ யஜமான சாஹேப் அவர்கள் பேரில் அங்குள்ள பிரபுவானவர்[75] அந்தக்கரணத்துடனும், அபிமானத்துடனும், ரா.ஸ்ரீ.யஜமான் சாயேப் அவர்களைக்கூட அழைத்துக்கொண்டு, வந்து அவருடைய மனோபிஷ்டத்தைப் பூர்த்தி செய்ய வேணுமென்று நிச்சயித்திருக்கிறார்கள். அதற்கு நாமெல்லோரும் ஸாதகமாக யிருக்க வேண்டிருக்கிறது. அப்படியே நாமும் ஏற்பாடு செய்திருக்கிறோம். இவ்விஷயம் தங்களுடைய யஜமான் சாயேப்புக்குச் சீக்கிரம் தெரிவிக்கவும். இதை ரொம்ப இரகசியமாய் வைக்கவும்.

பிராமண பூர்வமாக[76] யஜமான் சாயேப்பின் மனதில் தானிருக்க வேணும்

இன்னும் ஸர்கார் உத்யோகஸ்தர் ஸர்காருடைய சங்கதியைச் சொல்லுகிறதா என்றால் மா.ஸ்ரீ. பெரியபாயி சாஹேப்[77] அவர்களுக்கு நாம் போதனை நன்றாகச் செய்திருக்கிறோம். குழந்தையை எப்படியாவது விட்டுக்கொடுத்து, இங்கு வந்தால் தங்கள் வேலை எல்லாம் என்ன ஆகும், இந்தப்படி ஸ்ரீதரமேத்தாவின் மூலமாகக் கார்யம் ஆரம்பித்திருக்கிறது. இன்னும்

70. மக்லோட் - ரெஸிடெண்டு

71. 7-2-1796இல் சென்னையைவிட்டுச் சரபோஜி புறப்பட்டார் என்று தெரிதலின் அண்ணாஜி பண்டிதர் எழுதிய கடிதம் 20- 7-1796. என்றிருப்பது தவறு.

72. சரபோஜி சென்னையிலிருந்தபொழுது உடன் இருந்த உயர் அலுவலர் ஆவர்.(பக்கம்79) இந்தக்கடிதம் போன்றே மோடிப்பலகணி பகுதி IIஇலும் உள்ளது.

73. சேஹோபந்த்து - சேஷோபந்த்

74. யஜமான் சாயேப் என்றது சரபோஜியை

75. பிரபு என்றது கவர்னர் லார்ட் ஹோபர்ட் அவர்களை.

76. பிராமண பூர்வகமாக - பிரமாண பூர்வகமாக - உறுதியாக

77. பெரியபாயி சாஹேப் - அஹல்யாபாயி; பார்க்க மூட்டை எண் 923C-9-50

அங்கிருந்து பிரபுவுக்கும் ஏராளமாக வேண்டுமென்கிற இச்சையிருப்பதால் ஸ்ரீமந்த்தரை இங்கு வைத்துக்கொண்டு எதிர்க்கட்சிக் காரரை அடக்குகிறேன்.

இப்பொழுது சென்னைக்குப் புதிய கவர்னர்[78] வந்திருப்பதால் அந்தக் கவர்னர் மனது பிரகாரம் ஒன்றும் நடக்கவில்லை. இப்படி ஸந்தோஷம் நேற்று முதல் அடைகிறார்கள். முந்தானாள் வரையில் பயப்பட்டுக் கொண்டிருந்தார்கள். ஏனென்றால் ஒருவேளை நம்முடையவரை அழைத்து வந்த பிற்பாடு கவர்னர் மனது பிரகாரம் நடக்கவில்லை. ஆனால் கஷ்டம் ஏற்படும் போலிருந்தது. இப்பவும் யஜமான் சாயேப்பின் யோகாதிசயத்தினால் (அதிஷ்டத்தினால்) காரியம் எப்படியும் நிறைவேறுமானால் அவ்விடமிருந்து பந்தோபஸ்து[79] வரவேண்டியதில்லை. இங்கிருக்கிற ஆங்கிலேயராலும் கொஞ்சம் சகாயம்(பாதுகாப்பு) ஆகும்படி ஏற்பாடு செய்து வைக்கவும் எல்லா வேலைகளுக்கும் அனுகூலமென்று தோன்றுகிறது.

இங்குள்ள ஆங்கிலேயரால் எனக்கு எல்லாம் ஸாதிக்குபடியா யிருக்கிறது. அங்குள்ள தங்களுக்குத் தெரிந்து தம்முடைய பேரால் வருகிற கடிதம் வந்தால் ஆக வேண்டிய கார்யங்களைச் செய்ய முடியுமென்று இருக்கிறது. இங்கு அவரால் நடக்க வேண்டிய முயற்சிகளும் நம்பேரில் அந்தக்கரணபூர்வகமாக இருக்கிறது. அதை நன்றாகப் பராமரித்து எழுதியிருக்கிறது. நாம் அவரிடம் அவருக்கு அந்தக் காரியத்தைச் சீக்கிரம் செய்ய வேண்டுமென்றிருக்கிறேன் எப்பேர்ப்பட்ட வேலையையும் கூடுகிற வரையிலும் அநேகருடைய மனதிலுள்ளதை அறிந்து செய்கையினாலாவது கூடி வரும்படி ஸந்தோஷத்தைக் காண்பிக்க வேணும்.

புது சங்கதி - சங்கதியை எழுதுகிறேன். என்னவென்றால், மக்லோட் இலாவு வந்தது முதல் இங்குள்ள காரியங்களை முடிக்காமலிருப்பதால்[80] பிசகு செய்தாரென்று சென்னைக்கு வரவழைத்தார் என்று கேள்விப்பட்டேன். இங்கே அவரிடமுள்ள துபாசி வகையறாக்கள் அவர் சம்சாரம் சீயாளி யிலிருப்பதால் அவர் போயிருப்பதாகச் சொல்லுகிறார்கள்.

(41) ரா.ஸ்ரீ. அப்பாசாயேப் அவர்களுக்கு- ஸேவக வெங்கடராமா ஜெட்டி[81] -ராம் -ராம்.

சுப்பா ஜெட்டியை ஸம்ரக்ஷணை செய்கிற விஷயம்.

இந்த ஸமஸ்தானத்தில் பணத்திற்கு 3படி அரிசி விற்கிறது. அதனால் சுப்பா ஜெட்டிக்கு அன்னம் அபரூபமாக இருக்கிறது. இனி சாஹேப்பு உபேக்ஷ செய்தால்[82]

78. புதிய கவர்னர் யார் என்று தெரியவில்லை.

79. பந்தோபஸ்து - காவல்

80. மக்லோட் வந்த காரியம் யாது என்பதைப் பின்வரும் வாக்கியம் நன்கு விளக்குவதாக உள்ளது. "This civil servant of the Honourable East India Company had been placed at the court of Tanjore for no other purpose than that of inducing or even (if necessary) compelling the unfortunate Rajah to give up his territory and become a pensioner of the said E.I.C. ..." (Basu-Rise of Xian Power in India, Vol. II,PP.405-7)

81. ஜெட்டி - மற்போர்வீரர்.

82. உபேக்ஷ செய்தால் - புறக்கணித்தால்

அவருடைய கதி என்ன ஆகும் என்று தெரியவில்லை ஆகையால் சாயேப் தயவு செய்து அவனுக்கு ஒரு வேளைக்காவது அன்னம் கிடைக்கும்படி ஏற்பாடு செய்தால் சாயேப்புக்கு ரொம்பப் புண்ய முண்டாகும்.

15 இராஜா[83] வெள்ளியைப் போட்டு துலாபாரம்[84] செய்து எல்லோருக்கும் கொடுத்தார். ஸர்கேலவர்கள் துணிமணிகளையும் ஐந்துவித லோகங்களைப் போட்டுத் துலாபாரதானம் கொடுத்தார். இராமேஸ்வரத்தில் வந்த எல்லாப் பிராமணர்களுக்கும் பூரி(தக்ஷிணை)கொடுக்கிற வரையில் 1/2 படி அரிசியும், 4 காசும் கொடுத்து வந்தார்.

அரண்மனை ஜனங்களுக்கும் கணக்குப்பிள்ளைகளுக்கும் பட்டுக்கோட்டையிலிருந்து கடைசி வரையிலும் ஒருபடி அரிசி கொர்டுத்து வந்தார். இராமேஸ்வரத்தில் ஒரே மாதிரியாய் எல்லா ஜனங்களுக்கும் கொடுத்தார்.

4௵ மாக மழையும் ஜலமுமின்றி அங்குள்ள ஜனங்களுக்கு ரொம்ப சிரமமிருந்தது. இவ்வருஷம் ரொம்ப மழை. தண்ணீர்க் கஷ்டமில்லை. விற்பனை சுபிக்ஷமானதால் யாத்திரை ஜனங்களுக்குச் சுகமாக ஆயிற்று.

15. ராஜஸ்ரீ பட்டுக்கோட்டைக்கு வந்த நாள் முதற் கொண்டு இராமேஸ்வரத்திற்குப் போகிறவரையில் ஒவ்வொரு முகாமிலும் இறங்கினவுடன் மழைபெய்து ஜனங்களுக்குத் தங்க இடமில்லாமல் போயிற்று. ஸேவகன் முன்னால் போனதினால் மழையின் தொந்திரவில்லாமல் யாத்திரை சுகமாகச் செய்து வந்தேன்.

*24.1827 Feb 17உ*

ஸர்கார் சிப்பந்திகள் (உத்தியோகஸ்தர்) கிராமத்தை ஏலத்தில் எடுத்தார்கள். அந்த ஊர் மிராசுதார் கர்ணம் அக்கம்பக்கம் கிராமவாசி இவர்களைக் கூப்பிட்டு ஷ கிராமம் ஒத்தி,[85] பந்தகம்[86] ஸ்வாமிபோகம்[87], கிரயம்[88] ஏலத்தில் எடுத்திருக்கிறார்கள் என்ற விஷயம் தங்களுக்கு ஏதாவது தெரியுமா அதைச் சொல்லுங்களென்று கேட்டார். அதற்கு இன்ன உத்யோகஸ்தருடைய காரியஸ்தன்[89], பந்துக்கள் இவர்களுடைய பேரால் கிராமத்தை ஏலத்திலெடுத்து உத்யோகஸ்தர்களே அனுபவித்துக் கொண்டிருக்கிறார்களென்று, அந்தந்த ஊராருடைய வாக்குமூலம் கையெழுத்தும் வாங்கி அனுப்பியிருக்கிறார்.

நாகப்பட்டினம் கச்சேரி.

---

83. இராஜா என்றது இரண்டாம் சரபோஜியாகலாம். காண்க - மோடிப் பலகணி பகுதி II

84. துலாபாரம் - துலாபார தானமாவது துலாவின் ஒருதட்டில் தான் அமர்ந்து பிறிதொரு தட்டில் தன் எடைக்குரிய பொன்னும் மணியும் இட்டுப் பின்னர் அதனைக் கோயில் கட்டும் அந்தணர்கட்கும் அறிஞர்கட்கும் கொடுப்பதாகும் (பக்கம்.281)

85. ஒத்தி - ஒற்றி - உரிமையை அடைமானம் வைத்தல்.

86. பந்தகம் - முழு உரிமையொடு கொடுத்தல்

87. ஸ்வாமி போகம் - கடவுட் குரியது.

88. கிரயம் - விலைக்கு வாங்குதல்

89. காரியஸ்தன் - அலுவலன்

*36(8) A.D. 1827 Jan 19உ*

**ஸர்கார் இலாகாவில் கிராம முன்சீப் நியமிக்கிற விஷயம்**[90]

பிரின்ஸிபால் கலெக்டர்[91] சாயேப் அவர்களுக்கு ஸர்கார் காரியங்களில் இருக்கிற ஊக்கமும் அவ்விஷயத்தைப் பற்றி, தாங்களனுப்பிய உத்திரவையும் விஸ்தாரமாகக் கண்டிருக்கிறீர்கள். அவையெல்லாம் படித்து மனதுக்கு வாங்கி, ஹுஜூர்[92] அவர்களுடைய சித்தம் சந்தோஷமும் அந்த சாயேப்புக்கு ஸ்துதி பரமுமாயுமிருக்கிறது.

நாம் ஸர்கார் இலாகாவில் கிராம முன்சீப் நியமனஞ் செய்யப் போகிறோமென்று சென்ற ஏப்பிரல் 15உக்குத் தங்களுக்குத் தெரிவித்தபடி ஹுஜூரே இது வரைக்கும் கிராம முன்சீப்பை நியமனஞ் செய்திருக்கிறார் —
என்னவென்றால்:-

சிற்சில பரிவர்த்தனம்[93] ஆகும்படியாக இருப்பது ஆன பிற்பாடு தான் ஒரு நல்ல ஏற்பாடு செய்வதாக யோசனையிருக்கிறது.

மேஜஸ்திரேட் போலீஸ் ஸங்கதியின் காரியம் ஒரு கட்டுப்பாடு செய்வதில் சில நியாயம் பிரின்ஸ்பால் கலெக்டர் என்னைக் கேட்பார் என்று தெரிவதால், அவ்விஷயத்தில் ஸர்காருடைய அபிப்ராயத்தின் படி தெரிந்திருக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

அவ்விஷயத்தில் ஸாதாரணமாக ஸர்காருடைய அபிப்பிராயமென்னவென்றால்:-

சமீபத்தில் சில வருஷங்களாக இந்த தேசத்தின் ஜனங்களுக்குக் கணக்கு ஸர்காருக்குத் தாம் கொடுக்க வேண்டிய மகசூல் தகுந்த காலத்தில் கொடுக்காமல் தப்பித்துக்கொள்வதற்கு அந்தப் பாக்கியைப்போட்டு, சில நாட்களுக்கப்பால் அதைத்தான் கொடுக்க வேண்டியதில்லை. அதைத் தமக்கு ஸர்காரானவர் தள்ளிக் கொடுக்க வேணுமென்று வீண் தகராறு ஏற்படுத்தி அவ்விஷயத்தில் சில நியாயமாக தோன்றும்படி உண்டு பண்ணி, ஸர்காருக்கு நஷ்டத்தையும், அநியாயஞ் செய்வதாகவும் முயற்சி எத்தனை விதம் உண்டு பண்ணுவதற்குக் கற்றுக்கொண்டிருக்கிறார்கள் என்பதை நம்மைப் பார்க்கிலும் புத்திமானும் ஸாமர்த்யவானுமான ஆங்கிலேய கவர்ன்மெண்ட் உத்தியோகஸ்தர்களுக்கு அதிமாகத் தெரிந்திருக்குமாகையால் ஸர்கார் இலாக்காவிலுள்ள ரயத் வகையறா ஜனங்களுடைய

---

90. இத்தலைப்பில் - பக்கம் 43-49 வரை உள்ள செய்திகள் மோடிப்பலகணி பகுதி II இல் உள்ளன. இங்கு 19-1-1827 என்று நாள் குறிக்கப்பட்டுள்ளது. அங்கு இல்லை.

91. மூட்டை எண் 912C-36-9இல் கலெக்டர் ஏ.டி.காமல் 7-6-1827இல் குறிக்கப்படுவதால் 19-1-1827இல் காமல் கலெக்டராக இருந்திருக்கலாம்.

92. ஹுஜூர் என்றது இரண்டாம் சரபோஜியை

93. பரிவர்த்தனம் - மாற்றிக்கொள்ளுதல்

தில்லம்பில்லத்தினால்[94] மகசூலின்[95] போதுமான வசூல்[96] முன் சொல்லப்பட்ட கலஹத்தினால் நின்று விடாமலும் நம்மால் நியமிக்கப்பட்ட உத்தியோகஸ்தர்களுக்கு அந்த ஜனங்கள் மரியாதையுடன் கீழ்ப்படிந்து நடக்க வேண்டுமென்றும் நன்னடத்தையாக இருக்க வேண்டுமென்று ஏற்படுவதற்கு மாத்திரம் நாம் நியமனஞ் செய்த அதிகாரத்தில் வேறு அதிகாரிகளுடைய பிரவேசமில்லாமலிருக்க வேணுமென்றுதான் நம்முடைய மனதிலுள்ள எண்ணம். தவிர வேறு காரணத்தினாலல்ல.

நாம் இவ்வளவு பிரார்த்தனை செய்வது அனுசித[97] மென்று சொல்லக்கூடாது. ஏனென்றால்-ஸாமான்யமாக ஓர் அதிகாரிக்குத் தன்னுடைய அதிகாரத்தில் வேறொரு அதிகாரத்தின் தொடர்பு ஏற்பட்டால் காரியம் எந்த விதமாக முடியும் என்று எண்ணினால் கேட்பவர்களுக்குப் பதில் சொல்வது கூட சிரமமென்பது பழைய காலத்து வார்த்தை.

எல்லா புத்திமான்களும் ஏற்றுக்கொள்வது நியாயமாகையால்ஸமஸ்தானாதிபதி[98]களிடத்தில் சொற்ப கிராமங்களும் சில தோட்டம் வீடுகள் இருக்கின்றன. அவைகளில் வேறொருவரும் பிரவேசிக்காமலிருக்க வேண்டுமென்பது நலம் என்று அவர்களுடைய சிநேகிதர்கள் அறியாமல் இருக்க மாட்டார்களென்பது எல்லோருக்கும் தெரிந்திருப்பதால் இவ்வளவுதான் எங்கள் பிரார்த்தனை.

ஆனால்-மனிதர்களைக்கொலை, களவு, வீட்டுக்குத்தீவைப்பது அதனால் அதிக பிரமாதமும்[99] அதிக நஷ்டமும் ஏற்படுவது. இப்பிரகாரம் குற்றவாளிகளை விசாரிப்பது பெரிய வயதான மனிதர்கள் பயந்து, ஸாவதானமாக[100] செய்ய வேண்டியதாகையால் அப்படி விசாரணையும் இருதாரர்களும் வேறு இடத்திற்குப்போய் அடையக்கூடிய சந்தோஷத்தை அடைவார்கள். நியமனம் செய்த காரியமும் மாஜிஸ்திரேட் சாயேப் அவர்களின் விசாரணைக்கு ஒப்படைப்பதில் எப்பொழுதும் ரா.ஸ்ரீ.ஸர்கேல் சந்தோஷமா யிருப்பாரென்று தாங்கள் ஸமயோசிதமாய்[101] வணக்கமாய்த் தெரிவிக்கலாம்.

(கையெழுத்து) பாபாஜி[102]

---

94. தில்லாம்பில்லத்தினால் - தில்லு முல்லுவால் - ஏமாற்றுவித்தையால்.

95. மகசூல் - விளைச்சல்

96. வசூல் - சேகரித்தல்

97. அனுசிதம்-தகாதது

98. ஸமஸ்தானாதிபதி - சமஸ்தானத்துக்குத் தலைவர்; அரசர்.

99. பிரமாதம் - தொல்லை

100. ஸாவதானமாக - நிதானமாக

101. ஸமயோசிதமாய் - சமயத்துக்குப் பொருத்தமாக

102. பாபாஜி - பாபாஜி ராமாஜி பண்டிதர் ஆகிய சர்க்கேல்(பக்.86)

*36 1827 June 7உ*

**(9) மிராசுதாரர்கள் தரம்போடுவதற்கு (நிர்ணயிப்பதற்கு) வேண்டுமென்ற சங்கதி**[103] அதில் நிலத்தின் ஸ்வரூபத்தை[104] அறிந்து அதற்குத் தரம் நிர்ணயஞ்செய்வதற்கு அனுபோகமுள்ள 2 மிராசுதாரர்களைத் தன்னிடம் அனுப்ப வேணுமென்று பிரின்ஸிபால் கலெக்டரவர்கள்[105] தங்களுக்கு நேரில் பார்த்த போது, தெரிவித்த விஷயம் விஸ்தாரமாகத் தெரிவித்திருக்கிறீர்கள். அதை மனதில் வாங்கி ஹுஜூரவர்களுக்குத்தெரியப்படுத்தினதற்கு ஹுஜூரே எனக்குக் கொடுத்த உத்திரவைத் தெரிவிக்கிறேன். என்னவென்றால்:-

ஸர்கார் இலாகாவில் கொஞ்சம் கிராமங்களிருக்கின்றன. அதில் மூப்பாவைப்போல்[106] பெரிய மிராசுதார் ஒருவருமில்லை. இருக்கிறவர்களில் யோக்யமானவரைப் பிரின்ஸ்பால் கலெக்டர் வேண்டுமென்றால் குடுப்பதற்கு ஹுஜூருடைய எண்ணம் நன்றாக இருக்கிறது. ஆனால், தரம்போட்டு அதன்பேரில் ஜமாபந்தி[107] நிர்ணயிக்கிற துகையை ஸர்காருக்குச்செலுத்தி, அந்நிலத்திலுள்ள வரும்படியை அனுபவிப்பதற்கு லாபநஷ்டத்திற்குப் பாத்தியதை ஆகிற மிராசுதார்களிடமிருந்து தான் செய்யப்படுகிற நிச்சயம் சுத்தமாகத்தானிருக்குமென்று நம்பத்தக்கதல்ல.

ஏனென்றால் மிராசுதார்கள் நிலத்தினுடைய தரத்தையும் கண்டு முதல்[108] தொகையையும் நிர்ணயிப்பார்கள். அவர்களுக்குத் தெரிந்தவுடன் தாகலா (ரூஜு) பார்ப்பதற்கு இதுவரையிலும் இந்த ஸமஸ்தானத்தில் முன்கால முதற்கொண்டு ஆகவில்லையாகையால் இந்த ஸமஸ்தானத்தில் ஆற்றங்கரையிலுள்ள நிலம், மணல் கடினமில்லாததாயும், சுண்ணாம்புக்கல், பாறை இல்லாத புதிய பிரவாஹத்தினுடைய வண்டலுடன் கூடிய கருப்புக்களிமண்ணுள்ள நிலம் எல்லாம் உயர்ந்தது முதல் தர்த்தால்தான். ஆனால் இப்பேர்பட்ட இடங்களில் ஒடப்புவந்து யெக்கல்[109] அடித்தால் அந்த நிலம் அநேக வருஷங்களுக்குப் பிரயோஜனப்படாது. சில நிலங்கள் சீயந்தரத்திற்கும்[110] உபயோகப்படுகிறது. இம்மாதிரியான ஸங்கடங்களேற்படாமலிருக்கிற நிலங்களில் மகசூல் அனுபவிப்பதற்கு ஆற்றுப் பிரவாஹ ஜலமும் மழையும் ஒவ்வொரு வேளையிலும் தவறாமலிருந்து, விரைவிடுதல், நடவும் தகுந்த ஸமயத்தில் ஆகி நிலத்தில் களை காலாகாலத்தில் தவறாமல் எடுத்து, அதிக சௌகரியத்துடன் நிலம் கெடாமலும், நிலத்தில் எலி முதலியவைகள்

103. இச்செய்தி மோடிப் பலகணி பகுதி IIஇலும் உள்ளது.

104. ஸ்வரூபம் - தன்மை

105. கலெக்டர் - ஏ.டி. காமல் (பக்கம்.70)

106. மூப்பா - மூப்பனார் ஆகலாம்

107. ஜமாபந்தி - ஊர்க்குடி மக்கள் அரசாங்கத்துக்குச் செலுத்த வேண்டிய வரிப்பணத்தைப்பற்றி ஏற்படும் ஆண்டிறுதி முடிவு

108. கண்டுமுதல்-நிலத்தின் விளைச்சல்

109. ஒடப்பு-உடைப்பு; யெக்கல் - எக்கர் - மணல்மேடு

110. சீயந்தரம் - ஜிவியந்தரம் - பலதலைமுறைகள்

புகுந்து செய்யும் கெடுதிகள் உண்டாகாமல் கதிர் கிளம்பி, பால் நிறையும்பொழுது மழை, காற்று இவைகளால் பால்வழிந்து போகாமலிருந்து நிலத்தின்பட்டடையில்[111] பஞ்சமசி[112] மென்கிற திருட்டுப்போகாமல் நன்றாகப் பாதுகாக்கப்பட்டால் முன்சொன்ன மாதிரியான நிலம் முதல்தரமென்று சொல்வதற்கு ஒருபொழுதும் ஸந்தேகப்படவேண்டியதில்லை.

சொல்லப்பட்ட மாதிரியான ஸாதன ஸம்பத்தியும்[113] கெடுதியின்மையும் ஈஸ்வரனுடைய ஸ்வாதீனத்திலிருப்பதால் இந்தத் தேசத்தில் தரம் நிர்ணயிக்கப்படாமல் இருந்திருக்கலாம் என்று அறிய வேண்டியிருக்கிறது.

இதர தேசங்களிலோ பூமியின் கொஞ்சம் அடியில் சிறிது தூரத்தில் வற்றாத நீரிருக்கும். அவ்விடங்களில் கிணறு தோண்டி தண்ணீரிறைப்பது. எப்பொழுதும் ஆற்றில் ஓடப்பு ஜலமில்லாமல் போவது இதனால் ஆகிற கெடுதல்கள் இதில் இல்லை. ஒரு கிணற்றிலிருந்து இவ்வளவு ஜலம் இறைத்தால் இத்தனை நிலம் சாகுபடி செய்யலாமென்றும், இவ்வளவு கண்டுமுதல் ஆகுமென்றும், பழைய கால்த்திய கணக்கிலிருந்து ரூஜூ பார்க்கலாம்.

குளம், குட்டை இவைகளின் தண்ணீர் நிரம்பினால் அதிலுள்ள ஜலம் இவ்வளவு நிலத்திற்கு இவ்வளவு மாதத்திற்கு வருமென்று (சாகுபடிக்கு) நிர்ணயம் செய்து அதன்படி நிலத்தின் மகசூலில் பிசகாது. அதற்குக் கணக்கு இருக்கிறது. ஆகையால் அப்பேர்ப்பட்ட இடங்களில் தரம் நிர்ணயஞ் செய்திருக்கலாம். அப்படி யில்லா விட்டாலும் புதியதாக நிர்ணயம் செய்வதற்குச் சுலபமாகும்.

இத்தேசத்தின் அளவு முன்கால முதற்கொண்டு சுத்தமாகவும் ஸந்தேகத்தைப் போக்கடிக்கத் தக்கதாயுமாகவில்லை... சமீபத்தில் சில வருஷங்களாக கும்பனி உத்யோகஸ்தர்கள் அளந்தது நடக்கிறபடி சரியாயிருக்கலாம். ஆனாலும் ஒவ்வொரு காரியத்திற்கும் ஸந்தேகத்தைத் தீர்க்குமென்று நம்பக்கூடாது. ஆனாலும் அக்காரியம் செய்ய முடியாதது என்றும், சொல்லக்கூடாது. ஆனால், சிரமத்தினால்தான் சாதிக்க முடியும். ஏனென்றால் அந்நிய தேசத்தில் ஓர் ஊரிலிருந்து மற்றொரு ஊரின் சில மான்யமாகவும்[114] நிலங்கள் அநேகமிருக்கிறது. அப்பேர்பட்ட ஊர்களில் ஊருக்கருகாமையில் சில நிலங்கள் சைகாலும்[115] பாக்கி உபயோகமில்லாததும் தரசியாயும்[116] இருக்கிறது. அப்பேர்ப்பட்ட சைகால் நிலங்களைச் சாகுபடி செய்யும் ரயத்துகள்[117] சில பேர்தானிருக்கிறார்கள். அந்த ஒருவருடைய நிலத்திற்கு ஸம்மந்தமடையாமல் மற்றொருவன் சாகுபடி செய்கிற ரயத்துகளுடைய பேர்கள்

111. பட்டடை - இறைப்புப் பாசனமுற்ற நிலம்.

112. பஞ்சமசி - திருட்டு

113. ஸாதன சம்பத்தி - சாதனையால் ஏற்படும் செல்வம்.

114. மான்யம் - வரியின்றி அனுபவிக்கும் நிலம்.

115. சைகால் - செய்கால் - பயிரிடப்படும் நிலம்.

116. தரசி -தரிசு நிலம் - பயிரிடப்படாமல் இருக்கும் நிலம்.

117. ரயத்து - பயிரிடும் குடிகள் .

கண்டு நிலங்களின் கணக்குகள் ஸ்வபாவமாகவே ஆகிறது. இந்தத் தேசம் ஆறுள்ள அனாதிதரசி[118] என்று சொல்லப்பட்ட நிலம் ஒரு வேளை ஊர்களில் கொஞ்சமளவுள்ளவையாக இருக்கலாம். அல்லது பாக்கி சைகால் நிலமும் ஜனங்கள் வசிப்பதற்கு இதனால் ஆற்றினிருகரைகளிலும் ஒன்றரை பாகமாக வியாபித்திருக்கும்.

ஒவ்வொரு ஊரின் ஒரு கட்டளையிலுள்ள நிலத்திற்கு 2,4 மிராசிதார்கள் சாகுபடி செய்வதற்குப் பாத்தியமுள்ளவர்களாக இருப்பார்கள். உடனே 2ஆவது அல்லது மூன்றாவது வருஷத்தில் ஊர் மிராசுதார்கள்[119] கரையேடு[120] என்கிற நிலத்தின் மாற்றுதல்களைச் செய்துகொள்வார்கள். அப்பொழுது முன் சொன்ன கட்டளைக்கு முதலில் கண்ட மிராசுதார்களின் பெயர் வழிகள் வித்யாசமடையும். தானங்கிரயமும், மான்யமும் பேர்வழிகளும் வித்யாசப்படலாம். ஒரு சிற்றூருக்கு மிராசுதார் அநேகப்பேர்களிருப்பதால் மிராசுதாரின் பேர் வழிவாரி நிலத்தில் கணக்கைக் காப்பாற்ற வேணும். பிறகு வருஷாவருஷம் கரையேடு வேளையில் மிராசுதார்களின் பேர்வழிவாரி கட்டளை வாரியாக இனாமும் சிலவும் உடனே, பார்த்து, கணக்கைத் தயார் செய்ய முடியாத காரியமென்று இதுவரையிலும் எல்லா ஸந்தேகத்திற்குப் பரிஹாரஞ் செய்கிறதான பைமாஷ்[121] ஒருவரும் செய்யாமலிருக்கிறார்கள்.

தற்போது பிரின்ஸிபால் கலெக்டர் சாஹேப் அவர்கள் பைமாஷ் செய்வதற்கு ஆரம்பஞ்செய்த விதமும் அதற்காக பைமாஷ்தார்,[122] பிர்காதார்[123] இவர்களை நியமித்து, அவர்களிடமிருந்து வேலைவிரிவரப்படி வாங்குவதின் மாதிரியும், நன்றாய் யோசனை செய்துபார்த்தால் இப்பொழுது ஆகிக்கொண்டிருக்கும் பைமாஷ் பூர்ணமாகச் செய்து தயாராகிற-கணக்கு ஒவ்வொரு எல்லை விவாதமும், நில விவாதமுமுண்டாகாதபடி செய்வற்கு ஒருவேளை சொல்லப்பட்ட விவாத மேற்பட்டால் அதை அதிக சுலபமாக நன்றாய்க் காட்டுவதற்கும் ரொம்ப உபயோகப்படுமாகையால் மேற்சொன்ன பைமாஷ் ஹுஜூருக்கு[124] அதிகப் பிரியமுள்ளதாயிருக்கிறதென்று தெரிவிக்கிறோம்.

ஆனால் இப்பொழுதே ஸ்வதந்திரம் (நிர்பந்தம்) அடைந்தபடி சொல்லப்பட்ட மாதிரியான பைமாஷ் ஆகி, அப்பைமாஷ்படி கட்டளைவாரி, மிராசுபேர்வழிவாரி, கண்டுமுதல் கணக்கு ஆகும்தான் அப்படி 3 அல்லது 5 ஜாஸ்தியகணக்கைத் தயார் ஆனால் அந்தக் கண்டுமுதல் மூலம் ஸ்வதந்திரம் செய்ய[125] தரத்தை ஒவ்வொரு மிராசுதாரரும், சச்சரவின்றி

118. அனாதிதரசி - பலகாலமாகப் பயிரிடப்பெறாமலிருக்கும் நிலம்.

119. மிராசுதார்கள்-நிலத்தில் பயிரிடுவதற்கு உரிமையுள்ளவர்கள்.

120. கரையேடு -கரையீடு - கிராம நிலங்களை மாற்றியமைத்தல்

121. பைமாஷ் - 19ஆம் நூற்றாண்டில் ஆங்கிலேயாரல் செய்யப்பட்ட நில அளவு.

122. பைமாஷ்தார் - நிலத்தைத் தரம் பிரித்தலாகிய பைமாஷ் வேலையைச் செய்பவர்.

123. பிர்காதார் ; பிர்கா - சில ஊர்களின் தொகுதி ; இதன் மேற்பார்வை அலுவலர் பிர்காதார்.

124. ஹுஜூர் - அரசர்.

125. ஸ்வதந்திரம் செய்ய - உரிமையாக்க

ஒப்புக்கொள்வதற்குத் தகுந்ததாயும் ஸந்தேகமற்றதாயும், அதிக சுத்தமும் ஆகலாமென்று யோசனையைத் தெரிவிக்க ஹுஜூரால் கட்டளையிடப்பட்டிருக்கிறார்.

சொன்னவிதம் தரம் ஸ்வதந்திர மடைந்த பின்பும் வெள்ளச்சேதம்,வரளச்சேதம்,[126] உண்டானால் அந்தச் சேதம் மிராசுதாரருடைய ஆஸ்தியைக்கூட இழுக்கும் போலிருந்தால் அப்பேர்ப்பட்ட சேதம்(நாசம்)நிஜமென்று தெரியவந்தால், அவ்விஷயத்தில் பிரின்ஸ்பால் கலெக்டர் சாயேப் அவர்கள் ஏதோ தகுந்த தயவைக் காண்பிக்கிறது. மிராசுதார்களுக்கு விருத்தி (நிலம்) சேதம் ஏற்படாமலிருப்பதற்குக் காரணமும் கவர்மெண்ட்டுக்குக் கீர்த்தி விஸ்தாரமாகும்படியாயுமாகலாம்.

பிரின்ஸிபால் கலெக்டர் அவர்களான ஏ.டி.கேமல் சாயேப் அவர்களுக்கு வேலை பார்க்கிற இடத்திலிருக்கிற அசட்டையின்மை (சுறுசுறுப்பு) யான அக்கரையும் தான் பரிசுத்தமானவராயும் ஒவ்வொரு உத்தியோகஸ்தர்களுக்கும், பரிசுத்தமாயும் பக்ஷபாதமில்லாமலும், வேலை பார்க்கும்படிக்கு ஒவ்வொருவரிடத்திலுமிருந்து வேலை வாங்குகிற சாமர்த்தியமும், நியாயஞ் செய்வதில் உள்ள பிரியமும் இத்தேசத்தின் மிராசுதாரர்களுக்குத் தாம் ஸர்காருக்குச் செலுத்தவேண்டிய வரியைத் தவிர்த்து, வேறுவரி போட்டு கொஞ்சங்கூட சிலவு தமக்குக் கொடுக்கும் படியாக இருக்காது என்ற நம்பிக்கை நம்முடைய காலத்தில் உண்டாகலாமென்று அந்த நம்பிக்கையினால் தான் பார்த்து வருகிற நிசமான துகையைத் தெரிவிப்பதற்கு அனுமானமற்றிருப்பாரென்று ஹுஜூருக்குத் தோன்றிருக்கும் நம்பிக்கையை நாம் தெரிவிப்பதற்கு ஸந்தோஷமாக யிருக்கிறோம்.

ஸேவக பாபா[127]

*38.AD 1820 June 14உ*[128]

(7)ரா.ஸ்ரீ. சாஹேப் அவர்களுக்கு ஸேவகன் - முன்ஸீ ஸ்ரீராமதாஸ் தஹஸில்தார் பரகணேராஹக உகேர் முத்தையன் தஹஸிஸ் கச்சேரி கலெக்டரேட் கஸஜ்யாதரியின் ஸ்ரீஜகன்னாதஜீ எழுதிக் கொடுத்த ரசீது.

தஞ்சாவூர் ஸ்ரீமந்த் மஹாராஜ் சத்ரபதி[128b] சாயேப் அவர்களிடமிருந்து ஸ்ரீஜகன்னாத ஸ்வாமிக்கு[129] நிவேதனத்துக்காக நாள் ஒன்றுக்கு 2 ரூ வீதம் வருஷம் 1க்கு ரூ.720, பெற்றுக்கொண்டேன். இதற்கு ஸ்ரீஸ்வாமிக்கு நிவேதனம், சாதம் வடிக்கப் பானைகள் 12. பருப்பு காய்கறி வகையறாக்களுக்கு பானைகள் 12.

---

126. வரளச்சேதம் - வரட்சியால் ஏற்படும் சேதம்.

127. பாபா - சர்க்கேல் பாபாஜி ராமாஜி பண்டிதர்.(பக்.86)

128. 12-1-1821இல் ஜகந்நாதுக்குச் சென்றிருத்தலின் (பக்கம்.100) 1820 என்றது 1821 ஆதல் வேண்டும். மாதம் ஜனவரி, நாள் 14 என்பது சரியே. இதில் உள்ள செய்தி 5-180, 181 இல் சொல்லப்பட்டுள்ளது.

(128a.) ஸ்ரீராம்போஸ் என்று சரசுவதி மகால் பகுதி 10-மூட்டை எண் 188C-25இல் காணப்பெறுகிறது.

128b சத்ரபதி என்றது இரண்டாம் சரபோஜியை.

129. ஸ்ரீஜகன்னாதசுவாமி என்றது - பூரி என்ற ஊரில் உள்ள பெருமானை.

இம்மாதிரி சியாமசுந்தர் பாண்டியா அவர்களிடமிருந்து ஸ்ரீஸ்வாமிக்கு நிவேதனஞ்செய்து, தேசாந்தரி[130] அதிதிக்கும்[131] குருடன், செவிடன், நொண்டி இவர்களுக்கும் பிரஸாதம் கொடுப்பது.

கோவிந்த நாராயண.

*38-AD 1820 to 1821*

(13)கணக்கு கும்பனி பாபத்து 1820 *AD* மே மீ முதல் 1821 ஏப்ரல் வரையில்.

ரூ. *3917927-13-2* கலெக்டருடைய கணக்குப்படி, ரூ. *30645-15-4* போர்டார் கணக்குப்படி ஆக ரூ. *3948573-12-6*அதிக வரவு

ரூ. *28518-15-8 Sea customs* கரதோரை பாபத்து, ரூ.*2120-13-8* முத்திரை கடுதாசியும் ஓலைகளும், ரூ. *6- 2-0* லாசசார்ஜேஸ் நியாயசிலவு, ஆக ரூ.*30645-15-4*

சிலவு

*437500-0-0*ஸமோஹிக்குச் சேரவேண்டிய பாபத்து,
*35000-0-0* ரா.ஸ்ரீ.மகாராஜாவுக்கு 8750-0-0 அமரசிங்கு சம்சாரத்திற்கு[132] = 43750-0-0

*38-A.D. 1820*

(31)காசி யாத்திரைக்குச் சென்று திரும்பி வரும்வரையில் நடக்க வேண்டிய விபரம்:-

விக்ரம்ஸுபுரட்டாசிமீ 9உ[133]

(1)நவராத்திரி முதலிய எல்லாப் பண்டிகைகளும், ஆயுத பூஜை, விஜயதசமி, சீமோல்லங்கணம்[134] வகையறா உற்சவங்கள் நம்முடைய குழந்தையின் மூலமாக வழக்கப்படி நடத்த வேணும்.

(2) நவராத்திரியின் பண்டிகையும் ஆயுத ப்ரக்ஷாளனம்[135] பூஜையும், சீமோல்லங்கணமும் இதற்கு ரெஸிடெண்ட் வந்து பின்பு எல்லாவற்றையும் பூர்த்தி செய்கிறது.

---

130. தேசாந்திரி - அயல்நாட்டவர்.

131. அதிதி- விருந்தினர் (ஊருக்குப் புதியராய் வந்தோர்).

132. அமர்சிங்கு இறந்தபிறகு ஒய்வூதியத் தொகை அவரது மனைவிக்குக் கொடுக்கப்பட்டது.

133. விக்ரம் ஸு புரட்டாசி மீ 9 உ என்றது 22-9-1820 ஆகும். (Indian Ehphemeris (1801 - 2000) L.D.Swamikannu Pillai) விக்ரம் - யாண்டறுபதனுள் 14 ஆவது.

134. விஜயதசமி சீமோல்லங்கணம் - விஜயதசமி நாளில் நடத்தப்பெறுவதும் அரண்மனையை விட்டு வெளியே சென்று அம்புபோடுதலும் ஆகிய விழா.

135. பிரக்ஷாளனம் - நீரால் கழுவுகை.

சிலங்கண சாவடி[136] யிலிருந்து அரண்மனைக்குத் திரும்பும்பொழுது, ரெஸிடெண்ட் ஸாஹேப் எங்கள் குழந்தையோடு[137] இரத்தத்தில் உட்கார்ந்து அரண்மனைக்குக் கொண்டு வந்து சேர்ப்பிக்க வேணும். இப்பண்டிகையை முன்னிட்டு இனாம் வகையறா வழக்கபடி சேர வேண்டியவர்களுக்குக் கொடுக்கிறது.

(3)தீபாவளி முதலிய எல்லாப்பண்டிகைகளும், பாவுபீஜ[138], அரண்மனையிலுள்ள ஸ்வாமிகளுக்கு[139] மஹோற்சவம் புண்ணிய காலத்தில் வழக்கப்படி தான தர்மங்களை நடத்துகிறது.

(4) சி.சௌ.சைதம்பாபாய்,[140] சாஹேப் மா.ஸ்ரீ.அவுசாஹேப்,[141] ஐந்து மாப்பிள்ளைகள்[142], சி.சௌ.ஐந்து வர்க்கம், அமணிராஜே ஐந்து குழந்தைகள் இவர்களுடைய மொயின், தான தர்மங்கள் வகையறா ஒன்றுங் குறைவில்லாமல் வழக்கப்படி நடக்க வேணும்.

(5) நம்முடைய அந்தப்புறத்தில் பண்டிகை முன்னிட்டு மாப்பிள்ளை ஜனங்களுக்கும் பட்டுவாடா செய்ய வேண்டிய வாழைப்பழம், தேங்காய், எண்ணை, ஆடுகள், உப்பை வகையறாக்களைக்கொடுத்து வந்த மாமூல்படி சி.சௌ.சைதம்பாபாய் சாஹேப் அவர்களிடத்தில் கொடுப்பது.

(6)குழந்தைகள் பிறந்த நாளில் எல்லோருக்கும் நடக்க வேண்டிய வழக்கப்படி மரியாதையைச் செய்கிறது.

(7)ஜனவரி, கிரிஸ்மிஸ், இந்த 2 பண்டிகைக்கும் ரெஸிடெண்ட் முதலிய ஆங்கிலேயர்களுக்கு ஸர்காரிலிருந்து செய்ய வேண்டிய மரியாதை வழக்கப்படி செய்கிறது.

(8)ரெஸிடெண்ட் சாஹேப்பினுடைய அனுமதியின் பேரில் புதிய துரைகள் பேட்டி வாங்கி அவர்களுக்கு ரெஸிடெண்ட் சாஹேப்பினுடைய புத்திமதிப் பிரகாரம் மரியாதையை நடத்த வேணும்.

---

136. ச்மோல்லங்கணசாவடி என்பது சிலங்கண சாவடி என்று மருவியது. இது அம்பு போடும் இடம். மானாம்பு சாவடியில் உள்ள விஜய மண்டபத்தருகே அம்புபோடுவது பல ஆண்டுகளுக்குமுன் நிகழ்ந்தது என்று தெரிகிறது.

137. குழந்தை என்றது சரபோஜியின் மகன் சிவாஜியை

138. பாவூபீஜ் - இது ஒரு பண்டிகை; "தீபாவளி ஆகிக் கார்த்திகை சுக்ல பக்ஷம் திவிதியை நாளில் தங்கை தம்பி அல்லது தமையனுக்கு விருந்து அளித்துத் துணிமணிகளைக் கொடுத்து ஆரத்தி எடுப்பது வழக்கம். அப்பொழுது தங்கைக்குத் தமையன் ஆரத்தி தட்டில் பணம் போடுவார்" (பக்.309-10)

139. அரண்மனையிலுள்ள சுவாமி என்றது சந்திரமௌலீசுவரர் ஆகலாம்.

140. சைதம்பாபாயி - சிவாஜியின் முதல் மனைவி; இவர் சரபோஜியின் மூத்த பெண்ணின் மகள்.

141. அவுசாஹேப் என்றது துளஜாவின் மனைவிகளுள் உயிருடன் இருந்தவர் (?)

142. மோலாஜி எஸ்பந்தராவ் மோஹிதே (சுலக்ஷணாபாயி) (2) ஜீவாஜி கோவிந்த ராவ்மோஹிதே (ராஜம்மாபாயி) (3) நாகோஜி சதாசிவராவ் மோஹிதே (ராஜகுமாராபாயி) (4) எசுபந்தராவ் ராமச்சந்திரராவ்சூர்வே (பாயம்மாபாயி) (5) ராமச்சந்திரராவ் எசுபந்தராவ் இங்களே (சக்வார் பாயீ)

(9)விஜயதசமி சிலங்கணத்திற்காக ரெஸிடென்ட் சாஹேப் முதலிய துரைகளிடமிருந்து எங்களுக்கும், எங்கள் குழந்தைகளுக்கும் நடந்து வந்த மரியாதை இப்போது எங்கள் குழந்தைக்கு நடக்க வேணும். அவர்களுக்கு ஸர்காரிலிருந்து செய்து வந்த மரியாதை வழக்கப்படி நடத்த வேணும்.

(10)சீமோல்லங்கனமான இரண்டாவது தினத்தில் நம்முடைய ஸமஸ்தானத்தில் ஜனங்களும், கலெக்டரிடமுள்ள உத்யோகஸ்தர்களின் பேடியை ரெஸிடெண்ட் அருகிலிருந்து செய்து வைக்க வேணும். உத்யோகஸ்தர்களுக்கும் ஸர்காரிலிருந்து வழக்கப்படி செய்ய வேண்டிய மரியாதையைச் செய்ய வேண்டியது.

(11) கோட்டையிலும் லயனிலும் குடியிருக்கும் ஜனங்களுக்கு நியாயம் கிடைக்க வேண்டிய காரியம். அதற்காக வைத்திருக்கிற 4 சபைகளிடத்தில்[143] திருஷ்டி வைத்து நியாயமுண்டாகும்படி ஜாக்கிரதை செய்ய வேணும்.

ஒருவேளை ஸபையில் யாருக்காவது அநியாயமாயிருப்பதாய்க் கேள்விப்பட்டால் அதை விசாரித்து அநியாயமானது நிஜமென்று ருஜுவானால் அப்படிப்பட்டவருக்கு யுத்தமான தண்டனை செய்வது, அல்லது அவரை நீக்க வேண்டியதாய் ஏற்பட்டால் நீக்கி விடுகிறது.

(12) கோட்டையிலும், லயனிலும் வசிக்கிற ஜனங்களின் நகை நாணயங்களைக் காப்பாற்றுவதால் எல்லா ஜனங்களுக்கும் கவலையற்றவராகவும், சந்தோஷ முண்டாகும் படியாகவும் திருடர்களின் பயத்திலிருப்பது[144], காப்பாற்றுவதற்கும், நியமிக்கப்பட்டவர்கள் சரியானபடியாக நடக்கிறார்களாவென்று பார்த்து,அந்தப்படித் தவறுகிறவருக்கு உடனே தண்டனை செய்வது அல்லது வேலையிலிருந்து நீக்குகிறது.

(13) முகாஸா[145], சத்திரம்[146], தோட்டம்[147], வகையறாவின் அமினா[148]முதலியோர் சிப்பந்திகள் அவரவர்கள் வேலைகளைச் சரிவரச் செய்யாவிட்டால் காரியத்தைக் கெடுத்துவிட்டாலும் அவர்களின் பேரில் தப்பிதமென்று ஏற்படுத்தி, அவர்களை வேலையிலிருந்து நீக்கி யோக்யமானவரை நியமித்து, இராஜாங்கத்தின் வரவு, தர்மம், விருத்தியடையும்படியாகச் செய்ய வேணும். ஷெ வரவும் தர்மமிவ் விரண்டிற்கும் கெடுதல் செய்பவர்களுக்குத் தண்டிக்கவேணும்.

---

143. நான்கு நியாயமன்றங்கள் முத்திரித சபை, தரும சபை, நியாயசபை, நியாயாதீச சபை என்பன.

144. பயத்திலிருப்பது - பயத்திலிருந்து என்று படிக்கவேண்டும்

145. முகாஸா - ஆங்கிலேயர் வரிவசூல் பொறுப்பை ஏற்றுக்கொண்ட பொழுது இரண்டாம் சரபோஜி தனக்குரிய தனி உடைமையாகச் சில ஊர்ப்பகுதிகளை வைத்துக் கொண்டிருந்தார். அவை மொகாஸா எனப்படும். (பக்கம் 134-135)

146. சத்திரங்கள் (பக்கம் 269)

147. தோட்டங்கள் - 96 தோட்டங்கள் எனப்பெறும் (பக்கம் 507)

148. அமீனா ஊர்வழக்கு மன்றத்தில் இருக்கும் ஜப்தி செய்யும் அலுவலன்

*(14) யாத்திரைக்கு எங்களுடன் வருகிறவர்களுடைய சம்பளத்தை அவர்களின் வீட்டில் சேர்ப்பிக்கிறது. ஷெ ஜனங்கள் யாத்திரையிலிருப்பதால் அவர்கள் திரும்பும் வரையிலும் அவர்களின் பேரிலோ அல்லது அவர்களின் வார்ஸின் பேரிலோ, யாராவது வியாஜ்ஜியம்[149]செய்தால் அதைத் தள்ளி விடவும். ஷெ யாத்திரை ஜனங்களின் வாரிசு வியாஜ்ஜியம் செய்தாலும் அதை உடனே விசாரித்து அவர்களின் பேரில் வம்பு செய்கிறவர்களைத் தண்டனை செய்து, ஜனங்களைக்காப்பாற்ற வேண்டும். தினந்தோறும் அவர்களுடைய க்ஷேமத்தை விசாரித்து அவரவர் சுபாசுபங்களுக்கு[150] ஸாமான்ய ஜனங்களுக்கு 5 சக்கரத்திலிருந்து 10 சக்கரம் வரையில் அவரவர்கள் யோக்கியதைப்படி[151] இனாம் கொடுத்துதவுகிறது. அவரவர்களுடைய க்ஷேமங்களைக் கடிதம் மூலம் தெரிவித்துக் கொண்டிருக்க வேண்டும்.*

*(15) இராஜாங்கத்தின் ஒவ்வொரு காரியமும், வரவு, சிலவு வகையறா சிறியதாகவுமல்லது. பெரியதாகவுமிருந்தாலும் அதை ரெஸிடெண்ட் சாஹேப் அவர்களுக்குத் தெரிவிக்காமலும், அவருடைய ஸம்மதமின்றியும் செய்யக்கூடாது. எல்லாம் அவருடைய சம்மதத்தின்படி நடக்க வேணும்.*

*(16) நம்முடைய குழந்தையும்[152], மாப்பிள்ளையும்[153], கோட்டைக்கு வெளியில் உலாவப்போக வேண்டுமென்று இருந்தால் போகலாம்.*

*(17) மேற்சொன்ன வகைகளில் கண்டது அல்லது நம்முடைய மா. ஸ்ரீ. சி. குழந்தை சௌ. நாட்டுப்பெண்,[154] சி. சௌ. பெண்கள்[155] அவர்களின் குழந்தைகள் இவர்கள் ஒருவேளை பர்வகாலத்திலும், உற்சவ காலத்திலும் திருவையார் வரையில் போய், மூன்று தினங்கள் வரையிலிருந்து வரவேண்டுமென்றால் அவரவர்களுடைய மாமூல் பிரகாரமுள்ள ஸாஹித்யங்களைச்[156] செய்து கொடுத்து அனுப்பி மூன்று தினங்களுக்கு மேல் ஒருவரும் கோட்டைக்கு வெளியே தங்காமல் ஏற்பாடு செய்யவும்.*

*(18) மாதாமாதம் கிஸ்தித் துகை[157]யும் வருஷக்கடைசிக் கணக்கையும் தீர்த்துப் பாக்கித்துகையையும், கும்பனியிலிருந்து வருகிறதற்கு நம்முடைய குழந்தையின் பேராலும்*

---

149. வியாஜ்ஜியம் - வழக்கு

150. சுபாசுபங்கள் - நன்மை தீமைகள்

151. யோக்கியதை - தகுதி

152. குழந்தை என்றது சிவாஜியை

153. மாப்பிள்ளை யார் என்று தெரியவில்லை.

154. நாட்டுப்பெண் என்றது சைதாம்பாபாயியை.

155. சாபோஜியின் பெண்கள் ஆகிய சுலக்ஷணாபாயி (போ.வ.ச.பக்.185); ராஜகுமார்ராபாயி, பாயம்மாபாயி (போ.வ.ச.பக்.136): ராஜம்மா

156. ஸாஹித்தியங்கள் - ஏற்பாடுகள்

157. கிஸ்தித்தொகை என்பது சரபோஜிக்குக் கும்பினி கொடுக்க வேண்டிய தொகை

கையெழுத்திட்டு, ரசீது தயார் செய்து, அந்த ரசீதில் ரெஸிடெண்டின் கையெழுத்தும் வாங்கிக் கொடுக்க வேணும்.

(19) நம்முடைய குழந்தையைக் காப்பாற்றுகிற விஷயத்திலும் அவர் வித்யாவான்[158] ஆக வேண்டிய விஷயத்திலும் தர்பாருடைய வேஷத்தைப் போட்டுக்கொள்வதற்கு ரெஸிடெண்ட் தயையுள்ளவராக (தடை அற்றவராக) இருக்க வேணும்.

(20) நம்முடைய பிறந்தநாளன்று[159] பெரிய கோட்டையின் பெயரில் நம்முடைய வயதின் கணக்குப்படி குண்டு போடவேண்டும். அதற்காக அதே தினத்தில் சிவகங்கைக் கோட்டையின் மேல் 21 குண்டுகளைப் போடவேண்டும்.

(21) வஸந்த பஞ்சமி தினம்[160] நடக்கும் ஸதர் (தர்பார்) வழக்கப்படி நடத்த வேண்டும்.

(22) ரா. ஸ்ரீ. ஸ்வாமிகளுக்கு[161] ஸ்ரீராம நவமி, புண்யதிதி, பண்டிகை வகையறாக்களுக்கு மொயினும் மரியாதையும் நடத்த வேண்டியது.

(23) இங்கிருக்கும் ஸிப்பந்திகளில் ஸர்கேல் பங்க்நாயிக், கில்லேதார், சேனாதிபதி ஸர்காருடைய உறவினர்கள் இவர்களுடைய வீட்டில் சுபாசுபங்களானால் இனாமும் வஸ்திரமும் வழக்கப்படி நடக்க வேண்டும்.

(24) எல்லா தேவஸ்தானங்களுக்கும்[162] ரதோத்ஸவத்திற்காக பூஜையும், தக்ஷிணையும், வஸ்திரங்களும், பானகபூஜையும் கொளகஞ்சி வகையறாவும் வழக்கப்படி நடக்க வேண்டும்.

(25) துக்கோஜி[163] பாலியவயது குழந்தையாதலால் அவர் வெளியே போவது வருவது சுகம். சந்தோஷத்திற்குப் பாத்திரராக யிருக்க வேண்டுமென்பது என்னுடைய முக்யமான எண்ணம். ஆதலால் அதற்காக அவர்களிடமுள்ள சிலஜனங்கள் கெடுக்க எண்ணங்கொண்டு, அந்தக் குழந்தையைக் கைதியைப்போல் செய்ய முயற்சிக்கிறார்கள். இப்படியிருந்தாலும் அந்தக்குழந்தை வெளியே உலாவப்போய் வருமாகில் அவருக்குப் பதக்கமும், கைக்கு ஏதாவது ஆபரணங்களையும், ஆடைகளையும் கொடுத்து அவருடன் கூடப் போகிறவர்களுக்கு 2,4 காரியத்திற்குப்[164] போதுமானதைக் கொடுத்து வாங்க உத்திரவிடலாம்.

---

158. வித்யாவான் - கல்வியறிவுடையவர்

159. சர்போஜி பிறந்த நாள்

160. வஸந்த பஞ்சமி - காமனுக்குரியதாய் மாகமாதத்துச் சுக்கிலபக்ஷத்து வரும் பஞ்சமி நாள் (Tamil Lexicon M.U.)மாகம் - மாசி; சுக்கிலபக்ஷம் - வளர்பிறை; பஞ்சமி - ஐந்தாம் நாள்

161. சுவாமிகள்-ராமதாஸ்சுவாமிகளின் வழிவந்த அரசகுரு

162. எல்லா தேவஸ்தானங்கள் - பக்கம் 188-191இல் காணும் 64 கோயில்கள். எனினும் 102 கோயில்கள் வரை இருந்தன (பக்கம் 191 அடிக்குறிப்பு)

163. துக்கோஜி - இவர் யார் என்று தெரியவாய்ப்பில்லை

164. 2,4 காரியத்திற்கு என்பது 'கைச்செலவிற்காக' என்று பொருள் படுமாறு உள்ளது.

(26) சௌ.ராஜம்மாவும்,உபலம்மாவும்[165] சுபான்ஜி போஸலேயின் சம்சாரம் நானெம்மா[166] இவர்களிடம் தானதர்மத்திற்குக் கொடுக்கும் வழக்கப்படி கொடுத்து வரவேணும். இன்னும் அன்னபூர்ணபாயிக்குக்[167] கொஞ்சம் தான தர்மத்திற்காகக் கொடுத்து வரவேணும்.

(27) வியாஸபூஜைக்குப் பதிலாக[168] அந்தந்த மடங்களுக்கு வஸ்திரம் வகையறாக்களை மாமூல்படி கொடுத்து வரவேணும்.

(28) நம்முடைய தாயிமார்களுக்குத்[169] தானம் தர்மத்திற்குக்கொடுக்கிற வழக்கப்படி கொடுத்து வரவேணும்.

(29) மஹாலோமஹால்களில்[170] நடக்க வேண்டிய அவசியமான சிலவுகள் அதிகமாயிருப்பதினாலும், சைன்யத்திலுள்ள சிப்பந்திகளுக்கு மாதச்சம்பளம் அதிகமாயிருப்பதாலும் மஹாலோமஹால் அவசியமான சிலவுகளுக்கு இடைஞ்சலாவதினால் சம்பளக்காரர்களின் துகையில் மாதத்திற்கு ஐயாயிரம் அல்லது 7 ஆயிரம் சக்கரம் கம்மி செய்து கொண்டு, அந்தப்பாபத்தில் துகையை மாதத்திற்குக் கும்பனியிலிருந்து வருகிற கிஸ்தியின் துகைக்கு ஜாஸ்தி ஆகாமல் சம்பளக்காரர்கள் வகையறாவும் மஹாலோமஹால் நடக்கிற யுத்தமான சிலவுகளைச் செய்கிறது. ஷ சிலவுக்கு ஷ துகை போறாமல் இடைஞ்சலானால் கும்பனியிலிருந்து வருஷக் கடைசியில் இதரத்துகைகள் வருகிறதில் நடத்துகிறது. பாக்கி மீறுகிற துகையைச் சம்பளக்காரர்களுக்குப் பாக்கிக்குக் கொடுக்கிறது.

(30) சம்பளக்காரர்களுடைய மாதச் சம்பளத்துகையில் 5 ஆயிரம் அல்லது 7 ஆயிரம் சக்கரம் குறைப்பதற்குத் தங்கள் இஷ்டப்படி கம்மி சம்பளமும் வேலையிலிருந்து நீக்குவது. வேலை விட்டுப் போகிற ஸிப்பந்திகளுக்கு வேறு ஏதாவது கொடுக்கிற விஷயத்தில் ரெஸிடெண்ட் சாஹேப் தயவு செய்து நமக்கு நம்முடைய ஸமஸ்தானத்திலிருந்து கொடுக்கிற துகையில் முந்தியே வாங்கிக்கொடுத்து ஸகாயம் செய்ய வேணும்.

(31) பௌர்ணிமைக்கு இரவில் போட வேண்டிய குண்டுகளை வழக்கப்படி போட வேண்டும்.

(32) ஸப்தஸ்தானத்திற்காக[171] பானக பூஜை[172] மாமுல்படி நடக்க வேணும்.

---

165. ராஜம்மா என்பவர் இரண்டாம் சரபோஜியின் முதல் மனைவியாகிய யமுனாபாயியின் (போ.வ.ச.பக்.134) மகள் ஆவர். உபலம்மா-காண்க மூட்டை எண் ; 123C-13-16.

166. நானெம்மா - நான் என்னம்மா (ஞானம்மா?)

167. அன்னபூர்ணாபாயி - யார் என்று தெரிய வாய்ப்பில்லை

168. வியாஸபூஜைக்குப் பதிலாக-வியாஸபூஜைக்காக.

169. தாய்மார்கள் என்றது துளஜாவின் மனைவியரை

170. மஹாலோ மஹால்கள் - 12 மஹால்களும் (பக்கம் 453) வேறு சில மகால்களும் (பக்கம் 458-460)

171. ஸப்தஸ்தானம் : திருவையாற்றைச் சுற்றியுள்ள திருப்பழனம், திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம்

172. பானக பூசை - பானகத்தை நிவேதனம் செய்து அளித்தல்

மேலெழுதிய விவரப்படி நடக்கிறது. ஸர்கேல் ராஜேஶ்ரீ ராமோஜி ஸர்ஜேராவ் காட்கே.

*42.A.D. 1856 Jan*

(5) பாபர் பிராதுக்கு[173] ஒரு அணா முத்திரைக் கடுதாசி வித்து முதல் செய்கிறது.

*42.A.D. 1856 Jan*

(31) சிரேயஸி சத்திரத்திற்குச்[174] சேர்ந்த ஆங்கிலேய பள்ளிக்கூடமும் தெற்கு ராச வீதியிலுள்ள ஸர்கார் பள்ளிக்கூடமும் எடுத்து மேலவீதியில் ஸர்காருடைய வீட்டில் வைப்பதற்கு ஜேம்ஸ்[175] உபாத்தியாயரை நியமித்த விஷயம்.

***42.A.D. 1856 Feb. 17.***

**(9) பாரசீக சிகாவும் ஸநதுகளையும்[176] நகலையும் மொழி பெயர்த்து எழுதி அனுப்புவது.**

**(10) ரெஸிடெண்ட் சாயேப் நி-ர் 445, 475, 540 இப்பேர்ப்பட்டபாரசிஸநதுகளை[177] அனுப்ப, அதற்கு நகலையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தெழுதி அனுப்பவும். இன்னும் முஸல்மான்களில் தஞ்சாவூரில் இராஜ்யபாரம் செய்திருந்தால் அவர்கள் பெயர் எந்த ஷூ முதற்கொண்டு எந்த ஷூ வரையிலாண்டார்கள். அப்படி அவர் இந்த ஸமஸ்தானத்தில் இராஜ்யபாரஞ் செய்யக்காரணமென்ன? நமக்கு விவரமாக தெரிவிக்க வேணுமென்றும் 26உ நமக்குக் கடிதம் எழுதின யாதாஸ்வின்[178] நகலை, அதிலுள்ளே வைத்திருக்கும் ஸநதுகளுடன் அனுப்பியிருக்கிறது. ஆகையால் மஹாராஷ்டிர மொழிபெயர்ப்பைத் தெரிந்தவர்களிடமிருந்து செய்து, அவைகளுடைய நகல்களையும் எழுதி அஸ்ஸலுடன்[179] உடனே அனுப்புவதுடன் மேல்கண்ட விபரத்தைச் சோதித்து கடிதம் மூலம் தெரிவிப்பதென்று ஸர்கேல் வேலை பார்க்கிறவர் தெரிவிக்கிறார்.**

*enclosure*

மஹம்மதியர்கள் முன்னால் எப்பொழுதாவது தஞ்சாவூரில் இராஜ்ய பாரஞ் செய்திருந்தால் அவர்களால் ஸர்வமான்யம்[180] கொடுக்கப்பட்டதற்கு ஸனதுகள் கொடுக்கப்பட்டிருந்தால் அதற்கு நகலும் அதை இங்கிலிஷில் மொழிபெயர்த்தும் சீக்கரம் அனுப்புவதென்று கௌனர்மேட்[181]

173. பாபர் பிராது - மிக்க ஏழையாயிருக்கிறவர் வழக்குத் தொடர்தல்.

174 சிரேயஸ் சத்திரம் - இது இரண்டாம் சிவாஜியால் தான் விரும்பி வழிபடும் கடவுள் பெயரால் அமைக்கப்பெற்றது (பக்கம் 269)

175. ஜேம்ஸ் என்று இங்கிருக்க மூட்டை எண் 125C-38-2இல் ரோஜஸ் என்றது வேறொருவராக இருக்கலாம்.

176. சிகாவும் ஸநதுகளையும் - சிகா சன்னதுகளை - அரசாங்க முத்திரையிடப் பட்ட உரிமை கொடுக்கும் சாஸனம்

177. பார்சீ ஸனதுகள் - பாரசீக மொழியிலுள்ள சன்னதுகள்.

178. யாதாஸ்வின் - யாதாஸ்தின்; யாதாஸ்து - நினைவுக்குறிப்பு

179. அஸ்ஸல் - அசல் - Original - மூலவோலை

180. சர்வமான்யம் - எந்தவிதமான வரியும் செலுத்தாமல் அனுபவிக்குமாறு கொடுக்கப்படும் நிலக்கொடை (பக்.263)

181. கௌனர்மேட் - Government - அரசாங்கம்

பெரஷியானும்[182] ஹிந்துஸ்தானியில் பெயர்ப்பாளர் ஸர்ஜீயைன் நிம்பாளகர் சாஹேப் 18உ எழுதிய கடிதம் வந்திருப்பதால் நீர் 445, 475, 540, இந்த 3 சனதுகளை அனுப்பியிருக்கிறோம்.

*42.27 Ap.*

(18) 1855[183] கி.பி. ஜூலைமீ ஹுஜூர் கச்சேரியில் தமிழ் பாஷையில் கணக்குத்தயாராகிறது என்றும், ஆனால் ஸர்காருக்கு அனுப்ப வேண்டிய கணக்கு தமிழிலே எழுதுவா அல்லது மோடியிலே எழுதுவதா என்று சிரஸ்தேதார் எங்கள் பேரால் கடிதம் யெழுதியிருப்பதால் தங்கள் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கிறது.[184]

*42.24*

(23)ராஜம்மா பேட்டைக்கு அம்மா பேட்டை என்று பிரதிபெயர் மாற்றப்பட்டிருக்கிறது[185].

*42July 3*

(25) ஸர்காருடைய யானை குதிரை வகையறாக்களைச் சென்னப்பட்டணத்தில் வித்து மொதல் செய்த வகையில் ரெஸிடெண்ட் சாஹேப் அவர்கள் *Tanjlor & Co* இடமிருந்து வித்து மொதல் ஜாபிதாவின் கூட வந்த கடிதத்தை இதில் வைத்து நம் பேரால் கடிதம் எழுதியிருப்பதால் அதனுடையதும் *Tanjlor & Co* வின் கடிதத்தினுடையதும் அதிலுள்ள கடிதத்தையும் ஜாபிதா 2க்கும் நகல் எடுத்து நீங்கள் பார்ப்பதற்காக அனுப்பிருப்பதைப் பார்த்து மனதுக்கு வாங்கி அந்தந்த மஹால்களில் விவரமாகக் கணக்கு தயார்செய்யும்படி ஜாக்கிரதை செய்வதென்று ஸர்கேல் அவர்கள் தெரிவிக்கிறார்.

*42.17 - 1856 Oct. 18உ*[186]

(44) ரெஸிடெண்ட்[187] சாஹேப் அவர்கள் எழுதிய விஷயங்களுக்குச் சீக்கிரம் கணக்கு தயார்செய்து அனுப்புகிறது.

உள்ளே வைத்த கடிதம் (*enclosure*) கமிஷனர்[188] சாஹேப் சர்கில் வேலைபார்ப்பவர்க்கு எழுதிய கடிதத்தின் நகல்.

(1) நான் எந்த வேலைக்காக வந்திருக்கிறேனோ அந்த வேலையை முடிப்பதற்கு வேண்டிய சில கணக்குகள் தங்களிடமிருந்து வரவேண்டியதாக *Sep* 29க்கு ரெஸிடெண்ட் சாயேப்புக்குப் பிரார்த்தித்தேன். அவர் என்னிச்சையைத் தங்களுக்குத் தெரிவிப்பதுடன் சீக்கிரம் ஜாக்கிரதை செய்ய வேணுமென்றும் தங்களுக்குத் தெரிவித்திருக்கிறார்.

---

182. பெரஷியான் - Persian - பாரசீகமொழி

183. 1885 என்று மோடிப் பலகணி பகுதி IIஇல் உள்ளது.

184. இந்தப்பகுதியிலுள்ளவை மோடிப்பலகணி பகுதி IIஇல் உள்ளது.

185. இச்செய்தி மோடிப் பலகணி பகுதி IIஇல் இங்ஙனமே உள்ளது.

186. இச்செய்தியும் மோடிப்பலகணி பகுதி IIஇல் உள்ளது.

187. ரெஸிடெண்டு என்றது (Forbes) போர்பஸ் என்பவரை.

188. கமிஷனர் - கமிஷனர் என்ற பதவியையும் ரெஸிடென்ட் வகித்தார்.

(2) 3 வாரமாயியும் அவைகளில் ஒரு ஜாபிதா கூட எனக்கு வந்து சேரவில்லை. அதுவுமல்லாமல் வேலை ஆரம்பித்த தகவல் கூட தெரியவில்லை.

(3) என்னுடைய இந்த வேலையைப் பூர்த்தி செய்வதற்கு எனக்குக் கவர்மெண்டின் கண்டிப்பு உத்திரவு இன்னும் அதில் தாமதம் ஒன்றும் கூடாது. எனக்கு வேண்டிய கணக்குகளைத் தங்களிடமிருந்து வருமென்று எதிர்பார்ப்பது வீணாகையால் நானே கணக்கு தயார் செய்ய வேண்டிய ஜாக்கிரதை செய்ய வேண்டியிருக்கிறது.

(4) தஞ்சாவூர் இராஜ்ய விஷயத்திற்குக் கவர்ன்மெண்டார் செய்த நிர்ணயம் இன்னும் இராஜ்யத்தை ஒப்புக்கொண்டு இராஜாசாயேப்பின் குடும்பமும், உறவினர்களுக்கு ஜீவனஞ் செய்து கொடுக்கிற வேலையைச் செய்யும்படி சொன்ன விவஸ்தை நடப்பு மீ 15உக்குத் தங்களுக்கு ஸாமான்யமாக ஸர்காருக்கும் சாஹேப் அவர்களுக்கும் நான் தெரிவித்தேன். அப்பொழுது தகுந்த ஸமயத்தில் ஆஸ்தி காப்பாற்றப்படும். இன்னும் ஸமஸ்தானத்தின் ஆஸ்தி(சொத்து)எல்லாம் கவர்ண்மெண்டுக்குச் சேரும் என்று தங்களுக்குச் சொன்னோம். அந்தச் சொத்துக்களைப் பந்தோபஸ்தாக ரக்ஷிப்பதற்கு எனக்குக் கவர்ண்மெண்டார் உத்திரவிட்டிருக்கிறார்கள்.

(5) அவ்விதம் செய்வதற்கும் ஷை ஆஸ்தி (சொத்து) பூமி ரூபமோ, நகையோ அல்லது வேறுதினுசாகவோ இருக்கலாம். அதன் விவரத்தைத் தெரிந்துகொள்வதற்கு நான் இராஜா சாஹேப்பின் நாடு நகரம் தோட்டம் சத்திரம் இன்னும் கோவில்களுக்கு விடப்பட்ட மான்யம், இன்னும் தஞ்சாவூர் ஜில்லாவிலிருக்கிற இரகஸ்யமான சொத்துக்களும்[189] இராஜ்யத்திற்குச் சொந்தமான தஸ்தாவேஜுகளையும் கவர்ண்மெண்டாருடைய பேரால் ஸ்வாதீனம் செய்துகொள்கிற எனக்கு உத்தேசமிருக்கிறது. ஆனாலும் அப்படி செய்தாலும், அந்தச் சொத்துக்களில் பாகங்களில் தர்மச்சத்திரம் வகையறாக்களுக்கோ அல்லது பிறருக்கு ஏதாவது(பாத்தியம்)விவகாரமிருந்தால் ரொம்ப ஜாக்கிரதையுடன் விசாரணை செய்து, பாத்தியதை ருஜுவானால் அந்தச் சொத்தைச் சொந்தக்காரர்களிடம் கொடுக்கப்படும் என்று தங்களுக்கு நிச்சயமாகச் சொல்லுகிறேன். இன்னும் அந்த விஷயம் பிறருக்கும் நன்றாகச் சொல்ல வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

(6) கலெக்டரவர்கள் தற்காலம் நாடு, நகரங்கள், தோட்டம் எல்லாவற்றையும் வசப்படுத்திக்கொண்டு, அந்தந்த நாடு நகரங்களின் உத்யோகஸ்தர்கள் தங்கள் கணக்கைத் தங்கள் கணக்குப் பிள்ளைகளிடம் கொண்டு வந்து ஆஜர் செய்கிறதென்று சொல்லும்படியாகவும், மிராசுதார்கள் கிஸ்தித்துகைகளைக் கவர்ண்மெண்ட் சிப்பந்திகளிடத்தில் செலுத்துகிறதென்று தெரிவிக்கும்படியும் நான் அவரைப் பிரார்த்திக்கிறேன். தாங்களும் அதே பிரகாரம் உத்திரவு அனுப்பும்படி பிரார்த்திக்கிறேன்.

(7) கோட்டையிலுள்ள எல்லோருக்கும் சொந்தமுள்ள சொத்தை நாளை விடியற்காலையில் வந்து சுவாதீனஞ் செய்துகொண்டு, அதில் சிலவற்றை ஆங்கிலேயருக்கு சுவாதீனஞ் செய்துகொடுக்க யோசனை செய்கிறேன். நீங்கள் கஜானா[190] ஸங்கிராமபாண்டார்[191]

189. இரகசியமான சொத்துக்கள், (?) -Private property - முகாசா கிராமங்கள்

190. கஜானா - போத்தே மஹால் (பக்கம் 453)

191. ஸங்கிராம பாண்டார் - ஆயுதசாலை - ஜிராத்கானா (பக்.452)

ஜாமதார்கானா(துணிமணிகள் இருக்குமிடம்) லைப்ரரி[192], தாரூகானா(வெடிமருந்துள்ள இடம்), வெள்ளி, ஹௌதாக்கள், காதிகள்(ஆஸனங்கள்), பல்லக்குகள், பதக்கம்[193] ரிகார்டுகளேயும் மத்யஸ்தருடன் விடியற்காலையில் 5—30 மணிக்கு கோட்டையின் கீழ்வாயிலில் வந்து என்னுடைய பேட்டி வாங்க வேணுமென்று பிரார்த்திக்கிறேன்.

(8) ஒவ்வொரு சிப்பந்தியும் தன் தன்வசமுள்ளதை எல்லாவற்றையும் வேண்டும்பொழுது மரியாதையுடன் கொடுத்துவிடவேண்டும். அவர்களுக்கு நீங்கள் உத்திரவு செய்ய வேண்டும். அவர்களில் யாராவது வராமலிருந்தானென்று தெரியவந்தால் அவருக்குக் கவர்ன்மெண்டாருடைய கோபம் நேரிடும்.

(9) தங்களுக்கு இம்மாதிரியான புகார் சொல்ல வேண்டியதவசியமில்லை, என்று உறுதியாக யிருக்கிறேன். இன்னும் கவர்ன்மெண்ட்டுக்கு விஸ்வாசமாக யிருப்பதைத் தவிர வேறு வழியில்லை. நீங்கள் இராஜா சாஹேப்[194] அவர்களுடைய சம்சாரங்களுக்கு[195] ஹிதம்[196] நீங்கள் செய்யமுடியாது என்பது தங்களுக்குத் தெரியுமென்று நான் அறிகிறேன்.

(10) பொதுச் சொத்துக்களைச் சுவாதீனஞ் செய்து கொள்ளுவதற்குச் செய்யும் நடவடிக்கையினால் இராஜா சாயேப் சம்சாரங்களுக்கு ஒரு வீண் பயம் அல்லது அஸமாதானம்[197] உண்டாகாதபடி தடுப்பதற்கு நீங்கள் ரொம்ப ஜாக்கிரதை செய்ய வேணுமாய்ப் பிரார்த்திக்கிறேன். அவரிடத்தில் ஒரு அவநம்பிக்கையினால் ஆங்கிலேய சிப்பாய்கள் வரவில்லையென்றும், அந்தச் சிப்பாய்கள் அரண்மனையிலுள்ளவர்களுக்கு ஏதாவது பாதகம் (கெடுதல்) செய்யாமலிருக்கும்படி உத்திரவு செய்யப்படுமென்றும், கவர்ன்மெண்டின் அதிகாரத்திற்குள் ஒவ்வொரு இடத்திலும் நடக்கிற வழக்கப்படி பெரிய மனிதர்களுடைய சொத்துக்களுக்குச் ஷெ சிப்பாய் ஒரு காவல் மாத்திரம் என்று நியமிக்கப்படுமென்றும், நீங்கள் நான் சொன்னதாக அவர்களுக்குத் தெரிவிக்க வேணுமென்று பிரார்த்திக்கிறேன்.

1856 அக்டோபர் 17உ *(Sd.) H.Pharbasa*

தஞ்சாவூர் ரெஸிடெண்ட் *Commissioner*

*42.1856 Oct. 18 உ*

(46) ஸர்காரின் தாஸ்தாவேஜிகளின் ஜாபிதா தயார் செய்வதற்கு ஒரு [illegible] அனுப்பியிருக்கிறது. அவருடன் ஒரு சர்கார் குமாஸ்தாவையும் நியமித்து, சகாயஞ் செய்ய வேண்டுமென்றும், ரிகார்டு ஆபிஸின் கதவுகளுக்குத் தினம் கச்சேரியில் வேலை பார்த்து

192. லைப்ரரி - சரஸ்வதி மகால்

193. பதக்கம் - பலவூர்களின் ஒன்றியம் (பக்.13)

194. ராஜாசாஹேப் என்றது இறந்துபோன இரண்டாம் சிவாஜியை.

195. சம்சாரங்கள் - காமாட்சியம்பாபாயி, ஒரே நாளில் திருமணம் செய்து கொண்ட பதினெழுவரில் இறந்து போன இருவர் தவிர்த்து எஞ்சிய பதினைவர், மங்கள விலாஸ் மாதரார் ஆகியோர்.

196. ஹிதம் - நன்மை

197. அசமாதானம் - மனக்கலக்கம்

வீட்டுக்குப்போகும்போது, தன்னுடைய டலாயித்துக்கு[198] விடுதலை கொடுக்க வேண்டுமென்றும் தஞ்சாவூர் கமிஷனர் எச்.பார்பஸ் - எஸ்கொயர் நமக்குக் கடிதம் எழுதியிருக்கிறார். அதனுடைய சரியான நகலைத் தாங்கள் பார்ப்பதற்கு இதனுடன் அனுப்பியிருக்கிறேன். *(Sd.)*சர்கேல்

உள்ளுள்ள கடிதம் *(enclosure)*

தஞ்சாவூர் கமிஷனர் எச்.பார்பஸ் எஸ்கொயர் ஸர்கேவலர்களுக்கு எழுதிய கடிதத்தின் நகல்.

தர்பாருடைய ரிகார்டுகளும், தர்பாருடைய பொதுச் சொத்துக்களும் தற்காலம் சுவாதீனஞ் செய்து கொள்ளுகிறதென்று என்னுடைய உத்தேசம் என்னுடைய நேற்றைய கடிதத்தில் தங்களுக்குத் தெரிவித்திருக்கிறேனே. தாஸ்தான் (நெல் களஞ்சியம்) ஜாமதார்கானா (துணிமணி இருக்குமிடம்) ஸங்கிராமபாண்டார்[199], வெள்ளி ஹௌதாக்களும் தேருமிருக்கிற இடங்களுக்கு இன்று காலையில் நான் முத்திரை போட்டேன். ஆனால் தஸ்தாவேஜு கச்சேரிக்கு முத்திரை போட்டாமல் விட்டிருக்கின்றேன் என்பது தங்களுக்குத் தெரியும்.
நாடு நகரங்களின் ஸ்திதியும்[200] அது இன்னாருடைய தென்று சொல்லுகிற விஷயத்திலுள்ள பாத்தியதையை நான் முழுமையும் தெரிந்து கொள்ளும் வரையில் பொது ரிகார்டு என்னுடைய வசத்திலிருப்பது அவசியமாயிருக்கிறது. ஆகையால், இக்கடிதத்தை அனுப்பியிருக்கிறேன். இந்தக் குமாஸ்தாவுடன் தங்களுடைய ஒரு குமாஸ்தாவையும் நியமித்து, ஷை தஸ்தாவேஜுகளின் ஜாபிதா ஒன்றைத்தயார் செய்ய சகாயம் செய்யும்படி அவருக்கு உத்திரவு கொடுக்க வேண்டுமென்று வேண்டுகிறேன். இக்கடிதம் கொண்டு வரும் டலாயிதன் (சிப்பாய்) தினந்தோறும் குமாஸ்தாக்கள் கச்சேரி முடித்துக்கொண்டு வீட்டுக்குப் போகும்பொழுது, ரிகார்டு கதவுகளுக்கு அவன் என்னுடைய முத்திரையைப் போட அவனுக்கு விடுதலை (இடம்) கொடுக்கவேணும். நடக்கிற வேலைக்கு வேண்டியதாயிருக்கும் கணக்கை என்னைக் கேட்டால் கொடுக்கப்படும்.

*(sd) H. Pharbas*

*Commissioner.*

***46-A.D. 1876 July 29***

*(1)* வல்லத்திலிருந்து சிரஸ்தேதார் அவர்கள் இன்று 5-30 மணிக்கு ஒரு கடிதம் ஸர்கேலிடம் கொண்டு வந்து கொடுத்தார். அதிலுள்ள சமாச்சாரம்

(1) கேள்வி:- ராஜாமாயீ என்பவர் சௌ.சி. விஜயமோஹன முக்தாபாய் அமணிராஜே[201] சாயேப் பிறந்த தேதி.

198. டலாயித்து - வெள்ளிவில்லை தரித்த சேவகன் (சிப்பாய்)

199. சங்கிராம பாண்டார் - ஆயுதசாலை (ஜிராத்கானா)

200. ஸ்திதி - நிலைமை

201. இவர் இரண்டாம் சிவாஜியின் இரண்டாவது மகள்

பதில்:- பராபவ ஹு ஆவணி மீ 27 உ கி.பி.1846 செப்டம்பர் 10உ பிறந்தார்.

(2) கேள்வி:- ஷெ ராஜாமாயிக்குக் கல்யாணமெப்பொழுதானது.

பதில்:-கி.பி.1860 பிப்ரவரி 10உ

கேள்வி:- 3) சிவாஜி ராஜா சாயேப் நிர்ணய[202]மானபோது இராஜாமாயிக்கு வயதென்ன.

பதில்:- 9 ஹு - 1 மீ 19 நாள்.9 ஹு மென்று உத்தேசம்.

5) கேள்வி:- மாப்பிள்ளை ரா.சகாராம் சாஹேப் பிறந்த தேதி.

பதில்:- பார்த்திவ ஹு ஆவணி 10 உ கி.பி.1825 Aug. 24 உ

6) கேள்வி:- மூத்த ராஜாயி[203]க்குக் கல்யாணமான தேதி.

பதில்:- கி.பி. 1837 பிப்ரவரி 22 உ

7) கேள்வி:- சகாராம் எந்த வம்சத்தார்.

பதில்:-மோஹிதேயின் வம்சம்.
மேற்கண்டபடி ஹெட்குமாஸ்தா சிவராவிடம் விவரம் சொன்னார். அவர் எழுதிக்கொண்டு ரா.ஸ்ரீ. ஸர்கிலிடம் கொடுத்தார். ஸர்கேல் பதில் எழுதி அனுப்பித்தார் என்று இரவு மணி 7.30க்கு பைஸல்.

28.1821
(73) வாதி - சுப்பிரமணி முதலி-பிரதிவாதி - கோபால் றாயர்.

பிரதிவாதிக்கு அனுப்பின சம்மன்.

33.1822 May 4
(13) நாகப்பட்டணத்திலிருந்து ஒரு கடிதமும், 34 3/8 பணமும் வெங்கடறாயர் தங்களுக்கு அனுப்பியிருக்கிறார். அறியவும்.

(sd)

Ramasamy.

33.1822 Aug 25
(31) பெரிய யஜமான்[204] அவர்களுக்குக் காரியஸ்தன். தாலுக்காவிலிருந்து வரப்பட்ட சாமான்கள் அனுப்ப வேண்டாமென்று தாசில்தாருக்கு உத்திரவு செய்ய.

202. நிர்ணயம் - நிரியாணம் - இறப்பு

203. மூத்த ராஜாயி-மூத்தராஜமாயி-சிவாஜியின் மூத்த மகள் (ராஜஸபாயி).

204. இரண்டாம் சரபோஜி

*18. 1847 Dec.7.*

*ஸ்ரீராம் ஸமர்த்த*

ரா.ஸ்ரீ. சரபோஜி மஹாராஜா சாஹேப் அவர்களுக்கு ஸேவகன் பாபாஜி பவார் ஸாஷ்டாங்க தண்டவத்.[205] ஏகராஜ மகாராஜா[206] முதற்கொண்டு துளஜா[207] மகாராஜா வரையிலும் நம்முடைய வழக்கம், மானம், மரியாதையுடன் நடந்து வந்தது. இப்பொழுது வழக்கத்துக்கும் மான மரியாதைக்கும் பழுதுவந்துவிட்டது. இங்கே நம்முடைய காலக்ஷேபமும் செய்ய முடியவில்லை. ராஜஸ்ரீ ஏகராஜ மகாராஜா முதல் துளஜா மகாராஜா இடத்தில் நீங்கள்தான் இருக்கிறீர்கள். நமக்குப்பூர்வ காலத்தில் ராஜஸ்ரீ சிவாஜி மகாராஜா[208] ஸாதாராவிலிருந்து திருமல்வாடிக்கு[209] வந்திருந்த போது பேட்டி ஆனது. பேட்டி ஆன பின்பு அவர்களுக்குள்

---

205. ஸாஷ்டாங்க தண்டவத் - சாஷ்டாங்கமாக வணங்குகிறேன்; இருகை, இருமுழங்கால், இருதோள், மார்பு நெற்றி ஆகிய உடலுறுப்புக்கள் எட்டும் நிலத்தில் படுமாறு வீழ்ந்து வணங்குவது சாஷ்டாங்க நமஸ்காரம் ஆகும்.

206. தஞ்சையை 1676இல் வென்று அரசாண்ட முதலாம் ஏகோஜி.

207. துளஜா என்றது இரண்டாவது துளஜாவை.

208. ஏகோஜியின் மாற்றாந்தாய் ஜிஜாபாயியின் மகனாகிய சத்ரபதி சிவாஜி.

209. திருமல்வாடி - திருமழபாடி; இதுபற்றிய கருத்துக்கள் பின்வருமாறு: (பக்கம் 37-38)

சிவாஜி தென்னாட்டுப்பகுதியைத் தனக்கு அடங்கியதாக ஆக்க விழைந்தமையோடு, தன் இளவலாகிய வெங்காஜியிடம் இருந்த தம் தந்தையின் ஜாகீர்கள், செல்வங்கள், யானை குதிரைகள், அணிகலன்கள் ஆகியவற்றுள் தனக்குப் பாதிப்பங்கு சேரவேண்டும் என்று விரும்பினார்; தந்தை இறந்த பின்னர் 13 ஆண்டுகள் வரையில் பொறுத்திருந்தார்; கி.பி.1677இல் தென்னாட்டின் மேல் படையெடுத்த பொழுது ஆரணியை முற்றுகையிட்டுத் திருவதியில் தங்கினார்; அங்கிருந்து வெங்காஜிக்குத் கடிதம் எழுதினார். அதில் தம் தந்தை இறந்தது முதற்கொண்டு தம் தந்தைக்குரியதாயிருந்த எல்லா நாடுகளும் 13 ஆண்டுகளாக வெங்காஜியிடமே இருந்தனவென்றும், அவற்றுள் பாதிப்பங்குக்குத் தனக்குரிமையுண்டு, என்றும், கோவிந்தபட் காசாஜிபந்த், நிலோநாயிக், ரகுநாத நாயிக், தோமாஜி ஆகியவர்களைத் தன்னிடம் அனுப்பி வழக்கினைத் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்றும் எழுதினார். வெங்காஜி நன்கு சிந்தித்து சிவாஜியைக் காண்பதற்குத் திருவதிக்குச் சென்றார். சிவாஜி அரசநிலைக்கேற்ப வெங்காஜியை வரவேற்றார். பலநாட்கள் விவாதங்கள் நடந்தன; விருந்துகளும் நடைபெற்றன. சிவாஜியின் கருத்துக்கு வெங்காஜி சிறிதும் விட்டுக் கொடுக்கவில்லை. சிவாஜி வெங்காஜியை அனுப்பிவிட்டார்.

(Kincaid, C.A. and Parasnis, D.B., A History of the Maratha People, 1968, Pages 256-257); Grant Duff, History of the Marathas, 1873, Page 125)

திருவதி என்பது திருவதிகையாகும். இது தென் ஆர்க்காடு மாவட்டத்தில் பண்ணுருட்டி புகைவண்டி நிலையத்துக்கு அருகில் உள்ளது.

இத்திருவதியில் சிவாஜியைப் பார்த்ததாகக் கூறாமல் கொள்ளிடக்கரையில் உள்ள திருமழபாடியில் பார்த்தார் என்றும், சிவாஜி முக்கால் பங்கு ஜாகீர்களைத் தனக்கு அளிக்குமாறு கேட்டாரென்றும், வெங்காஜி மறுத்தமையோடு சிவாஜியின் சினத்துக்கு அஞ்சி ஐந்து குதிரை வீரரோடு ஒரு கட்டுமரத்தின் உதவியால் கொள்ளிடத்தைக் கடந்தார் என்றும் கூறப்படுகிறது (Srinivasan C.K.Maratha Rule in the Carnatic, 1944, Pages 160-161).

ஆனால் இங்குக் கண்ட மோடி தமிழாக்கக் குறிப்பில், திருமழபாடியில் சிவாஜியைக் காண ஏகோஜி (வெங்காஜி) சென்றார் என்றும், இருவருக்கும் வேறுபாடு முற்றியதென்றும், ஏகோஜி கொள்ளிடத்தைக் கடக்கும்பொழுது பாபாஜி பவார் என்பர் ஏகோஜியைத் தன் முதுகில் தூக்கிக் கொண்டு கரையேற்றினார் என்றும் அறியலாம் (Sivaji encamped at Tirumalwadi on the Coleroon about 10 miles north of Tanjore' - (Sardesai S., New History of the Marathas Vol.II. 1946, Page 237).

பிருதம்[210] தகராறு ஏற்பட்டது. அப்பொழுது அவருக்கு தப்புவதற்கு முடியவில்லை. அப்பொழுது பாபாஜி பவார் என்பவர் தன்னுடைய தேகத்தில் சக்தியில்லாமலிருந்தாலும் ரா.ஸ்ரீ.மகாராஜாவை[211] தன் முதுகில் தூக்கிக்கொண்டு இரவில் 12 மணிக்கு கொல்லடம்[212] நதியைக்கடந்து ஸமஸ்தானத்திற்கு வந்து சேர்ந்தார். இப்பொழுது ராஜஸ்ரீ மகாராஜா[213] அவர்கள் செய்யும் ஆக்ஞைப்படி[214] நடக்கிறேன். வேண்டுகிறேன். ஸேவனுக்குத்[215] தாமதமன்னியில் காப்பாற்ற வேண்டும்.

*18·1850 June 24*

(10) ஸ்ரீமந்த் சத்ரபதி சாயேப்[216] அவர்களுக்குச் சாமீயா பிள்ளை. தஞ்சாவூர் கிடங்கில் காய்ச்சும் சாராயம் யானை, குதிரை வகையறாவுக்கு ஸர்காரில் சிலவு ஆனது போக, வித்து மொதலான துகையை மேஸ்தர் ராமனுடைய மாடியில்[217] வைத்திருக்கும் தர்ம பள்ளிக்கூடத்திற்குக் கொடுப்பது வழக்கம். பாரீஸ் சாஹேப் காலத்தில் கும்பனியில் எடுத்துக்கொண்டு, மேற்சொன்ன குத்தகைத் துகையை ஜாஸ்தி பாக்கி வைத்துக்கொண்டார்.

அதுவும் நிற்க, விலியம் சாஹேப்[218] நாளில் அமானத்ஷெசாராயம் கடங்கினுடைய மணியம் ஏற்படுத்தி ஸர்காருடைய துகையை ரொம்ப வைத்துக்கொண்டு தேசாந்தரத்திற்கு ஓடிப்போய் விட்டார்.

6500 க்கு இருக்கிற குத்தகையை 10,000 சக்கரத்திற்கு ஒப்புக்கொண்டு பிராது செய்த விஷயம்.

18 (32) ரா.ஸ்ரீ. தத்தாஜி அப்பா சாயேப் அவர்களுக்கு ஸேவகன் பாபண்ணா அநேக ஆசீர்வாதம்.

---

210. பிருதம் - மன வேறுபாடு

211. மகாராஜா என்றது ஏகோஜியை

212. கொல்லடம் - கொள்ளிடம்

213. மகாராஜா என்றது இரண்டாம் சரபோஜியை

214. ஆக்ஞை - ஆணை

215. ஸேவகனுக்கு - சேவைகனை என்றது இக்கடிதம் எழுதிக்கொண்ட பாபாஜி பவாரை.

216. சத்ரபதி சாயேப் என்றது இரண்டாம் சிவாஜியை

217. இது வடக்குத் தெருவில் இருந்தது என மூட்டை எண் 2C-47 (தமிழ்ப் பல்கலைக் கழகப்பகுதி III)இலிருந்து அறியப்பெறும்.

218. விலியம் என்றது யாரை என்று தெரியவில்லை.

இங்கு ஸமஸ்தானத்தின் விஷயம். மார்க்கரிஷம்[219] வத்யம்[220] பஞ்சமி[221] வரையில் ரா.ஸ்ரீ.சிவராயர் மாஜி சர்கேல் பாபாவுக்கு தன்னுடைய கார்பாரி[222] என்று உத்திரவிட்டு மாதத்திற்கு 200 வராகன் சம்பளம் போட்டு அவருடைய பிள்ளைக்கு ரிகார்டு ஆபிஸில்[223] நியமித்து 1 மாத மாயிற்று. மகாராஜாவானவர் அவருக்குக் கொடுக்கக்கூடாதென்றார். அதற்கு அவருடைய சகோதரரிருவர் ஸமஸ்தானம் முழுமையும் கெடுத்து கடன்காரர்கள் தொல்லை. ரயத்துக்குக்கூட பயமில்லாமல் ஆங்கிலேயருக்கும் பணம் சரியாக சேருவதில்லை.

இதைத்தவிர தான் தன்னுடைய காபாரைக் கொடுத்து இராஜ்யம் முழுவதையும் கொள்ளையடித்திருந்ததும் ஜீரணமாகும். ஆங்கிலேயருக்கும் அவர் செய்ததினால் இராஜ்யம் நன்றாகும் என்று அவருக்கு ஷூன் செய்தார்கள். அவர் ரொம்ப தகராறு செய்ததினால் நாம் எந்தெந்த வழியாக ஸர்காருக்கு வரும்படி வருமோ அதற்கு நீங்கள் குறுக்கிடக் கூடாது, என்று தகராறு நட்ந்து பிறகு அவர் ரா.ஸ்ரீ.பாதரி சாயேப்பை[224] வரவழைத்து அதிகாரம் ஒப்புக்கொண்டார். அதிகாரம் செய்யும்பொழுது அவர் விசாரணை செய்ததில் தாங்களும் சொன்னபடி கேட்டு நடந்தார்.

பிறகு அவருடைய 4 சகோதரர்களும் சேர்ந்து வீட்டில் கலகம் செய்து, நாமெல்லோரும் விஷத்தைச் சாப்பிடுகிறோம். அதை விசாரித்ததில் ஒருமாத முதற்கொண்டு வெளியே வரும். இதற்காக துகை வேண்டியதில்லை. பங்குகள் போட வேண்டுமென்று அவர்மேல் பாரம் *(responsibility)* விழுந்து 9 வருஷமாயின. வரும்படி என்று வரவு இல்லை. இதற்காக அதை நிறுத்தும்படி சொன்னுர். அவர் சர்காருக்குச் சேர வேண்டிய 30 லக்ஷம் சக்கரம் வரையில் போய்விட்டது. அதிகாரம் இன்னுருக்குக் கொடுத்ததால் அவரும் கெடுத்து விட்டாரென்று நமக்கும் வார்த்தை வரும். தங்கள் சகோதர பந்துக்கள் கொடுக்கவேண்டியதை மகாராஜாவிடம் தள்ளிக்கொடுக்க மன்னிப்புக்கேட்டு உத்திரவு வந்தால் முன்னால் சௌகரிய முண்டாகும். பின்பு சர்காருக்குத் துகை சேரும்படியாகச் செய்ததினால் தங்களுக்குத் தற்போது சௌகரியமென்று அநேக விதமாய்ச் சொன்னார். ஆனாலும் அவருடைய தம்பிகளின் உபத்திரவத்தினால் ஒன்றுஞ் செய்ய முடியாமல் பதகநிசியா[225] என்னும் அதிகாரத்தைச் சின்னா முதலியாருக்கு நிச்சயமாகக் குடுத்து, அவர்களால் ஒன்றுஞ் செய்ய முடியாமல் செய்து வந்தார்.

---

219. மார்க்கசீரிஷம் - மார்கழி மாதம்

220. வத்யம் - தேய்பிறைப் பகுதி

221. பஞ்சமி - ஐந்தாவது நாள்

222. கார்பாரி - அரசரது மெய்காப்பாளர்களின் தலைவன் (பக்கம் 75)

223. ரிகார்டு ஆபிஸ் - தப்தர்கானா (பக்கம் 453)

224. பாதரி சாயேப் - ஸ்வார்ஷ் பாதிரி

225. பதகநிசியா - பதக்நீஸ் - ஒரு 'பதக்' க்கின் தலைவன் - பதக்தார் ஆகலாம்; பதக் என்பது சிலவூர்களின் ஒன்றியம் என்னலாம் (பக்.74)

அவரும் நம்மை அதிக நாள்கள் வீட்டிவிருந்தீர்கள். நம்முடைய என்ன பயம். இராஜாங்கத்தின் விசாரணை செய்யும்போது, ஸர்காருடன் சேர்ந்த பாபா வருவது என்று பேசுவது. அதற்கு அவர் குறுக்கிடுவார். ஸர்கார் ரிகார்டிஉள்ள ஒருவர் போய்விட்டார். போய்விட்டாரென்று எழுதி பிரசுரம் செய்வது. இந்தப்படி கார்பார் செய்துவந்தார். வந்தத் துகையைக் கஜானவில் வரவு வைக்கிறது என்று வழக்கம் செய்தார். சிலகாலம் அப்படியே நடந்தது. அதினால் இராஜாவுக்கு ரொம்ப சந்தோஷம் உண்டாயிற்று. இராஜாவுக்குச் சொந்த சிலவுக்கு ஒருநாளைக்கு 100 சக்கரமும், ஹூஜூர் மஹாவில் ஒரு நாளைக்கு 500 சக்கரம் வீதம் கொடுப்பதென்று வழக்கஞ் செய்து கடன் 7 லக்ஷம் விராகன் வரையிலிருக்கிறது. அவர் கொடுக்கல் வாங்கல் கணக்குப் பார்த்துக் கடன் கொடுக்கிறேனென்று கணக்கு பாபத்தில் வரவு சிலவுகளின் கணக்கே கிடையாது. இன்று வரையில் 7 வருஷமாயிற்று. கணக்கு எழுதுகின்ற ரா.ஸ்ரீ.பாபண்ணாவோ பரலோகமடைந்தார். கடன் எவ்வளவென்று நிர்ணஞ் செய்வது. விசாரித்ததில் வரவுசிலவு கணக்கு ராயர் வீட்டில் தயாராகிறது. இங்குள்ள சமாசாரம் இம்மாதிரி இருக்கிறது.

சின்னா முதலி இராஜ்யம் முழுமையும் அடமானம் கொடுக்க வேணும் என்று, இவருடைய சகோதரர்கள் எல்லோரும் சச்சரவு செய்வதற்கு இரவு பகல் உபத்திரவஞ்செய்து ராயர் ஒப்புக்கொண்டார். பிறகு சென்னப்பட்டணத்திலிருந்து கடன்காரர்கள் தொந்திரவு இங்குள்ள கடன் தொந்திரவு என்று சிவராயர் தோட்டத்தில் வசிப்பதாலும் உபத்திரவமாகுமென்று ஸ்ரீராமஸ்வாமி மஹாவில்[226] சென்று வசித்தார் இச்சமாசார மெல்லாம் மக்லோட்[227] துரைக்குத் தெரிந்து அவர் நேற்று திங்கட்கிழமை இரவு தர்பாருக்கு வந்து, பகவில் மக்லோட்டின் ரா. ஸ்ரீ. பாதரி[228] கர்னால்[229] வகையறா எல்லோரும் சேர்ந்து என்ன செய்தார்களோ தெரியவில்லை.

இந்த 4 சகோதரர்களையும் பிடித்து, சென்னைக்கு அனுப்பும்படியாகவும்[230], பாபா அவர்களையே எல்லா விஷயங்களையும் நடத்துவதென்றும், சென்னப்பட்டணத்திலிருந்து எழுதி வந்ததாம்.

பிறகு இரவில் மக்லோட்டுடன் ஒரு கும்பனி சோல்ஜரை ஆபிஸரையும் இரவு 8 மணிக்குக் கீழவாயிலில் ஹஜாரியில் வைத்து, தான் சீக்கிரமாக இராஜாவின் பேட்டி வாங்கி ரொம்பப்

226. இராமசுவாமி மகால் (?) (பக்கம் 458) மூட்டை எண் 177c-7-2

227. மக்லோட் - ரெஸிடெண்டு (பக்கம் 64-65)

228. பாதரி என்றது ஸ்வார்ஷ் பாதிரியை

229. கர்னால் என்றது பயர்டு என்பவரை; Colonel Sir David Baird (Major M.D. Basu, (I.M.S.) Rise of Christian Power in India, Vol.II Calcutta, P.405, Appendix to Chap.XX)

இந்தச் சேனாதிபதி அமர்சிங்கு இடம் மிகவும் அன்பும் பரிவும் உடையவராகவும் ரெஸிடெண்டு மக்லோட் செய்கைகளுக்கு எதிர்ப்பு உடையவராகவும் இருந்தார் என்று தெரிகிறது.

230. மேற்கண்ட பாசு எழுதிய நூலில் பின்வருமாறுள்ளது:-
"In consequence of intructions which I (Mackeod) have received from government, I beg level to request in their name, that you (Colonel Baird) give orders so that neither Shiva Rao, the Rajah's Sirkeel nor either of his brothers Trimaljee or Shankar Rao be permitted to pass out of the fort'

புத்திமதியைச் சொல்லி சிவராயருக்காக இராஜ்யத்தை இழக்கிறீர்கள். அடமானம் கொடுக்க வேண்டியதில்லை என்று கும்பனியர்நிச்சயித்திருப்பதால்இப்படிச் செய்வது யுக்கதமாவென்று கேட்டதற்கு"நாம் அடமானம் கொடுக்கவில்லை. ஸ்வதேசத்தை எல்லாம் வைக்கப்பட்டது. நம்முடைய ஸமஸ்தானத்தில் முன்னோர்கள் செய்ததுதான். ஆனுல் அடமானம்கொடுக்கவே இல்லை" என்று சாதித்தார். ராயரை ஒப்புவிக்க மாட்டோம். நீங்கள் என்ன செய்யமுடியும் என்றும், அடமானம் கொடுக்கவில்லை என்றும் எழுதினார். கொடுப்பீர்களா என்று கேட்டதற்கு அந்தப்படிக்கி எழுதினதையும் கொடுக்கிறேனென்றார். ஒரு நிச்சயம். ராயரை ஒப்புவிக்கிறதில்லை. அதனால் என்ன ஆனாலும் ஆகட்டுமென்று உறுதியாக நிச்சயம் செய்தார்கள்.

நாளைக்கு எல்லாம் பேசிக்கொள்ளலாமென்று மக்லோட் சோல்ஜரையும் அழைத்துக்கொண்டு வீட்டுக்குப்போனுர். அங்கேயும் சின்னா முதலியிடமிருந்தும் எழுதிவாங்கியிருக்கிறாராம். அடமானம் வாங்கவில்லை. அவருடைய பணம் எனக்கு வேண்டியதில்லை என்று எழுதி வாங்கினுராம்.அதற்குப் பாரா தாகல் செய்திருக்கிறாரென்றும் ஒரு வதந்தி (ஜனங்கள் பிரஸ்தாபம்) இருக்கிறது. அவர் தம்முடைய வீட்டுக்காரர்கள் வஜாராத்மாப் இவர்களுடைய வீட்டுக்காரர்கள் துருப்பு எல்லோருக்கும் உத்திரவு செய்து, அரண்மனையில் பங்கு-பங்குக்கும் தோட்டத்தின் வழிக்குக்கூட ரொம்ப ஜாக்கிரதையாக ...... உட்கார வைத்திருக்கிறார். ஸந்தப்பா முதலியவர்கள் எல்லோரும் தர்பாரிவிருக்கிறார்கள். தர்பார் எல்லாம் இன்றும் ஆகப்போகிறதென்று பயந்திருக்கிறார்கள்.

ராயருக்கு ஒரு விதமாக அபாயமும் வரக்கூடாது என்று இராஜா நிச்சயம் செய்திருக்கிறார். அறியவும். இப்போது இங்கு இராஜாவின் விசாரம் இப்படி ஆயிருக்கிறது. தம்மிடம் ஸமஸ்தானத்தை ஒப்புவித்தால் கும்பனியின் துகையைக் கும்பனிக்குச் சுலபமாகச் செலுத்துகிறோம்.

இராஜ்யத்தின் விசாரணை ஒழுங்காக நடத்துகிறோம் என்று ஒருவார்த்தையைச் சேர்த்து, பின்பு எந்த நேரத்தில் நீங்கள் நமக்கு ஆதீனம் கொடுப்பீர்களோ அந்தக்காலத்தில் கொடுக்கலாம். தற்காலம் இப்படிச் பேசி ஏதாவது நடந்திருந்தால் அதைச்செய்வோம். இங்குச் சமயம் ரொம்ப அனுகூலமாயிருக்கிறது. அவருக்கும் தங்கள் பேரில் பிரியமிருக்கிறதால் காரியம் கைகூடும்படி வரும்படியாக இருந்தால் முயற்சிசெய்தால் கைகூடுமென்று எண்ணி எழுதி இருக்கிறேன்.

நீங்கள் எல்லாம் அறிந்தவர். தங்களுக்குத் தெரியாததொன்றுமில்லை. நாங்கள் தங்களை நம்பி யிருக்கிறோம். ஆகையால் இவ்வளவு எழுதுவது அவசியம். நாங்களோ தங்களுடையவர்களென்று எல்லோருக்கும் தெரியும். நம்முடைய காலக்ஷேபம் ரொம்ப சிரமமாயிருக்கிறது. தினப்படி காரியம் நடப்பது ரொம்ப கஷ்டம். 3 ஷூ ஆயின ஈஸ்வரன் தங்கள் பேரில் தயவு செய்ய வேணும். இச்சமயத்திலும் நம்மைக் காப்பாற்றுவது விசேஷமல்ல. ஆனால் நம்முடைய நேரம் இப்படி யிருக்கிறது. ஸ்ரீதத்தாத்ரேயர்

231. ஸ்ரீதத்தாத்ரேயர் - அத்திரி மகரிஷிக்கு அநசூயையிடம் பிறந்து யோகத்திருந்தவர்; அத்திரி தவம் செய்கையில் விஷ்ணு தோன்றித் தம்மை அவருக்குத் தத்தம் செய்தமையால் இப்பெயர் பெற்றார் (அபிதான சிந்தாமணி)

ஸ்வாமிக்குத்[231] தயவு இன்னும் வரவில்லை. இதனால் பரதேசத்துக்குச்[232] செல்லும்படியாகுமோ வென்று தெரியவில்லை.
நாம் ரா.ஸ்ரீ. பாபாவின் பேட்டிக்குப் போயிருந்தோம். அவரும் தான் தங்களுடையவர்தான் என்று சொன்னார். இந்த நேரத்தைத் தாங்கள் உபேக்ஷித்தால்[233] நாம் குடும்பத்துடன் மேற்கே[234] போவதற்கு யோசித்திருக்கிறோம். தங்களை நாம் ரா.ஸ்ரீ. பாபாவினிடத்திலிருக்கிறீர்களென்று எண்ணியிருக்கிறோமாகையால் இங்கு நடப்பதையும் தாபத்திரயத்தையும்[235] எழுதியிருக்கிறோம்.

இங்கு வதந்தி கவர்னர் தங்களை அழைத்துக்கொண்டு வரப்போகிறார். மாதத்திற்கு 5000 வராகன் கொடுப்பதாகத் தீர்ந்திருக்கிறது. இவ்விடம் ஸ்தாபனஞ் செய்கிறோமென்று ஆபால விருத்தர்கள்[236] ஒரே மாதிரியாக பேசுகிறார்கள். நாம் செய்த பூஜாபலம் எப்படியிருக்கிறதோ தெரியவில்லை. தாங்கள் எங்களைக் காப்பாற்றுவீர்களென்று நம்பியிருக்கிறோம். அறிஞருக்கு என்ன எழுதுவது.

*37•1844 May 9*

(3) பொலிடிகல் டிபார்ட்மெண்ட்:

ஹிஸ் ஹைனஸ்[237] ஸ்ரீமந் ராஜே ஸ்ரீசிவாஜி மகாராஜ் அவர்களுக்கு. (1) மேஸ்தர் பிஷப் சாயேப்பு[238] இருக்கையில் சப் கலெக்டருடைய வேலை பார்க்கும் ஜே.ஜே காடன் எஸ்கொயர் அவர்கள் இப்பொழுது-பிஷப் சாயேப் அவர்கள் இதுவரையில் பார்த்துக்கொண்டு வருகிற வேலையைப் பார்ப்பாரென்று தங்களுக்குத் தெரிவிக்கின்றேன். இன்றும் இந்த 2 தர்பாருடைய நல்லதுக்குச் சேர்ந்த காரியத்தில் நீங்கள் அவர்களைப் பூர்ணமாக நம்புவீர்கன்று எண்ணுகிறேன்.
(2) தங்கள் ஸர்கேல் பாபாஜி ராமாஜி _பண்டிதர் தெய்வ லோக கதியை[239] அடைந்ததால் தங்களுக்கு நேர்ந்த நஷ்டத்தைப் பற்றி என்னுடைய வியஸனத்தை[240] இத்தருவாயைத் தெரிவிப்பதற்கு அங்கீகரிக்கிறேன். இவர் நீதிமானும், புத்திமானும்

---

232. பரதேசம் - வேற்றுநாடு

233. உபேக்ஷித்தால் - புறக்கணித்தால்

234. மேற்கே என்றது மகாராட்டிரம் ஆகலாம்

235. தாபத்திரயம் - அத்தியான்மிகம் (தன்னைப்பற்றி வருவன): ஆதி தெய்வகம் (தெய்வத்தான் வருவன்): ஆதிபௌதிகம் (ஐம்பூதங்களானும் தன்னையொழிந்த விலங்குகள் முதலியவற்றாலும் வருவன) என்ற மூவகைத்துன்பங்கள் (Tamil Lexicon, M.O.)

236. ஆபால்விருத்தர்கள் - குழந்தைகள் முதல் முதியவர் வரை

237. ஹிஸ்ஹைனஸ் - பிரதாபசிங்கர் காலத்திலே கும்பினியார் தஞ்சை அரசரை 'His + Majesty' என்ற பெருமைப்படுத்தினர் (Srinivasan C.K. P.293); பின்னர் சரபோஜி காலத்திலிருந்து His Highness என்ற அடைமொழி சரபோஜியின் விருப்பப்படி அளிக்கப் பெற்றது (Srinivasan C.K. P.330) ஹிஸ்ஹைனஸ் என்ற அடைமொழி இரண்டாம் சிவாஜி காலத்திலும் தொடர்ந்து வந்தது (பக்கம் 348-349)

238. பிஷப்சாயேப் என்றது கலெக்டர் போலும்.

239. தெய்வலோக கதி - இறந்தமை

240. வியஸனம் - துன்பம்

விஷ்வாஸமுள்ளவரான ஸர்கில் - அவர்கள் 2 வருஷமாக தங்களுடைய தர்பார் காரியங்கள் பந்தோபஸ்து ஆக வேண்டியதற்காகச் சக்தியுள்ள வரையில் உழைத்தார். அப்பேர்ப்பட்ட ஸர்கேல் காலமானதால் மாஜி ஸர்கேலவர்கள் அவ்வளவு சாமர்த்தியமாக ஆதரித்த விதத்திலிருந்து யெள்ளளவு கூட வித்யாசமுண்டாக்காமல் செய்ய வேண்டிய ஜரூரையும் தங்கள் தர்பாருடைய வேலைக்காக செய்யப்பட்ட விவஸ்த்தையைக் கண்டிதமாய் நடத்தப்பட வேண்டுமென்பதையும், இந்த நுட்பமான சமயத்தில் தங்களுக்கு நான் ஞாபகப்படுத்திக் கொடுக்கவேணும்.

தங்களுடைய தகப்பனார் எனக்குக் கொஞ்சம் நிலங்களை இனாம் கொடுத்தார். தன்னுடைய புத்திரனை நடத்த வேண்டுமென்று அந்திய காலத்தில் பிரார்த்தனை செய்தார். 50 வருஷ வரையில் விசுவாசமாக செய்த உத்யோகத்திற்கு ஒரு ஸத்காரம்[241] இப்படி அட்டி அன்னியில்[242] ஸபலம் (லாபகரம்)[243] ஆகுமென்று பூர்ணமாக நம்புகிறேன்.

போர்ட் செயிண்ட் ஜார்ஜ் - ட்விடேல்[224]என்று கையெழுத்து

*37.1887 July 2*

(12) திருப்பனந்தாள்[245] ஊரிலுள்ள சொக்கலிங்கம் தம்பிரான்[246] காசியிலிருக்கிற தன்னுடைய மடத்திலுள்ள தம்பிரான் தனக்குக் கீழ்படிந்து நடப்பது பழைய வழக்கம். ஸ்ரீகாசி யாத்திரைக்கு ஹுஜூருடைய[247] ஸவாரி சென்றபோது கூட இங்கிருந்து போயிருந்த செட்டப்ப தம்பிரானானார்[248] காசியிலுள்ள மடத்திற்கு இப்பொழுது இருக்கிற அய்ஹறப்ப ... தம்பிரானை நியமித்தார்.

நமக்கு முன்னிருந்தவர்களுக்கு எப்படி நடத்தி வந்தீர்களோ அப்படி நடத்த வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.

*37.1796 Dec. 25*

(13) மக்லோட் ரெஸிடெண்ட், தஞ்சாவூர் அவர்களுக்கு ராஜஸ்ரீ மகாராஜ் அமர ஸிங்க்ஜீ[249] ராஜாவின் சலாம்.

---

241. ஸத்காரம் - உதவி

242. அட்டி அன்னியில் - தடையின்றி

243. ஸபலம் ஆகும் - பலன் உண்டாகும்

244. ட்விடேல் - இவர் 24-9-1842 முதல் 23.2.1848 வரை கவர்னராக இருந்த "Marquis of Tweed date" என்பவர் ஆவர்.

245. திருப்பனந்தாள் - இவ்வூரிலுள்ள மடம் ஸ்ரீகாசிமடம் எனப்பெறும் (686-687)

246. கி.பி.1880 முதல் திருப்பனந்தாளில் ஸ்ரீகாசி மடத்து அதிபராயிருந்த சொக்கலிங்க சுவாமிகள் II ஆவர்.

247. ஹுஜூர் என்றது இரண்டாம் சரபோஜியை. இவர் 1820-22இல் காசியாத்திரை செய்தார்.

248. செட்டப்பத்தம்பிரான் என்றது 1798 முதல் 1836 வரை அதிபராயிருந்த ஸ்ரீலஸ்ரீகாசிவாசி சடையப்ப சுவாமிகள் II

249. அமரஸிங்க்ஜீ - 1788 முதல் 1798 வரை ஆட்சி செய்தவர்.

நேற்று நீங்கள் நம்முடைய பேட்டிக்கு வந்திருந்தபோது காரைக்காலில் 4 மாகாணத்தில் 7000 விராகன் பாக்கியிருக்கிறது. அதற்குக் கும்பனிக்கு ஜாமீன் குடுத்தால் காரைக்காலில் 4 மாகாணங்களையும் நம்முடைய ஸ்வாதீனஞ் செய்வதாக முதலில் நீங்கள் சொல்லியிருந்தீர்களே. அதற்காக நாம் கும்பனியின் பாக்கி 4 மாகாணங்களில் என்ன இருக்கிறதென்று விசாரித்ததில் ஷெ மாகாணங்களில் 2000 விராகன் கும்பனியில். பாக்கியிருப்பதாக நமக்குத் தெரிந்தால் அந்த விபரம் தங்களுக்கு நன்றாகத் தெரிய வேண்டியதற்காக வெவ்வேறு ஷெ 4 மாகாணம் பாபத்தில் தனிக்கணக்குகளின் ஜாபிதாவை அனுப்பியிருக்கிறோம். அதை நீங்கள் மனதுக்கு வாங்கி, கும்பனிக்கு 4 மாகாணம் பாபத்து பாக்கியிருப்பது தங்களுக்குத் தெரியவரும் விசேஷமொன்றுமில்லை.

ஸ்ரீராம் பிரதாப்[250]

(14) 1856 மே 14 வக்கு ரெஸிடெண்ட் பார்பஸ் சாயேப் தரங்கம்பாடியிலிருந்து புறப்பட்டு சென்னப்பட்டணத்திற்குச் சென்றார்.

(15) 1856 ஜூன் 26வக்கு ரெஸிடெண்ட் G.W.சேரி சாயேர் தரங்கம்பாடியிலுருந்து ரெஸிடெண்ட் ஆபிஸிக்கு[251] வந்தார்.

Oct. 13வக்குச் சென்னப்பட்டணத்திலிருந்து பார்பஸ்சாயேப் வந்தார்.

Oct. 16வக்குப் பார்பஸ் சாயேப் அரண்மனைக்கு வந்து மாப்பிள்ளை[252] சாயேப் அவர்களுக்குப் பேட்டி கொடுத்தார்.

சேரி சாயேப் அரண்மனைக்கு வந்து ஸரஸ்வதி மஹாலுக்கு வந்தார்.
நவம்பர் 8வ கமிஷனர்[253] பார்பஸ் சாயேப் ரெஸிடெண்ட்[253] சேரி சாயேப் நார்டன்[254]சாஹேபுக்கு வக்காலத்து கொடுத்தார். பாயி சாயேப்[255] அவர்களுடைய பங்குக்குப்[256] போனார். ரெஸிடெண்ட் சாஹேப் ஸர்கேல் தேவாஜிராவ் இராமசந்திர வெங்காஜி ருஜூ பார்க்கிறது.

மா. பாயி சாஹேப் அவுசாஹேப்[257] இவர்களிடம் நார்டன் சாஹேப் வக்காலத்து வாங்கி

250. ஸ்ரீராம்பிரதாப் - அரசர் கையொப்பம் இடுவதாயின் ஸ்ரீராம் பிரதாப் என்று கையொப்பம் இடுவர் (பக்கம் 365)

251. பார்பஸ் சென்னைக்குச் சென்றிருந்தபொழுது கலெக்டராக இருந்த செரி, ரெஸிடெண்ட் வேலையும் பார்த்தார் என்று தெரிகிறது மூட்டை எண் 45C-49-6 (பக்கம் 68)

252. மாப்பிள்ளை என்றது சகாராம் அவர்களை

253. கமிஷனர் பதவியையும் ரெஸிடெண்ட் பதவியையும் தனித்தனி இருவர் வகித்தனர்.

254. காமாட்சியம்பா பாயி சாகேப் கும்பினியின் பேரில் வழக்குத் தொடுப்பதற்கு அமைத்த வக்கீல் நார்ட்டன் என்பவர் ஆவர்.

255. பாயிசாயேப் என்றது காமாட்சியம்பா பாயியை

256. பங்கு - Bunk தங்கும் இடம்

257. அவு சாஹேப் - அஹல்யாபாயி; இரண்டாம் சிவாஜியின் தாய்.

சுப்ரீம் கோர்ட்டில்[258] பிராது செய்தார். அதிலெழுதியிருந்த சமாசாரம் எல்லாமும் சரியானவை என்று பிரமாணம் பூர்வமாக துளசியையும், உப்பையும் கையில் கொடுத்துப் பிரமாணம் வாங்கிக்கொண்டு போனுர். சமீபத்தில் சாஸ்திரியிருந்தார்[259]. பார்பாஸ் சாயேப் அவர்களுக்குச் சென்னையிலிருந்து "படிகட்ட தபால்" (M.O.) வந்திருக்கிறது.

(17) 1851
சைதாப்பேட்டையில் விழுந்துபோன பாலங்கட்டும் விஷயம்.

37 (54) கர்னல் ஈஸ்டிண்டி[260]யானவர் ரா.ஸ்ரீ. நவாபுக்கு[261] வருஷத்துக்கு மேல்வாரம் பாபத்துக்காக துகை கொடுப்பதற்குச் சீமையிலிருந்து கும்பனியின் உத்திரவு வருகிறவரையிலும் சென்னப்பட்டணம் கும்பனியின் கஜானா அமானத (அலாதியாக) வைக்கிற விஷயத்தில் அநேக விதமாக பதில் சொன்னார். நியாயப்படி பார்க்கிறபோது நாம் நவாபுக்கு ஒன்றுங் கொடுக்க ஸ்ம்பந்தமில்லை. அதன் விபரத்தை முதலில் 2 தடவையில் தங்களுக்கு எழுதியிருக்கிறது.

தற்போது கர்னல் என்பவர் ரொம்ப விதமாகச் சொன்னதினுல் கர்னல் என்பவர் ஒரு பெரிய கௌரவம் பொருந்திய துரை. கௌன்சலிலும்[262] உள்ளவர். அவர் சொல்லுகின்ற வார்த்தைகளையும் அவசியம் கேட்கவேணுமென்று அறிந்து நாம் ஆங்கிலேயக் கும்பனியார் மனோபாவப்படி நடக்கத் தயாராகயிருக்கிறோம்.

ஆங்கிலேயர் கும்பனியின் நியாயத்திற்குத் தவறமாட்டார்களென்ற நம்பிக்கை எங்களுக்கு உறுதியாயிருப்பதால் ரா.ஸ்ரீ. நவாப்புடைய விவகாரமெல்லாம் நாம் சீமைக்குத் தெரியும்படியாக எழுதி தங்களிடம் கொடுத்திருக்கிறோம். அந்தப் பத்திரத்தை நீங்கள் சீமைக்கு அனுப்பி அங்கிருந்து கும்பனியிலிருந்து தீர்மானமாய் வந்தபடி நடத்தவேணும். அதுவரையிலும் கவர்னர் கௌன்ஸலின் மனதுக்கு சந்தோஷம் உண்டாவதற்காக நாங்கள் கௌர்னர் கௌன்ஸிலின் மனதுப்படி நடந்து கொள்ளுகிறோமென்று நேர்மைக்காக தாங்கள் நம்மிடத்தில் அபிமான பூர்வமாக நம்முடைய வேலைகல்லாம் அனுகூலஞ்செய்து, கொடுப்பீர்கன்கிற நம்பிக்கையினால் அமானத்து ஜாமீன் துகையைக் கொடுப்பதற்கு நாம் சம்மதப்பட்டோம்.

கும்பனியார் தயவுசெய்து நம்முடைய ஸமஸ்தானத்தை நமக்குத் திருப்பிக்கொடுத்தார்[263].

258. சுப்ரீம்கோர்டு - 1801இல் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் சட்டம் ஒன்றினால் சென்னையில் ஒரு சுப்ரீம் கோர்டு (உச்ச நீதி மன்றம் ஏற்படுத்தப்பட்டது. இது சென்னைமாகாணத்தில் வெள்ளையருக்கு அடங்கிய பகுதிகளிலும் சார்புடைய பகுதிகளிலும் உள்ள மக்கள் மேல் சட்ட ஆட்சிமுறையை உண்டாக்கியது (பக்கம் 179)

259. சாஸ்திரி யென்றது சாமி சாஸ்திரிகள் என்றவரை மூட்டை எண் 45C-49-7

260. இவரைப்பற்றி மூட்டை எண் 121C-13-6 கி.பி. 1785க்குரிய ஆவணத்தில் காணலாம். (பக்கம் 279)

261. நவாபு என்றது ஆர்க்காட்டு நவாபு, முகம்மது அலி அல்லது அவருடைய மகன் உம்தத் உல் உமராவை.

262. கௌன்சில் என்றது Governor in Council

263. இது துளஜா மீண்டும் 1776இல் அரசு எய்தியதைக் குறிக்கும்

பின்பு தேசங்களில் நாம் வசூல் செய்த துகையைக் கெடுவின்படி ஆங்கிலேய கும்பனியின் மூலம் அமானத்து டேவணிக்குச்(*deposit*) சம்மதப்பட்டோம்.

இராஜ்யத்தில் கும்பனியிலிருந்து சென்ற ஹும் மேல்வாரம் பாபத்துத் துகையை நாம் குளிமாத்து வசூல் செய்தோம். அதைத்திருப்பி நவாபுக்குக் கொடுப்பதென்று எழுதிவந்த பின்புஷ்டி அமானத்துத்[264] துகையை ரா.ஸ்ரீ. நவாப்புக்கு நாம் கொடுக்க வேண்டியதில்லை என்று எழுதி வந்தால் அமானத்து வைத்த துகையைக் கவர்னர் கௌன்ஸல் திருப்பி நமக்குக் கொடுக்க வேண்டும். இன்னும் சீமையிலிருந்து ரா.ஸ்ரீ. நவாப் நமக்கு ஏதாவது கொடுக்கும்படி எழுதிவந்தால் அதன்படி நவாப்பிடமிருந்து கவர்னர் கௌன்ஸலவர்கள் வாங்கிக் கொடுக்க வேணும்.

ஆதிமுதற் கொண்டு ஆங்கிலேயர்கள் ரொம்ப நியாயமுள்ளவர்கள். ஒவ்வொரு சங்கதியையும் நன்றாக விசாரித்து நியாயமாக நடப்பார்கள். வஞ்சனை செய்ய மாட்டார்கள். நமக்கும் நவாப்புக்குமுள்ள விவகாரத்தைத் தீர்ப்பார்கள் என்ற நம்பிக்கை உறுதியாயிருக்கிறது. எல்லா விஷயத்திலும் ஆங்கிலேய கும்பனியை நம்பியிருக்கிறோம். மானம், அவமானம் கும்பனிக்குத்தான். நாம் கும்பனியின் கீழ்படிந்து நடப்பவர்களாகையால் நம்முடைய ராஜதத்துவத்தையும்தேசத்தையும் உத்திரவு செய்து கொடுத்து நம்மைக் காப்பாற்ற வேண்டும். (விராகன் ஒரு லக்ஷம் அதற்கு வாயிதா பின் வருஷம் ஹேவிலம்பி[265] மாசிமீ த்திற்கு 50 அயிரம் விராகன், பங்குனி மீ திற்கு 50 ஆயிரம் வராகன், ஆக ஒரு லக்ஷம் வராகன் வாயிதா)

**1821**

(18) ராஜமகால்[266]-சாஹேபிடமிருந்து வந்த கல்லெழைத்த நாமம் திருப்பதிக்கு அனுப்புவதற்கு மராமத்து மகால்[267] ஹவால்தார்[268] நரஸோஜி சிந்தே இடம் கொடுத்தது. அதற்கு 149 வைரம் 50 மாணிக்கமும்.

**17. 1833**

(28) மஹால் இமாரதி (மராமத்து இலாகா) பழைய சிவகங்கையின் வடகரையில் ஒரு கிணறு இருக்கிறது. அங்கே தொட்டிகள் கட்ட மெய்யாடு கணக்கு.

**35. 1767**

(13) மஹால் கணக்குப்பிள்ளை. சுபா மன்னுர்குடியில் - மஹாராஜ ராஜஸ்ரீ. துளஜா ராஜே சாயேப்-யமுனாம்பாபுரம்[269] பிராமணாளுக்கு 60 வேலி நஞ்சை புஞ்செய் நிலத்தைத் தாரா பூர்வமாக[270] ஸர்வமான்யம்[271] கொடுத்திருக்கிறார்.

---

264. அமானத்து - பொது

265. ஹேவிலம்பி - 'பிரபவ' என்பதை முதலாகக் கொண்ட அறுபதாண்டுகளின் வரிசையில் ஒன்று. இது கி.பி.1778 ஆகலாம். (Indian Ephemeris, L.D. SwamiKannu Pillai)

266. ராஜ்மகால் - அரண்மனை

267. மராமத்துமஹால் - இமாரதி மஹால் (பக்.458)

268. ஹவால்தார் - இராணுவ அதிகாரி (பக்.75)

269. யமுனாம்பாபுரம் - இது நீடாமங்கலத்துக்குரிய பெயர்; யமுனாம்பாள் பிரதாபசிங்கரின் மூன்றாவது மனைவியாவர் (போ.வ.ச.பக்.116) (பக்கம் 265,271)

270. தாரா-பூர்வம்-நீர்வார்த்துக் கொடுத்தலாகிய முறையில்

271. சர்வமானியம் - எவ்விதத்தீர்வையும் செலுத்தாமல் அனுபவிக்குமாறு கொடுக்கப்படும் நிலக்கொடை.

## சரசுவதி மகால் பகுதி VII

## மூட்டை எண் -545 C

*1.1843*

*(7) சரபத் மஹால்[1] (குளிர்ந்த பானம் தயார் செய்யுமிடம்)*
*காஸா[2] விடையம்[3] 32 இலைகளின் 600, காஸா விடையம் 10 இலைகளின் 1000,*
*பாக்கு, கிராம்பு ஜாதிக்காய், ஜாதிபத்திரி, ஏலக்காய், சுக்கு, கொப்பரை, குங்குமப்பூ, பச்ச கற்பூரம், வெற்றிலை -19,200*

*(16) 1843*
*(17) ஸ்ரீபிரஹதீஸ்வர[4] ஸ்வாமிக்குக் கும்பாபிஷேகத்திற்காக[5] கல்லு சாமான்கள்*

*உரல் -5, அம்மி -5, குழவி -5, கடப்பாரை -5, கிளிஞ்சல் சுண்ணாம்பு - 10 கலம்.*

*2.1823*

*(28) ஹுஜூர் தட்டிமாகாலின்[6] பால் விநியோகம் கணக்கு*
*ஸரஸ்வதி மஹால், ஸ்ரீபிரஹதீஸ்வர ஸ்வாமிக்கு, தாயிம்மா தாயிக்கி[7] மூப்பாவுக்கு, ஹுஜூர் பக்ஷிக்கு[8], சின்னப்பா மஹாலுக்கு, அடசல் கிருஷ்ணாவின் கல்யாண மஹாலுக்கு, சீமை ஹுஜூர் கன்றுக்குட்டிக்கு*

---

1. சரபத்மஹால் - ஸர்பத்கானு (பக்கம் 452)

2. காஸா - மிகச்சிறந்த

3. விடையம் - பாக்குடன் கூடிய வெற்றிலை மடிப்பு

4. பிரஹதீஸ்வரர் - தஞ்சைப் பெரிய கோயிலில் எழுந்தருளியுள்ள பெருமான்

5. கும்பாபிஷேகம் - குடமுழுக்கு

6. தட்டி மகால் - மாடுகள் கட்டப்பெறும் இடம் (பக்.457)

7. தாயம்மாதாயி - பாயம்மாபாயி ஆகலாம். பாயம்மா பாயி இரண்டாம் சரபோஜியின் மனைவி அஹில்யாபாயிக்குப்பிறந்த மூன்றாவது மகள்.

8. ஹுஜூர் பக்ஷி - பாஜ் என்ற பறவையாகலாம் (போ.வ.ச.பக்.138)

*3-1823*
*(7)* மஹால் தட்டி

ஹுஜூருடையசீமை மாட்டின் காலுக்கு வாயுவு உபத்திரவத்திற்காக மருந்து சாமான்கள் - கீழ்க்கண்டவாறு :-

அத்திப்பட்டை, ஆலஇளம், வாதாமடக்கி இலை, கொடிவேலி சமூலம், தளதாளை, பெருமருதங்கொடி.

*(26) 1823*
நான்கு வீதிகளில் சாக்கடை வடக்கு ராசவீதியில் சாக்கடை கட்டுவதற்காக விண்ணாற்றங்கரை மணல் கொண்டு வருவதற்கு மாட்டுக்காரன், காமாடி[9], ஆசாமிகள் 5

*1861 Jan 23 (5)*
(19) மஹால் ஸரஸ்வதி பாண்டார் ஷெ மஹாலில் பெஸஜி[10] ஸங்கீத வித்யாதி பதகத்தில்[11] தேவதாஸி நீலாவின் வீட்டிலிருந்து கொண்டு வந்த அவளுடைய சொந்தமானவை இருப்பவை.

2. பித்தளை விளக்குகள் - ரா. மல்ஹாரஜி அப்பாவென்று பெயர் எழுதியது.
1. சத்தல், 1. மரப்பெட்டி மஹாலின் வெளியிலுள்ள மண்டபத்திலிருக்கிறது. ஆயுதங்கள் வைத்திருப்பதால், அந்த மண்டபத்திற்குக் கமிஷனர் பிலிப்ஸ் சாயேப் அவர்களின் முத்திரை போட்டிருக்கிறது.

*38-1676*
*(1-23)-(23)* மகாராஜ ராஜஸ்ரீ ஏகோஜி ராஜா[12] அவர்கள் - நடாத்தூர்ராஜ கோபால அய்யங்காருக்குக் கும்பகோணம் இனாம் ஸர்மான்யம் வேலி - 1 மௌஜே பீமானூர் - கரூப்பூர் பதக்.

*48-1772*
(18) நவாப்[13] மஹம்மத அலிகானுக்கு வருஷத்திற்கு பேஸஜி[14] கொடுப்பது ரூ.4 லக்ஷம்[15]

---

9. காமாடி - காமாட்டி - பணியாட்கள்

10. பேஸஜி - மேலே சொல்லப்பட்டவர்

11. ஸங்கீத வித்யாதிபதகம் - இசைவல்லவர்கள் இருந்த பகுதி(பக்கம் 229)

12. ஏகோஜி ராஜா என்றது 1676இல் தஞ்சையில் ஆட்சி ஏற்படுத்திய முதலாம் ஏகோஜியை.

13. நவாப் - ஆர்க்காடு நவாப்

14. பேஸஜி - என்றது இரண்டாம் துளஜாவை

15. கி.பி.1771 செப்டம்பர் மாதம் நவாபின் சேனையும் கம்பெனி துருப்புக்களும் தஞ்சை நோக்கிப் படையெடுத்தன. துளஜர் சமாளிக்க முடியாமல் உடன் படிக்கை செய்து கொண்டார். அதன்படி இரண்டு ஆண்டுகளின் பேஷ்கஷ் எட்டு லக்ஷம் என்று முடிவு செய்யப்பட்டது (பக்கம் 47 - 48)

வருஷத்திற்குத் தோபாவிற்காக[16] கொடுப்பது 30,000 ரூ ஆக 4,30,000 ரூபாய்க்கு மிஸ்தர் ஜீஜீ விடமிருந்து ரூ.100 க்கு 2-1/2 வீதம் கடன் வாங்கி கொடுப்பது. ஷெ துகைக்காக மன்னுர்குடி சுபாவிலுள்ள தேசத்தைஷெ சமாசாரத்திற்காக அடகு வைக்கிறது.[17]

49.1751
(77) ஹுஜுர்பிரதாபசிங்க மகாராஜா[18] சாயேப் இராமேஸ்வர சத்திரம் தண்ணீர் பந்தல் - ஸ்வாமிக்கு நந்தவனம் வகையறா தர்மம் செய்த விஷயம்.

(80) 1771
ரா. துளஜா மகாராஜா[19] சாயேப் தாராசுரத்திலிருந்து கும்பகோணத்திற்குப் போகும் வழியில் சத்திரம், தண்ணீர்ப்பந்தல்,போட்டு அக்கிராமம் ப்ரதிஷ்டை செய்து தர்மம் நடப்பதற்காக சுபா- கும்போகோணம் பதக்- தாராசுரம் ஸ்ரீ எல்லா ஊரையும் சௌ. ராஜஸாபாயி சாயேப்[20] அவர்களுக்குக் கொடுத்தார்.

(82) 1755
திருவாரூர் - கோயில் மாகாணம் - ராமகயா - தேவஸ்தானம் - விஷ்ணுதலம் - சிவஸ்தலம் - 2க்கும் வருஷத்திற்கு 100 சக்ரம். விசேஷ பூஜை நைவேத்தியத்திற்காக ஜாஸ்தி சக்கரம் 360 கொடுப்பது.

49.1739
ரா. பிரதாப சிம்ம மகாராஜா அனந்த நாராயண சாஸ்திரிக்குச் சந்திர கிரகண காலத்தில் பூமிதானம் கொடுத்தார்.

தாலு - திருவிசநல்லூர் - மேல,காவேரியில் நஞ்சை வேலி - 2., புஞ்சை வேலி - 1/2

(14) 1744
ரா.பிரதாப சிம்ம ராஜா - ஸ்ரீனிவாச வெங்கடாசாரிக்கு - வருஷத்திற்கு 252 சக்கரம்.

(15) 1748
ரா. பிரதாப சிம்ம ராஜா, இராமானுஜாசாரி - பந்தணை நெல்லூரில் ஸர்வமான்யம் 1-1/4 வேலி -3மா.

---

16. தோபா - கப்பம் (Topha-tribute)

17. The Rajah mortgaged villages to the Danes to find money to pay the tribute for the year 1772 (Rajayyan, K.A.History of British Diplomacy in Tanjore, Page 65)

18. பிரதாபசிங்கர் 1739 முதல் 1763வரை ஆட்சி செய்தவர்

19. மேற்கண்ட பிரதாபசிங்கரின் மகன் இரண்டாம் துளஜா

20. ராஜஸாபாயீ என்பவர் இரண்டாம் துளஜாவின் முதன் மனைவியாவர். அவர் பேரில் அமைந்த சத்திரம் தாராசுரம் சத்திரம் எனப்பெறும் (பக்கம் 273)

*(16) 1756*

*ரா. பிரதாபசிம்ம ராஜா-மா.லக்ஷ்மி பாயி[21] சாயேப் அவர்களுக்கு ஸர்வமான்யம் அக்கிரஹாரத்திற்கும் தர்மத்திற்கும் மாதரி மங்கலம் வகையறாவில் 13-3/4 வேலி 1/2 மா.*

*6.1813*

*(1-93 (1) பரவானகி[22]*

*மிஸ்தர் ஜான் பாதரிக்கு[23] மாஹல் ஸமுத்திரத் தோட்டம் வகையறா புதுப்பேட்டை தோட்டத்தைச் சேர்ந்த வண்டிக்காரத் தெருவிற்குப் போகி ரஸ்தாவுக்குக் கிழக்கு - பள்ளிக் கூடத்திற்குத் தெற்கு.*

*மிஸ்தர் டாக்டர் சுவற்றிற்கு வடக்கு மனைக்கொல்லைக்கு மேற்கு - மரம் முதலானவைகளுள்ள நிலம் குழி 1322 1/2 மிஸ்தருக்கு இனும் கொடுக்கிறது.*

*6.1802*

*(6) தஞ்சாவூர் கோட்டை தேவஸ்தானம்:-*

*உபலாவணி பண்டாரம் -ஸ்ரீ பிருஹதீஸ்வர ஸ்வாமியின் கோயிலிலுள்ள 108 லிங்கங்களுக்கு[24] ப்ரதிஷ்டை செய்ததற்கு நிரந்தரமாக பூஜை நைவேத்தியம் நடக்க வேண்டியதற்காக ஸர்காரிலிருந்து புலிவராகன் 5000 சென்னபட்டணத்தில் மிஸ்தர் ஹாரிங்க்டன்[25] இவர்களிடம் ஜாமீன் வைத்து, மிஸ்தரின் பேரில் 1802 மே மீ 29உவருஷத்திற்கு 10 வராகன் வீதம் வட்டியில் பத்திரம் எழுதி வாங்கினபடி வட்டி முதலியவை தேதி முதல் நவம்பர்மீ 29உவரையில் 6 மாதத்திற்கு 250 புலி வராகனுக்கு ஒரு வராகனுக்குத் திருவாரூர் புதுரூபாய் 3-8-0 வீதம் 875 மிஸ்தரிடமிருந்து சிலவு மஹால் போதே[26] பூஜை நைவேத்தியம் உத்திரவு செய்ய வேணும்.ஷெ வீதம் கொடுக்கிறது.*

*(7) 1813*

பரவானகி ஸமுத்திரத் தோட்டம் வகையறா அம்மா வட்டம் பாளாஜிராஜே தோட்டத்திலிருக்கும் ஹவால்தாரின்[27] வருஷப்பத்துக்கட்டின் தோட்டம் மஹால் நவவித்யா

21. லக்ஷ்மி பாயி என்பது துக்கோஜியின்மனைவியருள் மூன்றாவது மனைவி (போ.வ.ச.பக்:81) பிரதாபசிம்மர் தன் மாற்றாந்தாய்களுள் ஒருவருக்கு ஸர்வமானியம் - அக்கிரகாரத்துக்காக மாதரிமங்கலம் என்ற ஊரைக் கொடுத்தமை இங்குக் கூறப்பட்டது.

22. பரவானகி - அரசரது ஆணை; இதில் அரசரது கையொப்பம் இருக்காது (பக்கம் 365)

23. (பக்கம் 211, 266) இது இரண்டாம் சரபோஜி காலத்திய நன்கொடை.

24. 108 லிங்கங்கள் 1801இல் பிரதிஷ்டை செய்யப்பெற்றன (பக்.196-197)

25. ஹாரிங்க்டன் - இவர் அந்நாட்களில் சென்னையிலிருந்த வெள்ளைக்கார வியாபாரி (பக்கம் 196)

26. மஹால்போதே - அரசாங்கப் பொருள்நிலையம் (பக்.456)

27. ஹவால்தார் - இராணுவ அதிகாரி (பக்கம் 75)

*கலாநிதி சாலாவிற்குக்[28] கரிதி செய்து[29] கொடுத்ததிற்குச் சக்கரம் 160 கொடுத்திருக்கிறது.*

*6.1798*

*(59)மஹால் போதேயின் சிலவு ரா.திவான் சாயேப்[30] அவர்களுடைய கல்யாணத்திற்கு[31] சாமான் கரீதிக்காக.*

*12.1823*

1-58 (1) கஜானா கணக்குகள்

*(32) சோபகிருத்ஸுசந்த் ரஜப். 26உ[32] மஹால் மராமத்திலிருந்து பழைய சிவகங்கையிலிருந்து சிவகங்கைக்கு மதகின் வழியாகத் தாராளமாக தண்ணீர் வராமல் பழைய தண்ணீர் சிவகங்கையில் பொங்கி ஓடப்பு எடுக்கும்படியாயிருப்பதால்ஷெ மதகு வழியாகத் தாராளமாகத் தண்ணீர் வரும்படி வடிகட்டிவிடுகிறது. மாத்திரமல்லாமல் மதகு ஒருவேளை பழுதாயிருந்தாலும் அதைப் பழுது பார்க்கிறது.*

*மா. அவுசாயேப் தோட்டம் வகையறாவுக்குச் - சிறிய பழைய சிவகங்கைக்குச் சமீபத்தில் இருக்கும் சிவபூஜை மஹாலுக்குச்[33] சமீபத்தில் மழையினால் ஜலம் தேங்கி அரந்தோடி[34] ஆயிருக்கிறது. அந்த அரந்தோடிக்கு மண்ணைத் தோண்டி போட்டு மூடிக் கொடுக்கிறது.*

*22.1780*

*(2) பரவானகி; துளஜா மகாராஜா சாயேப் - முகாம் - தஞ்சாவூர் கோட்டை கும்பனிக்கு வருஷத்திற்குக் கறானபடி 4 லக்ஷம் வராகனில்[35] சம்பாவ பசானம்[36] நெல்லு கொடுக்கிறது.*

*கலம் 2,00,000 சுபா கும்பகோணம், கலம் 2,00,000 சுபா மன்னூர்குடி, ஆக 4 லக்ஷம் கலம் நெல்லை மிஸ்தரிடமுள்ள மனுஷ்யாள் மூலம் வரவு வைத்து ரசீது வாங்குகிறது.ஷெ நெல்லுக்கு என்ன வாடகை ஆகுமோ அதை இந்த நெல்லிலிருந்து கொடுத்து சிலவு எழுதுகிறது. அதற்குச் சுபாவில் அகப்படுகிற மாடுகளை ஜாக்கிரதை செய்து கொடுக்கிறது.*

---

28. நவவித்யா கலாநிதி சாலா - தஞ்சைக்கோட்டையில் இருந்த கல்விநிலையம் (பக்.240)

29. கரிதிசெய்து - விலைக்கு வாங்கி

30. திவான் சாகேப் என்றது இரண்டாம் சரபோஜியை.

31. கல்யாணம் என்றது யமுனுபாயி சாஹேபையும் அஹல்யாபாயி சாஹேபையும் செய்து கொண்டதைக் குறிக்கும் (போ.வ.ச.பக்.134)

32. சோபகிருது வருஷம் சந்த் ரஜப் 26 என்றது. 1823 ஆகும்.

33. சிவபூஜைமகால்-மோடிப் பலகணி பகுதி II (பக்கம் 459)

34. அரந்தோடி - அறுத்தோடி - அரித்தோடும் நீரோட்டம்

35. இரண்டாம் துளஜா இரண்டாவது தடவை கும்பினியாருடைய தயவால் ஆட்சியெய்திய பிறகு ஒரொப்பந்தம் செய்து கொண்டார். அவ்வொப்பந்தத்தின்படி தஞ்சைக் கோட்டையில் ஆங்கிலப்படை இருக்கலாம்; அப்படையின் செலவுக்காக நான்கு லக்ஷம் வராகன் கொடுக்க வேண்டும் (பக்கம் 49)

36. பசானம் - சித்திரையில் அறுவடையாகும் நெல்.

*3. 1780*

கலாபுக்காக[37] கொண்டு வரும் சாமான்களுக்கெல்லாம் வரி வாங்குவதில்லை என்று உத்திரவாயிருக்கிறது.

*23. 1780*

(1-36) (2) பரவானகி - துளஜாராஜா சாகேப்—மிஸ்தர் தேவிஸ்துரை நாகூரிலிருந்து தஞ்சாவூருக்கு வருகிறார். அவருக்கு ஒவ்வொரு மொகாமிலும் (தங்குமிடத்திலும்) கீழ்க்கண்டபடி கொடுக்கிறது.

அஸல் உலுப்பைகள் - 100, வெண்ணை வீசை - 4, பால்-1/4 மனு, கோழிகள்-10, ஆடுகள், பழவர்க்கங்கள், . கேட்கிற சாமான்களைக்கொடுக்கிறது.

முகாம்:- திருவாரூர், நீடாமங்கலம், நடுவாசல் அம்மாப்பேட்டை, ஆதிராம்பட்டணம், பட்டுக்கோட்டை, நாடி முகாமில் அவரைத் தட்டுகளுடன் எதிர்கொண்டழைத்து பேட்டி வாங்கி உபசார பூர்வகம்[38] மரியாதை செய்கிறது.

*23.1780*

(3) பார்ஸ் துரைக்கு வருகிற நெல்கலம் 6000 சுங்கத்தில் வரவு வைத்து விட்டு விடுகிறது.

*(6) 1780*

ராஜகோபால சுவாமி[39] வகையறா 3 சுவாமிக்கு வரும் சாமான்களைச் சுங்கத்தில் வரவு வைத்துக் கொண்டு விட்டு விடுகிறது.

*(8) 1780*

மன்னார்குடியிலிருந்து அபரூபமான சாமான்களின் ஜாபிதா.

*23.1780*

(12) இராஜ்யத்தின் தேவதாசி நட்டுமூட்டுகாருக்கு[40] உத்திரவு

*(19) 1788*

சுலக்ஷணாம்பாபாயி[41] சாஹேபிடமுள்ள கிராமங்களை ஜப்தி செய்கிறது. அதிராம்பட்டணம் தவிர்த்து எல்லாம் அவாளிடம் விட்டு விடுகிறது.

---

37. கலாபு - ஹைதர் படையெடுப்பால் ஏற்பட்ட குழப்பம் அல்லது கலகம்.

38. உபசாரம் - முகமன் வார்த்தை; பூர்வகம் - முன்னிட்டு

39. ராஜகோபால சுவாமி - தஞ்சைவடக்குவீதி ராஜகோபால சுவாமி ஆகலாம் (பக்கம் 189இல் 29)

40. நட்டுமுட்டுக்காரர் - நட்டுவமேளக்காரர் (Dancing Master and Drummers)

41. இது அமர்சிங்கு பட்டமெய்தியதும் நடந்த செயல். சுலக்ஷணாம்பாபாயி என்பவர் இரண்டாம் துளஜா மகப்பேற்றுக்காகத் திருமணம் செய்து கொண்ட இருவருள் ஒருவர் (போ.வ.ச.பக்.125)

*(20) 1788*
*மாரியம்மன் கோவிலுக்குக் கிழக்கே யமுனாம்பாபேட்*[42] *ஸந்தாஜி போஸலே - பேட்டை - சந்தை வகையறாவிற்கு இடம்*

*அக்கிரஹாரம்-1, மலகி-1, பேட்டை-1, கடை-1, சந்தை-1, சூத்திரான் தெரு வகையறா -1*

இந்தப்படி கட்டுவதற்கு இடம் மாரியம்மன் கோவிலுக்கு மேற்கே-குளத்தின் கரையிலிருந்து கிழக்கே - பால்குளம் மண்டபம் வரையில் வடக்கே-வடவாறு வரையில், தெற்கே - குளத்திற்கும் தோட்டத்தின் வேலி வரையிலும் இந்த நாங்கெல்லைக்குள் ஏதாவது பத்துக்கட்டு[43] பங்கும் இருந்தால் மன்னித்து இடத்தைப் பேட்டைக்காக கொடுத்து, செட்டி வியாபாரிகளுக்கு 4 மாதம் வரையில் எல்லா ஜகாயதிக்கும்[44] பாதி வரி போட்டு நடத்துவதற்கு உத்திரவு செய்ய வேணும்.ஷெபிரகாரம் நடத்துகிறது.

*21-1741 பிரம்மானந்த பகிராகிக்கு*[45] *தினம் 2 பணம் மொயின்.*

*25-1776*
*ரா. துளஜா மகாராஜா சாயேப் பரவானகி - தஞ்சாவூர் கோட்டை ஸமஸ்தானத்தினால் எல்லா* இடங்களுக்கும் சுங்கம், தோட்டம், வரி வகையறாவில் இனாமில், நஞ்சை,புஞ்சைகளில் நிலம்,மானியம்,கல்லா மானியத்திற்கு[46] மொயின் மான்யம், மேல்வாரம் மானியம், குரணி கோவில் இலுப்பக்காய், அம்பராயீ, வருஷப்பத்து,[47] ஸர்வமானியம், அர்த்த மானியம் (பாதி மானியம்) நாலிலொன்று, குல்மானியம்[48] அயக்கட்டு[49] ஜாடாவு[50]க்கும் சிலவு ஆகும்படி தெரிகிறது.
இதில் தாக்கலில்லாத தனி ஸர்வமானியம், தோட்டம், மகமை, கல்லேமகமை, குல்மகமை[51] ச்ரோத்ரியம், கல்லாச்ரோத்ரியம், குல்ச்ரோத்ரியம், குல் குத்தகை, கல்லேகுத்தகை, ரோஜி நம்பர்,[52] இனும்தார், வாரம் சாஸனம், வத்தோடி செலவு

42. யமுனும்பாபேட்டை - இந்நாளில் மாரியம்மன் கோயில் என வழங்கும் ஊரில் கோதண்டராமசாமி கோயில் இருக்கும் ஊர்ப்பகுதி யமுனும்பா பேட்டை என்று அழைக்கப்பட்டது.

43. பத்துக்கட்டு - குடிமக்கள் பயிரிடும் நிலம்.

44. ஜகாயதி - நிலத்துக்குரியவர்

45. பகிராகி - பைராகி - வடநாட்டுத்துறவி

46. கல்லாமானியம் - கடினமான நிலம்

47. வருஷப்பத்து - ஆண்டுதோறும் பெறும் வரி (?)

48. குல் மானியம் - முழுமானியம்

49. அயக்கட்டு - (ஆயக்கட்டு) - குளப்புரவு (The entire extent of land irrigated by a tank:) கிராமத்தின் நில அளவுக் கணக்கு.

50. ஜாடாவுக்கும் - முழுமைக்கும்

51. குல் - முழுமை

52. ரோஜ் - நாள்தோறும் எழுதும் கணக்கு; நெம்பர் - தொடர் எண்.

அக்னிஹோத்ரீயும்[53] அன்னசத்திரம், தேவஸ்தானம் மொயின், வகையறாக்களுக்கு சிலவற்றிற்குச் சனதுகள்[54] ரிகார்டில்[55] ரோகாக்க[56] ளிருக்கின்றன. சிலவற்றிற்குச் சனது ரிகார்டு ரோகாக்களில்லை. அனுபவம் மட்டிவிருக்கிறது. இவைகளில் நவாப்பின் ஆட்சியில்[57] சிலவற்றிற்கு நடந்திருக்கிறது. சிலவற்றிற்கு ரோகா ஆயிருக்கிறது. அதை அனுபவிப்பவர் ஒருவருமில்லை.

23(26) முதலில் இந்த ஸமஸ்தானத்தில் நந்தன[58] வருஷம் வரையில் நடந்தபடி விஜய[59] ஸம்வஸத்ஸரத்தில்[60] ஸமஸ்தானம் இருந்தது.

சனதா பரவானகிகள் சிலருக்குப் புதியதாகச் செய்து கொடுத்தபடி சனதுகளும் ரிகார்டு ரோகாக்களும் அனுபவம் மனதிற்கு வாங்கிஷெி பிரமாணம் ஆரம்பிக்கிற வருஷத்திலிருந்து[61] நடத்துகிறது.

நந்தன வருஷத்தில் தோபா வரி நிலம் மானியத்திற்கு ரூபாயின் வரியும் கல்லா மானியமும், குல்மான்யம் வகையறா எல்லாவற்றிற்கும் பாதி, இந்தப்படி நடந்திருக்கிறது. இந்த வருஷத்தில் கேள்வியில்லாமல் வழக்கப்படி நடத்துகிறது. இவைகளுக்கு ரிகார்டிலிருந்து ரோகாக்களை எழுதிக் கொடுக்கும்படி உத்திரவு செய்யப்பட்டிருக்கிறது.

மேற்சொன்னபடி ரோகாக்களை எழுதிக் கொடுக்கிறது.

*(27) 1741*
ரா. பிரதாபசிங்கு ராஜா - ஸ்ரீ. பாளம்பட்டுக்கு[62] தாலு. திரிலோகி,மௌஜே சிவபுராணி[63] கிராமம் ஸர்வமான்யம் குடுத்தார்.

*(28) 1747*
ரா. பிரதாப சிம்ம ராஜா, வாஞ்சேஸ்வரசாஸ்திரி, நஞ்சை 1 வேலி - புஞ்சை வேலி - 1/4 குத்தாலம்.

53. அக்னிஹோத்ரி - தினந்தோறும் செய்யும் யாகவகை அக்னிஹோத்ரம்; இதைச் செய்பவன் அக்னிஹோத்ரீ.

54. சனது - Sanad (அரசாங்க முத்திரையோடு கூடிய) உரிமையைக் கொடுக்கும் ஆணை

55. ரிகார்டு - ஆவணங்கள் இருக்கும் இடம்

56. ரோகா - குறிப்புச்சீட்டு

57. நவாப்பின் ஆட்சி - முகம்மது அலியின் ஆட்சி

58. நந்தன என்பது கி.பி.1772 ஆகலாம்.

59. விஜய என்றது நந்தன ஆண்டுக்கு அடுத்த ஆண்டு

60. ஸம்வத்ஸரம் - ஆண்டு (Year)

61. ஆரம்பிக்கிற வருஷம் - தொடங்குகிற ஆண்டு; அடுத்த ஆண்டு "ஜய" என்பது.

62. இவர் அரசகுருஆகலாம்.

63. திருலோக்கி, சிவபுராணி ஆகிய இரண்டு ஊர்களும் திருப்பனந்தாளுக்கு அண்மையிலுள்ளன.

*(31) 1743*

ரா. பிரதாப சிம்ம ராஜா - திருவாரூர் க்ஷேத்திரத்தில் கமலாலய தீர்த்தத்தின் கரையில் சிவலிங்கம் பிரதிஷ்டை காசி விஸ்வனாத ஸ்வாமிக்கு[64] மகாராஜா செய்திருக்கிறார். ஸ்வாமிக்குப் பூஜை நிவேதனம் நடத்துவதற்காக மொயின் செய்து கொடுக்க வேண்டுமென்று சிவமாவ் வெங்கட சிவன் இவர் அர்ஜு[65] கொடுத்தார்

*23-1743*

31. இன்று பூஜை நைவேத்தியத்திற்காகச் சுங்கம் (வரி) யில் நாள் ஒன்றுக்கு 3 பணம் வீதம் கொடுக்கும்படி மொயின் செய்திருக்கிறார்.

*33-36 1786*[66]

36 பரவானகி-

பராபவ ஸு மாக சுத்த திரியோதசி[67] புதன்கிழமை இராத்திரி சதுர்தசி ரா. துளஜாராஜா சாயேப் அவர்கள் கைலாஸ வாசமானார்.[68] அதன் பொருட்டு 11,12ஆம் நாள் பிராமணாளுக்குப் பூமி தானம் கொடுத்தார். மூன்று பேர்களுக்கு நஞ்சை புஞ்சை 3-1/2 வேலி நிலம் ஸர்வமான்யம் கொடுத்தார்கள்.

*24-1780*

(4) டாக்டர் ஒயிட் துரையின் நெல் விஷயம்.

*25-1780*

*(1-71)*

(3) பரவானகி - ரா. துளஜாராஜா சாயேப் தஞ்சாவூர். மதுரை, திருநெல்வேலி, திருச்சினாப்பள்ளி, கும்பனி, வகையறாவின் துரைகளிடமிருந்து சாமான் போக்குவரத்துக்கு எல்லாம் சுங்கத்திற்குத் தடைசெய்யாமல் எழுதிக்கொண்டு விட்டு விடுகிறது.

*(4) 1780*

மோஹினாபாயி[69] யிடம் லக்ஷதீப மேற்ற இ.எண்ணை 30 ஆடம்[70]

---

64. காசிவிசுவநாத சுவாமி - கமலாலயக்கரையில் தென்கிழக்குக் கோடியில் 40x20 அடி அளவில் ஒன்றும், வடமேற்கு மூலையில் பிறிதொன்றுமாக இரு கோயில்கள் உள. முன்னது தனியார் நிர்வாகம்; பின்னது கோயில் நிர்வாகம். (பக்கம் 199)

65. அர்ஜி - விண்ணப்பம்

66. 1786 - இது 1787 ஆதல் வேண்டும் (Srinivasan, Maratha Rule in the Carnatic, Page 13)

67. பராபவ, மாக சுத்த திரயோதசி புதன்கிழமை இராத்திரி சதுர்த்தசி - இது 28-12-1787 ஆகும்.

மாகம் - மாசி மாசம்; சுத்தம் - வளர்பிறை; திரயோதசி-13ஆம் நாள்; சதுர்த்தசி-14ஆம் நாள்

68. கைலாஸவாஸமானர் - இறந்தார்.

69. மோஹனபாயி-இரண்டாம் துளஜாவின் மூன்றாவது மனைவி (போ. வ. ச. பக்கம் 109)

70. ஆடம்-இருபது படி கொண்ட அளவு

*(6) 1780*

ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமி அவர்கள் மடத்திற்கு வருஷத்திற்கு மொயின் சக்கரம் 4500. அதில் பேஸஜீ ஆஸாட[71] சுத்த பௌர்ணிமை வியாஸ பூஜைக்காகத்மொயின் சக்.500. இதற்குச் தாராசுரம் சுங்கத்திலிருந்து கொடுக்கப்பட்டது. சக்.500

*(9) 1780*

ரா. துளஜா ராஜா கோட்டைக்கு-ரஸ்தா போடுவதற்கு கோட்டை - பந்த நல்லூர்

கோட்டை — திருக்காட்டுப்பள்ளி கோட்டை, சாஹக்கோட்டை[72] கோட்டை, மகாதேவ பட்டணம்[73] கோட்டை-பட்டுக்கோட்டை, கோட்டை-அறந்தாங்கி

கும்பனி இஞ்சனீயர் துரை நம்முடைய (இராஜ்ய)தேசத்திலுள்ள கோட்டைகளைச் சுற்றிப் பார்க்கச் |செல்லுகிறார்கள்.

*25.1787*

*(17)* வெங்கடாஜல சிங்கப்புலி தனக்குப் பட்டுக்கோட்டையில் பாளேயம்பட்டு செய்து கொடுக்கும் விபரம்.

*27.1780*

அர்ஜீ. வெள்ளப்பத்து - ஆதம் முத்துத்துரை - சமுத்திரத்திலிருந்து முழுகி சங்கு எடுக்கிறவர்களுக்கு ஆயிரத்திற்கு 12 சக்கரம் 5 பணம் கொடுக்கிறார்கள். அக்கம் பக்கம் 14 சக்கரம் கொடுக்கிறார்கள். அந்தப்படிக்கி கொடுக்க வேணுமென்று.

*25.1745*

*28-31* ரா.பிரதாப சிம்ம ராஜா பந்த நல்லூர் - தரணிமாகாணம் குத்தாலத்தில் பிராமணர்களுக்கு ஸர்வ மான்யம் கொடுத்தார். ஆக 12 அஸாமிகளுக்கு நஞ்சை 9 1/2 வேலி - புஞ்சை நிலம் வேலி 1க்கு 1/4 வேலி வீதம்.

*(32) 1745*

ரா. பிரதாப சிம்ம ராஜா தரணி மாகாணம் - குத்தாலத்தில் ஸர்வ மான்யம் செய்து கொடுத்தார். ரா. சேதுபாவா ஸ்வாமி[74] ஜமதக்னி வத்ஸ கோத்ரம் நஞ்சை 5 வேலி புஞ்சை 1 1/4 வேலி.

*33-35. 1787*

ரா. அமரஸிங்க ராஜா, ரா. அனந்த அய்யங்கார், திருபனந்தாள் தாலுக்கா - திருமங்கலக்குடி மாகாணம் - நஞ்சை புஞ்சை வேலி 2-16 மா.

---

71. ஆஸாட-ஆஷாட-ஆடிமாசம்

72. சாஹக்கோட்டை-இந்நாளின் கும்பகோணத்திற்கு அருகில் உள்ள சாக்கோட்டை என்னுமூர்.

73. மகாதேவபட்டணம்-மன்னார்குடியில் தென்பக்கத்தில் அமைந்த ஊர் (துக்கோசி சில ஆண்டுகள் அங்குத் தங்கியிருந்தார் (போ.வ.ச.பக் 83)

74. சேதுபாவா ஸ்வாமி-இவர் மடம் தஞ்சாவூரில் உள்ளது (பக்கம் 439, அடிக்குறிப்பு)

**45-47. 1787**

ரா.அமரஸிம்ம ராஜா, ரா. வெங்கடதீக்ஷித, திருவையாற்றில் வீடுதானம் கொடுத்தார்-

**48-49. 1787**

ரா. அமரஸிங்க ராஜா - பெருமாள் நாயிக்குக்கு - பதக்கம்[75] திருவாரூர் - மௌஜே[76] - நடகாட்டாங்குடி - நஞ்சை வேலி -2 இனாம்

**53-56.1787**

ரா. அமரசிங்க்ராஜா - ஸ்ரீநைவேலிநாத ஸ்வாமி பூஜை நைவேத்தியத்திற்காக, தஞ்சாவூர் 144 சக்கரம் முந்தி கொடுக்கப்பட்டது. மொகலாயர்கள் இராஜ்யம்[77] செய்யும் பொழுதும் நடந்து வந்தது. மகாராஜா ஸமஸ்தானத்தில் வந்த பின்னர் ஸர்காரிலிருந்து பாளைக்காரரிடம் ஒப்பிவித்தார்.ஷெபாளையக்காரரும் ரொக்கம் கொடுக்க முடியாதாகையால் நஞ்சை புஞ்சை நிலம் கொடுத்தார். நஞ்சை 12 மா. புஞ்சை - 24 மா.

ஸர்காரில் ச்ரோத்ரியம் கிராமம் (பாளையக்காரருடைய) ஜப்தி செய்து கோவில் நிலமும் ஜப்தி செய்தார். கோவில் நிலத்தை விலக்க வேணுமென்று கொடுத்த மனு.

**(71) 1776**

பரவானகி

திருவண்ணாமலையில் ஸர்காருடைய மடமிருக்கிறது. அதற்குப் பேஸஜி[78] யானவர் ஸபாபதி மூர்த்தி[79] யைச் செய்து கொடுத்தார். அதற்குப் பூஜை நிவேதனத்திற்காக பண்டாரம் வசம் 20 சக்கரம் கொடுக்கிறது.

**26.1776[80]**

(10) ரா. அமரசிங் ராஜா. திருவாரூரில் ஸ்ரீதியாகராஜ ஸ்வாமியின் தேர் விழாவிற்காக தேரைப் பார்ப்பதற்காக நாகப்பட்டணத்திலிருந்து மிஸ்தர் டுயின்[81] துரை வருகிறார். அவருக்குத் திருவாரூரில் காஸா[82] உலுப்பை 20 கொடுக்க உத்திரவாயிருக்கிறது.

---

75. பதக்கம்-Pattack-சில ஊர்களின் ஒன்றியம் (பக்கம் 74)

76. மௌஜே-ஊர் (4-59)

77. முகலாயர்கள் ராஜ்யம்-ஆர்க்காடு நவாப் முகமத் அலி தஞ்சையைக் கைப்பற்றி ஆண்ட காலம்

78. பேஸஜி-அரசர்; இரண்டாம் துளஜா

79. ஸபாபதி மூர்த்தி-நடராஜப்பெருமாள்

80. அமர்சிங்கு 1788 இல் அரசு பெற்றமையின் 1776 என்றது தவறு

81. டுயின் என்பது யார் என்று தெரியவில்லை

82. காஸா-சிறந்த

*(14) 1786*
பரவானகி
ரா. அமரசிங் ராஜா, மாஹாதேவ பட்டணம் கைலாஸவாஸி மா. உமாபாயிசாயேப்[83] சத்திரம். கைலாஸ மஹாலும்[84] தோட்டமும் சத்திரத்தின் கிராமம் வகையறாக்களை கண்டோஜி போஸலே இடம் கொடுப்பது-

*41.1861 Nov 3*
*(11)* இந்திரஸபை சாக்கடையில் அகப்பட்ட சாமான்கள்

*42.1861 Aug. 26*
*(1)* உமாம்பாபாய்சாப்[85] அபேக்ஷிக்கிற இடங்கள்

*(6) 1861 Aug. 26*
சிமாம்பா[86] பாய்சாப் செய்த புகாரா.

*(7) 1861 Aug. 26*
ஜீஜாயி[87] பாயி சாபிடம் மகாலோ மகால்[88] செய்ய இடம் வசதியில்லை.

*42 (10)*
மன்னார்குடி மேரு ஸ்வாமியார் மடம்[89] வீட்டின் ஆதாரம் ஏஜண்டிடம் கொடுக்க வேணுமென்று.

*(13) 1861 Sep. 18*
சிவன் கோட்டை[90] யிலிருந்து மகாலுக்கு வந்த தண்டவாளங்களின் விஷயம்.

*(23) 1861 Oct. 5*
மா. ஜயத்யம்பாபாயி[91] சாஹேபிடம் படிப்பதற்காக வேண்டிய புத்தகங்கள்.

---

83. உமாபாயி-யார் என்று தெரியவாய்ப்பில்லை (பக்கம் 273)

84. கைலாச மகால்-அரசர் அரசமாதேவியரை இறந்தபின் தகனம் செய்யுமிடம் (பக்கம் 460)மகாதேவப்பட்டினத்திலும் கைலாஸ மகால் இருந்ததாதல் வேண்டும்.

85. உமாம்பாபாயி-இரண்டாம் சிவாஜி ஒரே நாளில் மணம் செய்துகொண்ட 17 பேர்களில் ஒருவர் (பக்கம் 34)

86. சிமாம்பா?

87. ஜிஜாயி?

88. மகாலுக்குள் மகால்-மகாலுக்குள் இருக்கும் பகுதி; வேறொருமகால்

89. சிவாஜியின் ஞானாசிரியர் சமர்த்த ராமதாஸ் சுவாமிகள் தஞ்சைக்கு வந்து திரும்பிய பொழுது பீமராஜ், ராகவர், ஆனந்தமௌனி என்ற மூவரைத் தஞ்சையில் விட்டுச் சென்றார். ஆனந்தமௌனியின் மாணாக்கர் மேருசுவாமி இவர் மன்னார்குடியில் அமைத்தது மேருசுவாமிகள் மடம்.

90. சிவன் கோட்டை-சிவகங்கைக் கோட்டை

91. இரண்டாம் சிவாஜி ஒரேநாளில் திருமணம் செய்து கொண்ட பதினெழுவரில் ஒருவர் (பக்கம் 34)

*(24) 1861 Oct. 14.*

குறிப்பு- மா. ஜயத்யம்பாபாயி சாயேப் அவர்களுக்கு வேண்டிய துலாமாஸம்[92] துலா மகாத்யம் படிப்பதற்கு ஸரஸ்வதி மஹாலிலிருந்து கொடுத்து வாங்குகிறது.

*43-1861 July 31*

*(2)* சமையல்கட்டு செய்ய இடம் வேண்டும்

*(18) 1861 Ap. 25*

மஹாராஜா ஸபையின் தென்பக்கத்தில் "நவகோடி மகாலில்" தென் பக்கத்திலுள்ள ஜன்னல் ஒன்று ஜீர்ணமானதால்[93] அதைப் பழுதுபார்க்கச் சிலவு

*(20) 1860 Nov. 1.*

ஒடையார் பாளயம் சாமாசார்யருடைய கிரந்தங்கள் ஸரஸ்வதி மஹாலில் தாக்கலானதின் பெயர்.

*(24)* மங்கள வாசம்[94] பாயிமார்களுக்கு மொயின் ரூ. 1166.

*43-1861 Jan 21*

*(31)* வெங்கட்றாவ் அம்பாஜி இராமேஸ்வர யாத்திரை போக பந்தோபஸ்துக்காக துப்பாக்கியும், பட்டாளக் கத்தியும் கொடுக்க வேணும்.

*44-1771*

*(1)* ரா. துளஜா ராஜா அவர்கள் சென்னை வக்கீல் திரியம்பக ஸம்பாஜி அவர்களிடம் துகை அனுப்பியதற்கும், சிலவானதற்கும் சர்காருக்குக் கணக்கு எழுதி அனுப்பியபடி, மொத்தம் வரவு, வராகன் 40448

விபரம்.

*44-1772*

*(3)* கௌனருக்குப்[95] பிள்ளைப் பிறந்ததற்கு சீமையிலிருந்து வந்த கௌனர் சம்சாரத்திற்கு புடவையும், வயிரம் மோதிரமும்.

*(4)* ஜனரல் மண்ட்ரோ[96] சீமையிலிருந்து கௌனருடன் வந்ததற்கு 750 இனாம்.

---

92. துலாமாசம் என்பது ஐப்பசி மாதம்

93. ஜீர்ணம்-பழுது

94. மங்களவாசம் பாயிமார்கள்-மங்கள விலாஸ மாதர்கள் (பக்கம் 330)

95. கௌனர்-கவர்னர்-31-1-1770 முதல் 1-2-1773 வரை கவர்னராக இருந்தவர். ஜோசையா துப்ரே (Josiah Du Bre) என்பவர் ஆவார்.

96. மண்ட்ரோ-பக்ஸார் போர் வென்ற ஹெக்டர் மன்ரோ ஆகலாம் (The Maratha Supremacy, (Vol; VIII of the History & culture of the Indian People, 1977 Pages 115,349)

*(8) 1772*

புதுச்சேரி ஜயித்ததால்[97] ஜனரலுக்கு இனாம் வஸ்திரமும், ஜரிகை ஆடைகளையும், பதக்கமும் கொடுப்பதென்று ஸமஸ்தானத்திலிருந்து எழுதி வந்திருந்ததால் மத்யஸ்தர் கரீதி செய்து கொடுப்பது.

*(9)* ஹைதராபாதில் தேர் கரீதி செய்து, இராஜ்யத்திற்கு அனுப்பினதற்கு சிலவு 196 சக்.

*(12)* ஜனரல் ஸர்யேர்கூட்[98] சீமையிலிருந்து பெரிய உத்யோகஸ்தராக வந்ததினால் வஸ்திரம் வகையறா கொடுத்ததற்குச் சிலவு 1100 புலிவிராகன்.

*(13)* கர்னல் ஈடிடிண்டோ கொடுத்த குஜராத்தி பசுமாடு கன்றுக்குட்டி

*(22)* கவர்னருக்குச் சென்னையிலிருந்து சிதம்பரம் வரை பல்லாக்கு அனுப்பியதற்கு சிலவு - 337-1/4 வராகன்.

*44.1774*

*(29)* கேபன் காங்கேடேல் என்பவர் "பாதஷாஹி" கப்பலின் *captain* சீமையிலிருந்து வரும்பொழுது கன்றுக்குட்டிகள் கொண்டுவந்ததற்கு 620 வராகன்.

*1774*

கவர்னர் ஒயிட்ஹேலில்[99] தரகாளி திருவேங்கடய்யாவுக்கு உத்திரவுபடி வஸ்திரம் முதலியவை கரீதி 218 1/4 - 1/2 வராகன்

*(30) 1774*

திருவேங்கடய்யாவின் புதல்வியின் கலியாணத்திற்கு சீதனம் சால்வை ஜோடி 1க்கு 60 வராகன்

காகிதம் கரீதி தினுசுகள்.

*(39) 1775*

தர்மசிலவு

சென்னப்பட்டணத்தில் கலாபுக்காக[100] விசேஷமாக அநேக ஜனங்கள் வந்து சேர்ந்ததினால் அரிசி வகையறா அகப்படாமல் ஜனங்கள் மிகச்சிரமப்படுவதினால் கவர்னர் இஸமேதினி

97. புதுச்சேரியை ஆங்கிலேயர் வென்றது 1761 ஜனவரியில்
(The Maratha Supremacy P.335)

98. ஸர்யேர் கூட்-(Colonel Eyre Coote;) இவர் கி.பி. 1760 ஜனவரியில் லாலியை வந்தவாசியில் தோல்வியுறச் செய்தவர். (Maratha Supemacy P. 335)

99. கவர்னர் ஒயிட்ஹேல் (John Whitehill) இவர் 31-8-1777 முதல் 8-12-1788 வரையிலும் பின்னர் 6-4-1780 முதல் 7-11-1780 வரையிலும் கவர்னராக இருந்தவர் எனத் தெரிகிறது (ஆகவே 1774 என்பது தவறாகலாம்)

100. கலாபு-ஹைதர் கலாபு (கலாபு-குழப்பம்)

சென்னையிலுள்ள துரை, நவாப் வகையறா ஜனங்களெல்லோருக்கும் வரிபோட்டுத் துகையை வசூல் செய்து, பிராமணர் வகையறா எல்லோருக்கும் அன்னமிட ஆரம்பித்து, நம்மையும் வரவழைத்து இந்த ஸாஹேப்பின் மூலம் 1500 வராகன் கொடுக்கவேணுமென்று கட்டாயப் படுத்ததினுல் தவறாத பக்ஷம் 500 வராகன் கொடுப்பதற்கு இசைந்து துகையைக் கடன் வாங்கிக் கொடுத்திருக்கிறோம்.

*45.1777*

*1-25 (7)* நவாப்பின்[101] மூத்த குமாரர் உமதடில் உமரனுக்குக்[102] கொடுத்தது. சோலப்ப முதலியும் சிவறாவும் 6714 சக்.

*(18) 1777*

திருவேங்கடய்யா[103] கடன் ரத்து 10,000 க்குப் பணம் ரூ.238-0-6.

*46.1786*

*1-154*

*(15)* துளஜாராஜாவின் உத்திரவு

பெரிய கோவில் ஸ்வாமி - ஆடி மாதத்தில் உத்திரம்[104] நக்ஷத்திரம் உற்சவத்திற்காக தீர்த்தம் கொடுக்க விண்ணாற்றங்கரைக்குப் போகுவதால் வெடிமருந்து தயார் செய்கிறது.

*47.1787*

*1-18*

*(1)* பரவானகி - அமரசிம்ம ராஜா.

முகாம் - வைத்தியநாதகுடி (வைதீஸ்வரன் கோவில்) தேவஸ்தானம் - வைதீஸ்வரன் கோவில் - ஸ்ரீவைத்யநாத ஸ்வாமி - லிங்கோஜி போஸலே[105] தேவஸ்தானத்திற்கு வருஷத்திற்கு 5400 சக்கரம் உண்டு. இத்துடன் இவ்வருஷ முதல் சீயாழி[106] யிலிருந்து ஒவ்வொரு வருஷமும் மொயின் கொடுக்கு உத்திரவாக வேணும். நடத்துகிறது.

*(5) 1742*

ரா. பிரதாப சிம்ம ராஜா, காசீ வாசீ சாஸ்திரி, ஸர்வ மான்யம்[107] - தரணி மாகாணம் -

---

101. நவாப் என்றது முகம்மது அலியை

102. உமதடில் உமரன்-உம்தத் உல் உமரா

103. திருவேங்கடய்யா-மேல் கவர்னரின் தரகாளி.

104. ஆடிமாசத்தில் உத்திரம்-உத்திரம் என்பது பூரம் ஆகலாம்

105. லிங்கோஜி போஸ்லே-இவர் இரண்டாம் துளஜாவின் காலத்தில் இருந்த அமைச்சர்களுள் ஒருவர் ஆவர். இவருக்குக் கிலிபிலி அண்ணா என்றும் பெயருண்டு. இவரைத் "துர்மந்திரி" என்று போ.வ.ச.பக்.121 இல் கூறப்பட்டுள்ளது. (கிலிபிலி என்பது கிளிப்பிள்ளை என்று பொருள்படும் போ.வ.ச. பக். ஆங்கிலம் பக்கம்XV)

106. சீயாழி-சீர்காழி

107. ஸர்வ மான்யம்-யாதொரு வரியும் செலுத்தாமல் அனுபவிக்குமாறு கொடுக்கப்பெறும் நிலக்கொடை.

மௌஜே[108] குத்தாலம் நஞ்சை 1/2 வேலி, புஞ்சை 2 1/2 மா.

*(6) 1779*

மன்னார்குடி, மேல்முகம் - தாலூ.ஜேபால் கிராமம் மௌஜே - ஏரனூரைச் சேர்ந்த 1/2 வேலி கீழ்முகம் - தாலூ - சிதாம்பூர் - மௌஜே - ஆலங்கூ -. 26 வேலி.ஆக 14 பேருக்குத் தினப்படிக்கு ச்ரோத்ரியம்[109] செய்து கொடுக்கப்பட்டது.

## மூட்டை எண் - 851 C

*5.1821*

*(1) Correspondence.*

சென்னை சுப்பராவுக்கு எழுதிய கடிதங்களின் நகல்கள்.

சின்ன திவான் சாஹேப்[110] என்று எழுதுவது வழக்கம். ஆனால் ஸஹஸ்ராயு விஜயீபவ[111] என்று எழுதக்கூடாது.[112]

(2) கடிதம்

(3) 6 ஆயிரம் ரூபாய் ஹுண்டி விஷயம்.

(4) சட்டை அனுப்புவது

(5) அதிகமான சாமான்களை எடுத்துப்போவதால் 2 பாராக்காரர்கள்[113] கூட இருந்தால் நன்கு.

*5.1826 March 2*

(48) வங்காளத்தின்[114] மாஜி கவர்னர் ஜனரல் மார்க்வீஸ் ஆப் ஹேஸ்டிங்க்ஸ்[115] சாஹேப் அவர்களுடைய வரைந்த படத்தைச் சீமையிலிருந்து ரெஸிடெண்ட்[116] சாயேப் இடம்

---

108. மௌஜே-சேர்ந்த அல்லது உள்ள என்று பொருள்படுமாறுள்ளது ஊர்

109. சுரோத்ரியம்-(பக்கம் 259)-வேதம் வல்ல பிராமணர்க்கு விடப்பட்ட நிலம் சுரோத்திரியம்

110. சின்னதிவான்சாஹேப் என்றது இரண்டாம் சரபோஜியின் மகனாகிய இரண்டாம் சிவாஜியை

111. ஸஹஸ்ராயு விஜயீபவ-ஆயிரம் ஆண்டுகள் வெற்றியுடன் வாழ்க

112. இது வாழ்த்துதல் ஆகும்; எனினும் அலுவலர் மேலோர்க்கு ஆசி கூறுவது போல் அமைதலின் இங்ஙனம் எழுதக்கூடாது என்றனர் போலும்

113. பாராக்காரர்கள்-காவலாட்கள்

114. முதன்முதலில் கவர்னர் ஜெனரல் பதவி வகுத்தவர் கல்கத்தாவில் இருந்தனர்

115. கி.பி. 1813 முதல் 1823 வரை கவர்னர் ஜெனரலாக இருந்தவர் லார்டு ஹேஸ்டிங்க்ஸ் என்பவர் ஆவர். இவரது படம் கொணரப்பட்டது போலும்

116. ரெஸிடென்டு-ஜாபைஃப் (John Fyfe) பக்கம் 66

சேர்ந்தது. அவர் அரண்மனைக்குக் கொண்டு வர இருந்தார். அதற்காக கவர்னர் ஜனரல் சாயேப் அவர்களின் படத்திற்கு மரியாதை செய்வதற்காக ரா.ஸர்கேலும்[117] ரா.முஜீமதாரும்[118] இருவரும்ரெஸிடெண்ட் சாஹேப்அவர்களிடம்சென்று தகுந்த ஸன்மான பூர்வமாக[119] பேட்டி வாங்கி சாஹேப்[120] அவர்களை அரண்மனைக்கு அழைத்து வந்தார்கள்.

*5.1826 July 8*

*(51)* ரெஸிடெண்ட் க்யாப்டன் ஜான் பைப் சாயேப் அவர்களுடைய தம்பி, இன்ஸைன்பைப் சாயேப் தஞ்சாவூருக்கு வந்ததற்காக அவர்களுடைய க்ஷேமங்களை விசாரிப்பதற்காக ஹுஜூரவர்கள்[121] காகாசாமி மூலம் 10 தட்டுக்களை (ஒரு தட்டு 11 ரூபாய்) அனுப்பித்து தன்னுடைய (ஹுஜூருடைய) சலாமும் சொல்லி அனுப்பித்தார்.

*(51) 1826 Aug 6*

*The right Hon'ble Major general Sir. Thomas Munro. K.C.B. Baronet Madras governor.* அவர்களை ஸர்கேல்[122] அவர்கள் முன்சென்று எதிர்கொண்டழைத்த விபரம்.

நேற்றிரவு கவர்னர் ஸர்தாமஸ்மன்றோ[123] 4 மணிக்குக் குதிரை சவாரியுடன் தன்னைப்பிரிந்து இன்று காலை 10 மணிக்கு - விண்ணாற்றின் அக்கரையில் வந்து சேர்ந்தார். அவரை மரியாதை செய்ய ஹுஜூர் ஆக்ஞைப்படி[124] ஸர்கேல் ரா.ராமோஜி ஸர்ஜேராவ் காட்கேயும் மஜுமுதார் (கலெக்டர்) ரா. பாபாஜிமுராமாஜி பண்டிதரிருவரும் ஒரு கும்பனிக்காரன். 3 பாராக்காரர் துருப்புகள், துருதுருடாப் வாத்தியம் வாசிக்கிறவர், தங்கம், வெள்ளிக்கட்டுக் கட்டின ஈட்டிகள் 20, நகரா-10, யானையின் கொடியும், கார்கானா[125] - ஸங்கீத மேளம்[126] ............

*(52)* சாமரம், குடை முதலிய சன்ஹுஹத்துடன் (எடுபடி சாமான்களுடன்) பல்லக்கில் 7 உட்காரும்படியான குதிரைகளையும் கூட அழைத்துக் கொண்டு நேற்றிரவு 4 மணிக்குப் பிறகு

117. ஸர்கேல்-ராமோஜி ஸர்ஜேராவ் காட்கே (பக்கம் 85)

118. முஜீம்தார்-பாபாஜிராமாஜி பண்டிதர் (பக்கம் 86)

119. ஸன்மான பூர்வகமாக-பரிசு அளித்து

120. சாஹேப்-என்றது ரெஸிடென்டை

121. ஹுஜூர் என்றது இரண்டாம் சிவாஜியை

122. ஸர்கேல்-ராமோஜி ஸர்ஜேராவ்காட்கே (பக்கம் 85)

123. மன்றோ: 10-6-1820 முதல் 6-7-1827 வரை கவர்னராக இருந்தவர்

124. ஹுஜூர் ஆக்ஞை - அரசரின் ஆணை.

125. கார்கானு-பணியகம்.

126. ஸங்கீதமேளம்-நாதஸ்வரத்துடன் கூடிய மேளம்.

கோட்டையிலிருந்து புறப்பட்டு, பொழுது விடிகிற சமயத்தில், ஸந்தயான மண்டபம்[127] (விண்ணாறு) என்கிற தொரைக்குப்போய், ஹௌதா[128]வின் யானை 10ல் 9ஐ ஆற்றின் அக்கரையில் கௌர்னர் சாஹேப்பும் அவருடன் வந்திருக்கிற துரைகள் உட்கார்ந்து வருவதற்காக வைத்து இருவரும் "ஹத்திராம் பாவாவின்" மடத்தின்[129] திண்ணையில் பாயைப் (விரிப்பை) பரப்பி அமர்ந்திருந்தார்கள்.

இவ்விருவர்களுடன் ரெஸிடெண்ட்[130] சாயேப்பின் சிரஸ்தேதார் வெங்கடராவ் அவர்களும் அமர்ந்திருந்தார். பின்பு இன்று காலையில் 10 மணிக்குக் கவர்னர் சாயேப் முதலான துரைகள் விண்ணாற்றங்கரையில் வந்து சேர்ந்தார்கள்.

அவர்களில் கவர்னர் சாயேப் -1, போர்டு மெம்பர் க்யாமல் சாயேப் -1 *private secretary kycrfec saheb* -1, அருணோதய சமயத்தில் ஆற்றிற்கு முன்னால் சென்றிருந்த ரெஸிடெண்ட் சாயேப்-1, இப்படி 4 துரைகளும் 4 குதிரைகளும் சாமான்களையும் படகில் ஏற்றி தாங்களும் நின்று கொண்டு வந்தார்கள். பாக்கி துரைமார்கள் ஸர்காரின் ஹௌதாவில் உட்கார்ந்து தென்கரைக்கு வந்தார்கள். கவர்னர் சாயேப் பாதி ஆற்றில் வரும் போது ரெஸிடெண்ட் சாயேப்பின் சிரஸ்தேதார் முந்தியே ஆற்றங்கரைக்குச் சென்று, ஸர்கேல் கலெக்டர் இருவரையும், ஆற்றங்கரைக்கு வரலாமென்று சொல்லி அனுப்பித்தார். ஷிஇருவரும் கரைக்கு வந்து சேரும் பொழுது, கவர்னர் சாயேப் உட்கார்ந்து வந்த படகும் வந்து சேர்ந்தது. அதிலுள்ள 4 குதிரைகளையும் முதலில் இறக்கிக் கரைக்குக் கொண்டு போகப்பட்டது. கவர்னர் சாயேப்பும் ரெஸிடெண்ட் சாயேப்பு மிருவருஞ் சென்று கரையின் மேல் வந்தார்கள்.

(53) உத்யோகத்தையும், ஹுஜூரின் உத்திரவின்படி, எதிர்கொண்டழைப்பதற்காக வந்திருக்கிறாரென்று தெரிவித்து, பேட்டி செய்து வைத்தார். கவர்னர் சாயேப் அதைக்கேட்டு இருவருடைய சலாமையும் அங்கீகரித்து, பிரதி சலாம் செய்து கைக்கோத்தி குலுக்கினார். சரபோஜி மகாராஜாவின் யோக க்ஷேமத்தையும் விசாரித்தார். அதற்காக மகாராஜாவின் க்ஷேமத்தைத் தெரிவித்து கவர்னர் சாயேப்பின் வருகையால் மகாராஜாவுக்கு உண்டான ஸந்தோஷமும் கவர்னர் அவர்களைப் பார்க்க வேண்டுமென்கிற இச்சையையும் தெரிவித்தார்.

அதைக்கேட்டு கவர்னர் சாயேப் மிகச் சந்தோஷமடைந்து, மகாராஜாவுக்குத்தான் மிக்க சலாம் சொல்லும்படி இருவரும் சலாம் செய்தார்கள். இருவரும் பதிலுக்குச் சலாம் செய்து, அவர்களுடன் கரைக்குத் தென்னண்டை வந்து, அவர்கள் குதிரையின் மேலேறினதும், இருவரும் குதிரை ஏறி வரும்பொழுது, ரெஸிடெண்ட் க்யாமல்[131] சாயேப், க்யார்பி[132] சாயேப்,

127. ஸந்த்யா மண்டபம் - வெண்ணாற்றங்கரைப் பாலத்துக்கருகில் உள்ளது.

128. ஹௌதா-யானை மேல் அம்பாரி.

129. ஹத்திராம் பாவா மடம்-வெண்ணாற்றின் தென்கரையில் உள்ளது போலும்.

130. ரெஸிடெண்ட் - ஜான்பை:ப்

131. காமல்-போர்டுமெம்பர்.

132. கியாபி-Private Secretary.

பிரின்ஸிபால் கலெக்டர், ஜான் காட்டன்[133] சாயேப் முதலிய 5 துரைகள் கவர்னருடன் குதிரை சவாரியில் வந்தார்கள். மற்ற துரைகள் குதிரை வண்டிகளிலும், ஹௌதாவிலும் உட்கார்ந்து வந்தார்கள். வருகையில் விண்ணாற்றங்கரையில் சர்கார் இலாகா தேவஸ்தானம் சத்திரம், காரியஸ்தர்கள் பேட்டியின் தாம்பாளங்களை (தட்டுகளையும்) பூர்ண கும்பத்தையும்[134] எடுத்துக்கொண்டு கடைத்தெருவில் நின்று கொண்டு பேட்டி வாங்கினார்கள்.[135]

(54)ஜய வாசலுக்கு[136] கொஞ்சம் வடகிழக்கே அவுசாகேப் தோட்டம் வகையறா மத்யஸ்தர் அண்ணாஜி தியாகராஜர் தட்டுகளை வைத்து பேட்டி வாங்கினர். வாசலுக்கடுத்து தென்னண்டைத் தெருவில் தஞ்சாவூர் கோட்டை தேவஸ்தானம் ஜகாயதி[137] வகையறாவின் மத்யஸ்தர் ஜீவாஜி நாராயண் தட்டு வைத்துப் பேட்டியை வாங்கினார்.

வாத்தியங்களை வாசிக்க வேண்டியதில்லை என்ற கவர்னர் அபிப்பிராயம் ஸர்கேல் அவர்களுக்குத் தெரிந்திருந்ததினால் சன்னாஹத்திலுள்ள (எடுபடி சாமான்களிலுள்ள) தம்பூர், பைபர் இவைகளையும் மேல் காட்டியபடி 4 இடங்களில் தட்டு வைத்து,பேட்டி வாங்குகிறவர்களிடமிருந்து வாத்தியங்களை நிறுத்தினார்.

ஜய (கிழ) வாசல் முன்னிலையில் லார்ட் சாயேப்[138] அவர்களுடைய சவாரி வருகையில் கோட்டையின் மேல் 19 குண்டுகள் போட்டார்கள். இவ்வளவு உபசாரத்துடன் கோட்டைக்குத் தென்னண்டை மன்சூர்சா தெக்காலுக்குத்[139] தென் கிழக்கே கூடாரம் போட்டிருந்தார்கள். அங்குச் சென்று கவர்னர் சாயேப் சவாரியை விட்டு இறங்கினார்.

கூடாரத்திற்கு முன்னிலையில் சாந்தணியில்? விரித்த விரிப்பாயின் மேல் லார்ட் சாயேப் நின்று கொண்டு அவர்கள் சாப்பிடுவதற்குப் போகவேண்டிய ஜரூருக்காக ஸர்கேலுக்கும் முஜீம்தாரு(கலெக்டர்)க்கும், சந்தனம், புஷ்பம், விடையம், அத்தர், பன்னீர் சால்வை ஜோடிகளைத், தன் கையாலே ஒவ்வொரு உபசாரத்தையுஞ் செய்து ஹுஜுருக்குத் தன்னுடைய ரொம்பவும் சலாம் சொல்லுங்களென்று உத்திரவைக் கொடுத்தார்.

இவ்விருவரும் ஹுஜுருடைய பேரால் கவர்னர் சாயேப் அவர்களுக்கு உபசாரஞ் சொல்லி உத்திரவு பெற்று அரண்மனைக்கு வந்து சேர்ந்தார்கள்.

5 (55)

ஹுஜுர் கவர்னர் சாஹேப் பேட்டி

---

133. ஜான் காட்டன்- கலெக்டர்.

134. பூர்ணகும்பம்-தண்ணீர் நிறைந்த குடம் ( இது மங்கலப்பொருள்களுள் ஒன்று).

135. பேட்டி வாங்குதலாவது வரவேற்றல்.

136. ஜயவாசல்-பத்தே தர்வாஜா-கிழக்கு வாயில் (போ.வ.ச.பக்.97)

137. ஜகாயதி வகையறா-நிலங்களைப் பற்றியவை.

138. கவர்னர் ஸர்தாமஸ் மன்ரோ.

139. தெக்கால்-தைக்கா-பக்கீர்கள் தங்குமிடம்.

ஹுஜூர்(சரபோஜி மகாராஜா) கவர்னர் Right Hon'ble Major general Sir. Thomas Munro. K.C.B.

ப்யாரோனட்[140] மதராஸ் இவர்களுடைய பேட்டிக்காக தன்னுடைய குழந்தை யுவராஜா[141] வுடனும், 2 பேரன், சி.ராமச்சந்திரராவ் சூர்வே, மானப்பா மோஹிதேவுடனும் இரண்டு மாப்பிள்ளைகளும் சீக்காகயிருந்ததினால் அவர்களைத் தவிர்த்து, ரா.மேஸஜி மோஹிதே,[142] மாப்பிள்ளை ரா.யசவந்தறாவ் சூர்வே[143] மாப்பிள்ளை ரா. ராமசந்திரராவ் இங்களே,[144] ரா.ஸர்கேல்,[145] ரா.முஜீம்தார் (கலெக்டர்), ரா.சேனாதிபதி, ரா.கோட்டைக்காரர்,[146] பங்கு நாயிக், ராமசாமி அப்பா, ஸங்கிராமபாண்டாரின்[147] மத்யஸ்தர் அய்யாக்கண்ணு பிள்ளை,ஹுஜூர் நவீஸ் ரா.தாவீத் பிள்ளை இவர்களைக் கூட அழைத்துக் கொண்டு எல்லா எடுபடி சாமான்களுடன் சன்னாஹத்துடனும் சாயங்காலம் 5 மணிக்கு அரண்மனையிலிருந்து ஹௌதாவின் சவாரியுடன் புறப்பட்டு ரெஸிடெண்ட் சாயேப் அவர்கள் வீட்டிற்கு வடக்கேயுள்ள தோட்டத்தில் கவர்னர் சாயேப் அவர்களுடைய கூடாரமிருந்தது. ஆகையால் அச்சாயேப்பின் தோட்டத்திற்குள் சவாரி செல்லும்பொழுது வாசலிலுள்ளோர் மரியாதையைச் செலுத்திய பின்னர் கவர்னர் சாயேப் அவர்களுடைய துருப்புகள் துப்பாக்கியுடன் இருபக்கங்களிலும் ஒழுங்காக நின்று கொண்டிருந்தார்கள்.

அவர் மகாராஜாவைப் பார்த்து,கவர்னர் சாயேபவர்களுக்குச் செய்கிறாப் போல மரியாதை செய்தார்கள். அங்கிருந்து, கூடாரத்திற்குச் சமீபத்தில் சவாரி இறங்கினதும் ரெஸிடெண்ட் சாயேப்பும் போர்டின் 3வது க்யாதர்[148] க்யாம்பெல்[149] சாயேப் இருவரும் வெளியே வந்து மரியாதை செலுத்தி, க்யாம்பெல் சாயேப் கைப்பிடித்துக் கொண்டார். ரெஸிடெண்ட் சாயேப் சி.சின்னதிவான்[150] சாயேப்புக்கு மரியாதை செய்தார். எல்லோரையும் நாற்காலியின் மேல் அமரச்செய்து, கவர்னர் சாயேப்பும் நாற்காலியின் மேல் ஹுஜூருக்குப்[151] பக்கத்தில் அமர்ந்தார்.

---

140. ப்யாரோனட்-'Baronet' இளங்கோமானுக்கு அடுத்தபடி தாழ்ந்த பட்டம்.

141. யுவராஜா-இளவரசர்-சிவாஜி.

142. ரா. மேஸஜி மோஹிதே-இரண்டாம் சரபோஜியின் மாப்பிள்ளைகளில் ஒருவர்.

143. யசவந்தராவ் சூர்வே-இரண்டாம் சரபோஜியின் மகள் பாயம் மாபாயின் கணவன்.

144. ராமச்சந்திரராவ் இங்களே-இரண்டாம் சரபோஜியின் மகள் சக்பவார்பாயின் கணவன்.

145. ஸர்கேல்-ராமோஜி ஸர்ஜேராவ் காட்கே (பக்கம் 86)

146. கோட்டைக்காரர்-கில்லேதார்.

147. ஸங்கிராமபாண்டார்-யுத்தசாலை.

148. க்யாதர்-(மெம்பர்)-உறுப்பினர்

149. இது 'க்யாமெல்' என்றிருக்க வேண்டும் (மூட்டை எண்:851c-5-52)

150. சின்னதிவான் என்றது (இரண்டாம்) சிவாஜியை

151. இரண்டாம் சரபோஜி

5. (56) பிறகு கொஞ்சநேரம்
குசல பிரஸன்னமாகி,[152] சுகஸல்லாபமான[153] பிறகு கவர்னர் சாயேப் அவர்கள் முதலில் மகாராஜாவிற்குச் சந்தனம், புஷ்பம், விடையம், பன்னீர், அத்தர் கொடுத்து ஆடையும், பதக்கமும் கொடுத்தார். அதுவுமல்லாமல் பங்காலின்[154] லார்ட்[155] சாயேப் அவர்கள் கல்கத்தாவில் ஹுஜூருக்கு இனாம் கொடுத்த கங்காஜமுனி[156] ஹௌதாவுக்குச் சரியான ஹௌதாவுடன் யானையும் ஜேணங்களுடன்[157] இரண்டு குதிரைகளையும் இனாம் கொடுத்தார்.

பிறகு சி.சின்னதிவான் சாயேப்புக்கும் இருபேரன்களுக்கும்[158] 3 மாப்பிள்ளை சாயேப்புகளுக்கும்[159] சர்கேல்[160] வகையறாக்களுக்கும் மரியாதை செய்த பிற்பாடு ஹுஜூரின் சவாரி புறப்பட்ட போது, கவர்னர் சாயேப் வகையறா தோட்டத்தின் வாசப்படி வரையில் வந்து, வழியை விட்டு உத்திரவு பெற்றார்கள். முன்மாதிரி சவாரி அரண்மனைக்கு வந்து சேர்ந்தது.

5(66)
புகைக்கப்பலைப் பார்க்கப் போகுவதற்காகப் பல்லக்குத் தயார் செய்கிற விஷயம்.

5 (111)
வங்காளத்தின் கவர்னர் ஜனரல் மார்க் வீஸ் ஆப் ஹேஸ்டிங்ஸ் அவர்களுடைய படம் சீமையிலிருந்து எழுதி வந்ததை ரெஸிடெண்ட் சாயேப் ஹுஜூர் ராஜாவுக்குக் கொடுத்தார். அவருடைய பதவிக்கு ஏற்றபடி கௌரவஞ் செய்வதற்காக 21 குண்டுகள் போட்டார்கள். மஹாராஜா சாயேப் அவர்கள் சந்தனம், புஷ்பம், விடையம், மரியாதைக்குப் பின்னர் ரெஸிடெண்ட் சாயேப் தன் இருப்பிடத்திற்குச் சென்றார்.

சி.சிவாஜி றாஜா சாயேப் அவர்களுடைய 18 வயது பூர்ணமானதற்காக[161] ரெஸிடெண்ட் சாயேப் ஸஹபரிவாரங்களுடன் அரண்மனைக்கு வந்து மகாராஜாவினுடையவும், பாயிசாயேப்[162] அவர்களுடையவும் பேட்டிய்யை வாங்கி சந்தனம்,புஷ்பம்,வாங்கிக்கொண்டு திரும்பினார்கள்.

152. குசலப்பிரஸன்னம்-குசலப்பிரச்சினை-நலம் வினவுதல்

153. சுகம் ஸல்லாபம்-நலமென்று விடைகொடுத்த பிறகு

154. பெங்கால்-வங்காளம்

155. லார்ட்-வங்காளத்துக் கவர்னர்ஜெனரல் லார்டு ஹேஸ்டிங்க்ஸ் (1813-1823)

156. கங்கா ஜமுனி-ஒருதந்தமுள்ள யானை (பக்கம் 116)

157. சேணம்-கலனை (Horse sadle)

158. ராமச்சந்திரராவ் சூர்வே; மானப்பா மோஹிதே

159. மாப்பிள்ளை சாயபுகள் மூவர்-மேஸஜி மொஹிதே, யஸ்வந்தராவ் சூர்வே, ராமச் சந்திரராவ் இங்களே

160. சர்க்கேல்-ராமோஜி ஸர்ஜேராவ்காட்கே

161. பூர்ணமானதற்காக-நிறைவுற்றதற்காக

162. பாயிசாகேப் என்றது சிவாஜியின் தாய் ஆகிய அஹல்யாபாயியை

*5. 148-149*

*150. காசிக்கு (பனரஸ்) லால்கரீ என்கப்பட்ட மருந்தைக் காசித்தம்பிரானிடத்தில்[163] முதலிலனுப்பியிருந்தது. அது சேர்ந்ததற்குத் தம்பிரானிடமிருந்து வந்த ரசீது இதினுள் அனுப்பியிருக்கிறது.*

*5. (164 - 165) ஜோஸப் க்யாண்டன் என்பவருடைய கையினால் செய்யப்பட்ட இரட்டைக்குழாய்த்துப்பாக்கிகளும் இரட்டை ரைபிள் குழாயின் துப்பாக்கிகளும், ஒத்தைரைபிள் குழாயின் துப்பாக்கிகள் மாதிரிக்கு எத்தனை அகப்படும் அதன் விலை என்ன? விசாரணை செய்து அனுப்புகிறேன்.*

*முகாம். சென்னப்பட்டணம்.*

*5 (170) 1822*

*இன்று சீமையிலிருந்து வந்திருக்கிற ஒரு கடிதத்தை மிஸ்தர் அர்பத்நட் ஹுஜூருக்கு[164] அனுப்புவதற்குக் கொடுத்திருப்பதைத் தபாவில் ஹுஜூருக்கு அனுப்பியிருக்கிறேன்.*

*(172) இந்தப் பட்டணத்தில் ஒரு வார்த்தையைப் பேசுவதற்கு ஒரு பணம் வேணுமென்று கேட்கிறவர்களிருக்கிறார்கள்.*

*3.5.1834*

*ஸ்ரீசங்கராசாரிய ஸ்வாமியார்[165] மடத்துக்கு வியாஸ பூஜைக்குப்போன ராமச்சந்திர பட்டருக்கு ஜாஸ்தி படிச்சிலவு கொடுக்கவேணும்.*

*3. 1807*

*(22) ஸர்க்காரிலிருந்து சீமைக்குத் தபால் அனுப்புவதால் கும்பனி தபால்காரனுக்குக் கூலி 3 1/4 பணம் கொடுக்கப்பட்டது.*

*(25) 1852*

*பட்டாபிஷேகமான[166] விஜய பிரதாப பீடத்தின் பேரில் மகாராஜ ராஜஸ்ரீ திவான் சாயேப்[167] அவர்களுக்கு உட்கார வைப்பதற்கு முகூர்த்தம் செய்த வகையில் சிலவு.*

---

163. காசித்தம்பிரான் என்றது திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து அதிபரை. இந்தக் காலக் கட்டத்தில் காசி மடத்து அதிபராக இருந்தவர் ஸ்ரீலஸ்ரீ ஸ்ரீகாசி வாசி சடையப்ப சுவாமிகள் II (பக்கம் 424)

164. ஹுஜூர் என்றது இரண்டாம் சரபோஜியை

165. சங்கராசாரியர்-1814 முதல் 1851 வரை பீடாதிபதிகளாகவிருந்த ஐந்தாவது சந்திரசேகரேந்திர சரசுவதி சுவாமிகள் (பக்.433)

166. இரண்டாம் சிவாஜி 1852 இல் ஒரு பட்டாபிஷேகம் செய்து கொண்டதாகத் தெரிகிறது

167. திவான்சாயேப் என்றது இரண்டாம் சிவாஜியை

*1.1834*

*(4) நாலு வீதிகளை ரிப்பேர் செய்ய ஒவ்வொரு மாதத்திற்கும் நியமனஞ்செய்த தொகையில் கிழக்கு வீதியில் எடுத்துக் கட்டியின் ரிப்பேர் வேலை செய்ய உத்திரவு கொடுக்க வேண்டும்.*

*(6) ஜாபிதா:-*

*ஸங்கீத வித்யாதிகப் பிரிவு-[168] சக்ரீ மிருதங்கம் வாசிக்கிற ஜேது-1 மிருதங்கம் வாசிக்கிற காமாக்ஷி-1*

*ஹிந்துஸ்தானி பாடுகிற மீர்ரஹிமான், மிருதங்கம் வாசிக்கிற ஸோமாஜி கோபால் ராவ்சிந்தே.*

## மூட்டை எண் - 923 C

*9.1823 Jan 18*

*வெங்கடராயர்[169] ஹுஜூரிடம்[170] வந்து மகாராஜா நடு நடுவில் ரெஸிடெண்ட்[171] அவர்கள் வீட்டுக்கு வந்து கொண்டிருப்பேனென்று தன்னுடைய அபிப்ராயம் தெரிவித்திருந்தார். அவ்விஷயத்திலிருக்கிற இடஞ்சல் எனக்குத் தோன்றின விஷயம்.*

*மகாராஜா ரெஸிடெண்ட் வீட்டுக்கு வரும்பொழுது தன்னுடைய குழந்தையை[172] அழைத்துக்கொண்டு வருகிறேனென்று முன்னால் தெரிவிக்கவில்லை. இன்னும் இராமேஸ்வரத்திலிருந்து வந்தபின்பு[173] முதலில் டாக்டர் மக்லோட்[174] அவர்கள் வீட்டிற்கு மகாராஜா சென்று பின்பு ரெஸிடெண்ட் வீட்டுக்கு வந்தார். இன்னும் டாக்டர் மக்லோடின் சம்சாரத்தை அரண்மனைக்கு வரவேணுமென்று மகாராஜா கூப்பிடும் பொழுது, நம்முடைய ரெஸிடெண்ட் அவர்களின் சம்சாரம் மூலமாக அழைத்திருக்கவேணும். அவர்களை வேறு விதமாக அழைத்ததினால் தனக்கு அவமரியாதை ஆனதால் இனி மகாராஜாவானவர் நம்முடைய வீட்டுக்கு வரவேண்டியதில்லை. மகாராஜாவுடன் ஏதாவது பேசவேண்டிய அவசியமிருந்தால் நான் அவரிடம் சென்று பேசுவேன். இந்த விஷயங்களை மகாராஜாவிடம் சாவகாசமாகத் தெரிவியுங்களென்று ரெஸிடெண்ட் சாயேப் சொன்னதாகத் தெரிவித்தார்.*

*அதற்கு மகாராஜா வெங்கட்ராயருக்குப் பதில் கொடுத்தார். இராஜாவின் சவாரி என்றால் தனியாய் வரமாட்டார். கூட யாராவது இருப்பார்கள்தான். நான் டாக்டர் மக்லோட்டின் சம்சாரத்தை நானே கூப்பிட்ட விஷயத்தில் ரெஸிடெண்ட்டின் மன்னிப்பைக் கேட்டதாகச் சொல்லச் சொன்னார்.*

---

168. ஸங்கீத வித்யாதிகப்பிரிவு-வாய்ப்பாட்டில் வல்லவர்களும், இசைக்கருவிகளை இயக்குபவர்களும் இருக்கும் பகுதி ( பக். 229)

169. வெங்கடராமையா -ரெஸிடென்டின் சிரஸ்தேதார்

170. ஹுஜூர் என்றது இரண்டாம் சரபோஜியை

171. ரெஸிடென்டு என்றது வில்லியம் பிளாக்பர்ன் (Whilliam Blackburn) என்பவரை

172. குழந்தை என்றது இரண்டாம் சிவாஜியை

173. இராமேசுவர யாத்திரையை முடித்துக்கொண்டு தஞ்சையை அடைந்தது 21-5-1822இல் (பக். 127)

174. சரபோஜி காசி யாத்திரைக்குச் சென்றபொழுது உடன் சென்ற ஆங்கில மருந்துவர் டாக்டர் ஸட்டன் என்பவர் காசியில் இறந்து போனார். வங்காளத்திலிருந்த கவர்னர் ஜெனரல் உடனே டாக்டர் தலைநன் மக்லோட் என்பவரை அனுப்பினார்.

இப்பொழுது முன்மாதிரி ரெஸிடெண்ட் சாயேப் இல்லை. அவருக்குப் பணத்தாசை பிடித்திருக்கிறதோ என்னமோ என்றார்.

அதற்கு வெங்கட்ராவ் கேட்டு, இப்பொழுது ரெஸிடெண்ட்டுக்குப் பணத்தாசையில்லை. மாகாராஜா முந்தியே கொடுத்த பணத்தினாலேயே திருப்தி அடைந்தவராயிருக்கிறார் என்றார். இந்தப்படி பேசி, பிறகு வீட்டுக்குச் சென்றார்.

*1823 jan 21*
இன்று பகல் பத்து மணிக்கு ரெஸிடெண்டும், அவருடைய அஸிஸ்டெண்ட் தரடிசாயேப்பும் பிரதான கலெக்டர் காடனும், இஞ்சீனியரும், அவருடைய இன்னொரு துரையும் அரண்மனைக்கு வந்தார்கள்.

மாடியில் சபையில் எல்லோரும் உட்கார்ந்த பின்பு தஞ்சாவூர் கோட்டைக்குச் சுற்றிலுமுள்ள லயனின் நிச்சயம் அந்த சாயேப்பே செய்து அவ்விஷயமாகக் காகிதத்தில் ஒரு படம் வரைந்து கொண்டு வந்து, ஹுஜூருக்குக் காட்டினர். அதில் லயனின் தூணின் மத்தியை எழுதியிருக்கிறதென்று, அந்தத் தூண் சுமாருக்குக் கொஞ்சம் முன்பின் தூணில்லாத இடத்திற்கும், ஓர் அடையாளஞ் செய்திருப்பதாகத் தெரிவித்தார்.

*9(4)1823 Jan 21*
அதை எல்லாம் ஹுஜூர் மனதில் ஏற்றுக்கொண்டு இந்த விவஸ்தை[175] நமக்குச் சுக்கரமாக[176] இல்லை. நாம் நம்முடைய சுகத்திற்காக நம்முடைய ஸமஸ்தானத்தை ஆங்கிலேயரிடம் ஒப்புவித்தோமே அல்லாமல் கஷ்டம் அடைவதற்காக அல்ல.

மிஸ்தர் டூரின்[177] சாயேப் நம்மைப் பார்த்து, ஸமஸ்தானத்தை நீங்கள் வைத்துக்கொள்வதால் அதிகக்கஷ்டத்தை அடைவீர்களாகையால் அதை ஆங்கிலேயரிடம் ஒப்புவிப்பதால் அவர்கள் கொடுக்கும்படிக்கு நிச்சயமாகும் துகையைப் பெற்றுக்கொண்டு நீங்கள் சௌக்கியமாக இருக்கலாம்.
(5) கோட்டையிலுள்ள ஆங்கிலேயரின் க்யாரீஸணை[178] எடுத்து விட்டால்[179] கோட்டைக்குள்ளும் வெளியிலும் மகாராஜாவின் சௌக்கியத்தின் பொருட்டுக் கொஞ்சம் தூரம் வரையிலும், ஆங்கிலேயருடைய அதிகாரத்திற்குள் வராமல் மகாராஜாவின் முழுஅதிகாரத்திற்குள் மாத்திரமிருக்கிறதினாலே மகாராஜாவிற்கு சுகமாக யிருக்கும் என்று தெரிவித்தார்கள்.

---

175. விவஸ்தை-ஏற்பாடு

176. சுக்கரமாக-இன்பம் தருவதாக

177. டூரின்-Benjamin Torin இவர் கி.பி. 1798 முதல் ரெஸிடென்டாக இருந்தவர். இரண்டாம் சரபோஜி உடன்படிக்கை செய்துகொள்ள உதவியவர் (போ. வ. ச. பக். 136)

178. கியாரிஸன் (Garrison) கோட்டைக் காவற்படை

179. படையை அப்புறப்படுத்தியமை (போ.வ.ச.பக்.135)

நாங்களும், ஆங்கிலேயருடைய சிநேக ஸந்தோஷத்திற்கே பாத்தியமாக இருக்க வேண்டுமென்கிற எண்ணத்தினால் அவர்களுடைய புத்திமதியை ஏற்றுக்கொண்டோம்.

அந்தச் சாயேப்பும் கோட்டைக்குச் சுற்றிலும் நம்முடைய சௌகரியத்திற்காக எவ்வளவு தூரம் வரையில் நம்முடைய அதிகாரம் இருக்கும்படி செய்திருந்தார்கள். பிறகு சில நாட்களுக்குப்பின் ஒவ்வொன்றாகக் குறைத்துக்கொண்டு வந்து, இப்பொழுது இவ் விவஸ்தையைச் செய்கிற வரையில் வந்திருக்கிறது.

ஸர்காருடைய அநேக சிப்பந்திகளின் வீடுகளும், சொந்தமான தோட்டங்களும், பேட்டை வகையறாக்களும், நீங்கள் காட்டுகின்ற அடையாளங்களுக்கு வெளியில்தானிருக்கிறது. அதைத்தவிர கோட்டையில் 25 ஆயிரம் ஜனங்களும், ஆடு, மாடு, வாகனங்களும் இருக்கின்றன.

அவை கோட்டைக்கு வெளியில் அலைவதற்கும், சுற்றுவதற்கும் கூட இந்த விவஸ்தை அவைகளுக்கு இடைஞ்சலாக யிருப்பதால் கோட்டைக்கு வடக்கே எல்லைவிண்ணாற்றின் தென்கரை வரையிலும், தெற்கே ஜெட்டிகளின் தண்ணீர்ப்பந்தல் 9 வரையிலும், கிழக்கே மாரியம்மன் கோவில் வரையிலும் மேற்கே சம்புமகாதேவ பட்டணம் கலிகோடி[180] வரையிலும், இதுவரைக்கும் நம்முடைய பூர்ண அதிகாரத்தில் ஒப்புவிக்கவேணும்.

அப்படிச் செய்யாவிட்டால் கோட்டையில் வசிப்பது சுகத்தைக் கொடுக்காது. இப்பொழுது நீங்கள் கட்டுகிற அந்த அடையாளம் பிரகாரம் நிச்சயமானுல் ஒரு வீட்டில் வீடு நிறைய மனிதர்களிருக்கையில் கதவை மூடிவைத்தால் அதிலுள்ள ஜனங்களுடைய சுகத்துக்கும் அந்தக் கோட்டைக்குள் உள்ள ஜனங்களுடைய சுகத்திற்கும் வித்தியாசம் தோணவில்லையாகையினால் நம்முடைய சுகத்திற்காக ரெஸிடெண்ட் சாயேப் தயவுசெய்து கவர்ண்மெண்டுக்கு எங்களுடைய இந்த உத்தேசத்தையும் அதனால் நமக்கு ஏற்படக்கூடிய கஷ்டத்தையும் தெரிவித்து, நாம் தெரிவித்த எல்லைப் பிரகாரம் நம்முடைய அதிகாரத்தில் ஒப்புவிக்கும்படி செய்யவேணும்.

ஒரு வேளையில் அதற்காக நாமும் கவர்ண்மெண்டாருக்கு எழுதுவது. ரெஸிடெண்டுக்குச் சரியானபடி தோணினுல் நாமும் எழுதுகிறோம். அப்பொழுது நம்முடைய சுகமாயிருக்கிற காரியத்திற்குக் கலெக்டர் சாயேப் அவர்கள் சகாயமாக இருக்க வேணுமென்று ரெஸிடெண்ட் அங்கீகரித்தும் கலெக்டருக்கும், மகாராஜாவின் உத்தேசத்தைத் தெரிவித்து, அவருடைய பதிலையும் வாங்கி, கலெக்டர் சாயேப் ஒருபொழுதும், மகாராஜாவின் ஹிதத்தை நாடியே யிருப்பாரே தவிர, அவர்களுடைய அதிகாரத்தின் விவஸ்தையை[181] மீறுவதற்கு மாத்திரம் பின்வாங்குவார் என்றார்.

அதற்கு அவர் அப்படி விவஸ்தையை மீறவேண்டுமென்று நம்முடைய எண்ணமல்ல. அவர் எப்பொழுதும் ஹிதத்தையே நாடுகிறவராக யிருந்து, தயையுடனிருக்க வேண்டுமென்று மாத்திரம் பிரார்த்திக்கிறோம் என்று மகாராஜாவானவர் தெரிவித்ததற்கு எல்லோரும் அந்த

180. கலிகோடி-களிமேடு என்ற ஊர் ஆகலாம்

181. அதிகார விவஸ்தை- அதிகார வரம்பு

வார்த்தையை ஏற்றுக்கொண்டார்கள். எல்லோருக்கும் வெகுமதி, ஆடை, விடையம், பன்னீர், சந்தனம் கொடுத்து உத்திரவு கொடுத்தார். அவர்கள் போகும்பொழுது ஜீராத்கானா (ஆயுதசாலை) யிலுள்ள சரபோஜி ராஜாவின் பிம்பத்தைப்[182] பார்த்துப் போனார்கள்.

*9. 1823 Feb. 26*

(9) இன்று ரெஸிடெண்ட் ஆபிஸின் இராமசாமி நாயிக் ஹுஜூரின் பேட்டிக்காக வந்து பதிலி ரெஸிடெண்ட்[183] ஹர்டிஸ் சாயேப் அவர்களுடைய சலாம் சொல்லி ஆற்காடு நவாப்[184] சாயேப் அவர்கள் நாகூருக்கு வந்திருக்கிறார். அவர் வருகிற மார்ச்சு மீ 5உக்குப் புது சாலிமங்கலத்திலிருந்து புறப்பட்டு தஞ்சாவூர் கோட்டைக்கு மேற்கிலுள்ள லக்ஷத்தோப்பில் வந்து இறங்கப் போகிறார். அவர்களுக்கு மரியாதையும் பிரதி மரியாதையின் ஸந்நிதானத்தின் அபிப்பிராயம் மகாராஜாவிற்கு இருக்கிறதெப்படி என்றறிந்து அவ்விஷயத்தில் நான் முயற்சி செய்ய மகாராஜாவின் எண்ணத்தை அறியவேண்டுமென்று தெரிவித்து, ஒர் அந்தரங்கமான கடிதத்தையும் கொடுத்தார். அதையும் மனதில் வாங்கி யோசனை செய்து பதிலைத் தெரிவிப்பதாக நாயிக்கருக்கு உத்திரவிட்டார்.

*9.1823 March 10*

(10) இன்று அஸ்தமான ஸமயத்தில்[185] நவாப்பு[186] கிழக்கிலிருந்து "ஜயமான" வாசலின் அகழியின் ரேவணியின் வழியாகப் போகும்பொழுது, கோட்டையின் மேல் 21 குண்டுகளைப் போட்டார்கள். அவர் லக்ஷத்தோப்பில் இறங்கியிருக்கிறார்.

*(8) March 8*

இன்று 10 மணிக்கு க்யாப்டன் ஹரடி சாயேப் நவாப் சாயேப்புடன் வந்தார். துரை மேஜர் கவர்ண்மெண்டின் ஏஜண்டும் கர்னலும், க்யாபீன் வகையறா 5 பேரும், தஞ்சாவூர் கலெக்டர் மிஸ்தர் காடன், இந்த 8 பேர்களுடன் அரண்மனைக்கு வந்தார். கிருஷ்ணவிலாஸம்[187] சௌகண்டியில் எல்லோருடைய பேட்டியையும் வாங்கி மரியாதை செய்து, அவர்களுடன் மாடியில் வந்து, இளவரசனுடைய[188] பேட்டியைச் செய்து வைத்து ஸபையில் அமர்ந்தார்.

குசலப்ரஸ்னம்[189] க்ஷேமசமாதானம் பேச்சுவார்த்தைகளும், நவாப்பு சம்மந்தமாக

182. பிம்பம் - சரபோஜியின் வெள்ளைக்கல் சிலை

183. பதிலி ரெஸிடென்ட்-ரெஸிடென்ட் பிளாக் பர்னுக்குப் பதிலாகத் தற்காலிகமாக இருந்தவர்

184. முகம்மது அலிக்குப் பிறகு உம்தத் உல் உமரா; இவர்க்குப் பிறகு 31-7-1801 இல் அஜீம் (Azim-ool-Dowian) ஆர்க்காடு நவாப் ஆனார். இவர் 3-8-1819 இல் இறந்தார். ஆறு மாதங்கட்குப் பிறகு அஜீமின் முதல்மகன் அஜாம் ஷா(Azam Shah) நவாப் ஆனார். (P. 397, 398, 403) 1984, (Ramaswami, N.S. Political History of Carnatic under the Nawabs. அஜாம் ஷாவே இங்குக் குறிக்கப்பட்ட நவாப் ஆகலாம்

185. அஸ்தமான சமயம்-மாலை நேரம்

186. ஆர்க்காடு நவாபு அஜாம்ஷா

187. கிருஷ்ணவிலாஸ்-அரண்மனையின் தரைப்பகுதி

188. இளவரசர்-(இரண்டாம்) சிவாஜி

189. குசலப்பிரஸ்னம் - நலம் வினாவுதல்

ஸாதாரணப் பேச்சுகளும் நடந்தன. எல்லோருமெழுந்து இங்குள்ள இராஜாக்களின் படங்களைப்பார்த்து, ஆங்கிலேய வாத்தியங்களையும் பார்த்து, மாடியிலுள்ள இதர படங்களையும் பார்த்து, சந்தோஷமடைந்து அமர்ந்தார்கள்.

கலெக்டர் காடன் சாயேப் அவர்கள் மகாராஜாவைப் பார்த்து சுரப்பின்னை மரத்தின் விஷயமாக முதலில் மகாராஜாவானார் அக்கஸாகத்[190] தெரிவித்திருந்தார். அதன்மேல் மகாராஜா அவ்விஷயத்தில் ஞாபகமூட்டவில்லை. இப்பொழுது நானே மகாராஜாவிற்கு ஞாபகப்படுத்துகிறேனென்றார்.

*9,1823 March 8*

*(10)* அதற்காக மகாராஜா நன்றியைக் காட்டி, சுரப்பின்னை மரம் வேண்டியதற்காக ஞாபகப்படுத்தி அனுப்புகிறேன் என்றார்.

எல்லோருக்கும் சந்தனம், புஷ்பம், ஆடை, விடையம், பன்னீர், அத்தர் கொடுத்து உத்திரவு கொடுத்தார். அவர்கள் போகும்பொழுது, அச்சு எழுத்துக்கள் தயார் செய்கிற வேலையையும், சீமைக்குதிரைகளையும், ஜீராத்கானாவிலுள்ள[191] சரபோஜியின் பிம்பத்தையும் ஹஜாரியில்[192] புலியின் வேடிக்கையையும் பார்த்துப் போனார்கள்.

இன்று சாயந்திரம் நவாப் சாயேப்பின் ஸ்திரிகள் நவாப் வந்த வழியாக வந்து, கிழக்கிலிருந்து வந்ததினால் கோட்டையின் மேல்21 குண்டுகளைப் போட்டார்கள்.

*1823 March 9*

இன்று நவாப் சாயேப் மகாராஜாவிற்குப் பிரதிமரியாதை செய்வதற்காக, சாவரியுடன் பீரங்கியும் ரேகளாக்களு[193]மில்லாததினால் அவர்கள் மேஜர்சாயேப்பிடமிருந்து சர்காருடைய 2 பீரங்கிகளைக்கொணர்ந்து, 21 குண்டுகள் போடக்கொண்டு போனார்கள். ஸர்காரிலிருந்து கோட்டையின் மேலிருந்தும் 21 குண்டுகள் போட நிச்சயமாயிருக்கிறது.

*(11) March 12 1823.*

இன்று விடியற்காலைக்குமுன் சாயேப் சிங்கங்காட்டின் வழியாகத் திருச்சினாப்பள்ளிக்குப் பிரயாணமானார்.

பிரயாணத்திற்கு முந்தி அவர்கள் 21குண்டுகளைப் போட்டு 2 பீரங்கிகளையும்(ஸர்காருடையதாகயால்) அவர்களிடம் அனுப்பிவிட்டார். அந்த நவாப் சாயேப் தன்னுடைய ஸைன்யத்தில் பீரங்கி விடுகிறபோது இங்கு கோட்டையின் மேலும் 21 குண்டுகளைப் போட்டார்கள்.

---

190. அக்கஸாக - அக்கரையாக

191. ஜீராத்கானா-யுத்தசாலை

192. ஹஜாரி-வடக்குவாசல்

193. ரேகளாக்கள்-குதிரைபூட்டப்பட்ட விரைவு வண்டிகள்

***9.1844 Jan 30***

*(32) மகாராஜாவுக்கு[194] க்ஷேமமுண்டாக வேணுமென்று நான் குருவினிடம் உபதேசம் வாங்கி குரு(பிரஹஸ்பதி) யந்திரம்[195] வரைவதற்குக் கற்றுக் கொண்டிருகிறேன். அதற்குவேண்டிய மந்திர தந்திராதிகளும் எனக்குத் தெரியும். ஷெ யந்திரத்தை மகாராஜா சாயேப் வாங்கி குலதேவதையின் முன்னிலையில் வைத்து ஆராதனை (பூஜை செய்தால்) புத்திர சந்தான[196] முண்டாகும்.*

***1824 Dec 20***

(47) பன்னிரண்டு மகால்கள்

*கஜானா[197], கொட்டியம்[198] (தான்யம் வைக்கிற இடம்), குதிரை லாயம்[199], தட்டி மகால்(மாடுகளிருக்குமிடம்), இரதசாலை - வண்டியிருக்குமிடம், தையல் நிலையம்[200], பல்லக்கு நிலையம்[201], சமையல் இடம்[202], மராமத்து[203], நாணயம் தயாரிக்குமிடம்[204], தான்யமிருக்குமிடம்[205], வேலைக்காரர்கள் நிலையம்*

---

194. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

195. பிரஹஸ்பதியந்திரம்-இவ்வியந்திரம் பின்வரும் நூலில் இரண்டாவது பாகத்தில் பக்கம் 743இல் கொடுக்கப்பட்டுள்ளது.

ஸ்ரீவித்யார்ணவதந்த்ரா-(பதிப்பாசிரியர்கள்) ராம்சந்த்ர கக், ஹரபட்ட சாஸ்திரி 1932 ஸ்ரீநகர் காஷ்மீர்.

"ஸ்வர்ணாதிபட்டே குங்குமாதிநா தீர்க்க சதுரஸ்ர கர்ப்ப ஷட்கோணாஷ்டதல பூபுராத்மகம் யந்த்ரம்" இதன்பொருள்:-

பொன்தகடு முதலியவற்றில் குங்குமத்தினால் ஒரு சதுரம் வரைக. இச்சதுரத்துக்குள் (1)ஆறுகோணங்களும் (2) எட்டுத்தளங்கள் உள்ளவடிவமும் (3) பூபுரமும் (ஒரு சதுரமும்) வரைக.

குறிப்பு:- எட்டுத்தள வடிவத்தை வரையுமுன் ஒரு வட்டத்தை வரைந்தும் பூபுரத்தில் நான்குவாயில்கள் அமைத்தலும் மரபாகும்.



196. புத்திரசந்தானம் - மக்கட்பேறு

197. கஜானு - போத்தேமகால்

198. கொட்டியம் - கோட்டி மகால்

199. குதிரை லாயம் - பாகா மகால்

200. தையல் நிலையம் - தர்ஜிமகால்

201. பல்லக்கு நிலையம் - பால்கிமகால்

202. சமையல் இடம் - முதபக் மகால்

203. மராமத்து - இமாரதி மகால்

204. நாணயம் தயாரிக்குமிடம் - டங்கமகால்

205. தான்யம் இருக்குமிடம் - தாஸ்தான் மகால்

18. கானா

கானா‌» வஸ்திரங்களிருக்குமிடம்[206], நகை செய்யுமிடம்[207], குளிர்ந்த சர்பத் தயாரிக்குமிடம்[208], சாராயக் கிடங்கு[209], ஆயுத சாலை[210], யானைச் சாலை[211], ஆடை நிலையம்[212], வேட்டை நிலையம்[213], விஸ்தீர்ண நிலையம்[214], ஜல சாலை[215], தாலிம் (குஸ்தி) செய்யுமிடம்[216], ரிகார்டு கச்சேரி[217], வெடிமருந்து நிலையம்[218], தோட்டம் சம்பந்தமான இடம்[219], மருந்து சாலை[220], தான்ய மிருக்கு மிடம்[221] களஞ்சியம், வரி வசூலிக்குமிடம்[222], கூடாரங்கள் வைக்குமிடம்[223]

*9. AD 1740*

(49) பிரதாபசிங்க[224] மகாராஜாவின் பட்டாபிஷேகம்:-

கி.பி.1740 ஆனது. இவர்களுடைய பெண்சாதிகள்[225] சௌ.யமுனாம்பாபாயி சாயேப்-1, சௌ. சக்வார்பாயி சாயேப்-1.

---

206. வஸ்திரங்கள் இருக்குமிடம் - ஜாம்தார்கானு

207. நகை செய்யும் இடம் - ஜர்கர் கானு ஆகலாம்.

208. சர்பத் தயாரிக்குமிடம் - ஸர்பத்கானு

209. சாராயக் கிடங்கு - சராப் கானு

210. ஆயுத சாலை - ஜிராத்கானு

211. யானைச் சாலை - ஹத்திகானா; பீல்கானா

212. ஆடை நிலையம்(?) - துஸ்த கானு

213. வேட்டை நிலையம் - சிக்கார் கானு

214. விஸ்தீரண நிலையம் - லங்கர் கானு

215. ஜலசாலை - அப்தார் கானு

216. தாலிம் கானு

217. ரிக்கார்டு கச்சேரி - தப்தர்கானா

218. வெடிமருந்து நிலையம் - தாருகானு (தோட்கானு)

219. தோட்டம் சம்பந்தமான இடம் - ஷேத்கானு

220. மருந்து சாலை - தலாகானு (பக்கம் 453)*

221. தான்யமிருக்குமிடம் - அம்பார் கானு (பக்கம் 453)

222. வரி வசூலிக்குமிடம் - தஸ்தகானு

223. கூடாரங்கள் வைக்குமிடம் - பராஸ்கானு (See Shiva Chatrapathi, Page, : Carpets, Tents, and Accessories)

224. பிரதாபசிங்கர் - துக்கோஜியின் மகன்

225. பிரதாபசிங்கரது மனைவியர் ஐவர்; அவர்களில் இருவர் பெயர்கள் இங்குக் கூறப்பட்டுள்ளன (போ.வ.ச.பக்.82)

9.1798 June 30
(50) மகாராஜ ராஜேஸ்ரீ சரபோஜி ராஜா சாயேப் அவர்களுக்குப் பட்டம் கொடுக்கப்பட்டது. கல்யாண்முமானது. சனிக்கிழமை. சரபோஜி மகாராஜாவுக்குத் தஞ்சாவூர் ஸமஸ்தானத்தில் 1798 கி.பி. மொஹரம் 15 உக்கு[226] பட்டாபிஷேகம் ஆயிற்று. 1798 கி.பி. ரம்ஜான் 20உ[227] செவ்வாய்கிகிழமை[228] பகல் 3 நாழிகைக்கு முதல் கலியாணமானது. 2ம் கலியாணம் 27 நாழிகைக்கு அரண்மனையில் ஊர்வலம் ஆயிற்று..
சௌ.யமுனாம்பாபாயி சாயேப், சௌ.அஹில்யாபாயி சாயேப் ஷெ ஞூ சந்த்[229] 2உ சௌ.அஹில்யாபாயி சாயேப் பெரியவளானார். சந்த் ?உ நிஹேக முகூர்த்த[230] மானது.
1800 Nov. 19உ சௌ.யமுனாம்பாபாயி சாயேப் ருதுமதி[231] ஆகி 3 நிஹேக முகூர்த்தமானது.

1832 March ?உ
(51) சரபோஜி மகாராஜா கைலாஸவாஸி ஆனார். கர ஞூ பாலகுணசுத்த பஞ்சமி தினம் இரவு 4 மணிக்கு

9. 1808 Dec 4 உ
(52) மகாராஜ ராஜ ஸ்ரீ சரபோஜி ராஜாவின் பிள்ளை சிவாஜி மகாராஜாவின் ஜனனம் கலியாணம் வகையறா ஆனதின் வரலாறு.

சரபோஜி ராஜாவின் 2ஆவது சம்சாரம் அஹல்யாபாயி அவர்களுக்குச் சிவாஜி ராஜா பிறந்தார்.

பிரபவ ஞூ மாசி மீ 23 உ மார்ச்சு மீ 22 உ சிவாஜி ராஜா என்று பெயர் வைத்தது.

செப்டம்பர் மீ 30 உ சிவாஜிராஜாவிற்கு அன்ன பிராசனமும்,[232] உட்காரவைக்கிற முகூர்த்தமும் நடந்தது.
1764
(53) துளஜா மகாராஜாவின் சமாசாரம் சுபானு - ஞூ துளஜா மகாராஜாவிற்குப் பட்டாபிஷேகம்.மார்கசீரிஷ்வத்யம் 13உ[233] ஞாயிற்றுக்கிழமை.

---

226. கி.பி.1798 மொஹரம் 15/ = 29-6-1798 வெள்ளிக்கிழமை

227. கி.பி.1798 ரம்ஜான் 20/ = 8-3-1798

228. செவ்வாய்க்கிழமை என்பது தவறு; வியாழக்கிழமை

229. 'ச' என்ற நாகரி எழுத்தின் மூலம் இசுலாமிய மாத நாளைக் குறிப்பிடுகின்றனர். இசுலாமிய மாதம் சந்திரனை அடியொற்றியதால் சந்த் எனக் குறியீடு செய்கிறார்.

230. நி ஹேக முகூர்த்தம் - நிகேஷக முகூர்த்தம்-மனையறம்படுத்தல்.

231. ருதுமதி - பூப்பு எய்துதல்.

232. அன்னபிராசனம் - குழந்தைக்குச் சோறூட்டும் சடங்கு

233. 1-1-1764

பிரபவ ஸு மாகசுத்த[234] பக்ஷத்தில் கைலாஸவாஸி ஆனார். 1776 துளஜா மகாராஜா சாயேப் அவர்களுக்குத் துர்முகி ஸு கார்த்திக சுத்த பக்ஷம் திருதியை வியாழக்கிழமை[235] தினம் நடந்த விவாகத்தில்[236] பாயி சாயேப்புகளின் பெயர்.

முதலாவது சேகோஜி மாஹடிக் அவர்களின் குமாரத்தி சௌ.சுலக்ஷணாம்பாயி சாயேப் -1. 2ஆவது காசிராவ் இங்களே அவர்களின் குமாரத்தி சௌ.மோஹனாபாயி சாயேப் ஆக 2 பேர்.

*9. 1787 April 7*
(54) மஹாராஜ ராஜஸ்ரீ அமரஸிங்க இராஜாவுக்குப் பட்டமான சங்கதி பாராபவ ஸு பங்குனி மீ 28 உ சனிக்கிழமை பட்டாபிஷேகமானது.

*1776*
ஹேமலம்ப[237] ஸு சைத்ர வத்யம் ஷஷ்டி செவ்வாய்க்கிழமை பகல் 27 நாழிகைக்கு அமரஸிங்குபோஸலே அவர்களின் கலியாணமாயிற்று.

கோவிந்தராவ் காடிராவின் குமாரத்தி - முதலாவது. கிருஷ்ணம்மா காடேராவின் குமாரத்தி 2 ஆவது[238]. கலியாணத்திற்குத்திட்டம் 4000-இல் பெண்வீட்டுக்காரர்களுக்கு 1500-பாக்கி 2500-

*1802 April 18*
திருவிடமருதூரில் அமரசிங்போஸலே தைவகதியை அடைந்தார்.[239]
9. 1845[240] (56) ரா.ஸ்ரீ.சிவாஜி மகாராஜாவின் சம்சாரம் தைவகதியையடைந்த தேதிகள்.

சௌ. சொயிராம்பா[241]பாயி சாயேப் - ஆனந்த ஸு பாத்திரபத வத்யம்[242] ஏகாதசிக்குத் துவாதசி[243] திங்கட்கிழமை 9 மணிக்குக் கைலாஸவாஸமானார்.

---

234. பராபவ மாக சுத்தமாயின் ஆண்டு 1787 ஆகும்.

235. 14-11-1776

236. இவ்விருவரையும் மக்கட்பேற்றின்பொருட்டுத் திருமணம் செய்துகொண்டார் (போ.வ.ச.பக்.125)

237. ஹேமலம்ப என்றது சரியில்லை. மன்மத என்று இருக்கலாம்.

238. இரண்டாவது மனைவி பார்வதீபாயி (பக்.27)

239. தைவகதி அடைந்தார் - இறந்தார்.

240. ஆண்டு தவறாக உள்ளது.

241. இரண்டாம் சிவாஜி ஒரே நாளில் திருமணம் செய்துகொண்ட பதினெழுவரில் சிவாஜி இறப்பதற்குமுன் இறந்த இருவரில் ஒருவர் (பக்கம் 34)

242. பாத்திரபதம் - புரட்டாசி; வத்யம் - பகுளம் - தேய்பிறை

243. ஏகாதசி - பதினொன்றாம் நாள்; துவாதசி - 12ஆம் நாள்

சௌ. உமாம்பாபாயி[244] சாயேப் இராக்ஷஸ ஸு ஜேஷ்ட[245] வத்ய தசமி[246] சனிக்கிழமை பகல் 4 மணிக்குக் கைலாஸவாஸமானார்.

(57) ஹர் மாஜஸ்டீஸ் பஸ்ட் மெம்பரின் கௌன்ஸல்[247] அவர்களுக்கு - மகாராஜா சாஹேப் 3 நெல்ஸன் அவர்களுடைய மூர்த்திகளை[248] அனுப்பின விஷயம் எழுதின கடிதம் 1828 அக்டோபர் மீ 11வ 513 பக்கத்தில் டைரியில் தாக்கல் செய்யப்பட்டிருக்கிறது.[249]

9. 1854 Dec 15

(58) எக்ஜிபிஷன் (கண்காட்சிக்கு) அனுப்புவதற்குச் சிவாஜிராசா சாயேப் அவர்கள் ரெஸிடெண்ட்டுக்கு நாணயம் வாரி ஜாபிதாவுடன் அனுப்பியிருக்கிறார். அதில் அநேக விதமான நாணயங்களிருக்கின்றன.[250]

1802 Jan 16 முக்தம்பாபுரம் சத்திரம்[251] மராமத்துக்கு ஆரம்பம். துர்மதி ஸு புஷ்யசுத்தம் திரியோதசி சனிக்கிழமை[252].

1856

(59) ஹுஜூர் பங்க்

சத்திரம் வகையறாவிற்குச் சேர்ந்ததும், தேவஸ்தானம், பிராமண போஜனம், கட்டளை, உலுப்பை, காவடிக்காரர்களுக்கு (காசி காவடிக்கு) ஆள் மாகாணம் வகையறாவுக்கு ஆக வேண்டிய பாக்கி சிலவும் சரியானபடி விவஸ்தை ஆகாதபடியால் அவசியமான சிலவைத் தவிர ஜாஸ்தி சிலவைக் குறைக்க வேணுமே. அது குறைக்காமல் சிலவு மாத்திரம் செய்துகொண்டுவருவதால் துகை உபாரில்லாமல்(மீறாமல்) போய் விடுகிறது. ஏனென்றால் :- ஒருவேளை சத்திரத்தின் வரவு குறைந்தாலோ அல்லது க்ஷாமம்[253] வந்தாலோ, மராமத்து வகையறாவுக்கோ அல்லது சத்திரத்தின் வரும்படியின் அபிவிருத்திக்காகச் செய்துதீர

244. உமாம்பா - பதினெழுவரில் ஒருவர் (பக்கம் 34)

245. ஜேஷ்ட - ஆனிமாதம்

246. தசமி - பத்தாம் நாள்

247. ஹர்மாஜஸ்டீஸ் பஸ்ட் மெம்பரின் கௌன்ஸல் - Her Majesty's first Member in Council. இதனுள் Her Majesty என்றது விக்டோரியா மகாராணியை

248. மூர்த்திகள் - உருவச்சிலை

249. டைரியில் தாக்கல் செய்யப்பட்டிருக்கிறது - நாட்குறிப்பேட்டில் எழுதப்பட்டுள்ளது. இதனால் இரண்டாம் சரபோஜி நாட்குறிப்பு (Diary) நாடோறும் எழுதச் செய்தார் என்று அறியப்பெறும்.

250. மூட்டை எண் 86c-13-1 மற்றும் மூட்டை எண் 86-13 பார்க்க. (பக்.160-162)

251. ஒரத்தநாடு சத்திரம்; முத்தாம்பாள் என்பவர் சரபோஜி திருமணத்துக்கு முன்னரே சேர்த்துக்கொண்ட காமக்கிழத்தி ஆவர். இவர் இறக்கும் பொழுது தன் பெயரால் ஒரு அன்னசத்திரம் ஏற்படுத்த வேண்டும் என்று வேண்டினர். அதன்படி சரபோஜி இச்சத்திரத்தைக் கட்டினர் (போ.வ.ச.பக்.136) (பக்கம் 273-274)

252. முக்தாம்பாள் சத்திரத்து நுழைவாயிலில் உள்ள மராத்திக்கல்வெட்டு இக்காலக் குறிப்பைக் கொண்டுள்ளது.

253. க்ஷாமம் - பஞ்சம்

வேண்டிய மராமத்து வகையறா முதலிய விசேஷமான சிலவு ஏற்பட்டாலல்லவோ அப்பொழுது அதற்காகப் போதாததாக வேறு ஏதாவது துகையை ஏற்பாடு செய்வதால் சத்திரத்திற்குக் கடன் ஜாஸ்தி ஆகுவது. மராமத்தில்லாமல் வரும்படி(வரவு) குறைந்து கொண்டு வருவது இப்பேர்பட்ட காரணங்களினால் தர்மம் முன்னாள் விருத்தியடைந்து நடக்காமல் விக்னம்[254] உண்டாவதற்குக் காரணமாயிருக்கிறது. அப்படி ஆகாமலிருப்பதற்காக இதனடியில் காட்டிய விவஸ்தை என்னவென்றால்:-

தற்போது எல்லாவிதமான வரவு தொடர்பாக கூடுதல் வரவு கிடைக்கிறதற்கு முக்கால் பாகம் துகையைச் சிலவு செய்து, கால்பாகம் துகையை மீத்துக்கொண்டு வருவதினால் மேற்சொன்னவற்றுக்கு உபயோகஞ் செய்வதற்குச் சௌகரியமாக விருக்குமாகையால் தற்போது அந்தந்தச் சத்திரத்தின் ஸ்திதிப்படி உத்தமமானதை மனதில் வாங்கி ஒரு விவஸ்தை செய்வதற்கு இதனடியிலெழுதப்பட்டிருக்கிற தென்னவென்றால்:-

(60) சத்திரத்தின் பெயர்[255] யமுனாம்பாபுரம் சக்குவாராம்பாபுரம்[256], ராஜஸாம்புரம்[257] சைதம்பாயிபுரம்[258], முக்தம்மாபுரம்[259]

| 10ஞ துகை | | | செலவுத்திட்டம் | | | உபரித்துகை | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| ரூ. | அ. | பை | ரூ. | அ. | பை | ரூ. | அ. | பை |
| 14156 | -0 | -3 | 10088 | -7 | -9 | 4067 | - 8 | - 6 |

திரௌபதாம்பாபுரம்[260] சுலக்ஷணாம்பாபுரம்[261], மோஹனாம்பாபுரம்[262],

254. விக்னம் - தடை

255. யமுனும்பாபுரம் - நீடாமங்கலத்துக்குரிய பெயர். யமுனும்பாள் என்பவர் பிரதாபசிங்கரின் மூன்றாவது மனைவி (போ.வ.ச.பக்.116) (பக்கம் 271)

256. சக்வாரம்பாள்புரம் - திருபுவனம்.சக்வாரம்பாள் - பிரதாபசிம்ஹருடைய மனைவி (போ.வ.ச.பக்.81) (பக்கம் 270)

257. இராஜஸாம்பாபுரம் - தாராசுரம், ராஜஸாம்பாள், இரண்டாம் துளஜாவின் முதல் மனைவி (போ.வ.ச.பக்.100) (பக்கம் 273)

258. சைதம்பாபுரம் - சூரக்கோட்டை; சைதம்பாள் - இரண்டாம் சிவாஜியின் முதல் மனைவி (பக்கம் 277;32)

259. முக்தம்பாபுரம் - ஒரத்தநாடு; முக்தம்பாள் இரண்டாம் சரபோஜியின் காமக் கிழத்தியாவர் (பக்கம் 273-4)

260. திரௌபதாம்பாள்புரம் - மணமேற்குடி; திரௌபதாம்பாள் பிரதாபசிங்கரது மனைவியருள் ஒருவர் (போ.வ.ச.பக்.82) (பக்கம் 271)

261. சுலக்ஷணாம்பாபுரம் - வேளங்குளம்; சுலக்ஷணாம்பாள் - இரண்டாம் துளஜாவின் மூன்றாவது மனைவி (போ.வ.ச.பக்.125) (பக்கம் 272)

262. மோகானும்பாள்புரம் - இராஜா மடம்; மோகனும்பாள் துளஜாவின் மனைவியருள் ஒருவர் (பக்கம் 271)

இராஜகுமராம்பா புரம்[263], மஹாதேவ பட்டணம்[264], மல்லியம்[265], பஞ்சநத மோஹநாம்பாபுரம்[266], இராமேஸ்வரம் பழைய சத்திரம், இராமேஸ்வரம் புதிய சத்திரம், இராமேஸ்வரம் கோயில் *496-15-0, 410-0-0, 86-1-5,* இதனால் சில சத்திரங்களில் கால் பங்குத் துகை மீத்து இருக்கிறது. சிலவற்றிற்குக் கொஞ்சம் குறைவு பட்டிருக்கிறது. சில சத்திரங்களுக்குப் போதுமான துகை வரும்படியில்லை.

*(61)* அப்படி ஈடாகாத சத்திரங்களில் சிலவை மேற்கண்ட காரணங்களினாலே இருந்தாற்போலிருந்து மீத்துகிறதினாலே ஜீவனஞ் செய்வதற்குச் சக்தியற்ற ஏழைகளுக்கு மிகக்கஷ்டம் ஏற்படுமாகையால், அப்படிக் கொஞ்சம் கம்மியாக இருக்கிறதற்கும் கொஞ்சம் கூட ஈடாகாத சத்திரங்களுக்கும் கிரமமாகக் கால்பங்குத் துகை மீத்தும் படியாக செய்கிற விஷயத்தில் சத்திரத்தின் அதிகாரிகள் எப்பொழுதும் அக்கரை உள்ளவர்களாக இருக்க வேணும். தவிரவும் இப்பொழுது கிடைக்கிற வரவைக்காட்டிலும் அதிக வரவு வந்தால் அத்துகை கால்பங்குக்கு மேலிருக்கிறதே என்று சிலவு செய்யக்கூடாது.
அதன்படியே அந்தந்தச் சத்திரங்களுக்கும் சேர்ந்த தேவஸ்தானத்திற்கும் இதுதான் விவஸ்தை. தற்போது வருகிற வரும்படிக்குக் கம்மி வரும்படி ஒரு வேளை எக்காரணத்திலாவது ஏற்பட்டால் முக்கால் பங்குக்கூட செய்வதற்குக் குறைந்தால் எந்தெந்தச் சத்திரங்களுக்கு வரும்படி குறைவு ஆகுமோ. அந்த வரும்படியில் முக்கால் பங்குச் சிலவு செய்து, போக பாக்கி, கால்பங்கு மீத்திருக்கும் படி உடனே வரும்படித்துகைக்கு விவஸ்தை செய்துகொண்டு அனுஷ்டிக்க வேண்டியது.

அப்படிச் செய்வதில் கால்பங்குத் துகை மீத்துவதற்கு முடியாமற்போனல் ஏதாவது கொஞ்சமாவது மீத்துவைக்க வேணும். இந்தப்படி எப்பொழுதாவது ஏற்பட்டால் அப்பொழுது மாத்திரம் உபயோகிக்க வேணும். ஆனல் அஜாக்கிரதையாக இந்தவழி ஏற்படாதபடி கவனிக்க வேணும். அப்படி மீத்தினதுகையைச் சத்திரமிலாகாவைச் சேர்ந்த உத்தியோகஸ்தர்கள் உடனுக்குடன் கொடுக்க வேணும். அந்தந்தச் சத்திரக் காரியஸ்தர்களுக்கு அந்தத்தொகைக்கு ரஸீது கொடுத்துவர வேணும்.

இந்தப்படி வித்யாஸமில்லாமல் அனுஷ்டித்து வருவதற்கு ஒவ்வொரு உத்யோகஸ்தனும் அவரவர் உத்யோகத் தர்மத்திற்கேற்றபடி கவனஞ் செலுத்தி ஜாக்கிரதை செய்ய வேணும்.

(62) சத்திர தர்மம்
கதி இல்லாதவன், பரதேசி, ஜீவனஞ் சம்பாதிப்பதற்குச் சக்தியற்றவன், இப்பேர்ப்பட்டவர்களுடைய உபயோகத்திற்காக அது ஏற்பட்டிருப்பதினால், வழிப்போக்கன்,

263. ராஜகுமாராம்பா புரம் - மீமிசல் (மீனமேசல்); ராஜகுமாராம்பா இரண்டாம் துளஜாவின் மனைவியருள் ஒருவர் (பக்கம் 270)

264. மகாதேவபட்டணம் - மன்னார்குடியின் தென்பக்கத்தில் அமைந்தவூர்; துக்கோசி தன் தமையன் சரபோஜியின் ஆட்சிக்காலத்தில் அங்குத் தங்கியிருந்தார். (போ.வ.ச.பக்.83) இங்கு உமாபாயி சாகேப் சத்திரம் என்றொரு சத்திரம் இருந்தது (பக்கம் 273) மூட்டை எண்:545c-26-14

265. மல்லியம் - மயிலாடுதுறைக்கு அடுத்த ரயிலடி மல்லியம். இங்குள்ள சத்திரம் மிகப்பழைய சத்திரமாதல் கூடும். 182க்குரிய குறிப்பு மூட்டைஎண் 167c-37-1 இச்சத்திரம் அஹல்யாபாயி மேற்பார்வையில் இருந்ததுஎன்றுகூறும் (பக்கம் 275)

266. பஞ்சநதம் - திருவையாறு. மோகனும்பாள் - இரண்டாம் துளஜாவின்மனைவியருள் ஒருவர்.

குருடன், முடவன், அங்கஹீனன்[267] குழந்தை, கிழவன், இம்மாதிரி ஜனங்களுக்கும் ஊரிலிருக்கும் கதியற்றவர்களுக்கும் இந்த தர்மத்தின் உபயோகம் அதிகமாக இருக்கவேணும்.

வழிப்போக்கும் ஜனங்களில் யாராவது வியாதியால் பீடிக்கப்பட்டு, சத்திரத்தின் சகாயம் அபேக்ஷித்தால்[268] அவர்களுக்குச் சத்திரத்தின் வைத்தியரைக்கொண்டு சிகித்ஸை செய்து, அவர்களுக்குக் குணமாகி, அவர்கள் ஊருக்குப் போகும் வரையில் பத்தியம் வகையறா ஜாக்கிரதை செய்கிறது.

உத்யோகஸ்தர் யாராவது வந்தால் அவரவர்களின் அந்தஸ்துப்படி சாப்பாடு வகையறாவும் மரியாதையும் செய்து வைக்கிறது.

சத்திரத்தின் உத்யோகஸ்தர் ஆள் மாகாணம், ஒருவரும் சத்திரத்தில் சாப்பிடக்கூடாது. அல்லது சத்திரத்திலிருந்து ஏதாவது ஸாமான் வகையறாவும் கொடுக்கக் கூடாது. அப்படி ஏதாவது நடப்பதாகத் தெரிய வந்தால் அவருக்கு யுக்தமான முறையில் கண்டிக்கவேண்டியது.

*9 (62)*

ஊரிலுள்ளவர்களின் ஜீவனோ பாயஞ் செய்வதற்குச் சக்தியுள்ள சோம்பேறி ஜனங்களுக்கு எவ்விதத்திலும் சத்திரத்தின் தர்மத்தின் உபயோகமிருக்கக்கூடாது-

இவ்விவஸ்தையெல்லாம் சத்திரத்துச் சிப்பந்திகள் மனதில் ஏற்றுக்கொண்டு, தர்மத்தின் வேறுவிதமாக விநியோகமாகாதபடி தர்மத்தின் முக்கிய தாத்பர்யத்தை[269] அறிந்து கொண்டு, அதன்படி அனுஷ்டானம் ஒவ்வொரு சத்திரத்திலும், நடக்கும்படியாக ஜாக்கிரதை செய்ய வேணும். மேற்கண்ட விஷயக்களுக்கு சூர்மகால் ரிகார்டு குமாஸ்தாக்கள் ஆலோசித்து, கணக்குவகையறாவிலுள்ள கம்மி ஜாஸ்தி கார்பார் ஆபிஸுக்குத் தெரிவித்து வரவேண்டியது.

மேற்கண்டபடி நடத்துகிறது. ஸேனா துரந்தர். ரா.ஸ்ரீ.நீலகண்டராவ் ஆனநாதராவ் ஜாதவ். ரா.ஜி.த.அப்பண்ணா ஜாதவ், சந்த்[270] 17 ஜில்காத்

*(63) 1806*

ஸர்கார் இலாகா சொந்தமான தோட்டம் சத்திரம் வகையறா

*11* திவான் வாடா, *13* சத்திரம், *217* தோட்டம், *161* சர்கார் தோட்டம் வகையறா, *4* சௌ.யமுனாம்பாபாயி[271] சாயேப்இடமிருந்து, *21*.சௌ.அஹில்யாபாயி[271] சாயேப்இடமிருந்து *29* பணிமங்கலம் தட்டியில் ஆடுமாடுகள் மேய்கிற தோட்டம், *2* ஹஜூர் தட்டி மஹால், *9*.பேட்டைகள், *51* சத்திரம் பாபத்து, *24* கிராமம், *24* தோட்டம், *3*.பேட்டை பட்டணம், *25*

---

267. அங்கஹீனன் - உடல் உறுப்புக்குறையுள்ளவன்

268. அபேக்ஷித்தால் - விரும்பினால்

269. தாத்பரியம் - கருத்து.

270. 1856 சந்த் 17, ஜில்காத் - இஸ்லாமிய மாத நாட்களைக் குறிக்கும் சொல்.

271. யமுனாபாயி - அஹல்யாபாயி-இவ்விருவரும் இரண்டாம் சரபோஜியின் மனைவியர் (போ.வ.ச.பக்.134)

*மொகாஸா கிராமங்கள், = 326, 3 யமுனாம்பாபுரம் அக்கிரஹாரத்திற்குக் கிராமத்துக்கு விபரம்*[272] *= 329.*

***49 கிராமங்கள் ,241 தோட்டங்கள், 12 தேவ பட்டணம் , 13 சத்திரங்கள், 11 திவான் வாடா (அரண்மனை), 3 யமுனும்பாபுரம் அக்ரஹாரத்திற்குக் கிராமங்கள் = 329***

***6-1799***[273]

*(1) ரா.ரா.திரியம்பக ஸம்பாஜி, வக்கில் அவர்களுக்குத் துளஜா மகாராஜாவின் நமஸ்காரம்.*

*தங்கள் வீட்டில் 3 சுபமான பிரயோஜனமானதின் பேரில் மனதுக்கு ஸந்தோஷமானது.*

*மொதலியின்*[274] *காரியஸ்தனிடம் இங்கு ஸர்காரின் ரசீதுபடி 5348 புலி வராகனுக்குத் துகை கொடுத்து ரசீதும் வாங்கியது*

*56 ஆயிரம் சொச்சம் வராகனுக்குக் கையெழுத்துடன் தஸ்தாவேஜை எல்லாவற்றையும் மத்தியஸ்தரிடம் கேட்டு வாங்கி அனுப்புகிறது. ஒரு கடிதம் பிப்ரவரிமீ*

*ஒரு கடிதமும், இந்தப்படி 2 கடிதங்களும் சேர்ந்து, சந்தோஷமடைந்தேன். கும்பனியின் துகையில் விஷயத்தில் சம்மதமாகாமல் நன்றாக தைரியமாக மிஸ்தர் ஸல்வனுக்குப் பதிலைக் கேட்டால் எல்லாம் சரியாக ஆகும் என்று மத்யஸ்தர் நம்முடைய நன்மையைக் கருதி மேலுக்கு மேல் எழுதிக்கொண்டு வருவதால் நாம் மிஸ்தர் சலவனுக்கு இன்று வரையில் நன்றாகத் தைரியத்துடனே நியாயம் பிரகாரம் தகுந்த பதிலைக் கொடுத்துக்கொண்டேதானிருக்கிறோம். மிஸ்தர் ஸலவனாவது துகையின் விஷயமாகக் கடூரமான பதிலைக் கேட்டால் மத்யஸ்தருடைய நம்பிக்கையின் பேரில் நன்றாகத் தைரியமாகவே பேசி, நிர்வாகம் செய்து வருகிறோம். இனிமேல் என்ன ஆகுமோ தெரியாது.*

*மிஸ்தர் வில்லியம் பிறந்த நாளில் ஒவ்வொரு வருஷமும் கொண்டாடுகிறார். அத்தினத்தில் வஸ்திரமும் பதக்கமும் கொடுத்து மரியாதை செய்து வந்தேன். இவ்வருஷமிவ்விடமில்லை. மதராஸிலே இருப்பதால் குழந்தையின் பிறந்த நாள் அவ்விடமே செய்வார். நாம் வழக்கப்படியே மரியாதை செய்வது முறையென்று மிஸ்தர் பரக் அவர்களுக்காக மஹதாபி ஆடை? 1ம், பதக்கம்-1ம் கடிதத்தின் ஒரு பையையும் கட்டாகக் கட்டி, தன்னுடைய முத்திரையயும் செய்து கொடுத்தனுப்பியிருக்கிறது. மிஸ்தர் பரக் தன்னுடைய குழந்தையின் பிறந்த நாளைக் கொண்டாடுகிறபோது ஆடை, பதக்கம், கடிதத்தின் பை இவைகளை மிஸ்தர் பரக்கிடம் சேர்ப்பித்து, நம்முடைய சலாமுந்தெரிவித்து, சில வார்த்தைகளைப் பேசி அவருடையமனதிற்குச் சந்தோஷமுண்டாகும்படி செய்யவும். ஜனவரிப் பண்டிகைக்காக அனுப்பித்த தங்களிடமுள்ள ஆடையையும், பதக்கத்தையும் மிஸ்தர் பரக் இடம் சேர்ப்பிக்கவும்.*

---

272. யமுனும்பாள்புரம் - நீடாமங்கலம்; யமுனும்பாள் பிரதாபசிங்கரின் மூன்றாவது மனைவி (பக்கம் 271)

273. துளஜாவைப் பற்றிய செய்தியாகையால் 1799 என்பது தவறு.

274. மொதலி என்பது பச்சையப்ப முதலியாகலாம் (பக்கம் 405-6)

வேண்டியவர்களுடைய கடன்கள் எல்லாத்துகையில் முதலிலே 3 ஆயிரம் வராகன் பாக்கி இருப்பதையும் சீக்கிரமே செலுத்தவேணுமென்று வேண்டியவரும் எழுதியிருந்தார். மத்யஸ்தரும் எழுதினர். கடன்களில் கொடுப்பதாயிருந்தால் வைத்துக்கொண்டு கணக்கின்படி ஏதாவது பாக்கிக்கு மத்யஸ்தர் மசோதா பேரில் அதன்படி பாக்கி பையுடன் அனுப்பினதின் பேரில் மத்யஸ்தருடைய காரியதரிசி திருமல்ராயர் ஷெ கடிதத்தின் பையைக் கவர்னரவர்களிடம் சேர்ப்பித்தாரே அந்தக் கடிதத்தின் மொழி பெயர்ப்புசெய்து, கவர்னர் மனதிற்கு வாங்கி, கமிட்டியில் வைத்து என்ன பிரஸ்தாபஞ் செய்கிறார். இன்னும் பின்பு என்ன விசாரணை செய்கிறார். அவைகளையெல்லாம் மத்யஸ்தருக்கு நன்றாகத் தெரியும் நீங்கள் சோம்பல்படாமல் அவ்வப்பொழுது மத்யஸ்தரைக் கேட்டு அறிந்து கொண்டு, இதனால் கவர்னர்கௌன்ஸிலில் என்ன தீர்மானிக்கிறார்களோ அதைச் செய்யும்படியாகிறது. இப்படிக்குச் சோம்பல் படாமல் தெரிந்து கொண்டு எழுதிக் கொண்டிருக்கவும்.

நீங்கள் வியாழக்கிழமை சென்னையிலிருந்து அனுப்பித்த கடிதம் வந்து சேர்ந்தது, கடிதத்தின் விஷயங்களை மனதில் வாங்கினேன்.

சீமையிலிருந்து வந்த சங்கதியை நீங்கள் எழுதினதின் பேரில் சந்தோஷமுண்டாயிற்று. வருகையினால் இங்கிருந்து கடிதம் வந்து, இவ்விடமிருந்து சென்னப்பட்டணத்திற்குக் கடிதம் சென்றதினால் முன்னமே சங்கதி தெரிந்திருந்தது. கப்பலும் சீக்கிரமே வந்து சேருமா என்ன. சங்கதி எழுதி வருகிறது. அதை நன்றாகச் சோதனை செய்து எழுதி அனுப்புகிறது.

ஸ்ரீராம் பிரதாப்[275]

## முட்டை எண் - 943C

*2. 1825 Dec 24*

(48) கர்ச்[276] மஹால் போதே (கஜானா) நிசிந்தே அவர்களுக்கு ஸ்ரீ அமரசிங்க போஸலே இவர்களுடைய ராஜ்ய பாரத்திலிருந்து இதுவரையிலும் கஜானாவின் தினசரிக் கணக்கும் மாதாமாதம் ஜாடாவாகக் கணக்கையும் அனுப்ப வேண்டிய விஷயம்.

*1830 Nov 28*

(52)-கும்பகோணம் ஜில்லா கோர்ட்டின் ஜெயிலிலிருக்கிற உமயாபுரம் சுகவாசி கல்யாண ராமய்யாவானவர் தன்னுடைய தகப்பனாருடைய தேவசத்திற்குத் தன்னை ஜெயிலிலிருந்து விடுதலை செய்ய வேண்டுமென்று மனு கொடுத்தார்.

ஷெ கல்யாண ராமய்யா பொய் ஸாக்ஷியையும் பொய்ப்பத்திரத்தையும் தயார் செய்திருப்பதால் அவருடைய குற்றத்திற்காக முதுகில் நாலு அடிகளை அடிப்பது அவனுக்குக் கேவலமானதண்டனை. அக்காரியம் சாஸ்திர சம்மந்த மானதால் ஒருவேளை யாராவது மானஸ்தராக இருக்கிற குற்றவாளி தன் உயிருக்கு ஆபத்து நேரிடும்படி அபாயம்

275. ஸ்ரீராம்பிரதாப் - அரசரது கையொப்பம் (பக்.365)

276. கர்ச் - செலவு

செய்துகொள்வான். ஆகையால் அதை மாத்திரம் செய்யாமல், உடல் முழுமைக்கும் கருப்பு-வெள்ளைப்புள்ளிகளை இட்டு, கழுதையின் மேல் வாலின்பக்கம் முகமாக உட்காரவைத்து, அவர் கழுத்தில் எருக்கம்பூமாலைகளைப் போட்டு, குற்றத்தின் விவரத்தைச் சொல்லி, தமுக்கு அடித்துக் கொண்டு, பிரசித்தமான வீதிகளில் தவறாமல் பட்டணம் முழுமையும் சுற்றி, அந்தந்தக் குற்றத்திற்கு 5,6 ஷூ ஜெயிலில் போட்டு, வெளியில் விடாமல், அவர் திருடனல்லாததால் மொட்டை அடிக்காமல் வைத்துக்கொண்டு விடுதலை செய்வது வழக்கம்.

*(53) 1737*

பெயரில்லாத கணக்குப்பிள்ளை இப்பொழுதும் முந்தியும் பரகணம் பதக்கம் சரீதி செய்ததற்கு. ரா.மகாராஜ. மா.ஸ்ரீ. சுஜான்பாய்[277] எழுதுவதற்காகத் தினப்படிக்காக இனாம். கைலாஸ வாசி ரா.ஸ்ரீ மகாராஜா சாயேப் அவர்கள் திருவாரூர் க்ஷேத்திரத்தில் அன்ன சத்திரம் தினம் 120 பேர் பிராமணர்களுடையவும், ஸ்ரீதியாகராஜ ஸ்வாமிக்குப்[278] பேஸஜி[279] கொடுத்திருந்த மொயினைத் தவிர விசேஷமாக[280] அபிஷேகம் நைவேத்தியம் நடக்க வேணுமென்பதால் புதிய கட்டளை ஏற்படுத்தி, வருஷத்திற்கு 500 சக்கரம் மொயின் செய்து கொடுத்தார். அதன்படி சத்திரத்தினுடையவும், கட்டளையினுடையவும், மொத்தம் மொயின் நடந்து வருகிறது. மகாராஜா அவர் ஷிதருமம் நடக்க வேண்டியதற்காக ஊரை ஸர்வமான்யம் செய்து கொடுத்தால் தருமம் மேல்மேல் நடந்து கொண்டிருக்கும் என்று தியாகராஜ பண்டாரி அர்ஜி[281] செய்தார்.

ஸர்வமான்யம் கொடுக்கப்பட்டதற்கு விபரம்.

தரப்பு கோவில் மாகாணத்தைச் சேர்ந்த மௌஜே விளமல்[282]- தரப்பு உள் மாகாணத்தைச் சேர்ந்த மௌஜே கீழ்ப்படுகை-1

*2. 17.....*

(54) ஹானரபிள். ஆங்கிலேய கும்பனியார் மிஸ்தர் ஓமலிகௌனர்[283] வகையறா ஸர்கார் எஸ்கொயர் அவர்களுக்கு. தஞ்சாவூர் இராஜா துளஜா மகாராஜா அவர்களுடைய தாயார் ரௌபதாம்பாபாயி[284] அவுசாயேப் அவர்கள் எழுதியது என்னவென்றால்:-

---

277. சுஜான்பாய் - பாவாசாகேப் என்ற இரண்டாம் ஏகோஜியின் மனைவி; 1737-38இல் ஆட்சி செய்தவர்.

278. தியாகராஜசுவாமி - திருவாரூர்க் கோயிலில் உள்ள விடங்கப்பெருமாள்.

279. பேஸஜி யென்றது இரண்டாம் ஏகோஜி அல்லது அவருடைய தந்தையாகிய துக்கோஜியாகலாம்.

280. விசேஷமாக - சிறப்பாக

281. அர்ஜி - விண்ணப்பம்

282. விளமல் - விளமர்

283. ஓமல் கௌனர் (Sircharles Oakley) இவர் 1-8-1792 முதல் 7-9-1794 வரை கவர்னர் (பக்.28)

284. ரௌபதாம்பா - திரௌபதாம்பா

நாமும் நம்முடைய 3 நாட்டுப்பெண்கள்,[285] சி.ரா. ஸ்ரீசரபோஜிராஜே, வேண்டியவர்கள் வகையறா எல்லோரும் கும்பனியின் தயவினால் இப்பொழுது சிலவு கொடுத்ததை வாங்கிக்கொண்டு சுகமாக இருக்கிறோம்.

ரா.அமரசிங்கராஜாவும் க்ருத்திம(துஷ்டமான) சிவராவும் 2 பேரும் யோசனை செய்து, நம்முடைய பாயிசாயேப் அரண்மனையின் பங்கில் (பாராவில்) துஷ்டமான சிவராயர் தன்னுடைய சகோதரர் துஷ்டமான பையன்கள் சங்கர்ராயருக்கு மேளம், ஸங்கீதமேளம், கத்தி, கழிகள், அம்புகள், தர்பார் காரர்கள், உரைபோட்ட துப்பாக்கிகள், பல்லக்கு இவை எல்லாம் இரவு 1 மணிக்கு நம்முடைய நாட்டுப்பெண்ணின் இளைய சகோதரர் புதாஜி இங்களே அவர்களுடைய வீட்டுக்கனுப்பி 10,000 விராகன் லஞ்சமும் மாதத்திற்கு 1000 ரூபாயும், ஒரு மஹாதாபி ஆடையும், 3 குதிரைகளையும், 10 ஆஸாமிகளுக்கு துகை அவருடைய கணக்குப்பிள்ளை, கார்பார் இவர்களுக்குத் துகையும், வஸ்திரம், நம்மைக் கேட்காமலும், உறவினர், அவருடைய மூத்த சகோதரர் இவர்களுக்கு யாருக்கும் தெரியாமல் இரவு 2 மணிக்கு எல்லாச் சாமான்களுடன் பல்லக்கில் வைத்துக்கொண்டு வந்து நாமும் நம்முடைய 3 நாட்டுப்பெண்களும், ரா. ஸ்ரீசரபோஜி இராஜாவும் நம்முடைய சகோதரர்கள் வகையறா 10ம், உறவினர் வேண்டியவர் வகையறா, எல்லாருடையமான, பிராணம் கும்பனிக்காரர்களுக்கு ஒப்புவித்து, கும்பனிக்காரர்களுக்கு அதிக மதிப்பு இருக்கையில் கும்பனியின் கட்டுப்பாட்டுக்கும், பயத்துக்கும் லக்ஷியம் செய்யாமல் துஷ்டத்தனமுள்ள சிவராயர் அமரசிங்கனுடைய எச்சலைச் சாப்பிடச் செய்து ஜாதிபிரஷ்டம் செய்திருக்கிறார். முதலிலே சாஸ்திரப்படி அதிகார மிருக்கிற ரா. ஸ்ரீ. சரபோஜி இராஜாவைப் பட்டங்கொடுக்காமல் அதிகாரமில்லாத அமரசிங்கனுக்குப் பட்டங்கொடுத்து துஷ்டத்தனமுள்ள ஜனங்கள் துணிந்து கெடுத்தது. இதனால் எல்லோருக்கும் தெரிய வருகிறது. நம்முடைய ஹிந்து தர்மத்தின் நியாயத்தின்படியும் மதத்தின் பேதாபேதம் எல்லாம் தங்களுக்குத் தெரிந்திருக்கிறதே. ஹிந்துவின் நியாயத்திற்கு உயிரையாவது, விட்டு ஜாதிபிரஷ்டம் ஆகாமலிருக்கவேணுமென்று ஸ்வதர்மமிப்படி இருக்கையில் துஷ்ட ஜனங்கள் நடந்த செய்கைக்கும், இப்பொழுது நடந்திருக்கிற விஷயத்திற்கும் கும்பனிக்காரர்கள் நியாயம் செய்வார்களென்று பொறுத்துக்கொண்டு இருக்கிறோம்.

நம்மிடத்திலுள்ளவர்களும், 3 நாட்டுப்பெண்களும் ரா. சரபோஜி ராஜா அவர்களிடத்திலுள்ள பழய மனுஷ்யாள் கணக்குப்பிள்ளை, கார்பாரிகள் சிப்பந்திகள் பங்குக்கு வருகிற போகிற விஷயத்திலும் சாமான்கள், பாண்டங்கள் கொண்டு வரபோக விஷயத்தில் துஷ்டமான அமரசிங்கும் சிவறாவும் 2 பேரும் துர்புத்தியினால் ஒருநாள் உத்திரவு கொடுப்பது. 2 ஆம் நாள் போக்கூடாது. நிர்பந்தம் செய்வது. இப்படித் தொந்தரவு செய்வதற்கு இவன் யார். இவை எல்லாம் உடனுக்குடன் மிஸ்தர் ஸ்வார்ஷ் பாதரி சாயேப் அவர்களுக்குத் தெரிவித்து வருகிறோம்.

இனி துஷ்டமான அமரசிங்க் சிவறாவ் இருவரும் துர்புத்தி செய்யாமல் கண்டிப்பு உத்திரவை செய்யவேணும். பாதரி சாயேப் அவர்களை நாம் கூப்பிட்டு அனுப்பித்தால் கவர்னர்

285. துளஜாவின் மனைவியர் ஐவர். அவர்களுள் மோஹனபாய் பிரசவித்துப் பிள்ளையோடு இறந்தார் (போ.வ.ச.பக்.125) எஞ்சிய நால்வருள் சுலக்ஷணா பாய் சரபோஜி சென்னைக்குச் சுவார்ஷ் பாதிரியோடு செல்வதற்குமுன் இறந்து போனர்; எஞ்சிய மூவர் ராஜஸபாயி, ராஜகுமாரபாயி, மோஹன பாயி (போ.வ.ச.பக்.125) இங்குக் குறித்த 3 நாட்டுப் பெண்கள் இவர்கள் ஆகலாம்.

கௌன்ஸில் அவர்களுடைய உத்திரவின்றி நான் வரக்கூடாது என்கிறார். நம்மிடத்திலிருக்கிற ரா. சரபோஜி ராஜாவினிடத்தில் வந்து, பராமரித்தும், பார்த்தும், பேசியும் போகும்படி உத்திரவிட வேண்டுமென்று நாம் பிரார்த்தனை செய்கிறோம்.

2. (55)

பிரஸித்தி பத்திரம் போர்ட் செயிண்ட் ஜார்ஜ் 17-12-1799

ஹானரபிள் கும்பனிக்கும் ஹிஸ் எக்ஸ்லென்சி தஞ்சாவூரில் முன்னிருந்த இராஜாக்களுக்கும் ஆனகறார்படிக்கி, முன்சொன்ன இராஜாக்களுடைய மான்யத்தின் (ஒப்புக்கொண்டதின்) பூர்ணமானதால் அவர்கள் சகாயத்திற்காகக் கும்பனியாருக்குத் துகையைக் கொடுப்பதென்று கரார் செய்ததற்கு ஜாமீனாக அவர்களுடைய இராஜ்யத்தைப் பந்தகம் எழுதிக்கொடுப்பது அவசியமானதால் - இரு பக்ஷத்தின் முன்சொன்ன கரார் பிரகாரம் தஞ்சாவூர் இராஜ்யத்தில் சில சுபைகள் (பிரிவுகள்) இன்றும் இராஜ்யம் முழுவதும் அநேக தடவை கும்பனியின் அதிகாரத்து விசாரணைக்குட்பட்டதாயும், ஒப்புவித்துக் கொடுத்திருப்பதாலும், இரு பக்ஷத்தார்கள் அந்தந்தக் காலத்தில் ஒப்புக்கொண்டதின் படி அந்தச் சுபைகள் மறுபடியும் முன்சொன்ன இராஜாக்களுடைய அதிகாரத்தில் விடப்பட்டிருப்பதாலும் ஏற்பாட்டிற்கு நிச்சயமான விசுவாசத்திற்கும் சாசுவதமான சுகத்திற்கும், விருத்தமானதான அநேக மாறுதல்களுக்குத் தஞ்சாவூர் இராஜ்யம் பாத்திரமாகயிருக்கிறது.

அதற்காகத் தற்போது தஞ்சாவூர் ராஜாவான சரபோஜி மகாராஜாவும் கௌரவமுள்ள கும்பனியும் மேற்கொண்ட அதிகாரத்தில் மாறுதல் ஏற்பட்ட தவறான ஏற்பாடுகளும், பிசகுகளும், திருத்துவதற்கு எண்ணங்கொண்டு ஜனங்களுடைய ஸ்வதந்திரமும், ஸமஸ்தானத்தின் காரியங்களும் உறுதியாக ஸ்தாபனஞ்செய்ய வேணுமென்ற உத்தேசத்தின் பேரில் இனி தஞ்சாவூர், தஞ்சாவூரின் இராஜ்ய பாரத்திற்குப் பூர்ணமான உறுதி ஏற்படுத்த எண்ணங்கொண்டு 1799 கி.பி. அக்டோபர்மீ 25வயின் உடன்படிக்கையினால் (கரார்-நாமாவினால்) ஒவ்வொன்றும், ஆத்ம ராஜியினால் (தன் சம்மதத்தினால்) ஒப்புக்கொண்டிருக்கிறார். என்னவென்றால்:-

தஞ்சாவூரின் இராஜ்ய பாரத்திலும், வசூல் செய்கிற விசாரணையிலும் , ஏகதேசமாய் ஒருவேளை கும்பனிக்காரர்கள் பிரவேசஞ் செய்வதாயிருந்தால் முற்சொன்ன உடன்படிக்கை எல்லாம் ரத்தாகி (உபயோகமில்லாமல் போகும்) விடும்.

இன்னும் அதற்குப் பதிலாக வசூல் செய்கிற வேலைக்கும், சிவில் கிரிமினல் நியாயம் விசாரிப்பதற்கும் ஒரு சாசுவதமான நிலயம் ஸ்தாபித்து தஞ்சாவூர் ஸமஸ்தானத்தின் சுபாக்கள், பரகணே(தேசம்), ஊர்கள் முதலியவை எல்லாவற்றின் பேரிலும் ஒரே அதிகாரம் ஏற்படுத்தப்படுமென்று தீர்ந்திருக்கிறது.

இப்பொழுது இப்பத்திரத்தினால் தஞ்சாவூர் ஸமஸ்தானத்தின் பாளேயக்காரர்கள், காவல்காரர்கள், பதக்காரர்கள், குடியிருப்பவர் இவர்களுக்குத் தெரிவிப்பதென்னவென்றால்:-

மேற்சொன்ன உடன்படிக்கையினால் அனுபோகத்தின் தன் பாத்தியதையை நிச்சயித்து ஸ்தாபிப்பதற்கும், தஞ்சாவூர் இராஜ்யத்தின் சுபாக்கள், பரகணே, ஊர்கள் இவைகளின்

பேரில் ஜமாபந்தி நினைப்பதற்கும், கும்பனியார் அந்தந்தக் காலத்தில் நியமிக்கும் உத்யோகஸ்தர்களிடமிருந்து, இராஜ்யத்தின் வரும்படியை வசூல் செய்து, வரவுசெலவு பார்ப்பதற்கும் கும்பனியார் முழு அதிகாரம் பெற்றிருக்கிறார்கள். இன்னும் சிவில், கிரிமினல் விசாரணை செய்வதற்குக் கும்பனியார் மாத்திரம் அதிகாரத்தில் கோர்ட்டுகளை உண்டு பண்ணுவதற்கு முழு அதிகாரமடைந்திருக்கிறார்கள்.

அந்த நியாயஸ்தலங்களை போர்ட் செயிண்ட் சார்ஜ் கவர்னர் கௌஞ்சில் அவரவர்கள் அந்தந்த வேளையில் ஏற்படுத்தி விளம்பரஞ் செய்யும் விவஸ்தையும் ரெகுலேஷன் படிக்கும், கும்பனியாரால் நியமிக்கப்பட்ட சிப்பந்திகள் பார்ப்பார்கள்.

மேற்கண்ட உடன்படிக்கையினால் ஶ்ரீ ஹிஸ் எக்ஸ்லென்ஸி[286] சரபோஜி மகாராஜா அவர்கள் வசூல் செய்கிற வேலையிலுமோ, சிவில், கிரிமினல் நியாயம் விசாரிப்பதிலோ ஒருவித அதிகாரமும் பிரவேசிப்பதற்கும், தனிமையாய் விட்டதால் தஞ்சாவூர் இராஜ்யத்தின் எல்லா பாளையக்காரர் காவல்கார், பதக்காரர், வசிக்கிற ஜனங்கள்ஷெ காரியம் நன்றாக அறிய வேண்டும்.

*2. 1826*[287]
*(57)* மிஸ்தர் பாதிரி சாயேப்[288] ஹுஜூருடைய பேட்டிக்காக அரண்மனைக்குப் போனார். அமரசிங்க் பேரில் கோபித்துக் கொண்டு, கவர்னருக்குக் கடிதம் எழுதின விஷயம்.

*2. 1771*
*(59)* துளஜா ராஜே சாஹேப் வீணை காளஹஸ்தி அய்யருக்குப் பொன்னூர் கிராமத்தில் ஸர்வமான்ய நிலம் *1* வேலி - *8* மா இனாம் கொடுத்தார்.

*2.1786*
*(73)* துளஜா றாஜா சாயேப் - வேளாங்குல மாகாணம் - ஆவுடையார் கோவில் அம்மனுக்கு வெள்ளிக்கிழமை கட்டளைக்கு *58-1/2* குழி இனாம் கொடுத்தார்.

*(74) 1735*
ஏகோஜி ராஜா சாஹேப்,வெங்கடபதி பட்டு, சௌ.ராமகுமாராம்பா பாயி சாயேப். அவர்கள் உடன்கட்டை ஏறினார். அதற்கு 10ம் நாள் பூமி தானம் செய்தார். நஞ்சை 1/2 வேலியும், புஞ்சை 2-1/2 மாவும் மேலக்காவேரி என்னும் ஊரில்.

---

286. ஹிஎக்ஸலென்ஸி-(பக்கம் 348-349) His Excellency

287. ஆண்டு தவறு

288. பாதிரி சாயேப் என்றது ஸ்வார்ஷ் பாதிரியை

*(75) 1735*

*ஏகோஜி ராஜா[289] சாஹேப் கிருஷ்ணாஜி பண்டிதருக்குத் துளஜா ராஜா சாஹேப் -கைலாஸவாஸி ஆனதற்கு செள.ராஜகுமராம்பா அவர்கள் உடன்கட்டை ஏறினார்கள்.*

*(76) 1742*

*'ஸ்ரீபிரதாப சிம்ம ராஜா சாஹேப் புதுச்சேரி திபானந்த அவர்களுக்கு பீரங்கி பாபத்து நாகப்பட்டணம் 2000 வராகன்[290] கொடுத்தார்.*

*2 1733*

*(77) ஷஹாஜி ராஜா[291] -ஸ்ரீநிவாஸாசார்ய அவர்களுக்குக் கோட்டூர் கிராமத்தில் 1-1/2 வேலி நிலம் இனாம் கொடுத்தார்.*

*2. 1812*

*கலெக்டருடைய கணக்குப்படி போர்டிலிருந்து வந்த கணக்கு உப்பளம் மஹாராட்டி ஸ்டெட்மெண்டுகள்.*

*(4) 1807*

*அச்சு எழுத்துகளின் கணக்கு இங்கிலாந்திலிருந்து சரபோஜி றாஜா தன்னுடைய அச்சுக்கூடத்திற்காக அச்சு எழுத்துக்களை வாங்கினார்.*

*(5) 1782*

*ரா.ஸ்ரீ. துளஜா மகாராஜா சாயேப் அவர்கள் இராஜ்ய பாரத்தின் போதுள்ள கணக்கு-*

*ரா.ஸ்ரீ.அமரஸிங்க் போஸலே இவர்களுடைய இராஜ்ய பாரத்தின் போதுள்ள கணக்கு*

*4. 1808*

*(11) ஸர்காருக்கு ஆங்கிலேய தேசத்திலிருந்து மிஸ்தர் பென்ஜயாமென்டுரியன்[292] சாயேப் மூலமாக லண்டன் நகரிலிருக்கிற கிரீன்வார்ட்டும் கிரின் இந்த 2 பேர்களிடமிருந்து வயிர நகைகள் செய்வித்து வரவழைத்ததிற்கு கணக்கு.*

*7-1787 மே 8 உ*

*(1) ரா.ரா.திரியம்பக ஸம்பாஜி[293] வக்கீல் அவர்களுக்கு அமரசிங்க் மஹாராஜாவின் நமஸ்காரம். நம்முடைய உத்திரவு பெற்று ஊருக்குப் புறப்பட்டுப் போன பின்பு சிவராயர்*

289. ஏகோஜி என்று அரசர் பெயரும், 1735 என்று ஆண்டும் குறித்திருப்பதாலும், துளஜா ராஜா என்று இறந்த அரசர்பெயர் குறித்திருப்பதாலும், ஏகோஜி என்றது பாவா சாகேபாகிய இரண்டாம் ஏகோஜியையும், துளஜா என்றது முதல் துளஜா எனப்பெறும் துக்கோஜியையும் குறிக்கும். ராஜகுமாராம்பா என்றது துக்கோஜியின் மனைவியருள் ஒருவரைக்குறிக்கும். ஆனல் ராஜகுமாராம்பா உடன்கட்டையேறியதாகப் போ.வ.ச.வில் இல்லை (பக்கம் 318)

290. நாகப்பட்டணம் வராகன் - இவ்வராகன் மதிப்பு அதிகமானது என்று தெரிகிறது(பக்.151)

291. ஆண்டு 1733 என்றிருப்பதால் ஷாஹாஜி என்றது தவறாகலாம் அல்லது அவர் தம்பி துக்கோஜி காலத்தில் இனும் உறுதிப்படுத்தி இருக்கலாம்.

292. பென்ஜயாமென் டுரியன் - Benjamin Torin இவர் தஞ்சையில் 1798 முதல் ரெஸிடெண்டாக இருந்தவர்.

293. திரியம்பக ஸம்பாஜி - இவர் துளஜா II காலத்திலும் வக்கீலாக இருந்தவர்.

பெயரால் கடிதத்தை அனுப்பினீர். அதை எல்லாம் மனதில் வாங்கினேன். நீங்கள் சோம்பலாகயிருக்காமல் உடனே சென்னைக்குச் சென்று சேர்ந்த சங்கதியை எழுதி அனுப்புகிறது.

கும்பனிக்குச் சித்திரை மாஸத்தில் ஒருலக்ஷம் வராகன்[294] கொடுக்க வேணும். இதில் இங்குள்ள பட்டாளத்தின் சிலவுக்காக மிஸ்தர் மக்லோட்[295] அவர்களிடம் 10 ஆயிரம் வராகன் ரஜப் மீ 13உ கொடுத்து ரசீது வாங்கியிருக்கிறேன். அதுபோக 90,000 வராகனுக்கு ஹூண்டிகளை அனுப்பினதற்கு விபரம்:- புலாணஜி காசிதாஸ் தஸே இவர்களுடைய கடையின் ஹூண்டி 20,000-20 நாள் தவணையில் - 1 ம் பாலகிருஷ்ணதவே இவர்களிடமிருந்து கண்டோ பண்டிதருடைய பெயரால் 30,000 வராகனுக்கு 24 நாள் தவணையில் ஹூண்டி -1ம் சுப்புராவ் கோபால்ராவ் இவர்கள் பெயரால் 15,000 வராகனுக்கு 14 நாள் தவணையில் ஹூண்டி-1ம் பூதரஜீயின் குமாஸ்தா உதயராம் திருவாடி[296]யிடத்திலிருந்து கண்டோபண்டிதர் பெயரால் 6,200 வராகனுக்கு 16 நாள் தவணையில் ஹூண்டி 1ம்.

இந்தப்படிக்கி 71,200, 4 ஹூண்டிகளை வாங்கி கவர்னர் பேரால் கடிதம் எழுதி அதில் 4 ஹூண்டிகளையும் வைத்து, கடிதத்தின் அனுப்பி யிருக்கிறேன்.

90,000 வராகன்களில் 71,2000 வராகனுக்கு ஹூண்டிகள் அனுப்பித்தது போக 18,800 வராகனுக்கு மிஸ்தர் இப்ஸலி இடமிருந்து மிஸ்தர் தொல்போராவின் பேரால் 9 ஆயிரம் வராகனுக்கு8 நாள் தவணையில் ஆங்கிலேயர் ஹூண்டி-1ம் கர்னல் இஷ்டொண்டாவின் காரியதரிசி மிஸ்தர் யங்க் என்பவரிடமிருந்து மிஸ்தர் உல்யம்பர்க் பேரால் 8 ஆயிரம் வராகனுக்கு9 நாள் தவணையில் ஆங்கிலேய ஹூண்டி 1ம் பெத்தோரின் துபாஷி வெங்கடாசலம் மொதலி [297] இடமிருந்து அவருடைய தம்பி செங்கல்ராய முதலியின் பேரால் ஆயிரம் வராகனுக்குத் தமிழ் ஹூண்டி 1ம் ஆக ஹூண்டிகள் 3க்கு 18,800 வராகன் ஷெ ஹூண்டிகள் தங்களுடைய கடிதத்தில் வைத்தனுப்பி யிருக்கிறது.

செங்கல்ராய மொதலியின் பேரால் தமிழில் 2 கவர்கள் அனுப்பி இருக்கின்றன. ஆனால் தங்களிடம் சேர்ந்த உடனே 3 ஹூண்டிகளையும் 2 கடிதங்களையும் செங்கல்ராய மொதலியாரிடமே சேர்ப்பித்து, துரையினிடமிருந்து, ஹூண்டிகள் கையொப்பம் போடச் சொல்லி வாய்தாவுக்குப் பணம் வாங்கி கொடுக்கும்படி மொதலியாருக்கு நன்றாகச் சொல்லி புரியும்படி செய்து, தவணையில் ஷெ துகைகள் மொதலியாரிடமிருந்து வாங்கிக் கொண்டு நீங்களே கும்பனியின் கஜானாவில் செலுத்துகிறது.

294. இரண்டாம் துளஜா இறந்ததும் சரபோஜியின் காவலராக அமர்சிங்கு அரசபதவியை ஏற்றார். கவர்னர் ஆர்ச்சிபால்ட் காம்பெல் அமர்சிங்கை ஒரு ஒப்பந்தம் செய்து கொள்ளச் செய்தார். அதன்படி நாட்டின் பாதுகாப்புக்காகவும் துருப்புக்களின் செலவுக்காகவும் 4 லக்ஷம் வராகன் 6 தவணைகளில் கொடுப்பதாக ஒப்புக்கொண்டார். அதன்படி சித்திரை மாசம் ஒரு லக்ஷம் வராகன் செலுத்தவேண்டும். (பக்கம் 51)

295. மக்லோட் - Alexander Macleod - ரெஸிடெண்டு

296. திருவாடி - திருவையாறு

297. இவர் கர்ன லுடைய துபாஷி என்று அடுத்து மூட்டை எண் 943c-7-5 இல் கூறப்பெறுகிறார். (கர்ன ல் என்றது படைத்தலைவராக இருந்த ஸர்டேவிட் பயர்டு) (Sri David Baird) ஆகலாம்.

கவர்னருடைய கடிதத்தில் தங்களிடமிருந்து 18,800 வராகன் கொடுக்க எழுதியிருக்கிறது. நீங்கள் கடிதங்களெல்லாம் சேர்ந்தவுடனே கவர்னர் க்யாமல்[298] இவரிடஞ் சென்று கடிதத்தின் (தைலி) கட்டுகளைக் கொடுத்துவிட்டு, உபசாரமாகப் பேசி 71,200 வராகனுக்கு4 ஹூண்டிகள் தங்கள் கடிதத்திலே யிருக்கின்றன. ஸாவுகா[299]ரிடமிருந்து கையெழுத்திட்டு தவணைக்குத் துகை கொடுக்கவும். நாம் 12 நாட்களில் 18,800 வராகனையும், கும்பனியின் கஜானாவில் செலுத்துகிறோம் என்று கவர்னரிடம் நீங்கள் சொல்லி கடிதத்தின் மொழி பெயர்ப்பு செய்து, மனதுக்கு வாங்கி இங்குள்ள கமிட்டி வேண்டாமென்று சீக்கிரம் எடுத்து விடுவார்களாகவும் அணைக்கட்டின் காரியத்தின் விஷயமாகவும், புதியவரிடமிருந்து உத்திரவு வாங்கி அனுப்பும்படியும் நீங்கள் கவர்னரிடம் நன்றாக பேசி 2 காரியங்களையும் சீக்கிரமாக ஆகும்படி செய்யவும்.

ஸாவுகார்களுடைய ஹூண்டிகளுக்குத் தவணை ரொம்ப நாட்களிருக்கின்றன வென்று கவர்னர் தங்களுக்கு ஏதாவது சொல்லுவாரானால் துகை பெரியதாக இருப்பதினாலும் தஞ்சாவூரில்புலி வராகன் தற்போது அகப்படவில்லையாகையால் வராகன்களைச் சேகரித்து, தஞ்சாவூரிலிருந்து, துகை வருவதற்கு நாட்களாகும். இதற்காக தாங்கள் தயவுசெய்து, அங்கீகாரம் செய்து, தவணைப்படி துகையைக் கொடுக்க(வாங்க) வேணுமென்று கவர்னருக்கு நன்றாகப் புரியும்படி சொல்லி ஹூண்டிகளைக் கொடுத்து சாவுகார்களிடமிருந்து துகை வாங்கும்படியாகச் செய்கிறது.

கவர்னருடைய சம்சாரம் தருமம் செய்வதற்கு நாம் 2500 வராகன் கொடுப்பதாக வாக்களித்தோம். துணிகளும், வைரம் கரீதிக்காகத் துகையும் சேர்த்து, சீக்கிரமே இவ்விடமிருந்து அனுப்புகிறேன். இவ்விஷயத்தில் நீங்கள் ஒன்றும் செய்ய வேண்டியதில்லை. தங்களுக்கு கஷ்டமுண்டாகும்படி நாம் செய்வோமோ. சீக்கிரமே பின்பு அனுப்புகிறேன். கவர்னருடைய கடிதத்தின் நகலை அனுப்பியிருப்பதை மனதுக்கு வாங்கவும். இதர காரியங்களுக்குப் பதில் பிற்பாடு எழுதுகிறோம்.

மிஸ்தர் கேமல் செகரிடரி அவர்களுக்கு உபசாரமாக சில சமாசாரங்களைச் சொல்லி நம்முடைய சலாமும் சொல்லி, நம்முடைய வேலையின் பொருட்டு கவர்னரிடம் எந்தெந்த வேளையில் எப்படி பேசவேண்டுமோ, அப்படிப் பேசி ஸாதகஞ் செய்யும்படி செய்யவும். கவர்னருடைய ஸம்சாரத்திற்கு நம்முடைய ரொம்ப மரியாதையும் தெரிவித்து உபசாரஞ்சொல்லவும். அறியவும்.

ஸ்ரீராம் பிரதாப்[300]

(கையொப்பம்)

---

298. கவர்னர் க்யாமல் - Sri Archibald Campbell

299. ஸாவுகார் - தொழில் தலைமையானவன்

300. அரசருடைய கையொப்பம் (பக்கம் 207)

7 17..

*(5) வினந்தி[301] இங்கு க்ஷேமம். வைகாசி மீ 9உ சனிக்கிழமை தங்களுடைய க்ஷேமாதி சயங்களை எழுதக்கோருகிறேன்.*

*நேற்றுக் காலையில் அருணோதயத்திற்கு[302] மா.ஸ்ரீ.அவுசாயேப்[303] அவர்கள் தைவ கதியை அடைந்தார்கள். உடனே நமக்குச் சமாசாரம் தெரிந்தது. ரா.தாதாராயருக்குப் பாதரி சாயேப் இடம் அனுப்பித்தேன். லஷ்கர் கடையின் ராமண்ணாவுக்குக் கிலண்டனிடம் அனுப்பித்தேன்.*

*அமரசிங்கும் சிறிய(ஹரகார்யா) சால்சாப் செய்கிற சிப்பந்தியுடன் 10 பேரைக் கூட்டிக்கொண்டு 2 பேரிடமும் அனுப்பித்தான். பொழுது விடிந்து 8 மணிக்குப்பின் 2 துரைகளும் அமரசிங்கனிடம் சென்று, பிறகு நம்முடைய ஸ்ரீமந்த் சத்ரபதியினிடம்[304] வந்து சொன்னதாவது:-*

*கவர்னர் கௌன்சிலின் உத்திரவு அமரசிங்குதான் மா.ஸ்ரீ.அவுசா ஹேப்பின் உத்திரகிரியை செய்கிறதென்று வந்திருக்கிறது. நீங்கள் பாயிசாயேப்[305] அவர்களுக்குச் சொல்லி அனுப்புமென்று சொன்னார் அதற்கு நம்முடைய ஸ்ரீமந்த் சத்ரபதி சொன்னதாவது -*

*(5) சாஸ்திரம், ஜாதி,*
*லௌகிக நியாயப்படி நாம்தான் செய்வது சரியானது. நானும் தயாராக யிருக்கிறேன். மா.ஸ்ரீ.அவுசாயேப்பும் நானே செய்ய வேண்டுமென்று நம்பியிருந்தார்கள். நீங்களோ கவர்னர் கௌன்சிலர்கள் அவர் செய்வது என்று உத்திரவிட்டிருப்பதாகச் சொல்லுகிறீர்கள். நாம் செய்வது சரி. அமரசிங்கு செய்வது சரி அல்ல. இதற்கெல்லாம் நீங்கள் சீமைக்குக் கவர்னர் கௌன்ஸிலுக்கு எழுதி அனுப்பும்படி சொன்னுர்.*

*ஸ்ரீமந்த் சத்ரபதி அவர்கள் சொன்னதெல்லாம் பாதரி[306] கலேடனருக்குச் சொன்னுர். கலேடனரும்,சரி. சீமைக்கு எழுதுகிறேன். கௌர்னர் கவுன்சிலருக்கும் எழுதுகிறேன். நீங்கள் ஏதாவது சாஸ்திர வசனங்களினால் ஏதாவது வசனங்களிருந்தால் எழுதிக்கொடுங்கள். அதையும் மொழிபெயர்த்து அனுப்புகிறேனென்று பாதரி சாயேப் சொன்னுர்.*

*இன்னும் பாதரி சாயேப் சொன்னதாவது:— ரா.தாதாவுக்கும்[307] நமக்கு மிருவருக்கும் மா.ஸ்ரீபாயிசாயேப்புக்குச் சொல்லவும். என்னவென்றால் பிரேதத்தை அமரசிங்கினிடம் ஒப்புவிக்கவும். நாம் பாயிசாயேப்பிடம் போய் சொன்னோம். அதற்கு அவர்கள்*

301. வினந்தி - பணிவுடன்

302. அருணோதயம் - விடியற்காலை

303. அவுசாயேப் என்றது இரண்டாம் துளஜாவின் தாயார் ஆகிய திரௌபதாம்பாபாயியை

304. சத்ரபதி யென்றது இரண்டாம் சரபோஜியை

305. திரௌபதாம்பாபாயியுடைய நாட்டுப்பெண்கள் ஆகலாம்.

306. பாதரி - ஸ்வார்ஷ் பாதிரி

307. தாதா என்றது 12 பண்டிதர்களில் ஒருவர் தாதாராவ் (மூட்டை எண்: 943c-7-6)

சொன்னதாவது:- பாதரி சாயேப்பையும் கலேடன் அவர்களையும் அழைத்து வாரும். நாம் நேர்நேராகச் சொல்லுகிறோமென்றார்கள்.

நாம் 2,3 அக்காகூட்டமார்களைக்[308] கூட் அழைத்துக்கொண்டு இச்சங்கதி பாதரி சாயேப்புக்குச் சொன்னேன். பாதரி சாயேப் விபக்ஷிக்கு(அமரசிங்குக்கு) கர்னலுடைய[309] துபாஷி (Brokin) வெங்கடாசல மொதலியின்[310] மூலம் பாயிசாயேப் நேரில் வரச்சொல்லுகிறார்கள். போகலாமா வென்று சொல்லி அனுப்பித்தார். அதற்கு அமரசிங் "நீங்கள் எங்களுடைய அரண்மனைக்கு வாரும். நம்முடைய அரண்மனையிலிருந்து அவாளுடைய அரண்மனைக்குப் போகப்பாதை இருக்கிறது. போகலாம்" என்று சொல்லிக் கூப்பிட்டு அனுப்பித்தார். துரைகளிருவரும் நம்மிடமிருந்து அமரசிங்கு அரண்மனைக்குச் சென்று அங்கிருந்து கதவைத் திறந்து கொண்டு, மா.ஸ்ரீ.அவுசாயேப் அரண்மனையில் வந்து நம்மையும், தாதாவையு மிருவரையும் கூப்பிட்டு அனுப்பினார். நாமிருவரும் சென்றோம். பாதரி சாயேப் சொன்னதாவது:- நீங்கள் பாயிசாயேப்புக்குப் பிரேதத்தை அமரசிங்கிடம் ஒப்பிவிக்கும்படி கவர்னர் கௌன்சிலரிடமிருந்து, உத்திரவு வந்திருக்கிறது. ஒப்பிவித்தால் தங்களுக்கும் ஸ்ரீமந்த் சத்திரபதியினுடைய காரியத்திற்கும் அனுகூலமாகும். நீங்கள் சாஸ்திர ஸம்மதியாயுள்ளதை எழுதிக்கொடுப்பதை எல்லாம் கவர்னர் கௌன்சிலுக்கு அனுப்புகிறேன். சீமைக்கு எழுதி அனுப்புகிறேன். அதனால் தங்களுடைய காரியங்களுக்கு அனுகூலமுண்டாகும். இல்லாவிடில் தங்களுடையவும் ஸ்ரீமந்த் சத்ரபதியின் காரியங்களுக்குப் பிரதிகூலமாகும். அப்படிச் செய்யாமல் பிணத்தை அவரிடம் ஒப்படையுங்களென்று சொன்னார்.

நாமிந்த சமாசாரங்களை எல்லாம் பாயிசாயேப்களிடம் தெரிவித்தோம்.3 பாயிசாயேப்களும் கொஞ்சம் விசனமாக இருந்தார்கள். பாயிசாயேப்கள் சொன்னதாவது:- விபக்ஷியானவர் தகுதியற்றவர். எப்பொழுதும் சாஸ்திரம், ஜாதி, லௌகிக நியாயத்தினால் எவ்விதத்திலும் அவர் செய்ய அதிகாரமில்லை. அவர் தொடவும் கூடாது என்று மா.ஸ்ரீ.அவுசாயேப் நம்மை நம்பியிருக்கிறார்கள். நாமும் நம்பிக்கையைக் கொடுத்திருக்கிறோம். ஸ்ரீமந்தர்[311] செய்வது சரியில்லாவிட்டால் நாமாவது செய்கிறோம். அதுவுமில்லாவிட்டால் அரண்மனையிலேயே வைத்து தீமூட்டி விடுகிறோம்.

ஆனால் அமரசிங்கினிடம் கொடுக்க மாட்டோம் என்று கண்டிப்பாய் சொன்னார்கள். அதற்குப் பாதரி சொன்னதாவது:- நீங்கள் செய்வது சரிதான். நீங்கள் அவுசாயேப்புக்கு நம்பிக்கை வசனம் கொடுத்திருப்பதும், நிஜம்தான். ஸ்ரீமந்தர் செய்வதாயிருந்தால் தனியாகத்தா னல்ல சென்று செய்ய வேண்டும். கூட ஜனங்களை அழைத்துப் போகவேண்டும். ஆனால் கலேடன்கவர்னர் கௌன்சிலின் உத்திரவில்லாததால் கூட வருவதற்குப் பார் ஜனங்கள் (துப்பாக்கி சிப்பாய்களை) கொடுக்க மாட்டார்கள்.

---

308. அக்கா கூட்டம் - பாயி சாயேபுகளின் பணிப்பெண்டிர் (பக்கம் 336)

309. கர்னல் - ஸர்டேவிட் பயர்ட் (Sri David Baird) ஆகலாம்

310. வெங்கடாசல முதலி - இவர் கர்னாலுடைய துபாஷி என்று இங்குக்கூறியிருக்க மூட்டை எண் 943c-7-1இல் பெத்தோரின் துபாஷி என்றுள்ளது (பக்கம் 407)

311. ஸ்ரீமந்தர் என்றது சரபோஜியை

பாயிசாயேப் வெளியே போவதற்கும் அப்படியே நீங்கள் அவுசாயேப்புக்கு உறுதி செய்து கொடுத்திருக்கிறோம் என்கிறீர்கள். அதற்காக நீங்கள் ஏதாவது சும்மாயிருந்தீர்களா. அமரசிங்க் அயோக்யன். அவர் செய்யக்கூடாது. நாமே சாஸ்திர நியாயமாக செய்ய வேணும் என்று 4 கடிதங்களையும் எழுதி நீங்கள் கொடுத்ததை நானே அனுப்பித்தேன். அப்படி எழுதின கடிதத்தைக் கௌர்னர் கௌன்ஸல்காரர்கள் பார்த்து விபக்ஷியானவரே செய்கிறதென்று எழுதியிருக்கிறார்கள். நான் அவ்வுத்திரவை மீறி நடக்க முடியாது. ஏனென்றால் உறுதிசெய்து கொடுத்ததற்கு அமரசிங்கு செய்வதற்கு நீங்களொன்றும் சம்மதமாகவில்லையே. கவர்னர் கௌன்ஸல் உத்திரவின்படி அல்ல. உங்களுக்குப் பிரேதத்தை அமரசிங்குயிடம் ஒப்பிவிக்கும்படி சொல்லுகிறேன்.

நீங்களெல்லாம் கவர்னர் கௌன்ஸலின் மேல் போட்டுப் பிரேதத்தை ஒப்படைத்தால் பின்னுல் தங்களுடைய வேலைகளுக்கு மேல்மேல் நல்லது என்று துரைகளிருவரும்[312] சொன்னுர்கள்.

அதற்குப் பாயிசாஹேப்புகள் சொன்னதாவது:- நாம் 3 பேர்களும் உயிரைக் கொடுப்போம். ஆனால் பிரேதத்தைக் கொடுக்க மாட்டோம் என்று கண்டிப்பாய் சொன்னார்கள். அதன் பிறகு இருவரும் அங்கிருந்து அமரசிங்கு இடம் சென்றார்கள். கொஞ்சம் நேரத்திற்குப் பின்பு மட்டும் வந்து சொன்னதாவது:- அவுசாயேப்பின் ஆள் மாகாணங்களின் வழிக்கு அமரசிங்கு வரமாட்டார். நீங்கள் பிரேதத்தை மட்டும் ஒப்படையுங்கள். அதற்குப் பாயிசாஹேப்புகள் ஒப்புக்கொண்டார். பாதரிசாயேப்பும் உறுதியுடன் சொன்னார். தோட்டம், சத்திரம், அரண்மனை இந்த 3 இன் வழிக்கு வரவில்லை என்று உறுதிசெய்து கொடுக்கும்படி சொன்னதற்குச் சரி என்று சொல்லி அமரசிங்கு இடம் பாதரி சாயேப் சென்றார்.

அமரசிங்கு சொன்னதாவது:- தோட்டம், சத்திரம், அரண்மனை இம்மூன்றையும் விடமாட்டேன். அதற்குப் பாதரிசாயேப்பும் கலேடனும் சேர்ந்து தோட்டம் சத்திரம் அரண்மனை இம்மூன்றையும் பொதுவில் வைத்துக் கவர்னர் கௌன்ஸலுக்கு எழுதியனுப்பி அவர்கள் யாரிடம் கொடுக்க உத்திரவு வருமோ அவர்களிடம் விடுவோம் என்று சொன்னாராம்.

திரும்பி பாதரி சாயேப் வந்து சொன்னதாவது:- 3-ம் பொதுவிலிருக்கட்டும். கவர்னர் கௌன்ஸலின் உத்திரவு வந்தபிறகு யாரிடம் கொடுவென்று சொல்லுகிறாரோ, அவர்களிடம் விடுவோம் என்றார். அதற்குப் பாயிசாயேப் அவர்கள் சொன்னதாவது- நாம் 3ஐயும் விடப்போவதில்லை. கவர்னர் கௌன்ஸலின் உத்திரவுப்படி நடப்போம் என்றார். அதற்கு பாதரி சொன்னதாவது கவர்னர் கவுன்ஸிலின் மீறினதாக நடக்காதீர்கள். பிரேதந்தை மாத்திரம் ஒப்படையுங்கள் என்று சொன்னார். அதற்குப் பாயிசாயேப் சொன்னதாவது. சரி கவர்னர் கௌன்ஸலின் உத்திரவைத் தள்ளாமல் நாம் பிரேதத்திற்கு எப்படிச் செய்ய வேண்டுமோ அப்படியெல்லாம் செய்து கொடுக்கிறோம். அவருடைய ஆட்கள் ஒருவரும் வராமல் பிரேதத்தைமட்டும் எடுத்துக்கொண்டு போகலாம். என்றார். பாதரி இதைக்கேட்டு சரி என்று சொல்லி, பிரேதத்தைக் கொடுக்கிற வரையில் உட்காருகிறேனென்று அங்கேயே உட்கார்ந்தார்.

---

312. துரைகள் இருவர் - பாதிரி ஸ்வார்ஷும், கலேடனும்

இப்படி யிருக்கையில் கலேடனும் இன்னுமொரு துரையும் ரஹமத்கான் தரகாளியும் 4 பாராக்காரர்களும் அழைத்துக்கொண்டு பாயிசாயேப் அர்ண்மனையில். எல்லாம் பாயிசாயேப்கள் இருக்கையில் அவர்களின் மத்தியில் பயமின்றி பலாத்காரமாக நுழைந்து பாயிசாயேப் எல்லோரையும் திட்டி நீங்கள் உங்கள் உங்கள் அரண்மனைக்குப் போகிறீர்களோ இல்லையோ. இல்லாவிடில் கையைப்பிடித்து இழுத்து விடட்டுமா என்று அதிக அவமானகரமான வார்த்தைகளைப் பேசினார்கள்.

அவுசாயேப் அரண்மனையின் கீழே காவல்காரரை வைத்து, பிரேதத்தின் சமீபம் யாரும் போகாத இடத்தில் ரஹிமத்கான் சென்று அங்கேயும் காவல் வைத்தார். இவ்விதமாக கும்பனிதுரை அவமானஞ் செய்தாரே என்று பாயிசாயேப்புகள் அவாளவாள் அரண்மனைக்குச் சென்றார்கள். வந்தவுடன் 4 பக்கத்திலுள்ள சுவர்களைப் போட்டு, ரஹிமத்கான் என்கிற தரகாளியும் சேர்ந்து அவுசாயேப் அவர்களிடத்திலுள்ள பெண்களுக்கும் ரொம்ப அடிதடி செய்தார்கள்.

இன்னும் பிணத்தைத் தகனம் செய்யக் கொண்டு போன போது நம்மிடத்திலுள்ளவரி லொருவரையும் வர ஓட்டவில்லை. மீனாக்ஷி அம்மாவும் சீதாபாயி இரண்டுபேரும் பெரிய பாயிசாஹேப்தா னிருக்கிறார்கள்.

200 வராகன் பொரும்படியான பாத்திரங்களையும் சில்லறை சில சாமான்களும் ஸாடியின் (உயர்ந்த புடவைகளின்) 4,5 பெட்டிகளையும் கொட்டியம் சாமான் 500 சக்கரம் பொரும்படியாக அவ்விடமிருந்தது. அவை எல்லாம் அவர் கையில் அகப்பட்டது. இப்படி பலாத்காரம் செய்தார். கலேடனுக்குப் பணம் ஆசை பிடித்து அமரசிங்குடன் சேர்ந்து பலாத்காரஞ் செய்தார். நீங்கள் 5உ க்கு அனுப்பிய கடிதம் வந்தது. எழுதின சமாசாரம் அறிந்தேன்.

இவ்விடம் அமரசிங்கு பாயிசாயேப் கார்யத்தில் அதிகமாகப் பலாத்காரஞ் செய்கிறான். அதற்காக அங்கு யார்யாரிடம் எப்படி பேச வேண்டுமோ அப்படிப்பேசி தைரியமாக உத்திரகிரியையின் பிரசங்கம் மாத்திரம் தவறிவிட்டது. அதுபோக மற்ற அவர் அரண்மனை, தோட்டம், சத்திரம், சொத்து, கடன், ஆள் மாகாணம் எல்லா மிருப்பதைப் பிழைத்திருக்கும் பொழுதே பெரிய அம்மணியின் பெயரால் எழுதி, அவருடைய ஸ்வாதீனம் செய்தபடி அதற்கு வித்தியாசமில்லாமல் நடக்கும் படிக்கு கௌனர் கௌன்ஸிலின் உத்திரவு வரும்படியாக அதிக சீக்கிரம் செய்கிறது. இக்காரியத்திற்கு 1000, 500 செலவானாலும் ஆகட்டும். அதிக சீக்கிரம் ஆகும்படி செய்கிறது. அக்காரியமாகாவிட்டால் பாயிசாயேப் அவர்கள் மனதுக்கு ஸமாதானமாகாது. இதற்கு விடாமுயற்சி செய்து உத்திரவை அனுப்ப வேண்டும்.
இவ்விஷயத்தில் சோம்பல் செய்ய வேண்டியதில்லை. இக்காரியமான பின்புதான் முன் தொந்திரவுகளுக்கு வழி செய்ய வேணும். இல்லாவிடில் அவுசாஹேப்பின் ஆஸ்தி கடனுக்கு யாரும் பாத்தியஸ்தர் ஆகவில்லை. தங்களுக்கு நன்கு விளங்குவதற்காக எழுதியிருக்கிறேன். எனக்கு அதிக வேலையிருந்ததினால் ரா.ஸ்ரீ.அப்புராவ் மூலம் எழுதியிருக்கிறேன். கடிதம் நானே எழுதினதென்று நினைக்கவும். மிஸ்தர் ராமனுக்குப்[313] பீதருடைய அதிஷ்டானத்திற்கு[314]

313. மிஸ்தர் ராமன் - மக்லோடுக்குப் பிறகு வந்த ரெஸிடெண்டு (போ.வ.ச.பக்.131)

314. பீதருடைய அதிஷ்டானம் - பீதருடைய அலுவல் (பீதர் பற்றி அறிய வாய்ப்பில்லை)

நியமித்திருக்கிற தென்று கேள்விப்பட்டேன். அச்சங்கதியை விசாரித்து எழுதியனுப்பவும். அறியவும்.

விணந்தி.

7(6) Le.Comovalis[315] அவருடைய 7 விசாரணையின் கடிதம் பங்களாவிலிருந்து வந்ததற்கு 12 பண்டிதர்களைக் கூப்பிட்டு விசார்ணை செய்ததற்குப் பிரதி பதில் சொன்ன பெயர்.

1.பாடலாசார்ய, 2.மாதவாசார்ய, 3.தாதாராவ்[316], 4.ஐயாசாரி(ஸந்நியாசி ஆனார்),5.அப்பா சாஸ்திரி , 6.ராமா சாஸ்திரிக்குப் பல்லாக்கும் ஒருவராகன் ஒருநாளைக்குச் சம்பளம், 7.ஸத்யநிதி ஆசார்ய , 8.நரஸிம்மாசாரி, 9.ஐணாசாரி , 10.புஜங்கராவ், 11.பாபண்ணா , 12.மாதவாசார்யருடைய மாப்பிள்ளை ஆக.12 பேர்கள்

3வது தாதாவானவர் அநியாயமாக 12 பேருக்குப் பொய் சொன்னேனே என்று துக்கத்துடன் அநேக ஜனங்களின் முன்னிலையிலும், மிஸ்தர் ஸ்வார்ஷ் முன்னிலையிலும் அநேக தடவை சொன்னார். 4 வது ஐயாசார்யர் தான் அநியாயஞ்செய்தேனென்றும், தனக்குத் தர்மசாஸ்திரமொன்றுந் தெரியாதென்றும் வெளிப்படையாக கோபால்றாவ்-1 கிருஷ்ணப்பா-1 சக்கிரபாணி அய்யங்கார் இம்மூன்று பேர் முன்னிலையில் சொன்னார். 5வது அப்பா சாஸ்திரி தஞ்சாவூருக்கு சமீபத்திலிருக்கிறவருக்கு 7 கேள்விகளை கேட்டதற்கு எனக்கு சாஸ்திரமும் தெரியாது. அரண்மனைச் சங்கதியும் தெரியாது. ஆனாலும் பிறர் விசாரித்து செய்தபடி நீங்களும் செய்யுமென்றதினால் கையெழுத்திட்டேன்.

அதன்பின்பு எனக்கு அதிக வியசனம். இப்பவும் நான் விசயனப்படுகிறேன் என்று தன் கையினால் கடிதத்தில் எழுதிக் கொடுத்தார். 7வது ஸத்யநிதி ஆசார்யருக்கு உடம்பு சரியாக இல்லை. தான் அநியாயமாக நடந்ததினால் அழுது எனக்கு சாஸ்திரம் தெரியாது. அமரசிங்கு இராஜாவின் பக்ஷமாகச் சொல்லுங்களென்று தனாதிகாரி நமக்கு விடப்பட்ட மான்யம் (நிலம்) எடுத்துக் கொள்வார்களோ என்று பயந்து அவாள் மனதுபடி சொன்னனே என்று அழுதுகொண்டு சொன்னார். 8வது நரசிம்ஹாசார்யார் அமரசிங்குக்கு அதிகாரம் என்று சொன்னார். அதைச் சரியல்லவென்று சொல்லுகிறார்கள். கௌர்னரவர்கள் கூப்பிட்டுக் கேட்டாலும் சொல்லுகிறேன். ஆனால் கையினால் எழுதிக்கொடுக்க மாட்டேனென்கிறார். 9ஆவது ஐணாசார்யார் சொன்னதாவது: எனக்குச் சாஸ்திரமே தெரியாமல் அமரஸிங்குக்கு அதிகாரமென்று ஒருவர் எழுதினாற்போல் எழுதினேன். கவர்னரவர்கள் கூப்பிட்டுக் கேட்டால் சொல்லத் தயாராக இருக்கிறேனென்று சொன்னார்.

10ஆவது 11ஆவது புஜங்கறாவ், பாபண்ணாவுக்கு நீங்கள் ஏன் இப்படி செய்தீர்களென்றதற்கு நமக்கு சாஸ்திரமே தெரியாது. 10 பேர் செய்தபடி நாங்களும் செய்தோம் என்று அநேக ஜனங்களின் முன்னிலையிலும் பாதரி ஸ்வார்ஷ் முன்னிலையிலும் அநேகதரம் சொன்னார்கள்.

---

315. கார்ன்வாலிஸ்-1786 முதல் 1763 வரை கவர்னர்ஜெனரலாக இருந்தவர்.

316. தாதாராவ் - 12 பண்டிதர்களில் ஒருவர்.

317. வியசனம் - வருத்தம்

மேலெழுதிய பண்டிதர்களின் பேர்வழிகளில் சில சாஸ்திர மறிந்தவர்கள் சொல்லுகிறார்கள். என்னவென்றால் 12 பேர்களில் பிழைத்திருக்கிறவர்களை அழைத்து வந்து, முதலில் நீங்கள் சொன்னதற்கு சாஸ்திர நியாயப்படி ருஜு செய்யுங்களென்று சொன்னால் அதை ஒரு பொழுதும் சாஸ்திர நியாயப்படி ருஜு செய்ய முடியாது.

7 (7)

எப்படியும் யஜமான்களுடைய நல்லதாக வேணுமாகையால் எல்லாம் ஒத்தாசையும் செய்ய வேண்டும்.

சென்னப்பட்டணம் பெரிய ஸமஸ்தானம் அங்குள்ளவர்களுடைய மனப்பான்மையை ரா.ராவுஜீ அவர்களுக்கு நன்கு விளங்கியிருக்கும். அதை அனுஸரித்து எப்படியாவது காரியத்தைச் செய்துவிட வேண்டியது. ரகஸ்யமாகவா என்றால் தங்களுடைய முயற்சி அமரஸிங்குக்குத் தெரிந்தால் இங்கே சத்ருத்வமதிகமாக செய்வான். அங்கேயும் அநேகவிதமாக முயற்சிப்பான். அதற்கெல்லாம் ரா.ராவூஜீ அவர்களை நம்பி இருக்கிறோம் என்று ரா.பா.பா.[318] அவர்கள் எழுதச் சொன்னார் அறியவும்.

பாதரி சாயேப் சில சங்கதிகளை ரா. ஸ்ரீராயர் பேரில் நாவிஸிவி மேஸ்தர் ராமனுக்கு[319] சொன்னார். அவரொரு பெரிய மனிதருக்கு எழுதினார். அப்பெரியமனிதன் ரா.ராவுஜீக்குக் கேட்டார். அதை நன்றாக விசாரித்து எழுதுவதென்று தங்கள் கடிதத்திலெழுதி யிருந்தது.

இங்கிருந்து ஸாமாதிகர்கள்[320] (சுற்றியுள்ள ஜனங்கள்) சென்னப்பட்டணம் போய் வந்த பிறகு இங்கே ஆன கலகம் எல்லாவற்றையும் தங்களுக்குத் தெரியுந்தான். லத்தி கட்டையில் கூட நம்முடைய ரகஸியங்களெல்லாம் பேசிக்கொண்டிருந்தூர்கள். அதுவும் தங்களுக்குத் தெரிந்ததே.

மொட்டை பண்டாரம் எல்லோருக்கும் வேண்டியவன். எல்லோருடைய வீட்டுக்கும் போவது. அவருக்கு எல்லா ரகசியங்களைத் தெரிவிப்பது. இந்தப்படி நம்முடைய 4 சுற்றிலுள்ள ஜனங்கள் செய்து கொண்டிருந்தார்களே அச்சங்கதி தங்களுக்குத் தெரியுமே. நம்மிடமும் அவன் வந்து கொண்டிருந்தானே. நாம் அவரை எப்படி பயத்துடன் வைத்திருந்தேன். அதுவும் தங்களுக்குத் தெரியுமே. அந்த மொட்டையானவன் பாதரி சாயேப்பினிடம் சென்று கண்டபடி கோணல் மாணலாகச் சொன்னாராம். அப்பாதரி சயேப் பாபாவை[321] விசாரித்தாராம். அதற்குப் பாபாவானவர் "எனக்குத் தெரியாதென்று பாதரிசாயேப்புக்குச் சொல்லி முன்னால் நகர்ந்து வந்து, மொட்டைப் பண்டாரத்தைக் கூப்பிட்டு மிகக் கோபத்துடன் இனி இந்தப் படிக்கி கோணல் மாணலாகப் பேசினால் தோட்டத்திற்கு வரவழைக்க மாட்டேனென்று கண்டித்தாராம்.

---

318. ரா.பாபா - ஸர்க்கேல் பாபா ஆகலாம்.

319. ராமன் - ரெஸிடென்டு

320. ஸாமாதிகர்கள் - சுற்றியுள்ள ஜனங்கள்

321. பாபா - ஸர்க்கேல் பாபா

தங்கள் கடிதத்தைப் பார்த்தது ரா.பாபா இப்படிச் சொன்னாராம். அந்த நாள் நானும் பாபாவுமிருவரும் பாதரி சாஹேப்பினிடம் போயிருந்தோம். அபொழுது அவர் சொன்னதாவது. 3000 வராகனை நீங்கள் சென்னபட்டணத்திற்கு சுப்பராயரிடம் அனுப்பினீர்களாமே? அது என்ன" என்றார். இதற்கு நாம் சொன்னதாவது-"நம்மிடம் பணமேது நாம் ரா.ஸ்ரீராவுஜீக்குக் கொடுப்பதற்கு என்ன ஸம்பந்தம். இது பொய்யான சங்கதி. இதை யார் சொன்னது"என்று கேட்டேன்.

அதற்கு அவர் சொன்னதாவது- "நான் கேட்டேன். உங்களுக்குத் தெரியாதா? என்றார். நமக்குத் தெரியாதென்றோம். முன்னால் வந்த பின்பு ரா.பாபாவானவர் மொட்டை பண்டாரத்தின் பெயரைச் சொன்னார். அச்சங்கதியை யெல்லாம் ரா.ஸ்ரீக்கு[322] நன்கு விளக்குகிறது.

ஸ்ரீமந்த் சத்திரபதி கையினால் எழுதின கடிதத்தின் நகலை அனுப்பியிருக்கிறேன். அது ஆங்கிலேய பத்ததியா யிருப்பதால் ஒன்று இரண்டு முறை வாசித்துப் பார்த்துப் பிறகு அதற்கு முயற்சி செய்யவேணுமோ அப்படி செய்ய வேணும்.

6 அயிட்டம் கடிதம். மா.ஸ்ரீ. அவுசாகேப்[323] எழுதினார்களே அதின் நகலையும் அனுப்பியிருக்கிறேன். அதைப் பார்க்கத் தெரியவரும். அவுசாகேப்பின் தேகஸ்திதி[324] நாளுக்கு நாள் குறைந்து கொண்டு வருகிறது. இனிசரீரம் 7 5 நாட்கள் கூட உயிருடனிருப்பது கடினமானதால். 17வ. அமரசிங்கு பாதரிசாயேப்புக்குக்[325] கடிதம் அனுப்பினதாவது.

மா.அவுசாகேப்புக்குத் தேகநிலை சரிவர இல்லையே. நாம் போய்ப் பார்க்க வேணும். நல்லது கெட்டதானால் நாம் பாத்யஸ்தர்களானதால் நீங்கள் இதற்குப் பதில் சொல்லி அனுப்புங்களென்று கடிதம் அனுப்பினார். அதற்குப் பாதரிசாயேப் ரா.பாபாவுக்குச் சொல்லி பாயிசாயேப்பினிடம் அனுப்பினார். அதற்கு அவுசாயேப் பதில் சொன்னதாவது:-

நமக்கும் அவருக்கும் ஸம்மந்தமில்லை. அவர் வரவேண்டிய அவசியமில்லை. வந்தாலும் இப்படி செய்வேன், அப்படி செய்வேனென்றார்களாம். அவ்விஷயம் இன்று பாதரிசாயேப் அமரசிங்குக்கு எழுதப்போகிறாராம். அறியவும். இங்கே நம்மிடம் சில சுற்றியுள்ள ஜனங்கள் நாம் சென்னைக்குப் போகிறோம். பாதரி சாயேப்பிடமிருந்து ஒரு கடிதத்தை வாங்கிக்கொடுங்கள் என்றார். ரா.ஸ்ரீ.ராவுஜீக்கு விசாரித்தனுப்பி போகலாமென்றேன். அவருக்கு ஸமாதானமாகவில்லை.

---

322. ராஸ்ரீ-சத்திரபதி, சரபோஜி

323. அவுசாகேப் - திரௌபதியம்பாபாயி (இரண்டாம் துளஜாவின் தாய்)

324. தேகஸ்திதி - உடல்நிலை

325. பாதரி - ஸ்வார்ஷ் பாதரி

இங்கு அவுசாகேப் மனதில் ஒரு நிச்சயமிருப்பதாகத் தோன்றுகிறது. அக்காவினுடையவும் பண்டிதருடையவும் எண்ணம் இப்படி அப்படி யிருப்பதாகத் தோன்றுகிறது. தபாவின் நேரமானதால் கடிதத்தைச் சீக்கிரம் அனுப்பியிருக்கிறேன்.

*7-1853*

*(38)* ஜாபிதா மகால் நவவித்யா கலாநிதிசாலா[326] திம்மதி[327] ராஜாராம் சக்காஜி.

326. நவவித்யா கலாநிதி சாலா - (பக்கம் 240)

327. திம்மதி - வழக்குமன்றத் தீர்ப்பில் கையொப்பம் இடுபவர்.

# சரசுவதி மகால் பகுதி VIII

## மூட்டை எண் 31C

*(1-64) சகம் 1231*

*கி.பி.1830*

*(1) கர்ச் மகால் பேட்டா[1] - முத்திரைத்தாள் தொடர்பானது - பலங்க மகால் செலவுகள் - தாள், பனையோலை வாங்குவதற்கான செலவுகள்.*

*(2) சந்திர மௌலீஸ்வர சுவாமி கோவிலில்[2] உள்ள சத்திரத்திற்குத் தட்சணை. ஹுசூரின் (அரசரின்) பாராயணத்திற்காகச் செய்தது - ஸ்ரீ சிவாஜி ராஜா சாகேப்பினுடைய கோதானத்திற்கான செலவு.*

*(3) சௌ.மா.அகல்யாபாயி[3] சாகேப்பின் பூசைக்கான செலவுகள் - சௌ.சைதாம்பா பாயி[4] சாகேப்பின் பூசை - ஸ்ரீ சந்திர மௌலீஸ்வர சுவாமிக்கு தாமரைப்பூ, மாலை, அர்ச்சனை - சோழா பங்கில்[5] சிவலிங்க பூசை - செம்பரத்தைப் பூவினால் காளி அம்மன் பூசை - பிருகதீஸ்வரருக்கு மல்லிகைப்பூ அர்ச்சனை - உமாமகேசுவர பூசை - கல்யாண மகாலில் பூசைக்காகத் தட்சணை.*

*கி.பி.1830*

*(4) சௌ.சி.சுலக்சனா பாயி[6] அம்மணி ராஜே சாகேப்பின் தினசரி சிவபூசைக்குத் தட்சணையும், கௌரி பூசை பூசையும். ஹஜாரம்[7] அனுமானுக்குத் தினசரி பூசை - மருமகன் மைசி மொகிதேவின்[8] சனி ஜபத்திற்குத் தட்சணை.*

---

1. கர்ச் மகால் - அரசாங்கப் பொருள் நிலையம் (பக். 456)

2. சந்திரமௌலீசுவரர் கோயில் - இது மராட்டிய அரசகுடும்பத்தவர் வழிபடும் கோயில் (பக்கம் 191)

3. அஹல்யாபாயி - இரண்டாம் சரபோஜியின் இரண்டாம் மனைவி (போ.வ.ச.பக்.134)

4. சைதம்பாபாயி - இரண்டாம் சிவாஜியின் முதல் மனைவி (பக்கம் 32) 5. சோழ பங்கு - பொருட் சேமிப்பு இடமாகலாம்

6. சுலக்ஷணாபாயி - இரண்டாம் சரபோஜிக்கு அஹல்யாபாயியிடம் பிறந்த முதல் மகள் (போ.வ.ச.பக்.13)

7. ஹஜாராம் - வடக்கு வாயில்

8. மாப்பிள்ளை மோஹிதே என்பவர் இரண்டாம் சரபோஜியின் முதல்மனைவி யமுனாபாயியிடம் பிறந்த ராஜம்மா பாயியின் கணவன் ஜிவாஜிகோவிந்தராவ் மோஹிதே ஆகலாம்.

*(5) 1830*

கோட்டி மகாலி[9] (சேமிப்பு அறை)லிருந்து நிசிந்தே[10] (எழுத்தர்) பாலாஜிக்கு கோட்டி மகால் செலவிற்காக - மானோஜிமொகிதேவின் பிறந்தநாள் செலவுகள் - பங்கின் தனி உதவியாளர் நாகோஜி மோரேஸ்வரின் செலவுகள்.

*(6) 1830*

சங்கீதாம்பாளின் படகுக்காரன் கஸ்தூரி ரங்கையாவிற்கு - மொகரத்திற்குச் செலவு - ஹுசூர் எழுத்தரின் சகோதரர் விவன் பிள்ளைக்கு திருநெல்வேலிக்குப் போகச் செலவு - பங்க் எழுத்தரால் (காவல் அறை) தொகை ரொக்கமாகக் கொடுக்கப்பட்டது.

*(7) 1830*

பொதுப்பணித்துறை கடிவாலா ஹுசூர் எழுத்தருக்குப் பேட்டா - தலைமைக் கணக்கர் டேவிட் பிள்ளையின்[11] "மகனும், மகளும் திருநெல்வேலிக்குப் போக - அவர்களுடன் செல்பவர்களுக்காகவும் மூன்று நாட்களுக்குச் செலவு - சிவகெங்கைக் குளத்திலும், சிவகெங்கைக்கோட்டையிலும் மீன்கள் வாங்கிப் போட்ட செலவு கம்பெனி உருபாய்.

*(8) சகம் 1231, கி.பி.1830*

ஹுசூரிடமிருந்து, நாகோஜிமோரேஸ்வர் மூலமாக ஹுசூர்நவீஸ் பத்மவீஸ் (தலைமை எழுத்தரும் கணக்கரும்) டேவிட் பிள்ளை - விவன் பிள்ளை - ஜீவன் பிள்ளை - அடைக்கலம் - நட்டபிள்ளை - திம்மதி (கேப்டன்) ஸ்ரீ மானகோஜி காடா - ஆகியோருக்கும் சையத் சிலைமான் மற்றும் மையத் திவான் ஆகியோருக்கு மொகரம் பண்டிகைக்காகவும் ஒரு மாதச் சம்பளம் கொடுக்கப்பட்டது.

*(9) கி.பி.1830*

சிரஞ்சீவி இராஜஸ்ரீ சிவாஜி ராஜே சாகேப்பின் ஹார் தேவகஷ் - ஹுசூரின் செலவிற்காக பாயி சாகேப்பிற்கு - கல்யாணமகால் செலவுகள் [12] - சௌ.சி சுலக்சனாம்பா பாயி அம்மணி . . . ராஜே சாகேப்பின் ஜம்தார் கானா (நகை—உடை) செலவுகள் - ஹாஜாரம் அனுமார் கோவிலுக்கு - மருமகன் பசாஜி மொகிதேவுக்கு[13] - மாலுமிகளுக்கு - பாம்பாட்டிகளுக்கு

*(10) கி.பி.1830*

நாட்டுக்கோட்டைப் பிள்ளைக்கு இனாம்

*(14) கி.பி.1830*

படிக்கட்டின் அருகிலுள்ள சிலை - அப்பாசாமிக்கு - பசுமாடு மேய்க்கும் இராமசாமிக்கு - பாம்பாட்டி காதிர்மொகமதிற்கு

---

9. கோட்டிமஹால் - தானியக்கிடங்கு (பக்கம் 453)

10. நிசிந்தே - சிறிய அலுவலர் (கணக்கர்)

11. டேவிட் பிள்ளை - தாவித் பிள்ளை இரண்டாம் சரபோஜி காசியாத்திரை சென்றபொழுது உடன் சென்றவர்களில் ஒருவர் (பக்கம் 114)

12. கல்யாணமகால் - இரண்டாம் சரபோஜியின் காமக்கிழத்தியர் தங்கியிருந்த இடம் (பக்கம் 329)

13. மாப்பிள்ளை பேஸஜி கேசவ ராவ மோகிதே ; பேஸஜி - மேஸஜி ஆகலாம்.

*(18) கி.பி.1830*

*இராஜஸ்ரீ சரபோஜி ராஜா சாகேப்பின் சொந்தச் செலவுகள்*

*(33) கி.பி.1830*

*ஹுசூர் மகாராஜ் இராஜஸ்ரீ சரபோஜி மகாராஜா சாகேப்பின் ஆணை - நாட்டுக்கோ... டைப் பிள்ளைக்கு கம்பெனி ரூபாய் இனாம்*

*(35) கி.பி.1830*

*ஹஸம் ஜுஞ்ஜார் பிரதம பிரதீக் (உயர் இராணுவப் பதவி) அப்பாஜி சூர்யராஜி - ஹுஸம் ஜுஞ்ஜார் ஜமர்கபீஸ் (மற்றொரு இராணுவப் பதவி) இராமச்சந்திர வெங்காஜி - அவர்களிடம், பசுமாட்டை கோட்டைச் சுவரின்மேல் அவிழ்த்துவிட்டு மேயவிட்டதற்காக குப்பம்மா தண்டத் தொகையாக அபராதம் செலுத்தியது.*

*(39) கி.பி.1830*

*காலாட்படை இசைக் குழுவின் 10 பேர்களுக்குச் சம்பளம் - ஜான் மாக்போர்ட் இடம் கொடுத்தது.*

*(41) கி.பி.1830*

*அபராதத் தொகையாக வசூல் செய்தது.*

*(47) சகம் 1231, கி.பி.1830*

*பேஸஜி கேசவராவ் மொகிதேவின் மருமகனுக்கு சந்த்ரஸ்தமா பிரயுக்த தன தக்ஷிணை (சர்க்கரை பால்) செலவுகள்.*

*(51) கி.பி.1830*

*காட்டுக் கோழிகளைக் கொண்டுவந்து கொடுத்ததற்காக திம்மதி தர்மா ஜெட்டி எல்லடா ஜெட்டி - வஸ்தாத் சாகேப் வாசுதேவ வெங்காஜி முதலிய எட்டுப் பேர்களுக்கு இனாம்*

*(52) கி.பி.1830*

*இராஜாவின் ருத்ர பாராயணத்திற்காக[14] நாராயணசுவாமிக்கு - உபகரணங்கள், ஆயுதங்களைத் தீட்டும் பக்கீர் இரகீமுக்கு இராஜாவின் வாளைத் தீட்டியதற்காக - பசு மேய்க்கும் சேப்பானுக்கு - இனாம்*

*(53) கி.பி.1830*

*கல்யாண மகால் குழந்தைகளின் - வார - புத்தக பூசைக்கும் தேவைகளை வாங்கவும் செலவு*

*(58) கி.பி.1830*

*கி.பி.1830ஆம் ஆண்டு இராஜஸ்ரீ இராமச்சந்திர வெங்காஜி ஹஸம் ஜுஞ்ஜார் ஜமார்தீர், திம்மதி அப்பாஜி ஹெர்ஜேராவ் காட்கே ஆகியோர் சமர்ப்பித்த புரோநோட்டிற்குத் தொகை கொடுக்கப்பட்டது.*

---

14. ருத்ரபாராயணம் – ஸ்ரீருத்ரம் என்னும் வேதப்பகுதியைப் பாராயணம் செய்தல். இது மூன்று வேதங்களின் நடுவணதாகிய யசுர் வேதத்தின் நடுவில் இருப்பது. (பக். 379) இந்தத் திருவுருத்திரத்தின் நடுவில் "நமச்சிவாயச சிவதராயச" என்று திருவைந்தெழுத்து இருப்பதால் இத்திருவுருத்திரம் சிறப்புடையதாகக் கருதப்படுகிறது.

டேனியல் என்ற பீகிள் ஊதுபவர் பிரதம ஜமார்தீரின் காலாட்படையில் பணியமர்த்தப்படுகிறார்.
*சகம் 1226, கி.பி.1825*
*(1-256)*
*(2)* இராஜாவின் சிவபூஜைக்குத் தட்சணை - இராஜஸ்ரீ துளஜராஜா சாகேப்பின் ஆண்டுச் சிரார்த்தத்திற்காக இராஜஸ்ரீ சிவாஜி ராஜே சாகேப்பிற்கு
*(3) சகம் 1225, கி.பி.1824*
சௌ.அகில்யா பாயிசாகேப் (இராஜாவின் மனைவி) - சௌ.சைதாம்பா பாயி சாகேப் (மருமகள்) - சௌ.சுலக்சணாம்பா பாயி அம்மணி ராஜே சாகேப் (மகள்) - சௌ.இராசம்மா பாயி அம்மணி ராஜே சாகேப்[15] ஆகியவர்களுக்கு
*(4) கி.பி.1830*
சௌ.இராஜகுமராம்பா பாயி அம்மணி ராஜே சாகேப் (மகள்) - சௌ.சக்வாரம்பா பாயி அம்மணி ராஜே சாகேப் (மகள்) - மருமகன் இராஜஸ்ரீ மெசாஜி மொகிதே - மருமகன் இராஜஸ்ரீ சிவாஜி கோவிந்தராவ் மொகிதே-மருமகன் இராஜஸ்ரீ நாகோஜி சதாசிவராவ் மொகிதே - மருமகன் யஷ்வந்தராவ் - இராமச்சந்திர ராவ் ஸ்கார்வே - மருமகன் இராஜஸ்ரீ இராமச்சந்திர ராவ் யஷ்வந்த ராவ் இங்களே, - சி.மானாஜி மொகிதே
*(5) சகம் 1225, கி.பி.1824*
சி.இராமச்சந்திர ராவ் ஸ்கார்வே - பிரதாபருத்ர மானேராவ் ஸ்கார்வே - பிரதாபருத்ர மானேராவ் இங்களே - சௌ.ராஜம்மா - சௌ.சக்வார்பாயி (சுபாஜி பூபாஜி போன்ஸ்லேயின் மனைவி) - ராமோஜி சூல்தான்ஜி சர்ஜேராவ் - மல்லார்ஜி அப்பா - வஜாரத்மாப் ராஜஸ்ரீ இராமச்சந்திர ராவ் சிவாஜி - கோர்ப்படேவின் மாவுகே - சேகோஜி ரகோஜி மஹாடிக்கின் சகோதரியின் திருமணம் வஜாரத்மாப் ராஜஸ்ரீ சுபான்ஜி அண்ணாஜி மஹாடிக் மற்றும் சுப்பாராவ் அண்ணாஜி மொகிதேவின் திருமணத்திற்காக -

*(6) சகம் 1225 கி.பி.1824*
வஜாரத்மாப் ராஜஸ்ரீ ஹனுமந்தராவ் மற்றும் சுந்தர்ஜி சர்ஜேராவ் கோர்படேவின் சகோதரியின் திருமணம் வஜாரத்மாப் ராஜஸ்ரீ துரோஜி வெங்கடராவ் காடேவின் மூன்று மகன்கள் மற்றும் ஒரு மகளின் திருமணம்.

*(7) சகம் 1225 கி.பி.1824*
சரஸ்வதி பாண்டாருக்காக - கும்பாபிஷேகத்திற்காக - தொப்பரக்குட்டிப் பிள்ளையாருக்காக[16] - பாததுரை வெங்கடேஸ்வர சுவாமி[17] - சோழராஜா பங்கிலுள்ள துளஜேந்திர மகாலிலுள்ள சிவலிங்கத்திற்குப் பூசைக்காக

15. ராஜம்மாபாயி - இவர் இரண்டாம் சரபோஜியின் முதன்மனைவி யமுனாபாயி வயிற்றில் பிறந்த பெண் ஆவர்.

16. தொப்பரகட்டிப்பிள்ளையார் - இவர் அளகேசுவர பிள்ளையார் அல்லது தொப்பாரம் கேட்ட பிள்ளையார் எனப்பெறுவர். இவ்விநாயகர் கோயில் முன்பு தெற்கு நோக்கிய சன்னதியாக இருந்தது என்றும், 1904இல் இராணி ஜிஜாம்பா பாயி காலத்தில் மேடைகட்டி மேற்கு நோக்கிய சன்னதி ஆக்கப்பட்டது என்றும் தெரிகிறது (தஞ்சைத் திருக்கோயில்கள் பக்கம் 67). இக்கோயிலில் கி.பி. 1532க்குரியகல்வெட்டிருப்பதால் இது ஒரு பழமையான கோயில் என்று தெரிய வரும்.

17. படித்துறை வெங்கடேசர் - (பக்கம் 213இல் 30) இது வடவாற்றின் தென்கரையில் இருந்தது என்றும், பின்னர் வடகரையில் அமைக்கப்பெற்றது என்றும் தெரிகிறது (தஞ்சைத்திருக்கோயில்கள் பக்கம் 59)

*(8) சகம் 1225 கி.பி.1824*

*அய்யனார் பிடாரிக்கு ஹுசூர் பங்க் அனுமான் - படிக்கட்டின் அருகிலுள்ள அனுமான் - திருவண்ணாமலை அருணாச்சல சுவாமி - யமுனாம்பாபுரம்[18] ஸ்ரீ சந்தன இராமசுவாமி - மன்னார்குடி இராஜ கோபால சுவாமி - ஸ்ரீ விட்டோபா[19] பஞ்சநதீஸ்வர சுவாமி [20] - வல்லம் நுழைவாயிலின் அருகிலுள்ள சுப்பிரமணிய சுவாமி - தஸ்தான் மகால்[21] ஸ்ரீ தேவி நாய்கஸ்வாமி - ஹுசூர் பங்க் அனுமான் - வெற்றி வாயிலின் அருகிலுள்ள வெள்ளைப் பிள்ளையார் [22].*

*(9) சகம் 1225 கி.பி.1824*

*வெற்றி வாயிலின் அருகிலுள்ள வீரபத்ர சுவாமிக்கு - வெற்றி வாயிலின் அருகிலுள்ள கோதண்ட ராமஸ்வாமி[23] - ஸ்ரீ மகாலிங்க மூர்த்தி சுவாமி, திருவிடைமருதூர் – ஸ்ரீ பிரகதீஸ்வர சுவாமி கோயிலின் 108 லிங்கங்கள்[24] - பிரகதீஸ்வர சுவாமி கோயிலுள்ள ஜுவரஹரேஸ்வர சுவாமி கோயில்[25] - பஞ்சநதி க்ஷேத்திரத்தில் உள்ள பிரணதார்த்திகரா சுவாமி கோயில்[26] - ஸ்ரீ ஜம்புகேஸ்வர க்ஷேத்திரிய [27] அகிலாண்டேஸ்வரி அபிஷேகம் முதலியன - பஜன சாலை - விட்டோபா [28] பிராமண போஜனம் - வேத பாராயணப்பிராமணர்கள் -*

---

18. யமுனாம்பாபுரம் என்றது நீடாமங்கலம் ஆகும்; யமுனாம்பாள் பிரதாபசிங்கரின் மூன்றாவது மனைவி; இவ்வூர்ச் சத்திரத்தோடு இணைக்கப்பட்ட கோயில்களுள் ஒன்று சந்தான ராமசாமி கோயில் (பக்கம் 271)

19. விட்டோபா - இக்கோயில் கீழவீதியில் உள்ளது (பக்கம் 213இல் 23) விட்டோபா திருவுருவத்தைப் பண்டரிபுரத்திலிருந்து இரண்டாம் சரபோஜி கொணர்ந்து அமைத்தார். (பக்கம் 189)

20. பஞ்சநதீசுவர சுவாமி-திருவையாற்றில் கோயில் கொண்டுள்ள சிவபெருமான்

21. தாஸ்தான் மஹால் - நெற் களஞ்சியம் (பக்கம் 463)

22. கீழவாசலாகிய வெற்றி வாசலுக்கருகில் உள்ளது வெள்ளைப்பிள்ளையார் கோயில். இது விஜயராகவ நாயக்கர் காலத்தில் கட்டப்பெற்றது. ஸ்ரீவல்லபை மூலத்தானத்துப்பிள்ளையார் என்பது வெள்ளைப் பிள்ளையார் ஆயிற்று (தஞ்சைத் திருக்கோயில்கள் பக்.64) (பக்கம் 213இல் 26)

23. கோதண்டராமசுவாமி - (பக்கம் 213இல் 25)

24. நூற்றெட்டுலிங்கம் - கி.பி. 1801இல் 108 சிவலிங்கங்கள் அமைக்கப்பட்டன (பக்கம் 196)

25. ஜுவரஹரேசுவரர் - உடல்நலம் குன்றினால் அபிடேகம் பூசை செய்வதுண்டு

26. பிரணதார்த்திஹரர் - ஐயாறப்பருக்குப் புராணத்தில் வழங்கும்பெயர்.

27. ஜம்புகேசுவர க்ஷேத்திரம் - திருஆனைக்கா; இறைவன் நாவற்கீழ் எழுந்தருளியிருப்பதால் இப்பெயர்; அகிலாண்டேசுவரி என்பது அம்மனின் பெயர்.

28. பஜனசாலா விட்டோபா - விட்டோபா கோயில்

*(10) சகம் 1225 கி.பி.1824*

கண்டியூரில்[29] திருவாதி சப்தஸ்தானத்திற்காக[30] பானகபூசை[31] - ஆடி மீ 18ஆம்.பெருக்கு - வடவாற்றில் யதீஸ்வரருக்கு[32] (இராகவேந்திர சுவாமி) ஹோலிப் பண்டிகை[33] - வடக்கு வாயில் - கல்யாண மகாலின் புண்ணியாகவசனத்திற்கு[34] - வெற்றி வாயிலில் பழுது நீக்கிப் பூசை செய்தல் -

*(11) சகம் 1225 கி.பி.1824*

தர்மச்சாவடிக்கு - தனியார் பள்ளிகளுக்குக் கட்டிட நல்கை - 18 வகைச் சாதியினரைப் படம் வரைய - தஞ்சாவூரின் நான்கு வீதிகளிலுமுள்ள பொதுக் கழிவு நீர்க் கால்வாயின் இருபுறத்திலும் கட்டி வடிகாலை ஓடச் செய்தல்.

*(12) சகம் 1225 கி.பி.1824*

பொந்திரிபாளையம்[35] தோட்டத்தில் கண்டேராவின்[36] சின்னத்திற்குப் பூஜை - கைலாசமகாலின் தடை - அனாதைப் பிணங்களுக்குச் செலவு - சஹகஈமனம்(உடன்கட்டை) - கலைஞர்களின் நடனத்திற்காக.

*(13) சகம் 1225 கி.பி.1824*

மேஸ்தர் ஜான்பாதரியிடம்[37] மிஸனுக்காகக் கொடுத்த இனாம் - ரெசிடெண்ட் கேப்டன் ஜான் பைப்பின் பங்களாவைப் பழுதுபார்த்தது - இராஜாவினால் அர்பத்நாட் செலுத்தப்பட்டது 12000 கம்பனி உருபாய்கள்.

*(14) சகம் 1225 கி.பி.1824*

ஹௌதாவிற்கு வண்ணம் பூசியதற்காக உமர்கானுக்கு - திருப்பதிக்குச் சப்பரம்[38] அனுப்பியதற்காக - சௌ.இராஜம்மா மூலம் பழனிக்குக் காவடி அனுப்பியதற்காக.

---

29. கண்டியூர் - திருவையாற்றுக்கு அருகில் உள்ள சிறந்த சிவத்தலம் - திருவையாற்றுச் சப்தஸ்தானங்களுள் ஏழூர்களுள் ஒன்று.

30. சப்தஸ்தானம் - ஏழூர் (திருப்பழனம், திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம், திருவையாறு)

31. பானகபூசை - நீர்மோர்; வெல்லம்; வாசனைப் பண்டங்கள் கலந்த நீர் முதலியன அளித்தல்.

32. யதீசுவரர் - பெருந்துறவி

33. ஹோலிப் பண்டிகை (பக்கம் 316)

34. புண்ணியாஹ வாசனம் - மகப்பேறு முதலிய காலங்களில் கருதப்படும் தீட்டு முதலியவற்றைப் போக்குவதற்கு நடத்தப்பெறும் சடங்கு

35. பொந்திரிபாளையம் - களிமேட்டுப்பக்கம் உள்ளது.

36. கண்டேராவ் - மராட்டியர் குலதெய்வங்களில் ஒருவர் (பக்கம் 348)

37. ஜான்பாதரி - இவர் தரங்கம்பாடியில் ஓர் ஆங்கிலப்பள்ளி நடத்தியவராகக் காணப்படுகிறார் (பக்கம் 211) இரண்டாம் சரபோஜி காலத்தில் இவருக்கு 1332 1/2 குழி நிலம் இனாம் வழங்கப்பட்டது. (மூட்டை எண் 545சி - 6-1)

38. திருப்பதி சப்பரம் (பக்கம் 201)

*(15) சகம் 1225 கி.பி.1824*

பசு ஒரே நேரத்தில் இரண்டு கன்றுகளை ஈன்றது போல - தட்டுமகாலில்[39] சாந்தி முகூர்த்தம் (இராஜாவின் கையிலுள்ள சொந்த நாட்குறிப்பு)

*(26) சகம் 1225 கி.பி.1824*

பசு நல்ல கருமை நிறமுள்ள கபிலக் கன்றுவை ஈன்றதற்காக இராஜஸ்ரீ திவான் சாகேப் (யுவராஜ் சிவாஜி) பூசை, தட்சிணை செய்தது.

*(45) சகம் 1225 கி.பி.1824*

கொங்கணேசுவர சுவாமிக்கு[40] ஏகாதசி ருத்ர பாராயணமும்[41] அபிடேகமும்.

*(46) சகம் 1225 கி.பி.1824*

காமாட்சி அம்மன் கோவிலில்[42] அபிடேகமும் குங்கும அர்ச்சனையும்

*(51) சகம் 1225 கி.பி.1824*

இராஜஸ்ரீ சிவாஜி ராஜா சாகேப்பின் வயிற்று நோயை நீக்குவதற்காக சக்கரத்திற்கு[43] இரண்டு மண்டல பூசை (90 நாள்கள்.).

*(58) சகம் 1225 கி.பி.1824*

சிவாஜி ராஜாவிற்குக் கைக்கங்கணம் செய்வதற்கு

*(121) சகம் 1225 கி.பி.1824*

யமுனாம்பாபேட்டை கோதண்டராமசுவாமிக்கு[44]

*(122) சகம் 1225 கி.பி.1824*

மாரியம்மன் கோவில் மாரியம்மனுக்கு

*(142) சகம் 1225 கி.பி.1824*

ஜாசூத மகாலுக்குக்[45] கொடுத்தது சக்ரம். (ஆணை, கடிதம் போன்றவற்றை அனுப்புமிடம்.)

---

39. தட்டுமகால் - (தட்டிமகால்) மாட்டுக்கொட்டகை (பக்கம் 457)

40 கொங்கணேசுவரர் - இவர் கோயில் தஞ்சை மேலவீதியிலுள்ளது (பக்கம் 13இல் 3); மிகப் பழமையான கோயில் (தஞ்சைத் திருக்கோயில்கள் பக்கம் 74-75)

41. ஏகாதசி ருத்ரபாராயணம்-திருவுருத்திரத்தைப் பதினொருமுறை பாராயணம் செய்தல்.

42. காமாட்சியம்மன் கோயில் - பங்காரு காமாட்சியம்மன் கோயில் எனப்பெறும் ஹைதர் கலாபத்தில் காஞ்சிபுரத்திலிருந்து உடையார் பாளையத்துக்கு வந்து பின்னர்த் தஞ்சைக்குக் கொண்டு வரப்பட்டார் (தஞ்சைத் திருக்கோயில்கள் பக்கம் 77) (பக்கம் 213இல் 7)

43. சக்ரம் என்றது சந்திர மௌலீஸ்வரசுவாமி கோயிலில் உள்ளது போலும்.

44. கோதண்டராமசாமி கோயில் - மாரியம்மன் கோயில் என்ற ஊரின்மேற்கில் மிகச் சிறப்பான தோற்றத்துடன் விளங்குவது. இக்கோயில் இருக்கும் பெருமாள் ஸ்ரீகோதண்டராமர் ஆவர். இவர் யமுனாம்பாள்புரம் எனப்பட்ட நீடாமங்கலத்துக்கு அடுத்த பூவனூரில் இருந்து இங்குக் கொணரப்பட்டாரெனத் தெரிகிறது. (தஞ்சை திருக்கோயில்கள் பக்கம் 62) (யமுனாம்பாபேட்டை-யமுனாம்பாள்புரம் - நீடாமங்கலம்)

45. ஜாசூதமகால் –இரகசியத்தூதுவர் இல்லம் ஆகலாம் (பக்கம் 229)

*(144) சகம் 1225 கி.பி.1824*
அஸ்ரித கவீஸ்வரசுவாமி[46] (பாதரி) இரகுநாத கிருஷ்ணாஜி சுவாமி ஆகியோருக்குப் பட்டுவாடா.

*(145) சகம் 1225 கி.பி.1824*
சங்கீத வித்யாதிக[47] சேது அண்ணாஜி சுவாமிக்குப் பட்டுவாடா

*(146) சகம் 1225 கி.பி.1824*
பாகவத மேளா[48] சுவாமி மல்லார் நாபோஜிக்கும் அவரது மகனுக்கும் பட்டுவாடா

*(147) சகம் 1225 கி.பி.1824*
இராணுவப் பொருட் சேமிப்புத் துறை - அலுவலர்களுக்குப் பட்டுவாடா.

*(148) சகம் 1225 கி.பி.1824*
பொதுப்பணித்துறை ஊழியர்களுக்குச் சம்பளப் பட்டுவாடா

*(149) சகம் 1225 கி.பி.1824*
யானை லாயம் - அரசுத்துறை அலுவலர்களுக்குப் பட்டுவாடா - நிஷபதி தொடர்பானது.

*(150) சகம் 1225 கி.பி.1824*
இலாயத்துறை - அரசு லாயங்கள்

*(152) சகம் 1225 கி.பி.1824*
கட்டிடத்துறை - திருவாதியிலுள்ள[49] திவான் வாடா அலுவலர்களுக்கு ஊதியப் பட்டுவாடா.

*(153) சகம் 1225 கி.பி.1824*
தஞ்சை சிவகெங்கைக் கோட்டையிலுள்ள பழைய கட்டிட அலுவலர்களுக்கு ஊதியப்பட்டுவாடா

*(154) சகம் 1225 கி.பி.1824*
பணம் வசூலிக்கும் முகவர் பாவு ராவுக்கு பட்டுவாடா (மஜ்மு - வசூல் பணி)

*(157) சகம் 1225 கி.பி.1824*
மறைந்த இராஜஸ்ரீ ஏகோஜி ராஜாவின்[50] கொள்ளுப் பேரன் கேசவராவ் சதாசிவ ராவ் மொகிதேவுக்கு.

---

46. ஆசிருத கவீஸ்வரசுவாமி - அண்டியிருந்து கவிபாடுபவர் (பெரும்புலவர்)

47. சங்கீத வித்யாதிக - இசைவல்லுநர்கள் இருந்த பிரிவு (பக்கம் 229)

48. பாகவதமேளா (பக்கம் 230) - இசைநாடகக்குழு

49. திருவாதி - திருவையாறு

50. ஏகோஜி என்றது தஞ்சையைக் கைப்பற்றிய முதலாம் ஏகோஜி ஆகலாம்; உண்மையறிய வாய்ப்பில்லை.

*(160) சகம் 1225 கி.பி.1824*
மறைந்த இராஜஸ்ரீ பிரதாபசிம்ம இராஜா சாகேப்பின் மனைவியினுடைய சகோதரர் துபகள இராமச்சந்திர நாயக் அவர்களுக்கு

*(162) சகம் 1225 கி.பி.1824*
மறைந்த மாதுஸ்ரீ இராஜகுமராம்பா பாயி சாகேப்பின்[51] பணியாள் கொண்டோஜி கிருஷ்ணாஜி பாய் கொடேவுக்கு

*(163) சகம் 1225 கி.பி.1824*
மறைந்த இராஜஸ்ரீ ஏகோஜி ராஜா சாகேபின் கொள்ளுப் பேரன் தானாஜி கோவிந்த ராவ் கோர்படேவுக்கு

*(164) சகம் 1225 கி.பி.1824*
மறைந்த சௌ.யமுனாம்பா பாயி சாகேப்பின்[52] சகோதரி அக்கம்மா நலவடேயின் பேரன் வெங்கப்பா இராமச்சந்திர நலவடேவுக்கு -

*(172) சகம் 1225 கி.பி.1824*
பலங்க மகால்[53] ஆவணக் காப்பாளர் *(Record Keeper)* வெங்காஜி கோவிந்த்

*(175) சகம் 1225 கி.பி.1824*
தர்ம சபையின்[54] அட்டவணை (பட்டியல்கள்) எழுத்தர் ஆபத்சகாய அய்யருக்கு -

*(176) சகம் 1225 கி.பி.1824*
கோனேரி அம்பாஜி பண்டிதருக்கு

*(177) சகம் 1225 கி.பி.1824*
விட்டல்ராவ் பாபுராவிற்கு

*(178) சகம் 1225 கி.பி.1824*
சங்கர்ஜி பிரபாகருக்கு

*(179) சகம் 1225 கி.பி.1824*
சீனிவாச சேசோ - ஒவ்வொருவருக்கும்

*(180) சகம் 1225 கி.பி.1824*
புஜங்கராவ் சிதம்பர ராவ் பேசுவாவிற்கு[55]

---

51. இரண்டாம் துளஜாவின் மனைவியர்களுள் ஒருவர் (போ.வ.ச.பக்.125)

52. யமுனாம்பாள் பிரதாப சிங்கரின் மூன்றாவது மனைவியாகலாம் (பக்கம் 271)

53. பலங்கமகால் - பால்கிமஹால் - பல்லக்குக்கூடம்

54. தருமசபை - தஞ்சையில் 1800 முதல் இருந்த நான்கு நியாயமன்றங்களுள் ஒன்று.

55. பீஷ்வா - மராட்டிய அரசின் முதலமைச்சர் வழிவந்தவர்

*181) சகம் 1225 கி.பி.1824*
*இராஜஸ்ரீ சந்திரசேகர ராவ் திரியம்பகராவ் பேசுவாவிற்கு*

*182) சகம் 1225 கி.பி.1824*
ஜெகன்னாதராவ் பேசுவாவிற்கு

*183) சகம் 1225 கி.பி.1824*
*விசுவநாத் ராவ் பேசுவாவிற்கு*

*184) சகம் 1225 கி.பி.1824*
*இராமச்சந்திர பேசுவாவின் மருமகள் சுந்தரா பாயிக்கு*

*185) சகம் 1225 கி.பி.1824*
*நாராயண ராவ் பேசுவாவிற்கு*

*186) சகம் 1225 கி.பி.1824*
*பாலகிருஷ்ண ராவ் பேசுவாவிற்கு*

*187) சகம் 1225 கி.பி.1824*
*கங்காதர் ராவ் நீலகண்ட ராவ் - கிருஷ்ணராவ் சவாயி ஆனந்தராவ் பேசுவா.*

*188) சகம் 1225 கி.பி.1824*
*இராஜஸ்ரீ தபீர்பந்த்தின்*[56] *கொள்ளுப்பேரன் ஸ்ரீ ...........*

*189) சகம் 1225 கி.பி.1824*
*நாரோ விசுவநாத்*[57] *மற்றும் நாநாஜி கங்காதர்*

*197) சகம் 1225 கி.பி.1824*
*ராஜாராம் கிருஷ்ணாஜி படைக்கலக் கொட்டிலுக்கு (ஜிராத்கானா) நியமிக்கப்படுகிறார்.*

*198) சகம் 1225 கி.பி.1824*
*ஹுசூர் செயலரும் தலைமைக் கணக்கருமான பாபாஜி கங்காதருக்கு -*

*202) சகம் 1225 கி.பி.1824*
*தர்ம சபை எழுத்தர் ரகுநாத கண்டோஜிக்கு -*

*203) சகம் 1225 கி.பி.1824*
*சக்ரோ அப்பாஜி படைக்கலக் கொட்டிலுக்கு நியமிக்கப்படுகிறார்.*

---

56. டபீர்பந்த் - இவர் பிரதாபசிங்கர் காலத்திய சிறந்த அமைச்சர்; ''டபீர்முறை'' என்ற முறையை ஏற்படுத்தியவர். டபீர் முறையாவது பத்து ஆண்டுகளின் வருமானத்தையறிந்து அதன் சராசரியைப் பயிரிடுபவர் தரவேண்டும் என்பதாகும். (பக். 77-78)

57. நாரோவிஸ்வநாத் - இவர் டபீர்பண்டிதரின் பேரர்களில் ஒருவர் (பக்கம் 78)

*209) சகம் 1225 கி.பி.1824*
*தீபச் சந்த லாலா - உதயச் சந்த லாலா ஆகியோருக்கு*

*210) மல்லார்ஜி ஹசாஜி காயக்வாடேவுக்கு*

*211) சகம் 1225 கி.பி.1824*
*இராமாஜி சிதம்பரரின் மனைவி காசி பாயிக்கு*

*212) சகம் 1225 கி.பி.1824*
*நானாஜி ஜிவாஜியின் மருமகளுக்கு -*

*214) சகம் 1225 கி.பி.1824*
*தர்ம சபை சாஸ்திரி பழமனேரி அண்ணா சாஸ்திரி அவர்களுக்கு மாத ஊதியம் 20 சக்ரம்.*
*222) சகம் 1225 கி.பி.1824*
*முத்திரித சபை[58] தலைமை நீதிபதி அய்யா சாஸ்திரி அவர்களுக்கு மாத ஊதியம் 15 சக்ரம்.*

*229) சகம் 1225 கி.பி.1824*
*மேன்மை நீதிமன்ற இரண்டாம் தலைமை நீதிபதி குப்பா சாஸ்திரி*

*231) சகம் 1225 கி.பி.1824*
*வாசுதேவ நாயக் இராமசாமி நாயக்கின் மகன்களுக்கு மாத ஊதியம் 30 புலிஹோன்கள்.*

*234) சகம் 1225 கி.பி. 1824*
*ஆமதாபூர் பர்கானாவின்[59] சிவாஜி சங்கராஜ் - எழுத்தர் பாபாண்ணியின் மகனுக்கு ஒவ்வொரு மாதமும் -*

*244) சகம் 1225 கி.பி.1824*
*சலவைத் தொழிலாளி குருமூர்த்தி துணி தேய்த்ததற்கு - 52 சக்ரம்*

*246) சகம் 1225 கி.பி.1824*
*குத்தி[60] - ஒட்டிப் புலியின் மாத ஊதியம்*

*247) சகம் 1225 கி.பி.1824*
*சம்போ மகாதேவபேட்டை[61] - தண்ணீர்பந்தல்*

---

58. முத்ரித சபை - நான்கு நியாய சபைகளுள் ஒன்று

59. பர்காணா - சிலஊர்களின் தொகுதி

60. Guthy - குத்தி என்றவூர்.

61. சம்பூமகாதேவ் பேட்டை - மகாதேவபட்டினம்; மன்னார்குடிக்குத் தென்மேற்கே 10 கி.மீ. தொலைவிலுள்ளது. (சம்புபர்வதத்தில் இருக்கும் சிவபெருமான் சம்பூமகாதேவர், அவர் பெயரால் அமைந்த ஊர்; சம்பூபர்வதம் சதாரா மாவட்டத்திலுள்ளது.)

*255) சகம் 1225 கி.பி.1824*

அரசு படைக்கலக் கொட்டில் (திம்மதி-ஒரு கம்பெனி அல்லது அமைப்பின் பொறுப்பு மற்றும் கட்டுப்பாட்டைக் கொண்டவர்) திம்மதி ஏகோஜி ராகோஜி மகாடிக் மற்றும் அவரது ஆட்கள்.

*256) சகம் 1225 கி.பி.1824*

திம்மதி ராஜஸ்ரீ மனகோஜி காடே மற்றும் அவரது ஆட்களுக்குச் சம்பளப் பட்டுவாடா.

*8.(1-237)*

*சகம் 1243 கி.பி.1842*

3) முத்திரைத் தாள்களைச் சேகரித்தமைக்கு - முத்திரை அல்லது அஞ்சல்தலைப் பாதுகாப்பாளருக்குப் பேட்டா - சுங்கவரித் துறை - வங்கித் துறை (செராஃப்) - மாதுஸ்ரீ ஆவுசாகேப்[62] தோட்டம் வகையறா - சரபேந்திர ராஜ பட்டணம்[63] - ஆடை ஆபரணத் துறை - அரசரது உறைவிடங்கள் - வரவு செலவுக் கணக்குகள் - இராணுவத் தளவாடத் துறை - தௌலத் பாவ்லோக்[64] -

*27) சகம் 1234 கி.பி.1842*

வேட்டை மகால் (சிகார்கானா) - குலால்மகால் (வண்ணங்கள் முதலியன)

*62) சகம் 1243 கி.பி.1842*

அரசு படைக்கலக் கொட்டிலின் திம்மதி ஏகோஜி மகாடிக் மற்றும் அவரது ஆணைக்குட்பட்ட ஆட்களும்.

*203) சகம் 1243 கி.பி.1842*

அகோபில மடத்தின் ஜீயர் சுவாமிகளால் அனுப்பப்பட்ட ஸ்ரீமுகத்திற்கான[65] வழக்கமான பூசைச் செலவுகள்.

*204) சகம் 1243 கி.பி.1842*

ஸ்ரீ சங்கராச்சாரியார் சுவாமிகளின்[66] மடத்திற்கு இராஜஸ்ரீ திவான் சாகேப் (சிவாஜியின்) அவர்களின் வருகை - குடமுழுக்கிற்கும் பூசைக்குமாக 500 பொற்காசுகள்.

*209) சகம் 1243 கி.பி.1842*

குடிதண்ணீர் வசதி செய்து தரும் (அப்தார்கானா) பொறுப்பாளர் - குடிதண்ணீர் சுத்திகரித்தல் மற்றும் குளிரூட்டும் (தண்ணீர்ப்பந்தல்) பொறுப்பாளர் - மொகரம் பண்டிகைக்காக ஜாஸியா (அல்லா) அமைத்தல் - பூக்கள் முதலியன வாங்குதல்

---

62. ஆவுசாஹேப் - அஹல்யாபாயி - இரண்டாம் சரபோஜியின் இரண்டாவது மனைவி.

63. சரபேந்திரராச பட்டணம் சாளுவ நாயக்கன்பட்டணம்; இதில் மனோரா முதலியன கட்டிய பிறகு சரபேந்திர ராசபட்டணம் என்று இரண்டாம் சரபோஜியால் அழைக்கப்பட்டது - மாரத்தியர்கல்வெட்டுக்கள் எண் 91, திரு.செ.இராசு)

64. தவுலத்பாவ்லோக்-அரசனுக்குப் பணி செய்பவர்; அணுக்கத் தொண்டர்கள்.

65. ஸ்ரீமுகம் - கடிதம் (பக்கம் 437)

66. இக்காலகட்டத்தில் சங்கராசார்யராக இருந்தவர் ஐந்தாம் சந்திரசேகரேந்திர சரசுவதி சுவாமிகள் ஆவர். இவர் காலம் 1814-1851.

*12. (1-73)*

*63) சகம் 1200 கி.பி.1799*

*நிசிந்தே[67] ரங்கோ பாலகிருஷ்ணனின் மகனுடைய தான்சுரே சடங்குச் செலவுகள்.*

*69) சகம் 1200 கி.பி.1799*

*அராபிய வாத்திய இசைக் கலைஞனுக்கு முனாஜி மானே ஜீவாஜி அண்ணாஜி சகாபலாவின் மூலம் உரூ 20 இனாம்.*

*26. (1-67)*

*சகம் 1231 கி.பி.1830*

*அரண்மனை நகர்கானா[68] அலுவலர்களுக்கு - ஆபரணங்கள் செய்த செலவிற்காக உமாசாயல்பட்டணம் லப்பைக்கு -*

*13) இராஜஸ்ரீ சிவாஜி மகாராஜா சாகேப்பின் திருமணத்திற்காக நகைகள் செய்யத் தங்கம் வாங்கியது - 1000சக்ரம்.*

*15) நெல் சேமித்து வைப்பதற்காக சிவகெங்கைக் கோட்டைச் செலவு - 1000 சக்ரம்*

*17) சகம் 1230 கி.பி.1829*

*சமரதீர்களின் (குதிரைப்படைப் பாதுகாவலர்கள்) குதிரைகளுக்குச் செலவு - சேணம் மற்றும் பிறபொருட்கள் செய்வதற்கு -*

*29) பெரிய வாட்களிலிருந்து சின்ன வாட்களைச் செய்வதற்கு பித்தளைச் சாமான்கள் வாங்கிய செலவு*

*32) எஃகு மற்றும் ஈயத்தைக் கலந்து பீரங்கியின் பாகங்களைச் செய்வதற்குச் செலவு*

*27. (1-8)*

*1) சகம் 1231 கி.பி.1830*

*பல்வகைத் துறைக்கட்டிடங்களின் பழுதுபார்ப்புச் செலவு - கூலி மற்றும் சாமான்கள்.*

*4) சகம் 1232 கி.பி.1831*

*கட்டிடத்துறை - சிவகெங்கைக் கோட்டை (அரபுப் பீரங்கி) பீரங்கித்தளம் - அகழிச் சுவர் பழுது பார்த்தல் - மண்ணெடுத்தல் முதலியவற்றிற்குச் செலவு 1900 சக்ரம்.*

*6) 6 பவுண்டு பீரங்கிகளையும் கைத்துப்பாக்கிகளையும் கொண்டு, பீரங்கிப்படை, மற்றும் துப்பாக்கிப் படையினருக்குப் பயிற்சியளித்தல் செலவுகள்.*

*28. (1-73)*

*1) சகம் 1231 கி.பி.1830*

*முத்திரைத்தாள்களை விற்பனை செய்தல் - வைரம் மற்றும் தட்டை வைரங்களை வாங்குதல்*

67. நிசிந்தே – சிறிய அலுவலர்

68. நகார் கானா (பக்கம் 454) - ஒலிக்கும் கருவிகள் வைக்கப்படும் இடம்.

*29. (1-31)*

*1) சகம் 1228 கி.பி.1827*

அரண்மனைக் கருவூலத்தின் விளக்க வேண்டல், எழுத்தாணை, ஒப்புதல் ஆணை - அரசு படைக்கலக் கொட்டில் - திம்மதி சேகோஜி ரகோஜி மகாடிக்கின் ஆணை - அவரது கட்டுப்பாட்டிலுள்ளவர்களுக்கு ஒரு மாத ஊதியம்.

*30. (1-61)*

*19) சகம் 1232 கி.பி.1831*

கல்யாண மகால் சௌ.லாடுபாய் அம்மாள் மற்றும் சௌ.பாயம்மா பாய் அம்மாள் ஆகியவர்களுக்குப் பணப்பட்டுவாடா

*31. (1-232)*

*36) சகம் 1225 கி.பி.1824*

வஜ்ருல் வசூல் அதிகாரி இராஜஸ்ரீ பாபா ராமாஜி பண்டிட்[69] - அவருக்குப் பதிலாகப் (முபதலா-பதிவி) பொறுப்பாளரின் வசூல் 2000 சக்ரம்.

57) சங்கர நாராயண சுவாமியின்[70] இரதோற்சவத்திற்கு - சக்ரம் 133.

71) பனையோலை படியெடுப்பவர்கள் - வேலாயுதம் பிள்ளை - அல்லகம் பிள்ளை - வேலாயுதம் முதலி - சுந்தரராஜ முதலி - சுப்பராய பிள்ளை - வெங்கடாசலம் பிள்ளை - சுவாமிநாத பிள்ளை - வாசுதேவ பிள்ளை.

76) இராஜாவோடு காசிக்குச் சென்ற சந்நியாசி அவருக்குப் பரிசளித்தது.

*85) சகம் 1225 கி.பி.1824*

யமுனாம்பாபுரம்[71] ஸ்ரீ சந்தானராமசுவாமி தேர்த்திருவிழாவிற்குக் கருடவாகனச் செலவுகள்

86) திருவண்ணாமலை அருணாச்சலேஸ்வர சுவாமிக்குச் சொக்கோபானைத்[72] தீபாராதனை.

88) ஒடையார்குடி கல்யாண அய்யனார் உற்சவம்-திருவிழா

90) சோழராஜா பங்க்கிலுள்ள துளஜேந்திர மகால் சிற்பங்களுக்குப் பூசை - தட்சணை.

92) தொப்பரகட்டி பிள்ளையார் (தொப்புள் பிள்ளையார்)

95) கேப்டன் ஜான்ஃபைப்பிடமிருந்து ஒட்டகத்தினைக் கொண்டு வந்ததற்காக அலிகானுக்கு அன்பளிப்பு

---

69. பாபாஜி ராமாஜி பண்டிதர் - சர்க்கேல்; சரபோஜி காசியாத்திரை சென்றபோது உடன் சென்றவர் (பக்.96)

70. சங்கரநாராயணர் கோயில் (பக்கம் 213இல் 2)

71. யமுனாம்பாள்புரம்–நீடாமங்கலம் (பக். 271)

72. சொக்கப்பானை - கார்த்திகைத் திருவிழாவில் கோயில்கட்டு முன்பு எரிக்கும் பனையோலைக்கூடு.

*100) சிவாஜி ராஜா சாகேப்பிற்கு 'யுவராஜா' பட்டம் தர அரசால் ஏற்கெனவே நிச்சயிக்கப்பட்டுவிட்டது. இது தொடர்பான மேன்மைமிகு கவர்னர் ஜெனரல் அவர்களின் இசைவாணை கல்கத்தாவிலிருந்து சென்னை கவர்னருக்கு வந்தாகிவிட்டது. ரெஸிடெண்ட் கேப்டன் பைப் அந்தக் கடிதத்தைக் கொண்டுவந்து திவான் சாகேப் இடம் கொடுத்தார். (யுவராஜ்) சிவாஜி 110 சக்ரங்களை இதற்காக அன்பளிப்புக் கொடுத்தார்.*

*185) ஆவண எழுத்தர் தகவலாளியின் பணிகளையும், கணக்கரின் பணிகளையும் மற்றும் கம்பெனியின் பிற வேலைகளையும் செய்ததற்கு மாத ஊதியம் 228 சக்ரம்.*

*187) சகம் 1225 கி.பி.1824*
*1824ஆம் ஆண்டு சரபோஜி மகாராஜா (திவான் சாகேப்) காசியிலிருந்து திரும்பியபொழுது கல்கத்தாவில் அராபியக் குதிரைகளை வாங்கி அவைகளை கல்கத்தா துறைமுகத்திலிருந்து படகுகள் (கப்பல்கள்) மூலம் தஞ்சாவூருக்கு அனுப்பினார். அராபியக் குதிரைகளைத் தஞ்சாவூருக்குக் கொண்டுவந்த ஆட்களுக்குப் பேட்டா.*

*223) பாதரே மான்சியர் ஐரோப்பிய பேட்டா பெற்றார்.*
*33. (1-221)*
*52) சகம் 1243 கி.பி.1842*
*சரபேந்திர ராஜ பட்டணம் - பழுது பார்த்தல் தொடர்பாக.*

*168) கார்த்திகைச் சோமவாரத்தில்*[73] *பூசை செய்வதற்காக சௌ.காமாட்சியம்மா பாயி சாகேப்பிற்கு -*

*185) திருப்பதியிலிருந்து சப்பரத்தை எடுத்துக் கொண்டு வரும்பொழுது சமர்த்தனர் செய்வதற்காக ஹனுமதாசரிக்குச் செலவு - சென்ற ஆண்டு செலவுப்படி -*

*34. (1-318)*
*28) சகம் 1225 கி.பி.1824*
*சௌ.சக்வாரம்பா பாயி*[74] *சாகேபிற்கும் சுபான்ஜீ போன்ஸ்லேயின் மனைவிக்கும்*[75] *கோகுலாஷ்டமி பூசைச் செலவிற்காக -*

*34) வஜாரத்மாப் ராஜஸ்ரீ இராமச்சந்திர சிவாஜி கோர்படேவின் திருமணச் செலவுகள் -*

*48) சிவாஜி ராஜாவின் அரண்மனையில் சிவலிங்கபூசையும், ஜபமும் நடத்தியதற்காகப் பிராமணர்களுக்குத் தட்சணை.*

*84) ஸ்ரீ சந்திர மௌலீஸ்வர சுவாமி*[76] *கோவிலுக்குத் தட்சணை - சக்ரம்*

---

73. கார்த்திகை சோமவார விரதம் (பக்கம் 315)

74. சக்வாரம்பாபாயி - இரண்டாம் சரபோஜியின் பெண்களில் ஒருவர்.

75. சுபான்ஜி போசலேயின் மனைவியின் பெயர் "நானம்மா" என்பது (பக்.110)

76. அரண்மனைக்குள் இருக்கும் கோயில்; மராட்டிய அரசர் வழிபாட்டுக்கு மட்டும் உரியது.

*85)* ஸ்ரீ மகிஷாசுரமர்த்தினியின் வார வெள்ளி, செவ்வாய் பூசைகளுக்காகத் தட்சணை -

*188) கி.பி.1824*
நாலு வீதிகளிலும் இரண்டு பக்கமும் சாக்கடைகள் கட்டி நடுவில் தூமஸ் போட்டு ரிப்பேர் செய்ய தளவாடச் செலவு சக்ரம் 1026 3/4.

*196) கி.பி.1824*
சிவகங்கைக் குளம் வெட்டுவதற்கு மெய்யாடு கூலி - 150 சக்ரம்.

*3. (1-499)*
*1. சகம் 1161 கி.பி.1760*
வலங்கைமான் கிராமத்தில் நெல் கணக்குப் பட்டியல்.

*55)* கிராம வருவாய்க் கணக்கு

*86)* நாச்சியார்கோயில் கிராமக் கணக்கு

*114)* திருச்சாரை கிராமக் கணக்கு

*127)* கோவனூர் கிராமக் கணக்கு

*146)* வடூர் கிராமக் கணக்கு

*149)* கொடிக்கால் கிராமக் கணக்கு

*155)* சேந்தன்குடி கிராமக் கணக்கு

*159)* மருதூர் கிராமக் கணக்கு

*281)* திருத்துறைப் பூண்டிக் கிராமக் கணக்கு

*499)* வேதாரண்யம்[77] கட்டளை - தியாகராஜ சுவாமி கோயில் 80 கலங்கள் - திருவாரூர் அபிஷேகக் கட்டளை - தியாக ராஜ சுவாமி 25 கலங்கள்.
*5. (1-27)*
*1. சகம் 1129 கி.பி.1728*
இராஜகுமராம்பாள்புரம்[78] கோயில் மற்றும் சத்திரம் - செலவுக் கணக்குகள் - கி.பி.1728.

*6. (1-506)*
*2. சகம் 1186, கி.பி.1785*
முழு வசூல் - பெரம்பலூர் கிராமம்

---

77. வேதாரண்யம் - திருமறைக்காடு (ஏழு விடங்கத்தலங்களுள் ஒன்று; விடங்களுக்குத் தியாகராஜர் என்று பெயர்.)

78. ராஜகுமாராம்பாள்புரம் - மீமிசல்; ராஜகுமாராம்பா என்பவர் இரண்டாம் துளஜாவின் மனைவி ஆவர். இங்குக்கண்ட ஆண்டு தவறு ஆகும். இவ்வூரிலிருக்கும் கோயில் கல்யாண ராமசாமி கோயில் ஆகும் (பக்கம் 230)

66) முழு வசூல் - போளக்குடி கிராம்

166) முழு வசூல் - பொன்வாசல் கிராமம்

349) முழு வசூல் - தப்பலாம்புலியூர் கிராமம்

449) முழு வசூல் - தலைஞாயர் கிராமம்

505) சகம் 1225 கி.பி.1824
சொந்தக் கருவூலச் செலவுகள் - குஜர் கிருஷ்ணாஜியின் வீட்டினை இராமாஜி கிருஷ்ணா இராஜாவின் (சர்க்கார்) சார்பாக வீட்டு லோனில் பெற்றார். அந்த வீடு 23 அங்கணங்களையும் மேல் மாடியையும் உடையது. லோன் நாற்பதாண்டு காலக் கெடுவுடையது. செலுத்தப்பட்ட பணம் 130 சக்ரம் (இராமோஜி கிருஷ்ணாவிற்கு இராசாவினால் கொடுக்கப்பட்ட லோன் பணம்)

15. (1-272)
1) சகம் 1243 கி.பி.1842
கிராமக் கணக்குகள் - சொந்தக் கருவூலச் செலவுகள்

16.2) சகம் 1186 கி.பி.1785
(1-176) கிராம வசூல் - நீலங்குடி

55) கிராம வசூல் - தண்டலம்

98) கிராம வசூல் - திருமங்கலம்

17. (1-28)
1) சகம் 1200 கி.பி.1799
சியாளி பதக்கின்[79] கணக்குகள்

19. (1-28)
1) சகம் 1197 கி.பி.1796
தாடரங்குடிக் கிராமக் கணக்குகள்

20. (1-473)
1) சகம் 1232 கி.பி.1831
மாத பேரிஷ்[80] கணக்குகள்

7) விண்ணப்பங்கள். விளக்க வேண்டல்கள், குறிப்புகள்

96) மாதத் தொகை - தௌலத் பாவ்லோக் (இராஜாவின் சொந்த விவகாரங்கள்)

---

79. பதக் அல்லது பத்தக்கம் என்பது சில ஊர்களின் ஒன்றியம் (பக்.74)

80. பேரீஜ் - கணக்கின் மொத்தத் தொகை

*99) அஷ்ரித மக்கள் (இராஜாவிற்குப் பக்கபலமாக இருப்பவர்கள்)*

*100) கோஹிர் - சூர்னவீஸ் ராயகநாத் முதலியோர் (2), எழுத்தர்கள் - லட்சுமண் புயஜங்(14)*

*101) பட்டியல் பெறுவோர் - சுப்பாராவ் முதலியோர் (44)*

*103) தண்ணீர் சுமப்போர் - முத்துச்சாமி சின்னையா முதலியோர்(120)*

*104) சொந்தத் தகவலாளர் - சந்தாஜி ராவ் விசாரே முதலியோர் (16)*

*105) மல்யுத்தக்காரர் - பாலகிருஷ்ண ஜெட்டி வஸ்தாத் முதலியோர் (7)*

*சமையல்காரர் - அண்ணுராவ் கங்காஜி முதலியோர் (2)*

*பாடுவோர் - அண்ணாஜி வெங்கட்ட ராவ் முதலியோர் (2)*

*106) பஞ்சநாடி முதலியோர் (3), ஈட்டிக்காரர் - மொகிதீன் பாய் லாவாமியா முதலியோர் (1), சேக் அமீன் முதலியோர் (7)*

*106) விளக்கேற்றுபவர் (மசால்சீசி) சுப்பண்ணா முதலியோர் (18)*

*107) மருத்துவர் - மொகம்மது கான் முதலியோர் (3)*

*107) சகம் 1232 கி.பி.1831*
*ஹரிகர்[81] (செய்தியாள்) கர்னாடகவகை (5)*

*108) காவலர் ஹனுமந்த் செட்கே (8), காலாள் படைக் காவலர் - வாசுதேவ பிள்ளை முதலியோர்*

*110) இலாயத்துறை - சீக்கந்தர் முதலியோர்*

*111) குழலூதுவோர் - கிருஷ்ணபிள்ளை முதலியோர்*

*112) பசு ஓட்டி (பால்காரன்) - வீரப்பா முதலியோர், வண்டியோட்டி - பாலாஜி முதலியோர், பூக்காரர் - இராமசாமி முதலியோர்*

*113) தச்சர் - நாராயணச்சாரி முதலியோர், ஆடை ஆபரணப் பொறுப்பாளர் - ஜம்தார் ஜோத்யாஜி ஜாதவ், பட்டு நூல் தயாரிப்பவர் - இப்ராஹிம் கான், வேட்டை மகால் - மகாலிங்கம்*

*114) பால்காரன் - ஜெகன்னாத், வண்ணான் - சுப்பராயன், லட்சுமணன், ஓவியர் - சக்ரபாணி*

*115) எடுபிடிப் பையன் - புரன், பல்லக்குத் தூக்கிகள் - கோபால நாயக், இராணுவ இடதுசாரிகள் - கிருஷ்ணாஜி ஜெர்ஜண்ட், செங்கல் செய்பவர்*

81. ஹரிகர் - ஒற்றர் (Harkara)

116) தோட்டக்காரர்

117) வெடிமருந்துக்காரர் - இராமசுவாமி நாயக் (இராணுவம்) டமாரமடிப்போர்

118) சரக்கரைப் பொறுப்பாளர்
சக்குவார்தீர் (தனிப்பாதுகாப்பாளரில் உயர் அதிகாரி)
வேட்டைக்காரர் - அண்ணாசாமி, வெடிமருந்து செய்வோர் - கோபால கிருஷ்ண நாயக், ஜான் டமேன் - காவலர், இரச்சைவார் - காவலர்

செராஃப்

123) இரண்டாம் தரைப்படைக்கு மாத ஊதியம்
256) பாகவதமேளாவுக்கு மாத ஊதியம்

282) திவான்வாடா பழுது பார்க்கச் செலவு (பொதுப்பணித்துறை)

20. 299 சகம் 1232 கி.பி. 1831
இராணுவப்பொருளறை மாத பேரிஷ் கணக்கு முதலியன.

414) இலாய மகாவின் மாத பேரிஷ் கணக்கு

439) செய்தி, மக்கள் தொடர்புத் துறை

448) நகர் பரிஷ்கார் மகால் (நகராட்சி அலுவலகம்)

450) சங்கீத வித்யாதிகத் துறை - வராஹப்பையா முதலியோர்

451) அஷ்ரிதர்கள் (பக்க பல ஆட்கள்)4, புலவர்கள் (கவீஸ்வர்)10

452) பாடகர்கள் (பதக்) 2, எழுத்தர் 1, நட்டுவர் - சபாபதி

453) பூக்காரன்

454) கோமாளிகள் 8, இராணுவ வலதுசாரிகள் (காவலர்) 8, நூகரவாலா (பெரும்பறை கொட்டுவோர்) 1, குழலூதுவோர் 1

456) மெய்க்காப்பாளர்களுக்கு மாத ஊதியம்

21. (1-82)
1) பசலி 1214 கி.பி.1804
ஜமாபந்திக் கணக்குகள்[82] - பிர்கா[83] - திருவேதகுடி

82. ஜமாபந்தி - கிராமத்துக்குடிமக்கள் அரசுக்குச் செலுத்த வேண்டிய வரிக்கணக்கு

83. பிர்கா - Firka - சிலஊர்கள் அடங்கியபிரிவு

*18) பாபாநாசம் தாலுகா - தஞ்சாவூர் சுபா*

*24) பிர்கா வாலை பிள்ளையார்பேட்டை*

*30) பிர்கா திம்மகுடி*

*46) பிர்கா ஆளவந்திபுரம்*

*56) பிர்கா மாலமாபுரம்*

*63) பிர்கா ஹனுமாநல்லூர்*

*71) பிர்கா புளியங்காடு*

*85) பிர்கா மேலையூர்*

*93) பிர்கா திருச்சித்திமுத்தம்*[84]

*101) பிர்கா மாஞ்சேரி*

*113) பிர்கா கோத்தங்குடி*

*125) பிர்கா கைலாசநாத கோயில்*

*பசலி 1214 கி.பி.1804*

*129) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா குடிதாங்கி*

*137) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா பகலோடை*

*143) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா புதுப்படை வீடு*

*155) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா திருவலஞ்சுழி*

*169) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா சுந்தரப்பெருமாள் கோயில்*

*22. பசலி 1184 கி.பி.1783*

*(1-242)ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா காவல்யார்யாரி வட்டம் நாச்சியார்குடி*

*25) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா கூத்தனூர்*

*45) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா அப்பன் கோயில்*

*52) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா சித்தாவனூர்*

---

**84.** திருச்சத்திமுற்றம் என்று படிக்க வேண்டும்

60) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா நாச்சியார்கோயில்

85) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா குப்பம்

97) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா சிற்றம்பலம்

99) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா வடகரை

117) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா பெருந்துறை

122) ஜமாபந்திக் கணக்குகள் - வட்டம் ஆலங்குடி

231) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா தில்லையநல்லூர்

23. (1-42)
1) ஜமாபந்திக் கணக்குகள் - தில்லையாத்து நல்லூர்

31) ஜமாபந்திக் கணக்குகள் - உடையார்பாளையம்

35) ஜமாபந்திக் கணக்குகள் - வடகட்டளை

25. (1–64)

1) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா காளிக்குடி

24) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா புதுக்குடி

40) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா உதயமங்கலம்

36. (1-11)
4) சகம் 1214 கி.பி.1813
கால்நடைத்துறை, இலாயத்துறை

37. (1-13)
1) சகம் 1199 கி.பி.1798
கணக்கு - சுபா மாயவரம் சர்வமான்யம் முதலியவை
38. 1) சகம் 1186 கி.பி.1785
(1-33) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா வேலங்குடி

13) ஜமாபந்திக் கணக்குகள்- பிர்கா பூதலூர்

22) ஜமாபந்திக் கணக்குகள் - பிர்கா மருதூர்

39. 1) சகம் 1184 கி.பி.1783
(பொருள் வைப்புத்துறை (அரண்மனைப் பொருள் வைப்புத் துறை)

*4) ஹத்திரம் பைராகியின் விண்ணப்பம்*

*10) மையப்பொருள் வைப்புத் துறை - 3755 கலங்கள்*

*40. (1-17)*
*சகம் 1211 கி.பி.1810*
*17) அன்ன சத்திரம் பழுது பார்த்தல்*

*42. (1–25)*
*சகம் 1212 கி.பி.1811*
1) பாகாக்களின் பட்டியல்

2) கால்நடைகளின் பட்டியல்

4) தோட்டங்களின் பட்டியல்

5) நகராட்சிகளின் பட்டியல்

ஒரு வகையான கால்நடை நோய் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. பன்றியின் கொழுப்பிலிருந்து தயாரிக்கப்படும் நெய் அந்நோயை நீக்கும் சக்தி பெற்றிருக்கிறது. இதுதொடர்பான செலவினம் -

14) தேர் மற்றும் வாகனத் துறைச் செலவுகள்

*43. (1-5)*
*1) சகம் 1216 கி.பி.1815*
5 சொந்தக் கருவூலத்திலிருந்து பட்டியல் குறிப்புகள்

*44. (1-11)*
*சகம் 1212 கி.பி.1811*
இராஜாவின் சொந்த மைனாப் பறவைக்காக குதிரைக் கொள்ளு மற்றும் நெய் வழங்கிய செலவுகள்

*45. சகம் 1216 கி.பி.1815*
1) தேர் மற்றும் வாகனத்துறைச் செலவுகள் (நகர் பரிஷ்கார்)

15) தஞ்சாவூர் கோட்டையில் உடற்பயிற்சித் திடல் மற்றும் வசூல்

16) பாகவதமேளச் செலவுப் பட்டியல்

22) முக்தாம்பாபுரம்[85] - அன்னசத்திரச் செலவுகள் - மூன்று வேளை உணவும் கைப்பணமும் கொடுக்கும் செலவுகள் -

85. முக்தாம்பாபூர் - ஒரத்தநாடு

*46. 1) சகம் 1224 கி.பி.1823*
காமாவிசி[86] தௌலத் லஸ்கர் - இராணுவ பலத்தோடு வெளியே சென்ற செலவுகள்.

2) சரபோஜியின் பேரன்களான சிரஞ்சீவி. மாமாஜி மொகிதே மற்றும் சிரஞ்சீவி இராமச்சந்திர சூர்வே ஆகியோர்களுக்கான தான்சுரே சடங்குச் செலவும், சௌ.சக்வார்பாயி இராஜா சாகேப்பின் மகனுக்கு பர்த்தா சடங்குச் செலவும் (வாளெடுத்தல் சடங்கு) 4030 சக்ரம்.

*47. (1-55)*
*9) சகம் 1212 கி.பி.1811*
செலவுப்பட்டியல் - வெண்பழுப்புப் பொம்மை மற்றும் வண்ணப்படத்துறை - திம்மதி கோனேரி நாயக்கிற்குச் செலுத்தியது - கௌரி துர்க்கா பூஜைக்காக 40 பொம்மைகளைச் செய்ய பழுப்பு வேலையாள் வாசுதேவிற்குக் கொடுத்தது - பொருள்வைப்புத் துறையிலிருந்து ஒரு கட்டு தங்க இலைகள் கொடுக்கப்பட்டது.

16) செலவுப்பட்டியல் - வைத்திய பாபுவின் விண்ணப்பப்படி அவரது மகளின் திருமணச் செலவுகள் - பந்தல் பொருட்கள், குழலூதுவோர், இசைக்கலைஞர், நாகர டிரம் வாசிப்போர், ஒட்டகம், நாட்டியப் பெண்கள், மணமகன், சவாரிக்கான குதிரை அலங்காரம் முதலியவற்றுக்கான செலவுகள்.

19) நவவித்யா கலாநிதிசாலாவின் செலவுப்பட்டியல் - பொதுப்பணித்துறைப் பொருட்கள் - வண்டிச் சக்கரங்கள் 4, அவைகளைப் பொருத்தும் செலவு

*48. (1-3)*
*1) சகம் 1200 கி.பி.1799*
சுபா திருவாதி முகாமில் வசந்த பஞ்சமி விழா[87] தொடர்பான கணக்குகள் -

3) படைக்கலக் கொட்டில் துறை தொடர்பான கணக்குகள்

*49. (1-5)*
*1) சகம் 1222 கி.பி.1821*
கணபதி அக்ரஹாரம் - நெல் கண்டு முதல்[88] செலவுப் பட்டியல்

*2) சகம் 1222 கி.பி.1821*
பல்துறைச் செலவுப் பட்டியல் கணக்குகள்:
இராஜ்மகாலிலுள்ள ஆடை, ஆபரணத் துறைக் கணக்குகள், படைக்கல கொட்டில், போக்குவரத்து மற்றும் சர்பத்கானா கணக்குகள், கால்நடை, இலாயம் மற்றும் பொதுப்பணித்துறைக் கணக்குகள், அம்மாபேட்டை இலாயம், யானை இலாயக் கணக்குகள், வாகன இருப்பிடம், தானியக் கிடங்கு தொடர்பான கணக்குகள், சாளுவ நாயக்கன் பட்டினம்

86. கமாவிசி - பலவூர்களை மேற்பார்வை செய்யும் அதிகாரி (பக்.77)

87. வசந்தபஞ்சமி - காமனுக்குரியதாய் மாகமாசத்துச் சுக்கிலபக்ஷத்து வரும் பஞ்சமி (Tamil Lexicon, M.U.)

88. கண்டு முதல் - மொத்த விளைச்சல்

*பொதுப்பணித் துறைக் கணக்குகள், அரண்மனைச் சமையலறை இரண்டு - புது மண்பாத்திரங்கள், உணவுப் பொருட்கள் வாங்கிய செலவுக்கணக்கு*

*3) இராஜாவின் நான்கு மருமகன்களுக்கு[89] பிறந்தநாள் விழா, பண்டிகைகளைக் கொண்டாடுவதற்குரிய செலவுகள் ஜம்தார் வசம் கொடுக்கப்பட்டது.*

*50. (1-7) சகம் 1199 கி.பி.1798*
*செலவுப் பட்டியல் - சுபா கும்பகோணம் - பாசன வகை காளியம்மன் தேவிக்கு ஆண்டுக்கு 300 சக்ரம் வழங்குதல்*

*57. சகம் 1186 கி.பி.1785*
*10) கிராம வசூல் கணக்கு பிர்கா கஞ்சனூர்*

*62) கிராம வசூல் கணக்கு பிர்கா உழணி*
*112) கிராம வசூல் கணக்கு பிர்கா சேனாநல்லூர்*

*125) கிராம வசூல் கணக்கு மௌஜே எரியங்குடி*

*198) கிராம வசூல் கணக்கு பிர்கா சிதம்பரநாதபுரம்*

*248) கிராம வசூல் கணக்கு பிர்கா திரிகோவி*

*312) கிராம வசூல் கணக்கு பிர்கா நன்னிலம்*

*52. 9) சகம் 1195 கி.பி.1794*
*(1-9) ஸ்ரீ முலபாத் ஸ்ரீ சுவாமி, ஸ்ரீ சத்ய சந்தசுவாமி ஆகியோர் தஞ்சாவூர் சமஸ்தானத்திற்கு வருகை தந்தபோழ்து ஏற்பட்ட செலவுக் கணக்கு - ஆண்டு சர்வதாரி 1794*

*53. 2) சகம் 1224 கி.பி.1823*
*(1-35) பல்துறைச் செலவுக் கணக்குப் பட்டியல்*
*ஆடை, ஆபரண மகால், சத்திரம் 417, சர்பத் கானா 60, வாகன உறைவிடம் 32, பொதுப்பணித்துறை - கட்டிடப் பாராமரிப்பு 135, அரண்மனைப் பொருள் வைப்பறை 388*

*54. (1-67)*
*சகம் 1184 கி.பி.1783*
*1) கார் நெல் மற்றும் மேல்வாரக் கணக்குகள் - பிர்கா ஏலங்காடு*

*கார் நெல் மற்றும் மேல்வாரக் கணக்குகள் - பிர்கா நாச்சியார்குடி*

*27) கார் நெல் மற்றும் மேல்வாரக் கணக்குகள் - பிர்கா செந்தலை*

*32) கார் நெல் மற்றும் மேல்வாரக் கணக்குகள் - பிர்கா வல்லம்*

---

89. நான்கு மாப்பிள்ளைகள்; ஜிவாஜி கோவிந்தராவ் மோஹிதே; நாகோஜி சதாசிவராவ் மோஹிதே; யச்வந்தராவ் ராமச்சந்திரராவ் சூர்வே; ராமச்சந்திரராவ் யச்வந்தராவ் இங்களே;மேஸாஜிஎஜவந்தராவ் மோஹிதே ஆகியவர்களுள் நால்வர் ஆகலாம்.

*36) கார் நெல் மற்றும் மேல்வாரக் கணக்குகள் - பிர்கா நடுக்காவேரி*

*42) கார் நெல் மற்றும் மேல்வாரக் கணக்குகள் - பிர்கா திருவாதி*

*65) கார் நெல் மற்றும் மேல்வாரக் கணக்குகள் - பிர்கா சாலியமங்கலம்*

*55. (1-21)*
*சகம் 1209 கி.பி.1808*
*தாராசுரம் மாகாணத்தின் கணக்குகள்*
*இராஜசாம்பாள்புரத்தில்[90] அன்னசத்திரம் - சம்பா நெல் கணக்கு முதலியன.*

*56. (1-27) சகம் 1183 கி.பி.1782*
*1) செலவுப் பட்டியல்: ஆண்டு வருவாய் வசூல் - ஒன்பது நாடுகளிலிருந்து பாக்கி*

*19) சகம் 1188 கி.பி.1787*
*இராஜாவின் ஆணைப் பட்டியல்,கணக்குப் பட்டியல்*

*7. 1) பசலி 1214 கி.பி.1804*
*(1-205) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - பட்டீஸ்வரம்*

*6) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - ஜோலனி*

*9) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - ஜோலடி*

*19) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - திருமேல்தாளிகை*
*29) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - கோபிநாதப்பெருமாள் கோயில்*

*37) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - ஹரிச்சந்திரபுரம்*

*47) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - மேல்பழையார்*

*55) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - அக்ரஹாரம் திருப்புறம்பியம்*

*57) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - ஹனுமாநல்லூர்*

*68) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - ஜைனம்படுகை*

*77) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - கொன்னலம்*

*81) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - கங்காதரபுரம்*

*94) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - மாடகக்கோடி*

*102) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - கீழப்பழையார்*

90. ராஜஸாம்பாபுரம் என்பது தாராசுரத்தைக் குறிக்கும் (பக்கம் 273)

112) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - ஜேனூர்

121) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - தென்னனூர்

126) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - இராமநாத கோயில்

136) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - உச்சிக்கட்டளை

151) மௌஜே ஜமாபந்திக் கணக்கு - சுவாமிமலை, பழைய சத்தியமங்கலம்
7. பசலி 1214 கி.பி.1804

158) ஜமாபந்திக் கணக்குகள் - அலங்காரபட்டினம்

163) ஜமாபந்திக் கணக்குகள் - சோழமாளிகை

175) ஜமாபந்திக் கணக்குகள் - மன்னன்படைவீடு

190) ஜமாபந்திக் கணக்குகள் - கோவில்பட்டு

200) ஜமாபந்திக் கணக்குகள் - இராமநாதகோயில்

9. சகம் 1184 கி.பி.1783

(1-155) ஜமாபந்திக் கணக்குகள் - கிராமம் செடியாங்கல்

25) ஜமாபந்திக் கணக்குகள் - உமாமங்கலம்

36) ஜமாபந்திக் கணக்குகள் - கழனியக்குடி

48) ஜமாபந்திக் கணக்குகள் - நெய்க்குப்பை

59) ஜமாபந்திக் கணக்குகள் - ரதி ( ராதி)

69) ஜமாபந்திக் கணக்குகள் - பொன்மங்கலம்

75) ஜமாபந்திக் கணக்குகள் - சலனச்சேரி

18. (1-18) சகம் 1146 கி.பி.1745

1) ஜமாபந்திக் கணக்குகள் - கிராமம் எடக்குடி எரியாளி

(1-97)
3) சகம் 1208 கி.பி.1807
இராஜாவின் ஆணைப் பட்டியல்
சரபோஜியின் மகளாகிய சௌ.சக்வார்பாயி அம்மணி ராஜே சாகேப்பிற்கு ஐந்தாம் மாத கர்ப்பத்தின்போது நடத்தப்பட்ட விழாவைப்போன்றே, சௌ.அகில்யாம்பாபாயி

சாகேப்பிற்கும் ஐந்தாம் மாத கர்ப்ப காலத்தில் விழா நடத்தப்பட வேண்டுமாதலால் - தேவைப்படுகின்ற அனைத்துப் பொருட்களையும் பல்வகைத் துறைகளும் வழங்குமாறு ஆணையிடப்படுகிறது.

17) செலவுப் பட்டியல் - தினசரி கோதானம், ஜன்ம நட்சத்திரம், இனாம், மிருத்யுஞ்ஜய ஜபம்[91] மற்றும் ஹோமம் ஆகியவற்றை இராஜா மேற்கொள்ளுவதற்காகக் கால்நடைத் துறை விரிவுபடுத்தப்படுகிறது.

39) ஆணைப் பட்டியல் - சோழராஜா பங்க்கிலும், துளஜேந்திரமகாலிலும் உள்ள சிவலிங்கத்திற்குப் பூசை, தட்சணை முதலியவற்றை நிகழ்த்த ஆணை.

42) சர்வ வித்யா சாலா என்ற பெயரினை நவவித்யா கலாநிதிசாலா என்று மாற்றி அனைத்துத் துறைகளும் பதிவு செய்து கொண்டு வழங்கிவர வேண்டுமாய் ஆணையிடப்படுகிறது.

43) திருப்பனந்தாள் மடத்துப் பண்டார சந்நிதி (காசிப் பண்டாரம்) அவர்கள் அனுப்பிய ஆள் காசி மற்றும் வடபாகங்களிலிருந்து சுவடிப் பிரதிகளைக் கொண்டு வந்ததற்காக இராஜாவின் கருவூலத்திலிருந்து உரூ.100/- அளிக்குமாறு இசைவாணை வழங்கப்படுகிறது.

44) அஸ்வினி மாதத் தேய்பிறை நாட்களில் இராஜாவின் சாலிக்கிராம[92] தானத்திற்கான வழக்கமான செலவுகள் -

56) கோட்டைக்கு வெளியே கோலா காஞ்சி சத்திரத்தின் அருகே மிகவும் இரங்கத்தக்க பிச்சைக்காரனைப் புதைப்பதற்காக ஏகாதசிச் செலவுகள் -

*11. (1-104)*
*சகம் 1180 கி.பி.1779*
சௌ.ராஜகுமாரம்பாபாயி சாகேப் நிறுவிய இராஜகுமராம்பாபுரம்[93] கல்யாணராமசாமி கோயில் விழாவிற்காக கோயில்வளாகம், யாசாலை, சமையலறை, முதலிய இடங்களில் பந்தல்கள் போடப்பட்டன.

10) யானை இலாயத் துறை - யாழ்ப்பாணத்திலிருந்து யானைகளை இறக்குமதி செய்த செலவுகள்.

*13. (1-7)*
*சகம் 1229 கி.பி.1828*

---

91. மிருத்யுஞ்சயசபம்-மரணத்தைப் போக்கவல்ல மந்திரத்தை ஓதுதல்

92. சாளக்கிராமம்-திருமால் உருவாகக் கருதிப் பூசிப்பதற்குரியதும் கண்டகி நதியில் கிடைப்பதும் ஆகிய சிலை சாளக்கிராமம் எனப்படும். கண்டகி நதியானது நேபாளத்தில் தோன்றிக் காசிக்கருகில் கங்கையில் கலக்கும் ஓராறு (பக்கம் 283)

93. ராசகுமாராம்பாள் என்பவர் இரண்டாம் துளஜாவின் மனைவி (போ.வ.ச.பக். 109); ராசகுமாராம்பாபுரம் என்பது மீமிசல் என்ற ஊராகும். (பக். 270)

செலவுப் பட்டியல் - அரண்மனைக் கருவூல நீதிபதி அண்ணா சாஸ்திரி[94] அவர்கள் இரத்னகிரீஸ்வர[95] சுவாமியை வழிபடுவதற்கும் தரிசிப்பதற்கும் சென்றது - நீதிபதியுடன் சென்ற அடிப்படைப் பணியாட்கள் மற்றும் உடன் சென்றவர்களுக்குப் பேட்டா -

*14. 30) சகம் 1208 கி.பி.1807*

ஆணைப்பட்டியல்: அகழியை ஒட்டிய நிலத்தில் பூசணி, சுரைக்காய் பயிரிடும் குத்தகை வீரப்பாவிற்குக் கொடுக்கப்பட்டது. அதில் கிடைக்கும் வருமானத்தில் ஐந்தில் ஒரு பங்கு இராஜாவுக்குக் கொடுக்கப்படுவதோடு, அகழி தூர்ந்துவிடாமல் பார்த்துக்கொள்ளவும் வேண்டும்.

41) இராமாஜி சக்ரபாணி அனுப்பிய வேதியியல் பாடத்திற்கான பொருட்கள் மற்றும் உபகரணங்களைச் சென்னையிலிருந்து தஞ்சாவூருக்குக் கொண்டுவந்த 3 ஆட்களுக்குப் பேட்டாவும்,சுமை கூலியும் கொடுக்கப்பட்டது.

89) அஸ்விஜ மாதம் நவராத்திரிக்கு திருப்பதிக்குச் சப்பரம் கொண்டு வந்ததற்காகப் பல்லக்குத் தூக்கிகள் கிருஷ்ணா நாயக் முதலியோருக்குத் தொகை கொடுக்கப்பட்டது.

98) இலண்டனிலிருந்து நாகூர் துறைமுகத்தில் பொருட்களை இறக்கி தஞ்சாவூருக்குக் கொண்டு வந்ததற்காக கிருஷ்ணா நாயக்கிற்கு 80 சக்கரம் கொடுக்கப்பட்டது.

107) திருநள்ளாறு சனீஸ்வரர் கோயில் விளக்குகளுக்கு சௌ.அகில்யாபாயி சாகேப் அவர்கள் நெய் கொடுத்த செலவுகள்.

128) மாமா சாகேப்பின்[96] செலவுகளுக்கு மாத ஊதியம் 500 சக்ரம்

133) தரங்கம்பாடித் துறைமுகத்திலிருந்து காகிதம் கொண்டு வந்ததற்குப் பேட்டா.

146) ஒரத்தநாடு முக்தாம்பாபுரச் சத்திரம் பார்சி ஆசிரியருக்கும் சமையல்காரர் இராமசாமிக்கும் சம்பளம் கொடுக்கப்பட்டது.

*219 சகம் 1208 கி.பி.1807*

காகிதச் சுவடியைப் படியெடுத்ததற்காக வெங்கடகிருஷ்ண சாஸ்திரிக்கு மாதம் ஒன்றுக்கு 6 சக்ரமும், பால சாஸ்திரி மற்றும் இராமசாஸ்திரி ஆகியோருக்கு மாதம் ஒன்றுக்கு 6 சக்ரமும் கொடுக்கப்பட்டது. மொத்தம் சக்ரம் 12.

235) பண்டார பட்டருக்குக் கொடுக்கப்பட்ட பொன், வெள்ளிப் பொருட்கள் செய்யும் குத்தகை நிறுத்தப்பட்டு இருளப்ப ஆசாரிக்கு நக்சி வேலை, செய்ய 136 சக்ரத்திற்கு அனுமதிக்கப்பட்டுள்ளது. இவ்வேலை பொன்னைச் சுத்தப்படுத்துவதற்காக அளிக்கப்பட்டது.

---

94. பலமனேரி அண்ணா சாஸ்திரி எனில் இவர் தருமசபை நியாயதிபதியாவர். (பக். 174)

95. ரத்னகீரிசுவரர்-இது வடக்குவீதியில் உள்ள கோயில் (பக். 213 இல் 16)

96. மாமாசாஹேப் என்பவர் மூட்டை எண் 31சி-46.2இல் காணும் மாமாஜி மோஹிதே ஆகலாம்.

238) கைலாச மகாலிலுள்ள[97] மறைந்த இராஜஸ்ரீ துளஜா மகாராஜாவின் சமாதிக்குப் பூஜை செய்யப்பட்டது.

257) இராஜாவின் தினசரி குளியலுக்காக காவிரி நீர் திருவாதியிலிருந்து கொண்டு வரப்பட்டது - துலா மாதத்திய துலாஸ்நானச்[98] செலவுகள் -

*82. (1-14)*

*4) சகம் 1208 கி.பி.1807*

நவராத்திரி சதரை (தர்பார்) ஒட்டிய மல்யுத்தப் போட்டியில் கலந்து கொண்ட மல்யுத்த வீரர்களுக்குச் செலவு செய்ய இசைவாணை - போட்டியாளர்கள் தஞ்சாவூரைச் சேர்ந்த ஜெட்டிகள் (வஸ்தாத் இன ஆண்கள்) மங்களூரிலிருந்து வந்த மல்யுத்த வீரர்கள் ஜெட்டி மல்யுத்த வீரர்கள் பத்து ஜோடிக்கு 76 சக்ரமும், ஜுலானி மல்யுத்த வீரர்கள் 3 ஜோடிக்கு 12 சக்ரமும் அன்பளிப்பாகக் கொடுத்தார்கள்.

*70. (1-25)*

*சகம் 1140 கி.பி.1739*

வரிவசூல் பட்டியல் - கணக்குகள், மகாதேவ பட்டினம் யசாஜி கிருஷ்ணா

*69. (1-11)*

*சகம் 1105 கி.பி.1704*

கலால்வரி வசூல் குத்தகை (நாட்டுச் சாராயக் குத்தகை) - 4000 சக்ரம்

*65. (1-3)*

*சகம் 1163 கி.பி.1762*

திருப்பனந்தாள் கீழ்முக மாகாணம் - கணக்குகள்

*66. (1-14)*

*2) சகம் 1189 கி.பி.1788*

கணக்குகளின் பட்டியல் , அறுபத்து மூவர் கட்டளை நிலங்கள், வரி வசூல் - நீலகண்ட பண்டாரம், கஞ்சனூர்க் கணக்குகள், கோவிந்தக்குடிக் கணக்குகள், திருப்புகளூர்க் கணக்குகள், திருக்களந்தூர்க் கணக்குகள், மேல் மாகாணக் கணக்குகள், பெரும்புலியூர்க் கணக்குகள், தில்லையநல்லூர்க் கணக்குகள்,அவலிய நல்லூர்க் கணக்குகள், கல்யாணபுரம் கணக்குகள், சகாஜிராஜபுரம்[99] கணக்குகள், வடபாதி மங்கலம் கணக்குகள், பொன்வாசல் கணக்குகள், தலைஞாயர் கணக்குகள்.

*67. (1-21)*

*சகம் 1191 கி.பி.1790*

மாயவரம் சுபா - மாகாணம் கணக்குகள்

97. கைலாச மஹால்-மராட்டிய அரசர்களும் அரசமாதேவியாரும் இறந்தபின் தகனம் செய்யப்படும் சுடுகாடு (பக்கம் 640)

98. துலாஸ்நானம்-துலா (ஐப்பசி)மாதத்தில் விடியலில் நீராடுதல்.

99. ஷஹாஜிராஜபுரம்-சகாஜிக்கோட்டை அதாவது சாக்கோட்டை ஆகலாம்.

*35) கி.பி. 1848*

நீதி பரிபாலனத் துறையிலிருந்து வந்த நினைவுக் குறிப்பு.

*41) சகம் 1737 கி.பி. 1815*

முத்திரித சபை நினைவுக் குறிப்பு

*68) சகம் 1752 கி.பி. 1830*

முத்திரித சபை நினைவுக் குறிப்பு

*57. (1-12)*

*1) சகம் 1188 கி.பி.1787*

922 வேலி பாசன வரிக் கணக்குகள்

*4) மாயவரம் கணக்குகள்*

*11)* கலெக்டர் வெங்கப்பா மூலம் சம்பாஜி சங்கர்ஜியிடமிருந்து வசூலித்த சம்பா மற்றும் நெல் பாசன வரி

*58. (1-34)*

*1) சகம் 1212 கி.பி. 1811*

கோட்டைக் காப்பாளர் ஸ்ரீ மன்கோஜி ஜாடேராவ் அவர்களுக்கு காவலதிகாரி (கொத்தவால்) குட்டி சேர்வைக்காரர் கொடுத்த பெட்டிஷன் (விண்ணப்பம்).

*2)* தர்ம ஸ்தாபனத் துறையிலிருந்து வசூல்

*3)* இராஜாவின் அரண்மனைச் செலவுப் பட்டியல் நகர்கானா - சுபா பத்து கட்டு[100] கல்யாண மகாலில் அச்செழுத்துக்களைத் தயாரித்ததற்கு மீதிப்பணம்

*11)* நெற்றிச்சுட்டி (பர்ஸிங்-பாஸிங்) செய்ததற்காக சின்னசாமி அவர்களுக்குக் கொடுத்தது - இராஜாவின் கருவூலத்துறையின் செலவுப் பட்டியல் - திருவாதியில் சர்நோபா குளியல் துறையின் அருகே 7 மாடி கொண்ட புறாக்கூண்டுச் சிகரம் ஒன்றினைப் பொதுப்பணித்துறையினர் கட்டுவதற்கான செலவு 165 சக்ரம். இது பழைய சிகரத்தின் மீது கட்டப்பட வேண்டும். சகா நாயக்கின் குளியல் துறையை மீண்டும் கட்டுவதற்காக-

*25) ஹிஜிரி 1198 கி.பி. 1778*

திருப்பதி இராமநாத் தாகூரிடமிருந்து குதிரைகள், ஒட்டகங்கள், மற்றும் துணிகள் வாங்கிய செலவு துணிகள் - 1868 (ஹோன்) பகோடா

குதிரைகள் - 683 (ஹோன்) பகோடா ஒட்டகங்கள் - 144 (ஹோன்) பகோடா

*58. 25) ஹிஜிரி 1198 கி.பி. 1778*

இராமநாத் தாகூருக்குப் பயணச் செலவுகள் 130 ஹோன்[101]

*31)* சென்னையில் ஒரு குதிரை வாங்கிய விலை 100 ஹோன்

*1) சகம் 1149 கி.பி. 1748*

கூவலூர்,[102] பண்டாரவாடை முதலிய கிராமங்கள் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட விவரம். 65 வேலி பாசன மற்றும் சம்பா நெல் வசூல் 11910 கலங்கள்.

---

100. பத்துக்கட்டு-குடிமக்கள் பயிரிடும்நிலம்

101. ஹோன்னம்-ஒருவகை நாணயம்; ஒரு ஹோன்னத்தின் மதிப்பு 2 சக்கரம் 4 பணம் ஆகும் (பக்கம் 153)

102. கூவலூர் - கீழ்வேளூர்

2) மன்னார்குடி சுபா - மூவனூர் கீழ் மாகாணம் கண்டு முதல், கணக்கறுப்புக் கணக்கு 1178 கலங்கள்

4) சகம் 1180 கி.பி. 1779

கும்பகோணம் சுபா, காவல், பண்ணையாள் கணக்கின் பட்டியல்

5) இராஜஸ்ரீ .... மேன்மை தங்கிய .... சாகேப் .... கும்பகோணத்தைச் சேர்ந்த கீழே காணும் கையொப்பமிட்ட ஆட்கள் பணிவுடன் தெரிவித்துக் கொள்வது என்னவென்றால்

கும்பகோணம் சங்கராச்சாரி சுவாமியின் மடம் காஞ்சிபுரத்திலிருந்த போது சிறியதாக இருந்தது. இராஜா பிரதாபசிங்[103] சங்கராச்சாரியாரைக் காஞ்சியிலிருந்து கொண்டுவந்து டபீர் அக்ரஹாரத்தில்[104] ஒரு மடத்தைக் கட்டிவைத்து, மொயினி நிலங்களைக் கொடுத்து, முதல் மரியாதை செய்து அரியாசனம், பொன், வெள்ளி நகைகள், பாத்திரங்கள், குதிரைகள், யானைகள், முதலியனவும் தந்தார். பிராமண போஜனத்திற்காக நிலங்களையும் கொடுத்தார். முன்னர், திருச்சிராப்பள்ளி நீதிமன்றத்தில் இந்த சுவாமிக்கும் சிருங்கேரி சுவாமிக்கும் வழக்கிருந்தது.[105] அது இந்த சுவாமிக்குச் சாதகமாக முடிந்ததும் இந்த சுவாமி இராஜாவைச் சந்தித்தார். இராஜாவானவர் இவருக்கு 'எண்ணிலடங்கா நகைகளையும், பணத்தையும் கொடுத்தார். பிறகு சுவாமி காஞ்சிபுரம் சென்று அங்கிருந்து சென்னைக்குச் சென்றார். அந்த இடங்களிலும் சுவாமிக்கு ஏராளமாகப் பணம் கிடைத்தது. இந்த சுவாமியின் முன்னவர் கிட்டத்தட்ட ஒரு இலட்சம் உரூபாய் வைத்திருந்தனர். இந்த ஒரு இலட்சம் ரூபாய் போக மேலும் லட்ச ரூபாய் பெறுமான பொன், வெள்ளி நகைகள் மற்றும் சாமான்களும் சவாமியிடம் இருந்தன. இந்த இரண்டு லட்ச ரூபாய்ப் பணமும் வைப்புத் தொகையாக இருந்தது. தினசரி செலவுகளும், திருவிழாச் செலவுகளும், மொயினி நிலங்களிலிருந்தும், பக்தர்கள் காணிக்கை வழங்குவதிலிருந்தும், எட்டயபுரம், புதுக்கோட்டை ஜமீன்தார்களின் இனாம் பணத்திலிருந்தும் செய்யப்படுகின்றன- இந்த வகையாக, அவர் மடத்தைத் திறம்பட நிர்வகித்து வந்தார்.

மறைந்த ஆச்சாரிய சுவாமிகள் தன்னுடைய காரியஸ்தர்கள் பணத்தை வைத்திருக்கச் சரியானவர்களுமல்ல; தான் தேர்ந்தெடுத்த சிஷ்யனை மடத்திற்கு வாரிசாக ஏற்கவுமில்லை என்பதைத் தன்னுடைய கடைசிக்காலத்தில் நன்றாக அறிந்து கொண்டார். அதனால், இந்த இரகசியங்களைப் பற்றி அவர் இராஜா சாகேபுடன் பேச விரும்பினார். அவருடைய எண்ணப்படி, இராஜாவைத் தன்னை வந்து பார்க்குமாறு எழுதக் காரியஸ்தர்களிடம் கூறினார். ஆனால் காரியஸ்தர்களான சிவராம சாஸ்திரி, கணபதி சாஸ்திரி, குப்பா சாஸ்திரி, அர்ஜுன அய்யா, வெங்கடேசஷ அய்யா, சுப்பா சாஸ்திரி, ஆகிய எழுவரும், தங்களுடைய விருப்பம் நிறைவேறாது என அறிந்து இராஜாவிற்கு எதிர்மறையாக எழுதினர். சுவாமி நல்ல உடல் நலத்துடன் தேறி வருவதாக அவர்கள் இராஜாவுக்கு எழுதினர். அதன்பிறகு சுவாமி நினைவிழந்து விட்டார். எனவே, அவர்கள் பணத்தின் ஒரு பகுதியை முறையின்றி எடுத்துக்

103. பிரதாபசிங்கர் 1739 முதல் 1763 வரை ஆட்சி செய்த அரசர்.

104. கும்பகோணத்தில் உள்ளது; டபீர் நாரோபந்த் என்பவரால் அமைக்கப்பட்டது. (பக்கம் 267)

105. ஐந்தாவது சந்திரசேகரேந்திர சரசுவதி சுவாமிகள் காலத்தில் சிருங்கேரி மடத்துக்கும் கும்பகோணம் மடத்துக்கும் திருவானைக்கா அகிலாண்டேசுவரி அம்மனுக்குரிய தாடங்கங்களைப்பழுதுபார்த்து அணிவிக்கும் உரிமை பற்றிய வழக்கு நடந்தது (பக்கம் 433-434).

கொண்டு சேஷய்யாவின் மகனுக்குப் பீடத்தை வேண்டினர். அப்போது முதிய ஆச்சாரியார் இறந்து போனார். எனவே அவர்கள் இருப்பிலிருந்த மொத்தப் பணத்தையும் மறைந்த சுவாமியின் ஈமச்சடங்கிற்காகவும், மதுரை வழக்கின் சட்டச் செலவிற்காகவும், கருப்பூர் கிராமத்தை வாங்குவதற்காகவும், இன்ன பிற செலவினங்களுக்காகவும் செலவிட்டனர். அவர்கள் நகைகளையும், வெள்ளிப் பாத்திரங்களையும், மாயவரத்திலுள்ள லட்சுமி நாராயணன் செட்டி என்பவரிடம் காப்பு வைத்தனர். மடத்தின் எல்லாச் சொத்துக்களையும் தவறுதலாகக் கையாண்டு கணக்கினைக் குலைத்து விட்டனர். மேலே சொல்லப்பட்ட இந்தக் கார்யஸ்தர் சில ஆண்டுகளுக்கு முன்னர் மிகவும் ஏழ்மையான நிலையடைந்து நாளொன்றுக்கு ஒருவேளை உணவுடன் ஒரு மாதத்தை உரூ 2/- இல் கழிக்க வேண்டியதாயிருந்தது. அப்போழுது அந்தக் காரியஸ்தர் திருவிடைமருதூர்[106] அரண்மனை நகைகளை அடகுக்கு வைத்துப் பணக்காரராகி, பத்துப் பதின்மூன்று ஆயிரம் உரூபாய்களைப் புழக்கத்தில் வைத்திருக்கிறார். அவர், பெரும் சொத்துக்களையும், வீடுகளையும், நிலங்களையும், கிராமங்களையும் சம்பாதித்துவிட்டார். இராஜாவின் அரண்மனையிலோ, சிரஸ்தேதாரிடமோ அல்லது வேறு கம்பெனி அரசின் ஆட்களிடமோகூட அவ்வளவு பணம் இருக்கமுடியாதென நாங்கள் உறுதியாகச் சொல்லுகிறோம். இந்த வகையான செயலை இராஜா மட்டுமே முழுமையாகச் செய்யமுடியும்.

(5) மடத்தை இவ்வகையான குறுகிய நிலைக்குக் கொண்டுவந்து, வைத்தீஸ்வர சுவாமி அபிஷேகக் கட்டளையிலிருந்து உலகநாத தம்பிரான் மூலம் உரூ.700/- (லோன்) கடனாகப் பெற்றார். அவர்கள் அப்தகிரி சோப்தார் (சிங்கத்தலை பொறித்த அரசச் சின்னங்கள்), சாமரம், குடைகள் முதலியவற்றை மட்டுமல்ல; தீவட்டிகளையும் விற்றுவிட்டனர். யானைகளையும், ஒட்டகங்களையும் வாங்குவாரின்மையால் அவை விடுபட்டன. அவர்கள் மூசாவினால் செய்த ஸ்ரீ சக்கரத்தையும் மேருவையும் கூட பின்னல் ஆபரணங்களாக (ராக்கடி, சந்திரஹாரம்) மாற்றி தம் மனைவியரை அலங்கரிக்கத் திட்டமிடுகின்றனர்.

இராஜாவின் அவையிலும் கூட, பண்டிட், துறவி, கலைஞர் மற்றும் திறன் வாய்ந்தோருக்கு நிலங்கள், சொத்துக்கள், நகைகள் முதலியன பரிசளிக்கப்படுமேயன்றி அரசச் சின்னங்கள் பரிசளிக்கப்படுவதில்லை. அவை இராஜாவிற்கு மட்டுமே அளிக்கப்பெறும் தன்மையான அது வழக்கமுமல்ல. சாதிப்பாகுபாட்டினை அறிந்துகொள்ளாமல் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தின் சின்னங்களையும், உரிமைப் பொருட்களையும் வழங்குவதற்கு இத்தம்பிரானுக்கு உரிமையில்லை. பீடாதிபதி சுவாமிக்குக்கூட அவற்றைத் தம்பிரானுக்குக் கொடுக்க உரிமையில்லை. இவர்களுக்கு முன்னதாகப் பல மடாதிபதிகள் இருந்திருக்கின்றனர். எனினும், யாரும் இதுபோல் சொந்தச் சின்னங்களை விற்றதில்லை. ஸ்ரீ வைத்தீஸ்வரசுவாமி கோயிலிலிருந்து முறையற்றவழியில் வந்த இப்பணத்தைக் கொண்டு ஸ்ரீ சந்த்ரமௌலீஸ்வர சுவாமிக்குப் பூசை முதலியன செய்வதால், நற்பெயரையும், உயரிய இடத்தையும் பெற்றுள்ள ஜகத் குருவிற்கு இழிவான பெயர் ஏற்படும். இத்தகவல் இராஜாவிற்கு அளிக்கப்படுகிறது.

(7) இவ்வாறு பொருட்களை தம்பிரான் எடுத்துக்கொள்வதைப் பொதுமக்கள் ஆட்சேபித்த போழ்து, அவற்றைப் பழுதுபார்த்துச் சரிசெய்வதற்காக எடுத்ததாகத் தம்பிரான் கூறினார்.

106. திருவிடை மருதூரில் அமரசிங்கருடைய வமிசத்தவர் வசித்தார்கள்.

மேலும் அவர் வள்ளலார் கோயிலுக்குச்[107] செல்லும் வழியில் மாயவரத்திலுள்ள சங்கராச்சாரிய சுவாமியின் மடத்தினைக் கடக்கையில், அக்ரஹாரத்துப் பிராமணர்கள் தம்பிரானைத் தடுத்து அவரிடமிருந்த மடத்துச் சின்னங்களைக் கைப்பற்றினர். கட்டளைத் தம்பிரானின் இத்தகு செயல்களும், அக்ரஹாரத்துப் பிராமணர்களின் நடவடிக்கையும் பீடத்தின் மதிப்பைக் குறைப்பன.

(8) இத்தகைய காரணங்களினால்,நாங்கள் மதிப்புடன் வேண்டுவது என்னவென்றால்,இராஜா இவ்விஷயத்தில் தன்னுடைய ஆட்களைக் கொண்டு நேரிடையாகவோ அல்லது மாவட்ட ஆட்சியர் மூலமாகவோ தலையிட்டு, திருட்டுத்தனமாகத் தம்பிரான் எடுத்துக்கொண்ட சின்னங்களை மீட்டு மடத்திற்கு அளித்து, இரு பஞ்சதிராவிட[108] உறுப்பினர்களைக் கொண்ட ஒரு பஞ்சாயத்து அமைப்பினை மடத்திற்கு ஏற்படுத்தி முறையாகப் பூசை முதலியவற்றை நடைபெறச் செய்ய வேண்டும்.

இவ்விண்ணப்பத்திற்குக்[109] கீழ்க்கண்டவர்கள் ஒப்பமிட்டுத் தருகிறார்கள்

குப்புசுவாமி சாஸ்திரிகள் - சோழப்பமுதலி அக்ரஹாரம்,கும்பகோணம்

பரமேஸ்வர சாஸ்திரிகள் - சோழப்பமுதலி அக்ரஹாரம்,கும்பகோணம்

முத்துசுவாமி சாஸ்திரிகள் - சோழப்பமுதலி அக்ரஹாரம்,கும்பகோணம்

வெங்கு சாஸ்திரி, கோபால சாஸ்திரி, கிருஷ்ணபட், கோபாலராவ், சிதம்பர சாஸ்திரி, குருசுவாமி சாஸ்திரி, மணி சாஸ்திரி, சுப்புகுட்டி சாஸ்திரி, சுப்பராயன், மகாதேவன், வைத்தி வாத்தியார், துவராஜ சாஸ்திரி, இராமசாமி சாஸ்திரி, இராமகிருஷ்ணன், ஈஸ்வர சாஸ்திரி, அப்பாசாமி சாஸ்திரி.

எழுத்தர் சாட்சி: சுந்தரப்பையன் கோவிந்தப்ப அக்ரஹாரம்.

## மூட்டை எண் –32C

**30.1844**

கோட்டையின் தெருக்களில் சுற்றும் நாய்களை அடித்ததற்கு 40க்கு ரூ.2-8-0

**36. 1832**

ம கா.ஸ்ரீ.ஸ்ரீ.திவான் சாயேப்[110] கோடிக்கரையிலிருந்து சாலுவ நாயக்கன் பட்டணத்திற்கு சமுத்திர மார்க்கமாக படகில் உட்கார்ந்து வந்ததற்காக படகுக் காரனுக்கு கூலி வாடகை ரூ.10

**76.1819**

காளை மாட்டுக்கு மாரில் கெடுதி ஏற்பட்டதினால் உள்ளுக்குக் கொடுப்பதற்கு கர்கம்[111] ஒவ்வொரு நாளும்:-

---

107. மயிலாடுதுறையைச் சேர்ந்தவூர் வள்ளலார் கோயில் என்பது.

108. விந்தியமலைக்குத் தெற்கேயுள்ள திராவிடம், ஆந்திரம், கன்னடம், மகாராட்டிரம், கூர்ச்சரம் என்ற ஐந்தும் பஞ்ச திராவிடம் எனப்பெறும். (பக்கம் 435)

109. இந்தக்கடிதம் இரண்டாம் சிவாஜிக்கு எழுதப்பட்டது (பக்கம் 435)

110. திவான் சாயேப் என்றது இரண்டாம் சரபோஜியை

111. கர்கம் (மருந்து) உருண்டை

சுக்கு சேர் 1/4, மஞ்சள் சேர் 1/4, வெல்லம் சேர் 1/4, சாராயம் சேர் 2
காளை மாட்டுக்கு குமாரி[112] என்னும் வலிக்கு மருந்து

கொட்டியத்திலிருந்து[113] பன்றியின் நெய் சேர் 2 1/2யும் ஆவுசாப் தோட்டத்திலிருந்து அகத்திக்கீரை 20 கட்டும் கொடுப்பது.

ஸ்ரீசந்திர மௌளீஸ்வரகோவில் பூஜை செய்யும் கங்காதர் பட்டருக்கு கை விரலில் சிரங்கு வந்து இரணமாயிருப்பதால் அதற்குத் தடவ மையில் எண்ணை டாங்க் -9[114] கொடுக்க உத்தரவாயிற்று.

14.1798
கைலாசவாஸீ ரா. துக்கோஜி ராஜாவின் பெண் மா.பார்வதிபாய் சாயேப் அவர்களின் நாட்டுப்பெண் மா. அம்பிகாபாயி 7 1/2

கைலாசவாஸீ ரா.ஏகோஜி[115] ராஜா அவர்களிடமுள்ள பெண் மேஹ்ரா குமாராபாய்[116]-25,
பேரன் கோவிந்தராவ் காட்கே[117]-15
மொத்தம் -40

கைலாசவாஸீ ரா.பிரதாபசிங்க ராஜா[118] சாயேப் அவர்களின் சம்சாரம் கிருஷ்ணாபாய்[119] அவர்களின் தம்பி.

துப்குல் ராமசந்திர ந்யா 12 1/2, மலிவேகமன்யா 7 1/2
மொத்தம் 20

46.1847
ரா.ராமச்சந்திர பாபாஜி பண்டிதர் இரண்டாந்தரம் கலியாணஞ் செய்து கொண்டதற்குக் கும்பனி ரூ.500 இனாம் கொடுக்கிறது.

---

112. குமாரி – கோமாரி

113. கொட்டியம்-சரக்கறை

114. டாங்க் 9 = 3 தோலா (பக்.165)

115. தஞ்சையில் ஆட்சியை நிறுவிய முதலாம் ஏகோஜி ஆகலாம்.

116. மேஹ்ராகுமராபாய் (பக்கம் 18)

117. கோவிந்தராவ் காட்கே-இவர் 1802க்குரிய குறிப்பில் குறிக்கப்படுகிறார். (மூட்டை எண் 140சி-14-1) (பக்கம் 18)

118. இவர் 1739 முதல் 1763 வரை ஆட்சிபுரிந்தவர்.

119. கிருஷ்ணாபாய்-பிரதாபசிங்கர் மணம் செய்து கொண்ட மனைவியர் ஐவர் பெயர் போ.வ.ச.11ல் கூறப்பட்டுள்ளன; கிருஷ்ணாபாய் பெயரில்லை; ஆகவே பிரதாபசிங்கர் மராட்டிய சாதியிலிருந்தும் நாயுடு சாதியிலிருந்தும் சேர்த்துக்கொண்ட மனைவியருள் கிருஷ்ணாபாய் ஒருவர் போலும் (பக் 22).

*15.1839*

பொங்கல் பண்டிகைக்கு ஆவுசாயேப்[120] கொட்டியத்திலிருந்து சர்க்கரை வாங்கி 500 சர்க்கரைப் பொம்மைகளை ஊற்றிக் கொடுக்கிறது.

*33.1823*

கோட்டையில் வடக்கு வீதியில் மோரி[121] கட்ட கப்பிக் கல்லு சாமான் அஸாமி வகையறா கணக்கு = 33 பேர்.

*33.1823*

வடக்கு வீதியில் ஸர்வர் ஹூஸேனியின் கோவிலுக்குப் புதிய மண்டபம் கட்ட மெக்யாடு கூலி -

*79 1845*

ஸரஸ்வதி பாண்டார் ஸேநாதுரந்தர் ரா.ராமய்யா வராஹப்பையா[122]

*96 மாரியம்மன் கோவில்*

நகைகள் வகையறா பெரிய கோவிலிலுள்ளதை உற்சவத்திற்குக் கொடுக்கும்படி தாசில்தார் எழுதியிருக்கிறார்.

*92-1845*

அப்பாஜி கிர்மாஜி பாபத்து உத்திரவின்படி ஆயிரத்துக்கு 4ரூ வீதம் வட்டியுடன் கடன் வரவு வைத்தது ரூ.23,850.

*92.1838 ஏப்.28உ*

(23) மந்திரி -ரா.சதாசிவ கேசவ தீக்ஷித[123] பண்டிதருக்கு அண்ணாஜி தியாகராஜா[124] மத்யஸ்தர் எழுதியது. திருவையாறு சப்தஸ்தான[125]த்திற்காகக் கண்டியூர்[126] தோட்டத்தில் நடக்கும் பானகபூஜை[127] விஷயம் பற்றி.

*92 (நகல்) ரா.திரியம்பக ஸம்பாஜி*

வக்கீல் அவர்களுக்கு ராஸ்ரீ -துளஜா ராஜாவின் வந்தனம். நாம் தஞ்சாவூரிலிருக்கும்

---

120. ஆவுசாயேப் – இரண்டாம் சரபோஜியின் மனைவி அகல்யாபாயி

121. மோரி-கழிவுநீர் வாய்க்கால்

122. வராஹப்பையா-(பக்கம் 82)

123. சதாசிவகேசவதீக்ஷித் (பக்கம் 83)

124. அண்ணாஜிதியாகராஜ இங்கு இவர் மத்யஸ்தர் எனப்பெறுகிறார் (மத்யஸ்தர்-ஓர் அலுவலர்; ஆனால் 4-117 இல் இவர் சர்க்கேல் எனப்பெறுகிறார்

125. சப்தஸ்தானம்-ஏழூர்திருப்பழனம், திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருக்கண்டியூர், திருபூந்துருத்தி, திருநெய்த்தானம், திருவையாறு.

126. கண்டியூர்-திருவையாற்றுக்கு அருகில் உள்ள சிறந்த சிவத்தலம்

127. பானக பூசை-நீர்மோர், இனிப்புப் பொருந்திய வாசனைப் பண்டங்கள் சேர்ந்த குளிர் நீர் முதலியன கொடுத்தல்.

கும்பனியின் ஸேனையின் சிலவுக்காக[128] சம்பளம் மிஸ்தர் போன் வசம் கொடுத்துக் கொண்டிருக்கிறோம்.

கவர்னர் கௌன்சிலுக்குக் கொடுப்பதாகக் கரார்செய்த துகையைப் பாக்கியில்லாமல் எல்லாம் கொடுத்தாய் விட்டது. இங்கே ஸேனையின் சிலவுக்காக மேன்மேல் கேட்கிறார்கள். கவர்னர் கௌன்சலுக்குத் தெரிவிக்கிறது.

மிஸ்தர் டுயின் வருகிறார். அவரை சிதம்பரத்திலிருந்து பல்லக்குத் தூக்குகிறவர்களுடன் பல்லக்கை யனுப்பி தஞ்சாவூருக்கு அழைத்து வந்து செய்த மரியாதையைப் பற்றி

மேல்மேல் சிலவுக்கு நாம் எங்கிருந்து கொடுக்கிறது. கௌனர் கௌன்சிலாவது சும்மா இருப்பார்களா? ஆரணி, ஹனுமந்தகுடி வகையறா தேசங்களை நவாப் எடுத்துக்கொண்டிருக்கிறதை[129] நமக்குக் கொடுத்தாலொழிய நாம் கொடுப்பது நியாயமல்ல.

## மூட்டை எண் -148C

*25.1769 (1) தஸ்தாவேஜு கச்சேரி*[130]
சென்னப்பட்டணம் கௌநரவர்கள்[131] - ரா. மகாராஜா[132] சாஹேப்பின் இராஜ்ய பாரம் பதவியை மகாராஜாவின் பரம்பரைகளே அனுபவித்து வரவேண்டுமென்று அனுப்பிய கடிதத்தை ரெஸிடென்ட் ப்ளாக்பர்ன்[133] சாயேப் அவர்கள் மகாராஜா ஸபையில் கொண்டு வந்து கொடுத்ததற்காக மிஸ்தர் ப்ளாக்பர்ன் சாயேப்பின்

*25 (1) சேவகன் வில்லைக்காரன்*
வகையறாக்களுக்கு பேஸஜி[134] எல்லோருக்கும் இனாம் 10 சக்.தவிர்த்து தற்போது இனாம் 20 சக்.

*(2) 1769*
லாயத்தில் குதிரைக்கு பரஸாந்தி என்னும் சிரங்கு வந்திருப்பதற்கு மேல்தடவ மருந்து.

---

128. கி.பி. 1776 இல் துளஜா செய்துகொண்ட ஒப்பந்தப்படி தஞ்சாவூர்க் கோட்டையில் ஆங்கிலப் படையிருந்தது.. அதன் செலவுக்காக ஆண்டொன்றுக்கு 4 லக்ஷம் புலி வராகன் கொடுக்க வேண்டியதாயிற்று (பக்கம் 49-50)

129. இரண்டாவது தடவை துளஜா பட்டமெய்தியதும் தஞ்சை ஆட்சிக்குரிய ஆரணியும் ஹனுமந்தகுடியும் நவாப் வசமே இருந்துவிட்டன என்று தெரிகிறது. நவாப் என்றது முகம்மது அலியை. (பக்கம் 49)

130. தஸ்தாவேஜுகச்சேரி-தப்தார் கானா (பக்கம் 4 53)

131. கவர்னராக 1769இல் இருந்தவர் சார்லஸ் போர்சைர் (Charles Bourchier ) என்பவர் ஆவர்.

132. மகாராஜா என்றது இரண்டாம் துளஜாவை

133. துளஜா II காலத்தில் ரெஸிடென்ட் ஆக இருந்தவர் மக்லோட் (Allexander Macleod) ஆவர். பிளாக்பர்ன் இரண்டாம் சரபோஜி காலத்தில் இருந்தவர். (பக்கம் 66) இதிற்கண்ட செய்தியும், ரெஸிடென்ட் பெயரும் 1769 என்ற ஆண்டும் ஒத்து வரவில்லை.

134. பேஸஜி- அரசன்

வேப்பெண்ணை சேர் -1/2, இரஸ கற்பூரம் டாங்க்-4 1/2, ஸோமரி தாளகம் -டாங்க் 9, செவ்வீரம் டாங்க்-4 1/2, மிருதார் சிங்கு டாங்க் -9, உள்ளுக்குக் கொடுப்பதற்குத் தேன் சேர் -1, ஏ லவீத? சேர் -1

பாஸீனா என்னும் வியாதி வந்த குதிரைக்கு மருந்து:

எலுமிச்சம் பழம் -10 , கடுக்காய்-1/2 சேர், மோர்சூத்(துருசு) -1 சேர், வெங்காரம் -9 டாங்க், குதிரைக்கு மாரில் நிறைந்ததற்கு மேல் பத்துப் போடுவதற்கு - 3 நாட்களுக்கு முஸபா? சேர் -9, சாராயம் சேர் -9, எலுமிச்சம் பழம் -300 தடவுவதற்கு

துருசு சேர் 1/2, வெங்காரம் சேர் 1/4, மாசிக்காய் சேர் -19, எலுமிச்சம்பழம் -10

10 ஒட்டகங்களுக்கு மசாலை

ஓமம் சேர் 35 , சுக்கு சேர் 8 1/2, மஞ்சள் சேர் 8 3/4 , பித்த மூலம் சேர் 8 3/4, கடுகுரோகணி 8 3/4, , முசாவோல் சேர் 8 3/4, மிளகு சேர் 8 3/4 , பூண்டு சேர் 27 1/2, பித்த? சேர் 4 1/2 டாங்க் 9 , முரபுடே? பாரம் 1-8 3/4 மண்ணங்கு, கருஞ்சீரகம் சேர் -35, வசம்பு சேர் -8 3/4, இந்திரஜவம்? சேர்-8 3/4, செங்கோட்டை சேர் 4 1/2டாங்க்-9, கடுகு சேர் 4 1/2 டாங்க் -9, பெருங்காயம் சேர் 2 டாங்க்-13 1/2, கழக்கொடி சேர் 35 , பூந்திக்கொட்டை சேர் 17 1/2, வெல்லம் சேர் -35, வாவடிங்கு ?சேர் -8 3/4, பொரசவிரை சேர்-8 3/4 , சாராயம் -2, மாசிக்காய் சேர் -1/2 , உப்பு படி -17 1/2, வெந்தயம் 17 1/2 சேர் , விருந்தாவனத்தின் வேர் 8 3/4 சேர்.
ஒட்டகத்திற்கு 3 நாளைக்கு

காளிஞ்சனம்? சேர் 5 , மாசிக்காய் 5, கிராம்பு சேர் 1/4 , மிளகு சேர் 1, சித்தரத்தை சேர் 2 1/2 , மெட்பழம்? சேர் 5, சுக்கு சேர் 1

(3) 1769
ஜாபிதா - பாகவத மேளம் - கோகுலாஷ்டமிக்கு[135] ருக்மணி கல்யாணம் நாடகம் நடிக்க ஸாமான்கள்.

தயிர் சேர் -10, பால் சேர் -10, வெண்ணெய் சேர்-5

25 1769
(4) ஹாஜாரியில்[136] மத்தாப்பு- கம்பத்தை நடுவதற்குச் சாமான்களைக் கொடுக்கிறது.

26 1822
(1) யானைக்கானா[137]

யானைக்குட்டிக்கு தழும்பு வந்த இடத்தில் வலிப்பதற்காக பத்துப் போடுவதற்கு:-

---

135. கோகுலாஷ்டமி ஆவணி மாசம் தேய்பிறை அஷ்டமியில் உரோகிணி விண்மீன் கூடிய நாளில் வருவது

136. ஹாஜாரி – வடக்கு வாசல்

137. யானைக்கானா - ஹத்திகானா; பீல்கானா (பக்கம் 454)

*நல்லெண்ணெய் சேர் -1, அபின் டாங்க் -9 கொடுக்கிறது.*

***(2) 1822***
*கொட்டியம்*

*பிஸ்கோத் செய்வதற்கு*
*ரொட்டி கடங்கின் ரவா படி -5/8 , வெண்ணெய் சேர் -1/4, (ராயபுரி) குழவு சீனி சேர் -1, நாபத் சீனி சேர் -1/2, கட்டித்தயிர் சேர் -1, கோரா கடுதாசி[138] தஸ்தா-1, அடுப்புக்கரி கூடை-1*

***10•1822***
*(1)மாட்டுக்கு வியாதி வந்து சிரங்கானதற்கு மேல் பத்துப் போடுவதற்கு*

*கடுகு சேர் -1/4 , துருசு சேர்-1/4, மஞ்சள் சேர் -1/4 , குக்கில் சேர்-1/4, சூடன் விராகனிடை -3*

***10•1822***
*(2) மரம் வெட்டி மரத்தின்மேலிருந்து கீழே விழுந்து காலுக்கு அடிபட்டதற்கு எண்ணை செய்வதற்கு:-*

*வேப்பெண்ணை சேர்-1/4 , விளக்கெண்ணை சேர்-1/4 டாங்க் 9, புங்கெண்ணை சேர்-1/4 , பொன்னக்காயெண்ணை சேர்-1/4, நல்லெண்ணை சேர் -1, கிராம்பு சேர் 1/2, கார்போகரிசி டாங்க் -4 1/2 , வெப்பாளம்பட்டை டாங்க் -4 1/2*

***(3) 1822***
*வேட்டை கானா[139]*

*38 நாய்கள் அரசப்பட்டு வேட்டைக்குப் போவதற்காக*
*அரிசி-புழுங்கல் -படி -19 , எலும்பு சேர் -8, மாமிசம் சேர்-5 , ஆட்டுத்தலை -2, மோர் சேர் -34 , உப்பு படி -1/2, விளக்கெண்ணை சேர்-1/2 , நெய் சேர்-1*

***11. 1822***
*(1) யானை கானா*

*காமாக்ஷி என்கப்பட்ட யானைக்குட்டிக்கு நீர் ஜாஸ்தி போவதால் உள்ளுக்கு 5 நாள்களுக்கு மருந்து.*
*துருசு - 1/4 சேர் , இரஸசிந்தூரம் 1/4 சேர், ஜாதிக்காய் -9 டாங்க், மாசிக்காய் -2 சேர், எலுமிச்சம் பழம் சுமார் 40.*

***(2) 1822***
*சந்திரசேன் என்கப்பட்ட குதிரைக்கு மாரில் இரத்தங்கட்டியதற்கு மாரில்தடவி வழிக்கிறதற்குச் சாராயம் 3 சேர்.*

---

138. கோரா கடுதாசி – எழுதப்படாத காகிதம்

139. வேட்டை கானா-வேட்டை மகால்-விலங்குகள் இருக்கும் இடம் (Zoo) (பக்கம் 457)

14.1822 (1) கும்பகோணம் தோட்டத்தைச் சேர்ந்த ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமி அவர்களின் மடத்தில் புதிய கோயிலைக்கட்டி, கும்பாபிஷேகஞ்[140] செய்வதால் அதற்கு கும்பகோணம் தோட்டத்திலிருந்து 286 சக்கரம் இனாம் கொடுக்கிறது.

(2) 1822
வண்டிச் சக்கரத்திற்கு சீல் செய்து போடுவதற்கு

நூல் -1 சேர், விளக்கெண்ணை -1 சேர்

மாட்டிற்குச் சிரங்கிற்குத் தடவ வேப்பெண்ணை சேர்-3, சூடம் -3

19,1822
(1) திருவையாறு கோவிலின் யானைக்குட்டிக்கு கண்ணிலிருந்து நீர் பெருகுவதால் மருந்து செய்து போடுவதற்கு

வெங்காரம்-9 டாங்க், துருசு - 9 டாங்க், அ.சீனி -9 டாங்க், சிவப்புக்கொப்பரை -9 டாங்க், அபின்-1 1/2 டாங்க்

(2) யானை பலஹீனமாயிருப்பதால் கீரையிலையில் கலந்து உள்ளுக்கு 3 நாட்கள் கொடுக்க

விளக்கெண்ணை சேர் -2, இந்திர ஜவம்? சேர்-1, பொரச விரை சேர்-1, உப்பு சுமார் படி -2

(3) யானைக்குட்டிக்கு இரணமாறி குணமாகி தற்போது பட்டிக்கட்டின இடம் வீங்கியிருப்பதால் பத்துப்போட செவ்வீரம் - 5 டாங்க், பூக்காவி -5 டாங்க், கோழி முட்டை - சுமார் -10

(4) 1822
ஆயுதசாலை[141]

டாக்டர் பீ மக்லோட்[142] அவர்களிடமுள்ள நகைகளுக்கு[143] ஈயம் பூசுவதற்கு வெள்ளீயம் சேர் -4, காரீயம் சேர் -4, துத்த நாகம் சேர் -1, நவச்சாரம் சேர் -1, மொத்தம் சேர்-8, பாத்திரங்கள் தேய்க்க அடுப்புக்கரி கூடை -1

---

140. புதிய கோயிலைக்கட்டியவர் இரண்டாம் சரபோஜி. இது பற்றிய கல்வெட்டு "ஸ்ரீசந்திரமௌலீசுவரஸ்வாமி அதிவாசார்த்த ராஜஸ்ரீ சத்ரபதி ஸரபோஜி மஹா ராஜக்ருத ஆலய பிரதிஷ்ட சாலிவாகன சக 1743 விருஷ நாமஸம்வத்ஸர மாக சுத்த பஞ்சமி பானுவார" என்பதாகும். (பக்.433)

141. ஆயுசாலை ஜிராத்கானா (பக்கம் 455)

142. டாக்டர் மக்லோட்-இரண்டாம் சரபோஜி காசியாத்திரை மேற்கொண்ட பொழுது உடன் சென்ற ஆங்கில வைத்திய டாக்டர் ஸட்டன் காசியில் இறந்தார். உடனே டாக்டர் தலைநன் மக்லோட் அனுப்பப் பெற்றார். இவரே தஞ்சைக்கும் வந்திருந்தார் போலும்.

143. ஈயம் பூசுதல் என்று அடுத்து வருவதால் " நகைகளுக்கு" என்பதற்குப் பதில் பாத்திரங்களுக்கு " என்றிருத்தல் வேண்டும்.

*29 (1) 1822*

அரண்மனையிலுள்ள கிருஷ்ணவிலாஸ் குளத்திற்கு ஜலம் விடுகிறது.

*(2) 1822*

லாயம்

மரத்திலிருந்து கீழே விழுந்து காலுக்குக் காயம் ஏற்பட்டதற்குப் பட்டிகட்ட எலுமிச்சம் பழம் -10, துணி -1 1/2 முழம் அகலம் -3 முழம் நீளம், நல்லெண்ணை -3/4 சேர், மூங்கிப்பளாச்சி -3, முளைகள் -9 (மரத்தினால்), சாராயம் -சேர்-2

*(3) 1822*

ஹெளதாவின் யானைக்கு வர்ணங்கொடுக்க

சிந்தூரம் சேர் -2, நீலம் சேர் -2, இங்களீக? சேர் -1/2, அரிதாரம் சேர் -2, சுண்ணாம்பு சேர் -2, முத்து வெள்ளை சேர் -2

*30-1822*

(1) சாயீகேடா? யானையின் கோரோசனம் 1 1/2 பணவிடை வந்தது கொட்டியத்தில் சேர்க்கப்பட்டது.

(2) 1822

யானைக்குட்டியின் இரண்டு கால்களில் நடுவிரலின் நகங்கள் பெயர்ந்துபோய் சிரங்கானதற்கு மருந்து:-

செங்கொட்டை சேர் 1/4, காசிக்கட்டி சேர் 1/4, அலகு பாக்கு சேர் 1/4, கொட்டைப்பாக்கு சேர் 1/4, மரமஞ்சள் சேர்-1/4, சிவப்புக் கொப்பரை சேர் -1/4, மிருதார் சிங்கு சேர் 1/4, இரஸ கற்பூரம் டாங்க் 9, கடுக்காய் சேர் -1/4, தானிக்காய் சேர் 1/4, மாசிக்காய் டாங்க் 9, எலுமிச்சம் பழம் சுமார் 30

*(3) 1822*

தாவீத் பிள்ளை[144] யினிடம் ஆங்கிலேயர் சாப்பாட்டுக்கு வேண்டிய சாமான் உணவு விபரம்.

*(4) 1822*

ஸ்ரீவேணு கோபால ஸ்வாமிக்கு கோகுலாஷ்டமி உற்சவத்திற்காக வழக்கப்படி ஸாமான் வகையறா கொடுக்கப்படும் ஜாபிதா

*33.1822*

(1) 36 குதிரைக்கு - திவடா?, மிளகு சேர் 13 1/2, கருஞ்சீரகம் -27 சேர், கடுகுரோகிணி சேர் -9, காயம் சேர் 1 1/2, சுக்கு சேர் -9, வசம்பு சேர் 13 1/2, கடுகு சேர் -9, உப்பு சேர் -27, புகையிலை சேர் -9, மஞ்சள் சேர் -9, பொரசவிரை சேர் -13 1/2, கண்டத்திப்பிலி சேர் -6, வெங்காரம் சேர் 1 1/2, பூண்டு சேர் 13 1/2, ஓமம் சேர் 13 1/2, மிளகாய் சேர் 13 1/2, இந்துப்பு சேர் 13 1/2, சித்தரத்தை சேர் 6

---

144. சரபோஜியுடன் காசியாத்திரையில் உடன் சென்றவர்களுள் ஒருவர் (பக். 118)

# மூட்டை எண் -155C

(அரண்மனைக்கு வந்து பாயி சாயபுகளுடன் செய்த கேள்வி பதில்
1858-7-28.
9.1858
இராமச்சந்திர போஸலே அவர்களுடைய் வியாஜ்யத்தின் தீர்ப்புமா.சைதம்பாபாயி[145] சாயேப் வேறு ஜாதி ஒரு ஆண் குழந்தையை விலைக்கு வாங்கி வளர்த்து விவாஹஞ் செய்து வைத்து, ஆஸ்தி சொத்துக்களையும் வீட்டையும் கொடுத்தார்கள். ஆனால் அந்தக் குழந்தை கெட்ட நடத்தையில் பிரவேசித்ததால் இந்த வியாஜ்யமேற்பட்டது.

7. 1818
(1) தஞ்சாவூர் கோட்டை தேவஸ்தானம் ஸ்ரீபெரிய கோவில் ஸ்வாமியின் உற்சவத்திற்குச் சித்திரை மீ 23உ செவ்வாய்க்கிழமை சாயங்காலம் தேர்த் திருநாளுக்கு இராஜ்யத்திலிருந்து ஆஜராக யிருக்க வேண்டிய ஆள்களின் விபரம்.

1900 திருவையாறு தாலுக்காவிலிருந்து, 2800 பாபனாசம் தாலுக்காவிலிருந்து, 3494 கும்பகோணம் தாலுக்காவிலிருந்து,3480 மாயவரம் தாலுக்காவிலிருந்து
2920 திருவாரூர் தாலுக்காவிலிருந்து, 4200 மன்னார்குடி தாலுக்காவிலிருந்து
4500 கீவளூர்[146] தாலுக்காவிலிருந்து, 3200 நன்னிலம் தாலுக்காவிலிருந்து
= 26494 + 900 = 27394 வாகனத்திற்கு வேண்டிய ஆட்களுக்குத் திருவையாறு தாலூக்காவுக்கு எழுதிய ஸனது[147].

13.1858
ரெஸிடெண்ட்[148] அவர்களிடம் சென்று அவர் கேட்ட கேள்விகளுக்குப் பதிலளித்துத் தான் மாஜர் நாமாவில் (கவர்ண்மெண்டுக்கு மனு) கையொப்பமிடவில்லை என்று.

(1) மனு-மூன்று மாதங்களுக்கு முன் பிரஸன்ன வெங்கடேச சுவாமியின் கோவில்[149] மார்க்கமாய் என் சொந்தக் காரியத்திற்காகப் போய்க் கொண்டிருந்தபொழுது, மேற்சொன்ன கோவிலுக்குப் பக்கத்திலுள்ள சாவடியின் திண்ணையின் மேல் கூட்டமாயிருந்தது. அதிலிருந்த அம்பா சங்கர் ஜோஸி என்பவர் ஒரு மனுவில் கையொப்பமிடுவதற்கு வாவென்று கூப்பிட்டார். நான் கையொப்பமிட மாட்டேனென்று போய் விட்டேன் என்று சொன்னேன். இந்தப்படிக்கி வினாவிடைக்கு வாக்குமூலம் எழுதி கையொப்பமிட்டிருக்கிறேன்.

(கையொப்பம்) சக்ரோகோவிந்த

---

145. சைதம்பாபாயி-இரண்டாம் சிவாஜியின் முதல் மனைவி (பக்கம் 32)

146. கீவளூர்-கீழ்வேளூர்.

147. ஸனது-அரசாணைப்பட்டயம்

148. ரெஸிடென்டு-பிலிப்ஸ் என்பவர் ஆவர் (பக்கம் 69)

149. இக்கோயில் அய்யன் கடைவீதிக்கு அடுத்து உயர்ந்த மேடையில் உள்ளது.

தஞ்சாவூரில் சிவாஜி மகாராஜா பரலோகமடைந்தபின்னர் தஞ்சாவூர் இராஜ்யத்தை ஸ்தாபனஞ் செய்ய வேணுமென்று எழுதிய மனு 11-4-1858.

*(2) 1858*

தஞ்சாவூர்க் கோட்டையைப் பழுது பார்த்ததின் கணக்கு வழக்கு - உத்தேசம் (எஸ்டிமேட்) சிலவு ஜாபிதா.

சிவங்கோட்டையின் ஜலசூத்திரத்திற்கு மேற்கிலிருந்து அலிவாசலுக்கு[150] (வடக்கு வாசல்) மேற்கு வரையில் செப்பனிட நீ.16க்குச் செலவு ரூ.7979-2-8.

*(3) 1835 Aug 2உ*

நாகூரிலிருக்கும் சையத்கமால் என்பவர் தன்னுடைய மேலதிகாரியைத் திட்டி மிக்க கொடுமை செய்ய ஆரம்பித்ததால் அவனைச் சில காலம் ஜெயிலில் வைத்து பின்பு விடுதலை செய்தனர். உடனே சொல்லாமல் ஓடிப்போய் 1 1/2 வருஷகாலம் வரையில் கண்ணுக்கெதிரில் புலப்படாததால் அவனுடைய சம்பளம் நிறுத்தப்பட்டது. ஆதலால் அவன் பாக்கியைப் பெறுவதற்குக் காரணமில்லை.

ஏனென்றால் சிறையில் தண்டனைப் பட்டவனுக்குள்ள பாக்கியைக் கொடுப்பது வழக்கமில்லாததால் மேற்படி விபரம் சாஹேப்[151] அவர்களுக்குத் தெரிய வேண்டியதற்காக எழுதியிருக்கிறது.

(கையொப்பம்) மந்திரிவர்ய ரா.சதாசிவ கேசவ பண்டிதர்[152]

**13.1850** நவம்பர் 24

(4)ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடத்தில் அபிஷேகஞ் செய்யப்பட்ட ஸ்ரீசங்கராசார்ய சுவாமி அவர்களுடைய மடத்தார் கொடுத்த ஜாபிதா- ஸ்ரீஸ்வாமியார்[153] மிகவும் காயலாவாயிருந்து, அவருடைய சமாதி காலத்திலே அவருடைய அதிஷ்டானத்து ஸ்ரீமஹாதேவேந்திர ஸரஸ்வதி சுவாமி அவர்களுக்குப் பட்டம் கொடுக்கப்பட்டதற்காகக் கார்த்திகை மீ 14 உ புதன்கிழமை கும்பகோணத்தில் அவருக்கு ஊர்வலம் நடத்த வழக்கப்படி தாசில்தார் வகையறா உத்யோகஸ்தர்கள் காத்திருந்து ஜாக்கிரதை செய்வதற்கும் கும்பகோணம் தாலூகா தாசில்தாருக்கு உத்திரவாக வேணுமென்று எழுதிய மனுவை ரெஸிடெண்ட்[154] சாயேப் கலெக்டருக்கு அனுப்பி அதில் கண்டபடி ஸ்ரீஸ்வாமியாருடைய ஊர்வலத்திற்கு வழக்கப்படி ஜாக்கிரதை செய்ய கும்பகோணம் தாசில்தாருக்கு உத்திரவிட வேணுமென்று தஞ்சாவூர் ரெஸிடெண்ட் வேலை பார்க்கும் *G.H. Bishop Esq.* அவர்களுக்கு ஸர்கேல் அண்ணாஜி தியாகறாஜ பண்டிதர் கேட்டுக்கொள்ளுகிறார்கள்.

---

150. அலிவாசல்-வடக்கு வாசல் (போ.வ.ச.பக். 77)

151. சாஹேப் என்றது இரண்டாம் சிவாஜியை

152. சதாசிவ கேசவபண்டிதர் (பக்கம் 83)

153. ஸ்ரீசந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சுவாமிகள் (55சி-53) (பக்கம் 435)

154. ஜே.பிஷப் என்பவர் ரெஸிடெண்ட் ஆவர் (பக்கம் 68)

*(5) 1835 Aug. 28உ*

*திருவாரூர் ஸ்ரீதியாகராஜ ஸ்வாமி கோவிலின் புஷ்கரணி (குளம்)யை வெட்டி முடிந்தாய் விட்டதால் தற்போது வேலைக்காரர்கள் வேண்டியதில்லை.*

*(6) ஞாபகக்குறிப்பு:-*

*28-7-1858 ஞாயிற்றுக்கிழமை Acting Resident Mr. Chari Saheb அவர்கள் Resident சிரஸ்தேதார் வெங்கட்ராவ் மூலம் நாளைக்குக் காலையில்தான் அரண்மனைக்கு வருகிறேன். அப்பொழுதுதான் அரண்மனையில் நாலா பக்கங்களிலும் போகுவதற்கும் பார்ப்பதற்கும் பேசுவதற்கும் தனக்கு எவ்விதத் தடையும் இருக்கக்கூடாதென்று சொல்லியனுப்பினார்.*

*அதற்கு ஸர்கேல்[155] அவர்கள் ரெஸிடெண்ட்[156] சாஹேப் அவர்களுடைய எண்ணத்தின்படி ஒருவித தடையும் இருக்காது என்று சிரஸ்தேதாரிடம்[157] தெரிவித்தார். இன்னும் அரண்மனையில் மா. ஆவுசாயேப்,[158] பாயிசாப், சௌ.சி.ராஜ்யாயி[159] ரா. மாப்பிள்ளை[160] சாயேப் வகைறாக்களுக்கு ரெஸிடெண்ட் சாஹேப் வரப்போகிறாராதலால் எல்லோரும் தயாராக இருக்க வேணுமென்று தெரிவித்தார்.*

*(6) மா.ஆவுசாயேப் அவர்கள் காளே- ராவுக்கும், ஜகதளேராவுக்கும்[161] ரெஸிடெண்டின் வரவின்பொழுது வர வேணுமென்று, உத்திரவிடவேணுமென்று சொல்லி அனுப்பினார்கள். அவர் வந்து எங்கே உட்காருவதென்று கேட்டதற்கு மா.ஆவுசாயேப் எங்கிருப்பார்களோ அங்கு உட்காரலாமென்று தெரிவித்தார்.*

*ஜூலை மீ 28 உ திங்கட்கிழமை காலை 8 மணிக்கு ரெஸிடெண்ட்டும், சிரஸ்தேதாரும் அரண்மனைக்கு வந்தார்கள். அப்பொழுது மகாராஜா ஸபைக்குச் செல்லும் வழியில் மிஸ்தர் பார்பஸ் சாயேப் அவர்களைக் கண்டு கொண்ட மாதிரி ரா. மாப்பிள்ளை சாஹேப், ஸர்கேல் வராஹப்பையா,[162] தேவாஜி ராவ், பெரிய அண்ணா,[163] பாபேராவ்[164] இவர்கள் தகுந்த மரியாதைகளுடன் கண்டு கொண்டார்கள்.*

155. சர்க்கேல்-அண்ணாஜி தியாகராஜ

156. ரெஸிடெண்ட்-செரி

157. சிரஸ்தோர்-வெங்கட்ராவ்

158. ஆவுசாயேப் காமாட்சியம்பாபாயி

159. ராஜ்யாயி-இரண்டாம் சிவாஜிக்கும், சைதம்பாவுக்கும் பிறந்த பெண். இவரும் ராஜாபாயியும் உடன்பிறந்தவர்கள் (155சி - 13-6)

160. மாப்பிள்ளை-சக்காராம்

161. ஜகதளராவ் - ஏழு பாயிசாயபுகளை ரெஸிடென்ட் பார்க்கும் பொழுது இருந்தவர். (155சி - 13-6)

162. வராஹப்பையா – (பக்கம் 82)

163. பெரிய அண்ணா (பக். 81) இவர் ராஜாபாயியின் காரியஸ்தர்

164. பாபேராவ்-இவர் காமாட்சியம்பா பாயியின் காரியஸ்தர்

முதலில் க்ஷேமசமாசாரங்களைக் கேட்ட பின்னர் ஸர்கேல் வகையறா இன்ன இன்ன உத்தியோகஸ்தர்களென்று ரெஸிடெண்ட் சாயேப் ரா. மாப்பிள்ளை சாயேப் அவர்களின் மூலமாய் தெரிந்து கொண்டுதான் அரண்மனை முழுவதும் சுற்றிப் பார்க்க வேணுமென்றும், மகாராஜா சாஹேப் அவர்களுடைய சம்சாரங்களையும்[165] (பெண்சாதிகளை) தெரிந்து கொள்ள வேணும்....

எல்லோருக்குமிருக்கும் தடைகளைத் தெரிந்து கொள்ளுவதற்காகத் தன்னை கவர்மெண்ட்டார் உத்திரவிட்டிருப்பதால் அவர்களெல்லோரையும் தான் பார்க்க வேணுமென்று சர்கேலுக்கும் ரா. மாப்பிள்ளைக்கும் பார்த்துச்சொன்னார். அதற்கு பார்பஸ் அப்படி அல்ல. மா. ஆவுசாயேப் வகையறா எல்லோரும் ஒரு இடத்தில் வந்து இருக்க வேணுமா அல்லது ரெஸிடெண்ட் சாஹேப் அவர்களே அவாளவாளிடத்திற்கு வந்து தனித்தனி அவர்களைப் பார்க்க விரும்புகிறாரா என்று கேட்டதற்கு—

ரெஸி - தன்னுடைய விருப்பத்தின்படி தான் தனித்தனியாக வந்து பார்க்க வேணும். தனக்கு எவ்விதத்தடையும் இருக்கக்கூடாது என்று சொன்னார்.

மா.ஆவுசாயேப் ரெஸிடெண்டைக் காண்பதற்குத் தயாராக இருக்கிறார்களாவென்று ஸர்கேல் கேட்டனுப்பினதற்குக் காசீனாத் சந்திர மௌலியை அழைத்து வரும்படி மா. ஆவுசாயேப் தெரிவித்தார்கள்.

பின்பு—ரெஸிடெண்ட் சாயேப் - சிரஸ்தேதார் - வராஹப்பைய்யா, பெரிய அண்ணா, ஸர்கேல் பாபேராவ் - காசினாத் சந்திரமௌளி[166] - ஜகதளராவ் ரா. மாப்பிள்ளை சாயேப் இவர்களுடன் கிருஷ்ண விலாஸத்தின் மாடியில் சிவபூஜை மஹாலில் மா. ஆவுசாயேப் இருக்கும் இடத்திற்குச் சென்று கதவுக்கு வெளியே அமர்ந்து கொண்டு இருந்தார். அப்பொழுது யோகாம்பா[167] - ரத்னி அக்கா, சூன அக்கா இந்த மூன்றுபேரும் கூட இருந்தார்கள்.

*13 (6)* ரெஸி - நீங்கள் சௌக்கியமாயிருக்கிறீர்களா என்று தெலுங்குப் பாஷையில் ரத்னீ அக்காவின் மூலமாகக் கேட்டதற்கு

மா.ஆவுசா:- என்னுடைய குழந்தை[168] பரலோகமடைந்து எனக்கு எல்லாவிதமான கஷ்டங்களும் ஸம்பவித்து சி.ராஜாபாயீயைத் தவிர எல்லா நாட்டுப்பெண்கள் பேத்திகள் வகையறா இங்கு வராமல் நான் தனியாக இருந்து தங்களைப் பார்க்கும்படி ஏற்பட்டிருக்கிறதென்று ரத்னீ அக்காவின் மூலம் தெரிவித்தார்கள்.

ரெஸி:- அப்படி ஏன் ஆயிற்று என்று ரத்னீ அக்கா மூலம் கேட்டார்.

---

165. சம்சாரங்கள்-சிவாஜி ஒரே நாளில் மணந்துகொண்ட பதினெழுவரில் இறந்தவர்கள் போக மிஞ்சிய பதினைவர் (பக்.34)

166. காசிநாத் சந்திரமௌலி – ஆவுசாப் அவர்களின் அலுவலர் (155சி - 13-6)

167. யோகம்பாள் அக்கா (பக்கம் 336)
பிற அக்காமார்: ரத்னி அக்கா, சூன அக்கா, அம்புபாயி அக்கா, ஜான்ஹீவதி அக்கா.

168. குழந்தையென்றது இரண்டாம் சிவாஜியை

மா.ஆவுசா:- காரியஸ்தர்களிந்தப்படி செய்திருக்கிறார்களென்று ரத்னீ அக்காவின் மூலம் பதிலளித்தார்.

ரெ.சா:- எந்தக் காரியஸ்தர் அப்படி செய்தாரென்று ஷி அக்கா மூலம் கேட்டார்.

மா. ஆவுசா:- ஸர்கேல்தான் நமக்கு இப்படி தடை செய்திருக்கிறாரென்று ஷி அக்காவின் மூலம் பதிலளித்தார்.

ரெ.சாயேப்:- ஸர்கேலைப் பார்த்து மா.ஆவுசாயேப் இப்படி சொல்லுவதற்குக் காரணமென்ன என்று கேட்டதற்கு.

ஸர்கேல்:- அப்படித்தான்.
ரெ.ஸா:- தான் செய்ய வேண்டியதைத் தெரிவித்தார்.

அதற்கு.....சி.ராஜாயீயின் மரியாதை தெரிந்து தங்களுக்கு என்ன பாஷை தெரியும் என்று கேட்டார்.

ரெ.ஸா:- தனக்குத் தெலுங்கு பாஷை தெரியுமென்று சொன்னதின் பேரில்......என்று ரத்னீ அக்கா மூலம் மா.ஆவுசாயேப் தெரிவித்தார்.

ஸர்கேல் காளேராவுக்கும் ஜகதளேராவுக்கும் வரும்படி உத்திரவிட்டதற்கு காளேராவ் அப்பா தனக்கு உடம்பு சரியாயில்லாததால் வருவதற்கில்லை என்று சொல்லி அனுப்பித்தார். அந்தப்பதிலை ஸர்கேல் ஆவுசாப் பங்கில் தெரிவித்தார். மா.ஆவுசாயேப் அவர்கள் பெரிய ராஜாவும் அமணி ராஜாவும் ரெஸிடெண்டைப் பார்க்கும்படி சொல்லி அனுப்பும்படிச் சொன்னதற்கு
ஸர்கேல்:- இதுவரையிலும் நான் சொல்லுவது வழக்கமில்லை. அவர்களை நீங்களே வரவழைப்பது வழக்கம். அவர்கள் தங்களிடம் வருவது போவதுமில்லை. இப்பொழுது மாத்திரம் வழக்கப்படி வரும் காரியத்திற்கு நான் ஏன் சொல்ல வேணும் என்று ஆவுசாப் பங்கில் தெரிவித்தார்.

13(6) மா.ஆவுசாப்:- அதற்கு நாமும் சொல்லியனுப்பியிருக்கிறோம். நீங்கள் தடை செய்திருப்பதால் நீங்களும் ஒருமுறை சொல்லி அனுப்புங்களென்றதற்கு

ஸர்கேல்:- அவர்கள் வருவதற்கும் போகுவதற்கும் நாமொன்றும் தடை செய்யவில்லை. இன்னும் இது வரையிலும் வந்துபோகுவது போல் இப்பொழுதும் வரவழைத்துக் கொள்ளுங்களென்றார்.

ரா.மாப்பிள்ளை சாயேப் - ஸர்கேல் வகையறாக்கள் ரெஸிடெண்ட் சாயேபுக்கு

இந்த ஸமஸ்தானத்திற்கு நீங்கள் வந்திருப்பது நமக்கெல்லாம் மிகவும் சந்தோஷமாயிருக்கிறது. இந்த இராஜ்யம் மிகப்பெரியது. ஏராளமான ஏழைகள் நம்பியிருக்கிறார்கள். மகாராஜா சாஹேப் அவர்களுடைய சம்சாரம் மிகப்பெரியது. இதை எல்லாம் நீங்கள் அறிகிறவர்களாகையால் மனதில் ஆலோசித்து இராஜ்யத்தை ஸ்தாபித்து எல்லோருடைய க்ஷேமம் செய்வீர்களென்று நம்பியிருக்கிறோமென்றதற்கு-

ரெ.ஸாஹேப்:- அதுசரி - அவ்விஷயம் சீமைக்குப் போயிருக்கிறது. அங்கிருந்து உத்திரவு வரவேணும். என்னால் கூடுமான ஒத்தாசை நான் செய்வேன். நீங்கள் ஒவ்வொரு காரியத்தையும் உள்ளபடி தெரிவிக்க வேணும் என்றார்.

அதன்மேல் ரா.மாப்பிள்ளை சாயேப் - ஸர்கேல் வகையறாக்கள் - நாம் எப்பொழுதும் உள்ளபடிதான் நடக்கிறவர்கள். நமக்கு கௌர்மெண்டின் [169] இடத்தில் நீங்களே இந்த இராஜ்யத்தை கவர்ண்மெண்ட்டார்கள் பரம்பரையாக நடத்தி இருக்கிறார்கள். அதே மாதிரி இப்பவும் நடத்துவதற்கு உதவி செய்ய வேணும். நாம் உள்ளபடி நடக்க வேணுமென்று நமக்கு பார்ப்பஸ் சாயேப் சொல்லியிருக்கிறார். நாம் அவர்களுக்குக் கீழ்படிந்து இருந்து அவருக்கு ஸந்தோஷமுண்டாகும்படி நடந்தோம். பார்பஸ் சாஹேப் இடத்தில் நீங்களே இருக்கிறீர்களாகையால் இப்பொழுதும் அதன்படியே நடப்போமென்று நம்முடைய பழக்கவழக்கத்தினால் தங்களுக்குத் தெரியும்.

ரெ.- ஆமாம் பார்பஸ் சாயேப் இடத்திலே நானிருக்கிறேன். இன்றும் அவரைப் போலவே தர்பாரின் நல்லதையும் நான் செய்வேன் என்றார்.

பின்னர் ரெஸிடெண்ட் சாஹேப் - ரா.மாப்பிள்ளைசாயேப் - ஸர்கேல் வகையறாக்கள் எழுந்திருந்து மஹாராஜா சபை தாஸ்தான் மகாலின் [170] தோட்டத்தைப் பார்த்த பிறகு அஞ்சு அங்கணத்தின் மாடியை வெளியே யிருந்து பார்த்து விட்டு - இந்த மாடியை யார் கட்டினது? அங்கே யாரிருக்கிறார் என்று கேட்டதற்கு - அந்த மாடியை சரபோஜி மகாராஜா கட்டினார். அங்கே கல்யாண மகால்,மங்களவாஸம் சேர்ந்தவர்க ளிருக்கிறாரென்று தெரிவித்தார். அந்த பெண்களெல்லாம் தாஸிகளாவென்று சிரஸ்தேதாரைப் பார்த்து கேட்டதற்கு -

தாஸிகளும், தோழிகளும் அநேக புருஷர்களுடன் ஸஹவாசஞ் செய்பவர்கள். அவர்களுக்கு மானமோ வெட்கமோ இல்லை.வியபிசாரம் தான்அவர்களுடைய தொழில். ஷெ பெண்கள் அப்படி அல்ல. மானத்துடன் (கௌரவத்துடன்) ஒரே புருஷனிடத்திலிருப்பவர். அந்தப் புருஷனுக்குப் பின்னர் பிழைத்திருக்கும் வரையில் வெளியில் போகாமல் புருஷனிறந்து போனபின்பு ஸ்த்ரீ புழங்க வேண்டிய முறைப்படி இருப்பார்களென்று சிரஸ்தேதார் தெரிவித்தார்.

ரெ....ஸர்கீலுக்கு - எனக்கு ஒருவருடைய கெடுதி செய்ய வேணுமென்று விருப்பமில்லை. நல்லது செய்வதில்தான் எனக்கு எண்ணம். ஆனால் கௌர்ண்மெண்ட் வரையில் ஜனங்கள் அநேகவிதக் குற்றங்களைச் செய்திருக்கிறார்கள். அதை பரிசோதித்து கௌர்ண்மெண்டுக்குச் சமாதானம் செய்வதற்காக நான் பரிசோதிக்க வேண்டியதாயிருக்கிறதென்றதற்கு -

ஸர்கேல் - தர்பாரின் நன்மைக்காக இப்பொழுது தாங்கள் இவ்வளவு பிரயாசப்படுகிறதில் நமக்கு மிகவும் சந்தோஷம். எப்படியும் தர்பாரின் நன்மை செய்ய வேணும். நீங்கள் நன்றாகப் பராமரித்து கௌர்ண்மெண்ட்டுக்கு தெரிவிக்க வேணுமென்று பிரார்த்திக்கிறேன் என்றார்கள்.

169. கௌனர்மெண்ட் - Government.
170.. தாஸ்தான் மகால் (பக்கம் 453)

ரெ.ஸா:- தோட்டம் நன்றாக இருக்கிறது. தோட்டத்தினால் என்ன உபயோகமென்று கேட்டதற்கு

சிரஸ்தேதார்:- மகாராஜா சாஹேப் இருக்கையில் மகாராஜா சாஹேப் - அவர்கள் சம்சாரங்களும் அங்கு விளையாடுவது வழக்கம். மகாராஜா சாஹேப் கைலாசவாசி ஆனபின்னர் ஒரு வருஷம் வரையில் பாயிசாஹேப்கள் வெளியே வருகிற வழக்கமில்லையாகையால் குழந்தைகள்மட்டும் தோட்டத்தில் வந்து விளையாடிக் கொண்டும் பாடிக்கொண்டும் சுற்றிக்கொண்டுமிருக்கிறார்கள் என்று தெரிவித்தார்.

ரா.மாப்பிள்ளை சாயேப்:- இன்னொரு தோட்டமிருக்கிறதென்றதற்கு அதைச் சாவகாசமாகப் பார்க்கிறேனென்று ரெஸிடெண்ட் சாஹேப் சொன்னார்.

திட்டியின் வாசல் - விஜய விலாஸம், அங்குள்ள குளம், கிருஷ்ணவிலாஸத்தின் குளம் பார்த்து இவையெல்லாம் நன்றாக விருக்கின்றன. இதற்குத் தண்ணீர் எங்கிருந்து வருகிறது. இதனால் என்ன பிரயோஜனமென்று ரெஸிடெண்ட் கேட்டதற்கு:-

மாப்பிள்ளை சாயேப்:- இக்குளங்களுக்குச் சிவகங்கையிலிருந்து ஜலம் வருகிறது. அதில் படகைவிட்டு, விளையாடுவது வழக்கமென்று சொன்னார்.
இதற்குள் மா.ஆவுசாப் காண்பதற்குத் தயாராக விருப்பதாக பாபேறாவ் வந்து தெரிவிக்க

13(6) உடனே ஒருதடையும் செய்யவில்லை.

மகாராஜா சாஹேப் இருக்கும்பொழுது எப்படி நடந்து கொண்டிருந்ததோ அப்படியே நடக்கிறது. சில பாயிசாயேப்கள் மாத்திரம் ஒருவருக்கொருவர் மனஸ்தாபத்தினால் தனியாக இருக்க வேணுமென்றார்கள். அதை ரெஸிடெண்ட் பார்பஸ் சாயேப்புக்குத் தெரிவித்து அவர்களை தனியாக வைத்திருக்கிறது என்று ஸர்கேல் பதிலளித்தார்.

ரெஸி:- மா.ஆவுசாப் அவர்களுக்கு வேறு பாயிசாப் வகையறாக்களைக் கண்டு அவாளவாள் அபிப்பிராயத்தை (எண்ணத்தை) நான் அறிந்து கொள்ளுகிறேன். தங்களுக்குள்ள இடைஞ்சல் வகையறாவைத் தெரிவித்தால் என்னால் கூடுமான உதவியைச் செய்கிறேன். நான் தங்களுடைய நன்மையைச் செய்வதற்கேதான் வந்திருக்கிறேன். தங்களுக்காக வேண்டியவைகளை எனக்குத் தெரிவிக்கலாமென்று மேற்சொன்ன அக்காவிடம் தெரிவித்தார். அந்த சால்சாப்புஷி அக்காவிற்குப் புரியவில்லையாகையால் ரா.மாப்பிள்ளை சாயேப் அவர்கள் அந்த சால்சாப்பை தெளிவாகச் சொல்ல வேணுமென்று மா.அவுசாப் விரும்பினதினால் சாயேப் தெளிவாகச் சொன்னார். இன்னும் புரியாத இடங்களில் ஷியார் நமக்குச் சொல்லிக் கொண்டிருந்தார்.

அதன்பிறகு மா.ஆவுசாப்-சி.ராஜாயீயை என்னிடமிருந்து தனியாக வைத்திருக்கிறாரென்று ஷி. அக்காமூலம் தெரிவித்ததற்கு

ரெஸி-சா- ரா.மாப்பிள்ளைசாயேப்பையும் ஸர்கேலையும் பார்த்து மா.ஆவுசாப் இப்படிச் சொல்வதின் காரணமென்ன என்று கேட்டார். அதற்கு-

ஸர்கேல்:- மகாராஜாவினுடைய காலமுதற்கொண்டே அவர்களெல்லாம் தனியாக இருக்கிறார்கள். ஆனால் நாம் ஒன்றும்.....ஏற்பாடு செய்யவில்லை. சி.ராஜாபாயியின் காரியஸ்தர் பெரிய அண்ணா இங்கே இருக்கிறார். அவரைக் கேட்கலாம்.

ரெஸிடெண்ட் பெரிய அண்ணாவைப் பார்த்துக் கேட்டதற்கு, பெரிய அண்ணா ஸர்கேல் சொல்வது சரிதான் என்று பதிலளித்தார்.

ரெ:- - மா. ஆவுசாப் அவர்களுக்கு - பாக்கிக் காரியங்களையெல்லாம் நான் விசாரிக்கிறேன். தங்களுக்குள்ள இடைஞ்சல்களையெல்லாம் சொல்லலாம் என்றார். அதற்கு ஆவுசாப் - சிரஸ்தேதாரும், ரெஸிடெண்டும் ஆங்கிலேயத்தில் பேசுவதைக் கேட்டு நடுவில் நடுவில் ஆங்கிலேயத்தில் பேசக் கூடாதென்றதற்கு

ரெஸி:- தெலுங்காகையால் காரியத்தைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேணுமாகையால் ஆங்கிலேயத்தில் பேசுகிறேன் என்றார்.

மா.ஆவுசாப்:- நமக்கு அநேக விதத்தில்
சிரமங்களிருக்கின்றனவென்று ஷி அக்காவின் மூலமாகப் பதிலளித்தார்.
ரெ:- தங்களுக்கிருக்கும் சிரமத்தை விபரமாகத் தெரிவித்தால் அதை நான் விசாரிக்கலாம் என்று ஷி அக்காவின் மூலம் தெரிவித்தார்.

மா.ஆவுசாப் - நமக்குள் ஒருவருக்கொருவருக்கு ஆகாமல் செய்து நாம் முக்கியம் என்றில்லாமல் ஏழைகளுக்கு ஒருபிடி அரிசி போடுகிற வழக்கம் பெரியதென்று கேட்பது என்ற நியாயமுமின்றி நம்முடைய நாட்டுப்பெண் வகையறா நமக்குக் கீழ்ப் படிந்து இராமல் காரியங்களையும் நடத்திக்கொண்டு, அவமானம் செய்திருக்கிறார்கள் என்று அக்காவின் மூலம் தெரிவித்தார்.

ரெ - முக்கியம் யார் - நீங்கள் எப்படி முக்கியம் ஆவீர்கள். கௌர்ண்ட்மெண்ட் யாரை முக்கியமென்கிறார்களோ அவர்களே முக்கியம் இன்னும் எல்லோரும் அவர் அவரைப் பொறுத்தவரையில் அவரவர் பெரியவர்தான். ஒருவருக்கொருவர் சேர்ந்து இருக்க வேணுமென்று நாம் சொல்லலாமா. சம்மதத்துடன் சேர்ந்து இருக்கிறவர்களிருக்கலாம். அச்சமயத்தில்.

காசிநாத:- முக்யமென்றால் வீட்டுக்காரியங்களில், தான் மூத்தவரானதினால் மற்றவர்கள் தனக்கு கீழ்ப்படிவது என்று மா.ஆவுசாப் அவர்களுடைய எண்ணமென்று ரெஸிடெண்டுக்குத் தெரிவித்தார்.
ரெஸி - ரா.மாப்பிள்ளை சாயேப்பைப் பார்த்து காசினாத் என்பவர் யார்? மா.ஆவுசாப் அவர்களின் காரியஸ்தர் என்று மாப்பிள்ளை தெரிவித்தார்.
ரெஸி - காசினாத் ஆவுசாயேப்புக்கெதிரில் போவாரா என்றதற்கு ஆமாம் போகிறவர் என்று மாப்பிள்ளை சாயேப் சொன்னார்.

ரெ - மேற்சொன்ன காசீனாதருக்கு நாளைக்காலையில் கச்சேரிக்கு வரவேணுமென்று ஸர்கேலுக்குச் சொன்னார்.

ரெ - மா.ஆவுசாப் அவர்களுக்குத் தங்களுக்கிருக்கும் இடைஞ்சல்களைத் தெளிவாகத் தெரிவித்தால் அதன் பரிகாரம் செய்யலாம்.தங்களுடன் உள்ளே இன்னும் யாரிருக்கின்றார்கள் என்று அக்காமூலம் கேட்டதற்கு
மா.ஆவு - நானும் சி.ராஜாபாயீ இருவருந்தானிருக்கிறோம் என்று அக்காவின் மூலம் தெரிவித்தார்.
ரெஸி - சி.ராஜபாயியைநான் பார்க்க விரும்புகிறேன் என்றதற்கு மா.ஆவுசாப் அதற்குச் சம்மதம் கொடுக்கவில்லை (இசையவில்லை)
மேலும் சொன்னதாவது
நீங்கள் எதையும் சரியாகச் சொல்லுகிறதில்லை நான் என்ன செய்வது என்று நான்போய் வருகிறேன் என்றதற்கு
மா.ஆவு- மூன்றா மாதமாய்ப் பட்டினியாயிருக்கிறேன் என்றதருக்கு
ரெ. எக்காரணத்திற்காக என்று கேட்டதற்கு
மா. ஆவு- இராஜ்யத்தின் வழி ஒன்றும் ஆகவில்லை என்றதற்கு
ரெ - இவ்விஷயத்தில் சீமையிலிருந்து வரும் உத்தரவுப்படி நடக்க வேணும். நீங்கள் பட்டினியாயிருந்து என்ன காரியம் செய்யமுடியும்..... தற்போது தங்களுக்கு ஏதாவது இடைஞ்சலிருந்தால் அதன் பிரகாரம் நான் செய்யலாமென்று ஷெ அக்காவின்மூலம் தெரிவித்தார்.
மா.ஆவு - நீங்கள் சாவகாசமாக வந்து விசாரித்தால் நமக்காக வேண்டிய காரியங்களையும் இடைஞ்சல்களையும் தங்களுக்குத் தெரிவிக்கலாம்.
ரெ - சரி. அப்படியே செய்கிறேன் என்று உத்திரவு பெற்றார்.
பின்பு ரெஸிடெண்ட் சாயேப் - ரா.மாப்பிள்ளை சாயேப் - ஸர்கேல் - சிரஸ்தேதார் வகையறா மா.ஊமாக்ஷிம்பா பாயி சாயேப் அவர்களைப் பார்ப்பதற்கு அவருடைய அரண்மனைக்குச் சென்றார்கள். மா.ஆவுசாப், ஏழுபாயிசாப்களைப் பார்ப்பதற்குப் போகும்பொழுது ஜகதள ராவுக்குப் பங்கிலிருந்து கூட அழைத்துப்போக வேணுமென்று அம்புபாயி அக்கா சர்கேலுக்குச் சொல்லி யனுப்பித்தார்.

அதற்குச்சரி பாயிசாப் அவர்கள் - கதவுக்கு மறைவாக உட்கார்ந்து ரெஸிடெண்ட் சாயேப் சரியாய் அக்காவின் மூலம் மரியாதையைத் தெரிவித்து - நீங்கள் சௌக்யமாயிருக்கிறீர்களா? தங்களுக்கு ஏதாவது இடைஞ்சல்களிருக்கின்றனவா தெரியப்படுத்த வேணுமென்று கேட்டதற்கு

பாயிசாப் அவர்கள் - பிரதி மரியாதையைச் தெரிவித்து நமக்கொரு இடைஞ்சலுமில்லை.நாம் சுகமாக இருக்கிறோம். தங்களுடைய தயவினால் நம்முடைய பரம்பரையின் இராஜ்யத்தைத் தாங்கள் ஸ்தாபனஞ் செய்யவேண்டும். இன்னும் நாம் நம்மை நம்பி இருக்கும் ஏழைகளைக் காப்பாற்ற வேணும். அதுதான், நம்முடைய மனதுக்கு மிகக் கவலையாயிருக்கிறது என்றார்.
ரெஸி - அதற்குக் கௌர்ண்மெண்டின்
வரும் உத்தரவின்படி ஆக வேண்டும். தங்களுக்கேதாவது இடைஞ்சல் அல்லது வருகிற போகிறவர்களுடைய இடைஞ்சல் இருந்தால் அதைத் தெரிவித்தால் நான் அதன் பரிகாரம் செய்வேன். இராஜ்யம் ஸ்தாபனம் செய்வது என்னுடைய கையிலிருக்குமானால் ஒரு க்ஷணத்தில் செய்வேன். அவ்வதிகாரம் எனக்கில்லை. இதே மாதிரி ஏழு எட்டு

இராஜ்யங்கள்[171] காலி ஆயிருக்கின்றன. அவை எல்லாம் சின்னவை. 60 இலக்ஷம் ரூபாய் வரும்படியுள்ள தங்கள் இராஜ்யம் அநேக இராஜ்யங்களின் விவஸ்தை கௌர்ண்மெண்ட் செய்ய வேண்டியிருக்கிறது. ஆதலால் கொஞ்சம் தாமதம் ஆகிறது. தவிர வேறு ஒன்றுமில்லை நீங்கள் வெறும் துக்கப்பட வேண்டியதில்லை என்றார். அதற்கு

பாயி சாப் - அவர்கள் நமக்கு வரும்போகும் ஜனங்களின் இடைஞ்சலாவது அல்லது வேறெந்தவித இடைஞ்சலுமில்லை.

ரெ - சரி. மிகவும் சந்தோஷம். நான் அரண்மனையைப் பார்த்துவிட்டுப் போய் வருகிறேன் என்று தெரிவித்து அரண்மனையைச் சுற்றிப் பார்த்துவிட்டு உத்திரவு வாங்கினார்.

அதன்மேல்

ரெ.சாயேப் - ஏழுபாயிசாப் அவர்களைக் காண வருகிறார்களென்று சர்கேல் சொல்லி அனுப்பினதற்கு ஷை ஏழுபாயிசாப்கள் நாம் மாமியாரின்[172] கைக்கீழுள்ளவர்கள். அவர்களில்லாமல் நாம் ரெஸிடெண்டைப் பார்க்க மாட்டோமென்றார்கள். அச்சங்கதியை சர்கேல் ரெஸிடெண்டுக்குத் தெரிவித்ததற்கு

ரெ - அது முடியாது நான் பார்த்துதான் போவேனென்று ஸர்கில் மூலம் சொல்லி யனுப்பினார். பின்பு எட்டு பாயிசாப்களைப் பார்க்கப் போனார். அவகளுக்கு மரியாதையைத் தெரிவித்து நீங்கள் சௌக்யமா என்று பராமரித்து தங்களுக்கு ஏதாவது இடைஞ்சல் இருக்கிறதா வென்று ஜான்ஹீவதி அக்காவின் மூலம் கேட்டார்.

ரெ - நீங்கள் எத்தனைப்பேர் பாயிசாப் உள்ளேஇருக்கிறீர்கள். உங்களுடைய பெயர்களென்ன? நீங்கள் எட்டுப்பேர் தானா? உங்களைத் தவிர்த்து இன்னும் பாயிசாப் இருக்கிறார்களா? நீங்கள் 8 பேர்களில் யார் மூத்தவர்? எல்லாரைக்காட்டிலும் இளையவர் யார் என்று விசாரித்ததற்கு -

எட்டு பாயிசாப்கள் - நாமெட்டு பேர்களிருக்கிறோம்.

நம்முடைய பெயர்கள்:

மா.சுந்தராயீபாயி சாயேப், மா.தராயீபாயி சாயேப், மா.பராயீபாயி சாயேப், மா.பங்காயி சாயேப், மா.சம்பராயீ பாயி சாயேப், மா.ஜமராயீபாயி சாயேப், மா.கௌராயீபாய் சாப், மா.லஸராயீ பாயி சாப்

நம்மைத்தவிர காமாக்ஷி அம்பாபாயிசாப் கூட எட்டுபேரிருக்கிறார்கள். எங்களில் மூத்தவர் 20 வயதுள்ள சுந்தராயீபாய் சாப் - இளையவர் 12 வயதுள்ள கமராயீ அமணி என்று தெரிவித்தார்.

ரெ - நீங்கள் ஏன் தனியாக இருக்கிறீர்கள்?

எட்டு பாயிசாப்கள் - நாம் இராஜா தைவகதியடைந்து மூன்றுமாதம் வரையில் ஒன்றாகத்தா னிருந்தோம். பின்பு எங்களுக்குள் ஒருவருக்கொருவர் மனஸ்தாபத்தினால் காரியஸ்தர் மூலம் ரெஸிடெண்டுக்குத் தெரிவித்து நாம் தனியாக இருக்கிறோம், என்றார்கள்.

ரெ - மனஸ்தாபத்திற்கு காரணம் யாது? உங்களுடைய மாமியாருடனும் இதர பாயிசாப்களுடனும் சேர்ந்திருக்க தங்களுக்கு எண்ணமிருக்கிறதோ? இல்லையோ?

---

171. ஏழெட்டுராஜ்யங்கள்; சதாரா, ஜான்சி, சம்பல்பூர், ஆர்க்காடு பீரார் முதலியவற்றை நினைந்து கூறியது.

172. மாமியார் என்றது இரண்டாம் சிவாஜியின் தாய் அஹல்யா பாயியை.

அதற்குப்பதில் - மாமியார் - இதர பாயிசாப்களுடன் சேர்ந்திருக்க நமக்கு மனதில்லை. நாம் தனியாக இருப்பதற்குத்தான் நமக்குச்சம்மதம். நமக்குத் தெரியாமல் நாம் கொடுத்த மாதிரி ஒருபிராது கௌர்ண்மெண்டுக்குப் போய் வந்தது. அவ்விஷயத்தில் நம்முடைய காரியஸ்தர்கள் நம்மைக் கேட்டதில் நமக்குத் தெரியாதென்று சொன்னோம். அதனால் நமக்குள் மனஸ்தாபமேற்பட்டு நாம் இராஜாவின் பெண்டாட்டிகளல்ல என்று ஏழுபாயிசாப்கள் எழுதிக் கொடுக்கும்படி கேட்டார்கள். மா.ஆவுசாப் நாம் அவர்களுடைய நாட்டுப்பெண்ணல்ல என்றார்கள். இதுதான் மனஸ்தாபத்துக்குக் காரணம்.

ரெ - அந்தப் பிராதுகள் எங்கிருக்கிறது. அதில் என்ன எழுதியிருக்கிறது.

பதில் - அந்தப்பிராது ஏழுபேர்களிடமிருக்கிறது. அதில் என்ன எழுதியிருக்கிறதோ அது நமக்குத் தெரியாது.

ரெ – பிராது செய்த சமாச்சாரம் தங்களுக்கு எப்படித் தெரியும். அதற்கு காரியஸ்தர்கள் பிராது செய்தது உங்களுக்குத் தெரியுமா? என்று கேட்ட பின்னர் நமக்குத் தெரியுமென்று எட்டுபாயி சாப் சொன்னார்கள்.

ரெ - இன்னும் தங்களுக்கு யாராலாவது ஏதாவது இடைஞ்சலிருக்கிறதா? நான் போய் வரட்டுமா?

பதில்:- நமக்கு யாதொரு இடைஞ்சலுமில்லை. நீங்கள் போய் வரலாம். இராஜ்யத்தை ஸ்தாபித்து ஜனங்களை ரக்ஷிக்க வேணும்.

ரெ - பாயிசாப் அவர்களைப் பார்த்து எதிரிலிருக்கும் பெண்பிள்ளைகள் யார் என்று கேட்டதற்கு அவர்கள் பாயிசாப்களின் வேலைக்காரிகள் அக்கா கூட்டம் என்று பதிலளித்தார்.

ரெ - அக்கா கூட்டம் என்றாலென்ன என்றதற்கு; அவர்கள் ஸர்காரின் பரம்பரையின் குழந்தைகள்.

ரெ - அவர்களுக்கு சம்பளம் எவ்வளவு?

பதில் - மூன்று ரூபாய்-முதல்-7,8 ரூ வரையில்

ரெ - சிரஸ்தேதாரைப் பார்த்து மகாராஜாவிற்கு எத்தனை சம்சாரங்கள் (தாரங்கள்) என்றுகேட்டார்.

அதற்கு பதில் - 20 பேர்களில் - சொந்தக்காரர்களின் பெண்கள் 18; சரபோஜி மகாராஜாவின் மூத்தப் பெண்ணின் பெண் சௌ.சைதம்பாயி சாப் பட்டராணி - மூன்றாவது பெண்ணின் பெண் காமாக்ஷி அம்பா பாயிசாப் ஆக 20 பேர்கள். சைதம்பாபாயி சாப் அவர்களுக்கு 2 பெண்கள். அவர்களின் மூத்த பெண்ணை ரா.மாப்பிள்ளை சாயேப் அவர்களுக்குக் கொடுத்தார்கள். அரண்மனை சைதம்பாயிசாப் அவர்களுடையது தான் என்று சிரஸ்தேதார் பதிலளித்தார்.

பிறகு எழுபாயிசாப்கள் ரெசிடெண்டு வரலாமென்று பாபேராவ் அவர்கள் மூலம் சொல்லி யனுப்பித்தார்கள்.

ரெ - ரா. மாப்பிள்ளை சாயேப் வகையறாவும் ஜகதளராவ் இவர்களுடன் கூட அங்குச் சென்று மரியாதை செய்து, நீங்கள் சௌக்யமாயிருக்கிறீர்களா? தங்களுக்கிருக்கும் இடைஞ்சல்கள் இருப்பதைத் தெரிவிக்கவும் என்று யோகாம்பா அக்காவின் மூலம் தெரிவித்தார்.

7 பாயி சாப் :- பிரதி மரியாதையைத் தெரிவித்து தங்களுடைய குழந்தைகள் சௌக்யமாயிருக்கிறார்களா வென்று விசாரித்து, நாங்கள் தங்களுடைய குழந்தைகள்; நீங்கள் நம்முடைய நன்மையைச் செய்ய வேணும் என்றார்கள்.

ரெ - தங்களுக்கிருக்கும் இடைஞ்சலை விபரமாகத் தெரிவித்தால் தங்களுக்கு உதவி செய்கிறேன். தங்களுடைய க்ஷேமத்திற்காக நான் வந்திருக்கிறேன் என்றார்.

7 பாயிசாப்கள்:- நாம் மாமியாரின் கீழ்படிந்திருப்பவர்களாகையால் தங்களை நாம் பார்த்துப் பேச மாட்டோம். ஆனால் நீங்கள் பார்த்துத்தான் ஆகவேண்டுமென்றதினால் தகராறு செய்து பார்க்கிறோம். ஆனால் மாமியாரன்னியில் நம்முடைய சிரமங்களை தங்களுக்குத் தெரிவிக்க முடியாது.

ரெ - நான் தங்களைக் கேட்கிறேன். தங்களுக்கிருக்கும் சிரமங்களை நீங்களே தெரிவிக்க வேணும். ஆனால் மாமியாரைக் கேட்க வேணுமென்று சொல்லக்கூடாது.

7 பாயிசாப்கள்:-மகாராஜா கைலாஸவாசி ஆன பின்பு நமக்கு அநேகவிதமாக சிரமங்கள் ஏற்பட்டிருக்கின்றன. நீங்கள் சாவகாசமாய் வந்தால் அதை நம்முடைய மாமியாரையும் வைத்துக்கொண்டு சொல்லலாம்.

ரெ - இப்பொழுதே சாவகாசமா யிருக்கிறது. சொல்லலாம். இதைக்காட்டிலும் என்ன சாவகாசம். தங்கள் வெகுசிரமங்களிருக்கின்றன என்கிறீர்கள். ஆனால் சொல்லமாட்டே னென்கிறீர்கள். அதைத் தெரிவித்தால் அதில் பரிகாரம் செய்வேன்.

7 பாயிசாப்கள்:- நம்முடைய நகைகள் வகையறாக்களை எடுத்துக்கொண்டு நமக்கு அநேகவிதமான சிரமங்களைக் கொடுத்தார்கள்.

ரெ - நகைகளை - யார் - எப்பொழுது எடுத்துக்கொண்டார்கள்? உங்களுக்கு என்ன சிரமத்தை கொடுத்தார்? இதையெல்லாம் பார்பஸ் சாஹேப் அவர்களுக்குத் தெரிவிக்க வில்லையா?

7 பாயிசாப்கள்:- மகாராஜா கைலாஸவாசி ஆன மூன்றாம்நாள் நம்முடைய காரியஸ்தர் நகைகளை எடுத்துக் கொண்டு போனார். இந்த சங்கதியை நீங்கள் கேட்கிற மாதிரி பார்பஸ்சாயேப் நம்மைக் கேட்கவுமில்லை. நாம் சொல்லவுமில்லை.

ரெ -ரா.மாப்பிள்ளைக்கு பாயிசாப் அவர்களுடைய காரியஸ்தர் யார்?மா. அவாயீசாஹேப் ...அவர்களுடைய காரியஸ்தர்.

ரெ - ஏழுபாயிசாப்களுக்கு நீங்கள் இப்பொழுது எத்தனை பேர்களிருக்கின்றீர். உங்களில் மூத்தவர் யார்? இளையவர் யார்?

ஏழு பாய்சாப்கள் - நாம் ஏழுபாய் சாப்கள் - எங்களில் ஓருத்தருக்கொருத்தர் தாயார். படுதாவைப் பிடித்திருக்கிற அக்காகூட்டம் இருவர். இத்தனைப் பேர்களிருக்கிறோம். எங்களில் மூத்தவர் 20 வயது சமராயீசாப் - இளையவர் 12 வயதுள்ள சுந்தராயி சாப்.

13 (6) ரெ - சிறுவயதான சுந்தராபாயி சாயேபுக்கு நான் கேட்கிறேன். அதற்கு நீங்கள் பதில் சொல்லுங்கள். நீங்கள் சுகமாக இருக்கிறீர்களா? தங்களுக்கு மாமியாரிடமிருக்க சம்மதமா?

சுந்தராயீசாப் - நான் சுகமாக இருக்கிறேன். மாமியாரிடமிருக்க எனக்கு சம்மதம்.

ரெ - சுந்தராயீ சாப் - அவர்களுக்கு - சமராயீசாப் - மாப்பிள்ளை சாஹேப் அவர்கள் பேசச் சொல்லிக் கொடுத்ததைக் கேட்டு நான் யாரைக் கேட்கிறேனோ அவர்கள்தான் பேசவேணும். மற்றவர்கள் சொல்லிக் கொடுக்கக்கூடாது என்றார்.

அதற்கு சமராயீசாப்பும், மாப்பிள்ளை சாயேப்பும் அது சின்னக்குழந்தை - அதற்கென்ன தெரியும்.

ரெ - சின்னக் குழந்தையாயிருந்தாலும் நான் யாரைக் கேட்கிறேனோ அவர்களுடைய வாயினாலே பதிலளிக்க வேணுமென்றார்.

ரெ - எழுபாயி சாப்களுக்கு - நீங்கள் 7 பேரா - அல்லது இன்னும் பாயிசாப் என்று வேறு இருக்கிறார்களா?

7 பாயிசாப்கள் - நம்மைத்தவிர இன்னும் காமாக்ஷிபாயி சாப் இன்னும் 8 பேர்களிருக்கிறார்கள். எல்லோரும் சேர்ந்து 16 பாயிசாப்கள் இருக்கிறோம்.

ரெ - அந்த 8 பாயிசாப்கள் ஏன் உங்களுடன் கூட சேர்ந்தில்லை.

7 பாயிசாப்கள் :- எங்களை விட்டுவிட்டுத் தனியாக வசிக்கிறார்கள்.

ரெ - எக்காரணத்தினால்? மனஸ்தாபத்தினாலா? அவர்கள் உங்களுடன் சேர்ந்து இருப்பதற்கு உங்களுக்குச் சம்மதமா?

7 பாயிசாப்கள் - அவர்கள் நாமறியாமல் என்னமோ கிளம்பிப் போய் விட்டார்கள். நம்முடைய மாமியாரின் உத்திரவின்பேரில் அவர்களுடன் சேர்ந்திருப்பதற்கு நமக்குச் சம்மதம்தான்.

ரெ - நான் சொன்னால் நீங்கள் சேர்ந்திருக்க மாட்டீர்களா?

7 பாயிசாப்கள் - மாமியாரின் உத்திரவின்றி நாம் சேர்த்துக்கொள்ள மாட்டோம். ஆனால் தாங்கள் சொல்லுவதால் சேர்ந்து இருக்கிறோம்.

ரெ - ஆனால் நான் போய் வருகிறேன். நீங்கள் எந்த காரியத்தையும் விரிவாகவும், நிஜமாகவும் சொல்லுகிறதில்லை.

7 பாயிசாப்கள் - தாங்கள் சாவகாசமாக ஒரு முறை வந்தால் நம்முடைய மாமியாரையும் வைத்துக்கொண்டு நம்முடைய கஷ்டங்களையெல்லாம் தங்களுக்குத் தெரிவிப்போம். தாங்கள் போய்வரலா மென்றார்கள்.

ரெ - சரி. அப்படியே வருகிறேனென்று உத்திரவு பெற்றார்.

ரெஸிடெண்டு அவ்விடமிருந்து கிளம்பி கிருஷ்ண விலாஸத்திற்கு வந்து மங்களவாஸத்தின் ஸ்திரிகளையும் ஆண்குழந்தைகளையும் பார்த்து, இக்குழந்தைகள் மகாராஜா அவர்களுடையதா? இவர்களுக்கெல்லாம் தாயாரிருக்கிறார்களா?

குழந்தைகள் சௌக்யமாயிருக்கிறார்களென்று ரா. மாப்பிள்ளை சாயேபுக்குப் பார்த்து சொன்னதற்கு

இக்குழந்தைகள் மகாராஜாவர்களுடையன. மங்களவாஸத்தியன - இவர்களில் மூன்று பேருக்குத் தாயாரில்லை. மகாராஜாவின் பெரிய சம்சாரம் தங்கள் பொறுப்பிலிருக்கிறது. நீங்களும் குழந்தைக் குட்டிகளுள்ளவர்.

ரெ - மங்களவாஸத்தில் எத்தனை பேர்களிருக்கிறார்கள். அவர்களை நான் பார்க்கலாமா? என்று ரெஸிடெண்டு சாஹேப் சிரஸ்தேதாருக்கும், சர்கேலுக்கும் பார்த்துக் கேட்டார்.

மங்களவாஸத்தார் 42 பேர்கள். ஹுஜூர் மஹாலின் என்றும், (ஜன்) அசல் மகாலின் என்றும் இருபாகமாக இருக்கிறார்கள். அவர்களை நன்றாகப் பார்க்கலாமென்றார்.

ரெ - மங்கள வாஸத்திய இருபாகஸ்தார்களையும் நான்தனித்தனியே, பார்க்கிறேனென்றார்.

ரெஸிடெண்ட் முதலில் அசல் (ஜன்) மகாலுக்குப் போய் அவ்விடமுள்ள அம்மாமார் பாயிமார் அவர்களுக்குத் தன்னுடைய மரியாதையைத் தெரிவித்து நீங்கள் சௌக்யமா? உங்களுக்கு ஏதாவது இடைஞ்சல் இருக்கிறதா? உங்களுடைய நகைகள் உங்களிடமிருக்கிறதா, அல்லது யாராவது எடுத்துக் கொண்டு போனார்களா? என்று யோகம்பா மூலம் கேட்டார்.

ஜன் மகாலின் அம்மாமார் பாயிமார் எல்லோரும் பிரதிமரியாதையைச் செய்து, நமக்கு யாதொரு சிரமமுமில்லை. நாம் சுகமாகத்தானிருக்கிறோம். நம்முடைய நகைகள் சிலவை நம்மிடமிருக்கிறன்றன. யாரும் கொண்டு போகவில்லை. இப்பவும் கும்பினியார் மகாராஜா இருக்கும்பொழுது எப்படி நடத்தினார்களோ அப்படியே, தானம் தருமத்திற்குக் கொடுத்து நடத்த வேணும். இராஜ்யத்தை ஸ்தாபிக்க வேணும்.

ரெ - இராஜ்யத்தின் விஷயம் சீமைக்குப் போயிருக்கிறது. அவ்விடமிருந்து வருகிற உத்திரவின்படி நடக்க வேணும். தங்களுக்கு ஏதாவது பிராது செய்யும்படியான எண்ணமிருக்கிறதா? அல்லது எனக்குச் சொல்லும்படியாக ஏதாவதிருந்தால் சொல்லலாம். மேற்சொன்ன பாயிமார் அம்மாமார் நமக்கு எவ்விதமான பிராது செய்யக் காரணமில்லை. எப்படியும் இராஜ்யத்தை ஸ்தாபிக்க வேணும்.

ரெ - சரி. நான் போய் வருகிறேனென்று உத்திரவு பெற்றார். வந்து தெரிவிக்கிறேன் என்று ஸர்கேல் எழுந்து போனார். அப்பொழுது

ரெ - ரா. மாப்பிள்ளைசாயேப்பையும் சிரஸ்தேதாரையும் கண்டு மகாராஜா சாஹேப் கைலாஸவாசி ஆனபின்னர் நடந்த விபரங்கள் என்ன?

ரா.மாப்பிள்ளையும் சிரஸ்தேதாரும் :-
மகாராஜா சாஹேப் தைவகதியடைந்த தினம் பார்பஸ் சாஹேப் வந்து செய்த காரியங்களையும் பின்பு மிஸ்தர் சேரிசாஹேப் வந்த நாட்கள் வரையிலும், பார்பஸ் சாஹேப் செய்த காரியங்களையெல்லாம் ஒன்றும் பாக்கியில்லாமல் தெரிவித்தார்கள்.

சௌ. ராஜாயீ பார்ப்பதற்குச் சித்தமாக இருக்கிறாரென்று ஸர்கேல் வந்து தெரிவித்தவுடன்.

ரெ - ரா. மாப்பிள்ளை சாஹேப் - சிரஸ்தேதார் - ஸர்கேல் வகையறாவுடன் "குரமஞ்ச்யாவின்" மாடியின் மேல் சென்று சௌ.சி.ராஜாயீ அவர்களுக்கு மரியாதை செய்து, நீங்கள் சௌக்கியமாக யிருக்கிறீர்களா என்று கதவுக்கு வெளியே யிருந்து கேட்டார்.

அதற்கு அவர்கள் ப்ரதி மரியாதையை செய்து, தங்களுடைய தயவினால் நான் சௌக்யமாயிருக்கிறேனென்றார்.

ரெ - சிரஸ்தேதாருக்கு - சி.சௌ.ராஜாயீ அவர்களுக்கு வயிற்றுத் தொந்திரவு எப்படியிருக்கிறது.

டாக்டர் வகையறா ஏதாவது சிகித்சை செய்யவில்லையா? பிள்ளை குட்டி ஏதாவதுண்டா? சௌ.சி. ராஜாயியும் சி. ராஜாபாயி இவ்விருவரும் சொந்தத் தங்கைகள் தானா என்றதற்கு

13 (6) சிரஸ்தேதார் :- மகாராஜா சாயேப்-அநேக வைத்தியர்களுடைய native இனானி சிகித்ஸையையும் செய்யச் சொன்னார். அதில் அந்த உபத்திரவம் தீரவில்லை . அப்படியே தானிருக்கிறது. அவர்களுக்கு முதலில் ஓர் ஆண்குழந்தை பிறந்து இறந்துவிட்டது.இரண்டாம் தடவை கர்ப்பம் என்றுதான் இவ்வுபத்திரவம் ஏற்பட்டது. இப்பொழுது உபசமனம் (சாந்தி) மாத்திரம் தான் செய்து வருகிறது. சி.சௌ.ராஜாயியும், சி.ராஜாபாயியும் இருவரும் சொந்தத்தங்கச்சிகள் தான் என்ற பின்னர்.

ரெ - இளைய சகோதரியும் இவர்களிடமிருக்கலாமே.

சிரஸ்தேதார் :- அந்தக் குழந்தை இங்குதானிருந்தது. தற்போது மிகவும் புகாரா ஆனதால் இங்கு வராமல் நாம்தான் தடுத்தோம் என்றார்.

சிரஸ்தேதார் :- சி.ராஜாயீ ........ பெரிய அண்ணா என்றதும் ......... பெரிய அண்ணா அவர்கள் .......... மாதம் குழந்தையாயிருக்கும் பொழுது அவர்களுடைய தாயார் தைவகதியையடைந்தார்கள். அப்பொழுது மகாராஜா அந்தக்குழந்தையை நான் ஒப்புக்கொள்ள வேண்டுமென்றார்கள். அதற்கு அப்பெண்ணின் கலியாணமாகும் வரையில் அக்குழந்தையைக் காப்பாற்றுகிற விசாரத்தை நான் ஒப்புக்கொள்கிறேனென்று நான்

மகாராஜாவுக்குத் தெரிவித்தேன். இக்காரியத்தை ரெஸிடெண்டுக்குத் தெரிவிக்க வேணுமென்று சொன்னார். ரா.மாப்பிள்ளைசாயேப் - ரெஸிடெண்டைப் பார்த்து பெரிய அண்ணா காரியஸ்தர் பாத்யஸ்தர் செ.சி. ராஜாயீக்கு என்று சொன்னார். அதன் விபரத்தை ரெஸிடெண்டுக்கு சிரஸ்தேதார் தெரிவித்தார்.

சௌ.சி. ராஜாயீ அவர்கள் ரெஸிடெண்டைப் பார்த்து எனக்கு தாய் தந்தை இருவருமில்லை. நாம் இரு சகோதரிகளும், தங்களுடைய குழந்தைகள் இராஜ்யத்தின் க்ஷேமகரமான விபரத்தை (சங்கதி) நீங்கள் நமக்குச் சொல்ல வேணுமென்று மிஸ்தர் பார்பஸ் சாஹேப்புக்கு நான் சொன்னேன். அப்பொழுது:- அது சரி - அப்பேர்ப்பட்ட ஸந்தோஷகர சங்கதியை முதலில் தங்களுக்கு வந்து தெரிவிப்பேன். நீங்கள் என்னுடைய குழந்தைகள்தான் என்று சொல்லியிருந்தார். இப்பொழுது அவரிடத்தில் நீங்கள் வந்திருக்கிறீர்களாகையால் நீங்களும் அவுரைப் போலவே நம்மை அபிமானத்துடன் நடத்தி இராஜ்யத்தின் க்ஷேமமும் செய்யவேணும்.

13(6) கௌர்ண்மெண்டார்கள் செய்வது நமக்கு நன்மையாகத்தானிருக்கும். அவர்களைத் தவிர மற்றவர்கள் நமக்கு ஸாம்ராஜ்யப் பட்டம் கொடுத்தாலும் தேவையில்லை. அதற்கு,

ரெ - பார்பஸ் சாயேப் இடத்திலேயே நானிருக்கிறேன். இராஜ்யபார விஷயத்தைப் பற்றி பார்பஸ் சாஹேப் சீமைக்கு எழுதி யிருக்கிறார். இன்னும் என்னை நியமித்து கௌர்ண்மெண்டின் மேல் பிராது செய்ய உங்களுக்கு அபிப்ராயமிருக்கிறதா? இல்லையா என்றதற்கு.

சௌ.சி. ராஜாயீ.:-கௌர்ண்மெண்ட்டார் நமக்கு நடத்துகிறவர்கள் பேரில் பிராது செய்வதினால் நமக்கு எப்பொழுதும் நல்லதன்று.

ரெ - உடனே போய் வருகிறேனென்று உத்திரவு பெற்றார். ரெஸிடெண்ட் அரண்மனையைச் சுற்றிப் பார்த்து மிகவும் நன்றாகவிருக்கிறது. இந்தவேலைப்பாட்டை யார் செய்வித்தது என்க,

மகாராஜா சாஹேப் அவர்களின் உத்தரவின்படி சர்கேல் அவர்கள் செய்வித்தார் என்று ரா. மாப்பிள்ளை சாஹேப் தெரிவித்தார்.

ரெ - இந்த வேலைக்கு எத்தனை ரூபாய் செலவாயிருக்கும் என்றதற்கு

.........கிரமாக வேலை நடந்தது.................ரூ.2000 இருக்கலாம்...........

ரெஸி- மறுபடியும் ரா. மாப்பிள்ளை சாயேப் அரண்மனைக்கு ......பார்க்கையில் ....சில பொம்மைகளைப் பார்த்து இவை மிகவும் அழகாக இருக்கின்றன. அவைகள் எதனால் செய்தவைகள் என்றுகேட்க.

ரா. மாப்பிள்ளை சாயேப்:- அவை நெட்டியினால் இவ்வூர் ......செய்யப்பட்டவைகள்..........என்று தெரிவித்தார்.

ரெ - மா. பாயிசாப் அவர்களின் காரியஸ்தர் பாபேராவுக்கு பாயிசாப்களின் நகைகள் எல்லாம் கணக்குகளுடன் தங்களிடமிருக்கிறதா என்று சிரஸ்தேதார் மூலம் விசாரித்தார். அதற்கு

பாபேராவ்:- நகைகளெல்லாம் கணக்குகளுடன் என்னிடம் ஹாஜராக இருக்கின்றன. இப்பொழுது பார்க்க விரும்பினால் பார்க்கலாமென்றதற்கு

ரெ:- இப்பொழுது தேவையில்லை. ஸாவகாசமாகப் பார்க்கிறேன்.

ரெஸிடெண்ட் - ரா. மாப்பிள்ளை சாயேப்பைப் பார்த்து, இரண்டாவது மகாலுக்குப் போய் வருகிறேன் என்று சொல்லி உத்திரவு பெற்றுக்கொண்டு புறப்பட்டுப் போனார்.

## முட்டை எண்- 158C

*1821 சரபோஜி காசி யாத்திரை*[173]

*1. 1755*
*அபராதம் - வகையில் வசூல்*

*(1) இராயமுண்டான் பட்டியின் குடியானவன் பலபத்திர பட்டிக்காட்டினுடைய காவல்காரனைத் தள்ளினதால் அபராதம் தஞ்சாவூர் சக். 3-1 பணம்.*

*(2) 1755*
*சாத்தனூர் அணைக்கட்டைக் கட்டுவதற்கு தளவாடம் வாங்கினது சக்.84-4 3/4 பணம்.*

*(3) 1755*
*டாணா - மஹாவில் - சக்.27—4 3/4*

*9.1754*
*(1) அமரசிங்கு போஸலே அவர்கள் பிறந்த நாள் வைசாக கிருஷ்ண பக்ஷம் தசமி*[174]

*(2) 1754*
*தருமசிலவு - சேதுபாவா*[175] *அவர்களுக்கு மாதமொன்றுக்கு சக்.120 வீதம் கொடுக்கிறது.*

*(3) 1754*
*மேஜரிடமுள்ள தரகாளி வெங்கடாசலத்திற்குப் பல்லக்குக்கு சாமான்கள் வாங்குவதற்கு சக். 150 கொடுக்கிறது.*

*(4) 1754*
*அணைக்கரைக்குத் தாம்புகயறு வாங்குவதற்கு சக்.813-6 பணம்.*

---

173. சரபோஜியின் காசி யாத்திரை (பக்கம் 98-133)

174. வைசாகம்-வைகாசி; கிருஷ்ணபக்ஷம்-தேய்பிறை; தசமி-பத்தாவது நாள்; 16-5-1754 அமர்சிங்கு பிறந்த நாள்

175. சேதுபாவா சுவாமிகள்-சமர்த்தராமதாஸருடைய சீடர்களில் ஒருவர். இவர் மடம் தஞ்சையிலிருந்தது. (பக்கம் 439)

*(5) 1754*

*கூடலூரின் பாதரிக்கு உபசரிப்பு - மிஸ்தர் கரக்கைக் காட்டிலும் இளையவரான பாதிரியானவர்திவிகோட்டையின்[176] துரையைஅழைத்துக்கொண்டுசெல்லுகையில் வழியில் உலுப்பைகளைக் கொடுத்து விசாரிக்கிறதென்று பாலாஜி பண்டிதரின் உத்திரவுப்படி உலுப்பைகளைக் கொடுக்கிறது.*

*(6) 1754*

*பிள்ளையார் சதுர்த்திக்காக வேகம்பூர்சந்தனக்கட்டையைகும்பகோணத்தின் சுபேதாரிடம் வாங்கிக் கொடுக்கப்பட்டது. சந்தனக் கட்டை[177] சேர் -29 3/4 -4 1/2 டாங்க்.*

*ஒரு பணத்திற்குச் சேர் 1- டாங்க் 9 வீதம் சக்.4 -4 1/2 பணம்.*

*(7) 1754*

*காவேரி அரசலாறு கொள்ளிடம் இம்மூன்று ஆறுகளுக்கும் படகு தயார் செய்வதற்கு சிலவு - சக்.189 - 9 13/16 பணம்.*

*(8) 1754*

*சங்கராசார்யருக்குச் சக்.66-4, இராம பண்டிதருக்குச் சக்.25-3 1/16, மகாமகம்[178] யாத்திரிகர்களுக்கு சக். 233-3 1/2*

*(9) 1754*

*ஜீவூதா நாயக்கர் மூலம் 100க்கு மூன்று வட்டிவீதம் கடன் வரவு சக்.1500.*

*(10) 1754*

*ரா. மஹாராஜா[179] சாஹேப் அவர்களுடைய பிறந்ததினம் ஆஷாட மீ கிருஷ்ணபக்ஷம் பாட்டிமைக்கு[180] சிலவு -56-2 15/16.*

*(11) 1754*

*மா.உமாபாயி சாஹேப்[181] அவர்களின் தெவசம் ஜேஷ்டமீ கிருஷ்ண பக்ஷ சதுர்தசி[182] தினம் சிலவு சக்.301-2 7/16*

---

176. தீவிகோட்டை-தீவுக்கோட்டை-தேவிக்கோட்டை- கொள்ளிடம் கடலில் கலக்குமிடத்திலுள்ள ஒரு தீவு அதனை ஆங்கிலேயர் 1749இல் கைப்பற்றினர்.

177. சந்தனக்கட்டை-கணக்கு பார்க்கும் பொழுதே தவறு என்று தெரியவரும்

178. பன்னிரண்டாண்டு கட்கொருமுறை கும்பகோணத்தில் மாசிமகத்தில் நடைபெறும் பெரிய விழா.

179. மஹாராஜா என்றது பிரதாப சிங்கரை.

180. பாட்டிமை-முதல்திதி; ஆஷாடம்-ஆடி; கிருஷ்ணபக்ஷம்-தேய்பிறை (5-7-1754)

181. தஞ்சையைக் கைப்பற்றிய ஏகோஜியின் தாய்க்கு உமாபாயி என்று பெயருண்டு (போ.வ.ச.பக். 8); இவரே, துக்காபாயி என்றும் கூறப்பெறுவர். இங்குக் கண்ட உமாபாயி யார் என்று கூறமுடியவில்லை.

182. ஜேஷ்டம்-ஆனிமாதம்; சதுர்த்தசி-பதினான்காம் நாள் (19-6-1754)

*(12) 1754*
*ஆஷாட கிருஷ்ண அஷ்டமி[183] தினம் - சௌ.அஹில்யாபாயி சாஹேப்[184] அவர்களுடைய தெவசத்திற்குச் சிலவு சக்.15-2 11/16*

*(13) 1754*
*ஆஷாட கிருஷ்ண நவமி தினம்[185] பாவாசாஹேப்[186] அவர்களுடைய தெவசத்திற்குச் சிலவு சக்.14-5 3/4.*

*(14) 1754*
*ஆஷாட கிருஷ்ண ஏகாதசி[187] தினம் கைலாஸவாசி மா.சுந்தராபாய்[188] அவர்களுடைய தெவசம் சக்.8-1 7/8 சிராவண சுக்ல பக்ஷம் சதுர்த்தி[189] தினம் கைவாசி துளஜா மகாராஜா[190] சாஹேப் அவர்களுடையதும்,சௌ.மா.ராமகுமராம்பாயி[191] சாஹேப் அவர்களுடையவும் தெவசத்திற்குச் சிலவு சக்.394-6.*

*(15) 1754*
*நவாப்[192] மஹமத் அலிகான் அவர்கள் ஸ்ரீமந்த் ரா.சாஹேப்[193] அவர்களுக்குக் கொடுத்த யானை ஒன்று கூடலூர் தேவண்ணா பட்டணத்தி[194]லிருக்கிறதைக் கொண்டுவர ஆள்களை அனுப்பித்தவர்களுக்கு படிச்சிலவு சக்.50*

*(16) 1754*
*சர்கார் சிலவு - பாத்திரபத கிருஷ்ண பக்ஷம். திவிதியை[195] தினம் கைலாஸவாசி ஷாஹா[196] மகாராஜாவின் தெவசத்திற்கு சக்.99-9 7/16*

---

183. ஆஷாடம்-ஆடி: அஷ்டமி-எட்டாம் நாள் (12-7-1754)

184. அஹில்யாபாய்-பிரதாபசிம்மருடைய முதன்மனைவி (போ.வ.ச.பக்.100)

185. நவமி-ஒன்பதாம் நாள் (14-7-1754)

186. பாவாசாகேப்-துக்கோஜியின் முதல்மகனும் 1736–37இல் ஆட்சியெய்தி இறந்தவருமான இரண்டாம் ஏகோஜி.

187. ஏகாதசி பதினோராம் நாள் (16-7-1754)

188. சுந்தராபாய்-யார் என்று தெரியவாய்ப்பில்லை. பிரதாபசிம்மர் சேர்த்துக் கொண்ட மனைவியாகலாம்.

189. சிராவணம் ஆவணி; சுக்லபக்ஷம்-வளர்பிறை; சதுர்த்தி-நான்காம் நாள் (23-7-1754)

190. துளஜா என்றது பிரதாபசிங்கரின் தந்தையாகிய துக்கோஜியை

191. துக்கோஜியின் மனைவியர்களுள் ஒருவராகிய ராஜ்குமாராபாயி ஆகலாம். (போ.வ.ச. பக். 81)

192. நவாப் – ஆர்க்காடு நவாப்

193. ஸ்ரீமந்த் ராசாஹேப் என்றது பிரதாபசிங்கரை

194. தேவண்ணாபட்டணம்- தேவினாம்பட்டினம்

195. பாத்திரபதம்-புரட்டாசி; கிருஷ்ணபக்ஷம்-தேய்பிறை; திவிதியை-இரண்டாம் நாள் (3-9-1754)

196. ஷாஹி-ஸாஹாஜி (1684-1710); பிரதாபசிங்கரின் தந்தையாகிய துக்கோஜியின் மூத்த தமையன்

*(17) 1754*

*மஹாநவமி[197] தினம் கொடுத்த எருமைக்கடா 2க்கு சக்.5*

*(18) 1754*

*சர்கார் சிலவு – சரப மகாராஜா[198] சாஹேப் அவர்களுடையதும் அவருடைய இருதாரங்கள்[199] பாயி சாயேப்களுடையதும் தெவசம். கார்த்தீக கிருஷ்ண பக்ஷம் திரியோதசி[200] தினம் சக்.540-4 நாகப்பட்டணம் வராகன் 15க்கு ஒன்று சக் 2-4-5/8 வீதம் சக் 35-9 5/8[201] புதுச்சேரி 52 1/2க்கு[202] ஒன்று6 5/8 பணம்[203] வீதம் சக். 32-9 3/4.*

*(19) 1754*

*சர்க்காரின் சிலவு கை. வாசி. ராஜஸபாய்[204] சாஹேப் அவர்களுடைய தெவசம் மோஹரம் சந்த்[205]-9*

*(20) 1754*

*சர்கார் அரண்மனைக்கு மூக்கு ரோகம், கண் ரோகத்திற்கும் சக்.546-4 1/2*

*(21) 1754*

*ரா.மகாராஜா சாஹேப்பும் சௌ.பாயிசாஹேப்களும் மகாமகத்திற்குக் கும்பகோணத்திற்கு வந்திருந்தபொழுது கொடுத்த ஜாபிதாவின் படி சிலவு சக்.3371-7 5/8*

---

197. பாத்ரபத (புரட்டாசி) மாதத்தில் தேய்பிறை 15 நாள்களும் மஹாளயபக்ஷம் எனப்பெறும். அந்நாட்களில் வரும் நவமி (ஒன்பதாம் நாள்) மகாநவமி எனப்பெறும்.
தூய்மை காக்கவேண்டிய அந்நாட்களில் எருமைக்கடாவுக்கு இடம என்ன என்று தெரியவில்லை.

198. சரபமகாராஜா என்பவர் 1710 முதல் 1728 வரை ஆட்சி செய்தவரும், பிரதாபசிங்கரின் தந்தை ஆகிய துக்கோஜியின் தமையனும் ஆகிய சரபோஜி I ஆவர்.

199. இருதாரங்கள் - சரபோஜி I இறந்தபொழுது உடன்கட்டையேறிய சுலக்ஷணாபாயி, ராஜஸபாயி ஆகிய இருவர் (போ.வ.ச.பக்.83); இவ்விருவருக்கும் சரபோஜிக்கும் ஒரே நாள் திவசம் வைத்தமையால் இருதாரங்கள் என்றது இவ்விருவரையே என்பது உறுதி.

200. திரையோதசி - பதின்மூன்றாம் நாள் (12-11-1754)

201. 2 1/4 சக்கரம் மதிப்புடைய புலிவராகன் உண்டு (பக்கம் 150); ஆனால் புலிவராகன் மதிப்பு இடத்துக்கு இடம் மாறுபடுவது உண்டு. நாகப்பட்டினம் வராகன் சக்.2-4 5/8 பணம் மதிப்புடையது என்பதால் இது அறியப்பெறும். இங்குக் கணக்கு தவறுடையது.

202. 52 1/2 என்பது 52 1/2 சக்கரம் ஆதல் கூடும்.

203. 10 பணம் 1 சக்கரம்; இங்கு 6 5/8 பணம் 1 சக்கரம் என்று உள்ளது. இங்குக் கண்ட கணக்கும் தவறு.

204. முதலாம் சரபோஜியின் மனைவியர் மூவருள் உடன்கட்டை ஏறிய இருவர் தவிர்த்து எஞ்சியவர்.

205. 1754 மோஹரம்சந்த் 9 என்பது 26-10-1754.

*(22) 1754*

*சர்கார் சிலவு - சைத்திர சுக்லபக்ஷம் அஷ்டமி[206] தினம் கை. வா. மா. சுஜான்பாயி சாயேப்[207] அவர்களுடைய தெவசம் சக்.21*

*(23) 1754*

*சைத்திர சுத்த பௌர்ணமை தினம் சந்திரகிரகண பர்வ காலத்தில்[208] தானம் வகையறா செலவு சக். 776-8 1/2.*

*(24) 1754*

*சைத்ர கிருஷ்ணபக்ஷம் ஷஷ்டிக்கு[209] ரா. துளஜா[210] மகாராஜாவின் பிறந்த நாளுக்கு சிலவு சக். 31-3 1/2.*

*11 1755*

*(1) அணைக்கரையின் வேலைக்காக சக்.108.*

*27 1820*

*(1) ரா. சரபோஜி மகாராஜா - காசியாத்திரை*

*முகாம் - கைர்ஹாட், முகாம் - குலியாப்பாடா, முகாம் - மேதனீபூர், முகாம் - ஸல்கீயாகாட், முகாம் -ஶ்ரீகயாஜீ,*

*ஆவுசாப் அவர்களுடைய தெவசம் ஜேஷ்ட கிருஷ்ண நவமி. மா. ராஜகுமராம்பாயி சாஹேப் - விருஷோத்ஸர்கம்[211] செய்தார்கள். விஷ்ணு பாதத்தின் மகாபூஜை[212] செய்தார்.*

*முகாம் - பீம்கயாவில் தீர்த்த சிரார்த்தம், முகாம் - யோகபதம் தீர்த்த சிரார்த்தம், முகாம் - பரச்யார் தீர்த்த சிரார்த்தம், வடேஸ்வர பூஜை ஆலமரத்தின் பூஜை ப்ரபிதாமஹாவின் முப்பாட்டனாரின் பூஜை - கோதானம் 1*

*கயாவளியின்[213] பூஜை - போத கயாவின் பைராகிக்கு 120 பேர்களுக்குள்ள சாப்பாடு சாமான் கொடுத்தார்கள். அக்ஷய[214] வட (ஆலமரத்தின்) தெவசம்.*

---

206. சைத்ரம் - சித்திரை; சுக்லபக்ஷம் - வளர்பிறை; அஷ்டமி - எட்டாம் நாள் (30-4-1754)

207. சுஜான்பாயி - பாபாசாகேப் என்ற இரண்டாம் ஏகோஜியின் மனைவி; பாபாசாகேப் இறந்ததும் ஆட்சி செய்தியவர்.

208. பர்வகாலம் என்பதைப் புண்யகாலம் என்று திருத்திப்படிக்கலாம்.

209. ஷஷ்டி - ஆறாம் நாள் (12-4-1754)

210. துளஜா என்றது இரண்டாம் துளஜாவை

211. விருஷோத்சர்க்கம் - சில வைதீகச் சடங்குகளில் சுத்தி செய்ய வேண்டுமிடத்தில் காளை மாடு அல்லது காளைக்கன்றைச் செல்ல விடுவது.

212. கயைகோயிலில் உள்ள விஷ்ணு பாதத்துக்குப் பூசை செய்தல்.

213. கயாவாளி - கயையில் செய்யும் சிரார்த்தத்தில் உண்ணுதற்குரிய பிராமணன்.

214. அக்ஷய - அழியாத

*27.1820*
*முகாம் - செர்கீ, . . . - 20 (கண்டு) சேரினால் பண்டங்கள் கரீதி, முகாம் - ஸர்காடி, முகாம் - மதன்பூர், முகாம் - சிரீஸ், முகாம் - ஸஹஸ்ரா, முகாம் - துர்மாபாத், முகாம் - டுஹரீ, முகாம் - மொஹல் ஸராயீ*

*(1) காசியாத்திரையின்சிலவுக்கணக்கு, (2) நக்கீ சக். 41-8 5/3 க்கு ரூ. 64-7-0, (3) முகாம் - காசீ, (4) காசி யாத்திரை சவாரி - சில்கா நதியில் யானைசேற்றில் ஆழ்ந்ததினால் சிலவு சக் 3 1/2மாணிக் பட்டணத்திலிருக்கும் பக்கீருக்கு பாத்தியாவுக்கு[215] 2 1/2 சக்.*

*(5) காசீ யாத்திரை*

பொன் வராகனிடை 2க்கு ரூ 7 1/2, முத்திரை ரூபாய் 1

*24. 1821*
*தினப்பட்டியல் - கொட்டியம் - காசீ யாத்திரை நாணயம் - மோஹர்[216] ரூ.பைஸா-தஸ்தான் ரூ.4க்கு 194[217] பைசாக்கள்.*

*(1) முகாம் - செட்டிகுண்டா, முகாம் - ஒரம்பாடு, முகாம் - நந்தனூர்*
*(2) சன்னியாசிப் பெண்பிள்ளைக்கும், அவளுடைய ஜனங்களுக்கும் மாஸி மாதத்திற்கு ஜாடாவுக்கு ரூ.4*

*25. 1821*
*காசீ யாத்திரை*

*முகாம் - காளஹஸ்தி*
*முகாம் - கரக்கம்பாடி*
*(1) தாஸ்தான் மோஹர் ஒன்றுக்கு ரூ15*
*வலிக்கோடி மண்டபத்தில்திருப்பதி மலைமேல் சாமான் வாங்கியதுமோஹர். 11 - ரூ. 28 - பை. 64*
*(2) முகாம் - தரகம்பாடி*
*முகாம் - வடமால்பேட்*
*சிகப்புச் சந்தனக்கட்டையினால் செய்யப்பட்ட மரப்பாட்சி, கருட வாகனமும் ஆஞ்சனேயர் வாகனமும் ரூ. 5 க்கு வாங்கினார்கள்.*
*(3) முகாம் - புதூர்[218]*
*புதூரிலிருந்து நகரிக்கு வரும் மாடுகள் 51*
*முகாம்-மோதக பாளயம்*

---

215. பாத்தியா - முகமதியர் திருமணம் அல்லது மரணகாலத்தில் குர் ஆன் ஓதுதல்.

216. மோஹர் - தங்கநாணயம் 5,71/2,10,15 ரூபா மதிப்புடையவை (பக்.152)

217. 192 என்றிருக்கலாம்; ரூபா 1க்கு 48 துட்டு; ரூபா 4க்கு 192 துட்டு. (துட்டு என்றிருக்க வேண்டுமிடத்தில் பைசாக்கள் என்றுள்ளது.)

218. புதூர் - புத்தூர் என்றிருக்க வேண்டும்.

தஞ்சாவூர் 1/2ப்படியின் சேர் திருத்தணிக்கு நகரியிலிருந்து வந்த 54 மாடுகளுக்கு மாடு 1க்கு 1/4 ரூ வீதம் ரூ.13 1/2 திருத்தணியிலிருந்து நாகவடிக்கு வருவதற்கு விபரம்.

முகாம் - ஸ்ரீகாஞ்சி

(4) ஸ்ரீகாஞ்சி(புரம்) க்ஷேத்திரத்தில் சௌ. பாயிசாஹேப்களுடன் ஸர்கார்[219] அவர்கள் ஏகாம்பரஸ்வாமியின் தரிசனத்திற்குச் சென்றார்கள்.

ஸ்ரீவிஷ்ணு காஞ்சி[220]யிலுள்ள கோவிலில் தீர்த்த சிரார்த்தம். மா.சௌ. பாயிசாஹேப்[221] ஸ்நானஞ் செய்ய படித்துரை கட்டினார்கள். ஸாயங்காலத்தில் சர்காரின் சவாரி புறப்படுவதற்கு பல்லக்குகள் தயாராக இருக்க வேண்டியதென்று உத்திரவு.
முகாம் - புதூர்
(5) நகரியின் இராஜாவைப் பார்க்க மத்தியஸ்தர் போகுவதற்காகசிலவு ரூ.50

(6) முகாம் - திருப்பதி
வா.இலை - 50க்கு 4பைசா, பால் சேர் 1க்கு 4 பைசா
சர்காரவர்கள் வெங்கடரமண ஸ்வாமியின் படம் வாங்கின வகையில் 7 பைசா.

25(7) 1821
ஸ்ரீவெங்கடேச பெருமாளுக்குத் தக்ஷிணை ரூ. 20

(8) 1821
புதிய ஹௌதாவிற்குச் சங்கிலி செய்யவும், புலியின் கூண்டிற்கு பட்டை வகையறா சில்லரை வேலைகள் செய்யவும், கொல்லனுக்கு ரூ. 1.

(9) 1821
திருப்பதியிலிருக்கும் பைராகியினிடமிருந்து குதிரையைக் கொண்டு வந்ததற்கு ரூ.5 (கோரா) வெத்து கடுதாசி 4க்கு 4 அணா, நாபத் சீனி மனு 1க்கு ரூ.8

(10) 1821
போலீஸின் முஸந்தி சேஷய்யாவுக்கு ரூ. 42-8-3

(11) 1821
ஸர்காரின் நாய்க்குட்டிக்குக் கூடையைப் பின்னினதற்கு குறவனுக்கு 12 பைசா, ஸர்காரின் சக்கிரவாக பக்ஷியின்[222] பல்லக்குக்கு[223] தட்டிகட்டுவதற்கு பைசா 3

சர்காரின் புலிக்குட்டியின் கூண்டிற்கு அடியில் தோல் வைத்து தைய்த்ததற்கு பைசா 8

219. ஸர்க்கார் என்றது அரசர் ஆகிய இரண்டாம் சரபோஜியை

220. விஷ்ணுகாஞ்சி யென்றது வரதராஜப்பெருமாள் கோயில் உள்ள சின்னக் காஞ்சிபுரத்தை

221. பாயிஸாஹேப் என்றது அஹல்யாபாயியை

222. சக்கிரவாகப்பக்ஷி - ஸாரஸ என்பதும் இதுவே; தன் இணையைப் பிரிந்தால் வருந்தும் பறவை

223. பல்லக்கு - அப்பறவையை வைத்து வளர்க்கும் கூண்டு.

*(12) 1821*

*சர்காரின் - லக்ஷ்மண்ராவ் கசாப்-பால் கரக்கிற ஆடு ஒன்றுக்கு ரூ. 1 1/2.*

*(13) 1821*

*அரிசி 618படி[224]யின் விலை ரூபாய்க்கு 5 மரக்கால் வீதம் ரூ. 123-9-0,மட்டை[225]*

*அரிசி-120 மரக்கால்-ரூபாய்க்கு 5 1/2மரக்கால் வீதம் ரூ. 22-13-6[226]*

*புழுங்கலரிசி-121 மரக்கால் ரூபாய்க்கு6 மரக்கால் வீதம் ரூ. 24-3-0 [227].*

*6-1822*

*கொட்டியம் காசியாத்திரை முகாம்-வளக்கோட்டை.*

*(1)மோஹர் - ரூ . பை.[228]*

*0 28 0*

*சென்னையிலிருந்து வக்கீல் சுப்பராவ் வந்த 4 வண்டிக்காரர்களுக்கு காளஹஸ்தியிலிருந்து காஞ்சிபுரம் வரையில் வண்டி 1க்கு 4 புலிவிராகன் வீதம் (வராகன் 1க்கு 3 1/2 ரூ மோஹர்-0 ரூ.7 - பை.0.*

*வந்த வாசியிலிருந்து வளக் கோட்டைக்கு வர வண்டி வாடகை 2 வண்டிக்கு ரூ. -*

*(2) 1822*

*நெய்வீசை 15க்கு ரூபாயொன்றுக்கு 1 5/8 வீசை வீதம் ரூ. 9-13-0 [229].*

*(3) 1822*

*முகாம்-கடப்பை*

*(4) 1822*

*சர்காரின் யானைக்குக் கரும்பு சுமார் 54க்கு 35 பைஸா.*

*(5) 1822*

*முகாம்-காஜிபேட் பூக்காரனிடம்-வெள்ளைக்காரனைக் காண்பதற்காக புஷ்பம் வாங்கினது. 23 பைசா. கர்பூஜ்பழம் 42க்கு - 21 பைசா.*

*(6) முகாம் விக்ரம பாண்டி*

*(7) முகாம் விழுப்புரம் (விளப்பூர்)*

---

224. "படி" என்றது மரக்கால் என்று படிக்க

225. "மட்டை" என்றது "மட்ட(மான)" என்று படிக்க

226. ரூ.21-13-1 என்றிருக்க வேண்டும்

227. 24-3-0 என்பது தவறு

228. 4x4x3 1/2 ரூ. = 54 ரூ:28 என்றது தவறு.

229. 9-13-0 என்பது 9 3/13 ரூபா அதாவது ரூ.9-3-8 ஆகும்.

*(8) முகாம் பனி உருட்டி (பன்னுருட்டி)*[230]

*(9)காஞ்சிபுரத்தில்-அப்பு பட்கோசாமி மூலம் மோஹர் 5*

*(10) முகாம் காசியில் 200 ரூக்கு யானை ஒன்றை வாங்கினதற்கு தரகில்லை.*

*(11) காம்பல் என்னும் ஊரிலிருக்கும் ஜமால்கானிடம் ஒட்டகம் ஒன்றை ரூ. 85க்கு வாங்கினதற்கு தரகில்லை.*

*(12) முகாம்-வளிக்கோட்டை*

*(13) முகாம்-ரட்ணே.*

## மூட்டை எண் - 160C

*1 1827*
*(1) விஜயதசமி தினம் சி. சிவாஜிராஜா சாயேப் அவர்களுக்கு சத்கா? செய்வதற்கு சக்ரம் 1/2.*

*(2) 1827*
*ஸ்ரீகாளிம்மா அம்பாளுக்கு*[231] *செம்பரத்தைப் பூவில் அர்ச்சனைக்குத் தக்ஷிணை சக். 7 3*
*(3) 1827*
*சௌ. சைதம்பாயிசாப்*[232] *அவர்களுக்கு பெண் குழந்தை*[233] *பிறந்ததற்கு மகாலில் அசல் முதல்தரமாக சந்தனந் தயார் செய்ய சக்.32.*

*(4) 1827*
*தஞ்சாவூர் கோட்டையிலுள்ள அன்னச்சத்திரத்தில்-இரவின் பிராமண போஜனத்திற்கு சாமான்கள் வாங்குவதற்கு சக் 1829-9 5/16.*

*(5) 1827*
*இராஜஸாம்பாபுரம் அன்னச்சத்திரத்திலிருந்து*[234] *ஸரஸ்வதி மகாலுக்கு 501 எழுத்தாணிகளுக்கு சக் 43-8 3/8.*

*(6) 1827*
*முக்தாம்பாள்புரம் சத்திரத்தில் வஜ். ரா. ஸந்தாஜீ பீகாஜி நாயிக் அவர்களுக்கு பங்களா கட்டிக் கொடுப்பதற்கு சக். 104.*

---

230. பனிஉருட்டி - பன்னுருட்டி - பண்ணுருட்டி

231. காளிகாதேவி - தஞ்சாவூர்க் கிராமதேவதைகளுள் ஒருவர் (பக்.193) தஞ்சைக்கீழவாசலுக்குக் கீழ்ப்பால் கருவக்காடு என்ற குயத்தெருவில் உள்ளது. (பக்கம் 188 இல் 4); (பக்கம் 213 இல் 29)

232. சைதம்பாபாயி - சிவாஜி II இன் முதல் மனைவி

233. முதல்பெண் (சக்காராமுக்கு மணம் செய்விக்கப்பட்டவள் ஆதல் வேண்டும்)

234. இது தாராசுரம் சத்திரம். ராஜஸாம்பாள் இரண்டாம் துளஜாவின் முதன் மனைவியாவர் (பக்கம் 273)

சத்திரத்திற்குப் பாத்திரங்கள் தவலைகள் வாங்க சக். 90, சுலக்ஷணாம்பாபுரம் சத்திரத்திற்கு[235] இரக்கொல்லை கிராமம் சக். 1150-8 7/8,திரௌபதாம்பாபுரம் சத்திரத்திற்கு-[236] கீழ்காட்டூர் வகையறா கிராமம் சக். 850-7/8.

*(7) 1827*

பழைய சிவகங்கையின் வேலைக்காகத் தளவாடம் வாங்கவும், மெய்யாடு சிலவுக்கும் வருஷத்திற்குச் சக். 2914-3 1/4

ஆயுத பூஜையின் சவாரிக்கு மணிமுக்தா என்னும் வடவாற்றின் வழியைச் செப்பினிட சக். 7.

*(8) 1827*

கோட்டையிலுள்ள வீதிகளைச் செப்பனிட சக். 1063-4 1/8

*(9) 1827*

வெங்கடசாமியின் மூலம் டுயின்[237] என்னும் சீமை நூலை வாங்க கும்பனி ரூபாய் 1-8-0.

*(10) 1827*

சென்னையிலிருந்து சித்திரக்காரன் வேலைக்கு உபயோகப்படும் கற்களை வரவழைத்ததற்கு சக். 7.

*(11) 1827*

ஸர்காருடைய வைத்தியருடைய உதவி வைத்தியர் மூலம் புஸ்தகங்களும், சாமான்கள் வகையறா வாங்கினதற்கு தாவித் பிள்ளையினிடம் ஜாபிதாவின்படி விலை ரூபாய். 278.

*(12) 1827*

உமரகான் மூலம் தயேர் என்கப்பட்ட பக்ஷியை வாங்கின வகையில் கும்பனி ரூபாய் 7.

*(13) 1827*

ஆஸ்பத்திரியிலிருக்கும் தண்ணீர் நிரப்புகிற அப்பாவு பிள்ளையினிடம் மருந்துகள் வாங்க கு.ரூபாய் 10.

*(14) 1827*

ஜீனுவஸ்தாதின் மூலம் பட்டாசு 100 வாங்கின வகையில் ஒன்று 3/4 பணம் வீதம் சக்.7-5.

*(15) 1827*

கோட்டையில் கீழராஜ வீதியில் வேதசாலைக்கு மேற்கு நாங்கெல்லை வீடு வாங்கின வகையில்.

*(16) 1827*

*Resident Captain Johnphype* அவர்கள் மூலம் சென்னையில் அண்டுகோ- விடம் மருந்துகளையும், இரண வைத்தியத்தின் ஆயுதங்களையும் வாங்கின வகையில் சக். 532-5 3/16.

---

235. சுலக்ஷணாம்பாபுரம் சத்திரம் - இது வேளங்குளத்தில் இருப்பது. சுலக்ஷணாம்பாள் இரண்டாம் துளஜாவின் மூன்றாவது மனைவியாவர் (பக்கம் 272)

236. திரௌபதாம்பாபுரம் - இது மணமேற்குடி. திரௌதாம்பாள் - பிரதாபசிங்கருடைய மனைவியருள் ஒருவர் (பக்கம் 271)

237. டுயின் - Twine

*(17) 1827*

*வேதசாலையின் ஸாமவேத உபாத்தியாயர் அண்ணாசாமி ச்ரௌதி அவர்கள் மூலம் பூனாவிலுள்ள மஹாதேவபட்டு அவர்கள் ஸர்க்காருக்கு ஸாமவேத புத்தகங்களை வாங்கி அனுப்புவதற்கு சக். 100.*

*(18) 1827*

*சர்காரின் டக்கே [238], துட்டு [239], பைசா [240] புலிவராகன்[241] தங்கத்தின் புலிவராகன், தங்க ரூபாய் [242], தங்க ரூபாய் மூன்றிலொரு பாகம் [243] ரூபாய்கள்.*

*(19) 1827*

*நியாயாதிபதி-புளமானேரி அண்ணா சாஸ்திரிக்கு[244] மாதச் சம்பளம் சக். 30 வீதம் சக். 525,*

*(20) 1827*

*ப்ரதிஷ்டித ஸபை[245]-இரண்டாவது நியாயாதிபதி அப்பா சாஸ்திரிக்கு சக். 120 வருஷத்திற்கு*

*(21) 1827*

*குப்பாசாஸ்திரியின் குமாரர் பஞ்சநத சாஸ்திரி வேத பாஷ்யத்தைப்[246] பரிசோதித்து எழுதினதற்கு மாஸத்திற்கு சக். 3 வீதம் 27-7 1/2*

*(22) 1827*

*குதிரை வைத்தியம்- காசீம் கான் பீராகான் லாயத்தில் கொடுத்தது சக். 3 1/2*

*(23) 1827*

*தமிழ்ப் பள்ளிக்கூடத்திற்கு சக். 9-7*

*(24) 1827*

*சரஸ்வதி மகாலிலுள்ள ஸரஸ்வதிக்கும் பாபா சாமியார் படத்திற்கும் 2 பணம்.*

---

238. டக்கே - ஒருவகை நாணயம்; 48 ருக்கே ஒரு டக்கா என்றும் ஒரு ருக்கே ஒரு அணாவின் 12இல் ஒரு பங்கு என்றும் தெரியலாம் (பக்.157) நான்கணா அதாவது 1/4 ரூபா ஆகலாம்.

239. துட்டு - ரூபா ஒன்றுக்கு 48 துட்டு (பக்கம் 154)

240. பைசா - ரூபா ஒன்றுக்கு 64 பைசா அல்லது காலணா (பக்கம் 154)

241. புலிவராகன் - புலிவராகன்; புலி (Phuli-) அழகுபடுத்தப் பெற்ற (பக்.150)

242. தங்கரூபாய் - மோகரா (பக்கம் 152)

243. மூன்றிலொரு பாகம் என்பது 5 ரூபா மோகரா

244. இவர் தர்மசபை நீதிபதி (31சி - 4 - 214) (பக்.174)

245. பிரதிஷ்டிதசபை - வழக்குமன்றங்கள் நான்கனுள் ஒன்று (பக்.166)

246. வேதத்துக்குப்பாஷ்யம் எழுதியவர் சாயனாசார்யர்.

*(25) 1827*
*விஷ வைத்தியம் இராமசாமி அய்யாவிற்கு சக். 1*

*(26) 1827*
*ஸ்ரீ கொங்கணேஸ்வர*[247] *ஸ்வாமிக்கு ருத்திராபிஷேகத்திற்கு*[248] *நாளொன்றுக்கு சக். 9-5 1/2.*

*(27) 1827*
*வேதசாலையில் வருணஜபஞ்*[249] *செய்கிற ஆஸாமி 6க்குத் தினம் 1க்கு ஒரு பணம் வீதம் சக். 6-6.*

*(28) 1827*
*ஸ்ரீமணிகர்ணிகேஸ்வர*[250] *சுவாமியின் விமானம் மழையினால் சாய்ந்துவிட்டதால் ஸ்ரீஸ்வாமிக்குப் பிரதோஷம்*[251] *வருஷ ஏற்படிகள்* [252]*வகையறா திருநாட்கள் நின்று போயிருப்பதால் அஷ்டபந்தன கும்பாபிஷேகம் செய்வதற்கு சுமார் சக். 50.*

*(29) 1827*
*மேரு அனந்தகோஸாமியாருக்கு ஸ்ரீராம நவமியின் உற்சவத்திற்காக லலிதமாகும் தினத்தில்*[253] *ஸ்ரீராமருடைய மூர்த்தியை தேரில் வைத்து ஊர்வலமாக நாலு வீதிகளிலும் புறப்பட்டு மாடியின் கீழ் வரும்பொழுது தக்ஷிணை சக். 1.*

*(30) 1827*
*பெரியகோவிலிலிருக்கும் ஸ்ரீபக்தப்ரிய ஸ்வாமி, ஸ்ரீசங்கரநாராயண*[254] *ஸ்வாமியின் கோவிலுக்கு போகையில் சிவகங்கையின் திவான்வாடா*[255] *பக்கத்தில் போகையில் தக்ஷிணை 1/8 பணம்.*

*(31) 1827*
*பெரியகோவில் ஸ்வாமிக்கு சித்திரை மாதம் உற்சவத்திற்கு சக். 2953-1 1/4.*

*ஸ்ரீகொங்கணேஸ்வர ஸ்வாமிக்கு வையாசி மாதம் உற்சவத்திற்கு சக். 782-5 1/8.*

*ஸ்ரீசங்கர நாராயண ஸ்வாமி உற்சவத்திற்கு சக் 133-1 பணம்.*

---

247. கொங்கணேச்வரர் கோயில் மேலவீதியிலுள்ளது (பக்கம் 213 இல் 3)

248. ருத்ராபிஷேகம் - ஸ்ரீருத்ரம் என்னும் வேதமந்திரத்தை ஓதிக்கொண்டே தண்ணீரை அபிஷேகம் செய்வது (பக்.379)

249. வருணஜபம் - மழை வேண்டி மழைக்கடவுளாகிய வருணனை நோக்கி வேத மந்திரங்களால் துதிப்பது.

250. சரபோஜி காசியாத்திரை சென்று திரும்பியபின் கீழவீதியில் எடுப்பித்த கோயில் (பக்கம் 188; 213 இல் 21)

251. பிரதோஷம் - வளர்பிறை தேய்பிறைகளுள் திரயோதசி திதியில் மாலை 3 3/4 நாழிகையும் அத்தமித்த பிறகு 3 3/4 நாழிகையும் கொண்ட கால அளவு

252. ஏற்படிகள் - செய்தற்குரிய பிற வழிபாடுகள்.

253. லலிதமாகும் தினம் - இராமபட்டாபிஷேகத்துக்குப் பிறகு மூர்த்தி திருவுலாப் போதரும் நாள்

254. சங்கரநாராயணர் கோயில் (பக்கம் 213இல் 2)

255. திவான்வாடா - அரசரின் அரண்மனை

*(32) 1827*

*பெரியகோவில் 108 லிங்கங்களுக்குப்*[256] *பூஜை நிவேதனத்திற்கு மாதம் சக். 50.*

*(33) 1827*

*பெரியகோவில் நந்திக்கு அபிஷேகம் பூஜை செய்வதற்கு கால் மண்டலத்திற்கு*[257] *நாளொன்றுக்கு சக். 3 1/2*

*ரா. திவான்சாகோப்*[258] *அவர்களுடைய ராசிக்கு 12மிடத்தில் ஏழரை நாட்டான் சனி*[259] *வருவதால் ஸ்ரீபஞ்சநதீஸ்வர க்ஷேத்திரத்தில்* [260] *ஸ்ரீபிரணதார்த்திஹர சுவாமிக்கு*[261] *11 நாட்களுக்கு ருத்திரபாராயணமும் அபிஷேகத்திற்கும் 3 1/2 பணம்.*

*ஒவ்வொரு சனிக்கிழமை பிரதோஷம், மகாசிவராத்திரி,*[262] *பௌர்ணிமை, அமாவசை சனி 12ல் இருக்கும் வரையில் நடத்துவதற்கு-*

*(34) 1827*

*சிவகங்கையின் தென்கரையில் 'வர்ஷ பசு' செய்வதால் சக். 58.*

*(35) 1827*

*மாதவ ஸ்வாமியின் புண்யதிதிக்கு சக். 19-2.*

*(36) 1827*

*ரா. சிவாஜி ராஜா சாயேப் அவர்களுக்கு சிராவண*[263] *சுக்ல பௌர்ணிமைதினம் ரக்ஷைக் கட்டு*[264]*வதற்காக பூரி தக்ஷிணை* [265] *சக்-5.*

---

256. 108 சிவலிங்கங்கள் 1801இல் அமைக்கப்பெற்றுக் கும்பாபிஷேகம் நடைபெற்றது (பக்.196,197)

257. மண்டலம் என்பது 40, 41, 45 நாள்கள்

258. திவான் சாகேப் என்றது இரண்டாம் சரபோஜியை

259. ஏழரை ஆண்டுச் சனி - ஜன்மராசிக்கு 1, 11, 12 ஆம் இடங்களில் சனியிருத்தல்

260. பஞ்சநதீஸ்வரக்ஷேத்திரம் - திருவையாறு எனும் திருத்தலம்

261. பிரணதார்த்திஹரர் - திருவையாற்றில் கோயில் கொண்ட பெருமானுக்குப் புராணங்களில் கூறப்பட்ட திருநாமம்

262. மாசிமாசத்தில் வருவது மகாசிவராத்திரி

263. சிராவணம் - ஆவணி; சுக்ல - வளர்பிறை; பௌர்ணமி - முழுமதி.

264. ரக்ஷைகட்டுதல் - காப்பு நாண் பூணுதல்

265. பூரிதக்ஷிணை - அந்தணர்கட்குக் கொடுக்கும் தக்ஷிணை.

*(27) 1827*

*கார்த்திக சுத்த-திவிதியை[266] தினம் தருமராஜ் சித்ர குப்தருடைய [267] பூஜைக்கு தக்ஷிணை 1/8 பணம்.*

*(38) 1827*

*சிவகங்கைக் கோட்டையில் தண்ணீர்பந்தல் வைத்து, அதில் வேலைபார்த்த இரண்டு பிரமணர்களுக்கு சக். 2.*

*(39) 1827*

*அல்லாப் பண்டிகைக்காக பானக பூஜைக்கு சக்.1*

*(40) 1827*

*பெரிய கோவில் உற்சவத்தில் ஸ்வஸ்திவாசன பிராமணர்களுக்கு பானக பூஜைக்கு ஒருவருக்கு அணா 1 வீதம் 1000 பேர்களுக்கு சக். 62 1/2 [268]*

*(41) 1827*

*பிராமணர்களின் சமையல்கட்டில் புண்யாஹவாசனத்திற்கு தக்ஷிணை 1 அணா*

*கோட்டையில் சில வேஸ்திரி (கிறிஸ்துவப் பெண்) வசிக்கும் வீட்டில் ஆஸ்பத்திரி செய்வதற்கு புண்யாஹவாசனத்திற்கு தக்ஷிணை 2 அணா.*

*சிவகங்கைக் கோட்டையில் யோகசாலையில்[269] மூகூர்த்தஞ் செய்ய புண்யாஹவாசன தக்ஷிணை 1 அணா.*

*சிவகங்கைக் கோட்டையில் கங்காதர் பட்டு லாண்டகே அவர்கள் குடியிருப்பதற்குக் கொடுத்த இடத்தில் புண்யாஹவாசனத்திற்கு தக்ஷிணை 2 அணா.*

*(42) 1827*

*ஸர்காரின் பிவளி (மஞ்சள்) மஹாலின் மாடிக்கு வடக்கேயுள்ள மகாலில் ஔபாஸனம் ஸ்தண்டிலி போடுவதற்கு தக்ஷிணை 6 பணம்.*

*சிப்பாய்களின் ஆயுதங்களை தேய்த்து தீட்டி பிரகாசிக்கும்படி செய்வதற்கு முகூர்த்தஞ் செய்ததற்கு தக்ஷிணை கும்பினி ரூபாய்-2.*

*தமிழ்ப் பள்ளிக்கூடத்தில் பதினெட்டாம்பெருக்குக்காக[270] பிள்ளைகள் வாத்தியாருக்குக் கொடுப்பதற்காக ரூ. 1-12-0.*

---

266. சுத்தம் - வளர்பிறை; திவிதியை - இரண்டாம் நாள்.

267. தருமராஜ சித்ரகுப்தர் - தருமராஜர் - இயமன்; சித்ரகுப்தர் - சிரவணரால் ஆன்மாக்கள் செய்யும் புண்ணிய பாவங்களை யுணர்ந்து யமனுக்கு அறிவிப்பவன் (சிரவணர் - இவர்கள் பன்னிருவர்; ஆன்மாக்கள் செய்யும் புண்ணியபாவங்களை அறிந்துவருபவர்).

268. சக். 62 1/2 என்பது ரூபா 62 1/2 என்றிருத்தல் வேண்டும்.

269. யோகசாலை என்பதை யாகசாலை என்று திருத்துக.

270. பதினெட்டம்பெருக்கு - ஆடி மாசம் 18 ஆம் நாள்

*(43) 1827*

வஜ்ராத்மாப்[271] ஸம்பாஜிபோஸலே அவர்களுக்கு டாக்டரவர்கள் கண்ணுக்கு வைத்தியம் செய்ததினால் பிராயச்சித்தம்[272] காவேரி ஸ்நானம் சுத்தி புண்யாஹவாசனத்திற்கு தக்ஷிணை சக் 2-2 1/2 பணம்.

*(44) 1827*

கரடி வேட்டைக்குக் கரம்பர் மத்யஸ்தரிடம் சிலவுக்கு ரூ. 300

*(45) 1827*

ஆங்கிலேயப் புத்தகங்களைத் தயார் செய்ய கும்பினி ரூ. 30

நியாயாதிபதி- கோட்டைக்கு வெளியில் தற்போது லயன் விஸ்தாரஞ் செய்து கொண்டதில் புதிய காவல் வைக்குமிடத்தில் காவல் வைத்து ஜனங்களை நியமித்திருக்கிறார். ஆனால் அந்தந்த காவல் காக்குமிடத்தில் காவல்காரர்கள் தங்குவதற்கு கீத்துச் சாவடிகளைக் கட்டுவதற்கு சிலவு சக். 100

*(46) 1827*

மராமத்து -ஸ்ரீரத்னபுரீஸ்வர ஸ்வாமி[273] கோவிலின் வேலைக்கு சக். 356-2 1/2.

*(47) 1827*

ஸர்கார்-ஸ்டோரிலுள்ள பிள்ளையாருக்கு சக்-1
ஆரோக்யசாலை[274]யிலுள்ள பிள்ளையாருக்கு சக்-1/2
தண்ணீர்மகால்[275] பிள்ளையாருக்கு சக். -1/2
ஆக 2

*(48) 1827*

ரா. ரா. திவான் சாஹேப்[276] விருந்துக்கு-நாகப்பட்டு லாண்டகே அவர்கள் வீட்டுக்குப் போனபொழுது கொடுத்தற்கு விவரம்

யக்ஞேஸ்வரனுக்கு[277] தக்ஷிணை ரூ. 100
நாகபட்டரின் பெண்சாதிக்கு தக்ஷிணை ரூ. 100

---

271. வஜராத்மாப் - அரச குடும்பத்தைச் சேர்ந்த பெருமக்கள்

272. பிராயச்சித்தம் - பாவம் போக்குவதற்குச்செய்யும் சடங்கு.

273. ஸ்ரீரத்னபுரீசுவரர் -(பக்கம் 189இல் 26; 213இல் 16)

274. ஆரோக்யசாலை - இரண்டாம் சரபோஜி அமைத்த மருத்துவமனை (பக்கம் 289) (100சி - 40)

275. தண்ணீர்மகால் - ஆடேமகால் (பக்.453)

276. திவான்சாகேப் என்றது இரண்டாம் சரபோஜியை

277. யக்ஞேசுவரர்-யாகத் தலைமை ஏற்பவர்.

*கங்காதர்பட்[278] லாண்டகே பெண்சாதிக்கு ரூ.100*
*அக்கம் பக்கத்திலுள்ள பெண்களுக்கு ரூ. 20*

*மொத்தம் ரூ.320*

***(49) 1827***
*ஜான்பைப் ரெஸிடெண்ட் இருக்கும் வீட்டைப் பழுது பார்க்க கும்பனி ரூ. 1003-மைலிபணம் -4 காசு-53.*

***(50) 1827)***
*ஸ்ரீஜகன்னாத ஸ்வாமிக்கு[279] பூஜை நிவேதனத்திற்கு-ரூ. 800*
*கயானிலுள்ள கயாவளி இருவருக்கு ரூ. 300*

*மொத்தம் ரூ.1100*

***(51) 1827***
*சி. சிவாஜிராசா சாஹேப் அவர்களிடம் ஆஸ்விஜ[280] மீ நவராத்திரியில் ஸ்ரீநாராயண பாராயணத்திற்கு சக். 5-7*

***(52) 1827***
*ஸ்ரீ காமாக்ஷி பாயி சக். 5ம் காசு[281] 500-இதற்கு துட்டு[282] 200-பைசா[283] 800*

***(53) 1827***
*ஸரஸ்வதி மகாலில் ஓலைப்புத்தகம் எழுதும் அனந்தபட்டுக்கு கிரந்தெயெழுத்து[284] 1700க்கு சக் 1-3 3/4*

---

278. கங்காதர்பட் - நாகப்பட்டரின் உடன்பிறந்தவர் போலும்; இவர் தர்ம சபையின் நியாயதிபதி (181சி - 37)

279. ஜகன்னாதசுவாமி - பூரி ஜகன்னாதம் என்று கூறப்பெறும். 20-1-1821இல் நிவேதனத்துக்காக ரூ.720 ஏற்பாடு செய்யப்பெற்றது. 1827இல் ரூ.800 அனுப்பியிருக்கிறது (912சி - 38 - 7) (பக்கம் 117, 188)

280. ஆஸ்விஜம் - ஐப்பசி

281. 32 காசு - 1 பணம் (பக்கம் 150)

282. 48 துட்டு - 1 ரூபா (பக்கம் 154)

283. ரூபா 1க்கு 64 பைசா அல்லது காலணா 192 பைசா (பக்கம் 154)

284. கிரந்த எழுத்து - சமஸ்கிருதத்தை எழுதுவதற்குத் தமிழர்கள் வகுத்துக்கொண்ட எழுத்துமுறை

*(54) 1827*
*வைத்தியசாலையில் புத்தகமெழுதிய எழுத்தாளருக்கு சக். 4-6 1/2*

*(55) 1827*
*பொய்யான முத்திரை வகையறாக்களைச் செய்த அண்ணாபிள்ளைக்கு நெற்றியிலும் கன்னத்திலும் தமிழில் 35 எழுத்துக்களைக்[285] குத்தின குரத்திக்கு குத்தின இரணம் ஆறுகிற வரையில் இருந்து மருந்து போடுகிறதென்று தீர்ந்தபடிக்கு படிச்சிலவு கோட்டையிலுள்ள கொத்தவாவிடம் ரூ. 1 கொடுக்கப்பட்டது.*

*ஸரஸ்வதி மகாவில்-மராட்டி புத்தகம் எழுதினதற்காக 100க்கு சக். 1 வீதம்.*

*(56) 1827*
*நாட்டிய மூல கிரந்தம் எழுதுவதற்கு சக். 2- 4 3/8.*

*(57) 1827*
*ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி நான்கு கையுடன் தொட்டிலில் படுத்து, தன்னுடைய கட்டைவிரல் வாயில் வைத்தாற் போல் செய்ததற்கு சக்-1 (கல்யாணமகாவில்[286] கோகுலாஷ்டமிக்கு)*

*(58) 1827*
*ஸரஸ்வதி மகாவில் - தமிழ் எழுத்து தமிழ்ப்பாஷையினால் வைத்திய விஷயம் ஸாஹித்தியஞ் செய்து கொடுத்தற்காக திருவேங்கடம்[287] ஏடுகள் சுமார் 145க்கு சக்.4-3 1/2*

*(59) 1827*
*வேதசாலையில் - ருத்திராக்ஷப்பிரதிஷ்டை செய்ததற்காக பெரிய கோவிலில் 1000 பிராமண போஜனஞ் செய்ததற்கு சக். 9-8 பணம்.*

*(60) 1827*
*திருவேங்கடப்பிள்ளை ஸாஹித்யஞ் செய்து[288] கொடுத்த வைத்திய விஷயம் கர்ப்பிணியின் சிகித்சைப்பாடல் சுமார் 150க்கு சக்.4 1/2.*

*(61) 1827*
*காசிக்கு அய்யாறப்ப தம்பிரானுக்குக்[289] கும்பனியின் தபாலில் கடிதம் அனுப்பினதற்கு ரூ-1*

*(62) 1827*
*மருந்து ஒதரிவேகம்பட்டையைக் கொண்டுவர நார்த்தாமலைக்குப்போகப் படிச்சிலவு ரூ.3.*

---

285. தமிழில் எழுத்துக்கள் 35 - உயிர் 12; மெய் 18; ஜஷஸஹக்ஷ. என்பனவாகலாம்.

286. கல்யாணமகால் - இரண்டாம் சரபோஜியின் காமக்கிழத்தியர் தங்கியிருந்த இடம் (பக்கம் 329)

287. திருவேங்கடம் - திருவேங்கடம் பிள்ளை; இவர் திருவேங்கடத்தா பிள்ளை என்றும் கூறப்பெறுவர்; கர்ப்பிணி பாலரோக சிகிச்சை; வாதரோக சிகிச்சை என்ற நூல்களை எழுதியவர் (160சி-1-60) (பக்கம் 290-291)

288. ஸாஹித்தியம் செய்தல் - பாடல்கள் எழுதுதல்

289. காசியில் குமாரசுவாமிமடத்தில் இருந்த தம்பிரான்; திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்து அதிபரால் நியமிக்கப்பெற்றவர்.

*(63) 1827*

மணங்குடிக்குப் புலியின் வேட்டைக்கும் ஜீவாஜி கோவிந்தராவ் மோஹிதே[290] அவர்களுடைய தோட்டத்திற்கு மான் வேட்டைக்கும் போய் வந்ததற்கு ஆளொன்றுக்கு 1 பணம்.

*(64) 1827*

முலாம் வேலை செய்யும் வெங்கடசாமி திருமலையானவன்-ஸர்காரில் பொய்காரணம் கூறி விடுமுறை பெற்று, திருச்சினாப்பள்ளிக்குப் போய் - தொரையூரி[291]லிருந்து ஸ்ரீரங்கநாத ஸ்வாமிக்கு உபயங்கொடுத்த வெள்ளிச்சிங்காதனத்திற்குத் தங்கம் முலாமை ஒருமாதம் வரையிலிருந்து கொடுத்த சங்கதியானது தெரிய வந்து நிஜமாவென்று பார்த்து வருவதற்குத் திருச்சினாப்பள்ளிக்குச் சென்று வந்தவனுக்கு நாளொன்றுக்கு 1 பணம் வீதம் படிச்சிலவு 3 பணம்.

*(65) 1827*

கரடியின் வேட்டைக்குப் பளூருக்குப்[292] போனவனுக்கு 7 பைசா

*(66) 1817*

இராமா ஜெட்டியின் பிள்ளைக்குக் கவாத்துக்[293] கற்றுக்கொள்ளவும், பள்ளிக்கூடத்தில் சேர்க்கவும் கூட ரூ.50.

*(67) 1827*

ஸர்காரில் உத்யோகஞ் செய்யம் மஷீருல் ஹஜரத் மஜம் அதார் ரா.பாபாஜி ராமாஜி பண்டிதருக்கு[294] கடன் ஆயிருந்ததால் கடன்காரனுக்குக்கொடுக்க சக்.660. இனாம் கொடுக்கப்பட்டது.

*(68) 1827*

கோபால் என்னும் யானைப்பாகனுக்கு ஆனந்தவல்லி என்னும் யானைக்குட்டிக்கு இருந்த உபத்திரவத்தைத் தேவலை செய்ததற்காக இனாம் கும்பனி ரூ. 50

*(69) 1827*

இராமசங்கர் கருடனுக்கு – குருவின் புண்யதிதிக்காக வழக்கப்படி கொடுத்தது ரூ.26 (மானம்புச்சாவடியில்)

*(70) 1827*

பைராகியின் வேஷம்பூண்ட காசீம்கான் என்பவனுடைய ரகசிய சமாசாரங்களை வெளிப்படச் சொன்னதற்கு அப்தாரகானாவில்[295] உடைத்ததற்காக இனாம் கு.ரூ. 1

---

290. ஜிவாஜி கோவிந்தராவ் மோஹிதே - இவர் ராஜாம்மாபாயியின் கணவர் (ராஜம்மா எமுனாம்பாபாயியின் மகள்; எமுனாம்பா இரண்டாம் சரபோஜியின் முதல் மனைவி)

291. தொரையூர் – துறையூர்; திருச்சிக்கு அருகிலுள்ளவூர்.

292. பளூர் – திருப்பழுவூர் என்ற பாடல் பெற்ற தலம்.

293. கவாத்து - மற்போர்

294. பாபாஜி ராமாஜி பண்டிதர் (பக்.86) - இவர் சர்க்கேல்

295. அப்தார்கானா - தண்ணீர்ப்பந்தல் (பக்கம் 452)

விகடகவிக்கு[296] ஒரு குதிரையை இனாமாக வாங்கிக்கொடுக்க ரூ.35.

(சேவகின்) கர்ப்பிணியின் வேஷம் போட்டு உட்காரவைத்தவனுக்கு (அல்லாப்பண்டிகைக்காக அப்தாரகானாவில்) இனாம் ரூ.5.

*(71) 1827*

தனகதாரீ என்னும் பைராகிக்கு வினாயக சதுர்த்திக்கு வழக்கப்படி சக்.5-திவான் சாகேப்[297] வெளியேயிருந்து அரண்மனைக்கு வரும்பொழுது எதிரில் பால் கொண்டு வந்தவனுக்குப்பணம் 1 கொடுக்கப்பட்டது

**2.1829**

(1) அபராதம் - தென்னண்டை அகழியில் இடையன் மாடுகளை இரவில் திருட்டுத்தனமாய் மேய்த்தற்குத் சக். 0-1 1/2 பணம்

*(2) 1829*

கோட்டையில் (வெங்கடரமணி) வெங்கடேசப்பெருமாள்[298] கோவிலுக்குச் சமீபம் ஜவுளிக்கடை வைத்திருந்த குட்டி இவனிடம் பித்தலாட்டம் செய்த முத்துகருப்பாப்பழனி இடமிருந்து பறிமுதல் செய்த தங்கரூபாய் 1/2.[299] தங்கம்–வெள்ளி மூன்றிலொன்று -1

*(3) 1829*

ம. கா. ரா.ரா. திவான்சாஹேப் அவர்கள் கிருஷ்ண விலாஸத்தில்[300] (ஸதர்) ஸபையைக் கூட்டி கும்பனியைச் சேர்ந்த உத்யோகஸ்தர்கள் ஸர்க்கார் கச்சேரியின் உத்யோகஸ்தர்கள் பேட்டி[303] வாங்கினதற்காகக் கும்பனி ரூ.2003.

*(4) 1829*

கல்யாண மகாலில் –மகர சங்கராந்திக்காக[301] வெண்ணையினால் லிங்கஞ் செய்து கொடுக்கும் விருதத்தை[302] உத்யாபனஞ்[303] செய்ய தக்ஷிணை ரு.5-4-0

---

296. விகடகவி - நகைச்சுவையாளன்

297. திவான்சாகேப் என்றது இரண்டாம் சரபோஜியை

298. வெங்கடேசப்பெருமாள் என்பது பிரசன்ன வெங்கடேசர் (213இல் 13) அல்லது கலியுக வெங்கடேஷ் (213இல் 19) ஆகலாம்.

299. தங்க ரூபாய் என்றது மோஹரா (பக்கம் 182)

300. அரண்மனையின் தரைப்பகுதி கிருஷ்ணவிலாஸ் எனப்பெற்றது

301. மகரசங்கிராந்தி - தைப்பொங்கல்; மகரம் புஷ்யமாதம் - தை மாதம்

302. பொங்கல் திருநாளில் வெண்ணெயால் லிங்கம் செய்து தானம் செய்தலைக் குறிக்கிறது (பக்.314)

303. உத்யாபனம் - விரதத்தை முடித்தல்

(5) 1829

கடன்-வரவு-கல்யாணமகாலைச் சேர்ந்த சௌ. லாடுபாயி அம்மாள் சௌ.பாயி அம்மா[304] இடமிருந்து 3/4 வட்டி வீதம் வரவு ரூ.10,000

(6) 1829

டாளஸா என்னும் அல்லா தண்ணீரிலே விழப்போகும் குளத்தை வெட்டுவதற்கு மகால் மராமத்து பழைய சிவகங்கை, தஞ்சாவூர்க்கோட்டை அவர்களிடம் 10 சக்.கொடுக்கிறது.

(7) 1829

பழைய சிவகங்கை வகையறாவின் வேலைக்குத் தளவாடம் வாங்குவதற்கு சக். 140 9-8 1/4
கீழவாசலிலுள்ள கருடன் ஹனுமாருக்கு விஜயதசமிக்காகப் பூஜை நிவேதனத்திற்காக பணம்

(8) 1829

கோட்டையிலுள்ள வீதிகளைச் செப்பனிட மாதமொன்றுக்கு சக்.100 வீதம் சக்.1165 - 5 1/2.

(9) 1829

வைத்தியனாதம் பேட்டை[305]யிலுள்ள ஸர்வமான்யம் நஞ்சை,புஞ்சை நிலத்தை சர்கேல் ராமோஜி ஸர்ஜேராவ் காட்கே இவர்கள் பேரால் ஸர்காரில் வாங்கினது சக்.2188-3 7/16.
நஞ்சை வேலி -1: மா-8-19 5/8, புஞ்சை வேலி -0: மா-0-34

(10) 1829

ஸர்கார் - ஸதர்மாடியின்[306] மேல்கிழக்கு பக்கத்திலுள்ள கடியாரத்தின் கண்ணாடியின் சுற்றளவு குறைவாகயிருப்பதால் வேறு கண்ணாடியைப் போடுவதற்கு ரூ.2

சௌ. அகில்யா பாயிசாப் - அவர்களிடமுள்ள சங்கீத பெட்டியை[307] பழுதுபார்க்க ரூ.7

ஸர்காருக்கு - டனவ்யாசாண விஜய பீவசானூர் என்கப்பட்ட தைலம் வாங்கினதற்கு
வைத்தியம் முத்துக்கருப்பாப்பிள்ளையினிடம் ரூ.5
வைத்தியம் அப்பாவு இடம் ரூ.5 ஆக 10

---

304 பாயி அம்மா - பாயம்மாபாயி அம்மாள்

305 வைத்தியநாதம் பேட்டை - திருப்பூந்துருத்தி வைத்தியநாதம் பேட்டையில் 1 வேலி மா கி.பி.1786இல் இரண்டாம் துளஜா காலத்தில் பாளம் பட் அவர்கட்குச் சர்வமான்யம் அளிக்கப்பட்டது. இந்தச் சர்வ மானியம் கி.பி.1829இல் சர்க்கார் விலைக்கு வாங்கியிருப்பதாக இந்தக் குறிப்பால் அறியப்பெறுகிறது. விலை சக்.2188-3-7/16, அந்நாட்களில் ஒரு வேலியின் விலை ஏறத்தாழ சக்கரம் 280 என்று தெரிகிறது. ஆனால் 2188 சக்கரம் என்பது மிக அதிகமானது என்று தெரிகிறது. சுரோத்திரியமாக நிலம் அளித்தால் அதை வாழ்நாள் முழுமையும் அனுபவிக்கலாம். விற்க உரிமையில்லை; விற்பதாயின் ஸர்க்காருக்கே விற்க வேண்டும் என்று தெரிகிறது. (பக்கம் 260) அங்ஙனமே சர்வமானிய உரிமையும் இருந்திருக்கலாம். அரசனுக்கு விற்கும்பொழுது அரசன் மனம் விரும்பி அதிகவிலை கொடுத்திருக்கலாம்.

306 சதர்மாடி - இந்நாளில் இளைய இளவரசர் இருக்கும் அரண்மனைப்பகுதி.

307 சங்கீதப்பெட்டி - சுருதிப்பெட்டி அல்லது ஹார்மோனியம் ஆகலாம்.

*(11) 1829*

நவவித்யா கலாநிதி பள்ளிக்கூடத்திற்குச் சென்னையிலிருந்து மெல்லிய காகிதங்களை (பட்டம் செய்யும் படியான) வாங்கினதற்குக் கும்பனி ரூ.17 1/2.

*(12) 1829*

விடோஜீ ஸோன்ஜீ - மூலம் பட்டுப்பூச்சிகளை[308] வாங்கினதற்கு ரு.8

*(13) 1829*

வேட்டைமகால்[309] மருதையின் மூலம் வனபூஷண மென்னும் பறவைகள் 10 வாங்கினதற்கு ரூ.1

*(14) 1829*

மேரு கோஸாவியின் மூலம் சிங்கள தேசத்திய குரங்குகளை வாங்கினதற்கு ரூ.15

*(15) 1829*

செக்கிமுக்கிக் கல்லுகள்[310] வாங்கினது வராகன்புலி 80 கூடத்தின் மரப்பெட்டி-8 பணம்-25 காசு-60

*(16) 1829*

மகமத் மூலம் ப்ரூஸ்[311] 100 வாங்கின வகையில் ரூ.15—8-3

*(17) 1829*

Resident John Phype மூலம் சென்னப்பட்டணத்தில்Gripitus & Co., இவர்களிடம் சிப்பாய்கள் அநேகவிதமான தேசத்தாருடைய படங்களை வாங்கின வகையில் ரூ51

*(18) 1829*

பட்டாசு இரட்டைசரம் 9க்கு - ரூ. 31 - 8 - 0
பட்டாசு ஒரு சரம் 2க்கு - ரூ. 2 - 8 - 0
வாணங்களின் பெரிய பெட்டி - ரூ. 3 - 8 - 0

கோட்டையில் பட்டு கோசாமி வட்டாரத்தில் வேதமூர்த்தி மகாதேவ பட்டு பட்டுகோசாமி அவர்களுடைய மண்டபத்தை ஸர்கேல் மூலம் சர்காரில் கிரயத்திற்கு வாங்கினது ரூ.400-2-0

*(19) 1829*

ஸரஸ்வதி மகாலில் - தமிழ்ப்புத்தகங்கள் ஆறுமுகம் பிள்ளையினிடம் ரூ.20 வாங்கினது.

---

308. பட்டுப்பூச்சி வளர்ப்பு (பக்கம் 395)

309. வேட்டை மகால் - விலங்குகள் இருக்கும் இடம் (பக்கம் 457)

310. செக்கிமுக்கிக்கல் - சக்கிமுக்கி - தீ உண்டாக்கும் கல்.

311. ப்ரூஸ் - Brush

*(20) 1829*

*ஸ்ரீதாள பத்திரம்[312] ஸ்காந்தபுராணம் பாடல் - 14610*
*கூர்மபுராணம், பாடல் 3711 ரூ.3-10-6*

*(21) 1829*

*சீமைத்துப்பாக்கி மருந்து காஜிஸ்ட்டு? 3க்கு 3-8-0 ரூ வீதம் ரூ.10-8-0*

*(22) 1829*

*ஸ்ரீகாசி க்ஷேத்திரத்திலிருந்து காசித்தம்பிரான்[313] மூலமாய்க் கங்கையின் காவடிகளும், புத்தகங்களும் வாங்கிக்கொண்டு வந்ததற்கு தம்பிரானுடைய வக்கில் நகோஜி மல்ஹார் இடம் கொடுத்தது. கும்பனி ரூ.புத்தகத்திற்கு 299 ரூ.கங்கையை கொண்டு வர 113ரூ.*

*(23) 1829*

*ஸரஸ்வதி மகாலில் உமேத்வார் கிருஷ்ணாசாரிக்கு மாதத்துக்கு 3 வீதம் 7 1/2 ரூ.*

*(24) 1829*

*ஸலங்கபிகடுக்குப்? (ஆண்டியாயிருக்கும்) ஜனங்கள் சாவடியைக்கூட்டி மெழுகி ஒக்கப்படுத்தி தண்ணீரைக் கொண்டு வந்து வைப்பதற்கும், அந்த ஜனங்களில் மத்யஸ்தருக்கும் சாப்பாட்டைக்கொண்டு போய் கொடுக்கவும், மாதம் ரூ.2 வீதம் 2 பேருக்கு ரூ.4*

*(25) 1829*

*பரங்கிப் பேட்டையிலிருக்கும் சிங்கு வைத்தியரின் பிள்ளை நமச்சிவாய வைத்தியருக்கு மாதமொன்றுக்கு ரூ.50*

*(26) 1829*

*பட்டுப்பூச்சியை வளர்க்கும் பட்டுநூல்காரனுக்கு மாதமொன்றுக்கு ரூ.3*

*(27) 1829*

*தாலீம் (கவாத்து) கானாவிற்கு[314] ரூ.5-2-0*
*தமிழ்ப் பள்ளிக்கூடத்திற்கு ரூ.7-11-0*

*(28) 1829*

*தாவீத் பிள்ளையினிடம் ஆங்கிலேயப் புத்தகங்களைத் தயார் செய்வதற்கு ரூ.210*

---

312. தாளபத்திரம் - பனையோலை

313. காசித்தம்பிரான் திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து அதிபர்; இக்கால கட்டத்தில் இருந்த அதிபர் (1798-1836) ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சடையப்ப சுவாமிகள் II ஆவர்.

314. தாலிம்கானா - கவாத்து கானா (பக்கம் 456)

*(29) 1829*

**வியதீபாதத்திற்காக[315] 3க்கு 74 ருக்கே - 56 துட்டு.**

*(30) 1829*

**உடம்பு அசௌக்யமாயிருப்பதால் பெரிய கோவிலிலுள்ள ஜ்வரஹரேஸ்வர [316] சுவாமிக்கு அபிஷேகம் பூஜை நிவேதனத்திற்காக ரூ.21**

*(31) 1829*

**உடம்பு அசௌக்யமாயிருப்பதால் ஆதித்ய ஹ்ருதயம்[317] பாராயணம்,சூரியகாயத்ரீ[318], 3வேளை ஜபித்து அர்கயங்[319] கொடுப்பதும் சூரியபூஜை செய்வதற்கும் 12 நாட்களுக்கு ரூ. 7-4-0.**

---

315. வியதீபாதம் - இது 27 யோகங்களுள் ஒன்று; இந்த யோகத்தில் சுப காரியங்கள் செய்தல் விலக்கப்படும். (பஞ்சாங்கங்களில் வாரம், திதி, நக்ஷத்திரம் ஆகியவை வரிசையாக நாடோறும் குறிக்கப்படுவது போல யோகங்களும் குறிக்கப்பெறும். அமிர்தயோகம், சித்தயோகம், மரணயோகம் என்பன 27 யோகங்களிலும் வேறானவை.)

316. ஜ்வரஹரேசுவரர் - சுரத்தினால் வருந்துவோர் இந்தச்சுவாமிக்கு அபிஷேகம் பூசை நடத்துவித்தால் அந்நோயினின்று விடுபடுவர்.

317. ஆதித்யஹ்ருதயம் -
ஆதித்யஹ்ருதயம் பவிஷ்யோத்தர புராணத்தில் சுமந்திர ஸ்தானிக சம்வாதமாகத் தொடங்கிப் பிறகு கிருஷ்ணார்ஜுன சம்வாதவாக மலரும் "ஆதித்யஹ்ருதயம்" என்னும் தோத்திரம் ஒன்று உள்ளது. இது மொத்தம் 170 சுலோகங்களாலியன்றது. அதில் 142ஆவது தொடங்கி 153 ஆவது முடிய உள்ள 12 சுலோகங்கள் சூரியபரத்வத்தைக் கூறுகின்றன. இவை அனைத்தும் "தத்ஸவிதுர்வரேண்யம்" என்ற மகுடத்துடன் முடிகின்றன. இப்பகுதிக்கு மட்டும் தனியாக ஒரு பலஸ்ருதி கூறப்படுகிறது. இதற்குப் பின்னால் சூரியனின் த்வாதச நாமஸ்தோத்திரம் உள்ளது. இவைகளை எல்லாம் சேர்த்தே பாராயணம் செய்வது மரபு.

இந்த ஆதித்யஹ்ருதயத்தின் தொடக்கம்:- "ஸ்ரீகணேசாய நம: ஸ்ரீபாஸ் கராய நம: ஸ்தானிக உவாச என்பதாகும். மேலும்,

"கதமாதித்யமுத்யம் தம் உபதிஷ்டேத்விஜோத்தம
ஏதன்மே ப்ருஹி விப்ரேந்திர ப்ரபத்யே சரணம் தவ" ll என

வால்மீகி ராமாயணத்தில் யுத்த காண்டத்தின் தொடக்கத்தில் 31 ஸ்லோகங்களாலான சூரிய ஸ்தோத்திரம் இடம் பெற்றுள்ளது. அகத்திய முனிவர் ஸ்ரீராமபிரானுக்கு இத்தோத்திரத்தை உபதேசித்தார். ஆதிகவி அருளியுள்ளார். இத்தோத்திரத்தில் சூரியனுக்கு 138 பெயர்கள் சொல்லப்பட்டு வணக்கம் கூறப்படுகிறது.

பகைவர்களை அழித்து வெற்றியையடையவும், பாவங்களை அழித்துக் கொள்ளவும், கவலைகளிலிருந்தும் நோய்களிலிருந்தும் விடுதலை பெறவும், நீண்ட ஆயுளுடன் வாழவும் இன்றும் பலரால் இது தினமும் பாராயணம் செய்யப்படுகிறது.

ஜாதகத்திலோ அல்லது கோசாரரீதியாகவோ ஒருவனுக்குச் சூரிய தோஷத்தால் தீங்குகள் ஏற்பட்டால் இதைப் பலமுறை ஜபித்துப் பாராயணம்செய்தல் மரபு. இத்தோத்திரத்தில் சூரியனே பரம்பொருளாகக் கூறப்படுகிறான்.

" ஏஷப்ரஹ்மாச விஷ்ணுஸ்ச சிவஸ்கந்த: ப்ரஜாபதி:
மஹேந்த்ரோ|தனத: காலோ யமஸ்ஸோமோ ஹ்யபாம்பதி: "

என்பது இதில் 8ஆவது சுலோகம்.

318. சூர்யகாயத்ரீ - "அஸ்வத்வஜாய வித்மஹே பாஸஹஸ்தாய தீமஹீ தன்னோ சூரிய ப்ரசோதயாத்" என்பது சூர்யகாயத்திரி

319. அர்கயம் - அருக்கியம் - மந்திரம் கூறி இருகைகளாலும் நீர்வார்த்தல்.

*(32) 1829*
பொங்கலுக்காக ஸரஸ்வதி மகாவில் ஸ்ரீபிள்ளையாருக்கு 1 அணா, சரஸ்வதிக்கு 1 அணா, ஸ்ரீபாபாஸ்வாமியார் படத்திற்கு 1 அணா, = 3 அணா

*(33) 1829*
பெரிய கோவில் ஸ்வாமிக்கு கிறாம்பினால் செய்யப்பட்ட விசிறியை அனுப்பித்ததற்குத் தக்ஷிணை அணா-1

*(34) 1829*
மாரியம்மன் கோவில் கோதண்டராமஸ்வாமிக்கு[320] மொயின் கும்பனி ரூ.4725—1-9.

*(35) 1829*
ஆச்ரித[321] நாகபட்டு சதாசிவபட்டு லாண்டகே அவர்கள் வர்ஷபசு யாகஞ் செய்ததற்கு— திவான் சாயேப் பார்க்கப் போனபொழுது யக்ஞேஸ்வரருக்கு தக்ஷிணை சக்.20

*(36) 1829*
மாதவஸ்வாமியாருடைய கொள்ளுப்பேரன் வெங்காஜி பண்டிதருடைய தம்பிப்பிள்ளை ரகுநாத கோசாமிக்கு சக்.6

*(37) 1829*
ஆஷாட[322] சுத்த பௌர்ணிமை - சன்னியாசிகளுக்கு வியாஸ பூஜைக்காக கருந்தட்டாங்குடியில் - முகுந்த ஸ்வாமியாருக்கு சக்.2-2 1/2.
படித்துறை வெங்கடேசப் பெருமாள்கோவிலுள்ள[323] சன்னியாசிக்கு சக்5.
ஐயங்குளம் மண்டபத்திலுள்ள பிரம்மானந்த ஸ்வாமியாருக்கு சக்.2-2 1/2.
அடக்கமான சன்னியாசிகளுக்குப் பால ஸ்வாமியாருக்கு ரூ.100
கும்பகோணம் அஹோபில யதீஸ்வரருக்கு[324] ரூ.100

---

320. கோதண்டராமசாமி - மாரியம்மன் கோயிலுக்கு மேற்குப்பக்கத்தில் உள்ளது. இக்கோயிலிலுள்ள கோதண்டராமர் சிலை நீடாமங்கலத்துக்கு அடுத்த பூவனூரிலிருந்து கொணர்ந்து அமைக்கப்பெற்றது (பக்கம் 191 அடிக்குறிப்பு 55)

321. ஆச்ருத - அண்டியவர்கள்

322. ஆஷாடம்—ஆடி; சுத்தம்—வளர்பிறை; பௌர்ணமி—முழுமதி.

323. படித்துறை வெங்கடேசப்பெருமாள் - (பக்கம் 213இல் 30) முதலில் வடவாற்றின் தென்கரையிலிருந்தது; பின்னர் வடகரையில் அமைக்கப்பெற்றது. (பக்கம் 190இல் அடிக்குறிப்பு 50)

324. அஹோபில யதீஸ்வரர் - ஆழ்வார்திருநகரியில் தோன்றிய வண்சடகோபர் என்பவரால் ஆந்திரநாட்டில் தோற்றுவிக்கப்பட்ட மடம் அஹோபில மடம். கும்பகோணத்துக்கு அருகில் நரசிம்மபுரத்தில் அகோபில மடத்தின் கிளையொன்றிருந்தது. அக்கிளை மடத்தில் இருந்த சன்னியாசி இங்குக் குறிப்பிடப்பட்டுள்ளார்.

உத்திராதி மடத்தின் - மஹாதானம் செய்தவகையில் ரூ.100
ஸ்ரீ ஸத்யதர்ம ஸ்வாமியாரிடமிருந்து ஸ்ரீமுகம்[325] வந்ததற்காக ரூ.15-14-0

*(38) 1829*
பெரிய அணா[326] 24க்கு ரூ.3, பெரிய அணா 4[327] க்கு ரூ.4-0

*(39) 1829*
சிவங்கோட்டை[328]யிலிருந்து பெரிய கோவிலுக்குப் போவதால் தக்ஷிணை ரூ.6-துட்டு[329]-9 1/2.

*(40) 1829*
கல்யாணமகால்[330] பாயம்மா, பாயிம்மா இருவரும் புதிய அரண்மனையை கட்டினதற்கு வாஸ்து சாந்தி[331] செய்ததற்கு 181-15-0

*(41) 1829*
மேற்கூறியவர்கள்[332] திருவையாறில் - அன்னசத்திரம் போட்டதினால் புண்யாசனத்திற்கு[333] சக்-1.

*(42) 1829*
மகா. ஸ்ரீ. ஸ்ரீ. திவான் சாஹேப்[334] நாலு வீதிகளிலும் சுற்றிவரப் போனபொழுது அந்தந்த இடத்திலுள்ள அல்லாக்களுக்கு அல்லாப்பண்டிகைக்காக இனாம் ரூ.325

*(43) 1829*
பெரிய ஆவுசாப் மா.ராஜஸபாயி[335] அவர்களுடைய தெவசம் வைசாக சுத்த ஏகாதசி[336] அதற்கு ரூ.15-10-6

---

325. ஸ்ரீமுகம் - கடிதம்

326. பெரிய அணா என்றது ரூபாயின் 8இல் 1 பங்கு அதாவது இரண்டணா ஆகலாம்.

327. 4 என்றது தவறு.

328. சிவங்கோட்டை - சிவகங்கைக் கோட்டை

329. துட்டு என்பது ஒரு ரூபாயின் 48இல் 1 பங்கு.

330. கல்யாணமகால் என்பது இரண்டாம் சரபோஜியின் காமக்கிழத்தியர் இருந்த இடம் (பக்கம் 329)

331. வாஸ்துசாந்தி - வாஸ்துபுருஷனை நோக்கிச் செய்யும் சாந்தி (வாஸ்து புருஷன் - கிருகதேவதை)

332. யார் என்று தெரியவில்லை.

333. புண்யாசனம் - புண்யாஹவாசனம் - சுத்தி செய்யும் சடங்கு விசேடம்

334. திவான்சாஹேப் என்றது இரண்டாம் சரபோஜியை

335. ராஜஸபாயி என்றது இரண்டாம் துளஜாவின் மனைவியருள் ஒருவர். போ.வ.ச.பக்.125.

336. வைசாக - வைகாசி; சுத்தம்-வளர்பிறை; ஏகாதசி-11ஆம் நாள்

*(44) 1829*

வேதசாலையில் ருக்வேத புத்தகத்தை எழுதுகிற கிருஷ்ணாசாரே எழுதிய கிரந்தம் சுமார்— ஏழாம் அஷ்டகம்[337] 1462, எட்டாம் அஷ்டகம் 1734 = 3196 க்கு ரூ.4-10-6

*(45) 1829*

கொழும்புக்கு யானையை வாங்குவதற்குப் போனவருக்கு கும்பினி தபாலில் கடிதம் அனுப்ப அணா 11

*(46) 1829*

ஸர்காருக்கு - அர்பத்நாட்[338] அவர்கள் 2 (ஸாரஸ)சக்ரவாகப்[339] பக்ஷிகளை அனுப்பிக்கொண்டு வந்த மனுஷனுக்கு ரூ.8

*(47) 1829*

பட்டுப்பூச்சியிலிருந்து பட்டு எடுப்பதற்குக் கூலி.8

*(48) 1829*

பட்டுக்கு நாகப்பழ நிறமும். பச்சை நிறமும் போடுவதற்குக்கூலி ரூ.1-11-0

*(49) 1829*

சீமையிலிருந்து வாங்கிய சாமான்கள் சென்னைக்கு வந்து தஞ்சாவூருக்கு வந்ததற்கு வண்டி வாடகை 2க்குக் கூலி ரூ.44-2-3

*(50) 1829*

ஸரஸ்வதி மகாலில் - தமிழ் எழுத்து தமிழ்ப் பாஷையிலே வேதாந்த விஷய வைஷ்ணவ மதம் புத்தகத்தைப் பரிசீலித்து எழுதுகிற திருவேங்கிட பிள்ளைக்கு[340] ரூ.2—8-9.

*(51) 1829*

வத்ஸலிங்கம் பிள்ளையின் மூலம் சவுரிக்குப்[341] பச்சைச்சாயங் கொடுக்க ரூ.8

*(52) 1829*

ஸரஸ்வதி மகால் - ஓலைப்புத்தகம் எழுதுகிற வெங்கடராயப் பிள்ளையானவன் ஸ்காந்தம்[342] பாடல் சுமார் 1175க்கு ருக்கே-4 [343]

---

337. அஷ்டகம் - இருக்குவேதத்தின் பிரிவு; இருக்குவேதம் எட்டு அஷ்டகங்களையுடையது.

338. அர்பத்நாட் - ஆட்சிப்பகுதி

339. சக்ரவாகம் - ஸாரஸ - இரவில் இணையைப்பிரிந்து வருந்துவதாகக் கூறப்படும் பறவை.

340. திருவேங்கிடம்பிள்ளை - வைத்தியநூல்கள் எழுதியவரும் இவரும் ஒருவரா வேறா என்று தெரியவில்லை.

341. சவுரி - சாமரம்

342. ஸ்காந்தம் - வடமொழியில் உள்ள 18 புராணங்களில் ஒன்று; இது லக்ஷம் கிரந்தமுடையது

343. ருக்கே என்பது "ஒரு அணாவின் 12இல் 1பங்கு" என்று கூறப்பெறுகிறது. 4 ருக்கே என்பது ஒரு ரூபாயின் 48இல் ஒரு பங்கு ஆகும். ஆகவே இங்கு வேறோர் பெரிய நாணயம் விடுபட்டுள்ளது என்று தோன்றுகிறது.

*(53) 1829*

வருஷாந்தரத்தில் 8 நாய்களை அடித்துக்கொண்டு வந்தவனுக்கு ரூ.0-11-0

*(54) 1829*

மசால்ஜீ நீலகிரி மலைக்குப் போவதற்காகப் படிச்சிலவு ரூ.1-12-6

*(55) 1829*

ஆடுகளை வாங்க இராமனாதபுர ஸமஸ்தானத்திற்குப் போகிறவனுக்கு படிச்சிலவுக்காக ரூ.4

*(56) 1829*

பளூருக்கு[344] காதி[345] வஸ்திரங்களை வாங்கப் போனவனுக்கு நாளொன்று படிச்சிலவு ரூ.0-4-0

*(57) 1829*

புலியைப் பார்க்க கபிஸ்தலத்திற்குப்[346] போன ஆஸாமிகளுக்குப் படிச்சிலவு நாளொன்றுக்கு 4 அணா வீதம்.

*(58) 1829*

வெங்கடசாமி புலித்தோலை 45 நாளில் கொண்டு வந்ததற்கு ரூ.4-8-0.

*(59) 1829*

ஸ்ரீரங்கப் புட்டணத்திலிருந்து பெண்புலியைக் கொண்டு வந்ததற்கு படிச்சிலவு ரூ.4-8-0

*(60) 1829*

மதுரை தாலூகா பெரிய குளத்தில் அகப்பட்ட சிறுத்தைப்புலியை 20 நாளில் கொண்டு வந்தவனுக்கு ருக்கே 1.

*(61) 1829*

அரியலூரின் பாளையக்காரன் விஜயமுத்து ஈளமளவ நாயனார் பரலோகமடைந்ததினால் அவனுடைய தம்பி விஜயமுத்து ஈளரங்கப்ப மளவராயன்னைனாவுக்கு வேலையில் நியமிக்கப் போனதற்காகப் படிச்சிலவு 3 நாட்களுக்கு ருக்கே 5 ரூ.

*(62) 1829*

*John Phype*[361] *Resident* - நீலகிரி மலைக்கு போகுவதால் கூடப்போகிறவனுக்குப் படிச்செலவு ரூ.1-8-0

---

344. பளூர் - பழூர்; இது பாடல்பெற்ற சிவத்தலம்

345. காதி - காடா எனப்படும் இரட்டுத்துணி ஆகலாம்.

346. கபிஸ்தலம் - கும்பகோணம் திருவையாறு பாதையிலுள்ள ஊர்

*(63) 1829*

கொல்லம்பட்டிக்குச் சென்று புலியைப் பிடித்துக்கொண்டு வர ரூ.2

*(64) 1829*

ஸர்காருக்கு அப்பைய்ய தீக்ஷதருடைய[347] புத்தகங்கள் கொண்டுவர ஒடையார்பாளயத்திற்குச்[348] சென்றவனுக்கு நாளொன்றுக்குப் படிச்சிலவு - 2 அணா

*(65) 1829*

தரங்கம்பாடி கவர்னர்[349] - சர்காருக்குக் கடிதமும் சாமானும் அனுப்பித்த வக்கீலுக்கு மறுபடியும் திரும்ப ஊருக்குப் போக படிச்சிலவு ரூ.13-11-0

*(66) 1829*

புரோகிதர் பாளம்பட்டு பட்கோசாமி[350] பரலோகமடைந்ததற்கு கும்பனி ரூ.400 கொடுக்கப்பட்டது.

*(67) 1829*

ரா.வெங்காசாரே-சர்காருக்கு நவக்கிரஹங்களைச் செய்துகொண்டு வந்து கொடுத்ததற்கு இனாம் ரூ.150

*(68) 1829*

ரஞ்சனகடின் நவாப் அவர்களுடைய சோப்தாருக்கு ரூ.15

*(69) 1829* மூக்கினால் புல்லாங்குழல் வாசிக்கிற ஈஸ்வர சாஸ்திரிக்கு இனாம் ரூ.20

*(70) 1829*

திருநெல்வேலியிலிருக்கும் சொக்கலிங்கம் ஜாதி வெள்ளாளன்-முக்தாம்பாள்புரம் சத்திரத்தில் ஆங்கிலேயப் படிப்பைப் படித்து தன் ஊருக்கு விடுமுறை பெற்று போவதால் ரூ.10.

*(71) 1829*

திவான்சாஹேப்[351] திருவையாரிலிருந்து கோட்டைக்கு வருகையில் வழியில் வேட்டைக்காரன் ஜீரண துர்த்தி என்னும் பிராணியை விட்டு வேடிக்கையைக் காட்டினதற்காக இனாம் 0-4-0 ரூ.

---

347. அப்பைய தீக்ஷிதர் - வடமொழி வல்லுநர்; சிறந்த சிவபக்தர், இவரது காலம் கி. பி. 1520–1593. இவர் விதிரஸாயனம், அதன் உரை, உபக்ரம் பராக்ரமம், வாத நக்ஷத்ரமாலை, மயூகாவளி , சித்ரபடம் என்ற நூல்களை இயற்றியவர் (பக்கம் 253). இவர் அலங்கார சாஸ்திரத்தில் சித்ரமீமாம்ஸயை, குவலயாநந்தம் ஆகியவற்றை இயற்றினார். சித்ரமீமாம்ஸையில் முன்னோரது கொள்கைகளின் ஆராய்ச்சியும், குவலயாநந்தத்தில் அர்த்தாலங்காரவிளக்கத்தையும் செய்துள்ளார். (பக்கம் 687, பி. சா. சுப்பிரமணிய சாஸ்திரி, வடமொழி இலக்கிய வரலாறு.)

348. ஒடையார்பாளையம் - உடையார்பாளையம்.

349. தரங்கம்பாடி கவர்னர்-லாரிட்ஸ் கிரிஸ்டென்சன் ஆளுநர்..

350. பாளம்பட்டுபட்கோ சுவாமி (பக்கம் 224)

351. திவான்சாஹேப் என்றது இரண்டாம் சரபோஜியை

*(72) 1829*

*சிரஸ்தேதார்-வெங்கட்றாவ் அவர்களுடைய கலியாணத்திற்காக ரூ. 600 இனாம்.*

*வேட்டைமகால்[352] முத்தியான் சர்காரில் சிக்ஸி கிளிகள் 2ஐ கொண்டு வந்து கொடுத்ததற்கு கும்பனி ரூ. 200க்கு தங்க ரூபாய் 100[353]*

*(73) 1829*

*புரந்தர விட்டல் அவர்களுடைய புண்ய திதிக்கு ரூ.10*

*(74) 1829*

*வேதமூர்த்தி-பாளம்பட்டு நாகோபா முதலியோர் அக்னி இஷ்டி[354] செய்வதற்காக ரூ.10*

*(75) 1829*

*மலங்க பகீருடைய கூட்டம் சர்காரை வந்து பார்த்ததற்காக இனாம் ரூ. 100*

*(76) 1829*

*குஜாராத்தி ராஜாராமிடம் நரஸிம்ஹ மேஹதாவினுடைய புண்ய திதிக்காக ரூ. 10*

*(77) 1829*

*இராதா பாணியேவ தீக்ஷித ஸ்வாமியின் புண்ய திதிக்கு ரூ. 50 ஸர்காருடைய தச்சன்*

*இராமசாமி ஆசாரியைப் புலியானது அடித்து இரணமடைந்தவன் இறந்ததினால் இனாம் ரூ.10.*

*(78) 1829*

*மைசூரிலுள்ள குருமலசாமு என்பவன் ஊரிலிருந்து புலியைக் கொண்டு வந்து கொடுத்ததற்கு இனாம் ரூ. 20*

*(79) 1829*

*நவவித்யா கலாநிதி பள்ளிக்கூடத்தைக் கட்ட மரணத்திற்குக் கொடுக்கும் துகையிலிருந்து ரூ.100.*

*தவகளை என்கிற துலுக்கனுக்கு பாக்கி ரூ. 0-2-6*
*ஸர்காரின் விகடகவி இருவரும் வேஷம் பூண்டு வந்ததற்கு இனாம்—குருவுக்கு ரூ. 1 வெங்கடசுப்பாவுக்கு ரூ. 1*

---

352. வேட்டைமகால் - விலங்குகள் பறவைகள் முதலியன பராமரிக்கப்படும் இடம் என்னலாம் (பக்கம் 45)

353. தங்க ரூபாய் - மோஹரா எனப்படும்; இங்கு 5,7 1/2,10,15 ரூபா மோஹராக்கள் உண்டு; ஆகவே ரூ.200 தங்கரூபாய் 100 என்பது பொருந்தாது (பக்கம் 152)

354. அக்னிஇஷ்டி - அக்னிஷ்டோமம் என்ற யாகம் ஆகலாம். அக்னிஷ்டோமமாவது வசந்தகாலத்தில் ஐந்து நாள்களில் செய்யும் யாகம் (பக்.372)

*(80) 1829*

*John Phiper saheb Resident-அவர்கள் ஸர்காருக்கு பட்டாணியின் கொத்தை அனுப்பினவனுக்கு இனாம் ரூ. 1.*

*(81) 1829*

*ஸர்காரிலுள்ள பிஸ்தோல்[355] துப்பாக்கி ஜோடி 1க்கு ஸங்கிராம பண்டாரத்தி[356]லிருந்து ரகஸ்யமான வேலையைச் செய்துகொண்டு வந்து கொடுத்ததற்கு இனாம் கும்பனி ரூ. 0-8-0*

*(82) 1829*

*ஸர்காரின் நாய்கள் கட்டிலிருந்து ஓடி ஒட்டனுடைய பன்றியைக் கொன்று விட்டதற்கு இனாம் ரூ.1*

*(83) 1829*

*ஹுஜூர்-கோல்?மூன்றைக் கொண்டு வந்து கொடுத்த சொந்தக்காரனுக்கு இனாம் 0-6-0 அணா.*

*(84) 1829*

*சி.மாமாஜீ மோஹிதே அவர்களுக்கு சரீரம் (அ) சௌக்யமாயிருந்ததை Doctor Bell துரையானவர். வைத்தியஞ் செய்து தேவலை செய்ததற்கு இனாம் ரூ. 2000*

*(85) 1829*

*ஸர்காரில்-மல்ஹார்ஜீ காடேகெஞ்சிணியின் வேஷம் பூண்டு ஆடினதற்கு இனாம் ரூ. 10.*

*(86) 1829*

*சௌ. மா. அஹில்யாபாயி சாயேப்[357]-அவர்களுக்குப் பூஜை சொல்லுகிற லக்ஷ்மீபாயியின் குமாரன் குமாரத்திகளுடைய கலியாணத்திற்காக இனாம் 50.*

*பட்டுப்பூச்சி திருட்டுப் போனதைப் பிடித்துக் கொண்டு வந்து கொடுத்தவனுக்கு இனாம் 1 அணா*

*(87) 1829*

*துகாராம்[358] ஸ்வாமியின் புண்யதிதிக்காக வழக்கப்படி கொடுத்தது ரூ. 6*

*(88) 1829*

*செர்மின்[359] தேசத்திய கிளிக்கு இனாம் ரூ. 10.*

---

355. பிஸ்தோல் - Pistol - கைத்துப்பாக்கி

356. ஸங்கிராமபண்டார் - ஆயுதசாலை ஆகலாம் - ஜிராத்கானா (பக்.455)

357. அஹில்யாபாயி - இரண்டாம் சரபோஜியின் மனைவி (போ.வ.ச.பக்.134)

358. துகாராம் - பக்த லீலாம்ருதத்தில் கூறப்பட்ட விஷ்ணுபக்தர் (அபிதான சிந்தாமணியில் விரிவு காண்க)

359. செர்மின் - German

திவான் சாஹேப்[360] வேட்டைக்குப் போனபொழுது, நாராயண பக்ஷியைக் கொண்டு வந்து கொடுத்த வேட்டைக்காரனுக்கு இனாம் ரூ. 1-1-0.

*(89) 1829*
காசியிலிருந்து கங்கையின் காவடிகளையும் புத்தகம் வகையறாக்களையும் கொண்டு வந்தவனுக்கு இனாம் ரூ. 30.

*(90) 1829*
ஜைலாலீ பகீருடைய கூட்டம் வந்து சர்க்காரைப் பார்த்ததற்கு இனாம் ரூ. 20.

*(91) 1829*
முக்தம்மாபுரம் சத்திரத்தின் வைத்தியர் கஸ்தூரி ரங்கப்பிள்ளையானவர் ஹுஜூருக்கு[361] அப்ரக சிந்தூரம் 1 3/4 சேர் கொண்டு வந்து கொடுத்ததற்கு இனாம் ரூ. 10.

மாயவரத்தின் பாதரி Burmghatic அவருக்குத் தருமம் செய்வதற்கு இனாம் ரூ. 200.

*(92) 1829*
ஸர்காரின்-யந்திரிதுமின்? ஜனங்கள் கவாத்து[362] செய்து வேடிக்கை காட்டினதற்கு இனாம் ரூ. 50.

*(93) 1826*
(1) நாகப்பட்டணத்திலுள்ள ஸ்ரீநீலாயதாக்ஷி[363] அம்மனுக்குக் கும்பாபிஷேகத்திற்காகத் துஜக்கு சாபான் 26உ சக். 100.

*(2) 1826*
தாஸ்தான்மகால்[364] தோட்டத்திலுள்ள ஸ்ரீவேதவிநாயக ஸ்வாமிக்கு ரூ. 16-3-0 நாளொன்றுக்கு 6 பை வீதம் ஒரு வருஷத்திற்கு.

*(3) 1826*
ஸ்ரீஜகன்னாத க்ஷேத்திரத்தில்[365] ஜகன்னாத ஸ்வாமிக்கு தினந்தோறும்[366] நிவேதனஞ் செய்ய வருஷமொன்றுக்கு முத்திரை ரூ. 720

---

360. திவான் சாஹேப் என்றது இரண்டாம் சரபோஜியை

361. ஹுஜூர் என்றது இரண்டாம் சரபோஜியை

362. கவாத்து - உடற்பயிற்சி

363. நீலாயதாக்ஷி - நாகைக் காரோணம் எனப்பெறும் நாகப்பட்டினத்தில் சிவன்கோயில் அம்பாளின் திருநாமம்.

364. தாஸ்தான் மகால் - நெற்களஞ்சியம்

365. ஜகன்னாத க்ஷேத்திரம் - பூரி ஜகந்நாத் (பக்.117-118)

366. தினந்தோறும் - நாடோறும் ரூ.2/- வீதம் வருஷம் ஒன்றுக்கு ரூ.720 (912 சி - 38-7)

*(4) 1826*

*ம. கா. ஸ்ரீ. ஸ்ரீ. திவான் சாஹேப்[367] அவர்கள் கொடுத்த 16 தானங்களில்[368] ஸ்ரீபெரிய கோவில் ஸ்வாமிக்கு தங்க விருஷ வாகனம்[369] தானங் கொடுத்த தினம் ஸ்வாமி நான்கு வீதிகளிலும் புறப்பட்டு வந்ததற்கு ரூ. 156-2-0.*

*ஸ்வஸ்தி வாசன[370] பிராமணாளுக்கு ஒருவருக்கு 1 அணா வீதம் 2492,பாகவதருக்கு 150.*

*ஆக மொத்தம் 164-2-0[371]*

*(5) 1826*

*காசியிலிருக்கும் பண்டிதர் ராதாகாந்த்த பட்டாசாரி-1 கௌரிமோஹன பட்டாசாரி இவர்களுக்கு வித்வத்ஸம்பாவனை ஒவ்வொருவருக்கு ரூ. 100 வீதம் இருவருக்கும் ரூ. 200 காசீயிலிருக்கும் அய்யாரப்ப தம்பிரானிடம்[372] அனுப்புவதற்கு சிந்தாமணி பட்டு தாதாரானவர் தம்பிரான்வசம் காசி முத்திரை ரூ. 150 கோவிந்தபட்டு மாயதேவர் மூலம் செலுத்தி ஹூண்டியை சர்காருக்கு கொண்டுவந்து கொடுத்து ஹூண்டாவளி[373] பாபத்து வட்ட[374] 150 ரூ செலவானபடியால் ஷெ சிந்தாமணி பட்டு தாதாருடைய 150 ரூ. ஸர்காரவர்கள் கொடுத்து காசீயில் ஷெ தம்பிரானிடமிருக்கிறபோது, பாக்கி வரவு ரூ. 50க்குப் பதிலாக கொடுப்பதற்குக் கும்பனி ரூ. 50 ஐன் 4 இதற்கு முத்திரை ரூ. 1/2 காசீயில் கொடுப்பதற்காக முத்திரை வட்ட 100க்கு 8 ரூ வீதம் ரூ. 54.*

*(6) 1827*

*சிவகங்கையில் தென்கரையில் அக்னிஷ்டோம யக்ஞம்[375] செய்வதற்காக சக். 394.3.*

---

367. திவான்சாஹேப் என்றது இரண்டாம் சரபோஜியை

368. 16 தானங்கள்; நிலம், இருக்கை, தண்ணீர், ஆடை, விளக்கு, உணவு, தாம்பூலம், குடை, சந்தனம், ஜபமாலை, பழம், படுக்கை, செருப்பு, பசு, தங்கம், வெள்ளி (பக்கம் 195)

369. விருஷ - விருஷப - நந்தி (காளை)
(மரத்தினால் செய்யப்பெற்று வெள்ளித்தகடு வேய்ந்தது இப்பொழுது கோயிலில் காணப்படுகிறது; இதற்குப் பொன்முலாம் பூசியிருத்தல் வேண்டும்.)

370. ஸ்வஸ்திவாசனம் - சுவாமி புறப்பாட்டில் ஓதப்படும் வேதம்

371. 165-2-0 என்றிருக்க வேண்டும்

372. அய்யாறப்பத்தம்பிரான் - காசிகுமாரசாமி மடத்தில் (திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்துச் சார்பில்) இருந்த தம்பிரான் (பக்கம் 426)

373. ஹூண்டாவளி - காசோலை

374. வட்ட-வட்டம்; 100க்கு ரூ 8 என்று இதில் இறுதியில் காணலாம். தென்னாட்டவர் காசிக்குத் தொகைகள் அனுப்புவதாயின் அந்நாள்களில் திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்தில் செலுத்தினால் காசி குமாரசாமி மடத்தில் கொடுக்கப்படும் - என்று தெரிகிறது.

375. அக்னிஷ்டோம யக்ஞம் - அக்னிஷ்டோமம் என்ற யாகம்; இது தலையாய யாகம்; வசந்த காலத்தில் ஐந்து நாள்களில் செய்து முடிப்பது (பக்.372)

*(4) 1844*

*அர்ஜி[376] வகையறா.*

*(5) 1799*

*கும்பகோணம்ஹுஃபாவின்நில வளங்களின் டைரி.*

*6 (1) 1843*

*கும்பகோணம் ஸ்ரீ ஆதி கும்பேஸ்வர கோவிலுக்கு கும்பாபிஷேகமாகி[377] 43 வருஷங்களாயின. ஆகையால் சுவாமி அம்மன் வகையறா கர்பகிரஹத்தின் மேல் மண்டபம் தளவரிசை வகையறா சிதிலமாகி யிருப்பதாலும் அம்மனுடைய கலசம் திருட்டுப் போயிருப்பதாலும் அதனுடைய ஜீர்ணோத்தாரஞ்[378] செய்யத் திருப்பணிக்கு ரூ. 5000 கும்பாபிஷேகத்திற்கு ரூ. 5000 வேண்டியிருக்கிறது.*

*நாகூர் வகையறா வியாபாரிகளிடம் யாசகஞ் செய்தது ரூ. 2000. கும்பாபிஷேகத்திற்கு முகூர்த்தம் தை மீ 14 உ பார்த்திருக்கிறது. கும்பாபிஷேகத்திற்குப் பாக்கி வேண்டிய ரூபாயை ஸர்காரிலிருந்து கொடுக்க வேண்டுமென்று கும்பகோணம் கோபு அருணாசல செட்டியார் கொடுத்த மனு.*

*(2) 1843*

*தஞ்சாவூரிலிருக்கும் பெரியகோவில் வகையறா புறோகிதம்[379] அத்யாண[380] பட்டு வெங்கடராமா அவதானி[381] ஸர்காருக்குக் கொடுத்த மனு.*

*சோளராஜாவிற்கு முன்னால் இவ்வூரில் மேலவீதியில் நாலு ஐந்து கட்டுள்ள வீடுகட்டி குடியிருந்து வந்தேன். நம்முடைய முன்னோர்கள் சர்கீலின் வேலையைப் பார்த்து, இராஜ்யத்தை ஸ்தாபனஞ் செய்தார்கள். சர்காருக்கு மிக்கலாபத்தை வரும்படி செய்து ஸர்காரில் வேலைபார்த்து வந்தார்கள். தற்போது ஸோமநாதபண்டிதர் தம்முடைய வீட்டுக்கு மேலண்டை பக்கத்தில் வீடு வாங்கியிருப்பதால் என்னுடைய வீட்டை விலைக்கு வாங்காமல் மொரட்டுத்தனமாய் அபகரித்தார். இடித்து விட்டார். அவ்விஷயத்தில் சர்காரில் மனு கொடுத்தேன். இது வரையிலும் தீரவில்லை. வீடில்லாமல் மிகவும் சிரமப்படுகிறேனாகையால் கிருஷ்ணதீக்ஷிதரைக் கேட்டதில் அவர் தன்னுடைய வீட்டில் குடியிருக்க மறுபடியும் இடம் கொடுத்தார். அதற்கு இப்பொழுது ஸர்காரில் வீட்டைக் காலி செய்ய வேணுமென்று உத்திரவிட்டதால் அப்படிச்செய்யாமல் ஸர்காரில் எனக்குக் குடியிருக்க வீடுகொடுக்க வேணுமென்று கொடுத்த மனு.*

---

376. அர்ஜி - விண்ணப்பம்

377. கி.பி.1801இல் கும்பகோணம் ஆதிகும்பேசுவரர் கோவில் கும்பாபிஷேகம் நடந்தது என்று வேறோர் ஆவணத்தால் தெரிகிறது (பக்.198)

378. ஜீர்ணோத்தாரம் - பழுதுபார்த்தல்

379. புரோகிதம் - வைதிகச்சடங்குகளை நடத்துதல்

380. அத்யான - அத்தியயனம் - வேதம் ஓதுதல்

381. அவதானி - வேதங்களில் தேர்ச்சி பெற்றவர்.

*(3) 1843*
ஞாபகக் குறிப்பு :

கன்னடியன் பஞ்சுவஸ்தாதுக்கு ஜாதிப்ரஷ்டனான் என்று (கெட்டுப்போய் விட்டானென்று) பங்கதியில் (வரிசையில்) உட்காரவைத்துக் கொள்ளவில்லை. ஷெ சங்கதி சர்காரில் தெரிவிக்கப்பட்டது. ஸர்காருடைய உத்திரவன்னியில் இப்போர்ப்பட்ட காரியத்தைச் செய்ததினால் அந்த 4 குத்தவாளிகளுக்கு ஸர்காரில் தண்டித்தார்கள்.
தண்டனை

முக்கியமாக ஆரம்பித்தவனானவீரண்ணா ஸ்ரீமத்வீரஸிம்ஹேந்திரச்ரேயஸில்-ஷெயாருடைய தலையில் எச்சிலெலைகளைக் கொடுத்து அங்குள்ள சத்திரம் வகையறாவைச் சுற்றி வந்து விடும்பொழுது பிரம்பால் முழங்காலின் கீழே 12 அடிகளை அடித்துவிட்டு விட்டார்கள்.

பாக்கி பேரையும் கோட்டையில் மேல் தண்டித்தபடி தண்டனை செய்து 6 அடிகளை அடிக்கிறது. பாக்கி 4 பேர்களையும் ஷெ பிரகாரம் செய்து எச்சலை மாத்திரம் கொடுத்து விடுகிறது. ஸ்வாமிக்கு அபராதம் மட்டும் 6 பணம்.

*7.1753*
*(1)* மஹால்-சுங்கம்

தீர்வைகள் :

உதரி தீர்வை, பொரவூர் ஜவுளி, மேல் முத்ரு தீர்வை, பால் வாடி, அரிசிக்கடை தீர்வை, பஞ்சு தீர்வை, நூல் தீர்வை, பேராயீ தீர்வை, கலாபுக்காக[382] ஆள் மகாணம் கொடுக்கவில்லை.

*8.1844*
*(1)* முக்தம்பாபுரம் சத்திரத்தின்[383] பெட்லோர் கோபால் நாயிக்கன்
கொடுத்த மனு. தன்னுடைய தாயார் 103 ஷு வரையிலிருந்து இப்பொழுதுதான் 4,5 வருஷங்களுக்கு முன் தைவகதி அடைந்தாள்.

ஓட்டன் கொண்டயான் கொடுத்த மனு:-

தன்னுடைய பிள்ளை பள்ளிக்கூடத்திற்குப் போகாமல் திரிகிறான். எங்கேயாவது கிராமாந்தரத்திற்குப் போய் விடுகிறான். 2,3 நாட்கள் பட்டினி கிடக்கிறான். நம்முடைய ஹத்தில்[384] இருக்க வில்லையாகையால் அவனுக்கு விலங்கைப் போட வேண்டும் அதற்கு நியாயாதிபதியின் மூலம் கொல்லனுக்கு உத்திரவு செய்ய வேண்டுமென்று.
*(2) 1844*
முக்தம்மாபுரச் சத்திரத்தில் மளிகை வியாபாரஞ் செய்கிற தாண்டவராய செட்டியார் கொடுத்த மனு:-

---

382. கலாபு - ஹைதர் கலாபு (குழப்பம்)

383. முக்தாம்பாள்புரம் சத்திரம் - (பக்கம் 273)

384. ஹத்து - எல்லை (கட்டுப்பாடு)

மன்னார்குடிக்குப் போகும்வழியிலுள்ள கணந்தங்குடியில் நான் ஒரு இடத்தை வாங்கி அதில் கோவில் குளம், வெட்டி, தண்ணீர்ப் பந்தல் சாவடி கட்டியிருக்கிறேன். அந்தக் கோயிலுக்குக் கும்பாபிஷேகஞ் செய்ய சத்திரத்திலிருந்து பாத்திரங்கள் , கீத்து, மூங்கில், வகையறாவைக் கொடுக்க வேண்டுமென்று.

*(3) 1844*
*யாதி-(மனு)*

பல்லாரி ஜில்லாவிலிருந்து ஸங்கீதத்தைக் கற்றுக்கொள்ள தஞ்சாவூருக்கு வந்திருக்கும் இருவர் அப்புராவ் சுப்பராவும் ஆனந்த சுப்பராவும் தங்களுக்கு பாட்டுப்பாடக்கற்றுக் கொடுத்து, சாப்பாடும் போடவேண்டுமென்று ஸர்காருக்குக் கொடுத்த மனு. தஞ்சாவூர் ஸமஸ்தானத்திற்குப் போனால் பாட்டுகளுடைய தாரதம்யங்களை அறியலாமென்று வந்தோமென்றும் மனு.

*(4) 1844 Oct. 10 உ*
ஸர்காருக்கு-சிவானந்த நட்டுவன்[385] பெரிய கோவிலில் சிதம்பர நட்டுவன்[386] குமாரன் கொடுத்த மனு:-

சௌ. ராஜஸபாயி[387] அவர்களுடைய கல்யாணத்தில் உத்திரவானதாவது—ஊரிலுள்ள தேவதாஸிகளெல்லோருக்கும் ஹிந்துஸ்தானீயும் கர்னாடக நாட்டியமும் சொல்லிக் கொடுக்கிறதென்றும் உத்தரவானது. அதன்படிக்கி நாம் நாலு தம்பிமார்களும்[388] இராவும் பகலும் அன்ன ஆகாரங் கூட இல்லாமல் மிகவும்சிரமப்பட்டு ஸர்காரின் மனதின்படி நடந்து வருவதில் தேவஸ்தானத்தின் மத்யஸ்தர்[389] என்னை ஸர்காருடைய ஸன்னிதானத்தில்[390] என்னைச் செய்விக்கக் கூடாதென்று அல்லாமலும், ஸர்காருடைய ஸந்நிதானத்தில் வரவுங்கூடாதென்று உத்திரவிட்டிருக்கிறார்.

*(5) 1841*
கணக்கு தஞ்சாவூர் கோட்டை சுங்கம் (ஜகாயதி) யைச் சேர்ந்த சாராயப் பேட்டை பாபத்து சாராயம் வகையறா எல்லாக் கடைகளின் ஜாபிதா-லயன் விஸ்தரிக்காததற்கு முன்னாலும் லயன் விஸ்தரித்த பிற்பாடும்பிற்பாடும்.

*(6) 1844 Oct 27உ*
மனு-ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாபிஷிக்த ஸ்ரீஸ்வாமி அவர்களுடைய மடத்தின் காரியஸ்தரான கணபதி சாஸ்திரி கொடுத்தது........

385. சிவாநந்தநட்டுவன் - பொன்னையா, சின்னையா,சிவானந்தம்,வடிவேலு என்ற நட்டுவாங்கம் வல்ல நால்வருள் ஒருவர் (பக்கம் 237)

386. சிதம்பரநட்டுவன் - பரமாநந்த நட்டுவன் என்பவரும் உண்டு (பக்.238)

387. ராஜஸபாயி - இரண்டாம் சிவாஜியின் மூத்த மகள்

388. தம்பிமார்கள் என்ற இடத்தில் சகோதரர்கள் என்று காணப்படுகிறது (பக்.541)

389. மத்யஸ்தர் - அலுவலர்

390. சன்னிதானத்தில் - முன்னிலையில்

ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி[391] அம்மனுடைய தாடங்கம்[392] ஜீர்ணோத்தாரப் ப்ரதிஷ்டை[393] செய்கிற பாத்யதை[394] ஸ்ரீஸ்வாமிகளுடையதா யிருக்கையில் ஸ்ரீஸ்ரீங்கேரி மடத்தார் அந்தப்பாத்யதை தனக்குக் கிடைக்கவேண்டுமென்று 7 வூ காலமாக அநேக திரவியங்களைச் சிலவழித்து வந்ததினால் நமக்குத் தாடங்கதை ஜீர்ணோத்தாரஞ் செய்யக் காலதாமதமாயிற்று. அவாளுக்கும் தாடங்க ப்ரதிஷ்டை செய்ய நேரவில்லையாகையால் கோர்ட்டில் தாவா செய்தார்.

அப்பேர்ப்பட்ட காலத்தில் அங்கிருக்கும் தர்மகர்த்தாக்களும்; சிரஸ்தேதார்களும் மிராசுதார்களும், பஞ்சாயத்துகள் வகையறா சேர்ந்து தர்ம ஸமஸ்தானாதி பத்யம்[395] ரா. ரா. மகாராஜா[396] சாஹேப் அவர்களுடைய பூர்ணாபிமானி[397]யான ஸ்ரீஸ்வாமி[398] அவர்களுடைய ஆதிக்யம் அவருக்கே கிடைக்க வேண்டுமென்று முடிவு செய்தார்கள். உடனே அவர்கள் கோவில் கணக்குகளைப் பரிசோதித்து பார்க்கையில் ஸ்ரீஸ்வாமிகளின் மாமூல் ஆயிருக்கிறது என்று நன்றாகத் தெரிந்து கொண்டார்கள். அதே நாளிலே தாடங்கப் ப்ரதிஷ்டை செய்வது ஜரூராயிருக்கிறதென்று நம்மிடம் கொண்டுவந்து கொடுத்தார்கள்.

அப்பொழுது ஸ்ரீமத் ராஜேஸ்ரீ சத்திரபதி சாஹேப்[399] அவர்களுக்கு தெரிவித்து ஜீர்ண ப்ரதிஷ்டை செய்வதற்கு வேண்டிய திரவியத்தைக் கொடுத்து ப்ரதிஷ்டையை செய்யலாமென்று முடிவு செய்தார்.

அப்பொழுது அவ்விடமிருந்த , சத்ருபக்ஷத்தின் ப்ராபல்யத்தினால் ஒருநாள் நடுவிலிருந்தது. ஆனால் காரியத்திற்கு இடைஞ்சல் ஏற்படும்படியிருந்தது. உடனே அங்கே செலவுக்கு வேண்டிய துகையை கடன் வாங்கி ஜீர்ணோத்தார பிரதிஷ்டையைச் செய்து ஸ்ரீஸ்வாமிகள் ஸ்ரீ அம்மனுக்கு தாடங்கத்தை அர்ப்பணஞ் செய்தார். அந்த சந்தோஷத்திற்கும் ஸ்ரீகாஞ்சி காமாக்ஷி அம்மனுக்கு கும்பாபிஷேகமும்[400] ஸ்ரீசக்ரம் பிரதிஷ்டைசெய்த கீர்த்திக்கும் ரா. ஸ்ரீ மகாராஜா சாஹேபைத் தவிர வேறொருவருமில்லை.

---

391. அகிலாண்டேசுவரி - திருவானைக்கா சிவன்கோயிலிலுள்ள அம்பிகை

392. தாடங்கம் - காதணி

393. ஜீர்ணோத்தாரபிரதிஷ்டை - பழுதுபார்த்து மீண்டும் அணிவித்தல்

394. பாத்யதை - உரிமை

395. தர்மஸமஸ்தானாதிபத்யம் - தர்மத்தை நடத்துவதற்குரிய மேலாண்மை

396. மகாராஜா - இரண்டாம் சிவாஜி

397. பூர்ணாபிமானி - நிறைந்த அன்புடையவர்

398. ஸ்ரீஸ்வாமி என்றது ஐந்தாவது சந்திரசேகரேந்திர சரசுவதி சுவாமிகளை

399. சத்திரபதி சாகேப் என்றது இரண்டாம் சிவாஜியை

400. 22-1-1840 காஞ்சி காமாட்சியம்மன் கும்பாபிஷேகம் நடந்தது (பக்கம் 435)

8 (6) இங்கு தாடங்கப் பிரதிஷ்டை செய்ததினால் மடத்திற்கு ரூ. 5000கடன் ஆயிற்று. தவிர பிரயாணம் படிச்சிலவினால் ரூ. 2000 வரையில் கடனாயிருப்பதால் அக்கடனைத் தீர்க்க வேணுமென்று மடத்திற்கு பூர்ணாபிமானியான ஸ்ரீமந்த் மகாராஜா சத்திரபதி சாயேப் அவர்களுடைய ஸந்நிதானத்தில் தெரிவிக்க வேணுமென்று ஸ்ரீஸ்வாமி அவர்கள் உத்திரவிட்டார். அதன்படிக்கி ரா. ஸ்ரீமகாராஜா சாஹேப் அவர்களுடைய சன்னிதானத்தில் தெரிவிக்கலானேன்.

இன்னும் மதுரை திருநெல்வேலி ஸமஸ்தானங்களில் ஆசாரம் , விவகாரம் விஷயத்தில் முதலில்தாம்பூலாதி ஸன்மானம் செய்வதை ஸ்ரீஸ்வாமிகளுடைய மடத்திற்குத்தான் சேரும். வெகுகாலமாக அவ்விடத்தில் ஸஞ்சாரமில்லாதாகையால் அந்த ஆதிக்யத்தை வேறு மடத்தார்கள் தங்களுடைய ஆதிக்யமென்றுசொல்லுகிறாற் போல் தெரிய வருவதால் திருநெல்வேலிக்கும், மதுரைக்கும் சென்று ஸ்ரீமீனாக்ஷி அம்மனுடைய தரிசனஞ் செய்து அங்கிருந்து சேது யாத்திரையையும், செய்துவர வேணுமென்று ஸ்ரீஸ்வாமிகளின் எண்ணமா யிருப்பதால் ஸ்ரீமந்த மகாராஜா சத்ரபதி சாஹேப் மனமூர்ந்து மடத்திற் கேற்பட்டிருக்கும் கடனைத் தீர்ப்பதைத் தவிர யாத்திரை பூர்ணமாக சிலவுக்குச் சகாயஞ் செய்ய உத்திரவு செய்ய வேண்டும்.

(கையெழுத்து) கணபதி சாஸ்திரி.

## முட்டை எண் - 168C

*28.1830 Dec 15 th*

ஜனத்தொகையின் கணக்கு விஷயம்

*20.1836*

(1) ரா.மந்திரிவர்ய ஸதாசிவ கேசவ பண்டிதரவர்கள்[1] யாகஞ் செய்ததற்காக இவருக்கு இனாம் கொடுப்பதற்கு "ஷிஸபூல் சந்திரமா" என்னும் ஆபரணத்தைக் கொடுப்பதற்குப் பதிலாகக் கொடுக்கப்பட்டது ரூ.490

*(2) 1836*

நீலகிரி முகாமில் கத்தியின் ஆட்டத்திற்காக ஸாமி அப்பாவின் மூலம் சிலவு ரூ.90

*51.1851*

(1) பரிசாரகன் ஆசாமி ஒருவன் வியாஸ பௌர்ணிமை பூஜை[2] க்காகக் கும்பகோணத்திற்கு ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமியார் மடத்திற்கும் அதற்குச் சமீபமிருக்கும் நரசிம்ஹ புரத்திலுள்ள ஸ்ரீஅஹோபில ஜீயர் ஸ்வாமியார் மடத்திற்கும் ஸர்காரிலிருந்து பூஜை வஸ்திரம் ஹவால்தார்[3] கிருஷ்ணாஜி லக்ஷ்மண் என்பவர் கொண்டு போவதால் கூடப்போகிற 5 பேருக்கு தினமொன்றுக்கு 1/4 ரூ படிச்சிலவு கொடுக்கிறது.

---

1. ஸதாசிவ கேசவபண்டிதர் (பக்கம் 83)

2. வியாஸபௌர்ணமி - ஆஷாடசுத்த பூர்ணிமை (ஆடி வளர்பிறை முழுமதி)

3. ஹவால்தார் - இராணுவ அதிகாரி

*(2) 1851*

ஸ்ரீகாசீ க்ஷேத்திரத்திற்கு மா. சைதம்பாபாயிசாப்[4] அவர்களுடைய எலும்புகளை கொண்டுபோக[5] சக்.378 3/4

*13 1833*

(1) ஜில்காத் மீ 12 உ அரண்மனையின் ஸ்வாமியின் பூஜை கிரகத்திலிருக்கும் குத்துவிளக்குகளைத் தயார் செய்ய ஜாபிதாவின் படி வெள்ளி 700 ரூக்கு சக்.450-9 1/4

*(2) 1833*

230 காசுகளுக்கு சக். 1-4 3/8[6]

*2 1835*

(1) ஸரஸ்வதி பாண்டார் யாகத்திற்காக பூரிதக்ஷிணை வகையறாவுக்காக ரூ.200க் சக் 128-7 1/2.

*29 1847*

(1) தஞ்சாவூரில் வசிக்கும் தற்பொழுது சென்னப்பட்டணத்திலிருக்கும் குலாப்சிங்கு என்பவனுடைய ஜபாநியின் நகல் -

நான் தஞ்சாவூர் மகாராஜாவின் ஒரு சிப்பாய். போதி என்னும் கைதியும் அங்கிருந்த வேலைக்காரனான ஒரு சிப்டாய்தான். ஒரு வருஷம் எட்டு மாதங்களுக்கு முன் போதி என்பவன் ஒரு பரியாரியின் வீட்டில் திருடின சிற்சில தங்கம் வெள்ளி நகைகள் மகாராஜா சாயேப் அவர்களுடைய கோர்ட்டில் ருஜுவாகி ஷியான் மூன்று வருஷங்கள் ரஸ்தாவின் வேலையைச் செய்வதென்று தீர்ப்பு செய்தார்கள். ஒரு வருஷத்தின் பின்பு அவன் காயலாவானான். அது இராஜாசாயேப்புக்குத் தெரிவிக்கப்பட்டது. அதற்கு அவர் நபரை ஹஜர் செய்வேனென்று ஒரு நபர் ஜாமீன் வாங்கி ஷியானை தேவலையானதும் ஸர்க்காரில் ஒப்புவிக்கிறேனென்று கரார் பத்திரம்[7] வாங்கி விடுதலை செய்யலாமென்று உத்திரவானது. ஷிகைதியினுடையவும் அவனுடைய உறவினர்களுடையவும் வேண்டுதலின்படி அவனுக்கு நான் ஜாமீன் கொடுத்தேன். அதன்பேரில் அவனை விடுதலை செய்தார்கள். பிறகு தஞ்சாவூரிலிருந்து ஓடிவிட்டான் என்று கேள்விப்பட்டேன். உடனே அவனை ஆஜர் செய்யும் வரையில் என்னுடைய சம்பளத்தை நிறுத்தி வைக்கிறதென்று உத்திரவானது. ஆகையால் அநேக இடங்களில், தேடினதில் ஷியான் சென்னப்பட்டணத்திலிருப்பதாகத் தெரியவந்தது. சென்ற மாதத்தின் ஆரம்பத்தில் நான் சென்னப்பட்டணத்திற்கு வந்தேன். 30உவெள்ளிக்கிழமை சாயந்திரம் ஷி யானை ப்ளயாக் டவுனில்[8] பார்த்து அவ்விடத்திய டாணாவின் ஒரு தாணாக்காரனிடம் விட்டேன். அந்த சேவகன் ஜனரல் போலீஸ் ஆபிஸில் சீப் ம்யாஜிஸ்ட்ரேட் போலீஸ் சூப்பிரெண்டெண்ட் அவர்களிடம் கொண்டு போய்விட்டான்.

---

4. சைதம்பாபாயி சாகேப் - இரண்டாம் சிவாஜியின் முதல் மனைவி.

5. இவருடைய (ஹஸ்தி) எலும்புகளைக் காசிக்குக் கொண்டு போக என்றமையால் இவர் 1851 இல் இறந்தவராதல் கூடும்

6. 32 காசு 1 பணம்; 10 பணம் 1 சக்; ஆகவே 320 காசு ஒரு சக்கரம் ஆகிறது. எனவே இங்குக்கண்ட கணக்கு தவறு ஆகும்.

7. இதனை ஆஜர் ஜாமீன் முச்சலிக்கை என்றும் கூறுவர் (பக்.343)

8. ப்ளயாக் டவுன் - Black Town (இந்நாளில் ஜார்ஜ் டவுன் என்ற பகுதி)

ஷெ ஜபானி[9] பிரமாண பூர்வகமாக வாங்கப்பட்டது. 1847 அக்டோபர் 6வயில் இண்ட்டர் ப்ரீடர் என்பவர் பிரமாண பூர்வகமாக நகல் செய்து எனக்குச் சொல்லியிருக்கிறார்.
(ஒப்பம்)இ.எப்.எலியேட்

(2) 1847 நவம்.2உ
ரெஸிடெண்ட்[10] அவர்கள் ஸர்கீலுக்கு[11] எழுதிய கடிதத்தின் விஷயம்.

அம்மூ என்பவள் தருமஸபையில்[12] தான் செய்த அப்பீல் பிறாதைத்தள்ளிவிட்டார்களென்றும் இஸ்பீல்த்தில்? ஒரு வருஷத்திற்கு அதிகக் காலமாகியும் தனக்கு யாதொரு நியாயம் செய்யவில்லை என்றும், அக்டோபர் 11உக்கு என்னிடம் ஒரு பிராதைக் கொடுத்திருக்கிறாள். இந்த ஸ்திரியின் சங்கதிக்குச் சேர்ந்த காரியத்தை விசாரித்ததில் நிர் 788-892-926 என்கப்பட்டஇம்மூன்று பிராதுகளின் வரலாறு தெரியவேணுமென்று ஸர்.ஹெச்.ஸி.மகமாரி பரானடே அவர்கள் தங்களிடம் அனுப்பியிருப்பதாகத் தெரியவருகிறது. இன்னும் 1846 ஷு ஆகஸ்டு தேதியில் நீங்கள் எழுதிய பதில் - முதல் ஸபையினர்கள் செய்த விசித்திர காரியத்திற்கு அப்பீல் கோர்ட்டாரவர்கள் அனுசரிக்கிறார்களா? என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்கிற யோசனையினால் நீங்கள் எழுதிய பதிலுக்குப் பதிலெழுதவில்லை. ஆனால் அப்பீல்வாதிக்கு நியாயம் கிடைக்கவில்லை என்று தெரியவருகிறது. இந்தச் சங்கதி விஷயத்தில் சீக்கிரமாக முழுவதையும் தீர்க்க வேணுமென்று சொல்வது, என்னுடைய தருமமாயிருக்கிறது. ஏனென்றால்-இந்த மேற்சொன்ன சங்கதியினால் ஸர்கார் நியாயஸ்தலத்திற்கு ஒரு அப்ரதிஷ்டை[13] உண்டாகிறது. ஷெ நியாயஸ்தலம் ஜனங்களுக்கு நியாயம் கிடைக்க வேணும். அது இல்லாமல் அந்நியாயஸ்தலமாகிறது. நீங்கள் எழுதிய கடிதத்தில் அம்மூவின் வாதி ஸ்பையில் வியாஜ்யஞ் செய்திருக்கையில் வில் will எழுதாமல் இறந்து விட்டானென்றும் அவனுக்கு பாத்தியஸ்தர்களில்லாததினாலே அவனுடைய சொத்துக்கள் கொத்தவாலிடம்[14] ஒப்புவிக்கப்பட்டது என்றும் கொத்தவால் அம்மூவுக்கு தான் வாதியானானென்றும், ஷெ அம்மூ என்பவளும் மற்ற இரு பிரதிவாதிகளும் ரூ.951 பொறுமானமுள்ள நகைகளும் 300 ரூ. பொறுமானமுள்ள வீடும் ரூ.777 பெறும்படியான இன்னுமொரு நகையும் கொத்தவாலுக்குக் கொடுக்கிறதென்றும் முத்திரைப் பத்திரத்தின் கிரயம் ரூ.100ஐ அந்த மூன்று பிரதிவாதிகளும் கொடுப்பதென்றும், ஷெஅம்மூ அபஜயமடைந்ததினாலும் அவளிடமிருந்து அபஜயமடைந்ததற்கு தண்டம் (அபராதம்) வசூலிப்பதென்றும் , தீர்ப்பாயிருப்பதாக நீங்கள் எழுதியிருக்கிறீர்கள். பிரதிவாதியானவர் அம்மூவுக்கு ரூ.285 யைக் கொடுப்பதென்றுஉத்திரவாயிருக்கிறது என்கிறீர்கள். அது எக்காரணத்திற்காக மிமோராண்டத்தைப் பார்த்துத் தெரிய வருகிறதில்லை. நீங்கள் எழுதும்

9. ஜபானி - (A Written statement)

10. ரெஸிடென்டு - ஜே.எச்.பிஷப் (பக்கம் 68)

11. ஸர்க்கேல் - அண்ணாஜி தியாகராஜ பண்டிதர் (155 சி - 13-4)

12. தருமசபை-நான்கு நீதிமன்றங்களில் ஒன்று (பக்கம் 167)

13. அப்பிரதிஷ்டை - கெட்ட பெயர்

14. கொத்தவால் - கோட்டைக்காவல் அதிகாரம் உடையவர் (பக்.74)

விபரத்தில் ஷை தீர்ப்பு நியாயமாகவே யிருந்தால் அப்படி .... அந்த தீர்ப்பின் வைசித்ர்ய?(விசித்திர) விஷயத்தில் நீங்கள் விவரித்து எழுதவில்லை. ஆனால் அந்தத் தீர்ப்புச் சரியானதாக எனக்குத் தோன்றவில்லை. பிராதிகாரி[15] யான அம்மூ தன்னுடைய சொத்து ஆறு வருஷமாக ஜப்தியிலிருப்பதாகத் தெரிவிக்கிறாள். அதை நான் சரி என்று நம்பவில்லை. அப்படி அல்லவென்று நீங்கள் சொல்லமுடியுமானால் அது எனக்கு மிகவும் சந்தோஷமாக யிருக்கும். இங்குள்ள ஸபையில் தீர்ப்பு...விரோதம் முதல் ஸபையின் தீர்ப்பு நியாய நிபந்தனைகளுக்கு விரோதமாயிருப்பதால் நீங்கள் அதை தள்ளுபடி செய்ய வேணும். பிரதிக்காரியின் சொத்துக்களை விடுதலை செய்ய வேணும். ஏனென்றால் ஷை சொத்துக்கள் பாத்தியமானால் நியாயப்படிக்கி ஸர்காரவர்கள் அதற்குப் பதில் கொடுக்க வேணும் என்று பிரார்த்திக்கிறேன். இந்த கடிதத்திற்கு சீக்கிரமாக பதிலை எழுத வேணுமென்றும் பிரார்த்திக்கிறேன். 1847 நவம்பர் மீ 1 உ

(கையொப்பம்)
J.H.Bishop
Resident.

## மூட்டை எண் - 181 C

**30. 1246 1846**

(1) கமாவிஸ்தார்[16] சுந்தரப்பையாவிடம் ஹெட் சிரஸ்தேதார் பேசினதில்:-தனக்கு ஒரு பக்ஷமுமில்லை. நான் சுவாமிக்குப் பயந்து உள்ளபடி நியாயஞ்செய்கிறவன். ஸர்காரின் வேலைக்காக வெளியில் புறப்பட்டால் தனக்குப் போர்டார் தினமொன்றுக்கு 2 ரூபடிச்சிலவு கொடுக்கிறார்கள். மல்லாரிராயருக்கு எவ்வளவு படிச்சிலவு கொடுக்கப்படுகிறது. அவர் படுகைக்கு வந்து 15 நாட்களாயிருக்குமே, தினந்தோறும் அவருடன் எத்தனைப் பேர் சாப்பிடுகிறார்கள் என்று கேட்டதற்கு 15 பேர்கள் சாப்பிடுகிறார்கள். அவருக்கு ஸர்காரில் படிச்செலவு கொடுக்கிறதில்லை. அவர் சர்க்காரில் பரம்பரையாக வேலை பார்ப்பதினால் சுப காரியங்கள் வகையறாவுக்குச் சர்காரிலிருந்து அதிகமாக அடைகிறவர்கள் என்று நான் பதிலளித்தேன்.[17]

**13.1248** [18]
சூர்னவிஸ்[19] புஜங்க லக்ஷ்மண பண்டிதரிடமிருந்து வந்த காகிதங்கள்.

**34.1249**
ஸர்கேலுக்கு எழுதிய கடிதங்கள்.

---

15. பிராதிகாரி - வழக்குத் தொடுக்கப்பட்டவர்; பிரதிவாதி

16. கமாவிஸிதார் - மேற்பார்வை செய்யும் அதிகாரி (பக்கம் 75)

17. இதே மூட்டையில் 30ஆம் எண்ணில் இதே கடிதம் உள்ளது.

18. இங்கிருந்து சுஹீர்ஸன் ஆண்டு குறிக்கப்பெறுகிறது; இதனுடன் 599 சேர்த்தால் ஆங்கில ஆண்டு வரும்.

19. சூர்நவிஸ் - அரசரிடமுள்ள தனி அலுவலர் போலும்

*39 1250*

ஸேநா துரந்தர் ரா.நீலகண்டராவ் ஆனந்தறாவ் ஜாதவ் அவரிடமிருந்து வந்த கடிதங்கள்.

*1. 1165*

கணக்குகள் – கரைக்கட்டு[20] வாய்க்கால் வெட்டு,தீர்வை, சுபா மாயவரம்.

*2.1184* கணக்குகள் - ஆதங்குடி ஒடப்பக்கட்டு துகை ஏடு

*8.1199* கார்பசான்[21] துகைஜாடா - மகால் சுங்கம் - தாராசுரம்.

*(1) 1199*

38068 சக். குத்தகை வருஷத்திற்கு ஒப்புக்கொண்ட வீதம் சக். 390000இல் மற்ற தோட்டங்களிலிருந்து தொண்ணூத்தாறு[22] பாபத்து[23] சக்.932 போக பாக்கி சக்.38068.

*(2) 1199*

ரா.ரா.மகாராஜாவின்[24] கல்யாணத்திற்குச்[25] சாமான்கள் வகையறா கொடுத்த வகையில் சக்.1800.

*(3) 1199*

மிஸ்தர் டூரியன்[26] துரைக்குச் சாமான்களுக்காக சக்.20-4 7/8.

*(4) 1199*

மிஸ்தார் டூரியன் துரைக்குக் கப்பலின் துணி போனதற்காக சக்.156-7/8

*(5) 1199*

தேவஸ்தானம் திருவிழாவிற்கு அதிகப்படிகூட சக். 28779-9 3/16

*1199*

ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமி[27] அவர்களுக்குச் சக்.4625

---

20. கரைக்கட்டு - நீர்க்கரைக்கு ஆதாரமாய்க் கட்டுவது

21. பசான் - பசானம்; சித்திரை மாசத்தில் அறுவடையாகும் நெல்

22. தோட்டங்கள் தொண்ணூத்தாறு - 96 தோட்டங்கள் (பக்கம் 507-8 இணைப்புIV)

23. பாபத்து - தொடர்பாக

24. மகாராஜா என்றது இரண்டாம் சரபோஜியை

25. கல்யாணம் என்றது யமுனாபாயி சாகேப், அகல்யாபாயி சாகேப் ஆகியவர்களை மணம் செய்துகொண்டமை (போ.வ.ச.பக்.134)

26. டூரியன் - Benjamin Torin - இவர் கி.பி.1798இல் ரெஸிடென்டு ஆக வந்தவர் (பக்கம் 65)

27. சங்கராசாரியர் - 1783 முதல் 1814வரை பீடத்தில் இருந்த நான்காவது மகா தேவேந்திர சரசுவதி சுவாமிகள். இத்தொகை நித்தியபூசைக்காகவும் வியாசபூசைக்காகவும் ஆண்டு தோறும் சங்கராசாரியருக்குக் கொடுக்கப்பெற்றது. (பக்.433)

***(6) 1199***

***கும்பனியின் கிஸ்தி கொடுப்பதற்கு வராகன் புலி 164419க்கு வராகனொன்றுக்கு 2-4 பணம்[28] வீதம் சக்.394605-6.***

***(7) 1199***

***கணக்கு-பதக்-[29] வயேசேரியைச் சேர்ந்த பெரமாமனேம்பூர் வருஷத்தில் நிலம் வேலி 25க்கு குத்தகை கலம் 5716 1/2யில் சம்பாவபசான் நிலம் வேலி 22க்கு குத்தகைக்கல் 5110. இதற்குக்குடிவாரம் - 2044 போக மேல்வாரம் - 3066. இதற்குக்கண்டுமுதல்[30] பதக்காரன்[31] சொன்னபடி 2600 போக மேல் வாரத்திற்கு[32] கம்மி 466 கலம்.***

***(8) 1199***

***நெல்கலம் 15000க்கு கலம் ஒன்றுக்கு 4 பணம் வீதம் சக்.6000 அமரசிங்கு போஸலேயின் ராஜ்யபாரத்தின் கணக்கைத் தயார் செய்ய கணக்குப் பிள்ளைகளுக்கு சக்.279 1/2. மிஸ்தர் டூரீயன் சாஹேபுக்குக் கொடுக்க வேண்டிய ஒன்றுக்குப் பதிலாகக் கொடுத்தது வராகன் புலி 15000க்குச் சக்.34562 1/2.***

***(9) 1199***

***மிஸ்தர் க்ராண்ட வெள்ளைக்காரனுக்கு நெல்லு போனதற்கு சக்.460-8 1/2 வரவு***

***(10) 1199***

***யாதி-பதக் ஸ்வாமிமலையிலிருந்து கும்பனிக்கு தேங்காய் நார் இடை மனு[33] 2 1/2 - 5 சேர்.***

***(11) 1199***

***திருவையாறு-சுபா[34] சின்ன இளநீர் வந்ததினால் அபராதம் 12 பணம்***

---

28. 4 1/2 சக்கரம் - 1 புலிவராகன்; 2 1/4 சக்கரமும் ஒரு புலிவராகன் (பக்.150) புலி வராகன் மதிப்பு மாறுபடுதலுண்டு, சக்கரம் 2, பணம் 4-ம் ஒரு புலிவராகன் என்று இங்கும் 136 சி - 7-3 இலும் கணக்கிடப்பட்டுள்ளது.

29. பதக் - பதக் அல்லது பதகம் (பத்தக்கம்) என்பது சில ஊர்களின் ஒன்றியம் என்னலாம். ஹைதர்கலாபினால் நாடு சீர் கெட்டது. நாட்டைச் செம்மைப்படுத்தத் துளஜா தன் அமைச்சர்களுள் ஒருவரான பாவாபண்டிதரைக்கொண்டு நிலச்சீர்திருத்தம் செய்தார். அழிவுக்குட்பட்ட நிலங்களோடு செழிப்புள்ள நிலங்களும் இணைக்கப்பட்டன. அவை 'பதகம்' என்று பெயரிடப்பட்டன (பக்கம் 74)

30. கண்டுமுதல் - நிலத்தின் மொத்த விளைச்சல்

31. பதக்காரன் - பதக்தார் - பதக் என்ற ஒன்றியத்தைக் கண்காணிக்கும் அலுவலன்

32. இங்குக் கணக்குப்படி மேல்வாரம் 3; குடிவாரம் 2 என் அறியப்பெறும்

33. மனு - மணங்கு; 5 சேர் 1 வீசை; 8 வீசை 1 மணங்கு (பக்.165)

34. தஞ்சை மராட்டிய அரசர்தம் ஆட்சிக்குட்பட்ட பகுதியை ஐந்து பெரும்பிரிவுகளாகப்பிரித்தனர்; ஒவ்வொரு பிரிவும் சுபா எனப்பெற்றது. (பக்கம் 12)

*(12) 1199*

*விலைவாசி குறிப்பு- கடப்புகார்[35] கலமொன்றுக்கு 2 9/16 பணம் முதல் 3 7/8 பணம். ஆக தாரணை[36] 14க்குக் கலமொன்றுக்கு 3 பணம் 1 1/2 வீசம்.*

*(13) 1199*

*கள்ளபத்து[37] காளாகோட்[38] விஜயரகுனாத முத்துவிஜய சிங்கப் புலி[39] பாளையம்பட்டிவிருந்து சிவன்ராத்திரிக்காக களச்சிக்காய் படி-4*

*(14) 1199*

*ஹுஜூர்[40] சிலவுக்காக வெட்டுவேர் சுருட்டு சுமார் 194.*

*(15) 1199*

*மகாராஜா[41] சாஹேபின் திரஷ்டி முகூர்த்தத்திற்கு[42] தட்டிகள் தயார் செய்ய இஸ்திரிஞ்சி தோட்டத்திவிருந்து 2 3/4 மனு 8 சேர்*
*கொளுந்து 2 1/2 மனு*
*மரு 18 சேர் மொத்தம் 2 3/4 - 8 சேர்.*
*புதுப்பேட் தோட்டத்திவிருந்து கொளுந்து 1/2 மனு 2 சேர்.*

*(16) 1199*

*ஹுஜூரின் கல்யாணத்திற்காக – திருவாதி[43] சுபையிவிருந்து வா.இலை 652.*

*10 1202*

*(2) கஜானா -நக்ஷீ 1/2க்குப் பணமொன்றுக்கு 24 காசு[44] வீதம் 120க்கு 2 1/2 டக்கே[45]*

---

35. கடப்புகார் - குறுவைநெல்

36. தாரணை - விலை(க்குரிய)அல்லது விற்பதற்குரிய; 14க்கு-14 கலங்களுக்கு

37. கள்ளப்பத்து - கள்ளர்களுடைய பாளையப்பட்டு பட்டுக்கோட்டைச் சீர்மையைச் சார்ந்தது (செ.இராசு, மராட்டியர்கல்வெட்டுக்கள், எண்.90)

38. காளாகோட் - கல்லாக் கோட்டையாகலாம் (கள்ளர் சரித்திரம்-நமு.வேங்கடசாமி நாட்டார் பக்.97)

39. கி. பி. 1879இல் விஜயரகுநாத அரங்கசாமி சிங்கப்புலியார் என்பவர் இருந்தார் எனத் தெரிகிறது. பாதரங்ககோட்டையிலும் விஜயரகுநாத பாலாக்ஷி சிங்கப்புலியார் என்று ஒருவர் கி.பி.1879இல் இருந்தார். இவர்கள் இங்குக்குறிக்கப்பட்ட சிங்கப்புலியாரின் வழித்தோன்றல்கள் ஆகலாம்.

40. ஹுஜூர் என்றது இரண்டாம் சரபோஜியை

41. மகாராஜா என்றது இரண்டாம் சரபோஜியை

42. திரஷ்டி முகூர்த்தம் - மனையறம்படுத்தல்

43. திருவாதி - திருவையாறு

44. நக்ஷீ 1/2க்கு 24 காசு என்று படிக்க வேண்டும் எனத் தோன்றுகிறது.அப்படி யாயின் ஒரு நக்ஷீ என்பது 48 காசு அல்லது 1 1/2 பணம்.

45. ஒரு டக்கே என்பது 1 1/2 பணம்.அதாவது 48 காசு (பக்.157) 120 காசு என்பது 2 1/2 டக்கே ஆகிறது. (குறிப்பு: மேற்கண்டவற்றால் டக்கே என்பதும் நக்ஷீ என்பதும் ஒன்றெனவே தோன்றுகிறது.)

*(1) 1202*

உத்தரவு - சரபோஜி மகாராஜ சாஹேப் ஹுஜூர் தக்ஷிணை கமலாலயத்தின்[46] பூஜைக்காக 2 பணம்.

*3 1202*

*(1)* நாகூருக்குச்சமீபமுள்ள பாபண்ணாசேரி -வரவு-மகா.ஸ்ரீ.ஸ்ரீ.திவான் சாஹேபுக்கு[47] புதுச்சேரியின் வக்கீல் ஸேதுராவ் பார்க்க வந்து திருவந்தூர் புது 2 ரூபாய்.

*(2) 1202*

ஹுஜூர் பட்டாசு வாங்கினதற்கு சக்.3-8 பணம். நாகூரின் கெஞ்சிணிக்கு (என்றும் நாட்டியம் ஆடுகிற) இனாம் ரூ.10.

*4 1215*

*(1)* சென்னப்பட்டனம் கௌனர்[48] சாயேபுக்குக் கொடுத்த ஆடை கார்சோபி–மிஸ்தர் ப்ளாக்பர்ன்[49] மூலம் வாங்கினதற்குப்பரங்கிப்பேட்டை வராகன்[50] 100க்கு தரகு மன்னிக்கப்பட்டது.

*(2) 1215*

மா.ஆவுசாப்[51] அவர்களுக்கு சிலவிற்கு ஒரு மாஸத்திற்குப்புலி வராகன் 291 1/2கொடுக்கிறது.

*(3) 1215*

லாபம் (வழக்கப்படியாயுள்ள) அம்மல் சிலவு –ருஜீ வழக்கப்படி ஆக வெள்ளிப் புலி வராகன் சிலவழித்ததில் வராகனொன்றுக்கு சக் 2-21/2 பணம்[52] வீதம் சக்.5033-2 1/2க்கு வராகன் 2237.

திருவந்தூர்[53] புதிய ரூபாய் சிலவு செய்த வகையில் ரூபாயொன்றுக்கு 6 1/2 பணம்[54] வீதம் சக்.4963-4க்கு ரூ.7635.

---

46. கமலாலயம் என்பது திருவாரூர்க் கோயிலை ஒட்டியுள்ள பெரிய குளம்.

47. திவான் சாகேப் என்றது இரண்டாம் சரபோஜியை

48. கௌனர் - Governor - Hugh Filiot; இவர் 16-9-1814 முதல் 9-6-1820 வரை கவர்னர் ஆக இருந்தவர்.

49. பிளாக்பர்ன் - இவர் 1811இலிருந்து ரெஸிடென்ட் ஆக இருந்தவர்

50. பரங்கிப்பேட்டை வராகன் - இது சிறிது மதிப்பு அதிகம் உடையது எனத்தெரிகிறது (பக்கம் 151)

51. ஆவுசாப் என்றது துளாஜாவின் மனைவியைக் குறிக்கலாம்.

52. 4 1/2 சக்கரம் கொண்டது ஒரு புலிவராகன்; மேலும் அதன் சரிபாதி 2 1/4 சக்கரம் கொண்ட புலிவராகனும் உண்டு என்பது இதனால் அறியவருகிறது (பக்.150)

53. திருவந்தூர் என்பது திருவழுந்தூர் ஆகலாம்.

54. இதனால் 1 ரூபாய்க்கு 6 1/2 பணம் என்று தெரிகிறது.

**41.1215**

*(1)* யானைக்கானா[55] செர்பீனா குதிரைஜோடி 8 இதற்கு நரம்? செய்ய எடை-விளக்கெண்ணை - 5 சேர், மரடாசட்டி - 8 சேர், உப்பு - 3 சேர் ———— 16 சேர் கொடுக்கிறது.

***(2) 1215***

தேவஸ்தானத்தில் - விஜயதசமிதினம் சிலங்கணத்திற்குச்[56] சென்று வருவதற்கு கோட்டைக்கு வெளியிலுள்ள கோவில்கள். ஸ்ரீ மேல்சிங்கப் பெருமாள்[57] 1, ஸ்ரீ நீலமேகப் பெருமாள் 1, ஸ்ரீ மணி குண்ட பெருமாள் 1, ஸன்னா ஸவாரியுடன் புறப்பட்டு பராசரர் குளத்தின்[58] கரைக்கு ஸ்வாமி வந்து சிலங்கணஞ் செய்து-திரும்பிப் போகுவதற்கு உத்திரவிடவேண்டும்.

**42.1215**

*(1)* மராமத்து[59] மகாலிலிருந்து 300 சேர் இரும்பு வேதாரண்யம் கோடிக்கரையில் வேலைக்காக அப்பாவுவிடம் கொடுக்கிறது.

*(2) 1215*

இருமாப்பிள்ளைகளுக்கு விஜயதசமிக்காக ஆரதி எடுக்கையில் தட்டில் போடுவதற்கு பணம் வகையறாவை வழக்கப்படி இப்பொழுது மாப்பிள்ளை ரா.நாகோஜி மோஹிதேவிற்கும்[60] ரா.யசவந்தறாவ் சூர்வேவுக்கும்[61] கொடுக்கிறது.

*(3) 1215*

பாகவத்மேளிடம்[62] நாட்டியத்திற்குப் பட்டி மகாலிலிருந்து 25 விடையங்களையும்[63] ஸர்பத்கானா[64] விலிருந்து ஜவ்வாது 1/4 விராகனிடையும், கொட்டியத்திலிருந்து 1/2 சேர் எண்ணையும் கொடுக்கிறது.

**42.1215**

*(3)* கிருஷ்ணாஜெட்டி, சுப்பா ஜெட்டி இவன் 15 வருஷகாலமாக அதிக முயற்சியாக சண்டைசெய்து, மகாராஜாவிற்கு வேடிக்கை காட்டினதால் வெள்ளைச் சால்வையைக் கொடுத்து சண்டையை மன்னித்ததற்கு.

---

55. யானைக்கானா - ஹத்திகானா; பில்கானா

56. சிலங்கணம் - சீமோல்லங்கணம்

57. மேலசிங்கப்பெருமாள் - இக்கோயில் தஞ்சை மேலவெளித்தோட்டத்தில் சிங்கப்பெருமாள் குளத்தின் மேல்கரையில் இருந்தது என்றும், பின் வெண்ணாற்றங்கரைக்கு மாற்றப்பெற்றது என்றும் தெரிகிறது (பக்கம் 190; 213இல் 36)

58. பராசரர் குளம் - பராசரர் என்பார் வசிட்டரின் பேரர்; சத்திமுனிவரின் மகன்; இவர் தாய்வயிற்றில் 12 ஆண்டிருந்தவர்; வியாசர் இவருடைய மகன்.

59. மராமத்துமகால் - இமாரதி மகால் (பக்கம் 458)

60. நாகோஜி மோஹிதே - இரண்டாம் சரபோஜியின் இரண்டாவது மகள் இராஜகுமாராபாயியின் கணவன்
61. யசவந்தராவ் சூர்வே–இரண்டாம் சரபோஜியின் மூன்றாவது மகள் பாயம்மா பாயியின் கணவன்
62. பாகவதமேளா - இசைநாடகக் குழு (பக்கம் 230)

63. விடையம் - வெற்றிலைப் பாக்குச்சுருள்

64. ஸர்பத்கானா - குளிர்பானம் தயாரிக்கும் இடம் (பக்.452)

*(4) 1215*

*ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமிகள்[65] விஜயதசமிக்காக மஹாராஜாவிற்கு கொடுத்த ஒர் ஆடையை மகாவில் வரவு வைக்கிறது.*

*(5) 1215*

*மஹால் -மராமத்து-ரா.ராவுசாயேப்பின் மூலமாக சிவராயர்[66] வீட்டிலிருந்து கருங்காலி உத்திரம், உயரத்திற்குநோதகத்தியின் அகலத்தை தைத்ததுடன் கூட ஒன்றுக்கு நீளம் கஜம் 7 3/8 அகலத்தில்... உயரத்தில்.... 7 வீதம் சுமார் உத்திரம் 2க்கு ஒன்றுக்கு 5 பர. பேட்டை வராகன் வீதம் 10ப.வராகன்களைக் கொடுக்கிறது.*

*44.1215*

*(1) தேவஸ்தானத்திற்கு நித்யப்படி மொயின் வகையறாவின் சிலவிற்காக கும்பனியிலிருந்து மாதாமாதம் மொயின் வரவேண்டிய வகையில் செப்டம்பர் மாதத்திற்கு 1135-8 3/8- 1/2.*

*(2) வெள்ளி லாவணி 2 1/2 பணம் பெரிய தூக்கு 20க்கு சக் 5*

*26.1246*

*(1) திருவையாறு –காவேரி நதியின் பாலங்[67] கட்டுகிற விஷயத்தில் இஞ்சனீயர் தாசில்தார் வகையறா வந்து பார்த்து விட்டுப் போன விஷயம்.*

*(2) 1246*

*சரபேந்திர ராஜபட்டணத்தில் ஒரு புதியபடகின் வத்தே? தயார் செய்யும் விஷயம்.*

*(3) 1246 ஆகஸ் 22உ*

கோடிக்கரைக்கு ரெஸிடண்ட் மங்கமாரி[68] சாஹேப் வந்திருந்த தருணத்தில் அங்கிருக்கும் ஸர்காரின் தோட்டத்திற்கு வந்து அவ்விடமுள்ள நியமிக்கப்பட்ட வேட்டைக்காரர்களைப் பார்த்து உங்களுக்கு இங்கே என்ன வேலை? தோட்டத்தில் வரும்படி எவ்வளவு? என்று கேட்டதற்கு ஹுஜூரின் சிலவிற்கு வேண்டிய பக்ஷிகள் வகையறாவைபிடித்து அனுப்புவது வழக்கம். வருஷத்திற்கு வரும்படி ரூ.18.20 கணக்கைக் காட்டினதற்கு அவர்களைசிறையில் போட்டு, மறுநாள் விடுதலை செய்தார். 5 மான்களைக் கொண்டு போனார். இன்னும் மான்களைப் பிடிக்க வருவதாகச் சொன்னார்.

திருவாரூரிலிருந்து 2 வண்டிகளில் எராளமான குரங்குகளை காட்டில் கொண்டு வந்து விட்டார்கள். அவைகள் தோட்டத்தை ரொம்பவே அழிக்கின்றன. அவைகளை அடித்து விரட்ட உத்திரவாக வேணுமென்று ஆவுசாப் தோட்டம்[69] வகையறாவின் மத்யஸ்தருக்கு[70] எழுதியது.

---

65. ஐந்தாவது சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஆகலாம். இவர் 1814இல் மடத்து அதிபர் ஆனார்.

66. சிவராயர் - அமர்சிங்கு காலத்திலிருந்த சர்க்கேல் (பக்.28)

67. 1246 என்பது கி.பி.1845. திருவையாற்றுக் காவிரிப்பாலம் 1846-47இல் கட்டி முடிக்கப்பட்டது (பக்கம் 470)

68. மங்கமாரி - H.C.Mongomary - இவரும் பிஷப் என்பவரும் "Officiating residents" என்று தெரியவருகிறது (பக்கம் 470)

69. ஆவுசாப் தோட்டம் என்பது கோடிக்கரையிலிருந்த தோட்டத்தின் பெயர் ஆகலாம்.

70. மத்யஸ்தர் - அலுவலர்

*26. 1246 ஜூலை*
*(4)* ஆஸ்பத்திரிக்குக் காயலாவாகி வரும் ஸர்காரின் சிப்பந்திகளுக்கு தான் கொடுக்கிற ஸர்டிபிகேட் செல்லுபடியாக செய்ய வேண்டுமென்று டாக்டர் சொல்லுகிற விஷயம்

*(5) 1246 ஜூலை 7௳*
கவணிக்குடி வீரப்புலிமங்கள என்னுமூருக்காக ஷெ ஊரார் கிராமத்தின் தேவதைக்குப் பூஜை போடுகிற விஷயம்.

*36.1246 மார்ச்சு 14 ௳*
*(1)* அஹில்யாபாய் சத்திரத்தைச் சேர்ந்த ஜம்புகாவேரியின்[71] தென்படுகை ஷெஆற்றை அகலப்படுத்துகிற விஷயம்.

*(2) 1246 மார்ச்சு 14௳*
வெங்குசாமி ஜோஸி ஸர்காரில் பஞ்சாங்கத்தைக் கணிதம் செய்கிறார்.

*(3) 1248 மே 8௳*
ஸேனாதுரந்தர் ராமையா வராஹப்பையா தீக்ஷிதரவர்கள் ஸர்கேலுக்கு எழுதியது.

ஸரஸ்வதி மஹாலுக்குச் சேர்ந்த ஸத்தியான மண்டபத்தின் (விண்ணாற்றங்கரையில்) அன்னசத்திரத்தின் பிராமண போஜனத்தின் சிலவிற்காக கும்பனியிலிருந்து வரும் நெல், மாசி மாதத்தில் வந்தது, சித்திரமாஸத்தில் அளக்கப்பட்ட வகையில் நெல்கலம் 3771-10 ஆனாலும் நெல்வந்த முதற்கொண்டு 3 மாதங்கள் வரையில் அளக்காமல்இருந்ததால்வெயிலில் காய்ந்து, மழையில் நனைந்ததினாலும், அடியிலுள்ள நெல் முளை கிளம்பி கொஞ்சங்கூட உபயோகமில்லாததாக கறுக்கான வகையில் கலம் 101-10 ஷெ நெல்லைக் குத்தி அரைத்துப் பார்த்ததில் அரிசி நொய், மாவாகிறது. அவ்வகையில் 570 கலம் நெல்போக பாக்கி பிராமண போஜனத்திற்கு உபயோகப்படும்படியானது நெல்கலம் 3000, அதையும் இடித்துப் பார்த்ததில் அநேகமாக அரிசி மட்டை சேர்ந்ததாகயிருக்கிறது. இவ்விஷயத்திற்குச் சீக்கிரம் வழி செய்ய வேணும் என்று சொல்லியனுப்பியும் ஆகவில்லை. நெல் உபயோக மற்றது. காலதாமதத்தினாலாயிற்று.

ஷெ சத்திரத்திற்கு திட்டம் நெல்கலம் 9000 அதில் அன்னக்காவடி சத்திரம், ராமசாமி மகால், கோவில் வகையறா சிலவும் இந்த 9000 கலம் நெல்லில் அடக்கிச் செய்ய வேண்டுமாகையால் பாக்கி நமக்குக் கொடுக்க வேண்டிய நெல்லை உத்தேசம் கலம் 6000 மும் நல்ல நெல்லாக, சீக்கிரமாக வரவேணுமென்றும் வந்தவுடன் பங்கிடவேணுமென்றும் அமினாவுக்கும் உத்திரவாக வேணுமென்று.

*36 1246 ஜூன் 7௳*
*(4)* ஸர்காருடைய யானைக்கு அரசூர் தோட்டத்தில் விலைக்கு வாங்கி அறுத்த நாணலை கருத்தட்டாங்குடி போலீஸ்காரர்களின் சிப்பந்திகள் வண்டிகளின் மேலேற்றிக் கொண்டு செல்லுகிறார்களென்று ருத்திராஜி ஆனந்தறாவ் ஜாதவ் என்பவர் ரெஸிடெண்டுக்கு[72] எழுதிய கடிதம்.

71. ஜம்புகாவேரி - பள்ளியக்கிரகாரத்தின் வடக்கெல்லையில் ஓடும் வாய்க்கால்

72. ரெஸிடெண்டு - ஜே.பிஷப் என்பவர் (பக்.68)

*33. 1250. Dec. 27உ*

(1) மகாராஜா சாஹேப் அவர்களுக்கு ஹிஸ்ஹைநஸ்ராஜஸ்ரீ மகாராஜா சாகேப் என்று கடிதம் தஸ்தாவேஜிகளிலும் தீர்ப்பு வகையறாக்களிலும் கண்டு எழுதுவது வழக்கமிருக்கையில் தற்பொழுது கருந்தட்டாங்குடி பேட்டை அருணாசலம் பிள்ளை முன்சீப் கோர்டில் செய்த பிராதில் முன்சீப்தாரவர்கள்[73] செய்த தீர்ப்பில் மகாராஜா ஸர்கேல் என்று ஏகவசனமாக[74] எழுதி, அந்த தீர்ப்புக்கு கோர்ட்டின் முத்திரையையும் கையெழுத்தும் போட்டிருப்பதினால் ஸர்காருக்கு குறைவு ஏற்படுவதால் இனி இப்படி நடவாமல் செய்ய வேண்டுமென்று சுங்கக்காரர் ஸர்கேலுக்கு எழுதிய கடிதம்.

*35.1238*

(1) கார்பார் பிரஸங்கத்தில்[75] ஸபையின் கணக்கர் ஸ்ரீநிவாஸ் அய்யங்காருக்கு அழைப்பித்து நாநாஜி கங்காதரவர்கள் கொடுத்த யாதியை அவர்களிடம் கொடுத்து, நாநாஸ்வாமியாரின் குழந்தையை ஸ்வீகாரம் வாங்கிய பாவுஸ்வாமியாரின் பெண்சாதி பாளாபாய்[76] அம்மாவுக்கும் நாநாஸ்வாமிக்கும் மனஸ்தாபமேற்பட்டிருப்பதை மனதில் வாங்கி, குழந்தையின் சொத்தை, குழந்தை பெரியவனாகும் வரையில் பத்திரப்படுத்தி வைக்கவும். ஷை மடத்தின் ஆதீனம் பெரியதானதாலும் இருவருக்கும் மனஸ்தாபமில்லாமல் செய்வதற்கும் ஒரு ஏற்பாடு செய்யும்படி நியாயாதிபதிக்குச் சொல்லுகிறது என்று ஹுஜூரின்[77] உத்திரவின் பேரில் விசாரணை துவக்கப்பட்டிருக்கிறது.

*(2) 1246 நவ 4உ*

ஹுஜூரின் வேலை பார்க்கும் தத்தாஜி மல்ஹாரஜி அப்பாவுக்குப் பிரதிப் பெயர் கண்ணுசாமி அப்பா என்பவர் தனக்கு மிகுந்த கடன் தொந்தரவிருக்கிறது. ஸர்காரில் தனக்குக் கொடுத்த வடமட்டம், பூங்குடி இவைகளை ஸர்காரில் விலைக்கு வாங்க வேணுமென்று ரெஸிடெண்டுக்கு[78] கொடுத்த மனு.

*(3) 1247*

ரெஸிடெண்டுக்கு மனு.

தஞ்சாவூர் கோட்டை தேவஸ்தானத்திலிருந்து ஸ்ரீகாமாக்ஷி அம்மனுக்கு[79] ஐப்பசி மீ நவராத்திரிக்காக அபிஷேகம் வகையறாவிற்காக திருவாதி[80] தாலுகாவிலிருந்து வழக்கப்படி

73. முன்சீப்தார் - வட்ட நீதிமன்ற நீதிபதி

74. ஏகவசனம் - ஒருமையில் (மரியாதையில்லாமல்)

75. கார்பார் பிரசங்கம் - தருமசபையின் தீர்ப்புக்கு மேல்முறையீடு இங்குச் செய்யலாம்; இவர்கள் “இசுபசால்” என்ற அவையில் மேல்முறையீட்டுக்கு அனுப்பச்செய்வர்; இது சர்க்கேல் அலுவலகம் என்று தெரிகிறது (பக்.168)

76. பாளாபாய் - தஞ்சையில் உள்ள பாளா சுவாமி மடத்தில் 1837இல் இருந்த பாவு கோசுவாமியின் மனைவி

77. ஹுஜூர் என்றது இரண்டாம் சிவாஜியை

78. ரெஸிடென்டு - ஜே.பிஷப் என்பவர் (பக்.68)

79. காமாக்ஷி அம்மன் - பங்காரு காமாட்சி (பக்.213இல் 7)

80. திருவாதி - திருவையாறு

வருகிற சாமான்களுக்கு ஷெ தேவஸ்தானத்தார் கொடுத்த ஜாபிதாவின்படி கொடுக்கிறது. (சகம் 1768[81] பராபவ ஐப்பசி மீ சுத்த[82] சப்தமி திங்கட்கிழமை தினம் உற்சவாரம்பம்)[83]

500 இளநீர் - தேங்காய் 200 - 100 தென்னங்குறுத்து, மட்டைகள் 50 ஷெ பச்சை மட்டை, 100 தோமாலை[84] ஜோடி கொடுக்க உத்திரவாகவேண்டும்.

(4) 1846 செப்டம்பர் 5 வ

ரெஸிடெண்டுக்கு -

மிஸ்தர் டுயீஸ் அவர்கள் சர்காருக்கு ஹைதராபாதின் நாட்டியத்தின்படம் ஒன்று - நவாபின் பட்டாபிஷேகத்தின் படம் ஒன்று - அனுப்பியிருக்கிறார். முதல் படத்தின் விலை.ரூ.55 இரண்டாவதின் விலை ரூ.75 ஆக 130. இன்னும் படத்திற்குச் சட்டம் போட்டு மிருகுகொடுத்துத் தயார் செய்ததற்குஷா அண்ட் கோ-வுக்குசெல்ல வேண்டியது ரூ.21.ஆக ரூ.151ஐ சர்காரிலிருந்து கொடுத்தனுப்ப வேண்டுமென்று.

(5) 1846 செப் 16வ

சர்கேலவர்கள் - ரெஸிடெண்டுக்கு எழுதியது: தரங்கம்பாடி டேனிஷ் இலாகாவிலிருந்து சர்காருக்கு வரும் 'தோபா'[85] என்கிற துகை தஞ்சாவூரின் சிங்காதனத்திற்கு ஒர் அலங்காரமென்று முன்கால முதற்கொண்டு அதை ஸர்காரின் வக்கீலவர்கள் வருஷத்திற்குஅங்கே சென்று பெற்றுக்கொண்டு வருவது வழக்கம். கவர்ன்மெண்ட்டார் நடத்தி வந்தார்கள். இவ்வருஷம் அவ்விலாகாவின் ஊர்களை கவர்ன்மெண்டார்கள் வாங்கிவிட்ட படியினாலே ஷெ தோபாவின் துகையை ரெஸிடென்ஸி ஆபிஸில் நம்மிடம் அல்லது வேறு ஒரு அதிகாரியினிடமோ மரியாதையுடன் கொடுக்கிறோம். அல்லது கடிதத்துடன் அரண்மனைக்கே அனுப்புகிறோமென்று நீங்கள் எழுதியிருப்பதாக தங்கள் சிரஸ்தேதார் தெரிவிக்கிறார். ஷெ தோபாவின் துகை மிகக்குறைவாயிருந்தாலும் அதை வாங்கும்பொழுது இது வரையில் நடந்து வந்த மரியாதையின் முறையானது தஞ்சாவூர் இராஜ்யத்திற்கு ஒரு பெருமையாயிருந்தது. அதை தாங்கள் நன்கு அறிகிறீர்கள். தங்களுக்கு எப்பொழுதும் நம்முடைய சர்காரின் நல்லதைச் செய்யும் எண்ணமுள்ளவர்களாயிருந்தாக வேண்டும். ஆகையால் தரங்கம்பாடியில் முக்யமானமொரு துரையவர்கள் இருந்து அங்கு நம்முடைய வக்கீலின் சந்திப்பை வழக்கப்படி மரியாதையுடன் வந்து சர்காருக்கு அனுப்பவேண்டிய துகையை செலுத்தவேண்டும். முக்கியமாக நமக்கு தோன்றுகிறது. ஆனாலும் நம்முடைய வக்கீலுக்குத் தரங்கம்பாடியில் வழக்கப்படி மரியாதை செய்யவேண்டுமென்று.

---

81. சகம் 1768 + 78 = கி.பி.1846; சுஹூர்ஸன் 1247 + 599 = கி.பி.1846

82. சுத்தம் - வளர்பிறை; சப்தமி - ஏழாம் நாள்

83. உற்சவாரம்பம் - திருவிழாத் தொடக்கம்

84. தோமாலை - தோரணம் ஆகலாம்

85. தோபா - தோஃபா (Topha) என்பது கப்பம் என்று பொருள்படும். தரங்கம்பாடியில் டேனிஷ்காரர்கள் தஞ்சை மராட்டிய மன்னருக்கு உரிய சிறு நிலப்பகுதியைப் பல ஆண்டுகளாக அனுபவித்து வந்தனர். அதற்காக ஆண்டொன்றுக்கு 2000 சக்ரம் கொடுத்துவந்தனர். இரண்டாம் சரபோஜி 25-10-1799இல் செய்து கொண்ட ஒப்பந்தப்படி அரசாங்க வசூல் உரிமையை ஆங்கிலேயருக்கு ஒப்படைத்தபொழுது அவ்வொப்பந்தத்தின் 14ஆவது ஷரத்தின்படி மேற்கண்ட தொகையைப் பெறும் உரிமை உடையவராய் ஆண்டு தோறும் பெற்றுக் கொண்டார், அந்தத் தொகையைப் பெற்றுக் கொள்வதற்காகத் தஞ்சாவூரினின்று வக்கீல் அனுப்பப்பெறுவர் என்றும் அப்பொழுது நடத்தப்பெறும் மரியாதைகள் விவரம் 4-313-14இல் காணலாம் (பக்கம் 146)

*(6) 1846 செப் 18வ*

ஸர்கேலவர்கள் - ரெஸிடெண்டுக்கு: ஸர்கார் இலாகா சுலக்ஷணாம்பாபூர் சத்திரத்திற்கு[86] தென்னண்டை இருக்கும் செந்தலை உப்பளத்திலிருந்து திருச்சினாப்பள்ளிக்குச் செல்லும் ஷெ சத்திரத்திற்கு வடக்கேயிருந்து ஒருபாதை இருக்கிறது. இப்படியிருக்கையில் அந்த ரஸ்தாவைச் செப்பனிடாமல் சத்திரத்திற்கு தென்னண்டையிலிருந்து புதிய ரஸ்தாவை போடுகிறார்கள். இதனால் சத்திர தர்மத்திற்கு நஷ்ட மேற்படும் போலிருப்பதால் இதை விசாரிக்கவேணுமென்று.

*(7) 1846*

ரெஸிடெண்டுக்கு - சர்கேல் எழுதியது.

ஞாபகக்குறிப்பு

வைதீஸ்வரன் கோவில் யானை - தையநாயகி[87] - 1
திருவங்காடின்[88] கோவில் யானை - பெரிய நாயகி - 1
மன்னார்குடியின் கோவில் யானை - செங்கமலம் - 1
திருபுவனத்தின் கோவில் யானை - தர்மஸம்வர்த்தினி - 1

இவ்விந்த ஐந்தானைகளையும் சர்காருக்கு விஜயதசமிக்காக வருகிற வழக்கம். அதன்படி தயவுசெய்து ஹாஜர் ஆகுவதற்கு உத்திரவிட வேண்டும்.

*(8) 1846 செப் 20வ*

கும்பகோணத்திலிருக்கும் சர்காரின் தோட்டம் திவான் அரண்மனைக்குச் சமீபத்தில் கிடக்கும் செங்கலின் துண்டுகளையும் சுண்ணாம்புக் கற்களையும் அள்ளிக் கொண்டு போய் ரஸ்தாவை செப்பனிடும் வேலைக்கு பங்கிடு செய்வதற்கு அவ்விடமுள்ள சிப்பந்திகள் தடை செய்யாமலிருக்கும்படிக்கு உத்தரவிட வேண்டுமென்று கலெக்டர் சாஹேபவர்கள் எழுதியபடி நடக்கவும்.

*(9) 1846*

ஸோமநாத பண்டிதருக்கு[89] ஏதோ காலம் வரையில் முதலில் ஸர்கார் இலாகாவைச் சேர்ந்த தோட்டங்களிலுள்ள கதீம் புதியதோட்டம் ஸர்வமான்யமாகக் கொடுத்திருந்தார்கள். பின்பு ஜப்தியான பின்னர் சர்காருடையது தான் தற்பொழுது இப்படியிருக்கையில் ஸோமநாத பண்டிதரும் அவருடைய காரியஸ்தரும் வந்து தங்களுக்குப் பலபாகஞ் சேரவேண்டியதென்று தொந்திரவு செய்கிறார்களென்று ஸர்கேல் ரெஸிடெண்டுக்கு எழுதிய கடிதம்.

*(10) 1846 செப் 28வ*

ஞாபகக்குறிப்பு:- தரங்கம்பாடிக்கு 'தோபா' என்னும் துகைக்காக செல்லும் சர்க்காரின் வக்கீலுக்கு சென்ற வருஷம் வரையில் நடந்து கொண்டு வந்த மரியாதையின் முறை:-

---

86. சுலக்ஷணாம்பாபூர் என்பது வேளங்குளம் ஆகும். சுலக்ஷணாம்பா என்பவர் இரண்டாம் துளஜாவின் மூன்றாவது மனைவியாவர் (பக்கம் 272)

87. தையல்நாயகி - வைத்தீசுவரன் கோயில் எனப்பெற்ற புள்ளிருக்கு வேளூரிலுள்ள அம்பிகையின் பெயர்

88. திருவங்காடி - திருவெண்காடு ஆகலாம்

89. ஸோமநாத பண்டிதர் - சோமநாத சதாசிவ தீக்ஷித் பண்டிதர் ஆகலாம்.

1. ஹுஜூருடைய பெயரால் கவர்னரவர்களுக்கு ஒரு கடிதம் ஸர்கேலின் பெயரால் கவர்னருக்கு ஒரு கடிதம், காரியதரிசிக்கு ஒரு கடிதம், கௌன்ஸலர்களான துரைகளுக்கு மூன்று சால்வை ஜோடிகளும் ரசீது ஒன்றும். இவைகளுடன் வக்கிலை தரங்கம்பாடிக்கு அனுப்புகிறது.

35 (10) 2) அவ்விடத்திய சிரஸ்தேதாரவர்கள் போலீஸ், சிங்கு, தம்பட்டம், சிப்பாய்கள் வகையறா எடுபடிகளுடன் எதிர்கொண்டுவந்து, கவர்ன்மெண்ட் ஆபிஸுக்கு வக்கிலை அழைத்துச்செல்வது. கோட்டையில் செல்லும்போது 15 பீரங்கிகளை விடுகிறது. கௌனரவர்கள் இவருக்கு தாஜீமைக் கொடுத்து மரியாதைசெய்து அமரச்செய்து கடிதம் வகையறாக்களை வாங்கிக்கொண்டு வக்கிலுக்கு வெற்றிலைப்பாக்கும், வஸ்திரமும் கொடுத்து, மரியாதை செய்து, பீரங்கியின் தொகையைக் கொடுக்கிறது. வக்கிலவர்கள் அத்தொகாயை விஜயதசமி தினம் ஹுஜூருடைய ஸன்னிதானத்தில் கொண்டு வந்து கொடுக்கிறது.

இந்தப்படிக்கி இதுவரையிலும் நடந்து வருகிறது. ஆனால் ஷெ துகையை இங்கேயே சேர்ப்பிக்கிற எண்ணம் சாஹேபுக்கு இருப்பதால் இரண்டாவது சங்கதியில் கண்டபடி எதிர்வந்து அழைத்துக் கொண்டு போகிறது வகையறா மரியாதையை இங்கேயே நடத்தும்படி சாஹேபவர்கள் தயவுசெய்ய வேணும். ஸாஹேபின் பேரில் ஹுஜூருடையதும், ஸர்கேலுடையதும், கடிதமும், ரசீதும் சால்வை ஜோடியோ வக்கிலுக்காக வேறு ஒரு காரியஸ்தனிடமோ கொடுத்து, செவ்வாய்க்கிழமையோ, புதன்கிழமையோ, சாஹேபுக்கு சரி என்று தோணுகிற தினத்தில் அனுப்புவோம்.

...கனம் பொருந்திய கவர்ண்மெண்ட்டார் மகாராஜாவின் முன்னோர்களுக்கும், மகாராஜாவிற்கும் கொடுக்கிறது. இதுவரையில் உறுதிமொழியைக் கொடுத்தபடி நடத்தி வந்த பெருமையோடேயே. இப்படி அவர் ஷெ காரியத்தில் இப்பொழுது அந்த மரியாதை....வேண்டாமென்று நினைப்பார்களானால் நாம் ஆக்ஷேபனை செய்யமுடியாது. ஆனாலும் பெருமையும், மானமும் இவ் விஷயத்தில் மட்டும் நாம் இச்சையுள்ளவர்களாக இருக்கிறோமென்பதை சாஹேபுக்கு தெரியுமானதால் சாஹேபுக்கு எது சரியானதோ அதை செய்யலாம். துகைக்கு ரசீதை வழக்கப்படி ஹிந்தவீ[90] எழுத்தில் எழுதி அனுப்பிகிறேன்.

ஸர்கிலின் கையொப்பம்.

(11) 1846

2. கோட்டூரப்பாவிடம் மைசூர் ராஜா சாஹேபவர்களுக்குக் கொடுப்பதற்கென்றுஎவ்விதமான சாமான்களும் சர்க்காரிலிருந்து அனுப்பப்படவில்லை.

1. கோட்டூரப்பாவானவர் மைசூர் ராஜாவிடமிருந்து ஹுஜூருக்காக ஒரு இனாமோ சால்சாப்போ (சங்கதியோ) கொண்டு வரவில்லை.

3, கோட்டூரப்பாவிடம் சர்க்காரவர்கள் எவ்விதமான காறார்நாமா அபேக்ஷிக்கவில்லை. அவன் எழுதியுங் கொடுக்கவில்லை.

90. ஹிந்தவீ எழுத்து - மராட்டிய மொழி மோடி எழுத்து

4. கோட்டுரேப்பா மைசூருக்குப் போகையில் அவனுடன் ஸர்க்காரின் வேலைக்காரர்களை அனுப்பினதாவென்பதை நாம் பரிசோதிக்கிறோம். தஸ்தாவேஜீ கச்சேரியில் ஏதாவது தாகலா விருக்கிறதாவென்று கூட பரிசோதித்தோம். அதில் ஒன்றும் தென்படவில்லை. வகையறா 8 சமாசார அயிட்டம் இருக்கின்றன.

25.1847 Apr. 27 வ

(1) நீலகண்ட பிள்ளை ஸேதுபிள்ளை இவர்கள் பேரில் ஏற்பட்ட குற்றத்திற்காக அவரிருவர்களை சரீர தண்டனையக்[91] கொடுக்கிறதென்று நியாய ஸபையில்[92] தீர்ப்பாயிற்று. தரும ஸபையிலும் சரீர தண்டனை கொடுத்திருக்கிறது. நீலகண்ட பிள்ளையின் தாயார் சுந்தரம்மாள் ஷெ சரீர தண்டனையை மன்னிக்க வேணுமென்று பிரார்த்திக்கிறாள். அவருடைய வேண்டுகோளை ஹுஜூருக்குத் தெரிவித்ததின்மேல் ஹுஜூர்[93] தயவுசெய்து, ஸபையார்கள் விதித்த சரீர தண்டனையை மன்னித்து, அவரிருவர்களுக்கும் மேலான ஸாஹஸ் தண்டனையை[94] விதித்து துகையை வசூலித்து சிறையிலிருந்து விட்டு விடலாம் என்று உத்திரவாயிற்று. அவர்களை விடும்பொழுது இனிமேல் ஒருபொழுதும் இப்பேர்ப்பட்ட குற்றத்தைச் செய்யக் கூடாதென்று ஸபையில் நிறுத்திவைத்து பிரசித்திப்பத்திரத்தைப்[95] படித்து ரூ.21ஐ வசூலித்து விட்டு விடுகிறது.

(2) 1846. Sep. 14வ

நியாய ஸபையில் கும்பனியில் ரெகுலேஷனின் நகல் ஒன்றை கொடுக்க வேண்டும்

(3) 1846 அக் 1 வ

தரும ஸபையார் வேதம் ஓதக்கூடாத (படிக்கக்கூடாத) தினத்தில் தீர்ப்பு செய்திருக்கிறார்கள். அவ்விஷயத்தைப் பற்றி 2 கடிதங்களை அனுப்பியிருப்பதற்குப் பதில் வரவில்லை. ஸ்ம்ருதி சந்திரிகையில்[96] தர்சனவிதியில் எழுதிய ச்லோகங்களிருக்கின்றன. வேதம் படிக்கக்கூடாத தினத்தில்[97] தீர்ப்பு செய்யக்கூடாதென்பதைப் பற்றி -

(4) 1846 அக் 11 வ

முத்திரையில்லாத பத்திரங்களில் மனுக்கள் வருகின்றன. அந்த விஷயத்திற்கு ஏற்பாடு செய்திருக்கிற சங்கதி விஷயம். முத்திரைப் பத்திரத்தின் விலையின் விஷயம்.

---

91. சரீர தண்டனை - (பிரம்பால்) அடிப்பது

92. நியாய சபை - தஞ்சாவூரில் 1800இல் இருந்த நான்கு நியாய மன்றங்களில் ஒன்று.

93. ஹுஜூர் - அரசர் (இரண்டாம் சிவாஜி)

94. ஸாஹஸ தண்டனை - வேலை செய்வது

95. பிரசித்தி பத்திரம் - அறிக்கை

96. ஸ்மிருதி சந்திரிகை - இது தேவன் பட்டோபாத்யாயா அவர்களால் எழுதப்பட்டது. 4 பகுதிகளையுடையது.

97. வேதம் படிக்கக்கூடாத தினம் - அநத்தியயன நாள் (நிறைமதி, மறைமதி, இவற்றுக்கு அடுத்த பிரதமை நாள் அஷ்டமிநாள்)

*38. 1850 ஜன 16௳*

*(1) திருவசலூர்[98] பண்டாரவாடை கிராமம் இவ்வருஷம் குத்தகைக்கு ஒப்புக்கொள்ள கிராமத்தாருக்குச் சொன்னதற்கு சென்ற ஸு போல காணாது குறைவாகக் காணும் போவிருக்கிறது. தவிர, சென்னைக்குப் போக புதிய ரஸ்தா போட்டதினால் கிராமத்தில் நஞ்சை நிலங்கள் சேதமாயிருக்கின்றன. சேதமானதால் பலமும்[99] சேதமாகும் என்று ஸர்கேலுக்கு.*

*(2) 1850 ஜூலை 29௳*

*கர்பூர்[100] தோட்டத்தில் ஒடப்பு எடுத்திருக்கிறது. இன்னும் சில இடங்களில் எடுக்கும்படி யிருக்கிறது. அப்படி எடுக்காமலிருக்க ஜாக்கிரதை செய்ய வேண்டும்.*

*(3) 1850 ஆகஸ் 4௳*

*மேற்கிலிருந்து நவாப்பானவர்[101] அம்பாரி வகையறாவுடன் வந்து கொண்டிருப்பதால் ரஸ்தாவில் 2 கழி அகலம் இங்கலிஷ் 15 அடி உயரத்தில் மரஞ்செடி கொடி இடைஞ்சலாக இல்லாமல் செப்பனிடும் வேலையை திருவாதி தாலுகா தாசீல்தாரவர்களுடைய அதிகாரமுள்ள யிடத்தில் நடக்கிறது. கடுவளி[102]யிலும் இவ்வேலையைச் செய்ய உத்திரவிட வேண்டும்.*

*38-1850 செப் 17௳*

*(4) கும்பகோண தாலுகாவில் குமாஸ்தாவின் வேலையை என் தகப்பனார் பார்த்தார். அவருக்கு நேடிவ்பண்ட்[103] என்னும் கொடுக்கும் துகையை மூத்த பெண்ணான கிருஷ்ணாபாய் என்பவள் தனக்குக் கிடைக்க வேண்டுமென்ற சங்கதியை ஹுஜூரின்[104] உத்திரவின்படி தங்கள் கச்சேரியில் நடந்து வருகிறது.*

*40-1850 ஜூலை 12 ௳*

*தஸ்தாவேஜைத் திருடின ஸோமநாத் நாகோஜியின் வேலையை அண்டினவனுடைய தம்பி சங்கரய்யருக்குச் செய்து கொடுக்க உத்திரவாக வேண்டும். மேற்சொல்லப்பட்டவன் குமாஸ்தாவின் வேலையும் அல்லது மராட்டி ஜபாப் நவீஸின் வேலையும் அல்லது தமிழ் இச்சபையில் வேலை பார்க்கத் தகுந்த வனாயிருக்கிறான்.*

*இரண்டாவது அத்யக்ஷர்[105] பாலசந்திர சாஸ்திரி.*

---

98. திருவசலூர் - திருவிசலூர் (திருவியலூர்); கும்பகோணத்துக்குக் கிழக்கில் ஆறு கி.மீ.தொலைவிலுள்ளது

99. பலம் - விளைச்சல்

100. கர்பூர் - கருப்பூர் - கும்பகோணத்துக்கு வெகு அருகில் உள்ளது.

101. நவாப் என்றது ஐதராபாத் நவாப் (நிஜாம்)

102. கடுவளி - கடும்வெய்யில் அல்லது கடுமையானவழியிலும்

103. நேடிவ்பண்டு - இறந்தவர்களுக்கு கொடுக்கும் தொகை (பணிக்கொடை) ஆகலாம்

104. ஹுஜூர் என்றது இரண்டாம் சிவாஜியை

105. அத்யக்ஷர் - நீதிபதி

*37.1850*

*தரும ஸபையின் நியாயாதிபதி மகாதேவபட் லாண்டகே கங்காதர் பட் லாண்டகே*[106] *யிடமிருந்து வந்த கடிதங்கள்.*

*(1) 1850 பிப் 6உ*

*முன்னால்சர்க்காரில் நமக்குச் சம்பளம் சக்.50 கிடைத்திருந்தது. தற்பொழுது ரூ.35 வீதம் கிடைக்கிறது. அதில் சர்க்கார் நம்மிடத்தில் காட்டும் அன்பிற்கு அனுஸரித்த ஸ்திதியினால் நடக்கவேண்டியிருப்பதால் இத்துகை சம்பளக்காரன் வகையறாவிற்கும் இதர சிலவிற்கும் போரவில்லை. அவ்விஷயமாக உத்திரவிட வேண்டும்.*

*மகாதேவபட் லாண்டகே (நியாயாதிபதி)*

*30.1846* மே 15 உ

*(1) கமாவிஸ்தார்*[107] *சுந்தரப்பய்யரிடம் ஹெட் சிரஸ்தேதார் ஸம்பாஷித்ததில் தனக்கு ஒரு பக்ஷமுமில்லை. தான் ஸ்வாமிக்கு பயந்து உள்ளபடி நியாயஞ் செய்பவன். தனக்குச் சர்க்காரில் வேலைக்காக வெளியில் புறப்பட்டால் தினமொன்றுக்கு 2 ரூபாய் போர்டிலிருந்து படிச்சிலவைக் கொடுக்கிறார்கள். மல்லாரிராயருக்கு சர்காரில் எவ்வளவு படிச்சிலவைக் கொடுக்கிறார்கள். அவர் படுகைக்கு வந்து 15 நாட்களாயிற்றே. நாளொன்றுக்கு 15 பேர்கள் சாப்பிடுகிறார்கள். அவருக்குச் சிலவதிகமோ. அதற்கு அவருக்கு சர்காரில் படிச்செலவு கொடுப்பதில்லை. அவர் பரம்பரையாய் சர்காருடையவர்களானதினால் சுபகாரியங்கள் வகையறாவிற்கு ஜாஸ்தியை ஸர்காரிலிருந்து அடைகிறவரென்று தான் பதிலளித்தேன். இன்று சாம்பூ கிராமத்திற்குச் சென்று 25 நாழிகைக்குள் மல்லாரிராவிடம் வந்து 2 நாட்களிருக்கிறேன். ஆசாரி சமையல்காரன் அகப்படுவாரா?*

*27.1846 அக். 11உ*

*(2) சுண்ணாம்புக்காரத் தெருவிலிருக்கும் அங்காசிங்கய்யன் என்னும் கோவிலின் கம்பி ஆகுவதற்கு கொத்தவாலுக்கு*[108] *எழுதியிருக்கிறது. இதுவரையிலும் கம்பி ஆகவில்லை. அது கொத்தவாலுடைய தாமதமென்று.*

*(1) 1846 செப் 22உ*

*வேதம் படிக்கக்கூடாத தினத்தில் விவகாரத்தை விசாரணை செய்வதும், தஸ்தாவேஜை வாங்கவும் கூடாதென்ற தாத்பர்ய*[109] *மிருந்தால் கிருஷ்ண பக்ஷம்*[110] *நவமி முதற்கொண்டு வருகிற யாதிகளை அந்த மாதத்திய அமாவாஸைக்குப் பிறகு பாக்கியிலிருந்தால் அவைகளை இரண்டாவது மாதத்தில் போடும்படியாக உத்திரவாக வேண்டும்.*

106. கங்காதர்பட் லாண்டகே - இவர் மனைவி 1827இல் (160 சி – 1-48) குறிக்கப்பெறுகிறார். 1850இல்கங்காதர்பட் நியாயாதிபதியாக இங்குக் குறிக்கப்பெறுகிறார்.

107. கமாவிஸிதார் - மேற்பார்வை செய்யும் அதிகாரி (பக்.75)

108. கொத்தவால் - கோட்டைக்காவல் அதிகாரம் உடையவன் (பக்.75)

109. தாத்பர்யம் - கருத்து

110. கிருஷ்ணபக்ஷம் - தேய்பிறைப் பக்கம்; நவமி - ஒன்பதாம் நாள்.

# மூட்டை எண் - 182C

*1.1237*

*ஞாபகக்குறிப்பு- மா.ஆவுசாப்[111] அவர்களிடமிருந்து வந்த நகைகளின் ஜாபிதா கல்லெழைத்த நகைகள் - வகையறா*

*7.1232*

*ஞாபகக்குறிப்பு- சுபானஜீபுதாஜீ போஸலே குருபாவு ஸ்வாமிக்கு சக்.100 கொடுக்கிறது.*

*15. 1242[112]*

*1232[113] சௌவல் 20வ ம.ரா.ரா.ஸ்ரீசிவாஜி ராஜா சாஹேப் அவர்களுக்குப் பட்டாபிஷேகம்.*

*சக்.67-5 பணம் - சௌவல் 22வ தங்கம் தாராபத்திரம் (ஸ்வாமிக்கு அபிஷேகஞ் செய்கிற பாத்திரம் அடியில் ஒரு துவாரமுள்ளது) ஒன்றைச் செய்து கொடுத்ததற்குச் சிலவு சக்.67 1/2.*

*(1) 1233*

*நந்தன ஸூ பால்குண கிருஷ்ண பக்ஷம்[114] ரா.சரபேந்திர ராஜபட்டணத்திற்கு விஜயஞ் செய்து, அங்கிருந்து கோடிக்கரைக்குப் போய் திரும்பி சரபேந்திர ராஜபட்டணத்திற்கு வந்தார். சௌவல் வ*

*15.1238*

*(2) ஞாபகக்குறிப்பு- சௌ.ராஜபாயி அமணி ராஜேசாயேப் அவர்களிடம் மோஹரம் 8 வ சௌ. யஜமான சாயேப் அவர்களுக்கு மூக்குக் குத்தினதற்காக 5 சுற்று ஆடை 1க்கு சக்.23-1 1/4 பணம்.*

*(3) 1832*

*ஞார்பகக்குறிப்பு-*

*ரா.சிவாஜி ராஜா சாயேபுக்கு பட்டம் கொடுத்த தேதி.*

*1832 மார்ச்சு மீ 24வ*
*1232 சௌவல் மீ 20வ*
*கரநாம ஸம்வத்ஸரம் பங்குனி மீ 13வ*
*(4) 1835 ஏப் 27வ*
*ஞாபகக்குறிப்பு-*

*இராமறாவ் சாயேப் தேசத்திலிருந்து வந்த தேதி. 1830 ஜன 26வ*

---

111. ஆவுசாப் என்றது அஹல்யாபாயியை

112. 1242 என்பது சரியல்ல

113. 1232 (சுஹூர்ஸன்) ஆண்டு சௌவல் 20 = 24-3-1832

114. நந்தன; வருஷம் பால்குன கிருஷ்ண பக்ஷம் = 4-1833. பால்குண-பங்குனி; கிருஷ்ணபக்ஷம் - தேய்பிறை; சரபேந்திர ராஜபட்டணத்துக்குச் சென்றவர் இரண்டாம் சிவாஜியாவர்

*(1) திருவையாறு திவான்வாடாவில்[115] மாடியில் தீபாதையினால் [116] (நஷ்டமான) அழியப்பட்ட சாமான்களின் ஜாபிதா.*

***4.1232.***

*(1) ஞாபகக்குறிப்பு:-*

*வஜாரத்மாப் - சுபானஜி புதாஜீ போஸலே கர ஷு ஆடி மீ 30உ சுபானு ஷு மார்கழி மீ 1 உ தஞ்சாவூரிலிருக்கும் முத்துமங்காவிற்கு ஷெ ஊரிலிருக்கும் லக்ஷ்மண் றாவ் போவாருடைய மகன் ஹீரோஜி போவார் எழுதிக் கொடுத்த வீடு சாஸனமாவது:-*

*கோட்டையில் நம்முடைய சொந்த வீட்டை அளந்து கூட கெஜம் சுமார் 242 1/4ம் ஒட்டுக்கட்டுக் கோப்பு அங்கணம் 25 3/4 .... சக்.219 - 8 3/4 பணம்.*

*இந்தப்படிக்கி வீட்டைத் தங்களிடம் அடகுவைத்து இதின் ஷெ தொகையைக் கொத்தவால் சாவடி (சராப்) காசுக்கடைக்காரர் முத்தியமுதலியின் பார்வையுடன் பெற்றுக்கொண்டிருக்கிறேன். ஷெ வீட்டை நீங்கள் அனுபவிக்கிறது. இந்தப்படிக்கி எழுதிக் கொடுத்த வீடு அடகு சாஸனம் கையொப்பம்.*

***18.1861** நவம்.18உ*

*(1) ஞாபகக்குறிப்பு:-*

*ஜாபிதா - யசவந்த்த மகாலும் ஜாமதார் கானாவும்[117] கூட துணியைப் பற்றி நம்பர் வாரி.*

***(2) 1861***

*ஞாபகக்குறிப்பு:- தாஸ்தானின்? துணிகள் வகையறாக்களைப் பாதுகாப்பதற்கு வேண்டிய சாமான்கள்.*

*சூடம் சேர் -4, வசம்பு சேர் - 5, கருஞ்சீரகம் சேர் - 5 , மிளகு டாங்க்[118] - 9*

***14.1233***

*(1) 5 ரூபாய் மோஹரா[119] 21க்கு ரூ. 105 முழு மோஹரா 2க்கு ரூ. 30*

*பாதி மோஹரா 5க்கு ரூ. 37 1/2 ரூபாய்கள் 108 ரூ. 280-8-0*

***(2) 1233***

*ஞாபகக்குறிப்பு:-*

*ரூ.5250 முழுப்பைகள் 15க்கு பை 1க்கு 350ரூ வீதம், ரூ.275 ஷெ முழுப்பைகள் 1க்கு3495 15ரூ மோஹராக்கள் 233க்கு,980 5 ரூ.மோஹராக்கள் 196க்கு = 10000*

---

115. திவான்வாடா - அரண்மனை

116. தீபாதையினால் - தீப்பிடித்தமையால்

117. ஜாமதார்கானா - அரசகுடும்பத்துக்குரிய ஆடைகளும் நகைகளும் உள்ள இடம் (பக்கம் 453)

118. 3 டாங்க் - 1 தோலா

119. மோஹராக்களின் வகைகள் (பக்கம் 152)

*(3) ஞாபகக்குறிப்பு-*

| | |
|---|---|
| *குலாப் அத்தர் தோலா 1க்கு ரூ.8 வீதம் 8 1/4[120] தோலாவுக்கு ரூ.-68* | |
| *சந்தவி அத்தர் சேர் 10 ரூ 10 சேருக்கு* | *100* |
| *கொளுந்து அத்தர் தோலா 1க்கு ரூ.5 வீதம் 36 தோலா* | *180* |
| *சேப்பிவிகா? ஜாதிப்பூவின் தோலா1க்கு 5 வீதம் 24 தோலா* | *120* |
| *சாம்ப்யா தோலா 1க்கு 5 வீதம் 24 தோலா* | *120* |
| *குலஸேபோசி? தோலா 1க்கு 7 வீதம் 24 தோலா* | *168* |
| *மனதாஹநஜீனகவரி பஸாசே அத்தர் தோலா 1க்கு ரூ.5 வீதம்* | *120* |
| *ரௌஸோதோலா 1க்கு 3 வீதம் தோலா 38க்கு[121]* | *108* |
| *கரவணப்பட்டையில் தைலம் சேர் 1க்கு 14 ரூ. 1 1/2 சேர்* | *21* |
| | ------ |
| | *ரூ.1005* |
| | ------ |

***14.1234***

*(4) சகம் 1755[122] விஜய ஸு மார்கழி மீ 20வ டிசம்பர் மீ 3வ க்யாப்டின் ஐடக்லஸ் சென்னபட்டணத்தின் கவர்னரவர்கள் ரெஸிடெண்ட் கச்சேரியை ஸ்தாபிக்கிற விஷய மெழுதிய[123] கடிதத்துடன் வரப்போகிறரார் என்று 19வ ரஜப்*

*ரஜப்[124] 29வ ரெஸிடெண்ட்[125] சாயேப் ஸஹகுடும்பத்துடன் நாளைக்குக் காண்பதற்கு வரப்போகிறார்.*

***19.1247***

***(1) ஞாபகக்குறிப்பு-***

***சர்காருக்குக் கண்ணுசாமி அப்பா[126] அவர்களிடம் 1வடமட்டம், 1பூவங்குடி ஆக 2***

***ஷெ இரண்டு கிராமங்களையும் வாங்கினதற்கு[127] அவர் சாஸனம் செய்து கொடுத்த பாபத்தில் வரவு கும்பனி ரூ.70,000.***

120. 8 1/4 என்பதை 8 1/2 என்று கொள்க.

121. 38 என்பதை 36 என்றுகொள்க.

122. சுஹூர்ஸன் 1234 + 599 = 1833; சகம் 1755 + 78 = 1833

123. ரெஸிடென்டு கச்சேரியைத் தாபிக்கிற விஷயம் - சரபோஜி இறந்த பிறகு ரெஸிடென்டு பதவி நீக்கப்படும் என்று 12-1-1831இல் ஆணை பிறப்பிக்கப்பட்டது எனத் தெரிகிறது; (பக்கம் 57); அப்பதவி நீட்டிக்கப்படும் செய்தி இக்குறிப்பால் அறியலாகும்.

124. ரஜப் என்பது அரபு மாதம் (சித்திரை)

125. ரெஸிடென்டு - ஜே.பிளாக்பர்ன் (பக்கம் 67)

126. கண்ணுசாமி அப்பா - இவருக்குத் தத்தாஜி மல்ஹர்ஜி என்பது பெயர்

127. இவ்விரு கிராமங்களையும் விலைக்கு வாங்கி மங்களவிலாஸ சத்மத்துக்குச் சுரோத்திரியமாக ஒதுக்கினர் எனத் தெரிகிறது (பக்கம் 335) மோ. பலகணி-I-95 – 125 (10.2.1980)

*(2) ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாபிஷிக்த ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமி[128] அவர்கள் கும்பகோணத்திற்கு விஜயஞ் செய்வதற்காக கோட்டையிலுள்ள பஜனசாலை ஸ்ரீவிடோபாஸ்வாமி[129] கோவிலிலிருந்து மகா.ரா.ரா.திவான் சாயேப்[130] ஸ்வாமியாரைக் கூட்டிக்கொண்டு நான்கு வீதி பட்டணப்பிரவேசம்[131] செய்து, சிரேயஸியில்[132] விட்டுவிட்டு அரண்மனைக்கு விஜயஞ் செய்ததற்குச் சுங்கத்தார் தீவட்டிகளை விட்டதற்குக் கூலி ரூ.9-1-1 துட்டு 15.*

*(3) ஹுஜூரவர்கள் இராமேஸ்வரத்திற்கு ஸேது ஸ்நானத்திற்குப் பிராமணர்களை அனுப்பித்த வகையில் சிலவு ரூ.4000.*

*(4) 1248*

*ஸ்ரீராமேஸ்வரத்திற்கு ஸேது ஸ்னானத்திற்காக ஸவாரியை அனுப்பித்ததற்கு-30,000 பிரதி 4,000 பிரதி வகையறா கரீதி பந்தி 250 படிச்செலவு வகையறா செலவு = 34,250*

*(5) 1248*

ஸோமநாத ஸதாசிவ பண்டிதருடைய 1.திருவையாரில் கலகி அக்ரகாரத்திலுள்ள மண்டபம் தோட்டம் நிலம் வகையறா-1 வெண்ணாற்றங் கரையில் படித்துறை பங்களா வகையறா இவ்விரண்டையும் குஜலி ராமநாத்பட்டு வாங்கின வகையில் ரூ.16,611 1/2 அட்வான்ஸ் ரூ.4000.

*6,1250*

கஜானா

*(1) ஹுஜூருடைய பெயருக்குச் சென்னையிலிருந்து கடிதம் வகையறா வந்ததற்கு தபால் கட்டணம் கூலி சிலவு கடிதம் 1க்கு 4 அணா, புத்தகம் 1க்கு 8 அணா பரங்கி தபாலில்[133] புத்தகத்தைத் திருப்பி அனுப்பியதற்கு 10 அணா = ரு.1-6.*

*(2) 1250*

கைவாசீ ஸைதம்பாய் சாப்[134] அவர்கள் பெயரால் காசீக்ஷேத்திரத்தில் சிவாலய பிரதிஷ்டை செய்ய கோயிலைக்கட்டி தினப்படி பூஜை நிவேதனம் வகையறா ஏற்படிக்குக்கூட காசீ தம்பிரானிடம்[135] அனுப்பித்தது ரூ.2500.

---

128. கி. பி. 1814 முதல் 1851 வரை பீடாதிபதிகளாக இருந்த ஐந்தாவது சந்திர சேகரேந்திர சரசுவதி சுவாமிகள்

129. இக்கோயில் கீழ வீதியில் உள்ளது (பக்கம் 213இல் 23 காண்க); விட்டோபா திருவுருவத்தைப் பண்டரிபுரத்தில் இருந்து சரபோஜி அமைத்தார் (பக்கம் 189இல் 21)

130. திவான் சாயேப் என்றது இரண்டாம் சிவாஜியை

131. பட்டணப்பிரவேசம் - ஊர்வலமாக வருவது

132. சிரேயஸ் - தஞ்சாவூர்க் கோட்டை அன்னசத்திரம் சிரேயஸ் சத்திரம் எனப்பெறும்; இது இரண்டாம் சிவாஜியால் தான் விரும்பி வழிபடும் கடவுட் பெயரால் அமைக்கப்பெற்றது (பக்கம் 269)

133. பரங்கி தபால் (கும்பினி தபால் என்றும் ஒரு வகை உண்டு)

134. சைதம்பாய் சாப் - சைதம்பாபாயி; இரண்டாம் சிவாஜியின் முதல் மனைவி

135. காசீதம்பிரான் - திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து அதிபராகிய ஸ்ரீலஸ்ரீகாசிவாசி சொக்கலிங்க சுவாமிகள் ஆவர்.

*(3) 1857 ஜன 9உ*

ஞாபகக்குறிப்பு:-

இராஜ்யப் பாரஞ் செய்கிற ராஜாக்கள் போட்டுக் கொள்கிறதும் புழங்குகிறதுமான கல்லெழைத்ததங்கம் வெள்ளி நகையைப் பற்றி ரூ.

*1857 ஜன மீ 9உ*

கல்லெழைத்த நகை பாபத்து, சிரபேச் ரூ.*24977-12-0*, பக்கத்து டீகா *6*க்கு ரூ. *26750-8-0*, லங்கர்கள் *105*க்கு ரூ.*5795-2-0*, ஜெல்ல *5* க்கு ரூ.*9304-12-0*, ஜிம்கா *1*க்கு -

ஞாபகக்குறிப்பு:-

ராஜேஸ்ரீ மகாராஜா சாஹேபின் நகைக்கு கல்விழைத்தது ரூ.*115162-4-0*, தங்க நகைகள் ரூ.*8938-5-3* வெள்ளி நகைகள் ரூ.*8315-12-10*

*(4) 1857*

கார்பார் தஸ்தாவேஜ் வகையறாவிலும் கொடுத்த கணக்கு வகையறாவின் பேரிஸ்து? ஸிஸ்ரீஸதாஸ்னு ஸதம் *1256* சூர்சன்[136] ம.கா.ரா.ரா.சிவாஜி ராஜே சாஹேப் அவர்கள் கைலாஸவாஸீ ஆனது *1256* சந்த *17*உ சபர்[137] சகம் *1777*[138] இராக்ஷஸ வருஷம்.

*2.1239*

*(1)* ஒரு பெண் அசௌக்யமாயிருப்பதால் அஸ்வகந்தி பளலக்ஷ்யாதி தைலம் செய்ய சாமான்கள் கொட்டியத்திலிருந்து:-

அசுவகெந்தி சேர் *10* டாங்க் *9*, சித்தாமுட்டி சேர் *2*, நன்னாரி வேர் சேர் *1/2*, ஸிதி?சேர் *1/2*, பாவ?சேர் *1/2*, கோரைக்கிழங்கு சேர் *1/2*, நார்த்தங்காய் சேர் *1/2*, தேவதாரம் சேர் *1/2*, வேகம்பூ சந்தனக்கட்டை சேர் *1*, குச்சி அரக்கு சேர் *1/2*, வெட்டி வேர் சேர் *1/2*, அவுரி வேர் சேர் *1/2*, ந.எ.சேர் *5*, கட்டித்தயிர் சேர் *2-1/2*, சுக்கு டாங்க் - *4-1/2*, மிளகு டாங்க் *4-1/2*, அரிசித்திப்பிலிடாங்க் *4-1/2*, கடுக்காய் டாங்க் *4-1/2*, தானிக்காய் டாங்க் *4-1/2*, நெல்லுமுள்ளி டாங்க் *4-1/2*, மரமஞ்சள் டாங்க் *4-1/2*, அதிமதுரம் டாங்க் *-4 1/2*, கோஷ்ட்டம் டாங்க் *4-1/2*, ஜடாமாஞ்சி டாங்க் *4-1/2*, பூசாந்துபட்டை டாங்க் *4-1/2*, மரமஞ்சள் டாங்க் *4-1/2*, கடுகுரோகனி டாங்க் *4-1/2*, செவ்வள்ளிக்கொடி டாங்க் *4-1/2*, பச்சை இலை டாங்க் *4-1/2*, பூலாங்கிழங்கு டாங்க் *4-1/2*, கிளியூர்பட்டை டாங்க் *4-1/2*, செதகுப்பை டாங்க் *4-1/2*, லவங்கப்பட்டை டாங்க் *4-1/2*, ஏலம் டாங்க் *4-1/2*

---

136. 1256 சூர்சன் - (1256 + 599) கி.பி.1855

137. சந்த் - மாதம்; சபர் - அரபுமாதத்தின் பெயர்

138. சகம் 1777 = (1777 + 78) கி.பி.1855

# சரசுவதி மகால் பகுதி IX

## மூட்டை எண் - 53 C

*1.1843*

***கணக்கு - நாலு சபைக்காரர்கள் கொடுக்கப்பட்ட வரவு சிலவு-சிலவின் பேரில் ரிஜிஸ்தரில் சர்கார் வரவு சிலவு தயார் செய்த பாபத்து -மஹால்வார் - வரவு சிலவு -***

***ராஜாமகால் ஜர்கர்கானா[1] (நகை வைக்குமிடம்), ஜாமதார் கானா[2] (கஜானா)[3] அலாஹிதா (அனாமத்து), சர்பத் கானா[4] (குளிர்ந்த பானங்கள் - தயாரிக்குமிடம்) ஜீராத் கானா[5] (ஆயுதசாலை)***

***மஹால்தும் கோடி - (பெரிய கொட்டியம்), மஹால்தும் ஹுஜூர்[6]தும்கோடி (ஹுஜூர் கொட்டியம்), மஹால்தும் ஜகீரா[7] (களஞ்சியம்), மஹால் பாகா (லாயம்), அசூர்கானா, (அல்லா வைக்குமிடம்), அம்மாபேட் பாகா (அம்மாபேட்டை லாயம்), நவவித்யா கலாநிதிசாலா (நவவித்யா கலாநிதி பள்ளிக்கூடம்), சிகார்கானா[8] (வேட்டைமகால்), காளாகோட், சங்கிராம பண்டார்[9] (ஆயுதம் வைக்குமிடம்), இமாரத்தி (மராமத்து இலாகா), நகர் மஹால்[10] (முனிஸிபாலிடி), ஹுஜூர் சத்திரானிஹாய் (ஹுஜூர் சத்திரம் வகையறா)***

## மூட்டை எண் - 54 C

*1.1852*

***மஹால் கர்ச் போதே[11] சிலவு விபரம் சூஹர்ஸன் 1253[12] ஷெளவல் மீ சந்த் 12 உ[13]***

---

1. ஜர்கர்கானா - காசுக்கடை; நகை வைக்குமிடம் என்று இங்குப்பொருள் தரப்பட்டுள்ளது. சென் பதிப்பித்த சிவச்சத்திரபதி (சபாசத்) என்ற நூலில் பக்கம் 133இல் தந்துள்ள கானாக்களில் ஜர்கர்கானா என்பது இடம் பெறவில்லை (பக்கம் 453, 456)

2. ஜாம்தார் கானா - இது அரச குடும்பத்தாருடைய ஆடைகள், நகைகள் வைக்கப்பெற்ற இடம் (பக்கம் 453)

3. சென் Treasury என்று (பக்கம் 133இல்) கூறியதற்கேற்ப கஜானா என்று பொருள் தரப்பெற்றுள்ளது.

4. சர்பத்கானா என்பதற்கு 'Medicines' என்று சென் பக்கம் 133இல் கூறியுள்ளார்.

5. ஜிராத்கானா என்பதற்கு 'Agriculture' என்று சென்.பக்கம் 133இல் கூறியுள்ளார்,

6. ஹுஜூர் - அரசர்

7. ஜகீரா என்பது 18 கார்கானாக்களிலும் 12 மஹால்களிலும் இடம் பெறவில்லை

8. சிகார்கானா - சென் பக்.133இல் 16 (Game, aviary, chase and allied materials)

9. சங்கிராமபண்டார் - ஜீராத்கானா ஆகலாம். (பக்கம் 455) சென்.பக்கம் 133இல் ஜீராத்கானா Agriculture என்பர்)

10. நகர் மஹால் - நகரபரிஷ்கார் என்பது இதுவாகலாம். நகரத்தைத் தூய்மையாக வைத்துக்கொள்வது இதன் பணியாகலாம்.

11. போதேமகால் - அரசாங்கப்பொருள் நிலையம் (பக்கம் 456)

12. 1253 - சுஹர்ஸன் ஆண்டுடன் 599 சேர்த்தால் ஆங்கில ஆண்டுவரும் (பக்கம் 367) 1253 + 599 = 1852

13. செளவல் - அரபு ஆண்டு; 1253 செளவல் சந்த் 12 = - - 1852 செளவல் - ஷவ்வால் - ஆனி

வெள்ளிக்கிழமை ஆடி மீ 17உ சாலிவாகன சகாப்தம் 1774[14] பரிதாவி ஸ்ரீ சிராவண சுக்ல பக்ஷம் சதுர்தசி[15] முகாம் - தஞ்சாவூர் கோட்டை ஆக வரவு

தினப்படி பாக்கி ரூ.151041-15-0
2474-7-2 வரவு
சூர் மகால் முத்திரைப் பாத்திரங்கள் பாபத்து ரூ. 1-8-0.
2472-15-2 கும்பனி பாபத்து வரவு

1874-1-7 தேவஸ்தானத்திற்குக் கோட்டை தஞ்சாவூர் தினசரி உற்சவம் வகையறாவுக்கு மோயின்[16] பாபத்து ஜூன் மாதத்திற்கு

102-13-0 கருந்தட்டாங்குடி ஸ்ரீவசிஷ்டேஸ்வர ஸ்வாமிக்கு வருஷத்திற்கு வையாசி மீ தேர் உற்சவத்திற்காக மோயினி.

76-9-0 தேருத்ஸவத்திற்காக மோயினி.

26-4-0 ரா.மானே பாபத்து. = 102-3-0

474-2-7 அயக்கட்டு மான்யம் பாபத்து 1260ம் பசலி[17] ஒரு வருடத்திற்காக

193-4-8 ஸ்ரீரங்கம் ஸ்ரீரங்கநாத ஸ்வாமிக்கு

280-12-11 ஜம்புகேஸ்வரம் (திருவானைக்காவல்) ஸ்ரீ அகிலாண்டேஸ்வரி அம்மனுக்கு = 474-2-7

21-13-0 பஞ்சாங்கம் கணிதஞ் செய்கிற கிருஷ்ண ஜோஸியருக்கு தினப்படி மானியம் பாபத்து 1261 பசலி[18] ஜூலை மீ 12உ முதல் ஜனவரி மீ 11உ வரையில் மாதம் ஆறுக்கு 2472-15-2 + 2474-7-2 = 153516-6-2

(1) 1852 ஸ்ரீ மஹால் கர்ச்போதே கணக்கு:-

பாவுபீஜ்[19] (தீபாவளி ஆகி கார்த்திக சுக்ல பக்ஷம் திவிதியை[20] தினம் தங்கை தன் தம்பி அல்லது அண்ணாவுக்கு சாப்பாடு செய்து வைத்து துணி மணிகளைக் கொடுத்து, ஆரத்தி எடுக்கிறது

---

14. சகம் 1774 + 78 - கி.பி.1852

15. சிராவணம் - ஆடி மாசம்; சுக்லபக்ஷம் - வளர்பிறை; சதுர்த்தி - 14ஆம் நாள்

16. மொயின் - உதவித்தொகை

17. பசலி - கி.பி.591 முதல் தொடங்குவதும் 1555 ஆம் ஆண்டு அக்பரால் ஏற்படுத்தப்பட்டதுமான ஆண்டுமுறை. பசலி எண்ணுடன் 591 சேர்ப்பின் ஆங்கில ஆண்டு வரும்.

18. பசலி 1261 + 591 = கி. பி. 1852.

19. பாவுபீஜ் - ஒரு பண்டிகை (விளக்கம் அடுத்துள்ளது) (பக்கம் 310 அடிக்குறிப்பு 9)

20. சுக்லபக்ஷம் - வளர்பிறை; திவிதியை - இரண்டாம் நாள்

வழக்கம். அப்பொழுது தன் தங்கைக்கு அண்ணா பணம் ஆரத்தி தட்டில் போடுவது. இதற்கு பாவுபீஜ் பண்டிகை என்று பெயர்) ஸ்ரீதிவான் சாயேபிடம்[21] சிலவுக்காக ரூ.310-8-0 (பாவு பீஜிக்காக) ம கா.ஸ்ரீ.ஸ்ரீ.திவான் சாயேப் அவர்களுடைய விவாகத்திற்காக மகாதேவ பட்டணத்திலிருக்கும்[22] சமாதியின் பூஜைக்காக ரா.ராமைய்யா வராகப்பய்ய தீக்ஷிதர் போய் வந்ததிற்குச் சிலவுக்காக கொடுத்தது கும்பனிரூ.8

(2) 1852 ஹூ கர்ச்போதே சிலவு -
ரூ.7-12-0. ம.கா.ஸ்ரீ.ஸ்ரீ.திவான்சாயேப் சிலங்கணம் (சுங்கம் தாண்டி போகுவது) செய்து, மூன்றாவது நாள் தாம்ஜானா என்கப்பட்ட யானையின் சவாரியுடன் 4 வீதிகளிலும் விஜயம் செய்த வகையில் சிலவு -

(3) 1852 ஹூ கர்ச்போதே சிலவு
மகால் - ஆவுசாகேப் தோட்டம் வகையறாவின் அதிகாரியிடம் - திருவையாற்றில் 4 படகுகளைத் தயாரிப்பதற்கு உத்தேசம் சிலவு - படகு 1க்கு தளவாடம் மெய்யாடு கூலியுள்பட சிலவு 1000 ரூ. மோஹரம் 1வ[23]

(4) 1852
ஆஸ்வீஜ[24] மீ நவராத்திரிக்காக ம கா.ஸ்ரீ.ஸ்ரீ.திவான் சாயேப் (யுவராஜா) மஹாராஜா சபையின் மேற்குப் பக்கத்தில் முதலில் உலடி சதர்? செய்து, மல்லு ஜட்டிகளையும் வேஷம் போட்டுக் கொண்டவரின் ஜோடிகளையும் சண்டைக்கு விட்டு வேடிக்கைப் பார்த்ததிற்காக இனாம் ரூ.370

மல்லு ஜட்டி ஜோடி 1க்கு ரூ.360,வேஷம் போட்டுக் கொண்டவரின் ஜோடி 1க்கு ரூ.10

(5) 1852
மஹால் - ஆவுசாயேப் தோட்டம் வகையறா - பழைய சிவகங்கை வெட்டுவதற்குச் சிலவு ரூ.500

(6) 1852 June 20th
Received from the sirkele of his highness the Raja of Tanjore Rs.600/- Rs.500/- bein the value of my Dequerr type Engine which I sold to the cirkar and Rs.100/- being m reward for hearing instructed the servants of his highness in the use of the sam agreably to my engagement dated 16th instant.

(Sd) A.Gilbert

---

21. திவான்சாகேப் என்றது இரண்டாவது சிவாஜியை

22. மகாதேவபட்டணம்-மன்னார்குடிக்கு 10கி.மீ.தென்மேற்கேயுள்ளது. சமாதி யாருடையது என்று தெரியவில்லை.

23. 1852 மொஹரம் 1வ

24. ஆஜ்விஜம் - ஐப்பசி

(7) 1852 கர்சே போதே

சென்னப்பட்டணம் சைதம்பா பேட்டை[25] தாலுகாவில் சிஜவுடல் [26]என்னும் ஊரிலுள்ள ஸர்கார் தோட்டத்திற்கு நடந்து போகும் ரஸ்தாவில் கட்டப்போகிற வாராவதி (பாலம்) நீளம் - 5 கெஜம். - அகலம் - 1 1/2 கெஜம். உயரம் 2 கெஜம். இதற்கு உத்தேசம் சிலவு ரூ.100-8-0 ரஜப் மீ 20 உ

மா.பாயி சாயேப்[27] அவர்களுக்கு படிப்புக் கற்று கொடுப்பதற்கு - சிராவண கிருஷ்ண பக்ஷம் திரியோதசி வெள்ளிக்கிழமை.

2-0-0 மஹாராஷ்டிர பாஷை கற்பதற்குப் பூஜை தக்ஷிணை 16 பேருக்கு

2-2-0 சமஸ்கிருத அக்ஷராப்யாஸத்திற்கு[28] புத்தகத்திற்குப்பூஜை தக்ஷிணை

2-2-0 கானகலா (ஸங்கீதம்) காந்தர்வீ வித்யாப்யாஸத்திற்கு வீணையின் பூஜைக்குத் தக்ஷிணை.

2-2-0 சில்ப வித்தை குசலவித்தை[29] அடைவதற்காக குருவின் பூஜைக்குத் தக்ஷிணை

8-6-0

(9) 1852 கர்சே போதே[30]

மஹால் ஸரஸ்வதி பாண்டாரம் நகார் கானா[31] விலுள்ள வாத்தியம் பழுது பார்க்க நவராத்திரிக்காக சிலவு ரூ.20.

(10) 1852 துத்த நாகத்தின் சுண்ணாம்பு செய்கிற ருத்திரஜோஸிக்கு ரூ.3

(11) 1852

மோஹரம் பண்டிகைக்கு அப்தார் கானாவில் (தண்ணீர் பந்தவில்) அல்லாக்களை வைக்க - சிரணி புஷ்பம் நவபாண்டம் (பானை முதலிய மண் பாத்திரம்) வகையறாக்களை கரீதி[32] செய்வதற்குக் கூட ரூ.60 ஜில்ஹேஜ் 27 உ

---

25. சைதம்பாபேட்டை - சைதாபேட்டை

26. சிஜவுடல் - 55 சி - 32-1 இல் சின்னஒடல் என்றுள்ளது

27. பாயிசாகேப் என்றது இரண்டாம் சிவாஜியின் இரண்டாவது மகள் ஆகிய விஜயமோகன முத்தாபாயியை

28. அக்ஷராப்யாசம் - எழுத்துப் பயிலுதல்

29. குசல வித்தை - எண்ணல், எழுதல், இலைகிள்ளல், பூத்தொடுத்தல், யாழ்வாசித்தல்; மகளிர்க்குரிய வினோதக் கைத்தொழில்கள்

30. கர்ச்போதே - போதேமகால் - பொருள்நிலையம்

31. நகார்கானா - (பக்கம் 454) டமாரம் போன்ற ஒலிக்கும் கருவிகள் வைக்கப்பெற்ற இடம்

32. கரீதி செய்தல் - விலைக்குவாங்குதல்

*(12) 1852*

ஆஸ்விஜமாஸம் நவறாத்திரிக்காக வாஜிநிராஜநத்துடன் (குதிரை பூஜை) லோஹாபி ஸாரிக யக்ஞத்[33] திற்காகவும் கஜநீராஜனத்திற்காகவும் [34]கொடுப்பது ரூ.4-15-0. ஜீல்ஹேஜ்[35] 27 வ

*(13) 1852*

சௌ.பாயிசாயேப்

1. சௌ. மா. சையம்பா பாயிசாயேப், 2. சௌ. மா. தீபாம்பா பாயிசாயேப், 3. சௌ. மா. உமாம்பா பாயிசாயேப், இவர்களுக்குப் பட்டாபிஷேகத்திற்காக[36] சிலவு ரூ.54-8-0.

*(14) 1852 ஆகஸ்ட் 3 வ*

ஏ.லீமேன் என்கிற ஐரோப்பியர் ஒருநாள் ஜாலவித்தையைக் காண்பித்ததற்காக இனாம் கார்பார் ரா.ஸர்கேலின் ஜபாப் நவீஸ் சங்கராவ் மூலம் கொல்லர் சேஷப்ப நாயிக்கன் ரூ.200 கொண்டு போய் கொடுத்தார். இதற்கு ஆங்கிலேயத்தில் ரசீது இருக்கிறது.

*(15) 1852*

ம கா.ஸ்ரீ.ஸ்ரீ.யுவராஜ்[37] சாயேப் அவர்களுடைய கல்யாணத்திற்காக காளி ஆயி பார்பாயி வகையறா தெய்வங்களுக்கு பூஜை செய்ததற்குச் சிலவு ரூ. 105-8-11

*(16) 1852*

ஸர்காரிலிருந்து கோலாப்பூர், ஸாதாரா கொங்கணம் முதலிய தேசங்களிலிருந்து சம்மந்தம் செய்வதற்கு வஜாரத்மாப்பும்[38] காரியஸ்தர்கள் வகையறா ஜனங்கள் சென்று வந்ததற்கு ஹுஜூர்[39] முன்னிலையில் இனாம் கொடுத்தது ரூ.20515

ஹுஜூரின் வேலைக்காரர்கள் வகையறா - பெண்கள் - பாளேகாரிகள் - தபால் கொண்டு வருபவர்கள் வகையறா

---

33. யக்ஞம் - யாகம்

34. கஜநீராஜனம் - யானைப்பூசை (?)

35. ஜில்ஹேஜ் - ஆவணி;

36. "There was Pattabhishekam to Sivaji Maharajah after his marriage with 17 Ranees. Sumroy Bai Saheb alone sat with the Maharajah on the throne on that occasion while Suroy and Bhadroy sat on either side on chairs." - Deposition of Yogambal - O.S.No.26 of 1912 in the Court of the Sub-Ordinate Judge, Thanjavur, 29-2-1916, Page 42 இதனை ஒப்புநோக்குக

37. யுவராஜா என்பது மகாராஜா என்றிருத்தல் வேண்டும்

38. வஜாரத்மாப் - பெருமக்கள்; இங்குக்குறிக்கப்பட்டவர் சேனாதுரந்தரர் ருத்ராஜா ஆனந்தராஜ் ஜாதவ் (பக்கம் 32)

39. ஹுஜூர் என்றது இரண்டாம் சிவாஜியை

# முட்டை எண் - 55 C

*16.1819 தினசரி டைரி*

*( ) தினசரி மஹால் தும்-கோட்டியம் லாயத்தில் (ஹுஜூர்) இருக்கிற பெண் ஒட்டகம் அசௌக்யமாயிருப்பதால் அதற்கு கொட்டியத்திலிருந்து கொடுக்கப்பட்ட மசாலை சாமான்களின் (தஞ்சாவூர் சேரால்) விபரம்:-*

*ஓமம் சேர்-6, கடுகுரோகணி சேர்-3, மிளகு சேர்-3, பூண்டு சேர்-2, மஞ்சள் சேர்-2, சுக்கு சேர்-2, உப்பு சேர்-2 இந்துப்பு சேர்-2, வசம்பு சேர்-2, அரிசித்திப்பிலி சேர்-2, கண்டத்திப்பிலி சேர்-2*

*ரா. சரபோஜி ராஜா சாயேப் காசியாத்திரையில் முகாம் - பிரயாகம்[40] (அலகாபாத்)*

*(13) ஜகன்னாத வென்கிற பெரிய யானைக்குட்டிக்கு பல்லில் வெட்டுப்பட்ட இரணம் ஏற்பட்டதற்கு கொட்டியத்[41]திலிருந்து கொடுத்த சாமான் சேர்*

*சாராயம் சேர்-3, நல்லெண்ணெய் சேர்-2, மஞ்சள் சேர்-1/4, சிந்தூரம் சேர்-1/4, மெழுகு சேர்-1/4, மிளகு சேர்-1/4, பூண்டு சேர்-1/4, வெல்லம் சேர்-1/4, எலுமிச்சம் பழம்-10, தேங்காய்-1, பருத்தி-9 டாங்க்*

*3.1859*
*மஹால் கர்ச்போதே*

*ஒவ்வொரு வெள்ளிக்கிழமை செவ்வாய்க்கிழமையும் ஆடு கரீதி செய்து கொடுத்ததற்கு அணா - 1*

*18.1739*
*மஹால் கர்ச்போதே*

*தானம் தருமத்திற்காக 3900 மா:திரௌபதி பாயி[42] வசம், 11700 சௌ.மூன்று பாயிசாயேப் வசம், 3900 சௌ.ராஜஸ்பாயி, 3900 சௌ.இராஜகுமராபாயி, 3900 சௌ.மோஹனா பாயி[43] = 11700*

*130 மா.யசவந்த் பாயி[44], 1092 நாஜீக் மஹாலுக்கு, 390 மா. ஜானகி பாயி,[45] 390*

---

40. பிரயாகம் - பிரயாகை (அலகாபாத்)

41. கொட்டியம் - சரக்கறை

42. திரௌபதிபாயி - பிரதாபசிங்கரின் மனைவி: இரண்டாம் துளஜாவின் தாய் (போ.வ.ச.பக்.86)

43. இந்த மூவரும் இரண்டாம் துளஜாவின் மனைவியர் ஆவர் (போ.வ.ச.பக்.100;109;125)

44. யச்வந்தபாய் - பிரதாபசிம்மருடைய மனைவி (போ.வ.ச.பக்.82)

45. ஜானகி பாயி யார் என்று தெரியவில்லை

மா.அருணாபாயி,[46] 130 மா.அன்னபூர்ணாபாயி[47] 52 மா.சந்திர ரேகை பாயி, 65 மா.சந்திரவதனா பாயி,65 மா. முத்து லக்ஷ்மி பாயி[48] = 1095

3900 சி.அபரூப பாயி[49]

451734 காடே மாஹல்[50] வண்டியின் வகையறா தயார் செய்வதற்கு மரம் கரீதி செய்யவேண்டிய சிலவு

53-1850

ஒவ்வொரு மகாலிலும் ஆகிற சிலவு விபரம் ரூ.26190-0-8

இராஜ்மஹால்[51]-7142, துணிமணி[52]-2000, குளிர்ந்தபானம் செய்யுமிடம்[53]-115, பெரிய கொட்டியம்-11820, களஞ்சியம்[54] 25, தட்டிமகால் (சர்கார்)[55] 777, ஆயுத மஹால்[56]-350 மராமத்து[57] திவான்வாடா-1667-14-3 ஸங்கிராமபாண்டார் (யுத்தம்)-20 மருந்துசாலை (வெடி[58])-500, வண்டி/பல்லக்குமஹால்[59] 400, லாயம்[60]-913-3-5, முனிஸிபாலிடி[61]-560-1-0 = 26190-1-8[62] =

---

46. அருணாபாய் என்றவர் துக்கோஜி I (1728-1736)க்குரிய மனைவியருள் ஒருவர்; இங்குக் குறிக்கப்பட்டவர் இவர்தான என்பது ஆய்வுக்குரியது (போ.வ.ச.பக்.81)

47. அன்னபூர்ணாபாய் - இவர் பிரதாபசிங்கரால் சேர்த்துக்கொள்ளப்பட்டவரே; அமர்சிங்கின் தாய் ஆகலாம். உறுதியாக கூறவியலாது (போ.வ.ச.பக்.101)

48. முத்துலக்ஷ்மிபாய் என்பவர் கி. பி. 1801க்குரிய ஆவணத்திலும் குறிக்கப்படுகிறார் (140 சி – 12-3) இவர் இறந்தது 18 (55சி-57)

49. அபரூபபாயி - இவர் துளஜாவின் இரண்டாவது மனைவியாகிய ராஜகுமாரபாயியின் மகள் ஆவர்; இவருடைய மகன் மாருதி சாமி (பக்.24-25)

50. காடே மகால் - வண்டிகள் முதலியன செய்யுமிடம் அல்லது நிறுத்தப்படும் இடம் ஆகலாம்

51. ராஜ்மஹால் - அரண்மனை

52. துணிமணி - ஜாம்தார்கானா

53. குளிர்ந்தபானம் - ஸர்பத்கானா

54. களஞ்சியம் - அம்பார்கானா

55. தட்டிமகால் - மாட்டுப்பண்ணை

56. ஆயுதமகால் - ஜிராத்கானா

57. மராமத்து - இமாரதிமகால்

58. (வெடி) மருந்துசாலை - தோப் கானா

59. பல்லக்கு மஹால் - பால்கிமஹால்

60. லாயம் - பாகா மஹால் (Paga)

61. முனிஸிபாலிடி - நகர் மஹால்

62. கூட்டல் தவறு (26290 - 2-8 என்றிருத்தல் வேண்டும்)

ரூ.125

ஆங்கிலேயர் பென்சின் வாங்குகிற வகையறாக்களின் பெண்களின், வித்யாப்பியாஸத்திற்காக நீலகிரி, மகாலில் ஒரு தருமப் பள்ளிக்கூடம் வைப்பதற்காக சேர்ந்த கமிட்டியின் காரியதரிசியான மிஸ்தர் ஜான் எம்கேலன் என்பவர் ஷை தரும காரியத்திற்காக மஹாராஜா[63] சாயேப் அவர்களுடைய சகாயம் செய்ய வேண்டுமென்று மஹாராஜாவுக்கு எழுதினதால் சிரஸ்தேதார் வெங்கடறாவிடம் 125 ரூ.கொடுக்கப்பட்டது.

53. ஜலசூத்திரத்தின் வேலை செய்கிற பரிட்டென் தேவர் அவர்களுக்குப் பிப்ரவரி 23 உ முதல் மே 22 உ வரையில் 3 மாதங்களுக்கு ரூ.900.

சத்திரபுரத்தில் வசிக்கும் துர்ஜனசிங்கின் தம்பி காசிராம் என்பவர் கங்கோத்திரி[64]யிலிருந்து 2 காவடிகளைக் கொண்டு வந்ததை ஸர்காரில் வாங்கினதற்கு ரூ.350 கொடுக்கப்பட்டது.

கும்பகோணம் - ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாபிஷிக்த ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீசங்கரேந்திர ஸரஸ்வதி சுவாமி ஸமாதி ஆனதினால் அதிஷ்டானத்திற்கு அவருடைய சிஷ்யரான ஸ்ரீமகாதேவேந்திர ஸரஸ்வதி சுவாமி அவர்களை பட்டம் சூட்டினதினால் பேஸஜி வழக்கப்படி நாளொன்றுக்கு ஒவ்வொருவருக்கும் 10 பைசா வீதம் கொடுத்தார்கள்.

36,1792 ஜாபிதா

ரா.அமரசிங்கஜீ[65] மஹாராஜா சாயேப் அவர்களின் கொட்டியம் வகையறாவுக்குக் கடப்புகார் நெல்லு அனுப்பிய கலம் 10,000 கணக்கு - தீபநகர் பேட்டை - சுங்கம்

பேட்டையில் இரும்பை சர்கார் அனுப்பின பாபத்து 116-3-6 பாளயம்அனுப்பின பாபத்து பாளம் 1800க்கு தோலா 288க்கு சுமார் சேர் 7172 1/2.[66]

21,1834 லாயம்

4 ஒட்டகங்களுக்கு உஷ்ணத்தினால் உடம்பில் சிரங்கு வந்திருப்பதால் ஷை வியாதிக்குத் தடவ தைலம் தயாரிப்பதற்கு கொட்டியத்திலிருந்து கொடுத்த சாமான்கள் - நல்லெண்ணெய் சேர்-32, கந்தகம் சேர்-3, பாவச்யா சேர்-3 (ஸம்ஸ்கிருதத்தில்-பாகுசி என்று பெயர்), செங்கொட்டை சேர் 2, எலுமிச்சம் பழம்-100, கோஷ்ட்டம் சேர் 2, மரமஞ்சள் சேர் 1, மோர்சூத் சேர் 1/2, உப்பு 1 படி, கட்டித்தயிர் 4 படி

வேறு - சிரங்கு வந்த 4 ஒட்டகங்களுக்குத் தடவ கொட்டியத்திலிருந்து கொடுத்த சாமான்கள்.

சூடம் சேர் 1/2, மோர்சூத் சேர் 1/2, புகையிலை சேர் 2, சோப்பு சேர் 1, அரிதாரம் சேர் 1/2 -

47,1809

ஏகோஜி மகாராஜா[67] கால முதலுள்ள கோவில்; :-

---

63. மஹாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

64. கங்கோத்திரி - கங்கை பிறக்குமிடம்

65. அமர்சிங்கு - 1788 முதல் 1798 வரை ஆட்சி செய்தவர்.

66. கணக்கு விளங்கவில்லை

67. ஏகோஜி என்றது தஞ்சையை 1676இல் வென்று ஆட்சி செய்யத்தொடங்கிய மராட்டிய அரசரை

திருமைலாடி[68] ஸ்வாமி கோவில் ஸ்தானீகர்[69] சுப்பய்யா என்பவர் கும்பாபிஷேகம் செய்ய வேண்டியதற்காக கொடுத்த மனு -

*38.1801*

*கணக்குப் பிள்ளை -*

*காரைக்கால் திருமலராஜ பட்டணம் கோசாவீ அவர்களுக்கு*

*ஸேவகன் பாபாஜி கங்காஜி எழுதின கடிதம் -*

*சிதம்பர செட்டி - நாகப்பட்டிணம் - வாஞ்சூரில் மண்டபம், குளம், அக்கிரஹாரம் 12 வீடுகள், தேவஸ்தானம் புதிதாகப் பிரதிஷ்டை செய்து தருமஞ் செய்து இருக்கிறார்*

*மகாராஜா[70] அவர்கள் வருஷம் ஒன்றுக்கு தஞ்சாவூர் சக்ரம் 100 மொயின் கொடுத்திருக்கிறார்.*

*42.1786*

*பரவானகி[71]- ரா.துளஜா ராஜா சாயேப் அவர்கள் பாளம்பட் இவர்களுக்கு திருப்பந்துருத்தி வைத்தியனாதம் பேட்டையில் ஸர்வமான்யம் வேலி 1-மா 8 கொடுத்திருக்கிறார்.*

*44 ஞாபகக்குறிப்பு-*

*ஸ்ரீரங்கப் பட்டணத்திலிருந்து யானை, மாடு வாங்கிக் கொண்டு வந்ததற்கு கணக்கு*

*57.1809*

*ஸர்கார் வரவு செலவு*

*உத்திரக்கிரியைக்காக*

*சௌ.மா.யமுனாபாயி[72] சாயேப் அவர்களின் உத்திரக்கிரியைக்[73]காக ரூ.115*

*முத்துலக்ஷுமிபாயி அவர்களின் கிரியைக்கு 479-3-6.*

*50.1850*

*கைலாசவாசி - சௌ.மா.ஸைதம்பாபாய் சாயேப் அவர்களின் பெயரால் காசி க்ஷேத்திரத்தில் சிவாலயம் பிரதிஷ்டை[74] செய்து, நித்யப்படி ஏற்படி பூஜை நிவேதனம் வகையறாவுக்குக் காசித்தம்பிரான் அவர்களிடம் 2500 ரூ கொடுக்கப்பட்டது.*

---

68. திருமைலாடி என்பது கொள்ளிடம் ரயிலடிக்கு முன்னர் உள்ள ரயிலடி

69. ஸ்தானிகர் - கோயில் பரிபாலன உரிமையுடையவர்

70. மஹாராஜா என்றது இரண்டாம் சரபோஜியை

71. பர்வானகி - அரசனின் இசைவு ஆணை; இவ் ஆணையில் அரசனின் கையொப்பம் இருக்காது (பக்கம் 365)

72. யமுனாபாய்-இரண்டாம் சரபோஜியின் முதல்மனைவி

73. உத்தரக்கிரியை - இறந்தவர்கட்குச் செய்யும் இறுதிச்சடங்குகள்

74. சிவாலயப்பிரதிஷ்டை - சிவன்கோயில் அமைத்தல் (182 சி – 6 -2)

குஜராத்தி இராமனாத்பட்டர் மூலம் ஸர்காருக்கு- திருவையாற்றில் வீடு தோட்டம் விண்ணாற்றங்கரையில் பங்களா படித்துறை வகையறா கரீதி செய்ய வசக்கட்டிலிருந்து[75] 16611-8-0 ரூ.

*32 (1)'1850*

ஸர்க்கார் வரவு செலவு

ஜலசூத்திரத்தின் வேலைக்காக வேண்டியளவு தண்ணீர் சேகரஞ் செய்வதற்காக 130 அடி நீளம், செப்புக்குழாயும் இரும்புச்சாமான்களும் வாங்குவதற்காக ரூ.4600

சென்னப்பட்டணம் சைதாப்பேட்டைதாலூக்கா சின்ன ஓடன் என்னும் ஊரிலிருக்கும் ஸர்க்கார் தோட்டத்திலுள்ள பங்களா பழுது பார்ப்பதற்காகவும் தண்ணீர்ப் பந்தல் சாவடி ஜீர்ணமானதை புதிதாகக் கட்டுவதற்கும் தோட்டத்தைச் சுற்றி புதிதாக வேலி கட்டுவதற்கும் தூத்திப்போன[76] குளத்தை வெட்டுவதற்கும் ஷெ இடத்திலுள்ள சிவசங்கர தவே கொடுத்த உத்தேச ஜாபிதாவின்படி செலவு ரூ.5025.

## மூட்டை எண் - 56C

*Whole bundle pertains of Amarsing period*

*(2) 1793*

பரவானகி

பல்லக்குத் தூக்குகிறவர்களின் தெருவிலிருக்கும் தர்மராஜர் கோயிலுக்கு தீ போடுவதற்காக திருவையாற்றிலிருந்து ஒரு புளிய மரத்தைக்கொண்டு வந்து கொடுக்கிறது.

*(4) 1793*

பாதரி[77] வெள்ளைக்காரருக்கு நெய்,புதலி ஒன்றை தஞ்சாவூரிலிருந்து சென்னைக்கு அனுப்புவது வழக்கம். சென்னையிலிருந்து சில மனிதர்களுடைய மூட்டைகள் (பாரம்) வந்து கொண்டிருக்கின்றது. அதற்கெல்லாம் சுங்கம் வசூலிக்காமல் விட்டு விடுவது என்று உத்திரவு

*(5) 1793* ஜாபிதா - நெட்டி மஹால்[78] - சித்திரம் மஹால்[79] திம்மதி[80] கோவிந்தறாவ் போஸலே ஹாவாரே - நரஸோஜி சிந்தே தினப்படி - பிள்ளையார் சதுர்த்திக்காக செப்பரம் 6 (ஆறு) தயார் செய்வதற்கு வருஷா வருஷம் போல் சாமான்களை கொடுக்கிறது.

---

75. வசக்கட்டு - தன்வசம் கொடுக்கப்பட்டிருந்த தொகை

76. தூத்திப்போன - தூர்ந்து போன

77. பாதரி - (சுவார்ஷ் அல்ல)

78. நெட்டிமகால் - நெட்டியினால் பல பொருள்கள் தயாரிக்குமிடம் (பக்.399,458) (177 சி – 20)

79. சித்திரமகால் - ஓவியத்தில் வல்லசித்திரக்காரர்கள்தம் தொழில் செய்யுமிடம்

80. திம்மதி - வழக்குமன்றத்தீர்ப்பில் கையொப்பம் இடும் அலுவலர் (பக்.76)

35 குர்ணா பட்டை, 150 தங்கம் பித்தளை தகடுகள் பெரியது, 10 சிவப்புகடுதாசி தஸ்தா , 5 மஞ்சள் கடுதாசி தஸ்தா, 5 கருப்பு கடுதாசி தஸ்தா , 5 பச்சை கடுதாசி தஸ்தா, 10 மன்னார்குடி கடுதாசி தஸ்தா , 5 பந்தரி சிவப்பு கடுதாசி தஸ்தா, 2 பந்தரி மஞ்சள் கடுதாசி தஸ்தா, 2 பந்தரி கருப்பு கடுதாசி தஸ்தா, 2 பந்தரி பச்சை கடுதாசி தஸ்தா , 3 பந்தரி வெள்ளை கடுதாசி தஸ்தா, 13/16 சேர் இங்களீக (ஹிங்களீக) , 25 சேர் சிந்தூரம், 3 சேர் நீலம், 3சேர் விளாம்பிசின் , 5 சேர் வங்காளம் மஞ்சள், 1/2 சேர் புளி , 2 சேர் அரிதாரம் , 3 சேர் காவி , 8 சேர் அப்பிரகம், 7 சேர் மெல்லியதான நூல் , 3 சேர் சணல் நார் , 4 சேர் சத்துளிக்கயர், 1 சேர் வங்காளப் பச்சை , 3 சேர் முத்து வெள்ளை , 3 சேர் வெள்ளை, 6 சேர் மிருகு எண்ணெய், 3 சேர் வெண் குங்கிலியம், 2 சேர் நல்லெண்ணெய் , 8 சேர் பந்தரி நீலம் , 2 மனு கர்டா கடுதாசி, 1 மனு கந்தை , 8 சேர் மக்கு , 4 சேர் கண்ணாடித் துண்டுகள், 3 படி அரிசி மாவு , 20 கோழி முட்டை , 200 தாழநார் கட்டு, 15 எலும்பிச்சம் பழம் , 4 அலிதாவின்?இலைகட்டு , 3 பாய்கள் , 4 கத்தரிக்கோல் , 150 காவியான சட்டிகள் , 15 பெரிய மூங்கில், 50 கப்பாணிக்கயர் சுருட்டி , 2 பெரிய சட்டிகள் , 2 தோண்டிகள், 10 கலையங்கள் , 10 சின்னசட்டிகள் , 5 பெரிய கூடைகள், 1 கச்சைத் துண்டு 5 முழத்தில் , 1 பெரிய துண்டுதுணி 5 முழத்தில், 3 நெட்டி வேலைக்காரர்கள் ஜகாயதி மஹால் தஞ்சாவூர்க் கோட்டையிலிருந்து வேலை முடிகிற வரையிலும், 1 முறங் கூரைக்காரன், 5 திருவிடமருதூரிலிருந்து நெட்டிவேலைக்காரர்கள் , 2 உப்பிலிப்பிள்ளையார் கோவிலிலுள்ள நெட்டிக்காரர் , 5 திருவாரூரிலிருந்து நெட்டிக்காரர் ஆசாமிகள் , 3 கூலிக்காக வேலைசெய்யும் சித்திர வேலைக்காரர்கள், மராமத்து இலாகா[81] விலிருந்து ஆசாமிகள், 1 அய்யனாசாரி வேலை முடியும் வரையில் (5) 40 நெட்டியின் கட்டுகள். 10. திருவிடைமருதூரிலிருந்து 10 கும்பகோணத்திலிருந்து, 10திருவாரூரிலிருந்து, 10 உப்பிலிப் பிள்ளையார் கோயிலிலிருந்து 1. தச்சன், கொல்லன், பட்டடியின் சாமான்களும், மரச்சாமான்கள் வேண்டியது மட்டும் மராமத்து இலாகாவிலிருந்து கொடுப்பது. 3.காமாடி[82] (சித்தாள்) மராமத்திலிருந்து வேலை முடிகிற வரையில் 200 சுத்தமான குண்டே? 1/2 படி மை 20 கொட்டாங்கச்சி 15 பேங்கட் கட்டு

(6) 1793

ஜாபிதா அர்ஜி - அலி அவகர் மரக்காய், குத்தகைக்காரர், மகால் அன்னச்சத்திரம் - திரௌபதாம்பாபுரம்[83] - எழுதிய அர்ஜி என்னவென்றால்

மா. பாயிசாயேப்[84] அவர்கள் காலத்தில் சத்திரத்தின் தென்னந்தோப்பும், மாந்தோப்பும் பட்டணமும், சங்குகுளியும் வர்ணங்களின் வேர் எல்லாவற்றையும் பிலவங்க ௵ முதல் விரோதிகிருது ௵ வரையில் ஒப்புக்கொண்டு ஒவ்வொரு ௵ வாக்களித்தபடி வசூல் போக பாக்கி குத்தகைக்கு காணாமல் (கண்டு முதலாகாமல்) நின்று போன .

---

81. மராமத்து இலாகா - இமாரதி மகால்

82. காமாட்டி - அடிப்படைப் பணியாள்

83. திரௌபதாம்பாபுரம் - மணமேற்குடி; திரௌபதாம்பா பிரதாப சிம்மரது மனைவியருள் ஒருவர்; இரண்டாம் துளஜாவின் தாய் (பக்கம் 271)

84. பாயி சாகேப் என்றது திரௌபதாம்பாபாயி ஆவர். இக்கால கட்டத்தில் திரௌபதாம்பாள் உயிரோடிருந்தார்; எனினும் அச்சத்திர மேற்பார்வை இவரிடத்திருந்து பறிக்கப்பட்டிருத்தல் கூடும்.

பாபத்து மதரி சக்ரம் 2514-6 பணம்.

ஷெ துகையை கொடுப்பதற்கு வழியில்லாமல் ஸேவகன் தீர்த்துக்கொண்டு வாக்களித்தபடி மதரி[85] சக்ரம் 1400 ஆயிரத்து நானூறு சக்ரம் போக பாக்கி சக்ரம் 1114-6 பணம் (ஆயிரத்து நூற்றுப் பதினான்கு சக்ரம் ஆறு பணம்) இதற்கு சாயேப் மனமுர்ந்து பாக்கியைத் தள்ளுபடி செய்ய உத்திரவு செய்ய வேண்டும்.

ஷெ படி நடத்துகிறது

சந்த் 14 ஜில்ஹேஜ்[86]
(7) 1793
அர்ஜி - திருவேங்கிடத்தம்பிள்ளை செக்கின் கோட்டை, தஞ்சாவூர்-எழுதிக் கொடுத்த மனு என்னவென்றால்

ஸமஸ்தானத்தினால் சோர் உப்பும் அத்ஸேபாஜியையும் கூட குத்தகைக்கு ஸேவகனுக்கு ஒப்படைத்தால் ஸேவகன் ஷெ த்திற்குக் குத்தகை சக்ரம்
130 சோர் உப்பு, 80 அத்ஸே பாஜி (ஸ்படிகக்கல்) = 210
210 சக்கரம் கொடுப்பதாக ஒப்புக் கொண்டிருக்கிறது. இதற்கு வழக்கப்படி குத்தகை துகைக்கு ஸர்காருக்கு சோர் உப்பு கொண்டு வந்து செலுத்த சாயேப் பெரிய மனதுடன் ஷெ குத்தகையை ஸேவகனுக்கு கொடுக்க உத்திரவாக வேணும்.
ஷெ நடத்துகிறது
2.1797
(1) அர்ஜி

ஸர்கார் உத்திரவு - ம கா.ஸ்ரீ.அமரசிங்குராஜா சாயேப். முகாம் - தஞ்சாவூர் கோட்டை.

தர்மராஜ தீக்ஷிதர்[87] செக்கின் செரங்குடி இவர் தனக்கு சுபா கும்பகோணம் திம்மதி - ரங்கய்யாவானவர் செரங்குடி பதக்கைத்[88] தனியாகப் பிரித்துக் கொடுத்தால் ஸர்காருக்கு வருஷத்திற்கு கடப்புகார் ஸம்பாவபசான்[89] வயல்புஞ்சி[90] வர்ஷப்பத்துக் கூட திடல்புஞ்சி[91] இலுப்பக்காய் தவிர குத்தகை கொடுப்பதாக ஒப்புக்கொண்டது கலம். 21144

---

85. மதரி - மதுரை; தஞ்சாவூர்ச் சக்கரங்கள் மதுரைச் சக்கரங்களினும் அதிக மதிப்புடையவை (பக்கம் 153)

86. ஜில்ஹேஜ் - ஆவணி மாதம்

87. தர்மராஜ தீக்ஷிதர் - வராஹப்பையாவின் பாட்டனார் போலும்

88. பதக் (பத்தக்) அல்லது பதகம் (பத்தக்கம்) என்பது சிலவூர்களின் ஒன்றியம். ஹைதர் கலாபினால் நாடுபாழடைந்தது; நாட்டைச் செம்மைப்படுத்த துளஜா தன் அமைச்சர்களுள் ஒருவரான பாவா பண்டிதரைக் கொண்டு நிலச்சீர்திருத்தம் செய்தார். ஹைதர் கலாபினால் அழிவுக்குட்பட்ட நிலங்களோடு செழிப்புள்ள நிலங்கள் ஒருங்கு சேர்க்கப்பட்டன. அத்தொகுதிகள் "பதக்" எனப்பட்டன.(பக்.74)

89. பசான் - பசானம்; வைகாசியில் அறுவடை ஆகும் நெல்

90. வயல்புஞ்சி - புன்செய் வயல்

91. திடல் புஞ்சி - புன்செய் மேட்டுநிலம்

5.1797

(2) மனு.

விஜய மண்டபம் தேவஸ்தானம்[92] ஸ்ரீஸ்வாமி திம்மதி - லக்ஷுமண்ராவ் போஸலே-கோவிலின்[93] விமானத்தின் மேல் வெள்ளைக்காரர் ஏறினதினால் ஸ்வாமிக்கு கும்பாபிஷேகமும் ஸம்ப்ரோக்ஷணமும்[94] கூட செய்ய வேண்டியதற்காக போதே மஹாலிலிருந்து 20 சக்ரம் கொடுக்க உத்திரவு செய்ய வேணும்.

ஷெ 20 சக்ரம் மகால் ஆவுசாயேப் தோட்டத்திலிருந்து கொடுக்கிறது.

(3) 1793

மனு-அரந்தாங்கி கோட்டை - திம்மதி[95] - ரா.ராமசந்திரராவ் காடே-கோட்டையில் ஆயுதபூஜைக்கும் விஜயதசமிக்கும்:-

நல்லெண்ணை - சேர் 5,ஆடுகள் சுமார் 3,கெட்டித்தயிர் படி 12,கோர்பட்? கட்டு - 1,சுண்ணாம்பு கலம் - 1,விஜயதசமி தினம் துப்பாக்கியை விடுவதற்கு துணி,பூஜைக்குப் பணம் - 5

5 (4) 1820 குறிப்பு

கஸ்தி (ரோந்து) சுற்றிக்கொண்டிருக்கையில் சமாசாரம் — ரா.கோவிந்த பாளா[96] அவர்களுடைய மடத்திற்கு கிழக்கே பழுதான பழைய பிள்ளையார் கோவில் விழுந்து விட்டது. அதைவெட்டி செங்கல்லை எடுக்கும் பொழுது அகப்பட்டதை உத்திரவுப்படி மஹாலோ மஹாலில் கொடுக்கப்பட்டது.

3 பித்தளை நகைகள் (மஹால் ஆயுதசாலையில் கொடுக்கபபட்டது)

2 ஒட்டையான ஈயம் தவலை;5,4 மஹால் மராமத்தில் கொடுத்தது.

1 பெரிய கல்சட்டி,1 சிறிய கல்சட்டி, 2 சின்ன ஜோடுதவலை;4

5 வெள்ளிமணி - கூட ரொக்கம் 15 அணா வரவு இராஜமால்படி களிமோடு என்னும் ஊரிலிருக்கும் வீராயி என்பவள் செம்பு திருடினாள். அவளைச் சாவடியில் வைத்தார்கள். அதற்கு அவளுடைய கழுத்தில் செம்பைக்கட்டி இன்ன குற்றஞ் செய்தாளென்று வாசித்துக்கொண்டு, நான்கு வீதிகளிலும் தண்டோராவுடன் சுற்ற வைத்து, ஒவ்வொரு வீதியிலும் பிரம்பினால் 3 அடி வீதம் அடித்து மூன்று வாசல்களையும் காட்டிவிட்டு கோட்டைக்கு வெளியே விரட்டி விட்டது. சொந்தக் காரனுக்குச் செம்பு கொடுக்கப்பட்டது.

92. விஜயமண்டப தியாகராஜர் (பக்கம் 213இல் 28) இக்கோயில் தஞ்சாவூர் மகர் நோன்புச்சாவடியில் உள்ளது.

93. கோயில் என்றது தஞ்சைப் பெரியகோவில்

94. ஸம்ப்ரோக்ஷணம்- தூய்மை உண்டாக்கக்கூடிய வைதிகச்சடங்கு

95. திம்மதி என்பது இங்குக் கோட்டை அலுவலரைக்குறிப்பதாக வருகிறது. மேல் ஸ்ரீஸ்வாமி திம்மதி என்றவிடத்துக்கோயில் மேற்பார்வையாளரைக் குறிப்பதாக வருகிறது (56சி - 5-2)

96. கோவிந்தபாளா மடம்: கி.பி.1680இல் சிவாஜியின் ஞானாசிரியர் சமர்த்த ராமதாஸ் தஞ்சைக்கு வந்தார். தன்னுடைய சீடராகிய பீமராஜ் சுவாமிகளைத் தஞ்சையில் இருக்கச் செய்தார். இவர் கி.பி.1741 வரையிலும் இருந்தார். இவரது சீடர்கள் ஜோஸிராம் பாவா, கோவிந்த பாளா, ஆத்மாராம் என்ற மூவர். இம்மூவரும் தனித்தனி மடங்களை நிறுவினர். கோவிந்தபாளா நிறுவிய மடம் சகாஜிநாயக்கன் தெருவில் உள்ளது (பக்கம் 439)

5(5) 1797 உத்திரவு

மிஸ்தர் கனடின் டாக்டர்[97] ஆங்கிலேயர் பேஸஜி (பெரிய உத்யோகஸ்தர்)ரா.சிவா ஜி சம்பா ஜி பண்டிதர் அவர்களுக்கு மருந்து கொடுத்ததினால் ஆயிரம் வராகன் கொடுப்பதாக சொன்னபடி இப்பொழுது தரங்கம்பாடி 1765 ஷெத்திய பாக்கி பணத்திலிருந்து 1000 வராகன் கொடுப்பது.

(6) 1797

விஸ்வனா தய்யர் - தரங்கம்பாடி டென்மார்க்

ஆங்கிலேயரின் பெயரால் ஸர்காரின் கரார் நாமாவின் 25 ஆயிரம் சக்கரம் கொடுக்கிறதென்று எழுதிக்கொடுத்து, திருநெல்லார் காரைக்கால் குத்தகைக்காரன் சுப்பிரமணியய்யரிடமிருந்து, நூற்றுக்கு 2 வீதம் வட்டிக்கு தஞ்சாவூர் சக்கரம் 4000 கடன் வாங்கினது. ஷெ கடனுக்கு ரத்து செய்த துகை சக்ரம் 2438-4- 3/4 பணம் போதே மஹாலிலிருந்து கொடுப்பது.

(7) 1797 உத்திரவு

ஜயின் பாஷை பிராமணனுக்கு இனாம் பத்து சக்கரம்.

5 (8) 1797

உத்திரவு

கல்வராம் பட்டியின் மனிதன் மிஸ்தர் மக்லோட்டுக்காக[98] ஆட்டைக்கொண்டு வரும் பொழுது, வேட்டைநாய் அவனுக்குகாயம் செய்ததால் (கடித்ததினால்) அவனுக்கு 7 பணம் இனாம் கொடுக்கப்பட்டது.

(9) 1797

மஹால் - ஜகாயதி - கோட்டை தஞ்சாவூர் ரா. மகாராஜாவும்[99] எல்லா பாயிசாயேப்களும்[100] வின்னாற்றங் கரைக்கு ஐப்பசி மாஸம் ஸ்நானத்திற்கு[101] சென்ற போது - சாப்பாடு செய்யப்பட்டதின் விபரம்.

முதல்தரம் சாப்பாட்டுக்கு நவபாண்டம்.[102] காய்கறி சமைப்பதற்குசட்டி 5,பெரியசால் 1,4 1/2 கூலி, 3-9-0 நமக்காகவே சமையல் செய்கிற ஆசாமி 6 பேர்களுக்கு, குளவரிக்கு ரவா படி 1 1/2 பேணிக்கு ரவாபடி 3,சேமியா பாயஸம் படி 1க்கு மண்டே-3,குஞ்சாலாடு - 3,ஜிலேபி - 2-3-9-0

---

97. இவர் ஒரு ஆங்கிலேய மருத்துவர்; சிவாஜி சம்பாஜி பண்டிதர் என்ற பெரிய அலுவலருக்கு வைத்தியம் செய்தவர். சிவாஜி சம்போஜி பண்டிதர் 1796இல் இறந்து போனார். எனினும் இவ்வைத்தியருக்குச் சொன்னவண்ணம் 1000 வராகன் கொடுக்கப்பட்டது

98. மக்லோட் - ரெஸிடென்ட்டு (பக்கம் 64-65)

99. மகாராஜா என்றது அமர்சிங்கை

100. எல்லாபாயி சாயேபுகள் - அமர்சிங்கின் மனைவியர் மூவர்: கிருஷ்ணம்மா, பார்வதி பாயி, பவானி பாயி என்பவர் (பக்.27)

101. ஐப்பசி மாச ஸ்நானம் என்றது துலாஸ்நானம் எனப்பெறும்

102. நவபாண்டம் - சமையல் பாத்திரங்கள்

பிராமணர் அஸாமி 4க்கு தொன்னை தைக்கக்கூலி
சமையல்காரர் அஸாமி 10 பேர்களுக்கு அரிசிபடி 5ம் மேல் சாமானும்.
மூங்கில் தட்டு - 153,மூங்கில் கூடை - 8

6.1791 ஸபர் புரட்டாசி[103]
(1) தினசரிக் குறிப்பு (டைரி)
சென்னைக்கு மாமா சாயேப் அவர்களுக்குக் கடிதமனுப்பப்பட்டது.

6.1791
3. அமரசிங்கு ராஜாவிடமுள்ள ஸ்திரீகள்[104] அரண்மனைக் கோவிலுக்கு வந்தபோது, கலகம் நடந்தது. அன்று பாதரியும்[105] வந்திருந்தார்.

4. பாதரி மாத்திரம் அமரசிங்கினிடம் சென்று எங்களிடமும் வந்து போனார்.

6. காலையில் பொட்லர் வந்து பார்த்துப் போனார். மத்தியானம் கர்னல் கலேடன், பொட்லர், பாதரி சாயேப் வகையறா வந்து பாராக்கார னின்றிருந்ததைப் பார்த்தார்கள். அப்பொழுது கான்சாயேப்[106] துபாசி கிருஷ்ணசாமி[107] சிவறாவும்[108] வந்திருந்தார்கள்.

(21) மா.ஆவுசாயேப்புக்கு[109] தேகம் சௌக்யம் என்று ரா.யஜமானானவர்[110] இரவில் சென்று பார்த்து வந்தார்கள்.

6.1791
(4) பாதரிசாயேப் இராஜா[111]விடத்தில் சென்னையிலிருந்து வந்த சமாச்சாரம் சொல்லுவதற்காகப் போயிருந்தார். நம்முடைய யஜமானவர்களிடம் வந்து பேசிவிட்டுப் போனார்.

(5) ரா. யஜமான் மா.பெரிய அமணியின்[112] சமாதானத்திற்குப் போயிருந்தார். இன்றும்

---

103. ஸபர் - அரபு மாதம் (ஐப்பசி)

104. ஸ்திரீகள் - அமர்சிங்கின் மனைவியர்

105. பாதரி என்றது ஸ்வார்ஷ் பாதிரியை

106. கான்சாகிப் யார் என்று தெரியவில்லை

107. துபாசி - இருமொழி வல்லுநர். கிருஷ்ணசாமி என்பவர் அரண்மனையில் இருந்த துபாசி போலும் (பக்.407)

108. அமர்சிங்கின் அன்புக்குரிய அமைச்சர் (பக்.28)

109. ஆவுசாயேப் என்றது இரண்டாவது துளஜாவின் மனைவி திரௌபதியம்பா பாயியை

110. யஜமான் என்றது சரபோஜியை

111. இராஜா என்றது அமர்சிங்கை

112. பெரிய அமணி என்றது இரண்டாம் துளஜாவின் மனைவி திரௌபதியம்பா பாயியை

தொண்டைமானுடைய[113] மனிதர் வந்திருந்தார். அவருக்கு நாய்களைக் கொடுத்தனுப்பினார்.

(13) சென்னைக்கு மாமா சாயேப் கடிதம் அனுப்பினார். ஹுஜூருக்கு அனுப்பினார்.

(18) பாதிரி சாயேப் அரண்மனைக்கு இராமசந்திரராவ் காட்கே அவர்களின் மனைவியை வருவதற்கு உத்திரவு கொடுப்பதற்கு வந்திருந்தார். இராஜா தகராறு செய்துஅனுமதியைக் கொடுக்கவில்லை.

6.1791
(19) சென்னையிலிருந்து கடிதம் வந்தது.

(22) இராஜம்மா[114] உள்ளே வருவதற்காக பாதிரி சாயேப் பிராமணர்களை அழைத்துக்கொண்டு, மகாராஜாவிடத்தில் சென்ற பொழுது மகாராஜாவின் பிராமணர்கள் தோற்றுப் போனார்கள்.
(23) கோபால்ராவ்[115] சென்னைக்கு ஜாபிதா உள்பட கடிதம் அனுப்பினார்.

6. 1792 Jan 1உ மிஸ்தர் ராம்[116] வகையறாக்களுக்குப் பழவர்க்கங்கள் அனுப்பப்பட்டன.

(19) பாதரி சாயேப் - எஜமானவர்களைக் கண்டு புதிய குதிரைகளை வரவழைத்ததைப் பார்த்துப் போனார்கள்.

6 1792
(22) மஹாடிகராவ் ஸஞ்சிவபந்த் இங்களேராவ் வகையறா பாதரியின் தோட்டத்திற்குப் போயிருந்தார்கள்.

(10) உறவினர் சக்கப்பா காட்கே குஜராத்தி வகையறா 10 பேர்கள் அமரசிங்கின் ரகஸியத்தை வெளிப்படுத்துகிறவர்களாக இருக்கிறார்கள்.

6 1792
(22) மா.ஆவுசாயேப் அவர்களுக்குப் பிராயச்சித்தம்[117] கொடுத்தார்கள்.

(26) மா.ஆவுசாயேப் தெய்வலோகமடைந்தார்.

(19) பாதரி சாயேப்பின் காரியத்திற்குப் பதில் வந்தது. நம்முடைய பார்சலுக்கு உத்திரவு வந்திருக்கிறது.

---

113. தொண்டைமான் என்றது புதுக்கோட்டை அரசரை

114. ராஜம்மா(?) 912சி-38-26 கூறப்பட்டவர் இவரின் வேறானவர் ஆதல் கூடும். 53இல் கண்டவருடைய மனைவி(?)

115. கோபால் ராவ் - சரபோஜியின் வக்கீல் (43சி-60-சி)

116. மிஸ்தர் ராம் - இவர் மக்லோடுக்குப் பிறகு ரெஸிடென்டாக வந்தவர் ஆதல் கூடும் (பக்.65)

117. பிராயச்சித்தம் - இறக்கும் தருவாயில் பாவங்களுக்குப் பரிகாரமாகச் செய்யும் வைதிகச்சடங்கு

*௬.1792*

*5.பாதரி சாயேப் வசம் மாமாசாயேப் கொடுத்த கடிதம் சேர்ந்தது.*

*9. ஷெ கடிதம் பாதரி சாயேப் சென்னைக்கு அனுப்பியிருக்கிறார்.*

*26. மா. சுலக்ஷணாபாய்[118] அவர்களுக்குப் பிராயஸ்சித்தம் கொடுக்கப்பட்டது. பாதரி சாயேப் சென்னைக்கும் வங்காளத்திற்கும் கடிதம் அனுப்பிருக்கிறார்.*

*28. மா.சுலக்ஷணாபாய் சாயேப் கைலாஸ வாசி ஆனார். இரவில் பாதரி சாயேப்பும் வந்திருந்தார்.*

*29. தகனம் ஆனது. பாதரி சாயேப் கடிதம் அனுப்பி யிருக்கிறார்.*

*1. வுண்ணானுக்குப் போக தடை செய்யப்பட்டது.*

*2. பாதரி சாயேப் சென்னைக்குக் கடிதம் அனுப்பினார் . லக்ஷ்மண் பண்டிதரை இராஜாவானவர் வேறிடத்தில் வைத்திருக்கிறார்.*

*6. 1792*

*4. பதில் -ஜனரல் ஆர்டர் வந்திருக்கிறது.*

*5. கும்பனியின் சோல்ஜர் ஜனங்களும் துரைகளும் வந்திறங்கினார்கள்.*

*9. கார்ன்வாலீஸும்[119] டக்லஸ்ஸும் பாதிரி சாயேப்பும், பாய்சாயேப்களிடம்[120] நேரில் வந்து பேசினார்கள்.*

*இன்ன விதமாக ஏற்பாடு செய்வேனென்று உறவினர்கள் வருவதற்குப் பாதரி எழுதி வாங்கியிருக்கிறார்.*

*தத்தாஜி அப்பா[121] இருவரும் சேர்ந்து சென்று,[122] பாதரியினிடம் சமாசாரம் சொன்னார். மூலை மாடியிலுள்ள சாமான்களை எடுத்து காலி செய்து கொடுக்க வேணும். உறவினர்கள் வந்து போவதற்கு இடைஞ்சலில்லாமல் பங்குக்கு உத்திரவு செய்யவேணும் ஹஜாரியில்[123] பல்லக்கு மஹாலில் விறகை நிறுத்துவதற்கு இடம் கொடுக்க வேணும்.*

*நீலவேணி அம்மாவின் பிள்ளைக்கு அரண்மனைக்கு போகவர இடைஞ்சலில்லாமல் செய்ய வேணும். நீலவேணி அக்கா வீட்டின் பாராவை[124] நீக்கி வேலைக்காரர்கள் வருவதற்கு இடைஞ்சலில்லாமல் உத்திரவிடவும்.*

*பாயிசாயேப்பின் குமாஸ்தாவும் வேலைக்காரர்களும் பங்கு வரையில் வந்து சால்சாப் செய்து போவது.*

---

118. சுலக்ஷணாபாயி - மக்கட்பேற்றுக்காகத் துளஜா திருமணம் செய்து கொண்டவர்களுள் ஒருவர் (போ.வ.ச.பக்.128)

119. கார்ன்வாலிஸ் - 1786 முதல் 93 வரை வங்காளத்தில் கவர்னர் ஜெனரலாக இருந்தவர் (பக்கம் 60) (43சி-60-சி)

120. பாயிசாயேபுகள் - துளஜாவின் மனைவியர்

121. தத்தாஜி அப்பா - சரபோஜியின் பக்கம் இருந்து அவர்க்காக உழைத்தவர் (பக்கம் 79-80)

122. இருவரும் - மேலும் ஒருவர் யார் என்று தெரிய வாய்ப்பில்லை.

123. ஹஜாரி - வடக்குவாசல்

124. பாரா - காவல்

இந்தப்படி பாதரி சாயேப்[125] எழுதி வாங்கிக் கொண்டு இராஜா[126]வினிடம் சென்று பேசிவிட்டு வந்தார்.

*6.15-2-1791*

மா.ஆவுசாயேப் வந்து உறவினர்கள் வருவதற்கும், கடிதங்கள் வருவதற்கும் அமரசிங்கு மகாராஜா இடைஞ்சல் செய்கிறார். அவருக்கு இடைஞ்சல் செய்யாமலிருக்கும்படி பாதரி சாயேப்புக்கு சொல்லி உத்திரவு கொடுத்துவிட்டு போனார்.

பாதரி சாயேப் ம கா.ஸ்ரீ.திவான் சாயேப்பை[127] மா. பாயி சாயேப்பினுடையபேட்டிக்கு (காண) அழைத்துப் போனார்.

மா.பாயிசாயேப்[128]அவர்களுடைய அரண்மனைக்குப் போவதற்கு வழி இடித்து வாசல் வைக்கப்பட்டது.

இராஜா யஜமான[129]ருடைய மட்டக்குதிரை போவதற்கு இடைஞ்சல் செய்தாராம்.

சவாரி வெளியே புறப்படுவதற்கு பாதரி மகாராஜா சொல்லியனுப்பியதாவது மா.ரா.[130] வெளியே புறப்படுகிறார். நாமும் மிஸ்தர் ராமும் இருவரும் அழைத்துக்கொண்டு போகிறோமென்றார். அதற்கு இராஜா உத்திரவு கொடுக்கவில்லை. அதற்குமேல் ரா.யஜமானவர்கள் குதிரையைத் திருப்பி விட்டார். இராஜாவும் ஒரு மட்டக்குதிரையை அனுப்பினார்.

பாதரி சாயேப் வந்து பார்த்துப் போனார் . இராஜாவிடமும் போனார்.

சென்னையிலிருந்து தபால் வந்தது.

பாதரியின் தோட்டத்திற்கு அப்பா[131] போயிருந்தார். அங்கு நடந்த சங்கதி.

அமரசிங்கு இராஜாவிற்கு மிஸ்தர் ராமும் பால்பீலும் கேட்டு அனுப்பித்ததாவது- உங்களுடைய உறவினர்கள் எவ்வளவு பேர்கள்?- அதன்பிறகு எங்களையும் கேட்டார்.

6. கம்பிட்டியில் நடந்த சங்கதி

மிஸ்தர் ராமுக்கு மூன்று சுபாக்கள் பாலேபில்லுக்கு மூன்று சுபாக்கள் என்று தீர்ந்தது.

கோபாள வெங்காஜிக்கு சென்னையிலிருந்து கடிதம் வந்திருக்கிறது. மிஸ்தர் பாதரி சாயேப் வீட்டிற்கு அப்பா போயிருந்தார்.

மிஸ்தர் ராம்,பாதரி இருவரும் சேர்ந்து நான்கு பாயிசாயேப்[132] களின் குமாஸ்தாக்களை வரச் சொன்னார்கள். குமாஸ்தாக்களும் போய் வந்தார்கள்.

125. பாதரி என்று இங்கும் முன்னும் வருங்கால் ஸ்வார்ஷ் என்று கருதல் வேண்டும்

126. இராஜா என்றது அமர்சிங்கை

127. திவான் சாயேப் என்றது சரபோஜியை

128. பாயி சாயேப் என்றது யார் என்று தெரியவில்லை

129. யஜமான் என்றது சரபோஜியை

130. மா. ரா. என்றது சரபோஜியை

131. அப்பா என்றது தத்தாஜி அப்பாவை

132. இரண்டாம் துளஜாவின் மனைவியர் ஐவருள் மோஹனாபாயி தவிர்த்து எஞ்சிய நால்வரை (போ.வ.ச.பக்.125)

சென்னைக்கு கடிதம் அனுப்பப்பட்டது. சின்னையா மொதலியும் வந்தார்.

கமிட்டி சேர்ந்திருக்கிறது. கமிட்டிக்கு அப்பா போயிருக்கிறார். சின்னையா முதலி அரண்மனைக்கு வந்தார்.

சவாரி தீர்மானமாய் நின்று விட்டது.

ரா.யஜமானவர்கள் சவாரிக்கு வெளியே புறப்பட்டு கோட்டைக்கு வெளியே பாதரி சாயேப் தோட்டத்திற்கு சென்று பின்பு சிவகங்கைக்கு வந்து நான்கு வீதிகளிலும் சுற்றி வந்தார்.

6.சென்னைக்குக் கடிதம் அனுப்பட்டது.
மா. ஆவுசாயேப்பும் பெரிய அமணிக்கு[133] உடம்பு சரி இல்லை என்று காண்பதற்கு யஜமான் போய் வந்தார்.

கமிட்டியில் சக்கண்ணாவுக்கு சிலவுக்கொன்றுங் கொடுக்கவில்லை.

கமிட்டிக்கு அப்பா போன இடத்தில் பட்டுவாடாவில் கம்மி தீர்த்துக்கொண்டு வந்தாரென்ற சங்கதியைக் கேள்விப்பட்டேன். சென்னைக்குப் பாபண்ணா[134]வின் பெயரால் கடிதம் எழுதியிருக்கிறது. சின்னையா முதலி சென்னைக்குப் போனார்.

இராஜாவை பாதரி சாயேப் கண்டு போனார். நம்முடைய ரா.யஜமானரிடம் வரவில்லை. சென்னைக்குக் கடிதம் அனுப்புவதாக யிருந்தார்.

6. ரா.ராவுசாயேப்பின் கடிதத்தை சென்னைக்கு அனுப்பியிருக்கிறது.

சென்னையிலிருந்து எல்லோருடைய பேராலும் கடிதம் வந்திருக்கிறது. பாதரியின் தோட்டத்திற்கு அப்பா மட்டும் போயிருந்தார். பாதரிசாயேப் நம்முடைய விஷயம் குறித்து சென்னைக்கு கடிதம் அனுப்பினார்.

பாபண்ணா சென்னையிலிருந்து கோட்டைக்கு வெளியே வந்திருக்கிறார் பாதரிசாயேப் யஜமானருடைய பேட்டி (காண்பதற்கு)க்கு வந்தார். இராஜாவிடமும் போயிருந்தார்.

பாதரியுடன் பாபண்ணா கோட்டைக்கு வருவதற்கு வந்தார். நதீஸ் புதுபாதரி[135]வந்திருக்கிறார். பாபண்ணா பாதரியின் தோட்டத்திற்கு வந்திருக்கிறார்.

6.30/4/1791
பிரஹதீஸ்ர ஸ்வாமியின்[136] செப்பரம், யானைவாஹனம் மூலை மாடியின் சமீபம் வரும்பொழுது, பூஜை அனுப்பினதற்கு கற்பூரார்த்தி நிவேதனமாவதற்குள் ஸ்வாமியை

133. பெரிய அமணி - துளஜாவின் மூத்த மனைவி (ராஜஸபாயி ஆகலாம். போ.வ.ச.பக்.125)

134. (56சி-6) தஞ்சையில் சரபோஜியின் பக்கம் இருந்து சென்னைக்குக் கடிதங்கள் எழுதிய ஓர் அலுவலர் (பக்கம் 79)

135. புதுபாதரி - ஜனீக் (Joenicke) போ.வ.ச.பக்.133)

136. பிரஹதீஸ்வரஸ்வாமி - தஞ்சைப் பெரிய கோயிலிலுள்ள பெருமான்

நிறுத்தாமல் இராஜாவின்[137] சர்காரானவர் (உத்யோகஸ்தர்) அடிதடி செய்து தள்ளிக்கொண்டு போய்விட்டார். இராஜாவும்[138] அதன்மேல் மிகக் கோபித்து, கொத்தனையும் அடித்து அனர்த்தம் ஆனது.

பாபண்ணா கோட்டைக்குள் வந்தார்.

மிஸ்தர் ராம் கூடலூருக்குப் பாதரி ராவ் வந்திருப்பதால் சென்றிருக்கிறார். பாதரி சாயேப் அரண்மனைக்கு வந்து யஜமானரைக் கண்டு போனார்.
4/5/1791 ரா. யஜமான[139]ருடைய செலவுக்கு இராஜாவின் இலாகாவிலில்லாமல் கும்பனியிலிருந்து கொடுப்பதென்று தீர்ந்திருக்கிறது.

பாதரி சாயேப் யஜமானரைக் காண வந்தார். சென்னையிலிருந்து கடிதம் வந்திருக்கிறது. ஆங்கிலேய மொழியினால் பாதரி எழுத ஆரம்பித்தார்.

மிஸ்தர் ராம் கோட்டைக்கு வந்து சேர்ந்தார்.

6.மாமா சாயேப் திருவிடமருதூருக்குப் போய்வந்தார்.

பாதரி சாயேப் இராஜாவிடஞ் சென்று, சென்னையின் சில கடிதங்களைப் படித்துக் காண்பித்து பின்பு நம்முடைய யஜமானரையும் பார்த்துப் போனார்.

5/6/1791 அப்புராவ் காட்கே அமரசிங்கு இராஜாவினிடம் கோட்டையிலிருக்கிறார். கல்யாணத்தின் வெத்திலை பாக்கும் கொடுக்கப்பட்டது.

அஷரப் ஷாவின் தோட்டத்திற்கு அப்பா [140]சென்றிருக்கிறார். பாதரியின் தோட்டத்திற்கும் போயிருக்கிறார்.

பாதரி சாயேப் இராஜாவைக் கண்டு நம்முடைய யஜமானரையும் காணவந்திருக்கிறார். சிவராயரும்[141] சென்னையிலிருந்து வந்திருக்கிறார்.

முத்தோஜி இங்களேவுக்கு மாப்பிள்ளையின் வீட்டிற்கு அழைப்பதற்குப் போனபொழுது கலகம் ஏறப்பட்டது.

17/6/1791 அமரசிங்கு கோட்டைக்கு வெளியே சென்று வந்திருக்கிறார்.

5/7/1791 பாதரி சாயேப் இராஜாவைப் பார்த்து விட்டு யஜமானரிடம் வந்திருக்கிறார்.

---

137. இராஜா என்றது அமர்சிங்கை

138. இராஜா என்றது சரபோஜியாதல் வேண்டும்

139. யஜமானர் - சரபோஜி

140. அப்பா என்றது தத்தாஜி அப்பாவை

141. சிவராயர் - அமர்சிங்கரின் அன்பை மிகப்பெற்றிருந்த பெரிய அலுவலர் (பக்கம் 28)

*1779*

*(1) யாதவஹாஸ்து[142] - கடன்காரர்கள் கொடுக்க வேண்டியவர்கள் பேர்வழி புலி[143] 197887. இதைத் தவிர கும்பனிக்கு சித்திரை மீ தவணைக்கு ஒரு லக்ஷம் விராகன்[144] கொடுக்க வேண்டிருக்கிறது.*

*(2) தாயீரமே கடன் கொடுக்கிறவர் பெயர் கூபர். அவர்களுக்கு கடன் வாங்குபவர் பெயர் திரியம்பக ஸம்பாஜி வக்கில் தஞ்சாவூர். அவர்களுக்கு[145] கடன் பத்திரமாவது-*

*நம்முடைய ஸர்காருடைய அவசியமான செலவுக்காக தங்களிடமிருந்து பெற்றுக் கொண்டது புலி வராகன் 3000. இந்த மூவாயிரம் விராகன் இதற்கு வட்டி 100க்கு 2 1/2வீதம் மாதமொன்றுக்கு என்று தீர்ந்திருக்கிறது. ஆனால் ஒன்றை மாதம் தவணைக்குள் வட்டி முதலை ஜாடாவாகச் செல்லு வைப்பேன். இதை என்னுடைய ராஜியினால் எழுதிக் கொடுத்த தஸ்தாவேஜி தேதி 8 உ ஆகஸ்டு 1778.*

*(கையெழுத்து)*

## மூட்டை எண்-57C

*9.1832*

*ம.ரா. சிவாஜி ராஜா[146] சாயேப் அவர்களின் உத்திரவு*

*மகால்-ஸங்கிராம பாண்டார் (யுத்தசாலை) திம்மதி[147] அய்யாக்கண்ணு பிள்ளையினிடம்-சிவகங்கை கோட்டை தோட்டத்தில் கிணறுகள் வெட்டுவதற்கும் கட்டுவதற்கும் சுவறுகள் போடுவதற்கும் கூட தளவாடம் வகை வாங்குவதற்கும் மெய்யாடுக்கும்[148] கொடுத்தது 100 சக்ரம்.*

*1.1831*

*கிருஷ்ண விலாஸம்[149] குளத்திற்கு மேலண்டை மண்டபம் கட்டுகிற மராமத்து வேலைக்கு தளவாடம் வகையறா கரீதி செய்ய 300 சக்ரம்*

---

142. யாதஹாஸ்து - யாதாஸ்து - நினைவுக்குறிப்பு

143. புலி - புலிவராகன் (இது இரண்டாம் துளஜாவின் கடன்)

144. 1776 ஆம் ஆண்டு ஒப்பந்தப்படி இரண்டாம் துளஜா பின்வருமாறு செலுத்த வேண்டும்:- நவம்பர் 20,000; டிசம்பர் 40,000; ஜனவரி 40,000; பிப்பிரவரி 1,00,000; மார்ச்சு 1,00,000; ஏப்ரல் 1,00,000 (பக்கம் 50)

145. அவர்களுக்கு என்பது "அவர்கள் எழுதிக்கொடுத்த" என்றிருக்க வேண்டும்.

146. இரண்டாம் சிவாஜி

147. யுத்தசாலையிலுள்ள பெரிய அலுவலரும் திம்மதி எனப்பெற்றார்

148. மெய்யாடு - வேலையாட்களை மேற்பார்வை செய்யும் அலுவல்

149. கிருஷ்ணவிலாஸ் - அரண்மனையின் முதல்கட்டு

**2.1846**

(1) தயிர்க்காரி கண்ணம்மாள் என்பவள் ஸர்காருக்கு மாடுகளைக் கொண்டு வந்து பால் கரக்கிற வழக்கம். அதன்படி சந்த் 7 ஜில்காத் பால் கரந்து கொடுப்பதற்கு மாடுகளை கொண்டு வருவதுடன் ஒரு செம்பில் எருமைப் பாலைப் போட்டு கூலிகாரனிடம் அனுப்பினது ருஜுவாகி விட்டதினால் ஷெ யாளிடமிருந்து அபராதம் 2 ரூபாய் வாங்கினதற்கு ரசீது.

**2.1846**

(2) ஆவுசாயேப் தோட்டம் வகையறாவில்:- ஸ்ரீமத் வீரஸிம்மேந்திர சிரேயஸிக்குச் சேர்ந்த விஜய ஸைதம்பா சிரேஸியின் ஆரோக்கிய சாலா[150] விலுள்ள காவல்காரர் அஸாமிகள் 7க்கு சந்த் 30 ஜில்ஹேஜ் வருஷா வருஷம் போல் பங்கின் உத்திரவுப்படி துகை வாங்கிக் கொடுக்கிறது.

**3.1846** மகால் போதே

**சில்லறை** நாணயம்-பாக்கி

மிலிப் பணம்[151], போரைப் பணம்[152], தளபாளி, செல்லாத நாணயம், புதுச்சேரிப்பணம், பெரியது, சிறியது, தரங்கம்பாடி மட்ட வெள்ளிப் பணம், வடயார்பாலி[153] பணம், கட்டிராயீ பணம், திருவையாற்று பொன் பணம், அரியலூர் கட்டிப்பணம்

**3(1)** நாணயங்கள்

கூலிப்பணம், சென்னப்பட்டணம் வெள்ளிப்பணம், சக்ரீ பணம் கால் 8க்கு, மரவஞ்சுளி பணம்

தளவாடி 1 டாலர்

இரண்டாவது விதம் நாணயம்

5 புதுச்சேரி காசி, 30 நாகப்பட்டணம் செல்லி,[154] 7 சென்னப்பட்டணம் துட்டு,[155] 49 ஆற்காடு துட்டு, 103 தரங்கம்பாடி காசி, 4 நந்தி காசி[156], 62 காசி துட்டு, 11 பாபி துட்டு, 140 பைஸா,[157] 30 பெரியது, 130 சிறியது, செல்லாத பழைய முத்திரை தெரியாதது, சின்னதுபெரியது வகையறா.

---

150. ஆரோக்கியசாலை - மருத்துவசாலை (பக்கம் 288,289)

151. மைலிப்பணம் - இது ஒரு செப்பு நாணயம் போலும்

152. போரைப்பணம் - பெரிய பணம் ஆகலாம்; 2 1/2 பணம் கொண்டது சென்னைப்பட்டணம் வெள்ளிப்பணம்; இதனைப் பெரியபணம் என்றும் கூறுவர் (பக்கம் 150,151)

153. வடயார்பாலி - உடையார் பாளையம்

154. செல்லி - சல்லி (மிகச்சிறிய நாணயம்)

155. துட்டு - ரூபா 1க்கு 48 துட்டு என்பது வழக்கு (பக்.354)

156. நந்திகாசு - இதில் பல வகைகள் உண்டு எனத் தெரிகிறது (பக்கம் 162) ஒரு பக்கம் நந்தி வாகனம் பொருந்தியன; ஒரு பக்கம் நந்திபடுத்த நிலையில் உள்ளவை; நந்தி வாகனத்தின்மேல் இலிங்கம் அமைந்தமை; ஒருபுறம் நந்தி பிறிதொரு புறம் திரிசூலம் (பக்கம் 184, Coins of India - Sir Walter Elliot)

157. பைசா - 192 பைசா ஒரு ரூபா (பக்கம் 154)

*3.1846*

*(2) அலாதி மஹால்*

முனிஸிபாலிடியார்[158] சாடேவளீதெரு[159] (மார்க்கட்டுக்குப் போகிற ரஸ்தாவுக்கு மேல்புறம்) விலிருந்து ஸ்ரீபிரசன்ன வெங்கடேச ஸ்வாமி[160] கோவிலுக்குப் போகிற ரஸ்தாவின் வடக்குக் கோடியில் மோரிக்கு[161] அடுத்தாற்போல் நட்டிருக்கிற வெள்ளைக்கல் அந்த மார்க்கமாய் போகிற வண்டிக்காரன் மருதை என்பவர் ஷை கல்லின் மேல் வண்டியை மோதி கல்லு உடைந்ததால் அவனிடமிருந்து கல்லின் கிரயம் ரூ. 1 வசூல் செய்யப்பட்டது.

*4.1832*

பாகவத் மேளம்[162] குருவய்யா, ஆதிநாராணப்பய்யா -

வேஷம் போட்டுக் கொள்ளுகிற கோபாலபாயி ராஜா என்பவர் வேஷம் போட்டுக்கொண்டு ஸேவகஞ் செய்யாததினால் அபராதம் சக்ரம் 12 விதிக்கப்பட்டது.

*5.2660*

ஸ்ரீசிவ சுகிறாபாயி விருத்தி க்ருதக்ஞ வரிஷ்ட்ட ஜன பதக்கம்-நாரீ சாமஜி-வருஷத்துக்கு வேலை பார்க்கும் ஜனங்களுக்கு சக்ரம்-

*6.1832*

(1) ரா. மகாராஜ் சிவாஜி ராஜா சாயேப் அவர்களுக்கு பட்டாபிஷேகமானதற்காக தரங்கம்பாடி கவர்னர் அவர்களுடைய ஹேஜீப் (வக்கீல்) ஆசீர்வாதக் கடிதம் வாங்கிக் கொண்டு காண்பதற்கு வந்ததினால் கூடவந்த ஆஸாமி 4க்கு இனாம் கும்பனி ரூ. 24 கொடுக்கப்பட்டது.

*(2) 1832*

ஹுஜூர் பட்லர் வெங்கடசாமி நாயிக் மூலமாக உருளைக்கிழங்கை கரீதி செய்ய கும்பனி ரூ. 5 கொடுக்கப்பட்டது.

*(3) 1832*

ரா. யஸவந்த பாயி, திருவையாருக்குத் தென்னண்டை காவேரிக்கு மண்டபம், படித்துறை கட்டி, எப்பொழுதும் அன்னதானஞ் செய்ய ஒரு மாதத்திற்கு 22 1/2 சக்கரம் பெற்றுக் கொள்ளப்பட்டது..

*8.1832*

(1) போதே மஹாலில் வேலை பார்க்கும் புதுச்சேரியின் சித்திரக்காரன் கிருஷ்ணா என்பவன் சென்னப்பட்டணம் போகுவதால் சிலவுக்கு இனாம் ரூ. 40 கொடுக்கப்பட்டது.

---

158. முனிஸிபாலிடி - நகரசுத்திமகால்

159. சாடேவளி தெரு - அய்யன்கடை வீதி (?)

160. பிரசன்ன வெங்கடேசுவரர் (213இல் 13)
அய்யன்கடை வீதி நடுப்பகுதியிலிருந்து சென்றால் இக்கோயில் உயர்ந்த மேடையிலிருப்பதை அறியலாகும்

161. மோரி - கழிவுநீர் வடிகால்

162. பாகவதமேளா - இசைநாடகக்குழு (230-31)

*(2) 1832*

சர்காரில் வீடுகள் கிரயத்திற்கு வாங்கிக் கொடுத்த பாபத்து 37.50-சித்திரக்காரன் இராமபத்திர நாயக்கரின் பிள்ளை விரராகு நாயக்கரின் காலி இடம்

41.72 பஞ்சாங்கக்காரர் வெங்கடய்யாவின் பிள்ளை வெங்கடராமய்யாவின் கட்டுக்கோப்பு[163]

179.19 கண்வைத்தியம் அப்புசாஸ்திரியின் பிள்ளை சாமி சாஸ்திரியின் கட்டுக்கோப்பு

49.27 [164] ஹுஸேன் ஜமேதாரின் பிள்ளை ஹஸந்தா ஜமேதார் இருவர்களுடைய காலி இடம் கட்டுக்கோப்பு 670-4-6[165]

*(3) 1832 ஜுலை 16*

நியாய ஸபை[166] நியாயாதிபதி ஹரிசக்ரபாணி-ஸர்காரில் கிரயத்துக்கு வாங்கின பாபத்து-

கீழராஜ வீதியில் மேலண்டை சரகில் திட்டியின்[167] வாசலுக்குத் தெற்கண்டை ஸேதுபாவா ஸ்வாமி[168] நகார்கானா[169] சாவடிக்கு வடவண்டை இருக்கும் வீடு.

*1832*

மகால்-மராமத்து இலாகா[170] தஞ்சாவூர் கோட்டை பழைய சிவகங்கை வைக்கோல் வாங்கின விவகாரமும் தாஸ்தான் மகால்[171] குளத்தின் நீர் இரைப்பதற்கு சக்ரம் 86.

*8-1836*

*(5)* உமார்கான் மீராகான் ஸங்கீத வித்யாதிபர் ஷெ மத்யஸ்தர்[172] வராஹப்பய்யா அவர்கள் சங்கீதம் அப்யாஸம் செய்வதற்குத்[173] தகராறு செய்ததால் ஷெ யாரிடமிருந்து அபராதம் ரூ. 1 பணம் 5 1/2 துட்டு[174] 1 வசூல் செய்யப்பட்டது.

---

163. கட்டுக்கோப்பு - கட்டப்பட்ட வீடு; மேற்கூரை

164. 49-27 என்றால் நாணயவகை விளக்கமாகத் தெரியவில்லை

165. இது ரூபா அணா பையாகக் கொடுக்கப்பட்டுள்ளது எனலாம் எனினும் இதனால் மற்றவை பற்றி நன்கு தெரிய வாய்ப்பில்லை

166. நியாய சபை - கி.பி.1800 இலிருந்து தஞ்சையில் நடைபெற்ற வழக்குமன்றங்கள் நான்கனுள் ஒன்று (பக்கம் 167)

167. திட்டிவாசல் பெரிய கதவுகள் சாத்தப்படும்போது உட்செல்வதற்கு அமைக்கப்படும் சிறிய நுழைவாயில்

168. சேதுபாவா சுவாமி - சமர்த்த ராமதாஸருடைய மாணாக்கருள் ஒருவர்; இவருடைய மடம் தஞ்சையிலிருந்தது (பக்.439)

169. நகார்கானா - டமாரம் போன்ற ஒலிக்கும் கருவிகள் வைக்கப்பட்டிருக்கும் இடம் (பக்.454)

170. மகால் மராமத்து இலாகா - இமாரதி மகால் (பக்.458)

171. தாஸ்தான் மகால் - நெற்களஞ்சியம் (பக்.453)

172. மத்யஸ்தர் - அலுவலர் (பக்.82)

173. அப்யாஸம் செய்தல் - பழகுதல்; கற்றல்

174. ரூபா 1க்கு 48 துட்டு (பக்கம் 154)

*(6) 1836*

இந்திர ஸபையில்[175] ரா. கிருஷ்ணாஜிகேசவ ஹுஜூரில்[176] வேலை பார்க்கிறவரிடம் கொல்லர் ராமசாமி நாயிகர் கும்பனி ரூ. 354-8-0 கொடுத்தார்.

*(7) 1836*

ஹுஜூரில் பட்டுவேலை செய்கிற பரிமணத்திற்கு சத்திரத்தில் ஒருமாதத்திற்கு ரூ. 2-4-0 ருக்கே[177] 8.

*12. 1836*

(1) மகால் மராமத்து[178] சாலுவ நாயிக்கன் பட்டணம் கண்டூரிலுள்ள இரண்டுபண்ணைகளை சா. நா. பட்டணத்திற்கு ஆற்றின் வழியாக ஏற்றிக்கொண்டு சேர்ப்பிப்பதற்கு ஸாரங்கதண்டல் இவனுடைய சொல்படி பரிசலை வகையறாவுக்கும் ஸாரங்கதண்டல் படகோட்டி பரிசல்[179] தயாரிக்க.

தச்சன் வகையறா அஸாமிகள் 17க்கு படிச்சிலவும் ஷெ பரிசல் மேடையில் ஏறினால் தள்ளுவதற்கு ஜாஸ்தி கூலி ஆட்களையும், தண்ணீர் நிரப்புவதற்கு பீப்பாய்களும், கரீதிசெய்யவும்,[180] எல்லாவற்றிற்கும் வராகன் 100க்கு கும்பனி ரூ. 350.

*13. 1832*

(1) ஹுஜூர்சமையலுக்கு-அல்லாபண்டிகை பத்தாம் நாள்சமயத்திற்கு பால் கொண்டு வந்து கொடுக்காமல் காலதாமதஞ் செய்ததினால் அவனுக்கு அபராதம் ஆறு தேங்காய்க்கு 6 துட்டு.

*(2) 1832*

ஜயபேரி என்கிற வாத்யத்தை ரிபேர் செய்ய ஐந்து சக்கரம் சிலவு

*3. 1832*

மகா.ஸ்ரீ.ஸ்ரீ.சரபோஜி ராஜாவின் உத்திரவு:-

தரும ஸபையினர்-சூரிய நாராயண சாஸ்திரி குறிப்பிட்ட நேரத்தில் வராததால் அவரிடம் ஒரு நாளைக்கு ஒரு தேங்காயின் கிரயம் வசூலிக்க வேண்டியிருப்பதால் உத்திரவின்படி சிலவு மஹாவில் வரவு வைக்கிறேனென்கிறார்கள்.

மேல் சொன்னவரிடம் காலையில் சர்காரில் வேலைக்கு ஹாஜராகிக் காத்திருந்து, பின்பு வீட்டுக்குச் சென்று ஸ்நானம் பூஜை சாப்பாடு முடித்துக்கொண்டு வருவதற்கு அதிக நேரம் ஆகிறது. இவ்விஷயம் சர்காரிலே.

---

175. இந்திர ஸபை - சதர்மாடிக்கு உரிய பெயர் (Page 21, Deposition of Yogambal)

176. ஹுஜூர் என்றது அரசனை அதாவது இரண்டாம் சிவாஜியை

177. ருக்கே என்றது ஓர் அணாவின் 12இல் 1 பங்கு (பக்.157)

178. மகால் மராமத்து - இமாரதி மகால் (பக்.458)

179. பரிசல் - சிறிய ஓடம்; தெப்பம்

180. கரீதி செய்ய - விலைக்கு வாங்க

தெரிந்திருப்பதால் அவன் இல்லாமலிருப்பதால் இன்றுவரையில் போதே மகால்காரர்கள் வரவு வைக்க வேண்டியிருக்கிற தேங்காய் பாபத்து துகை வரவு வைக்காமல் முழுசம்பளத்தைக் கொடுக்கிறது. அல்லாமல் இனிமேலும் மார்முலே அங்கில்லாமலிருப்பதால் மேல் சொன்ன வரவும் அவசியமில்லை. முழுச்சம்பளம் கொடுக்கிறது.

*(4) 1832*

*ரா. சிவாஜி ராஜே சாயேப் உத்திரவு*

*முகாம்-முக்தம்மாபுரம் சத்திரம்-*

ஷெ இடத்திலுள்ள (இங்கிலீஷ்) ஆங்கிலேய வாத்தியார் பைஸனர் அவர்களுக்கு இனாம் ரூ. 10.

மகால் ஆயுதசாலை—விஸ்வனாத் கோனேரி என்பவர் ஹுஜூர் பார்வையிடும் பொழுது, மூங்கில் சதுரத்தட்டு கொணர்ந்து கொடுக்காததால் அவனுக்கு அபராதம் பணம் 5.

*14. 1836*

(1) ம.ரா. சிவாஜி ராஜா. சாயேப் உத்திரவு முக்தம்மாபுரம் சத்திர[181] தருமத்தின் துகையை ஸர்காரில் கடன் வாங்கின வகையில் வட்டி ஒருமாதத்திற்கு சக்ரம் 600 கொடுக்கப்பட்டது.

*14 1832*

(2)ஹுஜூருக்கு உயிருள்ள பிராணிகளை பிடித்துக் கொண்டு வந்து கொடுக்கிறவருக்கு 4க்கு 9-6 பணம்.

*(3) 1832*

ஸங்கிராம பாண்டாரம்[182]

அய்யாக்கண்ணு பிள்ளை வசம் ஹுஜூர் கிருஷ்ண விலாஸ குளத்திற்கு மேற்கே கிணற்றுக்குச் சமீபத்தில் மண்டபம் கட்டுவதற்கு செங்கல், சுண்ணாம்பு மரம் வகையறா தளவாடத்திற்கும் கூலிக்கும் 300 சக்ரம் கொடுப்பது.

*(4) 1832*

ஸங்கிராம பாண்டாரம்:- அய்யாக்கண்ணுப்பிள்ளை என்பவரிடம் ஈஸ்வர மூர்த்தி குளத்திற்கு வடக்கே புதிய பங்களா தயாராகிருக்கிற மண்சுவர் மழையினால் விழுந்துபோனது. ஷெ சுவறுகள் செங்கலினால் கட்ட செங்கல், சுண்ணாம்பு வகையறா தளவாடங்களுக்கும் கூலிக்கும் சக்ரம் 300 கொடுப்பது.

*(5) 1832*

ஆயுதசாலை[183] ஹுஜூர்

---

181. முக்தாம்பாள்புரம் சத்திரம் (பக்.273)

182. ஸங்கிராமபண்டாரம் - தோப் கானா ஆகலாம்

183. ஆயுதசாலை - ஜிராத்கானா (பக்.455)

காட்டுப்பன்னி வேட்டைக்காகப் பன்றி 13க்கு வேட்டைக்காரனுக்கு இனாம் கொடுத்தது வழக்கப்படி சக்-28.

15.1846

(1) ஸர்காரில் வேலை பார்க்கும் ஸேநா துரந்தர் ரா. ராமய்யா வராகப்பய்யா அவர்கள்-

ஹிந்துஸ்தானி, கர்நாடகம், ஆங்கிலேய பாட்டும் நாலு வாத்தியங்களுக்கு குறையாமல் கற்றுக்கொண்டு தயாராக இருக்கவேணுமென்று உத்திரவாகியிருந்தும் ஷியார் பரிக்ஷைக்குத் தயாராக இல்லாமல் இருந்தினால் அந்தக் குற்றத்திற்கு அவர்களுக்கு அபராதம் ரூ. 120 விதிக்கப்பட்டது.

(2) 1846

சர்பத் கானா[184] கொட்டியத்தில் உப்பு கணக்குப் பார்க்கும்பொழுது கணக்குப்பிள்ளையிடம் ஷி கொட்டியம் சிப்பந்தி தகராறு செய்ததினால் அபராதம் ரூ. 1 விதிக்கப்பட்டது.

## மூட்டை எண்-58C

17.1807

(1) மகாராஜா[185] சபையில் பார்சீ எழுதுகிறவர்களுக்கு 1000 வரிகளுக்கு 1 சக்ரம் வீதம் 3 பேருக்கு 6 சக்ரம்.

21.1807

ஹுஜூர்[186] மன்னார்குடியிலிருந்து மிஸ்தர் ஜேஜர் வெள்ளைக்காரனிடத்திலுள்ள வாத்தியம் வாசிக்கிறவன் ஆங்கிலேய வாத்தியம் வாசித்ததற்கு இனாம் ரூ. 100

22.1779

ரா. சிம்மராஜ நரஹரி பண்டிதர் அவர்கள் நாரஸிங்கன் பேட்டையில் ஸர்வமானியம்[187] அக்கிரஹாரம்[188] கட்டுவதற்கு உத்திரவுப்படி மரம், தளவாடம், சாமான் கரீதி செய்வதற்கு -1170-8-0

## மூட்டை எண்-59 C

1.1828

(1) சரஸ்வதி மஹாலில் அனுபவமுள்ள கிருஷ்ணாசாரி அவர்களுக்கு ரூ. 3 வீதம் சம்பளம் கொடுப்பது.

---

184. சர்பத்கானா - குளிர்பானம் தயாரிக்குமிடம் (சென் - சிவச்சத்திரபதி பக். 133இல் Medicines என்பர்)

185. மகாராஜா என்றது இரண்டாம் சரபோஜியை

186. ஹுஜூர் என்றது இரண்டாம் சரபோஜியை

187. ஸர்வமானியம் ஆவது யாதொரு வரி கொடுக்காமல் அனுபவிக்கும் நிலம்.

188. அக்கிரகாரம் - அந்தணர் குடியிருப்பு.

*(2) 1827*

ஸ்ரீ பெரிய கோவிலிலுள்ள நந்திக்கு அபிஷேகஞ் செய்வதால் பூஜை நிவேனத்திற்கு நாளை ஒன்றுக்கு 3 1/2 சக்ரம் வீதம் கொடுப்பது.

*(3) 1828*

தரங்கம்பாடி பந்தர் பாபத்து-பந்தரில் பீரங்கி சென்னப்பட்டணம் 2 வெள்ளிப் பணத்திற்கு[189]

தோபா[190] என்னும் துகை 20 00 கூடுதல் 5 00 மொத்தம் = 25 00

*(4) 1828*

சிவகங்கை குளத்தில் குடங்களை அலம்பினதால் இரண்டு பெண்களிடமிருந்து அபராதம் 4 1/2 சக்ரம் வாங்கப்பட்டது.

*(5) 1828*

காசீ க்ஷேத்திரத்தில் தர்ம விசாரணை செய்கிற செடையப்ப தம்பிரான் ரா. நாரோ விஸ்வனாத டபீர்[191] அவர்கள் - இராமேஸ்வரம் தருமத்திற்காக[192] தங்களிடம் வைத்திருந்த (டிபாஸிட்) துகையும் அதன் வட்டி எல்லாவற்றையும் ஸர்காரில் டிபாசிட்டில் வைத்திருப்பது பாபத்து ரூ.3500

*(6) 1828*

கடன்வரவு - கலியாண மகால் சேர்ந்த - சௌ. லாடுபாயி அம்மாளும் சௌ. பாயம்மாபாயி அம்மாளும் இவர்களிடமிருந்து ரூ.10,000

*2.1826*

*(1)* வேதசாலையில் பிராமண போஜனத்திற்குச் சிலவு ரூ.34-11-0

*(2) 1826*

குதிரை வைத்தியம் காசீம்கான் பீராகான் இவருக்கு லாயத்திலிருந்து ஸர்காரில் 3 சக்ரம் கொடுக்கப்பட்டது.

---

189. சென்னப்பட்டணம் வெள்ளிப்பணம் - 2 1/2 பணம் கொண்டது (பக்.150)

190. தரங்கம்பாடி தோபா - தோபா என்பது கப்பம் என்று பொருள்படும். தரங்கம்பாடியில் டேனிஷ்காரர்கள் தஞ்சை மராட்டிய மன்னர்க்கு உரிய சிறு நிலப்பகுதியைப் பல ஆண்டுகளாக அனுபவித்துக் கொண்டு ஆண்டொன்றுக்கு 2000 சக்கரம் கொடுத்து வந்தனர். இரண்டாம் சரபோஜி 25-10-1799இல் செய்து கொண்ட ஒப்பந்தப்படி அரசாங்க வசூலை ஆங்கிலேயருக்கு ஒப்படைத்தபொழுது அந்த ஒப்பந்தத்தின் 14ஆவது ஷரத்தின்படி மேற்கண்ட தொகையைத் தொடர்ந்து பெறும் உரிமையுடையவராய் ஆண்டுதோறும் பெற்றுக்கொண்டு வந்தனர் என்று தெரிகிறது-(பக்கம் 146)

191. நாரோ விஸ்வநாத டபீர் - இவர் டபீர் நாரோ பண்டிதரின் பெயரர் ஆவர். (டபீர் என்ற சொற்குச் செயலர் என்பது பொருள் டபீர் பண்டிதர் (பக்கம் 77)

192. இராமேசுவரதர்மம் - குமரகுருபரத்தம்பிரான் என்பவரிடம் நாரோ பந்த் டபீர் 2000 மதுரைச் சக்கரம் கொடுத்தார். இதன் வட்டி வருமானத்தினின்று ராமேசுவரத்தில் வேதாத்தியயனம் தண்ணீர்பந்தல், நந்தவனம் நடத்த ஏற்றுக் கொண்டார். குமரகுருபரத் தம்பிரானுக்குப் பிறகு வந்தவர்கள் கி.பி.1828 வரை நடத்தினர். கி.பி.1828இல் காசிமடத்து அதிபராக இருந்தவர் ஸ்ரீகாசிவாசி சடையப்ப சுவாமிகள் ஆவர். இவர்கள் இத்தொகையை கையகத்திலிருந்த சிறிது வட்டித் தொகையுடன் சேர்த்து ரூ.3500/- ஸர்க்காரிடம் கொடுத்து விட்டதாக இவ்வாவணம் கூறுகிறது (பக்.424)

*15.1827*

*(1) பாஷ்யம் குப்பா சாஸ்திரியின் பிள்ளை கிருஷ்ண சாஸ்திரிக்கு மாதமொன்றுக்கு ரூ.10 வீதம் ஸரஸ்வதி மஹாலில் கொடுக்கப்பட்டது.*

*(2) 1827*

மஹால் அன்னசத்திரம் இராஜஸாம்பாபுரத்தி[193]லிருந்து ஸரஸ்வதி மஹாலுக்கு 501 எழுத்தாணிகள் கொடுக்கப்பட்டன.

*(3) 1827*

மஹால் - மராமத்து - பழைய சிவகங்கைகோட்டை தஞ்சாவூர் - பழைய சிவகங்கையின் வேலைக்காக தளவாடம் வகையறா வாங்குவதற்கு சக்ரம் 2811 -3 1/4

*15.1828*

*(4) கோட்டையின் தெருவுகளைச் செப்பணிட 1053-4-6*

*(5) 1828*

வஜாரத்மாப் - ராணோஜி மஹாலோஜி காட்கே - அவர்கள் தேசத்திற்குப் போய் திரும்பி வரும்பொழுது வேட்டை நாய்களையும், ஜோதிடம் புத்தகங்களையும் வாங்கி வர கொடுத்தது ரூ.200

*16.1826*

*(1) ஸரஸ்வதி மஹாலில் 530 துட்டு கொடுக்கப்பட்டது.*

*(1) 1826 நாகப்பட்டணத்தில் ஸ்ரீநீலாயதாக்ஷி[194]யம்மனுக்கு கும்பாபிஷேகத்திற்காக ரூ.100 கொடுக்கப்பட்டது.*

*(2) 1826*

ஸ்ரீஜகன்னாத க்ஷேத்திரத்தில்[195] ஸ்ரீஜகன்னாத ஸ்வாமிக்கு தினப்படி நிரந்தரமும் நிவேதனம் வகையறாவுக்கு ரூ.800

*(3) 1826*

தமிழ்ப் பள்ளிக்கூடத்திற்கு 644

*(4) 1826*

அப்பிரக பஸ்பம் செய்வதற்கு நாகப்பட்டினம் 5 ஜெல்விகள்[196] கொடுக்கப்பட்டன.

---

193. இராஜஸாம்பாபுரம் என்பது தாராசுரம். ராஜஸாம்பாள் என்பவர் இரண்டாம் துளஜாவின் முதன் மனைவியாவர் (பக்.273) 160சி-1-5இல் விலை சக்.43 - 8!3/8 என்றுள்ளது.

194. நீலாயதாக்ஷி- நாகப்பட்டினம் சிவன்கோவிலில் எழுந்தருளியுள்ள அம்பிகையின்பெயர் (160சி-3-1)

195. ஜகந்நாத க்ஷேத்திரம் - பூரிஜகந்நாத் என்ற தலம் (பக்.117-118) (160சி-3-3)

196. ஜெல்லி - சிறிய நாணயம்

*(5) 1826*

பெரியகோவில் ஸ்வாமிக்கு ம கா.ஸ்ரீ:ஸ்ரீ.திவான் சாகேப் அவர்கள் 16 மஹா தானங்களில்[197] சேர்ந்த ஹிரண்ய விருஷப தானம் செய்வதால் அன்றைக்கு விருஷப வாஹனத்தின் மேல் சுவாமி புறப்பட்டு நாலு வீதிகளிலும் போய்வர அபிஷேகம் பூஜை நிவேதனம் வகையறாவுக்கு யானைதானம் செய்தபோது கொடுத்த வழக்கப்படி ரூ.200 கொடுத்தார்கள்.

*16.1826*

(6) வடக்கு வீதியில் புதிய சிவாலயம்[198] கட்டுவதற்கு முகூர்த்தஞ் செய்வதற்கு தக்ஷிணை 2அணா.

*(7) 1826*

ஸமுத்திரத்தின் பக்கத்தில் கரைகட்ட சக்ரம் 247-6 பணம்.

*(8) 1826*

ம கா.ஸ்ரீ ஸ்ரீ. திவான் சாயேப்[199] அவர்கள் நகரத்தை (பிரதக்ஷிணம்) வலம் சுற்றி வரபோகும் பொழுது கிருஷ்ண தீக்ஷிதருடைய[200] வீட்டிற்குச்சென்றபொழுது, ஆரதி எடுத்ததற்காகப் போட்ட ரூ.100

*(9) 1826*

இங்கிருக்கும் சிந்தாமணி பட்டு தாத்யா பாதர் அவர்களுக்குச் சேர வேண்டியதற்காக ஸ்ரீகாசியிலிருக்கும் கோவிந்த மகாதேவ் அவர்கள் காசியில் அய்யாரப்ப தம்பிரானிடம்[201] காசீ முத்திரை ரூ.150ஐ கொடுத்தார்.

*(10) 1826*

க்யாப்டன் ஜான்பைப் ரெஸிடெண்டு சாயேப் அவர்கள் ஸேதுபாவா சத்திரத்திற்குப் போனபொழுது, சிப்பந்திகளுக்கு ஆஸாமி ஒன்றுக்கு சக்ரம் 2-8 பணம் வீதம்

1826 - கோட்டையிலிருந்து திருச்சினாப் பள்ளி வரையில் தபால் போக்குவரத்துக்கு ஆஸாமி 1க்கு சக்ரம் 2-8 பணம்.

1826 கொள்ளிடத்தில் வல்லத்தாதொரையில் பரிசலை விடுகிற ஆஸாமிக்கு 30.

*(11) 1826*

மஹாதேவபூர் மஹந்தும் ராம்கிரி மஹந்தும் ஸ்ரீரங்கப்பட்டணத்திற்குப் போனார்கள். சிப்பந்திகளுக்கு 13 1/2 கொடுக்கப்பட்டது.

---

197. மஹாதானங்கள் 16 - நிலம், இருக்கை, தண்ணீர், ஆடை, விளக்கு, உணவு, தாம்பூலம், குடை, சந்தனம், ஜபமாலை, பழம், செருப்பு, படுக்கை, பசு, தங்கம், வெள்ளி (பக்.195)

198. புதியசிவாலயம் - ரத்னகிரீசுவரர் (213 இல் 16)

199. திவான் சாகேப் என்றது இரண்டாம் சரபோஜியை

200. கிருஷ்ணதீக்ஷிதர் - இவர் 1827 இல் பசுபந்தம் என்ற யாகம் செய்தவர் என்று தெரிகிறது (பக்கம் 373)

201. அய்யாறப்பத்தம்பிரான் - திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து அதிபராயிருந்த ஸ்ரீலஸ்ரீகாசிவாசி சடையப்ப சுவாமிகள்II காசியில் இத்தம்பிரானை இருக்குமாறு நியமித்தார். இந்நியமனம் இரண்டாம் சரபோஜி காசி யாத்திரைக்குச் சென்றபோது நடந்தது (912சி-37-12) (பக்கம் 426) இத்தம்பிரான் ஏறத்தாழ 1852 வரை காசியில் இருந்தவர் ஆவர்.

*(12) 1826*

ஸரஸ்வதி மகாவில் - புத்தகம் எழுதுகிறவர்களுக்கு -பாளோபந்து (மஹாராஷ்ட்ரம்) புத்தகம் - ஆயிரத்திற்கு ஒன்று வீதம் சாமாசாரியார் குமாரன் ஸ்ரீநிவாஸாசாரியாருக்கு கிரந்தம் 1962க்கு 1 1/2-4 1/2

மொஸலி ரங்கநாதாச்சாரிக்கு -1-3

அனந்தாசாரிக்கு ஓலை கிரந்தம் 4066க்கு ஆயிரத்திற்கு 4 வீதம் 1-5

மொத்தம் 4 1/2-3 1/2

*(13) 1826*

ஜாமதார் கானா[202] வில் - விடோபாவின் மூர்த்தியை[203] எழுதிக்கொடுத்த சித்திரக்காரனுக்கு ரூ.10.

*(14) 1826*

வேதசாலையில் - வேதத்தின் புத்தகத்தை கூலிக்கு எழுதிகிற ஆஸாமிகளுக்கு 1000 கிரந்தத்துக்கு 1 1/2 வீதம் 5 ஆஸாமிகளுக்கு -18.

*(15) 1826*

பாஷ்யம் குப்பா சாஸ்திரியின் பிள்ளை கிருஷ்ண சாஸ்திரியின் மூலமாக பஞ்சநத சாஸ்திரிகள் யஜுர்வேதம் பாஷ்யம் கிரந்தலிபியில்[204] 1000 கிரந்தம் எழுதினதற்கு ரூ.3 கொடுக்கப்பட்டது.

*(16) 1826*

அத்தர் காதர் பாபு- நாகப்பட்டிணத்திற்கு ஜவ்வாது பூனையைக் கரீதி செய்யப் போவதற்காக படிச்சிலவுக்கு 3 கொடுக்கப்பட்டது.

*(17) 1826*

வல்லத்திற்குக் குதிரைகளை வாங்கிக் கொண்டு வரப் போனவர்களுக்குப் படிச் சிலவுக்கு -3

*16 (18) 1826*

சாலுவநாயக்கன் பட்டணத்திலுள்ள பெரிய கப்பலுக்கு பாய்மரம் கரீதி செய்ய நாகூருக்குத் துகையை எடுத்துக்கொண்டு போகுவதால் கூட செல்லுகிறவர்களுக்குப் படிசிலவு 3 நாளைக்கு 6 1/2-4 3/16

*(19) 1826*

ஹமித்கான் - சாலுவ நாயிக்கன் பட்டணத்தில் பங்களாவின் வேலைக்காகச் செல்லுவதால் படிச்சிலவு 3 நாளைக்கு-1

*(20) 1826*

சாலுவநாயக்கன் பட்டணத்திற்கு (சாயீசேநாட்) கொண்டுவர ஆசாமிகளுக்குப் படிச்சிலவு 2.

---

202. ஜாம்தார்கானா - அரசகுடும்பத்துக்குரிய ஆடைகளும் நகைகளும் வைக்கப்பட்ட இடம் (பக்கம் 453)

203. விடோபாவின்மூர்த்தி- சரபோஜி கீழவீதியில் விடோபா கோயில் அமைத்தமையால் விட்டோபாவின் உருவத்தை ஆடையிலும் வரையச் செய்தார் போலும்

204. கிரந்தலிபி - தமிழ்நாட்டில் சமஸ்கிருதத்தை எழுதுவதற்கு ஏற்படுத்தப்பட்ட எழுத்து முறை

*(21) 1826*

அப்பு மூப்பாவிடம் - தண்டவாளத்தின் பீரங்கியைக் கபிஸ்தலத்துக்குக் கொண்டு போய் சேர்ப்பித்த ஆஸாமிகளுக்கு - 3.

*(22) 1826*

சாலுவ நாயக்கன் பட்டணம் - பெரிய கப்பலுக்கு பாய்மரம் வகையறா கரீதி செய்ய பரங்கிப் பேட்டைக்குப் போகிற ஆஸாமிகளுக்குப் படிச்சிலவு 38 ( 3 பேர்களுக்கு)

*(23) 1826*

கொல்லத்திற்கு யானையைக் கரீதி செய்யப் போன யானைப்பாகன் சிப்பந்தி கணக்குப்பிள்ளை, அண்ணாஜி திருமல் வகையறாவுக்கு படிச்சிலவு கொடுப்பதற்காக சிரஸ்தேதார் வெங்கட்ராவ் அவர்களிடமிருந்து 2 நோட்டுகளை கரீதி செய்து கொடுத்தது ரூ.105.

*(24) 1826*

குடிக்காடுக்கு மான்வேட்டைக்காக சென்று, மான்தோலை ஸர்காருக்குக் கொண்டு வந்து கொடுத்ததற்காக 7 பணம்.

*(25) 1826*

ம கா.ஸ்ரீ.ஸ்ரீ.திவான் சாயேப் அவர்களுக்கு - சென்னப்பட்டணத்தின் கனம் பொருந்திய ஸர் தாமஸ் மன்ரோவுக்கு[205] ப்யாரனெட்[206] கவர்னர் சாயேப் அவர்கள் கூடவந்த ஆட்களுக்கு குதிரைகள் 2ம் யானை ஒன் றும் பரிசாக இனாம் ரூ.60ம் கொடுத்தார்.

*18 1827*

*(1)* வண்டிக்காரன் கோனேரி கொத்தன் வையாபுரி என்பவன் ஸர்கார் அரண்மனையின் வேலைக்காக துகையை வாங்கிக்கொண்டு பிலா மரங்களை வாங்கி சிவகங்கைக் கோட்டையில் வைத்தான். நான்கு வீதிகளையும் பழுதுபார்க்கும் வேலையில் அப்தார்கானா - (தண்ணீர் பந்தல்) விற்கு மோரியைக் கட்டுவதற்காக ஷெ மரங்களை கரீதி செய்த பாபத்து துகை சக்ரம் - 50-3 3/16 பணம்.

*(2) 1827*

கும்பனியைச் சேர்ந்த வெங்கடாசல சுபேதார் இவருடைய குழந்தையின் காலை ஒரு குதிரை மிதித்து விட்டதினால் ஸர்காருடைய உத்தரவின்படி ஒருமாதம் வரவு வைத்துக்கொண்டு அதிலிருந்து குழந்தையின் காலை தேவலை செய்த பகவந்த ராவ் கச்சேரிக்கு இனாம் கொடுத்து ரசீது வாங்கின பாபத்து 5 சக்ரம் போக பாக்கியை ஷெ குழந்தையின் காலின் புண் தேவலை செய்வதற்கு ஸர்காரிலிருந்து தைலத்திற்கு சாமான் வகையறா வாங்கினதற்கு சக்ரம் 5 கும்பனி ரூ.7.

---

205. ஸர்தாமஸ்மன்ரோ - 10-6-1820 முதல் 6-7-1827 வரை கவர்னராக இருந்தவர் (பக்.63) ; இவர் 6-8-1826 இல் தஞ்சைக்கு வந்தார் (851சி-5-51)

206. ப்யாரனெட் - Baronet - இளங்கோமான்

*(3) 1827*

வண்டிமாலின் வண்டியை உலாவுவதற்கு கொண்டு போனபொழுது வழியில் மாடு தைவகதியை யடைந்ததினால் ஷிவண்டியில் உட்கார்ந்து போன ஆஸாமியிடமிருந்து அபராதம் பாபத்து வசூல் ரூ.1-12-0.

*18.1827 Apr. 30உ*

கலெக்டர் கச்சேரியின் கஜானாவின் முக்கிய வசூல் தீர்ந்த துகைக்கு 1826 ஏப்ரல் மீ வரையில் சர்காரில் பெற்றுக் கொண்டதற்கு எழுதிக் கொடுத்த ரசீதின்படி வரவுபோக பாக்கி சர்காருக்கு வரவேண்டியது ரூ.201960-1-6பை.

இதற்கு 1926 ஷு அக்டோபர் மாதத்திய கலெக்டர் கச்சேரியில் கணக்குச் செய்வதைத் த்விர்த்து வரவில் அணா வைத்திருக்கிறது.

*19.1825*

(1) ஸ்ரீரேணுகா அம்பாளுக்கு[207] வெள்ளிக்கிழமை - செவ்வாய்க்கிழமை - பூஜைக்கு ஒவ்வொரு வாரத்திற்கும் ஓர் அணாவீதம் 10-4-0

*(2) 1825*

அலாஹிதா (தனிப்பட்ட) மகாவில் தங்கம், வெள்ளி, செம்பு இவைகளின் மேல் மொலாம்பட்டை வகையறா தயாரிப்பதற்கு சக்கரம் 20.

*(3) 1825*

மகால்-தட்டி[208]-பணிமங்கலம்-வடக்குத் தட்டிமாலில்-அரியபூர் படுகையிலுள்ள காட்டைப் பிடுங்கி புல்பூண்டு முளைக்க வைப்பதற்குச் செலவு சக். 100

*(4) 1825*

விஜயதசமிக்காக (பத்தே) கீழவாசல்[209] வாசப்படியின் மேலுள்ள கருடன் ஹனுமார் இவர்களுக்குப் பூஜைநிவேதினத்திற்காகச் சிந்தூரம் கரீதி செய்ய 4 பைசா.

*(5) 1825*

அல்லாப் பண்டிகைக்காக-அப்தார்கானாவில்[210] (அல்லா வைக்கிற இடத்தில் ஹிந்துஸ்தானி ஸேவை[211]செய்வதற்கு டக்காவின்[212] ஜோடி ஒன்றைத் தயார் செய்ய 2 1/2 (தோல் வாத்தியம்)

*(6) 1825*

ப்ளாஸ்திரி தடவிய சீர்மை, பருத்தியின் மையின் துண்டுகள் 9க்கு கும்பனி ரூ. 2

---

207. ரேணுகா அம்பாள் - எல்லம்மாதேவி (பக்கம் 213 இல் 12) இது பழமையான கிராம தேவதைக் கோவில்; தொடக்கத்தில் ரேணுகாம்பாள் என்று பெயர் இருந்தது (பக்கம் 189 இல் 22)

208. தட்டி மகால் - மாட்டுக்கொட்டில் (பக்.457)

209. கீழவாசல் - பத்தேதர்வாஜா (போ.வ.ச.பக்.77)

210. அப்தார்கானா - தண்ணீர்பந்தல் இருக்குமிடம்

211. இந்துஸ்தானி சேவை - இந்துஸ்தானி மொழியில் வழிபாடு செய்தல்; இந்துஸ்தானி இசை பாடுதல்

212. டக்கா - ஒரு தோல் வாத்தியம்

*(7) 1825*

காப்பிக்கொட்டை-மூன்றுமணங்கடங்கிய சிம்பி[213], ஒன்றுக்கு ரூ. 42

*(8) 1824*

யானையின் வைத்தியம் செய்கிற காசீம்கானுக்கு ரூ.4

*45-1828*

(1) நாலு வீதிகளையும் செப்பனிடுவதற்கு மாதமொன்றுக்கு ரூ.100

*(2) 1828*

ஹுஜூர் - ஸதர் மாடியில் கிழக்கேயுள்ள கடியாரத்தின் கண்ணாடி போராமலிருப்பதால் புதிய கண்ணாடி வாங்குவதற்கு -2-

*(3) 1828*

விடோஜி ஸோன்ஜியின் மூலமாகப் பட்டுப்பூச்சிகளை கரீதி செய்தவகையில் கும்பனி ரூ.7-9-0

*(4) 1828*

சரஸ்வதி மஹாலில்
தமிழ் எழுத்து புத்தகங்கள் கரீதி செய்த வகையில் ஓலை
ஸ்காந்த புராணம்[214] பாடல் -14610, சிவதர்ம[215]
பாடல் - 1228 = 15838

*(5) 1828*

கூர்ம புராணம்[216] பாடல் 3717க்கு ரூ.3-10-3

*(6) 1828*

ஹுஜூர் - தாவீத் பிள்ளையின் மூலம் ஆங்கிலேயம் புத்தகங்களைப் பழுது பார்க்க ருஸ்தும்ஜீயின் கடையில் இராயல் பேபர் 2 தஸ்தா[217] ரூ.2க்குக் கரீதி செய்யப்பட்டன.

## மூட்டை எண் -61C

*3.1846*

கல்லாகோட் பாளையம்பட்டு - விஜயரங்க நாத சிங்கப்புலி[218]- அவர்களுடைய பிள்ளை - ஹுஜூரைக்[219] காண/வந்தபொழுது முன்னிலையில் வைத்தது ரூ.11

---

213. சிம்பி - சிப்பம் - சிறுமூட்டை

214. "தமிழ் எழுத்து" என்று தொடங்கியுள்ளதால் இங்குக் குறித்தது தமிழில் கச்சியப்ப முனிவர் எழுதிய கந்தபுராணம் ஆகலாம்.

215. சிவதர்மம் - உபபுராணங்களுள் ஒன்று

216. கூர்மபுராணம் - பதினெண்புராணத் தொன்று. கூர்ம (ஆமை) உருவங்கொண்ட திருமால் இந்திரத்துய்ம்மனுக்கும் மற்ற இருடிகளுக்கும் புருஷார்த்தங்களைச் சொல்லிய மகாபுராணம்.

217. தஸ்தா - காகிதக்கட்டு (24 கடுதாசிகள் கொண்டது)

218. விஜயரங்கநாத சிங்கப்புலி 181சி-8-13 இல் விஜயரகுநாதமுத்து விஜயசிங்கப்புலி என்பவர் கூறப்பெறுகிறார்.

219. ஹுஜூர் என்றது இரண்டாம் சிவாஜியை

*10.1847 March 12*உ

கும்பனி பாபத்து வரவு - தரங்கம்பாடி கஜானாவிலிருந்து ரெஸிடெண்ட் வேலைபார்க்கும் பிஷப்[220] (பாதரி) இடமிருந்து செல்லானது ஸர்காருக்கு ரசீது- நீர் 120க்கு வரவு ௹.60,000.

ஷெ துகையை, ரெஸிடெண்ட் அவர்களுடைய தோட்டத்திற்கு யானையையும், ஹர்கார்[221] என்னும் உத்தியோகஸ்தரையும் சிப்பாய்களையும் அனுப்பிக்கொண்டு வரப்பட்டது.

*22.1860*

1. மகாலோ மகால் வகையறாவிற்கு நாளை கவர்னர்[222]சாயேப் அரண்மனைக்கு வரப் போகுவதால் ஷெ மகால் உத்யோகஸ்தர்கள் இன்றுஆஜராகியிருந்தபடியிருக்க வேணுமென்று உத்திரவு.

*(2) 1859* லாயம்

கவர்னர் சாயேப் அவர்களுடன் வல்லத்திற்குப் போய் அசந்துபோய்வந்த வண்டியின் 2 குதிரைகளுக்கு அஜீர்ணத்துக்காக வைத்தியர் ஷேக்மொகிதீன் அவர்களிடம் கொடுப்பது.

சுக்கு - 2 சேர், வெல்லம்-2 சேர், வெங்காயம் -2 சேர், மிளகு 1/2 சேர், மஞ்சள் 1/2சேர், சாராயம் 4 சேர்

*(4) 1859*

இராஜ்மகாவில் கமிஷனர்[223]சாயேப் அவர்கள் வந்து ஹாஜீர் பார்ப்பதினால் தரையீர மிருப்பதால் பலகைகளைப் பரப்பி ஷெ வேலை முடிந்ததும் பலகைகளை கொண்டு வந்து கொடுக்கிறது.

*(5) 1859*

லாயம்

ஜான் ப்யாரீயானைக்கு வாயுவின் உபத்திரவத்தினால் இடுப்பில் புண் பிடித்துக்கொண்டு தீனியை நன்றாகச் சாப்பிடாததினால் கோவிந்தன் மாவுத்துவிடம் மருந்து தயார் செய்து உள்ளுக்கு மருந்து கொடுக்க ஜாபிதா.

சுக்கு 1 சேர், கண்டத்திப்பிலி-1 சேர், அரிசித் திப்பிலி-1 சேர், மிளகு -1 சேர், காயம் -1 சேர், பூண்டு -2 சேர், ஓமம் -1 சேர், சித்தரத்தை -1 சேர், கிராம்பு 1/2 சேர், வசம்பு -1/2 சேர், நெய்-1 சேர், வெல்லம் -3 சேர்

---

220. பிஷப் - ரெஸிடென்டு (பக்கம் 68)

221. ஹர்கார் - சார்லஸ் அலுவலில் இருப்பவர் (பக்கம் 76)

222. கவர்னர் - சார்லஸ் எட்வார்ட் ட்ரெவெல்யன் (28-3-1856 முதல் 7-6-1860) ஆகலாம்

223. கமிஷனர் - பிலிப்ஸ் என்பவர் ஆகலாம் (பக்.69)

பத்துப்போட பூண்டு சேர்-1, காயம் சேர்-1, கடுகு சேர்-1, இலுப்பெண்ணெய் சேர்-2, வேப்பெண்ணெய் சேர்-2, வண்டியின் குதிரைக்கு சூட்டினால் மலஜலம் சரியாக ஆகாததினாலும் ஆபரேஷன் செய்து இரணமாயிருப்பதாலும் வைத்தியர் சைத் மொஹிதீனிடம் 15 தினத்திற்கு நெய் சேர் 1/2, மிளகு சேர் 1/4, இரணத்தின் மேல் தடவ மனச்சிலை சேர் 5, சாராயம் சேர் -4

இந்தப்படி மகால் கொட்டியத்திலிருந்து ஷை குதிரைக்கு தண்ணீர் காய்ச்சிக் கொடுப்பதற்கு மகால் ஆயுதசாலையிலிருந்து விறகு கொடுப்பது.

*(6) 1859*

மராமத்து இலாகா - திவான்வாடாவுக்கு - மகால் ஆயுதசாலை[224]யிலுள்ள ரா. சரபோஜி ராஜா சாயேப் அவர்களுடைய சிலா விக்கிரஹத்தின்[225] முக்கோணி மரத்தினால் செய்த (முண்டாசுக்கு) தலைப்பாகைக்கு[226] சிந்தூர வர்ணம் வகையறா கொடுத்து, தயார் செய்வதற்கு உத்திரவாக வேணும்.

*(7) 1859*

புலிமகாலுக்கு[227] எதிரில் இடம் மேடு பள்ளமாய் கெட்டுப் போயிருப்பதால் மட்டஞ் செய்து மணல் நிரப்பிக்கொடுக்கிறது.

*(8) 1859*

ஸங்கீத மகாலின் மண்டபத்திற்குப் பக்கத்திலுள்ள வட்டமான மண்டபத்தில் துப்பாக்கி வகையறாக்களை[228] செய்வதற்கு

*22(9) 1859 மகால் (ஜகாயதி)*

சுங்கம் மேல்வீதியில் ஸ்ரீபெரிய கோயிலின் தேர்முட்டிக்கு எதிரேயும், வடக்கிலும் உள்ள ஸர்கார் காலி இடத்தில் பரங்கிக்காய் வகையறா சாகுபடி செய்து அனுபவிப்பதற்கு கொடுத்த வகையில் வசூல் ரூ.12-6 பைசா.

*23 1859*

*(1)* ஸ்ரீமங்கள வாஸத்தில்[229] காய்கறி வகைகள் வியாபாரஞ் செய்த வகையில் வரவு ரூ.2700

---

224. ஆயுதசாலை - இற்றை ஞான்று கலைக்கூடம் உள்ள இடம் (ஜிராத்கானா) (பக்.415)

225. சிலாவிக்கிரகம் - சலவைக்கல் உருவம் (923சி-9-5)

226. (பக்கம் 417) இயற்கையாகச் சிற்பத்தில் காணும் தலைப்பாகையுடன் வேறோர் தலைப்பாகையும் செய்து வைக்கப்பெற்றிருத்தல் வேண்டும் எனத் தெரிகிறது.

227. புலிமகால் - வேட்டை மகால் ஆகலாம் (வேட்டை மகால் - சிகார் கானா)

228. வகையறாக்களை -முதலியவற்றை

229. மங்களவாசம் - இரண்டாம் சிவாஜியின் காமக்கிழத்தியர் இப்பெயரால் குறிக்கப்பெற்றனர் (பக்கம் 330)

(2) 1859
ஸரஸ்வதி மகாலில் அஷ்டலக்ஷ்மி[230] வகையறாக்களுக்கு வஸ்திரமில்லாமலிருப்பதால் ஜாமதார்கானா[231] விலிருந்து துணிகள் கொடுக்கிறது.

(3) 1859
வண்டியின் குதிரைக்கு மார்பில் கட்டி வந்திருப்பதால் அதைக் கிழித்து (சிகிச்சை) பட்டியைக் கட்டுவதற்கு வைத்தியன் சைத்மொகிதீனிடம்

கொட்டியத்திலிருந்து பிராந்தி ஒரு புட்டி கொடுப்பது. ஜாமதார் கானாவிலிருந்து ஒருசாண் அகலமும் 4 முழம் நீளம் காதித்[232]. துணியைக் கொடுப்பது.

(4) 1859
லாயம் - அரபிநீலம் குதிரைக்கு வாயுவினால் கழிப்பதற்கு மருந்து.

சுக்கு சேர் 9, கிராம்பு சேர் 9, கடுக்காய் சேர் 1/4, தயிர்படி 1

23 (5) 1859
தன் வந்திரி மகால்[233]

லாயத்தில் ஆறுமுகம் என்பவனுக்கு காயம் ஏற்பட்டதினால் பட்டிக்கட்டுவதற்கு மருந்து வைத்தியர் - தேவாஜி கோவிந்தறாவின் ஜாபிதா -

தேங்காய்-2, கொட்டைமுத்து படி-1/4, உப்பு படி-1/4, அரப்பு சேர்-1/2, கருங்குங்கிலியம் சேர்-1/2, வேப்பம் பிசின் டாங்கே-9, ஆளி விரை டாங்கே-9 , சாம்பிராணி டாங்கே-9, கோழி-1 , சாராயம்-2 சேர், பூண்டு-1/4 சேர் , மஞ்சள்-1/4 சேர், கண்டத்திப்பிலி-1/4 சேர் , எலும்மிச்சம் பழம்-5, ந.எண்ணெய் சேர்-1, 4 முழம் துண்டு -1

24 (1) அலாதி மஹால்

தங்கம் வெள்ளி தேர் அம்பாரி, ஹௌதா வகையறா இருக்கும் கொட்டடிக்கு பார்பஸ் சாயேப் அவர்களின் சீல் போடப்பட்டிருக்கிறது.

(2) 1858
தன்வந்திரி மகால்:

சௌ. காமாக்ஷியம்மா பாயிசாயேப் அவர்களுக்கு ஸ்நானத்திற்கு தைலம் தயார் செய்வதற்கு

---

230. அஷ்டலக்ஷ்மி: தனலட்சுமி, தானியலட்சுமி, தைரிய லட்சுமி, சௌரிய லட்சுமி, வித்தியாலட்சுமி, விசயலட்சுமி, கீர்த்திலட்சுமி, இராச்சிய லட்சுமி என எண்மர்

231. ஜாம்தார் கானா - அரசகுடும்பத்துக்குரிய ஆடைகளும் நகைகளும் வைக்கப்பெற்ற இடம் (பக்.453)

232. காதித்துணி - முரட்டுத்துணி

233. தன்வந்திரி மகால் - மக்கள் விலங்குகள் பறவைகள் ஆகிய எல்லாவற்றுக்கும் வைத்தியம் செய்யக்கூடிய வைத்தியர்கள் இருந்து ஆய்வு செய்யுமிடம்.இங்குப் பல வகை மருந்துகளும் தயார் செய்தனர்

வில்வ வேர் சேர்-15, நன்னாரி வேர் -3 நாளைய தினம் கொடுப்பது, 4ம் நாள் கொடுப்பது.

கையாந்தகரை சேர்-4,பொன்னாங்கண்ணி சேர்-4, கீழாநெல்லி சேர்-6, சிவகரந்தை சேர்-1/2

*(3) 1858*

மரப்பலகையின் மேல் மெல்லிய சுண்ணாம்பினால் விருந்தாவனம்-1[234] ராதா[235] கிருஷ்ணன், ஸத்யபாமா[236] ஆதிசேஷன்[237] ஆமை[238] வகையறா மூர்த்திகளை நுட்பமாய் வேலை செய்து சாயம் கொடுப்பதற்கு சிலவு ரூ.4-10-0

*25.1858*

*(1)* உத்திரவு:-

சென்னையிலிருக்கும் ஸர்கார் அம்ஜீகிரை[239] தோட்டத்தின் மொகப்பு - தண்ணீர் பந்தல் வகையறா செப்பனிடுகிற இடத்தில் பிராமணனை

நியமித்து, தண்ணீர் பந்தல் வைப்பதற்கும் ஷெ தோட்டத்தை குத்தகைக்கு விட்டு பரிஷ்காரம் செய்வதற்கு இராமனாதபட்டு மூலம் சிவசங்கர் தவே அவர்களுக்கு ரூ.8 கொடுக்கிறது.

*(2) 1858*

சர்கேல் பாபாவின் சொந்த (ஜனக) தகப்பனார் மகாசப்தே அவர்கள் பாவாஜிராமாஜி பண்டிதர்[240] வீட்டு விஷயங்கண்டு கொடுத்த பிராது.

*(3) 1858*

மனு - மாஜி அலிமகம்மது ஷெரிப் காளயுக்தி ஷு எழுதிக்கொடுத்த மனு என்னவென்றால்:

ரா. ஏகோஜி ராஜா[241] சாஹேப் பீஜப்பூரிலிருந்து இங்கு வந்தபொழுது[242] அவ்விடமுள்ள பாத ஷாஹாவின் உத்திரவுப்படி சில பாதஹாஹிக்கு கார்கானா (இராஜாங்கம்) நடத்துவதற்கு ஸேவகனுடைய முன்னோரை[243] அவர்களுடன் அனுப்பினார்.

234. விருந்தாவனம் - பிருந்தாவனம் - யமுனையாற்றுக்கு மேற்கில் மதுராபுரிக்கு அருகில் துளசிவனம்; கிருஷ்ணன் தனது பக்தர்களுக்குத் தோன்றி அருள் புரியும் தலம்

235. ராதா - இராதை; கிருஷ்ணனின் மனைவி

236. ஸத்யபாமா - கிருஷ்ணன் மனைவியர்களுள் ஒருத்தி; இவள் பொருட்டுக் கிருஷ்ணன் பாரிசாத மரத்தைத் தேவர் உலகத்திருந்து கொணர்ந்தனன்.

237. ஆதிசேடன் - அனந்தன் என்னும் பாம்பு

238. ஆமை - திருமாலின் அவதாரங்களில் ஒன்று

239. அம்ஜீகரை - இந்நாளில் அமைந்த கரை என்று திருந்திய வடிவில் கூறப்படும்

240. பாவாஜி (பாபாஜி) ராமாஜி பண்டிதர் 1844 இல் இறந்தார் என்று (பக்கம் 36-37) தெரிவதால், இவர் இறந்த 14 ஆண்டுகட்குப் பிறகும் இவரது தந்தை இருந்தார் என்று இதனால் தெரிகிறது (உண்மை தெரியவாய்ப்பில்லை)

241. ஏகோஜி ராஜா - 1676-இல் தஞ்சையைக் கைப்பற்றி தஞ்சையில் மராட்டிய ஆட்சியை நிறுவியவர்

242. ஏகோஜி பீஜப்பூர் சுல்தானின் ஏவலர்கள் வேண்டுகோட்படி தஞ்சைக்கு வந்தமை இங்ஙனம் கூறப்பட்டுள்ளது (போ.வ.ச.பக்.63-64)

243. பீஜப்பூரிலிருந்து ஏகோஜியுடன் வந்தவர்கள் காதர் கலாஸ்கான்,அப்துல் ஹலீம்என்பவராவர் (போ.வ.ச.பக்.63-64)

அது முதற்கொண்டு வருஷம் மாஸம், தேதி மஹாலோ மஹாவின் பெயரும் உத்யோகத்தின் பெயரும், நம்முடைய முன்னோர் கார்கானக்களை நடத்தி வந்தபடி, மோஹரம் அல்லாப் பண்டிகைக்காக அல்லாக்களை வைப்பது ஸேவகனுடைய முன்னோர் சொல்படி ஷெி பண்டிகையையும் குத்பா[244] 2ம் நடந்து வந்தன.

அக்கால முதற்கொண்டு நாமே ஜியானி[245] பன்னிரண்டு இமாமீயின் அல்லாவுக்கு[246] பாத்தியா[247] வகையறா கொடுக்கிற வழக்கம் நடந்து வந்து கொண்டிருக்கையில் பாட்டனார் மூன்று வருஷங்களுக்கு முன்னால் தைவகதி அடைந்தார். அவருடைய உறவினர் நான் என்று ஷேக் அப்துல் காதர் என்பவர் ஸர்காரில் தெரிவித்து சில சில்லறை உத்தியோகஸ்தர்களின் உதவியால் ஷெி பாத்தியா கொடுக்கும் வேலையைத் தான் பார்த்து வந்தார்.

அவ்விஷயமாக ரா. சிவாஜி ராஜா சாயேப் உயிருடனிருக்கும்பொழுது ஸேவகன் ஸர்காரில் கொடுத்த மனுவை வெளிப்படையாக விசாரணை செய்ய உத்திரவானது. விசாரணை முடிவதற்குள் மோஹரம் முடிந்துவிட்டது. உடனே இராஜா சாகேப் [248] அவர்களும் கைலாஸவாசீ ஆனார்கள்.

பிறகு இரண்டாவது மோஹரத்திற்கும் ஸேவகன் வேறுமனுவைக் கொடுத்தான். அதை மத்யஸ்தர்கள் நன்றாக விசாரணை செய்யாமல் மனுவை வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

இதற்காக சாயேப் மனமூர்ந்து அம்மனுவையும் என்னுடைய வழக்கத்தையும் விசாரணை செய்து பழைய வழக்கப்படி என்னுடைய பாட்டனார் 12 இமாமாவுக்கு பாத்தியா வகையறா கொடுக்கும்படி செய்ய வேணும்.

ஜில்ஹேத்[249] கையெழுத்து (துலுக்காணி)

## மூட்டை எண் -62 C

*11.1820* டைரி

தஞ்சாவூர் கனம் ரா. சத்திரபதி[250] சாயேப் அவர்களுடைய ஸவாரி (பிரயாணம்) இந்த ஊருக்கு வந்தபொழுது ஸர்காருக்குச் சாமான்கள் கொடுத்ததிற்கு சாராயம் சராசரி சேர்

---

244. குத்பா - விசேஷ நாட்களில் நிகழும் மதப்பிரசங்கம்

245. ஜியானி - (ஜியாரத் (?) முகமதியருள் இறந்தவர் பொருட்டு மூன்றாம்நாள் நடத்தும் சடங்கு

246. இமாம் - தொழுகையை நடத்துபவர்

247. பாத்தியா - முகமதியர் திருமணம் அல்லது மரண காலத்தில் குரான் ஓதுதல்

248. ராஜா சாகேப் என்றது இரண்டாம் சிவாஜியை

249. ஜில்ஹேத் - அரபுமாதம் (முகமதியர் வழங்கும் மாதங்களில் பன்னிரண்டாவது மாதம்)

250. சத்திரபதி என்றது இரண்டாம் சரபோஜியை

ஒன்று 100க்கு ஒவ்வொரு சேருக்கும் 22 1/2 க்கு ஒரு சேருக்கு சின்ன ஐந்து பணம்[251] வீதம் கும்பனி ரூ. நாணயம் 8-12-0 முகாம் - ராமய்யா பேட்டை-நெல்லூர் ஜில்லாவைச் சேர்ந்தது.

## மூட்டை எண் - 64 C

*6.1867*

மகாலோ மகால் - மாதா மாதம் செலவுக்கு உத்தேசம் ஜாபிதா புலி, யானை குதிரை, ஆடு, மாடுகள், பிராணிகள் சந்திர மௌளீஸ்வர ஸ்வாமி கோவில் சிலவு

*11. 1845 May*

தஞ்சாவூர் மகாராஜா சாயேப் அவர்களால் ஸ்தாபிக்கப்பட்டு ஸம்ரக்ஷணை செய்யப்பட்டு வரும் முக்தம்மாள்புரம் சத்திரத்தின் ஆங்கிலேய பள்ளிக்கூடத்திற்கு உபயோகத்திற்கு அனுப்பின 31 புத்தகங்களின் கிரயம் ரூ.13-8-0

| | |
|---|---|
| 12 ஆங்கிலேயம் தமிழ் பாஷையின் முதல் புத்தகம் - | ரூ. அ. பை. |
| | 1-14-0 |
| 6 ஆங்கிலேயம் இலக்கணத்தின் ஸாராம்சம் | 0-12-0 |
| 3 இந்தியா பால போதம் | 3-0-0 |
| 3 ஆங்கிலேய பாஷை பயிர்ச்சி முறை | 1-12-0 |
| 2 இங்கிலாந்தின் பழைய சாமான்யக் கட்டுரை | 3-0-0 |
| 2 ஒருவருக்கொருவர் பேசுகிறதற்குப் புத்தகம் | 2-0-0 |
| 3 பூகோளச் சுருக்கம் | 1-2-0 |
| | 13-8-0 |

## மூட்டை எண் - 65C

*4.1813*

தஞ்சாவூர் கோட்டை ரோந்து (காவல்) சிலவு -

பெரிய கோட்டையின் ரோந்து 3க்கு, ஆராப் கோட்டை ரோந்து 1க்கு, சிவகங்கை கோட்டை ரோந்து 2க்கு, காவல் சாவடியில், காவல் வகையறா, காவலி?, புது அரண்மனையில், கீழவாசல் 2க்கு, காவல் சாவடிக்கு-, தர்ஜீ நாயிக் மண்டபம், வடக்கு வாசல்

*1.1782*

(1) உத்திரவுகள்

சி. அம்பிகா பாயி[252] சாயேப் அவுர்களுக்கு அம்மை வார்த்ததினால் சீதலா ஸ்தோத்திரம் ஜபம் செய்வதற்கு 10 பிராமணர்களுக்கு ஒவ்வொருவருக்கும் ஒரு நாளைக்கு ஒரு பணம் வீதம் தக்ஷிணை நாளொன்றுக்கு 3 சக்கரம். இதைத் தவிர பூஜைக்கு நாளைக்கு ஒரு பிராமணனுக்கு

251. சின்ன ஐந்துபணம் - சின்னபணம் ஐந்து 2 1/2 பணம் கொண்டது சென்னப்பட்டணம் வெள்ளிப்பணம்; இதனைப் பெரிய பணம் என்பர்; ஏனையதாகிய பணம் என்பது சின்னப்பணம் எனப்பட்டது (பக்.151-152)

252. அம்பிகாபாயி - யார் என்று தெரியவில்லை

*1 வீதம் தினம் 10 பூஜைக்கு - இந்தப்படி ஐந்தாம் சனிக்கிழமை நாள் முதற்கொண்டு 7ம் நாள் திங்கட்கிழமை "அம்பேல் புத்தி" என்னும் பூஜை செய்கிறவரையில் தினந்தோறும் கொடுக்க உத்திரவாக வேணும்.*

*(2) 1782*

*சுங்கம்-*

*கும்பனியின் கடிதம் பத்திரம் வரவேண்டியதற்காக விண்ணாற்றங்கரை, முராஸலி, என்கிற 2 ஆறுகளில் நீந்துகிற ஆஸாமிகள் 4 பேருக்கு நாளொன்றுக்கு 4 பணம் வீதம்.*

*24 1785*

(1) உத்திரவுகள்

*ஸ்ரீபிரதாபராமஸ்வாமிக்கு[253] ரா. பாபாஸ்வாமி அவர்களின் புண்யதிதிக்காக மண்டபபடிக்கு இராஜ்யத்திலுள்ள இச்சிப்பூவை வழக்கப்படி உத்திரவுபடி ஒவ்வொரு சுபாவிலிருந்து 10 கலம் பூ வீதம் 4 சுபைகளிலிருந்து 40 கலம் புஷ்பம் வரவழைத்துக் கொடுப்பது.*

***49.1818***

*(1) ஸ்ரீலக்ஷ்மி நரசிம்ம ஸ்வாமிக்குக்[254] கோவில் கட்ட சிலவு சக்ரம் 3050 1/2.*

*(2) 1808*

*மகால் சரபத்கானா*

*ரா. சிவாஜி றாஜா சாயேபுக்குக்கும் சி. சக்குவார்பாயி[255] அமணிராஜே சாயேப்புக்கும் நடக்கிற கல்யாணத்திற்கு சாமான்கள் கரீதி செய்ய சக்கரம்-400*

*(3) 1808*

*மாரியம்மன் கோவில் - ஸ்ரீமாரியம்மனுக்கு தினப்படி மொயின் 20 சக்கரம் 8 பணம்.*

*3.1813*

*(1) லாயத்தில் ரா. சிவாஜி ராஜாவினால் நியமிக்கப்பட்ட அம்பாரி பைகா[256] மட்டக் குதிரைக் காரனிடம் (ஸேக்மியானிடம்)*

*இளைப்பு தீருவதற்கு, சர்க்கரை சேர் 1/2, மிளகு டாங்க் 9, சுக்கு டாங்க் 4 1/2*

*(2) 1813*

*மற்றொன்று - சர்க்கரைக்குப் பதில் வெல்லம்-தவிர பாக்கி எல்லாம் மேற்கண்டவாறு.*

*(3) 1813*

*படுவான் வலியினால் பிளவு வந்து உடைவதினால் மசாலா–,*

---

253. பிரதாபராமஸ்வாமி - பட்டாபிராமசாமி கோயில் ஆகலாம்

254. லக்ஷ்மி நரசிம்ம சுவாமி கோயில் - கீழசிங்கப்பெருமாள் (பக்கம் 188 இல் 20 ; 213இல் 24)

255. சக்வார் பாயி - இவர் இரண்டாம் சரபோஜியின் மனைவி அஹல்யாபாயியின் நான்காவது மகள்

256. பைகா - பாகா (Paga) ; குதிரைலாயம்

மிளகு டாங்க்-3/4 , சிராயித் சேர் 1/2, கடுகுரோகணிசேர் 1/2 , பித்தளை மூலம் சேர் 1/4, அரிசித்திப்பிலி சேர்-1/4 , சுக்கு சேர்-1/4, இந்துப்பு சேர் 1/4 , கந்தவீட் சேர் 1/4, காயம் டாங்க் 9 , சினாக்காரம் டாங்க் 9, பூண்டு சேர் 1/2 , வசம்பு சேர் 1/2, மொரப்பு சேர் 1/2 , கருஞ்சீரகம் சேர் 3/4, சாம்பராணி சேர் 3/4 , புகையிலை சேர் 3/4, மிளகாய் சேர் 1/4,கஞ்சா சேர் 1/2

வேறுமுறை

சிராயித் சேர் 1/2 , கடுகுரோகணி சேர் 3/4, வசம்பு சேர் 3/4 , பூண்டு சேர் 1, குக்கில சேர் 1 , மொரப்பா-கோரப்பா-சேர் 1 1/4, கருஞ்சீரகம் சேர் 1 1/4 , முத்தாண்டவ? சேர் 3/4, கந்தவீட் ? சேர் 3/4 , இஞ்சி சேர் 1 1/2, கசப்பு ஹிரோசேரி சேர் 1/2 கடுகுரோகணி , வெள்ளை குண்டுமணி சேர் 1/2, பெசாவர் கருஞ்சீரகம் சேர் 1/2 , துருசு சேர் 4 1/2, மிளகு சேர் 3/4 , புகையிலை சேர் 3/4, பட்கடி ? சேர் 1/4 , வெண்குங்குலியம் சேர் 1/4

(4) மாட்டுக்கு உஷ்ணத்தினால் உடம்பின் மேல் காந்த என்னும் சிரங்குக் கிளம்பி இரத்தமாகக் கழிவதால் வயிற்றில் சாப்பிடக் கொடுப்பதற்கு - மருந்து

சீரகம் டாங்க்-9, மிளகு டாங்க்-9, வெங்காயம் சேர்-1/4, இந்திரஜவம் டாங்க்-9(ஸமஸ்கிருதம் இந்திரயவம்), வெந்தியம் டாங்க்-9, மல்லி டாங்க்-9, பெருஞ்சீரகம் டாங்க்-9, நெய் சேர்-1/2

(5) மஹால் தட்டியில்[257] குஜராத்தி பசுமாட்டுக்கு 'வளூ' என்கிற வியாதிக்கு மருந்து

கருஞ்சீரகம் சேர்-1/4, மரமஞ்சள் சேர்-1/4, கல்லுப்பு சேர்-1/4, சித்தரத்தை சேர்-1/4, சுக்குசேர்-1/4, இரசகற்பூரம் டாங்க்-9, வேப்பெண்ணை சேர்-2

**10.1814**

(1) ஹுஜூருடைய வண்டிக்கு சாயம்பூச கொட்டியத்திலிருந்து

நல்ல அரக்கு சேர்-6, இங்களீகம் சேர்-1/4, அரிதாரம் சேர்-1/2, நீலம் சேர்-1/4, பந்தரி வஜ்ஜிரம் சேர்-2, நல்லெண்ணை மனு-1/4
தாரு (வெடிமருந்துக் கானாவிலிருந்து கொம்புகள் 20)

(2) கல்யாண மகாலில் பசுமாட்டின் கொம்பு இரணமானதால் பட்டிக்கட்டுவதற்கு மருந்து

செங்கொட்டை சேர்-1, களிப்பாக்கு சேர்-1, காசிக்கட்டி சேர்-1, துருசு சேர்-1/2, கடுக்காய் சேர்-1, நீலம் சேர்-1, சாதாரண எலும்மிச்சம் பழங்கள் 14

**10.1814**

(3) மா. சந்திரரேகா பாயி[258]- எனக்கு தினந்தோறும் கபம் விழுகிறது. தலைகனமாயிருக்கிறது. தலைவலி யிருக்கிறது. சிரங்கினாலும் மிகவும் உபத்திரவம் ஜாஸ்தியாயிருக்கிறது. அதற்கு மருந்து செய்யவேண்டியதற்கு சாமான்கள்.

இஞ்சி சேர்-1, செங்கரம்பை-1, சுக்கு சேர்-1/4, மிளகு சேர்-1/4, கிறாம்பு டாங்க்-4 1/2, தீபத்திராகைஷ சேர்-1/4, பேரீச்சங்காய் சேர்-1/4

257. தட்டி மகால் - மாடுகள் இருக்குமிடம் (பக்கம் 457)

258. சந்திரரேகாபாயி 55சி-18இல் இப்பெயரால் ஒருவர் குறிக்கப்பெறுகிறார். மங்களவிலாஸ் சத்மத்தில் குறிக்கப்பெறுபவர் அல்லர் என்பது உறுதி (மோ.பலகணி I, ஆவணம் எண் 79)

## மூட்டை எண் -67C

***4.1814***

*(1) லாயத்தில் - குதிரை குட்டி போட்டதினால் உள்ளுக்குக் கொடுக்கமருந்து-*

*அரிசி படி -1, பனவெல்லம் - 1/2வீ, தேங்காய் -2 கொடுக்கிறது.*

***(2) 1814***

**யானைமகால்:**

*மா. ஆவுசாயேப் அவர்களுடைய யானைக்குட்டி இளைத்துப் போனதால் வயிற்றில் கொடுக்க மருந்து.*

*மிளகு சேர்-1, பூண்டு சேர்-1, வாய்விளங்கம் சேர்-1, சுக்கு சேர்-1, மஞ்சள் சேர்-1, [illegible] அக்கல்கரா சேர் 1/2 , கடுகுரோகணி சேர்-1/2, அரிசித்திப்பிலி சேர்-1 , குக்கில சேர்-1, கண்டத்திப்பிலி சேர்-1, கருஞ்சீரகம் சேர்-1, பிஷாவர் கருஞ்சீரகம் சேர்-1 , இந்தரபீ சேர் 3/4, பொரசவிரை சேர் 3/4 , குராஸனி ஓமம் சேர்-1/2, ஓமம் சேர்-1 , - சேர்-1/2 போரெக்ஸ் சேர்-1/4, ஹிங்கதிராச்சா டாங்க்-9, சித்தரத்தை சேர்-1/2, வசம்பு சேர்-1/2, செதகுப்பை சேர்-1/2 இந்துப்பு சேர் - 1/2, கல்லுப்பு சேர் - 1/2, சித்திரமூலம் சேர் - 1, சாராயம் சேர் - 6 = 1/2 மனு - 5 1/4 சேர் - 9 டாங்க்*

***19.1814***

*லாயத்தில் ரா. மாமாசாயேப் அவர்களுடைய குதிரை குட்டி போட்டதற்கு மருந்து:-*

*மசாலை செய்வதற்கு*

*சுக்கு சேர்-1/4 , அரிசித்திப்பிலி சேர்-1/4, வசம்பு சேர்-1/2 , மஞ்சள் சேர்-1/4, காயம் டாங்க்-7 , ஹளத்கேலூ? சேர்-7, சாராயம் சேர்-7, கண்டத்திப்பிலி சேர்-1/4, ஓமம் சேர்-1/2, பூண்டு சேர்-1/2, மிளகு சேர்-1/2 , போரெக்ஸ் டாங்க்-7, குக்கில சேர்-1/2 , அரிசிபடி-1, வெல்லம் சேர் 1/4 டாங்க் 9, தேங்காய் -1*

***(2) 1814***

*சாலுவ நாயக்கன் பட்டணத்திற்கு பீரங்கி கொண்டுபோன வண்டி மாடுகளுக்குத் தீனிக்காக 12 பணம்.*

***20.1813***

*ஸர்காரிலிருந்து வந்த எருமைக்கன்றுக்கு வரளைவாயுவினால் சாணம், மூத்திரம் போகாமலிருப்பதினால் உள்ளுக்குக் கொடுப்பதற்கு மருந்து - கொட்டியத்திலிருந்து.*

*சுக்கு டாங்க்-9, போரெக்ஸ் டாங்க்-9, மரமஞ்சள் டாங்க்-9, மிளகு டாங்க்-9, சோர் உப்பு டாங்க்-9, தோட்டத்திலிருந்து இலைத்துண்டு-1, சங்கம் வேர் துண்டு-1.*

***41.1813***

*(1) வஜாரத்மாப் - அமிருதராவ் ராமோஜி ஸர்ஸேராவ் காட்கே[259] எழுதிக்கொடுத்த அர்ஜி -*

259. இவர் 1813 க்குப்பிறகு சர்க்கேல் ஆனவர் (பக்கம் 85-86)

ஸேவகனுடைய தகப்பனார்[260] ஸ்ரீ தளகேஸ்வர சுவாமி[261] சிவப்ரதிஷ்டையும் லக்ஷ்மி ராஜபுரம்[262] அக்கிரஹாரமும் அன்னசத்திரமும் வகையறா தர்மங்களைச் செய்து, அந்த தர்மம் நிரந்தரமாக நடக்க வேண்டியதின் பொருட்டு ஸ்ரீமந்த் ராஜஸ்ரீ சத்திரபதி[263] சாயேப் அவர்களை கேட்டு வாங்கிக் கொண்ட தன்னுடைய சம்பளம் 135 சக்கரம்.இதில் ஸ்ரீ தளகேஸ்வர ஸ்வாமியின் பூஜை நிவேதனத்திற்கு மாஸமொன்றுக்கு 50 சக்கரம், ஸேவகனுக்கு 70 சக்ரம். ஆக 120 சக்கரம் போக 15 சக்ரம் ஸர்கார் இனாம் கொடுத்த மாதோஸ்ரீயின் சம்பளத்தில் சத்திரத்தில் பிராமண போஜனத்திற்கு மாதத்திற்கு 15 சக்ரம் வீதம் சர்க்காரவர் தயவுடன் கொடுத்து வந்ததினால் நடந்து வந்தது. தற்போது கோயிலின் 50 சக்ரங்களும், சத்திரத்தில் 15 சக்ரமும் நின்று போனதினால் நித்யப்படி ஏற்படி சத்திரம், கோவில் சிலவுகளுக்கு மிகவும் சிரமமாயிருக்கிறது.

ஸேவகனுடைய தகப்பனார் செய்த தருமத்தை பரிபாலிக்க வேண்டும். பாக்கி நின்ற மொயின் துகையையும் மனமூர்ந்து கொடுக்க வேணுமென்று.

*(2) 1813*

ஸ்ரீ வஸிஸ்டேஸ்வர சுவாமி[264] கோவிவில் தளவரிசை வகையறா மராமத்து வேலையை வசூல் செய்து வருகிறேன். அந்த தருமத்திற்கு காலாட்படையைச் சேர்ந்த ஸைன்யத்திலுள்ள 41 ஆஸாமிகள் தங்களுடைய வருமானத்தில் ஒரு மாதத்தின் துகையென்று யஜமானவர்கள்[265] தஸ்தாவேஜை எழுதிக் கொடுத்திருப்பதால் அவ்வெல்லோருடைய வரும்படியை மட்டும் கொடுத்து ஒரு மாதத்தின் பட்டுவாடாவை ஷெ தருமத்தின் வேலைக்குக் கொடுக்க வேண்டுமென்று இராமசாமி நாயிக் என்பவன் விண்ணப்பம் செய்து யிருக்கிறேன்.

**41.1842**

(3)இராமாஜி என்பவர் கொடுத்த மனு - கருந்தட்டாங்குடிக்குப் போகும் வழிக்கு ஒட்டருடைய[266] வீட்டுக்குக் கிழக்கு முன்னிருந்த (முதல்) பாலத்திற்கு அடுத்தாற்போல் தென்னண்டை ஹனுமார் கோயில் சிறியதாக மண்டபம் கட்டி, அந்த மண்டபத்தின் பிரகாரத்திற்கு நாலுபுறமும் சுவர் போட அந்த மண்டபத்திற்கு வடவண்டை புளிய மரங்களின் கிளைகள் குறுக்கே வந்திருப்பதால் சுவறுபோட இடைஞ்சலாயிருக்கிறது. ஆகையால் ஏழையின் மீ.து.ரா.சத்திரபதி மகாராஜா தரும பராயண[267]னான கிருபை கூர்ந்து இடைஞ்சலன்றி புளியம் கிளைகளை வெட்டுவதற்கு உத்திரவாக வேணும்.

---

260. ராமோஜி சுல்தான்ஜி சர்ஜேராவ் (செ.இராசு, தஞ்சை மராட்டியர் செப்பேடுகள் 50, பக்கம் 200)

261. வெண்ணாற்றங்கரை பள்ளியக்கிரகாரத்தில் அமைக்கப்பட்ட கோயில்

262. லக்ஷ்மிராஜபுரம் - பள்ளியக்கிரகாரத்துக்குரிய பெயர்

263. சத்திரபதி என்பது இரண்டாம் சரபோஜியை

264. விசிஷ்டேசுவரசுவாமி - இவர் கருவேலநாதசுவாமி எனப்பெறுவர். கருந்தட்டான்குடியில் உள்ள கோவில் (பக்.213இல் 32)

265. யஜமான் என்றது இரண்டாம் சரபோஜியை

266. ஒட்டர் - மண்வேலைக்காரர்

267. தருமபராயணர் - தருமத்தில் விருப்புடையவர் ; (பராயணர் - குறிக் கொள்பவர்)

*(4) 1842*

*அகிழ்குத்தகைக்காரன் - ஆறுமுகம் எழுதிக் கொடுத்த மனு:-*

*கோட்டையில் நான்கு வீதிகளிலும் சாக்கடைகளைக் கட்டி, வீடுகளின் தண்ணீரும், மழை ஜலமும் சாக்கடையில் விழுந்து அகிழியில் விழுந்து அகிழிலுள்ள புல்லின் மேடான திட்டுகளெல்லாம்மூடி போய் புல்லெல்லாம் அழுகிப் போய்விடுகிறது. ஆகையால் அகிழின் வடிகால் போக்கில் தாராளமாக தண்ணீர் போகவில்லையாகையால் அந்தப் போக்கை கொஞ்சம் வெட்டிவிட்டால், தண்ணீர் வெளியே போய் புல்லு அழுகிப் போகாமலிருக்கும். இப்படிக்கு சாயேப்[268] மனமூர்ந்து ஏழையின்மேல் தயவு செய்து அகிழின் போக்கை வெட்டிவிட உத்திரவாக வேணும்.*

***41.1842***

*(5) ஷேக் ஹாஸன் ஸேக் ஓஸேன் எழுதிக் கொடுத்த மனு:-*

*மோஹரம் பண்டிகைக்காக அல்லா வைப்பதற்காக ரா.யேகோஜி[269] ராஜா சாயேப் அவர்களுடன் கொண்டு வந்த அல்லாக்களுக்கு வருஷத்திற்கு 25 சக்கரம் வீதம் கொடுத்து வரப்பட்டது. அதை பகீர்ராவ் காட்கே அவர்களிடம் ஒப்புவித்த பின்னர் வருஷத்திற்கு 15 சக்ரம் வீதம் மொயின் செய்து கொடுத்தார்.*

*அமரசிங்கு[270] போகும்பொழுது கொண்டு போகிறேனென்றதற்கு ஸர்காரவர்கள் வேண்டாம் என்று சுப்புராவ் ஸேடகே இடம் ஒப்புவித்து வருஷத்திற்கு 5 சக்கரம் வீதமும் பர்ச்சீ ஹுஸேனீயின் பிருதுகளின்படியும் மொயினும் செய்து, கொடுத்து நடத்தி வந்தார். அது தற்போது 2, 3 ஆண்டுக் காலமாக நின்றிருப்பதை ஸேவகன்[271] மிகவும் ஏழையாகையால் ஸாஹேப் மனமூர்ந்து வழக்கப்படி மோஹரம் பணடிகையை நடத்த உத்திரவு செய்ய வேணும்.*

***41.1842***

*(6) அப்புராவ் எழுதிக்கொடுத்த மனு:- தான் பண்டராபுரம்[272] யாத்திரைக்குச் செல்ல வேண்டிய வேண்டுகோளிருப்பதால் ஷெ யாத்திரைக்கு போக நான் ஏழையானதால் ஸாமான்களுக்கும், உட்காருவதற்கும் கூட ஸர்காரவர்கள் ஏழையின் மேல் தயவுசெய்து தருமத்திற்கு லாயத்திலிருந்து குதிரையும் மட்டக்குதிரையும்[273] இனாமாக யாத்திரை செய்பவர்களுக்கு கொடுத்து வருவதால் என்னைப் போன்ற ஏழைக்கும் தயவு செய்து, ஒரு மட்டக்குதிரையை தருவித்தால் ஷெ யாத்திரைக்குப் போய் யாத்திரை செய்து வருவேன். அந்தபலம் (புண்ணியம்) மகாராஜா சாயேப் அவர்களைச் சேர்ந்ததானதால் சாயேப் மனமூர்ந்து ஒரு மட்டக்குதிரையை எனக்கு இனாமாகக் கொடுத்து,யாத்திரையைப் பூர்த்தி செய்ய உத்திரவாக வேணும்.*

---

268. சாயேப் - அரசர்; என்றது இரண்டாம் சிவாஜியை

269. யேகோஜி - 1676-இல் தஞ்சையைக்கைப்பற்றி மராட்டிய அரசை ஏற்படுத்தியவர்

270. அமர்சிங்கு - இரண்டாம் துளஜாவுக்குப் பிறகு 1787 முதல் 1798 வரை ஆட்சிபுரிந்தவர்

271. ஸேவகன் இவ்விண்ணப்பம் எழுதிய ஷேக் ஹாஸன் ஸேக் ஒஸேன் என்பவர் ஆவர்

272. பண்டராபுரம் - பண்டரிபுரம்

273. மட்டக்குதிரை - (Pony) சிறிய குதிரை

# மூட்டை எண் 69C

***28.1807***

*சரபோஜி மகாராஜா உத்திரவு:ஸர்காருக்கு நகை செய்ய மிஸ்தர் பார்ன்பீ அவர்கள் மிஸ்தர் டுரீயன்[274] வசம் 3000 பௌண்ட்டுக்குப் புலிவராகன் ஒன்றுக்கு 8 ஷிலிங்க் 6 பென்ஸ் வீதம் புலிவராகன் 7058.*

274. மிஸ்தர் டுரியன் - ரெஸிடெண்டு (Benjamin Torin) (பக்கம் 65)

# சரசுவதி மகால் பகுதி X

## மூட்டை எண்-185C

*15.1828*

*(1) சத்திரபதி சரபோஜி மகாராஜா க்யாப்டின் ஜான்பகதூர்[1] ரிஸிடெண்டுக்கு எழுதின கடிதங்கள்.*

*இதில் ஸ்ரீராம் பிரதாப்[2] என்று கையொப்பமிடப்பட்டிருக்கிறது.*

*6.1824*

*(1) மனு–கும்பகோணத்தில் வசிக்கும் வெங்கோபா கோசாமி கொடுத்தது. சா. சகம் 1746[3] தாரண வருஷம். ஸேவகனுடைய பாட்டனார் உத்தவ சித்கனாங்கித பாளாஜி கோசாமியின் மடத்திற்குத் தினம் பாக்கி மாதத்திற்கு 7 1/2 வீதம் கிடைக்கிறது. பசலி[4] 1233 ஜூலை முதல் 1234 அக்டோபர் வரையிலுள்ள பாக்கித்துகையைக் கஜானாவிலிருந்து கொடுக்கும்படி உத்திரவாக வேணும்.*

*7.1824 நவம்பர் 1உ*

*(1) விலைவாசி-முத்தம்பாபுரம்[5] அன்னசத்திரத்தின் கிருஷ்ணாஜி-சா-உப்பு பணத்திற்கு 3 3/4 படி.*

*(2) 1825 ரபிலெளவல்[6] 12உ*

*ரிஸிடெண்ட் ஜ்யான் பைப்புக்குக் குழந்தை பிறந்ததென்று மகாராஜாவிற்குத் தெரிவித்த ஸிரஸ்தேதார்[7] வெங்கடறாவுக்குச் சால்வைகள் ஜாபராணிகொடி போட்டதும் புள்ளிகள் போட்டதுமான 12 வராஹன்-1, 12 1/2 வராஹன்-1 = 24 1/2*

---

1. கியாப்பின் ஜான் பகதூர் - ஜாபைஃப் (John Fyfe) என்ற ரெஸிடெண்ட் (பக்கம் 66)

2. ஸ்ரீராம்பிரதாப் - மராட்டிய அரசர் கையொப்பம் இடுவதாயின் பெரும்பான்மை'ஸ்ரீராம்பிரதாப்' என்று எழுதுவர் (பக்கம் 365)

3. சா.சகம் - சாலிவாகன சகம்; 1746 + 78 - கி.பி.1824.

4. பசலி - கி.பி.591 முதல் தொடங்குவதும் 1555 ஆம் ஆண்டு அக்பரால் ஏற்படுத்தப்பட்டதுமான ஆண்டுமுறை. பசலி எண்ணுடன் 591 சேர்த்தால் ஆங்கில ஆண்டு வரும். பசலி 1233 = (1233 + 591) = கி.பி.1824.

5. முக்தம்பாபுரம் அன்னசத்திரம் - ஒரத்தநாடு சத்திரம். 16-1-1802இல் கட்டத்துவங்கப்பெற்றது. சரபோஜியின் காமக்கிழத்தி முக்தாம்பாள் பெயரால் அமைக்கப்பெற்றது (பக்கம் 273-274)

6. ரபிலெளவல் - ரபிஉல் அவ்வல் (அரபு மாதம்)

7. சிரஸ்தேதார் - ரெஸிடெண்ட் அலுவலகத்துப் பெரிய அலுவலர்

*1.1830*

***(1)* சிரஸ்தேதார்[8] ஸர்கேலுக்கு[9] எழுதியது. சுலக்ஷணாம்பாபூருக்குப்[10] பிரதி பெயர்-வளாங்கொளம்[11] சத்திரத்திற்கும் தேவஸ்தானம் ஸ்ரீ அக்ஷயபுரீஸ்வரருக்கும் செந்தலை உப்பளத்திலிருந்து வித்து முதலான உப்புக்குக் கரஸி[12] 1க்குக் கோவிலுக்கு 2 1/2 பணமும், சத்திரத்திற்கு 1/2 பணமும் வீதம் 1232 பசலி வரையில் மகமா[13] செய்து கொடுத்து உப்பளத்தில் துகை செல்லாகிக் கொண்டிருந்தது.**

*16.1834*

***(1)* சர்கேல் சாயேப் அனுப்பின கடிதம்:-மகால் கொட்டியத்தில்[14] பிள்ளையார் சதுர்த்தியின் உற்சவத்திற்கும், நவராத்திரியில் வாஜீநீராஜனையின்[15] சிலவிற்கும் கூட பேரீச்சம்பழம் சுமார் 3 கண்டியும், பேரீச்சங்காய் சுமார் இடை 10 மனுவும் திராக்ஷை சுமார் மனு 10ம் கற்கண்டு 1 கண்டியும்[16] இராயபூர் சர்க்கரை 2 கண்டியும் சிலவிருக்கிறதே. இவைகள் இவ்வூரில் கிடைக்காது. ஆகையால் நாகப்பட்டணம் அல்லது நாகூரிலுள்ள வியாபாரிகளிடம் விலை தீர்த்துச் சரக்கைப் பார்த்து, விபரமாக விலைகளை எழுதி வரவழைக்க வேணுமென்று கொட்டியத்தின் மத்தியஸ்தர் கேட்டுக் கொள்ளுகிறார்.**

***(2) 1830***

**ஸர்கார் ஸேவகர்கள் நீம்பாஜெட்டி வகையறா சர்காருக்குக் கொடுத்த மனு:- ஸர்கார் இலாகா தாராசுரம் பேட்டையில் கைலாஸவாசி[17] ரா. ஏகோஜீ[18] மகாராஜாவின் காலத்தில் ஸர்வமான்யங் கொடுத்து, அவ்விடத்தில் நாம் ஜெட்டிகள் வீட்டைக் கட்டிக்கொண்டு வசித்து அவ்வீதியில் ஸ்ரீகிருஷ்ண ஸ்வாமியின் கோவிலையும் ஸ்ரீபிள்ளையார், ஸ்ரீஎல்லையம்மன் கோவிலையும் ஸ்ரீமஹிஷாசுரமர்தினி[19]யின் கோவில் 4லையும் கட்டி, தண்ணீர்ப் பந்தல் போட்டு அக்கால முதற்கொண்டு தருமத்தைத் தவறாமால் நடத்தி வருகிறோம். ஷெ தெருவில் வடக்குச் சரகில் ஸ்ரீகிருஷ்ணன் கோவில், தென்னண்டை பிள்ளையார் கோயில்; நடுவில்**

8. சிரஸ்தேதார் - வெங்கடராவ் ஆகலாம்.

9. ஸர்கேல், - ராமோஜி ஸர்ஜேராவ் காட்கே ஆகலாம்.

10. சுலக்ஷணாம்பாபூர் - சுலக்ஷணபாயி, இரண்டாம் துளஜாவின் மூன்றாவது மனைவி ஆவர் (பக்கம் 272)

11. வளாங்கொளம் - வேளங்குளம்

12. கரஸி- கரசை - 400 மரக்கால்

13. மகமா - மகமை - தருமைக்கொடை - இலாபத்தில் ஒருபங்கு கொடுத்தல்.

14. கொட்டியம் - சரக்கறை

15. வாஜிநீராஜன் - கற்பூர ஆரத்தி

16. 1 கண்டி - 20 மணங்கு (மனு)

17. கைலாஸவாஸி - இறந்துபட்டவர்களுக்கு அடைமொழி

18. ஏகோஜி - கி.பி.1676இல் தஞ்சையைக் கைப்பற்றி மராட்டிய ஆட்சியைத் தொடங்கியவர்.

19. மகிஷாசுரமர்த்தனி - எருமைத்தலையுடைய அரக்கனைத் துர்க்காதேவியார் கொன்று மகிஷாசுரமர்த்தனி ஆனார்.

நடைரோடு; அந்த ரோட்டின் வழியாய் வண்டிகள், சாரட்டுகள், பல்லாக்குகள், யானை, குதிரைகள் சவாரிகள் ஒரு தடையுமின்றிச் செல்லுகின்றன..................இப்படியிருக்கையில் கும்பகோணம் பிரிவு நெல்சன்சாயேப் சாரட்டு மேல் உட்கார்ந்து வந்து நம்முடைய தெருவின் வழியாக அரசலாறு ஓடத்துறை வரையில் மேற்கே சென்று திரும்பி வரும்பொழுது நம்முடைய தெருவின் பிள்ளையார் கோயில் சமீபமிறங்கி, கொத்தவாலை[20] அழைத்து வந்து கோயிலை இடித்து, தெருப்பாதையை விஸ்தாரஞ் செய்யென்று உத்திரவிட்டுப் போனார். அப்படிச் செய்யாமல் நம்முடைய தேவதருமங்களை ரக்ஷிக்க வேணுமென்று மகாராஜாவிற்கு விண்ணப்பம்.

*(3) 1829* நவம்பர் 8உ

ஸர்கேல்-ரெஸிடெண்டுக்கு எழுதின கடிதம்.

தஞ்சாவூர் ஸமஸ்தானத்தில் திருவையாற்றுக்குப் போகும் வழியிலுள்ள மரங்களையும், தோட்டத்தின் வேலிகளையும், வெட்டி, கடைகள், வீடுகளை எல்லாம் இடித்து, கும்பணியின் ரஸ்தாவை விஸ்தாரப் படுத்துவதற்காக பிரின்ஸிபால் கலெக்டரின்[21] உத்திரவின் மேல் தாசில்தார் இஞ்சினியர் வகையறாக்கள் பலாத்காரம் செய்யாமலிருக்கும்படி செய்யவேணுமென்று.

## மூட்டை எண்-186 C

*7.1179*[22]

ஜாபிதா-இராஜகுமராம்பாபுரம்[23] அக்கிரஹாரத்திற்கு ஸர்வமான்யம் விடப்பட்ட கிராமங்கள்-வெளாம்பத்தைச் சேர்ந்த மௌஜே[24] மீன மேஸல்.

*31.1779*

*(1)* இராமேஸ்வரத்தில் ஸ்ரீராமநாத ஸ்வாமிக்கு வில்வார்ச்சனைக்கும், கோதண்டராம ஸ்வாமிக்குத் துளஸி அர்ச்சனைக்கும் வருஷத்திற்கு *330* சக்.

*23.1186*[25]

*(1)* ஸ்ரீகாமாக்ஷி அம்மனுக்கு நெல் கலம் *500*

---

20. கொத்தவால் - ஊர்க்காவல் அதிகாரி

21. கலெக்டர் - நெல்சன் (பக்.71)

22. 1179 என்பது சுஹர்சன் ஆண்டு; இதனுடன் 599 சேர்ப்பின் ஆங்கில ஆண்டு வரும். 1779 + 599 கி.பி.1778

23. இராஜகுமாராம்பாபுரம் - இராஜகுமாராம்பா என்பவர் இரண்டாம் துளஜாவின் மனைவியாவர். இவர் சத்திரம் மீனமேசலில் இருந்தது (பக்.270)

24. மௌஜே - உட்கிடையூர்

25. 1186 என்பதும் சுஹர்சன் ஆண்டு 1186 + 599 கி.பி.1785

*26.1186*

***(1) சித்திரை கார் மேல்வாரம் தஞ்சாவூருக்கு வந்த நெல்-யெளங்காடு பாக்கியில் வடக்குப் பேட்டைக்கு வந்த நெல் கலம் 3669-6 மர.***

இதற்கு வினியோகம்

| | |
|---|---|
| *1050* | *அண்டினவர்களுக்கு* |
| *101* | *ஜிராத்கானா நிஸிந்தே*[26] |
| *1100* | *பாகவத மேளம்*[27] |
| *248* | *ஜாமதார்கானா*[28] *நிஸிந்தே* |
| *388* | *தஞ்சாவூர் கோட்டை தேவஸ்தானம்* |
| *202* | *தட்டி மகால்*[29] *நிஸிந்தே* |
| *177* | *போதே மகால் (கஜானா) கணக்குப்பிள்ளை-பர்ஜ் பாபாஜி தேவா* |
| *89* | *குளிர்ந்த பானங்களின் மகாலின்*[30] *நிஸிந்தே* |
| *270* | *இராஜமகால்*[31] *நிஸிந்தே* |
| *90* | *முஜம் மகால் தஸ்தாவேஜி கச்சேரி* |
| *65* | *பலங்க மகால் தஸ்தாவேஜி கச்சேரி* |
| *68* | *யானைகானா*[32] *நிஸிந்தே* |

——

*3778*

| | |
|---|---|
| இதற்கு வரவு | *3285-12 மர* |
| | *492-6 மர* |
| போக பாக்கி | *383-12 மர* |

*5,1179*

*மனு*

***(1) 1. சகவாராம்பாபுரம்***[33] ***போல தேவஸ்தானம் ஸ்ரீகல்யாண ராம்ஸ்வாமி கோவிலுக்கு***[34]***வருஷத்திற்கு மொயின் வராகனொன்றுக்கு சக். 2-1பணம் வீதம் 1000 வராகன்.***

---

26. ஜிராத்கானா - ஆயுதசாலை; நிசிந்தே-மேற்பார்வை அலுவலர்

27. பாகவதமேளா - இசைநாடகக்குழு

28. ஜாம்தார்கானா - அரசகுடும்பத்தார்க்குரிய ஆடை அணிகள் இருக்குமிடம்.

29. தட்டிமகால் - மாட்டுப்பண்ணை

30. ஸர்பத்கானா - குளிர்பானம் செய்யுமிடம்

31. இராஜமகால் - அரண்மனை

32. யானைகானா - ஹத்திகானா (பக்.454)

33. சக்வாரம்பாபுரம் - திருபுவனம்; சக்வாரம்பா - இவர் பிரதாபசிங்கரது மனைவி (பக்.270)

34. கல்யாணராமஸ்வாமி கோயில் இராஜகுமாராம்பாபுரத்தில் (பீமிசலில்) எடுப்பிக்கப்பெற்றது (119சி-47-7) (பக்.203)

1. ப்ராஹ்மவஸ்து[35] அக்கிரஹாரம் வீடுகள் 24க்கு ஸர்வமான்யம்[36] நஞ்சை புஞ்சை கூட யமுனாம்பாபுரத்திற்கு[37] நிலங்கள் கொடுத்தபடி உத்திரவின்படி நிலங்களைக் கொடுக்கிறது.

யமுனாம்பாபுரம் போல 2

ஷெ வீதம் சாஹேப் மனமூர்ந்து (மனமுவந்து) வேளாம்பத்து சுபையைச் சேர்ந்த கிராமம் நஞ்சை புஞ்சை நக்ஷ பாபத்து பத்துக்கட்டு[38] வகையறா கூட கையில் ஜலம்விட்டு தானம் கொடுத்து சிகா-சனதுகளை[39] செய்து கொடுக்க உத்திரவாகவேணும்.

*30,1188*

கணக்குக் குத்தகைக் கண்டுமுதல்[40] கிராமத்தில் சேர்ந்த கம்மி கண்டு முதல் சேர்க்கப்பட்டது.

ஆஹந்தர் கமாவிஸி.[41]

## மூட்டை எண் 187C

*10.1239* சூர்ஸன்[42]

6 ஓலைப்புத்தகம் எழுதுகிற

2 சதாசிவபட்டு சுப்பாபட்டு கர்நாடக பாஷை எழுதுகிறவர்

2 சிதம்பர சாஸ்திரி தெலுங்கு எழுதுகிறவர்

2 மன்னார்குடி சீதாராமய்யர் கிரந்தம் எழுதுகிறவர்.

*16.1239*

(1) உத்திரவு-மகாராஜா.

நியாயாதீசர்[43] ரா. ஹிரோஜி காளேராவ் அவர்களை ச்ரேயோ வைவேகீகாதிபதி என்று இடவும் பெயர்.

---

35. ப்ராஹ்மவஸ்து - பிரமவித்து-பிரமத்தையறிந்தவன்.

36. ஸர்வமான்யம் - தீர்வை செலுத்தாமல் அனுபவிக்குமாறு விடப்பட்ட நிலம்.

37. யமுனாம்பாபுரம் - நீடாமங்கலம்; யமுனாம்பாள் பிரதாபசிங்கரின் மூன்றாவது மனைவி (பக்கம் 271)

38. பத்துக்கட்டு - குடியானவன் பயிரிடும் நிலம்

39. சிகாசன்னது - முத்திரையிடப்பட்ட ஆணைப்பத்திரம்

40. கண்டுமுதல் - மொத்தவிளைவு

41. கமாவிஸி - பல வூர்களை மேற்பார்வை செய்யும் அதிகாரி (பக்.77)

42. சூர்ஸன் - ஸுஹர்ஸன் - முஸ்லீம் ஆண்டு; இதனுடன் 599 ஆண்டு சேர்த்தால் ஆங்கில ஆண்டு வரும்.

43. நியாயாதீசர் - நியாயாதீசசபையின் நியாயாதிபதி. நியாயாதீசசபை என்பது 1800 முதல் தஞ்சையில் ஏற்படுத்தப்பட்டிருந்த நான்கு நீதி மன்றங்களுள் ஒன்று.

*(2) 1743*
கணக்கு-அடமான மராட்டியர்களிடமுள்ள -சென்ற வருஷம் 2, வரவு பீகன்பட் படகவநீலோராம அவர்களின் மூலம் வரவு ரூ. 705401-4-0. ஹுஜூர் வரவு 102884-8-0 ராஜ்யத்திலிருந்து 602516-12-0 = 705401-4-0

# முட்டை எண் 188C

**சரபோஜி ராஜா காசி யாத்திரை விவரம்**

*14.1820 நவம்.2உ (1) ரா.ரா.சரபோஜி மகாராஜா அவர்கள் காசியாத்திரைக்குச் சென்ற பொழுது, நெல்லூர் ஜில்லாவைச் சேர்ந்த தலமஞ்சிதுகடி என்னும் ஊரின் தாசில்தாருக்குக் கொடுத்த சர்டிபிகேட்*

மகாராஜாவிற்கு கும்பணி ஸர்காரின் உத்திரவுப்படி வேண்டிய சாமான்களைத் தருவித்துக் கொடுத்து, பயபக்தி மரியாதையுடன் நடந்ததற்காக.

*(2) 1810*
ஒத்திப் பத்திரம்[44] இரண்டு காடேராவ்களும் தங்களுக்குள் செய்துகொண்ட ஒத்திப்பத்திரம் ரூ. 5000க்கு 100க்கு வட்டி ரூ. 1 வீதம் அப்பத்திரத்தில் "நம்முடைய பழைய சிப்பந்திகளை எடுக்காமல் அவர்களுக்குச் சம்பளம் கொடுத்து வருகிறது."

*13.1825 ஜூலை முதல் 1826 ஜூன் வரை*

முழுவரவு கணக்கு
சென்ற வருடத்திய பாக்கி 35967-91/4 1/2 இவ்வருஷம் வரவு 956526-8 7/32 = 992468-7 1/2-1/4

*13.1825 to 1826*
(1) சக்.64-8 பணம்-ஸ்ரீபெரிய கோவில் ஸ்வாமிக்குக் கமலாஸனத்தின் ஹௌதா. வெள்ளியினால் செய்து கொடுக்க சக்கரம்.

*(2) 1825 to 1826*
சிலவின் விவரமான ஜாபிதா-மொத்தம் சிலவு 971956-1 11/16

*(3) 1825 to 1826*

தானதர்ம சாதாரணமானதும் முக்கியமானதும் சிலவு சக் 19887-1 3/4 தேவஸ்தானம் வகையறா சிலவு சக். 397-71/2-1/4

*(4) 1825 to 1826*
மஹிருல் ஹஜரத் மஜமூதார்[45] பாபாஜி ராமாஜி பண்டிதருக்குச்[46] சக். 179626 பணம் 6 1/2,

---

44. ஒத்திப்பத்திரம் - அடமானபத்திரம்

45. மஹிருல்ஹஜரத் மஜமூதார் - ஹஜரத் - சிறந்தோன்: மஜூம் தார் - நிலவரிக்கணக்கு எழுதுவோர்.

46. பாபாஜிராமாஜி பண்டிதர் (பக் 86)

*குலால் மகாலுக்கு[47] ஹரக்? வந்ததற்காக நஷ்டம் கும்பணியில் வரவு வைத்தபடி 500 கலத்திற்கு 200 சக்கரத்திற்குக் காலக்கிரயம் 166-61/2 போக பாக்கி நஷ்டம் சக். 33-0-2 7/16.*

*(5) 1825 to 1826*

*கும்பகோணம் பட்டு-பாதரியின் கோவிலைக் கட்டினதிற்காக இனாம் ரூ. 350க்குச் சக்ஃரம் 225-2-01/8.*

*1825 to 1826*

*ஜான் கொலப்[48] சம்சாரத்திற்குச் சக். 193 1/2.*

*(6) 1825 to 1826*

*பாபாஜி ராமாஜி பண்டிதருக்கு 600 கலம் நெல் சக். 225.*

*1825 to 1826*

*ரா. திவான் சாஹேப்[49] அரயேப்பூர் படுகையில் புலியைக் கொன்றதற்கும் திருமல்வாடி[50]யின் காட்டில் புலியைக் கொன்றதற்குங் கூட சக். 1454-8 3/4.*

*(11) 1821 மேமீ 22 உ*

*காசி யாத்திரையின் இருப்பிட (முகாம்) மிருந்த சர்கேல் பாபாஜி ராமாஜி பண்டிதர்[51] தஞ்சாவூர் அரண்மனை சர்கேலுக்கு எழுதிய கடிதங்கள். முகாம்-கயை*

*... ... ... ... ... ...மா. ஆவுசாஹேப்[52] அறுபதாங் கல்யாணத்திற்கு எழுதிவந்த படிக்கு கை. வாசீ பெரிய ஆவுசாப்பின்[53] அறுபதாங் கல்யாணத்தின் வழக்கப்படி அனுப்பிய ரோகா[54]வை ஹுஜூர் பார்த்து மனதிற்கு வாங்கி சின்ன திவான் சாயேப்பின்[55] மூலம் பூஜை வகையறா நடக்கும்படி உத்திரவாகியிருக்கிறது.*

---

47. குலால் மகால் - சிவப்புமகால்; நேர்த்தியான மகால்

48. ஜான் கொலப் (John Koloff) - தஞ்சையிலிருந்த பாதிரிகளில் ஒருவர்.

49. திவான் சாஹேப் என்றது இரண்டாவது சரபோஜியை.

50. திருமல்வாடி - திருமழபாடி

51. இதனால் 1920-22ல் இரண்டாம் சரபோஜி காசியாத்திரை சென்ற போது யாத்திரையில் உடன் இருந்த சர்க்கேல் பாபாஜி ராமாஜி பண்டிதர் ஆவர் என்பது அறியப்படும்.

52. ஆவு சாஹேப் என்றது இரண்டாம் சரபோஜியின் தாய் ஆகலாம்.

53. பெரிய ஆவுசாப் - திரௌபதாம்பா பாயி ஆகலாம்.

54. ரோகா - குறிப்பு

55. சின்னதிவான்சாயேப் - இரண்டாம் சிவாஜி

ஶ்ரீஸ்வாமியின் தேர்த்திருநாள் தினம் சண்டிகேஸ்வரி[56]யின் தேரின் சங்கதியை ஹுஜூர்[57] கேட்டதும் 22 வருடம் தேர்த் திருநாள் சுலபமாக நடந்தது. இப்பவும் என்ன நடந்திருக்கிறது என்று எண்ணி மிகவும் வருத்தப்பட்டார்.

*11 (2) 1821 மே மீ 24உ சர்கேல்-ராமோஜி ஸர்ஜேராவ் காட்கே[58] அவர்களுக்கு, சர்கேல் ரா.பாபாஜி ராமாஜி பண்டிதர்[59] எழுதியது.*

ரெஸிடெண்ட் வில்லியம் ப்ளாக்பர்ன்[60] சாயேப் அவர்களுக்கு இளைய திவான் சாயேப்[61] எழுதும் ஒவ்வொரு கடிதத்திலும் பிசகுகள் காணப்படுகின்றன. அப்பேர்ப்பட்ட பிசகுகளை இளையதிவான் சாயேப்புக்குத் தெரிவிக்காமலிருக்கும் ஹுஜூர் நவீஸ் மஹால், ஹுஜூர் நவீஸ் வகையறாக்களைக் கண்டித்து, அவர்களிடமிருந்து அபராதத்தையும் வசூலித்து ஹுஜூருக்குத் தெரிவிக்கிறதென்று முகாம்-கயை.

***2-1822 Jan.***
**காசியாத்திரையின் முகாம் தேதிவாரி**

*ஜனவரி*

*3உ போடில் 5உ இங்கன்காட் 7உ நாகபூர்*
*7உ யேஹிலா 12உ நாகபூர் 31உ யதலாபாத்*

*பிப்ரவரி*

*7உ நீம்ருள் 8உ மலிபேட் 10உ இராமாபேட்*
*6உ ஷாபாத் 29உ படகாடூர்*

*மார்ச்சு*

*6உ நந்தியால் 8உ கடப்பா 20உ செட்டிகுண்டா*
*21உ திருப்பதி 25உ காளஹஸ்தி 28உ புத்தூர்*
*30உ திருத்தணி*

---

56. சண்டிகேஸ்வரி என்பதைச் சண்டேசுவரர் என்று திருத்திப்படிக்கவும்

57. ஹுஜூர் என்றது இரண்டாம் சரபோஜியை

58. இவர் தஞ்சையில் இருந்த சர்க்கேல்

59. இவர் காசியாத்திரையில் அரசருடன் இருந்த சர்க்கேல்

60. வில்லியம்பிளாக்பர்ன் (பக்.66)

61. இளையதிவான்சாகேப் என்றது இரண்டாவது சிவாஜியை

ஏப்ரல்

2வ காஞ்சிபுரம் 3வ காஞ்சிபுரம் 7வ ரட்டூர்
10வ பணிஉருட்டி[62] 13வ பெரமாபூர் 18வ மாயோர்
23வ திருவாதி[63] 26வ முக்தம்பாபுரம்[64]
27வபட்டுக்கோட்டை 28வ மோஹனம்பாபுரம்[65]
29வசுலக்ஷணாம்பாச் சத்திரம்[66]
30வதிரௌபதாம்பாபுரச் சத்திரம்[67]

மே

1வ இராஜகுமராம்பாபுரம்[68] 2வ மீனமேஸல் சத்திரம்
4வ நவபாஷாணம் 5வ ஆதங்கரைப் பட்டணம்
9வ இராமேஸ்வரம் 10வ இராமேஸ்வரம்
11வ மைகுடாம் 13வ நவபாஷாணம்
14வ ஹீரோஜீ இங்களே சத்திரம் 15வகாலயநேரீ
16வஇராஜகுமராம்பாபுரம் 18வ 19வ சால்வநாயக்கன்பட்டினம்
20வ பட்டுக்கோட்டை 21வ முக்தம்பாபுரச் சத்திரம்.

*(3) 1822 ஜன 11வ*
*தஞ்சாவூரிலிருக்கும் சர்கேலுக்கு[69] யாத்திரை முகாமிலிருக்கும் ஸர்கேல் பாபாஜி இராமாஜி எழுதிய கடிதம்..*

**கேப்டன் மைகல்சாயேப்புக்குமரியாதைசெலுத்துவதற்கு ரெஸிடெண்டுக்கு எழுதி ஷியாரின் கடிதப்படிஷிமைகல்சாயேப்புக்கு 4000 ரூ. கொடுக்கிறது.**

முகாம்-நாகப்பூர்
*(4) 1822 ஜனவரி 14வ*
*முகாம் நாகப்பூர்-சர்கேல்-சர்கேலுக்கு-கடிதம்.*

---

62. பணிஉருட்டி - பண்ணுருட்டி

63. திருவாதி - திருவையாறு

64. முக்தம்பாபுரம் - ஒரத்த நாடு (பக்.273)

65. மோகனாம்பாபுரம் - இராஜாமடம் (பக்.271)

66. சுலக்ஷணாம்பாபுரம் - வேளங்குளம் (பக்.272)

67. திரௌபதாம்பாபுரம் - மணமேற்குடி (பக்.271)

68. ராஜகுமாராம்பாபுரம் - மீமிசல் (பக்.270)

69. ராமோஜி சர்ஜேராவ் காட்கே (188சி-11-2)

அர்பிசி 5வ ரெஸிடெண்டுக்கு[70] மார்வலியினால் மூர்ச்சை வரும் வரையிலாகி பின்பு பேதிக்கு மருந்து கொடுத்ததினால் கொஞ்சம் ஆரோக்கியம் என்று எழுதியிருக்கிறீர்கள். நீங்கள் டிசம்பர் மீ 5வ காயலாவானார்[71] என்று எழுதியது பிசகு. மார்கழி என்று எழுதுவது.

அந்த ஸாஹேப்பின் அநேக காலமாக உள்ள சிநேகம் அன்பினாலும்ஸௌஜன்யத்தினாலும் ஹுஜூரின் சித்தம் பரவசமாயிருப்பதால் அவருடைய க்ஷேமத்தை அடிக்கடி எழுதி தெரிவிக்கிறது.

*(5) 1822 ஜனவரி 26வ*
*முகாம்-இங்கண்காட்*
ஹுஸூரின் புத்தகங்களை எழுதுகிற இளைய அச்சுதாசாரே என்பவருடைய தம்பியின் திரஷ்டிக்கு[72] ரூ. 20 கொடுக்கிறது.

*(6) 1822 ஜனவரி 26வ*
ஆங்கிலேயக் கவிதைகளை மராட்டிய பாஷையில் தேவநாகரி எழுத்தில்[73] அச்சிட்ட புத்தகம் நவவித்யா கலாநிதி பள்ளி[74] யிலிருக்கிறதில் ஒரு புத்தகத்தை ஸவாரி முகாமுக்கு அனுப்பவும்.

*(7) 1822 ஜனவரி 21வ*
காலாட்படையைச் சேர்ந்த கிருஷ்ணாஜி ருத்ராஜீ என்பவர் மகாராஜா தஞ்சாவூரிலிருக்கும் பொழுது புறப்பட்டுக் காசிக்குத் சென்று மகாராஜா கயைக்கு வந்ததும் அவருக்குக் கங்காபிஷேகம் செய்து, வேலை பார்த்து வருவதால் அவருக்கும் சம்பளம் கொடுக்கிறது.

*11-1822 ஜனவரி 22வ*
*(8) முகாம்-கயா*

நாகபூர்-ஹைதராபாத்-ஒவ்வொரு இடத்திலும் தங்கி-24 இடங்களில் தங்கி-கிருஷ்ணா நதியின் தென்கரையிலிருந்து கடப்பை-திருப்பதி- ஸ்ரீகாளஹஸ்தி-சென்னப்பட்டணம்-காஞ்சீவரம், திருவண்ணாமலை- சிதம்பரம்-தஞ்சாவூர் வந்த-ஸ்ரீராமேஸ்வரத்திற்குச் சென்று, யாத்திரையை முடித்து அங்கிருந்து தஞ்சாவூருக்கு வந்து சேருவதாய் நிச்சயித்திருக்கிறோம். இராமேஸ்வர யாத்திரைக்கும், ஸஹாயமும் மரியாதையும் செய்ய வேணுமென்று கவர்ண்மெண்டு சீக்கிரம் எழுதவேணுமென்று-கடிதம்.

*(9) 1822 பிப்ரவரி 4 வ*
காப்டன் ஜான் க்யாமெல் சாஹேப் இங்கிலாந்துக்குப் போகும்பொழுது, இளைய திவான் சாயேப்பைப் பார்க்க வரும்பொழுது அவருக்குப் பிரதி மரியாதையாக ரூ. 4000 கொடுக்கிறது.

---

70. ரெஸிடென்டு - வில்லியம் பிளாக்பர்ன் (பக்.66)

71. காயலாவானார் - நோயுற்றார்

72. திரஷ்டி - மனையறம்படுத்தல்

73. தேவநாகரி - வடமொழியெழுதுவதற்குரிய எழுத்து

74. நவவித்யாகலாநிதி சாலா – தஞ்சைக் கோட்டையிலிருந்த கல்விநிலையம் (பக்கம் 240)

முகாம்-நிர்மள

*(10) 1822 ஜனவரி 4உ*

முகாம்-போலூன்.

இங்கிருந்து நாளையதினம் புறப்பட்டு 9 முகாம்களுடன் நாகபூருக்கு வரப்போகிறோம்.

*(11) 1822 பிப்ரவரி 1உ*

முகாம்-கலிபேட்

கருஞ்சேங்கோட்டை மரத்தில் பழுத்த பழத்துடன் 19 இந்த டப்பாவில் வைத்துனுப்பியிருப்பதைத் தண்ணீர் தேங்காமலிருக்கிற கருப்புக் களிமண் மேடான நிலத்தில் விதைத்து அதைப்பயிர் செய்கிறது.

*(12) 1822 ஏப் 13உ*

முகாம் பெருமாத்தூர்

மகாராஜாவின் ஸவாரி இன்று காலையில் புறப்பட்டு நாளை அருணோதயத்திற்குச்[75] சிதம்பரம் வரப்போகிறார். அப்பொழுது இளையதிவான் சாஹேப் வகையறாக்கள் மகாராஜவைப் பார்க்க வரவேண்டிய விரிவான விபரங்களடங்கிய கடிதம்.

*(14) 1822 பிப்ரவரி 10உ*

மகாராஜாவின் சவாரி கோதாவரி நதியின் தென்கரை வழியாக 5 இடத்தில் தங்கி இராமாபேட்டையிலிருக்கிறோம். இவ்விடமிருந்து 5 இடங்களில் முகாம் செய்து ஹைதராபாத் வருவோம். கடப்பை வழியாய் திருப்பதிக்கு மார்ச்சு மீ 15உ வருவோம்.

*11-1822 2உ*

*(15) முகாம்-காஞ்சீவரம்*

சின்ன திவானுக்குச் சீமையிலிருந்து மிஸ்தர் டுரீயன்[76] சாயேப் எழுதிய கடிதம் இங்கு வந்ததை இந்தக் கடிதத்தில் வைத்தனுப்பியிருக்கிறேன்.

*(16) 1822 ஏப்.2உ*

வேட்டைக்காரர்களுடன் பைர்யாக்களைக் கொடுத்துச் சவாரி முகாமுக்கு அனுப்புகிறது.

*(17) 1822 ஏப்.7உ*

முகாம்-ரடனே

வணக்கம். இம்மாதம் 14உ காலையில் சி. சின்னதிவான் சாயேப் மகாராஜாவைப் பார்க்க சிதம்பரத்திலிருந்து முன்னால் வரும்பொழுது ஹுஜூர் சவாரியின் ஜிலேபே?வும், ஸைன்யங்களும் இரண்டு பக்கங்களிலும், கோர்வையாக நின்று கொண்டு, நடுவிலுள்ள இடத்தில் சின்ன திவானின் ஸைன்யங்கள் முன்னாலுள்ள கொடியின் யானை ஹுஜூரிட கொடியின் யானைவரைக்கும் நிற்க வேணும். சி. சின்னதிவான் சாயேப் உள்ளே பிரவேசிக்கும்

---

75. அருணோதயம் - விடியல்

76. டுரியன் - இவர் ரெஸிடென்டாக இருந்தவர் (பக்கம் 65-66)

பொழுது, சவாரியிலுள்ள சிப்பாய்கள் "ஜோஹார் பரங்க ஜோஹார் யந்தர" என்று செய்யும் மரியாதையை ஏற்றுக்கொள்ள வேணும்.

பின்பு லெட்னல் கர்னல் வில்வியம் ப்ளாக்பர்ன் ரிஸிடெண்ட் சாயேப் சி. சின்னதிவான் சாயேப்பை ஒரு முக்ய சர்காரின் கார்பாரியையும் கூட அழைத்து வந்து, ஹுஜுர் சமீபம் வருவார். அப்பொழுது மூன்று சவாரிகளும் அவர் அவர்களுடைய எண்ணமறிந்திருக்கலாம். ஆனால் பீரங்கியின் சத்தத்திற்குப் பயப்படாமல் ஸவாரிகள் எப்படியிருக்க வேணுமோ, அப்படி ஸவாரிகளுடன் சமீபம் வந்து, ஸவாரியிறங்கி. சி.ரா. இளையதிவானுடைய கையை ரெஸிடெண்டு பிடித்து ஹுஜுருடைய கையில் ஒப்புவிப்பார்கள். அப்பொழுது 21 குண்டுகளையும் ஒவ்வொரு பக்கத்தில் மூன்று சலா வீதம், இரண்டு பக்கமும் ஆறு சலாமுகளாகும். ரெஸிடெண்ட் சாஹேப் சி.ரா. இளையதிவான் சாஹேப் ஹுஜுரிடம் ஒப்புவித்தவுடனே ஹுஜுரானவர் ரெஸிடெண்டுக்கு கல்விழைத்த நகையைக் கொடுப்பார்.

பின்பு சி.ரா. இளையதிவான் சாயேப், ரெஸிடெண்ட் சாஹேப் இவ்விருவருக்கும் ஸவாரியுடனுள்ள டாக்டர் பீ. மக்லோட்[77] சாஹேப்புக்குப் பேட்டி கண்டு பின்பு சி.ரா. இளையதுரையை அழைத்துக்கொண்டு ஸ்ரீமந்த் ரா. சத்திரபதி[78] சாயேப் செள. மா. பாயிசாயேப்[79] அவர்களிடம் சென்று பேட்டி காணும்பொழுது செள. பாயிசாயேப் சி. ராஜேஸ்ரீக்கு முத்துமாலையொன்றை ஆசீர்வாதத்துடன் கொடுப்பதை வாங்கிக் கொண்டு, மறுபடியும் ரெஸிடெண்ட் சாஹேப் நின்று கொண்டிருக்கும் இடத்திற்குச் சேரும்பொழுது, கனம் பொருந்திய கவர்னர் ஜனரல் சாஹேப்[80] அவர்கள் த்னனுடைய சிநேகம் இரக்கம் இவைகளுடைய அடையாளமாக "கங்காஜமுனி"[81] ஹுஜுருக்குக் கொடுத்த அந்தப்பெரிய தந்தமுள்ள யானையானது மேற்சொன்ன ஹௌதாவுடன்[82] ஹுஜுரானவர் சி.ரா. இளையதிவான் சாஹேப்புக்கு கொடுத்து-அதில் உட்கார வைப்பார். இரண்டு பழைய ஹௌதாக்கள் தயாராயிருப்பதில் ரெஸிடெண்டு சாயேப் ஸவாரியுடனிருக்கும் டாக்டர் சாயேப்பும்[83] அமரவேண்டும். அப்படி அவர்கள் ஹௌதாவிலமர்ந்தவுடனே சிப்பாய்களெல்லோரும் மறுபடியும் "ஜொஹார் பரங்க்" "ஜோஹார் யந்த்ர" செய்து ஹரஹர மகாதேவ என்று சந்தோஷத்தை வெளிப்படுத்துவதுடன் ஸவாரியுடன் கூடியிருக்கும் கொடியேற்றின யானையும், கும்வார் (வரிசை) ஜனங்களும் ஜிலேபே? கிரமத்துடன் நடந்து சி.ரா. இளையதிவான் சாஹேப் அவர்கள் ஜிலேபி கொடியேற்றின யானையும் வரிசையாயுள்ள ஜனங்களும் வரிசையில் வரிசை சேரும்படியாகவும்ஹுஜுரின் ஸவாரியின் ஒவ்வொரு வரிசையின் ஜனங்கள் முன்னால் சி.ரா. இளையதிவான் சாயேப்பின் ஜிலேபி வரிசைக்கிரமமாயுள்ள ஜனங்கள் அந்த வரிசையில் சேர்ந்துகொண்டு ஜிலேபி

77. மக்லோட் - யாத்திரையில் உடன் இருந்த ஆங்கில மருத்துவர் (பக்.112)

78. சத்திரபதி - இரண்டாம் சரபோஜி

79. பாயிசாஹேப் - அஹல்யாபாயி (இரண்டாம் சரபோஜியின் மனைவி)

80. கவர்னர் ஜெனரல் - லார்டு ஹேஸ்டிங்க்ஸ் (1813-1823)

81. கங்காஜமுனி - இது ஒற்றைத் தந்தமுள்ள யானை (188சி-ஊ-16)

82. ஹௌதா - தங்கமுலாம் பூசிய வெள்ளி ஹௌதா

83. டாக்டர் சாயேப் என்றது டாக்டர் தலநைன் மக்லோட் (188சி-ஊ-53)

நடக்கவேண்டும். அப்பொழுது கார்பாரிகளும் வஜாரத்மாப[84] முதலிய பெரிய பெரியவர்கள் ஹுஜூரின் ஸந்நிதானத்தில் வந்து, யோக்கியதையின்படி வணக்கமாக மரியாதை செய்து, மறுபடியும் அவரவர்களுக்கு ஏற்பட்ட இடத்திற்குப் போகவேண்டும். ஹௌதாக்கள், அம்பாரிகள், ஷஜராங்கின்? யானையின்மேல் யானை இவைகளின் பேரில் அமர்கிறவர்கள் பெரிய கார்பாரிகளும், துரைகளும் வஜாரத்மாப அவர்கள் மட்டும் சி.ரா. இளையதிவான் சாஹேப் ஹௌதாவுட விருக்க வேண்டும். அதற்குபின் சௌ. மா. பாயிசாயேப் அவர்களுடைய பல்லக்குமுன் ஹுஜூரின் சவாரி இங்கிலாந்து தேசத்திய குதிரையின் ஆகுமாகையால் அப்பொழுது சீமைக்குதிரை தயாராக இருக்கவேணும். ஹுஜூரின் ஸவாரியுடன் வேறொருவருமிருக்கக் கூடாது. குதிரையிலேறும் பெரிய கார்பாரிகளும் வஜராத்மாபுகளும் "நௌபத்"[85] யானையின் பின்னிருக்க வேணும். அதன் பின்னர் "பார்கீர்கள்" இருக்கவேணும். அதன்பின் சிலேதார்களிருக்க வேண்டும். அதன்பின் பல்லக்குகளும், வண்டிகளும் பாரவண்டிகளும் ஸவாரியில் உட்காருபவர்களுமிருக்க வேண்டும். ஆனால் இந்த ஸவாரி செய்பவர்களில் விவஸ்தை செய்த[86] 'ஜிலேபியில்' நடுநடுவே தன்னுடைய ஸவாரியைக் கொண்டுவந்து விவஸ்தை அழிக்கக்கூடாது. ஆனால் சிப்பாய்களின் ஸர்தார்கள் மட்டும் தன்னுடைய பந்தோபஸ்துக்காக ஜிலேபியில் கூட விவஸ்தையுட விருக்க வேண்டும்.

ஹுஜூரின் ஸவாரியும் சி.ரா.இளையதிவான் சாயேப்பின் ஸவாரியும் சேருமிடத்தில் குழப்பமேற்படாமல் விவஸ்தைப்படி யிருப்பதினால் மனதிற்கும், பார்ப்பதற்கும் அழகாக யிருக்கும்படி எல்லோருடைய மனதிலும் ஒரு ஏற்பாடு ஊன்றுவதற்கு ஒருபடம் எழுதி இந்தக் கடிதத்தில் வைத்திருக்கிறது. அந்தப் படத்திலேயே இரண்டு ''ஜிலேபா' சேரும்விதமும் சி.ரா. இளையதிவான் சாயேப்

(17)அவர்கள் ஹுஜூரின் சௌ. மா. பாயிசாயேப் அவர்களையும் பார்த்துவிட்டு ஹௌதாவின் பேரில் அமருகிறவரையிலும் அதே மாதிரியாக நின்றுகொண்டு பின்னர் சி.ரா. இளையதிவான் சாயேப் ஹௌதாவின் மேல் அமர்ந்ததும் சிப்பாய்களெல்லோரும் "ஜோஹார் பரங்க், ஜோஹோர் யந்தர" செய்து ஹரஹர மஹாதேவ என்று சொல்லிக் கொண்டு ஹுஜூரின் ஒவ்வொரு வரிசையின் ஜனங்கள் முன்னால் சென்றவுடன் சி.ரா. இளையதிவான் சாஹேப்பின் ஜிலேபி வரிசையிலுள்ள வீரர்கள் ஒவ்வொரு வரிசைக்குப்பின் சேர்ந்து நடப்பதற்கு. அந்தப்படத்தில் "ஹுஜூசே ஹரீனே"? வரிசையில் வரிசை சேருகிற அடையாளத்தையும் காட்டப்பட்டிருக்கிறது. அதனால் நன்றாகப் புரிந்து கொள்ளலாம். இதன்மேலும் ஸவாரியுடனுள்ள ஸர்தார் ஜனங்களும் வஜாரத்மாப பாபுராவ் அமிருதராவ் இங்களே ஒருநாள் முன்னால் சிதம்பரத்திற்கு வந்து மேற்சொன்ன படத்தின்படி சேரும்விதத்தை நன்றாய்ப் புரியும்படி செய்வார். இன்னும் பேட்டி ஆகுமிடத்தைத் தீர்மானம் செய்து, அதையும் தெரிவிப்பார். ஆனால் இந்த சமாசாரமெல்லாம் கர்னல் லெப்டன் வில்யம்

84. வஜராத்மாப் - பெரிய அதிகாரிகள்

85. நௌபத் - வாத்தியவிசேடங்கள் Ceremonial Music, the right to use which was specially granted by the government (Records of Fort St. George, Country Correspondence, Military Dept., 1757, Madras, 1913 Index Page XIII)

86. விவஸ்தை செய்த - முறைப்படுத்திய

ப்ளாக்பர்ன் சாஹேப்புக்கு நீங்கள் கடிதம் பார்த்தவுடன் வணக்கமாய் விபரமாய்த் தெரிவிக்கவும் என்று ஸர்கேல் பாபாஜி ராமாஜி பண்டிதர் எழுதுகிறார்.
முகாம் - ரட்னே 1822 ஏப் 7உ

(18) 1822 ஏப் 10உ
முகாம் - பனிஉருட்டி

ஸர்கேல் ரா. ராமோஜி ஸர்ஜேராவ் காட்கே காயலாவாயிருப்பதால் ஸவாரிக்கு முன் கொண்டழைக்க வருவதிற்கில்லையென்று ஹூ ஜூரறிந்து அவருக்குத் தேவலையாகிறவரையில் தினந்தோறும் பராமரித்து கடிதம் எழுதுகிறது.

(19) 1822 ஏப் 27உ
முகாம் - மூப்பமாநூர்

சுப்பராவ் ஜாம்ப்ளே இடமுள்ள இராமநாமத்தின் முத்திரையினால் ஆறுமோஹராவும், நம்முடைய பெயருள்ள முத்திரையினால் 2 மோஹர் செய்து மேற்கண்ட பெட்டியையும் 7 பட்டாளக்கத்தி தங்கத்தஹமன்? கட்டினகத்தி 1ம் யானையின் சாமான்களையும் அனுப்பியிருக்கிறது.

(20) 1822 ஏப். 29உ
முகாம் - சுலக்ஷணாம்பாபுரம்

ரெஸிடெண்ட் சாயேப் சிதம்பரத்திலிருந்து உட்கார்ந்து கொண்டிருந்த வெள்ளி இரண்டு கலசங்களுள்ள கருப்பு ஹௌதா? ஒன்றும் அவருக்குக் கொடுக்கிறது என்று நேரில் உத்திரவானபடிஷி பெண்யானையின் மேல் சொன்ன ஹௌதாவை வைத்து அதற்குச் சகலாதீயின் கராகாசா போட்டு, அந்த யானைக்குட்டிக்கு மாவுத்தன் ஒருவனும் கூட ஒரு ஆள் ஒரு நௌபதி ஒருபில் தூக்குகிறவனை நியமித்து பில்கானாவிலுள்ள ஒரு ஏணியை ஹௌதாவின் கீழ் யானையின் விலாவிற்குக் குறுக்கே கட்டி, ஸ்வாமியார் சத்திரத்தி ' லிருக்கும் ரெஸிடேண்ட் சாயேப்பிடம் கொடுக்கிறது.

(21) 1822 ஏப். 29உ
முகாம் - சுலக்ஷணாம்பாபுரம்

நா நா. சாயேப்பின்[87] மனைவி சுந்தராபாயியிடம் வேலை பார்க்கும் வெங்கட்ராவ் நலகே அவர்களுக்கு ஹூ ஜூரின் உத்திரவின் விஸ்தாரம்.

---

87. நாநாசாயேபு - துக்கோஜியின் மகன்
நானாசாகேப்
அப்பூசாகேப்
நானாசாகேப் (இவரது மனைவி சுந்தராபாயி)
(பக்கம் 116 போ.வ.ச.)

*(22) 1822 ஏப். 23உ*
*முகாம் - திருவையார்*

ஹுஜூரின் ஸவாரி நாளை புதன்கிழமை 3 மணிக்கு இங்கிருந்து புறப்பட்டு 4 நாழிகை பொழுதிருக்கும் பொழுதே கோட்டைக்கு வரப்போகிறாராகையால் பட்டணத்தை அலங்காரம் செய்தும், அரண்மனையில் தோரணம், வாழைமரங்கட்டி, பூர்ண கலசம் வைத்து, அலங்கரித்து இரவில் சாப்பாடு தண்ணீர் வகையறா தயாராயிருக்கும்படி ஏற்பாடு செய்யவும். கோட்டையின் வாசலின்மேல் 21 பீரங்கிவிடுகிறது. திருஷ்டி சதகா வழக்கப்படி தயாராயிருக்கட்டும். மாடியில் ஹுஜூரின் உட்காருகிற ஜமுக்காளம் விரித்து தயாராயிருக்கட்டும்.

ஹுஜூருடைய ஸவாரியுடன் வெள்ளைக்காரர்கள் அரண்மனைக்கு வரப்போகிறாராகையால் மாடியில் நாற்காலிகளைப் போட்டு, சபை ஸித்தமாயிருக்கவேணும். அப்படி புஷ்பம், நெட்டி 15, சந்தனம், வெற்றிலை, பன்னீர், அத்தர் ஸித்தமிருக்கட்டும். இவைகளில் அத்தர் தானி என்பதை இவ்விடமிருந்து அனுப்புகிறோம்.

ஸவாரியுடன் வந்திருக்கிற அம்பாரிகள் தௌலத் பங்க் வரையில் தாராளமாக வருவதற்குக் கோட்டையின் வாசல்கள், அரண்மனை பங்க்கின் அளவை மனதில் எண்ணி அதற்குத் தகுந்தாற்போல் வாசலை நுழையும்படி செய்யவும்.

*(23) 1822 ஏப். 30உ*
*முகாம் - திரௌபதாம்பாபுரம்*

காசீ ஸவாரியிலிருந்து வேலைக்காரனாகி வந்தவன் தற்காலம் தஞ்சாவூரிலிருக்கும் வாத்தியக்காரன் வெள்ளைக்காரன் அகனீஸ் புரூஸ் என்பவனிடம் "ஐரிஷ் பைப்" என்னும் வாத்தியம் இருக்கிறது. அவனுக்குச் சம்பளம் ரூ.45. அவனை சாமியார் சத்திரத்திலிருக்கும் ரெஸிடெண்ட் இடம் ஒரு குதிரையைக்கொடுத்து அனுப்பவும். அவன் தன்னுடைய மனைவியையும் அழைத்துச் செல்ல வேணுமென்றால் அவருக்கு ஒரு வண்டியையும் வண்டிக்காரனையும் தீனியும் கொடுத்து அனுப்புகிறது.

*(24) 1822 ஏப். 30உ*
*முகாம் - திரௌபதாம்பாபுரம்*

இராமேஸ்வரம் ஸவாரி முடித்துத் தஞ்சைக்கு வந்ததும், சென்னைக்கு ஸவாரி புறப்படப்போவதால், அந்த ஸவாரிக்கு டேரா, படதா, கனாத்கார், வகையறா சாமான்களை எல்லாம், ஒட்டகத்தின்மேல் ஏற்றித்தான் செல்லவேணுமாகையால், ஒட்டகங்களுக்கெல்லாம் சொரி வந்திருந்தது. அதற்கு எண்ணை கந்தகம் வகையறாவைத் தடவி, தேவலையாகும்படி கவனிக்கவும். தினப்படி தீனி வகையறா கொடுத்து 8 நாட்களுக்கொருமுறை ஒட்டகமொன்றுக்கு 2 சேர் நெய்யை உள்ளுக்குக் கொடுத்துக் கவனிக்கவும்.

*(25) 1822 பிப். 15உ*
*முகாம் - ஸம்மஸாபாத்*

மோதிராஜ், ஸிரதாராஜ், இயாநீ யானை சிதம்பரம் வரையில் நடந்துவர சிரமப்படுமாகையால் கோட்டையிலே விட்டுவிடுவதாக எழுதியிருப்பதை அறிந்து, காலத்தின் கவனிப்புப்பற்றி ஹுஜூருக்கு அந்த விஷயம் சம்மதமானது. ஆனால் பெரியதும் பலவந்த[88]முள்ளதும் வருஷந்தோறும் மதம் பிடிக்கிறதுமான மேற்படி இரண்டு யானைகளும் இவ்வளவு பலஹீனமடைந்ததைக் கேட்க, அதனுடைய பாதுகாப்பு சரிவர நடக்கவில்லையென்றும், அதனால்தான் அதற்குப் பலஹீன முண்டாயிற்றென்றும், ஹுஜூருக்கு நிச்சயம் தோன்றினால் அப்படி பாதுகாக்கிற ரதீபா (புஷ்டி கொடுக்கும் ஆகாரம்) ஸர்காரிலிருந்து சரிவர கிடைக்காததினால் அல்லது யானையின் வயிற்றில் விழாமல் போகுவதனால்தானென்று மாத்திரம் நிச்சயமாகவில்லை.

இருக்கட்டும். இனி மோதிராஜ், ஸிரதாராஜ், விட்டலப்ரஸாத், மாணிகராஜ இந்த 4 யானைகளுக்குச் சமானமானது அநேக யானைகளில் பொறுக்கப்பட்டதாகையால் அந்த 4 யானைகளில் முழு ராதீபா[89] அரிசிமாவைக் கொடுத்து, அதன் ரொட்டி செய்து, நெய்யைத் தடவி ரொட்டியை உள்ளுக்குக் கொடுக்கிறது. மேற்கண்ட தீனி திருட்டுப்போகாமலும் யானையின் வயிற்றில் விழும்படி செய்கிறது.

*(26) 1822 பிப். 15உ*
*முகாம் - ஸமம்ஸாபாத்*

மா.ஆவுசாப்[90] அவர்களின் ஆக்ஞைப்படிக்கி வயிரத்தினால் செய்யப்பட்ட நாமம் ஸ்ரீவெங்கடாசல ஸ்வாமிக்குச் சேர்ப்பித்து சங்கதிக்கு எழுதுகிறேனென்று ஹுஜூரின் நமஸ்காரத்துடன் மா. பாயிசாப்புக்குத்[91] தெரிவிக்கிறது.
*(27) 1822 பிப் 29உ*
*முகாம் - பாகாட்டூர்*

முதல் யுத்த வீரர்களில் ஸமூஹவான்[92] ஸேக்முகம்மது லகடே, ஸாளங்க்கே, ஜாதவ், மீர்சிங் இந்த ஐவருக்கு முதல்தரமான 5 குதிரைகளைக் கொடுத்து திருப்பதி முகாமுக்கு அனுப்புகிறது.

*(28) 1822 மார்ச்சு 25உ*
*முகாம் - காளஹஸ்தி*
கனம் பொருந்திய கவர்னர் ஜனரல்சாயேப் அவர்கள் ஹுஜூருக்குக் கொடுத்த ஹௌதாவின் யானையின் மாவுத்துக்குக்[93] கொடுக்க தங்கத்தின் காப்பு ஜோடி 7 1/2 மாத்து 1 1/2 சேரும்

88. பலவந்தம் என்பதைப் பலம் என்று படிக்க

89. ராதீபா - ரதீபா (சில வரிகளுக்கு முன் ஆளப்பட்ட சொல்) அங்குக் கொடுத்த பொருள் "புஷ்டி கொடுக்கும் ஆகாரம்" என்பது.

90. ஆவுசாப் - இரண்டாம் சரபோஜியின் தாய்

91. "பாயிசாப்" என்பதை "ஆவுசாப்" என்று திருத்திப் படித்தல் வேண்டும்.

92. ஸமூஹவான் - முதல் யுத்த வீரர் என்று இங்கேயே கூறப்பட்டுள்ளது. சமுத்வான் என்றும் சொல்லப்பெறுவர்; பட்டாளத்துப் பதவிகளுள் மேலானபதவி (பக்கம் 342)

93. மாவுத்து - யானைப்பாகன்

*ஜாணை[94]யில் ஒரு ஜோடியும், உத்தரியின்[95]ஆடையில் மாஹதாபி[96] சட்டை ஒன்றும், முண்டாசும் கட்டி, ஒரு கின்க்காபீ துமான? ஒன்று இந்தப்படிக்குத் தயார்செய்து ஸவாரி முகாமுக்கு அனுப்புகிறது.*

*(29) 1822 மார்ச்சு 27உ*
*முகாம் - புதூர்[97]*
*ஸ்ரீராமேஸ்வர யாத்திரைபோக ஒவ்வொரு இடத்திலும் தங்குவதற்குச் சத்திரம் பார்த்து இறங்குவது இந்தக் கோடையில் சுகமாகவிருக்குமாகையால் - முதலில் வழியின் அளவு இருந்தாலும் அதிலிருந்து அல்லது முதலில் ஹர்காராவை[98] அனுப்பி, 10,12 நாழிகை செல்லும் வழியில் சத்திரம் பார்த்து, முகாமைத் தீர்மானித்து மீனமேஸலுக்காப்பாலுள்ள டேராவில் அந்த முகாமின் சத்திரத்தின் பெயரையும், அதன் விஸ்தீர்ணமும் அந்தச் சத்திரத்தில் ஹுஜூரின் சவாரிக்கும் மா. சௌ. பாயிசாப்களுடைய[99] சவாரிக்கும் இறங்கத் தகுதியுள்ளது; அல்லது தகுதியில்லாதது அல்லது ஒரு சவாரி மட்டும் இறங்க போதும், போதிய தண்ணீர் வசதி யிருக்கா? இல்லையா என்று விஸ்தாரமாகத் தெரிந்துகொண்டு சாமான் ஸரஞ்சாம்[100] வைக்கோல், தீனி வகையறா கிடைக்கும்படியான இடமும் தெரியும்படி விபரமாக முகாம்களை எழுதித்தருவித்து ஸவாரி முகாமுக்கு அனுப்புகிறது.*

*முதல் தடவை ஸவாரி சென்ற பிரகாரம் முகாம்களையும் ஸவாரி ஜாபிதாவையும் தான தருமங்கள் வகையறாக்களின் ஜாபிதாக்களையும் விபரமாக அனுப்புகிறது.*

*(30) 1822 மே 2உ*
*முகாம் - மலினேரி ஒட்டையார்த் தேவன் சத்திரம்*

*சென்னப்பட்டணம் சுப்புறாவுக்குச் சம்பளம் சக்.60,இஜாபா சக்.7 1/2,ஆக புலி விராகன் 30[101]*

*அவருடைய தம்பிக்குச் சம்பளம் 5 புலி விராகன். சாமான், சரஞ் சாம்களை வாங்குவதற்கு நம்பிக்கையான மனிதன் உமரகானுக்குப் புலிவிராகன்4 தமிழில் கணக்கு எழுதுகிறவனுக்குச் சம்பளம் 2 புலி விராகன் கொடுக்கிறது.*

*(31) 1822 மே 2உ*
*முகாம் - மலினேரி உடையார்த் தேவன் சத்திரம்*

---

94. ஜாணை - சேணம் ஆகலாம். (சேணம் - மெத்தை)

95. உத்தரியின் (?) - உத்தரியம் - மேலாடை

96. மாறதாபி - (சிறந்த என்று பொருள்படும் போலும்)

97. புதூர் - புத்தூர் ஆகலாம்.

98. ஹர்காரா - ஒற்றர் (பக்கம் 76)

99. பாயிசாப்கள் என்றது அகல்யாபாயியை

100. ஸரஞ்சாம் - தட்டுமுட்டுச் சாமான்கள்

101. 67 1/2 சக்கரம் - 30 புலிவராகன் என்று இங்குக்குறித்திருப்பதால் 2 1/4 சக்கரம் 1 புலிவராகன் என்று இதனால் அறியலாம். (4 1/2 சக்கரம் 1 புலி வராகன் என்றும் உண்டு) (பக்கம் 150)

தங்க அம்பாரிக்குத் தங்கம் எடை 2 3/4 மனு வேண்டுமென்று எழுதுகிறீர். இவ்வளவு எடையில் செய்யும் நகை மிக உயர்ந்ததாகும். ஆகையால் 2 மனுவில் தான் செய்கிறது என்று ஹுஜூரின் உத்திரவு எப்படியானாலும் தங்க அம்பாரியின் வேலையை ஆரம்பிக்கிறது என்று நினைப்பூட்டுகிறோம்.

ஸ்ரீகாசி ஸவாரிக்குக் கொண்டு போன எல்லா யானைகளும் சென்னப் பட்டினம் ஸவாரிக்கும் கொண்டு போகப்படுமாகையால் அந்த யானைகளில் "பாடே தாகல்" பட்டிருக்கிறதற்கு மருந்தைத் தடவி, சீக்கிரம் காயும்படியாக ஜாக்கிரதை செய்து, அதற்குத் தினந்தோறும் ரொட்டியை உள்ளுக்குக் கொடுக்கும்போது நீங்கள் சமீபத்திலிருந்து பார்த்து ரொட்டியைக் கொடுக்கிறது.

*(32) 1822 மே 2வ*
*முகாம்*[102] ..............................

சென்னை சுப்புராயரின் மூலமாய் வயிரம் வாங்கினதற்கு ரூ.30,800 வெகு ஜல்தியாய்[103] செல்லாகும்படி செய்கிறது என்று தங்களுக்கு எழுதியிருந்தது. அதற்குத் தங்க ரூபாய் 787ம் விஸ்வநாத சந்திர சேகர் இவர் பாபத்து 69 1/2 லபா ஜமஸி ரூ.800 ஆக பாபத்து 3க்கு ரூ.13447-8-0 நீங்கள் எழுதினீர்களானால் மேல் காட்டிய தங்கரூபாய் ஒன்றுக்கு ரூ.15 விலை இருப்பதால் அது பிசகு ஆனதால் மேற்சொன்ன தங்க ரூபாய்களில் சிற்சில ரூ.10 விலையுள்ளது. ரூ.5 விலையுள்ளதுமாயிருக்கலாம் என்று நிச்சயம். செல்லாவதற்கு எந்த விதத்தில் செய்தால் ஸர்காருக்கு லாபம் உண்டாகுமோ அந்தப்படிக்கி செய்யவும்.

*11(33) 1822 மே மீ 2வ.*
*முகாம் - மலினேரி உடையார்த்தேவன் சத்திரம்*

மிஸ்தர் ஜ்யான் ப்ளாக்பர்ன்[104] சாயேப் இடம் 1820 ஸு செப்டம்பர் மீ 22க்கு 8150 புலிவராகன் கடன் வாங்கினதற்குப் பத்திரம் எழுதி வட்டிமுதல் ஜாடாவுக்குக் கொடுத்துவிட்டு வாங்கின ரசீதுக்கு முத்திரையைப் போட்டு, பத்திரத்தை அனுப்பவும்.

*(34) 1822 மே மீ 4வ*
*முகாம் - நவபாஷாணம்*

ஹுஜூருடைய குடுமிக்குத் தடவ பாபு வைத்தியர் தேங்காய் யெண்ணைத் தயிலம் செய்து கொடுப்பது. அதை அப்படி 2 சேர் செய்து, தயாராயிருக்க வேணுமாகையால் வைத்தியரிடம் சரக்குகளை வாங்கிக் கொடுத்துத் தைலம் தயார் செய்து வைக்கிறது.

இராமேஸ்வர ஸவாரி:-

மீனமேஸலில் "தயிர் தெவசம்" செய்வதாய் நிச்சயித்திருப்பதால் அதற்குக் காசி யாத்திரைக்குப் போகையில் "நெய் தெவசத்திற்குப்" பித்தளைக் குடங்களை வாங்கினபடி

102. மலினேரி உடையார் தேவன் சத்திரம் ஆகலாம்.

103. வெகுஜல்தி - மிக்க விரைவு

104. "ஜான்பிளாக்பர்ன்" என்பவர் யார் என்று தெரியவில்லை.

குடங்களையோ அல்லது அதே மாதிரி பித்தளைத் தவலைகளையோ அவ்வளவு எண்ணிக்கை வாங்கி உள்ளுக்கு ஈயம்பூசி இன்றைக்கு 9ம் நாள் மீனமேஸலுக்கு வந்து சேரும்படி அனுப்புகிறது.

(35) 1822 மே மீ 4உ
முகாம் - நவபாஷாணம்

ரெஸிடெண்ட்[105] சாஹேப் சிதம்பரத்திலிருந்து, தஞ்சைக்கு ஜகன்னாதத்தின் யானைக்குட்டியின் மேலுள்ள ஹௌதாவின் மேல் அமர்ந்து வந்ததினால் மாவுத் உஸ்மானுக்கு ரூ.40 இனாம் கிடைத்ததென்று எழுதியிருந்தீர். உஸ்மானுடைய சிரமம் கொஞ்சநாள்பட்டதுதானாகையால், அந்த யானைக்குட்டியின் பழைய மாவுத்தான மாரியம்மன் கோவிலின் மாவுத்துக்கு ரூ.30ம் உஸ்மானுக்கு ரூ.10ம் கொடுக்கிறது.

(36) 1822 மே மீ 13உ
முகாம் - நவபாஷாணம்

14உ விடியற்காலையில் இங்கிருந்து புறப்பட்டு - வீரசங்கிலி சத்திரத்திற்கு ஹுஜூரின் ஸவாரி வந்து, அங்கிருந்து கலினேரிக்கும், ராஜகுமராம்பாபுரம், திரௌபதாம்பாபுரம், சாலுவ நாய்க்கன் பட்டிணம், பட்டுக்கோட்டை - முக்தம்பாபுரம் சத்திரம் இப்படி 7 ஊருக்குத் தினந்தோறும் முகாம் செய்துகொண்டு தஞ்சாவூருக்கு வருமாகையால், அரண்மனையில் நுழைவதற்கு நல்லமுகூர்த்தம் 2,4 நாட்களில் தெரிவிக்கிறது.

(37) 1822 மே மீ 9 உ
முகாம் - இராமேஸ்வரம்

சர்காரின் உத்தரவுப்படி திருப்பதி ஸ்ரீவெங்கடாசல ஸ்வாமி கோவிலின் காரியஸ்தரான கிரிறாயரானவர் நாகோபா ஆத்மாராம் கோசாமியைத் தேடிக்கொண்டு வந்து தன்னுடைய வீட்டில் வைத்துக் கொண்டிருக்கிறார். அவர் நாகோபா கோசாமியாருக்கு வைத்தியம் செய்ததற்கு ரூ.5ம் தேடிக்கொணர்ந்தவனுக்கு இனாம் ரூ.25ம் இதுவரையில் அன்னமளித்த சிலவு வகையறா ரூ.10ம் ஆக ரூ.40ம் சேரவேணுமெண்கிறார். அதன்படிக்கு ரூ.40ம் கிரிராயரின் கிரமத்திற்காக ரூ.30ம் ஆக ரூ.70 அந்தக் கிரிராயருக்குச் சேரவேண்டியது. நாகோபா கோசாமியின் தாயாரிடம் சொல்லி மேற்கண்ட ரூ.70உடன் திருப்பதிக்குச் சென்று நாகோபா கோஸாமியாரை அழைத்துவர அவர்களுடைய நம்பிக்கையுள்ள ஒரு மனுஷன் வாஹனம் வழிச்சிலவிற்குக் கொடுத்து, திருப்பதிக்கு அனுப்பிய சங்கதிக்கு எழுதுகிறது.

(38) 1822 மே மீ 10உ
முகாம் - இராமேஸ்வரம்

ஜோஸப் ம்யாண்டன் கீரின் துப்பாக்கியை ஏலத்தில் மிஸ்தர் ஜ்யாலி என்பவர் வாங்கினார். அது சர்காருக்குத் தேவையாயிருந்தால் அந்தத் துரைக்கு எண்ணமிருக்கிறதென்றும்,

105. ரெஸிடென்ட் - வில்லியம் பிளாக்பர்ன் (பக்.66)

அம்மாதிரி 'ரைபல்'[106] துப்பாக்கியோ, சீமையிலிருந்து வரவழைத்தால் கிடைக்கும். தேவையிருந்தால் தருவித்துக் கொடுக்கிறேனென்று மிஸ்தர் காகரே சாஹேப் தெரிவித்தார்.

*(39) 1822 மே மீ 10௨*
*முகாம் - இராமேஸ்வரம்*

விஸ்வாஸராவ் காட்கே அவர்களிடமுள்ள குதிரைக் குட்டிக்கு தட்டிமகாலிலிருந்து தினந்தோறும் 5 சேர் பால் கொடுக்கிறது.

*(40) 1822 மே மீ 10௨*
*முகாம் - மைக்கூடு*

தங்க ரோஜாப்பூவின் மாலைகளையும் தங்கமீன் மாலைகளையும் திருச்சினாப்பள்ளியில் தயார் செய்வதைப் பற்றி விபரம்.

*(41) 1822 மே மீ 15௨*
*முகாம் - கவினேரி*

கொழும்பு தேசத்துக் கவர்னர் கோட்டைக்கு வந்தால் ரெஸிடெண்ட் உத்தரவின்படி அவருக்கு மரியாதை செய்கிறது.

ஹுஜூரின் ஸவாரி கோட்டைக்கு வந்ததும், காளபைரவ[107] ருடைய சமாராதனை ஆகுமாகையால் கொட்டியத்திற்குத் துகை கொடுத்து, முந்தியே ஜாக்கிரதை செய்திருக்க வேணும்.

ராமோஜி ஸர்ஜேராவ் காட்கே அவர்களுக்கு ஆரோக்கிய ஸ்நான[108] மானதென்ற சமாசாரம் ஹுஜூருக்குத் தெரிந்து உண்டான சந்தோஷத்திற்கு அளவில்லை. அவருக்குச் சிகித்ஸை செய்த வைத்யர் மொஹிதீன் சாஹேப்புக்கு அரண்மனைக்கு அழைத்து வந்து ஆடைகளைக் கொடுக்கிறது.

*(42) 1822 மே மீ 15 ௨*
*முகாம் - கவினேரி சத்திரம்*
இராமேஸ்வர ஸவாரியுடன் வந்த ஜனங்களின் எண்ணிக்கையைத் தெற்கிலுள்ள "உபச்யார" சாவடியில் எண்ணுகிறது.

*(43) 1822 மே மீ 18௨*

*முகாம் - சாலுவநாயக்கன் பட்டினம்*

106. ரைபல் - Rifle - சுழல் துப்பாக்கி

107. காளபைரவர் - காலவைரவர்; காசியிலுள்ள பைரவமூர்த்தி; யமன் இவ்வைரவருக்கு அஞ்சிக் காசியிலுள்ளாரை வருத்தாது கொண்டேகுவர் என்பது ஐதிகம். இதுபோன்று இம்மூர்த்தி தஞ்சை அரண்மனையில் எழுந்தருள்விக்கப்பெற்றுள்ளார் போலும்.

108. ஆரோக்கியஸ்நானம் - உடல் நலமான பிறகு செய்யும் நீராடல் (ராமோஜி ஸர்ஜேராவ் காட்கே உடல் நலமற்று இருந்த செய்தி 10-4-1822இல் எழுதிய கடிதத்தில் குறிப்பிடப்பட்டது)

ஜோஸியர் பாபாஜி என்பவர் முகூர்த்தத்தின் ரோகா[109]வும் வந்து சேர்ந்தது.

*(44) 1822 மே மீ 18உ*

*முகாம் - சாலுவநாயக்கன் பட்டினம்*

ஹுஜூரின் ஸவாரி ஜேஷ்ட்ட சுத்த திவிதியை [110] புதன்கிழமை விடியற்காலையில் முக்தம்பாபுரம்[111] சத்திரத்திலிருந்து புறப்பட்டு, சைதம்பாபுரம்[112] சத்திரத்தில் காலையில் போஜனஞ் செய்துகொண்டு, மத்தியானம் சிற்றுண்டியையும் செய்துவிட்டு, அங்கிருந்து புறப்பட்டு, நீங்கள் எழுதின முகூர்த்தத்தின்படி அரண்மனையில் பிரவேசிக்கப்போகிறது. இரவில் சாப்பாடும் நகர அலங்காரமும் செய்து தயாராயிருக்க வேணும்.

*(45) 1822 மே மீ 18உ*
*முகாம் - சாலுவநாயக்கன் பட்டினம்*

தங்க அம்பாரியின் வேலைக்கு [113] ஜீஞ்ஜார் வேலை பார்க்கும் வெங்கடாஜலமிடத்தில் தங்கத்தின் கும்பினி ரூபாய் 1க்கு 15 ரூ வீதம் 475ம், ஒன்றுக்கு 5 ரூ வீதம் 50ம் ஆக 525 தங்க ரூபாய்களை அனுப்பியிருக்கிறது. வேலையை நடத்துகிறது.

*(46)*
ஜான் பாதரியின்[114] வீட்டிற்கு அருகிலுள்ள வீட்டைத் தயார் செய்ய 70 அங்கணம் பந்தல் போடுவதற்கு மூங்கில் 300ம் கீத்து 8000ம் 200 பாய்களும் கொடுப்பதற்கு உத்திரவு கொடுக்கப்பட்டிருக்கிறது.

*(47) 1821 ஆகஸ்டு 6உ*
*முகாம் - காசி*

பூர்வாசிரமத்தில்[115] வைத்தியர் குட்டிப்பையா வாஜிபேயர்[116] தற்பொழுது பரமஹம்ஸாச்ரமம் (சன்னியாசம்) வாங்கி, ஸ்ரீகாசீ க்ஷேத்திரத்தில் கேதார கட்டத்தில்

---

109. முகூர்த்தத்தின் ரோகா - இராமேசுவர யாத்திரை முடித்து அரண்மனையில் புகுவதற்குரிய நல்ல நேரம் குறிப்பிடப்பட்ட குறிப்பு (188சி-ஊ-36)

110. ஜேஷ்டம் - ஆனி; சுத்த - வளர்பிறை; திவிதியை - இரண்டாம் நாள்

111. முக்தாம்பாபுரம் - ஒரத்த நாடு

112. சைதம்பாபுரம் - சூரக்கோட்டை

113. தங்க அம்பாரியின் வேலை பற்றி 188சி-ஊ-31 இல் காண்க.

114. ஜான்பாதரி (தரங்கம்பாடியில் ஒரு பள்ளி வைத்திருந்தார்; தஞ்சையிலும் ஒரு பள்ளி வைத்திருந்தார் போலும்)

115. பூர்வாசிரமம் - முன்னைய நிலை

116. வாஜபேயர் - வாஜபேயம் என்ற யாகம் செய்தவர்கட்குரிய பட்டப் பெயர். வாஜபேயம் என்பது அந்தணர்களாலும் அரசர்களாலும் செய்யப்பெறும் யாகங்களில் ஒன்று. இது ஐப்பசி கார்த்திகை மாதங்களில் செய்யப்பெறுவது. இதில் ரதாரோகணம் (தேரேறுதல்) சுவேதாசத்ரதாரணம் (வெண்குடை பிடித்தல்) முதலிய ஆறு அம்சங்கள் உண்டு (பக்.373).

வாசஞ்செய்து கொண்டிருக்கிறார், க்ஷேமமாயிருக்கிறார். அந்த ஸ்வாமிகள் ஹுஜூருக்குத் தரிசனங் கொடுத்தார்.

*(48) 1821 ஆகஸ்டு மீ 6உ*
*முகாம் - காசி*

மிஸ்தர் டூரியன்[117] சாஹேப்பிடமிருந்து வந்த 2ஹுண்டிகளுக்கும்துகையை அனுப்புகிறது.

*(49) 1821 ஆகஸ்டு மீ 6உ*
*முகாம் -காசி*

முதல் தடவையில் தாம்பிர விஷ்ணுபாதம்[118] 608ஐ அனுப்பியிருக்கிறது. தற்போது அனுப்பிய 295க்கு விபரமான ஜாபிதா ஆக-933

*(50 to51) 1821 மார்ச்சு மீ 31உ*
*முகாம் - கதளகாவ்*
கப்பல் வேலையை நன்கு பார்க்கிற தச்சன் வெள்ளைக்காரன் மிஸதர் "யுஷ்ட விகஷ" என்பவனுக்கு மாதம் ரூ.180 சம்பளம் போட்டு அனுப்பியிருக்கிறது. அவனுக்குக் குடியிருக்கத் தெரிவித்தபடி ஒரு பங்களாவைக் கட்டிக் கொடுக்கிறது. அவனுக்குத் தச்சன் கொல்லன் வகையறா கொடுத்து, அவனுடைய புத்தி யுக்தியினால் சின்னது பெரியது கப்பல்களின் வேலையை ஆரம்பிக்கிறது.

*(52) 1821 மார்ச்சு மீ 31உ*
*முகாம் - கதளகாவ்*

ஜனவரி மீ 29உ ஸோரோ என்னுமிடத்தில் தங்கினபொழுது, சாயங்காலம் டேராவுக்கு அரைநாழி வழி தூரத்தில் காட்டில் ஒரு பட்டாபட்டி[119] பெரிய புலி இருக்கிறதாகக் கேள்விப்பட்டு முத்துசிங்கு ஸேர்வேகாரன் தன் புத்தியினால் ஒருகையில் ஈட்டியும் பால்யமும்? *(spear)* மற்றொன்றில் கேடயமும் எடுத்துக்கொண்டு போகக்கூடாதென்று சொல்வார்களுடைய பேச்சையும் கவனிக்காமல் புலி உட்கார்ந்திருந்த இடத்திற்கு அண்டினபொழுது அந்தி சந்திக்காலம்; அச்சமயத்தில் நன்றாகத் தூரத்திலிருந்து தெரியாமல் புதர்களின் கூட்டத்தில் சென்று குனிந்து அந்தப் புதரில் பார்க்கையில் உள்ளிருந்த பட்டாபட்டி புலி முத்துஸிங்கைப் பார்த்து வேகமாகப் பாய்ந்தது. கையினால் கழுத்தைப் பிடித்த பொழுது முத்துசிங்கு கேடயத்தைக் கொண்டு புலிக்குக் கொஞ்சம் காயப்படுத்தினான். ஆனாலும் புலியானது

மிகப் பலசாலியானதால் முத்துசிங்கை அப்படியே கீழே தள்ளி, தான் காயமடைந்ததால் அவனை விட்டுவிட்டு அதற்கப்பாலுள்ள பெரிய காட்டிற்குள் ஓடிப்போயிற்று. இருட்டினாலும், மற்ற ஜனங்களின் ஆக்ரஹத்தினாலும்[120] திரும்பி வந்து ஹுஜூரின் சமீபம்

117. மிஸ்தர்டூரியன் - இவர் கி.பி.1798 முதல் 1811 வரை ரெஸிடென்டாக இருந்தவர் (பக்.65-66)

118. விஷ்ணுபாதம் - திருமால்திருவடி; கயையில் பூசை செய்யப்பெறுவது.

119. பட்டாபட்டி - (பெரிய?)

120. ஆக்ரஹம் - ஆக்கிரகம் - விடாப்பிடி; கடுங்கோபம்

வந்து சங்கதியைத் தெரிவித்தான். தீவட்டியைச் சமீபத்தில் கொண்டு வந்து பார்க்க, கழுத்தைச் சுற்றிலும் நகத்தின் காயமும், 7,5 இடத்தில் குத்துக்களுமிருந்ததைப் பார்த்து, இப்பேர்ப்பட்ட காரியம் செய்யலாகாது என்று புத்திமதி சொல்லி வைத்தியர் ஸடனைக்[121] கொண்டுசிகித்ஸை செய்தார். இரணமாறினதும் அவனுக்கு ரூ.300 இனாம் கொடுத்தார்.

*(53)1821 ஆகஸ்ட் 21 உ*
*முகாம்-காசீ*

பங்கால் கவர்னர் ஜனரல்[122] ஹுஜூருக்குஎழுதிய கடிதம்ஹுஜூருடன்யாத்திரையில் கூட வந்த டாக்டர் ஸடன் பரலோகமடைந்தாரென்று எழுதியதைப் பார்த்து மனதுக்கு மிகத்துயர முண்டாயிற்று. இனி தங்களுடனிருக்க டாக்டர் தலநைன் மக்லோட் பகதூரை அனுப்பியிருக்கிறேன்.

***(54) 1821 ஆகஸ்ட் 29உ***
*முகாம் - காசீ*

சிவரஹஸ்யத்தின்[123] சுத்தமானதும் பூர்த்தியாயுள்ளதாயுமான ஒரு நகலையும் ஸமஸ்கிருதம் பக்தவிலாஸத்தின்[124] நகல் ஒன்றையும் ஸவாரி இருப்பிடத்திற்கு அனுப்புகிறது.

***(55) 1821 ஜூலை 25உ***
*முகாம்-காசீ*

சி.ரா. இளையதிவான்[125] சாஹேப் ஸாரட்டில் தான் அனேகமாக ஸவாரிசெய்வது. அதற்குச் சாஹேப் சம்மதப்பட்டு, அவருடன் சொல்லப்பட்ட ஸவாரியில் உட்கார்ந்து உலாவ வெளியே போகிறது மட்டுமல்லாமல் உலாவி சாயங்காலத்திற்கு முன் அரண்மனைக்கு வந்து சேராமல் இரவில் சாப்பாட்டுக்குப் பதிலாக சாதங்கட்டிக் கொண்டுபோய் அதைச் சாப்பிட்டு இரவில் 9, 10, 11 மணிக்கு அரண்மனைக்கு வருகிறீர்களென்ற நிஜமான சங்கதியை அநேக பேர்களின் முகாந்தரமாக ஹுஜூர்[126] நன்றாகக் கேள்விப்பட்டு, இந்த தகாத நடவடிக்கைக்காக ஹுஜூருடைய சித்தத்திற்கு எவ்வளவு வியசனம் ஏற்பட்டிருக்குமென்றதைச் சொல்ல முடியாது. இனிமேலாவது அப்படி ஸாரட்டில் உட்கார வேண்டியதில்லை.ஏனென்றால் அந்த வாஹனம் எப்பொப்பாவது ஆபத்து உண்டாக்கும்படி இருக்கிறது. பங்க்கின் நாயக்வகையறாக்களுக்கும்

---

121. ஸடன் - ஸட்டன் (Sutton) : இரண்டாம் சரபோஜி காசியாத்திரை மேற்கொண்ட பொழுது உடன் சென்ற ஆங்கிலேய வைத்தியர்.

122. கவர்னர் ஜெனரல் - லார்டு ஹேஸ்டிங்க்ஸ் (1813-1823)

123. சிவரகசியம் - இது சிவபூசாவிதியைக் கூறும் நூல்; 18ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஒப்பிலாமணி தேசிகரால் இயற்றப்பட்டது.

124. பக்தவிலாஸம் - சிவன் அடியார்களைப் பற்றிய நூல்

125. இளையதிவான் - இரண்டாம் சிவாஜி

126. ஹுஜூர் என்றது இரண்டாம் சரபோஜியை

திருப்தி அளிக்கக்கூடியதல்ல. இனி ஸாரட் ஸவாரியை நன்றாக மறந்து போகிறதென்று ஹுஜூரின்உத்திரவு

56.1821 செப் 11௳
முகாம்-காசீ

சி.ரா. இளையதிவான் சாஹேப்பின் உடம்பு அசௌக்யத்திற்குச் சிகித்ஸை செய்து தேவலை செய்த டாக்டர் ஸர்தாமஸ்ஸிவேஸ்த்ர[127] சாயேப்புக்கு அவருடைய பிரயாஸத்திற்குத் தக்கபடி மரியாதை செய்கிறது.

56.1821 செப் 11௳
சின்னதிவானுடைய வித்யாப்யாஸம்

மகாராஜாவானவர் வித்தை கற்கையில் கவனமாயிருந்து வித்தை கற்கவேண்டும். அந்தந்த வாத்தியார்களைக் கேட்க வேணும். அவர்கள் பதிலளித்து சமாதானம் செய்ய வேணும். அதனால் வாத்தியார்கள் சந்தோஷமடைவார்கள். வித்தை கற்கும் காலத்தை விளையாட்டிலும் வீண் பேச்சு பேசுகிறதிலும் கழிக்கிறாறென்பதை அநேகருடைய முகாந்தரமாக ஹுஜூருக்குத் தெரிந்து இருக்கிறது. கேட்கும் ஹுஜூருக்குக் கோபமும் வியஸனமும் உண்டாகுமென்று நான் சொல்லக்கூடாது.

வீண் காலம் கழிக்காமல் போஜனத்தின் நேரம் மாத்திரம் சாப்பிட்டு, மற்ற எல்லா நேரமும் இரவில் 3, 4 நாழிகையையும் ஒரே மனதாக வித்தையக் கற்க வேணும். வித்தையைக் கற்க காலத்தைக் கழிப்பதால் வாத்தியார்களுக்கெல்லாம் ஓய்வு இல்லாமல் செய்வதினால் அவர்கள் ஒவ்வொருவரும் மகாராஜா இன்ன வித்தைகளைக் கற்றிருக்கிறார் என்ற விவரமாக ஹுஜூருக்குத் தெரிவிக்க, தஸ்தாவேஜியை எழுதி, தம்முடைய அர்ஜியில் வைத்து அனுப்புவார்கள். அப்படியே ஜான் பாதரி சாயேப்பும் கேட்கும்படி மகாராஜா பிரயத்னம் செய்யவேண்டும்.

57.1821 செப் 11௳
முகாம் - காசீ

சௌ. சி. ராஜம்மாபாயி[128] அமணி ராஜே சாஹேப்பு மாப்பிள்ளை ரா. ஜீவாஜிமோஹிதே ராவ் சாஹேபு இவ்விருவருடைய சுக சந்தோஷத்துடன் இவர்கள்பேரால் முன் சொல்லப்பட்டவர்களுக்கும் தகுந்தபடி ஆசீர்வாதம்.

(58) 1821 செப் 11௳
முகாம்-காசீ

---

127. சரபோஜி காசியாத்திரையில் இருந்தபொழுது தஞ்சையில் இருந்த ஆங்கிலேய வைத்தியர் ஸர்தாமஸ் சிவேஸ்தர் ஆவர் (பக்.207)

128. ராஜம்மாபாயி - இரண்டாம் சரபோஜியின் முதன்மனைவி யமுனாம்பா பாயிக்குப் பிறந்த பெண்; இவருடைய கணவன் ஜீவாஜி மோஹிதே ஆவர்.

இங்கு விஜயதசமி வரையில் வசித்துப் பின்னர் பிரயாகைக்குப் போவது நிச்சயம் என்று முதல் கடிதத்தில் எழுதி இருக்கிறது. ஆனால் இந்தத் தேசத்தின் கோடைக் காலமும் மழைக்காலமும் குளிர்காலமும் இவைகளில் ஒவ்வொன்றும் மிக்க ஜாஸ்தியாயும் பொறுக்க முடியாததுமாக யிருப்பதைப் பொறுக்கமுடியாமல் சரீரத்தின் நிலைமை மாறுகிறது. ஆனால் மிகவும் சின்னக் குழந்தைத் தனமானதும், நுட்பமாகவுமுள்ள சரீரத்திற்குத் தேக ஸ்திதியை இந்தத் தேசம் மாற்றுகிறது என்பதற்குச் சந்தேகமில்லை. நம்முடையவும் நம்முடன் கூட யிருப்பவர்களுடையவும் சந்தோஷத்திற்காக பாத்ரபத பகுள திவிதியை[129] வியாழன் முதல் செப்டம்பர் மீ 13உ வரையில் இங்குத் தங்கி 14உ பிரயாகத்திற்குப்[130] போய், அந்த யாத்திரையை முடித்துக்கொண்டு பிரயாகையிலே காவடிகளைக் கட்டி, முதலில் மா. ஆவுசாப்[131] அவர்களுடைய திவ்ய சரணத்திற்கும் பின்பு மா. கிரிஜாபாயி அம்மா பின்பு ஸ்ரீராமநாத ஸ்வாமிக்கு[132] அபிஷேகம் தன் கையினாலேயே செய்ய வேணுமென்ற அவசரம் ஹுஜூருக்கு தோன்றியிருக்கிறது. ஆகையால் அந்த மஹோத்ஸவத்தைக்[133] கொஞ்ச மாசத்திலே நம்முடைய கண்ணால் பார்க்க தங்களதும், நம்முடையதும் பாக்யம் பழுத்திருக்கிறது... ... ...

*(59) 1821 செப் 11உ*
*முகாம் - காசீ*

வைத்தியர் மஸ்தானுடைய பிள்ளை ஸவாரியுடன் காத்திருந்து சிகித்ஸையை ஜாக்கிரதையாகச் செய்து வருகிறாரென்று ஹுஜூருக்குத் தெரிவதால் அவனுடைய தாபத்ரய[134]த்தைத் தீர்க்க தஞ்சாவூரில் அவருடைய பேரால் 200 சக்ரம் அவருடைய மாமனாரிடம் கொடுத்து சங்கதியை எழுதுகிறது.

*(60) 1821 செப் 11உ*
*முகாம் - காசீ*

தத்தாஜி சிவாஜியின் தம்பி பிள்ளையான அவதூத தம்பி விஸ்வம் இவ்விருவரும் காகாசாமியின் பிள்ளை விநாயக இம்மூன்று பேரும் காசிக்கு வந்து சேர்ந்து தத்தாஜி சிவாஜி-காகாசாமி இவ்விருவருக்கும் "மோஹரீரில்" வேலையிருந்தது. அதிக காலமாக அவ்விருவரும் குமாஸ்தாவின் வேலையிலிருந்தார்கள். வேலை ஒருவரால் பார்க்க முடியாத பொழுது, தன்னுடைய சகாயமுங் கொண்டு வேலையைப் பார்க்கையில், தன்னுடைய

---

129. பாத்ரபத - புரட்டாசி; பகுள - தேய்பிறை; திவிதியை-இரண்டாம்நாள்

130. பிரயாகத்திற்கு - பிரயாகைக்கு

131. ஆவுசாப் - இரண்டாம் சரபோஜியின் தாய்

132. இராமேசுவரத்தில் கோயில் கொண்டுள்ள பெருமான்

133. மஹோத்ஸவம் - பெருந்திருவிழா

134. தாபத்திரயம் - ஆத்யான்மிகம் (தன்னைப் பற்றி வருவன); ஆதி தெய்விகம் (தெய்வத்தான் வருவன); ஆதிபோதிகம் (ஐம்பூதங்களாலும் தன்னையொழிந்த பிராணிகளாலும் உண்டாவன) என்ற மூவகைத் துன்பங்கள்.

துரதிஷ்டத்தினால் 4 குமாஸ்தாக்களை எடுத்து விட்டார்கள். இப்பொழுது காலக்ஷேபஞ் சிரமமாயிருக்கிறது என்கிறார்கள். அவர்களைத் தஜ்தாவேஜு கச்சேரியில்[135] மறுபடியும் நியமிக்கவும்.

*(61) 1821 ஜன 2உ*
*முகாம்-ப்ரயாக[136]*

சிப்பாய்களுக்கு இடுப்புக்குக் கட்டுகிற ஹவால்யா? 130 வகையறா வாங்கி பாங்கி தபாவில்[137] என்றால் தபாவில் மூட்டைகளைப் போட்டால் காவடியைக் கட்டிக்கொண்டு வருவார்கள். ஆனால் அதற்குத் தபாலுக்கு உண்டாகுஞ்சிலவைக் கொடுக்கநேரிடுமாகையால் அதற்குப் போதுமான சிலவையாவது கொடுத்து அனுப்பும்படி ஹுஜுருடைய உத்திரவு

*(62) 1821 ஜனவரி 17உ*
*முகாம்-கடக்[138]*

டாக்டர் சட்டன்[139] சாயேப்புக்குச் சம்பளம் 720ரூ. முகாமில் 200ரூ. கொடுத்தது போக பாக்கி ரூ.520ஐ மதறாஸில் பின்னி கம்பெனியாரிடம் கொடுக்கிறது.

*(63) 1821 ஜனவரி 4உ*
*முகாம்-மிர்குவா*

டாக்டர் சட்டன் சாயேப்புக்குச் சம்பளம் ரூ.700. அவருடைய உதவி இந்தியனான வைத்தியருக்கு ரூ.20. ஆக ரூ.720 சுப்புராயரிடம் கொடுக்கிறது.

*(64) 1821 மார்ச்சு 6உ*
*முகாம்-சில்காகாட்*

இக்கடிதத்தைப் பெத்தி நாயக்கன் பேட்டையில் வைகுண்ட வாத்தியார் தெருவில் சுப்புராவுக்குக் கொடுப்பது.

*(65) 1821 மார்ச்சு 12 உ*
*முகாம் - மிர்ஜாபூர்*
அதைத்தவிர அங்குர் என்னும் திராக்ஷைப் பழத்தின் டப்பி ஒன்றும் மாதுளம்பழம் ஒன்றும் சேவ் என்னும் பழம் 1ம் இப்படி 3 வகையை அனுப்பியதைத் தஞ்சாவூருக்கு அனுப்புகிறதென்று சுப்புராவுக்குக்[140] கடிதம்.

135. தஸ்தாவேஜு கச்சேரி - தப்தர்கானா (பக்.453)

136. பிரயாக - அலஹாபாத்(Allahabad)

137. பாங்கிதபால் - பரங்கிதபால் (?) கும்பினியார் நடத்திய தபால்முறை (பக்.466)

138. கடக் - கட்டக் என்ற ஊர்

139. சட்டன் - Sutton ; இவர் சரபோஜி காசியாத்திரை செய்தபோது உடன் இருந்த ஆங்கில மருத்துவர்; இவர் காசியில் 10-7-1821ல் இறந்துவிட்டார் (பக்கம் 111-112)

140. சுப்பராவின் முகவரி இந்தப் பகுதியில் முன்னர் "பெத்திநாயக்கன் பேட்டையில் வைகுண்ட வாத்தியார் தெரு" என்று கண்டுள்ளது.

*(66)*
*முகாம்-மிர்ஜாபூர்*

**கல்கத்தாவிலிருந்து பரங்களேன் அண்கோ என்னும் கப்பலில் சாமான்களை ஏற்றி சுப்பராயருக்கு அனுப்பியதை நீங்கள் தஞ்சாவூருக்கு அனுப்புகிறதென்ற கடிதம் சாமான்களின் ஜாபிதாவு மிருக்கிறது.**

**கனம் பொருந்திய கவர்னர் ஜனரல்[141] ஸாயேப் ஹுஜூருக்கு ஹெளதாவுடன் யானைவகையறா[142] கொடுத்திருக்கிறார்.**

*(67) 1821 மார்ச்சு 23௳*
*முகாம்:- புரஸ்தாபாதுக்குச் சமீபமுள்ள ஹஸிம்பூர்*

**"லுக்வ்யாத்" என்னும் மஞ்சள் நிறமுள்ளதாயிருக்கிற பழங்களின் விசேஷம். பொதச்சீ வட்டமான கருப்பாயிருக்கும் பழங்களும், வங்காள தேசத்தியதும் சாப்பிடத் தக்கதும், நம்முடைய தேசத்திலில்லாததாலும் ஷெ இரண்டு வகை விதைகளையும் சேர்த்து, பாங்கி தபாலில் அனுப்பியிருக்கிறது. கிடைத்தவுடன் எல்லாத் தோட்டங்களிலும் போட்டு அந்த மரத்தினை விருத்தி செய்கிறது.**

பட்டு விஷயம்

**இங்கே வங்காள தேசத்தில் உற்பத்தியாகிற பட்டு.....வாங்கி உள்ளுள்ள பூச்சியுடன் அனுப்பியிருக்கிறது. அதில் மஞ்சள் நிறமுள்ளதும், கொஞ்சம் மஞ்சளாக நிறமுள்ளதும், வெள்ளை இம்மாதிரி மூன்று வகைகளுள்ளன. அவைகளில் வெள்ளை மாதிரி மிகவும் உயர்ந்த பட்டு, வருஷத்துக்கொருமுறைதான் உற்பத்தியாகுமானதால் அவசியமாக சேகரிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் அந்த வெள்ளை மாதிரியான போண்ட(கூடு)யிலுள்ள புழுக்கள் அங்கு வந்து சேரும் வரையில் பிழைத்திருந்தால் அதனுடைய முட்டைகளை ஒரு பானையில் காகிதத்துடன் போட்டு அல்லது வழியிலே புழுக்களுண்டாகி உள்ளிருக்கும் காகிதத்தின் மேல் மூட்டைகளிட்டிருந்தால் இப்பேர்ப்பட்ட பானைகளின் வாய்மூடி காற்றோட்டமில்லாத இடத்தில் உரியில் வைத்திருக்க வேணும். வரப்போகிற மாகமாஸம்[143] ஆரம்பித்ததும் அந்தப் பானையிலுள்ள முட்டைகளின் காகிதத்தை எடுத்து, காற்றோட்டமாக வைத்தால் புழுக்க ளுண்டாகும். புழுக்கலானதும் மூங்கில் (ஜாலி) தட்டில் வைத்து, அதற்கு இலந்தை இலைகளைப் பொடியாக நறுக்கிப் போட்டு வரவேணும். புழுக்கள் பெரியதானால் முழு இலைகளைப் போடலாம். இந்தப்படி பெரியதாய் பட்டு ஆனதும் மறுபடியும் முட்டைகளைக்கொண்டு சொன்னபடி பானையில் போட்டு, மாகமாசத்தில் (மாசி) வெளியே எடுக்க வேணும். இந்தப்படி வருஷத்துக்கொருமுறையே பலத்தை[144] அடைய வேணும். இந்த வழியாய்ப் பட்டின் அபிவிருத்தி செய்து வரவேண்டும்.**

141. கவர்னர் ஜெனரல் - லார்டு ஹேஸ்டிங்க்ஸ் (1813-23)

142. ஹெளதாவுடன் யானை வகையறா என்றது " ஒரு துப்பாக்கியும், கடியாரமும், தங்க முலாம் செய்த வெள்ளியின் ஹெளதா கங்காஜெமுனி ஒருதந்தமுள்ள யானை, தினுசுவாரி மரங்களின் விதை" என்றவற்றையாகும் (188சி-ஊ-16)

143. மாகமாஸம் - மாசிமாதம்

144. பலத்தை - பயனை

மற்ற நிறங்களின் பட்டுப்பூச்சிகளுக்கும் இதே மாதிரியாக பரிக்ஷை செய்து, தேறினால் இதனுடைய ஸந்ததி (வம்சம்) தனியாகக் காத்து வைக்க வேணும் என்றும், இங்கிருந்து அனுப்பிய விதைகளையும், பட்டுபூச்சிகளின் மாதிரி வாரி கூடுகளையும் லெப்டன் கர்னல் வியம் ப்ளாக்பர்ன் சாயேப் ரெஸிடெண்ட் அவர்களிடமும் கொடுத்து, பாக்கியை ஸர்காரில் சொல்லப்பட்டபடி செய்கிறது.

மேல்கண்ட விதைகளும் பட்டுப்பூச்சிகளின் கூடும் மூங்கில் சின்னக்கூடைகளில் வைத்து மூடி வெள்ளைத் துணியைத் தயாரித்து இரண்டு உரிகளைச் செய்து உரி ஒன்றுக்கு ஒன்று வீதம் 2 முத்திரையைப் போட்டு நம்முடைய பேருள்ள முத்திரையினால்முத்திரையைப் போட்டு அனுப்பியிருக்கிறது.

*(67) 1822 மார்ச்சு 23*

பட்டுப்பூச்சிகளின் ஆகாரம் இந்தப்படி பெருக்க வேண்டிய மாதிரி பனாசேபரா இவ்வளவு "தோஸரே" பனாசேபரா? போலவும். அந்த எல்லா சித்டோஸரப் போல கிளைகளைப் பெரிது சிறிதாகச் கத்திரித்து, நன்றாக நாக... புளுதியில் இரண்டு கால்வாயின் இடையில்...பிரமாணம் இருக்கும் மேட்டில் ஒவ்வொரு முழும் கிளைகள் கத்தரித்த துண்டுகளைச் சேர்த்து, நான்குதோ.....விட்டு பாக்கிப் பாகத்தைப் போதுமான பூமியில் பள்ளம் நோண்டி, நட்டு அந்தப் பக்கத்திய எர் உள்ளுக்குப்போனால் கலக்கிறது. தண்ணீரை ஊற்றுகிறார்கள். அதனால் பயிர் கொழிக்கிறது. மேற்சொன்ன அளவு டோஸர்? க்கு வந்ததும் தினம் வேண்டிய அளவு அறுப்பை அறுத்த பின் அதன் இலையைப் பறித்துக்கொண்டு அந்தக் கிளைகளைச் சொன்னபடி திரும்ப நடுகிறார்கள். இது மூன்றுதரம் அறுவடையாகிறது. இந்த நிலத்திற்குத் தெருவிலுள்ள சாம்பல், குப்பை, சாணம் இவைகளை அந்த நிலத்தில் போடுகிறார்கள். ஆனால் இந்தப்படி சாகுபடி அங்கேயும் செய்யலாம்.

இலந்தை சாகுபடியாகும் நிலத்திற்கு மேல் அறிவித்தபடி............... வேண்டாமலிருந்தால் கோடைக்காலத்தில் காய்ந்த குளத்தைச் சுத்தம் செய்து, வெட்டுகிறது நல்லது. இந்தப்படிக்கி நட்டால் அறுக்க அறுக்க மறுபடி அதிகமாக வளர்ந்து அப்பயிர் 20ஞ வரையில் நீடிக்கும்.

*(68) 1821 ஏப் 24உ*

*முகாம்-கயை*

மிஸ்தர் டுரியன் சாஹேப்புக்குச் சேரவேண்டிய ஒரு ஆங்கிலேய காகிதம் இந்தக் கடிதத்தில் வைத்திருப்பதை சீமைக்குச் செல்லுகிற கப்பலில் கொடுத்து ரசீது வாங்கி அனுப்புகிறது.

*(69) 1821 ஜூலை 12உ*

*முகாம்-காசீ*

பதிய சமாசாரம் டாக்டர் ஸடன்சாஹேப் ஜூலை 10உக்கு காசீயில் பரலோகமடைந்து தகனஞ் செய்யப்பட்டது. அவருடைய சம்பளம் பின்னி கம்பெனியாரிடம் கொடுத்துக் கொண்டிருப்பதைக் கொடுக்காமல் அவரிடமுள்ள இந்திய வைத்தியரின் எண்ணப்படி ஸடன்சாஹேப் வீட்டில் கொடுக்கிறது.

*(70) 1821 ஜூலை 18உ*

*முகாம்- காசீ*

மிஸ்தர் டுரியன் சாஹேப்பிடமிருந்து சீமையிலிருந்து புத்தகங்கள் நிறைந்த பெட்டிகள் வந்திருக்கும். அல்லது வரும். அவை வந்ததும் வந்தபடியே தஞ்சாவூருக்கு அனுப்பி சி. ரா. சிவாஜிராஜா சாஹேப்பிடம் கொடுக்கிறது.

(71) 1821 நவம்பர் 30உ
முகாம்-ஹீராபூர்

கல்கத்தாவிலிருந்து வந்த அந்த 24 பீரங்கிகளும், சீமையிலிருந்து வந்த புத்தகங்கள் வகையறா நீங்கள் வாங்கிய 4 கௌஷி குதிரைகளும் தஞ்சைக்கு அனுப்பித்தேனென்றும், சிவரஹஸ்யத்தின் புத்தகம் பாங்கி தபாலில் அனுப்பினீர்களென்பதை யறிந்து ஹுஜூருக்கு அளவில்லாச் சந்தோஷ மேற்பட்டது.

(72) 1821 நவம்பர் 30உ
முகாம்–ஹீராபூர்

ஹுஜூரின் ஸவாரி நாகபூர் தேசத்தில் ஸாகர் சமீபம் சேர்ந்தது. இவ்விடமிருந்து ஒவ்வொரு இடத்திலும் தங்கி திருப்பதிக்கு வந்து, அவ்விடமிருந்து ஸ்ரீகாளஹஸ்திக்குச் சென்று ஸ்வாமியைப் பார்த்துவிட்டு அவ்விடமிருந்து சென்னைக்கு வரும். அப்பொழுது 1000 ரூபாயுள்ள ஒரு பதக்கம் வீதம் 2 ஆயிரம் ரூ விலையுள்ள 2 பதக்கங்கள். 1 1/2 ஆயிரம் ரூபாய் பதக்கம் 1. 14 முழம் நீளமுள்ள (ஸாடி) புடவைகளை வாங்குகிறது.

(73) 1821 நவ 26உ
முகாம்–மஹத்காவ்

மும்பையில்[145] சுரக்காய் விதைகளை இக்கடிதத்திலுள்ளதை நட்டு, அபிவிருத்தி செய்து சத்திர தருமத்திற்குக் கொடுக்கிறது.

(74) 1821 டிசம் 26உ
முகாம்–ஹீஸங்காபாத்

பிஸ்கோத் என்னும் சாப்பிடுகிற மாதிரியைச் செய்கிற சின்ன முத்தா என்பவனிடம் ஒரு மனிதன் தன் தலையில் தூக்கிக் கொண்டு வரும்படியான அவ்வளவு பிஸ்கோத்தைத் தயாரிக்க வேண்டிய சாமான்களைக் கொடுத்து தயார் செய்துதிருப்பதிக்கு சின்ன முத்தாவுடன் அனுப்புகிறது.

(75) 1821 டிசம் 28உ
முகாம்–ஹீஸங்காபாத்
ஹுஜூரின்ஸவாரி சிதம்பரத்திற்கு வரும்பொழுது சி.ரா. இளையதிவான் ஸவாரியுடன் ரெஸிடெண்ட் சாஹேப் சிதம்பரத்திற்கு வருவாரென்று அவருக்கு ஹுஜூர் எழுதியிருக்கிறது. அப்பொழுது ஸவாரியுடன் கூட தங்கத்தின் அம்பாரி, வெள்ளி அம்பாரி, மகமல்[146] அம்பாரி, ஸகலாதி அம்பாரி, இப்படி 4 அம்பாரிகளை சிரதாஜ், விட்டல பிரஸாத்,

145. மும்பை - பம்பாய் நகரின் மராட்டிப்பெயர்

146. மகமல் - கனமாய் மெத்தென்றிருக்கும் பட்டுவகை (Velvet) அம்பாரி-யானைமேல் தவிசு(ஹௌதா)

மோதிராஜ், மாணிகராஜ் இந்த 4 யானைகளின் பேரில் ஏற்றிக்கொண்டு பவானி ப்ரஸாத் யானைக்குட்டிக்கு ராகாசாவில் கட்டி வெள்ளிமணி வகையறாவினால் அலங்கரித்து நகானா கொடிக்கு மூன்று யானைக்குட்டி நியமித்தும்-ஸவாரி பிருதுகளையும் வாத்தியங்களையும் நியமித்துக்கொண்டு ஹுஜூரின் ஸவாரி வருகிற தினம் வந்து சேருகிறது.

மாப்பிள்ளை ரா. ஜிவ்ஜீ மோஹிதே சாஹேப்[147] அவர்கள் குடை சாமரம், ஹீத்தே உருமாலை[148] இத்யாதி[149] சாமான்களைக் கூட கொண்டு வருகிறது.

(76) 1821 நவம் 15உ
முகாம்–பந்தா

சென்னப்பட்டிணம் கவர்னருக்கு[150] ரெஸிடெண்ட்[151] எழுதின கடிதத்திற்குப் பதில் முக்கிய காரியதரிசி எழுதினதை சி.ரா. இளையதிவான்[152] சாஹேப் பார்ப்பதற்கு அனுப்பியிருக்கிறாரென்று கேட்க ஹுஜூருக்கு அளவில்லாச்சந்தோஷமுண்டாயிற்று.

(77) 1821 நவம் 16உ
முகாம்–பந்தா

பைசா (துகை) கொடுக்க பைசாவின் மதிப்பு தெரியவேணுமென்று எழுதினீர். ஆனால் ரூபாய் ஒன்றுக்கு 64 பைசா என்றறியவும்.

(78) 1821 நவம்பர் 16உ
முகாம்–பந்தா

ஹுஜூரின் ஸவாரி ஹரித்வாராதி க்ஷேத்திரத்திற்குப் போகமால் சீக்கிரமாகத் திரும்ப வேணுமென்று எண்ணி ஹுஜூர் மனதுக்குப்பட்டு, சந்தோஷமடைந்து, முதவிலே பிரயாகையிலிருந்து தஞ்சாவூருக்கு ஸமீபம் வருகிறேனென்றும், அதற்கு ஏற்பாடு செய்தேனென்றும்.

அ)1821 மேமீ 4உ
முகாம்–கயை

ரா. சேதுராம் ஸ்வாமிகளுடைய தீள்குள் (எள்ளு வெல்லம் கலந்த லாடு) அவருடைய கடிதத்துடன் ஹுஜூரிடம் கொடுக்கப்பட்டது.

---

147. ஜிவாஜி மோஹிதே - இரண்டாம் சரபோஜியின் முதல் மனைவி யமுனாம்பாபாயியின் மகள் ராஜம்மா பாயியை மணந்தவர்.

148. உருமாலை - உருமால் - தலைப்பாகை; ரேலாடை

149. இத்யாதி - இவை முதலான

150. கவர்னர் - ஸர்தாமஸ்மன்ரோ (10-6-1820 முதல் 6-7-1827 வரை)

151. ரெஸிடென்டு - வில்லியம் பிளாக்பர்ன் (பக்.68)

152. இளையதிவான் என்றது இரண்டாம் சிவாஜியை

நம் தேசத்திலில்லாதது இத்தேசத்தில் விக்ஷோகாரமாக[153] "தேண்ட்ஸ்" என்னும் வெள்ளரி தினசு புடலங்காய் போடதாயிருக்கிறது. அதன் விதையும் வெண் கொண்டக்கடலையும், ஒரு சின்ன ஸிம்ப்[154] செய்து, பாங்கி தபாலில் அனுப்பியிருப்பதை ரெஸிடெண்டுக்கும் கொஞ்சம் கொடுத்து பாக்கியை ஸர்காருடைய தோட்டங்களில் போட்டு அபிவிருத்தி செய்கிறது. சின்ன சுட்டுப் பாகற்காயின் விதை 10ம் அனுப்பியிருக்கிறது.

*(2) 1824 மேமீ 4உ*

*முகாம்-கயை*

*தஞ்சாவூர் காளா அப்பாவின் பிள்ளை கிருஷ்ணனென்பவன் ஸவாரியுடன் கூடியிருந்து கொண்டு ஹுஜூருக்கும் பாயிசாப்புக்கும் பிள்ளையார், லிங்கம் செய்து கொடுத்துக் கொண்டு ஊழியம் செய்வதால் அவருடைய தகப்பனாருக்குத் தஞ்சாவூர் அன்னசத்திரத்தில்[155] மற்ற சாமான்களுடன் 2 உலுப்பையை[156] தினம் அவன் பிழைத்திருக்கும் வரையில் கொடுக்கிறது.*

*(3) 1821 மே மீ 4உ*

*முகாம் - கயை*

சௌ.சி.சக்வார் பாயி[157] அமணிராஜே சாஹேப் அவர்களுக்கு மாஸம் 15 நாளைக்கு மாரில் கொஞ்சம் வலி வருகிறது. பசிதாகம் நன்றாக இல்லை. அவருக்கு வைத்தியம் செய்ய வேணுமென்று மிஸ்தரிஸ்[158]ப்ளாக் பர்ன் சாயேப் அவர்கள் வைத்தியருக்குச் சொன்னதற்கு கையையும், முகத்தையும் பாயிசாப் காட்ட மாட்டேனென்கிறார்கள் என்று எழுதி யிருக்கிறீர்கள். வியாதிக்குச் சிகித்ஸை செய்ய வைத்தியருக்கு முகத்தையும் கையையும் காட்டினால்தான் ரோக மின்னதென்று அறியக்கூடும். ஆகையால் அவசியம் வைத்தியருக்குக் கை, முகம் காட்டி மருந்து வாங்குகிறது.

*(4) 1821 மே மீ 4உ*

*முகாம் - கயை*

அஹோபிள ஜீயேர்[159] அவர்கள் கொடுத்தமந்திராக்ஷதையை ஹுஜூர்தலையில் போட்டுக் கொண்டார்.

---

153. விக்ஷோகாரமாக – விருக்ஷோகாரமாக -- மரம்போல

154. ஸிம்ப் - சிம்பு; சிறிய பொட்டலம்

155. தஞ்சாவூர் அன்ன சத்திரம் சிரேயஸ் சத்திரம் எனப்பெறும் (பக்.269-75)

156. உலுப்பை - சத்திரத்துக்கு வரவியலாதவர்கட்கும், பெரிய அதிகாரிகட்கும் வந்து உண்பதற்கு விருப்பம் இல்லாதவர்கட்கும் அரிசியும், அதற்குரிய பிற பொருள்களும் அளிக்கப்பெறும். இத்தகைய உலுப்பைகள் பெரும்பாலும் அந்தணர்கட்கும் பெருமக்களுக்கும் பைராகிகட்கும் வெள்ளையர்களாகிய பெரிய அலுவலர்கட்கும் அளிப்பது வழக்கமாயிருந்தது. உலுப்பைகளிலேயும் முதல் தரம் இரண்டாம் தரம் என்று இரு வகைகள் இருந்தன (பக்கம் 279-280)

157. சக்வார்பாயி - இவர் இரண்டாம் சரபோஜியின் இரண்டாவது மனைவி அகல்யாபாயியின் நான்காவது மகள். இவர் ராமச்சந்திரன் எசவந்தராவ் இங்களேயை மணந்தவர்.

158. மிஸ்தரிஸ் - Mistress (Mrs.)

159. அஹோபிள ஜீயர் - ஆழ்வார் திருநகரியில் தோன்றிய வண்சடகோபர் என்பவரால் ஆந்திர நாட்டில் தோற்றுவிக்கப்பட்ட மடம் அகோபில மடம் எனப்பெறும். இம்மடத்தின் கிளையொன்று கயையில் இருந்ததாதல் வேண்டும்.

*(5) 1821 மே மீ 4வ.*
*முகாம் - கயை*

ஸ்ரீ ஜகன்னாத[160] க்ஷேத்திரத்திலிருந்து புறப்பட்ட பிறகு ஸல்கா காட்டிலிருந்து பாகல்புரம் வரையிலும் கங்கையின்கரையிலே கரைக்குக் கரை தங்கித் தங்கி வரும்பொழுது, கங்கைகரையில் ஒவ்வொரு இடத்தின் அழகை எடுத்துச் சொல்ல முடியாது போலிருக்கிறது.

மேற்கு முகம் பெருகுகிற கங்கைக்கு மட்டும் போகவில்லை. அதில் ஒருவரும் ஸ்நானஞ் செய்திருக்க மாட்டார்கள் என்று நினைக்கலாம்.

பாகலபுரத்திற்குத் தெற்கே ஜாடகண்ட வைத்தியனாத என்று அதற்குப்பிரதிப் பெயர். இந்த தேசத்தில் பிரசித்தமான பெயருமுள்ள 'தேவகர்' என்கப்பட்ட இடத்திற்கு யாத்திரைக்கு நிச்சயம் செய்து, பாகல்புரத்திலிருந்து 5 முகாம்கள் செய்து தேவகருக்கு வந்து சேர்ந்தோம்.

தேவகரின் வரலாறு.

முன்காலத்தில் இராவணன் கைலாசத்திலிருந்து ஸ்ரீமஹாதேவனுடைய பிரஸாதத்தினால் ஸ்வயம்பூவும்[161] நினைத்ததைக் குடுக்கக்கூடியவரான லிங்கத்தை பெற்றுக்கொண்டு இலங்கைக்குப் போகையில் வழியில் ஜலவாதிக்குப் போக வேண்டியதற்காக, பிறருடைய கையிலிருக்கட்டுமென்று, பிராமண ரூபியான விஷ்ணுவினிடம் கொடுத்தார். அவர் அவ்விடத்தில் வைத்தவுடன் அவ்விடத்திலேயே ஸ்திரமாயிருப்பதால் ஸ்ரீராவணேஸ்வரனும், வைத்யனென்னும் வேடனும் பூஜித்து, பிரசித்தி ஆனதால் ஸ்ரீவைத்யநாத என்னும் பிரசித்தியாயிருக்கிறது. அச்சுவாமிக்குக் கங்கையில் ஜலத்தால் அபிஷேகம் விசேஷமாக பிரியகரமா[162]யிருப்பதால் கங்கோத்திரி[163] ஹரித்வாரம்[164], பிரயாகை[165], கல்யாணபூர், கங்காசாகர் இவ்வைந்து இடங்களிலிருந்து ஒவ்வொரு நாளும் 10,500,50 காவடிகள் வருகின்றன. மகாசிவராத்திரிக்கு,[166] 70,80 ஆயிரத்திற்குக்குறையாமல் 1 1/4 லக்ஷம் காவடிகள் வரையில் வருகின்றன். இதைத்தவிர, யாத்திரைக்கு வருபவர்கள் ஸ்ரீஸ்வாமியுடையவும், அம்மனுடையவும், கர்ப்பக்ருஹ கோபுரத்தில்[167] தன்னுடைய சக்திக்குத் தக்கபடி கொடிகளைத் தயாரித்து நடுகிறது. அதற்குக் கொடி என்று பெயர். இதைத்தவிர அவ்விரண்டு

---

160. ஜகந்நாத க்ஷேத்திரம் - பூரி ஜகந்நாத்

161. ஸ்வயம்பூ - சுயம்பு - தானாகத் தோன்றியிருத்தல்

162. பிரியகரம் - விரும்பத்தக்கது

163. கங்கோத்திரி - கங்கை தோன்றுமிடம்

164. ஹரித்துவார் - கங்கை இமயத்திலிருந்து சமவெளியில் புகுமிடம்

165. பிரயாகை - கங்கையோடு யமுனையும் சரசுவதியும் கூடும் திரிவேணி சங்கமம்

166. மகாசிவராத்திரி - மாசிமாத இறுதியில் அமாவாசை வரும் தேய்பிறைச் சதுர்த்தசியில் வரும் விரதம். இது மாகாசிவராத்திரி எனப்படும். வருஷ சிவராத்திரி எனவும் சொல்வர். அன்று இரவு நான்கு யாமங்களிலும் சிவபூசை செய்வர்.

167. கர்ப்பக்கிரக கோபுரம் - கருவறை விமானம்

கோபுரத்தின் சிகரத்திற்கும், ஒரு முண்டாசின் (தலைப்பாகையின்) இரண்டு மடிப்புகளும் கட்டி பாந்த்தா? அக்னிஹோத்ரீ[168] ஸ்த்ரீ புருஷர்கள் போல இரண்டு சிகரங்களுக்கும் ஒரே தலைப்பாகையின் சம்மந்தம் இருக்கிறது. இன்னும் வருகிற யாத்திரை செய்பவர்கள் காலை 3 நாழிகை முதல் 12 மணி வரையிலும் தன்னுடைய அந்தஸ்துக்குத் தக்கபடி பக்திக்குத் தக்கபடி தங்களுடைய கையாலேயே பூஜை செய்கிறார்கள். வருகிற பிரபுக்களுக்கு ஸந்நிதியிலோ அல்லது முன்னாலோ பிரஸாதங் கொடுக்கையில் பரிவட்டமிடத்தில் சிகரத்திற்குக் கட்டிய கொடியிலிருந்து ஒன்றைத் தலைக்குக் கட்டுவது வழக்கம். இதைத்தவிர,

கௌரி பார்வதி என்னுமிரண்டு அம்மன்கள் ஒவ்வொரு பவனிக்குச் சமீபத்தில் நேரிலிருக்கும் கோபுரத்தின் கீழ் கர்ப்பக்கிருஹத்தில் இடுப்பளவு உயரம் திண்ணையிலிருக்கிறார்கள். ஸ்வாமி அம்மன் கோபுரத்தின் சிகரத்திற்குக் கட்டுகிற தலைப்பாகையின் நீளத்தின் சுமார் 105 முழம் அம்மனிரண்டும் 1/2 கஜம் உயரமுள்ள விக்ரஹகங்கள். அதனுடைய வாயை வெள்ளிக் கவசத்தினாலும் உடம்பு துணியினாலும் மூடியிருக்கிறது.

(5) லிங்கத்தின்ஸோமஸூத்திரத்தின்[169]க்ருஹத்தில் சதுரமான 6 விரக்கடை[170] உயரமுள்ள திண்ணையில் 2 1/2, 3 விரக்கடை உயரத்திலிருக்கிறது. நடுவில் பிண்டி (தலை) 5,6 விரக்கடை உயரமாய் 2 டிசி? சுற்றளவிலிருக்கிறது.

தலையின் நடுவில் கொஞ்சம் அமுங்கினாற்போலிருக்கிறது. ப்ராகாரத்தில்[171] துர்காதி[172] பரிவார தேவதைகளின் 20,21 தனித்தனி சின்னது பெரியது கோபுரங்களிருக்கின்றன. கோவிலின் பெரிய பிரகாரத்தில் மூன்று வாசல்படிகளிருக்கின்றன. தென்னண்டை மட்டில் வாசப்படியில்லை. இந்தப்படியான அந்த க்ஷேத்திரத்தில் நுழையும்போதே ஹுஜூருடையவு எல்லோருடையவும் சித்தத்திற்குச் சந்தோஷமுண்டாகி சுவாமியைப் பார்த்தார்கள்.

மறுநாள் விடியற் காலத்தில் ஸ்நானம், ஜபம், சிவபூஜைகள் வகையறா தினப்படி நியமனங்களை எல்லாம் செய்து முடித்துக்கொண்டு, பின்னர் ஸ்ரீஸ்வாமியின் கோவிலுக்குச் சென்று, கோவிலில் தென்கிழக்கிலுள்ள சந்திரகூபமென்று ஒரு தீர்த்தம். அதில் பஞ்சகங்காதிகள் வசிக்கிறார்கள். அங்கு ஸ்நானஞ்செய்து, கோதானஞ் செய்து, பிறகு கர்பக்ருஹத்திற்கு மடியாக[173] விபூதி ருத்ராக்ஷம் அலங்காரம் தரித்து வந்து கார்த்திகை ஸோமவாரத்தின்[174] பூஜையின் படி, ஸ்ரீ ஸ்வாமிக்குப் பஞ்சகங்கையின் அபிஷேகம் செய்து, 16

---

168. அக்கினிஹோத்ரீ - யாகாக்கினியை நாளும் வளர்ப்பவன்

169. லிங்கத்தின் சோமசூத்திரம் என்றது கோமுகம் என்ற பகுதியை

170. விரக்கிடை - விரற்கிடை

171. ப்ராகாரம் - திருச்சுற்று

172. துர்காதி - துர்க்கையை முதலாகக் கொண்ட

173. மடியாக - ஆசாரத்துடன்

174. கார்த்திகை ஸோம வாரம் - கார்த்திகை மாதத்தில் திங்கட்கிழமை

உபசாரம்[175] பூஜையை ஆரம்பித்தார். ஹுஜூருக்கு ஸ்வாமி ஒன்று, மற்ற ஜனங்களுக்கு ஸ்வாமி லிங்கரூபமாக ஒன்று, அர்ச்சகரூபி[176] ஒன்றுபோல் தோன்றிற்று. ஹுஜூருடைய பூசைக்குப் பிறகு கூட வந்தவர்கள் எல்லாருக்கும் ஸேவக ஜனங்களுக்கும் ஹரித்வாரம், பிரயாகை, கல்யாணபூர், கங்களாசாகர் இப்பேர்ப்பட்ட இடங்களில் கங்கையின் குப்பிகளை[177] ருத்ர ஸம்பாரத்துடன்[178] வாங்கிக் கொடுத்து ஒவ்வொருவருக்கும் கங்கையின் ருத்திரத்தைக் கொடுத்து எல்லோருடைய கையினாலும் விதியின்படி பூஜித்தார்கள். இந்தப் புண்ணியம் ஹுஜூருக்கே.

பிறகு ஸ்வாமி அம்மன் கோபுரத்தின் சிகரத்திற்கு ஜரிகைக் கொடியைக் கட்டி, பட்டுத்துணியினால் இரண்டு கோபுரத்தின் சிகரங்களும் ஒன்று சேரும்படி சுற்றி, மற்ற ஸேவகர்களிடமிருந்து பூஜை செய்வித்தார். இந்த ஆனந்தம் ஜகன்னாத க்ஷேத்திரத்தைக் காட்டிலும் அதிகமாயிருந்தது.

இன்றைய தினம் ஹுஜூரின் ஸவாரிகயை வந்தது. நாளை முதற்கொண்டு கயாவர்ஜனம்[179] ஆரம்பம். ஹுஜூரானவர் அஷ்டகயை[180] செய்வதாக ஸங்கல்பித்திருக்கிறார்.[181] அது விடாமல் நடந்தால் 45 நாட்களாகும். இதன் நடுவின் வருஷதெவசம் வந்தால் அந்த நாட்கள் அதிகமாகின்றனவாதலால் இந்த க்ஷேத்திரத்தில் 50 நாட்கள் தங்குவதாகத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. பின்பு ஸ்ரீ காசிக்குப் பிரயாணமாகும்.

ஆ)1821 மார்ச்சு 23௳ முகாம்–புருகாபாத்

(1) கனம் பொருந்திய கவர்னர் ஜனரல்[182] சாஹேப் - ஹுஜூரின்[183] படம் வேண்டுமென்கிறார். ஹுஜூரின் பாவம் ஆகாரத்தின்[184] எப்படி அளவினாலே மார்பு வரையில் அல்லது மார்பின் கீழ்ப்பாகம் மட்டில் இருக்க வேணும் அதை எண்ணெய்ச் சாயத்தினால் எழுத வேண்டுமென்று, அந்த சாயேப்பின் பர்மாவிஸியினால் அறியப்பட்டதாகையால் நல்ல கித்தானின் ஒரு முழும் ஒரு டீசியின் துண்டில் சித்திரக்காரன்

---

175. 16 உபசாரம் - ஆசனம், சுவாகதம், பாத்தியம், அர்க்கியம், ஆசமனீயம், மதுபர்க்கம், ஆசமனம், ஸ்நானம், ஆடை, ஆபரணம், கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம், வந்தனம் (அல்லது) மஞ்சனம், பூ, கந்தம், தூபம், தீபம், நீர், அமுது, தாசு, அடைக்காய், ஆடை, குடை, கவரி, ஆலவட்டம், விசிறி, ஆடல், வாச்சியம் எனும் பதினாறு.

176. அர்ச்சகரூபி - அருச்சனை செய்பவர்

177. குப்பிகள் - குடங்கள்

178. ருத்ரசம்பாரம் - ருத்ராபிஷேகத்துக்கு வேண்டிய பொருள்களுடன்

179. கயாவர்ஜனம் - கயையில் செய்ய வேண்டிய தினசரிச் சடங்குகள் போலும். (எனினும் வர்ஜனம் என்றால் விடுகை என்று பொருள்)

180. அஷ்டகயை - இதற்கு 47 திவசங்கள் செய்ய வேண்டும் (188 சி-ஊ-16) (பக்.117)

181. ஸங்கல்பித்திருக்கிறார் - எண்ணியிருக்கிறார்.

182. கவர்னர் ஜெனரல் - லார்டு ஹேஸ்டிங்க்ஸ் (1813-23)

183. ஹுஜூர் என்றது சரபோஜியை

184. ஆகாரம் - உருவம்

சின்னசாமி நாயிகன் மூலம் எண்ணைச் சாயத்தினால் நன்றாக எழுதச் சொல்லி அதற்குச் சட்டம் நல்ல மரத்தினால் மெல்லியதாக வேலைப்பாடுகளைச் செய்து, அதற்கு வேண்டியளவு தங்கத்தின் வர்க் கை ஏரளமாகத் தடவி வஜாரத்மாப[185] குப்புசாமி மோஹிதே அவர்கள் குப்பாசித்திரக்காரன் மூலம் எழுதச்சொல்லியபடி எழுதுகிறது.

படத்தில் அளவை மேலெழுதியிருக்கிறதே, அது மாடியில்ஸதருக்குப்[186] போகிற படியின்மேல் வாசப்படிக்கு வலதுகைப் பக்கத்திலிருக்கிற அலமாரியின் மேல் வைத்திருக்கிற ஜனரல் லெப்டன் சாஹேப்பின் படத்தின் அளவிலிருக்க வேணுமென்று தெரிவிக்கிறேன்.

படத்தைத்தயார் செய்து ரெஸிடெண்ட்[187] அவர்களிடம் கொடுத்து கவர்னர் ஜனரலுக்கு அனுப்ப வேண்டுமென்று ஹுஜூரின் ஸலாமுடன் தெரிவிக்கிறது.

*(2) மார்ச்சு 1821 23உ*
*முகாம்–புருகாபாத்*

மாதாவான் வகையறா சாமான் தாவீத்பிள்ளையின் வசம் ஒப்புவித்து கல்கத்தாவில் கப்பலின் பரங்கஸேன் அண்டுகோ சாஹேப் வசம் காரியத்திற்காக காத்திருக்க தாவீத்பிள்ளை[188] நியமித்திருக்கிறது. ஆகையால் ஹுஜூருடன் பிள்ளையில்லை. அவர் வந்ததும் கல்கத்தாவில் கவர்னர் ஜனரல் அவரைக் கண்டு நடந்த சங்கதிகளை ஆங்கிலேயத்தில் எழுதி அனுப்புகிறேனென்று ரெஸிடெண்ட் சாயேப் அவர்களுக்குத் தெரிவிக்கிறது.
*(3) 1821 டிசம்பர் 30உ*
முகாம் - கேசலா சௌகி

கேப்டன் மைக்கேல் சாஹேப்பிற்கு ரூ.5 ஆயிரம் பதிலாகக் கொடுப்பதென்று முதலில் எழுதியிருக்கிறது. அப்படி வேண்டாம். இப்பொழுது **4000** ரூ உடனே கொடுக்கிறதென்று ஹுஜூரின் உத்திரவாயிருக்கிறது.

இ)*1821* ஜன
*(1)* இந்த தேதி முதல் ஸவாரி முகாமிலிருந்து கோட்டைக்கு அனுப்பிய கடிதங்களின் நகல்கள் ஜனவரி முதல் டிசம்பர் வரையில் முகாம் ஜாபிதா.

*(2) 1821 31உ*
முகாம் - கதள்காவ்

ரோஜாவின் (வெள்ளை, குலால்)[189] பொட்டலம் அனுப்பியதைச் சொன்னபடி அபிவிருத்தி செய்கிற விதத்தின் விபரம்.

---

185. வசிராத்மாப் - அரச குடும்பத்தைச் சேர்ந்த பெருமக்கள்

186. மாடியில் சதருக்கு - சதர்மாடிக்கு

187. ரெஸிடென்டு - வில்லியம் பிளாக்பர்ன் (பக்கம் 66)

188. தாவித்பிள்ளை - இவர் சரபோஜியுடன் காசியாத்திரையில் இருந்தவர். ஆங்கிலத்தில் செய்திகளை எழுதியனுப்புவதற்கு இவர் அமர்த்தப்பட்டார் என்று தெரிகிறது (பக்கம் 114)

189. குலால் - சிவப்பு

*ஈ)1821 ஏப் 18உ*
*முகாம் - முங்கேராசமீபம் ஹஸன்கஞ்ச்*

*திருசுவார் பார்வைக்கு அழகாயிருக்கிறதும் முன்னால் பார்க்காததுமான மரம் செடிகள், கொடிகள் பக்ஷிகள் வகையறா தேச வேற்றுமையினால் புதிதுபுதிதாய் வேறு பார்ப்பதற்கு வருகிறது. (பார்க்கிறோம்) அப்பொழுது இதை நம்முடைய இஷ்ட மித்ராதிகள்[190] பார்க்க வேணுமென்று, ஹுஜூருக்குத் தோன்றுகிறது. அத்தோற்றம் மற்ற ஜனங்களின் எண்ணத்தைப் போல் வீணாகக் கூடியதல்ல என்பதைக் கடவுள் நிச்சயம் செய்திருக்கிறார் என்பதற்காக நீங்களும் என்னைப் போல சந்தேகமற்றவராயிருக்க வேணும். அப்பேர்ப்பட்ட ஹுஜூரின் அபிப்பிராய மனுசரித்து அபூர்வமான தினுசுகளின் படத்தை எழுதவதற்காக மசூலிபந்தரி[191]லிருக்கும் சித்திரக்காரன் தாமஸி என்பவனுக்கு மாதத்திற்குச் சம்பளம் 10 புனி. விராகன் செய்து கொடுத்து ஸவாரியுடன் சேர்க்கப்பட்டிருக்கிறது. அவனிடமிருந்து அந்தப்படங்களைச் சேர்த்துக் கொண்டிருப்போம்.*

*இப்பொழுது "குலேகைரா" என்னும் பார்வைக்கு அழகாக விருக்கிற புஷ்பம் ரக்கம் வாரி பாகல்புரத்தி விருந்ததாகையால் அதனுடைய படமொன்றை அனுப்பியிருக்கிறது. அதை ஹுஜூரின்சலாமுடன் ரெஸிடெண்ட் சாஹேப் இடம் சேர்ப்பிக்கிறது. இன்னும் இப்பூவின் விதையின் மாதிரியை இரண்டாவது பார்க்க, அழகுள்ள புஷ்பத்தின் விதையும் தனித்தனியாக 2 பொட்டலங்களும், தினுசுவாரி கத்தரிக்காயின் விதையின் பொட்டலம் ஒன்று, இப்படி 3 பொட்டலம் அனுப்பியிருக்கிறது. இதில் ரெஸிடெண்ட் சாயேப் தோட்டத்தில் போடுவதற்கு அவருக்கு வேண்டிய அளவு கொடுத்து, பாக்கியைச் சர்காரின் தோட்டங்களிலெல்லாம் போட்டு அபிவிருத்தி செய்கிறது.*

*புதிய சமாசாரம்:- விதைகளின் தினுசுகள், படங்கள், சி.ரா.இளைய திவான் சாயேபுக்குக் கொடுக்க வேண்டிய மேவாவின் தினுசு. இன்னும் சிதம்பரம் பிள்ளைக்குக் கொடுக்க வேண்டிய காகிதம் (கடிதம்) 1 சிபம். இன்னும் "ஜாட கண்டத்தின்" ஸ்ரீவைத்யநாத ஸ்வாமிக்கு[192] அபிஷேகஞ் செய்த கங்கையின் செம்பு ஒன்றும்மே ரூ....சிபம்[193] 1, இப்படி 2 சிபங்களைக்கட்டி முத்திரைபோட்டு, பாங்கி தபாலில் இங்கிருந்து கஞ்சம் வரையில் கூலி ரூ.12ஐக் கொடுத்து அனுப்பியிருக்கிறது. சேர்ந்ததும் கங்கோதகத்தை[194] மா. ஆவுசாப்[195] அவர்களிடம்கொடுத்து' அவர்களிடமிருந்து எல்லோருக்கும் சேரும்படி செய்கிறது. மேவா[196]வின் தினுசை சி.ரா.இளைய திவானிடம் சேர்ப்பிக்கிறது. விரையை விதைத்து அபிவிருத்தி செய்கிறது.*

---

190. இஷ்ட - விருப்பமான; மித்ராதிகள் - நண்பர்கள்

191. மசூலிபந்தர் - மசூலிப்பட்டணம்

192. ஜாடகண்டத்தின் ஸ்ரீ வைத்யநாத - இது தேவகர் எனவும் வழங்கப்பெறும் (5-96)

193. சிபம் - பொட்டலம்

194. கங்கோதகம் - கங்காதீர்த்தம்

195. ஆவுசாப் - இரண்டாம் சரபோஜியின் தாய்

196. மேவா – இது ஒருவகை விதைபோலும்

*(2) 1821 ஏப் 18உ*
*மு.முங்கேரா சமீபம் ஹஸன்கஞ்ச்*

யாத்திரையுடன் 3000 ஜனங்கள் வந்திருக்கிறார்கள். அவர்களுடைய யோக க்ஷேமம்,[197] வெய்யில், மழை, பனியினால் காயலாவாகிறது. அவர்களுக்கு மருந்து கொடுக்கிறது. அவர்களுக்குப் போர்த்திக் கொள்ள கம்பளிகள் வகையறா வாங்குகிறது. பாரம் தூக்க யானைகள் ஒட்டகங்கள் வாங்குகிறது. வண்டிகள், பாரவண்டிகள், மாடுகள் வாடகைக்கு வாங்குகிறது முதலிய காரணங்களால் சிலவு ஜாஸ்தி ஆகிறது என்று விஸ்தாரமான[198] கடிதம்.

ஈ *(3) 1821 மார்ச்சு 5உ*
*முகாம் - ஸல்காகாட்*

சென்ற பிப்ரவரிமீ 23உக்கு ஸல்காகாட்டுக்கு ஹுஜூரின் ஸவாரி வந்து சேர்ந்து 26உக்கு 10 மணிக்கு கல்கத்தாவில் கனம் பொருந்திய கவர்னர் ஜனரல்[199] சாயேப் அவர்களைப் பார்த்தார்கள். அப்பொழுது ஸ்ரீமந்த் ராஜேஸ்ரீ சத்திரபதி[200] சாஹேப் அவர்கள் கவர்னர் ஜனரலைப் பார்த்து நம்முடைய பாக்யத்தையும் சிங்காதனத்தையும் அதிகார முதலியவைகளுக்கு சி.ரா. இளையதிவான்[201] சாஹேப் அவர்கள் அடைய வேணும். அதை நாம் திருஷ்டியினால்[202] பார்க்க வேணுமென்றும், தஞ்சாவூர் இராஜ்யத்தில் அவர் ஒருவரே பிரகாசித்துக் கீர்த்தியுடன் இருக்க வேணுமென்று தெரிவித்ததற்கு மேற்சொன்னபடியே ஆகும் என்று பெரிய ஸபையில் கவர்னர் ஜனரல் சாஹேப் அவர்கள் தயையுடன் மனஸார வாக்தத்தம்[203] செய்தார்.

*1820 நவ 20உ*
*முகாம் - பெஜவாடா*

கிருஷ்ணா நதிக்குத் தென்னண்டை 5 நாழிகை வழியில் மங்களகிரியில் பானக நரஸிம்ஹம் என்று பிரஸித்தமான விஷ்ணு ஸ்தலமிருக்கிறது. அவருக்குச் சங்கினால் பானகத்தை அர்ப்பணஞ் செய்கிறது அந்த இடத்தின் வழக்கம். ஆனால், அதற்கு வலம்புரிசங்கு பெரியதாக ஒன்றை தங்கமூடியுடன் கூடவும், நுனியில் பஞ்சரத்னம் கொத்துடன் கொடுத்து, அதே சங்கத்தினால் ஸ்வாமிக்கு அபிஷேகமாக வேண்டுமென்றும் அதற்காக ஸ்ரீசந்திரமௌளீஸ்வரரின் ஸ்வாமி[204] அறையில், இன்னும் பிரதாப இராமசாமி

---

197. யோகக்ஷேமம்–நன்மை
198. விஸ்தாரமான – விரிவான
199. கவர்னர் ஜெனரல் – லார்டு ஹேஸ்டிங்க்ஸ்
200. சத்ரபதி என்றது இரண்டாம் சரபோஜியை
201. இளையதிவான் - இரண்டாம் சிவாஜி
202. திருஷ்டியினால் - கண்ணால்
203. வாக்தத்தம் - வாக்குறுதி
204. சந்திரமௌலீசுவரசுவாமி - இவர் கோயில் தஞ்சை அரண்மனையில் உள்ளது.

மகாலில்[205] மா.ஸ்ரீ.இளைய ஆவுசாப்[206] இவர்களிடத்தில் அல்லது அவர்கள் கொட்டியம் பாபாவிற்குக் கொடுத்ததிலும் அல்லது வலம்புரி சங்குகளின் பெரியது அதிக ஜலம் கொள்ளும்படியதுமான வலம்புரி சங்கத்தைப் பார்த்து இராஜ மகாலில்[207] கொடுத்து தங்க மூடியில் அமுக்கி பஞ்சரத்னத்தின்[208] கொத்தைக் கட்டி மேற்பக்கத்தில் ஹுஜூருடைய பெயரையும் எழுதி வரைந்து யிருக்க வேணும். இதை ரெஸிடெண்ட் சாயேபுக்கு எழுதி யிருக்கிறது. ஆனாலும் சங்கைத் தயார் செய்து மங்களகிரிக்கு அனுப்பித்து ஸ்வாமி முகாமுக்கு கடிதம் எழுதவும்.

*(2) 1820 நவ 9உ*
*முகாம் - ராசபுடி*

ஐப்பசி, கார்த்திகை, இந்த 2 மாதங்களில் ஸமுத்திரம் பொங்குகிற நாள், ஆகையால், சாமான்களைப் படகில் ஏற்றி அனுப்புவது நல்லதல்ல.

*1821 அக் 4உ*
*(1) முகாம்–காசீ*

மருந்து சரக்குகளில் "கலகபரி" இதற்கே வேறுபெயர் "வைக்ராந்தம்" என்னும் சரக்கை 1 சேர் வாங்கி நன்றாகக் கட்டி முத்திரையிட்டு காசியில் குமாரசாமியின் மடத்தில்[209] கேதார கட்டிடத்திலுள்ள[210] மடத்தில் சேர்ப்பிக்கிறதென்று விலாசம் எழுதி பாங்கி தபாலில் அனுப்புகிறது.
*(2) 1821 அக்.4உ*
*முகாம்–காசீ.*

செப்டம்பர் 13உக்குப் பிரயாகை யாத்திரைக்குப் புறப்படுகிறோ மென்று கடிதத்தில் எழுதினோம். அதன்படியே ஸவாரியும் தயாராயிற்று. ஆனால் அதற்கு முன் நன்றாக நின்றிருந்த மழை கிழக்கு திசையிலிருந்து அடிக்கும்கெட்ட காற்றுடன் மழை பெய்வதால் பாத்திரபத பகுள[211] அமாவாசை வரையிலும் நாளுக்கு நாள் அதிகரித்தது. பிறகு ஆஸ்விஜ சுக்லபக்ஷம் பாட்டிமை[212] முதல் எப்போழுதாவது வெய்யில், எப்பொழுதாவது மப்பு[213]

205. பிரதாப ராமசாமி மகால் -(போ.வ.ச.பக்.128)

206 இளைய ஆவுசாப் என்றது துளஜாவின் மனைவியர்களுள் உயிர் வாழ்ந்தவர் ஆகலாம்.

207. இராஜ்மகால் - அரண்மனை

208. பஞ்சரத்தினம் - செம்மணி, வைடூரியம், வயிரம், பச்சை, நீலம் என்ற ஐவகை இரத்தினங்கள்

209. குமாரசாமிமடம் - திருப்பனந்தாள் காசிமடத்துக்குரியதும், காசியில் ஸ்ரீகுமரகுருபரசுவாமிகளால் தோற்றுவிக்கப்பெற்றதுமான மடம்.

210. கேதாரகட்டிடம் - கேதாரகட்டம்; காசியில் கங்கைக் கரையிலுள்ள 32 கட்டங்களுள் ஒன்று.

211. பாத்திரபத - புரட்டாசி; பகுள-தேய்பிறை

212. ஆஸ்விஜ - ஐப்பசி; சுக்லபகஷம்-வளர்பிறை; பாட்டிமை-முதல்நாள்

213. மப்பு - மேகமூட்டம்

எப்பொழுதாவது மழை இம்மாதிரியிருக்கிறது. இம்மாதிரியான மழையினாலே மேல்கண்ட தேதிக்கும் பின்பும் அதே மாதம் 26௳ புறப்படுவதென்று இருந்தோம். அந்த நிச்சயமும் அப்பேர்ப்பட்ட மழையினாலும், அந்த மழையினால் ஜலப்ரளயமாகி[214] ரஸ்தாக்கள் கூட அடையாளம் தெரியாமல் இருந்தன. அந்தக் கெடுதலை ஒழுங்கு பண்ணினவுடன் புகைவண்டியில் டேரா கனத்த படதா வகையறாக்களை அனுப்பித்தோம். ஆனாலும் கனம் கவர்னல் ஜனரல் பெங்கால் சாயேப்பின் ஏஜண்ட் மிஸ்தர் புக்சாஹேப் என்பவர் மிகவும் கௌரமுள்ளவர், காசியில் ஜட்ஜும், கலெக்டரும், கம்மாண்டிங் ஆபீஸரும் முதலியோர்களை ஸவாரி உத்திரவிடுகிறவருமாகியிருக்கிறார்கள். அந்த சாஹேப்பினுடையவும், டாக்டர் ஸடனுக்குப் பதிலாக நியமனமாகி செப்டம்பர் 25௳க்கு ஹுஜூரைப் பார்க்க வந்திருந்த பீ. மக்லோட் சாயேபின் பிரார்த்தனையினாலும் ஹிதோபதேசத்[215]தினாலும் கொஞ்சநாள் தங்கினோம்.

தற்காலம் மழை கம்மியாயிருப்பதால் விஜயதசமி ஆனதும், யாத்திரை ஸவாரி புறப்பட்டு யாத்திரையைச் செய்துகொண்டு அங்கிருந்து நேராக தஞ்சாவூருக்கு வரும் பாதையைத் தொடரப் போகிறோம்.

*(3) 1821 அக். 19௳*
*முகாம்—உனே*

ஆஸ்வீஜ கிருஷ்ணபக்ஷம் பஞ்சமி திங்கட்கிழமை ப்ராஹ்மீ முகூர்த்தத்தில் (காலை 4 மணிக்கு) ஸ்ரீகாசியிலிருந்து புறப்பட்டுப் பிரயாகைக்குப் போகிறோம். பிரயாகையை அடைந்து, அங்கிருந்து புறப்பட்டு நாகபூர்-ஹைதராபாத்-கர்னூல்-கடப்பை-திருப்பதி-ஸ்ரீகாளஹஸ்தி-சென்னை-காஞ்சீவரம்-திருவண்ணாமலை-சிதம்பரம் - மாயவரம் இவ்வழியாய் கொஞ்ச மாதங்களில் தஞ்சாவூருக்கு வந்து சேர நிச்சயித்திருக்கிறோம்.

*(4) 1821 அக். 19௳*
*முகாம்-உனே*

நம்முடைய ஸர்காருடையவும், ஸவாரி முகாமினுடையவும் சிலவு அதிகரித்திருக்கிறது. அது வரும் வரும்படிக்கு மேலாக இருக்கிறதென்று ரெஸிடெண்டுக்குத் தெரிவித்திருந்தது. அதற்கு அவர் சிலவைக் கம்மி செய்கிற விதத்தின் விஷயமாக ஒரு கடிதத்துடன் ஒரு ஞாபகார்த்தமாக அனுப்பியதை ஹுஜூர் கவனித்தார்.

*(5) 1821 அக். 31௳*
*முகாம்-பிரயாகை*

23௳க்கு பிரயாகைக்கு வந்து அங்குள்ள தீர்த்த விதிகளை ஒழுங்காகச் செய்து, காவடிகளை நிரப்பி ஆயிற்று. நாளை தினம் இவ்விடமிருந்து புறப்பட்டு முதலில் எழுதியபடி நாகபூர்-ஹைதராபாத் வகையறாவின் வழியாய் தஞ்சாவூருக்கு வரப்போகிறோம். எல்லோருக்கும் தெரிவிக்கிறது.

---

214. ஜலப்பிரளயம் - வெள்ளக்காடு

215. ஹிதோபதேசம் - தக்க அறிவுரை

*(6) 1821 ஜூன் 21௳*
*முகாம்—சாஹேப்கஞ்ச*

**சாப்பிடுகிற பழத்தின் விதை**

சகத்தாளு, படஹார, பனஸா,[216] இம்மூன்று விதைகளின் தினுசுகளை பையில் போட்டு ரோகாக்கள் போட்டிருக்கின்றன. இதைத்தவிர அக்ஷயவட தெவசம்[217] ஹுஜூரவர்கள் செய்ததற்குக் கயாவளிகள்[218] சந்தோஷப்பட்டு மந்திராக்ஷதைக் கொடுத்தார். மடியில் 4 கொட்டைப் பாக்குகளைப் போட்டார்கள். அவைகளையும் 40 விஷ்ணு பாதங்களையும்[219] பாங்கி தபாலில் அனுப்பி யிருக்கிறது. சேர்ந்ததும் பாக்குகளையும் அக்ஷதையும் சி. ரா. இளைய திவானிடம் கொடுக்கவும். சகக்கதாளு என்னும் விதையை நிலத்தில் போட்டு, 7 மாதங்களுக்குப் பிறகு 2 மாதங்களில் முளை கிளம்பும். ஆக 9 மாதங்களில் முளை கிளம்புமாகையால் தண்ணீர் தேக்கமில்லாத இடத்தில் விதையைப் போட்டு, தினந்தோறும் கொஞ்சம் தண்ணீர் போட்டு வரவேணும்.

*(7) 1821 ஜூன் 28௳*
*முகாம் - சிரஸ்*

**21 விஷ்ணு பாதம் வெள்ளியினால் செய்யப்பட்டதை எல்லோருக்கும் கொடுக்க வேண்டிய பேர்வழி விபரம்.**

*(8) 1821 ஜூன் 28௳*
*முகாம் - சிரஸ்*

வைசாக சுத்த அக்ஷய திருதி[220]யைக்கு கயையில் ஹுஜூர் வந்து உடனே மறுநாள் கயாவ்ரஜனத்திற்கு[221] ஆரம்பித்து ஜேஷ்ட பகுள ஸப்தமி[222] வெள்ளிக்கிழமைக்கு சுத்த தெவசம் செய்வதனால் முடிந்தது. 23௳க்கு மா.ஸ்ரீ. ஆவுசாப்பின்[223] தெவசத்தையும் செய்துவிட்டு 24௳க்கு கயையிலிருந்து புறப்பட்டு 13 முகாம்கள் செய்துவிட்டு, ஸ்ரீகாசியைப் பார்க்க வேணுமென்று நிச்சயித்துப் புறப்பட்டிருக்கிறோம்.

---

216. பனஸா - பலா

217. அக்ஷயவடதெவசம் – கயையில் உள்ள ஆலமரத்தின்கீழ் செய்யப்படும் திவசம்; (வடம்-ஆல்; அக்ஷய—அழியாத)

218. கயாவளிகள் - கயையில் செய்யும் திவசத்தில் உண்ணும் பேர்வழிகள்

219. விஷ்ணுபாதம் - கயையில் வணங்கும் திருமாலின் திருவடிகள்

220. வைகாச சுத்த திருதியை அக்ஷய திருதியை எனப்பெறும். வைசாகம்-வைகாசி சுத்தம்-வளர்பிறை, திருதியை-மூன்றாம் நாள்.

221. கயாவிரஜனம் - (5-103) கயையில் செய்ய வேண்டிய நாள்சடங்குகள்

222. ஜேஷ்ட - ஆனி; பகுள-தேய்பிறை; ஸப்தமி-ஏழாம் நாள்.

223. ஆவுசாப் என்றது இரண்டாம் துளஜாவின் தாய் திரௌபதிபாயியையாதல். இரண்டாம் துளஜாவின் மனைவியருள் சுலக்ஷணாபாயியையாதல் குறிக்கும்.

*(9) 1821 ஜூலை 12உ*
*முகாம் - காசி*

கயையை விட்டு தாரேணீ என்னும் ஊருக்கு வருகையில் நல்ல பலசாலியாயிருந்து வழி நடந்து வருகையில்வெய்யிலின் வெப்பம்பட்டு இருந்தாற் போலிருந்து ஸர்காரின் ஊழியர்கள் 3 பேர் இறந்தார்கள்.

*(10) 1821 ஜூலை 12உ*
*முகாம்—காசி*

அங்கிருந்து வரும் கடிதங்களெல்லாம் மழையினால் முழுதும் நனைந்து வருவதால் நாம் இங்கிருந்து உறையைச் செய்து அனுப்பியிருக்கிறோம். அதே மாதிரி நீங்களும் உறையில் போட்டு அனுப்புகிறது.

*(11) 1821 ஜூலை 12உ*
*முகாம் - காசி*

ஹுஜூரின் ஸவாரி ஆஷாடசுத்த தசமி[224] செவ்வாய்க்கிழமை ஜூலை மீ 10உ பகல் 8 மணிக்கு ஸ்ரீகாசியில் வந்து, காசி தம்பிரானுடைய மடத்தில்[225] இறங்கினது. .......வந்த நான் க்ஷேத்திர உபவாஸமும்[226] தீர்த்த விதியும் செய்து, மறுநாள் மணிகர்ணிகா [227] ஸ்னானமும் தீர்த்தச்ரார்த்தமும்[228] ஆனது. தற்போது மழைக்காலம் ஆரம்பிப்பதாலும் க்ஷேத்திர வாஸஞ்(ம்)கொஞ்சமாவது செய்ய வேண்டும். ஆகையால் மழைக்காலம் மட்டும் ....ருது(வ)ரையிலாவது இந்த க்ஷேத்திரத்தில் வாசம்[229] பண்ண நிச்சயித்திருக்கிறது.

*(11)* புதிய சமாசாரம், இங்கே தினந்தோறும் தவறாமல் 8 நாட்களாக மழை பெய்கிறது. இந்தப்படிக்கி வருஷருது முழுமையும் மழைபெய்யும் என்கிறார்கள். ஆகையால் விஜயதசமி வரையில் இங்கு வாசஞ் செய்வதாகத் தீர்மானித்திருக்கிறது.

*(12) 1821 ஜூலை 12உ*
*முகாம்—காசி*

மசுதாபாத் விட்ட பின்னர் கும்பணியில் வாங்கினது ரூபாய் தேதி வாரியும், முகாம் வாரியும் கூடுதல் ரூ 184321 ஒரு லக்ஷத்தி எண்பத்தினாலாயிரத்து முன்னூத்தி இருபத்தொன்று[230] ரூக்கு ரசீதுகள் 29 ஹுஜூர் நவீஸிடம் கொடுத்துப் புத்தகத்தில் எழுதுகிறது.

---

224. ஆஷாடம்-ஆடி; சுத்த-வளர்பிறை; தசமி-பத்தாம் நாள்

225. காசித்தம்பிரான் மடம் - காசியில் கேதாரகட்டத்தில் உள்ளதும், திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து அதிபருடைய பரிபாலனத்தில் இருப்பதுமான குமாரசுவாமி மடம்.

226. க்ஷேத்திர உபவாசம்-திருத்தலத்துக்கு வந்த நாளில் ஊண் உண்ணாதிருத்தல் ஆகிய நியமம்.

227. மணிகர்ணிகா என்பது காசியில் கங்கைக்கரையிலுள்ள 32 கட்டங்களுள் ஒன்று.

228. தீர்த்தசிரார்த்தம் - அந்த நீராடுதுறையில் செய்யப்பெறும் திவசம்.

229. க்ஷேத்திரவாசம் - தலத்தில் தங்கியிருத்தல்

230. ஒருலக்ஷத்து எண்பத்து நாலாயிரத்து முந்நூற்று இருபத்தொன்று என்று திருத்துக.

*(13) 1821 ஜூலை 18உ*
*முகாம்–காசீ*

மிஸ்தர் டுரியன் சாயேப்பிடமிருந்து புத்தகத்தின் பெட்டி வருவதைச் சுப்புராவ் தங்களிடம் அனுப்புவார். அதை நீங்கள் சி.இளையதிவானிடம்[231] அனுப்பிவிட்டுச் சங்கதிக்குக் கடிதம் எழுதவும்.

*(14) 1821 ஜூலை25உ*
*முகாம்–காசி*

ஸர்காரின் வரும்படிக்குத் தக்கபடி சிலவைக் குறைத்து முக்கியமான சிலவைச் செய்கிறது. உபயோகமில்லாதவர்களை வேலையிலிருந்து எடுத்து விடுகிறது. யாத்திரை முகாமில் அதிகமான சிலவை நன்றாகக் கவனிக்கிறது என்று ஸர்கேலுக்கு ஸர்கேல்[232] எழுதினது.

*(15) 1821 ஜூலை 25உ*
*முகாம்–காசி*

பிலக என்கிற பழத்தின் விரையின் பை 1 வஹடேல் என்னும் சாப்பிடுகிற பழத்தின் விரையின் பை 1ம் இந்த 2 தினுசு விரைகளையும் தோட்டங்களில் போட்டு விருத்தி செய்யவும்.

*(16) 1821 ஜூலை 25உ*
*முகாம் - காசீ*

தயவு செய்து கவனிக்கவும். தங்களுடைய[233] உத்திரவைப் பெற்று, ஸவாரியுடன் போன நாள் முதற்கொண்டு தங்களுக்கு ஒரு கடிதமும் எழுதாமலிருந்தேன். அது ஒய்வுயில்லாமலிருந்ததினால் மாத்திரம் தான் என்று சாஹேப்[234] மன்னிப்பீர்களென்று தயவுடன் விஸ்வாஸத்துடனுள்ள சாயேப்பின் பிரியத்தின் நம்பிக்கைதான் தவிர வேறல்ல.

ஹுஜூரின் வேலையின் பிரியத்தினால் தங்களிடமிருந்து தூர தேசங்களுக்குக் கூட மிகவும் பிரியகரமென்றறிந்து புறப்பட்ட பின்னர் ஹுஜூரின் ஸவாரி ஒவ்வொரு இடத்திலும் முகாம் செய்து கொண்டு போன விதம் முகாம்களின் பெயர்களும், ஒவ்வொரு முகாம்களில் தூரமும் முகாம் செய்த இடங்களும், நாளும், முகாம் செய்த காரணங்களும் விபரமாக சாஹேபுக்குத் தெரிய வேண்டியதற்காகத் தனித்தனி குறிப்புகளை இக்கடிதத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன. மேல்கண்ட விபரங்களெல்லாம் நன்கு விளங்கும்படி செய்யப் போதுமானதாகும் என்று சொல்ல என் மனத்திற்கு நிச்சயம் கொடுக்கிறதென்று கேட்டுக்கொள்கிறேன்.

---

231. இளையதிவான் - இரண்டாம் சரபோஜி

232. சர்க்கேலுக்கு சர்க்கேல் - தஞ்சையிலிருந்த சர்க்கேல் ராமோஜி ஸர்ஜேராவ் காட்கே; காசியாத்திரையில் மன்னருடன் இருந்த சர்க்கேல் பாபாஜி ராமாஜி பண்டிதர் (188சி-11-2) பக்கம் 37)

233. தங்களுடைய என்றது தஞ்சையிலிருந்த சர்க்கேல் ஆகிய-ராமோஜி ஸர்ஜேராவ் காட்கேயை. இவ்வாறு எழுதியது மன்னருடன் இருந்த சர்க்கேல் ஆகிய பாபாஜி ராமாஜி பண்டிதர்.

234. சாஹேப் என்றது தஞ்சையிலிருந்த சர்க்கேலை

விசேஷம். கனம் பொருந்திய கவர்னர்[235] சாஹேபின் அதிசயமான தயவினாலும் அவர்கள் வழியில் அந்தந்த ஜில்லாக்களின் ஜட்ஜ் கலெக்டர் சாஹேபுக்கும் எழுதிய உத்திரவுகளினால்

(16) இன்னும் அந்தந்த ஜில்லாக்களின் சாஹேப்புகள் அவ்வுத்திரவின்படிஸௌஜன்யமாய்[236] நடந்தாலும், முன்னால் ஸங்கல்பஞ்[237] செய்த யாத்திரை பூர்த்தியாகும்படி ஆனதால் அந்தச் சாஹேப்பைப் பார்த்து நேரில் மேன்மையாகப் புகழ வேண்டியதுடன் அதற்கு நன்றி மறவாமையைத் தெரிவிப்பதின் எண்ணம். மனதில் எண்ணி அவ்வெண்ணம் அவருக்குத் தெரியப்படுத்த சென்னப்பட்டினம் கவர்னர் சாஹேப் அவர்களுக்கு எழுதிய கடிதம் முதலானதும் பின்பு அந்த ஸாஹேப்பின் தயவினால் யாத்திரைக்குப் புறப்பட்டு, அந்நிய தேசத்தில் பிரவேசித்த பிறகும், அந்தச் சமாசாரம் அறிய முடியாமல் தன் தேசத்திய மரியாதைக்கும், சுகத்திற்கும் கொஞ்சம் கூட இழக்கவில்லை என்பதைத் தெரிவிப்பதற்காகப் புகழை அங்கீகரிக்க வேணுமென்று இரண்டாவது கடிதம்.

காளஹஸ்திக்குச் சென்று ஸ்வாமியின் தரிசனஞ் செய்யத் தீர்மானித்த பொழுது, ஆயுதங்களை கோவிலில் கொண்டு போகக்கூடாதென்று, அங்கிருந்த ஜமீன்தார் தடுத்ததினால் அவ்விஷயத்தில் பணிவுடன் மிக்க பிரார்த்தனை வீணாகப் போக ஆயுதமின்றி போகுவது அகௌரவமென்று சம்மதப்படாமல் ஸ்வாமி தரிசனஞ் செய்யவில்லை. அதற்காக வியசனமும் ஆயுதத்துடன் ஸ்வாமி தரிசன மென்பதற்கு அவ்வூர் ஸ்தல மஹாத்மியத்திலிருக்கும் குறிப்பையும் யாத்திரையைச் செய்துகொண்டு திரும்பி வரும் பொழுதாவது, இந்தப்படித் தடையில்லாமல் சுலபமாக ஸ்வாமியின் தரிசனம் ஆகும்படியாக உத்திரவிருக்க வேணுமென்று மூன்றாவது கடிதம் எழுதப்பட்டது.

கனம் பொருந்திய கவர்னர் சாஹேப் அவர்கள் ஸ்ரீகாளஹஸ்தீஸ்வரருடைய தரிசனம் யாத்திரையில் இருந்துவரும் பொழுது, சுலபமாக ஆகுமென்று பதில் எழுதினதற்கு நன்றியைத் தெரிவிக்க நான்காவது கடிதம் எழுதினது.

சென்னப்பட்டிணத்தின்எல்லை பிரயாகை முகாமிவிருந்து நாளைய தினம் வங்காளத்தின் எல்லை மாலோதார்பாத் இருப்போமென்று இதுவரையில் சுகமாக வழியைக் கடந்தோம். இன்னும் நாளையதினம் கனம்பொருந்திய கவர்னர் ஜனரல்[238] ஸாஹேப்புக்கு இவ்விஷயத்தில் கடிதம் எழுதுவோம் என்று ஐந்தாவது கடிதம்.

பிறகு ஸல்காகாட்டு வந்து சேர்ந்து, கனம் பொருந்திய கவர்னர் ஜனரல் சாஹேப் அவர்கள் நியமனஞ் செய்திருந்த பங்களாவில் தங்கியிருந்து அவரையும் நேரில்போய்ப் பார்த்தோம். அவர்கள் க்ஷேமசமாதானத்தை விசாரித்தும் சி.இளைய திவான் சாயேப் ஒரே ஒரு புத்திரன். அவரையும் நம்முடைய ராஜ்ய விவஸ்தையும் ரெஸிடெண்ட்[239] சாஹேப் அவர்களிடம்

---

235. கவர்னர் என்றது 10-6-1820 முதல் கவர்னராக இருந்த சர்தாமஸ் மன்ரோவ்.

236. சௌஜன்யம் - எளிமை

237. ஸங்கல்பம் - உறுதிசெய்த

238. கவர்னர் ஜெனரல் - லார்டு ஹேஸ்டிங்க்ஸ் (1813-23)

239. ரெஸிடென்டு - வில்லியம் பிளாக்பர்ன் (பக்.66)

ஒப்பிவித்திருக்கிறேன். நாம் யாத்திரை செய்து கொண்டிருப்பதால் நம்முடைய பிள்ளை நம்முடைய சிங்காதனமடைந்து கவர்ண்மெண்டில் தயவுக்கும், போஷணத்திற்கும் அடைவார். இன்னும் நம்முடைய ஸமஸ்தானத்தின் எல்லா ஜனங்களிலும் அவர் மட்டும் முக்கியமாக இருந்து வருவார் என்ற நிச்சயத்தை அறிய ஸந்தோஷத்தை அடையும்படி செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தற்கு அதற்காக சாஹேபானவர் வாக் தத்தம் செய்து, கையின் மேல் கையைக் கோத்து நம்பிக்கையைக் காட்டினார். மேற்கொண்டு அயோத்தி, மதுரா,[240] விருந்தாவனம்,[241] ஹரித்துவாரம்[242] வரையில் யாத்திரையைச் செய்ய வேணும். திரும்புகையில் சம்புமகாதேவ,[243] பண்டரிபுரம் முதலியவைகள் பார்க்க வேணுமென்று தெரிவித்ததை அவரும் சரியென்றாரென்று ஆறாவது கடிதம் எழுதப்பட்டது.

அதற்குக் கனம் பொருந்திய கவர்னர் சாயேப் அவர்கள் எழுதின பதில்களில் தற்பொழுது மழைக்காலம் நெருங்குவதால் மழை அதிகமாகுவதற்கு முன்பே இந்தத் தேசங்களைக் கடப்பது நலம். யாத்திரையை முடித்துத் திரும்பும் பொழுது காண்பதின் சந்தோஷப்படுவேன் என்று முதவில் காளஹஸ்தி ஜமீன்தாரின் பிசகு அவன் அறியும்படி அந்த ஜில்லா கலெக்டருக்கு உத்திரவு செய்வதில் தவறமாட்டேன். அப்பொழுது அம்மரியாதையில் அவனுக்குள்ள ஸ்வதந்திரத்தை இழந்தான் என்பதற்கு நான் ஸந்தேகப்படக்கூடாது என்று இரண்டாவது கடிதம் வந்தது. மற்ற நம்முடைய கடிதங்களுக்குப் பதில் எழுதும்படியதாக இல்லாமலிருந்தது. ஆனால் சமாச்சாரம் தெரிவிப்பதில் தாத்பர்யமுள்ளதாயிருக்கின்றன.

வங்காளத்தில் எல்லை மாளோத் என்னும் ஊரில் போனநாள் யாத்திரையின் உத்தேசத்தினால் இதுவரையில் வந்ததினால் சாஹேபைப் பார்க்க வேணும். இன்னும் கல்கத்தாவிலுள்ள அபூர்வங்களைக் கேள்விப்படுகிறோம். அதையும் பார்க்க வேணுமென்று கனம் பொருந்திய கவர்னர் ஜனரல் சாஹேபுக்குக் கடிதம் எழுதினதற்கு வரலாமென்று - கல்கத்தாவில் ஜனக் கூட்டமானதாலும் கங்கை நதியைக் கடக்க வேணும். மறுபடி யாத்திரைக்குப் போகும்பொழுது தாண்ட வேணும். இதனால் கங்கையைத் தாண்டுகிற விஷயத்தில் 'சாப்பிட்டதே சாப்பிடுகிறது' என்கிற நியாயமுண்டாகிறது. ஆகையாலும் கங்கையின் கரை ஸல்காகாட் மகாராஜா தங்குவதற்கும் நல்லதென்றும் பதில் மேதினிபுரத்தில் கிடைத்தது.

மேதினி புரத்திலிருந்து கல்கத்தாவிற்குச் சென்று கனம் பொருந்திய சாஹேப் ஏற்படுத்தியதும் ஸல்காகாட்டின் ஜட்ஜ் ப்யாரவேல் அவர்கள் எதிர்கொண்டு அழைத்துக் கூடவந்து காட்டியதுமான ஸல்காகாட்டின் இருப்பிடத்தில் பிப்ரவரி மீ 23உ வந்து சேர்ந்தோம். 24உ நாம் தாவீத் பிள்ளையின் கூட பார்சீகக் காரியதரிசி "ப்ரின்ஸீப்" சாஹேப்பின் மிலாகதிக்குச் சென்ற பொழுது கனம் பொருந்திய சாஹேப்பின் வீட்டு வேலைக்காரன் 'மேஜர் ம்யக்ரா' என்பவர் கனம் பொருந்திய சாஹேபின் பெயரால் க்ஷேம சமாச்சாரத்தைப் பராமரித்து

240. மதுரா - யமுனைக்கரையிலுள்ளது; கிருஷ்ணனுக்குரியது.

241. விருந்தாவனம் - பிருந்தாவனம்-யமுனைநதிக்கு மேற்கில் மதுராபுரிக்கு அருகில் உள்ள துளசிவனம்

242. அரித்துவாரம் - மாயாபுரி எனவும் வழங்கும்; கங்கை இமயத்திடமிருந்து சமவெளியில் புகுமிடம்.

243. சம்புபர்வதத்திலுள்ள சிவபெருமான்; சம்புபர்வதம் சதாரா மாவட்டத்திலுள்ளது (S.N.Sen, Siva Chatrapati, Page 2, Foot-note)

வரவேற்றதைத் தெரிவிப்பதற்காக 26வ காண்கிறதென்று நிச்சயத்தைத் தெரிவிக்கவும் ஹுஜூர் வந்து கண்டு பேசிப் போனார். கல்கத்தாவிற்குப் போகவர இரண்டு கப்பல்கள் நியமனஞ் செய்து வந்தன. கல்கத்தாவில் சுற்றிப் பார்க்க நான்கு சாரட் வண்டிகளைக் கனம் பொருந்திய சாஹேப் அவர்கள் நியமனஞ் செய்தனுப்பினார்.

பிப்ரவரி 26வ ப்யார்வேலும்,[244] சென்னப்பட்டினத்திலிருந்து நியமித்து வந்த ஜர்ஜ் ஸடன்[245] சாஹேப்பும் ரா.ஜிவாஜி மொஹிதேராவ்[246] சாஹேபும் ஹாஜன மாப்பிள்ளை ஒன்றும் பாபுராவ் இங்களே மாதவசாமி மாஹாதூகராவ் ராமராவ் ஜாதவ, ஐயாகண்ணுபிள்ளை[247], தாவித்பிள்ளை இவர்களுடன் கப்பலேறி அக்கரையில் சேர்ந்தவுடன் பாரசீக செகரிடரி ப்ரின்ஸிப் சாஹேப் கனம் பொருந்திய சாஹேபினுடைய உத்திரவின்படி எதிர்கொண்டழைத்து 4 குதிரை சாரட்டில் உட்காரவைத்து மற்றவர்களுக்கு 2 குதிரை சாரட்டுகளில் உட்கார வைத்து, பிறகு கனம் பொருந்திய சாஹேப்[248] அவர்கள் வீட்டிற்குப் போய் வீட்டில் பிரவேசிக்கும் பொழுது முக்கியக் காரியதரிசி வகையறா இருதுரைகள் எதிரில் வந்து கட்டித் தழுவிக்கொண்டு கையைப் பிடித்துக்கொண்டு, மேல்மாடியின் மேல் அழைத்துப் போனார். அங்கே பெரிய சபை கூட்டி, கௌன்ஸலர்கள் முதலியோர்களின் கூட இருதுரைகள் பழைய கொரபந்தியில் வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். அக்கனம் பொருந்திய சாஹேப் ஹுஜூர் வந்தவுடனே எல்லோருடனும் எழுந்திருந்து தான் மட்டும் 20, 30 அடிகள் எதிரே வந்து கட்டித் தழுவிக் கொண்டு மிக சந்தோஷத்துடன் சலாம் செய்து பின்னர் அதே இடத்தில் நின்று கொண்டு நாங்களெல்லோரும் செய்த வணக்கத்தையும் மரியாதையையும் ஏற்றுக்கொண்டு, நமக்குப் பதில் மரியாதையும் செய்து பின்னர், ஹுஜூருடைய கையைப் பிடித்து இருந்த இருப்பிடத்திற்கு அழைத்துச் சென்று, தனக்கருகிலுள்ள நாற்காலியில் உட்காரவைத்து, அதற்குப் பக்கத்திலுள்ள நாற்காலியின் மேல் தான் உட்கார்ந்தார். ஹுஜூரின் பக்கத்தில் நான் உட்கார்ந்தேன். ஐயாகண்ணு பிள்ளையும் தாவீத்பிள்ளையும் இவ்விருவர் மட்டும் நின்றார்கள்.

பின்பு ஹுஜூருக்கும் கனம் பொருந்திய சாஹேப்புக்கும் நடந்த க்ஷேம சுகத்தைப் பற்றிய ஸம்பாஷணையைத் தெரிவிக்க சென்னைப்பட்டினத்தின் ரைட் கனம் பொருந்திய சாஹேபுக்கு[249] எழுதிய ஆறாவது பத்திரத்தின் விஸ்தாரம் சக்தியுள்ளதாக விருப்பதால் அதை மறுபடியும் சொல்லவில்லை.

---

244. ப்யாரவேல் - மேற்கண்ட ஸல்காகாட்டின் ஜட்ஜ் (நீதிபதி)

245. ஜர்ஜ்ஸடன் - Surgeon Sutton; காசி யாத்திரையில் உடன் சென்ற ஆங்கில வைத்தியர்.

246. ஜிவாஜி மொஹிதேராவ் - இரண்டாம் சரபோஜியின் முதன்மனைவி எமுனாம்பாவின் மகள் ராஜம்மா பாயியின் கணவன் ஜிவாஜி கோவிந்த ராவ் மொஹிதே

247. ஐயாகண்ணு பிள்ளை -இவர் சாளுவநாயக்கன்பட்டணம் மத்தியஸ்தராகக் கி.பி. 1831இல் காணப்பெறுகிறார். (பக்.468)

248. கனம்பொருந்திய சாகேப் என்றது கவர்னர் ஜெனரல் ஆகிய லார்டு ஹேஸ்டிங்க்ஸை (1813-1823)

249. சென்னப்பட்டணத்தின் ரைட் கனம் பொருந்திய சாஹேப் என்றது கவர்னர் ஆகிய ஸர்தாமஸ் மன்ரோவை.

பிறகு கனம் பொருந்திய சாஹேப் ஹுஜூரின் ஸௌஜன்யத்தினாலும்[250] பிரியத்தினாலும் மிகவும் சந்தோஷப்பட்டு கல்கத்தாவிற்கு வடக்கே 16 மைலிலுள்ள பரக்புராவிற்குப் பிரதிப்பெயர்- அச்யாகை என்னும் ஊரிலிருக்கும் தன்னுடைய வீட்டிற்குச் சிநேகிதத்தின் அடையாளம் தன்னுடைய ஸம்சாரத்துடன் காண்பேன் என்றும், அங்கிருக்கும் வேட்டை மகாலைப் பார்க்கும் சந்தோஷத்தை ஆதரிக்கலாமென்று நீங்கள் என்னுடைய சம்சாரத்தைச் சேர்ந்தவர்களில் ஒருவர் என்ற பாவனை சித்தத்தில் எண்ணுவேன் என்று உறுதிமொழியைக் கொடுத்து முதலில் ஹுஜூருக்கு பின்னர் ரா.மாப்பிள்ளை[251] சாஹேப்புக்கும் தனித்தனியாகக் கட்டித்தழுவி உத்திரவு கொடுக்கையில் கல்கத்தாவிலுள்ள விசேஷ ஜனங்களைப் பார்க்க வேணுமென்று அபிப்பிராயமிருக்கிறது. அதைப் பார்க்கலாமென்றார். அந்த வார்த்தைகளை அங்கீகரித்து இருப்பிடத்திற்கு வரும்பொழுது முக்கிய காரியதரிசியும், பாரசீகக் காரியதரிசி[252] வகையறாவும் முதலில் கண்ட இடம் வரையில் வந்து வழிவிட்டு தழுவிக் கொடுத்து உத்திரவை பெற்றுச் சென்றார்கள். பிறகு கப்பல் ஏறி இருப்பிடத்திற்கு வந்து சேர்ந்தார்கள்.

(15) 27உ அதிகாலையில் பாரசீக காரியதரிசி சாஹேப் ஹுஜூரைக் காண்பதற்கு வந்தார். பிறகு பிஷப்[253] சாஹேப் கல்கத்தாவில் இல்லை. ஆகையால் அவருடைய முக்கியமானவர்களில் அர்ச்யடிக்யநலோரிங் என்பவர் நாலு பாதரிகளுடன் வந்தார். அவரையும் பார்த்துவிட்டு, பாரசீயன் காரியதரிசிக்குப், பதக்கம், லோரிங்குக்கு சால்வை ஜோடியும் எல்லோருக்கும் கிலத் கொடுத்து உத்திரவு கொடுத்தார்.

அன்றைய தினம் சாப்பாட்டுக்குப் பிறகு ஜர்ஜ்[254] ப்யாரவேல் சாஹேபுடன் கல்கத்தாவிற்குச் சென்று அங்கிருக்கும் மஹாகாளியின் தரிசனம் வாங்கிக் கொண்டு வந்தோம்.

28உக்குக் கப்பலில் ஏறி ஸல்காகாட்டின் ஜாஜப்யாரவலே சாஹேப்பின் வீட்டிற்குச் சென்று அவரைப் பார்த்து விட்டு அங்கிருக்கும் கும்பணியின் தோட்டத்திற்குப் போய்ப் பார்த்து வந்தோம். அத்தோட்டத்தினால் மிகச் சிலவு ஆகிறது. வரும்படி மிகக் குறைவா யிருக்கலாம். ஆனால் அந்தத் தோட்டத்தில் இல்லாத மரம் கொடிகளின் தினசுகள் வேறு தேசங்களில் இராது. அதை ரொம்ப ஜாக்கிரதையாகக் காப்பாற்றுகிறார்கள். விசேஷமாக அந்தத் தோட்டத்தில் அழகான இடங்களுமிருக்கின்றன.
மார்ச்சுமீ 1உக்குப் பாரசீகக் காரியதரிசி ப்ரன்ஸீப் சாஹேப் உதவி செய்கிறவர்களுடன் வந்து “அஸிஸ்ட்யாண்ட் ம்ாண்டி கோவிற்கு” ஹுஜூரின் பேட்டி செய்து வைத்து கல்கத்தாவின் கோட்டை வகையறா அதிசயங்களைக் காண்பதற்காக ஹுஜூரின் ஸவாரி செல்லுகையில் கூட இருக்க வேணுமானால் எனக்குக் கும்பணியின் வேலை மிகவும் ஜரூராயிருப்பதால் என்னுடைய உதவியாளர் என்னிடத்திலிருந்து ஹுஜூருடைய எண்ணத்தின்படி அனுஸாரிப்பாரென்று தெரிவித்து உத்திரவைப் பெற்றுக் கொண்டு போனார்.

250. ஸௌஜன்னியம் - இனிய பண்பு

251. மாப்பிள்ளை சாகேப் - ஜிவாஜிமோஹிதே

252. பாரசீக காரியதரிசி - பிரின்ஸிப் சாகேப்

253. பிஷப் சாஹேப் - கிறித்தவ பாதிரி

254. ஜர்ஜ் - ஜட்ஜ் (நீதிபதி)

மார்ச்சு மீ 2உ காலை நேரத்தில் கல்கத்தாவின் கோட்டையையும் அதிலுள்ள ஸ்டோரையும் பார்க்க காண்டிகோ சாஹேப்புடன் சென்று பார்க்கையில் அக்கோட்டைக்கு மேலண்டை அகிழ் கங்கைநதி தான். அக்கங்கையின் கரையில் இரண்டு எத்துக்காட்டிகளைக்[255] கட்டி, இரண்டு யெத்துக்கட்டிகளில் நடுவில் கதவுபோல்'தத்கேஷ'பூட்டியிருக்கிறது. அவ்விடத்தை அனுசரித்து மூன்று பக்கத்திய அகிழ்களும் வந்து சேர்ந்திருக்கின்றன. கோட்டையின் வாசலண்டை அகிழை மூன்றுதரம் கடக்க வேண்டியிருக்கிறது. அந்த எல்லா அகிழ்களிலும் தண்ணீர் கொஞ்சம்கூட இல்லை. பசும்புல் மிகவும் நெருங்கி எடுக்கும்படி வளர்ந்திருக்கிறது. அந்த அகிழ்களில் தண்ணீர் நிரப்ப வேண்டுமென் றெண்ணினால் இரண்டு யெத்துகளிலுள்ள கதவுகளைத் திறந்தால் ஒரு நாழியில் அகழி நிரம்பி விடுகிறது.

ஆயுத சாலையில் துப்பாக்கிகள் 40,000 பீரங்கிகள் 500 இதற்குக் குறைவாக யில்லை. இதைத் தவிர பீரங்கிகள் துப்பாக்கிகள் குண்டுகள் வகையறா ஆயுதங்களின் வேலை எப்பொழுதும் நடந்து கொண்டிருக்கிறது. அதைப் பார்த்து வந்தோம்.

பிறகு அன்றைக்கே சாயங்காலம் கங்காநதியில் நிற்கிற அநேக கப்பல்களில் ஆங்கிலேயரின் கப்பல் ஒன்றைப் பார்த்து வந்தோம்.

(16) மார்ச்சு மீ 3உ மாண்டிகோ
என்பவருடன் பிஷப் (பாதரியின்) சாஹேபின்நிமாந? இடம் பார்க்கச் சென்றோம். அப்பொழுது அர்ச்சிடிக்யலோரிங் சாஹேப் சில பாதரிகளுடன் வாசற்படியண்டை வந்து எதிர்கொண்டழைத்து உள்ளே அழைத்துச் சென்று பாதிரியார் உட்காருகிற இடத்தையும் கனம் பொருந்திய சாஹேபின் இடமும் கௌன்சலர் முதலானவர்களின் இடத்தையும் பள்ளிக்கூடத்தில் படிக்கும் பிள்ளைகளும், பெண்களும் சாப்பிடுகிற, படுக்கிற இடத்தையும் காட்டி, இன்னும் தன்னுடைய சம்சாரத்தையும் பெண்ணையும் காட்டி ஒரு புத்தகத்தைக் கொடுத்தார்.

மார்ச்சுமீ 4உ சூர்யகிரகணம் 2உ கப்பல் செய்கிற இடம், இதற்கு நாவடய்க்யார்ட்[256] மணிதஈத் அந்தக் கப்பலின் நீளம் அகலத்திற்குத் தகுந்தபடி ஒரு பள்ளம் கப்பலின் உயரத்தின் ஆழத்தில் வெட்டி, அடியில் மிருதுவாய் ஹாஜார்பந்தியும், சுற்றிலும் படிகளும் செய்திருக்கிறார்கள். அதில் யேரா? வைத்து நங்குரம் போட்டு, நிற்க வைத்த புடுகாவின்[257] ஒரு பாகத்திலும் மேல் விஸ்தாரமான பாகத்திலும் அந்த வேலைக்கு உபயோகமான ஆட்களிருக்க போதுமான இடமிருக்கிறது. இன்னும் படிகளின் சகாயக்கினால் சாரத்தின் கஷ்டம், கொஞ்சமிருக்கிறது. அப்பள்ளத்திற்கு மேலண்டைக்குக் கங்காநதியின் சம்மந்த மிருக்கும் படியாகச் செய்து கங்கையின் தண்ணீர் அப்பள்ளத்தில் நிரம்பாமலிருக்க கோட்டையின் அகிழுக்கு நதியினண்டை விஸ்தாரமான பலகையின் கதவுகளை மூடுவதினால் தண்ணீரை தடுத்திருக்கிறது. அப்பள்ளத்தில் கொஞ்சம் ஊற்றினால் அல்லது மழையினால் தண்ணீர் தேங்கினால் இறைப்பதற்குக் குழாய்களை வைத்திருக்கிறார்கள். அப்பள்ளத்தில்

255. எத்துக்காட்டி - எடுத்துக்காட்டி - கைப்பிடிசுவர்

256. நாவட்யக்யார்ட் - Naval Dockyard - கப்பல் கட்டுதல் பழுதுபார்த்தல் ஆகியவற்றுக்குரிய சாதனங்கள் இருக்கும் துறை

257. புடுகா - படகு - கப்பல்

கப்பல் வேலை நடப்பது முடிந்தது. கப்பலைத் தண்ணீர் தள்ளுகிற வேலையில் கதவுகளைத் திறந்து தண்ணீரை நிரப்பிக் கொண்டு..............

8உ மார்ச்சுமீ கனம் பொருந்திய சாஹேபின் பேட்டி கண்டு புறப்படுவதற்கு உத்திரவு வாங்குவதற்கு நிச்சயஞ் செய்து கொண்டு, அவருடைய முதல் பேட்டி கண்டபொழுது கூடச்சென்ற ஸேவக ஜனங்களில் கல்கத்தாவில் வாங்கின சாமான்களை கப்பலிலேற்றுவதற்காக அங்கே தங்கின தாவீத்பிள்ளை ஒருவரைத் தவிர நாமெல்லோரும் ஹுஜூரின் ஸவாரியுடன் சென்றோம். போகும் பொழுது வழக்கப்படி எல்லா மரியாதைகளைப் பூர்ணமாகப் பார்த்து கனம் பொருந்திய சாஹேபுக்கு ஸ்ரீகாசியாத்திரைச் செய்து முழுவதும் முடிக்க; எண்ணத்தைத் தெரிவிப்பதோடு ஸ்ரீகாசியும் அலகாபாதும் ஆனவுடன் மதுரா, விருந்தாவனம், அயோத்தி, ஹரித்துவாரம் வரையில், யாத்திரை செய்யவேண்டுமென்கிற இச்சையையும் தெரிவித்தார். அதை அந்த சாஹேப் கேட்டுவிட்டு சரி இந்த இடத்திற்குப் போகையில் பாரசீக காரிய தரிசிக்கு நீங்கள் எழுதலாமென்று சொல்லி ஹுஜூருக்கு ஒரு துப்பாக்கியும் கடியாரமும் தங்கம் முலாம் செய்த வெள்ளியின் ஹௌதா கங்கா ஜெமுனீ, ஒரு தந்த முள்ள யானையுடனும், தினுசுவாரி மரங்களின் விதைகளையும் கொடுத்து, பின்பு அத்தர், வெற்றிலைப் பாக்கு, பன்னீர் கொடுத்துத் தழுவிக்கொண்டு பின்பு மாப்பிள்ளை வகையறாக்களுக்கும் அத்தர் வெற்றிலைபாக்கு பன்னீர் கொடுத்து உத்திரவு கொடுத்தார்.

(16) உடனே அங்கிருந்து/அவருடைய அனுமதியின் பேரில் அவருடைய வீட்டிற்குக் கங்காநதியின் மேலண்டைக் கரையில் ஸ்ரீராம்பூர் என்னும் ஊரில் அச்சுப் புத்தகங்களின் வேலையும் காகிதம் தயார் செய்கிற வேலையும் நடந்து கொண்டிருப்பதைப் பார்ப்பதற்கு அவரிடத்திலுள்ள ஜனங்கள் பார் வகையறா அசல் பரிவாரங்களுடன் சென்று பார்த்ததில் ஆங்கிலேய பிரதிக்கு பிரெஞ்சு, பாரசீ, மராடி, குஜராதி, தெலுங்கு, தமிழ், பங்காலி, நாகரம் முதலிய எழுத்துக்களின் வேலையும் அச்சு எழுத்துக்களைத் தயாரித்து, காகிதத்தின் மேல் அச்சிடுகிறது. இவ்வேலை விசேஷமாக நடக்கிறது. இதைத்தவிர கோரா காகிதத்தைத் தயார் செய்யப் புகையாலும் நீராவியின் பலத்தாலும் சுத்துகிற இயந்திரம் கப்பல் செய்கிற துக்யார்டில்[258] செய்திருக்கிறது. அம்மாதிரியாகத்தான் இருக்கிறது. ஆனால் பெரியதானதாலினால்வஹிடி இருக்கும் யந்திரம் சுற்றுகிற பலத்தினால் நார் கசக்கினார்ப் போலாகி நாரின் பரமாணு வாயாகி தண்ணீரில் சேர்ந்து போகிறது. அதிலிருந்து காதிமுண்டாகிறதையும் பார்த்து விட்டுத் திரும்பவும் கப்பலேறி கனம் பொருந்திய சாஹேப்புடைய வீட்டின் சமீபத்திலுள்ள படித்துறைக்கு வந்து கரையேறி சாராட்டு வண்டியில் ஏறுகையில் மிஸ்தரிஸ்[259] சாஹேப் அவர்கள் பூமியில் பற்றுதலில்லாமல் மரத்தின் மேலேயே வளருகிற கொடியின் பூக்களை அபூர்வமாக சில கொத்துக்களை ஒரு கூடையில் போட்டு அதை மா. ஸ்ரீ. பாயிசாப்[260] அவர்களுக்கு கொடுப்பதற்காக ஹுஜூரிடம்[261] கொடுத்தனுப்பியதை ஏற்றுக்கொண்டு சாரட்டில் அமர்ந்து கைர்ஹடியின் எதிரிலுள்ள 8 துரை[262]யை யடைந்து படகேறிடேராவிற்கு வந்து சேர்ந்து தங்கினோம்.

258. துக்யார்டு - Dockyard

259. மிஸ்தரில் -Mistress(Mrs.)

260. பாயிசாப் என்றது அஹல்யாபாயியை

261. ஹுஜூர் என்றது இரண்டாம் சரபோஜியை

262. துரை – நீர்த்துறை

மார்ச்சு மீ 9வ காலையில் படகேறி அக்கரைக்குச் சென்று அச்யானகாஸீக்கு ஒருமைல் வடக்கே வெடிமருந்து சாலை இருக்கிறது. அதில் பொட்டிலுப்புவைச் சுத்திசெய்து வெடிமருந்து தயாராகிறதையும் பார்த்து, அங்கிருந்து துரையவர்களுக்குத் தயவு வந்து மேற்சொன்ன காரியத்தைக் காட்டினார். அது மட்டுமல்லாமல் பித்தளைக் குண்டுகளைப் போட்டு மூன்று பீரங்கிகளை விட்டுக் காட்டினார். வேடிக்கையையும் பார்த்துவிட்டு டேராவிற்கு வந்து, அன்று அங்கேயே இருந்து 10வ விடியற்காலையில் கயையின் வழியைக் கைப்பற்றினோம்.

மேலறிவித்தவை யெல்லாம் நடந்த படிக்கி ஸர்கஹான்? சொன்னேன். ஆனால் கனம் பொருந்திய சாஹேபவர்கள் காட்டிய அன்பினால் எல்லா ஜனங்களுக்கும் உண்டான சந்தோஷமும் ஆச்சரியமும் சொல்லவில்லை.அது மறக்கத்தக்கதல்ல வென்றும், சொல்லால் வர்ணிக்க முடியாததாகையால் சொல்ல முடியாதென்றதனாலே என்றும் அறிந்து அவ்விஷயத்தில் முயற்சிக்க வேண்டியதில்லை என்றும் தீர்மானித்தோம். ஆனால் உண்டான சந்தோஷத்தை வேண்டிய ' ' ஜனங்களுக்குத் தெரிவிக்காமலிருப்ப தில்லை என்பது சித்தத்தின் சுபாவம் சாயேபுக்குத் தெரியுமாகையால் கொஞ்சம் சொல்லுகிறேன். அதை அசட்டை செய்யாமல் மனதில் வாங்க வேணுமென்று கேட்டுக் கொள்ள சமயம் நேர்ந்திருப்பதால் தெரிவிக்கிறேன்.

என்னவென்றால் - ஸல்காகாட்டுக்குப் போன தினம் அங்குள்ள எவர்எவர் சாஹேபுக்கு எதிரனுப்பி தங்குமிடத்தில் அழைத்து வந்து இறக்குவதினாலும் அங்குள்ள தரோகா போலீஸ் அதிகாரி முதலியவர்கள் காத்திருந்து வேண்டிய சாமான்களைச் சேகரித்துக் கொடுக்க அவர்களை நியமனஞ் செய்வதாலும் 24வ மேஜர் ம்யக்ரா சாஹேபுக்கு அனுப்புவதனாலும் ஸர்காரின் ஊழியர்கள் வரப்போக மூன்று படகுகளையும் படகோட்டிகளையும் நியமித்துக் கொடுப்பதனாலும் இன்னும் பேட்டி காண்கிற தினத்தில் படகிலிருந்து இறங்குமிடத்தில் பாரசீக காரியதரிசியை அனுப்புவதினாலும், ப்யாலூபாண்டாவின் துருப்புகளின் வரிசையை நிறுத்தி வைப்பதாலும், முக்கிய காரியதரிசியை வீடுவரையிலும் எதிர் கொண்டனுப்புவதினாலும், கனம் பொருந்திய சாஹேப் அமர்ந்திருந்த இடத்திலிருந்து கொஞ்ச தூரம் எதிரே வந்து காண்பதினாலும், பிரிதி பூர்வகமாக சம்பாஷணையினால் காட்டிய பிரிதியும் செய்த கௌரவத்தையும் அறிந்தும் ஸல்கா காட்டிலிருக்கும் (வசிக்கும்) ஜனங்கள் எல்லோரும் ஆச்சரியப்பட்டு, இப்பட்டணத்திற்கு அநேக பிரபு ஜனங்கள் வந்திருந்தார்கள். ஆனால் அவர்களுக்கு இவ்வளவு சீக்கிரமாகப் பேட்டி கொடுத்தும் இப்படி கௌரவித்தும் அதை நாம் அறியவில்லை என்று மூலைக்கு மூலை வீட்டுக்கு வீடு பேசிக்கொண்டிருந்தார்களென்பது யாருக்கும் தெரியாதது அல்ல.

கல்கத்தாவில் பார்த்த ஆச்சர்யமான இடங்கள் மட்டும் தங்களுக்கு மேல் தெரிவிப்பதினால் தெரிவித்தேன். ஆனால் அதனுடைய பெருமையும் ஆச்சரியமும் இக்கடிதத்தைக் கொண்டு அறிய இடமில்லை. பாருங்களென்ற அர்த்தத்தினால் சாஹேப் என்பேரில் ப்ரணய கோபமை[263] செய்ய வேண்டும். ஏனென்றால் அவைகளில் ஒரு ஆச்சர்யமுமில்லை. அத் தோட்டமொன்றை மட்டும் நினைத்துப் பார்த்தால் அதிலிருக்கும் மரம், செடி, கொடிகளை அத்தோட்டத்தைத் தவிர்த்து வேறிடத்தில் பார்க்கிறவன் எல்லா தேசங்களும் கண்டங்களும் தீபங்களும்[264] இவைகளில் தோட்டம், மலை முதலியதெல்லாம் சுற்றிப் பார்க்கலாமே.

263. பிரணயம் - அன்பு; கோபனம் - இரகசியம்

264. தீபங்கள் - துவீபங்கள் - தீவுகள்

இதைத் தவிர அத்தோட்டத்திலுள்ள புல், மரம், கொடி, குல்மம்?[265] இவ்வொவ்வொரு தினுசின் அவசியம் பாதுகாப்பதின் கூர்மையும் ஜாக்கிரதையும் பார்க்கையில் ஒவ்வொரு தினுசும் அழியாது. இன்னும் முன்போலவே இருக்குமென்று சொல்வதற்கு சந்தேகிக்க வேண்டியதில்லை. இப்படி எல்லா மருந்துகளின் திரட்டலும், அபிவிருத்தியும் செய்து கொண்டிருக்கிறார்கள். அந்தக் கும்பனியார்கள் அதன் பொருட்டுப் பயன்கொடுக்குமென்று எண்ணி இருப்பது ஏதென்று நான் அறியவில்லை. ஆனால் அப்பேர்ப்பட்ட ஸங்கிரஹத்தின்[266] பயன் என்ன இருக்கலாமென்று நாமே யோசித்துப் பார்க்கையில் இந்தப் பிரஹ்மகல்பத்திற்குப்[267] பிறகு வரும் ப்ரஹ்ம கல்பத்தின் ஆரம்பத்தில் உண்டாகுகிற பிரஹ்மஹ தேவருக்குப் புதுசிருஷ்டியைச் செய்ய ஆரம்பிக்கையில் மருந்து சிருஷ்டிக்கு இந்த மாந்திரிக்கு ஆகாமல் போகாது. அல்லது மருந்து வனஸ்பதிகள்[268] சிருஷ்டிக்கிற சிரமம் ஏற்படாதென்று மாத்திரம் நிச்சயஞ் செய்கிறது நல்லதென்று தெரிகிறது. சாதாரணமான ஒரு தோட்டத்தின் சங்கதி இந்தப்படிக்கிருக்க அங்குள்ள வர்ணிக்கமுடியாத மற்ற ஆச்சரியத்தின் பெருமை முழுதும் எழுத அவ்வளவு எழுதுகிறவனும் கடிதங்கள் முதலிய சாதனங்கள் அல்லது சப்தங்களில்லை என்று நிச்சயம் செய்வீர்கள் அப்பொழுது அப்பேர்ப்பட்ட கோபத்திற்குக் காரணமுண்டாகாது.

மார்ச்சு மீ 10உ கைரஷ்டி முகாமிலிருந்து புறப்பட்டு மகுதாபாத், பாகல்பூர், அஜிமாபாத் முதலிய நகரங்களைப் பார்த்துக்கொண்டு மே மீ 4உக்குக் கயைக்கு வந்து சேர்ந்தோம். கயை பட்டணம் மலையின் மேலிருக்கிறது. ஆகையாலும் அங்குள்ள வீடுகள் அசௌகர்யங்களாயும் சிறியதாயும், அதிலும் 3,4 மாடிகள் உள்ள நெருக்கமானதாயும், வீதிகள் மிகவும் அகலக் கட்டையாயும் ஒரு யானை கூட கஷ்டமாக அல்லது மெள்ளவாகவும் கொண்டு போக மட்டும் போதுமானதாயும் இருப்பதால், அதிலும் தற்பொழுது கோடைக்காலமானதாலும் அந்தப் பட்டணத்திற்குச் சமீபம் கயையின் இராஜா நியமித்த பட்டணம் சாஹேப் கஞ்ச் என்னுமிடத்தில் அந்த இராஜாவின் அரண்மனையிலேயே ஹுஜூர் இறங்கியிருந்தார். அவ்விடம் அனேகமாய் சுகத்தைத் தரக்கூடியதென்று சொல்ல வேணும். ஆனால் அந்த இடமும் இப்பட்டணத்தின் இராஜா மித்ரஜித்ஸிங்கு என்பவருடைய பேட்டியும் கயையின் ஜட்ஜ் சாஹேபுடைய நியமனத்தினால்தான் தவிர வேறு விதமல்ல. இராஜா மித்ரஜித் ஸிங்கு என்பவர் எப்பொழுதும் இருப்பது டிமரீ என்னுமூரில் தான் எப்பொழுதாவது சாஹேப் கஞ்சில் வசிக்கிறார். அவர் ஜர்ஜ் சாயேப்பின் உத்திரவின்படி வீட்டைக் காலி செய்து கொடுத்து எதிரே வந்து ஒருதரம், இருதரம் பேட்டி வாங்கினார். கயை க்ஷேத்திரத்தை யடைந்த தினம் அக்ஷய திருதியை[269] ஆனதால் அதற்காகக் காரியங்கள் நடந்தன. இரண்டாம் நாள் கயாவர்ஜனத்திற்கு[270] ஆரம்பித்து 48 நாளில் அஷ்டகயை விதிப்படி செய்து முடிந்தது.

265. குல்மம் - கூட்டம் என்று பொருள்படலாம்

266 ஸங்கிரஹம் - சங்கிரம் - காடு ,தொகுதி

267. பிரம்ஹகல்பம் - பிரமன் ஆயுட்காலம்

268. வனஸ்பதி - பூவாது காய்க்கும் மரம்

269. அக்ஷய திருதியை - வளர்பிறை மூன்றாம் நாள்(?)

270. கயாவர்ஜனம் (வர்ஜனம் - நீக்குகை)

கூட வந்த ஸேவக ஜனங்கள் வகையறாவில் அஷ்டகயை செய்கிறவர்கள் அஷ்டகயை செய்தார்கள். சிலர் பஞ்சகயை, சிலர் யோகோத்திஷ்டகயைச் செய்தார்கள். இதில் அஷ்டகயைக்கு 47 தெவசம், பஞ்சகயைக்கு 37 தெவசம், ஏகோத்திஷ்டத்திற்கு[271] 3 தெவசம் செய்ய வேணும். அவசியமானால் 2 தினம் ஒவ்வொன்று வீதம் செய்கிறது நல்லது. பக்ஷம் செய்தால் அதே மாதிரியாய் ஹுஜூர் பூர்ணமாய் முடித்தார். மற்றவர்களில் சிலர் அதே பக்ஷத்திற்கு அனுசரித்தார்கள். சிலர் ஒவ்வொரு நாளும் 2,4,7,5 வீதம் செய்து முடித்தார்கள். இந்தப்படி முடிப்பதும் அந்த க்ஷேத்திரத்தில் பழைய வழக்கமாயிருக்கிறது.
ஹுஜூரின் ஸவாரி கயை க்ஷேத்திரத்திற்குச் சேர்ந்த தினம் ஹுஜூருக்கும் கூட வந்த ஸேவக ஜனங்களுக்கும் தங்குவதற்கு வீடுகளைத் தயார் செய்ய கயையின் ஜர்ஜ்சாஹேபும் இராஜாவும் கயாவளி இவர்கள் செய்த ஜாக்கிரதையும், அதற்காக அவர்களுக்கேற்பட்ட சிரமும் நினைக்கவும் அவ்வூரில் நடந்த ஜனக்கூட்டமும் நினைக்க, ஹுஜூரினால் ஆரம்பிக்கப்பட்ட கயைவர்ஜனம் முடிந்த தினத்தில் கை.வா.ரா. துளஜாராஜ தன்னைத் தவிர தன்னுடைய 99 குலங்களும், மற்ற யாத்திரிகள், ஸேவக ஜனங்கள் வகையறாவின் 100 குலங்களும் பிரஹ்ம லோகத்திற்குச் சென்றார்கள். அப்பொழுது அவாளவாளுடைய அந்தஸ்து பிரகாரம் தங்களுடைய லோகத்தில் ஒரே காலத்தில் ஒவ்வொருவருக்கும் ஒரு வீடு பிரகாரம் தயார் செய்து கொடுப்பதினாலும் தன்னுடைய ஸபையில் இவர்களெல்லோருக்கும் தகுந்தபடி இடங்களை நியமிக்க ஸபையை விஸ்தரித்துக் கட்டுவதால் பிரஹ்ம தேவருக்கு எவ்வளவு பணம் சிலவாகும், இன்னும் எவ்வளவு சிரமேற்பட்டிருக்குமென்று எண்ண முடியாது.

இருக்கட்டும், இது ஹு ஜூருடைய பரமகுளிர்ந்த நிழலினாலும் சௌ. வஜ்ரகூடே[272] மண்டித[273] மஞ்சள் குங்குமத்தோடு சோபிக்கிற மா.பாயிசாப்[274] இவர்களுடைய ஸான்னித்யத்தினாலும்[275] எல்லா ஜனங்களும் ஸ்ரீகாசி க்ஷேத்திரத்திற்குப் போய் ஆனந்தத்துடன் சுக சந்தோஷத்தோடு ஹு ஜூரின் ஸேவையில் தத்பரமாயிருக்கிறார்[276] களென்று பாபா[277] வணக்கமாய்த் தெரிவிக்கிறார்.

முகாம் - ஸ்ரீகாசீ,

ஹு 1821 - 7 - 25
(17) 1821 ஜனவரி 4உ
முகாம் - மிட்டாகூப

---

271. ஏகோத்திஷ்டம் - இறந்தவர்க்குப் பதினோராம் நாள் செய்யும் திவசம்

272. வச்சரகூடே - வயிரங்களை அணிந்தவள்

273. மண்டித - நிறைந்த

274. பாயிசாப் - அஹல்யாபாயி

275. ஸாந்நித்தியம் - முன்னிலையில் இருத்தல்

276. தற்பரமாய் - மேன்மையடைந்து

277. பாபா என்றது காசியாத்திரையில் உடன் இருந்த சர்க்கேல் பாபாஜி ராமாஜி பண்டிதர்

சௌ. ஸைதம்பாயிசாப்[278] அவர்களின் தேக அசௌக்யத்திற்கு டாக்டர்[279] அல்லது தத்வபிள்ளையைக்[280] கொண்டு வைத்தியம் செய்கிறது.

*(18) 1821 ஜனவரி 8உ*
*முகாம் - ஸ்ரீ ஜகன்னாத*

இன்று விடியற்காலையில் நரசிங்க பட்டணத்திலிருந்து 9 மணிக்கு ஹுஜூருடைய ஸவாரி வந்தது.....வங்காளத்தின் கமெண்டிங் ஆபீஸர்[281] கனம் பொருந்திய ஜனரலின் உத்தரவின்படி 21 குண்டுகளைப் போட்டு அதற்கு முன் வந்து எதிர் கொண்டழைப்பதனாலும் முழு மரியாதை செய்தார்.

மத்தியானம் 3 மணிக்கு ஸ்ரீ ஜகன்னாத ஸ்வாமியின் தரிசனத்திற்காக ஹுஜூரின் ஸவாரி மாத்திரம் சென்றது. ஸ்ரீஸ்வாமிக்கு யானை ஒன்றும் கிலத? ஒன்றும்,3 மொஹராவையும் 12 ரூபாயையும் பூசை வகையறா கொடுத்து, ஸ்வாமியைப் பார்த்தார்

ஸ்ரீஸ்வாமியின் 4 படங்களும் துளசிமணியின் மாலை ஒன்றும் சீரா என்கப்பட்ட கயரொன்றும் நிர்மால்ய (ஸ்வாமிக்குப் பூஜை செய்த புஷ்பம்) துளசியும் பிரஸாதமும் வைத்திருக்கிற நம்முடைய ஆசிர்வாதத்துடன் சி.ரா.இளையதிவான்[282] சாஹேபிடம் சேர்ப்பித்து சங்கதியைத் தெரிவிக்கிறது.

*(18) 1821 ஜனவரி 8உ*
இந்த க்ஷேத்திரத்தில் இன்னும் 4 நாட்கள் தங்கி தினம் பிரஸாதத்தை அனுப்புகிறதை எல்லோருடைய வீட்டிலும் கொடுக்கிறது. மகம்மதியன், பறையன் வீட்டில் கொடுக்க வேண்டியதில்லை. நீங்களும் காளேராவ் அப்பாவும் எடுத்துக் கொள்ளவும்.

ஸ்ரீ ஜகந்நாதத்திற்குப் பிரதிப்பெயர்[283] புருஷோத்தம் அல்லது பூரி.

*(19) 1821 ஜன 12உ*
*முகாம் - ஜகன்னாத்*

பொங்கல் பண்டிகை தினம் ஹுஜூருடையவும் சௌ. சர்க்கரை பாயிசாப்புடைய உத்திரவின்படி எள்ளு 12 பைகளை அனுப்பியிருக்கிறது. அதைப் பங்கீடு விபரமும் கீழ் எழுதியபடி எல்லோருக்கும் கொடுக்கிறது.

---

278. ஸைதம்பாயிசாப் - சைதம்பாபாயி - இரண்டாம் சிவாஜியின் முதல் மனைவி; இரண்டாம் சரபோஜியின் மூத்த மக ஆகிய சுலக்ஷணாபாயியின் மகள்.

279. டாக்டர் என்றது ஆங்கில மருத்துவரை; ஸர் தாமஸ் சிவேஸ்தர் ஆகலாம் (பக்கம் 287) (188சி-ஊ-27-28)

280. தத்வபிள்ளை - நாட்டு மருத்துவர் (பக்கம் 129)

281. கமெண்டிங் ஆபீஸர் - Commanding Officer

282. இளையதிவான் என்றது இரண்டாம் சிவாஜியை

283. பிரதி பெயர் - மறுபெயர்

*(20) 1821 ஜனவரி 14உ*
*முகாம் - அம்ருதபூர்*

ஜகன்னாதத்தின் பிரஸாதம் மஞ்சளும், சிரா என்னும் நூலும், மஹாப்பிரசாதம் துளஸி காஷ்டத்தின்[284] மாலைகளையும் பாங்கி தபாவில் கஞ்சம் வரையில் தபால் கட்டணம் செலுத்தி அனுப்பியிருக்கிறது. கஞ்சத்திலிருந்து தஞ்சாவூர் வரையிலும் கூலியைக் கொடுத்து வாங்கி எல்லோருக்கும் கொடுக்கிறது.

*(21) 1821 ஜன 14உ*
*முகாம் - அம்ருதபூர்*

மாயவரத்தில் ஸன்னதித் தெருவிலிருக்கும் வைத்யநாத அய்யர் கங்கை யாத்திரையை செய்து கொண்டு தன் வீட்டுக்குத் திரும்புகையில் இந்த முகாமுக்கு வந்தார். அவரிடம் ஸ்ரீஜகன்னாத ஸ்வாமியின் கட்டை விக்ரஹம் 18 பாலபத்ர[285] ஸ்வாமியின் விக்ரஹம்-1 சுபத்ராவின்[286] விக்ரஹங் கூட அனுப்பியிருக்கிறது. கூடைகளில் 24 மர விக்ரஹங்களை அனுப்பியது கீழ் எழுதிய விபரத்தின்படி யிருக்கிறது.

*(22) 1821 ஜன 20உ*
*முகாம் - கடக்[287]*

சி.ஸக்வார் பாயி அமணிராஜே சாஹேப்[288] அவர்கள் செளியினால் கொஞ்சம் சூடாக இருக்க வைத்தியருடைய சம்மதமில்லாமல் செய்யக்கூடாத காரியமான எண்ணையைத் தேய்த்து முழுகி தயிர் சாதத்தைச் சாப்பிட ஆரம்பித்தாரென்பதைக் கேட்டு ஹுஜூர்[289] அறிந்து விசனமடைந்தார். அவர்கள் அரண்மனையில் அபத்திய[290] மாயுள்ள எவ்வித பதார்த்தங்களையும் வைக்கக்கூடாது என்று ஸேவக ஜனங்களுக்கு உத்திர விடுகிறது. இப்படியே செள.அமணிராஜா சாஹேப் மாப்பிள்ளை ரா.ராமச்சந்திரராவ் இங்களே[291] இவரைக் கொண்டு, நன்றாக மாத்துகிறது. அவரை எப்பொழுதுமே கவனிக்க வேணும். சி. சுலக்ஷணாபாயி[292] அமணி ராஜேக்கும் தெரிவிக்கிறது.

---

284. காஷ்டம் - கட்டை; குச்சி

285. பாலபத்ர - பலபத்திரர் - பலராமர்; திருமாலின் பத்தவதாரங்களில் கண்ணனுக்கு முன்னவராகியவர்

286. சுபத்ரா - அருச்சுனன் மனைவி; கண்ணனுக்குத் தங்கை

287. கடக் - Cuttack

288. சக்வார்பாயி - இரண்டாம் சரபோஜிக்கு அஹில்யாபாயியிடம் பிறந்த நான்காவது பெண்

289. ஹுஜுர் என்றது இரண்டாம் சரபோஜியை

290. அபத்தியம் - பொருந்தாவுணவு

291. மாப்பிள்ளை ராமச்சந்திரராவ் இங்களே - மேற்கண்ட சச்வார்பாயியின் கணவர்.

292. சுலக்ஷணாபாயி - இரண்டாம் சரபோஜிக்கு அஹில்யாபாயியிடம் பிறந்த முதல் மகள் (போ.வ.ச.பக்.135)

*(23) 1821 ஜன 20உ*

முகாம் - கடக்

**முதலில் 26621 ரூக்கு 8 ரசீதுகளின் நகல்களை அனுப்பினோம். பின்பு கும்பனியிலிருந்து துகை வாங்கினதற்கு ரசீதுகளின் நகல்கள்.**

நகல்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| ஸன் | 1821 | டிசம். 30உ | ரசீது 1க்கு | ரூ.3000 |
| ஸன் | 1821 | ஜன8உ | ரசீது 1க்கு | ரூ.10000 (ஜகன்னாத்) |
| ஸன் | 1821 | ஜன 12உ | ரசீது 1க்கு | ரூ. 2000 |
| ஸன் | 1821 | ஜன 14ஹூ | ரசீது 1க்கு | ரூ. 1000 |
| ஸன் | 1821 | ஜன.18உ | ரசீது 1க்கு | ரூ. 6000(கடக்) |
| | | | | 22, 000 |

(23) இந்த 22 ஆயிரத்திற்கு ரசீதுகளை ஹுஜூர் நவிஸிடம் கொடுத்து புத்தகத்தில் வரவு வைக்கிறது. ஸ்ரீஜகன்னாதத்தில் தினுசுவாரி மோஉறரா மூன்றில் வட்டமானவை -2. சதுரமானது-1 ராமடங்கா[293] மாதிரிவாரி - 1 இந்தப்படிக்கு 4 இடத்தில் தங்கத்தின் வாங்கினவைகளை இக்கடித்தில் வைத்திருப்பதைஹுஜூருடைய அப்பாவிடம் கொடுத்து நாணயங்களின் பெட்டியில் வைத்து சங்கதியை எழுதுகிறது.

(24) ஞாபகக்குறிப்பு- கும்பனி இலாகா(உத்யோகஸ்தர்களிடமிருந்து) ஸ்ரீகாசி யாத்திரை ஸ்வாமி முகாம்களில் துகையைப் பெற்றுக்கொண்டு ரசீதுகள் வந்ததற்கு விபரம்.

| | | | | |
|---|---|---|---|---|
| 3000 | 1820ஹூ | அக்டோபர் | 5உக்கு | விருத்தாசலம் ஜில்லாவில் |
| 660 | 1820ஹூ | அக்டோபர் | 23உக்கு | முகாம் - ஒஞ்சலி |
| 3000 | 1820ஹூ | நவம்பர் | 2உக்கு | குண்டூர் ஜில்லாவில் |
| 6961 | 1820ஹூ | நவம்பர் | 7உக்கு | வங்கோல் |
| 3000 | 1820ஹூ | நவம்பர் | 24உக்கு | பந்தர் ஜில்லாவில் வேளூர் |
| 6000 | 1820ஹூ | டிசம்பர் | 2உக்கு | ராஜமஹேந்திர ஜில்லாவில் ஒண்டிமாவடியில் |
| 2000 | 1820ஹூ | டிசம்பர் | 14உக்கு | விசாகப்பட்டினம் ஜில்லாவில் விஜயநகரத்தில் |
| 2000 | 1820ஹூ. | டிசம்பர் | 21உக்கு | கஞ்சம் ஜில்லாவில் கராமுகாமில் |
| 3000 | 1820ஹூ | டிசம்பர் | 30உக்கு | கஞ்சம் |
| 10000 | 1821ஹூ | ஜன | 8உக்கு | ஸ்ரீஜகன்னாத் |
| 2000 | 1821ஹூ | ஜன | 12உக்கு | |
| 1000 | 1821ஹூ | ஜன | 14உக்கு | |
| 6000 | 1821ஹூ | ஜன | 18உக்கு | கடக் |
| 7000 | 1821ஹூ | பிப்ரவரி | 10உக்கு | மேதினிபுரம் |
| 16000 | 1821ஹூ | பிப்ரவரி | 24உக்கு | ஸல்கா முகாமில் |
| 10000 | 1821ஹூ | மார்ச்சு | 5உக்கு | ஸல்கா முகாமில் |

293. ராமடங்கா - இது பெரிய கிண்ணம் போன்ற உருவுடையது. இராமன் சீதையுடனும் தம்பிமார்களுடனும் இருக்கும் காட்சி இந்நாணயத்தில் காணப்பெறும், வைணவர் இதனைப் பூசைக்குரியதாக வைத்துக்கொள்வர். இது 4,2,1 தோலா எடையுடையதாயிருக்கும் (பக்கம் 161)

| | | | | |
|---|---|---|---|---|
| 3000 | 1821இ | மார்ச்சு | 6வக்கு | ஸல்கா முகாமில் |
| 6800 | 1821இ | மார்ச்சு | 15வக்கு | படவி முகாமில் |
| 10000 | 1821இ | மார்ச்சு | 17வக்கு | முஸதாபாத் முகாமில் |
| —— | | | | |
| 101421 | ஆக 19 ரசீதுகளுக்கு ரூ | | | |
| —— | | | | |

இவைகளில் 1821ஸு மார்ச்சு மீ 23 ரெஸிடெண்ட் சாஹேப் ஆபீஸுக்கு அனுப்பியது ரூ 29621 போக பாக்கி ரூ. 71,800.

(25) 1821 ஜூன் 31வ
முகாம் - தலேஸ்வர

ஸ்ரீ ஜகன்னாத் ஸ்வாமி அனாதிஸ்தலம் க்ஷேத்திரமும் மஹாபிரஸித்தம். அக்கோவிலுக்கு அநேக தேசத்தின் இராஜாக்களின் கட்டளையும் (உபயம்) நிவேதனமும் நடந்து கொண்டு வருகின்றன. அதற்காக அவாளவாள் தகுந்தபடி வரும்படியையும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். அப்பேர்ப்பட்ட ஸ்தலத்திற்குச் சென்று ஸ்வாமி தரிசனஞ் செய்தவுடன் நம்முடைய ஸர்காரின் தருமமும் இந்த க்ஷேத்திரத்தில் நடந்து வரவேணுமென்று ஹுஜூர் எண்ணுகிறார். அந்த ஸ்வாமிக்கு நிவேதனஞ் செய்து அந்தச் சாதத்தை வருகிறவர்களுக்கும் குருடர், முடவர்கள் முதலியோருக்கும் கொடுக்கிறது. ஆகையால் எப்பொழுதும் தருமம் நடக்கவேண்டி தினப்படி 12 பானைகள் சாதமும், பருப்பும், கறிகளும் முதலியவைகளை அதே கணக்குள்ள மண் பாத்திரங்கள் நிறைய செய்து நிவேதனம் செய்ய வேண்டுமென்ற ஸங்கல்பம்[294] நாளொன்றுக்கு ரூ.2 வீதம் வருஷத்திற்கு ரூ.720ல் முடியும். அதன்படி ஒரு வருஷத்தின் தொகையை கோவிலின் அதிகாரியும் தாசீல்தாருமான ஸ்ரீராம் போஸ் என்பவரிடம் கொடுத்து (14வக்கு) ரசீதும் வாங்கப்பட்டிருக்கிறது.
இனிமேலும் ஒவ்வொரு வருஷமும் ராம்போஸிடம் ரூ. 720 அனுப்பித்துக் கொண்டு வரவேணுமென்று ஹுஜூருடைய உத்தரவாயிருக்கிறது.

(26) 1821 ஜன 20வ
முகாம் - கடக்

புருஷோத்தம க்ஷேத்திரமல்லது பூரிஜகன்னாத்

——— புஷ்ய சுத்த பஞ்சமி[295] திங்கட்கிழமை நரஸிங்கப்பட்டணத்திலிருந்து புருஷோத்தம க்ஷேத்திரத்திற்கு[296] ஹுஜூரின் ஸவாரி எல்லோருடன் வந்தது. அதே தினத்தில் மாலை 4 மணிக்கு ஸ்ரீஸ்வாமியின் தரிசனத்திற்கு உபஹாரம்[297] கையிலொன்று .......... ஒன்று

294. ஸங்கல்பம் - உறுதிகொள்ளுதல்

295. புஷ்பம் - தைமாதம், சுத்தம் - வளர்பிறை, பஞ்சமி-ஐந்தாவது நாள்

296. புருஷோத்தமக்ஷேத்திரம்-பூரிஜகந்நாத் க்ஷேத்திரம்-திருத்தலம்.

297. உபஹாரம் - காணிக்கை (Offering)

தக்ஷிணைக்கு மோஹரா[298] பூஜை வகையறா ஸமாரம்பங்களுடன் எல்லா ஜனங்கள் அநேக யாத்திரிகர்களுடனும் ஹுஜூரின் ஸவாரி மட்டும் அந்த ஸன்னிதானத்தில் நுழையும் பொழுது, அளவில்லாச் சந்தோஷ முண்டாயிற்று. பிறகு அந்தக் கோவிலின் அதிகாரியின் அதிக ப்ரேரணை தூண்டுதலால் ஸ்ரீமந்த் ராஜஸ்ரீ சத்திரபதி சாஹேப் அவர்கள் ஸாவதான மடைந்து ஸ்ரீஸ்வாமிக்கு புஷ்பவர்ஷணஞ்[299] செய்ய (புஷ்பம் போடுவது) ஆரம்பித்து இரண்டு கையினால் மட்டும் புஷ்பம் போடுவதில் திருப்தி ஏற்படாமல் தான் புஷ்பம் கொடுத்து புஷ்பங்களை எறிந்து கொண்டு எல்லா ஸேவகர்களின் கையிலும் புஷ்பம் கொடுத்து. புஷ்பவர்ஷம் செய்து கொண்டும், அது குறைவென்றெண்ணி ஸ்ரீஸ்வாமியின் பாதத்தில்தலையை வைத்தார். அப்படியே எல்லா ஸேவக ஜனங்களும் செய்தார்கள். அப்பொழுது மனத்திற்குத் தோன்றின தன்யதை[300]ப் பற்றி சந்தோஷத்திற்கு முன்சொன்ன சந்தோஷத்தைக்காட்டிலும் அதிகாந்தானென்று நீங்கள் அறிவதற்குத் துணியலாம்.

ஸ்ரீஸ்வாமிக்கு நிவேதனஞ் செய்வதற்குப் போகஸமர்ப்பணமென்று பெயர். அது 7 வேளை ஆகிறது. முதலில் விடியற்காலையில் பாலபோகம், 8 மணிக்குப் பொங்கல் போகம், 10 மணிக்குச் சத்திர போகம், 12 மணிக்கு மத்யாந்ஹ[301] போகம்.

சாயங்காலம் வேளையில் ஸந்தயா[302] போகம்,இரவில் 11 மணிக்குத் தாண்டே சிங்காரம், போக பேண்ட போகமென்று அர்த்த ஜாம[303] சமயத்தில் இரவில் 1 மணிக்கு ஆகும். அதில் முதலில் சாதம் வகையறா, இரண்டவது பொங்கல், மூன்றாவது - போஜன பதார்த்தங்களும், பக்வான்னம்[304] வகை, நான்காவது நெய் போட்ட சாதம் வகையறா, ஐந்தாவது பூரி வகையறா இனிப்பான பாயஸம் வகையறா, ஏழாவது அர்த்த ஜாமத்திற்கு இளநீர் மட்டும்.

லக்ஷ்மிநாராயணனின் சின்ன விக்ரஹம் உள்ளிருந்த இரண்டாவது கோபுர வாசலில் வந்து. உட்கார்ந்து கற்பூரார்த்தியும், அதற்கு முன் மங்களார்த்தியும்[305] ஆய், பின்பு கர்பக்ருஹத் துவாரத்திற்குப் [306]போய்ப்படுக்க வைக்கிறது. ஸ்வாமிக்கு ஒவ்வொரு பூஜைக்கும் நடக்கும் மங்களார்த்திக்குத் திருஷ்டிப் பரிகாரஞ் செய்ய, சாதத்தின் உட்காரும் ஆசனம் செய்து, அதன் மேல் திரியை ஊறுகிறார்ப்போல் காடவாதி(திரியை) ஊனி மங்களார்த்தி ஆகி கற்பூரார்த்திக்கு பச்சகற்பூரம் சேர்ந்திருக்கும். ஆறு நிவேதங்களிலுமிருக்கும் தினுசுகள் 56.

---

298. மோஹரா - தங்க நாணயம் (பக்கம் 152)

299. புஷ்பவர்ஷணம் - பூமழை

300. தன்யதை - பாக்கியம்-பேறு

301. மத்யாந்ஹம் - நண்பகல்

302. ஸன்த்யா - மாலைப்பொழுது

303. அர்த்தஜாமம் - நடுநிசி; நள்ளிரவு

304. பக்வான்னம் - தகுதியான அன்னம் (சோறு)

305. மங்களாரத்தி - கடவுளுக்குச் சுழற்றி யெடுக்கும் கர்ப்பூர ஆரத்தி

306. கர்ப்ப க்ருஹ த்வாரம் - மூலத்தானத்துக்குச் செல்லும் வாயில்

அதற்கு 56 போகமென்று பிரஸித்தியாயிருக்கிறது. ஸ்வாமிக்கு பூஜை நிவேதனம் வகையறா சிலவிற்கு வருஷத்திற்கு 56,341 ரூபாய் 6 அணா சிலவு தீபாராதனையை ஏற்றுவது வழக்கமில்லை. நிவேதனத்தில் பொழுது சௌகா செய்யாமல் போகம் ஏறுவதில்லை. அந்த க்ஷேத்திரத்தில் மகர ஸங்கிராந்திக்கு[307] மகரயாத்திரா என்ற விழாக்கூட்டம் விசேஷகாரமாக வங்காளம், ஸ்ரீகாசி, கல்கத்தா, முதலிய இடங்களிலிருந்து வந்து கொண்டிருக்கிறது. அப்பேர்ப்பட்ட மகோற்சவம் பார்க்கிற அதிஷ்டத்திற்கும் எல்லோரும் யோக்கியதை உள்ளவர்களாக இருக்க வேணுமென்ற எண்ணத்தால் போகி, பொங்கல், மாட்டுப்பொங்கல் வரையில் அங்கேயே தங்குவதாக நிச்சயம் செய்யப்பட்டது. இம் மூன்று நாட்களிலும் தரிசனம் விசேஷம். இந்த உற்சவத்தில் இரவில் தாண்டே ஸிங்கார போகமானதும் முன்சொன்ன விக்ரஹத்தை ஸ்வாமியின் சிங்காதனத்தின் சமீபம் வைத்து, கர்பகிருஹத்தின் கதவைச் சாத்தி ஏகாந்தத்தில்[308] உள்ளே 4 1/2 பிரதக்ஷிணம்[309] செய்து பின்பு இரண்டாவது பிரகாரத்தில் 4 1/2 பிரதக்ஷிணம் செய்வது.

பொங்கலுக்குப் பச்சரிசியைப் பாலில் ஊறப்போட்டு நெய் சர்க்கரை தனித்தனி எடுத்துக்கொண்டு ஸ்வாமிக்கு ஒரு பிரதக்ஷணஞ் செய்து பிறகு எல்லாவற்றையும் சேர்த்து, போகத்தைச் சமர்ப்பிக்கிறது,[310] அவ்விடத்திய வழக்கம். இப்படிப்பட்ட போகத்தையும் மகோற்சவத்தையும் பார்ப்பதென்று நிச்சயஞ் செய்து, மறுநாள் பாலபோகம் பார்க்க விடியற்காலத்தில் தரிசனத்திற்குக் கர்ப்பக்ருஹத்தில் ஹுஜூரின் ஸவாரி போதற்குள் தயாராயிருந்த கோயில்காரர்கள் ஸவாரி அவ்விடம் வந்ததும் கதவுக்கு வெளியேயிருந்தே கீர்த்தியை வர்ணிக்கிறவர்களைப் போல ஸ்வாமியை எழுப்புவதற்குச் செய்கிற உபசாரத்துடன் கர்பக்ருஹத்தின் கதவைத் திறந்து முதல் தரிசனம் ஸ்ரீமந்தரா, சத்திரபதி சாஹேபுக்கு அதற்கு அனுசரித்து நமக்கும் ஸேவக ஜனங்களுக்கும் யாத்திரிகர்களுக்கும் கிடைக்கும்படி

செய்தார். அப்பொழுது கோலம், ஸ்ரீஸ்வாமியும் பலபத்திர ஸ்வாமியும் ஸ்ரீசுபத்திரா தேவியும் இந்த மூன்று தேவதைகளின் எதிரிலும் தனித்தனி கட்டில்களும், அப்பொழுதே படுக்கையிலிருந்து எழுந்திருந்துஉட்கார்ந்தாற் போலமுகத்தில் அடையாளமுந் தெரியவந்தது. அது எல்லா ஜனங்களுக்கும் இப்பவும் தியானித்திலிருக்கிறது. பின்பு உடனே மூன்று மூர்த்திகளுடைய அலங்காரத்தைக் கழற்றிபல்தேய்த்தல், முகங்கழுவுதல் முதலிய உபசாரங்களை முழுமையும் செய்து, எதிரில் கண்ணாடியை வைத்து அந்தக் கண்ணாடியிலுள்ள பிரதிபிம்பங்[311] களுக்கு 3 பூஜைக்காரர்கள் புங்கநியாஸ[312] செய்து பால் முதற்கொண்டு விதியின்படி அபிஷேகோப

---

307. மகரஸங்கிராந்தி-தைம்மாதப்பிறப்பு

308. ஏகாந்தம் - தனிமை

309. பிரதக்ஷிணம் - வலம்வருதல்

310. போகத்தைச் சமர்ப்பிக்கிறது - நிவேதனம் செய்வது

311. பிரதிபிம்பம் - பிம்பத்தின் உருவம்

312. புங்கநியாசம் - அங்கநியாசம் ஆகலாம் (அங்கநியாசம் - மந்திரத்தோடு உறுப்புக்களைத் தொடுகை)

சாரஞ்[313] செய்து 3 பிரதிமைகளுக்கும் வஸ்திரத்தை மாற்றும் பொழுது வெறும் விக்கிரஹத்தை மட்டும் பார்த்தால் ஒருவனுடைய மனதிலும் அந்த பிம்பம் இல்லாமல் இராது. பின்பு தோய்த்த வஸ்திரத்தைக் கட்டி, அலங்கரித்து போகத்தை ஸமர்ப்பித்து அதற்காக முகங்கழுவி ஆசமனம்[314] வரையிலுள்ள உபசாரங்களைச் செய்து, மங்களார்த்தி ஆன பின்னர் நிவேதனஞ் செய்த போகமும் விடையைத்தையும்[315] அபிஷேக தீர்த்தமும் முதலில் ஸ்ரீமந்த் ராஜஸ்ரீ சத்திரபதி சாயேபுக்குக் கிடைத்தது. பின்பு எல்லோருக்குமே கிடைத்தது. இச்சந்தோஷம் முன்சொன்ன சந்தோஷத்தை காட்டிலும் எவ்வளவு மடங்கு என்று சொல்லுவேன். பிறகு புதன்கிழமை பொங்கல் போகம், வியாழக்கிழமை தாண்டே ஸ்ரீங்கார போகம், வெள்ளிக்கிழமை சாயங்கால போகம், சனிக்கிழமை பேண்ட போகம், இப்படி ஒவ்வொரு நாளும், ஒவ்வொருகாலத்தில் தரிசனஞ் செய்தோம். பேண்ட போக சமயத்தில் மூன்று மூர்த்திகளின் சன்னிதானத்தில் 3 சப்பரங்களைக் (கட்டில்) கொண்டு வந்து வைத்து நிவேதனம் தாம்பூலம் ஸமர்ப்பிக்கிற நேரத்தில் மூன்று மூர்த்திகளின் கண்களில் தூக்கத்தினுண்டாகுதல் எப்பேர்ப்பட்ட முட்டாளுக்கும் தெரியாம விருக்க வில்லை. அவ்வானந்தம் எந்த ஆனந்தத்திற்கு ஒப்பாகும்.......

முதலில் தரிசனஞ் செய்யும் பொழுது ஒவ்வொருவருடைய உடம்பிலும் ஏகாக்ரமும்[316] மயிர்க்கூச்சலும், கண்களில் ஆனந்தக் கண்ணீரும் பேசமுடியாமலும் அழலாலும் பாதிக்காமல் இருக்கவில்லை. பிறகு உடனே திடிரென்று . எல்லா ஸேவக ஜனங்களும் ஸ்ரீஸ்வாமியை விட்டு விட்டு ஸ்ரீமந்த் சத்திரபதி சாஹேப் அவர்களைப் பார்த்து, நம்முடைய இந்தப்பாக்கியத்துக்கும் சந்தோஷத்திற்கும் காரணம் நீங்களல்லவோ என்று ஸ்தோத்திரமும் ஆசீர்வாதத்துடன் அந்தக்கர்பகிருஹத்திலேயே ஸாஷ்டாங்கமாக வந்தனஞ்[317] செய்தார்கள். அப்பொழுது அந்த ஸ்தலத்தைப் பற்றிச் சொல்லுகையில் ஸேவிப்பதிலுள்ள ஆசாரம்தான் நமஸ்காரம் பண்ணுகிற கிரியைக்கும் அனுசரித்தது. ஆனால் வர்ணாசிரமத்தின் விதி[318] கொஞ்சங்கூட நிற்கவில்லை. இந்த விஷயம் நான் அனுபவித்தது. இல்லாவிடில் இப்படி எழுதத் துணியமாட்டேன்.

---

313. அபிஷேக + உபசாரம் - அபிஷேகோபசாரம் (அபிஷேகம்-நீர் ஊற்றுதல்; உபசாரம் - பாவனை)

314. ஆசமனம்-கேசவாயஸ்வாஹா, நாராயணா ஸ்வாஹா, மாதவாய ஸ்வாஹா என்று வலக்குடங்கையால் நீரை மும்முறையுட் கொள்ளுதல்.

315. விடையம் - வெற்றிலைப்பாக்குச் சுருள்

316. ஏகாக்ரம் - ஒன்றிலே மனம் பதிந்திருத்தல்

317. சாஷ்டாங்கமாக வந்தனம்-இருகை, இரு முழங்கால், இருதோள், மார்பு, நெற்றி, ஆகிய எட்டுறுப்புக்கள் நிலந்தீண்டச் செய்யும் நமஸ்காரம்.

318. வர்ணாசிரமத்தின் விதி - வருணாச்சிரம தருமம்; நால்வகைச் சாதிக்கும் நால்வகை நிலைக்கும் உரிய ஒழுக்கம் (ஆச்சிரமம் - பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சன்னியாசம் என்னும் வாழ்க்கைநிலை நான்கு)

புஷ்பாஞ்சலி போடுகிற அவசரமும்[319] அதற்காக ஹுஜூரின் அபிநிவேசனத்திற்கும்[320] நீங்கள் சமீபத்திலிருந்து பார்த்தீர்களானால் சி.ரா. இளையதிவான்[321] சாயேப்புடைய கலியாண முகூர்த்த ஸமயத்தில் நம் ஜனங்களிட மிருந்து ஆசீர்வாதாக்ஷதையைப் போடுகிற அவசரத்தினால் எவ்வளவு மடங்கு கணக்கிடுவீர்க

ளென்றுஎண்ண கணக்கைக் கணக்கிட எனக்கு எண்ண முடியாது. இந்த இரண்டு விதமாகத் தெரிவித்த விஷயமும் அவ்வேளையிலுண்டான ஆனந்தத்தின் வழிகாட்டி என்று இதன்மேலும் இன்னும் கொஞ்சம் வர்ணிக்க வேணுமென்றால் இக்கடிதத்தில் எழுத இடமில்லையாகையால் இக்கடித்தை முடிக்க ஸம்மதித்தேன் என்று பங்குவுடைய நாயிக் ஹிரோஜீ காளேராவுக்கு மஜ்மு ஆதார்[322] - ரா.பாபாஜி ராமாஜி பண்டிதர்[323] கேட்டுக் கொள்கிறேன்.

புதிய சமாசாரம்.
புதன்கிழமை ஸ்வாமிக்குக் கார்சோபி ஆடை கர்பூரி ஜரிகைபுட்டேதார் ஆடையும், ஸர்க்காரிலிருந்து தைய்த்துக் கொடுத்து இராஜாவின் வேஷமுள்ள அலங்காரஞ் செய்வித்தார். அன்றே செள. மா. ஸ்ரீபாயிசாப்[324] அவர்கள் தரிசனத்திற்குச் சென்று தரிசனஞ் செய்தார்கள்.

*(27) 1821 பிப். 12உ*
*முகாம்-மேதினிபூர்*

செள. சைதம்பாயிசாபுக்கு[325] சளிக்காக சிகித்ஸை செய்த வைத்தியர் சிவேஸ்த்ர அவர்களுக்கு ரெஸிடெண்ட் சாஹேப் சொல்லுகிறதை இனாம் கொடுக்கிறது.

யாத்திரையின் உத்தேசமாக இதுவரையிலும் வந்து நம்முடைய ஸர்காருக்கு நன்மை செய்பவரும் மேலான சிநேகிதருமான கனம் பொருந்திய கவர்னர் ஜனரல்[326] சாஹேப்புக்குப் பார்க்காமல் இருப்பது ஹுஜூரின் சித்தத்திற்குச் சரியென்று தோன்றவில்லை. இன்னுங் கல்கத்தா பிரஸித்தமான இடமும் ஆச்சரியமானவைகளையுடையதாயுள்ளாதால் அதைப் பார்க்கும்குதூகலம் நிறைவேறுவதற்காக கவர்னர் ஜனரல் சாறேப்புக்குக் கடிதம் எழுதினது அதற்குப் பதிலும் வந்ததால் நாம் கல்கத்தாவிற்குச் சென்று அவரைக் கண்டு அங்கிருந்து கயைக்குப் போவோம்.

319. அவசரம் - நிமித்தம்; சமயம்

320. நிவேசனம் - ஊக்கமிகுதி

321. இளையதிவான் - இரண்டாம் சிவாஜி

322. மஜமு ஆதார் - மஜூம்தார் - நிலவரிக்கணக்கு எழுதுபவர்

323. பாபாஜி ராமாஜி பண்டிதர் - இவர் சரபோஜியுடன் காசி யாத்திரையில் இருந்த சர்க்கேல்

324. பாயிசாப் - அஹல்யாபாயி (இரண்டாம் சரபோஜியின் மனைவி)

325. சைதம்பாயிசாபு - இவர் இரண்டாம் சிவாஜியின் முதல் மனைவி; இரண்டாம் சரபோஜியின் மூத்த மகள் சுலக்ஷணாபாயியின் மகள்.

326. கவர்னர் ஜெனரல் - லார்டு ஹேஸ்டிங்க்ஸ் (1813-23)

*(28) 1821 பிப். 20 உ*
முகாம் - மூவர்பட்டா.

மஸூரா என்னும் தானியம் இப்பிரதேசங்களில் எராளமாக இருக்கிறது. ஆனால் இது நம்முடைய இராஜ்யத்தில் இல்லையாகையால் விரைக்குத் தகுந்ததான புதிய கொஞ்சம் போண்டோ இக்கடிதத்தில் வைத்திருக்கிறது. நம்முடைய ராஜ்யத்தில் அபிவிருத்தி செய்கிறது.
சி. ரா. இளையதிவான் சாஹேப்புக்குச் சொறி சிரங்கும், சௌ. சி. சைதம்பாயி சாஹேபின் சளிக்கு ரெஸிடெண்டின் உத்திரவின்படி வைத்தியர் சிவேஸ்தர் வைத்தியம் பார்த்தார், என்று கேட்டு ஹுஜூருக்குச் சந்தோஷமானது.

*(29) 1821 பிப்.3உ*
முகாம் - ஜ்யாலேஷ்வர சமீபம்......படணா[327] மஹம்மத நகர

ஹுஜூரின் படமொன்றும் சி.ரா.இளையதிவான் சாஹேபின் படமொன்றும் ஹுஜூருக்கு வேண்டி யிருக்கிறது. ஆனால் சித்திரக்காரன் "சின்னசாமி நாயிகனுக்குச் சொல்லி ஒரு முழம் சதுரம் படத்தில் சீமை குதிரையில் கையில் ஈட்டி வைத்துக் கொண்டு உட்கார்ந்தபடி ஹுஜூரின் படமிருக்க வேணும். அதே அளவுள்ள படம் கையில் துப்பாக்கியை வைத்துக் கொண்டு சிலங்கண ஸவாரிக்குக்[328] குதிரையின் மேலர்ந்தபடி

சி.இளையதிவான் சாஹேப்புடைய படம் ஒன்று. இப்படி இரண்டு படங்களைத் தண்ணீர் சாயத்தால் எழுதி பாங்கி தபாலில் அனுப்புகிறது. படத்திற்குச் சட்டம் வகையறா இவ்விடம் போடுகிறோம். வெகு சீக்கிரம் தயார் செய்தனுப்புகிறது.

*(30) 1821 மார்ச்சு 5உ*
முகாம் - ஸல்காகாட்

கங்கையின் ஜலமும் கங்கையின் மண்ணும் சரியாக வைத்து, பாங்கி தபாலில் அனுப்பியிருக்கிறது. அதற்குக் கூலி கொடுத்தாய் விட்டது. சேர்ந்தவுடனே முதலில்மா.ஆவுசாப்[329] அவர்களுக்குக் கொடுத்துப் பிறகு சி.ரா.இளையதிவான் சாஹேப் அவர்களுக்கும் கொடுக்கவும்.

ஷை மூட்டையில் இரண்டு விதமான விரைகளை வைத்திருக்கிறது. அவைகளில் சிம்சுபா மரத்தின் விரை ஒன்று. பொடானி க்யாலகார்ட் என்னும் மரம் விசேஷம் பாக்குமரம் போல இருக்கும். அதனுடைய விரையையும் சேர்ப்பித்து அனுப்பியிருக்கிறேன். ஆனாலும் தண்ணீர் தேங்காத மேடான இடத்தில் சாகுபடி செய்தால் மரம் முளைக்கும். அங்கும் அபிவிருத்தி செய்யவும்.

*(31) 1821 மார்ச்சு 9உ*
முகாம் - கைரஹடி

327. படணா - Patna என்னும் நகரம்

328. சிலங்கண சவாரி - விஜயதசமி நாளில் சீமோல்லங்கணத்துக்குச் செல்லுதல்

329. மா ஆவுசாப் - இரண்டாம் சரபோஜியின் தாய்

சீமை தேசத்திய விசேஷமான இரண்டு ஜாதியின் விரையைக் கனம் பொருந்திய கவர்னர் ஜனரல் சாஹேப் ஸர்காருடைய தோட்டத்தில் போடுவதற்காகத் தயையுடன் கொடுத்தது. அவ்விரையின் பெயருடன் அனுப்பியிருக்கிறது. அதை ரெஸிடெண்டு[330] சாஹேப் தோட்டத்திலும் போடுகிறதற்குக் கொடுத்து, அவர் சொல்படி ஸர்கார் தோட்டங்களிலும் போட்டு விருத்தி செய்கிறது.

*(32) 1821 மார்ச்சு 12உ*
*முகாம் - மிரஜாபூர்*

*கல்கத்தாவிலிருந்து பரங்க் ஸேன் அண்கோ என்பவர் வியாபாரிகளின் மூலம் சாமான்களை ஏற்றி அனுப்பியதற்கு அதே தேதியில் விபரமான ஒரு கடிதத்தையும் எழுதியிருக்கிறதே. அதில் எழுதாத ஜாஸ்தி சாமான்களைக் கப்பலேற்றி இருக்கிறது. அதற்கு விபரம்-கோராபட்டு சேர் 1க்கு 72-10-6 கலிதார் ரூ.இடைவீதம்*
வெண்பட்டு மனு 1, மஞ்சள் பட்டு மனு 1 ஆக 2 மனு-அங்கூர் என்னும் பழத்தின் விரை, ஒரு டப்பியில் மாதளம் பழம் 1,சேவா என்னும் பழம் 1

இப்படி சீமை தினுசு பழங்களை அனுப்பியிருக்கிறது. சேர்ந்ததும் பட்டு சர்காரின் வேலைக்கு எடுத்துக் கொண்டு, பழவர்கங்களை சி.ரா.இளைய திவானிடம் கொடுக்கிறது.

*சர்காரில் வரவு வைக்கிற சாமான்களிலிருந்து ஒரு சால்வை ஜோடியும், ஸாமா என்னும் பக்ஷி கூட்டுடன் ரெஸிடெண்ட் சாயேபிடம் கொடுக்கிறது. 2வது சால்வையை மிஸ்தரிஸ் ரெஸிடெண்டுக்கு[331] கொடுக்கிறது.*

*(32) 1821 மார்ச்சு 12 உ*
*துப்பாக்கிகளிரண்டும் தங்க முலாமின் ம்யானாவின் கத்தி ஒன்றும் நீலி மாதவன் பெரியது 1ம், சி.ரா.இளையதிவான் சாஹேப் வசம் சேர்ப்பிக்கிறது.*

*ஸாரஸ்[332] என்னும் பக்ஷி 1 ஜோடி தாஸ்தான் மகால்[333] தோட்டத்தில் பாக்கி 4 சிவகங்கைக் கோட்டைத் தோட்டத்தில் விட்டு அதற்குத் தினமும் உயிருள்ள மீன்களின் வலைகளையும்? அரிசி நெல், சாதமும் வைத்து இஷ்டப்படி தனிமையாக விட்டிருக்க வேணும் நீட்டதுமசியின்? ஆடுகள் பாக்கி 3ம் சாமா என்னும் பக்ஷி பாக்கி 5ம் ஸர்க்காரில் வைத்துக் கொள்ளுகிறது.*

*சாமரத்தின் மயிர் 80 ரூ இடையுள்ள சேர் 1க்கு ரூ.2. பட்டு 72-10-0 ரூ. இடையின்சேர் 1க்கு 12 1/2 ரூ. விலை இருந்ததால் மலிவாகக் கிடைத்ததால் வாங்கி அனுப்பி யிருக்கிறது. ஸர்காரின் சிலவிற்கு உபயோகிக்கலாம்.*

---

330. ரெஸிடெண்ட் - வில்லியம் பிளாக்பர்ன் (பக்.66)

331. மிஸ்தரிஸ் ரெஸிடெண்டு - ரெஸிடென்டின் மனைவி

332. ஸாரஸ்-சக்கரவாகம் என்பர் .

333. தாஸ்தான் மகால் - நெற்களஞ்சியம் (பக்.453)

புதியசமாசாரம்

ஸ்ரீ ஜகன்னாதத்திலிருந்து ஜன. 12உக்கு அனுப்பிய கடிதத்துடன் எள்ளு சர்க்கரைப் பைகள் 21 அனுப்பித்தோம். அந்தக் கடிதம் கூட சேர்ந்ததோ இல்லையோ தெரியவில்லை.

துப்பாக்கியின் பெட்டி சாமானுடன் ரைபள் இரட்டைக் குழாய்த் துப்பாக்கி ஒன்றுக்கு ஒரு குந்த்யா?வின் மேல் வெள்ளி வேலையும் குழாய்க்குத் தங்கம் குப்தகிரியின் ஸாதாரண குழாய்களின் துப்பாக்கி 1க்கு ஒரு துப்பாக்கி 2, நீண்ட துமசீசி ஆடுகள் 5, உவாவாக்காயின் பழம் 22, ஸ்ரீ ஜகன்னாதின் லோட்டா பாத்திரம் 45, பட்டு வஸ்திரம் பட்டாபட்டி வஸ்தரமும் 1, உருமாலை ஜோடி 2, ஸ்ரீ ஜகன்னாத ஸ்வாமியின் படம் கட்டையாலும், காகிதத்திலும் கூட 5, ஸ்ரீ ஜகன்னாத ஸ்வாமியின்மூர்த்திகள் பித்தளையில் 3

(34) 1821 மார்ச்சு மீ 12உ
முகாம் - மிரஜாபூர்

இம்மாதம் 6உ அதிகாலையில் ஸல்காகாட் முகாமிலிருந்து புறப்பட்டு அன்று மஹேஸ்வர தலா என்னும் ஊரில் வந்து இறங்கினோம். பகல் 11 மணிக்கு கைர்ஹடி என்னும் ஊரில் முகாம் செய்து அன்றே கங்கையில் அக்கரையில் தார்ஹஜீர் அல்லது அச்யான் என்கப்பட்ட ஊரில் கனம் பொருந்திய கவர்னர் ஜனரலுடைய வீடும் சிதுகானாவும்? பார்ப்பதற்குச் சென்று கனம் பொருந்திய கவர்னர் ஜனரலையும், அவர் மனைவியையும் பார்த்து விட்டு அந்த ஸாஹேபுடன் அவருடைய வீட்டையும் சிதுகானாவையும் சிங்கம் முதலிய மிருகங்களைப் பார்க்க ஹௌதா[334] வில் மர்ந்து அவை எல்லாவற்றையும். சுற்றிப் பார்த்து உத்திரவு பெற்று, இருப்பிடத்திற்கு வந்து 2ம் நாள் யாத்திரையை முடிப்பதற்கு உத்திரவு பெறச்சென்ற இடத்தில் கவர்னர் ஜனரல் சாஹேப் அவர்கள் வெகு பிரீதியுடன் மரியாதையைச் செய்து வெள்ளி ஹௌதா ஒன்றுடன் தந்தமுள்ள யானை 1ம் நல்லகடியாரம் ஒன்றும், ஹுஜூருக்குத் தகுந்ததாகவுள்ளது. இரட்டைக் குழாய்களின் துப்பாக்கி ஒன்றையும் கொடுத்து உத்திரவு கொடுத்தார். பிறகு 9உ அங்கிருந்து புறப்பட்டுக்கயை க்ஷேத்திரத்திற்குப் புறப்பட்டோம்.

## மூட்டை எண் - 190C

27.1844-1845
குஜலி அம்பா சங்கர் ஸோஸி ரெஸிடெண்டினிடம்[335] தனக்கு மகாராஜா[336] சாஹேப் அவர்கள் தனக்கு ரூ.11900 வரவேண்டுமென்று கொடுத்த பிராது விஷயம்.

36.1847 அக். 7உ
(1) விண்ணாற்றின் பாலத்திற்குச் சமீபத்தில் சிற்சில போலீஸ்காரர்கள் பெண்களின் மூட்டை வகையறா சாமான்களைப் பரிசோதனை செய்வதாகச் சொல்லி அவர்களிடமிருந்து பணத்தை வாங்குவதைத் தடுக்க வேணுமாய் ரெஸிடெண்டுக்கு[337] மனு.

334. ஹௌதா - அம்பாரி

335. ரெஸிடெண்ட் - கிண்டர்ஸ்லி ஆகலாம் (பக்.67)

336. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

337. ரெஸிடெண்ட் என்றது மங்கமாரி ஆகலாம் (பக். 67)

(2) 1847 ஏப். 7௳

திருவையாறு காவேரி நதியின் பாலத்தின் சிலவு விஷயம். எஸ்டிமேட் ரூ.18,850.தற்காலம் 15000 ரூ. சிலவாயிருக்கிறது. பாக்கி வேலையை முடிப்பதற்கு ரூ.3850ஐ சர்காரவர்கள் தாசீல்தாரிடம் அனுப்புகிறதென்று மனு.

(3) 1847 ஏப். 8௳

கோட்டைக்கு வியாபாரத்திற்குக் கொண்டு வரும் விறகுக் கட்டுகளை விறகுக்காரர்களைப் பரிசோதனை செய்து, காசு வாங்குகிறார்களாகையால் கீழவாசலுக்குச் சமீபத்தில் ஒரு சாவடியைக் கட்டி, விறகுக் கட்டுகளின் விஷயத்தை விசாரிக்க வேண்டுமென்று மனு.

9.1215[338]

(1) ஹுஜூரவர்கள்[339] சாலுவநாயக்கன் பட்டணம் போவதால் தபால் வைப்பதற்குப் படிச்சிலவு ஆஸாமி 1க்கு நாளொன்றுக்கு 1/2 பணம் வீதம் 3 நாட்களுக்கு[340] 16 1/2 பணம் கொடுக்கிறது.

(2) 1215

ஸமுத்திரத்தின் சின்ன கப்பலை விடுகிறவனுக்கு ஒரு சக்ரம் கொடுக்கிறது. முகாம் - சாலுவநாயக்கன் பட்டிணம்.

26.1845

(1) கடிதம்:-

குஜலி கங்காபாய் ரெஸிடெண்டிடம்[341] கொடுத்த பிராதுக்கு எண்டார்ஸ்[342] செய்ததாவது - அவளுடைய வியாஜ்யத்தை விசாரணை செய்து, அவளுடைய பொய்யான புருஷனைத் தண்டிக்கிறதென்று சர்கேலுக்கு[343] எழுதிய கடிதம்.

(2) 1845

தஞ்சாவூர் கலெக்டர் மங்கமாரி சாயேப் அவர்களுக்கு வல்லத்தில் வசிக்கும் இராஜரிஷி குலோதபத என்னும் காத்தநாத ஸ்வாமி என்பவர் எழுதிய தமிழ் மனுவின் நகல் கதோலிக் திருச்சபையைச் சேர்ந்த கிருஸ்துவர்களின் ஆத்ம ஸம்ரக்ஷிணைக்காகவும், அவர்களின் சுகத்துக்காகவும் மகாராஜா சாஹேபினுடைய இலாகாவில் ஒரு கோயிலைக் கட்டவேணுமென்று எனக்கு மிக்க எண்ணமிருக்கிறது. அதற்காக நாம் சில இடங்களைப் போய்ப் பார்த்ததில் சிவகங்கை என்கிற தென்னண்டை வாசலுக்குச் சேர்ந்த கிளவே தோட்டத்திற்குத் தெற்கு - மசூர் தெக்காலுக்கு வடக்கு - கண்டரக் கோட்டைக்குப் போகும்

---

338. 1215 சுஹுர்ஸன் + 599 : கி.பி.1814

339. ஹுஜூர் என்றது இரண்டாம் சரபோஜியை

340. 3 நாட்கள் என்பதை 33 நாட்கள் என்று திருத்துதல் வேண்டும்.

341. ரெஸிடெண்டு என்றது மங்கமாரி ஆகலாம் (பக்.6)

342. எண்டார்ஸ் செய்த-குறிப்பு எழுதுதல்

343. சர்க்கேல் - (?)

சாலதோப்புக்குக் கிழக்கு - பூக்காரத் தெருவிற்குச் செல்லும் ரஸ்தாவிற்கு மேற்கு - இதிலுள்ள இடம் ஒன்று கீழவாசலுக்கு வடக்கும் தற்காலம் புதிதாகக் கட்டியிருக்கும் ஆஸ்பத்திரியின் ரஸ்தாவிற்கு மேற்கு - அகழியின் ரேவணிக்கும் சால தோப்பிற்கும் கிழக்கு இராணுபாய் ஸடுபாயி கோயிலுக்கும் வடக்கு - தண்ணீர்ப் பந்தலுக்குத் தெற்கு - இதிலுள்ள இடமொன்று. வடக்கு வாசல் சுடுகாட்டுக்குப் போகும் சால தோப்பிற்கு மேற்கு-பொந்தலிப் பாளையம் கொசத் தெருவிற்குக் கிழக்கு - ஜலாலி தக்யால் ரஸ்தாவிற்கு வடக்கு-மாயீ தக்யால் ரஸ்தாவிற்குத் தெற்கு - இதிலுள்ள இடமொன்று. மேலண்டை அகிழ் பழைய சிவகங்கை ரஸ்தாவிற்குமேற்கு, சித்தூர் சாவடிக்கு கிழக்கு - ஷி சாவடி ரஸ்தாவிற்கு வடக்கு - சகாராம் தோப்புக்குத் தெற்கு - இதிலுள்ள இடமொன்று - இந்நான்கெடங்களில் கோயிலைக் கட்ட ஒரு இடத்தைக் கொடுக்க உத்திரவிட என்று நம்மைப் பிரார்த்திக்கிறார். தமிழில் கையெழுத்திருக்கிறது. பிரெஞ்சு எழுத்தின் கையொப்பமிருக்கிறது.

*26 (3) 1845 டிசம். 9உ*

விடியற் காலையில் பகல் 11 மணிக்கு திருச்சினாப்பள்ளி மேஜர் ஜனரல் கிப்ஸன் வகையறா துரைகள் ஹுஜூரைக்[344] காண்பதற்கு வந்தார்கள். அவர்களுக்குப் பகிரங்கமாக (ஸதர்) சபையைக் கூட்டி ஹு ஜூர் கண்ட விபரம்.

*3.1184*[345]

(1) தஞ்சாவூர் கோட்டை தேவஸ்தானத்திற்கு வருஷமொன்றுக்குத் தினப்படி மொயினுக்கு இலுப்பெண்ணெய் ஆடம்[346] 100 கொடுப்பதென்று சௌவல் மீ 20உ[347] உத்திரவின்படி இதற்கு வரவு 2உ எண்ணெய்காரன் வெங்கடாசலத்திற்கு சக்.20

*10.1215*[348]

(1)......க்குயிருக்கே 100க்கு டக்கே 2- 4 ருக்கே. 48 ருக்கே - 1டக்கா

(11) 1214

கிருஷ்ணவிலாஸத்திலுள்ள[349] கவாத்து கானாவில்[350] புண்யாஹவாசனத்திற்கு[351] வழக்கப்படி கொடுக்கிறது.

---

344. ஹுஜூர் என்றது இரண்டாம் சிவாஜியை

345. ஸுஹூர்ஸன் ஆண்டு 1184 + 599 = கி.பி.1783

346. ஆடம் - 24 படி கொண்ட முகத்தல் அளவு

347. ஷவ்வால் - அரபு மாதம் (ஆனி மாதம்)

348. ஸுஹூர்ஸன் 1215 + 599 = கி.பி.1814

349. கிருஷ்ணவிலாஸ் என்பது அரண்மனையின் தரைப்பகுதி

350. கவாத்துகானா - உடற்பயிற்சி செய்யும் இடம்; தாலிம்கானா என்பதும் இதுவே (பக்கம் 456)

351. புண்யாஹவாசனம் - தூய்மை செய்யும் வைதிகச் சடங்கு

*(2) 1214*

*ரா.ராமோஜி காட்கே சாஹேப்*[352] *தளிகேஸ்வர ஸ்வாமியின் கோவிலண்ட*[353] *அன்னசத்திரத்தைக் கட்டுகிறதற்கு ஸ்வாமியார் சத்திரத்திலுள்ள பனங்களாஸ்*[354] *190ம் ரீபாய்*[355] *400ம் கொடுக்கிறது.*

*(3) 1214*

*கும்பனியின் தாசில்தார் ஹூ ஜூரைக் காண்பதற்குக் கும்பணியின்ரூபாய்*
*புதிசு 5, பழசு 6 = 11*

*(4) 1214*

*யானையின் வயற்றில் நாடாபட்டுச் சிறங்காகி பூச்சி உண்டானதால் தைலஞ் செய்து, தடவுவதற்கு வேண்டிய மருந்து சாமான்களின் ஜாபிதா.*

*(5) 1214*

*மல்ஹாரஜீ அப்பா - நாகூருக்குப் போகிறார்கள். அவர்களுடன் கூடப்போகிறவர்களின் ஜாபிதா.*

*(6) 1214*

*மீனாக்ஷி அம்மன் கோயிலின்*[356] *குருக்கள். ஷி கோவிலின் சுவர்கள்விழுந்ததினால்கோயிலில் நாய்கள் வந்து அசுத்தப்படுத்துவதால் பிரகாரத்தின் சுவர்களைப் போடவேண்டுமென்று மனு.*

*(7) 1214*

*சுங்கத்தின் மாட்டுக்குச் சிரங்குக்கு மருந்து:-*
*நீலம் சேர் 1, வேப்பெண்ணெய் 1/4, சூடம் டாங்க்*[357] *2 1/4 கொடுக்கிறது.*

*(8) 1214*

*மெழுகு வேலையைச் செய்வதற்கு வேண்டிய சாமான்களின் ஜாபிதா.*

*(9) 1214*

*வண்டிமாவின்*[358] *மாட்டுக்குக்கௌமாரி*[359] *என்னும் வலிக்கு வயிற்றில் கொடுக்கப் பன்னி*[360] *நெய் சேர் 5 கொடுக்கிறது.*

---

352. இவர் அமிர்தராவ் ராமோஜி சர்ஜேராவ் காட்கே எனப்பெறுவர்; (67சி-41) (பக்கம் 85)

353. தளிகேசுவரசுவாமிகோயில் எடுப்பித்தவர் இவருடைய தகப்பனார் ராமோஜி சுல்தான்ஜி சர்ஜேராவ் ஆவர் (4-479) இக்கோயில் லக்ஷ்மீராஜபுரம் எனப்பெற்ற பள்ளியக்கிரகாரத்தில் உள்ளது.

354. பனங்கினாஸ் - பனஞ்சாத்து

355. ரீபாய் - Reaper - வரிச்சல்

356. இக்கோவில் கருந்தட்டாங்குடி நகராட்சி அருகில் கிழக்குப்பார்த்த கோயில் (பக்கம் 41 The Great Temple of Tanjore, J.M.Somasundaram Pillai, 1958)

357. டாங்கு - மூன்று டாங்க் ஒரு தோலா (பக்கம் 165)

358. வண்டிமால் - வண்டிகள் இருக்கும் இடம்

359. கௌமாரி - கோமாரி - பசுக்களின் காலிலும் வாயிலும் காணும் நோய்

360. பன்னி - பன்றி

*(10) 1214*

வேட்டை மகாலி[361] பிறந்த ஒரு மையின் தைலஞ் செய்வதற்கு
வெங்காயம் சேர் 1, மஞ்சள் சேர் 1/2, ந.எ. சேர் 1 1/2, விளக்கெண்ணெய் சேர் 1 1/2 கொடுக்கிறது.

*(11) 1214*

யமுனாம்பாபுரம்[362] அன்னசத்திரம் ஸ்ரீராம ஸ்வாமியின் தேர்த் திருவிழாவிற்கு......மரங்களைக் கொடுத்து .......ஊரின் தெருக்களில் பந்தல் போட்டு பாழ் வீடுகளுக்குச் சுவரைப் போட்டு சுண்ணாம்பு சிவப்புக் காவி பட்டையைத் தடவி, வாழைமரம், தோரணங்களைக் கட்டி, காலை, மாலை இருவேளையிலும் ஜலம் தெளிக்கிறது. இந்த வேலைகளெல்லாவற்றிற்கும் சத்திரத்தின் கமாவிஸிதாருக்கு[363] உத்திரவிட மனு.

*(12) 1214*

குதிரைக்கு இராஜ்யத்தில் கூட்டத்தில் - ஜாதர் தஹா என்னும் வாயுவிற்காக உருண்டைகளைச் செய்து உள்ளுக்குக் கொடுக்க வேண்டிய சாமான்களின் ஜாபிதா.

*(13) 1214*

யானைக்கானா[364] - பார்வதி என்னும் யானைக்குட்டிக்கு வாயுவினால் நல்ல பசியில்லாததால் உள்ளுக்குக் காரம் கொடுக்க வேண்டிய சாமான்களின் ஜாபிதா.

*(14) 1214*

தேவாரம் பிரஸாத் குதிரைக்கு உடம்பில் பலம் வருவதற்கு 40 நாட்களுக்கு ஜாபிதா. தினம் கைலீமாவு அரிசி படி-1, நெய்-1/2 சேர், இராயபுரீ சர்க்கரை சேர் 1/2.

*(15) 1214 (1813 A.D.)*

ஸ்ரீமாதவ ஸ்வாமியாரின் பேரன் கோவிந்த பண்டிதரின் குமாரர் வெங்காஜி பண்டிதருடைய அநேக ஆசிர்வாதம். ஸ்ரீராமநவமி[365]யின் உற்சவத்திற்காக பிராமண போஜனத்திற்காக கஜானாவிலிருந்து 10 சக்ரம் கொடுக்கிறது.

*(16) 1214*

ஹைதராபாதில் வசிக்கும் யதிம்சா என்பவர் கொடுத்த மனு.
நான் சிங்களத்தீவின் புகாதேவருடைய தரிசனத்திற்குத் தஞ்சாவூரிலிருந்து போயிருந்தேன். அதேபடி தரிசனஞ் செய்து, அங்கிருந்த சுவாமியின் சில அடையாளங்களைக் கொண்டு வந்திருக்கிறேன். பேஸஜி பார்த்த சங்கும் அவ்விடத்தில் கொண்டு வந்திருக்கிறேன். அங்கிருந்து கொண்டு வந்தவைகளைக் காட்டும்படி உத்திரவிட வேண்டும். ஸேவகனுக்கு வசிக்க ஒரு இடம் கட்டித்தர வேண்டும். அல்லது ஊருக்குப் போக வழிச்சிலவிற்குக் கொடுக்க வேண்டும்.

---

361. வேட்டைமகால் - வேட்டையாடிப் பிடித்துக்கொணர்ந்த விலங்குகள் இருக்குமிடம் (பக்.457)

362. யமுனாம்பாபுரம் - நீடாமங்கலம். யமுனாம்பாள் என்பவர் பிரதாப சிம்மரின் மூன்றாவது மனைவி.

363. கமாவிஸிதார் - சத்திரமேற்பார்வை அதிகாரி (பக்.75)

364. யானைக்கானா - பில்கானா; ஹத்திகானா (பக்.454)

365. ஸ்ரீராமநவமி - இராமன் பிறந்த நாளாகிய சித்திரை வளர்பிறை ஒன்பதாம் நாள்

*7.1214*

*(1) சாயதான் மஹாலில்[366] பஞ்சாங்கம் வாசிப்பதற்குச் சிலவு*

*8.1215*

*(1) திருவந்தூர்[367] புதிய பணத்தைச் சிலவழித்ததில் ரூ.396க்கு ஒன்றுக்கு 6 1/2 வீதம்[368] 257-4.*

*(2) 1215*

*மகாராஜா - ஸமுத்திர ஸ்னானத்திற்குச் செல்வதால் ஸமுத்திர பூஜைக்குத் தக்ஷிணை 1 சக். கொடுக்கிறது.*

*19.1186[369]*

*(1) மா.திரௌபதாபாயி சாப்[370] அவர்களுடைய ஷஷ்டி அப்தி பூர்த்தி[371] சாந்திக்காகச் சிலவு சக்.39 1/2 பணம்.ரம்சான் 7உ[372]*

*42.1830*

*(1) வெடிமருந்து சாலை[373]-நவராத்திரி சிலங்கணம்[374] தீபாவளிக்காக வாணங்களின் வேலைக்காக வல்லத்திலுள்ளவனிடமிருந்து எருக்கம்கரி 300 கூடைகளைக் கொடுக்கிறது.*

*(2) 1830*

*சிலங்கணத்திற்காகக் கும்பனியிலிருந்து உத்திரவாகி வருகிற யானைகளின் விபரம். சீர்காழி கோயில், திருவாரூர், மாயூர்[375], நாகப்பட்டிணம், திருகட்டூர், வேதாரணியம், மன்னார்குடி, திருசாதிகோவில், வைத்தினாதகுடி (வைதீஸ்வரன் கோயில்) திருவங்காடு[376] கோயிலின் யானைக்குட்டி.*

*(3) 1830*

*கும்பகோணம் உத்தவசித்கநாங்கித பாளாஜி கோஸாவீ அவர்களின் மடத்திற்குச் சென்ற ஏப்ரல் மீ முதற்கொண்டு ஜூலை மீ வரையில் சக்.30 கும்பினி கஜானாவிலிருந்து வரும்படியாக உத்திரவுட வேண்டுமென்று மனு.*

---

366. சாயதான்மகால் (பக்கம் 458) (177சி-7-2)

367. திருவந்தூர் - திருவழுந்தூர்

368. 6 1/2 என்றது 6 1/2 பணம் (பக்கம் 154)

369. ஸுஹூர்ஸன் 1186 + 599 = கி.பி.1785

370. திரௌபதாபாயி - பிரதாபசிங்கரது மனைவி (1785இல் இவர்க்கு 60ஆவது ஆண்டு நிறைவு விழா நடந்தது)

371. ஷஷ்டி அப்த பூர்த்தி - 60 ஆவது ஆண்டு நிறைவு விழா

372. ரம்சான் 7உ என்பது 24-7-1785

373. வெடிமருந்துசாலை - தாருகானா (பக்.452)

374. சிலங்கணம் - சீமோல்லங்கணம் (நவராத்திரி காலத்தில் ஊரைக்கடந்து சென்று வருதல்)

375. மாயூர் - மயிலாடுதுறை

376. திருவங்காடு - திருவெண்காடு

*38.1251*[377]

*(1)* குலால்[378] மகால் - யாதி[379] - பட்டுக்கோட்டை ஜில்லாவைச் சேர்ந்த வழக்கப்படி மொயின் ஜாபிதா

| | |
|---|---|
| | *30* அத்தி வட்டி பாளேபட்டு[380] |
| *61-6 1/2* | ஸேந்தங்குடி பாளேபட்டு |
| *11-7.3/4* | கோஜுர்பாளேபட்டு |
| | சிலேக்கூர் பாளேபட்டு |
| | கலாகோட்[381] பாளேபட்டு |
| | பொனவாஸல்[382] பாளேபட்டு |
| | பாபாநாடு பாளேபட்டு |
| | நடவாஸெல் பாளேபட்டு |
| | மதகூர் பாளேபட்டு |
| | கண்டரக்கோட்டை பாளேபட்டு |

உள்ளி ஸஞ்சாயீத்[383] பாளேபட்டு *1*, ஊரிலிருந்து உரல் *3*, உலக்கை-6 பழைய நவபாண்டம் (மண் பாத்திரம்) குச்சிகள், கரி, சுளுந்து, காந்தாவளே? வாஸே வர்ச்யா? சோத கண்ட்? வைக்கோல் வகையறா வேண்டியவைகளைக் கொண்டு வந்து கொடுக்கிறது.

*32. 1836* ஜன. *27*உ

*(1)* விண்ணாற்றின் பாலத்தின் வேலைக்காக *300* மூங்கிலையும் *100* பனைமரங்களையும் சீக்கிரமாக அனுப்புகிறதென்று முக்ய கலெக்டர் சர்காருக்குக் கேட்டுக்கொள்ளுகிறார்.

*40 1830* செப். *4*உ

*(1)* ஸ்ரீசங்கராசார்ய ஸ்வாமிகள்[384] விஸ்வரூப யாத்திரைக்காகத்[385] திருவாளூருக்கு[386] விஜயம் செய்யப் போகிறாராகையால் வழக்கப்படி மரியாதையைச் செய்ய மடத்தின் காரியஸ்தர் கொடுத்த மனு.

---

377. ஸுஹூர்ஸன் 1251 + 599 = கி.பி.1850

378. குலால் - நேர்த்தியான; சிவப்பு

379. யாதி - நினைவுக்குறிப்பு

380. பாளேபட்டு - பாளையப்பட்டு - அரசனுக்குப் போரில் உதவ வேண்டுமென்ற நிபந்தனையுடன் பாளையக்காரருக்கு விடப்பட்ட கிராமத் தொகுதி

381. கலாகோட் - கல்லாக்கோட்டை (181சி-8-13)

382. பொனவாஸல் - திருப்புனவாசல்

383. ஸஞ்சாயித் - சஞ்சாயம்(?) - குத்தகைக்கு விடாமல் பண்ணைக்காரர் தாமே நிர்வாகம் பண்ணுதல்.

384. கி. பி. 1814-1851ல் பீடாதிபதிகளாக இருந்த ஐந்தாவது சந்திர சேகரேந்திர சரசுவதி சுவாமிகள்

385. விசுவரூபயாத்திரை - திருத்தல யாத்திரை

386. திருவாளூர் - திருவாரூர்

*(2) 1830*

*மகாராஜா[387] அவர்களுக்கு வலக்கை இடக்கை[388] ஜனங்கள் வகையறா எழுதிக் கொடுத்த அத்தாட்சி நம்முடைய ஜாதியில் நல்லதுக்கும் கெட்டதுக்கும் நடந்து கொண்டு வருகிற வழக்கத்தின் விபரம்.*

*இந்தப்படி நடக்கத் தவறினால் சர்காருக்கு சக்.120ஐ அபராதம் செலுத்தி ஸர்காரின் உத்திரவிற்கு ஹாஜராகுவோம்*

*(3) 1830*

*யாதாஸ்து[389] - எஸ்டிமேட்[390] - நவபாஷாணம் (தேவீ பட்டிணம்) முகாமில் ஸ்ரீஸேது ஸ்நான கட்டத்திற்குச் சமீபமிருக்கும் தஞ்சாவூர் மண்டபத்தைப் பிரிச்சுக்கட்ட ஜைலஜில்லே மதுரை ஸர்கார் கம்பெனி பசலி[391] 1245 பாபத்து 1836 ௵ மார்ச்சு மீ*

*கம்பெனி ரூபாய் 685-4-0 வேண்டும்.*
*யாத்திரைக்கு வரும் ஜனங்களுக்கு ஸேது ஸ்னானத்திற்குப்[392] பின்னர் ஸந்தி ஜபதபானுஷ்டானம்[393] பூஜைக்கும் இந்த மண்டபத்தைத் தவிர வேறு இடமில்லாதாகையால் பழுதான மண்டபத்தைச் செப்பனிட்டால் அநேகருக்கு உபயோகமாகவும் அதனால் யஜமானரவர்களுக்கு மிக்க புண்யமுமுண்டாகும்.*

*சேஷே கிரிராவ்*

ஜே. ப்ளாக்பர்ன்

மு.கலெக்டர்

*45 1830 ஆகஸ்டு 17௳*
*(1) சரபோஜி மகாராஜா ரெஸிடெண்டுக்கு[394] அவரைப் புகழ்ந்து எழுதிய கடிதம்.*
*(2) 1930 ஆக. 30௳*
*ரா.மகாராஜா சரபோஜி ராஜா சத்திரபதி அவர்கள் (க்ரேட் பிரிட்டன் - அயர்லாந்து இந்தத் தேசத்திய ராயல் ஆசியடிக் ஸொஸைடி என்னும் சங்கத்திற்கு அல்லக்ஷண மரத்திற்குப்*

---

387. மகாராஜா என்றது இரண்டாம் சரபோஜியை

388. வலக்கை - வலங்கை; இடக்கை - இடங்கை (பக்கம் 408)

389. யாதாஸ்து-நினைவுக்குறிப்பு

390. எஸ்டிமேட் - மதிப்பீடு

391. கி. பி. 591 முதல் தொடங்குவதும் கி. பி. 1555இல் அக்பரால் ஏற்படுத்தப்பட்டதுமான காலமுறை பசலி எனப்படும்; பசலி ஆண்டுடன் 591 சேர்த்தால் ஆங்கில ஆண்டு வரும்.

392. தனுஷ்கோடி, தருப்பசயனம் முதலிய சேதுக்கரையிடங்களில் நீராடல் சேதுஸ்நானம் எனப்பெறும்.

393. சந்தி - காலை உச்சி மாலைகளில் செய்யும் வழிபாடு. தபஅனுஷ்டானம் - தபானுஷ்டானம். தபம்-தவம்-வழிபாடு. அனுஷ்டானம்-ஒழுக்கம்; செயல்களைச் செய்தல்

394. ரெஸிடெண்டு-ஜான்பைஃப் (பக். 66)

பரிகைஷ ரூபமான) சென்னப்பட்டணம் அக்ஸிலியாரி[395]ராயல் ஆசியடிக் என்னும் சபையின்[396] காரியதரிசியான ஜேம்ஸ் வாஷிங்க்டன் சாஹேப் அவர்களுக் கெழுதியது என்னவென்றால்:-

நீங்கள் சென்ற ஜனவரி 31வக்கு எழுதிய கடிதமும் அதிலுள்ளதும் ரெஸிடெண்ட் ஜ்யான்பைப்[397] சாஹேப் மூலமாக கிடைத்தது. அதில் ராயல் ஆசியாடிக் ஸொஸைடியாரின் எண்ணப்படி அதனுடைய அம்சமான சபை கல்கத்தாவிலும் சென்னப்பட்டணத்திலும் பம்பாயிலும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் ரைட் ஹானரபிள் கவர்னரின் முக்கியாபிமானத்திலுள்ள சென்னப்பட்டணத்தின் சபைக்கு நமக்கு ஒரு அபிமானியத்தைக் கொடுத்திருக்கிறது. அறிவித்த விஸ்தார மெல்லாவற்றையும் நாம் மிக்க சந்தோஷத்துடன் மனதில் வா கினோம். ஸொஸைடியாரும் அதன் முக்கியாபிமானியான ரைட் ஆனர் கவர்னரும் நம்மிடம் காட்டிய நன்றிக்கும், கௌரவத்திற்கும் நாம் எப்பொழுதும் நன்றி காட்டுகிறவராயும் புகழுகிறவராகவும் இருக்கிறோம்.

(2) ஸொஸைடியின் இவ்வாரம்பம் இத்தேசத்தில் ரொம்பகால முதற்கொண்டு ஜனங்களுக்கு ஏற்பட்ட கெடுதிகளுக்காக அழிந்து கொண்டிருக்கிறது. அந்த எல்லா வித்தைகளும் வளர்ந்து, அதனால் இந்தத் தேசத்திய ஜனங்கள் தங்களுடைய வித்தையினால் பிரசித்தி பெற்றதும் ஹானரபிள் பிரிட்டிஷ் சர்காரின் பாதுகாப்பில் ஸ்திர தசையையடையவும் எல்லா தேசங்களின் வரலாறும் வித்தை, பாஷை,கோளே[398] வகையறாவின் அறிவைப் பூர்ணமாக ஸம்பாதிப்பதினால் பிரிடிஷ் தேச ஜனங்களின் மேன்மைக்கும், சாதுரியத்திற்கும் இரடிப்பு[399] அடைவதற்கும் உபயோகப்படுமென்ற விஷயத்தில் நமக்குச் சந்தேகமே இல்லை. நம்முடைய அபிப்ராயம் (கருத்து) தான். ஸைலன் (சிலோன்) சர்காரின் கௌன்சிலின் மாஜி முதல் மெம்பரும் சீப் ஜெஷ்டிஸ் ஆனரபிள் அலக்சாந்தர் ஜ்யாநஷ்டன் அவர்களுக்கு நாம் முதலில் எழுதிய கடிதத்தில் விரிவாகக் கண்டிருக்கிறோம். சமாச்சாரம் என்ன உண்டு.

கி.பி.1830 ஆகஸ்டு 30வ
37.1255[400]

(1) ஹுஜூருடைய[401] வேலை செய்யும் யானைக்கு நல்லபசி உண்டாகுவதற்குத் தினம் வெல்லம் 10 சேரும், கரும்பு-100ம் இப்படி 1 மாதம் கொடுக்கிறது.

395. அக்ஸிலியாரி - auxiliary - துணையான

396. ராயல் ஆசியாடிக் சொசைட்டி - Royal Asiatic Society இது 1823இல் லண்டனில் தொடங்கப்பெற்றது; ஆசிய வரலாறு, மொழி, இலக்கியம், பழக்கவழக்கங்கள், நுண்கலைகள் பற்றி ஆய்வது இதன் நோக்கம் ஆகும்; இதற்குப் பல நகரங்களில் கிளைகள் உள்ளன.

397. பைப் - Fyfe - பை:ப்

398. கோளே - பூகோளம் (புவியியல்)

399. இரடிப்பு - இரட்டிப்பு

400. ஸுஹூர்ஸன் 1255 + 599 - கி.பி.1854

401. ஹுஜூர் என்றது இரண்டாம் சிவாஜியை

*(2) 1848 ஜன 9உ*

ஹிந்துஸ்தான் இலாகாவில் "வயீல்" எனப்பட்ட ஊரிலிருக்கும் வலகாபரகாஸ பிரம்மசாரி எழுதிக்கொடுத்த வாக்குமூலம் - கலெக்டரவர்கள் ஷெிக்குக் கேட்ட கேள்விகளும் அதற்கு அவன் கொடுத்த பதிலும்.

.......காசி ராஜாவின் தம்பி வந்திருக்கிறார் என்று தெரிந்து கொண்டு, ஷெி ஹனுமந்த் ஸிங்கு இடம் சென்றேன். அவர் புதிய சத்திரம் ஸோமநாத பண்டிதர்[402] பங்களாவில் இறங்கியிருந்தார். பார்த்தேன். சால்வைகளை வியாபாரஞ் செய்து துகையை அடையவில்லை என்று.

(3) வல்லம் ஜோஸி யென்னும் வெங்கடராம ஜோஸி ஹுஜூருக்குக் கொடுத்த மனு. தன்னுடைய முப்பாட்டனார் காலமுதல் க்ரஹகணிதஞ் செய்ய வல்லத்தில் 10 ஆயிரம் குழி நிலத்தைக் கொடுத்தார். அதிலுள்ள விவஹாரம் தீர்க்கவேணும் என்று.

*(4) -*

காசி ராஜாவின் தம்பி பாபுசுரூப நாராயண ஹனுமந்த ஸிங்கு என்பவர் சர்காருக்குக் கொடுத்த மனுவின் நகல். தன் தேசத்திலிருந்து இராமேஸ்வர யாத்திரைக்குப் போகப் புறப்பட்டேன். ஹைதராபாத் ஸமீபத்தில் என்னுடைய யாவத்தும் திருட்டுப் போய் விட்டது. பின்பு தஞ்சாவூருக்கு வந்தேன். சால்வைகள் வியாபாரத்திற்காக சில பேர்கள் வந்து துகையைக் கொடாமலே சால்வைகளை எடுத்துப் போய் விட்டார்கள். அந்தத் திருடன் அகப்பட கொத்தவாவிடம்[403] அவனை ஒப்பித்தேன். அவர் திருடனை விட்டு விட்டார். என்னுடைய வேலைக்காரர்களைப் பிடித்துக் கொண்டு போய், சாவடியில் வைத்திருக்கிறார்கள். வீட்டில் வேலைக்கு ஆளில்லாமல் பட்டினி கிடக்கிறேன். இவையெல்லாம் விசாரணை செய்ய வேண்டும்.

*(5) 1830*

வெங்காஜி சாமாஜீக்கும் ஹெட் சிரஸ்தேதாருக்கும் நடந்த கேள்வி-பதில்கள் (அந்தரங்கம்)[404] நஜா (பேட்டி) காண்பதின் தோட்டத்தியதும் இரஸ்தா மார்க்கம் பற்றியும்.

*(6) 1830 ஜன. 30உ*

ரா.சரபோஜி மகாராஜா அவர்கள் - தஞ்சாவூர் ரெஸிடெண்டுக்கு எழுதியது. சென்னப்பட்டணத்திலிருக்கும் பிலாந்த்ரோபிக் அசோஷியேஷன்[405] என்னும் சங்கத்தின் கமிட்டி மெம்பர்கள் நமக்குப் பிப்ரவரி மீ" த்தில் எழுதிய கடிதம் கிடைத்தது. அந்த வேலைக்காக நாம் ரூ.350ஐ அனுப்பியுள்ளோமென்று.

---

402. சோமநாதபண்டிதர் (பக்கம் 83)

403. கொத்தவால் - கோட்டைக் காவலன்

404. அந்தரங்கம் - இரகசியம்

405. Philanthropic Association-பிறர் நலம் பேணுவோர் கழகம்

*(7) 1756 சகம்[406] ஜய ஸூ வைசாக சுத்த ஸப்தமி[407] வியாழன்*
*நகல்*

*ஸ்ரீராம் பிரதாப்[408]*

*ஸ்ரீமத் போஸல[409] குலோத்தம்ஸ[410] ஹிந்துபதி சிரேஷ்ட[411] ஸ்ரீமத்வீர ஸிம்ஹ கருணாகடாக்ஷ[412] லப்த[413] ஸுப்ரதாபாஸாதித[414] தில்லி சாதுர்பாக[415] ஸ்வாதந்த்ரய[416] விபக்ஷிக்ருத[417] தில்லிசராஜா ஸார்வபௌம[418] சௌர்ய தைர்ய வீர்ய[419] சாதுர்ய, காம்பீர்ய[420] விநாயாதி[421] ஸத்குண[422] ரத்ன ரத்னாகர[423] ஸகல கலா ப்ரவீண[424] ப்ரதி*

---

406. சகம் 1756 - கி.பி.1835

407. வைசாகம் - வைகாசி; சுத்த-வளர்பிறை; சப்தமி-ஏழாம் நாள்

408. ஸ்ரீராம் பிரதாப் - அரசர் கையொப்பம் இடுவதாயின் ஸ்ரீராம்பிரதாப் என்று எழுதுவார்; இங்கு இருப்பது முத்திரை (பக்.365)

409. போஸல - போன்ஸ்லே

410. குலோத்தம்ஸ-குலத்தில் சிறந்தவன் (குல உத்தம-குலோத்தம)

411. சிரேஷ்ட - சிறந்த

412. கருணாகடாக்ஷ - கருணையோடு கூடிய கடைக்கண் பார்வையுடைய

413. லப்த - அடையப்பெற்ற

414. ஸு - நன்மை; பிரதாபாஸாதித - வீரத்தைப் பொருந்திய

415. சாதுர்பாகம் - சவுத்-சௌத்து மகாராஷ்டிரரது ஆட்சியின் கீழ் இருந்த அரசிடம் இருந்து வசூல் செய்த நாளில் ஒரு பாகமான அரசிறை

416. ஸ்வாதந்திரிய - உரிமையுள்ள

417. விபக்ஷிக்ருத-- பகைவரிடத்தில் செருவமுள்ள

418. ஸார்வபௌம - பேரரசன்

419. சௌர்ய - சூரம் உடைய; தைரிய-மனது துணிவுள்ள; வீர்ய-வீரமுள்ள

420. சாதுரிய - சாமர்த்தியமுள்ள; காம்பீர்ய - கம்பீரமுள்ள

421. விநயாதி - விநயம் முதலாகிய; விநயம் - நயமொழி;

422. ஸத்குண - நற்பண்புகளை உடைய

423. ரத்னாகரம் - கடல்

424. ஸகலகலா ப்ரவீணா - எல்லாக் கலைகளிலும் வல்ல

*பக்ஷ[425] பக்ஷ கண்டண[426] தக்ஷ ஸத்ரக்ஷண[427] விசக்ஷண[428] சாதுர்வர்ண[429] ஸ்தாபக[430] சோள தரணி பாளக[431] தஞ்ச புராதீஸ்வர[432] க்ஷத்திரிய குலவரிஷ்ட[433] ஸத்கீர்திமந்த்த[434] ஸ்ரீமந்த்த மகாராஜ சத்ரபதி[435] பூலோக தேவேந்திர சிவாஜீந்திர ராஜே சாஹேப் அவர்களுடைய உத்திரவின் பேரில் மந்திரி மார்கள்.*

*ஸிம்பாஜி முத்தோஜி அடஸீள அவர்களுக்குச் சொல்லப்படுகிற இந்தப் பூஷண (அலங்கார) பத்திரத்தினால் தெரியப்படுத்துகிறதாவது:-*

*ராஜேஸ்ரீ மகாராஜா அவர்கள் நீங்கள் தெளிவான புத்தியுள்ளவர். ஸ்வாமி காரியத்தில் துரந்தரர்[436] விஸ்வாஸ[437] முள்ளவர். தைரியம் குசலதா[437a] எல்லா ஆயுத ப்ராவீண்யம்[438] யுத்தத்தில் பின் வாங்குதல்[439] முதலிய காரியங்களில் தேர்ந்தவரென்று பூர்ணமாக நம்பி*

*உங்களுக்கு இந்தப் பூஷண பத்திரத்தினால் அவருடைய தர்பாரின் விவஸ்தை செய்யப்பட்ட சாமர்த்தியமும் விவஸ்தை செய்யப்பட்ட மோஹச்சாஹஜேன க்ருத்ஸத்தி[440]னுடைய ஆர்ய ஸமூஹவா[441]னென்று நிச்சயித்து, சாலிவாஹன சகாப்தம்[442] 1756 ஜய நாம ஸு வைசாக*

---

425. பிரதிபட்ச - எதிர்வாதம் புரிவதில் வல்ல

426. பட்சகண்டன - ஒருதலைச் சார்வைக் கண்டிக்கிற

427. ஸத்ரக்ஷண - நல்லவர்களைக் காப்பவன்

428. விசக்ஷண - பண்டிதன்

429. சாதுர்வர்ண - நான்கு சாதிகளை

430. ஸ்தாபக - நிலைநிறுத்திய

431. சோள தரணி பாலக - சோழநாட்டை ஆட்சி செய்பவன்

432. தஞ்சபுராதீஸ்வர - தஞ்சை நகரத்தின் தலைவன்

433. வரிஷ்ட - மேலானவன்

434. ஸத்கீர்த்திமந்த - நற்புகழ் உடையவன்

435. சத்ரபதி - குடையை யுடையதலைவன் (அரசன்)

436. துரந்தரர் - பொறுப்புள்ளவர்

437. விஸ்வாஸம் - விருப்பம்; நம்பிக்கை

437a. குசலதா-சாமர்த்தியம்

438. ப்ராவீண்யம் - ஈடுபாடு; திறமை

439. "பின்வாங்குதல்" என்றவிடத்துப் "பின்வாங்காமை" என்றிருத்தல் பொருந்தும்

440. மோஹச்சாஹஜனகிருத்ஸன - விருப்பமான மக்களிடத்து அன்புடையவன்(?)

441. ஆர்யசமூகவான் - (இராமேசுவரத்தில் குடியேறியுள்ள ஆரியப் பிராமணர்) இங்குப் பட்டாளத்துப் பதவி போலத் தோன்றுகிறது.

442. சாலிவாகன சகாப்தம் - கி.பி.78இல் தொடங்கப்பெற்றுச் சாலிவாகனன் என்னும் அரசன் பெயரால் வழங்கும் ஆண்டுமுறை. (சகம் 1756 + 78 = 1834)

சுக்ல பக்ஷம் ஸப்தமி[442a] வியாழக்கிழமையிலிருந்து மேற் சொன்ன க்ருத்ஸன[443] ஜனங்களின் அதிகாரமும் சக்தியும் உம்மிடத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்தப்படிக்கி நீர் உங்களுடைய அதிகாரத்தின் கீழ் நியமிக்கப்பட்ட ஸுபடாதி[444] ஜனங்களுக்கு மற்ற ஸாமான்ய வீரர்களான சுபடாதி ஜனங்களுக்கும், ஒரு மனதுடனும் மகாராஜாவின் அவ்வந்தக் காலங்களில் செய்யப்படும் உத்திரவின் ரூபமாய் சண்டை வித்தையில் ப்ரகரா[445] தேரினவராகும்படி அநேக தொண்டு தொட்டு, நன்றாகச் சொல்லிக் கொடுப்பதினாலும், அந்த அதிகாரத்தின்படி எந்தச் சமயத்தில் ஆர்ய ஸமூஹவான் என்று எழுதி உங்களுடைய உத்திரவை அனுஸரித்து நடப்பதற்காக இந்தப் பூஷண பத்திரத்தினால் தான் அவர்களும் உத்திரவிடப்பட்டிருக்கிறார்கள். ஆனால் நீங்கள் சண்டை ஏற்படும் போது, அடிக்கடி இப்பொழுதுள்ள அதிபதி மகாராஜாவிடமிருந்தோ உத்தரோத்தரம்[446] அவர்களுடைய ஸந்ததிகளிடமிருந்தோ அல்லது உம்மைக் காட்டிலும் மேலான அதிகாரி இருக்கிறார்களோ அவர்களிடமிருந்தும் இனி நியமனஞ் செய்யப்படுவார்களோ அவர்களிட்ட உத்திரவை ஏற்றுக்கொண்டு அதன்படி நடக்க வேண்டும். இனிமேல் இந்தப் பூஷண பத்திரத்தினால் உங்களுக்கு ஸ்திரமான நம்பிக்கைத் தனத்தில் கெடுதலான எண்ணம் வரும்படி நீர் வித்யாஸமாக நடப்பீரானால் இந்தப்பத்திரம் தானாகவே செல்லாமல் போய்விடும். இல்லாவிடில் இந்தப் பூஷண பத்திரம் உபயோகமுள்ளதென்று அறியவும். மேலெழுதிய காரியங்களில் குறைவு வராமல் நடந்தால் இதே பூஷணபத்திரம் உமக்கு உத்தரோத்தரம் கீர்த்தியைக் கொடுக்கும் என்று அறியலாம். இந்தப் பூஷண பத்திரம் இன்று தில்லி இராஜ்யம் நாலிலொன்று[447] சுதந்திரமான மகாராஜா சாஹேபின் முத்திரையுடனும் அவர் கையினால் எழுதியதுடன் இவருடைய இராஜ் யபாரத்தில் நான்காவது வருஷத்தில் சாலி வாஹன சகம் 1756 ஜய ஹு வைசாக சுத்த சப்தமி வியாழக்கிழமை தினம் உமக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

*சர்கேல் ரா.பாபாஜி ராமாஜி*

*பண்டிதர் முக்ய மந்திரி?*

*முஷிரூல் ஹஜரத் முமலிகதமதார் சாயீமர்தே*

*மந்த்ரோத்ஸாஹநிதி உள்ள புத்திஸாகரதைர்ய தராதர. மந்திரி வர்ய ரா.ஸதாசிவ பண்டிதர் ஹுஜூர் நவீஸ் ரா. ஸதாசிவகேசவ பண்டிதர். ஹுஜூர் பா.க்ருஷ்ணாஜி போஸலே*

*மஹீருல் ஹஜரத் மஜமூ அதார் ரா. ராமசந்திர பாபாஜி பண்டிதர் சூர்சுத் ஸேனாதிபதி ப்ரபர்ஹ ரா. கிருஷ்ணாஜி கேசவ பண்டிதர்.*

*ரா.கிருஷ்ணாஜி கேசவ பண்டிதர்.*

---

442a. வைசாக - வைகாசி; சுக்ல பக்ஷ-வளர்பிறைப்பக்கம்; ஸப்தமி - ஏழாம் நாள்

443. க்ருத்ஸன - அன்புடைய

444. சுபடாதி - சுபடர் முதலிய; சுபடர் - வீரர்

445. ப்ரகரா - பிரகரம் - அடிப்பது

446. உத்தரோத்தரம் - மேன்மேலும்

447. நாலிலொன்று - சவுத் வசூலித்தல்

# மூட்டை எண் 191C

*9.1849 மே மீ 22 உ*

முகாம் - தரங்கம்பாடி - ஏப்ரல் மீ த்திய தேவஸ்தானம் வகையறா மொயின் துகையை அனுப்பியிருக்கிறதென்று ஸர்கேலுக்கு ரங்கனாத் எழுதியகடிதம்.

*21.1849 ஜூன் மீ 4உ*

*(1)* ரெஸிடெண்டு[448] - ஸர்கேலுக்கு[449] எழுதிய கடிதங்கள் -

சுப்பராம சாஸ்திரி கொடுத்த மனுவில் ......விசேஷமாக ஸ்வாமிக்கு நரபலி கொடுக்கிற உத்தேசமிருப்பதாகக் கண்டிருக்கிறது. அவ்விஷயத்தில் அதில் கண்டிருப்பதை பைராகியை[450] கோட்டையில் ஒளித்து வைத்திருக்கிறார்களாமே? அதைப் பற்றி நிஜத்தை எனக்குத் தெரிவிக்க வேணும்.

*(2) 1849 ஜூன் மீ 11உ*

ரெஸிடெண்டு - ஸர்கேலுக்கு - கடிதம். வெள்ளைக்காரர்களுடைய வேடிக்கைக்காக கோடிக்கரையில் வைத்திருக்கும் படகுகளை ஸர்கேல் தயவுசெய்து மகாராஜா சாஹேபின் உத்திரவு பெற்றுக் கொண்டு கொடுத்தால் ரெஸிடெண்டுக்கு வெகு உபகாரமாயிருக்கும்.

*(3) 1849 ஜூன் மீ 1உ*

ரெஸிடெண்டிடம் - சுப்ராம சாஸ்திரி கொடுத்த பிறாது.

கோட்டையில்வடக்கு வீதியிலிருக்கும் ராம் ராவ் ஜாதவ் என்பவர் வட தேசத்திலிருந்து பட்டு எனப்பட்ட ஒரு பைராகியை வரவழைத்து மேலவீதியில் ஸோமநாத பண்டிதருடைய வீட்டில் அவரை வைத்து ஷை ராம் ராவ் ஜாதவின் மூலம் அவர் சொல்லுகிறபடி மகாராஜா சாஹேப் அவர்களுக்குத் தெரிவித்து, ஒருஜபசாலை ஏற்படுத்த வெகு திரவியத்தைச் செலவழித்து அதில் ஜபம், ஹோமம்[451] செய்கிற பிராமணர்களுக்கு மிகவும் சிரமமேற்பட்டு அவர்களில் சிலர்கள் இறந்து போவார்கள் போலிருந்தார்கள். கோட்டையிலிருக்கும் சில பேர்கள் அப்பொழுதிருந்த பிஷப்[452]சாயேபிடம் வாக்குமூலம் எழுதிக் கொடுத்த பின்னர் நீதிவானான அந்த சாஹேப் அதை நன்கு விசாரித்து மேலெழுதிய காரியம் நிஜமென்றெண்ணி ஷை பைராகியை விரட்டி விட்டு, மேற்கண்ட ஜபசாலைக்குப் பாத்தியஸ்தரான கோட்டையில் மேல வீதியில் டபீர் இராமசாமி கோவிலுக்குப்[453]பக்கமுள்ள சந்தில் வசிக்கும் வாசுகவி[454] என்பவரையும் ராம்ராவ் ஜாதவரையும் பைராகியையும் வரவழைத்து விசாரணை செய்ததில் இனி ஜபசாலையில் பிராமணர்களை வைத்துக்

---

448. ரெஸிடெண்டு பரட்டு என்பவர் ஆகலாம் (191சி-17-2) (பக்கம் 67)

449. சர்க்கேல் - பாபாஜி ராமாஜி பண்டிதர் (பக்.86)

450. பைராகி - வடநாட்டுத் துறவி

451. ஹோமம் - தீ வளர்த்தல்

452. பிஷப் - ரெஸிடெஎ்டு

453. டபீர் ராமசாமி கோயில் - (பக்கம் 213 இல் 6) (பக்.189இல் 33)

454. வாசுகவி - வாசுதேவகவி

கஷ்டப்படுத்தக் கூடாது, என்றும், அந்தப் பிராமணர்களை எடுத்துவிட வேண்டுமென்றும் இனி அதிக ஆள் மாகாணங்களை வைக்கக்கூடாதென்றும் நியாயமாக நடக்க வேண்டுமென்று ராமராவுக்கும் கவிக்கும்[455] கட்டளையிட்டு சிரஸ்தேதா [456]ருடைய ஜாமீன் பேரில் அவர்களை விட்டு விட உத்திரவு செய்தார். நான் கொஞ்சமான சம்பளக்காரன். இப்பேர்ப்பட்ட என்னை வாசுதேவ கவி தான் பரிசுத்த மென்று தப்பிக் கொள்ளுவதற்காக நான் ஜபசாலைக்குப் பாத்தியஸ்த[457] னென்று பொய் முகாந்திரங்களைச் [458]சொல்ல எனக்குப் பதிலாக ஒருவரை வைத்து நான் ஸர்காரில் வேலைக்கு வராமலிருக்கும்படி உத்திரவிட்டிருக்கிறார். இப்படி யிருக்கையில் தான் பரிசுத்த[459] மென்று தெரிவித்தவனான வாசுதேவ கவிக்கு முன்னால் விவஸ்தை[460] செய்த வெள்ளைக்காரர் நீலகிரிக்குச் சவாரி போயிருக்கிறார் என்கிற தாத்பரியத்தினாலே[461] ஹூ ஜூரின் முன்னிலையில் முன்போல கெட்ட நடத்தையின் காரியத்தைச் சொல்லி, அவருடைய துர்போதனையின் மேல் முன்போல ஜபசாலையில் சுமார் 1000 பிராமணர்கள் வரையில் புதிதாக வைத்து, அதற்குப் பாத்தியஸ்தரான ஷெ வாசுதேவ கவி இருந்து . இரவும் பகலும் ஜபஞ்செய்ய வேண்டும். பாரா[462] வைத்து பிராமணர்களைத் தொந்திரவு செய்து வருவதாலும், ஸ்ரீராஜ கோபால ஸ்வாமியின் கோவிலில்[463] ஷெ வாசுதேவ கவியின் மூலம் அவருடைய யுக்தியின்படி பத்திரகாளி என்னும் ஒரு விக்கிரஹத்தைச் செய்து வைத்து அந்தக் காளிக்கு நரபலியைக் கொடுத்தால் அக்காளி என்னும் தேவதை பிரத்யக்ஷமாகுவாளென்று ஷெ வாசுதேவ கவி ஹூஜூரிடம் சொன்னதின் பேரில் ஒரு பெண்ணைப் பணம் கொடுத்து, ஸர்காருக்குப்பணிவிடைக்கு வேண்டுமென்று வாங்கி வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவளை வருகிற பாட்டிமை[464] தினம் அதிரகஸ்யமாக ஷெ கோவிலில் பூஜையைச் செய்து காளிக்குப் பலி கொடுப்பார்கள் போலிருக்கிறது. ஒரு வேளை அது வெளியாகி விட்டால் அந்தப் பெண்ணின் பாத்தியஸ்தர்கள் கௌண்ட்மெண்டு[465] வரையில் போவார்கள் போலிருக்கிறது. இந்தப்படி வாசுதேவ கவியின் புத்தியினால் மகாராஜசாஹேப் மிக்கக் கடன்காரராயி அபகீர்த்திக்கு[466] இடமுண்டாகி ஏராளமான பிராமணர்களுக்குச் சம்பளமில்லாமல் கொலை

455. கவி என்றது வாசுதேவகவியை

456. சிரஸ்தேதார் - வெங்கடராவ் (191சி-17-2)

457. பாத்தியஸ்தன் - உரிமையாளன்

458. முகாந்திரங்கள் - காரணங்கள்

459. பரிசுத்தம் - தூய்மை

460. விவஸ்தை - தீர்ப்பு

461. தாத்பரியம் - கருத்து

462. பாரா - காவல்

463. (பக்கம் 189 இல் 29)

464. பாட்டிமை - முழுமதி நிறைமதி நாள்களுக்கு அடுத்த நாள்

465. கௌண்ட்மெண்டு - கவர்ன்மெண்டு (அரசு)

466. அபகீர்த்தி - கெட்டபெயர்

வகையறா காரியங்கள் நடப்பதினால் கும்பனிக்கும் அபகீர்த்திக்கு இடமாகும். ஆகையால் தர்மப்பிரபுவான தாங்கள் ஏழையான என் பேரில் தயவு செய்து, என்னுடைய வேலைக்கு உத்திரவு கொடுக்கிறது. அது மட்டுமல்லாமல் ஷெ வாசுதேவ கவிக்கும் மாப்பிள்ளை[467] சாஹேபிற்கும் அதிக ரகஷ்யமானதால் இந்த வாக்குமூலத்திற்கு இண்டார்சு[468] செய்து அனுப்பினால் ஏதாவது பொய்யான காரணங்களை எழுதுவார்கள். அப்படியில்லாமல் ஷெ வாசுதேவ கவியை நேரில் வரவழைத்து விசாரணை செய்து ஷெயான் சர்காருடைய வழிக்குப் போகாம விருக்கும்படிக்கும், ஜபசாலையில் நியமித்திருக்கும் பிராமணர்களை எடுத்துவிடும்படிக்கும் செய்து, இனிமேல் கிரமப்படி நடக்கும்படியாக ராஜேஸ்ரீ மகாராஜ சாஹேப் கடன்காரராகி வெகு பிரஜைகளுக்கு அசௌக்யமுண்டாகாதபடியும் தற்பொழுது வாங்கியிருக்கிற வாக்குமூலத்தை விட்டு விடும்படியாகவும் உத்திரவாக வேணும்.

(3) ஷெ வாசுதேவ கவியின் கெட்ட நடத்தையைப் பற்றி கௌண்ட்மெண்டாருக்கும்[469] தெரிவித்திருக்கிறோம். இவ்வாக்கு மூலத்திற்குத் தருமப் பிரபுவான நீங்கள் ஒரு விவஸ்தையைச் செய்யாமல் போனால் கௌண்ட் மெண்டாரிடம் நேரில் சென்று விஷயத்தைத் தெரிவித்து, வாக்கு மூலத்தைக் கொடுத்து, விவஸ்தையைச் செய்து கொள்ளத் தயாராய்க் காத்துக் கொண்டிருக்கிறேன்.

சலாம் கிரந்தயெழுத்தில்[470] கையொப்பமிட்டிருக்கிறது.

1849 ௵ ஜூன் ௴ 1உ

17. 1849 நவம். 7உ
கோட்டையிலிருக்கும் அண்ணாவைய்யா வகையறா கௌண்ட்மெண்டுக்கு எழுதிய மனுவின் நகல். இராமராவ் ஜாதவ் என்பவர் வடதேசத்திலிருந்து பட்டு என்கிற ஒரு பைராகியை வரவழைத்து ஹு ஜூருடைய உத்திரவின்படி ஒருசாலா[471] தயார் செய்து, பூமியிலிருந்து பணம் எடுக்கலாம். சத்ருவைக் கைவசமாக்கலாம். சுவாமியைக் கண்ணால் பார்க்கலாம் என்றும், அதில் ஜபம் வகையறா செய்கிறார்களென்று

அதற்கு Thomas Chief Secretary என்பவர் Endorse செய்து தஞ்சாவூர் ரெஸிடெண்டு வேலை பார்க்கிறவர் இவ்விஷயத்தை நன்கு பரிசோதித்துச் சுருக்கமாகப் பதிலளிக்கிறது. போர்ட் செயிண்ட் ஜார்ஜ் டிசம்பர் ௴ 7உ

(2) 1849 பிப். 27உ
ரெஸிடெண்டு[472] - சிரஸ்தேதார் வெங்கட்ராவரவர்களின் பெயரால் எழுதிய கடிதத்தின் நகல்

467. மாப்பிள்ளை - சக்காராம் ஆகலாம்

468. இன்டார்சு - endorse (கருத்துத் தருமாறு குறிப்பு எழுதுதல்)

469. கௌண்ட்மெண்டார் - Government

470. கிரந்த எழுத்து - வடமொழியை எழுதத் தமிழ் நாட்டவர் பயன்படுத்தும் எழுத்துமுறை

471. சாலா என்றது ஜபசாலையை

472. ரெஸிடெண்டு என்றது பரட்டு என்பவரை (பக்.67)

- மகாராஜா[473] சாஹேப் மறுபடியும் கடன்காரராகாமல் ஜாக்கிரதை செய்வது உம்முடைய கடமை. இப்படி - யிருக்கையில் இராஜா சாஹேபின் சிலவின் நிஜமான ஸ்திதியை எனக்குப் பிறரால் தெரிகிறவரையில் அவ்விஷயத்தில் நீங்கள் என்னிடம் சொல்லவில்லை. இப்பொழுது இராஜா சாயேபுக்கு 3 1/2 இலக்ஷம் ரூபாய் கடனா யிருக்கிறது. அதைப்பற்றி நான் இராஜா சாஹேபுக்கு எழுதியிருக்கிறேன். ஆகையால் வீண் சிலவைக் குறைத்து, சமீபத்தில் வந்த துகையைக் கொண்டு தீர்க்காவிடில், நான் ஒரேயடியாக கௌண்ட்மெண்டுக்குத் தெரிவித்து விடுவேன். அதனால் இராஜா சாயேபுக்கு என்ன ஏற்படுமோ வென்று நீங்கள் இராஜா சாயேபுக்குத் தெரியும்படி நீங்கள் ஸர்கேலுக்குச் சொல்லவும்.

(2) அவர்கள் பழைய வேலைக்காரர்களை நீக்கிவிட்டு, புதிய வேலைக்காரர்களை நியமித்துக் கொண்டிருக்கிறார். இன்னும் வியாபாரியின் இடைஞ்சலைத் தீர்க்கவில்லை. நான் ஸர்கேலிடம் ஒரு துணி வியாபாரியின் பிறாதை அனுப்பித்தேன். அவனுக்கு ரூ.5500 பாக்கியிருக்கிறது. இந்த இருப்பிற்கு இடம் கொடுக்கக் கூடாது. இராஜா சாஹேபின் நடவடிக்கை விஷயமாக ஜாக்கிரதை செய்வது, உங்களுடைய பொறுப்பு என்று நான் மறுபடியும் சொல்ல வேணுமா என்ன? நான் அனேகமாய் தஞ்சாவூரிலிருப்பதில்லை. இராஜாங்கத்தின் வேலையில் ஆழ்ந்து இருக்கிறேன். ஆகையால் கடனை எப்படிச் செலுத்த வேணும் என்பதை நீங்கள் எனக்குத் தெரிவிக்க வேணும். நான் இராஜா சாஹேப் கடிதத்தில் விரும்பியதை இம்மாதக் கடைசியில் வாங்கி அனுப்ப வேணும்.

சமீபத்தில் 30 குதிரைகளை விலைக்கு வாங்கி யிருக்கிறாரென்று கேள்விப்படுகிறேன். இராஜா சாஹேபுக்குக் குதிரைக்கு என்ன குறைவு? அவர்களுக்கு முந்தியே எவ்வளவு குதிரை வேணுமோ அதைப் பார்க்கிலும் கூடவே இருக்கின்றன. டாக்டர் ப்ருகிங் மூலம் இங்கிலாந்திலிருந்து பசுமாடுகளும், நாய்களும் வருகின்றனவென்று கேள்விப்படுகிறேன். அதெப்படி நீங்கள் எனக்கு ஏன் தெரிவிக்கவில்லை. இவ்வேலைகளெல்லாம் நடப்பதைப் பார்த்துக் கொண்டிருப்பது உங்கள் வேலையா?

வல்லம்

ஜே.பர்டு

பிப்ரவரி 27உ 1849

**4.1849**

**ரெஸிடெண்ட் - ஸர்கேலுக்குக் கடிதம் மன்னார்குடி ஸேதுபாவா சத்திரம் - ஹரித்ரா நதியின் (குளத்தின்) படித்துறையைச் செப்பனிடும் விஷயம்.**

**7 1849**

(1) மகம்மதியர்களுடைய 2 கூட்டங்கள் திருச்சனாப்பள்ளியிலிருந்து தஞ்சாவூருக்கு வரப்போகிறது. ஒரு கூட்டம் வழக்கம்படி தஞ்சைக்கு வந்து மகாராஜா சாஹேபிடம் இனாம்

473. மகாராஜா என்றது இரண்டாம் சிவாஜியை

பெறுகிறவர்கள். இரண்டாவது கூட்டத்தார் ஆயுதங்கள் வகையறா கொண்டு வராதபடி உத்திரவிட்டு ஒவ்வொருவரிடமும் ரூ.50 ஜாமீன் வாங்கி அனுப்பியிருக்கிறது.

*23 1849*

*(1) கலெக்டர் - ஸர்கேலுக்கு எழுதிய கடிதம் -*

*1811ம் ஸு த்திய ரெவின்யூபோர்டு 7வது ரெகுலேஷன்படி சத்திரமும் தரும காரியத்திற்கும் விடப்பட்ட எல்லா நிலங்களின் விசாரணை செய்யும் அதிகாரம் கலெக்டருக்கு இருப்பதினால் எனக்குத் தெரிவித்து காரியங்களைச் செய்ய வேணும்.*

*31 (1) ரெஸிடெண்ட் ஸர்கேலுக்குக் கடிதம்- ஈரோபியன் ஈஸ்ட் இண்டியன் பெண்களுக்கு அரண்மனையில் வேலை கொடுக்கக்கூடாது என்று உமக்கு எழுதியிருக்கிறேன். ஒரு வேளை இறந்து போன ஜான்கொலப்பின்[474] சம்சாரத்திற்கும் நம்பிக்கையுள்ள ஜனங்களுக்கும் மகாராஜா சாஹேப் பென்ஷின் செய்து கொடுத்த ஔதாரியத்தைத்[475] தெரிவிக்கலாம்.*

*(2) 1849 அக். 16உ*

ரெஸிடெண்ட் - ஸர்கேலுக்கு கடிதம்.

*1849 ஸு ஜூலை, மீ 18உக்கு கோர்ட் ஆப் தூர்கட்டர்[476] அவர்கள் எழுதிய கடிதத்தின் சுருக்கம். இன்று காலை கௌன்ட்மெண்டிலிருந்து வந்தது. ஈரோபியனும் ஈஸ்டிண்டிஸ்[477] இவர்களுடைய பெண்களை அரண்மனையிலோ அல்லது வெளியிலோ வேலையைக் கொடுக்கக்கூடாது. ஒரு வேளை இருந்தால் அவர்களுடைய வேலையின் பெயரும் - பெயரும் வகையறாவை எழுதி அனுப்புகிறது.*

*(3) கோர்ட் ஆப் தூர்கட்டர் அவர்கள் 1849 இங்கிலிஷ் ஸு ஜூலை மீ 18உ எழுதிய கடிதத்தின் சுருக்கத்தை - நேடிவ்[478] இராஜாக்களின் வேலைகளில் இருக்கிற ஈரோபியன் ஈஸ்டிண்டியன்களுடைய ஜாபிதா விஷயமாக*

ப்யாரா-[479] 32

ஷை ஜாபிதாவில் பேஸஜி[480] ஜாபிதாவிற்கு இருக்கும் வித்தியாசமும் அவ்வித்தியாசத்தின் காரணத்தின் விபரமும் கண்டு எழுத வேணும். மேற்சொன்னபடி திருவாங்கூர் - கொச்சி - தஞ்சாவூர் ரெஸிடெண்ட் இவர்களுக்கு உத்திரவிடவும். (கை யொ) ஜே.எப்.தாமஸ்-முக்கிய செகடரி.

---

474. ஜான் கொலோப் - தஞ்சையிலிருந்த பாதிரியார்

475. ஔதாரியம் - உதாரகுணம்; கொடைப்பண்பு

476. கோர்ட் ஆப் தூர்கட்டர் Court of Directors

477. ஈஸ்டிண்டிஸ் - கிழக்கிந்திய

478. நேடிவ் - Native; நாட்டுக்குரிய

479. ப்யாரா - Paragraph

480. பேஸஜி - அரசர்

*30.1849 அக். 10உ*

ரெஸிடெண்ட் - ஸர்கேலுக்கு - முகாம் - வல்லம் திருச்சியிலிருந்து சிங்கப்பட்டி வகையறா வழியாக அதிராம்பட்டணத்திற்குப் போக புதிய ரஸ்தா போடுவதற்குத் திட்டம் போட்டு இருப்பதால் ப்ளான் வகையறா அனுப்பியிருக்கிறது. அதன்படி இலாகாவில் வேலைப்பாடு நடைபெற வேணுமென்று.

*11.1849 மார்ச்சு மீ 28 உ*

முகாம் - தரங்கம்பாடி

தேவஸ்தானம் வகையறா மொயின் துகையை அனுப்பியிருக்கிறது என்று ஸர்காரின் பதிலாக நியமிக்கப்பட்ட கணக்குப்பிள்ளை ரங்கநாத ஜீவாஜி ஸர்கேலுக்கு எழுதிய கடிதம்.

*20.1849 ஆகஸ்டு 9 உ*

(1) ரெஸிடெண்ட் - ஸர்கேலுக்குக் கோட்டையிலுள்ள ஸதாசிவராவ் அவர்களுடைய வீட்டை 50,000 ரூபாய்க்கு ஹுஜூரானவர் வாங்கினது தன்னுடைய ஸம்மதமில்லாமல் வாங்கினாரென்று.

*25.1849 ஆக. 29உ*

(1) ஸர்கேலுக்கும் - ஸேனாதுரந்தர் நீலகண்டறாவ் ஆனந்தராவ் ஜாதவ் அவர்களுக்கும்.

ஸோமநாத தீக்ஷித பண்டிதர் சிரோமணி எழுதிய கடிதம்.

ஸ்ரீமந்த் சத்திரபதி சாஹேப் நம்மை அபிமான புத்திரனாகச் செய்து கொண்டு, அதற்கு வேண்டியளவு ஜாகீர், பிருதுகள், வாகனங்கள், நாணயங்கள், வீடுகள் வகையறாவும், நிலபுலங்களையும் இனாம் கொடுத்து, வெகுகௌரவமாகவும், பிரிதீயுடனும் நடத்திக் கொண்டிருக்கையில் என்னுடைய கிரகசாரத்தினால்[481] மிஸ்தர் கிண்டர்ஸலி[481a] சாஹேப் அவர்களின் முகாந்தரமாய்[482] கும்பனிக்காரர்கள் காரணமின்றி என்னுடைய சொத்தை அபகரித்தார்கள். இவ்விஷயத்தில் கனம் பொருந்திய இங்கிலிஷ் கும்பனிக்காரர்களிடம் மனுவைக் கொடுத்திருக்கிறேன். சங்கதிகள் இப்படியிருக்கையில் என்னுடைய தகப்பனாரின் விருத்தாப்பிய தசையில்[483] அவருடைய புத்திக்கு மோசம் வந்துவிடும்படி செய்து தாறுமாறாக ஒரு வழியைத் தேடி அவருக்குக் காரணமின்றி கடினமான கல்பனையைத் தோனும்படி செய்வதனால் அவருக்கு இருக்கும் சுமார் நான்கு லக்ஷம் ரூபாய் ஆஸ்திகளில் ஸ்தாவர[484] சொத்துக்களைத் தவிர்த்து ஜங்கமஸ்திதி[485] எல்லாவற்றையும் தன் கைவசப்படுத்திக்

---

481. கிரகசாரம் - தீயகிரகங்களின் பலன்

481a. கிண்டர்ஸலி - ரெஸிடெண்ட்

482. முகாந்தரம் - வழி

483. விருத்தாப்பிய தசை - முதுமைக்காலத்தில்

484. ஸ்தாவரம் - நிலையியற்பொருள் - அசையாப் பொருள்

485. ஜங்கமஸ்திதி - இயங்குதிணைப்பொருள் - அசையும் பொருள்

கொண்டு, கோட்டையிலிருக்கும் என்னுடைய சொந்த வீட்டில் வந்து அமர்ந்திருக்கிறார். ஷெ ஸ்தாவர ஜங்கமஸ்திதி எல்லாவற்றையும் ஸர்காரில் கிரயம் செய்து கொடுக்கும் விஷயத்தில் ஸேனா துரந்தர் நீலகண்டராவ் ஆனந்தராவ் ஜாதவ் அவர்களிடமிருந்து ஏற்பாடு செய்வதற்கு அவருக்கு ஸர்வமானியம்[486] வகையறா விஷயமாக கும்பனியார் பிரசித்தி செய்த[487] பொதுவான கட்டளையின் அக்கசும் மூலாதாராவின் அக்கசும் கவனிக்காமல் விண்ணாற்றங்கரையில் வடகரையிலுள்ள படுகையை ஸர்கார் ஹர்காராவின்[488] முகாந்தரமாக ஏதோ விதமாகவோ

ஆதாரஞ் செய்து கொடுத்தாற் போலும், ஷெ ஸ்தாவர ஸ்திதியை ஸர்காரில் ஹீனக் கிரயத்திற்கு[489] கீழ்க்கண்ட வியாபாரியின் பேரால் கிரயஞ் செய்கிறது. தங்கம், வெள்ளி வகையறா நகைகள் பஞ்சலோகாதி[490] பாத்திரங்கள் இவற்றின் பேரில் நம்முடைய பெயர் எழுதியதை ராவி விட்டு அவற்றை வியாபாரி ராமனாத் பட்டும் காதர்கா இவர்களிடமிருந்து ஸர்காரில் வாங்குகிறது என்ற தீர்மானம் வெகு, ஷெ கிருஷ்ணாஜி கேசவ தீக்ஷித பண்டிதர் அவர்கள் எண்ணி யிருப்பதாக அநேக ஜனங்களின் முகாந்தரமாகக் கேள்வி யுறுகிறேன். அவையொன்றும் தரும சாஸ்திரத்திற்கு - நியாயத்திற்கு லோகா சாரத்திற்கு[491], நீதிபரரான[492] ஸர்காருடைய எண்ணத்திற்கும் நேர்த்தியா யிருக்குமாவென்று தாங்கள் எண்ணிப் பார்ப்பீர்களானால் கட், கடா[493] எவ்வளவு பெரிதான கெட்டவழியான அநியாயத்திற்கு கிழத்தன்மையைச்[494] சேர்ந்து காரணமின்றி ஆரம்பித்திருக்கிறார்கள். அந்த வழியை எல்லா நியாயங்களுக்கும் தாயகமாயுள்ள ஸர்காரவர்கள் தடை செய்து, மேற்சொல்லப்பட்ட என்னுடைய மனுவின் லாபம் எனக்குக் கிடைக்கும் வரையில் என்னுடைய தகப்பனாருடைய சுமார் 4 லக்ஷம் ரூபாயின் சொத்துக்களை அவர்களைக் கிரயம், விக்கிரயம்[495] போக்யம், பந்தகம்[496] வகையறா எவ்விதமான கெடுதல்களையும் செய்யாமலும், ஸர்காரில் இதராள்[497] பேராலேயோ பிரத்யக்ஷம்[498] இதரர்கள்தான்

---

486. ஸர்வமான்யம் - வரியில்லாமல் அனுபவிக்கும் நிலம்

487. பிரசித்தி செய்த - வெளிப்படுத்திய

488. ஹர்காரா - ஒற்றர் (பக்கம் 76)

489. ஹீனக்கிரயம் -குறைந்தவிலை

490. பஞ்சலோகம் - பொன், இரும்பு, செம்பு, ஈயம், வெள்ளி என்ற ஐந்து

491. லோகாசாரம் - உலக வழக்கு

492. நீதிபரர் - நீதியினின்று தவறாதவர்

493. கடகடா - ஒலிக்குறிப்பு

494. கிழத்தன்மை என்றது தன் முதிர்ந்த தந்தையை

495. கிரயம் - விற்பனை; விக்கிரயம் - மீண்டும் விற்றல்

496. போக்யம் - அனுபவஒற்றிச் சீட்டு; பந்தகம் - அடைமானம்

497. இதராள் - பிறர்

498. பிரத்யக்ஷம் - நேரிடையாக

தடைசெய்து வைக்கும் விஷயத்தில் நீதிபரமுள்ள பூர்ணமான[499] அதிகாரியான தயவுடன் தங்கள் எண்ணம் எப்பொழுதும் ஜாகரூகமா[500] யிருக்குமென்று முழு நம்பிக்கையு விருக்கிறேன். ஏனென்றால் இதெல்லாமும் தாங்கள் என்பேரில் தயை பிரிதீ[501] யுடன் என்னுடைய தாய் தந்தை போல வெகு கோமள[502] தயாஸாகரம்[503] ஸஹ்ருதய[504] சிந்தாமணியாய்[505] ஆகும். ஹுஜூரின் ஸந்நிதானத்தினால் நல்ல ஸமயத்தில் அநேக விதமான பிரார்த்தனைகளுடன் தெரிவித்து, அதற்கு ஆகுகிற உத்திரவை எனக்குத் தபால் மூலம் மேலெழுதிய இச்சையைப் பூர்த்தி செய்துதான் தெரிவிப்பீர்களென்றெண்ணுகிறேன். எல்லாமறிந்தவர்கட்கு எண்ண விஷேமாய்[506] எழுதுகிறது. பிரயோஜனப்படாது என்று தெரிவிக்கிற க்ஷமாப[507] னுடைய பிள்ளை ஸ்ரீமான் ராஜேஸ்ரீ ஸோமனாத தீக்ஷித பண்டித சிரோமணி 29வ. ஜனவரிமீ 1849 சிவராஜபூர்.

(2) 1849 செப். 22வ.
ரெஸிடெண்ட்- ஸர்கேலுக்கு - கடிதம்.
(ஜே. எப். பிஷப் ரெஸிடெண்ட்)
கண்டபடி வாரி செலவும் கெட்ட சிலவும், இவ்விஷயமாக நான் சமீபத்தில் எழுதியிருந்துங் கூட மகாராஜா சாயேபுக்கு துகியான் வர்த்தமானப் பத்திரிகையில் அசந்தர்ப்பமாக எழுதிக்கொண்டிருக்கிற மிஸ்தர் ஹென்ரி பொட்லரிடமிருந்து ஏதோ ஜனங்களது அல்லது உபயோகப்படாதவற்றை எல்லாம் கரீதி செய்கிற யோசனை செய்திருப்பதாகக் கேள்விப்படுகிறேன். அவ்வெண்ணம் இருக்கிறதா இல்லையா என்பதை உடனே எனக்குத் தெரிவித்து எனக்குத் தற்கால நிலையில் சரியென்று தோன்றவில்லை என்றதைச் செய்யக்கூடாது என்று பிரார்த்திக்கிறேன்.

(22) 1849 செப். 7வ.
(1) ஸோமநாத பண்டிதர் ரெஸிடெண்டுக்குக் கொடுத்த அர்ஜீ[508] தான்தன்னுடைய தகப்பனார் ஸதாசிவ பண்டிதர் அவர்களுடைய வீடு வகையறா ஆஸ்தி விஷயமாக சுப்ரீம்

---

499. பூரணமான - முழுமையான

500. ஜாகருகமாய் - விழிப்புடன்

501. பிரிதீ - பிரீதி - விருப்பம்

502. கோமள - மென்மையான

503. தயாஸாகரம் - அருட்கடல்

504. ஹிருதய - இதயம்

505. சிந்தாமணி - அனைத்தையும் கொடுக்கவல்ல மணி

506. விஷேமாய் - விசேஷமாய்

507. க்ஷமாபன் - பொறுத்தலுக்கு அல்லது மன்னிப்பதற்கு உரியவன்

508. அர்ஜீ - மனு; விண்ணப்பம்

கோர்டில்[509] பிராது செய்திருக்கிறேன். அதுதீரும் வரையில் ஷெ சொத்துக்கள் வகையறாக்கள் கிரய விக்ரய வகையறா செய்யாமல் தடைசெய்ய வேணுமாய்.

*(33) 1849 பிப். 10உ*

சரஸ்வதி மகாலிலுள்ளவர்களுக்கு 11 பஞ்சாங்கங்களைக் கொடுக்க உத்திரவாக வேணுமென்று மனு.

*(2) 1849 அக். 10உ*

கலெக்டர் சாஹேப் - ராயல் (கணக்குப்பிள்ளை) - கூட்? கச்சேரியுடன் மன்னார்குடிக்கு ஒரத்தநாடு சத்திரத்தின் வழியாகப் போயிருக்கிறார்.

*(3) 1849 செப். 21உ*

முகாம் - வல்லம். இவ்வூரில் ஒரு மாதமாக மழையின்மையால் தண்ணீர் கஷ்டம் மிகவு மிருக்கிறது. இப்படி யிருக்கையில் நேற்றைய தினம் பலத்த காற்று வீசிற்று. அப்பொழுது வீடுகளுக்குத் தீபற்றி மூன்று வீதிகளில் 22 வீடுகள் எரிந்து போயின. மனிதர்கள் தப்பியது வெகு கஷ்டமாயிற்று.

*34. 1849 மார்ச்சு மீ 10 உ*

ரெஸிடெண்டுக்கு - டாக்டர் ப்ரூகிங்[510] சாஹேப் சென்னைக்குப் போயிருக்கையில் அவருடன் சர்க்காருடைய ஊழியர்களான கோபாலகிருஷ்ணா வகையறாவை அழைத்துச் சென்று அங்கிருந்த டாக்டரிடமிருந்து வைத்தியம் சிகித்ஸையை கற்பித்து அனுப்பித்தார். அந்த டாக்டருடையவும் டாக்டர் தாம்ஸன் இவ்விருவரும் செகண்ட்த்ரேஸர் முத்துசாமி முதலி அவர்களுக்குச் செய்த ஆதரவையும் அவர்களுக்கு வித்தை கற்பிப்பதில் அந்த ஸாஹேப் ஏற்றுக் கொண்ட சிரமம் இவ்விஷயத்தில்ஹுஜூருடையசித்தம் உபக்ருதமா[511] யிருக்கிறது. அந்த ஸாஹேப் ஏற்றுக்கொண்ட பிரயாசைக்காக ஹுஜூருடைய மனத்திற்கு ஏற்பட்ட சந்தோஷத்தின் அடையாளமாக இரண்டு டாக்டர்களுக்கும்[512] ஒவ்வொருக்கும் ரூ.500 வீதம் 1000ரூ ஸெகிந்த்ரேஸர் முத்துசாமி முதலியாருக்கு 200 ரூ ஆக ரூ1200 அவர்களுக்கு இனாமாகப்பட்ட இக்கடிதத்துடன் அனுப்பியதை அவர்களுக்குக் கொடுக்கிறது.

*(2) 1849 பிப். 26 உ*

ரெஸிடெண்டுக்கு - ஸர்கேல் கடிதம் ......

கோட்டையில் தெற்கு ராஜவீதி ஸ்ரீகாளியம்மன் கோவிலின் தேர்முட்டிக்கு எதிர் ஸந்திலிருந்து அநேக ஜனங்கள் செட்டி வீதியின் வழியாக எல்லையம்மன் கோவில்[513]

---

509. சுப்ரீம்கோர்ட்டு - உச்ச நீதிமன்றம். 1801இல் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் சட்டத்தினால் சென்னையில் உச்ச நீதிமன்றம் தோற்றுவிக்கப் பெற்றது. இது சென்னை மாகாணத்தில் வெள்ளையருக்கு அடங்கிய பகுதிகளிலும் சார்புடைய பகுதிகளிலும் உள்ள மக்களுக்கும் சட்ட ஆட்சி முறை நல்கியது (பக்கம் 179)

510. டாக்டர் புருகிங் - இவர் தெற்கு வீதி ஆரோக்கிய சாலையிலிருந்த ஆங்கில வைத்தியர் ஆவர் (பக்.289)

511. உபக்ருதம் - உதவி

512. இரண்டு டாக்டர்கள் - டாக்டர் புருகிங், டாக்டர் தாம்ஸன்

513. (பக்.213இல் 12)

தெருவிற்குப் போகிறார்கள். அந்தச் சௌகர் மார்க்கமாக ஷெ சந்தில் இருபுறமும் அந்தந்த வீட்டினெல்லையில் அவர்களிடமிருந்து திட்டப்படி கஜம் 1க்கு ரூ.1/2 வீதம்

துகையை வசூல் செய்து சாக்கடையைக் கட்டிக் கொண்டு வந்தோம். அதில் ஷெ பிராதுக்காரன் கொடுக்க வேண்டிய துகையைக் கொடுக்காததினால் அங்கு சாக்கடை கட்டாமலிருக்கிறது. அதனால் அநேக ஜனங்கள் புழங்கும்படி சந்து ஆபாஸமாயிருக்கிறது. ஆகையால் மேல் கண்டபடி துகையைக் கொடுக்க வேணும். அல்லது சாக்கடையக் கட்டிக் கொள்ள வேண்டும் என்று ஷெ பிராதுக்காரனுக்கு அநேக தரம் தெரிவித்தும் அதன்படி நடக்காமல் பிடிவாதம் செய்கிறான்.......

*(3) 1848*

கணக்கு - வருகிற ஸூ த்திற்காககும்பனியிலிருந்து ஆக வேண்டிய மராமத்து பாபத்து கோஷ்பாரா.[514]

14 அடி கோலினால் கோல்கள் ஆற்றங் கரையில் மண்வெட்டி போடுவதற்கும் மொடசெல்கட்டு வகையறா தாலூகா வரி-

*(4) 1849 ஜூன் 8உ*

ரெஸிடெண்டுக்கு - ஸர்கேல் - கடிதம்.

........... தங்களிடம் கொடுக்கப்பட்ட மனுவை நான் ஆராய்ந்தேன். அம்மனுவில் மனுஷ்யபலியின்[515] ஒரு புதிய எழுத்தையும் பயங்கரமாக எழுதும் தைரியத்தையும் அவன்[516] கைக்கொண்டிருக்கிறான். இன்னும் நீங்கள் அவ்விஷயமாக உண்மை தெரிய வேண்டுமென்று இச்சிக்கிறீர்கள். இவ்விரண்டையும் பார்க்கையில் நம்முடைய மனதுக்கு அதிக பயமும் வியசனமும், ஆச்சரியமும் தோணுகிறது. இந்தப்படிக்கி மேல் மேல் காரணமின்றி நடவாததைக் கல்பித்து அலக்ஷியமாக ஸர்காரிடம் கௌரவமும் மரியாதையுமின்றி பெரிய அள்ளுகட்டுவதற்குத்[517] துணிகிறவனுக்கு ஸகடி?[518] காப்பாற்றாமல் அநேக விதமான இப்பேர்ப்பட்ட துணிச்சலுக்கு முயற்சி செய்வதால் கௌரவமும் கெடுதலும் நமக்கு வியசன[519] முண்டாக்குகிறார்கள் என்பதைத்தவிர, ஸர்காருடைய கௌரவத்தைக் காப்பாற்றுகிறவர்களான உங்களுக்கு நாம் என்ன தெரிவிக்கக் கூடும். எப்பேர்ப்பட்ட பைராகியையும் நாம் கோட்டையில் ஒளித்து வைக்கக் காரணமில்லை. அப்படி ஒளித்து வைக்கவுமில்லை என்று நான் தங்களிடம் நிச்சயமாய்ச் சொல்லுகிறேன். சுப்புராம சாஸ்திரி என்பவர் வைதீக வேலைகளின் புத்தகம் செய்கிறவர்[520]களிலொருவர். சமீபத்தில் சில

514. கோஷ்பாரா - கணக்குச்சுருக்கம்

515. மனுஷ்யபலி - நரபலி - மனிதரைப் பலியிடுதல்

516. அவன் என்றது சுப்பராமசாஸ்திரியை (191சி-21-3)

517. அள்ளுக்கட்டுதல் - பலப்படுத்துதல்

518. ஸகடி - (சகட்டடியாக) மொத்தமாக

519. வியஸனம் - வருத்தம்

520. புத்தகம் செய்கிறவர் - எழுதுபவர்

நாட்களாக வேலை செய்யாததினால் சம்பளம் அடையவில்லை. ஆனால் அவன் புத்தகம் கொடுக்கிற வேலையைச் செய்தால் அவனுக்குச் சம்பளம் கொடுக்க ஆக்ஷேபணை[521] இல்லை.

ஹிந்து தரும குலானுசார[521a]மாகச் செய்யும் சில ஆராதனை[522]யைச் செய்து வருகிறோம் ஒளித்துச் செய்வதொன்றுமில்லை என்று தங்களுக்கு நிச்சயமாகச் சொல்லுகிறேன்.

*(5) 1849 ஆக. 5 வ*
ஸர்கேல் - ரெஸிடெண்டு - கடிதம்.

......... பிராதுக்காரன்[522a] தனக்கு 1000 வராகன் இனாம் கொடுக்க வேணுமென்று தெரிவித்தான். அந்த யந்திரம்[523] அவன் சொல்லுகிற உபயோகமுள்ளதா யிருந்தால் சரியான முறையில் நடத்தலாமென்று உத்திரவாயிற்று. பிராதுக்காரன் பின்பு வேண்டுமென்ற சாமான்களைக் கொடுத்து, ஒரு கிணற்றில் தண்ணீர் இறைக்கச் செய்தது. அது ஒரு கவலை யேத்தத்தில்[524] வரும்படியானளவு தண்ணீர் கூட இல்லை. வேலைத்தனம்

என்னவென்றால் - ஒரு சகடைக்கு ஒரு பெரிய தாம்புக்கயற்றை ஒரு சுற்றுச்சுற்றி அதற்கு ஒரு கனமான கல்லைக் கட்டித் தொங்கவிட்டு, கயற்றைச் சுற்றுவதில், அவ்வேகத்தினால் ஒரு சிறிய ஜலதாரை கயற்றுக்கு ஒட்டினாற் போல மேல்வந்து கொண்டிருக்கிறது. இவ்வேலைத் தன மொன்றும் பெரியதாகத் தெரியவில்லை. அதுவுமல்லாமல் தண்ணீர் ஜாஸ்தியும் வரவில்லை. உயரமாகவும், போகாததால் அவ்வேலையை இவ்விடம் கற்று ஆக வேண்டிய ஜரூர்[525] ஒன்றும் தெரியவரவில்லை. ஆனாலும் பிறாதுக்காரன் கிராமாந்தரத்திலிருந்து வந்த வேலைக்காரனாகையால் அவனுக்கு ஒரு கண்டியையும், ஆடையையும் கொடுத்து மரியாதை செய்து உத்திரவு கொடுத்தது. அதைக் கொண்டு அவன் சந்தோஷப்படாமல் ஒன்றுமே பொருமானமில்லாத ஸ்வல்ப[526] வேலைக்காக 1000 வராகன் வரவேணுமென்று தொந்திரவு செய்கிறான். ஆச்சரியமாயிருக்கிறது........... இதைத் தவிர ஒரு சீசாவில் சில பொம்மைகள் வகையறா தெரியும்படியாகச் செய்து வைத்திருக்கிறான். அந்தச் சீசாவை ஹுஜூரிடம் கொண்டு வந்து கொடுத்திருக்கிறான். அதுவும் அப்படி ஒன்றும் அபூர்வமான வேலை அல்ல. ஷெ சாமான்களையும் சீசாவையும் அவன் வந்து வேண்டுமென்றால் அவனுக்கே கொடுக்கப்படும்.......

---

521. ஆக்ஷேபணை - தடை

521a. குலானுசாரம் - குலாசாரம் - குலஒழுக்கம்

522. ஆராதனை - பூசை

522a. பிராதுக்காரன் - வழக்குத்தொடுப்பவன்

523. யந்திரம் - நீர் இறைக்கும் இயந்திரம்

524. கவலையேத்தம் - கபிலை யேற்றம் - எருதுகளைக் கட்டி நீர் இறைக்கும் ஏற்றம்.

525. ஜரூர் - அவசரம் (Urgency)

526. ஸ்வல்ப - சிறிய

*(6) 1849 செப். 14உ*

சென்ற விஜயதசமி தினம் கோட்டையிலுள்ள இராஜகோபால ஸ்வாமி கோவிலிலிருந்து[527] திருட்டுப்போன ரூபாய் 129 எடையுள்ள தங்கமூர்த்தி ஒன்று தஞ்சாவூர் ரெஸிடெண்டு சாஹேபிட மிருந்து சேர்ந்தது.

(கை யொ.) ஸர்கேல்.

*(7) 1849 செப். 13 உ*

நீலகிரியில் செய்திருக்கும் தோட்டத்தில் பரிஷ்காரஞ்[528] செய்ய தோட்டத்தின் விசாரனை செய்யும் கமிட்டியின் வேண்டுகோளை நீங்கள் ஹுஜூருக்குத் தெரிவித்ததற்கு அந்த விஷயத்தில் ஹுஜூரின் உத்திரவுப்படி ரூ.1000 இத்துடன் அனுப்பியதை அந்தக் கமிட்டிக்காராரிடம் நீங்கள் அனுப்ப தயவு செய்ய வேண்டும்.

*(8) 1849 அக். 11 உ*

பொய் நகையை அடகு வைத்து துகை வாங்கின வெங்கட சுப்பய்யாவின் பித்தலாட்டத்தின் விஷயத்தில் நியாய ஸபையார்[529] செய்த தீர்ப்பு- ஷெ யானை 6 வருஷம் விலங்குடன் ஜெயிலில் வைத்து மராமத்து வேலையை வாங்குகிறது. என்று தீர்ப்புச் செய்திருக்கிறார்கள் என்கிற சமாச்சார த்தைக் கோட்டையிலும் கோட்டைக்கு வெளியில் லயனிலும் தம்பட்டத்துடன் தீர்ப்பின் தேதியில் பிரஸித்தஞ் செய்து, விடும்பொழுதும் ஷெ யானை தண்டோராவுடன் பிரஸித்தஞ் செய்து, டானா வகையறா இடங்களில்காட்டி, லயனுக்கு வெளியே விட்டு விடுகிறது என்று தீர்மானஞ் செய்திருக்கிறார். இந்தச்சமாசாரம் ரெஸிடெண்ட் சாஹேபுக்குத் திருப்திகரமா யிருக்குமென்று எண்ணுகிறேன்.

*(9) 1849.*

ரெஸிடெண்டுக்கு - மைசூர் எட்டு கிராமம் டிவிஷனல் சிரஸ்தேதார் பாலகராம் சிங் அவர்களுக்குக் கண்ணுசாமி அப்பாஜி கொடுக்க வேண்டிருக்கிற துகை ரூ.9787-3-7. ஸர்வ வில்லங்க சுத்தியாய்[530] ரூ.8000 சென்ற டிசம்பர் மீ 10உ க்குள் செல்லானால் அதை நான் பெற்றுக் கொள்ளத் தயாராயிருக்கிறேன் என்று ரெஸிடெண்டு மூலம் நமக்குத் தெரிந்து நாம் அப்பாவைக் கேட்டதில் ஆமாம் தன்னிடம் ரூ.8000 தயாராயிருக்கிறது. ரெஸிடெண்டுக்கு நீங்கள் எழுதியிருக்கிறீர்கள். அதற்குப் பதில் வரவில்லை என்று அப்பா சொன்னார்.

---

527. (பக்கம் 189 இல் 29) (பக்கம் 213 இல் 14)

528. பரிஷ்காரம் - சீர்திருத்தம்

529. நியாயசபை - கி.பி.1800 முதல் தஞ்சையில் இருந்த நான்கு வழக்கு மன்றங்களில் ஒன்று

530. வில்லங்கசுத்தி - அடைமான முதலிய குறைகள் இல்லாமை; சொத்துரிமையில் குறைபாடு இன்மை.

# மூட்டை எண் - 193 C

*13. 1859*

பாயிசாப்களுடைய[531] சிலவின் எஸ்டிமேட் விபரம்.

*35.1832* முதல் *1838* வரை

தஞ்சாவூர் கோட்டையில் ஸர்காரவர்கள் வாங்கின வகை ஜாபிதா.

*32. 1859* முதல் *1860* வரை

ஒரு ஞூல த்திற்கு எஸ்டிமேட் ஜாபிதா.

*23. 1818*

(1) மனுக்கள் -

வாதியானவர் - கோர்ட்டில் ரூ.1256 மைலி[532] 171 காசு[533] 54 கிடைக்கவேண்டுமென்று பிறாது செய்தார். வாதியின் பிள்ளையைக் கூட வைத்துக்கொண்டு கணக்குப் பார்த்ததில் கொடுத்ததுக்கும், வாங்கினதுக்கும் ஜாடாவாய்[534] தீர்ந்து விட்டதினாலும், அவருக்கு எழுதப் படிக்கத் தெரியாமலிருந்தததாகையாலும் பிறாது செய்தேன் என்றும் ஷெ வியாஜ்யம் தள்ளுபடி செய்ய வேணுமென்றும் மனு கொடுத்தார். அதன்படி வியாஜ்யம்[535] தள்ளுபடி ஆனது.

**20.1809**

பாபுஜீ திரமாஜிக்கு - ரா. ராமசாமி பாபாஜி எழுதிக் கொடுத்த கடன் சீட்டு. அவசியத்திற்காக சக்.200க்கு 1 1/2 வட்டி வீதம் மார்கழி மீ" 30 உ கொடுப்பேன்.

*11.1857* முதல் *1858* வரை

மஹாலோ மஹாலின் ஸம்ஜாவிஸி[536] - கர்ச் மகால் போதே[537] விற்கு துகை வந்தப்படி.

---

531. பாயிசாப்கள் - இரண்டாம் சிவாஜியின் மனைவியர்

532. மைலி - Copper coin: the elephant on the observe with the word Sri or Sri Chamundi; the reverse of these coins bore inscriptions in English & Kannada giving the word மைலிகாசு and the value 20 kasu - Parameswari Lal Gupta, Coins, p.151.

533. காசு - (32 காசு கொண்டது ஒரு பணம்; பத்துப்பணம் ஒரு சக்கரம்) (பக்கம் 150)

534. ஜாடாவாய்-முழுவதும்

535. வியாஜ்யம் - வழக்கு

536. ஸம்ஜாவிஸி - லாபம்

537. மகால்போதே - அரசாங்கப்பொருள் நிலையம் (பக்.456)

*(1) 1860*

மா. 15 பாயிசாப்[538] அவர்களுக்குப் பொதுவாயிருந்த நகைகள் 9 பாயிசாப்கள் ஏகதேசத்தில்[539] எடுத்துக் கொண்ட தினால் - பாக்கி 6 பாயிசாப்களுக்குச் சேரவேண்டிய ஷெ நகைகளின் பங்கு வீதத்திற்காக ஷெ 9 பாயிசாப் அவர்களுடைய ரொக்கம் சாமான் வகையறாவின் மொயின் 58வது வருஷம் ஏப்ரல் மீ முதற்கொண்டு 60ம் ஷெ ஜனவரி வரையில் தடுத்து வைத்திருக்கிற வகையில் ரூ.53906-3-8 ஷெ 15 பாயிசாப்களுக்கும் வீதப்படி கொடுப்பதற்கு.

*(2) 1852*

பாயிசாப்களின் பல்லக்குகளை ஒப்புக் கொண்டதற்கு விபரமான கணக்கு.

*3. 1837*

(1) ஞாபகக் குறிப்பு- ரா. மந்திரிவர்யர் பண்டிதர்[540] அவர்களுக்குக் கணந்தங்குடி கிராமத்தில் சிரோத்திரியம்[541] கொடுத்த விபரம்.

7 சக். பணம் 1 நஞ்சை, 11 மா சைகால்[542] 11 க்கு, 3 வே அநாதிதரசி[543] = 3-11 மா

இதற்கு வேலி ஒன்றுக்கு 2 சக். வீதம் சக்.6-3 1/8, 4 சைகால், 6 அனாதிதரசி
10 க்கு வேலி 1க்கு சக் 1-6 5/16 வீதம் ஆக நிலம் வேலி 13 - 11 13. 4 - 1/8.

*31 1857*

(1) மராமத்து இலாகா[544] - திவான் வாடா[545] மொயின் தவிர ஜாஸ்தி வேலை நடந்த வகையில் - ஸங்கீத மகாலின் மண்டபத்திற்கு மற்ற மராமத்திற்குத் தனி இராஜ்யாமாயினுடைய தோட்டத்திலிருந்து சுவர் வகையறா போட்டதற்கும் புல் பூண்டு வகையறாவைக்களைத்ததற்கும் ஷெ மண்டபத்தின் மேலண்டை சக்ரி மண்டபம் பழுதுபார்க்கச்சிலவு ரூ.39686.

*36 1837*

(1) கொண்டா பால ஜோஸியர் கொடுத்த மனு - ஸ்ரீராம் பிரதாப் முத்திரை போட்ட காகிதத்தின் மேல் - அண்டினவனுடைய[546] முன்னோர்களுக்கு ரா. பிரதாப சிம்ம

538. 15 பாயிசாயேப்களின் பெயர் (பக்கம் 34)

539. ஏகதேசம் - முழுவதும்

540. பண்டிதர் - சோமநாத சதாசிவகேசவ் தீக்ஷித் பண்டிதர் ஆகலாம் (பக்.83)

541. சிரோத்திரியம் - வேதம் வல்ல பிராமணர்க்கு விடப்பட்ட நிலம்

542. சைகால் - செய்கா-பயிரிடப்பெறும் நிலம்

543. அநாதிதரிசு - பல தலைமுறைகளாகப் பயிரிடப்பெறாதிருக்கும் நிலம்.

544. மராமத்து இலாகா - இமாரதி மகால் (பக்கம் 458)

545. திவான்வாடா - அரண்மனை

546. அண்டினவர் - ஆசிருதர் - சார்ந்திருப்பவர்

மகாராஜா[547] சாஹேப் காலத்தில் மகால் சக்வாராம்பாபுரம்[548] சத்திரமும் அக்கிராரமும் வட்டாரங்கள் வகையறா தருமங்களை ஆரம்பித்த பொழுது, ஸர்வமான்ய அக்ரஹாரம் 24 வீடுகளைக் கட்டி அதற்குச் சத்திர தர்மத்திற்கு விடப்பட்ட செரமா நல்லூர் கிராமத்தின் துகையில் கண்டுமுதல் மானியம் வீடொன்றுக்கு 200 கலம் வீதம் ஜீவனமும் செய்து கொடுத்து பிராமணர்கள் அனுபவித்துக் கொண்டிருந்தார்.

*8,1799*

*(1) ஜக்காத்தி (சுங்கம்) வளச்சேரி திட்டம்*

**கத்தா தார் சம்பளம் 30 சக், கார்பாரி[549] சம்பளம் 6 சக், காஸநீஸ் சம்பளம் 10 சக், சிட்னீஸ்[550] சம்பளம் 4 சக், தஸ்தாந்தரம் சம்பளம் 8 சக், ராயஸகார் சம்பளம் 3 சக், ஹேஜீப்[551] சம்பளம் 8 சக், நோட்கார் சம்பளம் 3 சக் ஞாபகக்குறிப்பு எழுதுகிறவன் ஆள் மாகாணம் 5க்கு சம்பளம் 7 வீதம் ஆக சம்பளம் கூடுதல் 81 1/2 சக். வீதம்.**

*(2) 1799*

**உப்பளம் அதிராம் பட்டணம் பேஸஜி காலத்தில் நடை 1க்கு தீர்வை 2 பணம் தற்பொழுது பாதிக்கு 1 பணம். பேஸஜி காலத்தில் மூட்டை 1க்கு தீர்வை 4 காசு தற்பொழுது தீர்வை 2 காசு.**

*35-1811*

*(1) சம்ஜாவிஸி - ஆதியப்ப மொதலி 1992 - 6 9/16 இதற்கு எதிர் வட்டி*[552]

## மூட்டை எண் - 194C

*7-1821*

*(1) பெரிய கோவிலிலுள்ள 108 லிங்கங்களுக்குப்*[553] பூஜை நிவேதனத்திற்கு மாதத்திற்கு சக்.50

*(2) 1821*

யமுனாம்பா பேட்டை - ஸ்ரீகோதண்ட ராமசாமிக்கு[554] தினப்படி மொயின் சக்.30

---

547. பிரதாபசிம்மர் (1739 முதல் 1763 வரை ஆட்சி புரிந்தவர்)

548. சக்வாரம்பாபுரம் அன்னசத்திரம் - திருபுவனம் அன்னசத்திரம். சக்வாரம்பா, பிரதாபசிம்மரது மனைவியருள் ஒருவர் (பக்.270)

549. கார்பாரி - அரசரது மெய்க்காப்பாளர்களின் தலைவன் (பக்.74)

550. சிட்நீஸ் - செயலர் (பக்.76)

551. ஹேஜிப் - கணக்குப்பிள்ளை (பக்.76)

552. எதிர்வட்டி - செலுத்தும் மூலத்தொகைக்கு ஏற்பக் கழிக்கும் வட்டி

553. 108 லிங்கங்கள் - கி.பி.1801இல் இரண்டாம் சரபோஜி பெரிய கோயிலில் 108 சிவலிங்கங்களை அமைத்துக் கும்பாபிஷேகம் நடத்தினார்; அதன் பூசை நிவே தனத்துக்காக 5000 புலிவராகன் ஹாரிங்க்டன் என்பவரிடம் வட்டிக்குக் கொடுத்தார். அரையாண்டுக்குரிய வட்டி 250 புலிவராகன் அல்லது ரூ.875; அங்ஙனமையின் மாதம் ஒன்றுக்கு ரூ.146 ஆகும். ஹாரிங்க்டனிடமிருந்து ஒரிரு தடவைகளே வட்டி வந்ததாதல் வேண்டும். ஆகவே ஸர்க்காரிலேயே மாதம் சக்கரம் 50 கொடுக்கப்பெற்றதாகத் தெரிகிறது. (பக்கம் 196-197)

554. யமுனாம்பாபேட்டை - மாரியம்மன் கோயிலின் ஒருபகுதி; கோதண்ட ராமசாமி கோயில் இருக்கும் பகுதியாகலாம். யமுனாம்பா என்பவர் பிரதாபசிங்கரின் மனைவி (போ.வ.ச.பக்.130) (பக்கம் 230)

***(3) 1821***

***சரபோஜி மகாராஜாவின் உத்திரவு-சி.சிவாஜி ராஜே சாயேப்பிற்கு மந்திர ஸ்நானஞ்[555] செய்விக்க பிராமண அஸாமி 2க்கு சக் -10.***

***2.3.1779***

***(1) மாரிமுத்து என்னும் சூத்திரனுக்கு அகழியில் முதலையைப் பிடித்து காலுக்குக் காயமேற்பட்டதற்குப் பட்டிக்கட்ட இனாம் ரூ.- 1.***

***4(1)1779***

***பிருஹன்னாயகி[556] அம்மனுக்கு வெள்ளிக்கவசம் செய்ய ஜாஸ்தி வெள்ளியைப் போட்டு செய்து கொடுத்ததற்கு வஸ்துக்கட்டி வெள்ளி 15 சேர் வாங்கினதற்கு சேர் 16-4.0 வீதம் சக்.246.***

***1828***

***(1) கோட்டைக்கு வெளியுள்ள கொத்தவால் மனு. தஞ்சாவூர் கோட்டை. கோட்டைக்கு வெளியே குடியிருக்கும் வெள்ளாள ஜாதி நல்லத்தாயின் 9 மாதத்திய பெண் குழந்தையை (கருப்பு நிறமான) ஜயவாசல் (கீழவாசல்) கடையில் பலசரக்கு கடைகாரன் ஜாதி வெள்ளாள வேலாயுதமென்பவன் ரொக்கம் சக்.2-7 க்கு 27 பணத்திற்கு வாங்கினதற்குக் கொத்தவாலுடைய ஸாக்ஷியைப் போட்டுக் கொடுக்க ஸர்காரின் ஹாஸில்? வாங்கினது சக். 1/2***

***1.3.1819***

***(1) 16 தானங்களில்[557]***

***கோஸஹஸ்ர[558] 4 தானங்கள் வகையறாவுக்கு 51139 - 8 5/8 ஸர்காரில் யாகஞ் செய்வித்ததற்கு பரலூரில் யாகஞ் செய்வதற்கு இனாம் வகையறா 4925.***

## மூட்டை எண் - 195C

***4.2.1802***

***(1) குத்தகைத் தொரை வகையறா ஜகாயதீ (சுங்கம்) தஞ்சை கோட்டை உத்தரவு - மகாராஜா ஸோன்ஜீ போஸலே ரமானகி ஜபானீ - அஸானி தளவே***

***வளார் தோட்டத்தில் பகீர்[559] அலிமுக்கு வருஷமொன்றுக்கு 6 சக்ரம் பத்துக்கட்டுக்கு[560] வருஷம் பாக்கி பத்துக்கட்டை தள்ளுபடி செய்கிறது. இவ்வருஷ முதற்கொண்டு வருஷத்திற்கு 6 சக். வசூலிக்கிறது.***

---

555. மந்திரஸ்நானம் - ஸ்நானம் எழுவகையுள் ஒன்றாகிய மந்திர நீர் தெளித்துக் கொள்ளுதல்

556. பிரஹன்னாயகி - பெரிய நாயகி தஞ்சைப் பெரிய கோயில் அம்மனின் பெயர்.

557. பதினாறுதானங்கள் - நிலம், இருக்கை, தண்ணீர், ஆடை, விளக்கு, உணவு, தாம்பூலம், குடை, சந்தனம், ஜபமாலை, பழம், படுக்கை, செருப்பு, பசு, தங்கம், வெள்ளி என்பன (பக்கம் 195)

558. கோஸஹஸ்ரம் - ஆயிரம்பசுக்களைத் தானம் செய்தல் (பக்.281; அடிக்குறிப்பு 157)

559. பகீர் - பக்கீர்

560. பத்துக்கட்டு - குடியானவன் பயிரிடும் நிலம்

*47.1726*
*(1) ரோகா (குறிப்பு) கணக்குப்பிள்ளை பந்த நல்லூர் - திளப்படிக்காக பாதி மானியம் பட்டு விருத்தி*[561] *இடத்திலிருக்கும் பிராமணக்குடும்பங்கள் 12க்கு பேர்வழி வாரி . விபரம்.*

*(2) 1822*
*யாதி மனு - விடோஜி பிகாஜீ ஸோனவனே பார்கீர் வஜாரத்மாப்*[562] *இராமசந்திரராவ் சிவாஜி ஸர்ஜேராவ் காட்கே -*

*ஸேவகனுடைய பாட்டனாருக்குப் பிரதாப சிங்க ராஜா*[563] *காலத்தில் ச்ரோத்திரியம்*[564] *செய்து கொடுத்த சிகா ஸன்னதுகள்*[565] *காணாமல் போனதால் இடத்திலிருக்கும் அந்த நிலத்தை ஆக்ரமிப்பதால் (தன்னுடையதென்று சொல்லுவதால்) துர் வியாஜ்யஞ்*[566] *செய்வதால் ரிகார்படலிருந்து என்னுடைய சிகாதஸ்தாவேஜுகளுக்கு*[567] *நகல் கொடுக்க உத்திரவாக வேணும் (அறந்தாங்கி - ஸமீபம்*[568] *ராஜேந்திரபுரம்)*

*(3) 1801*
*வெடிமருந்து சோர் உப்புமுகாஸா*[569] *ஊர்களில் குத்தகை விஷயம்.*

*(14) 1751*
*உத்திரவு - ம.ரா.ரா.பிரதாபசிங்கஜீ ராஜா - முகாம் தஞ்சை கோட்டை மொயிதீன் கான் தாமணி தோட்டம் ரகோஜீ போசலே இடம் செய்யப்பட்டிருக்கிறது. அதனுடைய ஆள் மாகாணம் மொயின் வகையறாவின் விபரம்.*

*3-1763*
*மகால் - மராமத்து - மகாராஜா*[570] *திருவையாற்றில் அக்ரஹாரம்*[571] *கட்டுவதற்கு கணக்கு.*

---

561. பட்டுவிருத்தி - பட்டவிருத்தி - கல்வி வல்ல பிராமணர்க்கு விடப்பட்ட இறையிலி நிலம்

562. வஜாரத்மாப் - பெருமகன்; அரச குடும்பத்தைச் சேர்ந்தவன்

563. பிரதாபசிங்கர் - 1739 முதல் 63 வரை ஆட்சி செய்தவர்

564. சுரோத்திரியம் - வேதம் வல்ல பிராமணர்க்கு விடப்பட்ட நிலம்

565. சிகாசன்னது - முத்திரையிடப்பட்ட அரசாணை

566. துர்வியாஜ்யம் - அநியாயமான வழக்கு

567. தஸ்தாவேஜு - மூலவோலை

568. ஸமீபம் - அருகில்

569. முகாஸா - சரபோஜியும் அவருடைய மகனும் வரி செலுத்தாமல் அனுபவித்திருந்த நிலங்கள்

570. மகாராஜா என்றது பிரதாபசிங்கரை

571. அக்ரஹாரம் - அந்தணர் குடியிருப்பு

*49.1860 மார்ச்சு 31 உ*
ஆவுசாப்[572] அவர்களிடம் பிராமணாள் சூத்திராளுடைய சமையலுக்குப் பித்தளைப்பாத்திரம் கொடுக்கிறது.

*(1) 1860 மார்ச்சு 31 உ*
லாயம் - குறிப்பு - வேட்டை மகாலின் பிராணிகள் 493ல் நிற்கவைப்பதின் விபரம்.

9 புலிகள், 2 பட்டாபட்டி, 5 புள்ளி உள்ளவை, 2 தடக?, = 9

*(2) 1860 பிப்ரவரி 9 உ*
சி. விஜய மோஹன முக்தம்பாபாயி[573] அமணிராஜே அவர்களுடைய கலியாணத்திற்காக

ஸங்கீத மகாலின் மண்டபத்திலிருந்து வாங்கின சாமான்கள் - வெள்ளி, ஜரிகை கிலிட்டு வகையறா.

(3) குறிப்பு - ஹஜாரி[574]யிலுள்ள 14 மிருகங்களின் விபரம்.

*(14) 1860 பிப். 12 உ*
கலியாணச்செலவு கொட்டியம்[575] சௌ. விஜய மோஹன முக்தாபாய் அமணி ராஜே சாயேப் அவர்களின் கலியாணத்தில் பூரி - ஹாஜாரியில் ரூ.1758 3/8 வடக்கு வாசல் ஜிவாஜீ விஷ்வநாத் வசம் ரூ.2000 த்தில் பாக்கியிருப்பு ரூ.241-4-0 போக 1461 1/4 கீழவாசல் - சூர்தப்தர் படனீஸ் கிருஷ்ணாஜீ சகாராம் வசம் ரூ.1500ல் பாக்கி - 48-12-0 போக
3210 + 12-8-0 = 3222-8-0
*22-1812*
(1) சி.ராஜம்மா பாயி[576] அமணி ராஜே சாயேப்புக்கு "சிருங்காரத் தோட்டம்" தயார் செய்ய வளார் வட்டத்தில் நஞ்சை புஞ்சை மரஞ்செடி கொடி புரம் போக்கு[577] கூட வேலி 6-12 மாக்குசிகா சனது தஸ்தாவேஜீ செய்து கொடுக்கிறது.

22. மனு - ஸேது மார்க்கத்தில்[578]
ரா. ராஜகுமராபாயி[579] சாப் அவர்களிடம் தருமஞ் செய்ய இடத்தைக் கோபால பட்டணத்தில் தருமத்திற்கும் அன்ன தானத்திற்கும் கொடுத்த கிராமங்களின் விபரம்.

---

572. ஆவுசாப் என்றது இரண்டாம் சிவாஜியின் தாய் அஹல்யாபாயியை

573. இவர் இரண்டாம் சிவாஜியின் இரண்டாவது மகள்

574. ஹஜாரி - கிழக்குவாயில்

575. கொட்டியம் - சரக்கறை

576. ராஜம்மாபாயி - இரண்டாம் சரபோஜியின் முதல் மனைவி யமுனாம்பா பாயியின் மகள்

577. புறம்போக்கு - சமுதாய நன்மைக்காக விடப்பட்டது அல்லது சாகுபடிக்குத் தகுதியில்லாதது, குடிமக்கள் வசம் விடப்படாதது, தீர்வை விதிக்கப்படாதது ஆகிய இத்தகைய நிலங்கள்

578. ஸேதுமார்க்கம் - இராமேசுவரத்துக்குச் செல்லும் பெருவழி

579. ராஜகுமாராபாயி - இவர் இரண்டாம் துளஜாவின் மனைவியாவர் (போ.வ.ச.பக்.109)

*4 வேளாம்பத்தைச் சேர்ந்த 1 அலத்தூர், 1 வலி வயல், 1 தாளனூர், 1 மீனமேஸல், = 4*

*1. ஆவடையார் குடிச்சோத்திரியத்தையும் கூட சத்திரத்தில் சேர்க்கிறது.*

*2. 1834*
*(1) தத்தாஜீ அப்பாவின்[580] குமாரத்தி குமாரன் இவர்களுடைய கலியாணத்தின் சிலவு விபரம்.*

*(2) விண்ணாற்றங்கரையில் ஆற்றில் பாலத்திற்காக மரங்கள் வகையறா கொடுத்ததின் சிலவு 18-4-3/32.*

*35.1770 சந்த் 13 உ சபர்[581]*

*(1) ம.ரா.துளஜா ராஜாவின் உத்திரவு - தஞ்சை கோட்டை - மகம்மது ஸேக்குக்கு - மன்னார்குடியின் மார்க்கத்தில் காகித மூட்டைகளின் குப்பைக்குச் சமீபத்திலுள்ள நிலத்திலிருந்து 12 அடி கோலினால் 2 வேலி நிலத்தை இனாம் கொடுக்கிறது.*

## மூட்டை எண் - 196C

*2.1217*
*(1) 1217[582] (1816)*
*பணமொன்றுக்கு 19 காசு வீதம் 950 காசுக்கு சக்.19-9 1/2 பணம்.[583].*

*(2) 1217 (1816)*
*மதுரையின் ஸ்ரீசுந்தரேஸ்வர ஸ்வாமிக்கு நாகாபரணஞ்[584] செய்ய வெள்ளியும் தங்க முலாமின் வர்க்கமும் வாங்குவதற்கும் கூலிக்கும் கூட சக்.1352.*

*13.1215 (1814)*
*(1) லாயத்தில் குதிரை இரத்தமாக மூத்திரம் விடுவதால் உள்ளுக்குக் கொடுக்க நாள் 14க்கு கொடுக்கிறது.*

*சுக்கு சேர் - 1, டாங்கணகார் சேர் - 1, குக்கில சேர் - 1, குளாசா? சேர்-2, அபின் சேர் - 3*

*(2) 1215 (1814)*
*வேட்டை மகால்[585] ஜவ்வாது, புனுகு எடுத்து முத்திரை போடுவதற்குக் கொட்டியத்திலிருந்து அரக்குசேர் 1/2 கொடுக்கிறது.*

---

580. தத்தாஜி அப்பா (பக்கம் 79-80)

581. *1770* சந்த் 13உ சபர் என்பது 29-6-1770 ஆகும். சந்த்-மாதம்; சபர் முஹரத்துக்கு அடுத்த மாதம்

582. ஸுஹூர்ஸன் 1217 + 599 = கி.பி.1816.

583. பணம் - 19 காசு எனில் 950 காசு 50 பணம் ஆகும். அதாவது 5 சக்கரமாகும்; இக்கணக்குத் தவறு. (மேலும் 32 காசு 1 பணம் என்பது வழக்கு) (பக்கம் 150)

584. நாகாபரணம் - (பக்கம் 201; அடிக்குறிப்பு 118)

585. வேட்டைமகால் - வேட்டையாடிக் கொணர்ந்த விலங்குகள் பறவைகள் இருக்கும் இடம். (இது சிகார்கானா என்று கூறப்படும் எனத்தெரிகிறது) (53சி-1) (பக்கம் 457)

*(3) 1215 (1814)*

ஆயுதமாவில்[586] கத்திகளையும் கடையங்களையும் தயார் செய்யக் கொடுக்கும் சாமான் ஜாபிதா.

*(4) 1215 (1814)*

திவான் சாஹேப்பின்[587] 1 ஜோடி சாமரத்தைக் கழுவிச் சுத்தம் செய்து கொடுப்பதற்குச்சாமான் இடை.

பால்சேர்-6,சோப்(சவுக்காரம்), சேர்-1 வெள்ளைநூல் சேர் - 1/2, சீயக்காய் சேர் - 2, இராய்பூர்ச்சர்க்கரை சேர் - 2, சுமாரான எலும்பிச்சம் பழம் - 30, பழய வெள்ளை 3 முழம் துணியைக் கொடுத்து வாங்குகிறது.

*(5) 1215 (1814)*

திவான் சாயேப்பின் துகி பஸ்தூர்பாக் தயார் செய்யக் கொட்டியத்திலிருந்து

புளி சேர் - 2, சவுக்காரம் சேர் - 1/2. நெய் சேர் - 1/4, ந.எ. சேர் - 1/4, இப்பொழுதுள்ள அளவு படியினால் அரிசி மாவு படி 2ம் கொடுக்கிறது.

*13(6) 1215 (1814)*

மாயா மோர்த்தப்? கழிக்கு ஜீவரஸாக்காக கொட்டியத்திலிருந்து

காவி (கடை) 1/4 மனு, ந. எ. 1 1/2 சேர், காசிக்கட்டி 1/2 சேர், சணல்நார் 1/2 சேர், வெள்ளை நூல் 1/4 சேர் 9 டாங்க்

(8) மாயா? வின் சாந்தும் வாட்யாகனஸர்யா? அலம்புவதற்குக் கொட்டியத்திலிருந்து

நெய் சேர் 1/2 , இராயபுரீ சர்க்கரை சேர் 1, எ. பழம் 20 கொடுக்கிறது.

(9) சைதம்பாபுரம் அன்னசத்திரத்திலுள்ள[588] வித்யார்த்திகளுக்கு (மாணவர்களுக்கு) சாஸ்திர பாடம் படிக்க வேண்டிய புத்தகங்களின் விபரம் மாக[589] 2வது ஸர்கம்[590] வியாக்யானத்துடன் [591] - 1

மாக 8 வது ஸர்கம் வியாக்யானத்துடன் -1

நைஷத[592] 3வது ஸர்கம் வியாக்யானத்துடன் - 1

---

586. ஆயுதமகால் - ஆயுதசாலை - ஜிராத்கானா (பக்.455)

587. திவான்சாகேப் என்றது இரண்டாம் சரபோஜியை

588. சைதாம்பாபுரம் அன்னசத்திரம்-சூரக்கோட்டை அனன சத்திரத்துக்கு அருகில் இருந்தது

589. மாக - மாகபுராணம்; வடமொழிநூல்

590. சர்க்கம் - நூற்பிரிவு

591. வியாக்கியானம் - விரிவான உரை

592. நைஷதம் - வடமொழி நூல்; ஹர்ஷர் இயற்றியது

நைஷத 4வது ஸர்கம் வியாக்யானத்துடன் - 1
அமரத்தின்[593] புத்தகம் ஸர்கம் வியாக்யானத்துடன் - 1
கொடுத்துவாங்குகிறது.

(10) தபால் - மகால் 10 ஆஸாமிகளுக்கு சாலுவ நாய்க்கன் பட்டணத்திற்குத் தபால் நியமனம் செய்தால் எட்டு நாட்களுக்கு சக்.5-6 5/8 பணம் கஜானாவிலிருந்து கொடுக்கிறது.

14-1177[594] (1776)
(1) ரா. மகாராஜா[595] சாஹேப் அவர்களுக்கு - ஸ்ரீனிவாச நரஹரி என்பவர் எழுதின கடிதம் இவ்வாறு. ஸேவகன் நடந்து கொள்ளும் மாதிரியின் விபரம்.

15-1215[596] (1814) (1) பெரிய பணம்[597] 17 1க்கு ஒன்று 2 1/2 ப.வீதம் சக்.42-7 1/2ப
சின்ன பணம்[598] 183க்கு ஒன்று 2 1/2 ப.வீதம் சக்.18-3 பணம்
அரைப்பணம்[599] 63க்கு ஒன்று 2 1/2 ப.வீதம் சக்.3-1 1/2"
புலிவராகன்[600] 1/4" ஒன்று 2 1/2ப.வீதம் சக்.0-5 9/16"
காசு[601] 50க்கு ஒன்று 2 1/2 ப.வீதம் சக்.0-2 7/16" = 65

(2) லாயத்தில் "நீளா[602] சிவ பிரஸாத்" குதிரைக்கு அக்னியினால் அடிமயிர் உதிருவதால் மருந்து செய்து தடவ விளக்கெண்ணெய் சேர் 2, குதிரைக்கு பின்னொரு காலுக்குச்சக்ராவளம் என்னும் வியாதி வந்ததற்கு தடவ பியீ? சேர் - 1, சவுக்காரம் 1/4 சேர்.

(3) ஸர்காரின் "விட்டலப்பிரஸாத்" என்னும் யானைக்கு மதம் பிடித்திருப்பதால் அதை நீக்குவதற்குத் தலையில் நெய் சேர் 1/2. சிந்தூரம் "1/4 = 3 1/4
(4) வேட்டை மகால் - ஜவ்வாது, புனுகு எடுத்துப்பார்த்து ஹுஜூர் பங்கில் நிறுத்துக் கொடுத்ததின் விபரம்-ஜவ்வாது[603] 9 1/2 டாங்க்

---

593. அமரம் - வடமொழி நிகண்டு; அமரசிம்ஹர் இயற்றியது

594. ஸுஹூர்ஸன் 1177 + 599 = கி.பி.1776

595. மகாராஜா என்றது இரண்டாம் துளஜாவை

596. ஸுஹூர்ஸன் 1215 + 599 = கி.பி.1814

597. பெரிய பணம்: 2 1/2 பணம் கொண்டது சென்னப்பட்டணம் வெள்ளிப்பணம்; இதுவே பெரிய பணம் எனப்படும் (பக்.150)

598. 32 காசு கொண்ட பணம் என்பது சின்னப்பணம்

599. சின்னப்பணத்தின் சரிபாதி அரைப்பணம்.

600. புலிவராகன் - 4 1/2 சக்கரம் அல்லது 45 பணம், ஒரு புலிவராகன் .... புலி என்பது "அழகுபடுத்தப்பெற்ற" என்று பொருள்படும் (பக்.150)

601. காசு 50 என்பது 0-2 7/16 பணம் என்றது தவறு.
32 காசு 1 பணம் எனின், 50 காசு என்பது 1 9/16 பணம் ஆகும்.

602. நீளா - திருமால் தேவியருள் ஒருவர்

603. ஜவ்வாது - ஒருவகைப் பூனையினின்று கொள்ளப்படும் நறுமணப்பொருள்

தாஜீ[604] (புதிது) 4 3/4 டாங்க் சொரண்டினது[605] 4 3/4 டாங்க் = 9 1/2

புனுகு (தாஜீ) புதிது 2 1/2 டாங்க்[606]
ஹுஜூர்பூனையில் ஜவ்வாது 1 1/4 டாங்க், = 13 1/2 டாங்க்
(5) இராஜமகால் - ஜரகரகானா[607] (நகை தயார் செய்யுமிடம்) நகை கொடுக்கப்பட்டது.
ஹுஜூர்தங்க மீன் சாவியைமாட்டுவதற்கு, 2. மா. ஆவுசாப்புக்கு[608] வெற்றிலைபாக்கு, வெள்ளி நகை, 1. உரல், 1. உலக்கை = 3 + 2

15.1215[609] (1814)
(6) சி. பாயம்மா[610] அமணி ராஜே சாஹேப் அவர்களுடைய திரஷ்டிக்கல்யாணத்திற்கு[611] 2 நாளைக்குத் தட்டு நிரப்பிபணிகாரம் 15 மாதிரி வைக்க விபரமான ஜாபிதா.

17.1235 (1834)
(1) ஜாபிதா - கல்யாண மகால் -[612] மகாலின் மாடியில் ஆஸ்பத்திரி மகாலிலுள்ள வாசப்படியின் சுண்ணாம்பு வகை போயிருப்பதைப் பழுது பார்க்க வேணும்.

(2) 1235
யுத்தசாலை - செக்கிலி[613]யனிடம் பட்டாபட்டி புலியின் தோலை வர்ணங் கொடுக்க கொடுத்திருப்பதை வெளியே கொண்டுபோக உத்திரவாக வேணும்.

18.1217 (1816)
(1) லாயத்தில் - ஒட்டகத்திற்கு உஷ்ணத்தினால் சீ. ரத்தமாகப் போவதால் 14 நாட்களுக்குக் கொடுக்கும் சாமான்கள்

கைவி அரிசி படி - 2, நெய் சேர் - 1, மல்வி சேர் - 1/4, சீரகம் சேர் - 1/4, மிளகு சேர் - 1/4, சோம்பு சேர் - 1/4, சுக்கு சேர் - 1/4, வெங்காயம் சேர் - 1 கஞ்சா சேர் - 1/4
(2) 1217 (1816)

வேட்டை மகால் - புல்புல் பிடிப்பதற்குப் போகிறவனிடம் வெள்ளை நூல் - 1/4 சேர். மெழுகு 9 டாங்க்.

604. தாஜு - தாஜா - புதியது.

605. சுரண்டினது - புனுகுபூனையுள்ள கூண்டுக் கம்பியிடத்து உறைந்து கிடக்கும் புனுகு

606. டாங்க் - ஒரு தோலாவின் மூன்றில் ஒன்று

607. ஜர்கர்கானா - காசுக்கடை (பக்கம் 456)

608. ஆவுசாப் என்றது அஹல்யாபாயி ஆகலாம்

609. ஸுஹூர்ஸன் 1215 + 599 = கி.பி.1814

610. பாயம்மா - இரண்டாம் சரபோஜிக்கு அஹல்யாபாயி இடத்தில் பிறந்த மூன்றாவது மகள் (போ.வ.ச.பக்.138)

611. திரஷ்டிகல்யாணம் - இருதுசாந்தி; மனையறம்படுத்தல்

612. கல்யாணமகால் - இரண்டாம் சரபோஜியின் காமக்கிழத்தியர் தங்கியிருந்த இடம் (பக்.329)

613. செக்கிலி - சக்கிலி - செருப்புத் தைப்பவர்

*(3) 1217 (1816)*

நவவித்யா கலாநிதி பள்ளிக்கூடத்தில்[614] கொடுத்த "நைஷத."[615] புத்தகங்களின் விபரம்.
22. நைஷத மூலம் முதல்ஸர்க முதல் 22 வரையில்
20 நைஷத வியாக்யானம் முதல் 20 வரையில்
மேற்கண்ட புத்தங்களை வரவழைத்துக் கொடுக்க உத்திரவாக வேணும்.

*18•1217*
(4) சித்திரக்காரனிடம் மகாராஜா -[616] சாஹேப் அவர்களின் குதிரை சவாரி செய்கிற மாதிரி 4 படங்களை எழுதுவதற்குச் சாமான்களைக் கொடுக்கிறது.

பாளே கோட்டை கடுதாசி தஸ்தா[617] 3, சீனா கடுதாசிதஸ்தா 2, தங்கரேக் பர்மாவிசி?கட்டு 1 3/4, அளிதா? கட்டு 2, மக்கு[618] சேர் 1/2, இங்களீக? சேர் 3/4, வெள்ளை சேர் 2, வஜ்ஜிரம்[619] சேர் 1, சிந்தூரம்[620] சேர் 1, பந்தரி நீலம் சேர் 1/2, பஸ்காளா சௌக்கம் அதிக அகலமானது 2, காமாடி[621] வேலை முடிகிறவரையில் 1, கோதும்பை[622] ரவா படி 1 இந்தப்படிக்குக் கொடுக்க உத்திரவாக வேணும்.

(5) லயனில் குரன்?[623] வளர்ப்பதற்கு இமாரதியைச்[624] சேர்ந்த பழைய சிவகங்கைக்குச் சமீபமுள்ள 7 கிணறுகளில் ஒரு கிணற்றின் தண்ணீர் இறைப்பதற்குத் தோல்வாய் கட்டிக் கொடுக்கிறது.

கோட்டை மராமத்து இலாகா[625] விடம் சொல்வி அந்த நிலத்திற்குச்சுற்றிலும் சதுரமாய் நீளம் அகலம் 150 குழி நிலம் வேலியைக் கட்டிக் கொடுக்கிறது.

---

614. நவவித்யாகலாநிதி பள்ளிக்கூடம் (பக்.240)

615. நைஷதம் - ஹர்ஷர் வடமொழியில் இயற்றியகாவியம்

616. மகாராஜா என்றது இரண்டாம் சரபோஜியை

617. தஸ்தா - 24 காகிதங்கள் கொண்ட தொகுதி

618. மக்கு - மரவேலையில் துளைதெரியாமல் அடைக்கும் பொடி

619. வஜ்ஜிரம் - ஒருவகைப்பசை

620. சிந்தூரம் - செங்காவி

621. காமாட்டி - வேலையாள்

622. கோதும்பை - கோதுமை

623. குரன் - குராமரம் (?)

624. இமாரதி - பழுதுபார்த்தல் முதலிய செயல்களைக் கவனிக்கும் அலுவலர் (பக்.76)

625. மராமத்து இலாகா - இமாரதி மகால் (பக்கம் 458)

(6) மா. அகில்யாபாயி[626] சாயேப் அவர்களிடம் வடாம் போடுவதற்காக நெல்பொரி கலம் - அவல் கலம் - 1, எள்ளுபடி - 2 கொத்தமல்லி மனு - 3, வெந்தயக்கீரை மனு - 1, பூசணிக்காய் ஆவுசாப் தோட்டத்திலிருந்து - 5.

(7) 1217 (1816)
கோட்டையின் கொத்தவால்[627] எழுதிய ஜாபிதா.
காமம் பண்டிகைக்காக[628] பட்டணத்தில் (ஊரில்) [illegible] பழ வகையறா விறகு, தயிர், மோர், வகையறா விற்கிறவர்களுக்குப் பலாத்காரம்[629] ஒருவரும் செய்யக் கூடாதென்று தண்டோரா போட வேண்டும்.

18(8) 1217
திவான் வாடா[630] - மராமத்து.

ஹாஜாரி[631] யில் பேஷ்வேயின் மாடியில் களஞ்சியத்தின் மண்டபத்தைப் பழுது பார்க்க சக்.0 - பணம் 9 3/8.

(9) கர்னாடகம் துப்பாக்கியின் வேலைக்காக யுத்தசாலையின் கொல்லன் குருநாதனிடம் பணம் 1 3/16.

20-1176[632] (1775)
(1) பத்திரங்கள்

ரா.மகாராஜா[633] சாஹேப் அவர்களுக்கு ஆஜீர்ஜாமீன்[634] பத்திரம். நவாப்பினுடைய காலத்தில்[635] மாயவரம் சுபாவின் அமீனா மகம்மது அபராகான் இவருடைய பேஷ்கார்[636]

626. அஹில்யாபாயி - இரண்டாம் சரபோஜியின் மனைவி

627. கொத்தவால் - காவல் தலைவன்

628. காமன் பண்டிகை - ஹோலிப்பண்டிகை; பங்குனி மாசத்தில் வருவது (பக்.316)

629. பலாத்காரம் - கட்டாயப்படுத்துதல்

630. திவான்வாடா - அரண்மனை

631. ஹாஜாரி - கிழக்குவாயில்

632. ஸூஹூர்ஸன் 1176 + 599 = கி.பி.1775

633. மகாராஜா என்றது இரண்டாம் துளஜாவை

634. ஆஜர்ஜாமீன் - சிறு குற்றம் செய்பவர் காவலில் வைக்கப்படும்பொழுது, அவர்க்கு வேறொருவர் புனைபட்டு, அரண்மனை எப்பொழுது அழைத்து வருமாறு கூறுகிறதோ அப்பொழுது அழைத்து வருவதாக உறுதிகூறிப் புனைபடுவது "ஆசர் சாமீன்" எனப்பெறும் (பக். 343)

635. நவாப்பினுடைய காலம் 17-9-1773 முதல் மூன்றாண்டுக்காலம், போ.வ.ச.பக்.121இல் "தஞ்சாவூர் ராஜ்யம் இரண்டு வருஷகாலம் நவாப்பின் ஆட்சியில் இருந்தது" என்று கூறும்.

636. பேஷ்கார் - நாட்டின் ஒரு பகுதியின் அரசிறை அதிகாரி

*நாராயணராவ் அவர்களுக்கு ஸர்காரின் வேலைக்காகக் கொண்டு வந்து நியமித்ததால் நாம் ஆஜீர் ஜாமீன் கொடுத்திருக்கிறோம்.*

*21 1180 (1779)*
*(1) பத்திரங்கள்*

*மகாராஜா அவர்களுக்கு - திருச்சினாப்பள்ளி (விலாயதி) உத்தமசேரி கிராமத்தின் குடியானவன் (ரயத்து) நமஸ்கரித்து எழுதின சீட்டு.*

*தங்களுடைய காவேரியின் வடகரையில் கல்லணைக்கு மேற்கே, ராவுதராஜ நெல்லூருக்கு மேற்கு, உத்தம சேரியின் நிலம் இங்கே ஹஜரத்*[637] *நவாப்*[638] *சாஹேப்பு தஞ்சாவூரின் இராஜ்யபாரஞ் செய்ய வராததற்கு முன்னே ரா.ஸ்ரீ.மகாராஜா*[639] *சாஹேப் அவர்களின் காலத்தில் ஒவ்வொரு வருஷமும் வழக்கப்படி கரையைப் போடுவதற்கு தூரத்திலிருந்து மண்ணை வெட்டிக்கொண்டு வந்தால் குழி 1க்கு 9 பணமும், அதற்குச் சற்றுச் சமீபம் வெட்டினால் 5 பணமும் அதற்கும் சமீபமாக வெட்டினால் 4 பணம், 3 பணம் 2 1/2 பணம் வீதம் கூலியைப் பெற்றோம்........இந்தப்படிக்கி தஞ்சாவூரின் கொத்தன்களும் குழியை வெட்டி துகையை வாங்கி யிருக்கிறார்கள்.*

*(2) காவேரியின் தென்கரையில் நாணலை நடுகிற வழக்கமில்லை. இனிமேல் தென்கரையிலுள்ள நாணலைப் பிடுங்காமலிருந்தால் கொஞ்ச காலத்தில் காவேரியும் கொள்ளிடமும் ஒன்றுசேர்ந்து விடும். தென்கரையில் நாணலைப்பிடுங்கினால் நம்முடைய கிராமத்திற்கு அனுகூலமாகும்.*

*(3) 1177*[640] *(1776)*
*ரா.மகாராஜாவிற்கு - ஸேவகன் வெங்காஜி இராமச்சந்திரன் எழுதினது. தன்க்குப் பாபனாசம் சுபையில் வேலை செய்து கொடுத்தால்தான் நடக்கும் முறையின் விபரத்தை விஸ்தாரமாக எழுதிக் கொடுத்தது.*

*3.1180*
*(1) கொத்தவால் புழங்க வேண்டிய விபரம் (கடமை)*[641]

*24.1217*
*(1) கீழவாசலிலுள்ள ஸ்ரீ நரஸிம்ஹ ஸ்வாமி*[642] *கோவிலில் தண்ணீர் வந்ததினால் (மழைஜலம்) ஜல ஸம்ப்ரோக்ஷணம்*[643] *செய்வதற்கு 1 1/2 சக். கொடுக்கிறது.*

---

637. ஹஜரத் - சிறந்தவர்

638. நவாப் - ஆர்க்காடு நவாப் முகம்மதலிகான்

639. மகாராஜா என்றது இரண்டாம் துளஜாவை

640. ஸுஹூர்ஸன் 1177 + 599- கி.பி.1776.

641. (125சி - 34-1)(பக்கம் 75)

642. இவர் கீழசிங்கப்பெருமாள் எனப்படுவர் (பக்கம் 188இல் 20), (பக். 213இல் 24)

643. சம்புரோட்சணம் - தூய்மை செய்தற்பொருட்டுக் கோயில்களில் செய்யுஞ் சடங்கு

(2) சக்.36 பணம் 3 3/4 தாஸ்தான் மகால்[644] தோட்டத்தில் மா.திவான்சாஹேப் வகையறா இராமேஸ்வர யாத்திரையைச் செய்து வந்ததற்குப் பல்லக்குத் தூக்குகிறவர்களுக்கு கூலி சக்.36 பணம் 3 3/4.

25-1212[645]

(1) மா.அஹில்யா பாயிசாப்[646] அவர்களிடம் முறம் தானஞ் செய்வதற்குக் குர்தா? ருக்கே 200க்கு டக்கே 4-8 நாலு டக்கே 8 ருக்கே[647] இதை வரவு வைக்கிறது.

27-1177[648]

(1) இஜாபதி ? வரவு மொகலாயீ கமாவிஸிதார்[649] ஹுஸைன்கான் சூர் பாக்கிக்கு தாலவங்காடு மாகாணம் சக். 0-6 1/2 பணம்.

38-1177 (1776)

(1) சி.சிவாஜி ராஜா[650] சாஹேப் அவர்களுக்குச் சின்ன அம்மை (வசூரி) போட்டதற்காகச் சிலவு சக்.71.

(2) 1177

அரண்மனையின் பூஜை செய்யுமிடத்தில் (ஸ்வாமி உள்) பாட்டிமை [651]யிலிருந்து 7 பிரதிமைகளுக்குத் தினமொன்றுக்கு பிரதிமை[652] ஒன்று 4 1/2 பணம் வீதம் கொடுக்கிறது.

## மூட்டை எண் - 197C

1-1785 ஜூன் 12உ

(1) ரா. துளஜா மகாராஜா சலாம்.

ஜனரல் ஸர் ஜான் துவிங்க்

பாஹத்தர் சலாம் ஹீலாஹீதாலா.

.........இன்று இவ்விடத்தில் க்ஷேமமறிந்து...........அடிக்கடி சாந்தியைக் கொடுக்க வேணும். தங்களுக்கு இத்தேசத்திய ஸைன்யங்களுக்கு ஜனரல் என்னும் அதிகாரம் இங்கிலாந்திலிருந்து

644. தாஸ்தான் மகால் - நெற்களஞ்சியம்

645. ஸுஹூர்ஸன் 1212 + 599 = கி.பி.1811

646. அஹில்யா பாயி என்றது இரண்டாம் சரபோஜியின் மனைவி

647. (190 சி-10-1) இதனால் 48ருக்கே ஒரு டக்கா ஆகும் எனத் தெரிகிறது (பக்.157)

648. ஸுஹூர்ஸன் 1177 + 599 = கி.பி.1776

649. கமாவிஸிதார் - பலவூர்களை மேற்பார்வை செய்யும் அதிகாரி (பக்.77)

650. ஸுஹூர்ஸன் 1177 (கி.பி.1776) என்றிருப்பதால் சிவாஜி ராஜா என்றது தவறு. சிவாஜி ராஜா என்பது சரியெனின் ஆண்டு தவறு என்பது சொல்லாமே அமையும்.

651. பாட்டிமை - பாட்டியமி - மறைமதி முழுமதிக்கு அடுத்த நாள்.

652. பிரதிமை - உருவம்

சென்னைக்கு வந்து சேர்ந்த சங்கதியைக் கேட்டு மிக்க சந்தோஷமடைந்தேன். தாங்கள் கனம் பொருந்திய துரையும் மிகவும் நல்லவராகவுமானதால் நம்முடைய இராஜ்யத்தின் பேரில் அபிமானம் வைத்து, ஒவ்வொரு விஷயத்திலும் சேருவீர்களென்று நாம் நிச்சயமாக நினைத்திருக்கிறோம். இத்தேசத்தில் நீங்கள் வெகுகாலம் வரையில் இவ்வதிகாரத்தை வகித்துக் கீர்த்தியை அடைய வேணுமென்று நாம் சுவாமியை வேண்டுகிறோம். நம்முடைய வக்கீல் திரியம் பக சம்பாஜி தங்களை நேரில் கண்டு நம்முடைய விஷயங்களையெல்லாம் தெரிவிப்பார்கள். அதைக் கேட்டு எல்லா விஷயங்களிலும் தயவுசெய்து நடத்தி வர வேண்டும். என்ன எழுதுவது.

*(2) 1785*

ரா. துளஜா மகாராஜாவின் சலாம். எக்ஸ்லன்ஸி ஜனரல் ஸ்லோபர் பாஹத்தர் அவர்களுக்கு.........தங்களுக்குப் பெங்கால், சென்னை, பம்பாய் இந்தத் தேசங்களுக்கு ஸர்ஜனராலியின் உத்யோகம் வந்து இங்கிலாந்திலிருந்து சென்னைக்கு வந்த செய்தியைக் கேள்வி யுற்றேன்.

*(3) 1785*

ரா. துளஜா மகாராஜாவின் சலாம்.

அலெக்ஸாண்டர் டேவிஸன்[653] பாஹத்தர்[654] சென்னை வகையறா
.......தங்களுக்கு கௌர்னருடைய உத்யோகம் ஏற்பட்டது என்று..........

*37. 1829 டிசம். 1உ*

ரா.ரா. வெங்கட்றாவ் சிரஸ்தேதார் அவர்களுக்கு- விண்ணப்பம் என்னவென்றால்- தாசில்தார் நியாயமில்லாமல் ஸர்காரின் மேல்செய்த முரட்டுத்தனத்தைப் பற்றி இன்னமும் தாசில்தாருக்கு ஒரு தண்டனையும் ஏற்படவில்லை. அதிலிருந்து நாலு ஜனங்களின் நடுவின் சர்காருக்கு அகௌரவமா யிருக்கிறது. அதனால் ஜனங்கள் கூட நம்மை மதிக்கிறதில்லை. இரண்டாந்தடவை வாரண்ட்டு[655]வந்த காலமுதற் கொண்டு ரா.யஜமான்[656] சாஹேபவர்கள் அரண்மனைக்கு வெளியே போகிறதில்லை. ஒரு தாசில்தார் கெட்ட செயலினால் இவ்வளவு முரட்டுத்தனம் செய்த பின்னர் அதற்குத் தக்கபடி தாசில்தாருக்குத் தண்டனையை விதித்தாலொழிய வெளியே புறப்படுவதில்லை என்று தீர்மானித்து ஒரு மாதமுதற்கொண்டு அரண்மனையை விட்டு வெளியே போகிறதில்லை. அவருடைய மாதிரி எப்படி என்றால் கொஞ்சம் அசௌக்யமா யிருந்தாலுங் கூட வெளியே சவாரிக்குப் போய் வருவார். அதனால் அவருக்கு ஆரோக்யமுண்டாகும். ஆனால் கொஞ்சம் காயலாவாகியிருக்கிறோமே என்று சவாரி ... போகாமலிருப்பதில்லை. இப்பொழுது வெளியே போகிறதில்லை. அதனால் சாப்பாடு சரிவர ஜீர்ணமாகி பசியெடுப்பதில்லை. இதனால்

653. அலெக்ஸாண்டர் டேவிட்சன் - இவர் 18-6-1785இலிருந்து 5-4-1789 வரை கவர்னராக இருந்தவர்.

654. பாஹத்தர் - பகதூர்

655. வாரண்டு - ஆளைப்பிடிக்க அரசாங்கத்தார் விடுக்கும் கட்டளை (Warrant)

656. யஜமான் என்றது இரண்டாம் சரபோஜியை

தாசீல்தாருக்கு ஒரு தண்டனையை ஆகாததற்கு முன் தற்பொழுது வெளியே சவாரிக்குப் புறப்பட்டால் எல்லோரும் பரிகாஸம்[657] செய்வார்கள். இன்னமும் பிரின்ஸிபால் கலெக்டர்[658] சாயேப்பின் பதிலொன்றும் தெரியவில்லையே. இவ்விஷயத்தை பற்றி ரா.சாஹேப் அவர்களுக்குத் தெரிவிக்கும்படியாக தங்களுக்குக்கெழுதி அனுப்ப மகா.ஸ்ரீ.ஸ்ரீ.யஜமான் சாஹேப் அவர்களின் உத்திரவு ஆயிருப்பதினால் எழுதியிருக்கிறேன். என்ன ஜாஸ்தி எழுதுகிறது. இந்நமஸ்காரம்.

சாயேப் - ராவுத்ராவ் நலவடே

*49 குஜராதி எழுத்தின் கடிதம்*

*49 (1)......தென் ஆர்க்காடு கலெக்டர் கேப்டன் டேம்ஸ் ஜ்யார்ஜ் க்ராஹ்யாம அவர்களுக்கு போர்ட் ஸெயிண்ட் ஜார்ஜ் செகரிடரி க்யாரோ எழுதினது.*

தஞ்சாவூர் ஸ்ரீமந்த் மகாராஜாவிற்குக் கொண்டு போகிற ஒரு ஜரிகை நிறைந்த துணியின் மூட்டையை உங்களுடைய வேலைக்காரன் வளதா ஊரில் சுங்கத்திற்காகத் தடுத்ததாகப் போர்டுக்குத் தெரிய வந்தது. இதற்காகப் போர்டாரின் எண்ணமிப்படி என்னவென்றால் மகாராஜாவின் [659]தபாலை சுங்கத்திற்காகத் தடுக்கக் கூடாது. மகாராஜாவிற்கு அவர்களுடைய தபாலில் கொண்டு போகும் மூட்டைகளுக்கும் சுங்கம் வரி கிடையாது. இவ்விஷயத்தை உங்கள் வேலைக்காரர்களுக்கு உத்திரவு செய்ய வேணும். ..............

ஸெயிண்ட் ஜார்ஜ் க்யாரோ செகரிடரி

*(2) 1772*

*ரோகா[660] -தஸ்தாவேஜு கச்சேரியின் குமாஸ்தா - பதக்[661] பந்த நல்லூர் 1772 தினப்படிக்காக கல்லே குத்தகை[662] காசிகோனார்[-663] பண்டாரத்திற்கு கொடுப்பது. உத்திரவுப்படி - உத்திரவு சந்த் 1 வ பதக்கிவிருந்து பதக் திரிலோகி[664] காசி தருமத்தின் கிராமங்களும் விபரமும்*

---

657. பரிகாஸம் - ஏளனம்

658. கலெக்டர் - நெல்சன் ஆகலாம் (பக்.71)

659. மகாராஜா என்றது இரண்டாம் சரபோஜியை

660. ரோகா - குறிப்புச்சீட்டு

661. பதக் அல்லது பதகம் (பத்தக்கம்) என்பது சிலவூர்களின் ஒன்றியம் என்னலாம் (பக்.74) அழிவுக்குட்பட்ட நிலங்களோடு செழிப்புற்ற நிலங்கள் ஒன்று சேர்க்கப்பட்டன: அத்தகைய ஒன்றியம் 'பதக்' எனப்பட்டது.

662. கல்லே குத்தகை(?)

663. காசிகோனார் பண்டாரம் - கி.பி.1772குரிய கால வட்டத்தில் திருப்பனந்தாள் காசிமடத்து அதிபராக விளங்கியவர்கள் ஸ்ரீகாசிவாசி குமரகுருபரசுவாமிகள் II ஆவர். (பக்கம் 424) ''குமர'' என்பது ''கோனார்'' என்று திரிந்தது போலும்!

664. திரிலோகீ - இவ்வூர் திருப்பனந்தாளுக்குக் கிழக்கில் உள்ளவூர்.

8 தாலுகா திரிலோகி மாகாணத்தைச் சேர்ந்த கிராமம்
1 கஸபா[665] விலிருந்து 2/5 போக 3/5 கிராமம்
1 சாந்தப்பிள்ளை உக்கடை
1 சூர்ய மூலை அய்யாவய்யா சேத்திபோக கிராமம்
1 கொட்டியாநகர் அய்யாவய்யா சேத்திபோக கிராமம்
(2) 1 பாவியூரிலிருந்து மணிக்குடியில் சேர்ந்த

தகஸிம் (பாகம்) ஒன்றுபோக
பாக்கி பாகம் நான்கும்
1. திரிவலங்குடி[666] கோவில்பத்து
1. யெடையார் நேந்தூர்[667]
1. கன்னார்குடி வைரப்பேட்டைக்கூட

1. தாலூ. குர்சி[668] மாகாணத்திலிருந்து உக்கடை ஒடையார் மானியங்கூட
1. தாலூ.தரணி மாகாணத்திலிருந்து நலாதபடி

ஆக கிராமங்கள் 10க்கு வருஷம் 1770 சந்த் 27 சாபானில்[669] கண்டுமுதல் குத்தகை 82,000 கலம் கண்டு முதலுக்கு தஸ்தாவேஜி கச்சேரியில் கண்டிருக்கிறது. இதற்குக் கமாவிஸி[670] யானவர் 1770ம் ஷுஹுத்தில் 22,000 கலம், 1771 ஸப்பைன் ஷுஹுத்தில் 21,000 கலமும், இந்தப்படி கண்டுமுதல்[671] கம்மி [672] யாயிருக்கிறது. இதற்கு வழி இல்லை. ஸ்ரீகாசி தருமத்தின் ஐவேஜைக்[673] கொடுத்தால் தருமம் முழுகி விடும் (நின்று விடும்) என்று மேற்சொன்னவன் விண்ணப்பஞ் செய்தார். இதற்காக மனமூர்ந்து இவ்வருஷ முதற்கொண்டு 10,000 கலம் கண்டுமுதல் தள்ளி பாக்கி 72,000 கலத்தை வயல் புஞ்சி[674] கூட மலயங்காடு குத்தகை

665. கஸ்பா - தலைமையூர்

666. திரிவலங்குடி - திருவெள்ளியங்குடி என்னுமூர்.

667. யெடையார் நேந்தூர் - இடையாநல்லூர் என்னுமூர்

668. குர்சி - குறிச்சி என்றவூர்

669. 1770 சந்த் 27 சாபான்: 16-12-1770 சாபான்-அரபுமாதங்களில் எட்டாவது

670. கமாவிஸி - பலவூர்களை மேற்பார்வை செய்யும் அதிகாரி

671. கண்டுமுதல் - நிலத்தின் முழுவிளைவு

672. கம்மி - குறைவு

673. ஐவேஜி - சொத்து இருப்பு

674. புஞ்சி - புன்செய்

விடப்பட்டிருக்கிறது. இதற்குக் குடிவாரம்,[675] கடப்புக்கார்,[676] செண்டிக்கார்,[677] ஸம்பாவ[678] பசானத்திற்கு[679] பேஸஜி-[680] உண்மையான வாரம் 100க்கு 40கண்டு முதல் வீதம் செய்து கொடுத்திருக்கிறார். அந்தப்படிக்கு முஜரா[681] யைக் கொடுத்து பாக்கி மேல் வாரம்-[682] கண்டு முதலுக்குப் பதக்கின் (கண்டணி?) தான்யமாகக் கொடுப்பதாகத் தீர்த்து, நக்ஷிபாபா? புஞ்சை பத்துக்கட்டு[683], வருஷப்பத்து, மகமாகா பரிவஸம்ப்ரதி,[684] மஜும்தார்[685] வரி வகையறாக்களுக்காக வருஷ வழக்கப்படி சேர்த்துத் துகையை வசூல் செய்து கொள்ளுகிறது. மகாலிலும் கரைக்கட்டு,[686] வாய்க்கால் வெட்டு, அணைக்குடியின் வீதப்படிக்கி தேவஸ்தானம், மான்யம், இனாம் அணை யெரங்கல், இன்னும் சில்லறை வருஷ வழக்கத்தின்படி முஜரா[687] செய்கிறது. மேற்சொன்னவன், பேஸஜீ ஸர்காருக்கு பேடி[688] ஒவ்வொரு வருஷத்திற்கும் 500 சக்கரம் வாக்களித்திருக்கிறார். இதற்குச் சென்ற வருஷம் சந்த் 27 உ சௌவலில்[689] இவ்வருஷம் முதற்கொண்டு, ஒவ்வொரு வருஷமும் தள்ளிக் கொடுக்கிறதென்று உத்திரவாயிருக்கிறது. மேற்சொன்னபடி தள்ளிக் கொடுத்து கண்டுமுதல் குத்தகை இவ்வருஷம் முதல் ஒவ்வொரு வருஷமும் நடத்துகிறது. நகலை எழுதிக்கொண்டு அசல் பத்திரத்தை மேற்கண்டவனிடம் திருப்பிக் கொடுக்கிறது.

பா.ஹி 11

ராஜஸ்ரீ மா. ஹஜரத்[690] ரா. நரசிங்கராவ் ஆனந்தராவ் போஸலே மோர்தப்ஸீத்

---

675. குடிவாரம் - நிலத்தை உழுதுபயிரிடுவதற்குக் குடிகளுக்குரிய உரிமை

676. கடப்புகார் - கடப்பநெல் - குறுவை நெல்லின் ஒருவகை

677. செண்டிக்கார்(?)

678. சம்பா - தை மாதத்தில் அறுவடையாகும் நெல்

679. பசானம் - சித்திரை மாதத்தில் அறுவடையாகும் நெல்

680. பேஸஜி - அரசன்

681. முஜரா - வரி தள்ளுபடி

682. மேல்வாரம் - நிலவருவாயில் நிலச்சொந்தக்காரருக்கு உரிய பாகம்

683. பத்துக்கட்டு - குடியானவன் சாகுபடி செய்யும் நிலம்

684. சம்பிரதி - தலைமைக் கணக்கன்

685. மஜும்தார் - நிலவரிக் கணக்கு எழுதுபவர்

686. கரைக்கட்டு - நீர்க்கரைக்கு ஆதாரமாய்க்கட்டுவது.

687. முஜரா - வரிதள்ளுபடி (அடிக்குறிப்பு 29)

688. பேடி - பேட்டி; நேர்காணல்.

689. சௌவல் - ஷவ்வால் - அரபுமாதத்தில் பத்தாவது

690. ஹஜரத் - சிறந்தவர்

சிகா[691] சம்மதம் ஸர்கேல் ரவாதார் 2ஆவ ரபிலாகர் மீ சர்கேல்சுத்ரவிலாகர்[692] பலங்கநவீஸ் ஸுத்

42 (4)

(3) கனம் பொருந்திய கேபன்[693] வாலக்ரேவருக்கும் மிஸ்தர் உல்லியம்ப்ரூக்[694] அவர்களுக்கு நடக்க வேண்டிய மாதிரி என்னவென்றால் -

நீங்கள் இருவரும் நம்முடைய வேண்டியவர்களா யிருந்து மனசார நம்முடைய இராஜயத்தில் வேலையில் சேர்ந்திருப்பதால் நம்முடைய வேலைகளெல்லாம் நீங்களிருவரும் வஞ்சனையின்றி வெகுஜாக்கிரதையுடன் அனுகூலமாகும்படிச் செய்து வருவீர்க்ளென்று, நாம் உண்மையாக நம்பியிருக்கிறோம். நீங்களிருவரும் வெகு யுக்திவானும், நல்லது கெட்டது அறிகிறவர்களாகையால் நம்முடைய இராஜ்யத்தின் சிலவுகளை அந்தரங்கங்களை உங்களுக்கு தெரிவிக்க வேண்டியது தான். நாம் உமக்கு அறிவிக்க வேண்டிய வேலைகள் நீங்கள் பஹிரங்கம் செய்யாமல் மிக்க ஜாக்கிரதையாய் நம்முடைய வேலைகளில் கலல் ஆகாமலும் நமக்கு அபகீர்த்தி வராதபடி நீங்களிருவரும் வெகு ஜாக்கிரதையாய் செய்வீர்களென்று நமக்கு நன்கு விளங்குவதினால் எல்லா விஷயத்திலும் தங்களையே நம்பியிருக்கிறோம். நம்முடைய இராஜ்யத்தின் சுகத்திற்கு நீங்களிருவரும் பாத்யஸ்தராயிருக்கிறீர்க ளென்பதை எழுதுவதில் என்ன விசேஷம்.

நீங்களிவ்விடமிருந்து சீமைக்குப் போன பின்னர் நம்முடைய மத்தியஸ்தர்[695] இங்கு நடக்கிற சமாசாரங்களை அவ்வப்பொழுது சிற்சிலதைத் தங்களுக்கு எழுதியதின் பேரில் எல்லாமும் தெரிந்திருக்குமே. தற்பொழுது நாம் கும்பணிக்காரர்களின் பெயரால் கடிதமெழுதி அனுப்பியதின் பேரில் நம்முடைய தேசத்திற்குச் சுகமுண்டாக அனுகூலமான வேலை வேண்டுமோ அது தாங்களிருவருக்கும் தெரிய வரும். அவ்வேலைக்கு நாமெழுதியபடி செய்வதற்குக் கும்பனிக்காரர்கள் ஒப்புக்கொள்ளும்படி முயற்சி செய்ய வேணும். அம்முயற்சியை நீங்களிருவரும் செய்ய வேண்டும்.

நாம் கும்பனியின் காரிய விஷயத்தில் ஒரு பொழுதும் வஞ்சனை செய்யமாட்டோம் கும்பனியார் நம்மைக் கேட்ட வேலைகளெல்லாம் சரியானதுதான். ஆனால், அவர்களுடைய சிப்பந்திகளிடமிருந்து[696] மட்டுந்தான் நமக்குத் தொந்திரவு ஏற்பட்டிருக்கிறது. இதற்காக இவ்விடமுள்ள கும்பனியின் சிப்பந்திகள் கும்பனியின் உத்திரவன்னியில் இராஜ்யத்தின் யாதொரு வேலையையும் செய்ய முடியாமல் தாமதிக்கிறார்கள். கும்பனிக்கு நல்லது. அதனால் நமக்குக் கூட வெகு அனுகூலமாயிருக்கிறது. அதனால் கும்பணியின் எல்லா விஷயத்திலும் நம்முடைய வேலைக்குச் சாதகமாக யிருப்பரென்று நம்பி நாம் கும்பனியின் சிப்பந்திகளின் பயத்திற்கு லட்சியம் செய்யாமல் நமக்கு ஆகவேண்டிய வேலைகளுக்குத் தைரியமாக கும்பனியார் பேரால் எழுதி அனுப்பி கடிதம் மூலம் நாமெல்லாவற்றையும் கேட்டு வாங்கிக்கொள்கிறோம் நாம் கும்பனியாரிடம் கேட்க வேண்டியது உங்களிருவருக்கும் தாகல்[697] ஆக வேண்டியதற்காக இங்கு நடந்த சங்கதிகளை யெல்லாம் தங்களுக்குத் தெரிவிக்கிறேன்.

691. சிகா - முத்திரை 692. ரபிலாகர் - ரபிஉல் ஆஹிர் - அரபு மாதங்களில் நான்காவது

693. கேபன் - Captain; சேனைத்தலைவர் 694. உல்லியம் - William

695. மத்தியஸ்தர் - (பொறுப்புள்ள) அலுவலர். 696. சிப்பந்தி - அலுவலர்

697. தாகல் - தாக்கல் - தெரிதல்

43 (3) தற்பொழுது நாம் கும்பனியிலிருந்து இழந்த இராஜ்யத்தை யடைந்து ஸ்தாபிதமாகி கும்பனியின் ஆச்ரயத்தில் [698]சேர்ந்திருக்கிறோம். அதனால் நவாப்[699] அவர்கள் முதலில் நம்முடையஇராஜ்யத்தை அபகரித்து நம்முடைய.........கஜானா வகையறாக்களை எல்லாமும் நம்முடைய சிப்பந்தி ஜனங்களுடைய திரவியம் முழுமையும் கொள்ளையடித்துக் கொண்டு போய் நம்முடைய தேசத்திற்கு வெகு தொந்திரவு செய்து நம்முடைய தேசத்தை எல்லாவிதமாக அளவில்லாமல் காலியாகச் செய்து விட்டதாலும் நாம் புதிதாக ஸ்தாபனமாகி [700]வெகுபலஹீனர்களா[701]யிருக்கிறோம். ஆதலாலும் நாம் நம்முடைய தேசத்தை இழந்து கொண்டு கஷ்டப்பட வேண்டும். இல்லாவிடில் இவர்கள் கேட்டபடி துகையை லாஞ்சு[702] கொடுத்து, நம்முடைய வேலைகளுக்குச் சாதகம் பண்ணும்படி செய்துகொள்ள வேணும். இவ்விரண்டு வேலைகளையும் நாம் செய்யாவிடில் இவ்விடமுள்ளவர்கள் நம்முடைய தேசத்திற்கு ஆள் அனுப்பி நமக்கும் நம்முடைய இராஜ்யத்தின் ஜனங்களுக்கும் அநேக பயமுண்டாகும்படி அநேக விதம் செய்யும்படி செய்தால், கடைசியில் நாம் கும்பனிக்குக் கெடுவின்படி துகையைக் கொடுக்க ஒரு வழியுமில்லாமற் போகும். அதன்பிறகு நம்பேரில் அநேகவித குண தோஷங்களை[703] ஏற்படுத்தி கும்பனியாருக்கு எழுதியனுப்பி, அநேகத் தொந்திரவு செய்ய முயற்சிப்பார்கள். இங்குள்ள கௌனர்,[704] கௌன்ஸிலர்கள் நமக்கு நம்முடைய தேசத்துக்கு ஒரு தொந்திரவும் செய்யாமலும் ஒருவராலும் தொந்திரவு ஏற்படாதபடியும், நமக்கு வேண்டியதை முடித்து, அதன்மேல் நாம் உங்களுடைய வேலைக்குச் சாதகம் செய்திருக்கிறோம்.தயவுசெய்து ஏதாவது விசாரணை செய்தால் வெகு உத்தமம், என்று ஏதாவது துகையைக் கேட்டாலும் நம்முடைய சக்திப்படி ஏதாவது கொடுத்து சமாதானம் செய்து கொள்ளுகிறது நல்லதாகும். அப்படிச் செய்யாமலும் நம்முடைய தேசம் வெகுகாலியாகிவிட்டதென்றும் அறியாமல் நம்முடைய தேசத்தை நிரப்புகிற எல்லாமும் தங்கத்தின் விரை. அந்த விரையின் பலபாகம் எல்லாம் தேசத்தில் தங்கமே விளைகிறது. நம்மிடம் தங்கத்தின் மலையே அகப்பட்டிருக்கிறதென்று, இவ்விடத்திய அதிகாரிகள் நன்கறிந்து அநேக விதமான தொந்திரவுகளைச் செய்கிறார்கள். இப்பேர்ப்பட்ட ஜனங்களுக்கு எப்படிக் கட்டாயப் படுத்துகிறது. நாம் இராஜ்யாதிகாரத்தையாவது என்னவென்று செய்து சுகத்தை அனுபவிக்கலாம். இதற்காக நீங்களிருவரும் நம்முடைய ரொம்ப வேண்டியவர்களாயும் வெகு யுக்திமான் ஆனதாலும் நன்றாய் தீர்க்கமாயும் யோசித்து நல்லது கெட்டது நியாயம், அநியாயம் பார்த்து மையத்திற்குத் தக்கபடி கும்பணி எப்படி தெரிவிக்க வேணுமோ அப்படித் தெரிவித்து நமக்கும்.........ஆகும்படி செய்து, நாமிவ்விடமிந்தப் படிக்கி நடக்க வேணுமென்று ஏதாவது யோசனைகளை எழுதியனுப்பினால் அதற்குத் தகுந்தபடி நாமிவ்விடம் எல்லாக் காரியங்களையும் செய்யலாம். நீங்களிருவரும் நமக்கு ரொம்ப வேண்டியவர்களென்று சிற்சில

698. ஆச்ரயத்தில் - ஆதரவில்

699. நவாப் - ஆர்க்காடு நவாப் முகம்மது அலிகான்

700. ஸ்தாபனம் ஆகி - நிலைபேறு எய்தி

701. பலஹீனர்கள் - வலிமை குறைந்தவர்கள்

702. லாஞ்சு - இலஞ்சம் (?)

703. குணதோஷங்கள் - நன்மை தீமைகள்

704. கௌனர் - கவர்னர் லார்டுபிகட் ஆகலாம்

(3) இரகசியமான சங்கதிகள் எழுதப் பட்டிருக்கின்றன. எப்படியும் வெளிப்படுத்தாமல் நம்முடைய வேலைக்குச் சாதகமாகும்படி செய்யவும்.

(4) ஸ்ரீராம்[705]

ஸ்ரீமத் எல்லாவித லக்ஷ்மியுடன் சோபிக்கிற ரா.ரா. ஏழைஜனங்களிடத்தில் உதாரமாகவும் இராஜாவான்(ல்) மரியாதை செய்யப்படும் ரா.ரா.மானாஜி ஜகதாப்[706] அவர்களுக்கு.

ஸேவகனாக ராமராவ் முன்ஷி - செய்யும் அநேக ஆசிர்வாதம். தற்பொழுது இவ்விடத்திய சங்கதி சந்த் 25வ மாஸம் இங்கிலாந்திலிருந்து "ஜங்கி கப்பல்" 10 வந்து சேர்ந்தவுடன் ஆயிரம் வெள்ளைக்காரர்களும் 300 பீரங்கிகளும், துப்பாக்கிகளும், சாமான்களும் விஸ்தாரமாக வந்து சேர்ந்தன. ஒரு சாமார்த்தியமுள்ள வெள்ளைக்காரர் ஸவ்லீயின் பாதஷாஹாவின் மூலம் வந்திருக்கிறார். கப்பலிலிருந்து இறங்கி கோட்டையில் வருகையில் இவ்விடமுள்ள கோரம் போர் வகையறா "குஞ்செலவர்ல" எல்லோரும் வாத்தியம் மேளம் இவற்றுடன் போய் எதிர்கொண்டழைத்து வந்து சின்ன கோட்டையில் நவாப் கோரம்போர் சாஹேபின் வட்டாரத்தில் இறக்கினார்கள். நாளை, நாளையன்றிக்கு இன்னும் 10 கப்பல்களும் தற்பொழுது வந்திருக்கிற வெள்ளைக்காரனைக் காட்டிலும் சாமார்த்தியமுள்ள ஒரு வெள்ளைக்காரனும் வருவார். 5000 வெள்ளைக்காரர்களும் சாமான்களும்........இதைத்தவிர 8 கப்பல்கள் தை மாதத்தில் வரப்போகிறது. இதற்கு மேலும் 28 கப்பல்கள் வந்துசேர்ந்ததும், 2,3 நாட்களில் 10 கப்பல்கள் வரப்போகின்றன. நான் அதில் வருபவைகளை........பெயர் முஸோலாலி?[707] சாமர்த்தியமுள்ளவர் அவர் வந்ததும் நடக்கும் விஷயங்களைத் தங்களுக்கு எழுதுவேன். வடக்கே யிருந்து சமீபத்தில் ஒரு சமாசாரமும் வரவில்லை. நவாப் முஹம்மத் அலிகானும், அமிருதராவும் இப்பவும் சென்னையிலிருக்கிறார்கள். ஆர்க்காட்டுக்கு வரப்போகிறார்கள். அறியவும். இவ்விடமுள்ள சங்கதிகளை உடனுக்குடன் தங்களுக்குத் தெரிவிக்க வேண்டியிருப்பதற்கு ரகஸியமான (அந்தரங்கமான)........நம்மிடம் யாருமில்லை. சாஹேபிடமிருந்து 4 நாட்களுக்கு ஒருதரம் அந்தரங்கமாய் என்னிடம் ஒரு மனுஷ்யன் வந்து கொண்டிருந்தால் ஸேவகனிடமிருந்து இடைவிடாமல் சங்கதிகளை விஸ்தாரமான சங்கதிகளை எழுதி அனுப்புவேன். தற்பொழுது விஷயம் தெரிய வேண்டுமென்று ருத்ராஜி பண்டிதரிடம் மனுஷ்யனை அனுப்பி யிருக்கிறேன்.

முதலிலே சங்கதியை ரா.கேட்டால் தெரியும். தங்களுக்கு வணக்கம் எழுதியபடி மனுஷனுக்கு உத்திரவிட வேண்டும். சாஹேபினுடைய தயையையடைவதினால் (சரபதாஜ்) க்ருதகிருத்யன்[708] ஆக வேண்டுமென்று பாயிசாயேப்பும் அப்படி கிருபை செய்து அப்படியே அனுப்ப வேண்டும். என்ன விசேஷம் எழுதுவது. இவ்வாசீர்வாதம்.

---

705. ஸ்ரீராம் - பிள்ளையார் சுழி இடுவது போல ஸ்ரீராம் என்று எழுதுவது வழக்கம்

706. மானாஜி - பிரதாபசிங்கரின்தானைத்தலைவர் (பக்கம் 79)

707. முஸேலாலி - டூப்ளேக்குப் பிறகு புதுச்சேரி கவர்னராக வந்தவர்; இவர் தஞ்சைமேல் படையெடுத்து வந்தார் சென்னையைக் கைப்பற்றும் முயற்சியில் வென்றவர். முஸே - Monsicur - A French title of Courtesy equivalent to Sir or Mr.)

708. கிருதகிருத்தியன் - செய்தற்குரிய கடமையைச் செய்து முடித்தவன்

5.1772

யாதாஸ்து[709] தங்கம் ஜாடமகாலுக்கு ரங்காராவும் சூரப்பாவின் மூலமாக பத்திரம் எழுத

பொன் எடை 1050 3/16 விராகனிடை.

42.மார்கழி 17உ

(6) மேஸ்தர் கட்பாரட் அவர்கள் நெகராயருக்கு எழுதிய கடிதத்தின் நகல். நீங்கள் அனுப்பிய கடிதம் கிடைத்து எழுதிய சமாசாரம் தெரியவந்தது. 4 லக்ஷம்வராகன்[710] கும்பனிக்குச் செலுத்துவதற்கு நாம் எடுத்த வழியை மகாராஜா சாஹேப் நடத்துவாரென்று தோணவில்லை. ஒரு லக்ஷம் வராகனை மட்டும் அவர்கள் வேண்டுமென்கிறார்கள். அதற்கு நீங்கள் அவர்கள் சொன்ன கரார் எழுதினபடி நெல்லுக் கொடுப்பதாக ஒப்புக் கொண்டிருக்கிறார்கள் போல எழுதியதையும் இன்னும் 3 லக்ஷம் வராகனுக்கு கும்பணி ஸதரே? அவர்கள் சொன்ன கரார் தமோஜதா? பாத்தியப் படும்படி அவர்களுடைய உத்தேசமிருக்கிறது. அதுவும் தெரியவந்தது.

ஷெ ஒரு லக்ஷ வராகனை கடன் கொடுக்கிற பாபத்திற்கு தங்களுக்குத் தெரிவிப்பதாவது. நெல்லின் வகை அநேகமாயிருக்கும். ஆகையால் அந்த நெல்லின் பாதுகாப்பிற்காக நம்முடையதைப் பார்க்கிலும் மிகவும் பத்திரப்படுத்தும்படி ஆகும். அதனால் நாம் வாங்கின நெல் விற்பனையாகும் வரையில் வாங்குகிறவனிடம் நெல்லை ஒப்புவிக்கிற வரையில் இராஜாங்கத்தின் பந்தோபஸ்த்[711] திவிருக்க வேணும். .........கும்பனிக்கு நிச்சயமென்று சொல்லுவதற்காக சொன்ன.........தாவது - நாம் கடன் கொடுக்க மாட்டோம். அந்தத் துகைக்காக நாமெப்படி பாத்தியமாகுவோம். ஸமஸ்தானத்தார் சொன்னபடி கும்பனிக்காரர்களுக்கு 3 லக்ஷம் வராகனுக்குப் பாத்தியமான[712] நாம் 3 லக்ஷம் வராகனையும் மகாராஜசாஹேபுக்கு கடன் கொடுத்ததாக ஆயிற்று. நாம் 3 லக்ஷம் வராகனுக்கு கும்பனிக்காரருக்குப் பாத்தியஸ்தரானால் 3 லக்ஷம் வராகனையும் ரொக்கமாகக் காட்டத் தயாராக இருக்க வேணும் அதற்காக ஸமஸ்தாநத்தார்[713] இவ்விந்த 3 லக்ஷம் வராகனுக்கு வட்டியைக் கொடுக்க நேரிடும்

மகாராஜசாயேப்பிற்கு[714] இன்று வரையில் சில்லறை கடன்காரர்களுக்குக் கொடுக்க வேண்டியிருக்கிறது. அதில் அளவு மீறின கரார் நாதரும்[715] ஆயிருக்கும். மகாராஜா

709. யாதாஸ்து - நினைவுக்குறிப்பு

710. 4 லக்ஷம் வராகன் - துளஜா இரண்டாவது தடவை ஆட்சி யேற்றதும் கும்பனியுடன் ஒப்பந்தம் செய்து கொண்டார். அதன்படி தஞ்சையில் ஆங்கிலேயர் படை இருக்கும் அப்படையின் [illegible] லக்ஷம் வராகன் கொடுப்பதாக அரசர் ஒப்புக்கொண்டார் (பக்.49)

711. பந்தோபஸ்து - பாதுகாவல்

712. பாத்தியமான - பொறுப்புடைய

713. ஸமஸ்தானத்தார் - அரசாங்கத்தார்

714. மகாராஜா என்றது இரண்டாம் துளஜாவை

715. கரார்நாதர் - கரார்நாமா - உறுதிப்பத்திரம்

சாஹேபிற்கு வேண்டிய எல்லா வட்டியுள்ளதாய் கரார் நாதரினால் ஸமாஜாவிஸி[716] செய்ய வேண்டுமென்று நமக்கு எண்ணமிருக்கிறது.

இப்பொழுதுள்ள கரார் நாமாவைச் சுலபமாக்குவதற்கு ஸாவுகார்கள் [717] செய்யும் வழக்கப்படி நாம் கொடுக்கல் வாங்கல் செய்ய வேண்டிருக்கிறது. ஸாவுகார்கள் கடன் கொடுக்க சம்மதிச்சு இங்கே அந்தந்த கெடுவிற்குக் கும்பனிக்கு துகையைக் கொடுத்து இராஜ்யத்தில் வசூலாகிற துகையில் தங்கள் துகையில் வசூல் செய்து கொள்ளுகிறார்கள். ஸாவுகார் கடன் கொடுத்த துகைக்கு நெல்லு வாங்கி லாப நஷ்டங்களுக்குப் பாத்தியப்பட மாட்டார்கள். நெல்லு வாங்கினால்அமானத்து[718] யென்று வாங்குவார்களே தவிர நெல்லின் விலையைத் தீர்த்து வாங்க மாட்டார்கள். நெல்லைக் கிறயஞ்செய்து,[719] நியாயப்படி கணக்கை ஸர்காருக்குக் கொடுப்பார்கள். தான் கடன் கொடுத்த துகைக்கு மட்டும் வாங்கி மீதியை ஸர்காரில் தாகல்[720] செய்கிறார்கள். நமக்குத் தோன்றினதென்ன வென்றால் நாம் கும்பனிக்கு எவ்வளவு துகையைக் கொடுக்க வேண்டும். எந்தெந்த கெடுவில்[721] கொடுக்க வேண்டும். கெடுவில் எவ்வளவு துகை கொடுக்க வேணும். நாம் கொடுக்கும் துகைக்கு எந்த

தாலுகாவின் நெல்லை அடமானங் கொடுக்கிறார்கள். அந்த இடத்தின் நெல்வில் எவ்வளவு துகை வசூலாகுமென்கிற விபரத்தை எல்லாம் நமக்கு விளங்கும்படியாக எழுதியனுப்ப வேண்டும். அதைத் தெரிவித்ததின் பேரில் நாம் துகையை வசூல் செய்கிற வேலை எது? துகை வசூலாகும் காலம் எப்பொழுது? எந்தெந்த மாதங்களில் எவ்வளவெவ்வளவு வசூலாகும் என்ற விபரத்தை எழுதியனுப்பவும்.

இந்த பாபத்தெல்லாம்[722] தீர்மானமானால் நடக்கும் பேச்சி வார்த்தை தீரும்படிக்கு என்னென்ன கரார் மதார்[723] ஆக வேணுமோ அதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

இப்படிக்கு மேலெழுதிய வஜ்ராத்மா[724] சங்கதிகளெல்லாம் அவர் ஏற்பாடு செய்து கொள்ளுவதாகத் தெரிவிக்கிறது. நீங்கள் இந்த வேலைக்காக அவசரப்பட வேண்டியதில்லை. அவர்கள் இவ்வேலைக்காக ஒய்வுடன் ஏற்பாடு செய்து கொடுக்கிறது. என்ன எழுதுவது.

---

716. ஸமாஜாவிஸி (?) சமாதானப்படுத்தல்

717. சாவுகார் - பணம் கொடுக்கல் வாங்கல் செய்பவன்

718. அமானத்து - ஒப்படைத்த பொருள் (Deposit; anything held in trust)

719. கிரயஞ் செய்து - விற்பனை செய்து

720. தாகல் - தாக்கல் - பதிவு செய்தல்

721. கெடு - தவணை

722. பாபத்து - விஷயம்

723. கரார்மதார் - கரார்நாமா - உறுதிப்பத்திரம்

724.வஜ்ராத்மா - மேலிடத்தவர்

(7)

ஸ்ரீசங்கர்[725]

மேலும் தஞ்சாவூர் இராஜ்யத்தின் நிலைமையும் நம்முடைய ஸம்ஸார ஸ்திதிக்கு விபரமாகத் தெரியவேணும். ம்யாஜேர் அப்பாஜி என்னசொன்னாரென்றால் மகாராஜ சரபோஜி சாஹேபைப் பட்டங்கட்டும்படியாகக் கும்பனியின் சாஹேப் உபாவலியிடமிருந்து யோசனை செய்யவில்லை. ஆனால் நியாயம் முன் நடந்ததை யொட்டி பூர்வோத்தரம் (முன்பின்) நடந்தவற்றை எல்லாம் எடுத்துப் பார்த்து, மகாராஜா அமரசிங்குக்குத்[726] தனியாக வைத்து[727] சரபோஜியை [728]ஸ்தாபித்தார். இப்படி யிருந்தால் தற்பொழுது இருக்கிறது. அசைக்க முடியாமலாகி ஸ்திரமாகும்[729] தான். இதற்குச் சந்தேகமில்லை. இதனால் ரா.சரபோஜிராஜே சாயேப் அவர்கள் பாத்தியஸ்தராகி[730] இவரிடத்தில் எப்படி பிரஜைகள்[731] கட்டளையை மேற்கொள்ளுவார்களோ அந்தப்படி நாம் தஞ்சாவூர் தேசவாஸி[732] ஆனதால் உடனே போடதாத? நடத்தையை அங்கீகரிக்கும்படி யாகிறது. இல்லாவிடில் பிரபஞ்சத்தில்[733] ஏற்படுத்தப்பட்ட நியாயத்தின்படி இராஜாவின் கட்டளைக்குக் கீழ்ப்படாமல் நடக்கிறார்களோ அவர்கள் எத்தண்டனைக்கு ஆளாவார்களோ அதற்கு ஆளாகி அனுபவித்தாக வேண்டும், இன்னும் அமரசிங்கஜி பிரசித்தமாகாமலாகி தனியாக உட்கார்ந்திருந்தால் அவரை உத்தாரஞ் செய்து காப்பாற்றி பிரதிகக்ஷியைப்[734] போல ஸ்தாபனஞ் செய்ய முயற்சி செய்தார்கள். ஆனாலும் பாத்தியஸ்த இராஜாவின் கட்டளைக்கு மாறாக எண்ணுகிற ரோஷத்தினால்? நீங்கள் எது வரையிலிருப்பீர்களோ அது வரையில் ஷ்டி பாத்தியதையை இராஜாவானவர் தன் அதிகாரமும் தேசத்திய க்ஷேமத்தையும் பரிபாலஞ் செய்யும்படியாக சத்துருவின்[735] கெட்ட முயற்சியை பரிகாரஞ்[736] செய்யவேண்டியதாகும். என்றால் நியாயம் ஆதி[737] விருத்தியின்படி எவர்கள் நம்மைக் கொல்ல வேணு மென்று முயற்சிப்பாரோ அவர்களுடைய ஜீவனையுங்

---

725. ஸ்ரீராம் (5-344) என்று தொடக்கத்தில் உள்ளது போல இங்கு "ஸ்ரீசங்கர்" என்றுள்ளது

726. அமர்சிங்கு - 1783 முதல் 1798 வரை ஆட்சி செய்தவர்

727. தனியாக வைத்து - அரச பதவியிலிருந்து நீக்கி

728. சரபோஜி - இரண்டாம் சரபோஜி

729. ஸ்திரமாகும் - உறுதியாகும்

730. பாத்தியஸ்தர் - உரிமையுடையவர்

731. பிரஜைகள் - குடிமக்கள்

732. தேசவாஸி - தேசத்தில் இருப்பவர்

733. பிரபஞ்சம் - உலகம்

734. பிரதிகக்ஷி - எதிர்க்கட்சி

735. சத்துரு - பகைவர்

736. பரிகாரம் - நீக்குதல்

737. ஆதி - முதலாகிய

கொல்ல வேண்டும். நமக்குப் பாத்தியமிருக்கிறது. பாத்தியத்தை எந்த அதிகாரத்தின் மேல் ஸ்தாபனஞ் செய்வார்களோ அவ்வதிகாரம் பிரளும்படியாக எந்த பிடிவாதஞ் செய்வார்களோ அதே அல்லது நியாயத்தின் சத்துருவாகி அவனை பாதாளத்தினடியில் தள்ள வேண்டுமென்று. சுவாமியின் உத்திரவிருக்கிறது. இப்படி யிருக்க தங்களுடைய ஸம்சாரமிந்தப் படியிருக்கிறது. அந்தப் பிரசங்கத்தின் நிலைமையைக் கவனிக்காமல் நியாயத்தின் முதல் நடந்ததற்குக் காரணங் கொள்ளாமல் இப்படிப் புத்தியின்மையினால் வீண் பிரயத்தினம் செய்கிற வரையில் வேண்டியவர்களிடமிருந்து ஆகவேண்டியதைத் தானாகவே பிரயோசனமில்லாதபடிஆகி இப்படியே முழுகிப்போக வேண்டியது தான். ஆனால் அப்பேர்ப்பட்ட பாவபுத்தியை ஒழித்து, பாத்தியஸ்தனர்ன இராஜாவிடத்தில் நல்ல பிரஜைகள்எவ்விதத்தில்ஸேவை செய்வார்களோ அப்படிச் செய்து, நியாயமாக ஸ்தாபித்திருக்கும் இராஜ்யத்தை காப்பாற்றும்படியாக முயற்சித்து இராஜ்யத்தைச் சீக்கிரத்தில் பரிரக்ஷை[738] ........என்று தேசத்தில் க்ஷேமமும் ஐசுவரியமும் பெருக்கும்படியாக நியாயமாக தம்முடைய ஸம்சாரத்தை அவேக்ஷை? யை எண்ணும்தான். தற்கால மிருக்கிற இராஜா நல்ல பிரஜைகளிடத்தில் எவ்வித மனஸார போஷிக்க வேணுமோ அப்படியே சென்ற பிரசங்கத்தை மனத்திலிருந்து ஒழித்துவிட்டு உங்களுடைய வர்கங்கத்தையும் கிருபையுடன் அடக்கி நிலைநிறுத்த முடியும். சுவாமியின் அருளினால் ஒருவேளை சமயத்தில் இப்பேர்ப்பட்ட பிரசங்கத்தின் சீக்கிரம் அப்பொழுதாவது இருந்த தம்முடைய சம்சாரம் முன்னாலிருந்த விளக்கிலிருந்து விடுதலையடைந்து இனி ஸந்தோஷத்துடன் போகத்தை அனுபவிக்கலாம். ஷெ எண்ணப்படி நம்முடைய ஆங்கிலேய இராஜாங்கத்தில் நாம் நம்முடைய நடத்தையை அதிகாரமின்றியோ செய்தால் அதற்கு மாறாக எவர்கள் நடக்கிறார்களோ அவர்களுக்கும் நமக்கும் அப்பொழுதிருந்த ஸம்பந்தமில்லை. இப்படியிருக்கையில் நாம் எவன் பாவீ[739] என்று நிச்சயமாக அறிகிறோமோ அவர்களை நம்முடைய சிநேகிதர்களுக்கு.......செய்விப்பார் போல நம்மால் செய்யமுடியாது. ஏனென்றால்எதனால்நம்முடையஸாஹபர?த்தினால்[740]நம்முடையபீடை[741]

அகன்று சௌக்யமாக இருக்க வேணுமென்று எண்ணிக் கொண்டிருக்கிறோம். ஆனால் நம்முடைய மனதிலுள்ளதிற்குமாறாக யிருக்கும் நடவடிக்கைகளை விட்டு விட்டு நீதி, நியாயம் புத்திக்கு ஆரம்பித்து தயையை அடைவதற்குத் தகுதியுள்ளவர்களாயிருக்கவேண்டுமென்று நம்முடைய எண்ணத்தின்படி பிரகாரம் துகையும் தற்பொழுது சொன்ன புத்திவாதப் பிரகாரம்[742] நடக்க ஆரம்பிப்பதற்கு நீங்கள் தயாராயிருப்பீர்கள். ஆனால் தங்களுக்குத் தங்கள் ஸம்ஸாரத்தை (குடும்பத்தை)யும் காப்பாற்ற இடமுண்டு. இவ்வதிகாரத்தை நிலைநிறுத்தும்படி எப்படிச் செய்வது என்றுமிஸ்தர்டொர்ன்[743] அவர்களுக்குக் கும்பணியின் கட்டளையின்படி யோக்யதையுமிருப்பதால் எவனொருவன் எதுவரையில் அந்த வழிக்கு மாறாக முயற்சி செய்தானோ அதுவரையில் அவனுக்குச்சகாயம் செய்து காப்பாற்ற ஷெ சாஹேபிற்கு தைரியம் ஒருபொழுது கொடுக்காது.

---

738. பரிரக்ஷை (?)

739. பாவீ - பாவி

740. ஸாஹபரத்தினால் - ஸாஹஸத்தினால் - துணிவால்

741. பீடை - துன்பம்

742. புத்திவாதப் பிரகாரம் - அறிவாராய்ச்சியின் படி

743. டொரின் - கி.பி.1789 முதல் தஞ்சையில் ரெஸிடென்டாக இருந்தவர் (பக்.65)

(7) ........எல்லாம் நம்மையடைய வின் யோசனையை விட்டுவிட்டு நியாய அதிவிருத்திக்கும்[744] பிரபஞ்சத்தின் யோக்கியதைக்கும்[745] அங்கிகரித்து[746] நாம் காரியம முதலான அனுகூலம் ஆகும்படி நடக்க வேண்டும். நாம் தற்பொழுது சொன்னபடி இப்பேர்ப்பட்ட நடத்தை நம்முடைய - ஆனால் சகாயஞ் செய்வதற்கு மேஸ்தர் டோர்ன் சாஹேபிற்கு இடமிருந்து இராஜாவும் தயையுள்ளவனாகி யிருப்பதற்கு மார்க்கமிருக்கும்தான். இல்லாவிடில் தங்களுடைய எண்ணமிருக்கிறது. நாம் இப்பொழுது தெரிவித்த மனோகுண்யத்தின்படி[747] காப்பாற்றுவதற்குத் தயாராயிருப்போம். ஆனால் உபேக்ஷை[748] செய்தாலல்லவோ முயற்சி செய்வது நமக்குக் கூட கெட்டது உண்டாகும்.

(8) ஸ்ரீதேவாதி தேவர்[749] இவ்விண்ணப்பத்தைக் கவனிக்க வேணும்.
இன்று அடியேன் தகப்பனார் தெவசமானதால் பிராமணர்களுக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்துவிட்டுச் சாப்பிட்ட பின்பு சிதம்பரத்திற்குச் சாயங்காலம் வந்து சேர்ந்தேன். வருகையில் தேவஸ்தானத்தார் வந்து வழியில் கண்டு இருப்பிடத்திற்கு அம்மல்தாரும்[750] வந்திருந்தார். முதலிலிருந்த அம்மல்தார் தாதாராவ் மலையாளத்திற்குப் போயிருக்கிறார். தன்னுடைய தம்பியை உத்யோகத்தில் நியமித்து விட்டு, நேற்று வேறு கோனேர் றாவ் என்னுமிருவரும் உலுப்பைச்[751] சாமான்களைக்கொண்டு வந்தார்கள். கொண்டு வந்த ஆட்களுக்கு 4 ரூபாயைக் கொடுத்து விடையங்[752] கொடுத்தனுப்பித்தேன். நாளைக்குப் புறப்பட்டுத் தாதன்சாவடிக்குச் செல்ல நிச்சயித்திருக்கிறேன். புறப்படுகையில் அம்மல்தார் வந்தால் அவருக்கு வேஷ்டிகளைக் கொடுத்தனுப்புகிறேன்.

ஸ்ரீதேவாதிதேவர் ஒவ்வொரு வேலையையும் தாமே பார்க்கிறார்களென்ற சங்கதியை மேன்மேலும் அடியேன் கேட்டு அடைகிற சந்தோஷம் ஆகாயத்திலும் இடம்பெற முடியாமலிருக்கிறது. அது அடியேனுக்கும் தேவாதி தேவர்களுக்குத் தான் தெரியும். இனிமேலும் இம்மாதிரியான சந்தோஷச் சங்கதிகளைக் கேட்கும்படி செய்வீர்களென்று நம்புகிறேன்.

சுங்கம் உத்யோகம் சக்ரபாணி பண்டிதருக்குக் கொடுத்ததை தேவாதிதேவருக்குத் தெரிவித்தேன். அவருக்குச் சம்பளம் 15 சக்.செய்ய வேணுமென்றும் தெரிவித்தேன்.

---

744. அதிவிருத்தி - வளர்ச்சி

745. பிரபஞ்சம் - உலகம்; யோக்கியதை - தகுதி

746. அங்கீகரித்து - ஏற்றுக்கொண்டு

747. மனோகுண்யம் - உள்ளக்கருத்து

748. உபேக்ஷை-புறக்கணித்தல்

749. தேவாதிதேவர் என்றது இரண்டாம் சரபோஜியை

750. அம்மல்தார் - வருவாய்த்துறை அலுவலர் அல்லது ஜில்லா அதிகாரி (பக்.74)

751. உலுப்பை - அதிகாரிகள் பெரியோர்கள் முதலியவர்கட்கு அனுப்பும் உணவுப் பண்டங்கள்.

752. விடையம் - வெற்றிலைப் பாக்குச் சுருள்

விண்ணாற்றங்கரையில் அடியேன் தங்கின பொழுது சக்ரபாணி பண்டிதர் மனுவைக்கொடுத்தார். சுங்கத்திலேயே அவரை நியமித்துச் சொன்னதாவது முன்பு 67 ஆயிரம் சக். சுங்கத்தில் வந்து கொண்டிருந்தது. அப்பொழுது 20 சக். சம்பளமிருந்தது. இப்பொழுது அதற்குப் பாதிகூட வசூலாவதற்குச் சிரமமாகி 25 ஆயிரம்சக். கூட வசூலாவது சிரமமாக இருக்கிறது. ஹாரின் அவர்கள் நெல்லைக் கொண்டு வந்து விற்றதினால் அதற்காகச் சுங்கத்தில் நியமிக்கக் கூடாதா என்றதினால் ஒருகாசு சிலவானாலும் வேறு எதிலாவது சிலவு செய்ய தேவாதி தேவருடைய கட்டளை யில்லாததினால் ஹூ ஜூர் பாவலோகிலாவது?[753] அல்லது மோஹரீரிலாவது? மனு செய்தால் ஹூ ஜூருக்குத் தெரிவிப்பதென்று ராமசாமி பண்டிதருக்கு

அடியேன் சொல்லி யிருந்தேன். அடியே னெழுதிய இரண்டு விதங்களில் தேவாதிதேவர் எதை வேண்டுமானாலும் கொடுக்கலாம். அறியவும், சரணம் சரணம் கோடி தடவை சரணம் தை மீ 18 உ புதன்கிழமை.

(8).............

தை மீ 23 உ திங்கட்கிழமை மாகமாதம் கிருஷ்ண பக்ஷம் சதுர்த்திக்கு[754] லிங்கசெட்டி சாவடியிலிருந்து அப்பாஜி எழுதிய கடிதத்தின் நகல்.

ஸ்ரீ

ஸ்ரீதேவாதி தேவர் வணக்கம். விண்ணப்பத்தைக் கேட்க வேணும். இன்று கோமுட்டி சத்திரத்திலிருந்து அடியேன் லிங்கசெட்டிச் சத்திரத்திற்கு[755] வந்து சேர்ந்தேன். மங்கம்மாவின் உப்பளத்தில் யானை புதைவதால் மேலண்டையிலிருந்து கொண்டு வந்தேன். லிங்கசெட்டியின் உப்பளத்தில் யானை வரலாமென்று இங்குள்ள குடிகள் சொன்னதின் பேரில் கொண்டு வந்தேன். உப்பளத்தில் யானை கால் வைத்ததும் புதைகிறது. ஆகையால் முகத்வாரத்[756] திலிருந்து கொண்டு வரும்படி ஹரகாரேயும்[757] டப்பேகரியும்[758] கப்பலோட்டிகளும், காவல்காரர்களுடைய சிப்பாய்களையும் கூட கொடுத்து அனுப்பித்தேன். நாளையதினம் பாலாற்றுக்கு வந்து சேருவார்கள். அறியவும். மேஸ்தர் டூரியன் அவர்கள் தேவாதி தேவருடைய சன்னிதானத்தில்[759] சொல்லிய விஸ்தாரம்[760] இராமசாமி பண்டிதருடைய கையால்யெழுதியதைப் பார்த்து மிகவும் சந்தோஷமாயிற்று. ஏனென்றால் ஸ்ரீதேவாதி தேவருக்கு சீமையிலிருந்து பட்டாபிஷேகத்திற்கு முதல் கடிதத்தைக் கொண்டு

---

753. பாவலோக் (?)

754. மாக-மாசி; கிருஷ்ணபக்ஷம்- - தேய்பிறைப் பக்கம்; சதுர்த்தி-நான்காவது நாள்

755. லிங்கிசெட்டி (சத்திரம்) : லிங்கிசெட்டி என்பது சென்னையிலுள்ள லிங்கிசெட்டித்தெரு ஆகலாம்

756. முகத்துவாரம் - ஆறு கடலோடு கலக்குமிடம்

757. ஹர்காரா - ஒற்றர் (பக்.76)

758. டப்பேகரி (?)

759. சன்னிதானத்தில் - முன்னிலையில்

760. விஸ்தாரம் - விவரமான செய்தி

வந்தார். இப்பவும் தேவாதி தேவருடைய யோகாதிசயத்தினால்[761] நல்லதுதானுண்டாகுமென்று அடியேனுக்கும் தோன்றுகிறது. மேஸ்தர் ஹகிஸன் அவர்கள் நிஜமான சுங்கத்தின் பாபத்துக்குதுகை 1300 சொச்சம் புலி விராகன்[762] குதிரையின் பாபத்துக்காக[763] வைத்துக் கொள்ளுகிறேனென்று மேஸ்தரவர்கள் சொன்னாலும் தேவாதி தேவர் சொல்லுவதில் தங்களுடைய படிச்சிலவுக்காக[764] இருக்கட்டுமென்று சொல்லவும். அப்படியன்னியில் இப்பொழுது குதிரைகளை வாங்குவதற்கு என்று அவராகவே சொன்னால் மிகவும் மேன்மை. ஏனென்றால் முதலில் அடியேனுக்கு அந்தத் துகையைச் சர்காருக்கு எடுத்துக்கொண்டு போகுமென்று மேஸ்தரானவர் சொன்னபொழுது, அடியேன் தங்களுக்கே நாம் படிச்சிலவைக் கொடுக்க வேண்டிய பாக்கி யிருக்கிறதே அதற்காக வென்று வரவு வைத்துக் கொள்ளுமென்று சொன்னேன். அதற்குச் சரி என்றார். இப்பொழுது தேவாதிதேவர் என்ன சொல்லுகிறாரோ என்று ஒருவேளை விசாரித்ததினால் இப்படி எழுதினேன். அவருடைய நிலைமை மிகவும் கூர்மையானது தேவாதி தேவருக்குத் தான் தெரியும். ஆகையால் அடியேன் அதிகவிசேஷமாகஎழுதவேண்டியதில்லை. வேறிடத்திலிருந்தும் அவரும் செய்த உபகாரத்தை மிகப்புகழ வேணும். அப்பப்போ அவருக்கு மிகச் சந்தோஷம். மேஸ்தர் ஜ்யானவர்கள் சொல்லுகிறதில் தேவாதிதேவர் நீங்கள் செய்த உபகாரத்தை அதிகமாக நினைக்கிறார். ஒரு தடவை சொன்னதினால் அடியேன் சொன்னேன். அவையெல்லாம் நிஜமென்று தோன்றி மிகவும் சந்தோஷமடைந்தார். முதலில் போர்க் குதிரைகளிரண்டும் காபூல் தேசத்திய குதிரைகளிரண்டும். பின்பு அரபிக் குதிரைகள் மூன்றும் ஆக ஏழு குதிரைகளின் கிரயமுஞ்[765] சேரவில்லையே. அதையும் தேவாதிதேவர் அவரைப் பார்க்கும்பொழுது இதற்கெல்லாம் துகை சேரவில்லையே என்று சொன்னால் அதுவும் மிகச் சந்தோஷம், அறியவும். சரணம் சரணம் கோடி கோடி சரணம்.

*(8) ...........*

மாகமாதம் கிருஷ்ண பக்ஷம் சதுர்த்தி[766] திங்கட்கிழமை இரவில் 8 மணிக்கு தை மீ 23 வ

*(8)........*

தை மீ 22 வ ரௌத்திரி..........ஞாயிற்றுக்கிழமை கோமுட்டி சாவடியிலிருந்து எழுதிய கடிதத்தின் நகல்:- ஸ்ரீதேவாதி ஸ்ரீ தேவர்[767] தயவுசெய்து விண்ணப்பத்தைக் கேட்க வேணும்.

அடியேன் ஆணிக்கார சாவடியிலிருந்து சிதம்பரம் இறங்கி, அவ்விடமிருந்து தாதன் சாவடிக்கு வந்து, அவ்விடமிருந்து கூடலூரில் தங்கி, அவ்விடமிருந்து புதுச்சேரிக்கு நேற்று வந்து

761. யோகாதிசயம் - சுகநிலை

762. புலிவிராகன் - புலி வராகன் (பக்.150)

763. பாபத்து - விஷயம்; கணக்கு

764. படிச்செலவு - சொந்தச் செலவு

765. கிரயம் - விலைப்பொருள்

766. மாசித் தேய்பிறையில் நான்காம் நாள்

767. தேவாதி தேவர் என்றது இரண்டாம் சரபோஜியை

சேர்ந்தேன். கூட லூரும் புதுச்சேரியும் இவ்விரண்டும் கும்பனியின் தா லூகாவா யிருந்தா லும் தேவாதி தேவரிடத்தில் வெகுமானியமாய் (மரியாதையாய்) எண்ணி தேவாதி தேவருடைய அடியேன் வந்தவனை வெகுமரியாதை செய்கிறதென்று கும்பனியின் ஜாகீரின் கலெக்டரவர்கள் டுரியனுடைய கடிதத்தால் தன்னுடைய ஜில்லாவில் எங்கே யிறங்கினா லும் வைக்கோல் பில்லு, ஹாஜீர் செய்து, இருப்பிடமும் செய்து வைத்துக்கொண்டு, ஒவ்வொரு காரியஸ்தரும் அங்கங்கே யிருக்குமாறு ஏற்பாடு செய்திருந்தார்.

புதுச்சேரியில் நம்முடைய இராஜ்யத்திலிருந்து ஒருவரும், பிரெஞ்சுக்காரருடைய காலத்திலுங் கூட போகவில்லை. சமீப காலத்தில் ஆங்கிலேயருடையதான பின்னர் சிவராயர்[768] எல்லா பிருதுகளை வெளியே நிறுத்திவிட்டு அவர் மட்டும்போயிருந்தார். பிறருக்குத் தெரியாதபடி திரும்பி வெளியே வந்தாராம். இப்பொழுது 50 காவல்காரர்களுடைய ஈட்டிகளும், தேவஸ்தானத்தின் தேவதாசிகளும் வகையறாகளும் வாத்தியக்காரர் 50 பேர்கள் உத்யோகஸ்தரின் வேலைக்காரர்கள் 50,60 பேர்கள். இப்படி எல்லோரும் தட்டுகளை எடுத்துக்கொண்டு கோட்டைக்கு வெளியே வெகுதூரம் வந்து எதிர்கொண்டழைத்து கோட்டையில் விடுதிகளைச் செய்திருக்கிறது, வாருங்கள் என்றார்கள். அந்தப்படியே போகையில் வாத்தியங்கள் கோவில்களுடையதானதால் நிறுத்த வேணுமென்றதால் அங்குள்ள காரியதஸ்தர் வெங்கடாசல பிள்ளை என்பவர் வந்து தேவாதி தேவருடைய பெயருக்கு அதைக் காட்டிலும் 100 மடங்கு நாம் மரியாதை செலுத்த வேணுமாகையால் நம்முடைய வழக்கப்படி வாத்தியங்களை நிறுத்தக்கூடாது என்று தெருக்களைச் சுற்றி இறங்குமிடத்திற்கு அழைத்துச் சென்றார்கள். அங்கே உலுப்பைச் சாமான்கள், பழதினுசுகளின் தட்டுகள் கொண்டு வந்து முன்னிலையில் வைத்தார்கள். உலுப்பைகள் வேண்டியதில்லை என்று அடியேன் சொல்லியும் கட்டாயம் செய்ததினால் உலுப்பைகளைப் பெற்றுக் கொண்டேன். பிறகு மஜம்தார் [769]கிருஷ்ணஸ்வாமி அங்குவந்து சாப்பிடக்கூப்பிட்டார். அவரையும்கண்டு அதிகாலையில் எல்லோரையும் கோமுட்டி சாவடிக்கி அனுப்பிவிட்டு அடியேனும் புறப்படுகிற சமயத்தில் ஸ்ரீதேவாதி தேவருடைய கையால் எழுதிய கடிதம் கோடி சூரியபிரகாசமானம்[770] ஆனது போல வந்து சேர்ந்தது. அந்த க்ஷணத்தில் அந்த எழுத்துகளின் வரிசையை அடியேனுடைய திருஷ்டி[771] பார்த்தது. அதனால் பஞ்சப் பிராணங்களின்[772] ஐந்து ஆரத்தியைச்[773] செய்து, அந்தக்காகிதத்தை திரிகர்ணத்தினால்[774] சுற்றினேன். அந்தக் கடிதத்தில் சிற்சில அடியேனுடைய வேலையினால் தேவாதி தேவருக்குச் சந்தோஷமானதென்று எழுதியிருந்தது. ஆனால்

---

768. சிவராயர் - அமர்சிங்கரின் அன்புக்குரியவராய் அவர் காலத்தில் சர்க்கேலாக இருந்தவர் (பக்கம் 28)

769. மஜும்தார் - நிலவரிக்கணக்கு எழுதும் பொறுப்புடையவர்

770. பிரகாசமானம் - பிரகாசம் - ஒளி

771. திருஷ்டி - கண்

772. பஞ்சப்பிராணன் - உடலிலுள்ள பிராணன், அபானன், வியானன், சமானன், உதானன் என்ற ஐந்து வாயுக்கள்

773. ஆரதி - ஆரத்தி - தீப ஆராதனை

774. திரிகரணம் - மனம், வாக்கு, காயம் என்ற மூன்று

ஒரு தடவை பார்த்ததில் அடியேன் பேரில் நம்பிக்கை வைத்து அடியேன் என்ன செய்தாலும் நம்முடைய நல்லதுதான் செய்வான் என்று ஸந்தேகமில்லாமலும் அடியேனுடைய தம்பி, குழந்தைகள் போல காப்பாற்றிய ஜனங்களிடமிருந்து கூட நடைபெறாத மரியாதை அரைக்காசு பெறாத அடியேன் பேரில் தயவு செய்து, தேவாதி தேவர் நடத்திய மரியாதைக்கும் அடியேன் என்ன பிரதி உபகாரம் செய்தால் கடைத்தேறுவான்[775]. இப்பொழுது அடியேனானவன் அதிகாலை முதற்கொண்டு இரவில் படுக்கும் வரையில் 12 மகால்[776] 18 கார்கானாவில்[777] எந்நேரத்தில் எவ்விதமான வேலை ஏற்படுமோ என்று ஜாக்கிரதை செய்வதுதான் அடியேனுக்கு அவசியம். ஆனால் இவ்வேலை அற்பமானது. அடியேனானவன் கோடி கோடி ஜன்மங்களெடுத்து தேவாதி தேவருடைய வேலையைச்சுத்த மனதுடன் செய்பவன்தான். அடியேனுக்கு அடியேனாகி ஸ்வப்னம்[778] சுஷுப்தியிலும்[779] ஒவ்வொரு வேலையிலும் பிசகாமல் வேலையைப் பார்த்ததினாலேயும் தேவாதிதேவருடைய ஒருநொடி கிருபைக்குப்[780] பிரதி[781] செய்ய முடியாது. அப்படிப்பட்டதற்கு தேவாதி தேவருடைய பூர்ண அபிமானம் ப்ரசூர்?[782] ஆகிவற்கு எழுதியதைப் பார்க்க அடியேனுடைய தேகம்[783] வெகு பெருகினது. அது தேவாதி தேவருக்குத் தெரிந்திருக்கும்.

அண்ணாசாமியும் அப்பாசாமி வகையறா தேவாதி தேவருடைய தாசி, தாஸர்கள்[784] அந்த ஞாபகத்தையே அடியேன் நினைக்க வேண்டிய அவசியமில்லை போல அவர்களே தேவாதி தேவருடைய சரணத்தின் தூசியாகி இருப்பதுதான் அடியேனுடைய வேண்டுகோள்.

இன்று முகாம் கோமுட்டிசாவடியில் அடியேன் செய்தேன். நாளையதினம் இரண்டு உப்பளங்களுக்கு அப்பாலுள்ள லிங்கசெட்டியின் சாவடியில் முகாம் செய்து, நாளையன்னிக்கு பளவக்கார[785] சாவடியில் முகாம் செய்து புதன்கிழமை முட்டாக்கார சாவடியில் தங்கி வியாழக்கிழமை சென்னைக்குப் போய்ச்சேருகிற தீர்மானத்தை அடியேன் செய்து இருக்கிறேன். அடியேனுக்கிருந்த சிரங்கும் வாயுவின் உபத்திரவ முழுமையும் குணமாகி

775. கடைத்தேறுவான் - ஈடேறுவான்

776. 12 மகால்; போதேமகால்; பாகா மகால்; தர்ஜி மகால்; ஆடே மகால்; கோட்டி மகால்; தட்டி மகால்; பால்கி மகால்; முபதக் மகால்; இமாரதி மகால்; டங்க மகால்; ஜாசூத மகால்; தாஸ்தான் மகால் என்பன (பக்கம் 453)

777. 18 கார்கானா; ஜாம்தார்; ஸர்பத்; ஜிராத்; ஹத்தி; அப்தார்; தாரு; சராப்; நகார்; தாலிம்; தோப்; சேத்; தவா; அம்பார்; தப்தர், ப்ராஸ்; தஸ்த; துஸ்த; ஜர்கா - என்பன (பக்.452-453)

778. ஸ்வப்னம் - கனா

779. சுஷுப்தி - சுழுத்தி - புலன்கள் செயலற்று உறங்கும் நிலை

780. கிருபை - அருள்

781. பிரதி - ஈடு

782. ப்ரசூர் ஆகிவற்கு - பிரசுரம் ஆகுமாறு - வெளிப்படுமாறு.

783. தேகம் - உடம்பு

784. தாசீதாஸர்கள் - அடியார்க்கு அடியவர்

785. பளவக்கார - பவழக்கார

தேவாதி தேவருடைய கிருபையினால் சௌக்யமா யிருக்கிறேன். தேவாதி தேவருடைய சரீரம் சௌக்யமாயிருக்கிறதென்கிற சங்கதியைக் கேட்க அடியேன் மேகத்தின் நீரை (மழையை) ச்யாதக பக்ஷி[786] எப்படியோ சந்திரனுடைய உதயத்திற்கு சகோரபக்ஷி[787] எப்படியோ அப்படி அடியேனிருப்பதால் அடிக்கடி சங்கதிகளை எழுத உத்திரவிடும்படியாக உத்திரவு செய்யவேண்டும்.

மேஸ்தர் டூரியனுக்கு ஒரு கடிதம் அனுப்பி யிருக்கிறது. அது தேவாதி தேவருக்குச் சரியென்று தோன்றினால் அனுப்பக் கட்டளையிட வேண்டும். சரணம் சரணம் கோடி தடவை சரணம். மாக மாதம் கிருஷ்ண பக்ஷம் திருதியை[788] ஞாயிற்றுக் கிழமை இரவு 10 மணி.

*42,ஹிஜரி 1193*
*(9) ஸ்ரீசங்கர்* [789]

ஸர்காரிலிருந்து திரியம்பக சம்பாஜியின்[790] பெயரால் உத்திரவு கடிதம் சந்த் 22 ரவிலாஸனி 1193[791]ல் எழுதியது. இனிமேல் ஜமாதிலாவல்[792]முதற்கொண்டு எழுதுகிறேன்.

(1)சத்திரபதி மகாராஜாவானவர்[793] ஜனரலவர்கள் ஆனி மாதத்திய வாய்தா[794]வுக்காக லக்ஷம் வராகன் கொடுத்தால் வெகு சந்தோஷமென்று சொன்னாரென எழுதினீர்கள். ஆனால் அத்துகை எப்படிச் சேரும்? சித்திரையின் துகை சேர்ந்த நான்கு லக்ஷமும் சேர்ந்தாற்போல ஆயிற்று. அதெப்படி யென்றால் அமானத்து பாபத்துக்காக லக்ஷம் வராகனும் இவ்வருஷத்தியதும் சேர்ந்து நான்கு லக்ஷம் அடைந்தாற் போல இவ்விஷயத்தில் ஜனரலைக்[795] கேட்டதில் முதலில் கவர்னருக்கு[796] எழுதியிருக்கிறது. ஆனிமீ த்தில் கொடுக்க

786. ச்யாதக பக்ஷி - சாதக பட்சி - வானத்தினின்று விழும் மழைத்துளியைப் பருகி வாழும் பறவை

787. சகோர பக்ஷி - நிலாமுகிப்புள் - சந்திரகிரணங்களை உணவாகக் கொண்டு வாழ்வதாகக் கருதப்படும் புள் வகை.

788. மாகமாதம் - மாசிமாசம்; கிருஷ்ணபக்ஷம் - தேய்பிறைப் பக்கம்; திருதியை - மூன்றாம் திதி.

789. 197சி-43-4 காண்க

790. திரியம்பக ஸம்பாஜி - இவரே இரண்டாம் துளஜா காலத்திலும், அமர்சிங்கு காலத்திலும் அவர்களுடைய வக்கீலாக இருந்தவர் ஆவர்.

791. ஹிஜ்ரி 1193 + 586 = கி.பி.1779 ரவிலாஸனி என்பது ரபிஉல் ஆஹிர் (4ஆவது மாதம்) ஆகலாம் (ஹிஜ்ரி ஆண்டுடன் 586 சேர்த்தால் ஆங்கில ஆண்டு வரும் (பக்கம் 368) ஹிஜ்ரி ஆண்டு என்பது முகம்மது நபிகளின் மதீனா யாத்திரையினின்று கணக்கிடப்படும் யாண்டுமுறை)

792. ஜமாதிலாவல் - அரபு 5ஆவது மாதம்

793. மகாராஜா என்றது இரண்டாம் துளஜாவை

794. ஆனி மாசத்திய வாய்தா - துளஜா இரண்டாவது தடவை ஆட்சியெய்தியதும் கும்பனியுடன் ஒரொப்பந்தம் செய்து கொண்டார். அதன்படி தஞ்சையில் ஆங்கிலேயர் படையிருக்கும். அப்படையின் செலவுக்காக நான்கு லக்ஷம் வராகன் கொடுப்பதாக அரசர் இசைவு தந்தார் (பக்கம் 49) கொடுக்க வேண்டிய முறை; நவம்பர் 20,000; டிசம்பர் 40,000; ஜனவரி 40,000; பிப்ரவரி 1,00,000;மார்ச்சு 1,00,000; ஏப்ரல் 1,00,000 (பக்கம் 50 அடிக்குறிப்பு) எனவே ஆனி மாசத்திய வாய்தா என்பது பொருந்தாது; அனாமத்தாக - இனாமாக கேட்கப்பட்டது போலும்.

795. ஜெனரல் என்றது சேனாதிபதியை

796. கவர்னர் - தாமஸ் ரம்போர்ட் ஆகலாம்.

வேண்டிய லக்ஷம் வராகனும் அமானத்து[797] பாபத்து நாலுலக்ஷம் வராகன் கொடுக்க வேண்டியதில்லை போல் கும்பனியிலிருந்து தஸ்தாவேஜை எழுதிக் கொடுத்தால் கும்பனிக்கு இனாம் கொடுக்கிறேன். இல்லாவிடில் வருகிற வருஷமுதற் கொண்டு ஒவ்வொரு வருஷத்திற்கு லக்ஷம் வராகன் வீதம் கொடுக்க ஜனரலுக்குக் கேட்கப்பட்டது. கவர்னருக்கு.......... அதற்கு இன்னும் பதிலில்லைஇதைத் தவிர நம்முடைய செய்யவேண்டிய வேலைகளுக்கு யாதி தாஸ்து[798] எழுதி ஜனாவிடம் கொடுத்த தகவலைக்கௌனருக்குஎழுதியிருக்கிறது.அதற்கு இன்னும் ஒரு வேலையைக்கூட செய்துகொடுக்கவில்லை. கனகஸபாபிள்ளையை இன்னமும் ஸ்வாதீனப்படுத்தவில்லை போல் சில விபரங்கள் எழுதி நெல்லின் கம்மியால் துகை பாக்கி விழுந்ததென்று எழுதிஅந்தக்கம்மியினால் நாஇராஜ்யத்தில்முளுக்கிரி[79] வந்துஒன்றை மாதமாக உட்கார்ந்து திரும்பித் தஞ்சாவூருக்கு வந்து சேர்ந்தோம். இதைக் கண்டு கௌனருக்குக் கடிதமும் எழுதியனுப்பி யிருக்கிறது. லாட் பிகாட்[800] அவர்கள் செய்த கறாரின்படி கும்பனிக்கு 12[180] லக்ஷம் வராகன் செல்லாயிருக்கிறது. 4 லக்ஷத்திற்கு ரசீது கொடுத்தார் பாக்கிக்கு ரசீது கொடுக்கவில்லை. துகையைப் பெற்றுக்கொண்டுரசீது. கொடுக்காமலிருக்கிறதை எங்கும் பார்க்கவில்லை என்று இப்பவும் செய்து கொடுக்கவேண்டிய வேலைகளைச் செய்து கொடுத்து, கனக்[802] என்பவரை ஸ்வாதீனஞ் செய்து கொண்டு அமானத்துக்காக[803] துகை ஒரு லக்ஷம் இனாம் வாங்கி 4 லக்ஷத்தை தள்ளி விடுகிறது. அல்லது வருகிற வருஷம் முதற்கொண்டு ஒரு லக்ஷம் வீதம் வாங்குகிறது. இரண்டிலொன்று தீர்மானித்தால் ஆனி மாதம் வாயிதா பாபத்து துகைக்கு ஏற்பாடு செய்யக்கூடும். இல்லாவிடில்ஷி துகையை கொடுக்கப் போவதில்லை. நடந்த வார்தைக்களுக்குத் தவறாமல் நடக்கும்படியாக கௌனருக்கும்,[804] ஜனரலுக்கும் சொல்லுகிறது. ஜனரலுக்கு மோதிரம் பற்றி 13 ஆயிரம்வராகனுக்கு இப்பொழுது பாதித்துகையைக் கொடுக்கிறது. பாக்கிக்குபத்திரத்தை எழுதி கொடுக்கிறது. இந்தப்படிக்கி ராம்நாயுடுவுக்குச் சரிப்படுத்துவதற்குச் சிற்சில விபரத்தை எழுதி மத்தியஸ்தருக்கும் சில்லறைக் கடன்காரர்களுக்கும் கொடுக்க சாஹுகார[805]ரிடமிருந்து ஒரு மாஸத்திய வாயிதாவின் மேல் ஹுண்டிகளை அனுப்பியிருக்கின்றன. பூகணஜீ 8000. பூதரஜீ 8000 ஆக 16 ஆயிரத்திற்கு 2 ஹுண்டிகளை அனுப்பியிருக்கிறது. இதைத்தவிர மிஸ்தர்ஸ் ஸல்வனின் ஹுண்டிக்காக பொன்னி நாராயண பிள்ளையானவர் தங்களிடம் கொடுத்த வகையில் 4000 வராகனிருப்பதால் அதுவும் சேர்ந்து 20 ஆயிரம் வராகனாயிற்று.

---

797. அமானத்து - அனாமத்து - தனிப்பட்டமுறை

798. யாதிதாஸ்து - யாதாஸ்து - நினைவுக்குறிப்பு

799. முளுக்கிரிவந்து - சுற்றிவந்து (?)

800. லார்டுபிகாட் (Lord Pigot) - இவரே இரண்டாவது துளஜாவை இரண்டாவது தடவை பட்டம் எய்த உதவி செய்தவர்; ஒப்பந்தமும் செய்து கொள்ளுமாறு செய்தவர்.

801. 12 லக்ஷம் என்றது மூன்றாண்டுகட்குக் கொடுத்தமை

802. கனக் என்றது மேலேகண்ட கனகஸபா பிள்ளையை

803. அமானத்து - அனாமத்து - தனிப்பட்டமுறை

804. கௌனர் - கவர்னர் தாமஸ் ரம்போல்டு

805. சாஹுகார் - சாவ்கார் - பணம் கொடுக்கல் வாங்கல் செய்பவன்

(9) அதற்குச்சிலவு-மத்தியஸ்தருக்கு 10,000 கொடுக்கிறது. வேண்டியவருடைய பெண்ணுக்காக 3571 கொடுக்கிறதுஜான்ஓகலி சாயேப் பாபத்து 3000 உங்களிடமும் வைரமும் குதிரையும் வாங்கினால் கொடுக்கவேண்டிய பாக்கிக்குக் கொடுக்கிறது. 3000 ஆக 19,571 வராகன் ஷெ வீதம் அவாளவாளுக்குக் கொடுத்து மைஜாவிஸி? செய்கிறது போகபாக்கி வராகன் 429வராகன் ஜாஓகலி சாஹேப்புடைய வட்டிக். கணக்காகிறதற்கு அத்துகையைக் கொடுத்து, எல்லாத் துகைக்கும் எழுதி அனுப்புகிறது. அவருடை பெண்ணுக்காக ரவிக்கைத் துணியும் ஓகலி சாஹேபுடைய பத்திரமும் கறார் நாமாவையும்[806] வாங்கி அனுப்புகிறது. மத்தியஸ்தருடைய சொந்தத்திற்காக அனுப்பித்த 10 ஆயிரத்திற்கு ரசீது வாங்கி அனுப்புகிறது, இல்லாவிடில் எழுதிக் கொடுத்த பத்திரத்தில் வரவு வைக்கிறது. நீங்கள் நமக்காக வெகு கஷ்டப்பட்டீர்கள். மத்யஸ்தரும் நமக்காக வெகு கஷ்டப்பட்டார். பாக்கித்துகை வர வருஷத்தில் செல்லாகிவிடும். கௌனருடைய 8 குதிரைகள் வருவதற்கு உத்திரவிட்டு ஹனீஸ செய்யாமல் செய்து இருக்கிறார்கள் போல சில விஸ்தாரத்தை எழுதி சந்த் 2உ ஜமாதிலவல் 1193 ஹிஜிரி[807] முத்திரை போடப்பட்டது. 1779 மே மீ 21[808]உ சேர்ந்தது அறியவும்.

(9) 1193 ஹிஜிரி.

சத்திரபதி[809]யானவர் - கௌனரவர்கள் உங்கல் மேல் கௌனர்[810]சீமைக்குப்போவதாக நீங்கள் இங்கு எழுதியதின் பேரில் இங்கிருந்த யாரோ வெள்ளைக்காரன் எழுதியதின் மேல் கோபித்துக் கொண்ட விபரத்தை எழுதியிருக்கிறது. அதற்கு ஸாத்ரஸே?......... சாஹேபுடைய மூலமாக சொந்தமான விவகாரம் தீருமோ என்ன என்று சில விபரங்களை எழுதி சொந்தத்திற்காக முதலில் 15 ஆயிரம் கொடுத்தது. இந்தத் தேதியில் 15000 கொடுக்கப்பட்டிருக்கிறது. கௌனருக்கும் ஜனரலுக்கும் தெரிவிக்கிறது. கையின் மோதிரம் விஷயத்திற்கு இராமி நாய்க்கன் சொன்ன விபரத்தை எழுதினாலும் 2 மாதத்திய கெடுவில் துகை செல்லாகாது. சில விபரங்களை எழுதி ஜனரல் ஸ்மேத ஜரடஹீடின் பெயரால் எழுதிய கடிதத்தின் நோக்கம் உங்களுக்குச் சொன்னாலும் ஜனரல் நம்முடைய நன்மையைக் கோருகிறவராயும் வேண்டியவராயுமானதீல் நம்முடைய க்ஷேமமுண்டாகும்படியான சங்கதிகளை ஆராய்ந்து தெரிவித்ததின் பேரில் சந்தோஷமானதென்ற சில விபரங்களை எழுதி சந்த் மீ ஜமாதிலவல்[811] 1193 ஹிஜரி முத்திரை போட்டது. 1779 மேமீ 30உ அனுப்பித்தது. அது சந்த் 15மீ ஜமாதிலவல் 1193 ஹிஜரி முத்திரை போட்டது 1779 ஜூன் 1உ சேர்ந்தது அறியவும்.

---

806. கரார்நாமா - உறுதிப்பத்திரம்

807. ஹிஜ்ரி 1193 + 586 – கி. பி. 1779

808. மே 19க்கு 'சந்த் 3 ஆகிறது; அங்ஙனமே மே 21க்கு சந்த் 5 ஆகிறது. (சாமிக்கண்ணுப்பிள்ளை, VI, பக்கம் 360)

809. சத்திரபதி யென்றது இரண்டாம் துளஜாவை

810. கௌனர் - கவர்னர் தாமஸ் ரம்போல்டு

811. ஜமாதிலவல் - அரபு ஐந்தாவது மாதம்

*(9) சத்திரபதியானவர் - கௌனருடைய*

கடிதம் அனுப்பித்தது வந்து சேர்ந்தது. அதில் மூன்று மொழி பெயர்த்தவைகளைப் போட்டு எழுதியதனால் தெரியவில்லை. ஆனால் ஜனரல் மூலம் கௌனருக்குச் சொல்ல வேண்டிய தென்னவென்றால் ஆங்கிலேயத்திற்கு ஹிந்தவியில்[812] மொழிபெயர்க்கும்படி செய்வாரென்று - கௌனருடைய கடிதத்தில் நம்முடைய ஒரு வேலையும் திர்க்கும்படியாக இல்லை. ஜனரல் போல் வேண்டியவராய் இருந்துஅவன் தீர்த்த பிரஸங்கத்திற்குக் கும்பனிக்கு லக்ஷம் வராகன் இனாம் கொடுப்பதற்கும் வருஷமொன்றுககு லக்ஷம் வராகன் கொடுக்கவும். இரண்டில் ஒன்று தீர்மானமாகவில்லை. கனக ஸபாபிள்ளை குமபனியை அண்டினதிலிருந்து விலக்க முடியாது என்று எழுதியிருக்கிறது. நாகூரை கும்பனிக்கு ஜாகீர்[813] கொடுத்தற்கு கறார் நாமாவை எழுதிக் கொடுக்காமல் நாகூரை நீங்கள் கும்பனிக்குக் கொடுத்த துகைககுக் குறைவாக காணப்படுகிறதென்று எழுதியிருக்கிறது. பாக்கி காரியங்களுக்கும் கட்டுப்படுத்தி எழுதியிருக்கிறது. கும்பனியின் துகையைச் சீக்கிரம் அனுப்பும்படி எழுதியிருக்கிறது. ஜனரல ஹீட்லினீ நம்முடைய காரிய விஷயமாய் ஆலோசனை செய்ததில் அனுகூலம் செய்திருப்பதாக எழுதியிருக்கிறது. கடிதத்திலெழுதியதிலிருந்து காரியமனுகூலமாக யிருப்பதாகத் தெரிய வரவில்லை. அவாளவாளுக்குக் கொடுக்க வேண்டியவர்களுக்கு...... என்னவென்று சில விபரங்களை எழுதி அதைக் கௌனருக்கும் ஜனரலுக்கும் சொல்லுகிறதென்று மொதலாரியின் விஷயத்திற்கு சோலேப்பா சொன்ன விபரத்தை எழுதிய கிராமம் 1200 சக்ரம் வருஷத்திற்கு ஆனால் மூன்று வருஷத்திற்குப் புலி 1500 வராகனானாலும் ஷெ 1500 வராகன் நீங்கள் அவர்களிடம் செலுத்தி நம்முடைய கணக்கில் எழுதுகிறது. அதற்குத் துகையை முதலில் கர்னல் நாலாநேஜாவின் மூலம் ஹூண்டிகளை யனுப்பினதில் வரவேண்டிய பாக்கித்துகையிலிருந்து கொடுக்கிறது. ஷெ பாக்கித் துகையை உங்களிடம் செலுத்தும்படி உத்திரவு எழுதியிருக்கிறது.

---

812. ஹிநதவி - மகாராட்டிர மொழி

813. நாகூரைக் கும்பனிக்கு ஜாகீர் கொடுத்தமை; இரண்டாம் துளஜா 17-6-1778இல் நாகூரையும் அதனுடன் 277 ஊர்களையும் கும்பினியாருக்கு அளித்தார். விவரம் பின்வருமாறு:-

| மாகாணத்தின் பெயர் | ஊர்களின் எண்ணிக்கை |
|---|---|
| = கீவளூர் | 41 |
| = சிக்கல் | 62 |
| = செம்பியன் மகாதேவி | 34 |
| = பாலக்குறிச்சி | 27 |
| = மகிலை | 27 |
| = கிள்ளுகுடி | 25 |
| = தேவூர் | 31 |
| = அடியக்கமங்கலம் | 8 |
| = நாகூர்த் துறைமுகம் | 1 |
| = வலிவலம் | 21 |
| = ஆக | 277 |

*(வெங்கசாமிராவ், தஞ்சாவூர் மானுவல், பக்கம் 809)*

துகை சேரநதிருககுமெனறு பசசபபா எனபவர நமககுச் சொன்னதின பேரில் எழுதி யிருககிறது. ஷெ துகையை ஜாடாவாகச செலுததுகிறது. மேற்கொணடு அவருடைய சொந்த விஷயத்திற்கு மகசூலில் நமமால்கூடுமானதைச செய்வோமென்று இரு மொதலாரிகளுக்கும் சொல்லுகிறது. ஹரகாரா[814] குப்பா இவருக்குக் கல்யாணத்திற்காக 100 சக்ரம் கொடுத்து கணக்கில் எழுதுகிறது. அக்பருக்கு ஹரகார் மகால்வரையில் வர உத்திரவு விடப்பட்டிருக்கிறது கடன் சமாசாரத்திற்குச் சிவராயருக்கும்[815] சொல்லி யிருக்கிறது. உங்களுக்கும் எழுதியிருக்கிறது. மேஸ்தர் பாடியிடம் கடன் கொடுத்தபடி பேசுவதற்கு எழுதியதற்குப் பதிலே காணும். நமக்கு 2 1/2 லக்ஷம் வராகன் அவசியமாயிருக்கிறது. அவ்விடம் பேசிய பிரகாரம் கடன் அனுகூலமாகும் படியாகச் செய்தால் நல்லது. மேஸ்தர் ஜோன்ஸ்யிடம் பேசினதில் மேஸ்தர் டைலருக்கு எழுதுகிறேன். நீங்களும் எழுதி வக்கீல் மூலம் பேச்சு வார்த்தை நடத்தும்படியாக மிஸ்தர் ஜோன்ஸ சொலலியிருக்கிறார. ஆனால டைலரின் பேருக்குக் கடிதம் எழுது யிருக்கிறது. நன்றாகச் சம்பாஷணை செய்கிறது. ஜான்டுபரி இடமும் கடனுக்காகமுயற்சி செய்கிறது. ஷெ மாதிரி முயற்சிக்கிறதென்று சந்த் 22மீ ஜமாதிலவ்வல் 1193 ஹிஜரி முத்திரை போடப்பட்டது. 1779 ஜுன் மீ 8வக்கு அனுப்பியது. சந்த் 25வ ஜமாதிலவல்.

(9) 1193 ஹிஜரிமுத்திரை போடப்பட்டது. 1779 ஜூன் மீ 11 வயில் சேர்ந்தது. அறியவும் ஜமாதிலவனின் கடிதம் சந்த் 2வ —1, சந்த் 13வ — 1, சந்த் 22வ — 1, ஆக 3 கடிதங்கள்

(9) 1779

சத்திரபதியானவர்[816] - கௌனரவர்கள்[817] நமக்கு அனுப்பிய கடிதத்திற்குப் பதிலை நியாயப்படி எழுதி அனுப்பியிருக்கிறேன். சித்திரைக்கெடுவில் மேஸ்தர் ஜோன்ஸ் இடம் சேர்ப்பித்தது 15000 வராகனுக்கு ரசீதை அனுப்பப்பட்டதென்றும் பாக்கி 18 ஆயிரம் வராகனும் மேஸ்தரிடம் செலுத்துவதாயும் அமானத்து பாபத்துக்காக பாக்கி 3 லக்ஷம் வராகன் கொடுக்க சக்தியின்மையால் வருகிற வருஷம் முதல் மகசூலில்[818] வருஷமொன்றுக்கு லக்ஷம் வீதம் கொடுக்க ஒப்புக் கொள்ளுகிறோம். நீங்கள் எழுதியனுப்பியப்படி துகை செலுத்தப்படும் என்று சில சங்கதிகளையும் எழுதி கௌனருடைய பெயரால் 2வது கடிதம் அனுப்பியிருக்கிறது. அது எதற்காகவென்றால் விரிவாக எழுதிய கடிதம் மொழி பெயர்க்கச் சோம்பல் வரும் தற்பொழுது அமானத்தின் பிரசங்கம் தீர்ப்பது ஜரூரென்று அந்தப் பாபத்துக்கு மட்டும் வேறு கடிதம் எழுதினால் உங்களுடைய மனதின்படி தீருமென்று ஜோன்சாஹேப் சொன்னதன் பேரில் இரண்டு பத்திரம் 15 ஆயிரத்தின் ரசீதை அனுப்பியிருக்கிறேன். ஷெ பத்திரம் கௌனரிடம் சேர்ப்பிக்கிறது. 2-ஆவது கடிதத்தின் நகலை அனுப்பியிருக்கிறேன். தீர்ந்த பத்திரத்தின் நகலைப் பின்பு அனுப்புகிறேன். கும்பனிக்குச் சேர்ந்த துகைக்கு கணக்கை எழுதி யனுப்பியிருக்கிறது. அதைக் கௌனரிடம் சேர்ப்பித்து ரசீதை வாங்கி அனுப்பும்படி சில எழுதி சந்த் 4வ ஜமாதி ஸாநீ[819] 1193 ஹிஜரி முத்திரைப் போட்டது. 1779 ஜூன் மீ 20 வ சேர்ந்தது. கௌனருடைய கடிதததின் தேதி விரிவான கடிதம் சந்த் 1 ஜமாதிஸானியில் 2ஆவது கடிதம் சந்த் 2 ஜமாதி ஸானியினுடையது.

---

814 ஹர்காரா - ஒறறர்

815 சிவராயர - அமரசிங்குக்கு ஸர்கேலாக இருநதவர

816 சத்திரபதி - இரண்டாம துளஜா

817 கௌனர - தாமஸ ரமபோலடு

818 முதல் மகசூல - முதல விளைவு ( குறுவை ஆகலாம்)

819 ஜமாதிஸானீ - அரபு ஆறாவது மாதம் (ஜமாஉல ஆஹிர)

(9) 1779

சத்திரபதியானவர் - ஜனரலவர்கள் ஒரு சிபபாய் விஷயமாக சிபார்சு செய்ததில் தாமதம ஆன சங்கதியை ஜனரலவர்கள் உமக்குச் சொன்னதின் பேரில் அபூர்வமாகத் தோன்றினதாகவும் சிற்சில விபரத்தையும் எழுதி அந்த சிப்பாயின் கடிதத்தை ஜனரலின் பெயரால் வாங்கி அனுப்பியிருக்கிறது. அதை சேர்ப்பிக்கும்படி சிலவைகளை எழுதி நாம் இராஜ்யத்தில் 14 லக்ஷம் வசூல் செய்தோமென்று ஜனரலவர்கள் சொன்னதின் பேரில் அபூரவமாகத் தோணிற்று. நாம் ரயதுகளுக்கு[820] அநியாயஞ் செய்தால் ரயதுகளின் பேரில் பாக்கி நிற்குமாவென்ன? ரயதுகள் நல்ல நடவடிக்கையுடன் துகையைக் கொடுக்கிறதில்லை. கண்டித்தால் பார்ப்பவர்களுக்கு அநியாயஞ் செய்வதாகத் தோணும். அவர்களுடைய கணக்கை நன்றாக மனதில் வாங்கினால் தெரியவருமென்று சில விபரங்களை எழுதி நாம் வசூல் செய்த உதாஹரணம்[821] நாகூரின் ஜாகிரிலிருந்து தெரிய வருமென்று சில விபரங்களை எழுதி ஜனரலுக்கு எவவிதத்தில் தெரிவிக்க வேணுமோ, அவ்விதமாகச் சொல்லுகிறது. அமானத்துக்கு வருகிற வருஷம் முதல் லக்ஷம் வராகன் வீதம் வாங்குவதாகத் தீர்த்தாலொழிய வரவு அல்லவென்று. இதற்காக நன்றாகத் தெரிவிக்க வேண்டிய பாபத்தெல்லாம் எழுதி கும்பனிக்குத் துகை செல்லானதின் கணக்கை அனுப்பியிருக்கிறது. அதை நன்றாக மனதில் வாங்கி கௌனருக்குத் தெரிவிக்கிறது. கடன் பாபத்து மேஸ்தர் டைலர் டுஹரீவுடன் பேசி சீக்கிரம் எழுதி அனுப்புகிறது. நாகூரின் கணக்கை பின்னர் அனுப்புவதாகவும் சில விவரங்களை எழுதி சந்த்5 ஜமாதிஸாணி 1193 ஹிஜ்ரி முத்திரைப் போடப்பட்டது. 1779 ஜூன்மீ 20உ அனுப்பினது. சந்த்7 ஜமாதிஸாநி 1193 ஹிஜ்ரி முத்திரை போடப்பட்டது. 1779 ஜூன் மீ 22உ சேர்ந்தது.

(9) 1779

சத்திரபதியானவர் - கும்பனிக்கு நாம் ஜாகீர் கொடுத்ததில் 30 கிராமங்கள் குறைவாகக் கொடுத்தோமென்று, கௌனரவர்கள் சொன்ன விபரத்தை எழுதினீர்கள். ஆனால் கீளுர் மகாலில் இத்தனைக் கிராமங்களென்று எழுதப்பட்டிருக்கிறது. ஆனால் தாலூகாதான் என்று எழுதவில்லை. இதைத் தவிர நாகூரும் முளுக்? (வரும்படி)யும் கூட இரண்டரை லக்ஷமும் கண்டுமுதல் விலை வகையறாவும் கறார் செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது. ஜாகீரின் கணக்கை மேஸ்தர் பீதரைக் கேட்டால் தெரியவரும். சிற்சில கிராமங்கள் சேர்க்கப்பட்ட விபரமான கணக்கு அனுப்பினது. அதை நன்றாய் மனதில் வாங்கி கௌனருக்குச் சொல்லும்படியும் நாகூரின் (இராஜா) ஜபாபதாரியைக்[822] கொடுக்க மனோபாவ[823] மெழுதியும் நூறு பாகத்திய ஜனங்கள் லக்ஷம் வராகன் பத்திரங்களை வாங்கிக்கௌனரிடம் காத்துக் கொண்டிருப்பதாகவும் எழுதியிருக்கிறீர். ஆனால் அதற்குப் பதில் எழுதிக் கொடுத்ததின் மோதிரத்தின் சங்கத்திற்குஹுண்டிபத்திரத்தை நான்கு நாட்களில் அனுப்புகிறோம். வட்டி கொடுக்க வேணுமென்றால் எப்படி 100க்கு 1 வீசம் வாங்கும்படி ஒப்புக்கொள்ளும்படி செய்கிறது. முதலில் விஸ்தாரமான[824] கடிதம் கௌனர் பெயருக்கு அனுப்பப்பட்டது. அதன்

820. ரயததுகள் - குடியானவர்கள்

821. உதாஹரணம் - உதாரணம்

822. ஜவாப்தாரி - உத்தரவாதம்

823. மனோபாவம் - மனநிலை

824. விஸ்தாரமான - விரிவான

நகலை அனுப்பி யிருக்கிறது. ஆனால் மனதில் வாங்கி ஜனரல் வகையறாக்களுக்குத் தெரிவிக்கிறது எவரிடமிருந்து காரியமனுகூலமாகுமோ[825] அந்தப்படிக்கி செய்கிறது. உதாஸீனம்[826] வக்கீலுக்குப் போட்டதாகக் கேளவியுற்றேன். மே மீ'த்திய கமிட்டியில் ருஜூ செய்தால்[827] அதற்குப் பதில் எழுதி நீங்கள் ஸமயானுஸாரமாக[828] பேச்சி வார்த்தைகளை நடத்துகிறது. இப்படி ஆனால் நகலை மத்யஸ்தருக்குக் காட்டுகிறது. முத்துக்கிருஷ்ணமொதலியின[829] சங்கத்திற்கு தற்பொழுது முடையினால் கொஞ்சம் துகையை அனுப்பியிருக்கிறது. முன்னால சந்தோஷமுண்டாகும்படி செய்வதாகச் சொல்லவும். மிஸ்தர டைலரிடம் கடனுககு அனுகூலம் செயதால உங்களுடைய வேலையில் பகுமான[830] முண்டு என்று சில விபரததை எழுதி சந்த் 9 உ ஜமாதிஸானி 1193 ஹிஜரி முத்திரைப்போட்டது. 1779ஆம் ஹூ ஜூன் மீ' 24 அனுப்பப்பட்டது. சந்த் 11உ ஜமாதிஸானி 1193 ஹிஜரி முத்திரை கொடுததது. 1779ஆம் ஹூ ஜூன் மீ' 26 உக்குச் சேர்ந்தது.

(9) 1779

சத்திரபதியானவர் - கடன் வாங்குகிற விஷயத்தில் சில வெள்ளைக்காரர்களிடம் பேசி முடித்திருக்கிறது. 100க்கு 3 1/2 வட்டியும் ஒரு லக்ஷம் வராகனுக்கு 6 ஆயிரம் வராகனும் தரகாளிக்குப்[831] பத்திரத்தின்படி கொடுக்க வேணும். இராஜ்யத்தை அடமானம் கொடுக்க வேண்டும். இப்படிக்கு ஒப்புக்கொண்டால் லக்ஷம் வராகன் கொடுப்பதாகச் சொல்லுகிறாரென்று எழுதியிருக்கிறது. ஆனால் இப்படி ஒப்புக்கொண்டால் வெகுநஷ்டமுண்டாகிறது. ஆனாலும் தீர்மானமாகச் சொல்லுகிறேன். வட்டி 3 வீதம், இனாம் லக்ஷத்திற்கு 5000 வராகன், தரகாளிக்கு 100க்கு 1 வராகன் அதற்கு ராஜ்யத்தை அடமானங் கொடுக்கிறேன். ஸாஹுகார்-[832] களுடைய ஜாமீன் இல்லையென்று சில விபரங்களை எழுதி மேஸ்தர், டைலர் ஜான்டுபரியிடமும் பேசி அவர்களுடைய எண்ண மெப்படி யிருக்கிறதென்பதை சீக்கிரம் எழுதி யனுப்புகிறதென்று எழுதி சந்த் 11உ ஜமாதிஸானி 1193 ஹிஜரி முத்திரை கொடுத்தது. 1779ஆம் ஹூ ஜூன் மீ' 25உ அனுப்பியது. சந்த் 12உ ஜமாதிஸானி 1193 ஹிஜரி முத்திரை போட்டது. 1779ஆம் ஹூ ஜூன் மீ' 27உ கிடைத்தது. அறியவும்.

(9) 1779

சத்திரபதியானவர் - மத்யஸ்தருடைய கடிதங் கிடைத்தது. அவர் வெகு முயற்சி செய்ததற்காகப் பூப்பூக்கிறதற்கு ஆரம்பமானது. இனிமேல் பலப்ராப்தி[833] ஆகும்படியாக சிலவைகளை எழுதி

---

825 காரிய அனுகூலம் - காரியம் நடைபெறுதல்

826. உதாஸீனம் - விருப்பு வெறுப்பு இன்மை

827 ருஜுசெய்தால - மெய்ப்பித்தால்

828 ஸமயானுஸாரம் - காலத்துக்கு ஏற்ப

829. முதலின் - முதலியின்

830. பகுமானம் - வெகுமதி, பரிசு

831. தரகாளி - இடைநின்று தீர்ப்பவன்

832 ஸாஹுகார் - சாவ்கார் - பணம் கொடுக்கல் வாங்கல் செய்பவன்

833. பலப்ராப்தி - பலன் கிடைத்தல்

வைர மோதிரத்தை விலைக்கு வாங்கி, ஜனரலுக்குக் கொடுப்பதிற்குப் பதிலாக 6 1/2 ஆயிரம் வராகன் ஹூண்டிகளைச்செய்து அனுப்பியதற்கு விபரமான ஜாபிதா. பூகன்ஜீ 3250 பூதரஜீ 3250ஆக6500க்குஹூண்டிகள்இரண்டும்பாக்கி65,00க்குப் பத்திரமும் எழுதி 100க்கு 2வீதம் வட்டியை எழுதி அனுப்பியிருக்கிறது. ஆனால் ஷெ ஹூண்டியின் பாபத்து துகை, பத்திரம், மேஸ்தர் டிஸோர்யாவிடம் செலுத்தி மோதிரத்தை இவ்விடம் அனுப்புகிறது. நாம் பார்த்து மறுபடியும் அனுப்புகிறோம். கடன் சங்கதிக்கு மேஸ்தர் டைலரும் டுபரியும் அனுகூலமாக மாட்டார்களென்ற சமாசாரம் தெரிய வந்தது. உங்களுடைய முன்கடன் சங்கதிக்கு ஒரு தீர்மானஞ் செய்து சொல்லி யனுப்பியிருக்கிறார்களே. அந்தப்படிக்கி ஒப்புக்கொண்டால் மேன்மையாயிருக்கும். இல்லாவிடில் அதிக வட்டியும் இனாமாவது கொடுக்கிறேனென்று ஒப்புக்கொண்டு லக்ஷம் வராகன் கடன் வாங்க ஸாவகார்களுடைய ஜாமீன் இல்லாமலும் சீமையில் பத்திரம் தயாராகிக் கொண்டிருப்பதாயும் எழுதி இந்தப்படி ஹூண்டிகள், பத்திரம் கட்டளையின் கடிதம், சந்த் 18 வ ஜமாதி ஸானி 1193 ஹிஜிரி முத்திரையைப் போட்டது. 1779 ஜூலை 3வக்கு அனுப்பித்தது. சந்த் 20மீ ஜமாதிஸானி 1193 ஹிஜரி முத்திரைப் போட்டது. 1779 ஜூலை மீ 5 வ சேர்ந்தது. ஜூலை மீ 5வ ஹூண்டிக்குக் கையொப்பமிடப்பட்டது.

*(9) 1779*

சத்திரபதியானவர் - கௌனருக்கும், ஜனரலுக்கும் புகழ் (பகுமானம்) கடிதம் வந்ததென்று எழுதினீர்கள். ஆனால் வெகு சந்தோஷ முண்டாயிற்று. ஆசீர்வதிக்கும் வஸ்திரமும் கடிதத்தையும் அனுப்புகிறோம். உத்தமமான வைரம் இங்குக் கிடைக்கவில்லை. ஆகையினால நீங்கள் அவ்விடம் கௌனருக்கும் அவருடைய சம்சாரத்திற்கும் இருவருக்கும் 2 ஆயிரம் வராகனில் வாங்கிக் கொடுக்கிறது. ஜனரலுக்கு 13 ஆயிரம் வராகனுள்ள மோதிரத்தைக் கொடுக்கிறது. கௌனருக்குத் தெரியும். ஒருவேளை கொடுக்கலாம் போல இருந்தால் கொடுக்கிறது. இல்லாவிடில் நாம் அனுப்புகிறோம். இச்செய்தியைத் தமீநாயக்கருக்காவது கேட்டெழுதி யனுப்பவும். சீமைக்குக் கும்பனிக்கு கடிதம் அனுப்பியிருக்கிறது. ஆனால நகல் எழுதி மத்யஸ்தரிடம் கொடுக்கிறதென்ற சில விபரங்களை எழுதி சந்த் 22வ மீ ஜமாதிசானி 1193 ஹிஜரி முத்திரையைப் போட்டது. 1779ஆம் ஸு ஜூலை மீ 7 வ அனுப்பித்தது. சந்த் 24வ மீ ஜமாதி ஸானி 1193 ஹிஜரி முத்திரையைப் போட்டது. 1779ஆம் ஸு ஜூலை மீ 9 வ சேர்ந்தது.

*(9) 1779*

சத்திரபதியானவர் கௌனருக்கும் அவருடைய சம்சாரத்திற்கும் ஜனரலுக்கும் வஸ்திரமும், கடிதமும், வைரமும், அனுப்பியிருக்கின்றன. ஆனால் அதனுடைய ஜாபிதாவைத் தனியாக அனுப்பி யிருக்கிறது. ஒத்துப் பார்த்துக் கொள்ளுகிறது. ஜனரலுடைய கடிதத்தில் உண்மையான சங்கதி வக்கீல் சொல்லத் தெரியவரும் என்று எழுதியிருக்கிறது. ஆனால் கடன் விஷயமாக ஏதாவது அனுகூலமாவதாயிருந்தால் பார்க்கிறதென்று எழுதி சந்த் 25வ ஜமாதிஸானி 1193 ஹிஜரி முத்திரை போட்டது. 1779ஆம் ஸு ஜூலை மீ 10வக்கு அனுப்பினது. சந்த் 27வ மீ ஜமாதி ஸானி 1193 ஹிஜரி முத்திரைப் போட்டது. 1779ஆம் ஸு ஜூலை மீ 12வக்குச் சேர்ந்தது.

*(9) 1779*

சத்திரபதியானவர் - காரியஸ்தரின் பேரால் கடிதம் எழுதி விலாஸம் எழுதி மத்யஸ்தருடைய பெயரால் கடிதமெழுதி இரண்டு கடிதங்களையும் அனுப்பி யிருக்கின்றார். ஆனால்

மத்யஸ்தரிடம் கொடுக்கிறது. கமெண்டருக்கு வஸ்திரம், கடிதம் பின்னர் அனுப்புகிறோம், புகழை எழுதி அனுப்புகிறதென்று சநத் 27உ ஜமாதிஸானீ 1193 ஹிஜரி முத்திரை போட்டது. 1779ஆம் ௵ ஜூலை மீ 12உ அனுப்பியது. சந்த் 28 மீ ஜமாதிஸானீ 1193 ஹிஜரி முத்திரை போட்டது. 1779ஆம் ௵ ஜூலை மீ 13உக்குச் சேர்ந்தது.

(9) 1779

சத்திரபதியானவர் - கும்பனியின் கடிதத்தைச் சீமைக்கு அனுப்புவதற்காக கௌனருடைய பெயரால் கடிதமெழுதி அனுப்பியிருக்கிறது. ஷெ கடிதமும் கும்பனியின கடிதமும் கௌனரிடம் சேர்ப்பித்துச் சங்கதியை எழுதும்படி எழுதி சந்த் 27 உ மீ ஜமாதிஸானீ 1193 ஹிஜரி முத்திரைப் போடப்பட்டது. 1779ஆம் ௵ ஜூலை மீ 12உ அனுப்பித்தது. சந்த் 29உ ஜமாதிஸானி 1193 ஹிஜரி முத்திரை போட்டது. 1779ஆம் ௵ ஜூலை மீ 14உ வந்து சேர்ந்தது.

(9) 1779

சத்திரபதியானவர்-கமாண்டருக்கு வஸ்திரம், கடிதம், வைரம் அனுப்பியிருக்கிறார். ஆனால ஒத்துப் பார்த்துக் கமாணடருக்குச் சேர்ப்பிகும்படி எழுதி சந்த் 2உ ரஜப் 1193 ஹிஜரி முத்திரை யிட்டது. 1779ஆம் ௵ ஜூலை மீ 17உ அனுப்பித்தது. சந்த் 3உ ரஜப் ஜூலை 18உ சேர்நதது.

(9) 1779

சத்திரபதியானவர் - கௌனரவர்கள் கும்பனியின் துகைக்காக அனுகூலமாகிறதை அனுப்பும்படி எழுதியிருந்தார். தற்பொழுதுகைரபங்காம்?ஆனதினாலும் கடன் கொடுக்க சாக்ஷிகாரர்கள் சம்மதமில்லாமலிருக்கையில் கெட்ட விவகாரத்திற்குக் காரணம். இதற்காக அநேக பிடிவாதஞ் செய்து, பூதரஜீதவேயின் ஹுண்டி 35,000 வராகன் உள்ளது. 40 நாட்கள் கெடு வீதம் வாங்கி அனுப்பியிருக்கிறது. ஆனால் ஹுண்டியை கௌனரிடம் சேர்ப்பிக்கிறது. இதைத்தவிர, இங்குள்ள கும்பனியின் ஜனங்களுக்கு மேஸ்தர் ஜயோன்ஸிடம் 15,000 கொடுத்திருக்கிறது. ஆக 50,000 போக பாக்கி 50,000 4 நாட்களில் கொடுக்கிறோம். 4 நாட்கள் ஸமாளிக்கிறது[834] என்று கௌனருக்குச் சொல்லுகிறது. இதைக் கண்டு கௌனருக்குக் கடிதம் எழுதி யனுப்பியிருக்கிறது. அவாளிடம் சேர்ப்பிக்கிறது. கௌனருடைய சொந்தத்திற்காக 2 லக்ஷத்திற்காக உம்முடைய மூலம் 70,000 போக இங்கு ஸோன்ஸிடம் கொடுத்தது 30,000மும் பத்திரம் வகையில் 7000மும் போக பாக்கி 30,000 கொடுக்க வேண்டியிருக்கிறது. ஆனால் மேஸ்தரிடம் ஸம்சாவிஸி[835] செய்தோம். மேஸ்தர் ஜோன்ஸ் கௌனருக்குக் கடிதம் அனுப்பி யிருக்கிறார். இப்படி யிருக்கையில் கோபித்துக் கொள்வது என்ன முறை? நாம் ஆசிர்வாதத்துடன் வஸ்திரத்தை அனுப்பியதைப் பெற்றுக் கொள்ளாமல் மரியாதை செய்தது தெரிந்தே யிருக்கிறதே. இப்பொழுதும் தரகாளியின் மூலம் தெரியும்படி செய்யும்படியும் தரகாளியின் விஷயத்திற்குக் கொஞ்ச நாட்களில் அனுப்புகிறோம். கௌனரின் கடிதத்தின் நகலை அனுப்பியிருக்கிறது. கடிதத்தின் சமாசாரத்தை ஜனரலுக்குத் தெரிவிக்கிறது. ஜனரலுக்குத் தங்களிடம் ஒப்புக்கொண்டபடி நடந்தோம். நம்முடைய வேலைகளை முடித்துக் கொடுக்கும்படி எழுதி, மிஸ்தர் ஜ்யோன்ஸ் நாகூரின் கும்பனியின் ஜனங்களுக்கு சிலவிற்காக 6 ஆயிரம் வராகன் வேண்டுமென று கேட்டதற்கு தற்பொழுது இல்லையென்று சொல்லப்பட்டது. அதற்கு அவ்விடம் பிராது எழுதுவார்கள். சமயத்திற்கு தக்கபடி நடக்கிறதென்று எழுதி மிஸ்தர்

834 ஸமாளிககிறது - சமாளிககிறது - எப்படியாவது கஷடப்பட்டு நிறைவேறறுகிறது

835 ஸம்சாவிஸி(?)

பைபர் என்பவர் அஜிடன் ஆய் சென்னப்பட்டணத்திற்கு வந்திருக்கிறார். அவரிடம் சென்று தரகாளியின் கடிதத்தைக் கொடுத்து 20 ஆயிரம் வராகனுக்கு பேச்சு வார்த்தை நடத்தும்படி எழுதி இந்தப்படி சந்த் 8உ ரஜப்[836] மீ 1193 ஹிஜரி முத்திரைபோட்டது. 1779ம் ஷு ஜூலை மீ 12உ அனுப்பியது. சந்த் 9உ ரஜப் ஜூலை 24உ சேர்ந்தது.

*(9) 1779*

சத்திரபதியானவர் - கௌனரவர்கள் கும்பனியின் பாக்கியை எட்டு, பத்து நாட்களில செலுத்துகிறது. இல்லாவிடில் தாசில்தார் அனுப்புவதாகச் சொன்னதாக விபரம் எழுதினது. ஆனாலும் கௌனர் புத்திமான். அவருககு அநேக விதமாகச் சொல்லி யிருக்கிறார்கள. தாசீலுக்கு இதுதான் சமயமென்று சில விபரங்களை எழுதிக் கும்பனிக்கு 3 லக்ஷம் வராகன செல்லானது. பாக்கி லக்ஷத்துக்கு பூதரஜி பாபத்து ஹுண்டி 1க்கு 35,000 போக ஜோன்ஸிடம் 15,000 போக நாகூரின் சிலவிற்காக 600 போக 44,000 மும் 15 நாட்களில் செலுத்துவதாகச் சில சங்கதிகளை எழுதி இநதப்படி தெளிவாகச் சொல்லுகிறது. ஜனரலுக்கும் தெரிவிக்கிறது. தரகாளிக்கு உபசாரஞ் சொல்லும்படி எழுதி முதலில் சித்திரை வரையில் கும்பனிக்குத்துகை செலுத்தினதற்கு மிஸ்தர் ஜோன்ஸிக்கு 18,000 கொடுத்ததற்கு ரசீது அனுப்பியிருக்கிறது. ஆனால் பங்கீடு செய்வதற்கெழுதி சந்த் 12உ ரஜப் மீ 1193 ஹிஜிரி முத்திரைப் போட்டது 1779ஆம் ஷு ஜூலை மீ 28உ சேர்ந்தது. அறியவும்.

*(9) 1779*

சத்திரபதியானவர் - பூதரஜீயின் குமாஸ்தாவானவர் ஹுணடியைக் கையொப்பமிடாமல் தகராறு செய்ததினால் கௌனரவர்கள் ஹுண்டியைத் திருப்பிவிட்ட சங்கதியை எழுதியது. ஆனால் நாம் பொய் ஹுண்டியை அனுப்பவில்லை. சாஹுகாருக்கு கும்பகோணத்தில் நெல் அடமானம் செய்து கொடுத்து ஹுண்டியை அனுப்பித்தோம். நெல் விற்று முதலாகி தினம் துகை வசூலாய்க் கொண்டிருக்கிறது. நாம் அம்பாசங்கரைக் கடுமையாக உத்திர விட்டதற்கு அவ்விடத்திய குமாஸ்தாவிற்குக் கடிதம் எழுதிக் கொடுப்பதாகச் சொன்னார். துகை நான்குநாள் முன்பின் சேர்ந்ததற்கு வக்கீலுக்கு எழுதி, 4 நாட்கள் பொறுமையுட னிருக்கும்படி செய்ய வேணும், என்று எழுதச் சொன்னது. ஆனால் 4 நாட்கள் பொறுத்து வாங்கும் படிச்செய்ய வேண்டும். கடிதத்தைச் சேர்ப்பித்து ஹுண்டியைக்கையொப்பமிட்டுச் சேர்ப்பிக்கும்படி சில விபரங்களை எழுதி சந்த் 14உ ரஜப் மீ 1193 ஹிஜரி முத்திரை போட்டது. 1779ஆம் ஷு ஜூலை மீ 28உ அனுப்பித்தது. சந்த் 15உ மீ ரஜப் 1193 ஹிஜரி முத்திரை போட்டது. 1779ம் ஷு ஜூன் மீ 30உ சேர்ந்தது.

## மூட்டை எண் - 198C

*3.1231[837] (1830)*

(1) பச்சண்ணா[838]வின் தோட்டத்திலுள்ள மாடுகள் சண்டை போடும்பொழுது ஆஹாகாரம்[839] (வேகம்) வருவதற்காக அதற்குக் கொடுக்கும் சாமான்களின் விபரம்.

836. ரஜப் - அரபு மாதங்களில் 7 ஆவது மாதம்

837. ஸுஹுரிஸன் 1231 + 599 = கி.பி 1830

838. பச்சண்ணா - இவர் இரண்டாம் துளஜாவின் அமைச்சர்களுள் ஒருவர் (பக்.409)

839. ஆஹாகாரம் - ஆங்காரம் - கோபம்

*(2) 1231*

தேரின் மாட்டுககு வாயு உபத்திரவத்திற்கு மருந்து

நெய் சேர் 1, மிளகு சேர் 1/2, வேப்பெண்ணெய் காலுக்கு ஒத்தடம் கொடுக்க 7 நாட்களுக்குக் கொடுக்கிறது.

*11-1177[840] (1776)*

(1) வெடிமருந்துச் சாலையில் ரா.மகாராஜா[841] சாஹேப் அவர்களுடைய கலியாணத்திற்காக வெடிமருந்து தயார் செய்ய சிலவு 1 1/2 சக்

*(2) 1177*

ரா.திவான் சாஹேப் அவர்களுடைய இரண்டு கல்யாணங்களுக்கு[842] வாணங்கள் தயார் செய்ய வெடிமருந்து தயார் செய்ய சாமான்களின் விபரம்.

*16-1209[843] (1808)*

(1) ஜாபிதா - சி.ரா.சிவாஜி ராஜா சாஹேபுக்கு எல்லா அரிஷ்டங்களும் [844] தீருவதற்காகத் திருஷ்டி தோஷம்[845] நீங்குவதற்காக ஏழாம் மாதத்தில் தலை சுத்திப் போட சாமான்கள், பாத்ரபத சுத்த பௌர்ணமி [846] ஞாயிற்றுக்கிழமை-

நாலுபடி சாதஞ் செய்து அதை ஒன்பது பாகமாகப் பிரித்து கொட்டைப் பாக்குகளை அதின்மேல் வைத்து சிவப்பு சந்தனம் 2 டாங்[847] இடை, சிவப்பு அக்ஷதை[848] 9 டாங்க், சிவப்பு புஷ்பம் 1/2 சேர் இவைகளினால் அதற்குப் பூஜை செய்து 2 டாங்க் சாம்பிராணியைப் போட்டு தூபங்காட்டி 7 தடவை தலைசுத்திப் போடுவதினால் நீண்ட ஆயுளுண்டாகும்.

*(2) 1209 (1808)*

ஜாம்தார் கானா[849]

சி.ரா.சிவாஜி ராஜா சாஹேப் அவர்களுடைய தொட்டிலுக்குப்பட்டு நாடாவை வேண்டியளவு கொடுக்கிறது.

---

840 ஸுஹூர்ஸன் 1177 + 599 = கி பி 1776

841 மகாராஜா என்றது இரண்டாம் துளஜாவை

842 மகப்பேற்றின் பொருட்டுச சுலக்ஷணாபாயியையும் மோஹனாபாயியையும் துளஜா மணந்தார் (போ.வ.ச.பக் 125)

843. ஸுஹூர்ஸன் 1209 + 599 = கி பி 1808

844. அரிஷ்டம் - தீங்கு

845 திருஷ்டிதோஷம் - பார்வையால் உண்டாகும் தீமை

846. ஏழாம் மாததில் என்றமையால் கி பி. 1808இல் சிவாஜி பிறந்திருத்தல் வேண்டும் பாத்ரபதம் - புரட்டாசி, சுத்த-வளர்பிறை; பௌரணமி-நிறைமதி

847 டாங்க் - ஒரு தோலாவின் மூன்றில் ஒரு பகுதி

848 அக்ஷதை - மங்கல அரிசி

849 ஜாம்தார் கானா - அரச குடும்பத்துக்குரிய ஆடைகளும் நகைகளும் இருககும இடம் (பக 453)

(3) 1209 (1808)
மராமத்து மஹால்[850] நவராத்திரிக்குச் சித்திரமெழுதுவதற்கு

காவி 2 3/4 மனு, நீலம் 19 3/4 சேர், விளாம்பிசின் 1 சேர், கருப்பு மசி 2 படி கொடுக்கிறது.

4. 1209
சம்பு மகாதேவ பட்டிணம் ஆயுதசாலை[851] யிலிருந்து நட்டு (மொத்தமான துணி) கோணிபபை நாலு அறைகளுள்ள பணம்காசி வைக்க பைகளைக்கொடுக்கிறது.

17-1219[852] (1818)
(1) தனகதாரி பாவாவிற்கு அன்ய தேசத்திலிருந்து வந்தவர்களுக்கு உப்பைகளைக் கொடுக்க வேண்டியிருப்பதால் மூன்று மாதங்களுக்கு 1 புதலி[853] நெய் வீதம் 4 புதலிகளை ஒவ்வொரு வருஷமும் கொடுக்கிறது.

(2) 1219
பூத - பீரங்கிக்குத் தடவ ந.எ.5 சேரும், ஹாஜாரி பங்க் கஜேந்திர லக்ஷுமிக்கு[854] 2 1/2 சேரும் விஜயதசமிக்[855] காகக் கொடுக்கிறது.

(3) 1219 (1818)
விஜய தசமிக்கு சிலங்கணத்திற்குப்[856] போகும் பொழுது சிப்பந்திகள் [857] விஜய மண்டபத்தண்டை[858] கட?[859] ஐ நட்டு விளையாடுவதற்கு வழக்கப்படி சாமான்களைக் - கொடுப்பது.
வெடிமருந்து 1 சேர், பூவாணம் 2 வகையறா - வகையறா

(4) 1219
வடவாற்றின்[860] வடகரையில் நம்முடைய மடத்தில் அதிதி[861] களுக்கு (அன்னிய

---

850. மராமத்து மகால் - இமாரதி மகால் (பக்கம் 458)

851. ஆயுதசாலை - ஜிராத்கானா (பக்கம் 455)

852 ஸுஹூர்ஸன் 1219 + 599 - கி.பி.1818

853. புதலி (?)

854. கஜேந்திர லக்ஷ்மி - கஜலக்ஷ்மி - இருபக்கத்திலும் யானைகளையுடைய இலககுமி உருவம

855. விசயதசமி - மஹாளய அமாவாசைக்குப பிறகு வளர்பிறைப் பத்தாம்நாள

856 சிலங்கணம் - சிலங்கணசாவடி

857. சிப்பந்திகள் - பணிமக்கள

858. விஜயமண்டபம் - தஞ்சைமகர்நோம்புச் சாவடியிலுள்ளது (பக்.213இல்28)

859. கட - குடம்

860. வடவார் - வடவாறு (தஞ்சைக்கும் கருந்தட்டான்குடிக்கும் இடையில் ஒடும் ஆறு)

861. அதிதி - புதியவராக வநதவர்

தேசத்திலிருநது வந்தவர்களுக்கு) உலுப்பைகளை[862]க் கொடுக்கிற தருமம் எப்பொழுதும் நடப்பதற்காக விண்ணாற்றங்கரை அன்னசத்திரத்திலிருந்து வருஷத்திற்கு ஸம்பாவபசான[863]கலம் 100 கொடுககப்படுகிறது. அதைத் தவிர ஜாஸ்தி 200 கலம் நெல்லைக்கெடுக்க வேணுமெனறு மனு.

*18•1231 (1830)*
*(1)* அல்லி குளத்திற்குச்[864]சமீபத்தில்''குத்தே''[865]மகாலை கட்டுகிறதற்கு மெகயாடு[866] சிலவு 2 3/4 பணம்.

*(2) 1231*
வடவாற்றின் பழைய பாலத்தின சுவர்களைக் கட்டச் சிலவு பணம் 3 1/2 வீசம் 1/2.

*25 1222 (1821)*
*(1)* மாதவனென்றும் குதிரைக்கு நெருப்புப் பட்டு எரிந்து உடம்பின் ரோமம் உதிருவதால் மேல்தடவ மருந்து
பசும்பால் 6 சேர், மிளகு 1/2 சேர், ஸோப் 1/4 சேர் , குதிரைக்கு 4 காலகளுக்குப்பரஸாதி?வந்து காவில் புழுக்களிருப்பதால் மேல்தடவ வேப்பெண்ணெய் சேர்,-1, சூடம் டாங்க் -9

*(2) 1222 (1821)*
கொட்டியத்தின்[867] மாட்டுக்கு அளல்வகே என்னும் வலிக்காக மருந்து.
ஜீரகம் சேர் -1/8, வெந்தியம் சேர் -2, கசகசா சேர் -1 1/2, வெங்காயம் சேர் -10, மரடாதயிர் படி -15, பெரிய பாஜா? -1, தொட்டி -1, தோவி -1, வண்டி மகாவிலிருந்து விறகு 3 மனுவைக் கொடுக்கிறது.

*25 (3) 1222 (1821)*
ஸங்கீதவித்யாதிக[868]நாடக சாலையில் மத்தளம் 5க்கு கரடையை [869]ப் போட்டுத் தயார் செய்ய இடையில்
ந.எண்ணை சேர்-2 1/2, கோதும்பை சேர்-1 1/2 கொடுக்கிறது.

---

862. உலுப்பை - சத்திரத்தில் உண்ணாதவர்கட்கும், அதிகாரிகட்கும் அனுப்பப்படும் உணவுப்பொருள்கள்.

863 சம்பா–தை மாசத்தில் அறுவடையாகும் நெல. பசானம்–சித்திரை மாதத்தில் அறுவடையாகும் நெல்

864 அல்லிகுளம்

865 குத்தேமகால - நெல குறறும் இடம் (?)

866. மெகயாடு - மெய்ககாடு - குததகைக்கு விடாமல் நேரில் நடத்தும வேலை

867 கொட்டியம் - சரககரை

868. ஸங்கீதவித்யாதிக-இசையில்வல்லவர்.

869 கரடை (?)

*(4) 1222[870] (1821)*
விருஷ நாம ஸம் வத்ஸரம்[871] மார்கசிர்ஷ பகுளதிருதியை[872] செவ்வாய்க்கிழமை தினம் 100 பஞ்சாங்கம்[873] அடிப்பதற்குச் சாமான்.

பாளங்கோடி காகிதம் தஸ்தா -25, கரடா காகிதம் தஸ்தா-2, விரைநீக்கின பருத்தி சேர் -5, ந.எண்ணை சேர் -5, தேங்காய் யெண்ணை சேர் -2, சவகார் சேர் -2, வெள்ளை மான்தோல் சேர் -5, மூட்டை கட்டுகிற துணியின் துண்டு -5, சிகப்பு பட்டு திரிச்சது மஹான ஜி?-1/2 வெள்ளை நூல் சேர் -1/4, கோதும்பை மாவு படி-1/2, வாழை -2, மாதிரியைப் போல் ஆணிகள் -100, இம்மாதிரி கொடுக்கிறது.

*(5) 1821 A. D.*
பாபீகோசாமியார் பேரன் கிருஷ்ணகோசாமி இராமதாஸி அவர்கள் ஹனுமந்த்ஜயந்தி[874] உற்சவத்திற்குப்பிராமண போஜனத்திற்கு[875] 5சக்கொடுக்கஉத்திரவாகவேணும்

*(6) 1821 A. D.*
பவானி பிரஸாத என்னும் யானைக் குட்டிக்கு முன் இடதுகால் வாயுவினால் கால் பிடிக்கப்பட்டதற்கு மருந்து தடவ கொட்டியத்திலிருந்து

முஸதார்? சேர் -2, அஹலிம் சேர் -1, மரமஞ்சள் சேர் -1/2, ..........லி? சேர் -1/4, சுமாரான எ.பழம் -50, விறகு மனு -4

சமையல் கட்டிலிருந்து நவபாண்டம்,[876] தோட்டத்திலிருந்து எருக்கிலை -1,
நுணா இலை -1, உத்தாமணி இலை -1[877], கொடிக்கள்ளி -1, நாளொன்றுக்கு ஒரு கூடை வீதம் கொடுக்கிறது.

*28.1218 (1817)*
(1) வேட்டை மகாலில்[878] முயல் ஒன்றிறந்து விட்டதை நரிக்குத் தின்பதற்கு கொடுக்கிறது.

---

870. ஸுஹூர்ஸன் 1222 + 599 = கி.பி.1821

871. விருஷநாம - விருஷ என்ற பெயருடைய; விருஷ்-விஷு;ஸம்வத்ஸரம்-ஆண்டு.

872. மார்கசீர்ஷ - மார்கழி; பகுள -தேய்பிறை; திருதியை-மூன்றாம்நாள்

873. பஞ்சாங்கம் - திதி வாரம் நட்சத்திரம் யோகம் கரணம் என்ற ஐந்து உறுப்புக்களையுடைய காலக்குறிப்பு நூல்.

874. ஹனுமத்ஜயந்தி - மார்கழி மறைமதிநாளில் வருவது

875. பிராமணபோஜனம் - அந்தணர்க்கு உணவு

876. நவபாண்டம் - புதுப்பானை

877. உத்தாமணி - வேலிப்பருத்தி

878. வேட்டைமகால் - வேட்டையாடிப் பிடித்த விலங்குகள் இருக்கும் இடம் (பக்கம் 457)

*(2) 1218*[879]

தேவதாசியின் நடனத்திற்குப் பாகவதமேளிவிருந்து[880] சலங்கை நகை வகையறாவைக் கொடுத்து வாங்குகிறது.

*9.1219 (1818)*

(1) மராமத்து மகாலி[881] விருந்து ரா.நான்கு மாப்பிள்ளைகளின்[882] அரண்மனையில் சொல்லச் சொல்லுகிறபடி வேலையைச் செய்கிறது.

*30.1219*

(1) சண்டை போடுகிற ஜனங்கள் (*Sepoys*) விஜய தசமிக்காக வாணத்தை விடும் ஆஸாமிகள் 201க்கு சுமார் காலி வாணம் விடுகிற தோடாக்கள் சுமார் ஆஸாமி 1க்கு 15 வீதம் 3015 சக்குமுக்கிக்கல்[883] ஒருவனுக்கு 2கல் வீதம் சுமார் 402 கொடுக்கிறது.

*(2) 1219 (1818)*

கருத்தட்டான்குடி கோவிலின் ஸ்தானிகர்[884] குடுத்த மனு- ஒரு குஜலியர் ஸ்வாமிக்கு நாகாபரணம் செய்து வைத்ததை கொண்டு போக வாசற்காப் போனுக்குத் தடை செய்யாதபடி இருக்க உத்திரவிட வேண்டும்.

*(3) 1219*

கரவலநாத ஸ்வாமியின்[885] பிரஸாதம்.

---

879. ஸுஹவிர்ஸன் 1218 + 599 = கி. பி 1817

880. பாகவத மேளா - இசைநாடகக்குழு-(பக்.230)

881. மராமத்து மகால் - இமாரதி மகால் (பக்.458)

882. மாப்பிள்ளைகள்:

| அகல்யாபாயியின் மகள் பெயர் | மாப்பிள்ளை பெயர் |
|---|---|
| சுலக்ஷணாபாயி | மேஸாஜி எஸவந்தராவ் மோஹிதே |
| ராஜகுமாரபாயி | நாகோஜி சதாசிவராவ் மோஹிதே |
| பாயம்மாபாயி | எஸ்வந்தராவ் ராமசந்திரராவ் சூர்வே |
| சக்வார்பாயி | ராமச்சந்திரராவ் எஸ்வந்தராவ் இங்களே |
| யமுனாபாயியின் மகள் | |
| ராஜம்மாபாயி | ஜிவாஜி கோவிந்தராவ் மோஹிதே |

இவர அரண்மனை தவிர்த்து மற்ற நால்வருடைய அரண்மனைகள் என்க (198சி-33-5)

883 சக்குமுகிக்கல் - நெருப்பு உண்டாக்கப் பயன்படுத்திய ஒருவகைக்கல்

884. ஸ்தானிகர் - கோயில் மேற்பார்வை செய்யும் உரிமை வழிவழியுடையவர்.

885. கருவேலநாத சுவாமி - கருநதட்டான் குடியிலுளள வசிட்டேசுவரர் (பக்.213இல் 32)

*19) 1218*

*1) 2 1/2 பணம் [886] 35க்கு சக். 8-7 1/4 பணம், ஒத்தைப்பணம் [887] 66க்கு சக். 6-6 பணம், இரட்டைக்காசு, 2க்கு சக்.0-3/64 [888] பணம் = 15-3 1/2-3/64*

*(2) 1218 (1817)*

*மாடும் கன்றுக்குட்டியும் காயலாவா[889] யிருப்பதற்கு*

*சுக்கு சேர் -3/4, மிளகு சேர் -3/4, பூண்டு சேர்-1 1/2, விரளிமஞ்சள் சேர் -1 1/2, அரிசிதிப்பிலி சேர் -3/4, ஒமம் சேர் -3/4, வசம்பு சேர் -3/4, சித்தரத்தை சேர் -1 1/2, கண்டத்திப்பிலி சேர் -3/4, கருஞ்சீரகம் சேர் -1 1/2, தேசாவரி ஜீரகம் சேர் -1 1/2, உப்பு சேர் -3, திமமலி?சேர் -3/4*

*19.1218 (1817)*

*(3) யானை கானா[890] - காமாக்ஷி என்கிற யானைக்குட்டி லங்கணி?[891] ஆனதால் உள்ளுக்குக் கொடுக்க 3 நாட்களுக்கு*

*பாளாந்த போளம்-2 சேர், சுமாரான எ.பழம்-40, உப்பு படி-2*

*(4) 1218 (1871)*

*பெரிய ஸீரக என்னும் குதிரைக்கு சூட்டுக்கு தினம் 21க்கு தினமொன்றுக்கு பனங்கற்கண்டு -1/4 சேர், வெண்ணெய் -1/2 சேர்,சீரகம் -4 1/2 டாங்க், எ.பழம் விரை -9 டாங்க்*

*மாதவன் என்னும் குதிரைக்கு உள்ளுக்குக் கொடுக்க தஹிபுத்தி[892] 14 நாட்களுக்கு*

*கைலீ அரிசி படி -1, தயிர் சேர் -2, வெங்காயம் சேர் -1/2, வெந்தயம் டாங்க்-4 1/2*

*31.1219 (1818)*

*(1)ஸரஸ்வதி பூஜைக்[893] காகரா.சிவாஜி ராஜா சாஹேப் அவர்களிடம் ஆவாஹன[894] முதற்கொண்டு விஸர்ஜனம்[895] வரையில்*

*பூஜை -10, தக்ஷிணை -2 பணம், வஸ்திரம், நெல்பொரி படி -4, அவல் படி -2, பொட்டுக்கடலை படி -1, சர்க்கரை இராயபுரி சேர் - 1 கொடுக்கிறது.*

---

886. 2 1/2 பணம் - 1 சென்னப்பட்டணம் வெள்ளிப்பணம் (பக்கம் 150)

887. பணம் எனினும், சின்னப்பணம் எனினும் ஒத்தைப் பணம் எனினும் ஒன்றே.

888. இரட்டைக்காசு 2 என்பது 3/64 பணம் அதாவது 1 1/2 காசு எனின ஒர இரட்டைக்காசு 3/4 காசு மதிப்புடையது எனத் தெரிகிறது.

889. காயலா - சுரம் (Fever)

890. யானைகானா - ஹத்திகானா . பீல்கானா (பக்.454)

891. லங்கணி - லங்கணம் - பட்டினி

892. தஹிபுத்தி - தயிர்ச்சோறு(?)

893. ஸரஸ்வதி பூஜை - நவராத்திரியில் ஒன்பதாம் நாளில் கலைமகளைப் பூசித்தல்

894 ஆவாஹனம் - எழுநதருளுமாறு மநதிரத்தால் தெயவத்தை அழைப்பது

895. விஸரஜநம் - நீக்குகை

*33.1231 (1830)*

(1) யுத்தசாலை - பீரங்கியின் ஹேஜீ? செய்ய குரபீ? மயிர் நீளமுள்ளதாக ஆட்டின் தோல் சுமார் 5, பெரிய சமையலறையிலிருந்து கொடுக்கிறது.

*(2) 1231 (1830)*

மாடுகன்று போட்டு வரேதவி? க்காமல்[896] இருப்பதால் மருந்தின் சாமான் ஜாபிதா.

*(3) 1231*

அரபீ வாத்தியத்தைச் சேர்ந்த தவலும் தாஸா என்கிற வாத்தியத்திற்கும் வேண்டிய சாமானின் ஜாபிதா.

*(4) 1231 (1830)*

ஸ்ரீபுரந்தர விட்டல ஸ்வாமிகளின் புண்யதிதி உற்சவத்தில் பிராமண போஜனத்திற்கு வழக்கப்படி

முழு சக்ரம்-2, கும்பனி ரூ. 10 கொடுக்கிறது.

*(5) 1231 (1830)*

மாப்பிள்ளை ரா. மேஸஜி மோஹிதேயின் அரண்மனைக்கு, மாப்பிள்ளை ரா. நாகோஜி மோஹிதேயின் அரண்மனைக்கு, மாப்பிள்ளை சிவாஜி கோவிந்தராவ் மோஹிதேயின் அரண்மனைக்கு, மாப்பிள்ளை சிவாஜி இங்களேராவ் மோஹிதேயின் அரண்மனைக்கு ஷியார்களிடத்தில்[897] மெய்யாடு சிலவு

*22.1218*

(1) ஹுஜூரின் மகாலின் ஆடுகளுக்குச் சொரி சிரங்குக்கு மேல்தடவ

வேப்பெண்ணெய்-3 சேர், மரமஞ்சள்-1 சேர்

*(2) 1218 (1817)*

சௌகமகாரிக்கும் சுண்ணாம்பை இடித்துக் கப்பலுக்குப் பூசுகிறவன் எண்ணெய் தேய்த்துக் குளிக்கக் கூட ந.எண்ணெய் 3 மனு.

*(3) 1218*

மைனா[898] என்னும் பக்ஷிக்கு வயிற்றில் புழுக்களிருப்பதை எடுக்க உள்ளுக்குக் கொடுக்க மசாலை

கோழி முட்டை -30, ஆட்டின் உபா[899]வின்? குழாய்கள் -5 சேர் வெண்ணெய் சேர் -1, ந.எ. சேர் - 2, ஆயுதசாலையிலிருந்து ஆட்டுக்கடாவின் மேஸஜி?- 1

---

896. வரேதலிக்காமல் (?) - நஞ்சுக்கொடிவிழாமல், நஞ்சுக்கொடியாவது கன்று பிறநதபின் வெளிப்படும் தசை முதலியன

897. சரபோஜியின் மாபபிளளைகள்

898. மைனா - நாகணவாய்ப்புள், பூவைப் பறவை

899. உபா(?) - வபை - ஆட்டுவயிற்றில் உள்ள நிணம்

*20. 1222 A.D. (1821)*

(1) பாகவத் மேளம்[900] - ஸ்ரீ பிரதாப ராமஸ்வாமியின்[901] முன்னிலையில் கணேச-லீலார்ணவ நாடகத்தை[902] நடிப்பதற்காகக் கொடுக்கப்படுகிற சாமான்களின் ஜாபிதா.

*27. 1229 (1828)*

(1) மராமத்து இலாகா[903] விவிருந்துபட்டுப்பூச்சியின் இயந்திரத்தைச் சொல்லுகிறபடி செய்து கொடுக்கிறது.

*38. 1218[904] (1817)*

(1) இராஜமகாலில்சொல்லி கொத்தல்லாயத்தில் குதிரையின் வாலுக்கு வெள்ளியினால் (கைப்பிடியை) தாண்டி? செய்து கொடுத்தது திரும்பி வந்ததை மகாலில் வரவு வைக்கிறது.

---

900 பாகவத மேளா - இசைநாடகக்குழு (பக்கம் 230-31)

901. பிரதாபராமசாமி கோயில் (?)

902. கணேச லீலாரணவ நாடகம் - இந்நாடக நூல் இரண்டாம் சரபோஜியால் இயற்றப் பெற்றதாதல் வேண்டும். இது தெலுங்கு மொழியில் யாக்கப்பெற்றது (பக்கம் 222)

903. மராமத்து இலாகா - இமாரதி மகால் (பக் 458)

904. ஸுஹூர்ஸன்1218 + 599 = கி.பி 1817

# சரசுவதி மகால் பகுதி-XI

# மூட்டை எண் - 43C

*60.கடிதங்கள்*

*(a)* ரா. ஸஞ்சீவ பண்டிதர், பாவா, தத்தாஜி அப்பா[1] இவர்களுக்கு - ஸேவகன் பாபண்ணாவின் அநேக நமஸ்காரம். ஆசிர்வாதம். வேண்டுகோள். இங்கு க்ஷேமம். புரட்டாசி மீ 12 உ சனிக்கிழமை எழுதினதில் தங்களுடைய க்ஷேமாதிசயங்களைக்[2] கேட்டு ஆனந்தமடைய வேண்டும். பிறகு சென்ற வியாழக்கிழமை கவர்னருடைய பேட்டி ஆனது. காகிதப்பைகளையும் சேர்ப்பித்தேன். கவர்னர் சமாசாரம் கேட்டார். அதற்கு ஸேவகன் ரா.பெரிய ஏகோஜி மகாராஜா[3] காலமுதற்கொண்டு, தற்காலமுள்ள நம்முடைய ரா.சரபோஜி மகாராஜா வரையிலும் எல்லாம் முன்பின் நடந்தவைகளைச் சொன்னதின் பேரில் போர்டில் கடிதத்தைப் பார்த்து பிரஸ்தாபமாகி[4] சரி நியாயமென்றெண்ணி இன்று மிஸ்தர்[5] ராம் அவர்களுக்குக் கடிதம் எழுதிஅனுப்பியிருக்கிறார். என்னவெனறால்-ரா.துளஜா மகாராஜாவின் குமாரர், மா. பாயிசாயேப்[6] இவர்கள் நமக்கு எழுதி யிருக்கிறார்கள். என்னவென்றால் - அவர்களுடைய நிலைமை, சமாசாரம் எல்லாம் போர்டுக்கு எழுதிக் கொடுத்திருக்கிறதின் பேரில் போர்டாருக்குத் தோன்றி எழுதுகிறதாவது - அவர்களுக்கு வெகு யோக்யதையுடனும் வெகு கௌரவத்துடனும் அவர்களுடைய சிலவுகளுக்குப் போதுமான பெரிய துகையைக் கொடுத்து நடத்துமாறு நமக்குத் தோன்றினதால் ஒரு தீர்மானம் செய்யப்பட்டதாவது - இது உங்களுக்கு நன்கு தெரியுமானதால் மனதில் வாங்கி அவர்களுக்குச் சிலவுக்கு இன்னது கொடுக்கலாமென்று எழுதி அனுப்பினால் அதைப் பார்த்துக் கொண்டு இங்கேயும் யோசித்துத் தீர்மானிக்கப்படுமென்று எழுதினால் இன்னும் இச்சங்கதியை மா. பாயிசாயேப் அவர்களுக்கும் ரா.மகாராஜாவுக்கும் உடனே தெரிவிக்க வேணும். இதன் பிற்பாடு இங்கு நமக்குச் சொல்லியிருப்பதாவது பயமில்லாமல் 50 ஆயிரம் வராகனுக்குக் குறையாமல் வெகு சீக்கிரமாக மிஸ்தர் ராமன் மூலம் எழுதி வந்தால் அதன்படி காரியபாகம் இங்கே அனுகூலமாகுமென்று ஸகஜமாய்ச் சொல்லியிருக்கிறார். அதற்கு எப்படி சீக்கிரம் செய்ய வேணுமோ அப்படி சீக்கிரம் செய்து எப்படியும் மிஸ்தர் ராமன் அவர்களுடைய மூலம் எழுதிவரவேணும். அறியவும்.

---

1. தத்தாஜி அப்பா - (பக்கம் 79)

2. க்ஷேமாதிசயங்கள்-நலச்சிறப்புகள்

3 பெரிய ஏகோஜி மகாராஜா - தஞ்சையை 1676இல் கைப்பற்றி ஆட்சி ஏற்படுத்தியவர்.

4. பிரஸ்தாபம் ஆகி - பேச்சுக்கு உரியதாகி

5. மிஸ்தர் ராம் - ரெஸிடெண்டு (போ.வ.ச.பக்.131)

6. மா. பாயிசாயேப் - துளஜாவின் மனைவியருள் ஒருவர்

ரா. தாதா-ராம் இவர்களிருவருக்கும் ஸாஷ்டாங்க நமஸ்காரம்[7] சொல்லவும். கிருஷ்ணபபா கோபால்ராவ், அப்புராவ், தாதாஜி, பாவி பாவு இவர்களுக்கெல்லாம் நம்முடைய நமஸ்காரம் அப்படியே சோன்ஜி அப்பா முத்தோஜி அப்பா[8] இவர்களுக்கு நம்முடைய ஆசீர்வாதம தெரிவிக்கவும். வணக்கம்.

60•1790

(b) இக்கடிதம்மகாஸ்ரீஸ்ரீராவுசாயேப்அவர்களுக்குக்கொடுப்பது.விஞ்ஞாபனம்[9]-திருமல் நாய்கருக்கு அழைத்துக் கொண்டு திருவல்லிக்கேணிக்கு ம. ரா ராயரிடம் சென்று எல்லாச சங்கதிகளையும் பேசினதில் 80 ஆயிரம் வராகன் கொடுத்தாலொழிய முடியாது என்று நிச்சயமிருக்கிறது. ஆனால் ரகுனாதப்பாவின் காரியமட்டும் தானென்று பேசுகிறார்கள். இரண்டாவதாக நம்முடைய இராஜ்யத்தினுடையவும், மா.பாயிசாயேப் அவர்களுடையவும் பேச்சி வார்த்தை ஆக வேண்டுமே. இதற்கு என்ன யோசனை. காரியம் பின்னால் ஆகட்டுமென்றால் பின்பு ஆகுவது கடினம் (சிரமம்) என்று நீங்களே சொன்னீர்களே. இதற்கு என்ன சொல்லுகிறார் என்று கேட்டதற்கு அங்கிருந்து எழுதி வந்ததில் ஒருவேலை முதலில் தீர்ந்த பிற்பாடு அதைப பேசலாம்• அனைத்தையும் ஒரே தடவையில் பேசக்கூடாதெனறு எழுதினதால் நாம் பேசவில்லை. இப்பொழுது அதற்குச் சிலவு வேறாகவே கேட்கிறாரே. அதற்குச் சேவகன் சொன்னதாவது,அவர்கள் எழுதின 40, 10 ஜாஸ்திகம்மி[10] ஆனாலும் 50இல் முடிக்க வேண்டியதை 80 வரையில் நிச்சயம் ஆனாலொழிய அவருக்கு என்றால் எப்படிச் சொன்னதற்குச் சொன்னார். பாபிக்கு யஜமான் தன்னால் 2, 20 கூட செய்தார்களே. அதற்குச் சேர்ந்தது போக பாக்கி 14 இருப்பதைக் கொடுக்க வேணுமல்லவா? என்றார்.

அவ்வேளையில் பேசின வேலையும் ஆகாவிட்டால் அத்துடன் தீர்ந்தது. அந்தப் பாபி[11] யானவர் நம்முடைய வேலை முழுமையும் கெடுத்தார். அதைப் பற்றி இப்பொழுது பேசி என்ன செய்வது என்றார். அதற்கு நாயுடுவுக்கு ஏதாவது பேசினீர்களாவென்று கேட்டார். பேசி வைத்திருப்பதாகச் சொன்னார். அதன்பிறகு நாயுடு வந்ததும் பெரிய ராவ் சாயேப் அவர்கள் பேச்சியில் பேச்சி மாட்டும்படி செய்து ரா. சரபோஜி ராஜாவின் வேலை என்ன செய்தீரென்றார். அதற்கு நாயுடு என்ன செய்யவேணுமென்றார்.

அதற்கு இவரை (அமரசிங்கை) எடுத்துவிட்டு அவரை (சரபோஜியை) பட்டத்தில் ஸ்தாபிக்க வேணும். பாபா[12]வுக்குக் கார்பார் கொடுக்க வேணும். இப்படிச் செய்ய வேணுமென்று தெளிவாகச் சொன்னார்.

---

7. ஸாஷ்டாங்க நமஸ்காரம் - இருகை, இருமுழங்கால், இருதோள், மார்பு, நெற்றி ஆகிய எட்டு உறுப்புக்கள் நிலம தீணடச் செய்யும் நமஸ்காரம்

8. முத்தோஜி அப்பா - (பக்கம் 80)

9. விஞ்ஞாபனம் - விண்ணப்பம்

10. ஜாஸ்திகம்மி - மிகுதிகுறைவு

11. பாபி என்றது யாரை என்று தெரியவில்லை

12. பாபா - (பக்கம் 85)

அதற்கு நாயுடு சொன்னதாவது - படிப்படியாக ஆகவேணடிய வேலைதான அது. ஆனால் விதறியாசமில்லை சென்றவுடன் ஆகாது. முதலில் இவ்வேலை ஆகட்டும். இத்துடன் கூட ரா ஸ்ரீசரபோஜி ராஜாவின்

தற்காலம் ஆகவேணடிய வேலைகள் ஏதாவதிருந்தால் பாபாவுக்கே ஸர்கில் வேலை ஆகுவதால் அங்கேயே செயது கொள்ளலாமென்றார்.

அதறகு அப்ப... ஆகாது. பாபா அமரசிங்கினுடைய வேலைக்காரர், அவர் அவருடைய அனுகூலம் எனன செய்வது உண்டு. இதற்காகப் போர்டிலிருந்து உத்திரவு எழுதுகிற நேரத்திலேயே மேஸ்தர ராம் அவர்களுக்கு எழுதுவது என்னவென்றால் கும்பனிக்காரரகளுக்கு அவசியமானதால் அவர்களுக்கு மாதத்திற்கு 1000 வராகன் செய்து கொடுக்கிறது. பாயிசாயேப் அவர்களுக்கு அவர்களுடைய மொயினும்ஜூத்திற்குககிராமம், சத்திரம், தோட்டம், சமபளங்கள், துணிகள் வகையறா எல்லாவறறையும் துளஜா மகாராஜாவின காலத்தில் நடந்து வந்தபடி அப்படியே நடதறி அவர்களைக் கௌரவத்துடன் நடத்துகிறது என்று உததிரவு எழுதுகிறது. மேலும் ஏதாவது சில்லறை சமாசாரம் இருந்தால் மிஸ்தர் ராம் பார்த்துக் கொள்ளுவாரென்று ம. ஸ்ரீ. ராவுஜி சொன்னார். தெவசம், பாயிசாயேப் அவர்களைப் பார்க்கப் போக வேண்டியதற்கு வழி (மார்க்கம்) பற்றிப் பேச வேண்டு மென்றார். அது போகட்டும்; மிஸ்தர் ராம் அவரகளுக்கே அவர்களைப் பகுமானத்துடன்[13] நடத்துகிறதென்று எழுதியிருப்பதால் எலலாவறறையும் தான கவனிப்பார் இம்மாதிரி போரடின் கடிதத்தையும் அவர எழுதிககொடும் என்றார. இதற்குத் திருமலை நாயுடு சொனனதாவது - ரா.சரபோஜி ராஜாவின் காரியத்திற்கும் பாயிசாயேப் காரியத்திற்கும் ஒரு மனுவை எழுதிக் கொடுக்க வேணும். அதற்கு இவர் முனவநது நடததுவாரா. பாபாவின வேலைக்கு ஏதாவது கேள்வி - பதில் சொல்லுவதற்கு இவர் சொல்லுவாரா எனறார். அதற்குப் பெரிய ராவ்சாயேப ... சொன்னதாவது - அவ்வேலைக்காகவே வந்திருக்கிறார். அவர் கவர்னர் பேரால் பாயிசாயேப்புடையவும், ரா.சரபோஜி ராஜாவினுடையவும், கடிதத்தையும் வஜ்ஜிரமும் (வயிரங்களும்) ஏதோ ஆடைகளையும் கொண்டு வந்திருக்கிறார். அதையும் சேர்ப்பியுங்கள். இன்னும் இராஜாவினுடைய பாயி சாயேப்பினுடையவும் பாபாவினுடையவும் வேலைக்கு நீங்கள் என்ன செய்ய வேண்டுமென்கிறீர்களோ அதற்கு அவர் முன்வந்து நடத்துவார் என்று சொன்னார்.

அதற்குப் பின்பு தனியாக திருமல் நாயுடுவுக்குச் ஸேவகனும் ராமண்ணாவும் கேட்டதாவது - நாம்எழுதவேணடியிருக்கிறதேநீங்கள் எந்தெந்த வேலைகளைச் செய்து கொடுக்கிறீர்கள் என்று கேட்டதற்கு சிவராவ் வகையறாவைக் கைது செய்வது பாபாவுககு ஸர்கீல் உத்யோகஞ் செய்து கொடுப்பது. சரபோஜி ராஜாவுக்கு மாஸத்திற்கு 1000 வராகன் செய்து கொடுப்பது. பாயிசாப் - அவர்களுக்கு முன்நடந்தபடி கௌரவத்துடன் நடத்துவது. இத்தனை வேலைகளைச் செய்து கொடுப்பதென்று எழுதுங்கள். இந்தப் பாபத்துக்குத் தனியாகச் சிலவிற்கு வரவழைததுக் கொடுங்கள். அதின் துகை ரா.ராயர் சொன்னபடி வரவழைததுக் கொடுங்கள என்று சொல்லியிருக்கிறார். அதுவுமிதுவும் சேர்ந்து ஒரு லகாரத்துக்குச்[14] சரியா

13 பகுமானத்து... - சிறப்பாக

14 லகாரம் - லக்ஷம

யிருக்கிறது. பிறகு நாமிருவரும் ம.ஸ்ரீ. ராயருடையவும் நாயுடுவுடையவும் உத்திரவு பெற்றுக் கொண்டு இரவு ஆய்விட்டதால் புறப்பட்டு வந்தோம். இதன் மேல் எழுதிய விஷயங்களை எழுதினேன். விஞ்ஞாபனம் கௌனருடைய கடிதமும், ஆடைகளும் இன்னும் வந்து சேரவில்லை. சமயம் நேர்ந்தால் கடன் வாங்கிக் கொடுக்க வேண்டி யிருக்கிறது. அறியவும். விஞ்ஞாபனம் ஆடி மீ 8உ

60 (c) ரா.ஸ்ரீ.தத்தாஜி அப்பா சாயேப் அவர்களுக்கு-ஸேவகன் கோபால் வெங்காஜியின் அநேக ராம்.ராம். வணக்கம் இவ்விடம் க்ஷேமம் வையாசி மீ சனிக்கிழமையன்று தங்கள் க்ஷேமாதிசயங்களுக்கு எழுதிக் கொண்டிருக்க வேணும்.

இதன் பிறகு தாங்கள் 25உ எழுதின கடிதம் 29உக்கு வந்து சேர்ந்து எழுதிய சங்கதியை அறிந்தேன். பாதரி சாயேப்புக்கு ஜனரலுடைய பதில் வருவதில் மா.ஸ்ரீ .ஆவுசாயேப் கிராமங்கள் சத்திரங்கள், தோட்டங்கள் அமரசிங்குக்குக் கொடுப்பது. பாக்கி ஆஸ்தி பாஸ்தி[15] பாயிசாயேப்புக்குக் கொடுத்திருப்பதைத் திரும்பி கேட்க வேண்டியதில்லை என்றும், டிப்புவின் குழந்தைகள்[16] வந்திருப்பதினால் ஸ்ரீமந்த் சத்திரபதியை[17] தற்காலம் நான்கு மாதத்திற்குப் பிறகு அழைக்கிறேன். அல்லது இப்பொழுதே வருவதற்குத் தங்களுக்குச் சம்மதமிருந்தால் அழைக்கிறேனென்று ஜனரலவர்கள் எழுதியதாக எழுதினார்,

ஆனால் இவ்விடம் நடப்பதை இரண்டு மாதங்களாகப் பார்த்துக் கொண்டு வருவதால் நமக்குத் தோன்றினதை எழுதுகிறேன். என்னவென்றால் - இச்சமயம் ஒருபொழுதும் வரமாட்டாது. லாட் கர்னவாலிஸீம்[18] ஜனரல் மேட்டுஸ்ஸீம் வந்திருக்கிறார்கள். நவாப்பினுடைய விஷயங்கள் தஞ்சாவூரின் விஷயங்கள் தீர்ந்து கொண்டிருப்பதால் மா. ஆயுசாயேப்பின்[19] உத்திரகிரியையை[20] அவர்[21] மொரட்டுத் தனமாக செய்ததால் அது ஏற்றுக்கொள்ளத் தக்கதல்ல என்று ஸ்தாபித்தால் தான் நமக்கு அனுகூலமாகையால் தாங்கள் யஜமானுடைய கார்யஞ் செய்வதில் ஆனதால் எப்படியாவது ஸ்ரீமந்த் சத்திரபதியை இவ்விடம் அழைத்துக் கொண்டு வந்தால் இங்கு நடப்பது தங்களுக்கு நன்கு விளங்கும். ஸ்ரீமந்தருக்கும் வெகு மரியாதை கிடைக்கும். நம்முடைய காரியங்களை எல்லாம் சுலபமாய் விசாரணை செய்து தீர்மானம் செய்வார்கள். இதற்குச் சந்தேகமில்லை. இவ்வேலையை முதலில் செய்ய வேண்டும். அதனால் வெகு புகழும் இராஜ்யத்திற்குப் போவதற்குள் பெயர் விளங்கி பெரிய வேலையும் சீக்கிரமாகும் என்று நிச்சயம் தோன்றிருப்பதால் எழுதி யிருக்கிறேன். இக்கடிதத்தை ஆயிரம்

15. ஆஸ்திபாஸ்தி - ஆஸ்தி - சொத்துக்கள்

16. டிப்புவின் குழந்தைகள்-(பக்கம் 93); கி.பி. 1792இல் டிப்பு தோல்விடைந்தார், ஆங்கிலேயர் 3,00,000 பவுண்டு இழப்பீடு பெற்றனர்; திப்புவின் மக்களுள் இருவரைப் பிணையாகப் பெற்றார்கள் என்று தெரிகிறது

17. சத்திரபதி என்றது இரண்டாம் சரபோஜியை

18. லாட்கா்னவாலீஸ - இவர் 1786 முதல் 1793 வரை கல்கத்தாவில் கவர்னர் ஜெனரலாக இருநதவர் (பக்.60)

19. மா.ஆவு சாயேப் என்றது துளஜாவின் தாய் திரௌபதாம்பா பாயியை

20. உத்தரக்கிரியை - இறந்துபட்டவர்களின் இறுதிச்சடங்குகள்

21. அவர் என்றது அமர்சிங்கை

கடிதம் என்று அறிந்து கொண்டு சில உறவினர்களையும்கூட்டிக்கொண்டுஇஙகுவருவதற்கு முயற்சி செய்ய வேணும். நாலு காசி சிலவானாலும் லக்ஷியஞ் செய்யாமல் முதலில் வருவதற்கு என்ன வழியோ அதைச் செய்ய வேணும்.

மிஸ்தர் போசரானவர் நம்முடைய மனுவை அந்தரங்கமாக மிஸ்தர்மாக்லிஸுக்குக் காட்டியிருக்கிறார். ஜனரலுக்கும் இனறு, நாளை காட்டப்போகிறார். அம்மனுவின் நகலை அனுப்பி யிருப்பதைத் தாங்கள் பாரத்து அவ்விடம் பாதிரி[22] சாயேப் அவர்களுக்கும் காண்பித்து எனன சொன்னாரெனபதையும் தங்களுடைய மனதுக்கு நல்லது கெட்டது என்ன தோன்றினதையும் சீக்கிரம் எழுதி அனுப்ப வேண்டும்.

புஸ்தகத்தின் நகல் ஒன்றுதானிருக்கிறது. அம்மனுவைப் பார்த்து, புத்தகம் கொண்டு வாருமென்றால் புத்தகமும் கொடுக்கிறேன். அப்புத்தகத்தின் மராட்டி ஜாதியின் தர்ம பரம்பராவையும், ஜாதியின் நியாயம் முதலியவற்றையும் எழுதப்பட்டிருக்கிறது. சில தரமசாஸ்திர வசனங்கள் எழுதப்பட்டிருக்கிறது. இவையெலலாம் எழுதி அமரஸிங்குப் பிறந்த நாள் முதற்கொண்டு இது வரையிலும் அவரை மா.ஸ்ரீ பிரதாபசிங்கும் ஸ்ரீ.துளஜா ராஜாவும் வைத்திருந்த அவருடைய ஜாதி முதலியவும் அவருக்குச் செயயவேண்டிய மரியாதை எலலாவற்றையும் எழுதியிருக்கிறது. அவருடைய அயோக்யததனததை எலலாம தெளிவாக எழுதியிருக்கிறது.

இங்கு மிஸ்தர் ராஸரவர்கள் அப்புத்தகத்தை நன்றாகப் பார்வையிட்டிருக்கிறார் ஜனரலவர்கள் அவர் பேரில் எழுதி யிருக்கிற குற்றங்களைப் பார்த்தால் அவருடைய அயோக்யத்தனம் நன்கு விளங்கும். அதிலேயே வம்ச விருக்ஷமும்[23] எழுதி அதில் ஆங்கிலேயத்தில் அந்தந்த பங்க்குகளில் (பாராக்களில்) எழுதி அதுவும் அதிலே இருப்பதால் அதைப் பார்த்த பின்னர் அவருடைய அயோக்யத்தனம் தெரியும்.

ஸ்ரீ மந்தரையும் நேரில் பார்ப்பார்கள். அப்பொழுது இப்புத்தகத்தைப் பார்த்தாலே அவருக்குப் புரியும். (சரியாயிருக்கும்) பெரிய காரியம் தானாகவே ஆகும் போலிருப்பதால் இங்கு வருவதற்கு எழுதி யிருக்கிறேன். அப்புத்தகத்தை ஜனரல்லாட் பார்த்து விசாரணை செய்வாரே. பாதிரி சாயேப்பையும் கேட்டு அனுப்புவார். புத்தகத்தையும் அனுப்பி இந்தப்படி நிஜமாவென்று கேட்டனுப்புவார்.

அப்பொழுது பாதரிசாயேப் அவர்களுக்கு நன்றாகச் சொல்லி வைத்து இப்படி யார் எழுதியனுப்பினதென்று கோபித்துக் கொளளாதபடி யிருக்கும்படி சொல்லி வைக்கவும்.

அவருக்கு அமரசிங்கை மோசஞ் செய்யக் (முழுகடிக்க) கூடாதென்ற அபிமானமிருக்கு மென்று நம்முடைய மனதில் தோன்றினதால் எழுதி யிருக்கிறேன். ஏனென்றால் அவர் உலகத்தை வெறுத்தவராகையால் அவர்[24] எலலோரையும் ஸமமாகப் பார்க்க வேண்டியது நியாயம். நாம் அப்படிப் பார்த்தால் பதவியை எப்படி அடைய முடியும். ஆகையால் நாம் செய்ய வேண்டிய

22. பாதிரி என்றது ஸ்வார்ஷ்பாதிரியை

23. வமிச விருக்ஷம் - வமிசாவளி - கால்வழிமுறை

24 அவர எனறது சுவார்ஷ் பாதிரியை

முயற்சி நம்முடைய பாத்யதை[25] நியாயமாயிருப்பதால் இவர்களை யெல்லாம் முழுகடித்தே நாம் தீர வேண்டும். இவ்விஷயமாகப் பேச்சு வார்த்தை நடக்கும்போது, தாங்கள் பாதரி சர்யேப் அவர்களுக்கு எப்படிச் சொல்ல வேணடுமோ அப்படிச் சொல்லுகிறது.

இப்பவும் ஸேவகன் எழுதிய பாவத்துக்கு முன்னாலோசனை நன்றாகச் செய்து வைக்கவும். இப்படிக்கி சமயம் நேரிடுமாகையால் அவருக்குத் தெரிவித்து வைக்க வேணும. இக்காரியத்திற்கு மா.பாயசாயேப்களுக்குச் சமயம் நேரிட்ட பொழுது பேசும்படி சொல்லி வைக்க வேணும். அவர்களுடையு பலம் முதலில் வேண்டியது. உறவினர்களுக்கும் ஸாக்ஷி சொல்லச் சொல்லி வைக்கவும். இந்த ஏற்பாட்டைச் (பந்தோபஸ்தை) செய்வதற்கு 27உ நான எழுதியிருக்கிறேனே அதிலும் இச்சங்கதிதான் எழுதியிருக்கிறது. மிஸ்தர் ராஸாவுக்கு ஒரு கடிதம்

சாஸ்திரத்தின் விஷயமாக எழுதுவதற்கு எவ்வளவு எழுதினாலும் அவர் எழுத முடியவில்லை. அதனால் நம்முடைய காரியத்திற்கே அனுகூலமாகையால் எழுதுவது. ஆனால் வேறு எதற்குமல்ல.

இப்பொழுது மனு கொடுத்தவுடன் ஏதாவது சிலவாகுமாகையால் இக்கடிதம் கண்டதும் இதன் பதிலை வெகு சீக்கிரம் எழுத வேணும். தங்களிடம் கைவசத்தில் இருக்கிற துகையை அங்கே யாரிடமாவது கொடுத்து ஹூண்டி செய்து அனுப்ப வேண்டும். இதற்குத் தாமதமானால் காரியமாகாது. காரியம் 4,5 விதமிருக்கிறது. அந்தந்த மாதிரி நிலம் துகை கொடுப்பதாக அவரவருக்குப் பேச வேண்டியதாக யிருக்கிறது. இந்த வேலை முடிந்ததும் அவர்களுக்குக் கொடுக்க வேணும். காரியமாகாவிட்டால் துகை மத்யஸ்தரிடமிருக்கும். அது நமக்குச் சேரும்.

ஸ்ரீ மந்த் சத்திரபதியின் சொத்து ஒருபைசா ஒருவருக்குக் கம்மிகொடுக்கமாட்டேன். மேலும் ராஜதுரோகஞ்[26] செய்து ஒருவரும் ஒரு பைசாவைச் சாப்பிட மாட்டார்கள். வேலை செய்து காட்டி வேலை செய்ததைருஜுப்படுத்திக்காட்டி யஜமானவர்கள் வெகு சந்தோஷத்துடன் என்ன கொடுக்கிறார்களோ அதுதான் எல்லோருக்கும் உபயோகப்படும். ஆனால் துரோகஞ் செய்து ஸம்பாதித்த திரவியம் அவர்களுடைய குழந்தை குட்டிகளுக்குப் பயன்படாதே. ஆகையால் தங்களிடமிருக்கிற துகையை அனுப்பித்தால் சிலவான விபரத்தை எழுதுவேன்.

ஸேவகன். வைகாசி மீ 1 உ முதல் பல்லக்குத் தூக்குவதற்கு ஆட்களை நியமித்துக் கொண்டிருக்கிறேன். ஆசாமி 10க்கு மாதத்திற்கு 10 வராகன் சம்பளம், வேலைக்காரர்களுக்கு மெழுகுவர்த்தி 2,இந்தப்படிக்கி 12 பல்லக்குக்கு வாடகை 3 ஆக 16 வராகன் இம்மாதத்தில் கொடுத்திருக்கிறது. இனிமேல் தனியாய்க் குடியிருந்தாலொழிய முடியாது.

தனிமையாய்க் குடியிருந்தால் சமையல்காரனுக்குச் சம்பளம் (வராகன் 2 பேருக்குச் சாப்பாட்டு சிலவு4 வாரகன்வீட்டுவாடகை இந்தப்படி ஆகிறது. இதற்காக எவ்வளவு எழுதின போதிலும் ஒன்றும் அனுப்பாமலிருந்தால் தினமும் என்னவென்று அறிவது. ஸ்ரீமந்த் சத்திரபதி ராஜாவின் அந்தஸ்துபடி ஆடைகளுமிருக்க வேணும். அதற்கு 10 வராகனிருந்தால் போதும். மேலும் ஜனரல் ஜானுக்கும் செய்ய வேண்டிய அவசியத்தைச் செய்யப்படும்.

---

25. பாத்யதை - உரிமை

26. ராஜதுரோகம் - அரசனுக்குக் கேடுசூழ்தல்

ரா. பாவுராயருடைய கடனுக்குத் தாங்கள் தங்களாலான ஸகாயத்தைச் செய்து கொண்டுதானிருக்கிறோம். இனனும பெரிய பெரிய ஸாதகமிருப்பது பெரியவராகச செய்வது அவ்விஷயத்தில் தாங்கள யாதொரு குறையுஞ் செய்ய மாட்டீர்களென்று அறிவித்ததினால் தங்களிடமிருந்து வித்தியாச முண்டாகாது என்பது நன்கு விளங்குகிறது. இனி ஆக வேண்டியவர்களுக்கு யாரால் என்ன செய்ய முடியும். தங்களாலியனற சகாயத்தைச் செய்ய வேணும். பிறகு எப்படி இருக்குமோ அப்படி ஆகிறது அறியவும்.

கஷ்டததினால வந்தவுடன கணேசராயருடைய மாடியில நடநத நடவடிக்கைக்குத் தாஙகள் செய்த சகாயத்தை ஸேவகன நேரில் பார்ததிருந்தேன். அதை அடிககடி சொல்லுகிறேன். அந்நேரததில் தாங்கள் அவ்வளவு செய்ததினால் தைரியமுணடா யிருக்கிறது. இல்லாவிட்டால் இநத ஜனங்களுக்கு நம்பி யிருப்பவருககு அழியும்படி செய்திருப்பார்கள். இதிலும் தங்களாலான உதவியைச் செய்தால பினபு எப்படி ஆகிறதோ அப்படி ஆகும். தெரிய வேணடு மென்பதறகாக எழுதி யிருக்கிறேன்.

மனுவை வெளிப்படையாகக் கொடுப்பதற்கு யோசிக்கிறேன். அது என்ன வென்றால் - முதலில் பாயிசாயேப பேரால கொடுத்துக் கொணடிருந்தோம். அதற்கு முனபின் ஏதாவது ஆனால பாய்சாயேப் அவர்கள் எழுதினார்களெனறு அவர்களை ஒருவரும் கேட்க மாட்டார்கள. இப்பொழுது பாயிசாயேப ஸவாதீனமினறி தாம் எழுதினதிலிருந்து தெரிய வருகிறதே. அதறகாக நம்முடைய ஸ்ரீமந்த சததிரபதியின் பேராலேயே எழுதுவதற்கு தயார செய்திருக்கிறதே.

அம்மனுவில எல்லா விவகாரமும் கண்டு எழுதியிருக்கிறதே. அதை எழுதினதின் பேரில வெள்ளைக்காரர்களுக்குப் புரியாதே. இப்படி எழுதினதினால் ஒரு சமயம் ஸ்ரீமான் அவர் குழநதை அவருககு இந்தப்படி எழுதத தெரியுமா. இப்படி யார் சொன்னார்கள். யார் சொலலிக் கொடுத்தார்களென்று பாதரி சாயேப் எழுதினார். அதற்கு நாம் பதில் எழுதினோமே. இது நடுவில எங்கிருநது வந்தது. பாதரி சாயேப்போ வக்கீல அவவிடம் வந்திருக்கிறாரெனறு ஒரு தகவலும் எழுதவில்லை. இதறகு எலலோரும் கண்டபடி (கோணல் மாணலாக) நடுவாந்தரத்தில் இதைச செய்கிறாரகளெனறு எழுதிக கொடுப்பாரானால் முதல் தடவையிலே நம்மை மிரட்டிக கேட்பார்களே அதற்கு நாமென்ன பதிலைச சொல்லுகிறது.

ஸ்ரீமான் சத்திரபதியானவர் அந்தக கடிதத்தின் பதில வெகு சீககிரம் எழுத வேணும முதல் வேலைக்கு அவ்வேளையிலோ அநதந்தப் பிரசங்கத்திற்கு தானும் கூட இருந்து பார்வையிட்டுச் செய்த வேலையைப் பற்றி பிறரொன்றும் சொல்ல வேண்டியதில்லையே. இப்படி யிருககையில் அந்த உபத்திரவம் அப்படியே நிற்க, பின வேலைகளைப் பாரப்பதொன்றால் யாராவது ஒரு பணத்திற்கு நம்பி வருவார்களா வெனன. அதனால் அவ்வுபததிரவம்[27] தீர்ந்தாலொழிய இனி ஆகவேண்டிய வேலைககு ஒரு ஸாதகமு[28] முண்டாகாது. உத்தரோத்திரம்[29] உறுதி ஆகுவது. ஸ்ரீமானுடைய அவருககுச் சகாயமுள்ள நீங்கள் ஆகையால் அவருடைய கவலை

---

27 உபததிரவம - துனபம

28 ஸாதகம - அநுகூலம, நன்மை

29 உத்தரோத்திரம - மேனமேலும

உங்களுக்கிருந்து நீங்கள் நன்றாக ஏற்றுக்கொண்டு செய்யும்படி செய்ய வேண்டும். தங்களைப் போன்ற ஸ்ரீமான்களிலிருந்து பாபுராவுக்கு அவமானப்படும்படியான போது சரி அல்லவென்று இச்சங்கதியின் பயங்கொண்டு நீங்கள் இதைத் தீர்க்க வேண்டியது.

கடிதம் கொடுங்கள் என்று பவர் ஆப் அடார்னி[30] கடிதத்தையும் கொடுத்தனுப்பி யிருக்கிறாரென்று சொல்ல வேண்டியிருக்குமே. அதறகுக் கைப்பட எழுதிய கடிதத்தையும காட்ட வேண்டியதா யிருக்கும். அந்தக் கையெழுத்து யாருடையதென்று கேட்டால் தன்னுடையது தானென்று சொல்ல வேண்டியிருக்குமே. அப்பொழுது அந்த வார்த்தைககு நீங்கள் ஏற்றுக்கொண்டு நல்லதோ கெட்டதோ ஆங்கிலேயமொழியினால் பேசவேண்டுமே. ஸ்ரீமந்தரோ குழந்தை ஆனதால் அவ்வார்த்தைகள் ஒருவருடைய தலையின் பேரில்தான் வரும். அப்பொழுது நான்தான் என்று ஒப்புக்கொண்டு பேச வேண்டியிருக்குமே.

மிஸ்தர் பாதரி சாயேப்பும் அப்பொழுது எனக்குத் தெரியாமல் நீங்கள் இவ்விடம் அனுப்பினதற்கு என்ன காரணமென்று கோபித்துக் கொண்டால் அதற்கும் நாமே அனுப்பித்தோமென்று அதற்குத் தக்கபடி தைரியமாகப் பதில் சொல்ல வேண்டுமே. ரா.சாஸ்திரிகளுக்கு இவ்வேலைக்கு நியமித்திருக்கிறோம் என்று பாதரி சாயேப் அவர்கள் வெளிப்படையாக மிஸ்தர் ராயாவுக்கு இவ்வந்தரங்கம்[31] தெரிந்திருந்ததால் எழுதியிருக்கிறது. ஆனால் அதைப் பற்றி பின்னால் பேசிக்கொள்ளுகிறேன். அதுவும் உங்களாலும் செய்யமுடியவில்லை யாகையால் அதுவும் வெளிப்படையாகத் தெரியாதே.

இவ்வேலைக்கு மனுவைக் கொடுத்த பின்னர் அவர்கள் அதட்டிக் கேட்டால் நீங்கள் நான்தான் செய்தேன். யஜமானு[32]டைய உத்திரவின் படி செய்திருக்கிறேனென்று தைரியமாகச் சொல்ல வேண்டுமே. அப்பொழுது நீங்கள் என்னமோ எப்படியோ என்று யோசித்துப் பின்வாங்கினால் எல்லா வேலையும் கெட்டுப் போய் வெகு ஆபாஸமாகும்[33]. இங்கு நம்முடைய உயிருக்கும் ஆபத்து நேரிடும். ஆகையால் இவை எல்லாம் விஸ்தாரமாகத் தங்களுக்கு எழுதியிருக்கிறது. கடிதத்தை வெளிப்படையாக ஜனரலுக்கும் லாட்சாயேப்புக்கும் கொடுப்பதற்கு யாதொரு ஆக்ஷேபமில்லை. ஒரு க்ஷணத்தில் கொடுக்கலாம். கொடுத்த பின்னர் எல்லோரும் ஒன்றாக விருப்பதால் அவர் ஏதாவது எழுதிக் கொடுப்பார். அப்பொழுது இவ்விரண்டில் நிஜமெதுபொய்யெது என்றும் தங்களுக்குத் தெரிந்து ஆனதோ, தெரியாமலானதோ என்று பாதிரி சாயேபுக்குக் கேட்டு அனுப்புவார். அப்பொழுது பாதரி சாயேப் சாதகமாக இருக்க வேணுமே: சரி. அவர்கள் தங்களுடைய தாபத்ரயத்தினால்[34] இங்கு வெறும் அநியாயமா யிருப்பதால் தம்முடைய வக்கீல் கோபால்ராயருக்கு அனுப்பினாரென்று எழுதிக் கொடுத்ததும் நியாயமென்று அவர் சொல்ல வேண்டுமே அதை விசாரிக்க வேண்டுமென்று அவரும் தங்களுக்கும் சகாயமாயிருக்க வேணுமே.

---

30. பவர்ஆப் அடர்னி - செயலுரிமைப் பத்திரம், Power of Attorney

31. அந்தரங்கம் - இரகசியம்

32. யஜமான் - தலைவர் (இஙகு சரபோஜி)

33. ஆபாசம் - கேவலம்

34. தாபத்ரயம் - ஆத்யான்மிகம் (தன்னைப்பற்றி வருவன), ஆதிதெய்விகம், (தெய்வத்தான் வருவன), ஆதிபௌதிகம் (தன்னையொழிந்த பிராணிகளாலும் வருவன) என்ற மூவகைத் துன்பங்கள்

அவர் எனக்கு ஒன்றும் தெரியாது. ஸ்ரீமந்தரோ குழந்தை அவருக்கு ஒன்றும் தெரியாது. சென்னையிலே யாராவதோ அல்லது இங்கிருந்தோ யாராவதோ நடுவிலே என்ன செய்தார்களோ என்று சொன்னால் சாதகஞ் செய்யப் போய் கெடுதி ஏற்படுமே. இவ்வளவு யோசனையும் மனதில் தோன்றி மனுவை வெளிப்படையாகக் கொடுப்பதற்கு யோசனை செய்கிறேன்.

முக்கியமாக யஜமானருக்கும் கார்பாரிக்கும்[35] எல்லாம் தைரியமிருக்க வேணும். காலம் நன்றாக யிருந்தால் இங்கே சாதகஞ் செய்கிறவர்கள் செப்புக் கட்டுவார்கள்[36] அந்த முயற்சியும் உபயோகப்படும். அங்குக் காலம் கெடுதியாக யிருந்து பயப்பட்டால் எல்லா முயற்சியும் வீணாகி, கடைசியில் ஒருவரிருவருக்கும் கெடுதி உண்டாகும். இப்படி ஆகாமலிருக்க வேணுமென்று தோற்றத்தைத் தங்களுக்கு எழுதியிருக்கிறேன். இதை ஏன் எழுதினீர்களென்றால் இவ்விடம் நடக்கும் சங்கதிகளைத் தாங்கள் நேரில் பார்த்திருந்தால் நாமெதுவும் எழுதுவது வேண்டியதில்லை. நமக்கும் தைரியமிருக்கும். காரியத்தையும் பார்க்கலாம். அங்கிருக்கிற பாதரி சாயேப் அவர்கள் எதுவரையில் பேசக்கூடும் என்பது நமக்கு நன்கு விளங்கவில்லை.

இன்று வரையில் நாம் மனு எழுதியிருப்பதை அந்தரங்கமாக நம்முடைய சிநேகிதர்களுக்கெல்லாம் காட்டி, பாதரிசாயேப் அவர்கள் எழுதிய வேலைக்கு இங்கிருந்து ஸாதகமாகும்படி செய்து கொடுக்கப்பட்டது.

வெளிப்படையாக நாம் கொடுக்கையில் இதுவரையில் யோசித்துக் கொடுக்க வேண்டியிருக்கிறது. இதற்காகத் தங்களுக்கு எல்லாவற்றையும் எழுதி யிருக்கிறேன்.

இப்பொழுது ஸ்ரீமந்தர்[37] இங்கு வருவதற்கு மாதிரி நன்றாக யிருக்கிறது. இங்கு யஜமான்கள் எல்லோரும் வந்திருக்கிறார்களாகையால் விசாரணை வெகு நன்றாக ஆகும். முயற்சி செய்து இங்கு வந்தால் எல்லாவேலைகளும் தங்களுடைய மனதின்படி அனுகூலமாகும். சந்தேகமில்லை.

இதற்கு ஜனரலும் பாதரி சாயேபுக்கு எழுதினதில் தங்களுக்குச் சம்மதமிருந்தால் இங்குக் கூப்பிட்டு அனுப்புவதாக எழுதி யிருப்பதால் இப்பவும் பாதரிசாயேப் இடமிருந்து ஜனரலுக்கு எழுதி அனுப்பித்து இங்கேயே அழைப்பித்து வந்து விசாரணை செய்ய வேண்டுமென்று எழுதியனுப்பி நீங்கள் இவ்விடம் வந்து சேர்ந்தால் காரியமெல்லாம் அனுகூலமாகத்தான் இருக்கிறது. இதனால் நாலு விதமும் விஸ்தாரமாகத் தங்களுக்கு எழுதி யிருக்கிறேன். இக்கடிதத்திற்குப் பதில் வெகு சீக்கிரம் வரவேணும். இவை எல்லாம் யோசித்து நீங்கள் மிஸ்தர் பாதிரி சாயேப் அவர்களையும் யோசனையைக் கேட்டு இதற்குப் பதிலெழுதின க்ஷணத்திலே மனுவைக் கொடுத்து பின் ஆக வேண்டிய வேலைகளுக்கும் எழுதி அனுப்பிகிறேன்.

ஸேவகனோ நேற்று முதற்கொண்டு, தனியாகப் போய்க்குடியிருக்கிறேன். ஆகையால் அடிக்கடி இனி சிலவுக்கு ராஜேஸ்ரீ அவர்களிடம் கேட்பது சரி அல்ல. இன்று வரையிலும் கடன்

35. கார்பாரி - அரசரின் மெய்க்காப்பாளரின் தலைவன்

36. செபபுக்கட்டுவார்கள் - சப்பைக் கட்டுக்கட்டுதல் - குறறங்குறைகளைத் தாங்கிப் பேசுவார்கள்.

37 ஸ்ரீமநதர் - இரண்டாம் சரபோஜி

செய்திருக்கிறேன். அதற்கும் பின்பு இனி ஆக வேண்டியதற்காகவும் சிலவுக்கு ஏற்பாடு செய்து சீக்கிரம் அனுப்ப வேணும். தபால் நேரமானதால் மேல் சமாசாரத்தை எழுதி யனுப்புகிறேன்.

இந்த வேளையில் ஒரு நாழிகை தாமதமானால் ஒருநாள் வீணாகப் போகிறதே. ஆகையால் இதற்குப் பதில் சீக்கிரமாக அனுப்பவேண்டும் விசேஷமென்ன எழுதுகிறது.

60(d) தஞ்சாவூர் கமிட்டி அவர்களுக்கு மா.பாயிசாயேப் மனு எழுதிக்கொள்வதற்கான சரச்சைகள:- நம்முடைய கணக்குப்பிள்ளையை அனுப்பித்து நம்முடைய சிலவு இவ்வளவு அவருடைய சிலவு இவ்வளவு என்று சொல்லி அனுப்பினதற்கு இவ்வேலைக்கு நாம் என்ன சொல்லுகிறது. முதலில் பச்சண்ணாவின்[38] காலத்திலும் பாபாவின்[39] காலத்திலும் நம்முடைய சிலவு இன்னது என்று ஒரு (எல்லை) கணக்கு செய்திருந்தார்களா? எல்லாச் சிலவுகளும் நம்முடையதுதான். ஆனால் துளஜா மகாராஜாவுக்கு வேறு குடித்தன மிருந்ததா?
இதைத்தவிர அமரசிங்குக்கு அவருடைய யோக்கியதையின்படி பிரதாப சிம்ம இராஜாகாலத்திலிருந்து ஏற்பட்டிருந்தது.

துளஜா மகாராஜா நம்மைக் கும்பனிக்காரர்கள் நம்முடைய மானத்தையும் உயிரையும் காப்பாற்றுமபடி அவர்களுடைய வசம் ஒப்பிவித்து உயிரை விடுகிற வரையிலும் ஒரே தீர்மானஞ் செய்திருநதார். அந்தத் தீர்ந்த மொயின் கணக்கையும் நீங்கள் கேட்டால் தெரியும். நம்மைக் கேட்டாலும் நாம்ருஜுசெய்வோம.

இப்பொழுது நமக்கு இக்காலத்திற்குத் தக்கபடி என்ன சிலவாகும் என்று கேட்டதினால் நம்முடையவும், நம்மை நம்பியிருக்கிறவர்களின் சாப்பாட்டிற்கு மாத்திரம் 5000 வராகன் ஒரு மாதத்திற்கு ஆகுமென்று நம்முடைய மரியாதைக்குக் கம்மியாக தெரிவித்தோம். அதாகிலும் போதுமா?

இப்பொழுது அமரசிங் நம்மைக் கஷ்டப்படுத்தி ஜெயிலில் நம்முடைய ஜனங்களையும் முக்கிய அதிபதியான ரா.சரபோஜி ராஜாவைக் கூட்க் கைது செய்த காலத்தில் கொடுத்த மொயினியை எழுதியனுப்பினாரல்லவா? ஆனால் ஹைதரிடம் ஆங்கிலேய துரைகள் அகப்பட்டுக் கொண்டார்கள். அவர்களுக்கு அரைப்படி வரகையும் 2 பைசாவையும் கொடுத்து வைத்திருந்தாரே. அப்பொழுது அவர்கள் காலங்கழித்து பிழைத்திருந்தார்களல்லவா? அவர்களை ஜெயிலிலிருந்து விட்டபின்பு கும்பனிக்காரர்களும் அதே மாதிரி மொயினைக் கொடுப்பார்களா. அம்மாதிரி கும்பனிக்காரர் அவர்களுக்குக் கொடுத்தால் அவர்களுடைய காலக்ஷேப மாகுமா?

இதற்கு இப்பொழுது சிவராயரின்[40] பொய் பேசுவதற்கு நாம் நிஜம் சொன்னாலும் தங்களுக்கு நிஜம், பொய்யென்று எப்படித் தெரியும். நிஜமாகத் தெரிய வேண்டுமானால் தாங்கள் அமரசிங்குக்குச் சொல்லி, ஒரே உத்திரவை உடனே செய்யும்படி செய்ய வேணும்.

38 பச்சண்ணா - துளஜாவின அமைச்சர்களுள் ஒருவர்

39. பாபா - அமரசிங்கின சரககேல் (பக் 85)

40 சிவராயர் - அமரசிங்கின் சரககேல் (பக் 28)

என்னவென்றால் - ரிகார்டிலும் மஹாலோ மஹால்களி[41] லுள்ள கணக்குகள் அனைத்தையும் நம்முடைய மனிதருக்குப் பார்ப்பதற்கு உத்திரவிட்டால் அந்தக் கணக்குகளையும் எல்லாம் பார்த்து தங்களிடம் எழுதிக் கொடுக்கிறோம். காண்பிக்கிறோம்.

இராஜ்யமெல்லாம் நம்முடையது. எல்லாச் சிலவுகளும் எல்லா மஹால்களிலிருந்தும் நாம் செய்து கொண்டிருந்தோம். நம்முடைய கணக்குத் தனிமையா - அந்தக் கணக்குத்தான் நம்முடையது. அவர்கள் திருட்டுத்தனமாகப் பொய்க்கணக்குகளை நிர்மாணஞ் (உற்பத்தி) செய்திருந்தால் அதை வெளியாக்கலாம். எப்படியும் உண்மை வெளியாகும்படி செய்யலாம்.

நம்முடைய கணக்குப்பிள்ளை கணக்கு எழுதுவது எதைப்பற்றி என்றால் சத்திரங்களுக்கும், ஸ்வாமிக்கும், தருமத்திற்கும் கிராமங்களிருக்கின்றதே அவைகளில் திருடிச் சாப்பிடாமல் தருமம் ஒழுங்காக நடப்பதற்கும் கணக்குகளை எழுதுகிறது. அது தருமத்திற்குப் போறாமல் போனால் நாம் கொடுப்பது. ஆனால் வேறொன்றுமில்லை.

இப்பவும் கும்பனியின் கௌனர் கௌன்ஸலுக்கு அமரஸிங்க் தன்னுடைய அயோக்யத்தனம் தெரிய வேணும். நமக்குச் சிரமப்படுத்த வேணுமென்று நிர்மாணஞ் செய்து என்னவென்றால்

நாம் எழுதினபடிக்கி நன்றாகச் சோதித்து அவருடையவும், நம்முடையவும் யோக்கியதையைத் தாங்களுக்கும் விசாரிக்கலாம். கவர்னர் கௌன்ஸலில் விசாரணை செய்வதால் இப்பொழுதுள்ள சர்கார் நியாயமே பெரியதென்று அறிந்து இருப்பதால் அவர்கள் விசாரணை செய்தால் அங்கே பதில் சொல்லத் தயாராக இருக்கிறோம். எவ்விதத்திலும் யோக்கியதையைப் பார்த்தால் தீங்கு செய்கிறவர்களுடைய நடவடிக்கை, நம்முடைய சிலவு இன்று வரையிலும் நாம் கடன்களைச் செய்து சிரமப்படுகிறதை நம்முடைய வேண்டிய ஜனங்கள் அடைந்த சிரமம் நம்மை முழுகவைக்க (மோசஞ் செய்ய) அநியாயமான சிலவுகளைச் செய்தார். இவையெல்லாம் தெளிவாகும் அப்பொழுது வெகு ஜனங்களுக்குச் சந்தோஷ முண்டாகும். தங்கள் எல்லாமறிந்தவர்களாகையால் நம் பேரில் தயவுசெய்து நம்முடைய மானத்தையும் உயிரையும் நியாயத்தினால் காப்பாற்றி இப்பொழுது என்ன சிலவு நமக்குண்டு. ரா.சரபோஜி இராஜாவுக்கு என்ன சிலவு என்பதையும் பார்க்கலாம்.

நம்முடைய ஜாதி நியாயம் இராஜ்யபட்டத்திற்கு அதிகாரியாயுள்ளவருடைய சம்சாரத்திற்கு (குடும்பத்துக்கு) சிலவு இன்னதென்று ஒரு சம்பளம் போலிருக்காது. எல்லோருக்கும் அவரே யஜமான் ஆகையால் முன் அவரவர்களுக்கு நடந்து வந்த யோக்கியதைப் படிக்கும் கணக்கு யிருக்கிறது.

வேறு யோக்கியதையினாலிருந்தவர்களுக்கும் கணக்கு யிருக்கிறது.
அதெப்படி என்றால்:-

1. முதல் சரபோஜி[42] ராஜா காலத்தில் அவருடைய சகோதரர் தம்பி[43] பட்டாபிஷேகம் ஆகிற வரையில் வைத்திருந்த யோக்கியதை

41. மஹாலோமஹால்கள் - எல்லா மகால்கள்

42. முதல் சரபோஜி - முதலாம் ஏகோஜியின் இரண்டாவது மகன்; 1710-1728 வரை ஆட்சிபுரிந்தவர்.

43. சகோதரர் தம்பி - உடன்பிறப்பு தம்பியாகிய துக்கோஜி

2. ரோஹிணியின் - வயிற்றில் பிறந்த அப்புராவ் நானா சாயேப்[44] - இவருக்கு வைத்திருந்த யோக்கியதை -

3. சந்திரபா மித்ரபான கனேபான[45] வகையறா ரோகிணியினுடையவர்கள். அவர்களை வைத்த யோக்கியதை -

4. அப்பா கூட்டத்திற்கு[46] வைத்திருந்த யோக்கியதை

5. அமரஸிங்குக்கு[47] வைத்திருந்த யோக்கியதை.

அவரவர்களுடைய யோக்கியதைப்படி அவரவருக்கு வைத்திருந்தார். வம்ச பரம்பரை வழக்கப்படி எல்லாம் கணக்குகளில் காட்டுகிறோம். கணக்குகளை ஒளிக்காமலிருப்பதற்கு ஜாக்கிரதை செய்வதற்கு உத்திரவிட வேணும்.

நமக்குச் சாப்பாட்டுக்குக் கொடுப்பதில் அமரசிங்கன் கணக்கிடுவதற்கு இவர் யார். நமக்குச் சாப்பாட்டுக்கில்லை என்று சொல்லிக் கொள்வது பெரிய இழிவு (அகௌரவம்) நமக்கு நல்ல மாதிரியாக நடத்துவீர்களென்று நம்புகிறோம்.

இனி சாப்பாட்டுக்குக் கும்பனிக்காரர்கள் கொடுத்தால் வாங்கி நியாய விசாரணை ஆகிறவரையிலும் காத்துக் கொண்டிருக்கிறோம். சாப்பாட்டுக்கு இல்லாமல் பட்டினியாக இருந்தாலும் அவமானத்தை எவ்வளவு தடவை சொல்லிக் கொள்ளுவது.

இதைப் பாதரிக்குக் காட்டி அதில் தங்களுடைய யுக்திக்கு ஏதாவது எடுக்க வேண்டியதாயிருந்தால் எடுத்து விட்டும் இன்னும் ஏதாவது எழுத வேண்டியிருந்தால் எழுதிக் கொடுக்கிறது. நீங்கள் எல்லாவற்றிற்கும் கணக்குப் பிள்ளையை அழைத்துக் கொண்டு கமிடிக்குப் போகுவது முறையல்ல. மற்றவைகளைக் காகித பத்திரங்களில் எழுதி சால்சாப்பு[48]

---

44. அப்புராவ் நானா சாஹேப்: துக்கோஜிக்குக் காமக்கிழத்தியாரிடம் பிறந்த மூன்று ஆண்மக்களுள் ஒருவர் நானாசாயேப். இவரது மனைவியின் வயிற்றில் அப்பு சாகேப் என்றவர் பிறந்தார். இந்த அப்பு சாயபுக்கு பலஜேவார் மனைவியிடத்தில் பிறந்தவர் நானா சாகேப் எனப்பட்டார் (போ.வ.ச.பக்.82) இங்கு ரோஹிணியின் வயிற்றில் பிறந்த அப்புராவ் என்பது அப்பூசாயபைக்குறிக்கும் (பக்கம் 20)

45. துக்கோஜியின் அபிமான மனைவியர் ஒன்பதின்மர்; அவர்களுக்குப் பிறந்த மக்கள் எழுவர்; அவர்கள் ***சந்திரபான், சூரியபான், மித்திரபான், கலேபான், கீர்த்திபான், விஜயபான், உதயபான் என்பவராவர்; இவர்களுள் மூவர் பெயர் இங்குக் குறிக்கப்பட்டன. இவர்களுக்கும் ரோஜிக்கும் என்ன உறவு எனச் சரியாகத் தெரியவில்லை.(போ.வ.ச.பக்.79)

46. (பக்கம் 78) தஞ்சையில் வந்து குடியேறிய மராட்டியர் இருபிரிவினராக இருந்தனர். ஒரு பிரிவினர் "சன்னெகுல்யா" எனப்பட்டனர். அரச குடும்பத்தவரும் அவரது உறவின் முறையாரும் இப்பிரிவைச் சேர்ந்தவராவர். இராணுவத்தைச் சேர்ந்த மராட்டியரும் அவர்களைச் சேர்ந்த வரும் பிறிதொரு பிரிவினர். மேற்கண்ட இருவகையினரும் தனித்த நிலைமையிலேயேபிரிந்து வாழ்ந்தனர். இவ்விரு பிரிவினருள் ஒருபிரிவினர் பிறிதொரு பிரிவினரோடு கொள்வினை கொடுப்பினை மறுத்தனர். இங்ஙனம் கலப்புமணம் கடுமையாகத் தடுக்கப்பட்டமையின் மேற்கண்ட இருவகையினரும் ஒரேவழி இந்த நாட்டுப் பெண்களைத் தமக்குத் துணையாக்கிக் கொண்டபொழுது பெற்ற மக்கள் மராட்டிய குடும்பத்தைச் சேர்ந்தவராகக் கருதப் பெறவில்லை. இத்தகைய கலப்பினால் பிறந்தவர்கள் மராத்திய மொழியைப் பேசினார். அப்பா அல்லது அண்ணா என்ற பட்டம் உடையவராய்த் தனி இனத்தவராகவே வாழ்ந்தனர். பெரும்பாலும் இவ்வினத்தவர் அரசியல் செல்வாக்குடையவராகவும் பெருந்தரத்ததிகாரிகளாகவும் திகழ்ந்திருந்தனர் (பக்கம் 78)

47. அமரசிங்கு - 1788 முதல் 1798 வரை ஆட்சி செய்தவர்

48. சால்சாப்பு - (சவால் சவாப்) வினாவிடை

செய்து கொள்ளுகிறது. இல்லாவிடில் பாதிரிக்கு அழைத்து வந்து அவரிடம் சொல்விக் கொள்ளவும்.

அறியவும்.

60.(e) பாம்பின் வாயிலகப்பட்ட தவளை ஈக்களைச் சாப்பிட முயற்சித்தாற் போல் முத்தோஜி இங்களே யானவர் செய்தார்.

60. ஆனால் ஸ்ரீமந்த் ராஜஸ்ரீ மகாராஜாவுக்கு இதனால் யாதொரு குறையும் ஏற்படாது. இதை நன்றாக அறிந்திருக்கவும். கௌனர் கவுன்சிலுக்கு இன்று, நாளை காகிதங் கிடைத்தவுடன் இவ்விஷயத்தில் உத்திரவுமாகும்.

4, 5 நாட்களுக்கு முன் சீமைக்கு கும்பனியின் 2 கப்பல்கள் புறப்பட்டன. அதில் நாம் கும்பனிக்கு எழுதிக் கொடுத்த கடிதமும், அமரசிங்கின் அயோக்யத்தனம் நடந்த க்ருத்திரிமம்[49], முதலிய எல்லா விஷயங்களையும் நாம் எழுதிக் கொடுத்த காகிதத்தின் நகல்களெல்லாவற்றையும் சீமைக்குக் கும்பனிக்காரர்களனுப்பித்தார்கள்.

இதைத்தவிர மிஸ்தர் டுரீயன்[50] உஜயமனு[51] டைய காலத்தில் இரண்டாவது க்யாப்டனாக இருந்த சாந்தர்ஸ் என்பவர் கௌன்ஸலர் மேஜர் பார்ப்ஸ்ஸும் திருச்சினாப்பள்ளியிலுள்ள கர்னல்ஜேம்ஸ் முதலியோர்கள் சீமைக்குப் போனார்கள்.

அவர்களுக்கு எல்லா முன்பின் நடந்தவைகளைச் சொல்லி, நம்முடைய மகாராஜா வரையிலும் வம்சத்தார்களையும், அவரவர் இராஜ்யம் செய்யும் பொழுது, நடந்த விஷயங்களையும், தற்போது நடந்த க்ருத்ரிமமும், அமரசிங்கின் அயோக்யத்தனமும் 12 பேர்கள் பொய்சாக்ஷி[52] சொன்னவைகளையும், அன்ஸல் வங்காளத்தில் சட்டப் புத்தகத்தின் நியாயம், வேறு கர்நாடக இராஜ்யங்களில் நடக்கிற கர்நாடக நியாயம் முதலியவைகளை எல்லாம் ஒரே புத்தகமாகஎழுதி சீமைக்கு அனுப்பப்பட்டிருக்கிறது: அது பார்லிமெண்டுக்குப் போய்ச் சேரும். சேர்ந்த பின்னர் இதனால் தீரக்கூடிய விஷயங்களெல்லாமும் தெரிவிக்கப்படும். அவ்விடம் சென்ற வெள்ளைக்காரர்களும் இந்த விஷயத்தில் நன்றாக பேசுவார்கள். நாமெழுதிக் கொடுத்ததின் நகலையும் அனுப்புகிறோம். அறியவும்.

60.(f) இக்கடிதத்தை ஸ்ரீ தத்தாஜி அப்பா[53] அவர்களுக்குக் கொடுப்பது. கடிதம் வந்து சேர்ந்ததும் இத்தனை நாழிகைக்கு வந்து சேர்ந்ததென்று ரசீது எழுதிக் கொடுக்கவும். மாசி மீ 23 வியாழக்கிழமை சாயங்காலம் சிவகங்கையிலுள்ள தபால்காரனிடம் கொடுத்தனுப்பக் கூடாது. ஆகையால் கும்பனி தபாலில் போட்டேன். இனாம் கொடுக்கவில்லை.

---

49. க்ருத்திருமம் - வஞ்சனை

50. டுரியன் - இவர் 1798 முதல் ரெஸிடென்டாக இருந்தவர் (பக்.65)

51. உஜயமன் - Benjamin

52. பொய்சாட்சி சொன்ன 12 பேர்கள்; பாடலாசார்ய, மாதவாசார்ய. தாதாராவ், ஐயாசாமி, அப்பா சாஸ்திரி, ராமாசாஸ்திரி, ஸத்யநிதி ஆசார்ய, நரசிம்மாசாரி, ஜனாசாரி, புஜங்கராவ், பாபண்ணா, மாதவாசார்யருடைய மாப்பிள்ளை (943சி-7-6)(பக்கம் - 53)

53. தத்தாஜி அப்பா - சரபோஜி அமர்சிங்கரின் பிடியிலிருந்து விடுபட்டுச் சென்னையிலிருந்த பொழுது சரபோஜியிடம் உயர் அலுவலராக இருந்தவர் (பக்கம் 79)

நீங்கள் இனிமேல் சிவகங்கையில் தபாலில் கடிதம் போட வேண்டியதில்லை. அது இராஜாவின் தபாலில் சேர்ந்ததென்று அறியவும்.

வ்ணக்கம்.

மாசி மீ 18உ அனுப்பித்த கடிதம் வந்து சேர்ந்து எழுதினதை அறிந்து கொண்டேன். ஸவாரி வேட்டைக்கும் மா.பாயிசாயேப் அவர்களைக் காணப் போவதற்கும் உத்திரவு வந்ததென்று எழுதினீர்கள். ஆனால் அச்சங்கதி தெரிந்திருக்கிறது. அதன் விரிவைப் பின்னால் எழுதுகிறேன். பாயிசாயேப்பிடமுள்ள கணக்கு வழக்குகளைக் கமிட்டியில் பார்வையிடப்போகிறார்கள். கணக்கும் தயார் செய்யப்பட்டிருக்கிறது என்று எழுதினாலும் அவ்விஷயத்தில் ஜரூராக நீங்கள் செய்ய வேண்டியதை எழுதுகிறேன். என்னவென்றால்.........மா. பாயிசாயேப் அவர்கள் கமிட்டிக்கு ஒரு கடிதத்தை எழுதி அனுப்ப வேணும். அதன் காரணத்தை எழுதுவதினால் அமரசிங்கும் சிவராவும் நமக்கு இவ்வளவு எப்பொழுதும் உபத்திரவப் படுத்தவில்லை. பாபாவினுடையவும் பசண்ணாவினுடைய காலத்திய கணக்குகளிருக்கினறன வென்று சொல்லுகிறானே இந்த சிவராவ் பொய்யன். அவனுடைய கணக்கும் பொய்யாகையால் ரிகார்டு ஆபிஸிலுள்ள கணக்குகளைப் பார்க்க உத்திரவிடுங்கள். அந்தக் கணக்குகளை நாம் எடுத்துக் காட்டுகிறோம். அப்பொழுது தங்களுக்குத் தெளிவாக விளங்கும்.

அதைத் தவிர நமக்கு என்ன கணக்கு - சிவராயர் அமரசிங்கு சொல்லுகிற கணக்கு எப்படியும் பொய். ஆனால் நிஜமல்ல. அமரசிங்கின் காலத்தில் நம்முடைய சிலவுக்குச் சரிவர கொடுக்கவில்லையாகையால் நாம் கடன் செய்து அநேக வித சிரமங்களை அனுபவிக்கிறோம். கடைசியில் காலக்ஷேபம்[54] எவ்விதமாகும்.

முன் ஹைதருடைய கலாபத்தில் நம்முடைய ஆங்கிலேய துரைகள் ஹைதரிடம் அகப்பட்டுக் கொண்டார். அவர்களுக்கு ஆசாமிக்கு 1/2 படி வரகு வீதம் கொடுத்து வந்தான். அதைக் கொண்டு அவர்கள் நாட்கழித்தார்கள். அக்கஷ்டகாலந் தீர்ந்த பின்னர் அவருக்குக் கும்பனிக்காரர் முன்னால் கொடுத்துக் கொண்டிருந்த சம்பளத்தையும் மரியாதையையும் நடத்துவார்கள். ஆனால் ஹைதரின் போல் செய்யமாட்டார்களல்லவா.

இதைத்தவிர பிரதாபசிம்ம[55] ராஜா துளஜா மகாராஜா[56] காலத்தில் நம்முடைய சிலவு என்ன இருந்தது. அமரசிங்குக்கு என்ன கொடுக்கப்பட்டது. அந்தக் கணக்குகளைப் பார்க்கத் தெரியும். இப்பொழுது அமரசிங்குக்கு என்ன அதிகச்சிலவு எப்படியாவது நம்மை மோகஞ் செய்ய வேணுமென்று பொய்க் கணக்கைச் சொன்னதும் அது உண்மையானதா என்று கடிதம் எழுதி அனுப்பி சிவராவ் எழுதின கணக்குப் பொய். நமக்கு உத்திரவிட்டால் கணக்குகளை எடுத்துக் காட்டுகிறோம் என்று ஒரே விதமாகச் சொல்லவும்.

---

54. காலட்சேபம் - காலம் கழித்தல்

55. பிரதாபசிம்மர் - துளஜாவின்தந்தை; 1739 முதல் 1763 வரை ஆட்சி புரிந்தவர்.

56. துளஜா 1763 முதல் 1787 வரை ஆண்டவர்.

இதற்கு உடனே ரகுநாத அப்பாவுக்குக் கேட்டு அந்தப்படிக்கி செய்கிறது. இங்குள்ள வேலைக்குக் கடிதங்கள் வெகு நன்றாகத் தயாராயிருக்கின்றன. இங்கே பந்தோபஸ்து[57] செய்கிற வேலையில் பகலிரவு சுற்றுவதனாலும் எழுதுவதினாலும் ஒழியவில்லை.

ரா.ராவுசாயேப்பின் உத்திரவின் படி நாமும் முயற்சியைச் செய்கிறது. அவரும் என்னைக் காட்டிலும் அதிக முயற்சிக்கிறார். இவையெல்லாம் நாம் பின்பற்றிய விதம் முழுமையும் தீர்ந்து கௌனர் கௌன்சலின் ஒரு கடிதம் ஆனபிறகு நாம் நேர் நேராக வந்து சொன்னால் தெரிய வேணும். அல்லது எழுதின கடிதம் பத்திரங்களின் நகலைப் பார்க்கிறதினால் கொஞ்சம் தெரியும். கடிதத்தின் மூலம் தெரிவிக்க வேணுமென்றால் நமக்கு எழுதுவதற்கு ஓய்வு இல்லை.

அங்கு விஷயங்களை நன்றாய் அறிய முடியாது. இதனால் பாதிசமாசாரம் எழுதுவதில் பிரயோசனமில்லை என்று எழுதவில்லை. நீங்கள் அவ்விடம் வெகு ஜாக்கிரதையாய் நபர் ஒன்றுக்கு ஆயிரம் வராகன் வீதம் மாதத்திற்கு என்று கணக்கிட்டு அதனாலேதான் காரியம் ஸாதிக்க முடியுமென்று எண்ணவேண்டாம்.

வெள்ளைக்காரர்களின் கபடம் அதிகம் வார்த்தையினால் வார்த்தைகளைத் தள்ளி விடுவார்களாகையால் இந்தபடி ஸர்காருடைய கணக்குகளை நாம் எடுத்துக்காட்டுகிறோம் என்கிற ஒரே வார்த்தையைச் சொல்லிக்கொண்டு, கடிதத்தையும் எழுதிக் கொடுத்து ஸமயத்தைச் சாதிக்க வேணும். இதற்குள் நம்முடைய கடிதத்திற்கு ஆங்கிலேயத்தில் மொழி பெயர்ப்பாயிக் கொண்டிருக்கிறது. ஆனதும் சேர்ப்பிப்போம். அறியவும், மேலும் நீங்கள் எழுதிய கடிதங்களுக்கெல்லாம் பதிலைப் பின்பு எழுதுகிறேன். அறியவும். வணக்கம், மாசிமீ 23வ வியாழக்கிழமை அனுப்பப்பட்டது.

புதிய சமாசாரம் - கமிடிக்குக் கடிதமெழுத இரண்டு நகல்களை அனுப்பி யிருக்கிறது. அந்தப்படிக்கெழுதி இனிமேல் கடிதம் மூலம் சால்சாப் செய்கிறது. ஏதாவது சொல்ல வேண்டியிருந்தால் பாதரியைக் கூப்பிட்டு வந்து அவரிடம் சொல்லுகிறது. ஆனால் அடிக்கடி கணக்குப் பிள்ளை சென்று சால்சாப் செய்கிற வழக்கம் செய்யக்கூடாது.

60(ஓ) ஸ்ரீமந்த் ரா.மகாராஜ்[58] சாயேப் அவர்களுக்கு- ஆஜ்ஞைப்படி[59] நடக்கிற பாபண்ணாவின் அநேக ஆசீர்வாதம்.

போர்டிலிருந்து அமரசிங்கு இராஜாவுக்கு அனுப்பின கடிதத்திற்கு அவர் வெகு தகராறு செய்து பின்பு பாதரி சாயேபுக்கு நேர் நேராகத் தன்னுடைய 5-இல் ஒரு பங்கைத் தவிர ராசியில் ஒரு லக்ஷம் வராகன் கொடுப்பதைத் தவிர, கும்பனிக்காரர் வேண்டுமானால் கொடுக்கட்டும் என்று சொன்னரென்று சொன்னதினால் உத்திரவைக் காட்டினாலும் கும்பனிக்காரர் லக்ஷம் வராகனும் 5-இல் ஒரு பங்கை அமரசிங்கு ராஜாவின் சிலவுக்கு மாத்திரம் ஏற்படவில்லை.

60(s) லார்டுகார்ன் வாலீஸ் வரப்போகிறார். அவருக்கும் ஒரு சமயம் காகிதபத்திரங்கள் எழுத வேண்டும். பார்க்க வேண்டும். மேலும் சில்லறை வேலை சிலவற்றைப் பேசித் தீர்க்க

57. பந்தோபஸ்து - காவல்

58. மகாராஜ் என்றது இரண்டாம் சரபோஜியை

59. ஆஜ்ஞைப்படி - ஆணைப்படி

வேண்டியதாயுமிருக்கிறது. இதற்கு இன்னும் தஞ்சாவூரில் பிரசங்கம் இன்று கமிட்டியில் தீர்மானமாயிருக்கிறது. இதற்கெல்லாம் நாளை எழுதுகிறேன். வணக்கம்.

60(x) வணக்கம் மேல். பச்சையிடமுள்ள தேசஸ்த (மஹாராஷ்டிர) கிருஹஸ்தனுக்குக்[60] கடிதம் எழுதினதின் நகலை அனுப்பித்தீர்; வந்து சேர்ந்தது. அதில் அவர் எல்லாம் ஒத்தாசை செய்வது. அதற்கு ரா.ராவஜியானவர் தாமதஞ் செய்யும்படி எழுதியிருக்கிறார். ஆனால் அக்கிருஹஸ்தர் இந்தப்படிக்கி மித்திரபேதம்[61] செய்வது அவருடைய வழக்கம். அதை நீங்கள் உண்மை என்று நம்பி அவருக்குப் பதிலெழுதினீர். அதில் ரா.ராவஜீயின் பெயர் எழுதி தஸ்தாவேஜுகளை அவரிடம் மாட்டிவிட்டேன். அவரிடமிருந்து இன்று வரையில் ஆன ஸாதகம் தெரிந்திருக்கிறதே. இப்படி யிருக்கையில் அவருடைய மாயை[62]யில் அகப்பட்டு அவருக்குக் கடிதமெழுதினீர். தங்களுக்கு எவ்வளவு விதத்திலும் அனுபோகம்[63] வந்தாலும் கூட இப்படி யோசனை தோன்றுகிறது.

அப்படி ஏதாவது ஸாதகமேற்படும் படியாக விருந்தால் ரா.ராவஜீ சும்மா இருப்பாரா? இப்பவும் சீமை வரையிலும் வெள்ளைக்காரர்களுக்குத் தானும் கடிதம் எழுதியிருக்கிறார். வேறு அநேகர் மூலமும் எழுதியிருக்கிறார்.

இப்படி யெல்லாமிருக்கையில் நீங்கள் உறுதியில்லாத மனதுடன் யார் யாருக்கோ காரியத்தை அவர்களிடம் சொல்லக்கூடாது. பேசினாலும் ரா. ராவஜியின் பெயரைச் சொல்லக் கூடாது. ரா.ராவஜி சொன்னபடி கேட்கவும். எல்லாவற்றையும் அவருடன் பேசினாரென்று எழுதக் கூடாது. ஏதாவதிருந்தால் அந்தரங்கமாக இவ்விடம் எழுதி அதற்குப் பதிலை வரவழைத்துக் கொண்டு அதற்கு எப்படிபதில் கொடுக்கவேணுமோ அப்படி பதில் கொடுக்க வேணும்.

நாமிப்படி எழுதினோமென்று கோபித்துக் கொள்ளக் கூடாது. நமக்குத் தோன்றினதை எழுதியிருக்கிறோம். நீங்களெல்லா மறிந்தவர். எப்படிச் செய்ய வேணுமோ அப்படி செய்யவும். அறியவும்.

60(க)*Private* வணக்கம். வேட்டைக்குப் போவதைப் பற்றி தாங்கள் எழுதி உத்திரவை வரவழைத்தேனென்று சொன்னீர்களே. வெகு சந்தோஷமாயிற்று. அதே நிஜமென்று அவருடன் வெகு விசுவாஸமான[64] வார்த்தைகளைப்பேசி மனதிலுள்ளதைத் தெரியப்படுத்தாமல் ரொம்ப ஹுஜாரா[65] யிருக்க வேணும். மேலும் அவருடைய தீதுவினை செய்யும்படியான செய்கைகளெல்லாம் முன்னெழுதின கடிதத்தில் எழுதியதால் தெரிந்திருக்குமே. ஆனால் அந்தப் பாவனையைக் கொஞ்சங்கூட தெரிவிக்காமல் விசுவாஸத்தையே காட்டி வரவும்.

---

60. கிருஹஸ்தன் - இல்லறத்தவர்

61. மித்திரபேதம் - நண்பரைப் பிரித்தல்

62. மாயை - பொய்த்தோற்றம்

63. அனுபோகம் - பழக்கம்

64. விஷ்வாஸமான - விசுவாசமான - விருப்பமான

65. ஹுஜார் - எச்சரிக்கை

வேட்டைக்குப் போகிற காரியத்திற்கு அமரசிங்கும் கூட வரக்கூடாது என்று சொன்னதற்கு நன்றாக யோசித்து சொல்லுங்களென்றாரே. அதையே ஆதாரமாகக் கொண்டு யோசிக்கிறார்கள் என்று தாமதஞ் செய்கிறது.

இங்கு இன்னும் சில பந்தோபஸ்துகளைச் செய்ய வேண்டியதைச் செய்து, எழுதி அனுப்பினதின் பின்னர் வேட்டைக்குப் போகலாம். அதுவரையிலும் வேண்டிய அவசிய மில்லை. அந்தந்த கணக்குப் பிள்ளைகளின் பேரால் ரா.ராவுசாஹேப் அவர்கள் கடிதத்தை நாளையதினம் எழுதி அனுப்பப் போகிறார். அறியவும். ரோகாக்களைப்[66] பார்த்து பரிஹாரம்[67] செய்யவும். வணக்கம். கடிதத்தையெல்லாம் ரா.ரகுனாத அப்பாவுக்குக் காட்டி வரவும்.

60(ச) மகா. ஶ்ரீ. ஶ்ரீ. சரபோஜி- ராஜா அவர்கள் கோபாள வெங்காஜி அவர்களுக்கு எழுதினதாவது - நம்முடைய வக்கீலாக உங்களை நியமித்து சென்னப்பட்டணத்திற்கு அனுப்பியிருக்கிறதே. தங்களுக்கு அனுப்பிய கடிதங்களை அங்கு வெள்ளக்காரர்களிடம் கொடுத்து, இனிமேலும் இங்கு நடக்கிற சங்கதிகளுக்கு உடனுக்குடன் எழுதி அனுப்ப வேணும்.

அந்தச் சங்கதியை அங்குலாட் சாயேப் முதற்கொண்டு யார் யாருக்குத் தெரிவிக்க வேணுமோ அப்படித் தெரிவிக்கவும்.
நாமெழுதிய சங்கதிகளைத் தெரிந்து கொண்டு அவ்விடமிருக்கும் சமயத்திற்கேற்றபடி நீங்கள் காகித பத்திரங்களை யார் யாருக்கு எழுதி சங்கதிகளைக் காண்பிக்க வேணுமோ அவர்களுக்குக் காண்பிர்த்து நமக்கு எழுகிறது.

அமரசிங்கு நமது பேரில் செய்கிற உபத்திரவமும் அநியாயமும் அங்குள்ள வெள்ளைக்காரர்களுக்குத் தெரியாமல் போனால் நாமும் நம்மை நம்பின ஜனங்களும் நம்முடன் பேசின எல்லோரும் காலங் கழிப்பது கஷ்டம். இதற்காக நம்முடைய சங்கதி யார் யாருக்குத் தெரிவிக்க வேணுமோ அவாளுக்குக் கடிதம் எழுதிக் கொடுத்து, நம்முடைய காரியத்தைச் செய்கிறது. இவ்விஷயத்தில் நீங்கள் யார் யாருக்கு என்ன எழுதிக் கொடுத்தது நமக்குச் சம்மதம். ஆகையால் தங்களுக்கு முழு அதிகாரத்தைக் கொடுத்திருக்கிறோம். அறியவும்.

60(ச்ச) வணக்கம் - விசேஷம் -

ம.கா.ஶ்ரீ.ஶ்ரீ.ராவுஜீயைப் பார்ப்பதற்குப் போக வேணுமென்று தயாரானேன். இதற்குள் ஶ்ரீ. பெரிய ராவஜீயே பட்டணத்திற்கு வந்தார். ராமண்ணாவுடன் அந்த இடத்தில் ஸேவகனைச் சந்தித்தார். ஸேவகன் மா. ஆவுசாயேப் பேரால் ஒரு காகிதத்தை எழுதி முன்னமே தயாராக வைத்திருந்ததை அவரிடம் சேர்ப்பித்தேன். சங்கதிகளையும் தெரிவித்தேன்.

ஶ்ரீ. ராமண்ணாவும் ஸேவகனைப் பற்றிய சங்கதிகளைச் சொன்னார்..... அவர் பூர்வோத்தர (முன்பின்) சமாசாரங்களைக் கேட்டார். உள்ளபடி.........எல்லாவற்றையும் பதில் சொன்ன பின்னர் இன்னும் உமக்கு ஜாஸ்தி........அதைத் தனியாய் பேசிக்கொண்டு தெரிந்து கொண்டு

66. ரோகா - குறிப்புச்சீட்டு

67. பரிஹாரம் - மாற்றும் உபாயம்

பின்னர் சொன்னதாவது - உங்கள் இராஜா எப்பேர்ப்பட்டவர்? அவருடைய புத்தி எப்படி? ரூபமெப்படி? பாயி சாயேப் அவர்களுடைய விசாரம் எப்படி என்று கேட்டார்.

அதற்கு அங்குள்ள நிலைமையும் ஆக வேண்டிய காரியங்களையும் உள்ளபடி சுருக்கமாய்ச் சொன்னேன். கவர்னர் வந்தபோது அவருடையவும் யஜமானருடையவும் பேச்சு வார்த்தை ஆனதைச் சிலவற்றையும் சொன்னேன்.

அவைகளெல்லாம் கூடுதலாகக் கேட்டு, உங்களுடைய இராஜா, அவருடைய தகப்பனார் அவருடைய பாட்டனார் இவர்களுடையவும், இப்பொழுது ஆண்டு கொண்டிருக்கிறவர், அவருடைய சொந்தத் தகப்பனார் இவர்களுடைய சமாச்சாரங்களை எழுதி வரவழைக்கவும். ஒரே படத்தில்[68] வெங்கண்ணா அப்பா, அமரசிங்கு இவர்களுடைய சமாசாரங்களை எழுதி வரவழைக்கவும். அதனால் மிக்க பிரயோஜனமுண்டு – அவசியம் வரவழியுமென்றார். எழுதி அனுப்புவதாகச் சொன்னேன். தயவு செய்து சமாசாரங்களை அனுப்ப உத்திரவு செய்தால் உத்தமம்.

மேற்கொண்டு இங்குள்ள நிலமை எப்படி? ஸேவகன் எவ்விதம் நடக்க வேணும். ஸேவகன் எதற்காக வந்தானோ அக்காரியம் எவ்விதம் முடியும் என்று கேட்டதற்கு அவர் சொன்னதாவது-ரகுனாத அப்பாவின் விஷயத்தைப் பற்றி சிலவை நாம் எழுதியிருக்கிறோம். அதற்கு அவர்களும் பதில் எழுதினார்கள். ஆனால் இங்குள்ள ரகுனாத அப்பா முதலில் நடந்ததின் பேரில் இல்லை என்பதாகத் தெரிந்து இருக்கிறது. நாமும் அவர்களுக்குச் சில விஷயங்களைப் புரியும்படி சொல்லி அவர் அவர்களை அவரவர் யோக்கியதையின்படி அர்த்தம் (துகை) கிடைக்குமென்றும் தெரிவித்திருப்பதால் எல்லோரும் ஒன்று சேர்ந்து ஒரு வழியாகப் பேசுகிறார்கள்.

மறுபடியும் யோசிக்கிறார்கள். இதனால் நியாயமான சிலவாகிறதை சமீபத்தில் நாம் எழுதி யிருக்கிறோம். இங்கு காரியம் கைகூடுமாகையால் நாம் நன்றாக எழுதி அதன் பதிலை வரவழைக்கவும். அது சீக்கிரம் வரவேணும். இதற்குள்ளாக......... சங்கதிக்கு போர்டிலிருந்து ஸேவகனுக்கு எழுதி வந்து இருக்கிறது. அதற்கும் பதில் வரும். பிற்பாடு அதன் பைசலாகும். அந்தச் சமயத்தில் இக்காரியத்தையும் பேசுகிறேன். இதற்கும் ஏதாவது சிலவாகும். சும்மா ஆகாது. முதலில் கொடுக்கல் வாங்கலில் அசட்டை செய்ததினால் காரியமு மெட்டிப் போய் விட்டது. இப்பவும் அவ்விதஞ் செய்யாமல் இன்ன வேலையைச் செய்துகொடுத்தால் இன்னதைக் கொடுக்கிறோமென்பதைச் சீக்கிரம் எழுதி வரவழைக்கவும். உங்களுடைய காரியமாயின் பின்னர் அதன்படி செலுத்துங்கள். இப்பொழுது முதற்கொண்டு தான் அதைப்பற்றிப் பேச வேணும். அதனால் சீக்கரம் இன்னதென்பதை எழுதி வரவழைக்கவும். வேலையுடன் இவ்வேலையும் முடிந்து விடும். அசட்டை செய்தால் காரியங் கெட்டுப் போய்ப் பின் வாங்கி விடும்.

தற்போது பங்காலிலிருந்து எழுதி வந்ததில் இராஜ்யத்தை ஜப்தி செய்கிறதென்று சுலபமாக எழுதி வந்திருக்கிறது. அப்பொழுது இராஜாவுக்கு 5-வது பாகம் என்று தீர்ந்தே யிருக்கிறது[69].

68. படத்தில் - காகிதத்தில்

69. போர் முதலியன நிகழின் 5இல் 1 அரசர் பெற வேண்டும் என்பது (பக்கம் 51; அடிக்குறிப்பு 19)

அத்துடன்...........அச்சமயம்............பின் வாங்கினால் மறுபடியும் முயற்சி செய்வது கடினமாகும். ஆகையால் சீக்கிரம் எழுதி வரவழைக்கவும். நீங்கள் யார் யாருடன் பேச வேண்டுமோ அவர்களுடைய பேட்டி வாங்கி (சந்தித்து) பேசும்படி செய்கிறேன் என்று சொல்லியிருக்கிறார். நடந்ததைத் தெரிவித்திருக்கிறேன். பதிலைச் சீக்கிரம் அனுப்பும்படி உத்திரவாக வேணும்.

பிறகு மறுபடியும் சொன்னதாவது - பால்பேல் என்கிற வெள்ளைக்காரனோ வந்திருக்கிறாரே. அங்குள்ள பிரபுவானவர் மிஸ்தர் ராமன் பேரில் எழுதின புகார் எல்லாவற்றையும் ராமனைக் கேட்டார். அதற்கு தஞ்சாவூரிலுள்ள வெள்ளைக்காரர்கள் மிஸ்தர் பாதரி முதற்கொண்டு மிஸ்தர் ராமனுக்கு அனுகூலமா அல்லது பிரதிகூலமா என்று கேட்டார்.

அதற்கு ஸேவகன் நியாயத்திற்கு எல்லோரும் அனுகூலமாகத்தான் இருப்பார்கள் என்று பதில் சொன்னதற்கு.............அவர் பொய்யான சங்கதிகளைக் கேட்டு பதில் கொடுத்தார்...........ஸம்மந்தம் ஸத்தியப் பிரமாணம் இதற்கு இங்கு...........ஸித்தமாகும். இதற்கு ............ பலத்தினால் அவருடைய வார்த்தைகளை அவர்களுடைய கழுத்தில் மாட்டி அந்த................ செய்வதற்கு வார்த்தையில் ஆனதினால் ஒரு பொழுதும் அவர் தலையை தூக்குவதில்லை. (முன்னுக்கு வருவதில்லை)

மேற்கொண்டு உங்களுடைய வேலை சாதாரணமாகவே நன்றாக யிருக்கிறது. மிகச்சிலவு செய்து அதிக முயற்சியினால் செய்ய வேண்டிய வேலை சுலபமாக ஆகும். ஆகையால் இருக்கிற வெள்ளைக்காரர் பாதரி மிஸ்தர் ராமுக்கு அனுகூலமாக விருந்தால் அவாளுடைய வார்த்தைகள் எதுவும் ஏறாது. ஆகையால் அதின் விஸ்தாரம் என்ன என்பதை எழுதி இருக்க வேணும். இதற்காக அச்சங்கதியையும் கொஞ்சம் விரிவுடன் எழுத உத்திரவிட வேணும்.
பின்பு ராமுவிடமிருந்து பார்த்து, சிவகங்கையின் பிரசங்கத்திற்கு வசூல் ஆன துகையையும் இன்னமும் அனுப்பவில்லை என்று சில சமர்சாரங்களைப் பேசிவிட்டுப் புறப்பட்டுப் போனார். அவ்விரிவெல்லாம் இராமண்ணா எழுதினதிலிருந்து நன்கு விளங்கும்.

உடனே இளைய ராவஜீ வந்தார். அவரைக் கண்டு அவருடன் பேச வேண்டியவைகளைப் பேசினேன். அவரும் இப்பொழுது எழுதினபடியே சில சமாசாரங்களைச் சொல்ல ஆரம்பித்தார். அறியவும். இன்றைக்கும் நாளைக்கும் ஸேவகனுக்குச் சந்திராஷ்டம்[70] ஏழாவது தாரை[71] ஆனதால் நாளையன்னி[72] முதற்கொண்டு கிராமப் பிரதக்ஷிணஞ் செய்ய ஆரம்பிக்கிறேன். (ஊரில் சுற்றி எல்லோரையும் பார்க்க ஆரம்பிக்கிறேன்)

60 (ந) ரா. ஸ்ரீ தத்தாஜீ அப்பாசாயேப் அவர்களுக்கு ஸேவகன் வெங்காஜியின் ராம்- ராம்.

ரா. சாஸ்திரியும் நானும் பேசிக் கொண்டிருக்கையிலேயே கடிதம் வந்து சேர்ந்தது. இருவரும் பார்த்தோம். இன்று மத்தியானம் மிஸ்தர்ராஸ் அவர்களிடம் சென்று மனுவைக் கொடுத்து

---

70. சந்திராஷ்டமம் – ஜன்மராசியிலிருந்து எட்டாமிடத்துள்ள நட்சத்திரங்களோடு சந்திரன் கூடியிருக்கும் நிலை. இது கெடுதி பயக்கும் கால்மாகக் கருதப்படும்.

71. ஏழாவது தாரை - ஏழாவது நட்சத்திரம்; ஜன்ம நட்சத்திரத்திலிருந்து எண்ணினால் 7, 16, 25 ஆவதாக வருபவை: அவை கெடுதி பயக்கும் காலமாகக் கருதப்படும்.

72. நாளையன்னி - நாளைக்கு மறுநாள்

வந்திருக்கிறார். அவரும் எழுதவேண்டிய சிலவற்றைச் சொன்னார். அதன்படியும் ஒன்றை எழுதி அதை மொழி பெயர்த்தும் கொடுத்திருக்கிறோம்.

இன்றிரவு லாட்வாலீஸ் சாயேப்புக்கும் ஜனரல் மேட்ரஸீக்கும் தெரிவித்து நாளையதினம் ஸேவகனையும் அவரிடம் நேராக அழைத்துப் போகப் போகிறார். தாங்கள் இன்று அனுப்பிய கடிதம் ஸமயத்திற்கு வந்து சேர்ந்தது. மிக்க சந்தோஷம். ஸேவகனுக்கு அதிகார பத்திரம் கொடுத்தனுப்பினதினால் மிகத்தைரியமுண்டா யிருக்கிறது.

ஸேவகனும் மகாராஜாவின் வக்கில்[73] ரா.பாப்யாராவைக் கண்டு அவருடன் பேச வேண்டியவைகளைப் பேசினேன். சென்னையில் கோடல் வீட்டின் வக்கிலானவர் இறங்கி யிருக்கிறார்.

லாட் வாலீஸ் சாயேப் வகையறா எல்லோரும் 19உ செவ்வாயன்று சென்னைக்கு வந்திருக்கிறார்கள். டிப்புவின் 2 பிள்ளைகள் - ஒருவனுக்கு 10 வயதும், மற்றொருவனுக்கு 7 வயதும் இருவரும் வந்திருக்கிறார்கள். உள்ளேயுள்ள அவர்கள் கோட்டைக்குள் மிஸ்தர் ராமனு[74]டைய பக்கத்து வீட்டிலிருக்கிறார்கள்.
மாடியிலிருந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். அவாளுடன் ஒரு பெரிய மனிதனான துலுக்கனுமிருக்கிறான். ஒவ்வொரு சால்சாப்பையும் அவனே செய்கிறான். 4 யானைகளும், 50 குதிரைகளும், 100 துப்பாக்கிக்காரர்களும் அவர்களுடனிருக்கிறார்கள். அவர்களெல்லாம் கோட்டைக்கு வெளியே இறங்கியிருக்கிறார்கள். லாட்வாலீஸ் 10 தினமிருந்து போகிறார் என்று சங்கதி: பாக்கிச் சங்கதிகளை நாளையதினம் விஸ்தாரமாக எழுதியனுப்புகிறேன்.

ஸேவகனது சிலவுக்கு சாப்பாடோ ராஜஸ்ரீயின் வீட்டில் வெளியே போகுவதற்கு ஆகும் சிலவை அவருடைய மனிதர் மூலமாய்ச் சிலவு செய்வித்து கணக்கை எழுதுகிறேன். அவர் யுக்தமான சிலவை நீங்கள் ஒப்புக்கொள்ள வேண்டும்.

நமக்குத் துணிமணிகளுக்கு மாத்திரம் 10 வராகனை இனாமாகக் கொடுக்க வேணும். இதைத் தவிர்த்த மேல் சிலவுகளை ராஜஸ்ரீயே செய்கிறார். அவருடைய உத்திரவின்றி ஒருகாசு அதிகம் செலவழித்தால் அவரும் கோபித்துக் கொள்ளுவாராகையால் உத்திரவின்றி எதையும் செய்கிறதில்லை.

நேற்று முதல் சாப்பாடு தூக்கம் விட்டு ராஜஸ்ரீ முயற்சி செய்கிறார். மேற்கொண்டதை நாளை எழுதியனுப்புகிறேன். அங்கேயுள்ள பிள்ளை குட்டிகளுக்குச் சாப்பாட்டுக்குப் போதுமானதை மாதாமாதம் கொடுத்து வரவேணும்.
இங்கிருந்து வேலை பார்ப்பதினால் இங்கே சாப்பாடுக்கு மாத்திரம் ரா.சாஸ்திரி அவர்கள் சொல்லுகிறபடி கொடுக்க நேரிடுமாகையால் அவர் உத்திரவின்படி செய்யப்படும்.

60 (ஞ) மேல் விஷயம் நாளை எழுதுகிறேன், சொன்னதாவது- இவ்விடம் நாம் செய்கிற முயற்சிக்கு அவர் எழுதினது பலம் (சாதகம்) ஸமயத்திற்கு வந்து சேர்ந்ததினால் காரியம் நிறைவேறும். சந்தேகமில்லை.

73. வக்கீல் - கோபால வெங்காஜி (5-520)

74. ராமன் - ராம் - ரெஸிடெண்டு

இப்பவும் ஜனரலானவர் ஶ்ரீமந்தரை இவ்விடமே அழைத்து வந்து நேரில் பார்த்துத் தீர்மானஞ் செய்ய வேணுமென்று யோசித்திருக்கிறார். நேற்றையே கடிதம் எழுதுவதாயிருந்தார். இன்றை நாளைக்குள் அழைக்கப் போகிறார். ஆனால் மிக உத்தமமாயிற்று. பெரிய காரியமே ஆகும். இங்கு வருவதினால் ரொம்ப அனுகூலமாகயிருக்கிறது. ஆகையால் கடிதம் சேர்ந்ததும் சீக்கிரம் புறப்பட வேணும். கொஞ்சங்கூட சோம்பல் செய்யாமல் சீக்கிரம் வரவேணும். இன்றிரவு நிச்சயம் தெரியும். நாளைக்கு விரிவாக எழுதி யனுப்புகிறேன்.

நேற்று மிஸ்தர் டார்க் என்பவருடைய வீட்டுக்குச் சென்றிருந்தேன். கர்னல் ப்ளாயிட்டின் வீட்டிற்கும் சென்றேன். அவரும் அளவில்லாமல் பேசினார். அவருடைய வீட்டிற்கு நாளையாவது, நாளையன்னிக்காவது ஜனரல் மேட்ரஸுக்கும் லாட் வாலிஸுக்கும் விருந்துக்கு அழைத்து வந்து நம்முடைய காரியத்திற்கு நன்றாகச் சொல்லி, மிஸ்தர் டார்க் அவருடைய பெண்ணிருக்கிறார். அவர் மூலமாகவும் சொல்லச் சொல்லுவது. மாப்பிள்ளைப் பெரிய மனிதன். ஜனரலுக்குப் பரமமித்திரன் (சிநேகிதர்). அவர் மூலம் சொல்லுகிறதென்று ஏற்பாடாயிருக்கிறது. அச்சமயத்தில் சேவகனுக்கும் நேராகக் காணும்படி செய்வதாகச் சொன்னார். நம்முடைய வேலைக்காக சிலவுசெய்து இருவருக்கும் விருந்து செய்விக்கிறேன். இதை அறிய வேணும்.

மிஸ்தர் ராஸாவானவர் நேற்றிரவும் இன்றும் சென்று பேசி வந்திருக்கிறார். மிஸ்தர் செரியுடன் மிஸ்தர் போசர் பேசியிருக்கிறார். இன்னும் மேலுக்கு மேல் நாலாபக்கத்திலிருந்தும் சொல்விக் கொண்டு வருகிறோம். மனு தயாராகி விட்டது. ராஜேஶ்ரீ நேரில் போய் கொடுப்பதற்கு கொடுத்திருக்கிறார். அவர் ஜனரலுக்குச் சொல்லி வைத்திருக்கிறார். அதையும் நாளைக்குள்ளாகச் சேர்ப்பிக்கிறேன்.

அங்குநடக்கிற சங்கதிகளுக்கு எல்லாவற்றையும் விரிவாக எழுத வேணும். ஜனரல் மேட்ரஸ் இடமுள்ள மத்தியஸ்தருடைய பெயர் ஊரை முந்தியே எழுதியிருக்கிறதே. அவராலும் வெகு ஸாதகம் ஆகிகொண்டு வருகிறது.

மிஸ்தர் ராஸா வசம் ஒரு ஞாபகார்த்தமாக நேற்று காலையில் எழுதிக் கொடுத்திருக்கிறேன். ஜப்தியை திடீரென்று விடுதலை ஆகிவிட்டது. தடுக்க வேணுமென்று எழுதியிருக்கிறது. அதை மேஸ்தர் ராமனுக்கும் பாதரி சாயேப்புக்கும் தெரிய வேண்டியதற்காக அங்கனுப்பி யிருக்கிறது. அதையும் நீங்கள் அறிந்து கொண்டு அதற்குத் தக்கபடி பேசுகிறது.

நாம் மஹாராஷ்டத்தினால் எழுதி யிருக்கிறோம். அதன் நகலை நாளைதினம் அனுப்புகிறோம். இவ்விடம் அவரைப் போல பெரிய மனிதன் ஒருவருமில்லையாகையால் அவரைக் கைக்கீழ்ப் போட்டுக் கொண்டு வேலையைச் செய்ய வேணும் என்று அவருக்குக் காரியத்திற்குக் கொண்டு வந்திருக்கப் பட்டிருக்கிறது. நம்முடைய வசத்திலிருக்கிறார். அதி சுத்தமானவரானதால் (யோக்கியன்) ஒவ்வொருவரும் அவருடைய பேச்சையே மான்யஞ் செய்கிறார்கள்[75]. வெளிப்படைக்கு வரும் பொழுது அவரால் வெகு வேலைகள் இருக்கின்றன. தெரியவேண்டும் என்று எழுதி யிருக்கிறேன்.

75. மான்யம் செய்கிறார்கள் - மதிக்கிறார்கள்

60(ட) சி.அப்புவுக்கு

கோபால் வெங்காஜியின்[76] அநேக ஆசீர்வாதம்.

இதன் பின்னர் நேற்றுமின்றைக்கும் கோட்டைக்கும் நம்முடைய வேண்டிய மனுஷாகளின் வீட்டிற்குப் போயிருந்தேன். ஆனால் ஜனரல் மேட்ரஸ் தற்காலம் 4 இராஜ்யங்களின் விஷயத்தை கவனிப்பதால் நம்மிடமுள்ள பிரசங்கதைப் பற்றிப் பேசுவதற்கு யாருமில்லாமல் போயிருப்பதால் அவருக்குச் சங்கதி எப்படித் தெரியும். அதனால் இச்சமயம தவறினால் பின்பு எவ்வேலையும் ஆகாதென்று அந்தந்த வேண்டியவர்கள் கஷ்டப்படுகிறார்கள். இச்சமயம் கடிதத்தை நமக்காக வேண்டிய காரியங்களை எழுதிக் கொடுத்து பேச்சு வார்த்தை செய்தால் காரியம் அனுகூலமாகும். சந்தேகமில்லை. ஆகையால் இக்கடிதத்தை ரா.ஸ்ரீ.தத்தாஜி அப்பாவுக்குக்காட்டி, இக்கடிதத்தை ஆயிரம் கடிதமென்று அறிந்து, கடிதம் பார்த்ததும், ஸ்ரீமந்த் சத்ரபதியின்[77] வேலைகளென்ன? அதை எப்படிச் செய்து கொடுக்க வேணும் என்பதை எழுதியனுப்பி ஸேவகனுக்கும் உத்திரவு செய்து அனுப்பினால் கொஞ்சம் நாளில் காரியமனுகூலமாகும். 60 ஆயிரம் வராகன் சிலவாகுமென்று வேண்டியவர்களெல்லாம் மிகவும் சொல்லுகிறார்கள்.

முதலில் 6 அயிட்டங்கள்[78] எழுதிக் கொடுத்த கடிதமிருக்குமே. இன்னும் அவருக்கு ஆக வேண்டிய காரியங்க ளிருக்குமோ அவைகளையும் எழுதி ஒரு கடிதம் தயாரித்து அனுப்பினால் கேள்விக்குப் பதில் கொடுத்து காரியத்தை முடிக்கிறேன்.

காரியம் அனுகூலமான பின்பு ஸேவகனுக்குப் பெரிய சம்பளம் செய்து கொடுக்கலாம். அதுவரையிலும் இருக்கிற சம்பளமே யிருக்கட்டும். இச்சமயத்தில் தாமதஞ் செய்தால் காரியங் கெட்டுப் போகும். சீக்கிரம் செய்ய வேணும் என்று வேண்டிய சிநேகிதர்கள் மிகவும் சொல்லுகிறார்கள். அதை நம்முடைய மூத்த சாஸ்திரிகளுக்குத் தெரிவித்தேன்.

அவரும் மிகவும் விசனப்பட்டார்கள். இச்சமயம் இப்படித் தாமதிக்கக் கூடாது. இக்கடிதம் 1000 கடிதம் என்று அறிந்து கொண்டு ஸ்ரீமந்த் சத்திரபதிக்கு ஆகவேண்டிய வேலைகளின்னது என்று எழுதியனுப்ப வேண்டும் என்று சொலலுகிறது. ஸ்ரீமந்த் சத்திரபதி அறிந்தவராயிருப்பதால் அவருடைய பெயராலேயே கடிதமெழுதும்படியிருக்கிறது. ஸ்ரீமந்தருக்கு மாதாமாதம் துகை ஏற்பட்டால் பாக்கிக்கு அவரவருடைய யோகியதையின்படி அதற்கு விமுகம்[79] இல்லாமல் நாம் எதைச்செய்து கொடுத்தோமோ அதைக் கொடுக்கலாம் இச்சமயம் நன்றாக இருப்பதால் ஆக வேண்டிய வேலைகள் முடிவடையும் என்ற நம்பிக்கை நமக்கு இருப்பதால் இக்கடிதத்தை எழுதியிருக்கிறேன்.

இப்பவும் யார் யாரிடமெப்படிப் பேசவேண்டுமோ அப்படிப் பேசி ஸ்ரீமந்த் சத்திரபதிக்கு இன்ன வேலை ஆக வேண்டியவைகளைக் குறித்து ஒரு கடிதம் தயார் செய்து அனுப்ப வேணும் என்று ரா.தத்தாஜி அப்பாவுக்குத் தெரிவிக்கவும். நீங்கள் கடிதமெழுதின சமாசாரம் வேலை முடிந்த

76 கோபால் வெங்காஜி - இவர் சரபோஜியின் வகீல

77 சத்ரபதி - சரபோஜி

78 அயிட்டங்கள் - செய்திகள் (Items)

79 விமுகம் - குறைவு (?)

பின்னர்தான் பிறருக்குத் தெரிய வேணும். அதுவரையில் ஒருவருக்கும் தெரியாமலிருக்கிற பந்தோபஸ்து இவ்விட மிருக்கிறது.

இன்று வரையிலும் செய்த வேலைகளும், அப்படி ஒருவருக்குந் தெரியாத படியும் காரியம் வெளிவந்த பின்னர் பிறருக்குத் தெரிய வேணும். அப்படியே இபபவும் அவர் உத்திரவிட்டுக் கடிதம் மட்டும் தயார் செய்தனுப்பினால் காரியம் முடியும். அறியவும்

ஸேவகன் எழுதிய ஒவ்வொரு வார்த்தையும், வீணல்ல. ஆகையால் இச்சமயத்தில் ரா.அப்பா சீக்கிரமாகக் கடிதம் பத்திரம் அனுப்பினால் காரியம் அனுகூலம் செய்துதான் அவாளைப் பார்ப்பேன். இத்தருணந் தவறினால் பின்பாகுவது கஷ்டம். இதற்காக சீக்கிரஞ் செய்ய வேணுமென்று சொல்லுவது.

கடிததகின் மேல் வழக்கப்படி தற்போது ரா.ராஜஸ்ரீயின பேரால் முதல் கடிதத்தை எழுதி அனுப்பவும். பின்பு தக்கபடி எழுதி யனுப்புகிறேன். அதெப்படி எழுதலாம. காரியம் கைகூடும் நேரமிதுதான். அதற்காக ஆக வேணடிய வேலைகளை எழுதி அனுப்ப வேணும்.

ஸ்ரீமந்த் சத்ரபதியின் காரியத்திற்கு அநேகம் பேர்களின் வயற்றில் ஸ்வாமியானவர் புகுந்து அவரவர் வேலைகளைச் செய்வதற்குப் புத்தியை தற்போது கொடுததிருப்பதால் அநேக பேர சகாயமா யிருக்கிறார்கள். அறியவும்.

பச்சையப்ப மொதலியைக[80] கண்டேன், அவருக்கு இன்னும், சரீர ஸ்திதி[81] குணமில்லை அறியவும். இக்கடிதத்தைக் காட்டி ஜாக்கிரதை செய்யவும்.

60(ணட)ஞாபகக் குறிபபு

1. அமரசிங்கும் சிவராயரும் சேர்த்து துள்ஜா மகாராஜாவின் குடும்பத்திற்கு ஒரேயடியாய் மோசஞ் செய்ய வேணடும். அந்த ~~இராஜ்யத்தில்~~ அவர்களுடன் சிநேகிதமாக யிருக்கிறவர்களையும் அவர்களை அண்டின பெரிய மனுஷாள், எப்பொழுதுதாவது உண்மை பேசுகிற பிராமணர்களையும் சில ரயததுகளையும் உத்யோகஸ்தர்களையும கும்பனியின் வேலையில் நன்றாக நடந்தவரகளையும் எல்லோரையும் பூணடில்லாமல செய்ய வேணுமென்று ஜப்தியை விடுதலை செய்தவுடனே வெகு அநியாயஞ் செய்யப் போகிறான்.

2. அதற்குத் தஞ்சாவூர் ஜனங்கள் அதிக ஏழைகள். அவாள எஙகேயாவது சென்று பிராது செய்யக்கூட அவர்களுக்குச் சிலவுக்கிலலை. ஏழையின் வாரத்தைகளை யார கேடபார்கள.

ஆனதால் விசாரிக்காமல் அமரசிங்கு[82] இராஜாவும் சிவராயரும் இவரகளுடைய அதிகாரமே நடக்கும்படியாக ஜப்தியை விடுதலை செய்து தேசத்தை (இராஜ்யத்தை) அவர்கள் ஸ்வாதீனஞ் செய்வதால் வெகு ஜனங்களுடைய நாசம் ஏற்படுமாகையால் முதலில் விசாரணை செய்ய வேணும்.

---

80 பசசையபபமொதலி - (பக்கம் 405-6)

81 சரீரஸ்திதி - உடல்நிலை

82 அமர்சிஙகு கமபெனிககுக் கொடுகக வேணடிய தொகை கொடுககாவிடில மனனாரகுடி, திருவையாறு, மாயவரம, பட்டுக்கோட்டை ஆகிய சுபாககள வசூலைக் கமபினியே ஏறறுக் கொளளலாம எனபது ஒபபநதம ஆகும (பககம 51)

3. சரபோஜி இராஜாவுக்கும் பாயிசாயேப் அவர்களுக்காக அவர்களுடைய சரித்திர... எழுதி அவர்களுக்காக ஒரு யோக்ய மனுஷனைச் சால்சாப் செய்ய நியமித்தது. அமரசிங்க... வக்கிலோ திரியம்பக ஸம்பாஜியே இருக்கிறாரே. அமரசிங்கு அவர் மூலமாய் பேச வேண்டும் என்று சொல்லி அவர்மூலம் 2 வெள்ளைக்காரர்களை நியமித்து இருவர்களுடைய முன்னே நடந்த வரலாற்றை மனதில் கொண்டு வந்து நன்றாக உண்மையையறிந்து பின்பு சரபோஜி இராஜா அவர்களுக்குக் கலியாணம் கார்த்திகை ஆகவேண்டும். அவருக்கும் துளஜாராஜாவின் குடும்பத்திற்கும் அமரசிங்க ராஜா இலாகா ஒன்றுமில்லாமல் அவர்கள் அவர்களுடைய மரியாதையின்படி க்ஷேமமாக யிருக்கும்படிக்கு அமரசிங்கும் அவருடைய........அறிந்து அநியாயம் செய்ய முடியாது. அநியாயஞ் செய்தால் விசாரணை நடக்குமென்று எண்ணி அவர் தன்னுடைய குடும்பத்திற்கு எழுதியிருக்கிறார். கும்பனியின் துகை உடன்படிக்கையின்படி வரிகொடுக்க வேண்டியபடி கும்பனியில் தாராளமாகச் செலுத்தும்படி செய்தால் இம்மூன்று காரியங்களுக்குப் பந்தோபஸ்து செய்தால் பெரிய கீர்தி[83] உண்டாகும்.

4. இப்படிச் செய்யாவிட்டால் வெகுஜனங்களுக்குக் கஷ்டம் நேரிடும்.

5. இந்த வேளையில் ஜனரல் மேட்ரஸ்ஸும் லார்ட் கார்ன்வாலிஸும்[84] தர்மஞ் செய்கிறவரும் கீர்த்தியை யடைய வேண்டுமென்கிறவரும் வந்திருக்கிறார்கள். இச்சமயந்தான் இப்படி ஆகவேணும். இனி விசாரணை செய்வதற்கு இப்பேர்ப்பட்ட நேரம் வராது. ஆகையால் சீக்கிரமாக விசாரணையை முதவில் செய்யும்படி உத்திரவாக வேணும்.

இதை ஆங்கிலேயத்தில் மொழி பெயர்த்து மிஸ்தர் ராஸ்ஸிடம் கொடுத்து, ஜனரலுக்கும்[85] வாட் சாயேப்புக்கும்[86] தெரிவித்திருக்கிறேன். இதையே பாதரி சாயேபுக்கும் அனுப்புகிறேனென்று சொல்லி யிருந்தார். அவர் கடிதத்தை அனுப்பியிருப்பார். அதற்குப் பாதரி சாயேப் தங்களைக் கேட்டால் நீங்களும் அவருக்குச் சொல்லி, முதலில் நியாய விசாரணை செய்தாலொழிய ஜப்தியை விடுதலை செய்யக்கூடாதென்று எழுதி அனுப்புங்கள் அவரையும் எழுதும்படி செய்கிறது.
ரா. பச்சாஜி இராயரை வசப்படுத்த ஏதாவது பேசவேண்டியிருக்கும். எல்லோரும் அவரை வசப்படுத்துவதற்கு முயற்சி செய்திருக்கிறார்களே. அவரைத் திருப்ப வேண்டியிருக்கிறது. அவருடன் பேசி சமாச்சாரத்தை எழுதுகிறேன். இந்தப்படி செய்ய வேண்டியதென்று உத்திரவுபடி எழுதியிருக்கிறேன்.

ஸ்ரீராம் பிரதாப்[87]

60(ண்டஃ) ரா.ராவுஜிக்கு -
வணக்கம் - விசேஷமாவது - ஸ்வாமிகள் ஐப்பசி மீ 28 உ புதன்கிழமை அனுப்பிய கடிதத்தில் மிஸ்தர் ச்யார்லிஸ்டக்லிஸுக்கு அவருடைய மனுஷன் எழுதின கடிதத்தை அனுப்பியிருக்கிறது.

83. கீர்தி - கீர்த்தி - புகழ்

84. கார்ன்வாலில் - இவர் 1786 முதல் 1793 வரை கவர்னர் ஜெனரலாக இருந்தனர்.

85. ஜனரல் - மேட்ரஸ்

86. லாட் சாயேப்பு என்றது கவர்னர் ஜெனரலாகிய லார்டு காரன்வாலீஸை

87. ஸ்ரீராம் பிரதாப் - இது அரசாங்க முத்திரை (பக்கம் 365)

அதைச் சேர்ப்பித்து அவருடைய சீலம் ஸபாவம் யோக்கியதை[88] முதலியவைகளை எல்லாம் எழுதுகிறது. அவர கடிதம கொடுத்தால அனுப்புகிறது என்று உத்திரவிட்டீர்கள். ஆனால அவவிஸதாரமெல்லாம அந்த வெள்ளைககாரர சொன்ன சமாச்சாரத்தின் பேரிலும், வெளியில விசாரித்ததின் பேரிலும் விணணப்பமெழுதி யிருக்கிறேன். அதிலிருந்து தஙகளுக்குத தெரிந்திருக்குமே. தற்போது அவர் ஸ்ரீமந்த ராஜஸ்ரீ சாயேபபின் பேரால் கடிதம் எழுதி தன்னுடைய மனுஷன் முத்துவசம் கொடுத்தனுப்பி யிருக்கிறார். ஸேவகனுக்கு அவர் சொன்ன சஙகதியைத் தான் பின்பேலருடைய பரம மிததரனுக்கு[89] மேஜரும், தன் மித்திரன். இப்பொழுதுதான சீமைககுச சென்று பின்பேலை வைததுக்கொண்டே இவ்வேலையை முடிக்கிறது. தவிர வேறு விதமல்ல

பின்பேல சீமைககுப் போகும் பொழுது, தன்னுடன விசேஷமாக இசசஙகதியைப பற்றியே பேசிப்போனார். இதைத் தவிர பினபேல் சீமையில் சும்மாவாக இல்லை. சிராசேம்பல் கேமல்[90] பேரில தஞசாவூர் இராஜ்யததுக்காகப புகார செய்ததினால் கேமலுக்குத் தனியாகச் செய்து நியாயந தீர்ததுக கொண்டிருக்கிறது. இம்மாதிரி வேளையில் தாஙகள் இஙகே யிருககும் ஆதி அந்த பூர்வோத்திர சமாசாரத்தையும்[91] தங்கள் காகித பத்திரங்களையும கொடுத்துத் தங்களுடைய வக்கிலென்று சொல்விக கொண்டு போவாராகில் பின்பேல் தொடுத்த காரியத்திற்கு மிக்க பலமுண்டாக்கும். தஙகளுடைய விவகாரத்தையும் ஜயித்து 16 மாதம் அல்லது 18 மாதத்திற்குள்ளாகப் பின்பேல் தானிருவரும் வந்து மகாராஜாவிற்குப் பட்டம் கட்டுகிறோம். இவ்வேலை தாங்கள் பேசி ஆகும் பக்ஷத்தில் என்னுடைய கழுத்தை அறுத்துக் கொடுப்பேன். தவிர வேறொன்றுமில்லை.

இதற்காகத் தான் சத்தியமாகச் செய்கிறதெல்லாவற்றையும் இக்கடிதத்தில் எழுதி யிருக்கிறேன். இக்கடிதம் தங்களுக்குச் சம்மதமாயும் சரியாகவுமிருந்தால், மிஸ்தர்ஜானுக்கும் மிஸ்தர் பால்பேலுக்கும் நன்றாகக் காண்பிக்கலாம். அவாளும் தங்களுக்கு நன்றாகத் தெரியுமானதினால் சரி என்றுதான் சொல்லுவார்கள். தங்களுக்கு இவ்வேலை......இருந்தால் இதற்குப் பதில் எழுதுகிறது. இவ்வேலையைச் செய்வதற்குப் பிரியமில்லாமவிருந்தால் என் கடிதத்தை மடக்கி, எனக்கு அனுப்பி விடவும் என்று கண்டிப்பாய்ச் சொல்லியிருக்கிறது. ஆனாலும் ஸவாமிகளுடைய எண்ணமோ சீமையிலிருந்து காரியத்தைச் செய்ய வேணுமென்று - ஸேவகனும் இப்பொழு கைக்கொண்ட காரியமானதும் ஏதாவது சிலவு செய்து சீமைக்கு எல்லாம் எழுத வேணுமெனறு அதற்குப் பகவானுடைய செயல் ஸவாமிகளின் யோகாதிசயத்தினால் பொருந்தியிருக்கிறது.

பின்பேலின் எண்ணமோ ஸ்வாமிகளுக்குத் தெரிந்திருக்கிறது. விவகாரத்தைத் தேசத்தில் செய்து சிராச்சேபல கேமலாஸ்[92] தனியாகச் செய்திருக்கிறது. நியாயத்தைச் சொல்லுகிறாரெனறு வெளியில் பெரிய பெரிய மனிதர்கள் அநேக பேர்களின் மூலமாய்க் கேள்விப்படுகிறேன்.

---

88. சீலம் - ஒழுககம், ஸ்வபாவம - தனமை, யோககியதை - தகுதி

89. பரமமிததிரம் - மிகுந்த நட்புடையவன்

90 சிராசேம்பல் கேமல் - சர ஆர்ச்சிபால்டு காம்ப்பெல் (Sir Archibald Campbell) என்ற கவர்னர்

91. பூரவோததர சமாசாரம் - முன்னும் பின்னும் நடநத செய்திகள்

92 சிராச்சேபல் கேமல - Sir Archibald Campbell

அட்லிஸ்ட்டும் சிறிது தோற்றம் தெரிந்தது தெரியாதது போல் காட்டுகிறார்கள். ஆகையால் இக்காரியத்தைத் தொடுத்துச் செய்வது எல்லா விஷயத்திற்கும் நல்லதென்று தோன்றுகிறது. ஆனால் சிலவுகளின் விஷயத்தை இதுவரையிலும் பேசவில்லை. ஒருநாள் ஆகிற சிலவை நாம் செய்து வேலையைச் சாதிப்பதாகச் சொன்னார். ஆனாலும் ஆசைப்படுகிற ஜாதிகளானதால உடனே பதில் எழுதுவதில் சில விஷயங்களை நம்முடைய வக்கீல் பாபுராவுக்கு எழுதியிருக்கிறது. அவருடன் பேசி கடிதம் அனுப்புவீர்கள் தங்களுக்குக் காகிதம் பத்திரங்களை எல்லாம் செய்து கொடுப்பாரென்பதை எழுத வேணுமென்றால் ஸேவகன் இவரை சுமாருககுக கொண்டு வந்து, ஒவ்வொரு கொடுப்பது வாங்குவது காரியம் ஆன பின்பு தற்பொழுது ஒன்றும் வேண்டியதில்லை என்பது. அல்லது 2,3 ஆயிரத்தில் முடித்துக் கொடுக்கிறது. இரண்டையும தெரிவித்திருக்கிறேன்.

மேற்கொண்டு கடிதம் பத்திரங்கள் ஏகோஜி ராஜா முதற்கொண்டு, முன்பின் நடந்த சங்கதிகளையும் 12 பேர் சாக்ஷிகளின் பதிலையும்[93] கேமல் அவர்கள் பங்காலுக்கு எழுதினதற்குப் பதிலையும் முதலியவைகளெல்லாமும் ஒரே காகிதத்தில் எழுதிக்கொடுக்க வேண்டும். இவை எல்லாம் ஸ்வாமிகளுக்கு நன்றாகத் தெரியும்.

*60(ண)* ரா.தத்தாஜி அப்பா அவர்களுக்கு ஸேவகன் பாபண்ணாவின் அநேக ஆசீர்வாதம்.

'இப்பொழுது கௌனர் கவுன்சிலுக்கு எழுதிய கடிதம் கடிதமல்ல. விபக்ஷி (அமரசிங்கின்) அஷ்டைஸ்வர்யத்தை[94] ஆகர்ஷிக்கிற[95] மந்திரமென்று எழுதியது நிஜம்தான். அதெப்படி என்றால் இக்கடிதம் ரிகார்டானவுடன் கௌனர் அட்லிஸ்ட்டு[96] அவர்கள் இதைக்கூட மிக்க யோசனை செய்து பின் வாங்குகிறார். இதிலெழுதின விஷயம் கடைசி வரையில் தொடரும். இப்பேர்ப்பட்ட அயோக்கியனுக்குக்[97] கும்பனியார் மூர்க்கத்தனமாக இராஜ்ய பாரம் கொடுத்து பட்டம் கட்டினார்களென்ற விஷயம் உடனுக்குடன் தெரிகிறது. ஆகையால் இக்கடிதம் (மிண்ட்?) ஆய் சீமைக்குப் போய்த்தான் தீரவேணும். இக்கடிதம் செல்லுகிற 6-வது மாதத்தில் நம்முடைய மகாராஜா பட்டத்திற்கு வருவதற்குச் சந்தேகமில்லை.

---

93. 12 பேர் சாட்சிகள் (943சி-7-6),

தாதாராவ் அநியாயமாகப் பொய் சொன்னேன் என்றார் ஜயாசாரியர் தான் அநியாயம் செய்ததாகவும் தனக்குத் தர்மசாஸ்திரம் தெரியாதென்றும் கூறினார். அப்பா சாஸ்திரி தனக்குச் சாத்திரமும் தெரியாது அரண்மனைச் சங்கதியும் தெரியாது என்றார். ஸத்ய நீதி ஆசாரியர் தனக்குச் சாத்திரம் தெரியாது என்றும், அமர்சிங்கு பக்கம் சொல்லுங்கள் என்று தனாதிகாரி சொன்னதினால் தனக்குக் கொடுக்கப்பட்ட மான்யம் பறிபோகாமல் இருப்பதற்காகக் கூறியதாகச் சொன்னார். நரசிம்மாசாரயர் "அமர்சிங்குக்கு அதிகாரம் என்று சொன்னார். அது சரியல்ல என்று சொல்கிறார்கள், கவர்னர கேட்டால் சொல்லுகிறேன்" என்றார். ஜனாசார்யர் தனக்குச்சாத்திரம் தெரியாதென்றும் அமர்சிங்குக்கு அதிகாரம் என்று ஒருவர் எழுதியதுபோலத் தானும் எழுதியதாகக் கூறினார் புஜங்கராவும் பாபண்ணாவும் 10 பேர் செய்தபடி தாமும் செய்ததாகக் கூறினார். (பக்கம் 53)

94. அஷ்டைசுவரியம் - இராசாங்கம், மக்கள், சுற்றம், பொன், மணி, நெல், வாகனம், அடிமை என்ற எட்டு.

95. ஆகர்ஷிக்கிற - இழுக்கிற

96. கௌனர் - கவர்னர, அந்நாளில் கவர்னராக இருநதவர் சர்.ஆர்ச்சி பால்டு காம்ப் பெல் ஆவர்: "அட்லிஸ்ட்டு" என்பது யாரைக்குறிக்கும் என்று தெரியவில்லை

97. அயோக்கியன் என்றது அமர்சிங்கை

முதல கடிதம் உலியம் காலத்தில் கொடுக்கப்பட்டது. அது சீமைக்கு அனுப்பப்பட்டது. இதுவும் திடீரென்று எப்படி ஆகுமோ. ஆனால் இக்கடிதம் பார்லிமெண்டில் வர்த்தமானப் பத்திரிகையில்(*Newspaper*) எழுதிவந்தால் கும்பனியாருக்கு மிக்கப் புகார் ஏற்படும். அப்படி என்று கும்பனியார் ஒளிக்கவும் கூடாது. ஏனென்றால் நமக்குக் கையாலாகாமலும், சிலவுக்கு இல்லாமலும், ஒன்றிலொன்று மில்லாமலும் சிரமப்பட்டுக் கொண்டிருக்கிறோம், இதே மாதிரி காகிதத்தை எழுதி இத்தனாந்தேதிகக்குக் கௌனர் கௌன்சிலுக்குக் கொடுத்திருக்கிறோமென்று பார்லிமெண்டுக்கு எழுதினால் அனர்த்தம் (தீங்கு) வருமே என்ற பயம் கௌனர் கௌன்சிலர்களுக்கு நன்றாக இருக்கிறது. இதில் வித்தியாசம் இல்லையாகையால் இக்கடிதத்தை இழந்து விடக்கூடாது. இதன்மேல் நம்முடைய ஸ்ரீமந்த் மகாராஜாவுடையவும் ரா.ராவுஜீயின் யோகத்தின்படி நல்லதுதான் ஆகும்.

60 தற்போது கும்பனியார் அப்பயத்தினால் பாதரிக்கு[98] எழுதி யிருக்கிறார். அந்தச் சமாசாரத்தையும் யஜமானவர்களுக்கு ஸேவகன் எழுதி யிருக்கிறானே. அக்கடிதம் பாதரி பார்க்கமாட்டேன் என்றால் இதைப் பாதரிக்கு அவசியமாகக் காட்டினால் சில சிக்கல்கள் எடுபடும். ஒருவேளை இக்கடிதத்தை யரர் எழுதினது? என்னவென்று அதட்டிக் கேட்டால் முத்தோஜி இங்களேயினதும் சிலவுக்குப் போராமல் முன்பின் நடந்தவைகளை நீங்கள் தான் எழுதி வக்கீலிடம் அனுப்புங்களென்று சொன்னீர். அந்தப்படிக்கி மா.பாயி சாயேப் அவர்கள் சொன்னபடி நம்முடைய சுக துக்கங்களை எழுதி வக்கீலிடம் அனுப்பினோம்.

அந்தக் கடிதத்தில் மா.ஆவுசாயேப் அவர்கள் "ஸ்ரீராம்" என்று கையொப்பமிட்டு அனுப்பினார்கள். அதை வக்கில் கௌனர் கௌன்ஸிலுக்குக் கொடுத்தார், என்று ஒரே படியாகச் சாதித்துச் சொல்லுகிறது. ஆனால் இங்கிருந்து நாம் கடிதம் எழுதிக் கொடுத்தோமென்று, கொஞ்சம் தெரிந்தால் அதனால் இன்று வரையில் ஆன காரியங்களும் இனிமேல் ஆக வேண்டிய காரியங்களும் நம்பிக்கை எல்லாம் முழுகிப் போகும்.

தாங்கள் அறிஞர். இதை நன்றாக அறிந்து பார்த்துக் கொண்டு பதில் எழுதினால் கொஞ்ச நாட்களில் நம்முடைய அதிஷ்ட வசத்தின்படி சுகமடையலாமாகையால் வெகுஹுஜாராய் யஜமானின் காரியத்தின்பேரில் கவனஞ் செலுத்திப் புழங்க வேணும். தவிர வேறில்லை. இக்கடித்திற்குத் தாங்கள் என்ன பதில் எழுதுகிறீர்களோ அதைப் பார்த்துக் கொண்டு உடனே ஸேவகன் புறப்பட்டு வருகிறேன்.

ஸேவகனுக்கு அவ்விடம் வரவேண்டிய வேலை அவசியமிருக்கிறது. ஆனால் புறப்படுகிற நேரம் சத்துருக்களின் கக்ஷிக்குத்[99] தெரியக்கூடாது என்று வெளிப்படையான கடிதத்தில் எழுதவில்லை. கௌனர் கௌன்ஸிலுக்கு எழுதிக்கொடுத்த கடிதத்தினால் இவ்விடமுள்ள எல்லா வெள்ளைக்காரர்களுக்குக் கூட சந்தோஷந்தான். கணக்கின் விசாரணைக்குக் கடிதத்தின் நகல் தங்களிடம் இருக்கிற தாகையால்

பதில் எழுதுவதற்குச் சொல்ல வேண்டிய தில்லையே. ரா. பாபாவைக்[100] கூப்பிட்டு விசாரணை செய்வார்களென்று வேறு சந்தர்ப்பத்தில் 60 ஆயிரம் கொடுப்பதற்கு முதலில் தீர்ந்தபடி

98. பாதரி - ஸ்வாரஷ் பாதிரி

99 சத்துருக்களின் கட்சி - அமர்சிங்கைச் சேர்நதவரகள்

100 ரா. பாபா என்றது சரக்கேல் பாபாவை

செய்து கொடுக்க வேணுமென்று பாதரியின் மூலம் எழுதுவதற்கு இதே தருணமானதால் அவர் செம்மையாகச் சொன்னார். அதற்கு எப்படி யிருக்குமோ அப்படிப் பார்க்கிறது.

ஸேவகனுடைய வீட்டு விசாரத்திற்கு[101] எழுதினேன். ஆனால் நீங்கள் கிருதயுகத்தின் பந்து[102] வானதால் அம்மரியாதையின்படி நடத்துவது தங்களுக்குத் தெரியும். இனிமேல் வீட்டு விசாரம் ஸேவகனுக்கு வேண்டியதில்லை. தங்களுடைய விருப்பத்தைத் தெரிவிக்க வேணும்.

இப்பொழுது கௌனர் கவுன்சிலுக்கு எழுதிக் கொடுத்த கடிதத்தை இம்மாதிரி எழுதிக் கொடுக்கிறது. அது ரிகார்டு ஆகும். இது 10 லக்ஷம் வராகன் சிலவு செய்தாலும் ஆகாது. அது மஹாராஜாவின் யோகத்தினால் ஆயிற்று.

இனிமேல் சீமைக்கு இக்கடிதம் போனதில்தான் சேத்தி தவிர வேறு அல்ல. இதில் இன்னும் 2 பாபத்துக்களை[103] எழுத வேண்டியதை நிறுத்தி யிருக்கிறது. ப்ரஸங்கத்தின்படி ஸேவகன் அவ்விடம் வந்த பிற்பாடு எழுதி யனுப்பலாமென்று ரா.ராவுஜீ அவர்கள் சொல்லி யிருக்கிறார்.

வெளிப்படையான காகிதத்தில் பாதரியைப் புகழ்ந்திருக்கிறது. அதை அவருக்குக் காண்பிப்பதற்காக அவருக்குச் சந்தோஷமுண்டாகும்படி எழுதி யிருக்கிறது. இவ்வளவு தான் ஆனால் அவர் செய்தது ஒன்றுமில்லை அறியவேணும். இக்கடிதத்தின் பேரில்தான் அமரசிங்குக்குக் கலெக்டரவர்கள் உங்களுடைய உறவினர்கள் எவ்வளவு? உங்களுடைய சம்சாரம் என்ன? என்று கேட்கும்படியாக ஆயிற்று. இதைப் பார்க்கிலும் அவருடைய வருங்காலம் வேறு இருக்குமா வென்ன? இக்கடிதத்தில் ஒவ்வொரு அர்த்தத்தையும் அதின் மேல் நடந்த பிரசங்கமும், ஸேவகன் வந்து வினந்தி செய்யும் பொழுது[104] தான் தங்களுக்கும் எல்லோருக்கும் வெகு சந்தோஷ முண்டாகும். தாங்கள் இக்கடிதத்தின் மர்மத்தை யறிந்து சந்தோஷமடைந்து எழுதினதைப் பார்த்து இங்கு எல்லோருக்கும் சந்தோஷ முண்டாயிறறு. தங்களுடைய புத்தியின் வைபவமும் விசேஷமாகப் பரவி யிருக்கிறது. இது தங்களுக்குத் தெரிய வேண்டி எழுதி யிருக்கிறேன்.

சொந்தம்

வணக்கம் - மேலும் - மதுபானத்திற்கு[105] வேண்டிய சிலவின் சமாச்சாரத்திற்கு ஸேவகன் பதிலெழுதுகிறேன் அதென்னவென்றால் -

நடுவில் ரா. பாபா சாயேப்பும் தாங்களும், ஸேவகனும் மூனறு பேர்கள இந்தக் காரியத்தை ஆரம்பித்தோம். அப்பொழுதிருந்த கதி திருமலை அய்யங்காருக்கு நாமே எதற்காக எப்படி எழுதிக் கொடுத்தோம். தங்களுக்குத் தெரிந்திருக்குமே. நாம் மூவரில் ரா.மாமா சாயேப் அவர்களுடைய முக்கியமான நம்பிக்கையினால் ரா.ராவஜி இந்த வேலையைத் தொடுத்தார்.

101. வீட்டு விசாரத்திற்கு - வீட்டைப் பறறி

102. கிருதயுகத்தின் பந்து - மிகப் பழமையான உறவு கிருதயுகம் - நான்கு யுகங்களில முதல் யுகம

103. பாபத்துக்கள - தொடரபான செயதிகள்

104. வினந்தி செயயும் பொழுது - பணிவுடன் விளக்கும பொழுது

105. மதுபானம் எனபது வெள்ளையரக்குக் குடிப்பதற்காகககொடுக்கும் பானம் போலும்

ஆனால மறற ஒருவரையும் நமபவிலலை. இப்படிக்கு நம்முடைய வேலை ஆகிறதா? இப்பொழுதென்ன இருககிறது இது ஒரே மாதிரியாகப் போராதா? மா. ஆவுசாயேப்[106] முதற்கொண்டு எல்லோருடைய தஸதாவேஜுகளைச சமீபத்தில் என்ன நல்லது. விபக்ஷி[107] யினிடத்தில் தர்பாரில சிலவாகிறது. இன்னும் பிரபஞ்சத்திலும் ஆகிறது. இவையெல்லாம் இவ்வளவு சந்தேகப்படுகிறார்களா? லக்ஷக்கணககான திரவியத்தைச் சிலவழித்து ஒரு மனிதனைப் பெரியவனாக்க வேணும். அமமனிதனிடமிருந்து வேலையை வாங்க வேணும். அப்படி நீங்கள் என்ன செய்திருக்கிறீர்? இதில் தங்களுக்கு யார்மேல் சந்தேகமிருக்கிறது. அதையாவது எழுதினால் பதிலை எழுதுகிறேன்.

முதலில் ஸேவகன் இவவேலையைப் பொறுத்து எழுதினபோது என்ன பதில் எழுதினீர்கள்? இப்பொழுது காரியமான பின்னர சந்தேகபபடுவதற்கு என்ன காரணம்? தங்களுக்குச சந்தேக முண்டாக்கின பொய்யர்களை ஸேவகன புல்லைப் போல பாவித்துக் காரியத்தைப் பார்க்கிறேன்.

ஆனால் அவர்கள் நான் செய்கிற வேலையைச் செய்ய மாட்டார்கள். கொஞ்ச நஞ்சத்திற்கு ஆசைப்பட்டு யஜமான[108]ருடைய ஆயிரக்கணக்கான துகையை அகாரணமாகச் செலவழிக்கிற துரோகி நானல்ல. ஸேவகனுக்கு அப்படி ஆசையிலலை. நியாயமாக சம்பளத்தை நீங்கள் கையைத்தூக்கிக் கொடுக்கிறது. அவ்வளவு தான் ஆனால் அதிக ஆசைப்பட மாட்டேன். அந்த ஸவபாவம்[109] தங்களுக்குத் தெரிந்தே யிருக்கும்.

வெங்கடசாமிக்கு அதிகாரபத்திரம் கொடுத்து அனுப்பினாற் போல் என்னிடம் ஒன்றும் கொடுக்கவில்லையே. இந்த லஞ்சங் கொடுக்கிற விஷயத்தை வெகு இரகசியமாகக் கொடுக்க வேணும். நடுவில் சுற்றுகிற மனிதன் சொல்லுவதை நிஜமென்று எண்ணவேண்டாம். இவ்விஷயத்திற்கு எப்படியாவது இவ்விடமுள்ள பெரிய மனுஷாளுடைய மூலமாக (மத்தியஸ்தம் வைத்து) பேசி, சாவுகார்களுடைய குமாஸ்தாக்கள் ரா.ராமண்ணாவின் தஸ்தாவேஜுக்களையும் மாட்டி ஸேவகன் தஸ்தாவேஜுகளைக் கொடுத்தேன்.

பிறகு வேறு இராஜ்யங்களின் பெரிய மனிதர்கள் தங்களுடைய தஸ்தாவேஜின் பேரில் அவர்களுடைய ஜாமீன்களையும் மாட்டி வேலையைச் செய்து கொண்டார்கள். அன்றே எழுதிக் கொடுத்தது. துகையைப் பெற்றுக் கொண்டார்கள். இப்பொழுது நடுவிலிருக்கும் சாவுகாரர்கள் நியாயப்படிப் பார்த்தால் வட்டியையும் கூட கொடுக்க வேணும். அப்படியில்லையே. தன்னுடைய செய்கைக்குத் தவறாமல் அவர் தங்களுக்குக் கடிதத்தில் பேர்வழிகள் சிலரை எழுதி, சிலரை நேர் நேராகச் சொல்ல வேணுமென்று மோகமாக எழுதி அனுப்பினதற்கு நம்பிக்கைப் போராதபடி ரா.ராவுஜிக்குச் சொன்னார். அவரும் மனதுக்கு சந்தேகமின்றி தெரிந்துகொண்டு எழுதச் சொன்னார். அதுவும் தங்களுக்குப் போராமலிருந்தால் இனிமேல் தாங்கள் கேட்பது உசிதமல்ல (சரி அல்லது) அறியவும். ஸேவகன் வந்த பின்னர் நன்கு விளங்கும். மேலும் அங்கேயுள்ள கஷ்டத்தினால் நான் மனமின்றி

106 ஆவுசாகேப் என்றது திரௌபதியம்பாபாயியை (அதாவது இரண்டாம் துள்ஜாவின் தாயை)

107. விபக்ஷி யென்றது அமரசிங்கை

108. யஜமானர் எனறது சரபோஜியை

109 ஸவபாவம - சுபாவம் - இயலபு

எழுதினேன். ஆனால் தங்களுடைய கஷ்டத்தினால் நீங்கள் எழுதினீர். அதுவுஞ் சரியே. ஆனால ஆதி மத்தியிலும்[110] நாம் எல்லோரும் இந்த முயற்சிக்கு ஆரம்பிக்கும் பொழுது யஜமான் மகாராஜாவின் இவ்வளவு அன்பைக் காட்டவில்லை. அவரைத் திருஷடியினால் (நேரில்) பார்த்த பின்னர் ஒருவருக்கொருவர் அன்பு கொண்டதினால் அவருடைய காரியத்தில் உயிர் கொடுப்பதென்றே நிச்சயித்திருக்கிறார். ஆனால் இப்பொழுது அனுபவிக்கிற கஷ்டங்கள் அதைப் பார்க்கிலும் அதிகமானவைகளல்லவே. இப்பொழுது அவரவருடைய நன்மையையே விரும்புவார்கள். தவிர யஜமானருடைய முன்னேற்றத்தின் விருப்பம் யாருக்கிருக்கிறது. ஈஸ்வரன் தன் பாகத்திற்கு யோக்கியதையும் நன்னடத்தையும் நன்றாகக் கொடுத்திருக்கிறார். ஆனால் அறிஞர்களுக்கு அதிக துக்கம் உண்டாகுவதென்று பிரபஞ்சத்தின் ஸ்வபாவமே இருப்பதால் எல்லாவற்றையும் பொறுத்து நீசனைக்காட்டிலும் நீசன்[111] அயோக்கியனைப் பார்க்கிலும் அயோக்கியனும் சீ என்றால் ஜீ[112] என்று பணிந்து யஜமானரின் காரியம் பார்க்க வேணும். இதற்கு எனக்குத் தோன்றினது என்னவென்றால் செய்த முயற்சியை யார் அறிவார்? தூரமுள்ள கிராமாந்தரத்தில் வசிக்கிறவர்களுக்கு இங்குள்ள கஷ்டங்கள் என்ன தெரியும் என்று இரண்டு வித அர்த்தமும் தோன்றும். ஆனால் தோன்றினபடி இதின் பதிலை எழுதுகிறேன். அதென்னவென்றால் - செய்த முயற்சியை அறிகிறவர் ரகுபதியைத்[113] தவிர வேறொருவருமில்லை.

இரண்டாவதாக ராவ்ஜிக்காக அதைப் பார்க்க வேணும். ஸேவகன் கிராமாந்தரத்தில் வசிப்பதால் இனிமையான வார்த்தைகளை எழுதினேன். ஆனால் கஷ்டப்படுகிறவர்களுக்கே தெரிய வேணும். அதுவும் உண்மைதான். ஆனால் இதனால் தான் பெரிய மனுஷத்தனம் யோக்கியதை ஸ்வாமியின் அருள்தவிர வேறில்லை. நீங்கள் அறிஞர் அதிகமாக என்ன எழுதுவது. எல்லா விதத்திலும் எல்லோருடைய மனதின்படி நடந்து யஜமானுருடைய பாதங்களின் மேல் பார்வையிட்டுக்கொண்டு காலங் கழித்தால் சுவாமியின் அருள் சீக்கிரமே உண்டாகும். அறியவும். வணக்கம்.

60(த)ரா. தத்தாஜி அப்பா அவர்களுக்கு வணக்கம் ஸ்ரீமந்த் ரா.மகாராஜா சாஹேப் மா.எல்லா பாயிசாயேப்புகளைக் காண்பதற்குச் சென்று வந்த சங்கதியையும் யஜமானவர்களுடைய சவாரிக்கு விபக்ஷி (அமரசிங்கு) யானவர் கிழவர் நமக்கு மட்டக்குதிரையைக் கொடுத்த சங்கதியையும், சவாரியுடன் மிஸ்தர்ராம் அவர்களும் மிஸ்தர் பாதரி சாயேப் அவர்களும் கூடப் போகவேண்டியதில்லை என்று சொன்ன சமாச்சாரமும் இதைத் தவிர மூலை மாடியின் அறையிலுள்ள பூட்டைத்திறந்து கொடுக்க வேணுமென்று பாதரிசாயேப் அவர்கள் சொன்னதற்குச் சிவராயர் அதிலுள்ள 20 ஆயிரம் பொருமானமுள்ள நகைகளை நாம் கொள்ளை அடித்தோமென்று சொன்னாரென்ற சங்கதியைக் கேள்விப்பட்டதினால் இதையெல்லாம் அட்லிஸ்டனுக்குத்[114] தெரிவித்தோம். அதற்கு

---

110. ஆதி - தொடக்கம்; மத்தி - இடைக்காலம்

111. நீசன் - கீழ்மகன்

112. ஜீ என்றது மரியாதைக் குறியீடு

113. ரகுபதி - இராமன் ; கடவுள்

114. அட்லிஸ்டன் - Hudleston

விபக்ஷியானவர இப்படிச் செய்வதெல்லாம் தங்களுக்கு மிகவும் அனுகூலமென்று பதிலளித்தார். நாளையதினம் கவரனருககும்[115] தெரிவிக்கிறேன் அறியவும்.

மேலும் இவ்விடம் வருகிற சில பெரிய மனிதர்களிடம் நானும் ரா.மாமா சாயேப்பும் அவருடைய மந்திரியும், இநத ஜபம் மிகவும் காப்பாறறினதால கேளவிப்படுமபடியாயிற்று. மிகவும் நனகு அறிந்து தான் செய்திருபபார. அதுவும் செயய வேணடியதுதான.

தஞ்சாவூரில் அவருடைய திரவியம் ஸமபததும் யோக்கியதையுடன் சம்பாதிககும் பொழுது எல்லாமிவரிடமிருந்துதான் ஆகுமென்ற பிரமம்[116] குறைந்திருக்காது. அவ்வளவு தான் தவிர இங்கு

நம்முடைய வேலைக்கு ரா. சுபபுராவ்ஜீ ஆரம்பித்த வழியைப் பின்பற்றி அவருடைய எண்ணத்தின்படி ஸேவகன் புழுங்கிறதை[117] அந்த ஜனங்களறிந்து இந்த எல்லைக்கு வந்ததினால் மிகப் பெரிதென்றறியவும. இங்கு சீமையினுடையவும் இவ்விடத்திய முயறசி எவ்விதம் நடக்கிறது. வேலை எதுமட்டும் இருக்கிறது. இதன்மேல் இதற்கு என்ன செய்ய வேண்டும என்பதை நேரில் சொன்னால தான் தெரியும். இவ்வூரில அந்த ஜனங்களுக்குள்ள யோக்கியதை அவர்கள் செய்யும் வேலைகளையும ஸேவகன் அறிகிறான். ஆனால் தங்களுக்கு நான என்ற அகம்பாவத்துடன இவ்வளவையும் தெரிவித்து எழுதவில்லை. இதில் மேலுக்கு மேல் கொஞ்சம் விரோதம் இருக்கிறது. அதைத் தங்களுக்குத் தெரிவிக்க வேணுமென்று எழுதினேன். அதென்னவென்றால் - அந்த ஜனங்களுடன் நான் இரவில் 12 மணிக்குத் தனிமையாக சொந்தங்கொண்டாடிக் கொண்டு பேசினேன். அந்நேரத்தில் எல்லாம் நீங்கள் தான். தங்களையே நம்பியிருக்கிறோம். நீங்கள் எப்படி அனுப்புகிறீர்களோ அம்மாதிரியே நடக்கிறோ மெனறு பேசியே தீர வேணும்.

அவர்களும் கவனித்தார்கள். ஆனாலும் சிலவு செய்து, உங்களுடைய வேலையை நாமே செய்கிறோம். தவிர வேறொருவராலும் ஒன்றுமாகாது. பாருங்கள். எப்படிச் செய்கிறோமென்று நம்முடைய புருஷார்த்தத்தை (சாமர்த்யத்தை)ச் சொல்லியே தீரவேணும். மேல் இங்கு வந்த பிற்பாடு வேறொருவராகிலும் அல்லது நம்மாலாவதோ ஏதாவது தெரிந்து கொண்டு மேலேதாவது ஏற்பாட்டையுஞ் செய்வித்து பொய் பித்தலை[118] அவ்விடம் எழுதுவதில் நாம் பொய்யைப் பின்பற்றுவதினால் நம்மிடமிருந்தும் தகவல் எழுதும்படி செய்வதில்லை. அது நம்மால் நாம் எதன் பேரிலிருந்தால் நமக்குப் பொல்லாப்பும் நாநா விதமாகவும், அவர் கருங்காக்கையை வெள்ளைக்காக்கையாகச் செய்தாரென்று எழுதி நான் எல்லா ஸாதமும் செய்கிறேன்.

இதற்கு இவ்வளவு சிலவாகிறது. நீங்கள் தஸ்தாவேஜை நீங்கள் அனுப்பினால் செய்கிறேனென்று எழுதுகிறது. அதற்கு என்ன இது நிஜமோ, அது நிஜமோ?

115. கவர்னர் - லார்டு ஹோபர்டு ஆகலாம்

116 பிரமம் - பிரமை - மயக்கம்

117 புழுஙகிறதை - நடப்பதை

118. பித்தலை - பிததலாட்டம் - வஞ்சனை

தஸ்தாவேஜுக்களை எப்படிக் கொடுப்பதென்று பிரமிக்கிறதற்கு இடம் கொடுப்பது. இதனால் அந்த ஜனங்களுடைய சித்தத்திற்கு நான் எழுதியபடி தஸ்தாவேஜு வரவில்லை. இதற்கு நான் என்ன எழுதியிருக்கிறேனே. அவ்விடமிருக்கிற யஜமான்கள யோக்கியர்கள். இங்கிருக்கும நம்முடையவர்கள் என்னமோ எழுதி அவருடைய மனதைக் கெடுத்து விட்டார்களென்று நம்பேரில் காரணமின்றி வெறுப்பதற்கு ஆரம்பித்து இல்லாதவைகளை எழுதிகொண்டிருப்பது. இவ்வளவுக்கும் இடமாகிறதே.

பிரபஞ்சத்தின் விசாரம்[119] பலபேர்களின் சொல்லியிருக்கிறது. அவர்களுடைய ஸம்சாரம்[120] வீணாகப் போய் விட்டதென்று வார்த்தை இருப்பதால் சிரமமென்றெண்ணி தோன்றினதை எழுதினேன். இதற்கு தாங்கள் சொல்லியிருக்கிறீர்களோ? அதைத் தெரிவித்தால் அதற்குத் தக்கபடி நடக்கலாம். மேலும் எப்படித் தோன்றுமோ அப்படிச் செய்ய வேணும்.

யஜமானுடைய சவாரியின் பொழுது நம்முடைய சுற்றம் நாற்றம்[121] வேலைக்காரர்கள் நம்மிடம் தடையின்றி வரவேண்டும்.

மேஸ்தர் ராமும், பாதரிசாயேப்பும் நம்முடன் கூட வரவேண்டும். எடுபிடி சாமான்கள் நன்றாக யிருக்கவேணும். இப்படி யிருந்தால் சவாரிக்குப் போகலாம். இல்லாவிடில் எவ்விதத்திலும் போகுவது நியாயமென்று தெரியவில்லை. இன்னும் 4 நாள் பார்த்துப் பின் எழுதுகிறேன். பிற்பாடு செய்யலாம்.

அங்குள்ள சங்கதிகளை ரகசியமாகவும், வெளிப்படையாகவும் இன்னாருடன் இன்ன நேரத்தில் பேசுகிற சங்கதிகள் வருவதற்காக வெள்ளைக்காரர்கள் உடனுக்குடன் என்னைக் கேட்கிறார்கள்.

இப்பொழுதுள்ள சர்கார் மிகவும் நுட்பமாக இருக்கிறது. அறியவும். ஸேவகனுக்கும் சமாச்சாரம் அறிவதில் ஆசை அதிகமாகையால் தெரிந்து கொண்டிருக்கிறது.

வெங்கடசாமிக்கு 4 தினங்களுக்கு தெற்கே பாயிசாயேப் அவர்களின் சத்திரத்தின் கிராமத்திலிருக்கச் செய்வது நல்லது. சமயத்துக்குத் தகுந்தபடி நாம் எழுதி அனுப்புகிறோம். அந்தப்படி செய்யலாம். அறியவும். வணக்கம்.

**60(த்த)** ரா. தத்தூஜி அப்பா அவர்களுக்கு ஸேவகனான பாபண்ணாவின் அநேக ஆசிர்வாதம். வணக்கம். ஹுஜூர் யஜமானவர்களுக்கு நேற்று 2ம் தேதியின் கடிதம் பொது ஜனங்களுக்குரிய காரியத்தை எழுதி அனுப்பியிருக்கிறேன். அதனால் எல்லாம் தெரிய வருமே. அக் கடிதத்தைப் பாதிரி சாயேப்புக்குக் காண்பிக்கலாம்.

கவர்னர் கௌன்சிலுக்கு எழுதிக் கொடுத்த கடிதத்தின் நகலை யனுப்பி யிருக்கிறேன். அதைப் பார்க்கத் தெரியுமே. சமயத்திற்குத் தகுந்தபடி அங்கிருந்தே அனுப்பினேன். அதை நான் சேர்ப்பித்தேனென்றே இருக்கட்டும். அக்கடிதத்திற்கு மா.ஆவுசாகேப்பின் கையொப்பம் மட்டும் ஸ்ரீராமென்று மகாராஷ்டிரத்திலிருக்கிறது. அதையும் அறியவும்.

---

119. பிரபஞ்சத்தின் விசாரம் - உலகத்தைப் பற்றி எண்ணுதல்

120. ஸம்சாரம் (?) எண்ணம்

121. நாற்றம் - நற்றம் - நன்மை

இதன்பிறகு ஏதோ காரியத்திற்காகக் கடிதத்தை எழுதி பாதரிசாயேப்பிடம் கொடுத்தால் அவர் கவர்னர் கௌன்சிலுக்கு அனுப்புவாரென்று இங்கு கௌர்னர் சொல்லியிருக்கிறாரே. அதற்காக எதையாவதொன்றை எழுதி பாதரியினிடம் கொடுக்கிற வழக்கம் செய்யக்கூடாது. இதை சாயேப்புக்கு எழுதவேண்டிய தவசியமில்லை. சாயேப்புக்கு எல்லாம் தெரியும். ஆனால் சற்று யோசனையைக் கூர்ந்திருக்கிறேன. ஏனென்றால் அந்த வழியாகப் போகக்கூடாது. ஒன்று. இரண்டாவதாக இவ்விடமுளள மாதிரியைப் பாரத்து முன்பற்றுதலுக்கு அனுசரித்து ஏற்றப்பட்ட காரியத்தை எழுத வேண்டியதால் தற்போது எழுதவேணும். இப்பொழுது வேண்டிய சங்கதியும் அப்படி யொன்றுமில்லை. இச்சங்கதிகளுக்கெல்லாம் கவர்னர் கௌன்சலிலிருந்து மேற்கொண்டு பதில் வந்தவுடன் ஒருமாதம் வேலைக்காக ஸேவகன் அவ்விடம் வந்து இவ்விடம் திரும்ப வரவேணுமென்று ரா.ராவுஜிசாயேப் முதற்கொண்டு சில நம்முடைய வேண்டியவர்களும், சில வெள்ளைக்காரர்களும் சொல்லுகிறாராகையால் அதன் பின்னர் யோசிக்கலாம்.

இதற்குள் ஒருவேளை அவசியமேற்பட்டால் இங்குள்ள சபையைத் தவிர எவ்விதக் கடிதமும் எழுதுகிறதைப் பாதரியினிடம் கொடுப்பது மீறிவிடக்கூடாதாகையால் எழுதி யிருக்கிறது. இவ்விடம் உத்திரவின்படி கடிதம் எழுதுகிறது. உத்திரவன்னியில் கடிதம் எழுத வேண்டிய அவசியமில்லை

நம்முடைய சிலவுக்காகக் கும்பனியின் கலெக்டர் கொடுப்பதற்கு அமரசிங்கு கொடுக்கிறதில்லை என்று வரததமான பத்திரிகையில் கும்பனிககு எழுதி வந்தால் அதன் வழியை கும்பனிக்காரர் நன்றாகச் செய்வார்கள். சில நியமனங்களே ராவுஜீ செய்து நடநது வந்தபடி நடக்காமல் சீர் குலைந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். ஆனால் ரா.ராயர் அவசியமென்றறிந்தே ஒவ்வொன்றையும் செய்து வந்ததற்கு இதற்குள் அதற்கு வித்தியாசமாக செயகிற வேலை இருக்கவிலலை. ஒருவருடைய காரியத்திற்குச் சில சங்கடங்களினால் ரா.மாமா சாயேப்பும் நீஙகளும் சேர்ந்துதான் நடத்தும் படி முன் செய்ததாக எழுதி யிருக்கிறது. அது உத்தமம் தான். ஆனால் எவ்விதததிலும் மிஞசிப் போனால் பின்பு வெகுகஷ்டமேற்படும். அதற்கு யோக்யமாயிருந்தால் ஒன்றும் தேவையிலலை. மேலுக்கு மேல் விரோதமுண்டாகும். அதற்காக இப்பொழுது முதற்கொண்டே அறிந்து ஹுஜாராய்[122] செய்ய வேண்டும. நடக்கிற (தெரிய வருகிற) வார்த்தைகளௌலலாம் உண்மையல்ல. நிச்சயமாக பக்தியுடன செயகிற செய்கையினால் யஜமானருடைய எவ்வித்திலும விரோதமின்றி நடப்பவனே யோக்கியன. நேரில நன்மையாகப் பேசுகிறது அது யஜமானருககும் சுற்றிலுளளவர்களுக்கும சரியாகத தோன்றுவது. அதில் எல்லாவிதத்திலும் கெடுதிதானிருக்கும். இபபடி செய்கையுள்ளவர்கள் எல்லா விதத்திலும் அயோக்கியன்தான் ஆகையால நுண்ணறிவால் இவ்விரண்டை நன்கறிந்து எச்சமயத்தில் எவரிடமிருந்து எவ்வளவு வேலை வாங்கலாமோ அதைப் பொல்லாப்பில்லாமல் விசுவாசங்காட்டிததான் வாங்க வேணும் தங்களைத் தவிர எனக்கு வேறு பந்துக்கள் சிநேகிதர்கள் யாராவது இருக்கிறார்களா? தானியம சேகரிகக நாட்களில் கடைசி. வீட்டிலுளளவரகள் சாகுவது. நாம் தேசாநதரம் அலைவது இதைப பாரககிலும் வேறு தருமம் எது. எல்லா விதத்திலும் தங்களை நம்பினதறகு இதுதான பலமா? (பிரயோஜனமா) இவ்விஷயமாக ரா ராவும் தங்களுக்கு எழுதவும் போகிறார். ஆனால அவருடைய கடிதத்தை எதிரபார்க்க வேணுமா? ஸேவகன்

122 ஹுஜாராய் - எசசரிக்கையாய்

இவ்விடம் வந்தது தங்களை நம்பித்தான். வேறு ஒருவருடையவுமில்லை. தங்களைப் போன்ற வேண்டியவர்களிருந்து என்று பெண்சாதி பிள்ளைகள் பட்டினியாக சாகுவது. நான் இவ்விடம் பல்லக்கிலமர்ந்து சுற்றுவது. இதைப் பார்க்கிலும் வேறு அவமானம் உண்டா? இது என்னுடைய கிரகச்சாரமே. அப்படி அது நன்றாகவிருந்தால் திருவிடைமருதூரில் உள்ள வீடு எனக்குக கொடுப்பதாக வாய்ப்பேச்சு ஆனது. அது கிடைக்கக் கூடாதா. ஆகையால் தங்கள் பேரில் வார்த்தை யில்லை. எருக்கம் பூவினால் பூஜை செய்து அதற்கு சம்மங்கி புஷ்பம் எப்படி கிடைக்கும். ஆனால் சிலவிஷயமாக எனக்கும், தங்களுக்கும், வார்த்தை நடந்திருக்கிறது. அதற்குத் தவறாமல் நடந்து வருகிறேன். அதற்குச் சாட்சி அரண்மனைக்கு வெளியிலுள்ள அரசமரந்தான். ஸேவகனுடைய மாமனாருக்கு உத்யோகம் செய்து கொடுக்கும்படி ரா.ராயர் சொல்லி வந்தாராம். அவருக்கு இன்னும் ஒன்றுமில்லை. எக்காரணத்தினாலோ தாங்கள் நிறுத்தினீர்களோ தெரியவில்லை. இருக்கட்டும். அவர் அவருடைய ப்ராப்திக்கு[123] என்ன முயற்சி செய்வது. இப்பவும் வீட்டில் பட்டினியாகச் சாகாமல் தானியத்தையும் மேல் சிலவுக்கும் ரா.ராயர் சொன்னபடி ஏற்பாடு செய்து கொடுக்க வேண்டும். இதுவரை கொடுத்த கணக்குகளையும் எழுதி அனுப்ப வேணும்.

60(ந்த)ரா.தத்தாஜி அப்பா அவர்களுக்கு ஸேவகனான கோபால வெங்காஜியின்[124] ராம் ராம் தாங்கள் 23 வ க்கு எழுதிய கடிதம் ரா.சாஸ்திரிகளின் பேரிலும் ரா.சங்கரப்ரியாவிற்கும் பச்சாஜிராயருக்கும் நாயுடுவுக்கும் இப்படி நான்கு கடிதங்களும் அமரசிங் மகஜர்[125] எழுதி அனுப்பினதற்கு நகலும், இவை எல்லாம் அனுப்பி சமாசாரம் எழுதியிருக்கிறேன். இவை எல்லாம் ரா.சாஸ்திரிகள் பார்த்தார். இந்தப்படி (அமரசிங்கு) எதிரி செய்வானென்றே இதற்காக நீங்களும் பாயிசாயேப் அவர்கள் கிராமங்களின் பிராமணர்களும், நம்முடைய சொந்தக்காரர்கள் வகையறா எவரிருக்கிறார்களோ அவர்களுக்குச் சொல்லி வைத்து, சமயம் நேரிடும்பொழுது, நாமொரு மகஜர் செய்து, சாக்ஷி போட வேண்டும் என்று, பேஸஜி[126] தங்களுக்கு எழுதி யிருக்கிறார். இன்னும் மஹாடிக்ராவ் வகையறா இவ்விடம் வந்திருந்தாலும் இந்தப்படிக்கி ஆகும். ஆகையால் நீங்கள் எல்லோரையும் ஒன்று சேர்த்துக்கொண்டு, காரியத்தை நடத்த வேணுமென்றும், முன்பேயே சொல்லி யிருந்தாராம். அவரும் ஒன்றும் செய்யவில்லை. சமீபத்தில் தங்களுக்கு எழுதினதும் ஆகவில்லை.

மிஸ்தர் பாதரி சாயேப் அவர்களுக்குச் சொல்லி மிஸ்தர் ராசாவிற்கு ரா.சாஸ்திரிகளை பற்றி ஒரு கடிதம் எழுத வேண்டும். அதைப்பற்றி எத்தனை த்ரம் எழுதினாலும் அவ்வேலை ஆகவில்லை. நாம் இவ்விடம் வக்கீலாகி ஒவ்வொரு கடிதாசியையும் கொடுக்கிறோம். ஆனால் பாயி சாயேப் பெயரால் கொடுத்தாலோ விசாரணைக்கு வருகையில் அவர்கள் நாம் உண்மையாக எழுதி அனுப்பினோமென்று சொல்ல வேணுமே. அதற்கு நீங்கள் அவர்களுடைய தஸ்தாவேஜ்[127] ஒன்றையும் வாங்கவில்லையே. அவர்களுடைய எண்ணம் எப்படி

123. ப்ராப்தி - விதிப்பயன்

124. கோபால வெங்காஜி - சரபோஜியின் வக்கீல் (43சி-60ச)

125. மகஜர் - பலர் கையெழுத்திட்ட பொது விண்ணப்பம்

126. பேஸஜி - அரசர்

127 தஸதாவேஜி - (உரிமைப்) பத்திரம்

யிருக்கிறதோ. அதொன்றும் சரிவரபுரியவில்லை. அவர்களுடைய பலத்தை நன்றாக செய்து கொள்ள வேண்டும் யெதிரி செய்த மகஜரபடி நீங்கள் பாயிசாயேப் அவர்களின் உறவினரகளுடையவும், பிராமணர்களுடையவும் சாக்ஷிகளையும் போட்டுக் கடிதம் எழுதி மிஸ்தர பாதரி சாயேப்களிடம் கொடுத்தாவது அனுப்பவேண்டும்.

இப்பவும் அவ்விடமுளளவர்களில் ஒருவர ஏற்றுக்கொண்டு விபக்ஷிக்கு[128] எதிரியாகி பேசும்படியாய் இருப்பதற்கு யார் சக்தி உளளவர். நான் இவ்விடம் யாருடைய மனுஷன் என்றுயாருடைய பலத்தின மேல் பேசுகிறது இங்கு விசாரணைக் காலத்தில் அங்குள்ள ஜனங்களே சாக்ஷி சொன்னால்தான் இங்கு ஒப்புக்கொள்வார்கள். அதற்குப் பாயி சாயேப்பும் உறவினர்களும் சில வித்வான் பிராமணரகளும இப்படி கூட்டுபடை அனேக பேரவழிகளை சேர்த்து வைக்க வேணும. பின்பு அவர்களிடமிருந்து காட்சி சம்மந்தத்தை எழுதி அனுப்ப வேணும். அப்பொழுதுதான் விசாரணையில் உபயோகப்படும். இதைத் தவிர, அங்கிருந்த உறவினர்களில் ஒருவேளை டமபஞ்[129] செய்து கொண்டு இங்கேயிருந்து சில வகையறாவுக்கும் தாராளமாக இருக்கும்படி செய்து கொண்டிருக்க வேணும். இது ஒன்று காணும். இங்கே நமக்கு வேண்டிய ஜனங்கள் நம்மைக் கேட்கிறதாவது, நீங்கள் பேசுகிற வேலையை யார் ஏற்றுக்கொள்வது. பாயிசாயேப் அவரகளா அல்லது ஸ்ரீமந்த்தரோ என்றும் அதற்குக் கார்பாரி ஏற்றுக்கொண்டு செய்யப்போகிறவர் யார என்றும் கேட்கிறார்கள்.

இதைத்தவிர மதுபான விஷயத்தைப்[130] பற்றிப் பேசுவதற்கு ஏதாவது துகையைப் பொதுவில் மத்தியஸ்தரிடம் கொடுத்து, காரியமான பின்னர நமக்குக் கொடுங்கள். அதுவரையில் மத்தியஸ்தரிடம் வைக்கச் சொல்லுகிறார்கள். அதற்கு முன் நடந்த ஏற்பாடே இன்னும் தீராமல் இருக்கிறது. அதற்குப் பாபுராயர் வீட்டில் கலியாணமாகிறதால் சும்மா இருக்கிறேன். கல்யாணம் முடிந்ததும் காரியத்தை செய்து முடிப்பாரோ வென்று பயப்படுகிறேன். அதுவும் திரக்காணேன். இதைத் தவிர்த்து சிலவுக்கும பல்லக்குத் தூக்குகிறவர்களுக்குக் கூட கூலி கொடுப்பதற்குப் பணமில்லை. வாய் உபசாரம் செய்தால் வேலை நிறைவேற வேண்டுமே. ஆகையால் இக்காகிதத்தின் பதிலையும் அனுப்பி, அங்கு செய்ய வேண்டிய பந்தோபஸ்து இம்மாதிரி செய்ய வேண்டும். நான் சும்மா உட்காரவில்லை.

நேற்றிரவில் மிஸ்தர் போசரவர்கள் மனுவைக் கொண்டு போய் மிஸ்தர் சேரியிக்கு அந்தரங்கமாகக் காட்டுவதற்கு போயிருக்கிறார். மிஸ்தர் மகாளி என்பவர் ஒரு பெரிய மனிதன், ஜனரலுக்கு வேண்டியவர். அவருக்கும் காட்டி, அவருடைய யுக்திகளைக் கேட்டுக் கொண்டு, திருத்தி கொண்டு வருவதாகச் சொன்னார்.

அம்மனுவை வெளிப்படையாக ஸேவகனால் மிஸ்தர் செரியின் மூலமாக லார்டு கார்ன்வாலீஸ்[131] சாயேப்புக்கும் ஜனரல் சாயேப்புக்கும் கொடுக்க வேண்டுமென்று மனுவை

128 விபக்ஷி - எதிரி (அமரசிங்கு)

129 டம்பம் - ஆடம்பரம்

130. மதுபானவிஷயம் (,43சி-60-ண)'

131. லார்டு காரன்வாலீஸ் - கவர்னர் ஜனரல்

யெடுத்துக் கொண்டு போயிருக்கிறார். தற்காலம் ரகசியமாக நடந்து வருகிறது. வெளிப்படையாகும் போது ஸ்ரீமந்தரோ குழந்தையென்று தோன்றுகிற போது, பாயிசாயேப் ஆங்கிலேயத்தில் எழுத வேண்டி இருக்கும். பேசினபடி கையொப்பத்தையும் இடவேண்டியிருக்கும். ஒவ்வொரு லாப நஷ்டத்திற்கும் பாத்தியப்பட்டு நடத்த வேண்டும்.

"உமன்ஸ் பிராபர்டி"[132] என்று ஆங்கி லேயத்தில் மனு விஞானேஸ்வரியின்[133] நகல் செய்யப்பட்டிருக்கிறதே. சங்கர் அவர்களிடமிருந்து புத்தகத்திலுள்ளதை மிஸ்தர் பாதிரி சாயேப்பிற்கு எடுத்துக் காட்டுகிறது. அதில அமரசிங் யார்? தரும விவாகமாகவில்லை. அவளுடைய வயற்றில் பிறந்த புத்திரன் தாசியின் புத்திரனைப் போல் தவிர, அவரொன்று[134] புத்திரனாகுவாரா என்று முதவில் விசாரணை செய்யும்படி மிஸதர் பாதரி சாஹேபுக்கு நீங்கள சொல்லுகிறது. உறவினர் என்ன மகஜர் எழுதியிருக்கிறார்களோ அதை சம்பாதித்து அனுப்பித்தால் நல்லது.

நெல்லிக்காய் போட்டு பில்வம் எடுக்க வேண்டும். ஒரு வேளை பில்வம் போட்டு நெல்லிக்காய் எடுக்க வேண்டும.

---

132. உமன்ஸ்பிராபர்டி - Women's Property
(பெண்களுக்குரிய சொத்துரிமை)

133. மனு விஞ்ஞானேசுவரீயம் - ஒரு நீதி நூல்

134. "அவரொன்று" என்பதை "ஔரச" என்று திருத்திப்படித்தல் பொருந்தும் (ஔரசபுத்திரன் - சொந்தப்பிள்ளை)

# .PPENDIX - I

# MARĀTHA KINGS OF THANJĀVUR

| | | |
|---|---|---|
| Vyaṅkoji or Aekoji I | 1676 | 1684 |
| Sāhaji (I Son of Vyaṅkoji) | 1684 | 1712 |
| Sarabhoji I (II Son of Vyaṅkoji) | 1712 | 1728 |
| Tukoji or Tulajā I (III Son of Vyaṅkoji) | 1728 | 1736 |
| Aekoji II or Bābā Sāheb (Son of Tukoji) | 1736 | 1737 |
| Sujānabāi (Queen of Bābā Sāhab) | 1737 | 1738 |
| Sayāji (Son of Bābā Sāheb) | 1738 | |
| Kāṭṭurājā | 1738 | |
| Pratāpasingh (Another son of Bābā Sāheb) | 1739 | 1763 |
| Ṭulajā II (Son of Pratāpasingh) | 1763 | 1773 |
| Nawab's Rule | 1773 | 1776 |
| Tulajā II | 1776 | 1787 |
| Amarasingh (Brother of Tulajā II) | 1787 | 1798 |
| Sarabhoji II (Adopted son of Tulajā II) | 1798 | 1832 |
| Shivāji (Son of Sarabhoji II) | 1832 | 1855 |

# APPENDIX II

## COLLECTORS OF THANJAVUR*

| S.No. | NAME | FROM | TO |
|---|---|---|---|
| 1. | CHARLES HARRIS | DEC - 1799 | MAY - 1804 |
| 2. | JOHN COTTON | MAY - 1804 | OCT - 1804 |
| 3. | J.WALLACE | OCT - 1804 | APL - 1811 |
| 4. | J.COTTON | MAY - 1811 | FEB - 1814 |
| 5. | JAMES HEPBREW | FEB - 1814 | DEC - 1816 |
| 6. | J.THACKERAY | DEC - 1816 | SEP - 1817 |
| 7. | JAMES HEPBREW | SEP - 1817 | SEP - 1819 |
| 8. | G.M.OGILVIE | SEP - 1819 | FEB - 1820 |
| 9. | J.COTTON | FEB - 1820 | OCT - 1826 |
| 10. | A.SINCLAIR | OCT - 1826 | FEB - 1827 |
| 11 | A.D.CAMPBELL | FEB - 1827 | OCT - 1827 |
| 12. | R.NELSON | OCT - 1827 | OCT - 1827 |
| 13. | A.D.CAMPBELL | DEC - 1827 | JAN - 1828 |
| 14. | R.NELSON | JAN - 1828 | FEB - 1828 |
| 15. | N.W.KINDERSLEY | FEB - 1828 | JUL - 1839 |
| 16. | S.SCOTT | JUL - 1839 | AUG - 1839 |
| 17. | H.C.MONTGOMERY | AUG - 1839 | AUG - 1841 |

*Thanks to Mr. P. PERUMAL, Saraswati Mahal Library, Thanjavur

18. .........S.SCOTT ..................................JAN - 1843 .................JAN - 1843
19. .........J.F.BISHOP .............................JAN - 1843 .................JAN - 1843
20. .........S.SCOTT ..................................JAN - 1843 .................JAN - 1843
21. .........J.F.BISHOP .............................FEB - 1843 ................. MAY - 1844
22. .........J.J.COTTON ............................MAY - 1844................. SEP - 1844
23. .........H.C.MONTGOMERY..........SEP - 1844 ................. OCT - 1846
24. .........J.J.COTTON ............................OCT - 1846 ............... FEB - 1847
25. .........G.ELLIS .....................................JUL - 1847.................. AUG - 1847
26. .........J.BIRD ........................................NOV - 1847 ...............JAN - 1850
27. .........I.N.GOODWYR...................JUL - 1857................. MAY - 1852
28. .........P.G.RANT ................................NOV - 1852.............. DEC - 1852
29. .........W.M.CODELL .......................MAR - 1853 ...............APL - 1853
30. .........HENRY FORBES...................APL - 1853 ................. MAY - 1856
31. .........W.M.CODELL .......................MAY - 1856................JUN - 1859
32. .........J.W.CHERRY .........................JUN - 1856.................JAN - 1857
33. .........H.O.PHILLIPS .......................JAN - 1857 .................JAN - 1859
34. .........G.M.BELLORD......................FEB - 1862 ...............APL - 1863
35. .........G.L.MORRIS .........................APL - 1862 ................. MAY - 1863
36. .........G.BARBERY ...........................MAY - 1866................ SEP - 1866
37. .........W.F.HATHINAY ....................FEB - 1870 ................. MAY - 1870
38. .........H.D.ARBUTHNOT ..............APL - 1873 ................. OCT - 1874
39. ......... H.S.THOMAS.......................OCT - 1874 .............. MAR - 1877
40. .........F.R.H.SWARP .......................MAR - 1877 ..............JUN - 1877

| | | | |
|---|---|---|---|
| 41 | E.F.WEBSTER | APL - 1878 | JUN - 1881 |
| 42 | C.S.CROB | JUN - 1881 | OCT - 1881 |
| 43 | F.E.GIBSON | OCT - 1881 | NOV - 1881 |
| 44 | D.BUICK | NOV - 1881 | MAR - 1882 |
| 45 | F.E.GIBSON | APL - 1882 | JUN - 1882 |
| 46 | E.S.WHITESIDE | JUN - 1882 | AUG - 1882 |
| 47 | H.E.STOKES | AUG - 1882 | JUN - 1883 |
| 48 | J.B.PENNINGTON | JUN - 1883 | AUG - 1886 |
| 49 | E.GIBSON | SEP - 1886 | SEP - 1889 |
| 50 | V.A.HAPPEL | SEP - 1889 | JAN - 1890 |
| 51 | E.GIBSON | JAN - 1890 | MAY - 1890 |
| 52 | D.MURDACK | MAY - 1890 | MAY - 1890 |
| 53 | J.THOMSON | MAY - 1890 | JUL - 1891 |
| 54 | R.N.CAMPRELIE | JUL - 1891 | JUL - 1891 |
| 55 | L.M.WINTER BOTHAM | JUL - 1891 | AUG - 1893 |
| 56 | R.B.CLEGG | AUG - 1893 | AUG - 1893 |
| 57 | J.STROOCH | AUG - 1893 | OCT - 1893 |
| 58 | L.M.WINTER BOTHAM | OCT - 1893 | SEP - 1894 |
| 59 | J.THOMSON | SEP - 1894 | JAN - 1895 |
| 60 | ROBERT B. CLEGG | JAN - 1895 | JUL - 1895 |
| 61 | E.C.ROUSON | JUL - 1895 | NOV - 1895 |
| 62 | G.STOKES | NOV - 1895 | MAY - 1896 |
| 63 | H.MOBERLY | MAY - 1896 | JUL - 1896 |